KVC0078

PRESENTED BY
V. T. R. PL. M. KASIVISVANATHAN
CHETTIAR TO
THIRUVALLUVAR LIBRARY, PAGANERI.

6133

ஸ்ரீராமஜயம்.

# சிந்தாமணி

தமிழ் நாட்டுப் பெண்மணிகளின் முன்னேற்றத்தை முக்கிய
மாகக்கொண்டு வெளிவரும் ஓர் உயர்தர மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை.

பத்திராதிபர். சகோதரி வி. பாலம்மாள்.

மலர் V.] விபவ—ஆவணி. [இதழ் 1.

## சிந்தாமணியின் ஐந்தாவது ஆண்டு.

(வி. பாலம்மாள்.)

எல்லாம் வல்ல இறைவனருளாலும் அன்னையின் ஆசீர்வாதத்தாலும் இன்றுமுதல் "சிந்தாமணி"க்கு ஐந்தாவது ஆண்டு ஆரம்பமாகின்றது. இவ்வழகிய ஐந்தாம் ஆண்டில் சிந்தாமணிக்கு சொந்த அச்சுக்கூடம் ஏற்படுத்தும்படி எம்பிரான் அருள் புரிவாரென்ற நம்பிக்கையுடன் இவ்வைந்தாம் ஆண்டைத் தொடங்குகிறோம். கடந்த வருஷ நிர்வாகத்தில் வழக்கம்போல கைநஷ்டம் ஏற்பட்டுள்ளதாயினும் எமது சுற்றுப்பிரயாணத்தில் மலாய் வாசிகளான சகோதர சகோதரிகள் மெய்யன்புடன் அளித்துள்ள ஆதரவைக்கொண்டு இவ்வைந்தாம் ஆண்டை அகமகிழ்ச்சியுடன் ஆரம்பிக்கின்றோம். பெண் சமூக ஊழியத்தை முன்னிட்டு, சுயநலம் சிறிதுமின்றி பல கஷ்டங்களுக்கிடையே ஊக்கந் தளராது "சிந்தாமணி" செய்துவரும் ஊழியத்தை ஸ்திரீ வித்தியாபிமானிகள் நன்கறிந்திருக்கின்றார்கள். இதையனுசரித்தே நிருப்மனுப்பும் சகோதர சகோதரிகளுக்கும், ஆபீஸ் வேலைகளை நிர்வகிக்கும் மானேஜருக்கும் எமது மனமார்ந்த வந்தனமளித்தல் சாலப் பொருத்தமுள்ளதாம். பத்திரிகையின் நிர்வாகத்தில் ஆரம்பத்தில் கைநஷ்டமில்லாதிருக்க வேண்டுமென்று எண்ணுவது கூடாத காரியம். பத்திரிகைப் பிரசுரத்தால் பெருத்த லாபம் தேடிவிடலாமென்று நினைப்பதும் பகற் கனவாகும். கடந்த வருஷங்களின் நஷ்டத்தை இனி ஈடு செய்து கொள்ளவும் முடியாத விஷயம்.

பத்திரிகையின் நோக்கமும் நிலைமையும் நன்கு புலப்படும்வரை கற்றறிந்தவர்களின் ஆதரவு கிடைத்தலும் அசாத்தியமே. கடந்த

நான்கு வருஷங்களாகத் தொடர்ந்து படிக்கும் அபிமானிகளுக்கு இவ்வருஷமிருந்து சிந்தாமணியிடம் அதிகப் பற்றும் உண்மை யபிமானமும் ஏற்படுமென்பதில் ஐயமில்லை. சிந்தாமணி நிலைபெற்று வாழ்வதற்கு சந்தாதாரின் ஒத்துழைப்பு மெத்த அவசியமாயிருக்கின்றது. பத்திரிகாபிமானிகள் தாங்களாகவே கவனித்து பாக்கியின்றி சந்தாவை உடனுக்குடன் அனுப்புதல் வேண்டும். தங்கள் விலாசம் மாறுங்கால் அதை முன்னதாகத் தெரிவிக்க வேண்டும். தங்களுக்கு வரவேண்டிய பத்திரிகை தவறிவிட்டால் தயவுசெய்து கடிதமூலம் தலைமை ஆபீசுக்கறிவிக்கவேண்டும். உள்ளூர் போஸ்டாபீசுகளையும் எச்சரிக்கை செய்ய வேண்டும். சிந்தாமணி யபிமானிகளான சந்தாதார்கள் இவ்வருஷம் இம்முறைகளைக் கைவிடாது நடத்தி வருவார்களானல் கூடிய சீக்கிரத்தில் "சிந்தாமணி" சொந்த அச்சாபீஸில் வெளியாக்கக்கூடிய நற்காலமேற்படத் தடையில்லை. லட்சக்கணக்கான சந்தாதார்கள் வேண்டுமென்பது எமது நோக்கமல்ல. அபிமானத்துடன் பத்திரிகையைப் படித்து சந்தாவைப் பாக்கியின்றி உடனுக்குடன் அனுப்பக்கூடிய ஐயாயிரம் சந்தாதார்கள் ஏற்பட்டுவிடின் சிந்தாமணியை இதே சந்தாவில் இன்னும் பல சீர்திருத்தங்களுடனும் அதிகப் பக்கங்களுடனும் வெளியிட்டு அபிமானிகளை அக மகிழச் செய்யலாம்.

பொருள் பறித்தலையே பெரு நோக்கமாகக் கொண்டு தோன்றி மறையும் போலிப் பத்திரிகைகளின் பேரவமானச் செயல்களால் உண்மை ஊக்கத்துடன் உழைக்கும் பத்திரிகையுலகம் பெரிதும் பாதிக்கப்படுவதையும், சந்தாவை முன்பணமாக அனுப்ப அஞ்சுவதையும், பத்திரிகை என்ருல் மனம் வெறுப்புக் கொள்ளுவதையும் பிறருக்குச் சிபார்சு செய்து தாங்கள் அனுபவித்த அவமதிப்பையும் நேரில் பலர் சொல்லக் கேட்குங்கால் மனம் திடுக்கிடுகின்றது. காலந் தவருது வெளிவருவதுதான் பத்திரிகையின் முக்கிய நோக்கமாகும். இது பற்றி இந்நான்கு வருஷங்களாக யார் சந்தா அனுப்பினுர்கள், யாரிடம் பாக்கி என்றும் கவனியாது குறித்த காலத்தில் பத்திரிகையை வெளியிட்டுத் தவருது அனுப்பி வருவதையே முக்கிய கடமையாக நடத்தி வந்திருக்கின்ருேம் என்பதை எமது உண்மை யபிமானிகளான சகோதர சகோதரிகள் நன்கறிவார்கள். ஆரம்ப முதல் ஆதரித்து வரும் எமதபிமானிகள் இவ்வருஷம் தீவிர முயற்சி யெடுத்து, பாக்கி வைக்காது சந்தாவை யனுப்பக்கூடிய சந்தாதார்களைச் சேர்த்தளிப்பார்களென நம்புகிருேம். வேலை தவருது வெளியிட உதவும் அச்சுக்கூடத்தாரின் பேருபகாரத்திற்கு நன்றி செலுத்தல் முக்கிய கடமையாகும். ஏறெனவே அன்புடன் வாக்களித்துள்ள அபிமானிகள் தங்கள் சந்தாவைக் கூடிய சீக்கிரமனுப்பும்படி கேட்டுக்கொள்ளுகிருேம். சிந்தாமணியும் அதன் நிருப சகோதர சகோதரிகளும் சந்தாதார்களும் நீடூழி வாழக் கடவுள் அருள் புரிவாராக!

சுபம்.

# மாதர் உயர்வு.

(பத்திராதிபர்)

மங்கையராகப் பிறப்பதற்கே—நல்ல
மாதவம் செய்திட வேண்டுமம்மா
பங்கையக் கைநலம் பார்த்தல்லவோ—இந்தப்
பாரில் அறங்கள் வளருமம்மா

என்றார் ஸ்ரீ தேசிகவிநாயகர்.

தற்காலம் சில தீவிர சீர்திருத்த வாதிகள் இந்திய மாதரின் நிலையை உயர்த்தவேண்டுமென்றும், இந்தியப் பெண்கள் உயர்வுற வேண்டுமானால் அயல் நாட்டு சம்பிரதாயங்களையும் அந்நாட்டார் கைக்கொள்ளும் முற்போக்குச் சாதனங்களையும் முறையே கைக்கொள்ள வேண்டுமென்றும் நினைக்கின்றார்கள். பெண்களின் சீர்திருத்தமும் உயர்வும் அவர்களணியும் உடைகளிலும் நடக்கும் நடைகளிலும் அமைந்துள்ளதென்று நினைப்பார் சிலர். ஆங்கிலத்தில் தீவிரமாய்ப் பயின்று ஆடவர்களைப்போல் உத்தியோகக் கல்வி கற்றுப் பட்டப் பரீட்சைகளில் தேர்ச்சி பெற்று எல்லாம் ஆங்கில மயமாக விருத்தலே மாதர் உயர்வுக்கு மூல காரணமெனக் கருதுவாருமுளர். அன்னிய நாடுகளில் சுற்றுப்பிரயாணம் செய்யும் மேதாவிகள் சிலர் அந்நாட்டுப் பெண்மணிகளின் உயர்வைப்பற்றிப் புகழ்ந்துரைக்குங்கால் அங்கு பெண்கள் வியாபாரச்சாலைகளிலும் அரசாங்க உத்தியோகங்களிலும் டிராம் ஓட்டுவதிலும் மோட்டார் விடுவதிலும் நடனசாலைகளில் நடிப்பதிலும் போலீஸ் நிர்வாகத்திலும் வேடிக்கை விநோதசாலைகளிலும் அமர்ந்துள்ள வைபவம்பற்றி வாசாமகோசரமாக வர்ணிக்கின்றனர்.

அந்நாட்டிலுள்ள காதல் மணமும் அதற்கடுத்து விளங்கும் விவாக பந்த விலக்கும் ஆங்காங்கு விளங்கும் அநாதைச்சாலைகளும் கணவன் மனைவிக்கிடையே பகிரங்கமாகக் கோர்ட்டில் நடக்கும் பல அதிசய விவகாரங்களும் தமர் பிறர் என்ற பேதமின்றி ஆணும் பெண்ணுமாகக் கைகோர்த்து மார்போடணைந்து கூத்தாடும் நர்த்தனக் கச்சேரிகளும் கண்டு அதிசயித்து அகமகிழ்ந்து, இந்தியாவும் இந்தியரும் இந்தியப் பெண்மணிகளும் உயர்வுற்று வாழவேண்டுமாயின், மேனாடுகளில் இந்தியர் சம அந்தஸ்து பெறவேண்டுமாயின் மேனாட்டாரை மேற்கோளாகக்கொண்டு நடக்க வேண்டுமென்று பகிரங்கமாய்க் கூற முற்படுவாரும் உளர். மேனாடு கீழ்நாடு ஒற்றுமைக்கு நடையுடை பாவனைகளின் சீர்திருத்தத்துடன் அங்குள்ள மாதரைப்போலவே நம்மிந்திய மாதரும் சீர்திருத்தம் பெறாதவரை, உயர்வுறாதவரை இந்தியா சுயராச்சியத்திற்குத் தகுதியுள்ளதன்றெனக் கனவு காண்பர் சிலர். ஆனால் இவைகளுக்கிடையே நம் இந்திய மாதர்களுக்கு இனிமேற்றான் உயர்வு ஏற்படுத்தப்படவேண்டுமா அல்லது இயற்கையிலேயே அவ்வுயர்வு அமைந்துள்ளதா வென்பதை ஆராய்வோம்.

இந்தியப் பெண்களிடையே பிறவியிலேயே உயர்வு ஏற்பட்டுள்ளதால் அவ்வுயர்வுள்ள பொருளைப் பாதி உடலாக அமைத்துக்கொண்டு தம் வாழ்வைச் சீரும் சிறப்புமாக நடைபெறச் செய்வதில் இந்திய ஆடவர் முற்படுவது தொன்றுதொட்டு வழக்கமாக விருந்து வருகின்றது. தம்பதிகளின் வாழ்க்கையை இல்வாழ்க்கையெனக் கூறி அதை இல்லறம் என்று நமது உயர் நூல்கள் சிறப்பித்து கூறுகின்றன. மனிதன் நன்மை புரியப் பிறந்தவன், அறம் புரிய வேண்டியவன், இம்மை மறுமைக்குரிய

நல்லறங்களைப் புரிவதில் இல்லறமே முக்கிய சாதனம் என்பது நம் முன்னோர்களின் உபதேச மொழிகளாகும். இல்லறம் என்பது இல்லாள் என்ற மாதரசியால் ஏற்படுமாயின் அவளிடம் பிறவியிலேயே உயர்வு ஏற்பட்டு அவ்வுயர்வை இல்வாழ்க்கைமூலம் பிரகாசிக்கச் செய்கின்றாள் என்பதில் தடையுளதோ ?

இந்தியாவில் விவாகமென்பது சிற்றின்பக் கொள்கைக்காகவே ஏற்பட்டதன்று. இந்தியப் பெண்கள் பலர் தம் உயர்வை இல்லறத்திலும் துறவறத்திலும் நன்கு விளங்கச் செய்திருக்கின்றனர். உலகில் நல்லறம் வளரவேண்டுமாயின் அவை நம் பெண்மக்களிடத்தில் அடங்கியிருக்கின்றதென கூறப்படுமாயின் இதை மீறிச் செல்ல வல்லார் யார் ?

இந்திய மாதர் தமக்குள்ள உயர்விற்கேற்ற ஒளியற்று மங்கிக் கிடப்பதற்கு அன்னிய நாகரிகமே முதற் காரணமாகும். அன்னியக் கல்வியிலும் நாகரிகத்திலும் நமதாடவர் முற்பட ஆரம்பித்ததிலிருந்து தமது குடும்பத்திலுள்ள பெண்மக்களின் உயர்வைப் பிரகாசிக்கச் செய்யமாட்டாத நிலையை யடைந்ததுடனில்லாது தம் பெண்களின் உயர்வைக் கர்நாடக முறையென்று பழித்து இகழ்ந்து மொழிந்தவர்கள் சிலருமுண்டு. பெண்கள் உயர்வுற வேண்டுமானல் அவள் அழகிய தலைமுடி எவ்வாறு வெட்டிவிடப்பட்டிருக்க வேண்டும், அவள் கால்களில் அணியும் பாதரட்சை (பூட்ஸ்) யின் குதிகால் எவ்வளவு அங்குலம் உயர்ந்திருக்கவேண்டும், அவள் எவ்வளவு தூரம் ஆங்கிலம் பயின்று தாய்மொழியை அறவே மறந்திருக்கவேண்டும் என்று நாம் கவலைப்பட்டுத் தீர்மானித்தலனவசியம். இயற்கையாயவளிடத் தமைந்துள்ள உயர்வைப்பற்றி அடுத்த இதழில் ஆராய்வாம்.

# சந்திரவர்மா.

## ஓர் நாடகம்.

(ஸ்ரீமான் R. நாராயணசாமிராவ், B.A.)

(இதன் பதிப்புரிமை ஆசிரியரிடம்)

நாடக பாத்திரங்கள்.

மகேந்திர ராஜன் ... கோசல தேசத்தரசன்.

சந்திரவர்மா ... } மகேந்திர ராஜனுடைய

வத்ஸன் ... } அமைச்சர்கள்.

இராஜசிம்ஹன் ... மகேந்திர ராஜனுடைய குமாரன்.

சூரசேனன் ... வங்கநாட்டரசன்.

ஜயசீலன் ... சூரசேனனுடைய அமைச்சர்களில் ஒருவன்.

ஸ்ரீதரன் ... ஜயசீலனுடைய குமாரன், இராஜசிம்ஹனுடைய தோழன்.

வீரசிங்கம் ... சூரசேனனுடைய மற்றோர் அமைச்சன்.

பீமசிங் ... பவநகர் அரசன்.

சதாநந்தர் ... ஓர் வேதியர்.

கமலரேகை ... ஓர் இராஜகுமாரி, இராஜசிம்ஹனுடைய காதலி.

சுகுணை ... கமலரேகையின் தோழி.

பத்மாட்சி ... சதாநந்தருடைய மனைவி.

மோகனை ... பீமசிங் மனைவி, பவநகர் இராணி.

சித்திராங்கி ... மோகனையின் தோழி.

கார்பாரி, மந்திரிமார்கள், தாதிகள், போர்வீரர்கள், சேவகர்கள் முதலியோர்.

அங்கம் I. களம் I.
அயோத்தியைச் சார்ந்த ஓர் போர்க்களம்.
காலம்: காலை.

(போர்க்களத்தின் ஓர் புறத்தில் மகேந்திர ராஜன் காயப்பட்டுக் கிடக்க, மற்றோர் புறமாகச் சந்திரவர்மா பிரவேசித்தல்.)

சந்திரவர்மா:—(தனக்குள்) ஆ! ஆ! என்ன அலங்கோலம்! என்ன கோரக் காட்சியிது! இதைப் பார்க்கவும் கண்கள் கூசுகின்றனவே! ஐயோ! அரசு நிலைகுலைந்து விட்டதே! ஈசா! அரசன் கதி என்னவாயிற்றோ தெரியவில்லையே!

மகேந்திரராஜன்:—(ஹீனக்குரலுடன்) சந்திரவர்மா! சந்திரவர்மா!

சந்திரவர்மா:—ஆ! யார் என்னை யழைப்பது? என் சினேகிதனெவனுயினும் போர்க்களத்திற் காயப்பட்டுக் கிடக்கலாமோ? யாராயிருப்பினும் ஆபத்துக்காலத்தில் நம்மாலியன்ற உதவி புரியவேண்டும். (சப்தம் வந்த திக்கை நோக்கிச் செல்லல்.)

மகேந்திரராஜன்:—சந்திரவர்மா! சந்திரவர்மா! நல்ல தருணத்தில் உன்னைக் கண்டேன்! உடனே என்னருகில் வா!

சந்திரவர்மா:—(விரைந்து சென்று) ஆ! மகாராஜ்! மகாராஜ்! தங்களைத்தான் நான் தேடிக்கொண்டலைகிறேன்! நம்முடைய வீரர்களிற் பெரும்பாலோர் இக்களத்திற் பிணமாய்க் கிடக்கின்றனரே! ஆ! இன்று பொழுது விடிந்த நேரம் இப்படியா யிருக்க வேண்டும்! இராணுவ வீரர்கள் மாண்டு கிடப்பதையும் பிணங்களைத் தின்பதற்காகப் பல்லாயிரம் கழுகுகள் வானத்தில் வட்டமிட்டுக்கொண்டிருப்பதையும் பார்க்க மனம் நடுங்குகின்றதே! மகாராஜ்! தாங்கள்......

மகேந்திரராஜன்:—மந்திரி! அவையெல்லாமிருக்கட்டும். வங்க நாட்டு வேந்தனது படையை இடது பக்கம் தாக்கிய நமது சேனையும் தோல்வியடைந்துவிட்டதா? சீக்கிரம் சொல்! இனி நமக்கு எள்ளளவேனும் நம்பிக்கை யிருக்கிறதா?

சந்திரவர்மா:—மகாராஜ்! இனி நமக்கு யாதோர் நம்பிக்கையுமே யில்லையென்று எப்படிக் கூசாமற் சொல்வேன்! இனி நாம் ஈசனிடத்திற்றான் பூர்ண நம்பிக்கை வைக்கவேண்டும்! சத்துருக்கள் நம் சேனையை முறித்துவிட்டதுமன்றிக் கோட்டையையும் கைப்பற்றிவிட்டனர்! இனிச் சிலநாட்கள்வரை கொள்ளையடிப்பதும் கொலை செய்வதுமே அவர்கள் தொழிலாக விருக்கும். ஆனால் தெய்வாதீனமாய் மகாராஜா அவர்கள் கையிற் சிக்கிக்கொள்ளவில்லை. எனினும் நாம் இனி இங்கிருத்தல் பேதைமை! பகைவர்களில் யாரேனும் நம்மைப் பார்த்துவிட்டால் நமக்குக் கேடு விளையும். ஆகையால் எழுந்திருங்கள். ஆங்கிருக்கும் மலைச்சாரல் சென்றடைந்து விடுவோமாயின், பிறகு இத்தேசத்தைவிட்டுச் சுலபமாக வெளியேறி விடலாம். எழுந்திருங்கள்...ஏன்? முடியவில்லையா?

மகேந்திரராஜன்:—சந்திரவர்மா! இப்பொழுது வீண் பேச்சுப் பேச அவகாசமில்லை! நான் கேட்பதற்கு விடையளி. உன் சினேகிதனொருவன் உயிர்விடுந் தருணத்தில் உனக்குச் சிற்சில கட்டளைகளையிட்டால், நீ அவைகளை விசுவாசத்துடன் நிறைவேற்றுவாயல்லவா?

சந்திரவர்மா:—அதில் தடையென்ன? அவ்வாறே நிறைவேற்றுவேன். ஆனால் தாங்கள் சொல்வது விளங்கவில்லையே!

மகேந்திரராஜன்:—மெத்த சந்தோஷம்! அப்படிக் கட்டளையிட விரும்பும் சினேகிதன் நான்தான்! நான் சொல்வதைத் தாமதமின்றிக் கேள்.

சந்திரவர்மா:—மன்ன! தாங்கள் சொல்வது விளங்கவில்லை. இன்று நேர்ந்த குழப்பத்தில் தங்கள் மனம் கலக்கமுற்றிருக்கிறது போலும்! முதலில் நாம் அந்த மலைச்சாரல் சென்றடையவேண்டும்! இளைப்பாறுவதற்கு இது தகுதியான இடமன்று. எழுந்திருங்கள்......ஐயோ! ஐயோ! இதென்ன! உள்ளாடையெல்லாம் உதிரத்தில் தோய்ந்திருக்கிறதே! மகாராஜ்! இதென்ன விபரீதம்!

மகேந்திரராஜன்:—சந்திரவர்மா! இளைப்பாறுவதற்காகவா நான் இங்கு படுத்திருக்கிறேனென்று நினைத்தாய்? எழுந்து நடக்கச் சக்தியற்றன்றோ கிடக்கின்றேன! இன்று பொழுது விடியுமுன் ஓர் எதிரியின் ஈட்டி என் நெஞ்சிற் பாய்ந்து, முனை உள்ளேயே ஒடிந்துவிட்டது! ஆனால் அதைப்பற்றி நான் வருந்தவில்லை......

சந்திரவர்மா:—ஈசா! இதென்ன கொடுமை! ஆ! மகாராஜ்! இதை முன்னமேயே யறிவித்திருக்கக்கூடாதா? சீக்கிரம் காயத்தைக் காண்பியுங்கள்! ஈட்டியின் முனையை வெளியே இழுத்தெடுத்துச் சிற்சில மூலிகைகளைப் போட்டு காயத்தை ஆற்றுகிறேன். எல்லாம் வல்ல ஈசன் ஓர் நொடியில் சொஸ்தமாக்குவார்.

மகேந்திரராஜன்:—சந்திரவர்மா! இனி மூலிகைகளால் யாதொரு பிரயோசனமும் ஏற்படாது. என் காயத்தை ஆற்ற இனி ஒருவராலும் முடியாது. இன்னும் சற்றுநேரத்தில் என் உயிர் போய்விடும். அதற்குள் நான் உன்னிடம் சிற்சில விஷயங்களைச் சொல்லிவிடவேண்டுமென்று பதறுகிறேன். சிறு குழந்தைகளைப்போல் நடந்த விஷயத்தைக்குறித்து அழாதே.

சந்திரவர்மா:—மகாராஜ்! தாங்கள் சொல்லவேண்டுவதைச் சொல்லுங்கள். எல்லாவற்றையும் கவனமாய்க் கேட்டு விதிக்கும் கட்டளைகளை நிறைவேற்றுகிறேன். ஆனால் கடவுள் இன்னும் தங்களுக்கு உயிர்ப்பிச்சை கொடுக்கலாம். ஆகையால் முதலில் காயத்தைப் பார்த்து மருந்தளிக்கிறேன்.

மகேந்திரராஜன்:—உபயோகமில்லை, வீண் பேச்சு. சந்திரவர்மா! சொல்வதைக் கேள். அந்த வங்க நாட்டுச் சண்டாளன் சூரசேனன் யாதோர் முன்னறிக்கையுமேயில்லாமல் படையெடுத்து வந்ததாலன்றோ நம்முடைய சேனை தோல்வியடைந்துவிட்டது! அதிலும் அவன் நம் நகரைத் தாக்கிய தருணம் எப்படிப்பட்டது? யோசித்துப் பார்! இராஜசிம்ஹனும் கமலரேகையும் மணக்கோலத்துடன் மணமேடையிலிருக்கும்பொழுதன்றோ அவன் காலனைப்போல் வந்தான்! ஆகையாலன்றோ நாம் கலியாணத்தை நிறுத்திவிட்டுத் திடீரென்று யுத்தஞ் செய்ய நேர்ந்தது. ஆ! என்னரிய புதல்வன் கதி யாதாயிற்றென்பதை யறிவாயோ? கமலரேகையின் கதி யாதாயிற்று தெரியுமோ? ஆ! அவ்விருவர்களும் அப்பாதகன் கையிலகப்பட்டிருப்பின் அவர்களுக்கு யாது ஆபத்து நேரிட்டிருக்குமோ? சூரசேனன் அவர்களை என்ன பாடு படுத்துவானோ?

சந்திரவர்மா:—மன்ன! தாங்கள் ஏன் இவ்வாறெல்லாம் வருந்துகிறீர்கள்? கடவுள் நம்மை அப்படியெல்லாம் பரீட்சிக்க மாட்டார்.

மகேந்திரராஜன்:—இப்படியெல்லாம் மனதிற்குச் சமாதானம் வரவழைத்துக்கொள்ள முடியவில்லையே. சந்திரவர்மா! நான் சொல்ல வேண்டுவதைச் சொல்லி விடுகின்றேன். இராஜசிம்ஹனும் கமலரேகையும் அக்கொடியவனுடைய கையிற் சிக்கிக்

கொள்ளாமலிருப்பின், இராஜசிம்ஹன் எப்பாடுபட்டாயினும் சூரசேனனைத் தோற்கடித்து மறுபடியும் இவ்விராஜ்ஜியத்தை யாள்வான். ஆனால் அவ்விருவர்களும் சூரசேனனுடைய கையிற் சிக்கிக்கொண்டிருப்பின் அவர்கள் கதி அதோகதிதான். ஆகையால் சந்திரவர்மா! நீ செய்யவேண்டியது யாதெனில், அவர்கள் எங்கிருக்கின்றார்களென்பதை யறிந்து எப்படியாவது அவ்விருவரையும் தம்பதிகளாகச் செய்துவிடவேண்டும். உன் உயிருள்ளளவும் இவ்விஷயத்தில் உன் முயற்சியைத் தளரவிடக்கூடாது.

சந்திரவர்மா:—மகாராஜ்! தங்கள் கட்டளையை நிறைவேற்றுவேன், இது சத்தியம். அப்படி நிறைவேற்றத் தவறுவேனேயாயின், அம்முயற்சியிலேயே என் பிராணனைத் தியாகம் செய்வேனென்பது திண்ணம்.

மகேந்திர ராஜன்:—மந்திரி! இதுமாத்திரமல்ல. எனக்கு இப்பொழுது காலனாகத் தோன்றியிருக்கும் சூரசேனனுக்குக் காலனாக என் மைந்தன் தோன்றி அவனைக் கொன்று மறுபடியும் இத்தேசத்தை யாள நீ ஏற்பாடு செய்யவேண்டும். இவ்விரண்டு கட்டளைகளையும் நீ கருத்துடன் நிறைவேற்றுவாயா? சீக்கிரம் சொல்! என் முடிவுகாலம் அணுகுகிறதுபோலிருக்கிறது.

சந்திரவர்மா:—மன்ன! இவ்வுடலை என் சுற்றத்தாரோ அல்லது பகைவர்களோ சுடலைக்குக் கொண்டு செல்லும் வரையிலும் நான் இவ்விரு கட்டளைகளையே சிரமேற்கொண்டு என் சுகதுக்கங்களையும் கருதாமல், என்னுயிரையும் துரும்பாக மதித்து நிறைவேற்றுவேன். இது சத்தியம்! இது உறுதி!

மகேந்திராஜன்:—நண்ப! மெத்த சந்தோஷம். இனி நான் ஒன்றும் அதிகமாகச் சொல்லவேண்டியதில்லை. ஆனால் முதலில் இச்சுவர்ணப் பெட்டியை யெடுத்துக்கொள். இது கமலரேகையின் மாயப்பெட்டி. இதன் மகிமை உனக்குத் தெரியாததல்ல. இதையோர் படகில் வைத்துக் கடலில் விட்டுவிட்டால், அது பலர் கைமாறினும் கடைசியாக எப்படியும் கமலரேகையிடம் சென்றடைந்துவிடும். ஒருகால் கமலரேகை யிருக்குமிடத்தையறிய இது ஓர் சாதனமாயிருக்கலாம்.

(சந்திரவர்மா பெட்டியைப் பெற்றுக்கொள்ளல்)

மகேந்திராஜன்:—ஆ, சந்திரவர்மா! என் கண்கள் பஞ்சடைகின்றன. என் ஆயுள் முடியுங்காலம் அணுகிவிட்டதுபோலும். இவ்வுலகமே இருண்டுவிட்டது போலிருக்கின்றதே. சந்திரவர்மா! சந்திரவர்மா! இவ்வுலகமென்னும் நாடக மேடையில் என் ஆட்டம் ஆடியாய்விட்டது. சந்திரவர்மா! இப்படி அருகில் வா. என்னை உன் மடிமேல் தூக்கி வைத்துக்கொள். என் விசுவாசமுள்ள சினேகிதனுடைய மடியில் நான் உயிர் விட்டால்......(மூர்ச்சித்தல்)

சந்திரவர்மா:—(புலம்புதல்) மன்ன! ஐயோ! மண்டலாதிபதி! ஐயோ! தங்களுக்குப்பின் நான் உயிர் தரிக்கவும்வேண்டுமோ? ஐயோ! தங்களைவிட்டுப் பிரிந்து நான் எவ்வாறு உயிர் வாழ்வேன்! மகாராஜ்! மண்டலாதிபதி! கடவுளே!.........ஆ! இதென்ன பேதமை! ஈசன் அருள் புரிந்தால் எதுதான் நடப்பதரிது? மகாராஜா மூர்ச்சித்துத்தானே இருக்கின்றார். மகாராஜாவுக்கு அனாதரட்சகரான சர்வேசுவரன் என் இன்னும் உயிர்ப்பிச்சை கொடுக்கக்கூடாது? நான் இச்சமயம் புலம்பிக்கொண்டு சும்மா விருத்தல் என்ன பேதமை! சே! இப்பொழுதே சிற்சில மூலிகைகளைக் கொணர்ந்து காயத்தை ஆற்றலாம். மகாராஜாவுக்கு இன்னும் மூச்சு இருக்கிறது. சமீபத்தில் வங்க

வீரர்களையும் காணேம். சென்று அரை நொடியில் மூலிகைகளையும் கொஞ்சம் தண்ணீரையும் கொணர்ந்து மகாராஜாவின் மூர்ச்சையைத் தெளிவித்துக் காயத்தை ஆற்றலாம்.

(தன் மேலாடையை அரசன்பேரில் போர்த்திவிட்டுச் செல்லல். மற்றோர்புறமாக வத்ஸன் பிரவேசித்தல்)

வத்ஸன்:—ஆகா! என்ன விபரீதம்! என்ன அலங்கோலம்! செங்கோல் முறிந்துவிட்டதே! கொடுங்கோல் ஓங்குகின்றதே! ஆ! இப்போர்க்களம் பிணக்களமாய்விட்டதே! இதைக் காணவும் கண்கள் கூசுகின்றனவே! ஐயோ! மகாராஜா எங்கே இறந்து கிடக்கின்றாரோ! சந்திரவர்மா எவ்விடத்திற் சவமாய்க் கிடக்கின்றாரோ! ஈசா! அரசர் எங்கேயாவது தப்பியோடியிருக்கக்கூடாதா! சீ! என்ன மதியீனம்! மகேந்திரராஜாவா போர்க்களத்தில் புறங்காட்டி ஓடக்கூடியவர்? மகா தீரரும் சுத்த வீரருமான மகாராஜா உயிர்போமளவும் பகைவருடன் போர் புரிந்துகொண்டே தம்முயிரை யிழப்பாரன்றிச் சமர்க் களத்தினின்றும் முதுகு காட்டி யோடக்கூடியவரா?......ஆ! அதோ அங்கு விலையுயர்ந்த மேலாடை தெரிகின்றதே! நம் தளகர்த்தர்களில் எவனுயினும் இங்கு மடிந்து கிடக்கின்றனனோ? (அருகில் அணுகி) ஆ! இது சந்திரவர்மாவின் மேலாடையல்லவோ? ஐயோ சந்திரவர்மாவன்றோ மாண்டு கிடக்கின்றார்! ஐயோ சந்திரவர்மா! அமைச்சர் குலதிலக! உம்மை இக்கோலத்துடன் காண நான் யாது பாபம்செய்தேன்! (மேலாடையை எடுத்துப் பார்க்க, திடுக்கிட்டு) ஆ! என்ன பாபமிது! மகாராஜா! ஆ! மகாராஜாவன்றோ கிடக்கின்றார்! (கவனித்தல்) கருணைக்கடலே! இதுவும் நின் திருவருளோ! என்ன ஆச்சரியம்! மகாராஜா மூர்ச்சித்தன்றோ இருக்கின்றார்! ஆ! மூச்சு இருக்கிறது. ஈசா! ஆபத்பாந்தவா! என்னே நின் கருணை! கடவுள் என்னை நல்ல தருணத்திற்றான் இங்கனுப்பியிருக்கிறார். உடனே அரசரை ஆங்கிருக்கும் அம்மன் கோயில் தடாகத்திற்குத் தூக்கிச் சென்று மூர்ச்சையைத் தெளிவிக்கவேண்டும். (மகேந்திராஜனைத் தூக்க) ஹா! என்ன வஸ்திரமெல்லாம் உதிரக்கரையாக இருக்கிறது! ஆ! என்ன காயமிது? ஈட்டியால் ஏற்பட்ட காயம் போலிருக்கிறதே. அடடா! ஈட்டியின் முனை உள்ளேயே ஒடிந்தன்றோ இருக்கின்றது! உடனே தண்ணீரிருக்கு மிடத்திற்கு அரசரைத் தூக்கிச் செல்ல வேண்டியது தான்! (மகேந்திர ராஜனைத் தூக்கிக் கொண்டு செல்லல். சிறிது நேரங்கழித்து சந்திரவர்மா மற்றோர் புறமாகப் பிரவேசித்தல்).

சந்திரவர்மா:—(தனக்குள்) இந்த மூலிகைகள் சமீபத்தில் இருந்திருக்கக்கூடாதா? இவைகளுக்காக இவ்வளவு தூரம் சென்று தேடியலைய வேண்டியதாய் விட்டதே! அரசர் தேகஸ்திதி எப்படி யிருக்கிறதோ? (அவசரமாய் அரசன் கிடந்த இடத்தை அணுகி) ஐயையோ! எங்கே அரசர்? சற்றுமுன் இவ்விடத்தில் மூர்ச்சையாய் கிடந்தாரே! ஐயோ! அரசரைக் காணேனே! ஈசா! இதென்ன கொடுமை! நான் சென்றிருந்த தருணத்தில் பகைவர்கள் யாரேனும் இவ்விடம் வந்து அரசரைத் தூக்கிச் சென்றிருக்கலாமோ? அல்லது அரசரே மூர்ச்சை தெளிந்தெழுந்து என்னைத் தேடிக்கொண்டு எங்கேனும் சென்றிருக்கலாமோ? ஒன்றும் தெரியவில்லையே! ஆ! நானே அரசருக்குக் காலனாக வந்து வாய்த்தேனே! இந்த வெளிப்பிரதேசத்தில் அவரைத் தன்னந்தனியே விட்டுவிட்டுச் சென்றுவிட்டது

என்னே மதியீனம்! சீ! நான் மதிகெட்டவன்! நானே பரம சண்டாளன்! நானே அரசர் உயிரை மாய்த்த கொலைபாதகன்! ஐயோ! இம்மூலிகைகள் சமீபத்திலிருந்திருக்கக்கூடாதா! இனி இவைகளால் என்ன பிரயோசனம்? (கீழே எறிந்து) நான் முழுமூடன், அரசரை உயிருடன் கண்டும் என் மூடத்தனத்தால் அவரை இழந்தேன்! அவரை இழந்தபின் நான் எதற்காக உயிர்தரித்துக் கொண்டிருக்கவேண்டும்? நான் பிழைத்திருந்தால் இனி யாருக்கு என்ன பயன்? (உடைவாளை உருவி மார்புக் கெதிரில் பிடித்துக்கொண்டு) மகாராஜ்! தங்களுடன் நானும் இதோ வந்துவிட்டேன்! (வாள் கைதவறிக் கீழேவிழ) ஆ! நான் இறப்பது கடவுளுக்கே சம்மதமில்லை போலும்! ஆ! உணர்ந்தேன்! உணர்ந்தேன்! மகாராஜாவை வேறு சினேகிதர்கள் ஏன் எடுத்துச் சென்றிருக்கக்கூடாது? பொழுது புலர்ந்தது முதல் என்னைப் போலவே பலர் மகாராஜாவைத் தேடிக் கொண்டலையவில்லையா? மேலும், இராஜசிம்ஹனைச் சூரசேனனுடைய கொடுமையினின்றும் தப்புவிப்பதாக மகாராஜாவிடம் வாக்குத் தத்தம் செய்துகொடுத்தேனே!......இருக்கட்டும். ஒரு காரியம் செய்யலாம். உடனே சென்று அரசர் எங்கிருக்கின்ருரென்பதை ஆராய்வோம். அவர் மூர்ச்சை தெளிந்து தானுகவே எங்கேயாவது சென்றிருந்தாலும், இதற்குள் வெகுதூரம் சென்றிருக்க முடியாது! அரசரைத் தேடுவதுடன், இராஜசிம்ஹன், கமலரேகை இவர்களுடைய கதியும் என்னவாயது என்பதையும் அறிய முயல்வோம். ஆ! கடவுளே! ஜகத்ரட்சகா! உலகில் அநீதி செழிக்க வேண்டுமென்பதுவும் உன் திருவருளின் கருத்தோ! (செல்லல்)

(காட்சி முடிகிறது.)

அங்கம் I. களம் 2.

சூரசேனன் தர்பார்.

காலம்: முற்பகல்.

சூரசேனன்:—மந்திரிகளே! இப்பொழுதுதான் நமக்கு மிகவும் சந்தோஷமாயிருக்கிறது! மகேந்திர ராஜன் எங்கேயோ ஓடிவிட்டபோதிலும் அவனுடைய சேனையில் பெரும் பாகம் அழிந்துவிட்டது. அவனுடைய ராஜ்ஜியமும் நமக்குக் கிடைத்துவிட்டது. மந்திரிகளே! நாம் நல்ல தந்திரம் செய்தோம்! நாம் இரவில் காந்து வந்து கலியாணதினத்தன்று போர் புரியாவிட்டால் மகேந்திர ராஜனை இவ்வளவு சுலபமாகத் தோற்கடித்திருக்க முடியுமா? இதுவும் நீங்கள் சொன்ன யுக்திதான்! உங்களுடைய புத்தி சாதுர்யத்தை எவ்விதம் புகழ்வேன்! நீங்களெல்லோரும் மிகுந்த புத்திசாலிகள்! நம்முடைய வீரர்களெல்லோரும் மிகுந்த புத்திசாலிகள்! நம்முடனிருக்கும் எல்லோரும் மிகுந்த புத்திசாலிகள்! ஆகையாற்ருன் நாம் இன்று வெற்றியடைந்தோம்!

ஒரு மந்திரி:—மகாராஜ்! முதலில் தேவதைகளைத் திருப்தி செய்யவேண்டாமா?

சூரசேனன்:—ஆம்! அதை நாம் மறக்கவில்லை! போர்க்களத்தில் மாண்டு கிடப்பவர்களைக் கழுகுகளும் கோனுய்களும் தின்னட்டும். மந்திரி! நீ முதலில் காளிகோயிலுக்குச் சென்று அங்கே கைதியாகவிருக்கும் சத்துருக்களைக் காளிதேவிக்குப் பலியாகக் கொடுக்க ஏற்பாடுசெய். நீ மிகுந்த புத்திசாலியாதலால் இக்காரியத்தைச் செய்ய நீதான் தகுந்தவன். (மற்ருெர் மந்திரியைப் பார்த்து) மந்திரி! இன்று போர்க்களத்திற் பிடிக்கப்பட்ட கைதிகளில் யாராவது பேர் போனவர்களிருக்கின்ருர்களா?

வீரசிங்கம்:—மன்ன! மகேந்திர ராஜனுடைய குமாரன் இராஜசிம்ஹனைக் கைது செய்திருக்கிறோம்.

சூரசேனன்:—அப்படியா! சபாஷ்! பேஷ்! இப்பொழுதுதான் நமக்கு மிகவும் சந்தோஷம். நீ போய் அந்தச் சிசுவை உடனே இங்கு தூக்கிக் கொண்டு வரச்சொல்!

வீரசிங்கம்:—மகாராஜ்! இராஜசிம்ஹன் சிசுவல்ல, பெயருக் கேற்ற சுத்தவீரன். அவனைப் பிடித்துச் சிறைப்படுத்துவதே வெகு கடினமாகி விட்டது. அப்படிச் சிறைபடுமுன் அவன் நம் வீரர்களில் பதின்மரைக் கொன்று விட்டான்.

சூரசேனன்:—(முகம் வெளுத்து) ஆ! அவன் அவ்வளவு வீரனு? அவன்தான் கலியாண மாப்பிள்ளையோ! ஹா! ஹா! ஹா! உடனே அவனைப் பின் கட்டு முறையாகக் கட்டி இழுத்துக் கொண்டு வாருங்கள்! அவனுடைய வீரத்தனத்தைப் பார்ப்போம். நானு அவனைக்கண்டு பயப்படுகின்றவன்!

(போர்வீரர்கள் இராஜ சிம்ஹனைப் பின் கட்டு முறையாகக்கட்டி இழுத்துக்கொண்டுவரல்)

சூரசேனன்:—(இராஜசிம்ஹனைப் பார்த்து) ஹா! ஹா! ஹா! இவன்தானு வீரன்! உன் பெயரென்ன அப்பா? வீரனு?—வீரனோ, சூரனோ?

இராஜசிம்ஹன்:—செந்தாமரைப் புஷ்பத்தினின்றும் ஹம்சத்தை விரட்டி விட்டுக் கோட்டான் வந்து உட்கார்ந்ததைப் போல், அவ்வழகிய சிங்காதனத்தினின்றும் என் தந்தையை விரட்டிவிட்டு உட்கார்ந்தவனன்றோ வீரன்! முன்னெச்சரிக்கையே இல்லாமலும், நியாயமாய்ச் சண்டைக் கழைக்காமலும், கலியாணதினத்தன்று, ஒருவரேனும் யுத்தத்திற்குச் சன்னத்தாயில்லா திருந்த சமயத்தில் திடீரென்று இரவில் படையெடுத்து வந்து இராஜ்ஜியத்தைக் கொள்ளையிட்டவனன்றோ வீரன்! நான் வீரனுமல்ல, சூரனுமல்ல!

சூரசேனன்:—ஓகோ! ஏது இந்தக் குழந்தைக்குக் கொஞ்சம் நாக்கு நீளம் போலிருக்கிறது! பேஷ்! அப்பாவின் செல்லக் குழந்தையோ? (எல்லோரும் நகைத்தல்)

இராஜசிம்ஹன்:—நள்ளிரவில் கானகத்தில் நரிகளெல்லாம் ஒன்று கூடிச் சந்திரனைப் பார்த்துப் பழித்து நகைக்குமென்று நான் கேள்விப்பட்டதெல்லாம் இப்பொழுது ஞாபகம் வருகிறது!

சூரசேனன்:—அடா! மூடா! வாயை மூடு! இல்லாவிட்டால் அந்த நாக்கை நறுக்கிவிடுவேன்! நான் கேட்கும் கேள்விக்கு உண்மையான விடையளி! உன் தகப்பன் எங்கே?

இராஜசிம்ஹன்:—நீயன்றோ எனக்கு அதை அறிவிக்கவேண்டும்! (தனக்குள்) ஹே அநாதரட்சகா! ஆபத்பாந்தவா! உன்னுடைய திருவருளால் என் தந்தை இதுவரை இக்கொடியவன் கையிற் சிக்கிக் கொள்ளவில்லை யென்பது தெளிவாகிறது. அவர் எங்கேயாவது க்ஷேமமாயிருக்கக் கூடாதா?

சூரசேனன்:—(தன் மந்திரிகளைப் பார்த்து) ஏது நம்மை இந்தப் பேய் 'அடா' வென்றழைக்கிறது! எனினும், அதில் நமக்குக் கோபமில்லை. இளங்கன்று பயமறியுமா? (இராஜசிம்ஹனைப் பார்த்து) அடே வீரா! உன் தகப்பனிருக்குமிடம் உனக்குச் சத்தியமாகத் தெரியாதா?

இராஜசிம்ஹன்:—(மந்திரிகளைப் பார்த்து) ஏது நம்மை இந்தப் பேய் 'அடா' வென்றழைக்கிறது! எனினும் அதில் நமக்குக் கோபமில்லை. மூர்க்கன் மரியாதையறிவானு?

(சூரசேனனைப் பார்த்து) என் தந்தை எங்கிருக்கின்றாரென்றாவது அவர் கதி யாதாயிற்றென்றாவது எனக்குத் தெரியாது.

ஒரு மந்திரி:—தெரிந்தாலும் நீயா சொல்லுவாய்!

இராஜசிம்ஹன்:—ஒகோ! தாங்கள் யார்? மகாராஜாவின் தம்பியோ?

சூரசேனன்:—அடே போக்கிலி! வாயை மூடு! ஏ! மந்திரி! நம்முடைய வீரர்களில் எவன் மகேந்திர ராஜனுடைய சிரசை நம்மிடம் கொண்டுவந்து காண்பிக்கிறானோ அவனுக்கு நாம் ஏராளமான பணம் கொடுப்பதுடன் அவனை நம் மந்திரிகளில் ஒருவராகவும் நியமிப்போமென்பதைத் தண்டோரா மூலமாய் எல்லோருக்கும் அறிவிக்க ஏற்பாடு செய்!

இராஜசிம்ஹன்:—(தனக்குள்) அடே கொலைபாதகா! நீ அழிவாய்! (உரக்க) இப்பொழுது இங்கு மந்திரிகளாக விளங்கும் மகாபுருஷர்களெல்லோரும் இவ்விதத் தொழிலைச் செய்துதான் மந்திரிகளாக நியமிக்கப்பட்டவர்களோ? அழகாயிருக்கிறது? மந்திரிக்கு அவசியமான யோக்கியதை இதுதானா? அப்படியெனில், மகாராஜாவின் பிரதானமந்திரி எவனாவது கைதேர்ந்த வங்க நாட்டுக் கொலையாளியோ?

ஜயசீலன்:—(தனக்குள்) ஈசா! நான் ஏன் இவ்வரசனிடம் அமைச்சனாக அமர்ந்தேன்! இனி நாம் சும்மாவிருக்கக் கூடாது! (உரக்க) மகாராஜ்! நான் பேசுவதை மன்னிக்க வேண்டும். இங்கு வீற்றிருக்கும் அமைச்சர்களிலொருவரேனும் தங்கள் கடமைகளை உணர்ந்தவராகத் தோன்றவில்லை. ஆகையால்தான் இப்படி யெல்லாம் நடக்கிறது. நான் சொல்லப்போவதில் தங்களுக்குக் கோபம் பிறந்தாலும் பிறக்கலாம்! ஆனால்,

"தம்முயிர்க்குறுதி யெண்ணார் தலைமகன்
வெகுண்ட போதும்
வெம்மையைத் தாங்கி நீதி விடாது நின்
றுரைப்பர் மேலோர்,"
—(கம்பராமாயணம்)

எனும் நீதியை மனதிற் கொண்டு சிற்சில வார்த்தைகளைச் சொல்லத் துணிகிறேன். மகாராஜ்! இதுவரை நடந்ததெல்லாவற்றையும் பொறுமையுடன் பார்த்துக்கொண்டிருந்தேன். இனி என்னால் சகிக்க முடியாது! கள்ளத்தனமாக நாம் இரவில் திடீரென்று படையெடுத்து வந்ததே அவமானம்! அங்ஙன மிருக்க, நாம் அடைந்த வெற்றியைப் பற்றித் தற்புகழ்ச்சி செய்துகொள்ளுதல் என்னே அறிவீனம்! உலகத்தில் நீதி என்பது ஒன்று இல்லாமலா போய்விட்டது? அநீதியே செழிப்பதானால், கடவுள் எதற்காக இருக்கிறார்? "விநாசகாலே விபரீதபுத்தி:," "கேடுவரும் பின்னே மதி கெட்டுவிடும் முன்னே" எனும் மூத்தோர் வாக்குப் பொய்யாகுமா? துரோகத்தால் வெற்றியடைந்து, வெற்றியால் கர்வங்கொண்டு, கர்வத்தால் பகுத்தறிவை யிழந்து, பகுத்தறிவை இழந்தமையால் நீதியைமறந்து அக்கிரமங்கள் செய்வது நீசர்களுக்கும் அடுக்காதே! மகாவிஷ்ணுவின் அம்சமான இராஜஸ்தானத்தில் தாங்கள் இருந்தும் நீதியை உலகில் நிலைநாட்டுவது தங்கள் கடமையாயிருந்தும், இவ்வித இழிவான வார்த்தைகளை உச்சரிப்பது தங்களுக்கு அழகாகுமோ? இராஜ்ஜியத்தை அடையவேண்டு மெனும் பேராசையால் கள்வர்களைப் போல் இரவில் நுழைந்து வந்து கொள்ளையடித்து இராஜ்ஜியத்தைக் கவர்ந்து கொண்டோம்! அம்மட்டோடாவது நாம் நிற்கக் கூடாதா? மகேந்திர ராஜருடைய உயிருக்கும் ஹானி விளைவிக்க

எண்ணுகிறீர்களே! நான் எதிரிகளின் பட்சமிருந்து பேசவில்லை. ஈசனுடைய திருவருளால் மனிதர்கள், அதிலும் முக்கியமாக மன்னர்கள், உலகில் நிலை நிறுத்தி அப்பியசிக்க வேண்டிய லோக நியாயத்தை எடுத்துச் சொல்லுகிறேன்!—

சூரசேனன்:—(கோபத்துடன்) ஓய்! ஜயசீலரே! நிறுத்தும்! உம்மைப் பேசவேண்டாமென்று எவ்வளவுதரம் சொல்லியிருக்கிறேன்! மகா மேதாவியைப் போல் நமக்குப் புத்தி சொல்ல வந்து விட்டீரோ! நிறுத்தும் உம்முடைய பிரசங்கத்தை! படையெடுக்க எண்ணிய பொழுதே நீர் ஆட்சேபித்தீர்! சகுனியைப் போல் தடை சொன்னீர்! ஏதோ நியாயமாய்ச் சண்டைக் கழைக்கவேண்டுமென்றீர். உம்முடைய வாக்கு விசேஷத்தால் எங்கே நாம் அபஜய மடைந்து விடுவோமோ வென்று அச்சங் கொண்டிருந்தேன். ஜயமடைந்தபிறகும் உம்முடைய உத்தியோகம் எதுவரை உம்மைக்காப்பாற்றுமென்று நினைத்தீர்?

ஜயசீலன் :—மன்ன! "ராஜயோசனை தெரிந்து உறுதியாகிய செய்தி நவிலுமவனே மந்திரி." ஆகையால் நான் சொல்ல வேண்டுவதைச் சொல்லிவிடுகிறேன். பிறகு தங்களிஷ்டபடிச் செய்யுங்கள். "மந்திரிக்கழகு வரும் பொருளுரைத்தலே." உலகத்தில் அநீதியே எந்நாளும் நிலைத்து நின்று விடாது. "பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா பிற்பகல் தானேவரும்." சத்தியமே நிலைக்கும்! இவைகள் மனதிலிருக்கட்டும்.

இராஜசிம்ஹன்:—மன்னா! "கள்ளி வயிற்றில் அகில் பிறக்கும்" என்பதைப்போல் உன்னுடைய மூடமந்திரிகளின் மந்தையில் இம்மகான் இருப்பது என்னே ஆச்சரியம்! "அறிவார் யார் நல்லாள் பிறக்கும் குடி." வேந்தே! நான் சொல்ல வேண்டியதெல்லாம் இம்மகானே சொல்லி விட்டார். என் தந்தையின் இருப்பிடம் எனக்குத்தெரியாது. ஆனால் அவருடைய உயிருக்கு நீ ஏதாவது ஹானிவிளைவிக்க நினைத்தாலும் நீ அழிவாய்! ரௌரவாதி நரகத்தையடைந்து படாதபாடு படுவாய்!

சூரசேனன்:—(கோபத்துடன்) அடே அயோக்கியப்பயலே! என்ன துள்ளுகிறாய்? யாரிடம் விளையாடுகிறாய்! (ஒரு மந்திரியைப்பார்த்து) ஏ! மந்திரி! இப்பொழுது இவனைக் கொலை செய்துவிட நமக்கு இஷ்டமில்லை. இவனைக் கொலை செய்து விட்டால் அத்துடன் இவனுடைய துயரங்கள் முடிவடைந்து விடும்! இவனை உயிருடன் வைத்தே பன்முறை கொலை செய்யவேண்டும்! இவனைச் சித்திரவதை செய்தோ, அல்லது இவனை நமது வேசிகளின் ஏவலாளாக நியமித்தோ இவனை அவமானம் செய்து இவனுடைய கர்வத்தையெல்லாம் அடக்கவேண்டும். மேலும், ஒருகால் மகேந்திர ராஜன் எங்கேயாவது தப்பியோடி மற்ற அரசர்களுடைய உதவியைக்கொண்டு ஒரு சேனையைத் திரட்டிக் கொண்டு வந்தாலும், அவனைப் பயமுறுத்தவும் இவனுடைய உயிர் நம் கையிலிருப்பது நலம். ஆகையால் இவனைநம்தலைநகருக்கழைத்துச் சென்று அங்கே நாம் விஜயமாகும் வரை 1314-ம் நம்பர் சிறைச்சாலையி லடைத்துவைத்திருங்கள். பிறகு மேல் நடக்க வேண்டியவற்றை யோசிப்போம். (சேவகர்கள்) இராஜ சிம்ஹனை இழுத்துச் செல்லல்)

வீரசிங்கம்:—மகாராஜ்! இவனுடைய காதலியாக நிச்சயிக்கப்பட்டிருந்த கமலரேகை என்னும் பெண்ணையும் சிறைசெய்திருக்கிறோம்!

சூரசேனன்:—பேஷ்! இதை முன்னமேயே அறிவித்திருக்கக் கூடாதா? இப்பொழுது

தான் நமக்கு அளவிறந்த சந்தோஷம் பெருகுகிறது. ஜோடியை ஜோடியாகப் பிடித்தீர்களா! அதுதான் வீரர்களுக்கு அழகு. ஆனால் அவளை நம் நேச அரசனான இலங்காபுரி மன்னன் ஜோர் சிங்குக்கு மணம் செய்து வைப்பதாக நாம் வாக்களித்திருக்கின்றோம். அவனுடைய பகைமையைச் சம்பாதித்துக் கொள்ளக் கூடாது! ஆகையால் அவளை லங்காபுரிக்கு அழைத்துச் செல்லுங்கள். ஆனால் நமக்குப் பகைவரான அரசர்கள் அனேகர் இருப்பதால் அவளைக் கன்னியாகுமரி வரை அவ்வரசர்களுடைய தேசங்கள்வழியாய் அழைத்துச் செல்லுதல் தவறு. ஆகையால் சமீபத்திலிருக்கும் துறைமுகப்பட்டணத்திற்கு அவளை யழைத்துச் சென்று, அங்கிருந்து கப்பலேறி, இலங்காபுரிக்கழைத்துச் செல்ல ஏற்பாடு செய்.

மந்திரி:—அப்படியே! மகாராஜாவின் ஆஞ்ஞை.

சூரசேனன்:—அப்படியே செய்யுங்கள், மற்றக் கைதிகளைக் காளிதேவிக்குப் பலியாகக் கொடுத்து விடுங்கள். யுத்தத்தில் அபகரித்த ஆடையாபரணம், படைக்கலங்கள் முதலியவற்றைப் போய்ப் பார்த்துக் களிப்போம். வாருங்கள் செல்லலாம்.

(ஜயசீலனைத்தவிர மற்ற எல்லோரும் செல்லல்)

ஜயசீலன்:—(தனக்குள்) ஈசா! இம்மன்னன் நீதிமானென்று நினைத்தல்லவோ இவனிடம் அமைச்சனாயிருக்கச் சம்மதித்தேன்! இப்பொழுது இராஜீநாமாக் கொடுத்து விடுவோமெனினும், எதிரிகளுக்குச் சகாயம் செய்பவன் என்னும் சாக்கு வைத்துக்கொண்டு என்னை அரசன் கொன்றுவிடுவான். என்ன செய்வது? இருக்கட்டும், இன்னும் என்னென்ன அக்கிரமங்கள் நடக்கின்றனவென்பதைப் பொறுமையுடன் கவனிப்போம்! கடவுள் எப்படியும் நீதியை நிலை நாட்டுவாரென்பதில் என்ன தடை? (செல்லல்)

(காட்சி முடிகிறது)

(தொடரும்)

# சிந்தாமணி சந்தாதார்க்கு.

(சகோதரி வி பாலம்மாள்.)

எனது பத்திரிகாபிமானிகளே! 1928 ஆகஸ்டு (விபவ-ஆவணி) மாதமிருந்து சிந்தாமணிக்கு ஐந்தாவது ஆண்டு ஆரம்பமாகின்றது. சிந்தாமணியின் நோக்கமும் உழைப்பும் உங்களால் நன்கறியப்பட்டுள்ளனவென்பது எனது நம்பிக்கை. கடவுள் கிருபை கூடுமானால் இம்மலரில் இன்னம் ஒரு பாரம் அதிகமாகச் சேர்த்து 9-பாரங்கள் (72-பக்கங்களாக) வெளியிடத் தீர்மானித்திருக்கிறேன். வருஷா வருஷம் சாக்குப் போக்கின்றி தாமாகவேசந்தாவை முற்பணமாக அனுப்பக்கூடிய சந்தாதார்கள் அதிகரிப்பார்களாயின். இதே சந்தாவில் சிந்தாமணியை இன்னம் அதிகப் பக்கங்களுடன் வெளியிட வேண்டுமென்பதே எனது பேரவாவாக இருக்கின்றது. சிந்தாமணி ஆரம்பம் முதல் இன்று வரை விடுத்த நிருபங்களைக் கவனியாது சந்தா ஒரு காசுமனுப்பாது பத்திரிகையைப் படித்துவரும் பாக்கிசந்தாதார் நூற்றுக் கணக்காக இருப்பாராயின் இதனால் ஏற்படும் நஷ்டத்தை நான் எடுத்துக் கூறவேண்டுவதில்லை. கண்டபடிக்கான விளம்பரங்களை எதிர்பார்த்து அதனால் சிந்தாமணி நிர்வகிக்கப்படவில்லை

என்ற உண்மை வெளிப்படையானதே. சிந்தாமணியை ஆதரிக்கக் கூடியவர்களைத் தேர்ந்தெடுக்கும் பொருட்டு மாதிரி இதழும் கடிதமுமாக முதன் முதல் போஸ்ட் செய்யப்படுகின்றது. தேவையில்லாதவர்கள் உடனுக்குடன் தெரிவித்து விட்டால் நன்மையாயிருக்கும். தவிர ஒவ்வொரு சந்தாதாரும் தங்கள் சந்தாவைக்கணக்கிட்டு பாக்கியின்றி உடனுக்குடன் அனுப்புவதுடன் இனி தங்களுக்குத் தேவை இல்லாதிருக்குமானால் அதையும் முன்னதாக அறிவிக்கத் தவறமாட்டார்களென நம்புகிறேன். அபிமானிகளான சிலரின் சந்தாவைக் கொண்டு பணமனுப்பாது மௌனம் சாதிக்கும் பலருக்கு நீடித்தகாலம் பத்திரிகையை அனுப்பி வருவதாலுள்ள சிரமத்தை அறிந்து இவ்வருஷமிருந்தாவது தமதுபாக்கிகளைத் தீர்த்து, இனித் தேவை, அல்லது வேண்டாமென்பதைத் தெரிவிக்க வேண்டுகிறேன். தங்கள் வீட்டு விலாசமும் ஊர்விலாசமும் மாறுவதைத் தெரியப்படுத்தாமலிருந்துவிட்டு சந்தாகேட்கும்கால்தமக்குச் சரிவரப்பத்திரிகைகிடைக்கவில்லையெனக் குறைகூறி, கிடைத்தவரையில் பத்திரிகையைப் படித்து வருவதுபோன்ற குறைகள் இவ்வைந்தாம் ஆண்டில் நீக்கப்படுமென நினைக்கின்றேன். இவ்வைந்தாம் ஆண்டு தொடங்கிப் புதிய சந்தாதார்களின் சௌகரியங்கருதி ஆகஸ்டு(ஆவணி), நவம்பர் (கார்த்திகை), பிப்ரவரி (மாசி), மே (வைகாசி) ஆக இந்நான்கு மாதங்களும் சந்தா ஆரம்பமாகக் கருதப்படும். இதைக் கவனித்து புதிய சந்தாதார்கள் எழுதுவதுடன் சந்தாவையும் முற்பணமாயளிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். ஆரம்ப சந்தாதார்களும் மற்றவர்களும் 1928 ஜூலைமாதம் வரை கணக்கிட்டுத் தங்கள் சந்தாவைபாக்கியின்றி அனுப்பி ஐந்தாவது ஆண்டில் "சிந்தாமணி" நஷ்டமின்றி சிறப்புடன் நடக்கும்படி உதவிபுரியக் கடமைப்பட்டிருக்கிறார்கள். மலாயாவில் பத்திரிகைக்களவு அதிகமெனத் தெரிகின்றது. சந்தாகேட்டு எழுதுங் கடிதம் மட்டும் விலாசதாரில்லையெனத் திரும்புவதன்றிப் பத்திரிகைமட்டும் திரும்பாமல் எங்கோ ஒளிந்து விடுகின்றது.

பெண் சமூக ஊழியத்திற்கென முற்பட்டு ஸ்திரீ வித்தியாபிமானிகளின் ஆதரவை எதிர்பார்த்துச் சுயநலங்கருதாதுஉழைக்கும் "சிந்தாமணி"க்கு ஒருவிதத்தாலும் குறைச்சொல் ஏற்படாது போஸ்டாபீஸ் தவறுகளை நீக்கிக் கொள்ளும் வழியை எனக்குத் தெரிவிக்கும்படி மலாய் நாட்டிலும் மற்றும் வெளியூர்களிலுமுள்ள சந்தாதார்களை வணக்கத்துடன் கேட்டுக்கொள்ளுகிறேன். இவ்வருஷம் சிலபுதிய சந்தாதார்களைச் சேர்த்தனுப்பும்படிக்கும் கோருகிறேன். இதுவரை சாசுவதசந்தாதாராகச்சேராத ஆரம்பசந்தாதார்களை சாசுவத சந்தாதாராகும்படிக்கும் போஸ்டாபீஸ் தவறுகளை உடனுக்குடன் நமது பத்திரிகாலயத்திற்குத் தெரிவித்து உள்ளூரிலும் விசாரிக்கவும் வேண்டுகிறேன். வழக்கமாக சந்தாவைத் தாமாகவே செலுத்தியும் புதியசந்தாக்களைச் சேர்த்தனுப்பியும் ஆதரித்து வரும் பத்திரிகாபிமானிகளின் பேருபகாரத்திற்கு வந்தனமளித்து இவ்வைந்தாம் ஆண்டைத் தொடங்குகிறேன். எல்லாம்வல்ல இறைவனருள் புரிவாராக.

சுபம்.

# ராதாவும் தாராவும்.

## அன்பு

(ஓர் சகோதரி.)

இவ்வுலகினில் மனிதர் வாழ்க்கையில் அன்பு ஒன்றுதான் சிறந்தது. பூதலம் முழுமையும் அன்பினுலேயே கவரப்பட்டிருக்கிறது. ஆசாரிய சிஷ்யசம்பந்தமும் அன்பினுலேதான். சிஷ்யனுகிய ஏகலவ்யன் தனது குருவாகிய துரோணுசாரியருக்குத் தன்னுடைய அன்பாகியபக்தியாலல்லவோ தனது கைப்பெருவிரலை ஆசாரிய தட்சிணையாகக்கொடுத்தான். ஸ்திரீ புருஷர்களுடைய ஒற்றுமையும் காதலாகிற அன்பினுலேதான். உத்தம சிநேகிதர்களுடைய நட்பும் அன்பினுல்தான். சிசுவைத் தாய் நேசிப்பதும், தாயைச் சிசுநேசிப்பதும் அவ்வுயர்ந்த அன்பேதான். வியாதியஸ்தனிடத்தும் பைத்தியக்காரனிடத்தும் பிச்சைக்காரனிடத்தும் பரிதாபப்பட்டு இரங்குவதும் அன்பினுல்தான். மனிதனுடைய உள்ளத்தில் நிஜமான அன்புமாத்திரம் குடிகொண்டுவிட்டால் அவன் தீயோனுயிருந்தாலும்கூட தானுகவே நற்குணங்களில் சிறந்தவனுய் விடுவான். ஆகையால் உலகில் ஆண் பெண் இருபாலருக்கும் அன்பு ஒன்றுதான் அவசியம் வேண்டியது. கல்வி ஒன்றே அழியாச்செல்வம் என்பதுபோல அன்பு ஒன்றே உலகில் பிரதானமெனச் சொல்லலாம்.

ராதாவும் தாராவும் ஒரே ஊரில் பிறந்து வளர்ந்தவர்கள். ராதா பரம ஏழை, தாரா மிகுந்த செல்வவந்தரின் பெண்; இருவரும் ஒன்றுய்ப் படித்தவர்கள், சம வயதுடையவர்கள். தவிர, படிப்பிலும், அழகிலும், புத்திசாலித்தனத்திலும் ஒருவர்க்கொருவர் தாழ்ந்தவர்களல்ல. தம்முள் ஒருத்தி ஏழையென்றும் மற்றவள் பணக்காரி என்றும் அவர்களுள் கொஞ்சமும் வித்தியாசம் கொள்ளவேயில்லை. அவர்கள் தங்கள் 15-ம் வயதில் கலியாணம் செய்விக்கப்பட்டார்கள். அதன் மறுவருஷம் தங்கள் படிப்பை நிறுத்திவிட்டு அவர்கள் தங்கள் புருஷன் வீடுசென்றுர்கள். தங்கள் பெற்றோர்களை விட்டுப் பிரிவதைக் காட்டிலும் தாங்களிருவரும் பிரிந்துபோக நேரிட்டதே என்று அதிகம் துக்கித்தார்கள். ஆயினும் என்செய்வது? அவர்கள் சரீரம் பிரிந்ததே ஒழிய அவர்கள் மனம் பிரியவேயில்லை. அவரவர்கள் அந்தஸ்துக்கேற்க, தாரா நல்ல பணக்காரனை மணந்திருந்தாள். அவள் கணவன் ஓர் வக்கீலாக இருந்தான். அவள் ஓர் பெரிய அழகிய பங்களாவில் சகல ஐசுவர்யமும் தன்னைச் சூழ வாழ்ந்துவந்தாள். ராதா ஏழைப்பெண்ணுதலால் ஓர் நடுத்தரமான குடும்பத்தில் வாழ்க்கைப்பட்டிருந்தாள். அவள் புருஷன் பள்ளிக்கூடத்தில் 90ரூபாய்ச்சம்பளத்தில் உபாத்தியாயராக இருந்துவந்தார். அவருடன் நம் ராதா வெகுசந்தோஷமுடன் இல்லறம் நடத்திவந்தாள். நம் சிநேகிதிகளிருவரும் ஒரே காலத்தில் தங்கள் பிறந்தகம் செல்வதென்று கடிதமூலியமாய் ஏற்பாடு செய்துகொண்டார்கள். அதன்படி தங்கள் தாயார் வீட்டுக்கு ஏககாலத்தில் வரலானுர்கள். பிறகு அவர்களிருவரும் ஒருவரை ஒருவர் சந்திக்கலானுர்கள். ஹா! அப்பொழுது அவர்களடைந்த மகிழ்ச்சியை என்னவென்று கூறமுடியும்! அவர்கள் சந்தோஷத்திற்கு எல்லையு முண்டோ! அவர்களுக்கெப்பொழுதும் தனித்துப் பேசுவதுதான் பிரியம். ஆகையால் அவர்கள் மாலை நேரத்தில் உலாவச்சென்றுல், தனித்துப் போய் ஓர் ஏகாந்

தமான இடத்தில் உட்கார்ந்துகொண்டு பேசுவார்கள். அதன் பிரகாரமே அன்று மாலேயும் அவர்கள் ஓர் தனிஇடத்தில் உட்கார்ந்து கொண்டு பேச ஆரம்பித்தார்கள்.

தாரா:—"ராதா! நாம் இருவரும் ஒருவரை விட்டொருவர் பிரிந்து ஆறுமாதங்களுக்கு மேலாகிவிட்டது. என் குடும்பத்தில் எவ்வளவோ சுகதுக்கங்களிருந்தாலும் உன்னுடைய பிரிவானது எனக்கு அதிக விசனத்தை உண்டாக்குகின்றது" என்றாள்.

ராதா:—"ஆம் தாரா! எனக்கு மப்படியே தானிருக்கிறது. நாமிருவரும் ஒரே ஊரில் இருந்தால் நமக்கு அது மெத்தவும் நன்றாயிருக்கும். என்னசெய்யலாம்! அதைப்பற்றி யோசிப்பதில் என்ன பயன்? அதுபோகட்டும். உன் குடும்பவிஷயமெப்படி? உன் மனச்சந்தோஷமெவ்விதம்? உன் புருஷனின் குணவிசேஷங்கள் உனக்குத் திருப்திகரமாயிருக்கின்றனவா?" என வினவினாள்.

தாரா:—"என் பிரியசகி! நீ வினவியது சரியான கேள்வியே. தவிர இது சமய சந்தர்ப்பத்திற்கேற்றதாகவு மிருக்கிறது. ஆனால் நீ முதலில் இதே கேள்வியை எடுத்துக்கொண்டு விடையளி. பின்பு நான் சொல்லுகிறேன்" எனப் பகன்றாள்.

ராதா:—"சரி அப்படியே! என் புருஷன் வீட்டார்கள் அதிகப் பணக்காரர்களில்லே. என் மாமியும் மாமனும் மெத்தவும் நல்லவர்கள். அவர்கள் பிள்ளேயு மப்படியே. எனக்கு இரண்டு நாத்தனாரும், ஓர் மைத்துனரும் உண்டு. அவர்களும் நற்குணங்கள் அமையப்பெற்றவர்கள். ஆகையால் நானும் கூடியவரை அவர்களே அனுசரித்து அவர்கள் மனம் கோணுதபடி நடந்து வருகின்றேன். இதுவரை என்னே யாரும் கடிந்து பேசினதும் கிடையாது. ஆதலால் பொதுவில் எங்கள் குடும்பம் சந்தோஷமுள்ளதாக இருக்கிறது" எனக் கூறினாள்.

தாரா:—(இதைக்கேட்டு மனமகிழ்ந்து) "என் அன்பு மிக்க ராதா! நீ இம்மட்டும் சந்தோஷமுடன் இருப்பது எனக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. உன்னேப்போலவே நானுமிருக்கிறேன்" என சுருங்கச் சொல்லி முடித்து மேலே பேச இஷ்டமில்லாதவளாய், "நாம் வீட்டுக்குப் போவோம் வா" என்று அழைத்தாள்.

ராதா: (அகத்தினழகு முகத்தில் தெரியும் என்பதைத் தாராவிடமிருந்து வெகு எளிதில் உணர்ந்து கொண்டு மிகவும் மனம் வருந்தினவளாய்) "தாரா! உன் விஷயங்களே உள்ளது உள்ளபடி எனக்குச் சொல்லாவிடில் நான் இந்த இடத்தை விட்டு ஒரு அடி கூடஎடுத்து வைக்கப் போவதில்லே. இரவு முழுவதும் வேண்டுமானுலும் நானிவ்விடமே இருக்கத் தயாராயிருக்கிறேன். என் பிரிய தோழியின் மனக்கவலேயை அறிந்துகொள்வதை விட எனக்கு வேறு எதுவும் பெரிய காரியம் இல்லே" என வெகு உறுதியுடன் சொன்னாள்.

தாரா:—"என் ராதா! நீ ஏன் என் விஷயத்தில் அதிகம் தலேயிடவேண்டும். எனக்கு உன்னிடம் சொல்லக்கூடாத ரகசியம் என்ன கிடக்கிறது? என் விசனம் என்னுடனிருக்கட்டுமே. அதை நீ பகிர்ந்து கொள்ளவேண்டாம். ஆகையால் போகலாம் வீட்டுக்கு, வா" என்றாள்.

ராதா:—"முடியாது, முடியாது. நான் உன்னேப் பற்றி ஒரு விஷயம் கேள்விப்பட்டேன். அது எனக்குத் தெரியும். உன்னிடமிருந்து சரியான உண்மையைத் தெரிந்துகொள்ள வேண்டும். ஆகையால் நீ

என்னிடம் மறைக்கமுடியாது. சொல்லித்தான் ஆகவேண்டும்'' என்று வெகு பிடிவாதத்துடன் சொன்னாள்.

தாரா:—(இனி சொல்லாமல் வேறு விதியில்லை எனக் கருதி சற்று வருத்தத்துடன் கூறலானாள்) "ராதா! உன்னைப்போலவே நானும் என் மாமி வீட்டார் நல்லவர்களாய் அமையப் பெற்றுள்ளேன். எனக்கு வீட்டில் யாதொரு வேலையும் கிடையாது. என்னைச் சினந்துப் பேசுபவரும் யாருமில்லை. ஆனால் என் புருஷனைப் பற்றி எனக்கு ஓர் பெரிய கவலையிருக்கிறது. அது அவருடனும் என்னுடனும் நிற்காமல் நம்மைப் போலொத்த ஓர் குற்றமற்ற பெண்ணையும் பாதிக்கிறது. என்னைப் பொறுத்தமட்டில் நான் என்ன வேண்டுமானாலும் தாங்கிக் கொள்வேன். சரியான யோசனை இல்லாமல் காரியங்கள் நடந்திருக்கின்றன. இதனால் என் மனது சந்தோஷமற்றிருக்கிறது. அதற்குப் பரிகாரமும் காணேம். ஆகையால் என் ஜன்மமுள்ளவரை .இவ்வருத்தம் என்னைத்தொடர்ந்துதான் நிற்கும்'' எனக் கூறி முடித்து "நான் எல்லாம் சொல்லியாய் விட்டது ராதா! இனி எழுந்திரு, போவோம்'' என்றாள்.

ராதா:—(வெகு கவனமுடன் கேட்டுவிட்டு) "தாரா, நான் வரமாட்டேன். நீ சரியானபடி விஸ்தரித்துச் சங்கதியை உள்ளது போல் சொல்லு. அரைகுறையாய்ச் சொல்வதில் என்னபயன்? நீ கவலையில்லாமல் நிஜத்தைச் சொல்'' என்றாள்.

தாரா:—"என் முழுமனதையும் அன்பால் கொள்ளை கொண்ட என் பிரிய ராதே! ஏனம்மா என்னைச் சோதிக்கிறாய்? என் கஷ்ட சுகங்களை உன்னிடம் கூறாமல் நான் யாரிடம் கூறவேண்டும்! நான் இனி எதையும் மறைக்கப் போவதில்லை'' எனச் சொல்லி அவளை நெருங்கி உட்கார்ந்து தன்னுடைய துயரத்தைச் சொல்ல ஆரம்பித்தாள். அப்பொழுதே அவள் குரல் தாழ்ந்துவிட்டது. அவள் வதனம் ஒளியிழந்து குன்றலாயிற்று. கண்களில் நீர்த்துளி பெருகலாயிற்று. அவள் தேகமும் ஒருவிதமான மெலிவடைந்து விட்டது. இதைக் கண்ணுற்ற ராதா தன் அருமைத் தோழியின் மெல்லிய கரங்களைத் தன் கையால் பற்றிக்கொண்டு அவள் கண்ணீரையும் துடைத்து, "நீ ஏனம்மா இவ்வளவு அதைரியப்படவேண்டும்? உன் மனதைச் சரிப்படுத்திக் கொள்'' என்றாள்.

பின்பு தாரா ஒருவாறு மனதைத் திடப்படுத்திக்கொண்டு சங்கதியைமொழியலானாள். "என் புருஷன் சென்னையில் சட்டப் பரீட்சைக்குப் படித்துக்கொண்டிருக்கும் சமயம், சுதர்சனன், பக்தவத்சலன் என இரண்டு மாணவ நண்பர்கள் கூடப்படித்து வந்தார்கள். அவர்கள் மூவரும் வெகுஅந்நியோன்னியமான சிநேகிதர்கள். அவர்களில் முன்னவரின் சகோதரியைப் பின்னவர் மணந்திருந்தார். அந்தப் பெண்ணின் பெயர் சகுந்தலா. அந்தப் பெண்ணை மாமியார் வீட்டுக்கனுப்பச் சகல ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருந்தன. அவள் தன் புருஷன் வீடு செல்ல இரண்டு நாளிருந்தது. அச்சமயம் பக்தவத்ஸலன் திடீரென்று பரலோகப் பிராப்தி அடைந்துவிட்டான். ஆ! அச்சமயம் அப்பெண்ணின் மனமும் அவள் பெற்றோர்கள் மனமும் எவ்விதம் இருந்திருக்கும்? நினைக்கும்பொழுதே நம் மனம் பதறுகிறதே. தன் இருகண்களென பாவிக்கும் ஓர் உத்தம நண்பனின் அகால பரிதாப மரணத்தையும், தன்னருமைச் சகோதரிக்கு நேர்ந்த மகத்தான துயரத்தால் மனம் வெம்பும் உண்மை நேசனின் கணக்கற்ற வருத்தத்தையும் காணச் சகியாமல் என் கணவன் மிகவும் துக்கக்கடலில் மூழ்கினாராம். இதில் அதிசயமில்லை. இது முற்றிலும் சரியான

நியாயமேயாகும். சிறிதுகாலம் கழித்து சுதர்சனன் ஒருவாறு மனம்தேறி தன் அருமைத்தங்கையை, குற்றமற்ற குழந்தையை, சரியானகாரணமில்லாமல் பிறரால் அவமதிப்படுவதற்கோ, அனுவசியமான வழிகளில் வருந்துவதற்கோ இடங் கொட மனமில்லாதவனாய், அவளைப் பாடசாலைக் கனுப்பி அவள் படிப்பதற்கு வேண்டிய சகல சௌகரியங்களையும் செய்து கொடுத்தான். தவிர, அவளைச் சரியான வரன் கிடைத்து அவளும் இஷ்டப்படும் பட்சத்தில் அவளுக்கு மறுமணம் செய்விப்பதாகத் தன்னுள் கங்கணம் கட்டிக்கொண்டான். இதை அறிந்த என் புருஷன் தானே அவளை மணம் செய்துகொள்ளுவதாகத் தீர்மானித்துக்கொண்டாராம். நாளடைவில் சகுந்தலாவும் வெகு சிரமத்தின்மேல் மனம் தேறியவளாய் இவரைப் புனர்விவாகம் செய்து கொள்வதாக உடன்பட்டாளாம். ஆகையாலிருவரும் மனதால் மாத்திரம் ஒருமைப்பட்டிருந்தார்கள். இது விஷயம் என் கணவன் தன் தாய் தகப்பனுக்குத் தெரிவிக்கவில்லையாதலால், குற்றமற்ற அவர்கள் ஒன்றுமே அறியாதவர்களானார்கள்.

'அப்பெண்ணுக்கு இப்பொழுது வயது 19. நம்மிலும் 3 வருஷம் மூத்தவள். சகுந்தலாவைக் கலியாணம் செய்துகொள்ளப்போவதாகத் தன் பெற்றோரிடம் சொல்ல அஞ்சி, அவர் மௌனம் சாதித்துவிட்டார். தானாக முன் நின்று விவாகத்தை முடித்துக்கொள்ளவும் தைரியமற்றவராய் விட்டார். பிறகு நாளடைவில் என் கலியாணம் என் மாமி மாமனால் நிச்சயம் செய்து நடத்தப்பட்டது. வெகு மனத்தாங்கலுடனும் அளவற்ற வெட்கத்துடனும் என்னை இவர் மனைவியாக்கிக்கொண்டு விட்டார். இருந்தாலும் சகுந்தலாவுக்கும் தன் நண்பனுக்கும் கொடுத்த உறுதிவாக்கு எங்கே? நடந்திருக்கும் காரியம் என்ன? நியாயம் எங்கே? ஆதலால் இவர் தான் செய்த மகத்தான தப்புக்காக தன்னைத்தான் வெறுத்து சதா ஆழ்ந்த சிந்தனையுள்ளவராகவேயிருக்கிறார். என் கலியாண சங்கதியை அறிந்த அப்பெண் மிகவும் மனமுடைந்து ஆழ்ந்த துயரத்துக்காளானாள். அதன் காரணமாய் அவள் அச்சமயம் இண்டர்மீடியட் வகுப்பில் படித்துக் கொண்டிருந்ததையும் தன்னால் படிக்க முடியாதெனக் கருதி அவ்வருஷம் படிக்காமல் நிறுத்தி விட்டாளாம். சுதர்சனனும் தன் நண்பனுடைய தப்பை எடுத்துக் காட்ட மனம்பொறாதவனாய்ப் பொறுமையுடன் வாளாவிருந்து விட்டான். நாளாக ஆக என் புருஷன் அதிகக் கவலையிலாழ்ந்துவிட்டார். என்னிடம் வெகு அன்பாயிருக்கப் பிரயாசைப்பட்டாலும், அவருடைய பழைய வாசனை அவரைத் தடுக்கிறது. குற்றமற்ற என்னை வெறுத்துத் தள்ளவும் அவரால் முடியாமல் தவிக்கிறார். நான் வருத்தத்துக்காளாவதும் அவருக்குச் சகியாது. இத்தகைய கஷ்டங்களால் அவர் தவிக்கிறார். யாரிடமும் சந்தோஷத்துடன் பேசவும் முடிகிறதில்லை. கோர்ட்டு விஷயங்களிலும் சரியானபடி நடந்து கொள்ளத் தன்னாலியலாதெனக் கண்டு, வரும் கேசுகளையும் எடுத்துக்கொள்ளாமல் வலுவில் விட்டுவிடுகிறார். சகுந்தலாவோ வெகு சீக்கிரத்தில் மனம் தேறியவளாய் அடுத்த வருஷமே படிக்கத் தொடங்கிவிட்டாள். அவள் கொஞ்சமும் மனம் தளரவில்லை.

அவளுக்குத் தன்னைவிட்டு என்னை மணம் செய்துகொண்டதற்காகச் சற்றும் வருத்தமில்லையாம். "ஒருவர் தன்னால் செய்யக்கூடாத காரியத்தை ஏன் செய்வதாக யோசனையின்றிச் சொல்லிக்கொள்ளவேண்டும்? தைரியமில்லாத ஒருவர் சற்று கடினமான வேலையில் ஏன் அவசரப்பட்டு புத்தியைச் செலுத்தி அதில் வலுவில் தலையிட்டுக் கொள்ளவேண்டும்? பின்னால் செய்ய முடியாமல் ஏன் மனம் வருந்திக் கவலை கொள்ளவேண்டும்?" என வெகு சாந்தமாய்த்

தன் அண்ணனிடம் கூறினளாம். பின்பு, மற்றுமொரு வரன் வந்து அவளை மணம் புரிய விரும்பிக் கேட்டானும். அவள் தன் சகோதரனல் இதை அறிந்து சற்றும் அதற்குச் செவி சாய்க்காமல் தான் தன் வாழ்நாட்களைத் தனியாகவே கழிப்பதாக உறுதி கொண்டு விட்டதாகச் சொல்லிவிட்டாள். "பால்ய விதவைப் பெண்களின் பரிதாபத்துக்கிரங்கி அவர்களை மணம் செய்துகொள்வதாகப் பிரம்மசாரிகள் முன்வருவதைக்காட்டிலும் அவர்களுடன் சிநேகம் செய்துகொண்டும், அவர்களை மணம் புரிவதாகச் சொல்லியும், அக்குற்றமற்ற பெண்களைத் தங்கள் மாயவலைக்குள் போட்டுக் கொண்டும், வீணில் அவர்கள் பெயரை மெய்யாகவோ பொய்யாகவோ கெடுத்தும், அவர்களைக் கடைசியில் ஏமாற்றாமலுமிருந்தால் அதுவே அவர்கள் செய்யும் பெருத்த நன்மையாகும்" என்று சொல்லுகிறாளாம். அவள் தனக்காகக் கொஞ்சமும் துக்கிக்கவில்லை. சில விஷயங்களில் புருஷர்களைக்காட்டிலும் ஸ்திரீகளே திடமான புத்தியுள்ளவர்களென்று நான் நினைக்கிறேன். என்ன இருந்தாலும் அவள் மனதிலும் பூர்வவாசனையில்லாமல் போகுமா? இவைகள் எல்லாம் என் புருஷனாலேயே எனக்கு அறிவிக்கப்பட்டது. என் விவாகத்துக்கு முன்பு இதை நான் சற்றுவது அறிந்திருந்தால் கலியாணம் தடைபட்டுப்போயிருக்குமென்பது நிச்சயம். யோசிக்குமிடத்து அவர்கள் சந்தோஷத்திற்கு நானல்லவோ தடையானேன். என்னைப்போலொத்த ஓர் பெண்ணின் துயரத்திற்கும் என் புருஷனின் மனம் சந்தோஷமற்றிருப்பதற்கும் நானே காரணவாதி. நான் மரணமடைந்தேனானால் அவர்கள் தம்பதிகளாய்ச் சந்தோஷமாயிருப்பார்களென்று எனக்கு உறுதி கிடைத்தால் நான் அதற்கு வழி தேடிக்கொள்ளுகிறேன்" எனக் கூறி, "என் பிரிய ராதே! என் அன்புக்குறைவிடமாகிய உன்னிடம் நான் எதையும் சற்றும் மறைக்காமல் அப்படியே சொல்லிவிட்டேன். இதற்கென்ன செய்யலாம் சொல்" என மொழிந்து பெருமூச்சு விட்டவளாய் வெகு களைப்புடன் அவள் மடியில் தன் தலையை வைத்துப் படுத்துக்கொள்ளலானாள்.

வெகு கூர்மையான புத்தியுள்ள ராதா இவைகளையெல்லாம் வெகு சாந்தமுடனும் கவனமுடனும் கேட்டுவந்து "ஓ! சரிதான், இவ்விஷயங்களை நான் சுருக்கமாய்க் கேள்விப்பட்டேன். உன்னிடமிருந்து சகல உண்மையையும் தெரியலானேன். அந்தப் பெண் என் மாமியாருக்கு நெருங்கிய பந்துதான். நான் அவளைப் பார்த்துமிருக்கிறேன். அவள் வெகு சாந்தமாயும் அடக்கமாயும் நற்குணங்கள் அமையப்பெற்றவளாயும் காணப்படுகிறாள். அவள் பெயருக்குத் தகுந்தாப்போல் ரூபவதியாயுமிருக்கிறாள். ஏற்கெனவே வருத்தமடைந்த அவளை ஏமாறச்செய்தது வெகு பாபமும் துக்கமும் வெட்கமுமான காரியமேயாகும். அதில் சற்றும் ஐயமில்லை. ஆனால் நடந்த காரியம் நடந்துவிட்டது. இனி அதைத் திருப்ப முடியாது. ஆகிலும் அதற்கு இன்னும் ஒரு வழியிருக்கிறது. அதை நீ மனமொப்பிச் செய்ய முற்பட்டு அவர்களிருவரும் சம்மதிக்கும்பட்சத்தில் உங்கள் துயரம் அறவே ஒழிந்துவிடும்" என்றாள்.

தாரா—"என்ன வழி? அதைச் சொல்" என வெகு ஆவலுடனும் பரிதாபமுடனும் கேட்டாள்.

ராதா—"சகி! இது உனக்குத் தெரியாதா? ஆனால் நீ என்னைச் சொல்லக் கேட்பதால் சொல்லுகிறேன் கேள். நீ வெகு அமைதியாய் உன் புருஷனுடன் கலந்து யோசித்துச் சகுந்தலாவை மறு மணம் செய்யக் கேட்டுக்கொள். அவரிடம் சரியான உறுதி பெற்றுக்கொண்டு பிறகு நீயாகவே நேரில் சகுந்தலாவைக் கண்டு

சரியான நியாயங்களைச் சொல்லி 'எங்கள் துயரம் உன்னால்தான் தீரவேண்டும்' என அவள் மனதிற் பதியும்படி வெகுவாய்க் காரணங்களைச் சொல்லி அவளை எப்பாடுபட்டாவது சம்மதிக்க வழி தேடி அவளை உன் புருஷனுக்குக் கடிமணம் செய்வித்தாயேயானால் உங்கள் துயரம் அகன்றுவிடும். நீ அப்படிச் செய்து நீயும் அவளும் உத்தம சிநேகிதிகளாய் அன்பார்ந்த சகோதரிகளாய் பூவும் மணமும்போல் ஏன் கூடி வாழக்கூடாது?" என்றாள்.

தாரா—"ஆம் ராதா! நானும் இதை முன்னமே நினைத்தேன். இது ஒரு பரிகாரமிருக்கிறதையும் அறிந்தேன். ஆனால் இதற்கு அவர்களிருவரும் சம்மதிக்கவேண்டுமே. நான் இதை எடுத்துச் சொன்னால் என் புருஷன் கடிந்துகொண்டாரானால் நான் என்ன செய்வது? அப்படி அவர் ஒப்பினாலும் அவள் ஒப்புவதென்ன நிச்சயம்? அவளைப்போய் நான் எப்படிக் கேட்பேன்? ஆனாலும் வந்தது வரட்டும். முயற்சி செய்து பார்க்கிறேன். இக்காரியம் மாத்திரம் நீ சொல்வதுபோல் கைகூடிவிட்டால் எனக்கு வேறு என்ன வேண்டும்? மேலும் இதனால் நாங்கள் ஒருவர்க்கொருவர் நன்மை செய்து கொண்டவர்களாவோம். அவள் என் வீட்டுக்கு வந்துவிட்டால் போதும். அவள் நல்ல படிப்பாளி, தவிர மெத்த புத்திசாலியுமாகையால் நாங்கள் ஒத்திருப்போமென்பதில் தடையில்லை. அல்லது அவளுக்கு என்னுடனிருக்கப் பிரியமில்லாமலிருக்கும் பட்சத்தில் நான் அவர்களினின்றும் விலகிக்கொள்கிறேன். என் பர்த்தாவின் மனம் சந்தோஷமடைந்தால் போதும். இவ்வுலகில் எனக்கு வேறு என்ன வேண்டும்? ஈசுவர கிருபையால் இக்காரியம் கைகூடிவிட்டால் பிறகு எனக்கு வேறு எதுவும் லட்சியமில்லை" என்று உறுதியுடன் பகன்றாள்.

ராதா "தாரா! எழுந்திரு. நேரம் வெகுவாய் விட்டது. நம் பெற்றோர்கள் நம்மைப் பார்த்து நிற்பார்கள். நீ இனிக் கவலைப்படாமல் காரியத்தை முடிக்க வழிதேடு. கடவுள் கிருபையால் நீ அனுகூலமடைவாய். உன் மனம் சந்தோஷமுறும். உன் மனம் திருப்தியடைந்தால்தானே நானும் சந்தோஷமாய் வாழலாம். 'முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்' என்ற மூதுரை உன்விஷயத்தில் பலிக்கும். போவோம் வா" எனக் கூறி மாலை ஐந்து மணிக்கு வீட்டை விட்டுக் கிளம்பிய சிநேகிதிகளிருவரும் இரவு எட்டு மணிக்குத் தங்கள் வீடு போய்ச் சேர்ந்தார்கள்.

பிறகு ஒரு வாரம் கழித்து தாரா, ராதாவை விட்டுப் பிரியமனமில்லாதவளாய்த் தன் புருஷன் வீடு சென்றாள். அவள் தன் புருஷன் முன்னைக் காட்டிலும் கவலை கொண்டவராய், முகம் குன்றினவராய், தேகம் மெலிந்தவராயிருந்ததைக் காணலானாள். தன் எண்ணத்தை அவரிடம் எப்படித்தெரிவிப்பதென்று ஒரு வாரகாலம் தயங்கியோசித்தாள். கடைசியாய் ஒரு நாள் தன் உள்ளக் கருத்தையும் அதனாலுண்டாகும் நன்மைகளையும் வெகுதெளிவாகவும், அதிமெதுவாகவும், சவிஸ்தாரமாகவும் எடுத்துச் சொல்லலானாள். அவர் அதற்கு என்ன பதில் சொல்லுவார். அவர் மனச்சாட்சிப்படி ஆம் என்றும் இல்லையென்றும் சொல்ல முடியாதவரானார். அவர் அச்சமயம் அதிக வெட்கப்படலானார். கடைசியில் அவர் சாமானியமாய் ஒப்பவே யில்லை. அவள் வெகு தூரம் சொல்லியும் அவர் இசையவில்லை. அவள் முடிவில் "என் மீது உங்களுக்கு அன்பு என்பது இருக்கும் பட்சத்தில், நான் மகிழ்வுடனுங்களுடன் வாழவேண்டு மென்ற மனமிருக்குமேயானால் என் வார்த்தைக்குடன்பட்டே ஆகவேண்டும்" என்று வெகு பிடிவாதமாயும், அதிக தீர்க்கமாயும் மொழிந்தாள்.

அதற்கு அவர் "தாரா! தைரியமற்ற நான் தான் உனக்கிணங்கி மனமிசைந்து சகுந்தலாவை மணம் புரிய வெளிவந்தாலும், புத்திசாலியாகிய அவள் ஒரு முறை ஏமாற்றப் பட்ட என்னைக் கொஞ்சமாவது நம்புவாளா? மேலும் அவள் உடன்படுவாளா? அவளிசையமாட்டாள். ஆகவே உன் எண்ணத்தை விட்டுவிடு; இது நடவாத காரியம்" என்று வெகு தாழ்ந்த குரலுடன் சொன்னார். அதற்கவள் "அந்த விசாரமும் அதற்காக வேண்டிய வேலைகளும் உங்களை அணுகாது. நீங்கள் உறுதி கொடுத்தால் மற்றவைகளை நானாகவே சொந்தத்தில் பார்த்துக் கொள்கிறேன். அதன் ஜயாபஜயம் என்னைச் சார்ந்தது" எனச் சொல்லி அவரைப் பின்னும் வேண்டினாள். அவர் வேறு வழியின்றிக் கடைசியில் தன் சம்மதத்தைக் கொடுத்து விட்டு 'நீ நிச்சயம் இதில் ஏமாந்து நிற்கத்தான் போகிறாய்' என்றார்.

தன் புருஷனின் உறுதியைப் பெற்றவுடன் தாரா வெகு சந்தோஷமாய் மேல் நடக்கவேண்டிய காரியங்களில் தன் கவனத்தைச் செலுத்தினாள். தான் தன் மாமியுடன் சகுந்தலாவின் வீட்டுக்குப் போவதாகத் தீர்மானித்தாள். இதுவரை காரியம் அநுகூலமாயிருப்பதைத் தன்னுயிரிலும் மேலாய்ப் பாவிக்கும் ராதாவுக்குக் கடிதமூலியமாய் அறிவித்தாள். இரண்டொரு நாள் கழித்து சகுந்தலாவின் வாசஸ்தலமாகிய சென்னைக்குத் தன் மாமியுடன் பிரயாணமானாள். தாராவின் கணவன் தன் தாயாரும் அவள் மருமகளும் வந்திருப்பதாக ஓர் கடிதத்தில் சுருங்க எழுதி தன் மனைவி வசம் அனுப்பினான். தாரா நேராய்ச் சகுந்தலாவின் வீட்டுக்கே சென்றாள். சகுந்தலாவின் கிரகத்தில் அவளும் அவள் அருமை சகோதரனாகிய சுதர்சனனும் இருந்தார்கள். சமையல் முதலிய வேலைக்காகவும் தன் தங்கை தனிமையாயிருப்பது நன்றாயிராதென்றும் கருதி நடத்தாவயதுடைய ஒரு நல்ல ஸ்திரீயை வீட்டிலிருக்க ஏற்பாடு செய்திருந்தான். வீட்டுக்கு ஜனங்கள் வரப்போகிறார்களென்றாவது வந்தவர்களின்னாரென்றாவது சகுந்தலாவுக்குத் தெரியாது. தன் தங்கையைப் போல் தானும் பிரம்மசாரியாகவே இருக்கப் போவதாகச் சொல்லிக் கொண்டு இருப்பதால் சுதர்சனன் கலியாணம் செய்துகொள்ளவில்லை. ஆகையால் வீட்டுக்கு வரும் ஜனங்களை சகுந்தலாதான் நல்வரவேற்று உபசரிக்க வேண்டியதாயிருந்தது. அதனால் அன்றும் புதிதாய் வந்தவர்களைப் பிரியமுடன் வரவேற்றாள். சகுந்தலாவின் ரூபலாவண்யத்தையும் அவள் வயதிற் சிறியவளாயிருந்தாலும் பிறரிடம் காட்டும் அன்பு மரியாதைகளையும், அவளது ஆடம்பரமற்ற வாழ்க்கையையும், அவள் சாந்தத்தையும் முகமலர்ச்சியையும் கண்டு தாரா பெரிதும் தன்னுள் வியந்தாள். வந்தவளுக்குச் சரியான உபசாரம் செய்யப்பட்டது. பிறகு தாராவின் புருஷன் கொடுத்த கடிதம் சுதர்சனனால் படிக்கப்பட்டது. அதன்பின் அவன் வந்திருப்பவர்கள் இன்னாரென்று தன் சகோதரிக்குக் கூறினான். அதைக்கேட்டதும் அவள் திடுக்கிட்டாள்.

அவள் மனம் துடித்தது. அவள் இருதயம் பிளந்து போகும் போலிருந்தது. அவளால் விசனிக்கவோ சந்தோஷிக்கவோ முடியாமற் போயிற்று. "அவர்கள் என் இங்குவரவேண்டும்? இந்த வீட்டில் என் தங்கவேண்டும்? வந்த காரணமெதுவாயிருக்கும்? இன்னும் எவ்வளவு நாள் இங்கே வசிப்பார்கள்? அவர்களிடம் நான் எவ்விதம் நடந்து கொள்ளுவது? பேசவு முடியவில்லை, மௌனமா யிருக்கவு முடியவில்லை, இன்றும் நாளையும் விடுமுறை நாட்களாச்சுதே. இல்லாவிடினும் காலேஜுக்காவது போய் விடலாம்' எனப் பலவாறு தன்னுள் சிந்தித்தாள். அவள் எவ்வளவு சமாதான

மாய்த்தன் மனதை அடக்கும் சக்தியுள்ளவளா யிருந்தபோதிலும் தன் பூர்வவாசனையால் பீடிக் கப்பட்டவளானுள். என்ன செய்வாள் பாபம்! பிறகு ஒருவாறு சமாளித்துக்கொண்டு தன்னுடைய ஸ்திதியை தாரா அறிந்துகொள்ளாம லிருக்கவேண்டி எண்ணி அவளுடன் சற்று நெருங்கிப் பழகலானுள். சகலமு மறிந்த தாரா சகுந்தலாவின் மனமாறுதலை 'அகத்தி னழகு முகத்தில் தெரியுமென்பது' போல சந்தேகமறத் தெரிந்து கொண்டாள். அந்த ஸ்திதியில் அவளைச் சற்று தனித்திருக்கச் செய்யலா மெனக் கருதியவளாய் அவளை நோக்கி, 'ராத்திரி சரியான தூக்கமின்மையால் எனக்குக் களைப்பாயிருக்கிறதாகையால் நான் சற்று நித்திரை செய்யப் போகிறேன். ஆகையால் நீயும் ஏதாவது வேலையிருந்தால் கவனித்துக் கொள்' என்று வெகு சூட்சமமுடன் கூறி அவளைப் போக விடுத்தாள். சமயம் கிடைத்ததே நல்ல காலம் என்று சகுந்தலா தன் அறைக்குள் போய்விட்டாள். ஆனாலும் அவள் மனம் சாந்தமடையவில்லை. 'ஆ! கடவுளே! என்னை யேன் சோதிக்கவேண்டும்? உமது திருவுள்ளப் படி நான் ஓர் உத்கிருஷ்டமான சன்னியாசினியாகக் காலம் கழிக்க உடன்பட்டிருக்கிறேன். நடுவில் நான் சற்றே மனம் தயங்கிச் சம்சாரக் கடலில் விழ இருந்தேன். ஆனால் ஆபத் சகாயனாகிய உம்மால் காப்பாற்றப்பட்டேன். அதிலிருந்து பழைய வாசனைகளை அறவே ஒழித்தேன். இன்றையச் சம்பவமானது என்னை யறியாமல் என்னை அலக்கழிக்கச் செய்கிறது.

'ஏ ஈசா! நான் வேண்டுவது ஒன்றுதான். அதாவது, வந்தவர்களை இன்றே பயணம் செய்து அனுப்பிவிடக் கிருபைசெய்யும்,தேவா!' என்று பிரார்த்தித்தாள். அச்சமயம் அடுத்த அறையில் அவள் சகோதரன் தன் சினேகிதனுடன் பேசிக்கொண்டிருந்ததற்கிணங்க 'எல்லாம் நன்மைக்குத் தான்' என்றான். இது அவள் காதில் விழுந்தது. உடனே எங்கு தன்னறைக்குள் வந்து தன்னைக் கவனித்து விடுவானே வென நினைத்து வெளியே சென்று விட்டாள். பின்பு அஸ்தமனமாச்சுது. இரவு போஜனமும் முடிந்தது, படுக்கை நேரமும் வந்தது. சகுந்தலா தாராவுக்கும் அவள் மாமிக்கும் வேண்டிய படுக்கை முதலிய சௌகரியங்கள் செய்துகொடுத்துவிட்டுத் தான் படுக்கத் தன்னறைக்குச் செல்ல யத்தனித்தாள். அதைக்கண்ட தாரா 'என்ன சகுந்தலா! அதற்குள் உனக்குத் தூக்கம் வந்து விட்டதா? நாளை உனக்குக்காலேஜ் விடுமுறையாகையால் நாளை உன் பாடங்களைப் படிக்கலாம்' என வெகு சாதுரியமாய்ச் சொல்லி, 'நாம் சற்றே பேசிக் கொண்டிருக்கலாம்' என்று அவள் கரத்தைப்பற்றித் தன்னருகில் உட்காரவைத்துக் கொண்டாள். அவ்விடம் விட்டு அகல வேண்டுமென்ற விருப்பமுள்ள சகுந்தலா செய்வதின்னதென்றறிய முடியாதவளாய் வேறு வழியின்றி, 'இல்லை தாரா! நான் இவ்வளவு சீக்கிரம் படுக்கும் வழக்கமே கிடையாது. வழிப்பிரயாணத்தால் களைத்திருக்கும் உங்கள் நன்மையைக் கருதி நான் போக நினைத்தேனே தவிர வேறில்லை' எனப் பகர்ந்து வெகுவாய்க் கலங்கின மனத்தினளாய் அவளருகில் உட்காரலானுள். அவர்கள் பேசுவதைத் தான் கேட்க வேண்டாமென்ற மனத்தினளாய் தாராவின் மாமியும் அப்புறம் சென்று விட்டாள். இவர்களிருவரும் பிறகு ஓர் அரை மணி காலம் என்ன பேசுவதென்றறியாமலும் எப்படி ஆரம்பிக்கலாமென்று தெரியாமலும் மனம் திகைத்தவர்களாய்ப் பூமியைப் பார்த்தவண்ணமாய், மௌனமாயிருந்தார்கள். கடைசியாய்த் தாரா தன்னை திடப்படுத்திக்கொண்டு பேச ஆரம்பித்தாள்.

தாரா:—"சகுந்தலா! நான் யாரென்று உனக்குத்தெரியுமா?" எனக் கேட்டாள்.

சகு:—"நீங்கள் வரும்பொழுது எனக்குத் தெரியாது. அதன்பின் என் சகோதரர் தன் சிநேகிதர் வீட்டார் என்று எனக்குச் சொன்னதால் தெரிந்துகொண்டேன்" என்றாள்.

தாரா:—"சரிதான். நான் எதற்காக வந்திருக்கிறேனென்றுஉனக்குத் தெரியுமா?" என்றாள்.

சகு:—"அது எனக்குத் தெரியாது. ஒருகால் இவ்வூரில் உங்களுக்கு ஏதாவது அலுவல் இருக்கலாம். அதனிமித்தம் வந்திருக்கலாம்."

தாரா:—"ஆம்! அது உண்மை தான். எனக்கிருக்கும் ஓர் முக்கியமான வேலைக்காகத் தான் வந்திருக்கிறேன். நான் அதை உனக்கறிவிக்கிறேன். நீ கேட்கப் பிரியப்படுவாயா? அது உன்னையும் சேர்ந்தது தான்" என்றாள்.

சகு:—"என் பிரிய சகோதரி! நானிது வரையிலும் அந்நியர்சங்கதியைத்தெரிந்துகொள்ளப் பிரியப்பட்டதாவது, அதற்காக முயற்சித்ததாவது கிடையாது. அப்படியே என்னைப் பொறுத்த சங்கதிகளும் என் சகோதரன்றியில் வேறு யாருக்கும் இருக்காதென்றும் நினைக்கிறேன். ஆகவே என்னைச் சார்ந்த சங்கதி யென்பதில் எனக்கு நம்பிக்கையோ இஷ்டமோயில்லை. உனக்கவசியம் என்று தோன்றும்பட்சத்தில் நீ சொல்லலாம்" என்றாள்.

தாரா:—"நீ சொல்வது சரி. நான் வந்த வேலை முழுவதும் உன்னைப் பொறுத்ததே" என்றாள்.

சகு:—(இதைக்கேட்டவுடன் அகஸ்மாத்தாய்த் திடீரென்று தூக்கியெறியப்பட்டவள்போல் மனம்தடுமாறி) என்னவோ அம்மா, எனக்கு யாதும் புரியவில்லை" எனக் கூறி, மேலும் ஏதோ சொல்லவந்தவள் அவ்வளவிலேயே நிறுத்திக்கொண்டுவிட்டாள்.

தாரா:—"இதனிடையில் உனக்கொரு மெய்யான சிநேகிதியிருந்தால் அவளை நீயும் உண்மையுடன் நேசித்திருந்தால், அவள் ஆறாத் துயரப்படுவதாயிருந்தால், அத்துன்பத்தைப் போக்க உன்னிடம் வழியிருக்குமானால் நீ அதை உபயோகித்து அவள் மனதைச் சந்தோஷிப்பிப்பாயா, மாட்டாயா?" என்று தன் கருத்தை ஆணைப் பெண்ணாக மாற்றிச் சொன்னாள்.

சகு:—"இதில் ஒன்றும் விசேஷ மில்லையே. சிநேகிதி என்றில்லை. மற்று யாருக்குத் தானாகட்டும். நன்மையும் நேர்மையுமான வழியில் நாம் உதவிசெய்வதால் அவர்கள் துன்பம் நீங்குவதென்றால் நாம் அதைச் செய்து அவர்களை அத்துயரத்தினின்றும் மீட்கவேண்டியது நாம் செய்யவேண்டிய நம்முடைய சாதாரணக் கடமை தானே" எனச் சொன்னாள். இதைக்கேட்ட தாரா ஓர் ஐந்து நிமிஷம் மேலே பேசத் தெரியாதவளாய் மௌன முற்றாள். வெகுவான யோசனையிலிருக்கும் தாராவைச் சகுந்தலா நன்கு கவனித்து 'தாரா! நீ ஏதோ சங்கடமான நிலைமையி லிருப்பதாக நான் காண்கின்றேன். எனக்கு சம்பந்தமில்லாத சங்கதிகளை ஏன் என்னிடம் சொல்ல இவ்வளவு பிரயாசப் படுகிறாய்? நான் கேட்கவு மில்லையே. ஆகையால் அதை விட்டு விடு. நாம் படுத்துக் கொள்ளலாம் வா' என எழுந்திருக்கலானாள்.

உடனே தாரா தூங்கி விழித்தவள் போல் அவளைச் செல்லவொட்டாமல் தடுத்து "இல்லை, அப்படி ஒன்றுமில்லை. நான் சொல்லி என் காரியத்தை முடித்துக்கொண்டு போகவே வந்துள்ளேன். ஆகையால் சற்று உட்கார்" என்றாள். இதைச் செவியுற்ற நம் கூர்மையான புத்தியுள்ள சகுந்தலாவின் மனதில் திடீரென்று ஓர் சந்தேகமான எண்ணம் உண்டாகி ஒன்றும் புரியாமல் திரும்ப உட்கார்ந்து விட்டாள்.

இனித் தாமதிக்கக்கூடாதெனக் கருதி தாரா உடனே தன் கருத்தையும், தான் வந்திருக்கும் நோக்கத்தையும், வெகு தாழ்மையுடனும் மிருந்த பணிவுடனும் விரிவா யெடுத்துச் சொன்னாள். இதைச் செவியுற்ற சகுந்தலா சற்று கடினமான பார்வையுடனும், வெறுப் புற்ற மனதுடனும், பொருப்பற்ற தன்மையுட னும் அவள் இஷ்டத்திற்குச் சற்றும் இணங் காதவளானாள். அவள் மனமாறத் துளிகூட அதில் அவளுக்கிஷ்டமில்லை. அவள் போக்கை உணர்ந்த தாரா பின்னும் வெகு சாதுர்யமாய் அதி அன்புடன் அவள் கல்லான மனம் கரை யும்படிக்குச் சங்கதிகளை எடுத்துச் சொன்னாள். அவளோ ஒரே பிடிவாதமாக இருந்துவிட் டாள். தாராவோ தன் காரியம் கைகூடவில்லை எனத் தயங்கினவளாய், மெய்சோர்ந்தவளாய்க் கடைசியாய் அவளை நோக்கி, 'சகுந்தலா! இப் பொழுது என் புருஷனும் சுமார் மூன்று வரு ஷங்களுக்குமுன் உன் அண்ணனின் சிநேகி தருமாயிருந்தவருமாகியவருக்கு நீ முழு மன துடன் செய்து கொடுத்த 'உறுதிமொழியை' நான் தற்சமயம் அவருக்காக உன்னை வேண்டு கிறேன். அவர் தன் உறுதியிலிருந்து பிசகினது உண்மைதான். அவர் அதற்காகப் பெரிதும் சிந்தித்து மனமுடைந்தவராயிருக்கிறார். வெகு புத்திசாலியும், கல்வி நிறைந்தவளுமாகிய உன் னால் அது இப்பொழுது புறக்கணிக்கப்படுதல் நியாயமோ, அது அழகோ? நீ இதற்குடன் படாவிடில், உங்கள் வார்த்தைக்கு யார் தடங்க லான காரணவாதியாய் ஏற்பட்டாளோ அக் குற்றமற்ற, யாதொரு பாபமுமறியாத அப் பெண், தன் பர்த்தாவின் மனதைச் சந்தோஷப் படுத்தி அவருடன் மகிழ்ச்சி யுற்றிருக்கச் செய்ய முடியாத அச்சிறுமி, தன் விசனத்தால் வேறு வழியின்றி மரணமடையப் போகிறாள். இது நிச்சயம்! முற்றிலும் சத்தியம். அதன் பின்னிட்டு உங்களிருவர் மனமும் கரைந்து, ஒருவர்க்கொருவர் அன்புமேலிட்டவர்களாய் நீங்கள் 'சதிபதி' ஆவது நிச்சயம்' என்று வெகு உறுதியுடனும் அதிக இரக்கத்துடனும் சொன்னாள். அச்சமயம் அவள் கண்களில் கண்ணீர் ஆறுய்ப் பெருகலாயிற்று. இக்கடின மான சொற்களைக் கேட்டும், தாராவின் பரி தாபமான ஸ்திதியைக்கண்டும், சகுந்தலா மிருதி யான மனம் நொந்தவளாய் 'ஈசுவரா! என்னை ஏன் மேலும் சோதிக்கிறீர்? இவ்வெண்ணங் களை எல்லாம் நான் கனவிலும் நினைக்கவும் ஆசைப்படவில்லையே! எனக்கேன் இத் தொல்லை?' என, தழுதழுத்த குரலுடனும், அங்கம் பதறுதலுடனும், கண்களில் நீர் ததும் பியவளாய், தாராவின் கையைப் பிடித்துக் கொண்டு, 'என் அன்பார்ந்த சகி! உன்னைப் போலும் உலகில் பெண்களுண்டோ? எனக் காக நீ ஏன் கஷ்டத்துக்காளாகவேண்டும்? என் விதி என்னை அவ்வழியிலேயே நடத்திக் கொண்டு போகட்டும். நீ இனி அதை மறந்து விடு. உன் கணவனையும் மறக்கச்செய். என் னமோ சிறு வயதில் உலகில் ஆண்பிள்ளைகள் ஏதோ சொல்லுவ தியற்கைதான். கேவலம் அது தவறினதற்காகத் தானும் தன் மனைவி யும் பிரயோசனமில்லாதபடி துயரத்திற்காளா வதில் ஒருவித அர்த்தமும் காணவில்லை. ஆகை யால் நான் ஒரு பெண் உலகிலிருப்பதாக நீ கருதாதே. நான் உனக்கு, அல்லது வேண்டு மானாலும் உங்களுக்கு, மரித்து விட்டதாகவே நினைத்துக்கொள்ளலாம். ஆகையால் நீ திரும் பிச் சென்று, உன் புருஷனுடன் கூடி, உன் அன்பால் அவரைப் பழைய வாசனையின்றும் விலக்கி நீங்கள் மணியும் ஒளியும்போல் வாழுங் கள். இதுதான் என் கடைசியான உறுதியும் விருப்பமும்'' எனச் சொல்லி "நீ இதற் கிணங்கி நடக்கவேண்டியது தான் உன் ஒழுக் கமும், உன் நேர்மையான முறையும், முழுக் கடமையும்'' எனப் பகர்ந்து முடித்தாள்.

இதைக் கேட்ட தாரா, "என் பிரிய தோழி! என் உறுதியான எண்ணத்தை நான் சிறிதளவும் மாற்றிக்கொள்ளப் போவதில்லை. இது உண்மை. ஒருவர் மேலொருவர் கடுகளவும் தோஷம் கூறமுடியாத ஓர் தம்பதிகளின் வாழ்க்கையில் சிறிதும் சந்தோஷமற்றிருக்குமானல் அதைவிட வேறென்ன துயரம் அவர்களுக்கு வேண்டும்? அதைத் தீர்க்க வழி நேர்மையான, குற்றமற்ற முறையிலிருந்தும் செய்துகொள்ள முடியாமற் போனல் அதைவிடத் தாழ்மையும் வேறுண்டோ? ஆகையால் அவ்வாழ்க்கை எனக்கு வேண்டவே வேண்டாம். கடைசியாய்ச் சொல்லிவிடு. என் மனதிலிருக்கும் என் புருஷனின் கவலையை எப்பாடு பட்டாவது தீர்க்கவேண்டுமென்ற என் அன்பான கொள்கைக்குமுன் எனக்கெது தான் லட்சியம்? எதுவும் சாத்தியமே" எனச் சொல்லி, மனப்பூர்வமாய் சாகத் துணிந்த ஒருவன் விஷத்தை எவ்வாறு தடையின்றியும் மனக்களிப்புடனும் சாப்பிட யத்தனிப்பானே, அதுபோல் நம் தாரா மரணத்தை எதிர்பார்த்துச் சாகத் தயாராயிருக்கப்பட்டவள் போல் காணப்பட்டாள். கடைசியாய் சகுந்தலா இன்னும் ஒரு மணி காலம்வரை அவளுக் கெவ்வளவோ நியாயமான காரணங்களை எடுத்துச் சொல்லியும், தாராமுன்வைத்தகாலைப் பின்வாங்கவேயில்லை. முடிவில் சகுந்தலா வெகு கஷ்டத்துடனும் துக்கத்துடனும் அவளுக் கிணங்குவதாக வாக்களித்துவிட்டாள். அதைக் கேட்ட தாரா மனம் வியந்து, மலர்ந்த முகத்துடனும் விரிந்த பார்வையுடனும் அளவற்ற மகிழ்ச்சியுடனும் அவள் கரங்களைப் பற்றி ஆனந்த மேலிட்டவளாய் அவளைத் தழுவிக்கொண்டு 'நன்று நன்று' எனச் சொல்லி, தன் கண்களில் ஆனந்த பாஷ்பம் பொழியலானள். 'நான் இனி உனக்குத் தங்கையும் சிநேகிதியுமாகிவிட்டேன். நீயே உலகிற் சிறந்தவள். உன்னிடமே அன்பு பிரதிபலிக்கிறது' என மேலும் பல வார்த்தைகளைச் சொன்னாள். ஆனல் தாராவுக்கு இருந்த சந்தோஷம் சகுந்தலாவுக் கில்லை. பின் இருவரும் சற்று பேசிக்கொண்டிருந்துவிட்டுப் படுக்கைக்குச் சென்றார்கள்.

மறு நாள் சுதர்சனனுக்குச் சங்கதிகள் தெரிய வந்தன. தன் தங்கையை அனுசரித்த அவன் மனமொப்பினான். அன்றே தாராவும் அவள் மாமியும் தங்கள் ஊருக்குப் பயணமானர்கள். புறப்படும்பொழுது "நீ இனி எதையும் நினைத்துக் கவலைகொள்ளாதே. உன் படிப்பிலேயே நீ கவனமா யிருக்கலாம். அவ்விஷயத்தில் நாங்கள் உனக்கு யாதொரு தடையும் செய்யப்பட்டவர்களல்லோம். உன் பரீட்சை முடிந்ததும் சீக்கில் உன்னை என்னுடன் வசிக்க அழைத்துக் கொள்ளுகிறேன். பின்னு முனக்கிஷ்டமிருக்கும்பட்சத்தில் மேலே படிக்கலாம்" எனக்கூறி சகுந்தலாவிடம் தாரா விடைபெற்றுச் சென்றாள். அதற்கு சகுந்தலா ஏதோ பதில் சொல்ல வந்தவள் உடனே நிறுத்திக்கொண்டு அவளுக்கு விடைகொடுத்தனுப்பினாள். பின்பு இவ்விஷயமாய் அண்ணனும் தங்கையும் சற்று பேசிப் பிரியலானர்கள்.

தாரா ஊர் வந்து சேர்ந்ததும் அவள் தன் ராதைக்கு மிகவும் அன்புடனும் விஸ்தாரமாகவும் சகல சங்கதிகளையும் எழுதலானாள். 'உன்னுடைய யோசனையின்படி காரியங்கள் நடக்கப் போவதால், என் நன்றியைத் தெரிவிக்க என் முழு அன்பைத் தவிர வேறு சிறந்த பொருள் உலகில் ஒன்றையும் நான் காணவில்லை' என்று வரைந்தாள். தன் புருஷனுக்கும் சகல விவரங்களையும் தெரிவித்தாள். அவரும் அவள் அன்பிற்காக அவளை வெகுவாய்ப் புகழ்ந்தார். ராதா தன் தோழியின் கடிதத்தைப் பார்த்து மன மகிழ்ந்து அவளுக்குப் பதில் எழுதினாள்.

சகுந்தலாவுக்குக் காலேஜ் முடியாகிவிட்டது. அவளை மணம் செய்துகொள்ளுப

வருக்கும் கோர்ட்டு மூடியாய்விட்டது. அப்படியே அவள் சகோதரனுக்கும் விடுமுறையாயிருந்தது. ஓர் ஸ்வாமி சந்நிதியில் சகுந்தலாவின் விவாகம் நடத்த ஏற்பாடாயிற்று. வீண் ஆடம்பரம் ஒன்று மின்றி முக்கியமாய் வேண்டிய வைதிகச்சடங்குகளுடன், விவாகம் இனிது நடந்து முடிந்தது. ராதா தன் புருஷனுடன் கலியாணத்திற்கு வந்திருந்தாள். ராதா தன் தாராவின் முகமலர்ச்சியைக் கண்டு அகமகிழ்ந்தாள். தாரா தன் புருஷனுடையவும் சகுந்தலாவினுடையவும் பிரதிக்ஞை தன்னால் முன்னடித் தவறினும் பிறகாவது நிறைவேறிற்றே என்று கடவுளை ஸ்துதித்துப் புகழ்ந்தாள். சகுந்தலாவும் அவள் புருஷனும் சிறிய வயதுடைய தாராவின் அன்பிற்காகப் புகழ்ந்து வியந்தார்கள். பிறகு சிநேகிதிகள் மூவரும் தாராவின் வீட்டில் மூன்று வாரம் வசித்துவிட்டு ராதா தன் சொந்த ஊருக்கும் சகுந்தலா மேல்படிப்புப்படிப்பதற்கு சென்னைக்கும் புறப்பட்டுப் போனார்கள். சுதர்சனனும் தன் தங்கைக்கு மணம்செய்து கொடுத்துவிட்டதால் தானும் ஓர் உத்தமகுணமுள்ள பெண்ணை விவாகம் செய்துகொண்டான். சுலோசனுவாகிய அவளும் சகுந்தலாவுடன் சந்தோஷமாயிருந்தாள். பின்னிட்டு சகுந்தலா மெடிகல் காலேஜில் சேர்ந்து படித்துப் பரீட்சைகளில் தவறாமல் முதன்மையில் தேறினாள். சுதர்சனன் பணக்காரனானபடியால் தன் சகோதரிக்கு முப்பதினாயிரம் ரூபாய் சீதனம் கொடுத்தான். அதைப் பெற்றுக்கொண்டும், தன் சொந்த ஊர்வந்து தாராவுடன் வசிக்கலானாள். தனக்குச் சீதனமாகக் கொடுக்கப்பட்ட தொகையை அவள் மூலதனம் வைத்து ஓர் தர்மவைத்தியசாலை ஏற்படுத்தலானாள். அவளிடம் ஜனங்கள் ஏராளமாய் வரத்தொடங்கினார்கள். வியாதியஸ்தர்களை அவள் மிகவும் பரிவுடனும் அன்புடனும் கவனித்து வந்தாள். அவள் புருஷன் பெரிய செல்வவந்தன் என்று முன்னமே தாரா சொல்லியிருப்பதால் பணம் வாங்கி வைத்தியம் செய்யவேண்டாமென்று சகுந்தலாவுக்கு அவர் உத்தரவிட்டிருப்பதால் அவள் தர்மகைங்கரியமே செய்துவந்தாள். ஆகையால் அவளிடம் ஏராளமாய் ஜனங்கள் வரக்காரணமாயிற்று. வீட்டுக்கவலை சகுந்தலாவுக்குக் கிடையாது. அதைச் சார்ந்ததெல்லாம் தாராவினுடையது. தவிர அவள் சகுந்தலாவுக்கும் வைத்திய விஷயங்களில் தன்னால் கூடிய உதவி செய்வாள். அவர்களைப் பற்றிய கவலை அவருக்கு ஒன்றுமே கிடையாது. சகுந்தலாவைப் பாராட்டாதவரில்லை. தாராவின் அன்பிற்காக அவளைப் புகழாதவரில்லை. இதற்கிடையில் அவர்கள், பூவும் மணமும் போலும், நகமும் சதையும் போலும், மணியும் ஓசையும் போலும் கூடிமனமகிழ்ந்து வாழ்ந்து வந்தார்கள். ராதாவைத் தாரா நினையாத நேரமில்லை. அவளைப்பற்றிச் சகுந்தலாவிடம் அடிக்கடி புகழ்ந்து பேசுவாள். நம் மூவர் சந்தோஷத்திற்கும் அவளே காரணவாதி என்று சொல்லி அகமழ்ந்திருந்தாள். சகலரும் சுகமாய் வாழ்ந்து வந்தார்கள்.

ஆகையால் அன்பு எதையும் வெல்லும். பயத்தைப் போக்கும், துன்பத்தை நீக்கும். துயரத்தை அகற்றும், பாபத்தை நெருங்கவிடாமற் செய்யும். மனமகிழ்ச்சியை அளிக்கும், ஜயத்தைக் கொடுக்கும், தைரியத்தை உண்டாக்கும், முயற்சிக்குத் துணை நிற்கும். இன்னும் விவரிக்கின் பெருகுமென அஞ்சி இத்துடன் நிறுத்துகின்றோம். சிந்தாமணியைப் படிப்பவர்கள் தாரா, ராதா, சகுந்தலா இவர்கள் மூவரில் யாருடைய அன்பு உயர்ந்ததென்று தெரிந்து கொள்ளக் கடவர்கள்! அன்பே பிரதானம்!

சுபம்!

# " நான். "

(கோபிசெட்டிபாளையம் ஸ்ரீமான் அ. பா. சுப்பிரமணியன்.)

### தலைவன் துதி.

தன்னையுந் தனதாதாரத் தலைவன் றனையுங் காணத் தவமது செய்யவருளாய்
பின்னையத் தலைவன் றானுப் பிரமமாய்ப் பிறப்புத் தீர்ந்துப் பிறவாழி காணவருளாய்
தன்னை மறந்தவனைத் தவமது செய்யச் சொல்லித் தன்னைக் காணும்படி யருளாய்
முன்னைப் பின்னையற்று நின்று முரண் சிறிதுமின்றி முற்பட்ட தலைவா! அருளாய்!

"நீ யார்?" எனில் "நான் இராமன் மகன் கிருஷ்ணன்" என்கின்றார்கள் மூடர்கள்! அவர்கள் அந்த "நான்" என்பது இத்தூல மன்று, இத்தூலத்திற் கன்னியமானதோர் வஸ்து என்பதை உணருகின்றதில்லை. ஆழ்ந்து யோசிக்குமிடத்து "நான்" என்பது இத்தூல தேகமன்றென்று சாதாரண அறிவாளர்களுக்கும் அங்கையில் நெல்லிபோல் விளங்குமே!

பள்ளியில் உபாத்தியாயர் போதித்துக் கொண்டிருக்கின்றார். இராமன் அவர் போதனைகளைக் கருத்தாய்க் கேட்டு வருபவனே போல் உபாத்தியாயரையே நோக்கிக்கொண்டிருக்கிறான். குருவும் அவ்வாறே அவனை நம்புகிறார். சிறிது நேரத்திற்குப் பிறகு அவர் இராமனை ஏதோ வினவுகிறார். இராமன் இருக்கைவிட்டு எழுந்தானில்லை. அவனது கண்கள் திறந்தபடியே நிலையில் நிற்கின்றன. உபாத்தியாயரும் அருகில் வந்து உறக்க வினவினார். இராமன் எழுந்தபாடில்லை. அருகிலிருந்த பையன் இராமனைத் தனது நகத்தாற்றீண்டியதே அவனுடலில் உணர்வெய்த, நடந்தவற்றை ஒருவாறு ஊகித்துணர்ந்து எழுந்து நின்று மோனமுற்றான். உபாத்தியாயரும் "என்ன விடை அளிக்கின்றை?" என உசாவ அவன் "என்ன வினவினீர்?" என்கிறான்.

அவனுடைய அந்த "நான்" குருவின் போதனையில் நிலைக்கவில்லை. அந்த "நான்" மிட்டாய்க் கடையிலோ அன்றி வீட்டிலோ நிலைத்தது! அந்த "நான்" இல்லாததால் அவனுடல் இயங்கவில்லை. திறந்த கண்கள் போலிக் கண்களாயின! செவிகளும் கேட்டில! இராமனும் பிறகு "நாம் அக்காலத்தில் சுவாசித்தோமோ?" என்று ஐயமுறுகிறான். நண்பர்களே! இத்தகைய சாக்கிரத்திலும் நாம் ஆழ்ந்த யோசனை செய்யுங் காலங்களில் "நான்" என்பது இந்த உடலன்று; இத்தகைய உடலுக் கன்னியமானதோர் பொருள். அந்த "நான்" இன்றி இந்த உடல் இயங்குகிறதில்லை. அந்த "நானே" இந்த அழியத்தக்க உடலில் புகுந்து மாவுருவொன்றுள் புகுந்து அதை ஓர் மனிதன் ஆட்டுவதேபோல் இதை ஆட்டுகின்றது என்பது மத்தாப்பு வெளிச்சம் போல் விளங்குகிறதன்றோ? அந்த "நான்" தானே சாக்கிரத்திற் சகல விஷயங்களையும் ஞானேந்திரியங்களின் மூலமாக அறிகின்றது; ஆழ்ந்த யோசனை காலங்களில் இந்த "நான்" இவ்வுடலை மறக்கிறது. அருகில் கிடப்பவற்றை இந்த "நான்" காண்கிறதில்லை. அருகில் யாராவது தன்னைக் கூப்பிட்டாலும் அச்சமயம் இந்த "நான்" அதை உணர்கிறதில்லை. அச்சமயம் துர்க்கந்தத்தைச் சுவாசித்தாலும் அதை இந்த "நான்" உணர்கிறதில்லை. தன் உடலில் உண்டாயிருக்கும் புண்ணின் வலியையும் இந்த "நான்" அப்பொழுது உணருகின்றதில்லை; சாப்பாட்டுச் சமயங்களில் ஆழ்ந்த யோசனை

கள் உண்டாயின் அரைச்சாப்பாட்டில் எழுந்து போவதை நாம் காண்கிறோம்.

சொப்பனம் காணும் காலங்களிலும் இந்த "நான்" உடலை மறந்துபோகிறது. அப்பொழுது இவ்வுடலினருகே ஒரு சர்ப்பம் சென்றாலும் அதை இந்த "நான்" உணருகிறதில்லை. அந்தக் கனவில் நிகழும் விஷயங்களை இந்த "நான்" அறிகிறது. கனவிலும் தேக சம்பந்தம் தோன்றாமலே "நான்" என்ற ஒரு பொருளிருக்கிறதன்றோ? கனவு காணும் சமயங்களில் நமக்கு "நான்" என்பது இவ்வுடல் என்பது தோன்றுகிறதில்லை. தேகத்திற் கன்னியமானதொன்று என்றே நாமுணர்கிறோம். "அது சரி! சுழுத்தி யவத்தை காலங்களில் "நான்" என்னும் வஸ்துவே காணப்படுகின்றதில்லையே? அப்பொழுது இந்த "நான்" எங்கு போயிற்று?" என்று உசாவுகின்றார் ஒருவர். சரிதான்! "ஒன்றுமே தெரியாமல் ஒரு கனவுமின்றிச் சுகமாய்த் தூங்கினேன்" என்று கூறி அந்த சுழுத்தியின் சுகத்தை அக்காலத்தில் அறிந்தவர் யார்? சுழுத்தியில் "நான்" இன்றேல் தான் சுழுத்தி அவத்தையில் இருந்ததாக அது எப்படி அறிந்தது? இதனால் இந்த "நான்" சுழுத்தி அவத்தையிலும் இருக்கிறதென்பது விளங்குகின்றதன்றோ? இதுபற்றிதானே ஸ்ரீமத் தாண்டவராய சுவாமிகளும் தமது கைவல்ய நவநீதம் என்ற நூலில்,

"தேகமல்லாமல் வேறே தேகியார்
காணேன் என்றாய்
மோகமாங் கனவில் வந்து முளைத்தவ
னெவனீ சொல்வாய்
சோகமாங் கனவு தோன்றாச் சுழுத்தி
கண்டவனார் சொல்வாய்
ஆகநீ மனதிலெண்ணு மறிவுதா
னேது சொல்வாய்?"

என்று கூறியுள்ளார். இத்தகைய "நான்" என்பதற்குத் தேகி என்ற பெயர்—இந்த "நான்" தேகத்துடன் சம்பந்தப்பட்டிருப்பதாற்றான் உண்டாயிற்று. இத்தகைய "நான்" என்பதே ஆன்மாவாகும்.

ஒரு சமயத்திலே ஒரு சாது தமது சிஷ்யனுக்கு "நான் யார்" என்பதைப்பற்றியுள்ள ஞானத்தை யுபதேசிக்கக் கருதி அவனை யொரு பெரிய அழகிய தோட்டத்திலே விட்டுச் சென்று சின்னாட்கள் கழித்துத் திரும்பி வந்து அவனை நோக்கி "புத்திரா! உனக்கேதேனுந் தேவையா?" என்று கேட்டார். சிஷ்யன் "ஆம்" என்று கூறவே அவர் அவனிடத்திலே கல்யாணி என்ற பெயருடைய ஒரு ஸ்திரீயை விட்டு விட்டு மச்ச மாம்சாதிகளைத் தாராளமாக உண்ணும்படி போதித்துச் சென்றார். பின்னர் நெடுநாட்கள் கழித்து அவர் மறுபடியும் வந்து முன் கேட்ட கேள்வியையே அவனிடம் கேட்டார். அந்தத் தடவை சிஷ்யன் "அநேக வந்தனம்! எனக்கொன்றுந் தேவையில்லை" என்றான். அப்பொழுது அச் சாது அவனையும் அந்த ஸ்திரீயையும் தம்மிடம் கூப்பிட்டு, கல்யாணியினது கைகளை அவனுக்குக் காட்டி, "இவை என்ன? இவற்றின் விவரத்தை உன்னால் சொல்லக்கூடுமா?" என்று சிஷ்யனைக் கேட்க அவன் "கல்யாணியினுடைய கைகள்" என்றான். அப்படியே அவர் கல்யாணியினுடைய ஒவ்வொரு அவயவத்தையும் கேட்டுக்கொண்டு போனார். சிஷ்யன் ஒவ்வொன்றையுஞ் சொல்லிக்கொண்டே போனான். அப்போது சிஷ்யனுக்கு உடனே ஒரு கருத்துண்டாயிற்று. அதாவது "நான் கல்யாணியினுடைய காது, கல்யாணியினுடைய மூக்கு என்று எல்லாவற்றையுஞ் சொல்லிக்கொண்டிருக்கிறேன். அப்படியாயின் இந்தக் கல்யாணி எங்கே?" என்பதே. இவ்வாறாகவே பிரமித்துப் போய் அவன் தனது குருவை

நோக்கி "இந்தக் கண்கள் காதுகளுக்குச் சொந்தக்காரியான கல்யாணி என்பவள் யார்?" என்று ஒரு கேள்விகேட்டான். சாது— "இந்தக் கல்யாணி என்பது யார் என்பதை நீ அறிய விரும்பினுல் என்னுடன் வா, நான் உனக்கு உபதேசிக்கின்றேன்" என்று கூறிக் கடைசியாக அவனுக்கு ஆன்ம ரகஸ்யத்தை வெளிப்படுத்தினுர்.

(ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர்)

நேயர்களே! இவ்வழகிய கதையால் "நான்" என்பது இந்த தேகமன்று, இதற்கன்னியமானதோர் வஸ்து என்பது விளங்குகிறதல்லவா?

பிறந்தன இறக்கும், இறந்த பிறக்கும்;
தோன்றின மறையும், மறைந்தன தோன்றும்;

* * * *

பிறந்தன பிறந்தன பிறவிகடோறும்
கொன்றனை யனைத்தும்,
அனைத்தும் நினைக் கொன்றன;
தின்றனை யனைத்தும்,
அனைத்தும் நினைத் தின்றன;
பெற்றனை யனைத்தும்,
அனைத்தும் நினைப் பெற்றன;
ஓம்பினை யனைத்தும்,
அனைத்தும் நினை யோம்பின;
செல்வத்துக் களித்தனை, தரித்திரத் தழுங்கினை;
சுவர்க்கத் திருந்தனை, நரகிற் கிடந்தனை;
இன்பமுந் துன்பமு மிருநிலத் தருந்தினை.

(பட்டினத்தடிகள்)

நானும் நீயும் இந்த இராஜாக்களும் ஒரு காலத்திலுமில்லாது இருந்ததில்லை—இல்லாதிருக்கப்போவதுமில்லை—தேகமழிந்த பிற்பாடும் நாமழிவதில்லை—நாமாத்ம ஸ்வரூபத்தால் நித்தியர்களே!

தேகிக்கு பால்யமும், யௌவனமும், கிழட்டுத்தனமும் எப்படியோ அப்படியே இந்த தேகம் போய் மற்றொன்று வருவதும்.

நித்தியனுயும், நாசமற்றவனுயும், பிரத்தியட்சம், அனுமானம், உபமானம், சத்தம், அருத்தாபத்தி, அனுபலப்தி ஆகிய ஆறு பிரமாணங்களா லறியமுடியாதவனுயுமுள்ள தேகியினிவ்வுடல்கண் முடிவுள்ளவைகளாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

எவன் ஆன்மா கொல்லுவதாகவும் கொல்லப்படுகிறதாகவும் அறிகிறுனே அவன் உண்மையை யறியாதான். ஆன்மா கொல்லுவதுமின்று, கொல்லப்படுவதுமின்று. ஆன்மா பிறப்பற்றவன்—அழிவற்றவன்—நித்தியன்—முன்னேன்—ஆதலா லிவ்வுடல்கள் கொல்லப்படினும் ஆன்மா கொல்லப்படுவதில்லை. ஆன்மா பிறக்கிறதும் இல்லை—இறக்கிறதுமில்லை—உண்டாய் மறுபடியும் இறக்கிறவனுக இல்லை.

மனிதனெவ்வாறு பழைய துணிகளைவிட்டுப் புதுத் துணிகளை எடுத்துக்கொள்ளுகிறுனே அஃதேபோல் ஆன்மாவும் பழைய உடல்களை விட்டுவிட்டுப் புதிய உடல்களை எடுத்துக்கொள்ளுகிறுன்.

ஆயுதம் ஆன்மாவை வெட்டுகிறதின்று—நெருப்பெரிப்பதின்று—சலம் நனைப்பதின்று—காற்றுலர்த்துவதின்று. இவனை வெட்ட, எரிக்க, நனைக்க, உலர்த்த முடியாது. ஆதலின் இவன் நித்தியன், எங்குமுளன், ஸ்திரமானவன், சலனமற்றவன், என்றுமுள்ளவன்.

(ஸ்ரீமத் பகவத்கீதை—இரண்டாமத்தியாயம்)

இவைகளால் இந்த "நான்" நித்தியமானதென்று விளங்கும்.

"பிறிவதெப்படி யென்றக்காற்
பிணமாகு முடனென்னும்
அறிவினைக் கொல்லல் வேண்டும்,
ஐம்பூத விகறமன்றே

வெறியதோர் துறுத்தி மூக்கின்
விடுவது போலுன் மூக்கால்
எறிபிராணனு நீயல்லே;
இராசத குணவிகாரம்.

"கரணமா மனதுபுத்தி
கருத்தாவா மவையான் மாவோ
தாமுளவிரண்டு கோசம்.
சத்தவகுண விகாரம்
வரமறு துயிலானந்த மயனேயு
நானென்னுதே!
விரவிய தவமஞ்ஞான
விருத்தியின் விகாரமாமே!!

(கைவல்யம்)

கீழ்கண்டபடி இது பற்றிக் கைவல்ய நவநீத வசனத்தில் (ஆரணி குப்புசாமி முதலியார் பதிப்பு) வெகு அழகாகக் காணப்படுகிறது:—

"இத்தூல தேகம் பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களினின்று உண்டானது. இது அழிந்து போகத்தக்கது. ஆனபடியால் அனித்தியம், மேலும் சடம், தன்னே யறியாதது; ஆன்மாவால் அறியப்படுவது; துக்கத்திற்கு இடமானது; ஆகையால் இது அநுர்தசடதுக்கமானது. ஆன்மா (நான்) நித்தியமானது; சித்தப்பிரகாச முடையது; துக்கமற்றது; இந்த ஸ்தூலதேகமழிந்தாலும் "நான்" என்கிற ஆத்மா அழிவதில்லே. ஒருவனிறந்தான் என்ருல் தேகத்தைவிட்டு நீங்கினுன் என்பதையே பொருளாகக் கொள்ளுகிறேம். இறந்தவனுடைய தேகத்தைப் பார்த்தழுவோரும் "அப்பா! எங்களேவிட்டுப் போய்விட்டாயே!" என்றழுவது அனுபவம்! இத்தேகம் அழிந்தாலும் நாம் அழிவதில்லே; எவ்வாறெனின் சென்ற ஜன்மத்தில் தேகத் தோடிருந்து செய்த கருமங்களின் காரணத்தினுலேயே அத்தேகத்தை விட்டு மரித்தபின் இஜ்ஜன்ம மெடுத்தோம். இனி இதையும் விட்டுப்போய் இப்போது செய்யுங் கருமங்களே அனுபவிக்க இன்னெரு ஜன்ம மெடுப்போம். இவ்வாறு எண்ணிலவாய் நாம் விட்டுப்போகும் தேகங்கள் ஒவ்வொன்றும் அழிந்து கொண்டே போக நாம் இருந்து கொண்டே இருக்கிறேம். மேலும் 'என் தேகம்' என்று நாம் கூறுவதால் தேகம் வேறு நாம் வேறு என்றும் என் வீடு என்பதில் வீடு நமக்குச் சொந்தமான ஒரு பொருளாக விருப்பது போல் தேகமும் நாம் சொந்தமாகக் கருதுமோர் பொருளென்று தெரிகிறது. உண்மையில் நாமதை விட்டுப்போய் விட்டபிறகு தீயோ, நாயோ, கழுகோ தங்களுக்குச் சொந்தமாக்கிக் கொள்ளுகின்றன. கடத்தைக் காண்பவன் கடமாகாது கடத்திற்கு அன்னியமான ஒரு வஸ்து ஆவதுபோல் தேகத்தைக் காணும் நாம் தேகமல்ல., நாம் ஆன்மா; இதைப்பற்றிய வாசாஞானமான உணர்ச்சி ஏறக்குறைய யாவர்க்குமே உண்டெனலாம். ஆனுலனுபவமாய்த் தேகத்தை நீங்கிநிற்கும் நிலேயை அடையச் சூட்சும அறிவுவேண்டும். பஞ்சகோசங்களிலித்தூல தேகம் அன்னமய கோசமானதால் இது நாமல்லவென்றறிந்து இதைவிட்டு நீங்கி நின்ருல் அன்னமயகோசம் ஒழிந்ததாகும்.

"மற்றைய நான்கு கோசங்களில் பிராணமய கோசம், மனேமய கோசம், விஞ்ஞானமய கோசம் இந்த மூன்றும் ஆன்மா அவ்வப்போது அந்தக்காணங்கள், பிராணவாயு இவற்றில் சிலவற்றேடு கூடி நிற்கும் நிலேமைகளாகும்.

"இவற்றில் மனமாதி அந்தக்காணங்கள் தன்மாத்திரை பூதங்களின் சத்துவாம்ச சமஷ்டியில் உற்பத்தியானவை. இவைகளும் ஒரு அவஸ்தையில் இருந்து ஒரு அவஸ்தையில் இல்லாது போவதால் அநித்தியமே. இவை தம்மைத் தாமறியா. இவைகளில் ஒவ்வொன்றுந் தன் தொழிலேமட்டும் செய்யுமேயன்றிப் பிறிதொன்றின் தொழிலேச் செய்யாது. ஒன்றை

யொன்று மறியா. அறிவின் பிரகாச மின்றித் தாமே விளங்கா. இவற்றால் இவை சடமே. சதா பலவித துக்கத்தை அளித்துக்கொண் டிருப்பவைகளே. இவை யான்மாவா லறியப் படுகின்றன—அடக்கவும் படுகின்றன. ஆன் மாவா லறியப்படும் எதுவும் ஆன்மாவாகாது. ஆகையால் நம்மால் காணப்பட்டவை, அறியப் பட்டவை யெல்லாம் நாம் அல்லவென்றே தள் ளத்தக்கவைகளாகும்.

"கண்டன வல்லவென்றே
கழித்திடுமிறுதி கண்ணே
கொண்டது பரமானந்தக்
கோதிலா முத்தியத்தால் * * "

"உள்ளது மில்லது மாகி—முன்
னுணர்வது வாயுன்னுளங் கண்டதெல்லாம்
தள்ளெனச் சொல்லியென்னையன்—என்னைத்
தானுக்கிக் கொண்ட சமர்த்தைப் பார்
தோழி—சங்கர!

பார்தி பூதம் நீயல்லை—உன்னிப்
பாரிந்திரியங் கரண நீயல்லை
யாராயறிவு நீ என்றான்—ஐயன்
அன்பகயுரைத்த சொல்லானந்தத் தோழி—
சங்கர!"

(தாயுமானவர்)

"இந்த அந்தக்கரணம் நம்மால் நீக்கப்பட வேண்டியவற்றில் ஒன்றாகும்.

"அந்தகாண மறிந்து துறப்பார்க்குப்
பந்த மிறந்ததென்றுந் தீபற
பாழ்வெளி யுள்ளதென்றுந் தீபற

(திருவுந்தியார்)

மேலுமிவை என் மனம்—என் புத்தி—என் சித்தம் என்று ஆன்மாவா லன்னியமாக விவரிக் கப்படுவதாலேயே இவை ஆன்மாவாகாவென நன்கறியலாம்.

இந்த அந்தக்கரணங்களில் அடங்கியுள்ள பிராணமய மனோமய விஞ்ஞானமய கோசங் கள் போக (அதாவது சூட்சும தேகம் போக) ஆனந்தமய கோசமொன்றே எஞ்சியிருக்கிறது. ஆனந்தமய கோசமென்பது காரணசரீரமே யாகும். அனுபவத்தில் இது நித்திரையாகும். நித்திரையில் கருவிகாரணங்களெல்லாம் செயலற் றொடுங்கிவிட ஆன்மா அவித்தையாகிய அந்த காரத்தில் அமிழ்ந்து கிடக்கிறது. இந்த அவித் தை மூலப் பிருகிருதியின் இரஜோ குணக்கற் பனையாலுண்டானது. இது நாமல்ல. ஸ்தூல சூட்சும தேகங்களோடு ஆன்மா சம்பந்தப்பட்டு சாக்கிர ஸ்வப்ன அவஸ்தைகளை அனுபவிப்பது போல் இக்காரணதேகத்தோடும் சம்மந்தப் பட்டு சுஷுப்தியவஸ்தையை அனுபவிக்கிறது.

ஆகையால் ஸ்தூல சூட்சும தேகங்களைப் போல் காரணதேகமும் நாமல்ல. அது ஆன் மாவினு லறியப்படுவதே. ஆன்மா அதையும் எதிரிட்டறிந்து நீக்கித் தன்னை யறியும் சக்தி யுடையது. அறியாமையாகிய அஞ்ஞானமே அவித்தை. இது ஆன்மாவாகாது.

"வந்தெனுடல் பொருளா............
ஐந்து புலனைம் பூதங்காணமாதி
யடுத்தகுண மத்தனையு மல்லைபல்லை
இந்தவுடலறி வறியாமையு நீயல்லை * * *"
* * * * *

(தாயுமானவர்)

"மூலவுடனீயல்ல வென்று போனால்
மூாண்மேவு மறிவறியாமை கடானேது
மூலவுடனீ யல்லவென்று போனால்
மூாண்பிரிய மோத பிரமோத மேது
மூலவுனீயல்லவென்று போனால்
மூாண்மூடசட சூனியந்தாமேது
மூலவுடனீயல்ல வென்றுபோனால்
மூாணுதிக்குயர் சாக்ஷி நீயாங்காணே"

(பரமானந்ததீபம்)

(மூலவுடல்=காரணசரீரம்)

"இன்னும் பிராணவாயுவும் நாமல்லவென்றே யுணரவேண்டும். யோகம், மூர்ச்சை முதலிய சமயங்களில் பிராணவாயு இயங்காதிருந்தும் நாமிருந்து கொண்டிருக்கிறோம். ஓர் வித ஆமை போல் மாதக்கணக்காக மண்ணில் உசுவாச நிசுவாசமின்றிப் புதையுண்டு கிடக்கிறது. மேலுமிப் பிராணவாயு ஜடம், தன்னையுமறியாது, வேறொன்றையு மறியாது. நாம் வலநாசியில் ஓடுகிறோமோ இடநாசியில் ஓடுகிறோமோ என்பதை யுணராது. நித்திரையில் தனக்கருகிலுள்ள மூக்கணியை ஒருவர் கவர்ந்து சென்றாலும் இது அறியாது. 'என் பிராணன்' என்று ஆன்மா இதை வேறு பிரித்தறிகிறது. இதை இயைக்கி வைக்கவும் அடக்கிவைக்கவும் ஆன்மாவிற்குச் சக்தியுண்டு. இப்பிராணன் சூட்சும பூதங்களின் இராஜோகுணசமஷ்டியில் உற்பத்தியானது. இவற்றால் இந்தப் பிராணனும் நாமல்ல வென்றறிய வேண்டும்.

மேற்கூறிய காரணங்களால் தேகம் — காரணங்கள் — பிராணன் — அவஸ்தை முதலிய இந்தத் தத்துவக் கூட்டங் களனைத்து மடங்கிய பஞ்ச கோசங்கள் ஆன்மாவாகிய நாமல்லவென்றும், இந்தப் பஞ்ச கோசங்களையும் வேறு பிரித்தறியும் ஆன்மாவாகிய சிவசாட்சியே நாம் என்றறிய வேண்டும்.

"கோசமைந்தும் ஒவ்வொன்றாய்ப் பிரித்து வேறாய்க்
  குறித்தறியிலன்னிய மாயிருக்கையாலே
கோசமைந்து மொவ்வொன்றாய்ப் பிரித்து வேறாய்க்
  குறித்தறியில் விக்ஷேபமீன்ற தாகும்
கோசமைந்து மொவ்வொன்றாய்ப் பிரித்து வேறாய்க்
  குறித்தறியில் நீ அறிவாயது நீயல்ல
கோசமைந்து மொவ்வொன்றாய்ப் பிரித்து வேறாய்க்
  குறித்தறியு முயர் சாக்ஷி நீ யாங்காணே."

(பரமானந்த தீபம்)

"பஞ்சகோசத்தைப் பகுத்தறிந்தோருக்கு
நெஞ்சமிறந்த தென்றுந் தீபற
நிட்டையதாகு மென்றுந் தீபற"

(திருவுந்தியார்)

"பஞ்சகோசமும் விட்டப்பாற்
  பார்க்கின்ற பொழுது பாழே
விஞ்சியதது வல்லாமல்
  வேறொன்றுந் தெரியக்காணேன்
அஞ் சனவிருளையோ
  நானக மெனவனுப விப்பேன்
வஞ்சமில் குருவே என்ற
  மகன் மதிதெளியச் சொல்வார்.

முன்புகறசமன் புத்தி
  மோகத்தா லெண்ணி யெண்ணி
ஒன்பது பேரைக் கண்ட
  ஒருவனுந் தனைக்காணாத
பின்பவ னிடையிற் கண்ட
  பெரியபாழவனோ? பாராய்!!
அன்புள்ள மகனே! காண்ப
  தடங்களுங் காண்பானீயோ?

தூல சூட்சும வஞ்ஞானந்
  தோன்று மூன்ற வத்தைதாமும்
காலமோர் மூன்றுஞ் சன்மக்
  கடலெழுங் கல்லோலங்கள்
போலவே வந்து போன
  வெத்தனை யென்பேனுன்?
ஆலமர் கடவுளாணை
  யவைக் கெல்லாஞ் சாட்சி நீயே!

(கைவல்யம்)

பஞ்ச கோசங்களைப் பிரித்தறிந்து இவை நாமல்லவென்று கழித்து மேலே எதிரிட்டு நோக்கின் சூனியமான பாழே தரிசிக்கப்படும். இது கரிய நீலமென்று பெரியோர் வெளியிட்டுள்ளார். இதே காரண தேகம்! இதுவும் நாமல்லவென்றே தள்ளவேண்டும். இதையே புராணங்களில் "நமன்" எனக் கூறுகின்றனர். இதைக் கடக்கின் நமனை வென்றுவிடலாம். இதைக் கடப்பதற்கு ஈச்வரனது பூரண அருள் கட்டாயம் வேண்டும். நம்மால் காணப்படும்

பொருள் எதுவும் நாமல்ல. அதுபோல் நம்மா லறியப்படுமிப் பாழும் நாமல்லவென்றறிந்து இதை எதிரிட்டுக் களைந்தெறிந்து மேலே நோக்கின் ஆண்டுள்ள தலைவன் நம்மைத் தன் னுள் ளடக்கிக்கொள்வன். இங்கு ஒன்றை முன்னிலைப்படுத்தி எதிரிட்டுக் காணும்வரையில் தன்னைக் காண்பதில்லை.

"முன்னிலைச் சுட்டொழுதியெனப் பல்காலு
நெஞ்சே நான் மொழிந்தேனே நின்
றன்னிலையைக் காட்டாதே என்னையொன்றுச்
சூட்டாதே சரணுன் போந்த
அந்நிலையே நிலை * * *
* * * *

(தாயுமானவர்)

இந்த "நான்" மற்றைப் பொருள்களைப் போல் ஏதோ ஓர் உருவத்தை உடையதன்று. திரவ பதார்த்தமும் அன்று, ஒருவிதமான காற் றும் அன்று, பஞ்ச பூதங்களில் ஒன்றும் அன்று. இதை "இப்படியிருப்பது" என்று கூறும் நூல்களே கிடையா. வேதமே இதைக் கூறுமற் கூறுகிறது. தேகிய இந்த "நானி"ன் கூடச் சேர்ந்து சம்பந்தப்பட்டிருக்கும் தத்து வங்களின் இலட்சணங்களைப்பற்றி விரிவாய்ச் சொல்லி, "இவையல்ல! இவையல்ல! இவை யாவும் போய் மீதி இருக்கும் பொருளே ஆன்மா! அதுவே நீ! அதுவே இந்த 'நான்" என்று வேதம் கூறுமற் கூறுகிறது.

"விறகிற் றீயினன் பாலிற்படு நெய்போன்
மறைய நின்றுளன் மாமணி சோதியான்
உறவு கோனட்டு ணர்வுக் கயிற்றுன்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே!"

(அப்பர்)

முதலில் உனது ஆத்மாவை யறிந்துகொள். பின்னர் அனாத்மாவையும் இரண்டிற்கும் எஜ மானனுய் உள்ள ஈசுவரனையுமறிவாய். "நான்" என்பதென்ன? எனது கையா? அன்றி காலா? ஆழ்ந்து யோசித்துப் பார். "நான்" என்று ஒன்று இல்லவேயில்லை என்று அறி வாய். "நான்" என்பதைப் பகுத்துப் பார்த் தால் "நான்" என்று சொல்லத்தக்க உண்மை யான வஸ்து ஒன்றுமேயில்லையென்று நீ காண்பை! ஆராய்ச்சியின் முடிவு ஈசனேயாம்.

(ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்)

"நான்" சரீரமல்லன், நான் விராட் புருஷ னுடன் ஒன்றுய் இருக்கிறேன். அகண்டமான முக்கிய வஸ்துவுடன் ஒன்றுயிருக்கிறேன். "நான்" சரீரமாய் இல்லாததினுலேயே சரீரத் தின் ஆவச்யகங்களாகிற பசி, தாகம், ஜனன மரணம், வியாதி முதலியவற்கு உட்படாதவன்.

(ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்)

"அகம் பிரம்மாஸ்மி"
நான் பிரும்மமாய் இருக்கிறேன்.

(பிரகதாரண்யோபநிஷத்)

"தத்வமஸி"
நீ (ஆன்மா) அது (பிரும்மம்) ஆகின்றை.

(சாந்தோக்கிய உபநிஷத்)

"அயம் ஆத்மா ப்ரஹ்ம"
இந்த ஆன்மா பிரும்மமே.

(மாண்டுக்யோபநிஷத்)

"த்வமேவாஹம் நபேதோஸ்தி பூர்ணத்வாத் பரமாத்மந:"

நீயே நான்; நானேநீ; நாமிருவரும் ஆத்மா; நாம் இருவரும் ப்ரம்மம்; நம்மிருவருக்குள் பேதமே இல்லை.

(மண்டலப் பாஹ்மணோபநிஷத்)

"சிவத்தோமஸி"
நீ சிவமாயிருக்கின்றுய்.

"நானே சிவன், சிவனே நானென்று நாடிவெறும்
தானுகி நின்ற நிலைதானன்றே—வானுப்

பவசலதி நீந்திவரும் பண்புடைய மாணு!
சிவலோக மென்றே தெளி''
(உபதேசமாலை—சிவயோகம்.)

"சீவனத்தால் சிவனெனல்; சீலமிறந்தா லிந்தச்
சீவனேயந்த சிவம்
அந்தச் சிவனம்மை யன்றியில்லை யென்றோர்த
லுந்துஞ் சிவயோகமோர்."
(சித்தாந்த தரிசனம்—பாசவிமோசனவியல்)

"சிவன் வேறு; சீவன் வேறென் றிரண்டாய்ச்செப்பு
மவன் சிவனை யென்று மறியாதான்—றவமில்லா
வுள்ளத்தார்க் கெய்துமோ? ஊர்க்குருவியாகாச
மெள்ளப் பறந்தறியுமே!''
(சுந்தரனைவெண்பா—தக்ஷிணு மூர்த்திதுதி)

"தன்னையுந் தனதாதாரத்
தலைவனையுங் கண்டானேல்
பின்னையத்தலைவனே தான்றனுய்ப்
பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன்."
(கைவல்யம்—தாண்டவராய சுவாமிகள்)

இச்சமயத்தில் ஓர் உண்மையுணரக் கிடக்கிறது. "நீ அதுவாகின்றாய்'' எனில்—"நீ தேகமல்லை—ஆன்மா. அந்த ஆன்மா பரமான்மாவின் இனமே. அதாவது பரமான்மாவைப் போன்று சத்துச் சித்து ஆனந்த இலட்சணங்கள் பொருந்தியதே—அது போல் இது தாக்கற்றிருக்கிறது—அதாவது பரமான்மா கடல் எனில் ஆன்மா ஒரு துளி நீர்போல்— இரண்டும் நீரே. பரமான்மா ஒரு மலை எனில் ஆன்மா ஒரு சிறிய கல் போல்—இரண்டும் கல்லே!—பரமான்மா ஒரு பெரிய தீவட்டி எனில் ஆன்மா ஒரு சிறிய தீபத்தைப்போல்!—இரண்டும் நெருப்பே! பரமான்மா வெங்காலொன்றென்னின் ஆன்மா நமது ஒரு சுவாசக் காற்றைப் போன்றது!—இரண்டும் காற்றே!—பரமான்மா மகாகாசமெனில் ஆன்மா கடாகாசம்போல்!—இரண்டும் ஆகாசமே—அதாவது துளி நீர் கடலுள் சேர்ந்தால் இருப்பிடம் தெரியாமலொன்றுபடுவதும் போலவும், கடமுடையின் கடாகாயம் மகா காயத்துடன் ஒன்றுவது போலவும் நீ உன்னைப் பற்றிக் கொண்டிருக்கும் தத்துவங்களை எல்லாம் களைந்தெறிந்தால் உன்னைக் காண்பாய்—பின்னர் உனதாதாரத்தலைவனையுங் கண்டு நீயே தலைவனுள்ளடங்குவை'' என்பதைக் கொள்ளாமல், "நீயே பிரும்மம்—உன்னைத் தவிர வேறு பிரும்மமில்லை—நீயே தலைவன்—உன்னிடத்திலிருந்தே மாயை உண்டாயிற்று'' என்று கொள்வது கூடாது.

"நீ அதுவாகிறாய்'' என்கிறதினாலேயே அது வேறு நீ வேறு என்றுணரக் கிடக்கிறது. "என்னைத் தானுக்கிக் கொண்ட சமர்த்தைப் பார்'' என்று நந்தம் மெய்ஞ்ஞானச் செல்வராந் தாயுமானவருளியபடி "நீ உன்னைப் பிறித்தறியின் அது உன்னையுட் கொள்ளும்'' என்றுணராமலே துவேஷ புத்திகொண்டு குற்றங் கூறுவது நூலுணர்வை மட்டும் அறிந்து அதனுண்மையை ஆராயாதார் செய்கையேயாகும்.

ஓம் தத்ஸத்!

---

EVERY HOUSE
SHOULD STOCK A BOTTLE OF
AMRUTANJAN
THE BEST PAIN BALM.
Price As. 10 a bottle.

# பிரஹ்லாத விஜயம்.

## முதல் அத்தியாயம்.

(ஸ்ரீமான் K. நடராஜய்யர்.)

(எல்லா உரிமைகளும் ஆசிரியருடையது.)

ரமணீயமான தபோவனம்! சுற்றிலும் பல விதமான பல விருட்சங்களும், காட்டு மரங்களும், வான் அளாவி ஆகாயத்தின் முகட்டைக் கிழித்துக்கொண்டு நிற்பனபோல் பல்லாயிரம் கிளைகளை விரித்துக்கொண்டு சூரிய கிரணங்களை உள்நுழைய விடாமல் மறைத்துக் குளிர்ந்த நிழலைத் தந்துகொண்டிருக்கின்றன; வன தேவதைகள் காம வல்லிக் கொடிகளைப் பற்றிக்கொண்டு ஊஞ்சலாடிக் கொண்டிருப்பதையும், பால்போன்ற தண்ணீரால் நிறைந்திருக்கும் தாமரைப் பொய்கைகளில் அன்னபட்சிகள் கூட்டங் கூட்டமாய் சஞ்சரித்துக்கொண்டிருப்பதையும், பசுவும் புலியும் ஒரே துறையில் தண்ணீர் குடிப்பதையும், ரிஷிகுமாரர்கள் தர்ப்பை, சமித்து, புஷ்பம் முதலானவைகளைச் சேகரம் செய்துகொண்டிருப்பதையும், குழந்தைகள் காட்டுப் பன்றிகளின் கோரைப்பற்களைப் பிடித்திழுத்து விளையாடிக்கொண்டிருப்பதையும், மான்கள் பர்ணசாலைகளைச்சுற்றிலும் கூட்டமாய்ச் சஞ்சரித்துக் கொண்டிருப்பதையும் பார்த்தவுடன் நாமும் அங்கே வசிக்கவேண்டுமென்று ஆவல்கொள்ளும்படியான அந்த வனத்தின் அழகையும் வருணிக்க நம்மால் சாத்தியமோ! மயில்கள் தங்கள் தோகைகளை விரித்து ஆனந்தமாக நர்த்தனம் செய்துகொண்டும், குயில்கள் திவ்வியமான கானங்களைப் பாடிக்கொண்டு மிருக்கின்றன. தரையில் பசும்புற்கள் நீண்டுவளர்ந்து பச்சை ரத்தினகம்பளம் விரிக்கப்பட்டிருப்பது போல் மெத்தென்றிருக்கிறது. பக்கத்திலுள்ள மலையின் சிகரத்திலிருந்து 'ஹோ' என்ற சப்தத்துடன் ஒரு பெரிய அருவி பூமியில் விழுந்து, பல ஆறுகளாக ஓடிக்கொண்டிருக்கின்றது. மகரிஷிகளில் சிலர் மரவுரிகளை அலம்பிக் கொண்டும், சிலர் பர்ணசாலைகள் கட்டிக்கொண்டும், சிலர் யோகாப்பியாசம் செய்துகொண்டும், சிலர் மந்திரசாதகம் செய்துகொண்டும், சிலர் அத்தியயனம் சொல்லிக்கொண்டும், பலர் வேதாந்த விசாரம் செய்துகொண்டும் இருக்கிறார்கள். வேதகோஷங்கள் வானை எட்டுகின்றன. கிளிகளும் சாரிகைகளும்கூட வஷட்காரங்களைச் சொல்லிக்கொண்டிருக்கின்றன. அந்த வனத்தில் எங்கும் சாந்தமே குடிகொண்டிருக்கிறது. வைராக்கியம் என்பதை அங்கு தான் காணலாம். ஜீவகாருண்யத்துக்குப் பிறந்தவிடம் அதுதான். தயை அங்குதான் வசிக்கிறது. நாம் அங்கு நுழைந்தவுடனேயே நம்மனதிலுள்ள காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாத்ஸர்யம் என்ற ஆறு சத்துருக்களும் நம்மை விட்டகன்று, பக்தி, தயை, வைராக்கியம், ஜீவகாருண்யம் முதலானவைகள் நம் மனதில் தாண்டவமாடும் என்பதில் ஐயமில்லை. இப்போது வசந்த காலமாகையால் குளிர்ந்த தென்றல் காற்று பலவிதமான புஷ்பங்களின் வாசனையை வாரிக்கொண்டு மெல்லென வீசுகிறது. அஸ்தமிக்கும் சூரியனுடைய செங்கிரணங்கள் உயர்ந்த மரங்களின் சிகரங்களில் இன்னும் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றன. பட்சிகள் தங்கள் கூடுகளை நோக்கி அதி வேகமாக வந்துகொண்டிருக்கின்றன. தாமரை

கள் தங்கள் நாயகனின் பிரிவாற்றாது துக்கத்துடன் குவிந்துகொள்ளும் தருணம். சக்கிரவாக தம்பதிகள் தங்கள் பிரிவினைக்குரிய காலம் வந்துவிட்டதே என்று ஏங்குகின்ற சமயம். மகரிஷிகள் சந்தியாகால அனுஷ்டானங்களைச் செய்வதற்காகத் தாமரைப் பொய்கைகளை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறார்கள். பகல் முழுவதும் வயிறார மேய்ந்துகொண்டிருந்த பசுக்கள் தங்கள் கன்றுகளை நினைத்துக்கொண்டு, ஆச்ரமத்துக்குத் திரும்பிக்கொண்டிருக்கின்றன. இத்தகைய சமயத்தில், பகவானை ஆராதிப்பதற்கும், அனுஷ்டானங்கள் செய்வதற்கும் ஏற்றசாயங்காலத்தில், மன்மதனால் கண்ணெடுத்துப் பார்க்கவும் முடியாத அந்த ஆச்ரமத்தில், ஒரு ஸ்திரீமட்டும் காமவிகாரம் தலைக்கேறினவளாய்த் தன் பர்த்தாவைத் தன்னுடன் சுகிக்குமாறு அழைத்துக்கொண்டிருப்பதைக் காண நமக்கு மிகவும் ஆச்சரிய முண்டாகிறது. என்னே மன்மதனின் சாமர்த்தியம்! கேவலம் கரும்பை வில்லாகவும், புஷ்பங்களை பாணங்களாகவும் உடைய—சரீரமில்லாத—அனங்கனாகிய இவன், தென்றலாகிற தேர்மீதேறிக்கொண்டு, தன்னந்தனியனாய், மூவுலகங்களையும் தன்னுடைய ஐந்து பாணங்களினாலேயே வெற்றி கொள்ளுகிற மகிமையை நாம் என்னென்றுரைப்பது! பகலென்றும், இரவென்றும், ஸ்திரீகளென்றும், புருஷர்களென்றும், ஆச்ரமமென்றும், பட்டணமென்றும் பாராமல் எப்பேர்பட்டவர்களையும் கலங்கச்செய்யும் இவன் திறமைதான் என்னே! இவன் ஒருவனில்லாவிடில் உலகில் ஸ்திரீபுருஷ வாழ்க்கையே இல்லாமல்போய், சந்ததியற்று உலகமே நசித்துவிடுமல்லவா! இவனில்லாவிடில் உலகம் ஏது? காதல் ஏது? உலகத்திலுள்ள இன்பம் தான் ஏது? கிரகஸ்தாசிரமம் எப்படி உண்டாகும்! புத்திரோத்பத்தியை எப்படிக் காணமுடியும்? இவையெல்லாவற்றிற்கும் மூலகாரணம் அவனல்லவா! அவனல்லவா சிருங்கார ரசத்துக்கு அதிதேவதை! எப்படிப்பட்ட தபஸ்வியாயிருந்தாலும் அவனுக்கு லட்சியமில்லையே! கோரமான தபஸ்செய்து க்ஷத்திரிய ஜாதியிலிருந்து பிராம்மணரான—கோபத்துக்கே இருப்பிடமான—விசுவாமித்திர மகரிஷியையும் கலங்கச் செய்தவனல்லவா அவன்! அப்பேர்பட்ட மன்மதன் கேவலம் இந்த அபலையைக் கலங்கச் செய்ததில் என்ன ஆச்சரிய மிருக்கிறது? மன்மத விகாரத்தைத் தாங்கமாட்டாதவளாய் அந்த ஸ்திரீ தன் பர்த்தாவைப் பார்த்து "பிராணநாதா! மன்மதன் என்னைப் படுத்தும் துன்பம் சொல்லத் தரமன்று. கேவலம் அபலையென்றும் பாராமல் இந்தப் பாபி என்னை வதைக்கிறான். தென்றல் காற்றாகிற புலியானது கோபத்துடன் சீறி என்னைப் பயமுறுத்துகிறது. குயில்களின் குரலோசை என்னுயிரைக் கொள்ளை கொள்ளுகிறது. இனி என்னால் ஒரு க்ஷணமும் தாமதிக்க முடியாது. இந்தத் தாபம் தணியச் செய்யும்" என்று சொல்லிக் கூந்தல் அவிழ்ந்து விழவும், துகில் சோரவும், மார்க்கச்சு விம்மவும், கை வளைகள் நழுவவுமான அலங்கோலத்தோடு எதிரில் நின்றாள். சாட்சாத் இலட்சுமிதேவியும் கண்டு மயங்கத்தக்க பேரழகினை வாய்ந்த தன் அருமை மனைவியானவள் காமவிகாரம் தாங்கமாட்டாதவளாய்த் தவிப்பதைப்பார்த்த மகரிஷி புன்னகை புரிந்தார். "பெண்ணே! கீர்த்தியை அபேட்சிக்கும் புருஷன் மனைவியைத் தன்னுடைய அர்த்தாங்கியாகக் (அதாவது தன்னுடைய சரீரத்தில் பாதி யுள்ளவளாகக்) கருதவேண்டும் என்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. என்னுடைய அருமைக் காதலியாயும், அர்த்தாங்கியாயும், என்னுடன் குடும்ப பாரத்தைச் சரிவர நிர்வகிக்கிறவளாயும், என்னுடைய கிருகத்துக்கே தேவதையாயும் விளங்கும் உன்னிடம் எனக்கு ஆசையுண்டு. ஆயினும் இப்பொழுது சந்தியாகாலமாகையால் ஒரு முகூர்த்தம்

பொறுத்துக்கொள். சந்தியாகாலம் மிகவும் கோரமானது. இந்த சமயத்தில் தான் பூதபதியான பரமசிவன் தன்னுடைய பூதகணங்களுடன் எங்கும் சஞ்சாரம் செய்கிறார். இந்த கோரவேளையில் அவர்கள் தங்கள் அனுஷ்டானங்களைச் செய்து, வழிபடு கடவுளை வணங்குவது மட்டுமே செய்யத் தக்கது. கேளீ விலாசத்துக்கு இது ஏற்ற சமயமல்ல. மேலும், இந்த சமயத்தில் ஸ்திரீ புருஷபோகத்தினால், ஸ்திரீயின் வயிற்றில் கருத் தரிக்குமேயானால், அந்த கருப்பத்திலிருக்கும் சிசுவால் உலகத்துக்குப் பல கெடுதிகள் உண்டாகும் என்பது சாஸ்திரசித்தாந்தம். நானும் இப்போது என்னுடைய நித்திய கர்மானுஷ்டானங்களைச் செய்யப் போகிறேன்" என்று பரிவாகச் சொன்னார்.

"எங்கள் பிதாவானவர் எங்களை அழைத்து, 'உங்களுக்கிஷ்டமான புருஷனுக்கே உங்களை விவாகம் செய்துவைக்க உத்தேசித்திருக்கிறேன். ஆதலால் உங்களுடைய அபிப்பிராயத்தை ஒளியாமல் சொல்லுங்கள்' என்று கேட்டார். அப்பொழுது நானும், இப்பொழுது என்னுடைய சக்களத்திகளாகிய என் சகோதரிகள் பன்னிருவரும், தங்களையே கணவராக வரித்தோம். அதன் பிறகுதான் எங்களைத் தங்களுக்கு விவாகம் செய்து கொடுத்தார். மன்மதனும் நாணத் தங்களுடைய பேரழகையும் குணங்களையும் பால்யபருவம் முதல் நான் கேட்டுத் தங்களையே மணாளனாக அடையவேண்டுமென்று எவ்வளவோ பாடுபட்டேன். தங்களுக்கு என்மீது அன்பில்லை. என் சக்களத்திகளெல்லாம் பிள்ளை குட்டிகளுடனும், சகல சௌபாக்கியங்களுடனும் சந்தோஷமாயிருக்க, நான் மாத்திரம் என் குழந்தைகளை இழந்து தவிக்கிறேன். என் சக்களத்திகளுடன் கேளீ விலாசமாயிருக்கும் தங்களுக்கு என்னைக் கண்டால் மட்டும் பிடிக்கவில்லை. தங்களுக்கு என்னிடம் தினையளவாவது அபிமான மிருந்தால் என் ஆசையைப் பூர்த்திசெய்யமாட்டீர்களா? தாங்கள் தாமதித்தால் என்னுயிர் போவது நிச்சயம்" என்றாள்.

காசியபப்பிரஜாபதி, பிரும்மதேவரின் புத்திரர். உலகத்தைச் சிருஷ்டி செய்யும் தொழிலில் தன் பிதாவுக்கு ஒத்தாசையா யிருப்பவர். சகல சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்தவர். மகா தபஸ்வி. பதினாயிரம் மகரிஷிகளுக்குத்தலைவராய் விளங்கி குலபதி என்று பட்டம் பெற்றவர். தக்ஷப் பிரஜாபதியின் குமாரத்திகளான அதிதி திதி முதலான பதின்மூன்று பேர்களை விவாகம் செய்துகொண்டு கிரகஸ்தாசிரமத்தில் இருந்து வருகிறார். அவர் மனைவிமார் பதின்மூவரும், ரதிதேவியும் நாணத்தக்க அழகுடையவர்கள். உத்தம குலத்திற் பிறந்தவர்கள். சகல கலைகளிலும் வல்லவர்கள். அவர்களுள் மூத்தவளான அதிதி என்பவள் மற்றெல்லோரையும் விட அழகிலும், கல்வியும், குணத்திலும் மிகுந்தவள். அவளுடைய அழகை வருணிக்க ஆதிசேஷனாலும் முடியாது. பெண்களைப் பார்த்துப் பெண்களே ஆசைப்படுவதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? அவளைப் பார்த்த பெண்களெல்லோரும் அவள் மேல் காதல்கொண்டு ஏங்கித் தவித்து மனமுருகும்படியான அவ்வளவு சுந்தராங்கி. குணத்திலோ நிகரற்றவள். பர்த்தாவுக்கேற்ற பதிவிருதையாய் விளங்குபவள். அவளுக்குத் தன் பதியே தெய்வம். அவருடைய வாக்கே வேதம். அவரிடத்தில் தான் கொண்டுள்ள அன்பே பக்தி. அவருக்கு சிஸ்ருஷைசெய்வதே பூஜை. உலகம் போற்றும் இவளுடைய உத்தம குணங்களெல்லாம் திதி என்பவளுக்கு மட்டும் இவளிடத்தில் மிகுந்த பொறாமையை உண்டாக்க ஹேதுவாயிருந்தது. திதியென்பவள் எப்பொழுதும் இவளிடம் விரோதப் பான்மை கொண்டவள். இவளைக் கண்டால் எப்போதும் சீறிவிழுவாள். தன் காலின் கீழ்வைத்து நசுக்கிவிடலாமா என்று யோசிப்பாள். ஐயோ!

இந்தச் சிறுக்கி என் வாழ்வுக்குத் தடையாய் ஏற்பட்டாளே என்று கலங்குவாள். துவேஷம், பொறாமை, அசூயை இவைகளே உருவாகக் கொண்டவள் திதி. பிறர் வாழ்வைக் கண்டு சகியாள். காசியபப் பிரஜாபதிக்கு அதிதியிடத்தில் இந்திரன் முதலான தேவர்களும், திதியினிடத்தில் அரக்கர்களும் உண்டானார்கள். தேவர்கள் தங்கள் தாயாரான அதிதிதேவியைப் போலவே, நல்ல குணவான்களாயும், புத்தி சாலிகளாயும், சகல கலைகளிலும் தேர்ந்தவர்களாயும் இருந்தார்கள். புருஷோத்தமனான ஸ்ரீமந்நாராயணனையே பஜித்து, அவருடைய சரண கமலத்தையே சதா தியானித்து, அவருடைய கிருபைக்குப் பாத்திரர்களாய் விளங்கினார்கள்.

அரக்கர்களோ, பிறருக்கு இம்சை செய்வதையே தொழிலாகக்கொண்டவர்களாய், பரம அயோக்கியர்களாய், எல்லா துர்க்குணங்களும் நிறைந்தவர்களாய், தேவர்களிடத்தில் பால்யம் முதலே துவேஷம்கொண்டவர்களாய் இருந்தார்கள். தேவர்கள் சகல போகங்களுடனும்சௌக்கியமாய் வாழ்ந்துவருவதைக் கண்டு மனம் சகிக்காதவர்களாய், அவர்களைக் கொன்று, அவர்களுடைய போகங்களைத் தாங்களே அனுபவிக்க ஆசைப்பட்டார்கள். அதிகம் சொல்லுவானேன். தேவர்களுக்கும், அரக்கர்களுக்கும் பயங்கரமான யுத்தம் உண்டாயிற்று. அரக்கர்கள் கொல்லப்பட்டார்கள். தர்மிஷ்டர்களான தேவர்களே வெற்றியடைந்தனர். எப்பொழுதும் தர்மமே ஜயிக்கும் என்பதற்குச் சிறிதேனும் ஐயமுண்டோ? அதர்மம்—அக்கிரமம்—ஆரம்பத்தில் ஜயத்தை அடைவது போலத் தோன்றினாலும், முடிவில் அது தன்னை ஆச்ரயித்தவனைக் கொடுந்துன்பத்திற்காளாக்கி, புத்திரபௌத்திரர்களுடன் அவனுடைய குலத்தையே நாசம்செய்து, மறுமையிலும் என்றும் மீளாத கொடுநரகில் அவனை வீழ்த்து மென்பது முக்காலும் உண்மை—சத்தியம். தான் எவளுடைய வாழ்வைக் கண்டு பொறாமைப்படுகிறாளோ, எவளை சதா துவேஷிக்கிறாளோ அவளுடைய குமாரர்களால் தன் பிள்ளைகள் கொல்லப்பட்டதை யறிந்த திதி தேவியின் மனம் எப்படியிருக்கும் என்பதை வாசகர்களே ஊகித்துக்கொள்ளலாம். இந்த சமாசாரத்தைக் கேட்டவுடன் இடிவிழுந்ததுபோலிருந்தது. 'ஹோ' என்று கதறினாள், அங்கலாய்த்தாள், தலை மயிரைப் பிய்த்துக்கொண்டாள். "ஐயோ! என் கண்மணிகளே! உங்களை இந்த விதிக்குத்தானா சுமந்து பெற்றேன்! என் வயிற்றில் நெருப்பைக் கொட்டிவிட்டுப் போய் விட்டீர்களே! இனி நான் என்ன செய்வேன்! நீங்கள் மாணமடையும்போது என்ன நினைத்துக்கொண்டீர்களோ? என்ன கஷ்டப்பட்டீர்களோ? அந்தப்படுபாவிகளைக் கொன்று, சீரும் சிறப்புமாக நீங்கள் வாழ்ந்து வருவதைக் கண்டு களிக்க எண்ணினேனே! எனக்குத் தேறுதல் சொல்வார்கூட இல்லாமல் எல்லோரும் போய் விட்டீர்களே. நான் கதறுவது உங்கள் செவியில் கேழ்கவில்லையா? உங்கள் பிரியமான அன்னையை மறந்தீர்களோ? இனி எனக்கு யார் கதி? ஐயோ! என்னால் சகிக்க முடியவில்லையே!" என்று பிரலாபித்து மூர்ச்சையானாள். சற்று நேரம் கழித்தபின் மூர்ச்சை தெளிந்தெழுந்து, தன் குமாரர்கள் மரணமடைந்த துக்கம் தன்னை ஒருபுறம் வருத்த, தன் சக்களத்தி குமாரர்கள் க்ஷேமமாய் சகல பாக்கியங்களுடன் வாழ்ந்து வருவதையும், அவர்கள் ஜயசாலிகளாய் விளங்குவதையும் சகிக்க முடியாதவளாய்த் தத்தளித்தாள். அவள் மனத்தில் பொறாமை என்னும் தீ கொழுந்து விட்டெரிய ஆரம்பித்தது. "ஆகா! என்ன வாழ்வு! அந்தச் சிறுக்கி தன் பிள்ளைகளின் ஜயத்தைக் கேட்டுக் கொண்டாட்டமாயிருக்க, நான் என் மக்களை இழந்து தவிக்கிறேனே! ஐயோ! பாழும் தெய்வமே! உனக்குக் கண்ணில்லையா? இதுதானா உன்

கிருபை! அவள் தலையில் இடிவிழாதா? இந்த உலகமெங்கும் தன் ஆக்ஞாசக்கரத்தைச் செலுத்தும் மிருத்யுதேவதை அந்த வேசி மக்களை மட்டும் கொண்டுபோகமாட்டேனென் கிறதே! என்வயிறு எரிவதுபோல் அவள்வயிறு எரியாதா! மக்களைப் பறிகொடுத்த என்வயிற் றெரிச்சல் வீணாகுமா? என்கண்ணீர் அந்தப் பாபிகளைச் சுற்றாது விடுமா? அந்தமாயக்கள்ளி தன் மக்களெல்லோரையும் இழந்து என்னைப் போல் பரிதவிப்பதை என்றைக்கு என்கண்ணால் பார்ப்பேனோ அன்றே எனக்கு நல்ல நாள். இந்தப் படுபாபி எனக்கு எதிரிடையாய் வந்து முளைத்தாளே. அவள் நாசமாய்ப்போக! ஆகட் டும் ஒருகைபார்க்கிறேன்! என்குழந்தைகளைக் கொன்றதற்குப் பதிலாய் அவளுடைய எல்லா மக்களையும் நாசஞ்செய்து, அவள் வாழ்வைக் குலைத்து, அவளைக் கதறடிக்காவிட்டால் என் பெயர் திதி அல்ல. நல்லது! அதிதி! உன்வாழ் வும் கொண்டாட்டமும் இன்னும் எத்தனை நாளைக்கு இருக்கப்போகிறது பார்ப்போம்!" என்றிவ்வாறு யோசித்த வண்ணம் கலங்கிக் கொண்டிருந்தாள் திதி. தன்சக்களத்தியை எப் படிச் சிறுமைப்படுத்துவது, அவள் பிள்ளை களை எவ்விதம் தொலைப்பது என்ற கவலையே அவளுக்குப் பெரிதாயிருந்தது. ஒரு வழியும் காணாது தத்தளித்தாள். இந்த சமயத்தில் தான், மனோகரமான வசந்தகாலத்தின் மந்த மாருதம் வீச, குயில்கள் கானம் செய்ய, தடாகங்களில் அன்னபட்சிகள் தம் சகிகளு டன் கேளீ விலாசமாயிருக்க, மன்மதனும் பஞ்ச புஷ்ப பாணங்களால் இவள் மனதைவாட்ட, விரகதாபம் மேலிட்டு, சாயங்காலத்தில் அனுஷ் டானங்கள் செய்வதற்காகப் போய்க்கொண் டிருந்த தன் பர்த்தாவான காசியபரைத் தன் னுடன் சேருமாறு பலவந்தப்படுத்தலானாள்.

சாயங்காலத்தில் இவ்விதம் செய்ததற்காகப் பிறகு மிகவும் லஜ்ஜைப்பட்டவளான திதி, நாணத்தினால் தலை கவிழ்ந்து, பலவிதமாக யோசனைகள் செய்தவண்ணம் தன் பர்த்தாவின் எதிரில் நின்றாள்.

தன் பர்த்தாவின் செயற்கையானது பழுதில் லாதது, அது ஒருநாளும் வீண்போகாதது. ஆத லால் தன் வயிற்றில் அது கருவாயிருக்கவேண் டும் என்று நினைத்தாள். பூதங்களுக்கும் பிசாசங்களுக்கும் கொண்டாட்டமான இந்த சாயங்காலத்தில் ஸ்திரீகள் கருத்தரித்தால், அந்தக் கருவானது நாசத்தை யடையும், பூதங் கள் அந்தக் கருவை ஆக்கிரமித்து அழிக்கும் என்று பெரியோர்கள் சொல்லக் கேட்டிருப் பதை நினைத்தவுடன் அவளுடம்பில் நடுக்க முண்டாயிற்று. தன்னுடைய கர்ப்பத்துக்கும் அவ்விதமான ஆபத்து ஏற்படுமோவென்று பயந்தாள். தன் கணவர்தான் இந்தக் கருவைப் பூதங்களினின்றும்காப்பாற்றக்கூடியவர் என்று நினைத்தாள். அவள் முகம் வெளிறிற்று. மக ரிஷியின் பாதங்களில் விழுந்தாள். "பிராண நாதா! என்னுடைய கருவைக் காப்பாற்றும். பூதபதியான பரமசிவனைப் பூஜை செய்யும் வேளையில், நான் செய்யத்தகாத காரியத்தைச் செய்ததற்காக, அவர் என்மீது கோபம் கொண்டு என் கருவை அழித்துவிட்டால் நான் என்ன செய்வேன்? மகா பாபமான காரியத் தைச் செய்துவிட்டேனே! என் வயிற்றிற் பிறந்த பிள்ளைகளையெல்லாம் பறி கொடுத்து விட்டுத் தன்னந்தனியளாய் நிற்கிறேன். இந் தக் கருவாவது தப்பிப் பிழைத்து என் மனம் குளிரும்படி செய்யட்டும். எனக்குத் தங்களைத் தவிர வேறு கதியில்லை. என்மீது கிருபை வையும், என் முகத்தைப் பாரும். தங்கள் பத்தினியான என்மீது கிருபை கூர்ந்து என் னுடைய இந்த வேண்டுகோளைப் பூர்த்தி செய் யும்" என்று மன்றாடினாள்.

"பெண்ணே! நான் என்ன செய்யக்கூடும்? நான் முன்னமே சந்தியாகாலத்தில் இவ்விதம்

செய்யக்கூடாதென்று எவ்வளவோ நீதிகளை எடுத்துச் சொல்லித் தடுத்தும் கேட்கமாட்டே னென்று பலவந்தம் செய்தாய். செய்யத்தகாத காரியத்தையும் செய்தாயிற்று. இனிமேல் என் னிடம் வந்தழுவதினால் பிரயோசனமென்ன? நீ யாருக்கு அபசாரம் செய்தாயோ அந்த பக வானையே சரணமடைவாய். அவரைத் தியா னித்து ஸ்தோத்தரித்து, உன்னுடைய அபரா தத்தை க்ஷமிக்கும்படி பிரார்த்தித்துக்கொள். தயாமூர்த்தியான அவர் உனக்கு அருள் புரி வார். ஆயினும் ஒன்று மட்டும் நிச்சயம். ஸ்திரீ களுக்குத் தன் பதியே தெய்வம். அவருடைய உத்திரவே வேதவாக்கு. தன் பர்த்தாவின் உத்திரவை மீறி நடப்பவள் உத்தம ஸ்திரீயல்ல. நீயோ நான் எவ்வளவு சொல்லியும் கேட்காமல் என் வார்த்தையை மீறி என்னைப் பலவந்தப் படுத்தினாய்; பரமசிவனை அவமதித்தாய்; தேவர்களைத் திரஸ்கரித்தாய். நீ கருத்தரித் திருக்கும் வேளை மகா பயங்கரமானது. ஆத லால் துஷ்டையான உன் வயிற்றில் பரம அயோக்கியர்களாய், உலகத்துக்கு சதா துன் பத்தையே செய்யக்கூடிய இரண்டு புத்திரர்கள் உண்டாகப் போகிறார்கள். சாதுக்களையும், வேதங்களையும், பசுக்களையும் நாசஞ் செய்து, ஸ்திரீகளைப் பலவந்தப்படுத்திப் பலவிதமாக அக்கிரமங்களைச் செய்யப்போகிறார்கள். அப் போது ஜகதீசனான புருஷோத்தமன் அவ தரித்து இவர்களிருவரையும் வதம் செய்யப் போகிறார்" என்று சொல்லிவிட்டுத் தன் நித் திய கர்மங்களை அனுஷ்டிப்பதற்காக எழுந்தார் காசியபர்.

"பிராணநாதா! பிராணநாதா! சற்றுப் பொறும். தங்களுடைய வாக்கினால் அப்படிச் சொல்லாதீர். உத்தமப் பிராமணர்களுடைய வாக்கு வீண் போகாதென்று சொல்லுவார்கள். பிராமணர்களுடைய கோபத்துக்குப் பாத்திர மானவர்களைக் கடவுள்கூட அனுக்கிரகிக்கமாட் டார்; ஆதலால் தயவு செய்யும். எல்லாக் குழந்தைகளையும் பறிகொடுத்த எனக்கு ஒரு குழந்தையாவது க்ஷேமமாயிருக்கக்கூடாதா? ஐயோ! என் முகத்துக்காக இல்லாவிட்டாலும் இந்தக் கருவுக்காகவாவது தயவு காட்டும். எனக்கு நீங்கள்தானே கதி! நீங்களே என்மீது கோபித்துக்கொண்டால் நான் என்ன செய் வேன்? நான் அபலை; ஒன்றும் தெரியாதவள்; ஏதோ பெண் புத்தியினால் முட்டாள்தனமாக நடந்துகொண்டுவிட்டேன். நான் என்ன குற் றம் செய்திருந்தபோதிலும் எல்லாவற்றையும் மன்னித்து என்னை அனுக்கிரகிக்க வேண்டும்" என்று சொல்லி அவர் தோளின்மேல் முகத் தைச் சாய்த்துக்கொண்டு கண்ணீர் விட்டாள் மங்கை.

"பெண்ணே! நீ செய்தது குற்றமென் றுணர்ந்து அதற்காகப் பச்சாத்தாபப்படுகிறாய். அதனாலேயே உன் குற்றம் நிவர்த்தியாய் விட் டது. நீ என்னிடத்தில் மிகுந்த அன்புள்ளவள். பரமசிவனிடத்திலும் திடமான பக்தியுள்ளவள். ஏதோ கால விபரீதத்தால் தவறுதலாய் நடந்து கொண்டுவிட்டாய். அதனால் எனக்குன்மீது கொஞ்சமேனும் கோபமில்லை. நீ கருத்தரித்த வேளையின் விபரீதத்தால் நான் முன் சொன்ன படி உன் புத்திரர்கள் அயோக்கியர்களாய் நடந்து, கடைசியில் ஸ்ரீமந் நாராயணனால் கொல்லப்பட்டு இறக்கப்போகிறார்கள் என்பது நிச்சயம்தான். அதை மாற்ற ஒருவராலும் முடியாது. ஆனால் உனது புண்ணியவசத்தினால் உன் பேரப்பிள்ளைகளில் ஒருவன் உலகத்தார் போற்றும்படி உத்தமோத்தமனாய் விளங்கப் போகிறான். மன்னுயிரைத் தன்னுயிர்போல் பாவித்து அரசாட்சி செய்வான். தேவர்களும் மகரிஷிகளும் அவனுடைய கீர்த்தியைப் பாடப் போகிறார்கள். அவன் மகாப் பிரதாபசாலியாக வும், சத்தியவானாகவும், தயை, தாட்சண்யம், பொறுமை, ஜீவகாருண்யம், சாந்தம் முதலான

உத்தம குணங்களுடையவனாகவும் விளங்குவான். யோகிகளும் தேடிக் காணமுடியாத சாட்சாத் புருஷோத்தமனை சதா பஜித்து, அவரை நேரில் தரிசித்து, அவர் அனுக்கிரகத்தை யடைந்து பாகவதர்களுள் முதன்மையானவனாக விளங்கப்போகிறான். அவனுடைய கீர்த்தி உலகமுள்ளளவும் அழியாமலிருக்கும். அவனிடத்திலிருந்து பெரிய வம்சம் உண்டாகப் போகிறது. அந்த வம்சத்தில் மகாவீரர்களாய், புத்திமான்களாய், உலகமுழுவதும் ஒரு குடை நிழலில் அடக்கி யாளுகிறவர்களாயுள்ள அனேக சக்கரவர்த்திகள் பிறக்கப் போகிறார்கள். ஆதலால், என் கண்மணியே! கவலைப்படாதே. நீ கருத்தரித் திருப்பதால் ஜாக்கிரதையாக இரு. உடம்பைச் சரிவா கவனித்துக் கொள். மனக்கவலையை விட்டு உல்லாசமாகவும் சந்தோஷமாகவும் இருக்கவேண்டும். உனக்கு எந்தப் பொருளிலாவது இச்சையிருந்தால் என்னிடம் சொல்லு. நான் வரவழைத்துத் தருகிறேன். தரையிற் படுக்காதே, புதர்களிலும் காடுகளிலும் செல்லக்கூடாது. நான் சொன்னதை உபேட்சை செய்யாமல் அதன்படி ஜாக்கிரதையாக நடந்துவா. எனக்கு நேரமாகி விட்டது. சாயங்கால அநுஷ்டானங்கள் செய்ய வேண்டும், என் செல்வமே! நான் போய் வரட்டுமா? எனக்கு விடைகொடு!" என்று சொல்லித் தன் மீது சாய்ந்துகொண்டிருந்த மனைவியை அணைத்து, முகத்திலுள்ள வியர்வையைத் துடைத்தார் மகரிஷி.

"பிராணநாதா! இப்பொழுதுதான் என் மனம் திருப்தியடைந்தது. தாங்கள் சொன்னபடியே அதிஜாக்கிரதையாய் நடந்துகொள்ளுகிறேன், கவலைப்படவேண்டாம். நீங்கள் அநுஷ்டானங்களைச் செய்துவாருங்கள்!" என்று சொல்லிப் பிரிந்தாள் திதி தேவி. திதி தேவியின் வயிற்றிலுள்ள கருவானது வளர்பிறைச்சந்திரனைப்போல் நாளுக்கு நாள் வளர்ந்து வந்தது. வாசகர்களே! நூறுவருஷகாலம் தன்வயிற்றில் கர்ப்பத்தைச் சுமந்ததாக யாரைப்பற்றியாவது கேள்விப் பட்டிருக்கிறீர்களா? நாம் சொல்லும்போது உங்களுக்கு மிகவும் ஆச்சரியமுண்டாகலாம். ஆனால் நான் சொல்வது உண்மைதான். நமது திதி தேவி நூறுவருஷகாலம் கர்ப்பத்தைத் தாங்கிக்கொண்டிருந்தாள். தன் சக்களத்தி பிள்ளைகளான தேவர்களால் ஒருகால் தன் கர்ப்பத்துக்கு இடையூறு ஏற்படுமோவென்று அஞ்சி மிகுந்த ஜாக்கிரதையுடன் இருந்தாள். கடைசியாய் அவள் கர்ப்பத்தின் தேஜஸ்ஸானது உலகமுழுவதும் அந்தகாரம் போல் கவிந்துகொண்டது. அதைப் பார்த்த மகரிஷிகளும் தேவர்களும் மற்றுமுள்ளோர்களும் ஆச்சரியப்பட்டார்கள். அந்த தேஜஸ்ஸின் வேகத்தைச் சகிக்க முடியவில்லை. தேவர்களெல்லோரும் இதற்கென்ன செய்வதென்று ஒன்றும் தோன்றாமல் கிலேசப்பட்டார்கள். கடைசியாக பிரம்மதேவரிடம் போய் அவருடைய ஆலோசனையைத் தான் கேட்கவேண்டுமென்று தீர்மானித்து, எல்லோரும் பிரம்மதேவர் வீற்றிருக்கும் சத்தியலோகம் போய்ச் சேர்ந்தார்கள்.

(தொடரும்)

---

# நசிகேதஸ்.*

பலபல நூற்றுண்டுகளுக்கு முன் கௌதமர் என்ற ஒரு தனவந்தர் இருந்தார். அவர் முன்னேர்கள் அனேக யக்ஞ யாகங்களைச் செய்து பிரசித்தி பெற்றிருந்தார்கள். கௌதமரும் தன் மூதாதைகளின் கியாதி குறையாமலிருப்பதற்காக விச்வஜித் என்னும் யாகத்தைச் செய்வதாய் விரதம் செய்துகொண்டார். தன்னுடைய எல்லா சொத்தையும் தானமாகக் கொடுத்துவிடுவதே இந்த யாகத்தின் சாரமான பாகம். கௌதமர் இதைச் செய்வதாய்த் தீர்மானித்தது பெயருக்கும் புகழுக்குமே. ஆனல் தானம் கொடுக்கவேண்டிய சமயம் வந்தபோது தன் விரதத்தைச் சரிவர நிறைவேற்ற அவருக்கு மனம் வரவில்லை. தனக்கு பிறகு உபயோகமில்லாத கிழமானவையும், கறவையற்றவையும், நொண்டியுமான பசுமாடுகளை அவர் தானமாகக் கொடுத்தார்.

அவருக்கு நசிகேதஸ் என்ற ஒரு பிள்ளை இருந்தான். இவன் வயதில் சிறியவனயிருந்தபோதிலும் கெட்டிக்காரனயும் புத்திமானயுமிருந்தான். சாஸ்திரத்தில் சொல்லப்பட்டவைகளில் மிகுந்த விசுவாசம் உள்ளவன். தன் தகப்பனரின் நடவடிக்கையைக் கவனித்து வந்த இப்பையனுக்குத் தன் தகப்பனர் செய்வது தவறு என்றும், அவர் தன் விரதத்தைச் சரிவர அனுஷ்டிக்கவில்லை என்றும் தெரிந்தது. ஆனல் அவனுக்குத் தான் என்ன செய்யவேண்டும் என்பது புலப்படவில்லை. பலவாறு யோசித்துக் கடைசியில் பின்கண்ட முடிவுக்கு வந்தான்:—"என் தகப்பனர் செய்யும் இப்பாபத்தினின்றும் அவரைக் காப்பது பிள்ளையாகிய என் கடமையாகும். அவர் செய்துகொண்ட விரதத்தின்படி தன்னுடைய எல்லாச் சொத்தையும் அவர் தானமாகக்கொடுத்துவிடவேண்டும். அவர் பிள்ளையாகிய நானும் அவர் சொத்தாகையால் நானும் ஒரு யோக்கியமான புரோகிதருக்குக் கொடுக்கப்படவேண்டும். இப்படிச் செய்வதால் என் தகப்பனருக்கு மேலான கதி கிடைக்கும்."

இப்படி யோசனை செய்து முடித்துக்கொண்டு அவன் தன் தகப்பனரிடம் வந்து "தங்களுடைய எல்லாவற்றையும் கொடுத்து விடவேண்டுமென்று யாகத்தில் ஏற்பட்டிருக்கிறபடியால் என்னை யாருக்குக் கொடுக்கப் போகிறீர்கள்?" என்று மிகவும் வணக்கமாய்க் கேட்டான்.

கௌதமர் இதைக்கேட்டும்கேளாதவர்போல் வேறு பக்கம் திரும்பிக்கொண்டார். பையன் மறுபடியும் அவரைப் பார்த்து அதே கேள்வியைக் கேட்டான். திரும்பவும் தகப்பனர் செவி கொடுக்கவில்லை. மூன்றுந்தரமும் பையன் கேட்டதற்கு அவர் கோபங்கொண்டு "உன்னை யமனுக்குக் கொடுத்தேன்" என்றார்.

பையன் அடக்கொணு துக்கத்துடன் அவ்விடத்தைவிட்டு அகன்றுன். "ஏன் என் தகப்பனருக்கு என்பேரில் கோபம் வரவேண்டும்? நான் அவருக்கு மனமார்ந்த கைங்கரியம் செய்து வந்திருக்கிறேனே. அவர் கட்டளைகளைத் தடையன்னியில் செய்துவந்திருக்கிறேனே. இப்பொழுது இம்மாதிரி வற்புறுத்திக் கேட்டதனல் என்பேரில் கோபம் கொண்டார் போலும். ஆனல் செய்த வாக்குதத்தத்தைத் திருப்பிக் கொள்ளமுடியாது. சொன்ன வார்த்தையை நிறைவேற்றியே தீரவேண்டும்.

(*கதா உபநிஷத்திலிருந்து தொகுக்கப்பட்டு மைலாப்பூர், ஸ்ரீராமகிருஷ்ண மாணவர் இல்லப்பத்திரிகையில் ஆங்கிலத்தில் வெளிவந்திருக்கும் ஒரு விருத்தாந்தத்தின் மொழிபெயர்ப்பு—K. R. S.)

ஆதலால் நான் இப்பொழுது யமனிடம் போகச் சித்தம் செய்துகொள்ளுகிறேன்" என்று தீர் மானித்துக் கொண்டான்.

பிறகு கௌதமரை அடைந்து, சாஷ்டாங்கமாய் நமஸ்காரம் செய்து "என் ஐயனே! நான் யமலோகம் போக எனக்கு விடை தரவேண்டும். நான் அங்கே போக சித்தமாயிருக்கிறேன். இதனால் தாங்கள் தங்கள் விரதத்தை நிறைவேற்றினவர்களாக ஆவீர்கள். நம்முன்னோர்கள் தர்ம நெறியின்றும் ஒரு நாளும் நழுவியதில்லை. இன்றைக்கானாலும் நாளைக்கானாலும் சாவு நிச்சயமென்று தமக்குத் தெரியுமாதலால் தாம் எனக்காக வருந்தவேண்டியதில்லை" என்று விண்ணப்பம் செய்து கொண்டான்.

கௌதமருக்கு பதில் சொல்ல வாயெழவில்லை. தன் குமாரன் சொல்வது சரியென்று அவருக்குத் தெரிந்திருந்தபோதிலும் அதன்படி நடக்க அவருக்கு மனம் வரவில்லை. அவருக்கு உலகப்பற்று அதிகமாயிருந்தபடியால் அவர் மௌனம் சாதித்திருந்தார். மௌனம் சம்மதத்தைக் குறிப்பதாகக் கொண்டு நசிகேதஸ் திரும்பவும் தன் தகப்பனாரை வணங்கி விட்டு யமலோகத்துக்குப் புறப்பட்டுவிட்டான்.

நசிகேதஸும் யமலோகத்தை அடைந்தான். அவன் அங்கு சென்றபொழுது யமன் அவ்விடம் இல்லை. வீட்டிலிருந்தவர்கள் வந்த அதிதியை மிகவும் அன்புடன் வரவேற்று, உள் வந்து சாப்பிட்டுச் சிரம பரிகாரம் செய்து கொள்ளும்படி வேண்டிக்கொண்டார்கள். ஆனால் பையன் வீட்டு யஜமானன் இல்லாத பொழுது தான் வீட்டிற்குள் நுழையக் கூடாதென்றும் அவர் வருமட்டும் காத்திருப்பதாயும் சொல்லிவிட்டான்.

வீட்டுக்குவந்த விருந்தினர்களை அர்க்யபாத்ய ஆசமனீயங் கொடுத்து அன்புடனும் மரியாதையுடனும்வரவேற்கவேண்டுமென்பது பண்டைய காலத்திய கிருகஸ்தனுடைய தர்மம்.

எந்த கிருகஸ்தன் வீட்டிலிருந்து விருந்தினன் சாப்பிடாமற் போகிறானோ அவன் ஆசைகளும் நல்ல கர்மங்களின் பலன்களும் அழிவதுடன் அவன் குழந்தை குட்டிகளும் சொத்து சுகங்களும் நாசமடைகின்றன. இதை உணர்ந்திருந்த யமதர்மராஜனின் வேலைக்காரர்கள், நசிகேதஸ் தாங்கள் செய்த ஸத்காரத்தை ஏற்றுக் கொள்ளாமல் பட்டினியாயிருந்தமையால் நடுநடுங்கிப் போய்விட்டார்கள். யமன் மூன்று நாள் கழித்து வந்தவுடன் அவர்கள் பரபரப்புடன் அவர் முன்னிலையை அடைந்து நடந்த விருத்தாந்தங்களை ஆதியோடந்தமாய் எடுத்துக் கூறி வந்திருந்த குணசாலியான அதிதியைச் சரியான மரியாதையுடன் எதிர்கொள்ளும்படி வேண்டிக்கொண்டார்கள்.

யமனும் நசிகேதஸை சாஸ்திரப்படி வரவேற்று, அதிதி வந்த காலத்தில் தான் இருந்து ஸத்காரம் செய்ய சாத்தியப்படாமற் போனதை க்ஷமித்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொண்டதுடன் தன் தப்பிதத்திற்காக நசிகேதஸுக்கு மூன்று வரன்களையும் அளித்தார்.

பையன் உடனே "என் தகப்பனாருக்கு என் பேரிலிருக்கும் கோபம் மாறி, நான் இவ்விடம் விட்டு என் தகப்பனாரிடம் செல்லும்போது அவர் என்மீது பட்சமாயிருக்கவேண்டும்" என்று முதல் வரன் கேட்டான். யமனும் அதற்குச் சரியென்று இசைந்தார்.

இரண்டாவதாக, "தேவலோகத்தில் ஜாமரண பயம் இல்லை என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அங்குள்ளவர்கள் பசி, தாகம், துக்கங்கள் இவைகளைக் கடந்து எப்பொழுதும் ஆனந்தமாய் இருக்கிறார்கள் என்றும் அதை அடைவதற்குச் சாதனமான யாகத்தின் ரகசி

யம் தங்களுக்குத் தெரியுமென்றும் எனக்குத் தெரிய வந்தது. அந்த ரகசியத்தை எனக்கு உபதேசிக்கவேண்டும்'' என்று நசிகேதஸ் கேட்டான்.

யமதர்மராஜன், அந்த யாகம் செய்யவேண்டிய விதத்தையும், யாகசாலே எப்படி அமைக்கப்படவேண்டு மென்றும், எப்படி யாகாக்கினி மூட்டப்படவேண்டுமென்றும், இன்னம் இவை போன்ற எல்லா விவரங்களேயும் தெரிவித்துவிட்டு நசிகேதஸைப் பார்த்து, "நான் உன்னிடத்தில் அதிகப் பிரீதி உள்ளவனுயிருக்கிறேன். இனிமேல் இந்த யாகத்தை உன்பெயரிட்டு அழைக்கப்படும். உன் மூன்ருவது வரத்தையும் கேள்'' என்ருர்.

பையன் சிறிது நேரம் யோசனே செய்து, "என் ஐயனே! பூலோகத்தில், மரணத்திற்குப் பிறகு மனிதனுடைய ஸ்திதியைப்பற்றி அதிக சமுசயமும் வாதங்களும் இருந்து வருகின்றன. மனிதன் மடிந்தபிறகு, சிலர் அவன் இருக்கிருன் என்றும், சிலர் அவன் இல்லே என்றும் சொல்லிக் கொள்ளுகிருர்கள். தங்களால் உபதேசிக்கப் பெற்றவனுய் இவ்விஷயத்தில் உண்மையான ஞானுேபதேசம்பெறவிரும்புகிறேன்'' என்ருன்.

இதைக்கேட்ட யமதர்மராஜன் திடுக்கிட்டுவிட்டார். மற்ற இரண்டு வரன்களே அளிப்பதில் அவர் வெகு உற்சாகமாயிருந்தார். இப்பொழுதோவெனில் அவர் நசிகேதஸைப்பார்த்து, "இவ்விஷயத்தில் தொன்று தொட்டு தேவதைகளுங்கூட இன்னும் தடுமாறிக் கொண்டிருககிருர்கள். இதன் சூட்சுமார்த்தத்தை உணர்வது மிகவும் கஷ்டசாத்தியம். ஆகையால் இதைப்பற்றி என்னேத் தொந்தரவுசெய்யாமல் வேறு ஏதாவது வரனேக் கேட்பாய்'' என்ருர்.

ஆனல் நசிகேதஸ் பிடிவாதமாய் "தாங்கள் சொல்வதென்னமோ உண்மை. இது சுலபமான விஷயமல்ல, தேவதைகளும் இதைக் கிரகிப்பது கஷ்டம்தான். அதனுற்ருன் அதைத் தங்களிடத்திலேயே கற்றுக்கொள்ள விரும்புகிறேன். இதை உபதேசிப்பதற்குத் தங்களேப் போன்ற குருவை அடைவது முடியாத கார்யம். இதற்கு சமானமான வேறு வரனும் இல்லே'' என்று பதிற் சொன்னுன்.

"புத்திர பௌத்திரப் பேறையும், தனதான்ய சமர்த்தியையும், ஐச்வரியத்தையும், இவ்வுலகத்தில் நீடுழிகாலம் பெரிய ராஜ்யத்தை ஆள்வதையும் வரனுகக் கேள். அல்லது, ஐச்வரியத்திற்கும் நீண்டஆயுளுக்கும் சமமான வேறெந்த வரனேயாவதுகேள். நீ இஷ்டப்பட்டால் இப்பூமண்டலத்திற்கெல்லாம் உன்னே அரசனுய்ச் செய்கிறேன். பிறரால் அடைவதற்கரிதான எல்லா போகங்களேயும், அப்சர ஸ்திரீகளேயும், ரதங்களேயும் நான் உனக்குக் கொடுக்கிறேன். மரணத்திற்குப் பிறகு யாது நடக்கிறதென்பதைப்பற்றி நீ சிரமப்பட்டுக்கொள்ளவேண்டாம்'' என்று யமதர்மராஜன் வற்புறுத்தினர்.

"தங்களால் சொல்லப்பட்ட புருஷார்த்தங்களெல்லாம் இன்றைககிருந்து நாளேக்கு அழிபவை. அவைகள் இந்திரியங்களுக்கு உற்சாகத்தைக் கொடுத்து அவற்றின் வலுவைக் குறைத்துவிடுகின்றன. ஆயுள் எவ்வளவு நீடித்திருந்தாலும் அது உபயோகமற்றது. மனிதன் ஐசுவரியத்தினுல் மட்டும் திருப்தியடைய முடியாதாகையால் தாங்கள் அன்பு கூர்ந்து எனக்கு அளிப்பதாகச் சொன்ன ஐசுவர்யங்களெல்லாம் தங்களிடமே இருக்கட்டும். தங்கள் தரிசனம் பெற்ற எவன்தான் ஐசுவர்யத்தை வைத்துக்கொண்டிருக்கக் கூடும்? தாங்கள் இஷ்டப்பட்ட வரையில் தானே மானிடவாழ்வு. ஆதலால் தாங்கள் நான் கேட்ட வரனேயே எனக்கு அளிக்கவேண்டும்'' என்று பிரார்த்தித்தான் நசிகேதஸ்.

பையனுடைய திடசித்தத்தையும் புத்தி சாலித்தனத்தையும் கண்டு யமதர்மராஜன் மிகவும் சந்தோஷமடைந்தார். அவன் கேட்ட ரகசியத்தை அவனுக்கு உபதேசிக்கத் தீர்மானித்து, அவனைப்பார்த்து, "நல்லதுஒன்று; சந்தோஷகரமானது அதைவிட்ட முற்றும் வேறுபட்டதானமற்ருென்று. புத்திமான் இரண்டையும் சீர்தூக்கிப் பார்த்து நல்லதைக் கிரகிக்கிருன்; அதனுல் மேம்பாடடைகிருன். மூடனேவெனில், தன் இந்திரியங்களுக்குத் திருப்தியைக் கொடுக்கிற சந்தோஷகரமானதில் இழிந்து நன்மையை இழக்கிருன். நீ சரியாய்க் கிரகித்தாய். நான் கொடுப்பதாகச் சொன்ன பரமசுகங்களும் உன்னைக் கலக்கவில்லை. ஆதலால், ஞானேபதேசம் பெற நீ யோக்கியமானவன்" என்ருர்.

"அக்ஞானத்திற்கிடையில் வசித்து, பயனற்ற கல்வியால் கர்வமடைந்து, தங்களை மேதாவிகளென்று கருதிக்கொள்ளும் மூடர்கள் குருடரால் வழிகாட்டப்பட்ட குருடரைப் போல் ஓரிடமும் செல்லாமல் சுற்றிவந்து கொண்டிருக்கிருர்கள். பணத்தின் செருக்கினுல் புத்திகெட்ட மீசை முளைத்த இக்குழந்தைகளுக்குத் தத்துவம் ஒருநாளும் விளங்குவதில்லை. இப்பிரபஞ்சத்துக்குப் பிறகு ஒன்றுமில்லை என்று அவர்கள் சொல்வதால் அவர்கள் திரும்பத் திரும்பப் பிறந்து என்வலையில் வந்து விழுகிருர்கள்.

"உண்மையை அறிவது மிகவும் கஷ்டம். பலர் அதை அடிக்கடி கேட்டுக்கொண்டிருந்தும் அதைக் கிரகிப்பதில்லை. அப்படிச்செய்ய, கேட்கிறவனும் சொல்லுகிறவனும் பரிபக்குவமடைந்தவர்களாய் இருத்தல் வேண்டும். இத் தத்துவம் மந்தமதிகளால் கற்பிக்கப்படில் பயனளிப்பதில்லை. அதை உள்ளபடி உணர்ந்து அதன்படி நடக்கும் ஒருவனுல் உபதேசிக்கப் பெற்ருலொழிய, அதை அணுகமுடியாது. அது தர்க்க பாண்டித்தியத்தால் சமர்த்திக்கக்கூடியதில்லை.

"அப்பா! நீ மிகவும் திடசித்தமுடையவன். உனக்கு உபதேசிப்பது எனக்கு மிகவும் பிரீதிகரமானது. உன்னைப் போன்ற பல சிஷ்யர்கள் எனக்குக் கிடைத்தால் எவ்வளவு நல்லது! அதி உன்னதமானபதவியின்ரகசியத்தை அறிந்திருந்தும் நான் இந்த யமபட்டத்தில் ஆசைவைத்துக் கொண்டிருப்பதால், நீ என்னைவிடச்சிறந்தவன்"

என்று இவ்விதமாகப் பையனை மிகவும் புகழ்ந்துவிட்டு யமன், பையன் கேட்ட கேள்விக்குப் பின்வருமாறு பதிலளித்தார்:—

யமன்:—மனிதனுடைய ஆத்மாவானது ஜாமரணமில்லாதது, அணுநியானது, சாசுவதமானது. சரீரம் அழியும்போது இவ்வணுநியான ஆத்மா அழிவதில்லை. அணுவைக் காட்டிலும் அணுவாயும், மிகவும் பெரிய வஸ்துவைக் காட்டிலும் பெரிதாயுமுள்ள இந்த தத்துவம் ஒவ்வொரு மனிதனுடைய இருதய கமலத்திலும் இருந்து வருகிறது. ஆத்மாவின் தத்துவம் இப்படிப்பட்டதென்று உணர்ந்த மகரிஷிகள் ஒரு நாளும் மனக் கலக்கமடைவதில்லை.

நசிகேதஸ்:—அதை யடையும் விதத்தை எனக்கு உபதேசிக்க வேண்டுகின்றேன்.

யமன்:—வேதங்களைப் படிப்பதாலாவது, புத்திக் கூர்மையாலாவது, சாஸ்திரங்களைப் படிப்பதாலாவது இந்த ஆத்மாவை சாட்சாத்கரிக்கமுடியாது. யாரிடத்தில் ஆத்மா பிரீதி கொண்டிருக்கிறதோ அவர்களுக்கே அது அறிமுகமாகிறது. பாபத்திலிருந்து விலகாதவர்களும், தபசில்லாதவர்களும், சாந்தியில்லாதவர்களும் ஆத்மசாட்சாத்காரத்தை அடைய

முடியாது. மனோவாக்கு காயங்களில் சுத்தி யுடையவர்களுக்கே அது பிரத்யட்சமாகும்.

"ஆத்மாவை ரதியாகவும், இந்த சரீரத்தை ரத மாகவும், புத்தியை சாரதியாகவும், மனதைக் கடி வாளங்களாகவும், பஞ்சேந்திரியங்களை ரதத் தில் பூட்டப்பட்ட குதிரைகளாகவும் பாவிக்க வும். எவனுடைய குதிரைகள் (ஐம்புலன்கள்) அடக்கியாளப்பட்டிருக்கின்றனவோ, எவன் குதிரைகளின் கடிவாளங்கள் (மனது) திடமா கப் பிடிக்கப்பட்டிருக்கின்றவோ அவன் தான் குறிப்பிட்ட இடம் போய்ச் சேருகிறான். அப் படிக்கில்லாத மனிதன் நாசத்தை அடைகிறான்.

"இம்மார்க்கத்தில் செல்வது மிகவும் கடி னம். அவ்வழி வெகு தூரமானது, அபாயங் கள் நிறைந்தது. அதில் நடப்பது ஒரு கூர்மை யான கத்திமுனையின் மேல் நடப்பது போன் றது. ஆனால் மனசஞ்சலமடையாமல் மேன் மேலும் முயற்சி செய். அதற்குத்தான் நாம் பிறந்திருப்பது. ஆகையால் ஜாக்கிறதையாய் இருந்துகொண்டு பெரியோர்களை அடைந்து மோட்சத்தை அடைவாயாக!

"இக்காரியம் இப்பொழுதே இங்கேயேசமர்த் திக்கக் கூடியது. இங்கு என்பதும் பிற்பாடு என்பதும் வெவ்வேறல்ல. இங்கிருப்பவைகளே அங்கு இருக்கின்றன. அங்கிருப்பவைகளே இங்கும் இருக்கின்றன. இவை இரண்டுக்கும் வித்தியாசமிருப்பதாக நினைக்கிறவன் மறு படியும் மறுபடியும் பிறந்து மரணத்தை அடை கிறான்.

"எவன் ஆத்மாவை எப்பொழுதும் தன் சமீ பத்திலேயே இருப்பதாயும், தனக்கு ஜீவாதார மாயும், கடந்த காலத்திற்கும் வருங்காலத்திற் கும் யஜமானனாயும் அறிந்திருக்கிறானோ அவன் ஒன்றுக்கும் ஒரு நாளும் பயப்படுவதில்லை.

"மலையின்மேல் பெய்கிற மழையானது எப் படிப் பல சிற்றாறுகளாகப் பிரவாகிக்கின்றதோ அதேமாதிரி இவ்வுலகத்தில் தோன்றும் சக்தி களெல்லாம் அவ்வாத்மாவிடமிருந்தே உண் டாகின்றன. அதுவேதான் வானத்தில் உள்ள சூரியனும், ஆகாயத்திலுள்ள காற்றும், ஹோம குண்டத்திலுள்ள அக்கினியும், வீட்டுக்கு வரும் அதிதியும். அது மனிதன், கடவுள், யாகம், ஆகாசம் எங்கும் வியாபித்திருக்கிறது. அதுவே சத்தியம், அதுவே மகத்.

"உலகத்திலுள்ள நெருப்பு எப்படி சந்தர்ப் பத்திற்கேற்றவாறு பல பரிணாமங்களை அடை கின்றதோ அதேமாதிரி பரமாத்மாவும் எல்லா வஸ்துக்களிலும் பிரவேசித்து அனேகம் பரிணா மங்களை அடைவதோடு, இவைகளுக்கெல்லாம் புறம்பேயும் இருக்கிறார். உலகத்துக்கு வெளிச்சம் கொடுக்கும் சூரியன் எப்படி நம் கண்களிலுள்ள கோளாறுகளால் பாதிக்கப்படு கிறதில்லையோ அது போலவே பரமாத்மாவும் உலகத்திலுள்ள துக்கங்களினால் பாதிக்கப்படு கிறதில்லை. அவரே எல்லாவற்றிற்கும் சிருஷ் டிகர்த்தா, ரட்சகர், எல்லா வஸ்துக்களுடைய வும் அந்தராத்மா.

"அவரை நம்முடைய இக்கண்களால் பார்க்க முடியாது. சூரியனாலும், சந்திரனாலும், நட்சத் திரங்களாலும் மின்னல் ஒளியாலும் அவரைப் பிரகாசிப்பிக்க முடியாது. அவர் ஜோதிமயமாய் இருப்பதால் மற்றெவையும் பிரகாசிக்கின்றன. ஆத்மாவின் ஜோதியே மற்றவைகளைப் பிரகா சிப்பிப்பது. தங்களுடைய அந்தக்காணத்தில் இவ்வுண்மையை உணர்ந்த மகரிஷிகள் சாசுவத மான பதவியை அடைகின்றனர். அவர்களே அழிவற்ற சாந்திக்கும் பரமானந்தத்திற்கும் உடையவர்கள். மற்றவர் எவருக்கும் இவை இல்லவேயில்லை.

எல்லா சராசர வஸ்துக்களையும் அடக்கிக் கொண்டிருக்கும் அச்வத விருட்சமாகிய இப்

பூமிக்கு இப்பரமாத்மாவே மூலாதாரம் (வேர்). அவரே இவ்வுலகை ஆள்வது. அவர் ஆக்ஞைக்கு பயந்தே நெருப்பு எரிவதும், சூரியன் பிரகாசிப்பதும், இந்திரன், வாயு, யமன் முதலிய தேவதைகள் தத்தம் காரியங்களைச் சரிவர நடத்துவதும்.

"இந்ததேகம் நாசமடைவதற்குள் ஆத்ம சாட்சாத்காரம் பிறக்கவில்லையேயாகில், முன் செய்த கர்மத்திற்கும் ஞானத்திற்கும் அனுகுணமாக மனிதனாகவோ, மிருகபட்சியாகவோ, விருட்சமாகவோ இவ்வுலத்தில் மறுபடியும் மறுபடியும் பிறக்க வேண்டியதுதான்.

"மேலும், இது உண்மையை உணர மானிட ஜன்மமே மேலானது. எப்பொழும் நினைப்பிலிருக்கவேண்டும். இங்குதான் கண்ணாடியில் போல் பரமாத்ம ஸ்வரூபம் ஸ்பஷ்டமாய்த் தெரியும். பிரம்மலோகத்தில் சூரியானால் உண்டான ஓர் நிழல் போலும், கந்தர்வலோகத்தில் சிறு அலைகளால் நிறைந்திருக்கும் ஜலத்தில் தோன்றும் பிரதிபிம்பம்போலும், பிதுர் லோகத்தில் ஸ்வப்னத்தில் கண்ட உருவம் போல் மழுங்கியதாயும் அது காணப்படுகிறது. காலதாமதம்செய்யாமல் அதற்கு வேண்டியதைச் செய்வாயாக.

"எப்பொழுது வியர்த்தமான ஆசைகள்விடப்பட்டு இருதயத்தின் பந்தக்கட்டுகள் அறுபட்டு விட்டுவிடப்படுகின்றவோ அப்பொழுது இம்மனிதனே நித்தியனாகிறான். இவ்வுலகத்திலேயே பரமாத்மாவுடன் ஒன்றாயிருத்தலை அடைகிறான்.

"உன்னுடைய ஆத்மாவானது உன் இருதய கமலத்தில் வசித்துக் கொண்டிருக்கிறது. அவ்வாத்மா பரிசுத்தமானது, சாவில்லாதது என்று உணர்ந்து அதை இந்த தேகப்பற்றினின்றும் அப்புறப்படுத்து."

இவ்விதமாக யமதர்மாராஜனால் உபதேசிக்கப்பட்ட நசிகேதஸ், எல்லாப்பாபங்களின்றும், மாணத்தினின்றும் விடுபட்டவனாய், பிரம்ம சாட்சாத்காரத்தைப் பெற்றான்.

இம்மார்க்கம் எல்லாருக்கும் பொதுவானது. எவன் ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை மேற் கூறியபடி உண்மையாய் அறிகிறானோ அவனும் நசிகேதஸைப் போல் மேலான கதியை அடையத் தடையில்லை.

[ஓம். சாந்தி: சாந்தி: சாந்தி:]

## காவடி.

(ஸ்ரீமான் மு. சி. சிற்றம்பலவன்.)

தேவதா பஜனையே செய்து அஞ்ஞானமென்பதைக் கொய்து இறுமாப்பை வைது தேசோபகாரத்தைப் பெய்து சற்சன சகவாசமுற்று வாழும் நேயர்காள்!

நமது தேச விழாக் கொண்டாட்டத்தின் காலங்களில் அநேகமானோர் காவடி தோளில் தாங்கி அலகு, செடில் முதலியவற்றைத் தேகத்தில் மாட்டித் தீபம் பிடிப்போன் முன் செல்லப் பாடுவோர் பின் தொடர ஆலய தரிசனம் செய்யப் போவதைப் பலமுறை பார்த்திருக்கின்றோம்.

ஆனால் இவர்கள் இவ்விதமாய்த் தரிசனம் செய்வது நேர் கடனுக்காய் மாத்திரமென்பதும் அறிகின்றோம். நேர் கடன் என்பது தங்களுக்குற்ற நோய்க்கோ, வியாச்சிய முதலியவற்றிற்கோ, எண்ணிய காரிய பலிதற்திற்கோ

வேறேதோ ஒன்றிற்காய் நேர்த்தி வைத்து காரியானுகூலமானதின்மேல் நேர்த்திக் கடன் காவடி யெடுப்பதே. ஆனால் தெய்வம் செய்யும் அனுகூலங்களை நினைப்பது மகா விசேஷம். அதற்காகக் கடனைச் செலுத்திவிட நினைப்பதும் மௌட்டீகம். நேர் கடன் காவடியெடுப்பது கடன் செலுத்துவதாகவே முடிகிறது.

பதினாலு லோகமுந் தந்து அதற்கேற்ப போகங்களும் ஏற்படுத்தி அவரவர்களுக்குத் தனுகாணுதிகளைக் கொடுத்து புவனத்திலுள்ள போகங்களை அனுபவித்து இறுதியில் தமது திருவடி நிழலாகிய மோட்ச சாம்பிராச்சியத்தை அடையும் பிரகாரம் அருள் பாலித்திருக்கும் எங்கள் கருணைக் கடலாகிய அப்பனுக்குப் பிரதி கடன் அல்லது பிரதியுபகாரம் யார்தான் அளிக்க வல்லார் ?

மேலும், காவடி யெடுத்தல் என்னும் கிரியா சாரம் விசேடாவிசேடம். நேர்கடனு யெண்ணி எடுப்பது மௌட்டீகா மௌட்டீகம். அறிவுடைய மகான்கள் கிரியாசாரங்களை ஞானர்த்தங்களைக் கொண்டே கட்டியிருக்கின்றார்களென்பது உண்மையே. ஆதலின் இக்கிரியாசாரக் கருத்தை ஆராய்வாம்.

கா + அடி = காவடி. கா—என்பது சுமை. அடி—என்பது அடியான். ஆகவே காவடியின் கருத்து அடியவர்களின் பாபச் சுமை எனப்படும். அடியவர்களாகிய நம்மெல்லாரிடமும் பாபச் சுமை யுண்டென்பது சகஜம். இப்பாபம் மூன்று விதமாகும். அவையாவன: காமம், குரோதம், உலோபம் என்பவைகளே. இது நியாயங் கருதி எங்கள் குணமென்னுங் குன்றேறி நின்ற மகானாகிய தாயுமான சுவாமிகள் 'மும்மல மிகுந்தொழுகு கேணி' எனப் பாடியிருப்பதைக் காண்க. அதே நியாயந் தான் அக்காவடிகளுக்கு மூன்று பூஞ்செண்டுகள் அமைக்கப்படுவது. பின்னர் முன் பிடிக்கப்படும் தீபம். அதுவே அஞ்ஞான இருள் அகற்றும் மெஞ்ஞானச் சுடர். காவடியிற் கட்டப்பட்டிருக்குங் கற்பூரம் ஆத்ம காணிக்கையை ஞாபகமாக்குகின்றது. தேகத்தில் மாட்டியிழுக்கும் செடில்கள் நிஷ்கள சொரூபியாகிய ஈசனைச் சிந்தை செய்து கடைத்தேற விடாது தடுக்கும் பற்றுக்கள் எனப்படும் லௌகிக இழுப்பு; இவ்விழுப்பு காணியிலும் மாட்டிலும் ஆட்டிலும் வீட்டிலும் பெண்ணிலும் உத்தியோகத்திலும் யௌவனத்திலும் உற்றாரிலும் பெற்றாரிலும் புத்திரரிலும் தேரிலும் மோட்டார் காரிலும் மற்றும் பண்டங்களிலும் உள்ள மனப் பதிவே. இந்நியாயமே செடில்களை முதுகில் பதித்திழுப்பது. தெய்வ நேசஞ் செய்யத் தடைப்படுத்தும் பொய்ப் பண்ட வாஞ்சை எத்தனை உண்டோ அத்தனையும் செடில்களே.

காவடி தாங்கி ஆலயஞ் செல்பவர்களைச் சந்தித்துக் கும்ப நீர் சொரிவது புண்ணிய தீர்த்த ஸ்நானர்த்தம். தரிசனம் செய்த அக்கணமே காவடி செடில் முதலியவற்றை நீக்குவது இணையில்லா ஈசனைக் கண்டவுடன் மும்மலமும் ஆசையாகிய செடில்களும் ஏனைய குற்றங்களும் சாம்பலாகிவிட்டது என்னும் அர்த்தமே விபூதி தூவிக் காண்பிக்கப்படுவது. பின் ஆலயத்தோரம் படுத்துக்கொள்வது, சாயுச்சிய பதவியாகிய இரண்டறக் கலத்தலென்னும் முக்தி சித்தியாவதை இலக்காய்க் காட்டுகின்றது. இவ்வித ஞானர்த்தமமைந்த காவடி யெடுப்பதை ஞாபகார்த்தமாயன்றி நேர் கடனுக்கெடாதிருக்குமாறு பாத பூசை செய்கின்றேன்.

சுபம்.



கடவுள் துணை.

சிந்தாமணி பத்திராதிபர்

சகோதரி வி. பாலம்மாள் அவர்களுக்கு

# வரவேற்பு உபசாரப் பத்திரம்.

எங்கள் அன்புமிக்க நேய சகோதரியே! உங்கள் வரவு நல் வரவாகுக!

தாங்கள் இந்துப் பெண்களாகிய எங்களின் நன்மைக் காகவெனத் தாய்நாட்டை விட்டு அலைகடல் தாண்டி நெடுந் தூரங் கடந்து வந்து தமிழ்ப் பெண்கள் உயர்ந்த அந்தஸ்தும் சீரிய கல்வியறிவும் பூண்டு வாழ்வதற்கென வழியில் தாங்க ளெடுத்துள்ள நன்முயற்சிக்கு நாங்கள் யாவரும் எங்கள் மன மார்ந்த வந்தனமளித்து நன்றி பாராட்டுகிறோம்.

ஜனானுகூல பத்திராதிபரே! தாங்கள் எங்கள் சமூகத்தின் நன்மைக்கென்று ஊழியஞ் செய்வதையும் அதற்கென "சிந்தாமணி" யென்ற தமிழ் மாதப் பத்திரிகை நடத்துவதையும் கேள்வியுற்றதிலிருந்து தங்களை முக முகமாகத் தரிசிக்க மெத்த ஆவலுற்றிருக்குங்கால் தாங்கள் சைகோன் பட்டணம் வந்திருப்பதறிந்து இவ்விடமும் தவறாது விஜயஞ் செய்வீர்களென எதிர் பார்த்திருந்தோம். எங்கள் ஆர்வப்படி இன்று தங்களை நேரில் தரிசிக்கவும் உபந்நியாசமூலமாக உங்கள் அமுத மொழிகளைக் கேட்கவும் பாக்கியம் பெற்றோம்.

அன்பார்ந்த சகோதரியே! தங்கள் வரவினாலும் உங்களின் அரும் பிரசங்கத்தாலும் எங்களைக் கண்ணியப்படுத்திய தங்களை இந்த ஊரில் வசிக்கும் தமிழ்ப் பெண்களாகிய நாங்க ளனைவரும் மெய்யன்புடன் வரவேற்கின்றோம்.

அன்புமிக்க அம்மையே! இதுவரை ஆடவர்கள்தான் எங்கள் முன்னேற்றத்திற்காகப் பாடுபடுவதைக் கேட்டிருக்கிறோம். தற்போது பெண்மக்களுக்கென எங்கள் சகோதரியாகிய தாங்கள் பத்திரிகை நடத்தி அதுவிஷயமாகப் பிரசாரஞ் செய்வதும் தாங்கள் இவ்வாறு வெளி நாடுகளிலும் சுற்றுப்பிரயாணஞ் செய்வதும் இருபதாம் நூற்றாண்டில் நடைபெற்ற சிறந்த காரியங்களில் முதன்மை பெற்றதாக தேச சரித்திரத்தில் வரையப்படுமென்பது திண்ணம். இனம் இனத்தை நாடும் என்றபடி நமது பெண்ணினத்தின் நன்மைக்காக தங்களின் சிரமத் தையும் செலவையும் பிரயாணக் கஷ்டத்தையும் பொருட்படுத்தாது இவ்விடமும் விஜயஞ் செய்து எங்களை கௌரவிக்கும் எங்கள் அரிய சகோதரியாகிய தங்களுக்கும் தங்களால் எங்கள் நலன் கோரி நடத்தப்படும் "சிந்தாமணி" க்கும் எங்களாலியன்ற உதவி செய்யக் கடமைப் பட்டுள்ளோம்.

பிரிய சகோதரியே! ஊக்கங் குன்றாது உடல் வலிமை மாறாது உற்சாகங் குறையாது தாங்களெடுத்துள்ள இவ்வுத்தம கைங்கரியத்தை என்றும் நடத்தி வரும்படி கடவுள் கருணை புரிவாராக!

இங்ஙனம் கம்போஜாவில் வசிக்கும் தமிழ்ப் பெண்களின் சார்பாகத் தங்கள் சகோதரி

மதாம் பிரான்சீன்.

10—6—28.

# "நின்ருல் நெடுஞ்சுவர்; விழுந்தால் குட்டிச்சுவர்"

சிறுகதை.

(ஸ்ரீமான் வி. சிவராஜன்.)

சென்னை ராயபேட்டையில் தத்துக்கிளி ராவ் என்கிற பெயர் பூண்ட ஒருவர் ஒரு சிறு வீட்டில் பார்யா சமேதராய் இல்லறம் நடத்தி வந்தார். வயது முப்பத்தைந்து ஆகியும், நான்கு குழந்தைகளுக்குத் தகப்பனுகியும் குடும்பக் கவலே யென்பது சிறிதும் உரைக்காமல் மதோன்மத்தராய்க் காலத்தைத் தள்ளிவந்தார். ஒரு அற்பவிஷயம் முதல் தலேபோகிற காரியம் வரை எதிலும் ஒரே விளேயாட்டுத்தனமும் சிறு பிள்ளேத்தனமும் தான் அவரிடம் குடிகொண்டிருந்ததன வாகையால் அவர் நாமத்துக்கியைந்த முதல் நம்பர்தான். தத்துக்கிளி என்ன செய்கிறது? அஸ்தமன வேளேயில், மப்பும் மந்தாரமுமாயிருக்கும்போது எங்கிருந்தோ ஆஜராகி விடுகிறது. இங்கும் அங்கும், அங்கும் இங்குமாகத் தத்தித்தாவி அரைநாழிகை குதிக்கிறது. ஆயுள் கெட்டியாயிருந்தால் எங்கோ மறைந்து விடுகிறது. அற்பாயுளானுல் மேட்டுப் பல்லியின் வயிற்றில் மீளா நித்திரை செய்யவேண்டியதுதான். ஆரம்பம் முதல் அந்தரம் வரை அதன் நடக்கையில் ஏதாவது அர்த்தமிருந்ததோ? அதுபோலவேதான் நம் ராவ்ஜியின் திருவிளேயாடல்களும். மனமே இராஜா, மதியே மந்திரியென்று ஒரே போக்கில் பின்வாங்காது சென்று கொண்டிருப்பவர். வெளிப்பெயர்களுக்குப் பகட்டாகத் தென்படுகிருரே யொழிய, அம்பலத்தில் பூனே. அகத்தில் புலிதான். அவரை மணந்து அல்லும் பகலும் மனதிற்குச் சற்றும் நிம்மதியன்றி நடைபிணமெனத் தயங்கிநிற்கும் அருமை மனேவியைக் கேட்டாலல்லவோ உண்மை வெளிப்படும்! "கண்ணிய புருஷனென்ருல் இரவு ஏழு மணிக்குமேல் வெளித்தங்குவானே? 'ஏதடா, நம் அகமுடையாள் ஏகாங்கியாய், அருணேதயம் முதல் ஒரு நிமிஷமும் உட்காரநேரமின்றி, நமக்கும் குழந்தைகளுக்குமாக மாடாய் உழைத்து ஓடு தட்டிப் போகிருளே. அஸ்தமித்து எட்டுமணிக்குள் சாப்பாட்டுக் கடை முடிந்தால்தானே மணி ஒன்பதிற்குள்ளாவது சுத்துவேலேகளே முடித்துக்கொண்டு கீழே முடங்கலாம்' என்ற ஞானம் கொஞ்சமுமில்லேயே! காலே பதினேருமணிக்குச் சாப்பிட்டு விட்டு வெளிக் கிளம்பின ஆசாமி, கிளப்பு என்றும் பீச்சு என்றும், சினிமா என்றும், மீட்டிங் என்றும், ஏதாவது ஒரு சாக்குவைத்து 'விண்டு, விண்டு' என்று அலேந்து திரிந்து விட்டு அர்த்த ஜாமத் தருவாயில் ஒண்டி சண்டித் திருடன் போல் வந்து கதவைத் தட்டுவதென்ருல் இது என்ன அக்கிரமம்! ஒரு நாளில்லே, இரண்டு நாளில்லே; பிரதிதினமும் இந்த வயிற்றெரிச்சல்தானு; 'கொஞ்சம் முன்னுல் வீடு வரக்கூடாதா? அடுத்தாத்து சுப்பையரைப் பாருங்கள்; மணி ஆறு அடித்தால் தலே போகிற காரியமானுலும் வீட்டைவிட்டு வெளிக்கிளம்புகிருரா? சிரமம் ஒரு பக்கம், பசி ஒரு பக்கம், தூக்கம் ஒரு பக்கமுமாக நான் அவதிப்படுகிறேனே' என்று இனமாகச் சொன்னுலுமில்லே; சண்டை பிடித்தாலுமில்லே. இனமாகச் சொன்னுல் 'என் நீ பசியுடன் இருக்கவேண்டும்? மளமள வென்று எட்டுமணிக்கே காரியங்களே முடித்துக்கொலண்டு, எனக்கு ஒரு பிடிசாதம் பிசைந்து வைத்துவிட்டு, நீ பாட்டிலே சாப்

பிட்டுவிட்டு படுத்துக்கொள்கிறது தானே. வந்ததும் நான் பாட்டிலே இரண்டுபிடியாகச் சாப்பிட்டு விட்டுப் படுத்துக் கொள்கிறேன். இனிமேல் அப்படிச் செய்கிறதுதானே' என்று பதில். சண்டை பிடித்தாலோ வீடு ரணகளந்தான். 'சுப்பையனா? சரி! நீ அவனைப்போய் கலியாணம் செய்து கொள்!' என்றும், 'இனி நான் வெளியில் எங்கேயாவது சாப்பிட்டுவிட்டு வந்து கொள்கிறேன் ; எனக்காக ஒருவரும் கஷ்டப் படவேண்டாம்' என்றும் விதண்டா வாதம் பிடித்தால் என்ன செய்கிறது!

முன்னால் புருஷாள் சாப்பிட்டால் அவர்களுக்குப் பிடித்ததை தாராளமாகப் பரிமாறி, மீதியிருந்தால் நான் வைத்துக் கொள்ளலாம். மீதியில்லாவிட்டாலும் இந்த மட்டாவது ருசியாகச் சாப்பிட்டார்களே என்ற திருப்தியுடன் வெறும் சோறு தின்றாலும் சந்தோஷமாயிருக்கும். நான் முன்னாடி சாப்பிடவாவது! அது எப்படிசாத்தியப்படும்? பிசைந்துவைத்து விடவாவது ! எதை எப்படிப் பிசைவது ? எவ்வளவு பிசைவது? 'ஈச்வரா' என்று வயிற்றைப் பிசையவேண்டியதுதான். காலையில் சாப்பிட்டதாச்சேயென்று வயிறெரிந்து கொஞ்சம் தாராளமாய்க் குழம்புஞ் சாதம் பிசைந்து வைத்தாலோ வெளியில் கண்டதை வைத்து அடைத்துவிட்டு புளித்தேப்பத்துடன் நாக்கு வரள வீடு வந்து 'ஏன் யானைத்தலையளவு குழம்புஞ் சோற்றைப் பிசைந்து வைத்தாய்? சமையலில் ஒரு மணமா, வாசனையா இருக்கிறதா பாரேன்! மண்ணாங்கட்டி போலும் சிலதடவை உப்பும் உறைப்புமாகவும் இருக்கிறது. கைவாசனை ஜன்மாந்திர வாசனைதான். எவ்வளவு சோறடா! உன்திட்டமோ மூஞ்சியோ; சரி, எனக்கு இன்று அவ்வளவாகப் பசியில்லை. இந்தா மீதி! இரண்டு பிடியாய் நீ போட்டுக் கொண்டு விடு' என்று கையை வைத்து நாலு நாழிகை அளசிய நீத்துப்போன சோற்றை வெகுபரிவுடன் மீதிவைத்து விட்டு எழுந்து விடுகிறது ! முன்னால் எனக்குச் சாப்பாடு ஆகியிருந்தால் இப்படி மீதிவைத்த பிண்டத்தையார் சாப்பிடுகிறது? கை நெய்யை விட்டுப் பிசைந்த சோற்றைக் கொட்டிவிட யாருக்குத்தான் மனம் வரும்? விதியை நினைத்துக் கொண்டு வயிற்றில் விட்டெறிந்து கொள்ள வேண்டியதுதான். இந்த சங்கடத்திற்காக பயந்து இரண்டு பிடி குறைச்சலாக மோருஞ் சோறும் பிசைந்து தயார்செய்து வைத்தாலோ, நட்சத்திரய்யன் மாதிரி ஒடுக்கலெடுத்த வயிறுடனும் கடுகடுத்த முகத்துடனும் இலையிலுட்கார்ந்து "ஏன் இவ்வளவு கொஞ்சமாய்ப் பிசைந்து வைத்தாய்? 'லொள்' என்று புளித்த மோருதான அகப்பட்டதோ உனக்கு! உன் திட்டமோ மூஞ்சியோ! க்ஷாமம், கடன், பீடை" என்று சரமாரியாய்த் திட்டுகிறது. குழம்புஞ் சோறு கொஞ்சமும் மோருஞ் சாதம் கொஞ்சமுமாக எடுத்து வைத்திருந்தாலோ, 'இந்தப்பஞ்ச பக்ஷிய பரமான்னத்திற்கு சித்திரான்னம் வேறு! பிராரப்தம்! இதுகளுக்கெல்லாம் கொஞ்சம் சரியானபடி சமைக்கத் தெரிந்து விட்டால் ஏது! கஷ்டங் கஷ்டம்' என்று தலையிற் போட்டுக்கொள்கிறது. இந்த சங்கடத்திற்கு விமோசனந்தானென்ன? பன்னிரண்டு வருஷகாலமாகக் குழந்தைகளைப்பெற்று இவர்கீழ் குடித்தனம் செய்ததற்குப் பிரதிபலன் என்ன வென்றால், திடீரென்று அடுத்தாத்து சுப்பையனைப் போய்க் கட்டிக்கொள்ளவாம்! கண்றாவி! இந்த இடக்குப் பேச்சைக் கேட்டபிறகு யாருக்குத்தான் சாப்பிடப் பிடிக்கும்! குடலொட்டிக் கொள்ளும் பசியாயிருந்தாலும் எங்கேயோ பாந்தோடி விடுகிறது. நம் தலையிலெழுத்து இவ்வளவுதான்" என்று அனுதினமும் ராவ்ஜியின் மனைவி முணுமுணுப்பதும், இவ்வாக்குவாதங்களை அடுத்தகத்து சுப்பையன் ஒட்டுக் கேட்டு, 'ஏது, இன்று எதிர்பாராது நமக்கு

ஸ்திரீசங்கமம் வார்த்தைக்காலிலாவது கிட்டு கிறது. அதிகாலையில் கொல்லைக்குப் போகும் போது இடது புஜத்தில் அது தானே பல்லி விழுந்தது' என்று மனப்பால் குடிப்பதும் வெகு சகஜம்.

இருந்தாலும் நம் ராவ்ஜி காதில் இந்த அடுப் பங்கரைப் பிரசங்கம் ஏறுவது புருஷார்ப்பந் தான். "இந்த இனமில்லாத ஜன்மங்களைக் கட்டி யழுவது என்ன கஷ்டமாயிருக்கிறது! மணி ஏழரைக்கே கிளப்பை விட்டுக் கிளம்பி மூர்மார் கெட்டுக்கெதிரில் மோட்டார் பஸ்கள் நிற்கு மிடத்திற்கும் வந்து விட்டேன். நூற்றெட்டு டிராம் வண்டிகள் ஓடினும் பஸ்ஸில் தான் வீடு சேருவது என்ற உறுதியுடன் வெகு நேரம் கார்த்துக் கொண்டிருந்தேன், இந்த வளவில் புதிய டாட்ஜ் பஸ்வண்டியாகப் பார்த்து ஏற வேண்டு மென்ற ஊக்கத்துடன் அனேக வண் டிகளைப் போக விட்டு விட்டேன். மணி ஒன் பதும் ஆகிவிட்டது, கடைசி டிராம் வண்டியி லொருவாறு ஏறி வீடு வருவதற்குள் மணி பத்து ஆகிவிட்டது, என்ன செய்கிறது? உள்ளே நுழைந்தால் பிரசன்ன முகமாய் எதிர் கொண்டு வந்தால் நன்றாயிராதோ? இதற்காக என் முகத்தை முழநீளம் வைத்துக் கொள்ள வேண்டும்? தாலிகட்டின புருஷனான என் னொருவனை யனுசரித்துப் போவதே இவ ளுக்கு இவ்வளவு கஷ்டமாயிருக்கிறதே; இன் னம் அண்ணனும், தம்பியும், தங்கை, தமக்கை களும், ஓரகத்திமார்களும், வயதான மாமன் மாமியும், வருகிறவர்களும் போகிறவர்களுமாக கிஜுகிஜு என்றிருந்து விட்டால் கேழ்கவேண் டியதே யில்லை. இது ஓயாத சச்சரவாகவல்ல வாயிருக்கிறது. இல்லாமலா ஒருவன் 'அப்பா, உன் மனைவி மங்கலியமிழந்தால் உனக்கு யாரப்பா சமைத்துப் போடுவார்கள்?' என்று இடக்காய் சிநேகிதன் கேட்டதற்கு மெய் மறந்து 'அவள் கிடக்கிறாள் கழுதை பிறந்த கத்தில்! சமைத்துப்போட என் பாட்டியிருக் கிறாள், கவலையில்லை, என்றான்! தன்னையும் தன் கதியையும் மறந்து அவ்விதம் விடையளிக்கச் செய்தது எது? ஒரு சனிதுலைந்ததே என்கிற மனக்களிப்பே யல்லாது வேறென்ன! உம்— அவ்வளவு தான்—பிராரப்தம்—" என்று புரு வத்தை யசக்கிய வண்ணம் வேதாந்தத்திலிறங்கி விடுவார். இவ்விதமாய், நித்திய கண்டம், பூரணா யுசாக, நம் ராவ்ஜியின் குடும்பம் எப்படியோ வெகு நாளாய் நடந்தேறிவருகிறது. ஆணும் பெண்ணுமான இரு பூனைகள் எவ்வளவு அன்னி யோன்னிய மனதுடன் இல்லறம் நடத்துமோ அப்படியே இந்தக் கடுவனய்ய ரும் அந்தப் புஸ்ஸியம்மாளும் நடத்தும் இக் குடும்பமும்! கண்ட சோஷமும் முகச்சுளிப் பும் மீதியே யொழிய ராவ்ஜியின் நடத்தை எப் போதும் போல் ஒரே ரீதிதான்.

இப்படியிருக்க ஒரு சனிக்கிழமை காலை நம் ராயர்வாள் வெளிவிராந்தாவில் ஒரு கித் தான் சாய்வு நாற்காலியில் அமர்ந்தவண்ணம் வெற்றிலை யென்ற சாக்கிட்டுப் புகையிலையை மும்முறமாக மென்று கொண்டிருந்தார்.

பலவித துரப்பியாசங்களில் இப்புகையிலை மெல்லுதலானது பார்ப்போருக்கு வெகு விந் தையைத் தருகிறது. மூக்குப்பொடி போடு தலில் நாசிக்குள்ளும் சுவாசப் பைக்குள்ளும் சென்று கர்த்தாவிற்குக் களிப்பையும் டாக்ட ருக்குப் பணப்பையையும் அளிக்கிறது. மது பானமோ கேட்கவேண்டியதில்லை; தாராளமாய் அடிக்குடல்வரை சலசலவென்று சென்று குதூ கலத்தைக் கொடுத்தும், குடும்பத்தைக் கெடுத் தும், தனது தீவிரத்தை நிலைநாட்டுகிறது. இவ் விதமே புகையூதுதல், புலாலுண்ணல், அபின் கஞ்சா முதலிய லாகிரி வஸ்துக்களை யுபயோ கித்தல் முதலிய புருஷார்த்தங்களிலும் சாக்கு உட்சென்று சக்தியை யடக்கி ஜீவனையொடுக்கி

உபயோகித்தவனுக்கு உடல் இவ்வுலகமும் உணர்வு அவ்வுலகமுமாகச் செய்யும் அபூர்வ சாமர்த்தியத்தை யளிக்கிறது. பார்ப்போனுக்கும் 'இவைகளில் ஏதோ ஒரு விசேஷமிருக்க வேண்டும் ; இல்லாவிடில் இவர்கள் இவைகளை வியர்த்தமாய் விலை கொடுத்து உபயோகிப்பார்களா ?' என்ற மதிப்பையும் தருகிறது. ஆனால் இப்புகையிலை மெல்லுதலோ விந்தையிலும் விந்தை! இரண்டு பாக்கு, ஒரு வெற்றிலை, துளி சுண்ணாம்பு இவைகளை விதி வத்தாகப் போட்டுக்கொண்டு வெகு சிரத்தையாக ஒரு நெல்லிக்கனியளவு டப்பியிலிருந்து புகையிலைப் பிரசாதத்தை காம்பு ரூபமாகவோ, துண்டு ரூபமாகவோ அவரவர்கள் சக்திக்குத் தகுந்தபடி உள்ளங்கையிலேந்தி ஆசமனீய பூர்வமாய் வாயிற் போட்டுக்கொண்டு திக்பந்தனம் செய்கிறதாம்! அரை நாழிகை ஒரே சித்தமாக மெல்லுகிறதாம்! சக்கையை இடக் கன்னம் மாற்றி வலக் கன்னம், இது மாற்றி அது, அது மாற்றி இதுவாகச் சற்று தாலட்டு மந்திர உச்சாடனம் செய்கிறதாம். இவ்வளவு பிரயாசையுடன் இறக்கப்பட்ட (பெறப்பெற்ற) சத்து ஜலத்தை (பலனை) விழுங்கினாலும் (கிரகித்துக்கொண்டாலும்) தேவலையே ! அதைத் துளிகூட உட்செல்லவிடாமல் இந்திர நீலப் பற்கள் நடுவில் கிட்டி போட்டு நெருக்கி சாக்கடையாகிய நதி தீரத்தை யடைந்து 'சர்வம் பிரஹ்மார்ப்பணமஸ்து' என்று காரியமிழ்ந்து சக்கையையும் வெளிப்படுத்தி கபோலப் பிரக்ஷாளனம் செய்துகொண்டு உபஸ்தானத்துடன் இந்த சிவபத்ர ஜபத்தை ஒருவாறு முடித்துக்கொள்கிறதாம். 10 நிமிஷத்திற்குள் புனரபி ஜபம் ஆரம்பிக்கிறதாம். இது என்ன விபரீதப் பழக்கம் ! உபயோகிப்போனுக்கு ஓட்டைக் கன்னமும், பார்ப்போனுக்குத் திகைத்த பார்வையும் மீதியே யொழிய வேறு ஒரு உபயோகமும் இதிலிருப்பதாகத் தெரியவில்லையே! இப்படி சிரத்தாபூர்வமாய்ச் செய்து முடிப்பதில் என்ன புண்ணியமோ, புருஷார்த்தமோ ! நம் ஜடபுத்திக்கு எட்டவில்லையே யொழிய இதில் ஏதாவது ஆன்ம சக்தியை வளர்க்கும் ஏதோ ஒரு ரகசியமிருந்துதான் தீரவேண்டும். இல்லாமலா, பாலக்காட்டுப் புகையிலை யென்றும், சிவகிரிப் புகையிலை யென்றும், வாசனைப் புகையிலை யென்றும் எங்கும் முழங்கிப் படாத பாடுபடுகிறது !

இப்பரம ரகசியத்தை இளம் வயதிலேயே 'குருவற்ற கல்வி'யாக அறிந்துகொண்ட மகானுபாவர்களில் நம் ராவ்ஜியும் ஒருவர். பாக்கு சொத்தையாயிருந்தாலும் சரி, வெற்றிலை சாகாயிருந்தாலும் சரி, சுண்ணாம்புக்குச் சுவற்றை நக்கினாலும் சரி, எப்படியோ சமாளித்துக்கொண்டு இப்பாழும் புகையிலையை மெல்ல ஒரு வியாஜம் தேடிக்கொண்டுவிடுவார்; நன்றாய் மென்றும் விடுவார். ஆனால் எழுந்து போய் எச்சிலைத் துப்பிவர மட்டும் சோம்பல். சாய்ந்த விடத்திலிருந்தே சுற்றுப்புற முழுதும் துப்பி செம்மண் கறையாக்கிவிடுவார். மனைவி ராதாபாய் வந்து பார்த்து 'இது என்ன அலங்கோலம்! பட்டுப்போல் சாணம் தெளித்துக் கூட்டிக் கோலமிட்டிருக்கும் வாசல் முழுதும் அல்லாப் பண்டிகை மாதிரி இப்படியா கோடு கோடாய்த் துப்புவது ! எழுந்துபோய் அந்த மூலையிலிருக்கும் குப்பைத் தொட்டியில் துப்பக்கூடாதோ ?' என்று சண்டை பிடித்தால், 'என்னமோ யோசித்துக்கொண்டு மறதியாகத் துப்பிவிட்டேன். கொஞ்சம் மண்ணைப் போட்டு விடு, சரியாய்ப் போய்விடும் ! இதெல்லாமா ஒருவன் சொல்லித் தருவான்? வீட்டிலிருந்தாலும்கூட இந்த இரைச்சல் தானா ? நான் என்ன பச்சைக் குழந்தையா ? எனக்கு இருப்பிடம் விட்டு எழுந்திருக்காது துப்பத் தெரியாதா ? இதோ பார் !' என்று மூன்று கஜ தூரத்திலிருக்கும் குப்பை மேட்டில் கனாக

விழும்படி வெகு கூராகப் 'புசுக்' என்று அள வாகத் துப்பிக் காண்பிப்பார். இந்த லாகவத் தில் மார்பு மேலாவது இரண்டொரு துளி விழுமேயொழிய நடுவழியில் ஒரு சிறிதுங் கூடச் சிதறுவது கிடையாது. தொட்டிற் பழக்கமா, இலேசா! ராதாபாய் இதற்கு என்ன சொல்வதற்கிருக்கிறது? 'கம்' என்று வாயை மூடிக்கொண்டு உள்ளே போய் விடு வாள்.

இத்தகைய சம்பிரம சாமர்த்தியத்துடன் தாம்பூலதாரண மகோர்ச்சவத்தை விமரிசையாய் நடத்தியவாறு ராவ்ஜிவாள் நாற்காலியில் சாய்ந்துகொண்டிருக்கும் தருவாயில் ஐரோப் பிய உடையணிந்த ஒருவர் இடக்கையில் சிறு தூக்குப் பெட்டி (Attache Case) யுடன் அங்கு தோன்றி "குட் மார்ணிங் ஸார்" என்று தலையிலிருக்கும் தொப்பியை வலக்கையால் அரையங்குல உயரம் தூக்கித்தாழ்த்தி நின்றார். அன்றையதினம் பூனாவில் நடக்க விருக்கும் குதிரைப்பந்தயத்தில் 'டோரியா' என்னும் குதிரை அகஸ்மாத்தாய் அதிருஷ்டவசத்தால் முதலாக ஜயித்துவிடும் பட்சத்தில் தனக்குக் கிடைக்கவிருக்கும் ஆயிரக்கணக்கான பண வரும்படியை எவ்விதம் செலவழிப்பது (அப் போதுகூட சேர்த்து வைக்கும் பாபத்துஎன் பது கிடையாது) என்ற மனோராஜியிலாழ்ந் திருந்த ராயர் திடுக்கிட்டெழுந்து "Good morning Sir, What is the matter? Kindly take that seat" என்று ஒரு நாற் காலியைக் காண்பித்தார். 'Thank you' என்று ஆசனத்திலமர்ந்து சட்டைப் பையிலிருந்து ஒரு விசிடிங் கார்டை எடுத்துக் கொடுத்தார் வந்தவர். அதில் 'பிபீலிகா மேனன், லைப் அஷ்யூரன்ஸ் ஏஜண்டு' என்று வரைந்திருந்தது. 'இது விஷயமாகத் தங்களைக்கண்டு பேசவந் துளேன்; சற்று சாவகாசந்தானே' என்றார் மேனன். தாட்சணிய சுபாவ மிகுந்துள்ள ராயர், 'ஆம், சாவகாசந்தான்' என்று சொல்லி வார்த்தையை வளர்த்துக்கொள்வதா, அல்லது 'கொஞ்சம் அவசரவேலையிருக்கிறது, பிறகு வாருங்கள்' என்று சொல்வதா; 'ஆம்' என்றால் விச்ராந்தியாய் மௌனத்தை அவலம்பித்து மனக்கோட்டை கட்டுவதற்கில்லாமல் 'நொய், நொய்' என்று பேச்சு வளர்ந்துவிடுமே; 'இல்லை' என்றால் சுத்த அபத்தமான பொய்யாகுமே; இந்த தர்ம சங்கடத்திற்கு என்ன செய்யலாம்?' என்று சற்று சஞ்சலப்படலானார். 'சிறிது நேரத்திற்கெல்லாம் குழந்தைகள் நம்மிடம் வந்து ஹூட்டி கட்டியிழுக்கும், அதற்காள வதைவிட, சமையலாகும் வரை பேசிப் பொழுது போக்குவதே உத்தமமென்று நிச்ச யித்து, 'ஆம், சற்று சாவகாசந்தான்; என்ன விசேஷம், வேணுமென்றால் வெற்றிலை போட் டுக்கொள்கிறதுதானே' என்றார். தனது இடுக் கண் நிறைந்த தொழிலில் இவ்வளவு சுமு கத்தை யொருநாளும் கண்டிராத மேனனுக்கு உள்ளம் குளிர்ந்து விட்டது. வெற்றிலைப் பழக்கமே சற்று மறியாத அவர் ராவ்ஜியின் முகதாட்சணியத்திற்காக 'அதற்கென்ன, ஆகா! போட்டுக் கொள்கிறேன்' என்றார். உடனே 'இந்தா! சுந்தரீ! இந்தத்தட்டில் அம்மாவைக் கேட்டு வெத்தலை பாக்கு வாங்கிக்கொண்டுவா; சமத்தோயில்லியோ!' என்று ராயர் நாலு வய துள்ள தனது கடைப்பெண்ணிடம் சொன் னார். தட்டுத் திரும்பிவந்ததும் மேனன் அதை வாங்கிக்கொண்டு, முன்னால காப்பேஜ் (Cab-bage) கீரை ஸ்தானத்தில் நாலைந்து வெற்றிலை யைச் சுருட்டி வாயிலடைத்துக் கொண்டார்; பிறகு மூன்று முழுப் பாக்குகளாகிற டோஸ்டு (Toast) துண்டங்களை யெடுத்து சுண்ணாம் பாகிற வெண்ணெயில் தோய்த்துக் கடைவாயி லிடுக்கிக் கொண்டார். இது அவர்கள் ஊர் சம் பிரதாய மென்று வியந்து ராயர் தானும் கொஞ்சம் வெற்றிலை போட்டுக்கொண்டு புகை

யிலே சம்படத்தைக் கையிலெடுத்து ஒன்றரை விராகனிடை அளவு பிரசாதத்தைக் கதுப்பில் அடக்கிக்கொண்டு, ‘இந்தாருங்கள்’ என்று மேனனுக்கும் நீட்டினுர். பசுபோல் மேனனும் ஒரு சிடிகை அளவு எடுத்துப் போட்டுக் கொண்டதுதான் தாமதம். கண்கள் சிவந்தன; காது அடைத்துக் கொண்டது; மார்பு படபடவென்று அடித்துக் கொண்டது.

இந்த மரண சங்கடத்தை கவனித்த ராயர் சட்டென்று எழுந்திருந்து மேனன் கையைப் பிடித்து வெளியிலிழுத்துக் கொண்டுபோய் ‘துப்பும்! துப்பும்!’ என்று வற்புறுத்தித்துப்பச் செய்து, மறுபடியும் நாற்காலியிலமரவைத்து ஒரு டம்ளர் ஜலத்தைப் பருகச்செய்தார். மேனனுக்கு யதாப்பிரகாரம் பிரக்ஞைவந்து சமாளித்துக் கொள்வதற்கு அரைமணிநேரமாயிற்று. ‘ஏனய்யா பழக்கமில்லாத காரியத்தைச் செய்தீர்! வேண்டாமென்று சொல்லிவிடக் கூடாதோ’ என்ருர் ராயர். வந்தவர்களைச் சிற்றுண்டிக்கு அழைப்பது, டீ,காப்பி பருக அழைப்பதும் போல் இதுவும் ஒரு பழக்கமென்றும், வேண்டாமென்ருல் அவமரியாதையாகும் என்றும் வெற்றிலை போட்டுக்கொள்ளச் சம்மதித்ததாயும், புகையிலை இவ்வளவு கூற்று செய்யும் என்று தனக்குத் தெரியாதென்றும் மேனன் விவரித்ததன் பேரில், சற்று பொறுத்து கீழே கண்ட சம்பாஷணை இருவருக்கும் ஆரம்பமாயிற்று:—

மேனன் :—தங்களுக்கு கலியாணமாயிருக்கிறது என்றே எண்ணுகிறேன்.

ராயர்:—(இதேதடா ! இந்தக் கால்கட்டு உபத்திரவத்தை ஞாபகப்படுத்தவா இவன் இங்கு வந்தான், என்று தனக்குள் சொல்லிக் கொண்டு) ஆகா! ஆயிருக்கிறது.

மேனன்:—அப்போது, குஞ்சு குழந்தைகள் இருக்கிறதென்றே ஊகிக்கிறேன்.

ராயர்:—குழந்தைகள் என்ருல் கிள்ளுக்கீரையென்று எண்ணுகிறீரோ. ‘நான் தோனறட்டுமா’ என்று நம்மை முன்னுடி ஒரு வார்த்தை கேட்கிறதுகளா ? நம் இஷ்ட சம்மத சௌகரியங்களை அனுசரித்தா பிறக்கிறதுகள் அபத்தங்கள்! பிறக்குமளவிலேயே சுயம்பிராஜாபத்தியம்! இந்தவிதமாய் என்னை முன் எச்சரிக்கை செய்யாமலே தோன்றிய நால்வர் எனக்கிருக்கிருர்கள். மேலே!

மேனன்:—மரணமென்பது இவ்வுலகில் வெகு சகஜமென்பது தாங்களறிந்த விஷயந்தான்.

ராயர்: — ஆகா! நன்ருய் அறிவேன். ஒரு வேளை மறந்திருந்தாலும் நீர்தான் அரைநாழிகைக்கு முன் படுத்திய பாட்டில் நன்ருய் ஞாபகப்படுத்திவிட்டீரே! நேற்றுகூட டிராம் விட்டு இறங்கும்போது வெகு சமீபத்தில் ஒரு மோட்டார் ஓடி மேலே ஏறத் தெரிந்தது! மரணமென்ருல் பயப்பட என்ன இருக்கிறது? புனர் ஜன்ம ஆரம்பந்தானே! இரண்டுங் கெட்டான் பிழைப்பில்லாமல் கோடீசுவரனுய் மறு பிறப்பு எடுப்பதற்கு வெகு சாதகமல்லவா இந்த மரணம். இல்லை, ஒரு மோட்டார் ஓட்டியாகவாவது பிறந்து, நேற்று என்னை பயமுறுத்திய டிரைவரைப் பழிக்குப்பழி நடுங்கடித்தாலும் போகிறது! இது என்ன பிரமாதம்?

மேனன்:—(இந்த முற்றிய வேதாந்தத்தை உடைக்க யாது வழியென்று சற்று யோசித்து) நீங்கள் சொல்வது சரிதான், உங்களைப் பொருத்த மட்டில் மரணபயமின்றி நீங்கள் இருப்பதை நான் மெத்த சிலாகிக்கிறேன். ஆனல், அப்படி நேர்ந்து விடில் தங்களைத் தற்போது அண்டியிருக்கும் மனைவி மக்களின் கதியைப்பற்றி யோசிக்க வேண்டுமல்லவா. உங்களுக்குப் பிறகு அவர்கள் என்ன செய்வார்கள்?

ராயர்:—என்ன செய்வார்களா? என்ன செய்வார்கள்! மனைவிபாட்டில் இருக்கிறதைச் சுற்றிக்கொண்டு தன் பிறந்தகம் செல்கிறுள். குழந்தைகள் பெரிதானல் தங்களைத் தாங்களே பார்த்துக்கொள்கிறதுகள். என்னைப்பற்றி யார் கவலை யெடுத்துக் கொண்டார்கள்? தகப்பனர் மூத்தபிள்ளைக்குச் சொத்துச்சேர்ப்பதிலும், தாயார் பெண்களுக்குச் செய்வதிலும் சகல சொத்தையும் ஒளித்து என்னை அனுதையாய் விட்டார்களே! நான் என்ன நசுங்கியா போய்விட்டேன்? அதுபோலவே என் குழந்தைகளும் இருக்கட்டுமே! தகப்பன் நாலு காசை வைத்துப்போயிருக்கிறுன் என்கிற தெம்பில் வளர்ந்து, இரண்டு நாளில் துடைத்துவிட்டு நிற்பதைவிட சுயமாகச் சம்பாதிப்பதே மேலல்லவா? அதற்காகத்தானே சட்ட பூர்வமாகக் கூட சுயார்ஜித சொத்திற்கு பூர்வார்ஜித சனியன் போலல்லாமல், இஷ்டானுசார வினியோக மென்று ஏற்பட்டிருக்கிறது.

மேனன்:—(இந்த வழி சென்ருல் பிரயோஜனமில்லையென வேறுவிதமாகப் பேச்சைத் திருப்பலானுர்.) சரி! நீங்கள் உங்கள் மணரத்திற்குப் பிறகு மனைவி மக்கள் விஷயத்தில் அவ்வளவு பாராமுகம் பாராட்டுவதால் மாணமென்பதை விட்டுவிடுவோம். உயிருடனிருக்கிறதாகவே வைத்துக் கொள்வோம்.

ராயர்:—(குறுக்கே) வைத்துக்கொள்வானேன்! அதான் கல்லுப்போல் முன்னடி உட்கார்ந்திருக்கிறேனே! வந்த அரைநாழிகைக்குள் 'மாணம்', 'மாணம்' என்று நூறு தரம் என்னைச் சாகடித்துவிட்டீர்! இவ்வளவிற்கும் நான் இன்னம் உயிருடன் தானிருக்கிறேன்; உமது தொழிலின் பெயரே 'மாணபண்டு' என்று வைத்துக் கொள்ள யார் யோசனை சொல்லிக்கொடுத்தார்களோ தெரியவில்லை! சாகுருவி மாதிரி!

மேனன்:—கோபித்துக் கொள்ளவேண்டாம். அசம்பாவிதமாகச்சில பெயர்கள் சம்பிரதாய பூர்வமாக வேறுன்றி விடுகின்றன. அந்த ரீதியில் தான் நானும் பேசவேண்டியவனுயிருக்கிறேன். அப்படியே குணஷ்டையாகப் பார்த்தால் ஆங்கிலத்தில் Kalapi பல்பொடியென்ருல் தமிழில் என்ன அசங்கியப் பெயராகக் தென்படுகிறது! 'கோவிந்த மந்திரம்' (Govinda Mandir) என்பது 'கோவிந்தா (நீர்) மாண்டீர்' என்றும், பாலாமிருதம் (Balamrit) என்பது பால—மிருத் (யமன்) என்றும், 'ராதாலயம் (Radhalaya) என்பது ராதா—லயம் (ஜீர்ணம்) என்றும், 'நாமகிரி' என்பது 'நமகிரி' என்றும் ஆங்கிலத்தில் வெகு அசம்பாவிதமாகப் படுகிறதே, இது தேவையா? நல்லெண்ணம் இவைகளிலெல்லாம் பிரதானமே யொழிய பெயரிலென்ன விருக்கிறது. அச்சானியமாக என்னமோ சொன்னேன் என்று தாங்கள் வருத்தப்பட வேண்டாம். தாங்கள் நூறு வயது நிச்சயமிருப்பீர்கள். அவ்விஷயத்தை யுத்தேசித்தே நான் இப்போது சொல்வது என்னவென்ருல், தங்களுக்கு இப்போது யௌவன (வசந்த)காலம். கைநிறைந்த பொருளுடனும் கண்ணிறைந்த திடசரீரத்துடனும் மிருக்கிறீர்கள். எப்படியும் கொஞ்சநாள் கழித்து விருத்தாப்பிய (மாரி) காலம் வருவது நிச்சயம். 'தங்களைப் போன்ற மனத்தெம்புடையவர்கள் (தத்துக்கிளியல்லவா) மாரிகாலமே கிடையாது என்று அசட்டையாயிருந்து விட்டபோதிலும், வெகு பரம்பரையாக என்னைச் சேர்ந்தவர்கள் 'மாரி காலம்' சத்தியம் என்று அனுபோகத்தில் தெரிந்து கொண்டிருக்கிறுர்கள். (எறும்பல்லவா). அக்கால நிலையை யெதிர்பார்த்தே

முன் ஜாக்கிரதையாய் கோடையாகிய இப்பொழுதிலிருந்தே என் இனத்தவர்கள் தானியாதி சாமக்கிரியைகளைச் சேகரிப்பதில் வெகு ஊக்கமாயிருக்கின்றனர். தற்போது பிரகாசத்துடன் ஜொலிக்கும் தங்கள் கண்கள் வயது காலத்தில் ஒளியற்று விடலாம்; புஷ்டியுடனிருக்கும் இத்தேகம் நாடி நரம்புகள் தளர்ந்து துரும்பாகிவிடலாம். அப்போது சிசுருஷைக்கும் சிலவிற்கும் பணம் தேவையாயிருக்குமன்றோ. (சட்டைப் பையிலிருந்து பேனாவையும், கைப்பெட்டியிலிருந்து ஒரு அச்சுப் பத்திரத்தையும் வெளியிலெடுத்து வைத்துக் கொண்டு) இதோபார்த்தீர்களா ? இந்தப்பாலிஸிப் பத்திரமிருக்கிறதே ; இதுவாகப்பட்டது தங்களுக்கு வயது காலத்தில் ஆதாவளிக்கும். அதிலிருக்கும் ஷராப்படி நீங்கள் வருஷம் 100 ரூ. வீதம் பத்துவருஷங்களுக்குக் கட்டணம் செலுத்திவந்தீர்களானால் போதும். வருஷம் நூறு ரூபாய் தங்களுக்கு என்ன பிரமாதம்! மாதம் எட்டு ரூபாய் சொச்சந்தானாயிற்று, தினசரிக்கு நாலணாவாகிறது, கணக்குப்பார்ததால்! இவ்வளவு தானே. இதையெல்லாம் நாங்கள் சேர்த்து தங்கள் வயதுகாலத்தில் வட்டியுடன் வெகுமானமும் சேர்த்து வைத்திருந்து கொடுத்து தவுவோம். ஈட்டி எட்டும் மட்டும், பணம் பாதாளமட்டும், பாயுமல்லவா? ஆகையால் இத்தகைய சௌகரியங்களை யுத்தேசித்து நீங்கள் அவசியம் இப்பத்திரத்தில் கையெழுத்திடவேண்டுமென்று நான் சிநேக பாவத்தில் வற்புறுத்துகிறேன் (என்று பத்திரத்தை ராயரிட மளித்தார்.)

ராயர்:—(பத்திரத்தை வாசித்துப்பார்த்து) நீங்கள் சொல்வதெல்லாம் சரிதான். மரணத்தை யெதிர்பார்த்து, சிறுவயதிலேயே வீம்புக்காவது இறந்து உங்களாபீசுக்கு தண்டம் வைக்கலாமாவென்று எனக்குத் தோன்றுகிறது. ஆனால் தொண்ணூத்தியாறு வயதளவிருந்த தகப்பனுக்கும் 85 வயது வரை திடமாக விருந்த தாய்க்குமாகப் பிறந்த எனக்கு அற்பாயுள் எங்கிருந்து வரப்போகிறது! நானிருக்கப் போகும் இன்னும் அறுபது வருஷகாலம் கிட்டப் போகாத மரணத்தை யெதிர்பார்த்து என் உங்களாபீசுக்கு நான் கைப்பணத்தை வீணே தாரை வார்க்கவேண்டும் ? ஆகையால் அந்தக் கட்சி அத்துடன் முடிந்து விடுகிறது. நீர் பின்னால் சொன்னபடி வயது காலத்திற்காக இந்த ஏற்பாடு என்றால், நான் இப்பொழுது சிறிது சிறிதாகக் கொடுக்கப் போவதைத்தானே நீங்கள் காப்பாற்றித் திருப்பிக் கொடுக்கப் போகிறீர்கள்? உங்களிடம் அப்படிக் கொடுப்பதைவிட நானே கையில் சேகரம் செய்து வைத்துக் கொண்டால் போகிறது! அல்லது தம்படி வைக்காமல் சிலவழித்து விட்டாலும் சுகப்பட்டவரை மீதி ; 'மாவாகத்தின்றால் பணியாரமில்லை' இதுதான் தெரிந்திருக்கிறதே! 'யமன் உன் பிராணனை எப்போது கொண்டு போனாலும் சரி, நான் கைகாசைத் தற்போது கொண்டு போகிறேன்' என்கிறீரோ! சரிதான், இந்தயோசனை என்னிடம் பலிக்காது. அனித்தியத்திலிருக்கும் சுவாரசியம் நிரந்தரத்தில் ஏது?

(இந்தகட்டத்தில் ராயர் நிமிர்ந்து உட்கார்ந்து எச்சிலைத் துப்பியிருக்கிறார் பாருக்கள்! சரியாய் அரையடி நீளமா! அம்மம்மா! அபாரம்! அபாரம்!!)

"நீர் சொல்வதுபோல் என் ஆயுள் வளர வளரத்தான் உங்கள் ஆபீசுக்கு நன்மையாதலால் உங்களைப் பொறுத்தமட்டில் அதில் அச்சானியமென்றும் நீங்கள் கோறவில்லை யென்

பது வாஸ்தவந்தான். ஆனால், 'இருந்தால் அரைப்பொன், இறந்தால் ஆயிரம், பொன்' என்ற வசை மொழிக்காளாகி என் தீர்க்காயுளை வேண்டாதவர் சிலர் மணி மந்திர ஔஷதாதி சிபார்சுகளுடன் யமனை என்னிடமனுப்பவும், சுயகாரியப் புலிகளாக நீங்கள் அந்த யமனை என்கிட்டே அணுகவிட்டாது மல்யுத்தம் புரியவும், ஒருவேளை காரியம் மிஞ்சிவிட்டால் 'நாங்கள் ஒப்பந்தப் பணத்தைக் கொடுக்க ஜவாப்தாரியல்ல' என்று சொல் யுத்தம் புறியவும், கிடைக்கப் போகிறதாக விருக்கும் ஆயிரத்திற்காக கையிருப்பிலிருக்கும் ஐநூறைக் கணப்போதில் என்னினத்தவர் துலைக்கவும், ஆகிய இவ்வித சள்ளைகளுக்கு நான் இடம் ஒரு போதும் கொடேன்! (இதற்குள் உள்ளே தாளிதம் செய்யும் கமறல் மூக்கிலேறவும், குடும்பச் சேர்மனாகிய ராதாபாய் 'நாழிகை மீறிவிட்டது' என்பதை வெண்கலப்பானையாகிய மணியை அகப்பையால் இரண்டடி அடித்துக்காட்டவே, சமையலாகி விட்டதாகத் தெரிந்து கொண்ட ராயர் வாள்) "சரி! 'இருந்து சாதித்ததை விட இறந்து குடும்பக்கவலை நீக்கினான்' என்ற பிற்காலக் கித்தாப்பு (Posthumus glory) எனக்கு வேண்டியதில்லை! நாழிகையாகிவிட்டது ; மன்னிக்கவேண்டும்" என்று தீர்மானம் வைத்தார். காரியம் சித்திக்காமல் சிதறி விட்டதைக் கண்ட மேனன் சட்டென்று ஆசனம் விட்டெழுந்து:—'சரி! மாரிகாலத்திலும் மரணத்திற்குப் பின்னும் தங்களுக்கும் தங்கள் குடும்பத்திற்கும் ஏற்படக் கூடிய சௌகரியங்களைப் பலவிதத்தில் தங்களுக்கு எடுத்துக் காட்டியும் செவிடன் காதிலூதிய சங்காகப் போகிவிட்டதைப்பற்றி வருந்துகிறேன். எவ்வளவு சொல்லியும் கோட்டில் கையெழுத்திட மறுத்து விட்டீர்கள். சொல்வதைச் சொல்லியாய்விட்டது, மாரிகாலம் வருங்கால் வாரமலெங்கு போகிறது) அப்போது தெரிகிறது தங்கள் பாடு! அப்போது எங்களிடம் பிச்சை கேழ்க்கவரும் போது பார்த்துக்கொள்கிறேன். அப்போது பஞ்சைப் பாட்டு பாடும் போது ஒருமணி நெல்கூட கொடுக்காமல் உம்மை உபவாசமிருக்கச் செய்து வேடிக்கை பார்த்தால் போகிறது! ஆனைக்கொருகாலம், பூனைக்கொருகாலம்!' என்று போய்வர எழுந்தார். ஆனால் நம் ராயர்வாள் மனது குதிரைப் பந்தயத்தில் லயித்துப் போயிருந்ததினால் மேனன் தன்னை வலுவில் தேடிவந்து தகரார் செய்தது மன்றியில் திண்ணக்கமும் பேசுவதைப்பற்றி கோபங்கொள்ள இயலாமற் போய்விட்டது. "ஐயா மேனன்வாள்! பட்டிணியிருப்பதின் மகத்துவத்தை அவ்வளவு கேவலமாக எண்ண வேண்டாம். அதனை ரிஷிகளும் மகான்களும் சிலாகித் தெழுதியிருப்பதை அறிய உமக்கேது அவ்வளவு கிராஹ்ய சக்தி! மாரிகாலம் சம்பவிக்கலாம்! எல்லாம் வல்லவனென்ற ஈசன் ஏன் இப்படி ஒரு காலத்தை ஏற்படுத்தித் தன் பெயரைக் கெடுத்துக் கொள்ள வேண்டு மென்பதுதான் எனக்கு விளங்க வில்லை. முன் யோசனையின்றி சிறு பிள்ளைத்தன்மாக ஏதோ ஏற்படுத்திவிட்டார் பாவம்! தற்போது தன்னையும் மிஞ்சியதாய் விட்டது, விழிக்கிறார். கிடக்கிறது, அவர் வயிற்றிற் பிறந்த நாமே அவரை மன்னிக்காமல் விட்டால் பிறகு அவருக்குயார்தான் கதி! இவ்வித அசந்தர்ப்ப மாரிகாலத்தில் பசிக்கொடுமையால் நான் உம்மை அணுகவும் நேரிடலாம். அதைப்பற்றி இப்போதென்ன! பிறகு பார்த்துக் கொள்வோம். நீர் இப்போது ஒரே கல் நெஞ்சாக சண்டித்தனம் பேசுகிறீர். அப்போது என்னைப் பார்த்து உமது மனம்கூட இளகிவிடலாம். அதைப்பற்றி இப்போது யோசிப்பானேன். இருக்கிறவரை மனஉற்சாகத்துடன் காலத்தைத் தள்ளினால் போதும். இன்று சாயங்காலமோ சங்கித சபையில் சூரிய

காந்தி பாய் கச்சேரி. ஸினிமாவிலோ 'ராபின் ஹுட்' டக்ளஸ் பேர்பாங்ஸ் நடிக்கிறான்! எதற்குப் போவது என்று விளங்கவில்லை, உமது யோசனை எப்படி?" என்று ராயர் கேட்டவளவில் இவ்வித சம்பந்தா சம்பந்த மற்ற பேச்சினாலோ, அல்லது உட்சென்றிருக் கும் கால் ஔன்ஸ் புகையிலை ரசத்தினாலோ, நன்கு புலப்படவில்லை, சட்டென்று மேனன் இருப்பிடம் விட்டு முகச் சுளிப்புடன் எழுந் திருந்து போய்விட்டார்.

*　　*　　*　　*

இச்சமபவத்திற்குப் பிறகு இருபது வருஷ காலம் சென்று விட்டது என்பதை மேற் கண்ட நட்சத்திரப் புள்ளிகளால் வாசகர்கள் அறியவும்; விவரிக்க தேசாலமில்லை, வந்தது மாரிகால்மும். நமது தத்துக்கிளி ராவ்ஜியின் விகட விசித்திர வேதாந்த விமரிசைகளெல்லாம் மாயமாய்ப் பறந்தோடிவிட்டது. அப்போது அவர்பட்ட பாட்டைபற்றி விவரித்துக் கதை யை நாம் முடிக்க யத்தனிக்கும் முன், ஏற்கன வே ஈசாப் என்னும் கவிசிரேஷ்டர் நம் உத்தர வில்லாது ராயரை யணுகி விருத்தாந்தங்களை விவரித்தறிந்துகொண்ட பாவனையில் கதைக்கு முடிவைவெளிப்படுத்தியிருப்பது ஞாபகத்திற்கு வருவதால், சுயமாக யாதொரு சிரமமுமெடுக் காமல் அதையே இங்கு வரைந்து விடுவோம்.

"ஒரு தத்துக்கிளியானது கோடை முழு தும் தத்திக் குதித்து ஆனந்தமாகப் பொழுது போக்கிவிட்டு, மாரிகாலம் வந்ததும், பசிக் கொடுமை தாங்காது எறும்புகளையணுகி அவை கள் சேர்த்துவைத்திருக்கும் தானியராசிகளில் தனக்கு ஒரு சிறிதாவது கொடுத்து உதவும் படி மன்றாடி வேண்டியது. அதற்கு அற்ப புத்தியுடைய எறும்புகள் பெருந்தன்மை சிறிது மின்றி 'ஏ, தத்துக்கிளியே! கோடை முழுதும் குதித்துப் பொழுது போக்கிய நீ அன்னாள் முழுதும் சிரமம் பாராமல் சேமிப்பதிலேயே சிரத்தையுடனிருந்த எங்களை உதவிகேட்பது என்ன மதியீனம்! மாரிகாலம் வருமே என்ற ஞாபகமில்லாமல் அப்போது புத்தி எங்கே போயிற்று? நாங்கள் உன்னைப் போலுள்ள சோம்பேரிகளுக்கு உதவவா சேமித்துள் ளோம்? ஒரு மணி தானியம் கூடக்கிடையாது! போகலாம்! என்றதுகளாம். வயிற்வளக்க வேறு வழியில்லாது தத்துக்கிளி உயிர் துறந்தது" என முடித்துள்ளார். ஆனால் வீண் அவதூறாக ஈசாப் எழுதியுள்ளார் என்றும், நம் ராயர்வாள் கதி அவ்வளவு கேவலத்திற்கு வந்துவிட வில்லை என்றும், 'டௌட்' தொழில் புறிவதிலும் 'மாமா' வேலைபார்ப்பதி லுமாக, சகலரும் 'அண்ணு' என்று அன்புட னழைக்கும் அபூர்வ பிரசித்தத்துடன் தன் வாழ்நாளை ஒருகுறையு மின்றிக் கழித்து வருவ தாக வதந்தி! ராயர்வாளின் சமயோசித சாமர்த்தியம் நமக்கு நேரே பரிச்சய முள்ள படியால் 'இது பொய்யல்ல, வாஸ்தவமே' என நாம் உறுதிகூறி, 'முற்றிற்று' என்னும் அழகிய பதத்தைப் பதிப்பிக்க அச்சுக் கூட்டத்தாருக்கு அனுமதி யளிக்கின்றோம்.

'ஹ்ராம், ஹ்ரீம், ஹ்ரோம்' தத்ஸத்.

---

# சிந்தாமணி சந்தாதாருக்கு ஓர் முக்கிய அறிவிப்பு.

(மானேஜர்.)

சர்வேசனது திருவருளை முன்னிட்டும், பொது ஜன கல்விப்பெருக்கைக் கடைகாலாகக் கொண்டு, ஸ்திரீசமூக முன்னேற்றத்தையே ஆதர்சமாகக் கொண்டுமுள்ள நம் சிந்தாமணியானது 1924 ஆகஸ்டு மாதத்திலாரம்பிக்கப் பெற்று, சுயநலம் சிறிதும் கருதாது நடத்தப் பெற்று, பாலாரிஷ்டத்தடையூறுகளை யொருவாறு சமாளித்துக்கொண்டவாறு நடை பெற்று, இவ்விதழிலிருந்து ஐந்தாம் ஆண்டை ஆரம்பிக்கிறது. தன்னிடம் அமையப்பெற்றுள்ள நவரசந் ததும்பும் வியாசங்களாலும் விடுகதைகளாலும், பணத்தைப் பரிந்துதவத் தயங்கும் தாராள சிந்தையரின் மனதையும் தனதாகக் கவர்ந்து, சகலரும் சிலாகிக்கும் வழியில் இதுவரை நடந்துவந்திருப்பதென்பதும், இனிமேலும் இவ் வாரம்ப ஊக்கம் சிறிதும் குன்றாது, சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பொழிவதற் கொப்பப் பதின் மடங்கு சுவாரசியத்துடன், நாளுக்கு நாள் இன்னம் பல சீர்திருத்தங்களுடன் வெளிவந்துலவி, காந்தமெனக் கண்டோர் மனதைக் கைவசப்படுத்துவது திண்ணம் எனவும் நாம் சொல்லவேண்டியதில்லை. இனி, பத்திரிகை நிர்வாக விஷயமாகச் சில விவரங்களை நமது நேயர்களுக்கு அறிவிப்பது அத்தியாவசியமாயிருப்பது பற்றி, வாசகர்கள் தயைசெய்து கீழேகண்ட குறிப்புகளை கவனித்தறிந்து கொண்டு, மேற்சொன்ன நிர்வாக விஷயத்தில் சகல விதத்திலும் நம்முடன் ஒத்துழைத்து உதவிபுரியுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

ஒரு பத்திரிகை பிரசித்தி பெறவேண்டுமானால் (1) நல்ல காகிதத்தில் விமரிசையாக அச்சிடப்பெற்று மனதைக் கவரும் அந்தமுள்ள பார்வையாகிய உடல் (2) விவரத்தைப் பின்னும் பதின்மடங்கு விஸ்தரிக்கும் சமயோசித சித்திரப் படங்களாகிய பொருள் (அர்த்தம்—விவரம், விஸ்தாரம்), (3) நவச்சுவையும் இனிது பொருந்தி நறுமணம் வீசும் நிகரற்ற விஷயத் தொடுப்பாகிற 'ஆவி' ஆகிய இம்மூன்று அமிசங்களும் அமையப் பெற்றாலல்லாது சாத்தியமல்ல. நமது சிந்தாமணியானது இம் மூன்றிலும் இன்றியமையாததும், சிரம சாத்தியமுமான ஆவியாகிய சுவையைப் பிரப்புரிமையாகக் கொண்டு விளங்கிவருகிறது என்பது வெளிப்படை. இந்த விஷயத்தொகுப்பானது பத்திராதிபரின் பாண்டித்தியத்தையும் பரிசோதனா சக்தியையுமே ஆதாரமாகக் கொண்டுள்ளதாதலால் இது விஷயமாக நம் சிந்தாமணிக்கு யாதொரு குறையுமில்லை; பசையுள்ள (திரவியப்பசை, கல்விப்பசை) புருஷசிம்மம் பின்னின்று பேதைப்பெண் பெயர் புனைந்து வாழிபாடி சூத்திரதாரியாக ஆட்டுவிப்பதும் அனுவசியமே. மற்ற இரண்டு அமிசங்களாகிய பார்வை (உடல்) சித்திரப்பட விமரிசனம் (பொருள்) இவ்விரண்டும் பணச்சிலவைப் பொருத்த விஷயமென்பது சொல்ல வேண்டியதில்லை. அதிகப்பக்கங்கள் சேர்ப்பதற்கோ, நல்ல காகிதத்தில் அச்சிடுவதற்கோ, சித்திரசமேதமாகச் சிறுகதையைச் சிறப்பிப்பதற்கோ அந்த பரதைப் பணமல்லவோ தேவையாயிருக்கிறது! இல்லாமல் முடியவில்லையே! இருப்பினும் 'விடா முயற்சி விருப்பநிகழ்ச்சி' என்ற சித்தாந்தத்துடனும், பல பிரமுகரின் ஆலோசனையின் பேரிலும், ஒரு சில அபிமானிகள் பேருதவியைக் கொண்டும் இவ்வைந்தாம் ஆண்டு முதல் சிந்தாமணியை உயர்தரக் காகிதத்திலச்

சிட்டு விஷயத் தொகுப்பிற் கியைந்த வனப்புற்ற தோற்றத்துடன் பிரசுரிக்க முன்வந்துள்ளோம். சித்திரப் படங்களுக்கும் இரண்டாம் இதழ்முதல் ஏற்பாடு செய்துளோம். வாசிப்பதற்கு வெகுவாகப் பக்கங்கள் ஏற்கனவே வெளிவந்து கொண்டிருப்பதால் மேன்மேலும் பக்கங்களை அதிகப்படுத்துதலைவிட மேற்சொன்ன இவிரண்டு சீர் திருத்தங்களும் நமது நேயர்களால் ஆமோதிக்கப் படுமென்று எதிர் பார்க்கிறோம். தற்போது செய்துள்ள இவ்விரண்டு சீர் திருத்தங்களினால் ஒன்றிற்கு மூன்று மடங்கு செலவு அதிகமாகப் பெருகியிருப்பினும், சந்தாவை உயர்த்தாது பழய ரீதிப்படியே அமைத்துள்ளோம். எப்படியாவது, மனம் குளிரும் மணத்துடன் கண்நிறைந்தக் காட்சியும், கைநிறைந்த கச்சிதமும் அமையப்பெற்று நம் சிந்தாமணி தங்கு தடையன்றி எங்கு மூலவிக் கல்வியையும் கலா சக்தியையும் பெருகச்செய்து ஜன முன்னேற்றத்தை ஜரூர்செய்தால் அதுவே போதுமானது. ஆகையால் நம் நேயர்களை, அபிமானிகள், சந்தாதார், சந்தாபாக்கிதார், புதிய சந்தாதார் என நால்வகையினராகப் பிரித்து அவரவர்களுக்குச் சில விஷயங்களை வேண்டுகோள் மூலமாய் அறிவிக்கிறோம்:—

அபிமானிகளுக்கு :—

உங்களுடைய ஸ்திரீ வித்தியாபிமானத்திற்கும் தாராள சிந்தைக்கும் நமது மனமார்ந்த வந்தனத்தைத் தெரிவித்து இதுபோலவே இன்னம் பல சினேகிதர்களை அபிமானிகளாக்கிப் பேருதவி புரிய வேண்டுகிறோம்.

சந்தாதாருக்கு :—

இந்த நான்கு வருஷங்களாக நீங்கள் உற்சாகத்துடன் பரிபூரணமாக முன் பணம் செலுத்திப் புரிந்த என்றும் மறப்பதற்கரிய உபகாரத்திற்கு ஆழ் நன்றி செலுத்தி, இது போலவே இவ்வைந்தாம் ஆண்டிலும் உதவி செய்வதுமல்லாமல் இதர சந்தா சேர்ப்பதிலும் ஊக்கமெடுத்துத் தங்களாலியன்றவரை தயை புரியக் கேட்டுக்கொள்கிறோம்.

சந்தா பாக்கியுள்ளோருக்கு :—

இந்த நான்கு வருஷமாகச் சிந்தாமணியின் சுவையை யுட்கொண்டு சிலாகித்த நீங்கள் தற்போது செய்யப்பட்டிருக்கும் சீர்திருத்தங்களையும் மனதில் வாங்கி இருதயம் பூரித்து, சந்தா பாக்கி பூராவையும் செலுத்துவதுடன் நில்லாமல், ஐந்தாம் ஆண்டின் சந்தாவையும் முன் பணமாக அவசியம் அனுப்பித் தந்து கைம்மாறு புரியப் பிரார்த்திக்கிறோம். யதாப்பிரகாரம்போல் ஆலசியமாக இருந்துவிடல் கூடாது! முதலிலேயே வேண்டாமென்று சொல்லாது அனுப்பும் பிரதிகளை திருப்பாமற் பெற்றுக்கொண்டு வி. பி. யனுப்புமளவில் திருப்பிவிட்டு வீண் செலவிற்கு வட்டி விதிப்பதும், 'நான் இவ்வருஷம் அனுப்பச் சொல்லவில்லையே; நீங்களா என் அனுப்பினீர்கள்?' என்றும், 'இனிமேல் நிறுத்திக்கொள்ளலாம்' என்று அருள் பாலிப்பதுமாகிய ஏனைய அசம்பாவிதங்கள் அதிகப்பட்ட பொருட் செலவைப் பாராது நடத்தப்பெற்றுவரும் இவ்வருஷத்திலும் ஏற்படாமல் அறவே யகற்றி நம்முடன் தாராள மனதுடன் நிர்வாக விஷயத்தில் ஒத்துழைக்கத் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

புதிய சந்தாதாருக்கு :—

சஞ்சிகையை வி. பி. மூலம் அனுப்பச் சொல்லி உங்களுக்கு இரண்டணு அதிகச் செலவையும் எங்களுக்கு அதிக வேலையையும் விருத்தியாக்குவதைவிட மணியார்டர் மூலம் சந்தாவையும் கூபனிலேயே ஆர்டர் விவரத்தை

யும் அனுப்புவார்களானல் மிகுந்த உபகாரமா யிருக்குமென அறிவித்துக்கொள்கிறோம்.

போதுவாக :—

ஒவ்வொரு ஆங்கில மாதக் கடைத் தேதியிலும் பிரசுரமாகவேண்டிய நம் பத்திரிகை பல காரணங்களால் சற்று தாமதப்பட்டு, தற்போது மறு ஆங்கில மாத இருபது தேதிக்கு வந்துவிட்டது என்பது வாஸ்தவமும் விசனிக்கத்தக்கதுமே. இருப்பினும் எதிர்பாராத பல அசந்தர்ப்பங்களால் குறிப்பிட்ட காலத்தில் வெளியிட இயலாமற் போனது எங்கள் குற்றமல்லவென்பதை உறுதியுடன் கூறி மன்னிப்பளிக்க வேண்டுகிறோம். ஆகஸ்டு இதழ் செப்டம்பர் முதல் வாரத்தில்தான் தமக்கு கிடைக்கும் என்பதை உள் நாட்டு சந்தாதாரும், செப்டம்பர் முதல் வாரத்தில் போஸ்டு செய்யப்பட்டாலும் தங்கள் கைக்கு மூன்றும் வார மத்தியில்தான் கிடைக்குமென்பதை வெளிநாட்டு சந்தாதாரும், அச்சு விஷயம் வெகு நச்சானது பற்றி ஒரு வாரம் முன் பின்னுகப் போவதும் சகஜமென்பதைப் ெ 3லும் மறந்துவிடுகிறார்கள். சில விலாச மாறுதல் ஐடங்களைத் தவிர மற்ற எல்லோருக்கும் ஒரே நாளில் பட்சபாதமின்றிப் போஸ்டு செய்யப்படுகிறதாகையால் பத்திரிகை கைக்குக் கிடைக்காவிடில் அது எங்கள் ஆபீஸ் போஸ்டு செய்யாத குற்றமாகாதென்பதையும், மாதாமாதம் இருபது தேதிக்குள் தங்களுக்குப் பத்திரிகை கிடைக்காதவர்கள் நமக்கு உடனே தெரிவித்தால் போஸ்டாபீசில் விசாரணை செய்து எச்சரிக்கை செய்வதற்கும் கையிருப்புக் காபிகள் இடம் தரின் மறுபடியும் அனுப்பித் தருவதற்கும் அனுகூலமா யிருக்குமென்பதையும், பதிலுக்காக ஸ்டாம்பு அடக்கம் செய்திருப்பினும் கூட, ஆபீசுக்கு எழுதப்படும் ஒவ்வொரு கடிதத்திற்கும் பதில் எழுதிக்கொண்டிருப்பதென்பது இயலாத காரியமாதலால் அதற்காக பதிலெழுதத் தாமதப்படின் அசட்டையாயிருந்துவிட்டதாகக் கோபிக்கவேண்டாமென்பதையும் வினயத்துடன் வற்புறுத்தி விளம்பரப்படுத்திக் கொள்கிறோம். விலாச மாறுதலை இரண்டு வாரமுன்பாகவே விவரமாகத் தெரிவிப்பதுடன் நில்லாமல் தங்கள் பதிவு நம்பர்களையும் அவசியம் கண்டெழுதினுல் உடனே கவனிக்க அனுகூலமாயிருக்கும். உள் நாட்டிற்கு போஸ்டு செய்யப்படும் ஒவ்வொரு காபிக்கும் இவ்வைந்தாம் வருட ஆரம்பம் முதல் போஸ்டல் சர்டிபிகேட் (Certificate of Posting) வாங்கப்படுவதால் நடுவழியில் காபிகள் களவு போவதற்கு முன்போல் அவ்வளவு சந்தர்ப்பமில்லை.

ஆரம்ப சூரத்தனமாக பகட்டாக ஆரம்பிக்கப்பட்டு படிப்படியாய்ப் படுத்துக்கொண்டு விடும் பத்திரிகை நமதல்லவென்பதையும், இதே ரீதியில் வெளிவருவதற்கு நாங்கள் உத்திரவாதமா யிருக்கக்கூடிய தீவிர ஏற்பாடுகள் நிறக்கச் செய்துளோமென்பதையும் உறுதி கூறி, சகலரையும் முதலிதழ் கிடைத்ததும் மணியார்டர் மூலமாகப் புது வருட சந்தாவை முன்பாக்கியிருப்பின் அத்துடன் சேர்த்து சீக்கிரமனுப்பித் தந்து தயை பாலிக்க அன்புடனும் சலிகையுடனும் கேட்டுக்கொள்கிறோம்.

'பொங்கும் மங்களம் எங்கும் தங்குக!'

## மானேஜர் முக்கிய அறிவிப்பு.

அக்டோபர் முதல் தேதியன்று எல்லோருக்கும் அனுப்ப உத்தேசித்திருக்கிற வி. பி. கடிதத்தை திருப்பாமல் தயவுசெய்து பெற்றுக்கொண்டு உதவிபுரிய வேண்டுகிறோம்.

# CHINTHAMANI.

**A HIGH CLASS TAMIL MONTHLY.**

*(Devoted mainly to the cause of Indian Women.)*

EDITOR SISTER V. BALAMMAL.

Vol. V.] September 1928. [No. 2.


श्री शारदायै नमः ।



श्रीरामचन्द्रपरब्रह्मणे नमः

# சிந்தாமணி

## சுபோத ராம சரிதம்.

COMPOSED AND ANNOTATED BY

SISTER V. BALAMMAL

DAUGHTER OF

*Late Dr. A. R. VAIDYANATHA SASTRIAR, M. A., M. B. & C. M.*

(*All Rights reserved by the Authoress*)

### सुबोधरामचरिते

### ॥ सुन्दरकाण्डः ॥

राक्षसी त्रिजटा नाम तामाश्वास्य विदेहजाम् ।
उवाच कञ्चन स्वप्नं स्वदृष्टं मैथिलीहितम् ॥ १९ ॥

त्रिजटा नाम திரிஜடை என்ற राक्षसी ராக்ஷஸியானவள் तां அந்த विदेहजां சீதையை आश्वास्य தேற்றி स्वदृष्टं தன்னால் காணப்பட்டதும் मैथिलीहितं ஜானகிக்கு நன்மை பயப்பதாயுமுள்ள कंचन ஒரு स्वप्नं கனவை उवाच சொன்னாள் ॥ १९ ॥

दशग्रीवस्य दुर्वाक्यं राक्षसीनां च तर्जनम् ।
अपारयन्ती सोढुं सा प्राणान्मोक्तुं समुद्यता ॥ २० ॥

सा சீதையானவள் दशग्रीवस्य ராவணனுடைய दुर्वाक्यं துற்சொற்களையும் राक्षसीनां அரக்கிமாருடைய तर्जनंच அதட்டுதலையும் सोढुं சகிக்க अपारयंती முடியாதவளாக प्राणान् உயிரை मोक्तुं விடுவதற்கு समुद्यता பிரயத்தனப்பட்டாள் ॥ २० ॥

ततस्सुप्तासु सर्वासु राक्षसीष्वनिलात्मजः ।
सीतां प्रपद्य प्रोवाच शरीरं त्यक्तुमुद्यताम् ॥ २१ ॥

सर्वासु எல்லா राक्षसीषु அரக்கிகளும் सुप्तासु உறங்கியதும் ततः அச்சமயம் अनिलात्मजः ஆஞ்சனேயர் शरीरं உடலை (உயிரை) त्यक्तुं விடுவதற்கு उद्यतां முற்பட்டுள்ள सीतां சீதையை प्रपद्य நெருங்கி प्रोवाच அடியிற்கண்டவாறு உரைத்தார் ॥ २१ ॥

त्यजेदं कर्म वैदेहि रामं द्रक्ष्यसि सत्वरम् ।
दूतोऽहं रघुवीरस्य त्वां विचेतुमिहागतः ॥ २२ ॥

वैदेहि சீதாப்பிராட்டியே! इदं இந்த कर्म காரியத்தை त्यज விட்டுவிடும். सत्वरं சீக்கிரத்தில் रामं ஸ்ரீராமபிரானை द्रक्ष्यसि காண்பீர். अहं நான் त्वां உம்மை इह இவ்விடத்தில் विचेतुं தேடுதற்காக आगतः வந்துள்ள रघुवीरस्य ராகவனுடைய दूतः தூதன் (इति என்று उवाच சொன்னார்) ॥ २२ ॥

(*To be continued*)

ஸ்ரீராமஜயம்.




தமிழ் நாட்டுப் பெண்மணிகளின் முன்னேற்றத்தை முக்கிய
மாகக்கொண்டு வெளிவரும் ஓர் உயர்தர மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை.

பத்திராதிபர். சகோதரி வி. பாலம்மாள்.

மலர் V.] விபவ—புரட்டாசி. [இதழ் 2.

# மாதர் உயர்வு.

(பத்திராதிபர்.)

அல்லும் பகலும் உழைப்பவரார்? உள்ளத்
தன்பு ததும்பி எழுபவரார்?
கல்லுங்கனியக் கசிந்துருகித் தெய்வ
கற்பனை வேண்டித் தொழுபவரார்?
அன்பினுக்காகவே வாழ்பவர்யார்? அன்பில்
ஆவியும் போகத் துணிபவர்யார்?
இன்பவுரைகள் அளிப்பவரார் ? வீட்டை
இன்னகையாலொளி செய்பவரார் ?

ஸ்ரீமான் தேசிக விநாயகர்.

பெண்மக்கள் உயர்ந்தவர்களென்றும் அவர்களின் வாழ்க்கை உயரிய லட்சியங் கொண்டுள்ளதென்றும் எடுத்துரைக்குங்கால் என்ன இருந்தாலும் ஆடவனே உயர்ந்தவன் அல்லாது பெண்கள் தாழ்ந்தவர்கள்தாம் என்று சிலர் நினைக்கின்றனர். கடவுள் சிருஷ்டியில், ஆடவர் உயர்ந்தவராக நினைக்கப்படும் காரணம் யாது? தேகத்திடன், மனோவலிமை, ஓயா உழைப்பு, பொருளீட்டல் இவைகளால் ஆடவர்தாம் உயர்ந்தவரெனக் கருதக்கூடும். இவையெல்லாம் சுயநலப்பற்றுடனேயே நடத்தப் பெறுகின்றன. ஆனால் பெண்களின் ஜீவியத்தைச் சிந்திப்போமாயின் ஆடவரின் உன்னத வாழ்க்கைக்காக அவர்கள் தங்கள் வாழ்நாளை ஒப்படைக்கின்றார்கள். இவ்வொரு காரணத்தாலேயே மாதர் பெருமை மாசற விளங்குகின்றதென்பதை மறுக்கவியலுமோ.

அறிவுநூல் ஆராய்ச்சியும் சிறந்த போக்குமுள்ள ஆடவர் தங்கள் ஒப்பற்ற வாழ்வை உயர்வாக நடத்துவதில் மனையாள் என்ற ஸ்தானத்தில் ஒரு பெண்பால் அமையாதவரை ஒன்று மியலாதென்ற உண்மையை ஒப்புக் கொள்ளாமலிரார். மனிதனுடைய ஆரம்பப்

பருவமானது தாயின் மெய்யன்பாலேயே பாதுகாக்கப் படுங்கால் மனிதப் பிறவியில் மாதர் உயர்வுற்றவரென்பதில் ஆட்சேபிக்க இடமுண்டோ? ஓய்வின்றி சலிப்பின்றி முக வாட்டமின்றி அல்லும்பகலும் மனையாள் உழைக்காதவரை ஆடவன் இல்வாழ்க்கையில் இன்புற்றிருப்ப தெங்ஙனம்? காலாகாலத்தில் ஊணுறக்கங்களையும் தவிர்த்து அன்பை ஆதாரமாக்கி வாழ்பவர் பெண்களன்றோ? குடும்பம் செழிக்கவேண்டும், நற்கீர்த்திபெருக வேண்டும், நன்மக்கள் பிறக்கவேண்டும், நல்வாழ்வு வாழவேண்டும், நற்கருமம் புரியவேண்டும் என்று சதாகாலமும் கடவுளைத் தொழுது பணி செய்து துதிப்பவர்கள் பெண்மக்கள் தாம். பெண்கள் மனப்பற்றாலும் கட்டுப்பாடுகளினாலுமே இல்வாழ்க்கையில் தெய்வபக்தி செழித்து அழியாது விளங்குகின்றது.

இந்தியப் பெண்களின் உயர்வை ஆதாரமாக்கியே இந்திய சரித்திரங்கள் உயர்வுற்று விளங்குவதைக்காணின் மாதர் பெருமை பெற்றவர் என்பதை நிரூபிக்க வேறு சான்று வேண்டுமோ? சுய நலம் மறுத்து அன்பையே உள்ளத்தில் தேக்கி அன்பே உருவாக, அன்பே நோக்கமாக, அன்பே இயற்கைக் குணமாக, அன்பே மூலாதாரமாக, அன்பே பிறவிப்பயனாக, அன்பே ஆவியின் துணையாக, அன்பே கடமையாகக் கொண்டு நடப்பவரும், அவ்வன்புக்கு அவ்வன்பைச்செலுத்திய பொருளுக்கு அன்பின் ஆதாரமாகி தங்கணவனுக்கோ அல்லது தமதருங் குழவிக்கோ ஆபத்து நேரிடின் அவ்வன்பின் பிளவைத் தாங்காது உயிரை விட்டுவிடக்கூடிய உள்ளன்பைப் பெண்களிடத்தில் மட்டுமே காணலாகும். குடும்ப நிர்வாகத்திலுள்ள பல துன்பங்களையும் சகித்துப் பொருளீட்டுதல் நிமித்தம் உழைத்துத் திரும்பிய கணவனை அன்பு மொழியுடன் வரவேற்று அன்பான மொழிகளை மொழிந்து இன்பவுரைகளால் இன்னலைத் தணித்து இளைப்பாறச் செய்யும் இல்லாள் இல்லாதிருப்பாளாயின் அவ்வில்லத்திற்கு அழகும் ஒளியும் உண்டாவதெப்படி?

இயற்கையிலேயே உயர்ந்த அம்சம் பெற்று விளங்கும் மாதரின் பேரன்பினாலும் பேர்பெற்ற உழைப்பினாலும் ஆடவர் தங்கடனைச் செவ்வனே செய்து வாழ்க்கையை சீர்பெறச் செய்து கொள்ள வேண்டியிருக்குங்கால் பெண்கள் பெருமை பெற்றவர்கள் என்றுரைப்பதிலும் ஆண் பெண் என்ற இரு வகுப்பினரிலும் பெண் பிறவி உயர்ந்ததென்றும் சொல்வதில் குற்றமென்ன விருக்கிறது? பெண்ணின் உழைப்பின்றி பெண்ணின் நற்கருமமின்றி பெண் மக்களின் கூட்டுறவின்றி ஆடவன் உலகில் இல்லறவாழ்க்கையினனாக மானிடப் பெரும் பேற்றை அடைந்தவனாக வாழமுடியாது. சகோதரர்களே! தேசாபிமானிகளே! ஸ்திரீ வித்தியாபிமானிகளே! சீர்திருத்தக்காரர்களே! நம் நாட்டுப் பெண்மணிகளின் உயர்வை அறிந்து அதற்கேற்ற வழியில் அவர்கள் மேன்மேலும் விருத்தியடையக் கூடிய வழியை நாடுங்கள். அயல்நாட்டு இயல்பையும் அந்நாட்டுக் கல்விமுறைகளையும் வெளிநாட்டுச் சுதந்திர முறைகளையும் உங்கள் பெண்களிடையே வளரச்செய்யின் இந்தியாவின் பெருமைக்கும் இல்லறவாழ்க்கைக்கும் உலை வைத்ததற்கொப்பாகும் என்பதைச் சிந்தியுங்கள்

---

# பிரஹ்லாத விஜயம்.

(ஸ்ரீமான் K. நடராஜய்யர்.)

(எல்லா உரிமைகளும் ஆசிரியருடையது.)

மூன்றும் அத்தியாயம்.

“தேவர்களே! தேவராஜனே! வாருங்கள்! எல்லோரும் க்ஷேமமா? ஏது ஏக காலத்தில் எல்லோரும் சேர்ந்து வந்தீர்கள்? ஏதாவது விசேஷமுண்டா? எப்பொழுதும் சந்தோஷமா யிருக்கும் உங்கள் முகம் சந்திரனைக் கண்ட தாமரைபோல் வாடியிருக்கும் காரண மென்ன? உங்களுக்கு ஏதேனும் ஆபத்து நேரிட்டிருக்கிறதா? கவலைப்படாமல் சொல் லுங்கள்” என்று இந்திரன் முதலானோரைக் கேட்டார் பிரம்மதேவர்.

“பகவானே! தங்கள் கிருபை இருக்கும் போது எங்களுடைய க்ஷேமத்திற் கென்ன குறைவு? தங்களுடைய அனுக்கிரகத்தினால் நாங்கள் எல்லோரும் க்ஷேமமே. தங்களுடைய மருமகளும், எங்களுக்குச் சிறிய தாயாருமான திதிதேவி சென்ற (100) நூறுவருஷகாலமாகக் கர்ப்பமாக இருக்கிறாள். அவளுடைய சரீரத் திலிருந்து உண்டாகும் புகையினால் சூழப்பட்டு உலக முழுவதும் அந்தகாரமாக இருக்கிறது. பிராணிகள் முழுவதும் அந்தப் புகையின் வேகத்தைத் தாங்கமாட்டாமல் தத்தளிக் கின்றன. அந்தப் புகையினால் நாங்கள் படும் உபத்திரவம் சொல்லத்தரமன்று. தாங்கள் தான் எங்களை இந்த ஆபத்திலிருந்து காப்பாற்ற வேண்டும். நாங்கள் தங்களைச் சரணமடைந் தோம்; இனியும் தாங்கள் உபேட்சையாயிருந் தால் உலகமுழுவதும் பாழாய்ப் போவது நிச் சயம். மேலும் எங்கள் சிறிய தாயார் எங்க ளிடத்தில் மிகுந்த துவேஷமுள்ளவள். அவ ளுடைய கர்ப்பத்திலிருந்து உண்டாகப்போகும் சிசுவினால் எங்களுக்கு என்னென்ன ஆபத்துக் கள் நேரிடுமோ வென்பதுதான் எங்களுக்குப் பெரிய கவலையாக இருக்கிறது. தாங்கள் உலகத்துக்கே பிதாவானவர். சரணமடைந்த வர்களை ரட்சிக்கும் கருணாநிதி. தங்களால் சிருஷ்டிக்கப்பட்ட பிரஜைகளின் ஆபத்தைத் தங்களைத் தவிர வேறு யார் தீர்ப்பார்கள்? எங் களுக்கு வேறு யார் துணை? மூச்சுவிடக் கூட முடியாமல் பிராணிகள் திணறுகின்றன. எல்லாக் கருமங்களும் நின்று போய்விட்டன. இந்தப் பெரிய ஆபத்தை நிவர்த்தி செய்து, உலகத்துக்கு க்ஷேமம் உண்டாகும்படி தாங்கள் அனுக்கிரகம் செய்யவேண்டும்” என்று பிரார்த் தித்தான் இந்திரன்.

“தேவராஜனே! கவலைப்படவேண்டாம். உங் கள் சிறிய தாயாரின் கர்ப்பத்தைப் பற்றின ரகசியத்தைச் சொல்லுகிறேன், கேளுங்கள். ‘காசியபன் முதலான எல்லோருக்கும் மூத்த வர்களான சனகன், சனந்தனன், சனத்குமா ரன், சனத்ஸுஜாதன் என்னும் என்னுடைய புத்திரர்கள் நால்வரும் ஒன்றிலும் இச்சையில் லாதவர்களாய், எல்லாவற்றையும் துறந்த பிரம்மஞானிகளாய், ஆகாயமார்க்கமாக உலக முழுவதும் சஞ்சரித்துக்கொண்டு, ஒரு சமயம் வைகுண்டம் போய்ச் சேர்ந்தார்கள். அங்கு தான் புருஷோத்தமன்—பக்தவத்ஸலன்—உல காட்சகன்—ஸ்ரீமந் நாராயணன் ஆதிசேஷசய னத்தின் மீது, மார்பில் கௌஸ்துபமும் வன மாலையும், நான்கு திருக்கரங்களிலும் சங்கம், சக்கிரம், கதை, சார்ங்கம் இவைகளும் விளங்க, சாட்சாத் லட்சுமிதேவியோடு யோகநித்திரையி

விருக்கிறார். வித்யாதரர்களும், கந்தருவர்களும் தங்கள் மனைவிகளுடன் அங்கு பகவானுடைய லீலைகளைப் பாடிக் கொண்டிருக்கிறார்கள். நைச்சிரேயஸம் என்னும் பெயரை உடைய ஓர் அர்புத உத்தியானவனமும் அங்கு இருக்கிறது. அந்த வனத்தில், தேவாமிருதத்தினால் நிறைந்து தன்னுடைய ஜலத்தைப் பருகினவுடனேயே கிழத்தனம், மரணம் முதலானவைகளை நீக்கி, மன்மதனைப் போன்ற ரூபத்தையும் எப்போதும் பதினெட்டே வயதுள்ள திவ்யசரீரத்தையும் அளிக்கும் பல அமிருதவாபிகளும், நினைத்தவற்றையெல்லாம் கொடுக்கும் கற்பகவிருட்சங்களும், மயில், அன்னம் ஸாரஸம், சக்கிரவாகம், தித்திரி, கோகிலம், மாடப்புறா, கிளி முதலான பட்சிகளும், ரத்தினமயமான அனேகம் கிரீடா பர்வதங்களும், நவநிதிக் குவியல்களும் நிறைந்திருப்பதோடு, ஆறு ருதுக்களும் சேர்ந்து எப்பொழுதும் அங்கு வியாபித்துக் கொண்டிருக்கும். மந்தாரை, சம்பகம், பாரிஜாதம், நீலோத்பலம், தாமரை, மல்லிகை, ஜாதி முதலான புஷ்பங்களின் வாசனையை வாரிக் கொண்டு, மந்தமாருதம் மெல்லென வீசிக்கொண்டிருக்கும். அழகுக்கும், சம்பத்துக்கும் அதிதேவதையான லட்சுமிதேவியே அங்கிருக்கும் போது, அந்த இடத்தின் மகிமையைச் சொல்லவும் வேண்டுமோ! அங்கு கோடிசூரியப் பிரகாசமாய் விளங்கும் நவரத்தினமயமான அரண்மனை ஒன்றும், அனேக திவ்ய விமானங்களும் இருக்கின்றன. அந்த அரண்மனையிலுள்ள ஸ்படிகக்கற்களால் போடப்பட்ட தளவரிசையானது எனது அன்னையான லட்சுமிதேவியார் தாமரைமலர்போன்ற தமது மெல்லிய திருப்பாதம் நோக, பாதசரங்கள் சப்திக்க, மெள்ள மெள்ள சஞ்சாரம் செய்வதினால், அவருடைய பாத தூளிகள் பட்டு, புனிதத் தன்மையடைகிறது. அவருடைய தேக காந்தியினால் ஸ்படிகக் கற்களெல்லாம் மாணிக்கக் கற்களைப் போல் பிரகாசிக்கின்றன. புருஷோத்தமனின் அனுக்கிரகத்தைப் பெற்றவர்களைத் தவிர, மற்ற எவராலும் அந்த இடத்தைக் கண்ணெடுத்தும் பார்க்கமுடியாது. இவ்விதமான மகிமை பொருந்திய வைகுண்டத்தை அடைந்த குமாரர்கள் நால்வரும் மிகுந்த சந்தோஷத்துடன், அரண்மனையின் முதல் ஆறு கட்டுகளையும் தாண்டி, ஏழாவது கட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். இதற்கடுத்த உட்புறத்திலிருக்கும் சபாமண்டபத்தில்தான் பகவான் யோக நித்திரையிலிருக்கிறார். இந்தக் கட்டின் கதவு எப்பொழுதும் சாத்தப்பட்டேயிருக்கும். அந்தக் கதவின் இருபக்கத்திலும் இரண்டு துவாரபாலகர்கள் காவலிருப்பார்கள். அவர்கள் இருவரும் நான்கு கைகளும், கழுத்தில் துளசிமாலையும், தலையில் கிரீடமும், குண்டலமும், தோள்வளை முதலானவைகளும் விளங்க, ஒரு கையில் கதை, ஒரு கையில் தங்கப் பிரம்பு இவைகளுடன் நிற்பதைப் பார்த்தும், அவர்களுடைய அனுமதியை அபேட்சிக்காமல் குமாரர்கள் நால்வரும் கதவைத் திறந்து கொண்டு உள்ளேபோக யத்தனித்தார்கள். இவ்விதம் தங்களைக் கேளாது உள்ளே போகின்ற குமாரர்களைப் பார்த்தவுடன் துவாரபாலகர்களிருவரும் கோபத்தினால் கண்கள் சிவக்க, புருவத்தை நெறித்து, "ஆ! ஆ!! யாரங்கே உள்ளே செல்வது!" என்று அதட்டி, தங்கள் கையிலுள்ள தங்கப் பிரம்பினால் அவர்களை மறித்துப் பின்னடித் தள்ளினார்கள். தங்களுடைய தபோ பலத்தினால் எங்கும் செல்வதற்குச் சக்தி வாய்ந்த அவர்கள் முதன்முதலில் பரமாத்மாவைத் தரிசிக்கப் போகும் போது, இவ்விதம் தள்ளப்பட்டதினால், குமாரர்களுக்குச் சற்று கோபமுண்டாயிற்று.

"நீங்கள் யார்? இங்கிருக்கக் காரணமென்ன? சத்வகுணம் நிறைந்துள்ளவர்களே இருக்கத் தகுந்த இந்த இடத்தில், அதற்கு நேர்மாறான

சுவபாவமுள்ள உங்களுக்கு என்ன வேலை? ஞானிகள் இந்த இடத்தில் எவ்விதத் தடையு மின்றிப் போய் வரலாம் என்று ஏற்பட்டிருக்க, அந்த வழக்கத்தை மீறி எங்களைமட்டும் என் தடுத்தீர்கள்? இப்படிப்பட்ட அசுரகுணமுள்ள நீங்கள் இந்த ஸ்தானத்தில் இருக்கத்தகாது; ஆதலால் உங்கள் குணத்துக்குத் தகுந்தபடி மூன்று ஜன்மங்கள் பூவுலகத்தில் அசுரர்களாகப் பிறக்கக் கடவீர்கள்'' என்று சாபமிட்டார்கள். இடிவிழுந்ததைப் போன்ற இந்த சாபத்தைக் கேட்டதும் துவாரபாலகர்களிருவரும் நடுநடுங்கிப் போனார்கள். பிராமண சாபத்தை ஆயுதங்களினாலோ, வேறு எவ்வகையினாலோ தடுக்கமுடியுமா? தாங்கள் செய்த குற்றம் மிகவும் பெரியது என்றுணர்ந்தவர்களாய்க் கண்களில் ஜலம் தாரை தாரையாகப் பெருக மிகுந்த பயத்துடன் அந்தப் பிராமணர்களின் பாதங்களில் விழுந்து "மகரிஷிகளே! மூன்று ஜன்மங்கள் கேவலமான அசுரயோனிகளிற் பிறக்கும்படி எங்களுக்குத் தண்டனை விதித்தீர்கள். நாங்கள் மந்தபுத்தியினால் செய்த குற்றத்தை மன்னித்து எங்களுக்கு ஒரே ஒரு அனுக்கிரகம் செய்யவேண்டும். நாங்கள் அனுபவிக்கப் போகும் மூன்று ஜன்மங்களிலும் பக்தவத்ஸலனாகிய புருஷோத்தமனின் ஞாபகம் மட்டும் எங்கள் மனதை விட்டு அகலாதிருக்கும்படி வரம் கொடுக்கவேண்டும்'' என்று பிரார்த்தித்தார்கள். தன்னுடைய துவாரபாலகர்கள் சாதுக்களை அவமதித்து, அதினால் சாபமடைந்ததை அறிந்த பகவான், அவர்களுக்கு அனுக்கிரகம் செய்ய நினைத்து, அந்த லட்சுமிதேவியுடன் வந்து சேர்ந்தார். என்னாலும், உங்களாலும், இந்திரிய நிக்கிரகம் செய்த பெரிய மகரிஷிகளாலும் தேடிக்காண முடியாத பரமாத்மாவைக் குமாரர்களும், துவாரபாலகர்களும் குளிர தரிசித்தார்கள். நீருண்ட காளமேகம் போன்ற திருமேனியும், அரையில் பீதாம்பரமும் பிரகாசிக்க, ஸ்ரீதேவியின் தோளின்மேல் உல்லாசமாகக் கையைப் போட்டுக்கொண்டு மந்தஹாஸத்துடன், பகவான் அவர்களுக்கு தரிசனம் தந்த காட்சியை வருணிக்க ஆதிசேஷனே வரவேண்டும்! தாயைக் கண்ட சேயைப் போல பரமானந்தத்தை அடைந்து, சரீரம் புளகாங்கித முற்றவர்களாய் கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருக, தழுதழுத்த குரலுடன், "என்னப்பனே! என்னையனே! கருணாநிதியே! கிருபாமூர்த்தியே! பக்தவத்ஸலனே! தீனரட்சகனே! அபயம்! அபயம்!! நாங்கள் தெரியாமல் செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டும். எங்கள் மீது கிருபா நோக்கம் பாலித்தருளவேண்டும். எங்களுக்கு சாபவிமோசனம் கூறி, எங்களைக் கரையேற்றவேண்டும். நாங்கள் அனுபவிக்கப் போகும் மூன்று ஜன்மங்களிலும் தங்களுடைய ஞாபகம் எங்களைவிட்டு அகலாதிருக்கும்படியும், ஒவ்வொரு ஜன்மத்திலும் ஒவ்வொரு முறையாவது தங்களுடைய திவ்விய திருமேனியை நாங்கள் தரிசிக்கும்படியும் கடாட்சிக்கவேண்டும்'' என்று வேண்டினார்கள் துவாரபாலகர்கள்.

"பக்தர்களே! நீங்கள் செய்த குற்றம் மிகக் கொடுமையானது. பிராமணோத்தமர்களை அவமானப்படுத்தினீர்கள். துக்கமே நிறைந்த சம்சார பந்தத்திலிருந்து விடுபட்டு, பேரின்பத்தை அடைய விரும்பிப் பிரம்ம விசாரம் செய்துகொண்டிருக்கும் பிராமணர்களே எனக்குக் குலதெய்வம். அவர்களையே நான் வணங்குபவன். அப்படிப்பட்ட மகான்களுக்கு அபசாரம் செய்து, சாபத்தைத் தேடிக் கொண்டீர்கள். அவர்களுடைய வார்த்தையை என்னால் மாற்ற முடியாது. ஆயினும் நீங்கள் என்னுடைய பக்தர்களாதலால் உங்களை அனுக்கிரகிக்கிறேன். நீங்கள் அசுரர்களாய்ப் பிறந்தாலும், மூவுலகும் வணங்கக் கூடிய பராக்கிரம

சாலிகளாயும், மகா வீரர்களாயும், சக்கரவர்த்திகளாயும் விளங்குவீர்கள். மூன்று ஜன்மங்களிலும் உங்களுக்கு என்னைத்தவிர வேறு ஒருவராலும் மாணமில்லை. ஒவ்வொரு ஜன்மத்திலும் அசுர சுபாவத்துக்கேற்றபடி என்னிடம் விரோதப் பான்மைகொண்டவர்களாக இருப்பீர்கள். உங்களுடைய குலசத்துருவான என்னை எப்படி ஜயிப்பது என்பதையே எப்பொழுதும் எண்ணமிட்டுக் கொண்டிருப்பீர்களாதலால், என்னுடைய ஞாபகம் சதா உங்கள் மனதில் உதித்துக் கொண்டேயிருக்கும். அசுரர்களின் வழக்கப்படி தேவர்களை விரோதித்து, அவர்களுக்கு மிகுந்த கொடுமை செய்வதோடு, என்னுடைய பக்தர்களையும், பசுக்களையும், பிராமணர்களையும், ஸ்திரீகள், பாலர் முதலானவர்களைவும் ஹிம்சித்து அவர்களுக்குத் துன்பத்தை விளைவிப்பீர்கள். வேதங்களை நாசஞ்செய்யப் போகின்றீர்கள். கருமங்களை நடக்கவொட்டாமல் தடுப்பீர்கள். உங்களுடைய கொடுங்கோன்மையைத் தாங்கமாட்டாமல் தங்கள் தங்களை ரட்சிப்பாரின்றி உலகம் தத்தளிக்கும். தர்மம் நாசத்தையடையும். சாதுக்கள் கதறுவார்கள். துஷ்டர்கள் சந்தோஷமாக இருப்பார்கள். பூமிதேவி பாரத்தைத் தாங்கமாட்டாமல் வருந்துவாள். அப்பொழுது ஒவ்வொரு தடவையும் நான் அவதாரம் செய்து, உங்களைக் கொன்று, சாதுக்களை ரட்சித்து, தர்மத்தை ஸ்தாபிக்கப்போகிறேன். இப்படியே மூன்று முறையும் என்னாலேயே கொல்லப்பட்டு, மூன்றாவது ஜன்மத்தின் இறுதியில் பழயபடி இங்கு வந்துசேர்ந்து துவாரபாலகர்களாக இருப்பீர்கள். மூன்று ஜன்மங்களும் சீக்கிரத்திலேயே கழிந்து விடும். கவலைப் படாதீர்கள்'' என்று அவர்களை அநுக்கிரகித்தார் பகவான். குமாரர்களைப் பார்த்துப் பின்வருமாறு சொன்னார். ''மகரிஷிகளே! இந்தத் துவாரபாலகர்களிருவரும் ஜயன், விஜயன் என்ற பெயரையுடையவர்கள். இவர்கள் உங்களுக்குச் செய்த அவமானத்துக்காக நீங்கள் விதித்த தண்டனை நியாயமானதுதான். இவர்கள் செய்த பிழைக்காக நான் உங்களை மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுகிறேன். என்னுடைய வேலைக்காரர்களால் செய்யப்பட்ட குற்றத்துக்கு நானே ஜவாப்தாரி. முட்டாளான வேலைக்காரன், வியாதியானது சரீரத்தை நாசஞ் செய்வதுபோல், யஜமானனுடைய கீர்த்தியை நாசஞ் செய்கிறான். அவனால் யஜமானனுக்குப் பெரிய ஆபத்துக்கள் உண்டாகின்றன. எனக்குப் பிராமணர்களே குலதெய்வம். நான் அவர்களை சதா பஜித்துக் கொண்டிருக்கிறேன். உங்களுடைய பாத தூளியால் இந்த வைகுண்டத்தையும், என்னையும், ஸ்ரீதேவியையும் பரிசுத்தப்படுத்தி, எங்களை அநுக்கிரகிக்கும் பொருட்டு, தங்களுடைய பாதங்கள் நோக இவ்வளவு தூரம் எழுந்தருளுவதற்கு நான் என்ன பாக்கியம் செய்தேன்! தங்களுடைய ஆசீர்வாத மகிமையினாலல்லவா, சுபாவத்திலேயே சஞ்சல சித்தமுடையவளாய், ஓரிடத்திலும் நிலைத்திருக்காமல், அடிக்கடி இடம் விட்டுப் பெயர்ந்து கொண்டேயிருக்கிற ஸ்ரீதேவியும் என்னைவிட்டுப் பிரியாமல் அநுக்கிரகித்துக் கொண்டிருக்கிறாள். உங்களுடைய மகிமையை அறியாமல் இந்தப் புத்தியற்றவர்கள் உங்களுக்குக் கெடுதி செய்துவிட்டார்கள். அவர்களுடைய குற்றம் என்னையும் சேர்ந்ததானபடியால், அவர்கள் தங்கள் கையினால் உங்களை மறித்துத் தள்ளினதற்குப் பிராயச்சித்தமாக, என்னுடைய கையை வெட்டி உங்களுடைய பாதத்தில் சமர்ப்பிக்கிறேன். நீங்கள் கோபம் கொள்ளாமல் பொறுத்தருளவேண்டும். பெரியவர்களான உங்களுடைய கோபத்தை உலகமே தாங்கமுடியாது. எங்களை மன்னித்தருளவேண்டும். இவர்கள் சீக்கிரம் சாபவிமோசனத்தை யடைந்து, இங்கு வந்துசேரும்படி

கிருபை செய்யவேண்டும்." மகரிஷிகள் ஆச்சரியத்தினுல் பிரமித்தார்கள். அவர்களுடைய சரீரம் மயிற்கூச்செறிந்தது.

கைகளைக் கூப்பிக்கொண்டு, பகவானைப் பார்த்து, "வேதமூர்த்தியே! தங்களுடைய அபிப்பிராயத்தை எங்களால் அறியமுடியவில்லை. தங்களுக்குக் குலதெய்வம் பிராமணர்களென்றும், நாங்கள் இங்கு வந்ததால் தாங்கள் கிருதார்த்தரானதாகவும் சொல்லுகிறீர்கள். அது எங்களுக்கு ஆச்சரியத்தை உண்டாக்குகிறது. யாருடைய நாமத்தை ஸ்மரித்த மாத்திரத்தில் மரணபயமே இருக்காதோ, யாருடைய பாததூளி ஸ்பர்சத்தினுல் எல்லாப் பாபங்களும் நாசத்தை யடையுமோ, எவர் ஞானிகளால் தேடப்படுகிறவரோ, எவருடைய சொரூபத்தைச் சொல்ல முடியாமல் வேதங்கள் தத்தளிக்கின்றனவோ, எவர் உலகமுழுவதும் எல்லா வஸ்துக்களிலும் உள்ளும் புறமும் வியாபித்து, அதினுல் விஷ்ணுவென்று சொல்லப்படுகிருரோ, எவருடைய திவ்விய திருமேனியானது பிரம்ம தேவராலும் தரிசிக்க முடியாததோ, எவர் உலகங்களை ரட்சிக்கின்றவரோ, எது பிரளய காலத்தில் எஞ்சி நிற்கின்றதோ, சச்சிதானந்த சொரூபமான எதனிடத்தில் யோகிகள் ரமிக்கிருர்களோ, எது எல்லோராலும் வணங்கப்படுகிறதோ, அந்த பரப்பிரம்மமே தாங்களாக இருக்க, புண்டரீகாட்சனே! தாங்கள் வணங்கும் தெய்வமும் ஒன்று உண்டோ! தங்களுடைய அனேக லீலைகளில் பிராமணர்களை வணங்குவதும் ஒரு லீலையோ! லட்சுமீகாந்தனே! நாங்கள் தான் பெரிய பாபத்தைச் செய்துவிட்டோம். பிறர் எத்தகைய குற்றம் செய்தபோதிலும் பொறுத்துக் கொள்ளுபவர்களே சாதுக்களெனப்படுவர். சாதுக்களுக்குக் கோபமே இருக்கக் கூடாது. இங்கிருக்கும் காவலாளர்களின் அனுமதி பெற்றே உள்ளே செல்லவேண்டியது தர்மமாயிருக்க, அந்த வழக்கத்தை மீறி நாங்கள் உள்ளே நுழைந்தது மல்லாமல், அப்படிச் செல்லும் எங்களைத் தடுத்த துவாரபாலகர்களையும் சபித்துவிட்டோம். அவர்கள் பேரில் யாதொரு குற்றமுமில்லை. நாங்கள் செய்த பாபத்துக்கு எங்களுக்குத் தண்டனை விதிக்க வேண்டுவதுதான் நியாயம். ஆதலால் எங்களுக்குத் தகுந்த தண்டனை விதித்து, நாங்கள் கடைத்தேறும்படி அனுக்கிரம் செய்யவேண்டும். அவர்களுக்குச் சாபவிமோசனமும் தாங்களே கூறிவிட்டீர்கள். அதையே நாங்களும் ஆமோதிக்கிருேம். ஒருவருக்கும் காணக்கிடைக்காத திவ்விய தரிசனத்தை எங்களுக் களித்த கருணாநிதியே! தங்களுடைய பாதாரவிந்தத்தையே சதா நாங்கள் பஜித்துக் கொண்டிருக்கும்படி கருணை செய்யவேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள். பின்பு பகவானுடைய அனுக்கிரத்தைப் பெற்றுக்கொண்டு, பரந்தாமனையும், ஸ்ரீதேவியாரையும் பிரதட்சிணம் செய்து, நமஸ்கரித்து, விடைபெற்றுக் கொண்டு, தேஜோமயமான வைகுண்டத்தையும், பரமாத்மாவையும், அன்னையாரையும் தரிசிக்கக் கிடைத்த தங்களுடைய பாக்கியத்தை எண்ணி எண்ணி ஆனந்தத்தை அடைந்தவர்களாய் தங்களிச்சைப்படி சென்றூர்கள்.

'நீங்களும் போய் வாருங்கள்! பயப்பட வேண்டாம்! உங்களுக்கு க்ஷேமம் உண்டாகும்! பக்தர்களான பிராமணர்களின் வாக்குப் பொய்யாகக் கூடாதென்பதே எனது இச்சை. முன் ஒருதரம் நான் யோகநித்திரையிலிருக்கும் போது, நீங்கள் இவ்விதம் ஸ்ரீதேவியையும் தடுத்து, அவளாலும் சபிக்கப்பட்டிருக்கிறீர்கள். மூன்று ஜன்மங்களையும் மூன்று நிமிஷங்களாகக் கழித்து என்னுடைய அனுக்கிரகத்தினுல் சீக்கிரம் இங்கு வந்து சேருவீர்கள்' என்று துவாரபாலகர்களை அனுக்கிரகித்து, கண்ணீருடன் நிற்கும் அவர்களைச் சமாதானப்

படுத்தி விடைகொடுத்தனுப்பிவிட்டு, ஸ்ரீதேவி யாருடன் தன்னுடைய ஸ்தானத்தை அடைந்தார் பகவான். அவர்களிருவரும் பிராமண சாபத்தினால் சம்பத்துக்களை இழந்து, பிரக்ஞை யில்லாமல் வைகுண்டத்திலிருந்து கீழே விழுந்தார்கள். அவர்கள் விழும்போது கந்தருவர், யக்ஷர் முதலானோர், ஹா! ஹா! வென்று கதறினார்கள்.

"அந்த ஜயன், விஜயன் என்னும் துவார பாலகர்களிருவருமே இப்போது காசியபனுடைய வீர்யத்தின் மூலமாக, உங்கள் சிற்றன்னையான திதியின் கர்ப்பத்தில் வசிக்கிறார்கள். கர்ப்பத்திலிருக்கும் அந்த வீரர்களின் தேஜஸ்ஸினால்தான் உலகம் தகிக்கப்படுகிறது. அவளுடைய பிரசவகாலம் நெருங்கி விட்டது. இன்னும் சில தினங்களில் இரண்டு புத்திரர்களைப் பிரசவிக்கப் போகிறாள். அவர்களால் உலகத்துக்குப் பெரிய அனர்த்தங்கள் உண்டாகப்போகின்றன. அந்தக் கஷ்டத்திலிருந்து நம்மைக் காப்பாற்றும்படி பகவான் அவதரிக்கப் போகிறார். ஆதலால் தேவர்களே! வைகுண்டநாதனை சதா பஜித்துக்கொண்டிருங்கள். அவரை ஆராதியுங்கள். அவருடைய மாயையை யோகிகளாலும் கடக்கமுடியாது. அசுர சத்துருவான அவருடைய அனுக்கிரகத்தால் நம்மெல்லோருக்கும் க்ஷேமம் உண்டாகப் போகிறது. கவலைப்படாமல் உங்கள் இருப்பிடத்துக்குச் செல்லுங்கள்" என்று அவர்களுக்குத் தேறுதல் சொல்லி விடைகொடுத்தார் பிரம்மதேவர்.

நான்காம் அத்தியாயம்.

திதிதேவி இரண்டு புத்திரர்களைப் பெற்றாள். ஜனன காலத்தில் அனேக உத்பாதங்கள் உண்டாயின. பூமி நடுங்கிற்று, ஆகாசம், பூமி முதலியன ஒன்றுமே தெரியாமல் புழுதியால் மறைத்துக் கொண்டு, பெருங்காற்று வீசத் தலைப்பட்டது. பூகம்பத்தினால் அனேக பட்டணங்களும் கிராமங்களும் நாசத்தை அடைந்தன. கோட்டான்களும், நரிகளும் ஊளையிட்டன. மரங்கள் வேரோடு சாய்ந்து விழுந்தன. இந்த உத்பாதங்களைப் பார்த்தவர்களெல்லோரும் பிரளயகாலம் சமீபித்து விட்டதோ வென்று கலங்கினார்கள். காசியபர் தன்னுடைய புத்திரர்களின் ஜனனகாலத்தை ஆராய்ந்து மூத்தவனுக்கு ஹிரண்யகசிபு வென்றும் இளைய குமாரனுக்கு ஹிரண்யாட்சனென்றும் பெயரிட்டார். குமாரர்கள் இருவரும் வஜ்ரம் போன்ற சரீரமும், பர்வதம் போன்ற பலமும், சூரியனைப் போன்ற தேஜஸ்ஸும் உடையவர்களாய், சத்துருக்கள் நடுங்கத்தக்க ஆகிருதியோடு விளங்கினார்கள். ஹிரண்யகசிபு தன்னுடைய பலத்தினாலும் பிரும்மதேவரின் வரத்தினாலும் தேவர்களை அடக்கி, மூன்று உலகங்களையும் ஜயித்து சக்கரவர்த்தியானான். ஹிரண்யாட்சன் தன் தமையனுடைய உத்திரவுக்கடங்கி நடப்பவன். தமையனிடத்தில் அதிகப் பிரீதியுள்ளவன். மகாவீரன். பலத்தில் ஹிரண்யகசிபுவையும் அதிக்கிரமித்தவன். தன்னுடன் எதிர்த்து யுத்தம் செய்வோரில்லாததனால், மதோன்மத்தனாகத் திரிந்து, தோள்கள் தினவெடுக்க, யாருடனாவது சண்டைசெய்து தன் தோள் வலியைப் பரீட்சிக்க எண்ணி, தேவலோகம் சென்றனன். இவன் வரவை அறிந்த தேவர்களெல்லோரும் கருடனைக் கண்ட நாகம்போல் நடுநடுங்கி தேவலோகத்தை விட்டு ஓடிப் போனார்கள். தேவலோகம் காலியாக இருப்பதைப் பார்த்து, வருணலோகத்துக்குப் போனான். சமுத்திர ராஜனான வருணனைப் பார்த்து "பிரபுவே! நீர் மகாபராக்கிரமசாலி, வீரர்களில் சிரேஷ்டர். உலகமுழுவதும் ஜயித்து ராஜசூயயாகம் செய்தவர். இதுவரையில் உம்மை எதிர்த்தவர்களில் ஒருவரும் தப்பிப் பிழைத்த

தில்லை. ஆதலால் உம்முடன் யுத்தம் செய்ய வேண்டுமென்ற ஆசையுடன் வந்திருக்கிறேன். எழுந்திருந்து வாரும்'' என்றழைத்தான் ஹிரண்யாட்சன். வருணனுடைய முகம் கோபத்தால் சிவந்தது. ஆயினும் அவனுடைய வரலாற்றையும், நாராயணனைத் தவிர வேறு ஒருவராலும் அவனுக்கு மரணமில்லை யென்பதையும் யோசித்துத் தன் கோபத்தை அடக்கிக்கொண்டு, ஹிரண்யாட்சனைப் பார்த்து "வீரனே! நான் கிழவன், என் சரீரமெல்லாம் தளர்ந்து போய்விட்டது. உன்னுடைய பலத்தையும் ஆகிருதியையும் பார்க்கும்போது புருஷோத்தமனான விஷ்ணுவைத் தவிர வேறு ஒருவரும் உன்னுடன் சண்டைசெய்ய முடியாதென்றே நினைக்கிறேன். அவர் உங்கள் குலத்துக்கே சத்துரு. அனேகம் அசுரர்களை வதஞ்செய்தவர். ஆதலால் அவரிடம் செல். அவர் உன்னிஷ்டத்தை நிறைவேற்றுவார்' என்று சொன்னான். வருணலோகத்திலிருந்து கிளம்பி விஷ்ணுவைத் தேடிக் கொண்டு வரும்போது, வழியில் நாரதரைச் சந்தித்து அவரால் பகவான் ரசாதலமென்னும் லோகத்தில் இருப்பதாக அறிந்து, அங்கு போய்ச் சேர்ந்தான் ஹிரண்யாட்சன். பெரிய வாராஹ ரூபத்துடன், தன்னுடைய கோரைப் பற்களினால் பூமியைத் தாங்கிக்கொண்டிருக்கிற பகவானைப் பார்த்து உரக்கச் சிரித்தான்.

"ஏ முட்டாளே! பூமியை விட்டு விட்டு இங்கு வா. அந்தப் பூமி தேவி எங்களுக்குச் சொந்தமானவள். அவளை நீ தொடத் தகாது. இல்லையேல் உனக்கு மாணம் கிடைப்பது நிச்சயம். அயோக்கியனே! பன்றி ரூபத்தை யுடையவனே! நீ மாயையினால் எங்களுடைய சகோதரர்களான அசுரர்களையெல்லாம் கொன்று அந்த வம்சத்தையே நாசமாக்கினாய். அதினால் மிகுந்த கர்வத்தை அடைந்திருக்கிறாய். எங்களுடைய சத்துருக்களான தேவர்களுக்கு நீதான் பக்க பலமாயிருப்பவன். திருப்பாற்கடல் கடைந்தபோது அதிலிருந்து உண்டான அமிர்தத்தை அசுரர்களுக்குக் கொடுக்காமல், நீ மோகினியாக ரூபமெடுத்து அசுரர்களை மயக்கி, தேவர்களுக்கு மட்டும் அமிர்தத்தைக் கொடுத்தாய். நீ அசுரர்களுக்குச் செய்திருக்கும் கெடுதிகளை யெல்லாம் சொல்லிக்கொண்டிருப்பதென்றால் நூறு வருஷமானாலும் போதாது. அவ்வளவும் போதாமல் இப்போது எங்களால் ஜயிக்கப்பட்டு, எங்களுக்கடிமையாக இருக்கும் பூமிதேவியை அபகரித்துக் கொண்டு போகப் பார்க்கிறாய். திருடனே! உனக்கு முடிவுகாலம் சமீபித்துவிட்டது. பவுருஷமோ பலமோ கொஞ்சமேனுமில்லாமல், மாயையினால் உலகத்தை மயக்கித் திரியும் கள்ளனே! என் கையிலுள்ள இந்த கதையினால் உன் எலும்பெல்லாம் நொறுங்கி, மண்டை பிளந்து, மூளை சிதறிப்போகும்படியாக அடித்துக் கொன்று, என் சகோதரர்களைக் கொன்ற பழியைத் தீர்த்துக்கொள்ளப் போகிறேன். நீ மரணமடைந்தால், உன்னை நம்பி யிருக்கும் தேவர்களும் ரிஷிகளும் வேரில்லாத விருட்சத்தைப்போல் நாசத்தை அடைவார்கள். ஏன் தயங்குகிறாய்? வீரனாக இருந்தால் வந்து யுத்தம்செய். உன் கைவரிசையை நான் ஒரு கை பார்க்கிறேன்'' என்று கர்ஜித்தான் அசுரன். பாதகனின் வார்த்தையைக் கேட்ட பூமிதேவி நடுங்கினாள். தனக்கு என்ன ஆபத்து நேரிடுமோ வென்று கலங்கிக் கொண்டிருக்கும் அவளைப் பார்த்து "கண்ணே! நான் இருக்கும்போது உனக்குப் பயமுண்டாகக் காரணமென்ன? இந்த அசுரனால் உனக்கு என்ன கெடுதி செய்ய முடியும்? இன்னும் ஒரு முகூர்த்தத்துக்குள் அவனுடைய சரீரம் பருந்துகளுக்கு இரையாகப் போவதை நீயே பார்க்கப்போகிறாய். பயப்படாமல் இங்கேயே சற்று நேரம் இரு'' என்று தேற்றி அவளைக் கீழே இறக்கிவைத்து

விட்டு, அசுரன் பக்கமாகத் திரும்பினர் பகவான். "ஓய் சக்கரவர்த்தியே! நாம் பன்றி தான். ஆனல் சாமானியமான பன்றியல்ல. உம்மைப் போலொத்த பெரிய சிங்கங்களைக் கொல்லுவதற்காக வந்திருக்கும் பன்றி என்றறிந்துகொள்ளும். வீரர்கள் வாயினல் இறைய மாட்டார்கள். குலைக்கிற நாய் கடிக்காது. அக்கினி வாயினல் சொல்லித் தகிப்பதில்லை. நீ வீரனக இருந்தால், உன்னுடைய சகோதரர்களைக் கொன்றதற்காக என்னைப் பழிவாங்கி, உன்னுடைய சபதத்தை நிறைவேற்றிக்கொள். அட! துன்மார்க்கனே! ஏன் வீணகத் துள்ளுகிருய்? உனக்கு அழிவுகாலம் கிட்டிவிட்டது. சீக்கிரத்தில் தர்மராஜனுடைய விருந்தாளியாகும்படி செய்கிறேன்" என்று கூறிப் புன்முறுவல் கொண்டார்.

கர்ணகடூரமான இந்த வார்த்தைகளினல் மிகுந்த கோபத்தை அடைந்து, தன்னுடைய கதாயுதத்தினல் பகவானுடைய மார்பில் ஓங்கி அடித்தான் அசுரன். உடனே இருவருக்கும் பயங்கரமான பெரிய யுத்தம் உண்டாயிற்று. இவர்களுடைய யுத்தத்தைப் பார்ப்பதற்காக பிரம்ம தேவர், இந்திரன் முதலானேருடன் அங்கு வந்து சேர்ந்தார். சூரியன் அஸ்தமித்தான். இரவு நெருங்கிவிட்டதை யறிந்து அசுரன் சந்தோஷப்படுவதையும், பகவான் விளையாட்டாக அவனுடன் சண்டையிட்டுக் கொண்டிருப்பதையும் பார்த்து, பிரம்மதேவர், கையைக் கூப்பிக்கொண்டு, "பக்தவத்ஸலனே! இந்தப் பாபி தங்களுடைய பக்தர்களுக்கும், தேவர்களுக்கும், பசுக்களுக்கும், பிராமணர்களுக்கும் கொடுமை செய்வதையே தொழிலாகக் கொண்டவனும் அவர்களை ஹிம்சிப்பவனும் ஆவான். தனக்கு ஒருவரும் நிகரில்லாதவனகத் திரிந்து கொண்டிருக்கிறன். இவன் செத்தாலொழிய உலகம் க்ஷேமத்தை அடையாது. இரவு நெருங்கிவிட்டது, இரவுகாலத்தில் அசுரர்களுக்குப் பலம் விருத்தியடையுமாதலால், அதற்கு முன்னமேயே இந்த துஷ்டனை சம்ஹரித்து எங்களைக் காப்பாற்றவேண்டும். தங்களைத்தவிர வேறு ஒருவராலும் அவனுக்கு மரணமில்லை. எங்களுடைய பாக்கிய வசத்தினல் அவனகவே தங்களைத் தேடிக்கொண்டு வந்துவிட்டான். இனி அவனைத் தப்பவிடாமல் இங்கேயே கொன்று, உலகத்துக்கு க்ஷேமம் உண்டாகும்படிச் செய்யவேண்டும்" என்று பகவானைப் பிரார்த்தித்தார்.

ஹிரண்யாட்சனுடைய சூலத்தையும் கதையையும் மாயையையும் அழித்து, அவனைக்கொல்வதற்காக யத்தனித்தார் பகவான். இந்த சமயத்தில் திதிதேவியின் உடம்பில் அவளறியாமல் நடுக்கமுண்டாயிற்று. அவளுடைய ஸ்தனங்களிலிருந்து ரத்தம் ஒழுகியது. ஏதோ ஆபத்து நேரிடப் போகிறதென்றறிந்து கலங்கிக் கொண்டிருந்தாள். ஹிரன்யாட்சனும் பகவானல் அடிக்கப்பட்டு, மூக்கிலும், வாயிலும் ரத்தம் பெருகக்கீழேவிழுந்து,யோகிகளாலும் தரிசிக்க முடியாத அவருடைய முகத்தைப் பார்த்துக் கொண்டே பிராணனை விட்டான். தேவதுந்துபி முழங்கிற்று. தேவர்கள் பகவான்மீது புஷ்பங்களை வருஷித்தார்கள். அப்ஸரஸ்கள் நடனம் செய்தார்கள். ஹிரண்யாட்சனுடைய மரணத்துக்காக தேவர்கள் பெரிய உத்ஸவம் கொண்டாடினர்கள். பூமிதேவியைச் சமாதானப் படுத்திவிட்டு பகவானும் வைகுண்டம் போய்ச் சேர்ந்தார்.

(தொடரும்.)

---

# பெரும் எஞ்ஞமும் ஸாக்ஷாத்காரமும்.

(ஸ்ரீமதி. பி. மங்களாபாய்.)

(வாலியம் 4—719-ம் பக்கத் தொடர்ச்சி.)

(13) ஸ்ரீ சிதம்பரப் பிரபுவானவர் முர கோடில் தன் திவ்வியமான அவதாரத்தை எடுத்தனர். அவர் அக்கினிஷ்டோமம் என்னும் மகா யக்ஞம் செய்திருந்தனர். அச்சமயத்தில் மகாராஷ்டிர தேசத்திலுள்ள சகல அரசர்களும் ஜமீந்தார்களும், துரைகளும் இதர எல்லா திறத்தாரும் சேர்ந்திருந்தனர். தினமும் 50-60 ஆயிரம் ஜனங்களுக்கு போஜனம் அளிக்கப்பட்டு வந்தது. அந்த அற்புதமானது, சரித்திரம் படிக்கப்பட்டவர்களுக்கும், இதிகாசம் படிக்கப்பட்டவர்களுக்கும் தெரிந்தே இருக்கும். இப்பொழுது அத்தகைய யக்ஞம் எங்கும் யாவராலும் நடத்தப்படுவது சாத்தியமில்லை. இருந்தபோதிலும், 'யஜ்ஞானாம் ஜபயஜ்ஞோऽஸ்மி' என்று பகவான் எதைச் சொல்லி இருக்கின்றனரோ, அந்த ஜபரூபமான மகா யக்ஞம் அந்த மகா க்ஷேத்திரத்தில் ஸ்ரீவாஸுதேவானந்த ஸரஸ்வதியவர்களைப் போன்ற மகா புருஷர்களால் பிரபலமாக ஆரம்பிக்கப்பட்டு அது பாவிக் கொண்டு வருகிறது. (பரம சிதம்பர பக்தரும் மகானுபாவருமாகிய கைவல்லியாசிரம ஸ்வாமி அவர்கள் அதற்குமுன் சிறிதுநாள் அவ்விடத்திய ஜனங்களுள் ஸங்கியை (எண்ணிக்கை) யுடன் கூடிய ஜபத்தின் விதையை விதைத்தனர் என்னும் உறுதியாக நம்பக் கூடிய சங்கதி தெரியவருகிறது; ஆனால் ஸ்ரீ வாஸுதேவானந்த ஸரஸ்வதியவர்களுடைய உபதேசத்தின் பிறகு அதற்கு பலமாக முளை கிளம்பியது என்று சொல்வதற்கு ஆக்ஷேபமில்லை). ஸ்ரீ சிதம்பரப் பிரபு மறுபடியும் அவதரிக்கப் போகிறார் என்று அவருடைய பரம சிஷ்யராகிய ராஜாராம் புவா அவர்கள் தன் 'அபங்கம்' என்னும் பாட்டில் ஜோதிஷம் கூறியிருக்கின்றார். கிறிஸ்தவரும், மகமதியரும் தமது கடவுள் அவதரிக்கப் போகின்றனர் என்று சொல்லுகின்றனர். தியாஸபிஸ்ட் (பிரம்மஞான சபையார்) ஜகத்குரு அவதரிக்கப் போகின்றனர் என்று முறையிட்டுச் சொல்லிக் கொண்டிருந்து, அவதார தரிசனத்திற்காகவும், அதன் சேவைக்குத் தேவையான யோக்கியதையை அடையும் பொருட்டு, இன்ன விதமாக நீதியுடன் நடந்து கொண்டு பூமியை (பூமி) சுத்தப்படுத்த வேண்டுமென்று விளம்பரப்பத்திரிகைகள் அச்சிட்டு வெளிப்படுத்தியிருக்கின்றனர். என்னதான் இருக்கட்டுமேன், எல்லோருடைய சேவல்களும் கூவத்தான் செய்கின்றன என்பது என்னவோ உண்மை. இதனால் அவதார சூரியனின் விருப்பம் சிருஷ்டிக்கே ஏற்பட்டிருக்கிறதென்று ஸம்ஸ்காரயுக்தமான புத்திக்குத் தோன்றுமாகில் அது குற்றமாகமாட்டாது. இப்படியுமிருக்கின்றது. அதாவது 'வேண்டுதலும் செலுத்தல்' (Demand and Supply) இது இந்த சிருஷ்டியின் ஓர் நியமமாயிருக்கின்றது; அதையொட்டி இந்தக் காலத்திற்கு ஏற்றவாறு ஒரு சட்டம். உலகம் முழுதும் சாந்தி (அமைதி) என்னும் ஸாம்ராஜ்யத்தைப் பரவக்கூடியதாகவும், மகத்தான சக்தியுடனும் கூடிய அவதாரம் உண்டானால் யாருக்கும் வேண்டாமென்பதில்லை. அந்த திருஷ்டியினாலும் சமஷ்டியில் இந்த ஜபரூபமான மகா யக்ஞம் நடைபெற்றால் கெடுதலொன்றும் ஏற்படப்போவதில்லை. ஹிந்துஸ்தானத்தில் தர்மத்தின் நிலைமையை சூக்ஷ்மமாக நிரீக்ஷித்துப் பார்க்குங்கால் அதில் ஏதோ ஆசையின் (ஆசைப்படக் கூடிய) மாறு

பாடு காணப்படுகின்றது என்று சொல்லத் தடையில்லை.

(14) இப்பொழுது வேதாந்திகளும் சில இதர சாஸ்திரக்ஞர்களும் இந்த சங்கியையுடன் கூடிய ஜபத்தைப் பற்றி சங்கை எடுத்துக் கொண்டேயிருக்கின்றனர். அதற்கு ஸ்ரீஸ்வாமி மகாராஜ் அவர்கள் ஸம்ஸ்கிருத கிரந்தத்தி லிருந்து பிரமாணம் கொடுத்திருக்கின்றனர். மறதியினால் அதை இங்கு கொடுக்க இயல வில்லை. ஆதலால் வருத்தப்படுகிறேன். ஆன போதிலும் அவர் சொன்ன உபபத்தி (திருஷ் டாந்தம்) முன்பு (8-வது இலக்கமுள்ள காலத் தில்) கொடுக்கப்பட்டே இருக்கின்றது. அதை அறிய விரும்புவோர்கள் பின்னும் ஒருமுறை பார்க்கக் கேட்டுக் கொள்ளுகிறேன். அதன்றி ஸ்ரீ ஸமர்த்த ராமதாஸருடைய சங்கியையுடன் கூடிய ஜபத்தைப்பற்றிய பாட்டின் கருத்தை முன்பு கொடுத்தே இருக்கிறேன். அதன்றி 'ஸ்ரீ தாஸ விசிராமதாம்' என்னும் கிரந்தத்திலும் எண்ணிக்கையுடன் கூடிய ஜபத்தைப்பற்றிச் சொல்லியுள்ளதை நாமத்தில் நிஷ்டையுள்ள ஓர் நண்பர் காண்பித்தனர். அதை இங்கு தருகிறேன்.

ஸகுண ஸாக்ஷாத்காரம் மாத்திரம் போதுவ தில்லையே, இதற்கு என்ன செய்கிறது? என்று ஸ்ரீ ஸமர்த்தர் மாருதிராயனைக் கேட்டபொழுது அதற்கு அவர் மறுமொழியளித்தது பின்வரு மாறு:—

"நான் இந்த வனத்தில் வசித்தபோதிலும், சதாகாலமும் உன்னருகிலிருப்பதாக பாவித்து $13\frac{1}{2}$ கோடி தாரக மந்திரத்தை ஜபிக்கவேண் டும் ‖ 1 ‖

குரு ஆக்ஞை பெற்றுக் கிருஷ்ணா நதீ தீரத் தில் வசித்து மூன்றரைக் கோடி ஜபத்தைச் செய்து முடிக்கும்பொழுது ஹனுமான் சுற்றி லும் விளையாடிக் கொண்டிருப்பார். அதனால் ஸ்ரீ ராமனுக்கு வெகு ஆனந்தம் ‖ 2 ‖

"ஜபமானது மற்ற எல்லா நியமங்களை விட மேலானது. பதின்மூன்று கோடி எண்ணி முடிந்ததும் கபிராஜன் தானாகவே அவ்விடத் தில் பிரகடமானார். ராமதாஸ் அவரை பூஜித் தனர்."

(தாஸ விசிராமதாம் என்னும் நூல், 2-வது கண்டம், 14-வது ஸ்கந்தம், 103-வது பக்கம்.)

ஜனங்களுக்கு ஸ்ரீ ஸமர்த்தரைப் போல் விவ காரம் வேண்டும்; அவர் ஸாதித்த ஸாத்தியம் வேண்டும்; ஆனால் அவர் செய்த ஸாதனம் வேண்டாம்; தபஸ் முதலிய சரீரகஷ்டம் வேண் டாம்! நன்றாயிருக்கிறது!! அப்படியானால் இது எப்படி சாதிக்கும்? நர்மஸ்மரணம் என் னும் ஸாதனம் எல்லோருக்கும் சாமான்னியமா யிருக்கின்றது. ஆனால் அது ஒழிவுகிடைத் தாற்றான் செய்வது, அதைப்பற்றி தக்க ஆதாரணை, தக்க விசுவாசம், தக்க நியமம் ஏற் படுத்திக் கொள்வதில்லை. அதைப்பற்றி மன திற்கு ஆசை உண்டுபண்ணிக் கொள்வதில்லை. அப்படியானால் அதனால் ஸாதிக்கும் ஸாத்தியம் மாத்திரம் சீக்கிரம் ஸாதிக்க வேண்டுமென்றால் எப்படி சக்கியமாகும்?

"சிரேஷ்டர்களுடைய செயல்களை நினையா மல் யாதொரு ஸாதனத்தையும் செய்யாமல் மனதில் விஷத்தைக் கலக்கிக் கொண்டு நான் அலிப்தனாய் (பற்றற்றவனாய்) இருக்கிறேன் என்று கதை சொல்லுகிறார்கள்."

"நூல்களிலிருக்கும் வாக்கியங்களை எடுத்துக் கொண்டு, அதிலிருக்கும் கடினமான சாராம் சத்தைத் தூக்கி எறிந்து விடுகிறார்கள்; ஏனெ னில் மனதிற்குச் சிற்றின்பம் பிரியமாயிருக்கிற படியால், அனுபவமுள்ள ஞானிகளை பழிக்கின் றனர்."

—தாஸவிசிராம் தாம்.

தற்சயம் இவ்வாறு நடந்து வருகின்ற மைபாற்றான் இந்நிலைமை ஏற்பட்டிருக்கின்றது!

* * * *

(15) சில கூடமான ஞானிகளுக்கு லாட்ச ணிகமான அர்த்தம் செய்யும் வழக்கமிருக் கின்றது; இதற்கு சில ஸந்தானுடைய வசனங் களின் ஆதாரமும் அவர்களுக்குக் கிடைக்கின் றன. 'ஸோஹம்'. இதுதான் நிஜமான நாமம், (ओहि नाम कुच और) 'அதுவும் ஓர் நாமம் தான்'. அந்த நாமம் ஏதோ வேறாயிருக்கிறது முதலிய வாக்கியங்களைக் கொண்டு வாக்கினுல் உச்சரிக்கப்படும் பகவந்நாமத்தை இகழ்வது, அல்லது அதைப்பற்றி அசிரத்தை உண்டாக்க அவர்கள் முயலுகின்றனர். இரண்டொரு வச னங்களைப் பிரமாணத்தின் பொருட்டு முன்னுக் குக் கொண்டுவந்து, மற்ற ஆயிரம் வசனங்களை அலட்சியம் செய்கின்றனர்; அன்றி வேதஞ் ஞானத்தைப் பற்றிப் பெருமை பாராட்டித் திரி கின்றனர்! இவ்வாறு செய்வது பெரும் குற்ற மாகும். இக்குற்றம் ஹரிகுரு கிருபையாற்றான் விளங்கக் கூடியது. இந்த விசுவம் முழுவதும் ஸங்கியையால் (கணக்கால்) பத்தப்பட்டிருக் கிறது. அதத் (अतत्) தத்துவத்தின் கணனை, கிரஹங்களின் கதி, கிரஹங்களின் திருப்தியின் ஜபம், சூரிய சந்திரர்களின் உதய அஸ்தமனத் தின் காலமர்மை, பிராணிகளின் ஆயுளின் நாட் கள், நாழிகை அல்லது மூச்சுவிடுதல் உட் கொள்ளுதல் முதலியனவெல்லாம் ஸங்கியை யால் நியமிக்கப்பட்டிருக்கின்றன. ஆதலால் கலியாணத்தை இச்சிப்பவர்கள் அதிக ஆழ மான ஜலத்தில் இறங்காமல் இந்த சங்கியை யுடன் கூடிய ஜபானுஷ்டானத்தை—இந்த பக வத்யுக்தமான மகா யக்ஞத்தை— சேம்ப லின்றிச் செய்யத் தலைப்பட்டு அதன் பிரத்யட்ச மான அநுபவத்தைக் கொள்ளவேண்டும் என்று சகல மகாராஷ்டிர சகோதரர்களை யும், இதர பாரத பந்துக்களையும் யான் பணி வுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

(16) சமாசாரப் பத்திரிகைகள், மாதாந்தர பத்திரிகைகளின் பத்திராதிபர்களைப் பணிவுடன் கேட்டுக்கொள்ளுவது யாதெனில்—

இந் நிருபம் எவரெவர்க்குப் படிக்கக்கிடைக் கின்றதோ அவர்களெல்லோரும் அதைத் தமது உடன் பிறந்தவர்களுக்கும் அக்கம்பக்கத்தி லுள்ளவர்களுக்கும் படித்துச் சொல்லி இத னுள் இருக்கும் தத்துவத்தை விளங்கச் சொல்லவேண்டும். பத்திராதிபர்கள் கையில் இந்த 'சுப சமாசாரத்தை'ப் பரவச்செய்யும் ஸாதனம் இருப்பதனுல் இந்நிருபம் முழுவதும், அல்லது சௌகரியத்தின் படி கொஞ்சங் கொஞ்சமாகச் சஞ்சிகைகளில் அச்சிட்டுவெளிப் படுத்தி ஜனங்களை சிரேயஸ் ஸாதனத்தைச் செய்யத் தலைப்படுமாறு செய்த சிரேயஸைப் பெறவேண்டும். ஆனுல் அவர் அந்த சஞ்சிகை யும், அவ்வாறே அதைப்பற்றி யாராவது வித்து வான்களுடைய சர்ச்சை வெளியானுல் அந்த சஞ்சிகையையும் தயவுசெய்து இந்த ஆசிரிய னுக்கு அனுப்பவேண்டும்.

கடைசியாக எல்லோருடைய புத்திக்கும் கிளர்ச்சி கொடுத்து முன்னுக்குச் செல்லும் படிச்செய்யும் பரமாத்மாவுக்குச் சரணமடைந்து சகல பாரதீய பந்துக்களுடைய உள்ளத்திலும் கலியாணகரமான புத்தியின் பிரேரணை செய் யும்படி அவரைப் பிரார்த்தித்து, இந்த ஜபமென் னும் மகா யக்ஞானுஷ்டானத்தைப் பற்றிய இவ்வியாசத்தின் முற்பகுதியை ஸாதுஸந்தர் களுடைய திருவடிகளுக்கு அர்ப்பணம் செய் கிறேன். அவர்கள் அருள்புரிந்து ஆசீர்வதித்து என்னையும், சகல தீனர்களையும் உத்தரிப்பாராக!

"நாமத்தின் பலத்தால் ஒருபோதும் பயப் படாமல், கலிகாலத்தின் தலையில் அடித்து விட்டல் நாமத்தைப்பாடி நர்த்தனம் செய்து

வைகுண்டத்திலிருக்கும் தேவனுகிய வனமாலி யை இந்த கீர்த்தனத்தில் கொண்டுவந்து நிறுத்தி, அன்புடன் ஆலிங்கனம் செய்வோம். அதில்தான் நிகரற்ற சுகமும் கொண்டாட்டமு மிருக்கிறது!''—(ஸாவந்தாமாளி)

"நிர்விகற்பமான சித்தத்துடன் நான் உன் நாமத்தைச் சொல்லிப் பாடினேனுனல் நீ தானு கவே ஓடிவருவாய்''

—நாமதேவர்

ராமசந்திர கிருஷ்ண காமத் சந்தகட்கர் மா செல் (கோவா).

ஓம் தத்ஸத் ஸ்ரீ ஸத்குருப்பிரஸன்னம்.
முற்பகுதி முற்றும்.
பிற்பகுதி.

(17) முற்பகுதியில் எண்ணிக்கையுடன் கூடிய நாம ஜபத்தின் சிரத்தையுடன் கூடிய அநுஷ்டானத்தைச் செய்து அநுபவத்தை அடைந்த நாமயோகிய, ஹரிபக்த பாராயண ரான வாமன பீமராவ் ஏஜாவீகர் முரகோட் அவர்களுடைய விஸ்தாரமான அநுபவத்தை கொடுக்கப்பட்டிருக்கின்றது. இப்பொழுது இந்த நிருபத்தில் சில இதர ஜனங்களுடைய அநுபவச் சுருக்கமாகக் கொடுக்கப்பட்டு, நாமதாரகர்களுக்கு (நாமத்தை தரிக்கப்பட்ட வர்களுக்கு) மிகவும் உபயோகமான சில முக் கிய விஷயங்களைப்பற்றி சர்ச்சை (ஆராய்ச்சி) செய்யப்பட்டிருக்கின்றது. முன்னுக்குச் சொல் லப்படும் பெயர்களுள் ராஜ ஸ்ரீ விடோபா நாகுந் தகர் என்பவரை மாத்திரம் நேரில்பார்த்து, அவர் தம் திருவாய் மலர்ந்து சகல சங்கதி களையும் சொல்லியிருக்கின்றனர். (அதற்கு முன் இந்த நாம ஜபத்தை முக்கியமாக நடத்தி வந்த சாந்த குண கம்பீரரான ராமசந்திர பால கிருஷ்ண காமத் அல்லது காடப்பா அண்ணு அவர்கள் மூலமாக அவருடைய சங்கதியைக் கேள்வி யுற்றிருந்தேன்.) மற்றவர்களுடைய அநுபவத்தைப்பற்றி ஹரிபக்தி பாராயணரான வாமனராவ் அவருடைய டைரி (Dairy) யிலிருந்து பைல்ஹொங்கல் என்னும் ஊரில் பிரசித்திபெற்ற வியாபாரி கிருஹஸ்தர் பரம குருபக்தரான ஸ்ரீயுத் குருநாத் பாளாஜி வேத நாளகர் அவர்கள் எழுதியெடுத்ததை எழுதப் பட்டிருக்கிறது. ராஜ ஸ்ரீ. விடோபா நாகுந் தகர் அவர்களும் தான் சுயமாக, ஒழுங்காக, எழுதிவைத்த டைரிகளை நோக்கப் பார்த்திருக் கின்றமையால், அவற்றிலுள்ள சங்கதிகளையே இங்கு முதலில் தருகிறேன்.

(1) விடோபா நாகுந்தகர் நந்தகட் ஸாங் கலீ ஸம்ஸ்தானத்தில் சஹாபூர் முனிசீப்பு ரா. ஸா. பலஸோர்கர் அவர்கள் வீட்டு சுயம் பாகியாவர், சகம் 1840-இல் நான் இவரை சந்தித்தேன்.—சில வருஷங்களுக்கு முன் இவருக்கு ஓர் விதமான நோய் வந்தது. கை கால் எல்லாம் திடீரென்று வீங்கி, பொறுக்க வொண்ணு வேதனையுண்டாயிற்று. நாட்டு வைத்தியம், ஆங்கில டாக்டர்களுடைய வைத் தியம் எல்லாம் பார்த்தாய் விட்டது. நோய் குணப்படவில்லை. கடைசியாய் பெல்காமில் சிவில் ஆசுபத்திரியிலிருக்கும் டாக்டர் துரையி னிடத்திலும் வெகுநாள் மருந்து சாப்பிட்டுப் பார்த்தாயிற்று. குணமொன்றும் காணப்பட படவில்லை. ஆதலால் உயிரை வெறுத்து, காசீ க்ஷேத்திரத்திற்குப் போய் தேகத்தை விட வேண்டுமென்று தீர்மானித்து, அவர்தன் ஊரைவிட்டுப் புறப்பட்டு, முரகோடிலிருக்கும் தனக்கு அறிமுகமுள்ள ஜனங்களை யெல்லாம் பார்த்துவிட்டுப் போகவேண்டு மென்று அங்கு வந்தார். அவருடைய சங்கதியை அறிந்து ஹரிபக்திபாராயணரான ராமசந்திரபாலகிருஷ் ணர் அல்லது காடப்பா அண்ணு காமத் அவர் கள் அவரைநோக்கி "அப்பா! நீயோ இப்பொ ழுது நிராசையடைந்து சாவதற்காகப் போய்க் கொண்டிருக்கிறுய்; ஆனுல் நான் ஒரு ஔஷ

தம் சொல்லுகிறேன். அதை நீ செய்து பார்ப்பாயா? நிஷ்டையுடனும் உறுதியுடனும் செய்யவேண்டும்'' என்றார். அதற்கவர் "மருந்து சாப்பிட்டோ நான் அலுத்துப் போயிருக்கிறேன். ஆனபோதிலும் தாங்கள் இவ்வளவு கவலையுடன் சொல்லுகிறபடியால், தங்களுடைய மருந்தைக் கடைசி மருந்தென்று சேவித்துப் பார்க்கிறேன். அதன்பிறகு என்னுடைய விதி! எங்கு கிடைக்கிறது அம்மருந்து? என்னவிலை? அது எப்படிச் செய்வது? எல்லாவற்றையும் சொல்லுங்கள்'' என்றார்.

காடாப்பா அவர்கள் சொன்னார்: "அப்பா, இந்த ஔஷதம் கடையில் கிடைக்கக் கூடியதன்று. அதற்குப் பணம் தேவையில்லை. மிகவும் சுலபமாக விருக்கின்றது. விசுவாசத்துடனும் உறுதியுடனும் செய்வாயாகில் சொல்லுகிறேன்.''

விடோபா சொன்னார்: "பணம் தேவையில்லை, மிகவும் சுலபம் என்கிறீர்கள். அப்படியானால் அவசியமாகச் சொல்லுங்கள்.''

அவருடைய அந்தப் பரிதாபகரமான நிலைமையையும் உறுதியையும் கண்டு காடாப்பா அவர்கள் அவருக்கு நான்கு எழுத்துக்களுடைய மந்திரத்தை உபதேசித்து அதை எப்பொழுதும், ஆனால் எண்ணிக்கைவைத்து, ஜபம் செய்யச் சொன்னார். முற்பகுதியில் சொன்னபடி ஒவ்வொரு கோடியில் ஜாதகத்திலிருக்கும் ஒவ்வொரு ஸ்தானமாக சுத்தியடைகிறதென்பதை அவருக்குச் சுருக்கமாகச் சொல்லி, 'முதற்கோடியில் தனுஸ்தானத்தின் சுத்தியின் அநுபவம் வந்தே தீரவேண்டும். உங்கள் வியாதி நிவர்த்தியாகத்தான் வேண்டும்' என்று உறுதியாக வற்புறுத்திச் சொன்னார். ஆயிற்று. "திரிவிததாபத்தினால் பரிதபித்தவன் பரமார்த்தத்திற்கு அதிகாரியானான்'' என்று ஸ்ரீ ஸமர்த்தர் சொல்லியபடி, இவர் ஏற்கனவே அவ்வியாதியால் வருந்தியவர், லௌகிக ஔஷதோபசாரங்களெல்லாம் செய்து சலித்தவர். ஆதலால் அவருக்கு உடனே சிரத்தை உண்டாய், நாம ஜபானுஷ்டானத்தைச் செய்ய அதிவேகமாக ஆரம்பித்தார். சங்கியையை விட வேறு ஏதாவது சக்தி இருக்குமாகில், அது இந்தத் தீவிரமான வேகத்தில் இருக்கிறதென்று கருதவேண்டும். அன்றி இத்தகைய தீவிரமான வேகம் உண்டாவதற்காகத் தான் சங்கியை தேவையாயிருக்கின்றது என்று சொல்லலாம். நிற்க.

கடவுள் கிருபையால் மெல்ல மெல்ல நோய் அநுகூலப்பட்டுக்கொண்டு வந்து (நீங்கிக் கொண்டேவந்து) கடைசியில் லௌகிக ஔஷதோபசாரமின்றியே முற்றிலும் சௌக்கியமாயிற்று! ஆரோக்கியத்துடன் அவருடைய விசுவாசமும் விருத்தியடையலாயிற்று. இந்த நாமானுஷ்டானத்தின் உண்மையான சக்தியே இவ்வாறிருக்கின்றது. இரண்டாவது கோடியில் அவரை ஷெ முனிசீப்பு அவர்கள் வீட்டு சுகமான வேலைக் கிடையாது. சம்பளத்திற்குத் தக்கவேலைகிடைத்தது. யஜமானனுக்கு இவர் பேரில் வெகு அன்பு. ஆதலால் அவர் வீட்டில் ஓர் அதிகாரியைப்போல் இருக்கலானார். இரண்டாவது கோடியில் தனஸ்தானத்தின் சுத்தியைச் சொல்லப்பட்டிருக்கின்றது. அதன்படி கையில் பணம் சேர்ந்தது. அதை அவர் நல்ல தானதர்மம் செய்வதில் செலவழித்தார். (இந்த இரண்டாவது கோடியில் அவருக்கு மேற்சொன்ன முனிசீப்பு வீட்டிலேயே கிடைத்ததோ அல்லது வேறு எங்காவது கிடைத்ததோ என்பது சரியாக ஞாபகமில்லை. ஆனால் இரண்டாவது கோடியில் கையில் பணம் சேர்ந்தது. அதை அவர் தர்மகாரியத்தில் வினியோகப்படுத்தினார் என்று கேள்வியுற்றது மட்டும் நன்றாக ஞாபகமிருக்கின்றது.)

தாத்பரியம், ஜபம் செய்யச் செய்ய அவருக்கு அநுபவம் கிடைத்துக் கொண்டே போயிற்று. அதை அவர் ஒழுங்காக எழுதிவைத்திருக்கிறார்; ஏழாவது கோடியிலோ அவருக்கு ஆச்சரியகரமான அநுபவம் கிடைத்தது. அந்தக் கோடியில் 'ஜாயஸ்தானத்தின்' சுத்தியை சொல்லப்பட்டிருக்கிறது. அதன் அநுபவம் பின்வருமாறு:—இவருக்கு விவாகமாயிற்று. ஆச்சரிய மென்னவெனில், இவரைவிட நல்ல யோக்கியதையுள்ள நல்ல குடும்பத்துப் பெண், யாதொரு பிரயாசமுமின்றி இவருக்குக் கிடைத்தனள். பெண்ணுக்கு நகைநட்டு, மணப்பிள்ளைக்குப் பட்டுப் பீதாம்பரம், வெள்ளிச் செம்பு முதலிய சீர் கிடைத்தது. இச்சங்கதி வெகு சமத்காரமாக நடைபெற்றது. அதாவது, முதலில் நிச்சயித்தவான் முதல் நாள் இரவு சீமாந்த பூஜனம் முதலியன முடிந்த பிறகுங்கூட, 'தனக்கு இன்னின்ன சம்பாவனை கிடைக்கவேண்டும், அப்படியானாற்றான் கலியாணப் பந்தலுக்கு வருவேன். இல்லாவிடில் வரமாட்டேன்' என்று சொல்லியனுப்பினான். அவன் கேட்டதெல்லாங் கொடுக்க மாமனாருக்கு அதிக கஷ்டமாயிருந்தது. கலியாணத்திற்காக வந்திருந்த பெரியவர்களெல்லோரும் எவ்வளவோ மத்தியஸ்தம் செய்து பார்த்தனர். அவனொன்றும் தன் பிடிவாதத்தை விட்டவனன்று. பெண்ணின் தகப்பனுக்கு அதிக சங்கடமுண்டாய் சுய ஜாதியிலேயே வேறு யாராவது ஏழைவரன் கிடைத்தாலும், அவனுக்குத் தன் மகளைக் கொடுத்து விடவேண்டும், முகூர்த்தம் தவறவிடக் கூடாது. என்று தோன்றியது. அவன் தன் தீர்மானத்தை எல்லோருக்கும் தெரிவித்தான். யோசித்துப் பார்த்தபோது இந்த நம்ம விடோபாவைத் தவிர வேறு யாரும் அகப்படவில்லை. பிறகு முனிசீப்பு அவர்களை தாட்சண்ணியத்தில் சிக்கவைத்து, அவருடைய தாட்சண்ணியத்தினால் விடோபாவை அழைத்து வந்து பாணிக்கிரகணம் செய்விக்கப்பட்டது! அதனால் அவருடைய நாமநிஷ்டை எள்ளளவும் குறையவில்லை. அவருடைய நாம ஜபம் ஓய்வின்றி நடந்து கொண்டிருக்கின்றது. முதலில் சகாமபுத்தியுடன் ஆரம்பிக்கப்பட்டு இப்பொழுது அது நிஷ்காம விருத்தியுடன் நடந்து வருகிறது. ஆரம்பத்தில் சங்கியை வைக்கும் பொழுது மாலையினால் எண்ணிக் கொண்டிருந்தார். இப்பொழுது கைவிரல்களின் ரேகைகளாலும், சிற்சில சமயங்களில் கடியாரத்தின் உதவியாலும் சங்கியை எடுத்து வருகிறார். நாளொன்றிற்கு 50, 60 ஆயிரம் ஜபம் செய்து அதை ஒழுங்காகக் குறித்து வைக்கிறார்.)

அதன்பிறகு (சகம் 1845) சந்தித்த பொழுது அவர் தன்னுடைய அநேக அநுபவங்களை எழுதிவைத்த பெரிய டைரி (Diary) யை எனக்குக் காண்பித்தனர். அதில் ஓர் மகத்துவமான சங்கதி சொல்லப்பட்டிருக்கின்றது. அதாவது, தனக்கு இப்பொழுது எங்கு பார்க்கினும் நீலவர்ணமான பிரகாசம் காணப்படுகிறது. தன்கைளும் நீலமாகவேதான் காணப்படுகின்றன. யாராவது மனிதன் அருகில் வந்தால் உடனே அவன் இன்னானென்று அறிய முடிவதில்லை; நீலமான பிரகாசத்தின் புஞ்சம் (திரட்டு) காணப்படுகிறது. சற்று நேரம் உற்றுப்பார்த்த பிறகு இது இன்னாரென்று தெரிய வருகிறது! நித்திரையிலிருந்து எழுந்தால் முன்போல் வாய் நாவு நாற்றம் ஒன்றுமிருப்பதில்லை. அது எப்பொழுதும் தித்தித்துக் கொண்டு (மதுரமாக) இருந்து ருசிகரமாகவிருக்கின்றது; படுத்துக்கொண்டபிறகு படுக்கையின் நாற்புரத்திலும் நீலவர்ணமான அழகிய விஷ்ணுமூர்த்தி காணப்படுகிறது; சிற்சில சமங்களில் அது தன்னைப் பார்த்துச் சிரிக்கிறது

முதலியன. சாராம்சமென்னவெனில் முன்பு அவர் நாமத்தை சகாம புத்தியுடன் ஜபித்துக் கொண்டிருந்தார். இப்பொழுது நிஷ்காம புத்தியுடன் செய்துவருகிறார். இவ்வாறே ஓய்வின்றி நடந்து வந்து, அபத்தியம் ஒன்றும் ஏற்படாமலிருந்தால் இம்மனிதன் சீக்கிரத்திலேயே ஓர் பெரிய சாட்சாத்காரமுள்ள சாது புருஷராய் விடுவார். நிற்க, மற்றவர்களுடைய அநுபவத்தை ஒப்பிட்டுப் பார்த்தால் ஷை (மேற்படி) அநுபவத்தை விட ஒன்றும் அநுபவம் பொருந்தியதாகவில்லை. ஆனபோதிலும் சிரத்தையுள்ளவர்களுடைய அநுபவமென்று ஒரு தடவைப் படித்துப் பார்ப்பது நலமென்று அவற்றை இங்கு தருகிறேன்.

(2) ஹபீப்கான் அபடகட்டி வசிப்பது முரகோட்—இவருடைய மகன் நவஜ்வரத்தால் பீடிக்கப்பட்டு மிகவும் கஷ்டமான தசையிலிருந்தான். இதர ஔஷதோபசாரங்கள் செய்து சலித்தபிறகு கேவலம் நாமஸ்மரணத்தின் கோஷத்தினுற்றான் ஜ்வரம் குறைந்து கொண்டேவந்து அவனுக்கு ஆரோக்கியம் பிராப்தமாயிற்று. (அவனுடைய இஷ்டதெய்வத்தின் பெயர் 'அல்லா'. நாமயோகியாகிய வாமனராவ் எராஜாவீகர் அவர்களுடைய இந்த ஸம்பிரதாயத்தில் மகமதியருங்கூட இருக்கின்றனர் என்பதை முற்பகுதியில் சொல்லியேயிருக்கிறது.)

(3) அப்பாலால் முல்லா முரகோட். இவருடைய மனைவிக்குப் பெண்மக்களே பிறந்துக் கொண்டிருந்தன. அதிகப் பெண்மக்களுண்டானதனால் அவளுடைய மாமனர் சலிப்படைந்து, அவள் கடைசிமுறை கர்ப்பவதியாயிருக்கும் பொழுது அவன் தன் மகனை நோக்கிப பின் வருமாறு வற்புறுத்திச் சொன்னான்: "இனி இவளுக்குப் பெண் குழந்தை பிறந்தால் இவளை நான் வீட்டில் வைத்துக் கொள்ள மாட்டேன், வீட்டைவிட்டுத் துரத்திவிடுவேன்" என்று இம்மனிதன் மிகவும் கண்டிப்புள்ளவனாதலால், இவன் சொன்னபடியே செய்வான் என்பது அப்பாலாலுக்கு நன்றாகத் தெரியும். ஆகையால் அவன் நாமயோகியாகிய வாமனராவுடைய ஔஷதம் என்றால் நாம ஜபத்தை மிகவும் தீவிரமாகச் செய்யலானான். கடவுள் கிருபையால் அவனுக்கு அம்முறை ஆண்குழந்தைப் பிறந்தது. நடு நிசியில் அவன் ராஜஸ்ரீ வாமனராவ் வீட்டிற்கு ஓடிவந்து, தூங்கிக் கொண்டிருந்தவரை எழுப்பி அச்சங்கதியை அவன் வெகு சந்தோஷத்துடன் சொன்னான். வாமனராவ் உடனே அதைத் தன் பெரிய டைரியில் (Diary) குறித்துக் கொண்டனர்.

(4) நரஹரி குலகாணி, ஸௌதலதே—நாமஜபத்தைச் செய்ததனால் செலவின்றி தீர்த்த யாத்திரை செய்யக்கிடைத்தது. ஸாது ஸத்புருஷர்களுடைய தரிசனமும், அவர்களுடைய சகவாசமும் கிடைத்தது. அவ்வாறே, அவருக்கு அவர் ஊரில் ஓர் எருது முட்டி காலிற்கு ஓர் பெரிய காயம் பட்டிருந்தது. அதை ஆற்றும்பொருட்டு எவ்வளவோ வைத்தியம் செய்தார். ஒன்றிலும் குணப்படவில்லை. சலிப்படைந்தார். பிறகு நாமஜபத்தின் அநுஷ்டானமே தீவிரமாக வாரம்பித்தார். பிறகு மருந்து ஒன்றும் இல்லாமலே அந்தக் காயம் ஆறியது, என்று அவரிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது முதலியன.

மேனாட்டுக் கல்விகற்ற பண்டிதர்கள் இதை எப்படி வேண்டுமானாலும் திருஷ்டாந்தப்படுத்திக் கொள்ளட்டும். இங்கு தர்க்கத்தின் காரியமில்லை, சிரத்தையின் காரியந்தான் இருக்கிறது. சிரத்தையினால் ஓர் விதமான 'தர்க்கத்திற்கெட்டாத' சக்தி யொன்று உற்பத்தியாய்க் கொண்டிருக்கிறது.

'இதை அநுபவத்தால் அறியக் கூடியதே யொழிய பேசக்கூடியதன்று' நிற்க.

இவ்வாறாக நூற்றுக்கணக்கான ஜனங்களின் அநுபவத்தை நம் யோகியாகிய வாமனரா வுடைய புஸ்தகத்தில் எழுதப்பட்டிருந்தது. ஆயிரக்கணக்கான ஜனங்களுடைய அநுபவம் அவரவர்களுடைய மனதிற்குத் தெரிந்திருக் கின்றது.

ராஜ ஸ்ரீ கோபால திரியம்பக தாண்டேகர், பட்டு ஜவுளி வியாபாரம், ஸூரத். இவருடைய நாம ஜபானுஷ்டானம் கடந்த இரண்டு மூன்று தபங்களாக (1 தபம் = 12 வருஷம்) நடந்து கொண்டிருந்து (என்றால் நம்முடைய இந்நிரு பம் வெளியாவதற்கு முன் முதற்கொண்டு) அவருக்குக் கிடைத்த அநுபவத்தின் பெரும் விஸ்தாரமான கடிதம் ஒன்று அவர் அனுப்பி யிருக்கின்றனர். அதுவும் நினைத்துப் பார்க்கக் கூடியதாயிருக்கிறது. பூனாவில் ஓர் பென்ஷன ரும் நமது இந்நிருபத்தைப் படித்த பிறகு நாம ஜபானுஷ்டானத்தை ஆரம்பித்தனர். அவ ருடைய ஓர் செல்வப்புதல்வியை அவளுடைய மாமனார் பிறந்தகத்திற்கு அனுப்புவதேயில்லை. அதனால் அவருக்கும் அவளுடைய அன்னைக் கும் மிக்க வருத்தமாயிருந்தது. ஜபானுஷ் டானத்தை ஆரம்பித்தபிறகு சொற்ப தினங் களில் அவள் மாமனார் தானாகவே மருமகளைப் பிறந்தகத்திற்கு அனுப்பினான். அவருக்கு மட்டற்ற ஆனந்த முண்டாயிற்று. அவ்வாறே முன்பு ஜனங்களிடத்தில் மூழ்கிப்போன பணம் இனிக்கிடைக்காதென்று நிராசை யடைந்த பிறகு, சிலமாதங்களிலெல்லாம் திரும்பிக் கிடைத்தது. அவருடைய ஓர் நண்பனுக்கு அவருடைய ஓர் மகத்துவமான காரியம் சித்தி பெறும்பொருட்டு தனது ஓர் கோடி ஜபத்தை அவனுடைய கையில் தண்ணீர் விட்டு அர்ப் பணம் செய்தார். அதனால் அவருடைய காரி யம் சித்திபெற்றதென்றும் கடிதம் வந்திருந் தது. இத்தகைய கடிதங்கள் எத்தனையோ வந் திருக்கின்றன. இச் சிறு புத்தகத்தில் அவற் றைப் பற்றி எவ்வளவு தூரம் வர்ணிக்க முடி யும்? ஒரு சோற்றுப் பருக்கையின் பேரில் அன் னம் பக்குவமானதை அறிவதுபோல், சிரத்தை யுள்ளவர்களுக்கு இத்தனை உதாகரணங்கள் போதுமாயிருக்கின்றன. சிரத்தையுடன் ஜபானுஷ்டானத்தை ஆரம்பித்து அதன் அநுப வத்தைப் பார்க்கவேண்டும். ஜனங்களுடைய வீண்வார்த்தைகளைக் கேட்பதில் எவ்வளவு ஆயுளைக் கழிப்பது?

* * * *

(தொடரும்.)

# "முரளி" சரித்திரம்.

முன்னொரு காலத்தில் வேதபுரமென்னும் ஓர் ஊரில் அந்தணரொருவர் வசித்து வந்தார். அவர் தன்னுடைய மனைவியுடன் இம்மை மறு மை சுகங்களை அனுபவிப்பதற்கான கருமங் களை நடத்திவருநாளில், அவர்களுக்கு மக்கட் பேறில்லாக்குறை மிகுந்திருந்தது.

"பெறுமவற்றுள் யாமறிவதில்லை யறிவறிந்த
மக்கட் பேறல்ல பிற" குறள்

என்றபடி, அவர்கள் ஒரு மகவைப் பெறுதற் பொருட்டு சங்கடங்களைத் தீர்ப்பவனை வெங் கடரமணனை வெகுகாலம் துதிக்க, அதன் பய னாய் அவ்வந்தணர் மனைவி கருவுற்றனள். ஐயி ரண்டாந்திங்களில் ஒரு சுபதினத்தில் அம்மாது கருவுயிர்த்து ஒரு ஸ்த்ரீ ரத்தினத்தை ஈன்ற னள். உடனே அவ் அந்தணர் மகா சந்தோஷத் துடன் கோதானமும் பூதானமும் மற்றும்

அநேக தானங்களும் பிராமண சந்தர்ப்பணைகளும் செய்தனர். ஜனித்த மகவுக்கு "முரளி" என்னும் திருநாம மிட்டனர். முரளி நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் சுக்கிலபக்ஷ சந்திரனைப்போல் வளர்ந்து வருவாளாயினள்.

அவள் விளையாடும்போது சாதாரண பாலிகைகளைப்போல் மண்ணையும் கல்லையும் வைத்து விளையாடாமல், ஸ்ரீகிருஷ்ண விக்கிரகத்தை வைத்துப் பூஜித்து விளையாடுவாள். அவள் தான் பாலிகைப் பருவத்தை யடையு முன்பே தன்னுடைய பிதாவினிடத்தில் வேதாகம சாஸ்திரங்களனைத்தையும் பயின்றாள்.

இப்படி முரளி அநேக வித சாஸ்திராதிகளைக் கற்று வரும் நாளில், சண்டாளனொருவன் வேதாத்தியயனம் செய்யும் விருப்பமுடையவனாய், மார்பிலே பூனூல் தரித்து, நெற்றியிலே விபூதியிட்டு, இடையிலே பட்டுக்கரை வேஷ்டி கட்டி, சங்கர தீக்ஷிதனென்ற போலிப் பெயருடன் ச்ரேஷ்டனைப்போல் முரளியின் தகப்பனாகிய வேதமூர்த்தி தீக்ஷிதரிடம் வந்தான்.

வேதமூர்த்தி தீக்ஷிதர் அவனை நோக்கி: "சிறுவனே! நீ யார்? எந்த ஊர்? உனது பெயரென்ன? உன் தாய் தந்தையர் யாவர்?" என்று வினவ, அப்பஞ்சமன் அவரை நமஸ்கரித்து, அஞ்சலி ஹஸ்தனாய், "என் பெயர் சங்கரன், யான் தங்களிடம் வேதாத்தியனம் செய்ய வந்தேன்" என்றனன். இவ்வாறு உரைத்த சிறுவனை வேதமூர்த்தி ஆதரித்து, மகா சந்தோஷத்துடன் சாஸ்திரங்களை அவனுக்குக் கற்பிக்கலாயினர்.

இப்படியிருக்கு நாளிலே முரளிக்கு யுக்த வயது வந்தது. அப்போது ஒருநாள் வேதமூர்த்தி முரளியை அழைத்து "குழந்தாய்! உனக்குகந்த கணவன் யார்? கொஞ்சமும் சங்கோசமின்றி என்னிடம் கூறுவாய்" என்றார். முரளி தகப்பனை நோக்கி, "ஹே பிதா! எனக்குத் தக்க புருஷர் சங்கா தீக்ஷிதரேயாவர்" என்றனள். அதன்படியே வேதமூர்த்தி ஒரு சுபதினத்தைக் கணித்து, முரளியை சங்கர தீக்ஷிதனுக்குப் பாணிக்கிரகணம் செய்வித்தார். அச்சுப முகூர்த்தத்தை நடப்பிக்கப் பல ஊர்களினின்றும் பந்து மித்திரர்களும் மற்றும் வேதோத்தமர்களும் வந்திருந்து வதூவரர்களை ஆசீர்வதித்துப் பின் தக்ஷிணை தாம்பூலம் பெற்றுத் தமதிருப்பிடம் சென்றனர்.

கொஞ்ச காலத்திற்குப் பிறகு, ஒரு சுப தினத்தில் முரளி புஷ்பவதியானாள். அதன் பின்னர் ஒரு நன்னாளில் முரளிக்குச் சாந்தி முகூர்த்தம் நடந்தது. தம்பதிகளைப் பள்ளியறையில் விட்டபோது, சங்கர தீக்ஷிதன் முரளியை நோக்கி "பெண்ணே! என்னைத் தீண்டாதே" என்றான். முரளி நான் என்ன பிழை செய்தேன்? தயவு செய்து மன்னிக்க வேண்டும். நான் தங்களுடைய ஆக்ஞையை ஒரு போதிலும் மீறியது கிடையாதே" என்றாள். சங்கரன், "இப்போது நான் உன்னைக் கூட்டிச்சென்றால் என் தாய் தந்தையரென்னை என்ன சொல்லுவார்களோ? நான் மறுபடி இவ்விடம் வந்து உன்னை யழைத்துப் போகிறேன்" என்றனன். இதைக்கேட்ட முரளி மிகவும் துக்கித்தாள். "முற்ஜன்மத்தில் என்ன பாபம் செய்தேனோ? என் கதி இவ்வாறாகி விட்டது. என்னைத் தயவு செய்து தங்களுடனழைத்துப் போகவேண்டும்" என்று தன் கணவனை வேண்டிக்கொண்டாள். அவன் மனங்கரைந்து, "பெண்ணே! நீ துக்கிக்காதே. சீக்கிரம் போய் உனது தாய் தந்தையரின் உத்திரவு பெற்று வா, போகலாம்" என்றான். உடனே முரளி தனது பெற்றோரிடம் வந்து, அவர்களை வணங்கி, "நான் புக்ககம் போய் வருகிறேன், உத்திரவளியுங்கள்" என்றாள்.

அவர்கள், "முராளி! புருஷனகம் போய் வா. அங்கே நீ மிகவும் புத்திசாலியாக இருக்கவேண்டும். மாமனர், மாமியார் வார்த்தையை மறுக்கக்கூடாது. கீர்த்தி பொருந்திய இவ்வீட்டில் பிறந்த நீ அபகீர்த்தி யொன்றும் பெறாமல் சுகமாய் வாழ்வாயாக" என்று புத்தியுரைத்து, ஆசீர்வதித்தனுப்பினார்கள்.

பின்னர் முராளி சங்கர தீக்ஷிதனுடன் கூடத் தன் மாமியாரகம் சென்றாள். போகும் வழியில் சங்கர தீக்ஷிதனுக்குத் தாகமெடுக்க, அவன் முராளியை நோக்கி, "பெண்ணே! தாகமெடுக்கின்றது. கொஞ்சம் தண்ணீர் கொண்டுவா" என்றான். அதன்படியே முராளி கையில் ஒரு செம்பேந்தித் தண்ணீர் கொண்டு வரச் சென்றாள். காடெல்லாந்திரிந்து கடைசியில் ஒரு தடாகத்தைக் கண்ணுற்று அதனையடைந்து தண்ணீர் மொண்டாள். அப்போது சங்கர தீக்ஷிதன் அவள் பின்னால் வந்து, அவளையத்தடாகத்தில் தள்ளி விட்டுத் தன்னுடைய சேரிக்குச் சென்றான்.

கிணற்றில் தள்ளப்பட்ட முராளியானவள் மூர்ச்சித்துப்பின் தெளிந்து, "ஹே ஈச்வரா! பதிக்குப் பணிவிடை செய்ய முடியாமல் போய் விட்டதே" என்று ஆபத்பாந்தவனான ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவைப் பிரார்த்தித்தாள். "அபலையான எனக்கு திக்கு யாரிருக்கிறார்கள்! இக்காட்டில் என்னைக் காப்பதற்கு ஒருவரையுங் காணேனே. திரௌபதியின் மானத்தைக் காக்க வஸ்திரங்களை அக்ஷயமாய் அளித்த அநாத ரக்ஷகனே! ஆதி மூலமே என்றழைத்த கஜேந்திரனுக்கு மோக்ஷமளித்த பக்த ரக்ஷகனே! என் முறைகளுக்கெல்லாம் நின் மனமிரங்கவில்லையோ? என் மனங்கரைந்துன்னைத் துதிக்கின்றேனே! எனதுள்ளத்தை நீ இன்னுமறியவில்லையோ? அல்லது அறிந்தும் வாளாவிருக்கின்றனையோ? பன்முறை வேண்டியும் பக்தி குறைவென்றெண்ணி என்னை உய்விக்கத் திருவுளமில்லையோ?" என்று பலவிதமாய் முராளி துக்கிக்க, இவளுடைய பக்திக்கு மெச்சி ஸ்ரீ கண்ணபிரான் பிராமண ரூபத்துடன் அவளெதிரில் பிராப்தமாயினர். அவர் முராளியை நோக்கி, "குழந்தாய்! நீ யார்? இங்கெப்படி வந்தாய்? உனக்கெப்படி இவ்விக்கட்டு நேர்ந்தது? உனக்குத் தாய் தந்தையரில்லையோ? உன் புருஷனெங்கே?" என்று வினவினர்.

முராளி அவ்வந்தணரை நோக்கி, "ஹே, பிராமணோத்தமா! நான் என் பதியுடன் இவ்வாரண்ணியத்தின் வழியாய் வந்துகொண்டிருந்தேன். அப்போது என் கணவர் தாகவிடாய் தீர்க்கத் தீர்த்தம் கேட்டார். நான் அவருக்குத் தண்ணீர் கொண்டுவர இத்தடாகத்திற்கு வந்தேன். அப்போது கால் தவறி இதில் விழுந்து விட்டேன். என்னைத் தாங்கள் வெளியிலெடுத்து விட்டால் நான் என் கணவனுக்குத் தீர்த்தம் கொண்டு கொடுப்பேன்" என்றாள். இதைக் கேட்ட அவ்வந்தணர் அவளைக் கரை யேற்றி அந்தர்தானமாயினர். முராளி திரும்பிப் பார்க்க அங்கே யாருமில்லை. உடனே அவள், "வைகுண்டேசரே நம்மையிப்போது கரை சேர்த்தார்" என்றெண்ணி, பரந்தாமனைத் துதித்துப் பரவசமடைந்தாள்.

பின்னர் முராளி வனமெல்லாம் திரிந்தும் தன் கணவனைக் காணாமல் வருந்தி, "புருஷத்துரோகியாய் விட்டேனே; தாகத்தால் தவித்துக்கொண்டிருந்த நாதன் போனவிடந் தெரியவில்லையே!" என்றேங்கினாள். பிறகு வனங்களெல்லாந் தாண்டித் தன் தகப்பனாரை அடைந்தாள். தாய் தகப்பனிருவரும் அவளைப் பார்த்து, "அம்மா! நீ இப்படித் தனியாய் வருவதற்குக் காரணமென்ன?" என்று கேட்டார்கள். அதற்கு முராளி, "நான் என் புருஷனுடன் போய்க்கொண்டிருக்கையில், அவர் தாகசாந்திக்காகத் தீர்த்

தம் கேட்டார். நான் அதற்காக ஒரு குளத்தி லிறங்குகையில் கால் தவறி அதில் விழுந்து விட்டேன். அப்போது ஒரு பிராமணர் என் னைக் கரையேற்றினர். நான் என் பர்த்தாவைக் காணுமலிங்கு வந்தேன். என் பதி இங்குவந்தி ருக்கிறாரா? சொல்லுங்கள்" என்று கேட்க, அவர்கள், "உனது புருஷன் இங்கு வரவில்லை யாயினும் நாங்களிங்கிருக்கும்போது உனக் கென்ன குறை?" என்று கூறிச் சமாதானம் செய்தார்கள்.

சேரிக்குச் சென்ற சங்கரன், "மூராளியைத் தடாகத்தில் தள்ளி விட்டோமே, அவளுக்கு யாது நேர்ந்ததோ? அவளைப்போய்ப் பார்த்து வரவேண்டும்" என்றெண்ணியவனுய், அவளை வாவியில் தள்ளிய காடெல்லாந் திரிந்தும் அவ் வனிதையைக் காணுமல் வேதபுரத்திற்கு வந் தான். அப்போது வந்த மாப்பிள்ளையை நோக்கி வேதமூர்த்தி, "சங்கரா! சந்தியா வந்தனஞ் செய்து போஜனத்திற்கு வா," என்றழைத்தார். போஜனமான பின்னர் தாம்பூலம் தரித்துச் சங் கரனைப் படுக்கப் போகும்படிசொன்னர்.

படுக்கையறையில் வந்த புருஷனை மூராளி நமஸ்கரித்து, "நாதா! என்னை என் காட்டில் விட்டுவிட்டுப் போய்விட்டீர்? தாகத்திற்குத் தண்ணீர் கொண்டுவரவில்லை யென்ற கோபமா? என்னை ஆதரித்து அனுக்கிரகிக்க வேண்டும்," என்று வேண்டிக்கொண்டாள். அப்போது சங்கரன், "மூராளி! யானென்ன செய்வேன்? யானெரு சண்டாளன்—பஞ்சமன்—மகாபாபி. அதனல் உன்னைத் தீண்ட யான் அருகனல்லன். என்னை மன்னித்து ஆதரித்தல் வேண்டும்" என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டான். ஐயோ, பாபம்! என் செய்வாள் மூராளி! இதைக் கேட்டதும் அவளது சரீரம் அவளை அறியாம லே நடுங்கி வியர்த்தது. "ஹே ஈசா! பயத்தைப் போக்கும் பரந்தாமா! இப்புவியில் உன்னைத் தவிர இனி எனக்கு வேறே கதியில்லை" என்று பலவிதமாய்க் கடவுளைத் தியானித்தாள்.

இப்படிக் கடவுளைத் துதித்துத் தன் தகப்ப னிடம் வந்து, "தர்மசாஸ்திரங்களனைத்தினை யும் கரதலாமலகம் போன்று கசடறக் கற் றறிந்த ஹே பிதாவே! ஒருசிரேஷ்டமான பாத் திரத்தை ச்வானமொன்று ஸ்பரிசித்து விட் டால், அப்பாத்திரத்திற்குப் பரிகாரமென்ன?" என்று வினவ அவர், "அம்மா! அப்பாத் திரத்தை யுடைத்து விடுவதே தக்க பரிகாரம்" என்று பதிலுரைத்தார். மூராளி, "அப்படியா யின் யானே அப்பாத்திரம். என்னை யுடைக்க முடியாது. ஆதலின் அக்கினிப் பிரவேசம் செய்து விடுகிறேன்." என்றனள்.

உடனே யவர் சங்கரனை யழைத்து, "நடந்த சங்கதியென்ன?" என்று வினவ, அவன், "சுவாமி! நான் நீசகுலத்தில் பிறந்தவன். என்னை மன்னித்தருளவேண்டும்" என்றான். அதைக்கேட்ட வேதமூர்த்தி தன் பெண்ணைப் பார்த்து மிகவும் விசாரப்பட்டார். உடனே மூராளி, "யானிவ்வுலகத்தில் வந்த காரியம் முடிந்துவிட்டது. இனி இங்கெனக்கென்ன வேலை? கொடுத்துவைத்தது தான் கிடைக்கும். அதிகமாய் இச்சிப்பதில் பிரயோஜனமென்ன? மறு பிறப்பிலாவது கடவுள் எனக்கு நற்கதி யளிக்கட்டும்" என்று சொல்லி அக்கினிப்பிரவே சத்திற்கு நல்ல வாசனைக் கட்டைகளை அடுக்கு வித்து அவைகளுக்குத் தீமூட்டினாள். அவள் மங்களஸ்னானம் செய்து, பசுமையான வஸ்திரந் தரித்து, மஞ்சள், குங்குமம், வெற்றிலை பாக்கு, எலுமிச்சம்பழம், புஷ்பச் செண்டு முதலியவைகளை மடியில் கட்டிக்கொண்டு அக் கினியை வலம் வந்து அதில் பிரவேசமானாள்.

அப்போது சங்கரனென்ற போலிப் பெயர் வாய்ந்த சண்டாளன் எல்லாப் பெரியோரையும் நமஸ்கரித்து, "நான் மூராளியின் பாதத்தை

யடைகிறேன்" என்று கூறி, முரளி பிரவேசித்த அக்கினியிலேயே தானும் பிரவேசித்தான்.

அச்சமயம் அந்தரத்தினின்றும் புஷ்பமாரி பொழிந்தது; துந்துபி முழங்கிற்று; தேவதைகள் சந்தோஷத்துடன் ஆரவாரித்தார்கள். கடைசியில் நீர்வானம் வருஷித்தது.

உடனே முரளியும் சங்கரனும் இரண்டு மூங்கில் ரூபத்தை யடைந்தார்கள். அதைக் கண்ட வேணுகானனான கண்ணபிரான் முரளியின் பக்திக்கு மெச்சி, மூங்கில் ரூபமான முரளியைத் தனக்குகந்த புல்லாங்குழல் வாத்தியமாக எடுத்துக் கொண்டார். இக்காரணம் பற்றியே அவருக்கு "முரளிகான விலோல முகுந்தன்" எனப் பெயர் வழங்கி வருகின்றது.

மூங்கில் ரூபமான சங்கர தீக்ஷிதனேயோவெனின், ஒரு இடையன் மாடு மேய்ப்பதற்காக எடுத்துப் போயினன்.

சுபம். சுபம். சுபம்.

# பெண்களுக்கு ஏன் விவாகம் செய்யவேண்டும்?

ஸ்ரீமதி K. கமலாம்பாள்.

ஒரு நாள் காமாட்சி தன் சினேகிதியாகிய ருக்மணி வீட்டிற்குச் சென்றாள். அப்பொழுது, ருக்மணி தன் வீட்டுக் கூடத்தில் ஏதோ யோசனையுடன் உட்கார்ந்திருந்தாள். காமாட்சியின் வரவைக் கண்ட ருக்மணி அதிக ஆவலுடன் 'காமாட்சி உனக்கு ஆயுசு நூறு. இப்பொழுதுதான் உன்னை நினைத்தேன். கும்பிடப்போன தெய்வம் குருக்கே வந்தது போலும் தேடப் போன மருந்து காலில் அகப்பட்டது போலும் நீயே வந்துவிட்டாய். ஏது உன்னைப் பார்ப்பதே அபூர்வமாய்ப் போய் விட்டதே? உன்னைக் காணாததினால் நீ ஊரில் இல்லை என்று நினைத்திருந்தேன்' என்றாள்.

காமாட்சி:—காரணமென்ன? எனக்குச் சில நாளாய் உடம்பு அசௌக்கியமாக இருந்தது. இப்பொழுது தான் தேவலை. உன்னைப் பார்த்துப் போகலாமென்று வந்தேன். அதிருக்கட்டும், நீ என்னை நினைத்த காரணம் என்ன?

ருக்மணி:—என்னுடைய கடைசிப் பெண் செல்லத்திற்கு இப்பொழுது 14 வயது ஆகிறதல்லவா? அவள் தற்காலம் பெண் பாடசாலையில் (Girls' School) IV பாரம் படிக்கிறாளென்பது உனக்கும் தெரிந்த விஷயந்தான். அவளுக்கு இவ்வருஷம் விவாகம் செய்யவேண்டுமென்று எல்லோரும் சொல்லுகிறார்கள். நான் அப்படிச் செய்வதற்கு இஷ்டப்படவில்லை.

கா:—ஆனால் நீ அடுத்த வருஷம் செய்யலாமென்று உத்தேசித்திருப் போலிருக்கிறது.

ருக்:—அப்படியில்லை. அவளுக்கு விவாகம் செய்யவே எனக்கு இஷ்டமில்லை.

கா:—ருக்மணி! இதென்ன வேடிக்கை! புது நாகரிகத்தில் இதுவுமொன்றோ? விவாகம் செய்யாமல் வேறு என்ன செய்வதாக யோசனை?

ருக்:—உன்னோடு சேர்ந்து யோசனை பண்ணத்தான் உன்னை நினைத்தேன். புது நாகரிகம் இன்னதென்றும் பழையநாகரிகம் இன்னதென்றும் நான் அறியேன். ஆனால் எனக்குக் கலியாணம் என்ற பேச்சை எடுத்தாலே பிடிக்கவில்லை. கலியாணம் செய்துகொண்ட நாமெல்லோரும் என்ன சுகத்தைக் கண்டோம்?

கா:—உலகத்தில் சுகம் துக்கம் இரண்டும் கலந்தேயிருக்கின்றன. ஆனால் அவரவர்கள்

போன ஜன்மாந்திரத்துப் பாபபுண்ணியங் களுக்குத் தக்கபடி துக்கம் சுகம் என்பது ஜாஸ்தியாகவும் குறைவாகவும் இருக்கும். அதுவே தவிர உலகில் ஒருவருக்காவது துக்கமில்லாமல் சுகமாகவும் சந்தோஷமாக வுமே இருக்க முடியாது. அதுமாதிரி உனக்குத் துக்கம் என்பது எல்லோரைக் காட்டிலும் கொஞ்சம் ஜாஸ்தியாக இருக்க லாம். அதை உத்தேசித்துக் கலியாணமே செய்யவேண்டாமென்று சொல்லலாமா? விவாகமென்பது உன்னுலாவது என்னுலா வது வேறு யாராலாவது உண்டான சமா சாரமா? பகவான் அப்படி ஏற்படுத்தியிருக் கிறுர். எல்லாருக்குமில்லாத புது விஷயம் உன் மனதில் ஏற்பட்ட காரணமென்ன?

ருக்:—சொல்லுகிறேன் கேள். என் மூத்த பெண் லட்சுமியை இரண்டாயிர ரூபாய் செலவழித்துக் கலியாணம்செய்து புக்ககத் திற்கு அனுப்பினேம். எங்கள் விஷயம் உனக்குத் தெரியாதா? நாங்கள் என்ன அதிகப்பணக்காரரா? எப்படியாகிலும் பெண் சௌக்கியமாயிருக்கவேண்டுமென்று எங் கள் அந்தஸ்துக்குமேலேயே செலவு செய் திருக்கிறேம். அவள் புருஷன் பம்பாயில் வேலையாயிருக்கிறுன். அவள் மாமியாரிடம் இருக்கிறுள். மாமியார் சீரும் நகையும் போதாதென்று படுத்தும் பாடு கணக்கு வழக்கில்லை. நமக்கு ஜாஸ்தி செய்யவும் சக்தி இல்லை. இங்கு அழைத்து வருவோமென்ரு லும் விடமாட்டேனென்கிறுர்கள். பம் பாயில் குடித்தனம் வைக்க இப்பொழுது சௌகரியமில்லை என்று அவன் கடிதம் எழுதி விட்டானும். தாயாரில்லாப்பிறந்தகமும், புருஷனில்லாக் புக்ககமுமாயிருக்கிறது அவள் சங்கதி. அவளுக்காக விசாரப்படுவது இவ்வளவென்று சொல்லி முடியாது.

இது இப்படியிருக்க, இரண்டாவது பெண் கோமளத்திற்கும் லட்சுமிக்குச் செய்ததைப் போலவே செய்தோம். அவள் புருஷன் வேசி வீடே கதியென்றிருக்கிறுன். வீட்டிற்கே வருவது அபூர்வம். அப்படி எப்பொழு தாகிலும் வந்தாலும் அடியும் திட்டுந்தான் கிடைக்கும். அவளுக்கு மாமியார் இல்லை என்றபெயர் தான். எட்டு மாமியாருக்குச் சமதையாக பிடாரி போல் ஓர் நாத்தனர் உண்டு. அவள் ஹிம்ஸை சொல்லி சாத்திய மில்லை. அவளை இங்கு அழைத்து வருவோ மென்றுல் உடனே தன் தம்பிக்கு வேறு கலி யாணம் செய்து விடுவதாக அவள் நாத்தனர் பயமுறுத்துகிறுள். அவளை நாம் எப்படி அழைத்து வரமுடியும்? இந்த சங்கதி இப் படியிருக்கிறது.

மூன்றுவதுபெண் சாரதாவை இந்தத்தொந்திரவு களெல்லாம் வேண்டாமென்று மாமியார் நாத்தனர் உபத்திரவமில்லாமலும் பையன் நல்ல யோக்கியனுகவுமுள்ளவனுக்குப் பார்த் துக்கொடுத்தோம். அவனும் அவளை அதிக மேன்மையாக வைத்திருந்தான். நான் முன் இருபெண்களினுடைய கஷ்டத்தை இவ ளால் சற்று மறக்கலாம் என்று நினைக்கும் பொழுது ஈசன் உனக்கும் இவ்வளவு தருமா? என்று சொல்வதுபோல் தலையில் கல்லைத் தூக்கிப்போட்டதுபோல், அவள் புருஷன் வீடு போய் இரண்டு வருஷத்திற் கெல்லாம் அவன் பரலோகம் போய்ச் சேர்ந் தான். முன் இருவர்களும் எவ்வளவு ஹிம் ஸை அடைந்தாலும், வெட்கமில்லாமல் வெளி யில் புறப்படும் போக்கிதையாவது இருக் கிறது. 18 வயதுடைய நம் சாரதாவிற்கு இக்கதி வாய்த்தது தினம் அவளைப்பார்த்து வயிறெறிவது தான் காரியம்.

இப்பொழுது, நாலாவது பெண்ணுகிய செல்லத் திற்குக் கலியாணம் செய்யவேண்டுமாம்.

இது யாருக்குப் பிடிக்கும் நீயே சொல்லு. இப்படிக் கலியாணம் செய்து அநேகவிதத் துன்பத்திற்கும் கஷ்டத்திற்கும் ஆளாவதைக் காட்டிலும் இன்னும் 4, 5 வருஷம் படிக்க வைத்தால் ஏதாவது ஒரு உத்தியோகம் அவசியம் கிடைக்கும். அவளாவது செலவு செய்து கலியாணம் செய்து கஷ்டப்படுவதைக் காட்டிலும் அப்பணத்தை சிறுகச் சிறுகப் படிப்பிற்கு கொடுத்தால் நமக்கும் கஷ்டமில்லை. அதினுல் பிரயோஜனமும் உண்டு. ஐந்து பெண் பிறந்தால் அரசனும் ஆண்டியாவான் என்று சொல்லுகிறுர்கள். அப்படியானுல் எங்கள் சங்கதியைச் சொல்ல வேண்டியதில்லையல்லவா? எல்லாவற்றையும் யோசித்துப் பார்த்தால் பெண்களுக்கு ஏன் விவாகம் செய்யவேண்டும் என்று தான் நினைக்கவேண்டியிருக்கிறது.

கா:—நீ சொல்லியது எல்லாவற்றையும் தெரிந்துகொண்டேன். நீ பெண்களால் அதிகச் சிரமப்பட்டிருப்பதால் உனக்கு இப்படித் தோன்றுவது நியாயந்தான். ஆனுலும் விவாகம் செய்யாமலிருந்தால் அநேக வித இடையூறுகள் உண்டாகுமே.

ருக்:—நாங்கள் இருக்கும் பொழுது, என்ன உண்டாகப்போகிறது? அப்படிப்பட்ட இடையூறுகள் தானென்ன? விவரமாய்ச் சொல், கேட்போம்.

கா:—நீங்கள் இருக்கும்பொழுது பெண்ணுக்கு யாதொரு துன்பமும் இல்லை என்பது உண்மை தான். மனிதர்களாயிருப்பவர்கள் எப்பொழுதும் நிரந்தரமாக இருப்பதில்லையல்லவா? ஆகையால் உங்களுக்குப் பிறகு அவளைப் பாதுகாப்பவர்கள் யார்? முதலில் பெண்களுக்கு தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும் திறமையே கிடையாது. ஒரு பெண்ணுக்குத் தக்க பருவம் வந்தபிறகு பெற்றோர்கள் இல்லாவிடில், அவள் தன் கற்பைக் காப்பாற்றிக் கொள்வது அதிகக் கஷ்டப்படும். ஆகையால் நமக்குப் பிறகு அந்தப் பெண்ணைச் சரிவரப் பாதுகாப்பதற்கே நாம் ஒருவரிடம் ஒப்புவிக்கிறோம். அது தான் விவாகமென்பது; மேலும் தனக்குக் கலியாணம் செய்துகொள்ளவேண்டுமென்ற விருப்பமும் இருக்கலாமல்லவா?

ருக்:—அப்படியிருந்தால் அவர்களுக்குத் தக்க வயது வந்தபிறகு அவர்களே தங்களுக்குத் தகுந்த நாயகனைப் பார்த்துக் கொள்ளட்டுமே.

கா:—நீ சொல்வது மேல்நாட்டு வழக்கம். அவர்களுக்கு அது சகஜம். நம்மவர்களில் யாராவது அப்படிச் செய்து நீ பார்த்திருக்கிறுயா? அல்லது கேட்டிருக்கிறுயா? அப்படிச் செய்வது எவ்வளவு பிசகு! அவளுக்குத் தகுந்த நாயகன் எவன் என்று எப்படித் தெரிந்து கொள்ளுவாள்? ஒருவரைப் பார்த்துப் பேசி அவர் குணத்தைத் தெரிந்து, பிறகு பிடிக்காவிடில் வேறொருவரைத் தேட வேண்டும். இந்துக்களாயிருக்கும் நமக்கு அது கற்பிற்குப் பங்கமல்லவா? ஒருவனைப் பார்த்து அவனையே அடைந்ததாகவே வைத்துக்கொள்ளுவோம். அவன் இச்சை பூர்த்தியானபிறகு அவளை நீக்கிவிட்டால் அவள் கதி என்ன? அதோகதிதான். சட்டப்படி அக்கினி சாக்ஷியாக விவாகம் செய்துவிட்டால் அப்படிச்செய்ய முடியாதல்லவா? இதை விளக்க நான் ஒரு சிறிய கதை சொல்லுகிறேன். அதைக் கேட்டால் விவாகம் செய்யவேண்டியது எவ்வளவு அவசியம் என்பதை நீயே தெரிந்து கொள்வாய்.

ருக்:—'ஆனுல் சொல் கேட்போம்' என்று சொல்ல, காமாட்சி கீழ்கண்ட கதையை ருக்மணிக்குச் சொல்லத் தொடங்கினுள்.

I

முன்னொரு காலத்தில் கலிங்கநாட்டில் சித்திரசேனனென்ற அரசன் செங்கோல் செலுத்தி வந்தான். அவன் ஒரு நாள் தன்னுடைய நந்தவனத்திற்குத் தனித்துச் சென்றிருந்தான். அவ்வூரிலுள்ள ஓர் பெண்ணாகிய ஆனந்தவல்லி என்பவள் தற்செயலாக அவ்விடம் வந்தாள். அவள் அதிக அழகும் மிகுந்த புத்தி கூர்மையும் உடையவள். அவளுக்கு இன்னும் விவாகம் ஆகவில்லை. அவளைக் கண்ட அரசன் அவள்மேல் அதிக ஆசை கொண்டு அவளைப் பார்த்து "பெண்ணே! நீ யார்? உன்னுடைய பெயரென்ன? உன் பெற்றோர்கள் யாவர்?" என்று வினவினான். தான் எதிர்பாராமல் திடீரென்று அரசனைக் கண்ட ஆனந்தவல்லி, அதிக பயமும் ஆச்சரியமும் அடைந்து, பூமிதேவியை நோக்கிக்கொண்டே பின் வருமாறு சொன்னாள்:—

"நான் தங்கள் உத்திரவில்லாமல் இந்த நந்தவனத்திற்கு வந்ததிற்கு என்னை மன்னிக்கவேண்டும். நான் தாய் தந்தையற்ற ஓர் அனாதை. என் பெயர் ஆனந்தவல்லி என்பார்கள்" என்றாள். உடனே அரசன் "மன்னிக்கவேண்டுவது ஒன்றுமில்லை, உன்னைப் போன்றவர்கள் இந்நந்தவனத்திற்கு வந்தாலே எனக்கு மெத்த சந்தோஷம். நான் உன்னைக்கண்டது முதல் உன் மீதில் அதிகக் காதல் கொண்டேன். ஆகையால் நீ என் விருப்பத்திற்கு இணங்கவேண்டும்" என்றான். அவ்வார்த்தையைக் கனவிலும் எதிர்பார்க்காத ஆனந்தவல்லி திப்பிரமை அடைந்து "அரசே! இந்நாட்டையும் அதிலுள்ள குடிகளாகிய எங்களையும் பரிபாலிக்கும் தாங்களே என்னைப் பரீட்சித்தால் நான் என்ன செய்வேன். தங்களுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை" என்றனள். அதைக் கேட்ட அரசன் "பெண்ணே! நான் உன்மீது கொண்டிருக்கும் காதலை நீ அறிய மாட்டாய், நான் உண்மையாகவே கூறுகிறேன். நீ எப்படியும் என் இஷ்டத்தை நிறைவேற்றவேண்டும்" என்றான். அதற்கு அவள் "அரசே, தங்கள் வார்த்தைக்கு மறுத்துப் பேசுவதற்கு மன்னிக்கவேண்டும். நானோ இன்னும் விவாகமாகாத பெண். ஆகையால் எனக்குச் சமானமான கணவனைத்தேடி விவாகம் செய்து கொள்ளவேண்டும்" என்றாள்.

அர:—நான் உனக்குத் தக்க கணவனில்லையா?

ஆன:—நீங்கள் தெரிந்தும் தெரியாத சுத்த முட்டாள்களைப்போல் பேசுவது அழகல்ல. தாங்களோ இந்நாட்டையாளும் அரசர். நானோ யாருமற்ற ஓர் அனாதை. அப்படியிருக்க நம் இருவருக்கும் எப்படிப் பொருந்தும்? அப்படி உங்களுக்குச் சம்மதமானாலும் எல்லோருமறிய என்னை விவாகம் செய்யமுடியுமா?

அர:—(சற்று யோசித்து) நீ சொல்வது உண்மைதான் என்றாலும் உன்னுடைய வாக்குசாதுர்யமான பேச்சைக் கேட்க உன் மேலிருக்கும் ஆசை அதிகரிக்கின்றது. ஆகையால் க்ஷத்திரியர்களுக்குள் நடக்கும் காந்தர்வவிவாகத்தை நாம் இப்பொழுது செய்து கொள்வோம் அதற்கு நீ தயவு செய்து சம்மதிக்கவேண்டும்.

ஆன:—நீங்கள் சொல்வது கொஞ்சங் கூடச் சரியில்லையே! இப்பொழுது நீங்கள் சொல்வதைக்கேட்டு சம்மதித்தால் ஆசை அறுபது நாள், மோகம் முப்பது நாள் என்பது போல் என்னிடத்துள்ள ஆசை குறைந்தால், என்னை வெறுக்க நேரிடுமே. அரைக்காசுக்குப் போன கற்பு, ஆயிரம் பவுன் கொடுத்தாலும் வருமா? இப்பொழுது நான் அழகாயிருக்கிறேனென்று என்னை விரும்புகிறீர்கள். என்மீதுள்ள ஆசை குறைந்தகாலத்தில், தேனீயானது ஒரு புஷ்

பத்திலுள்ள தேன்முழுவதும் குடித்தான பிறகு, வேறு புஷ்பத்தை நாடிச் செல்வது போல் தாங்களும் வேறு அழகிய மாதர்களை நாடிச் செல்வீர்கள். புருஷர்கள் தன்மையே அப்படிப்பட்டது. புருஷர்கள் எத்தனை ஸ்திரீகளை அடைந்தபோதிலும் அவர்களை ஒருவரும் கேட்பதில்லை. அது உலகத்தில் சகஜமாயிருக்கிறது. ஆகையால் நீங்கள் சொல்லுகிறபடி எப்படி நடக்கமுடியும்?

அர:—எனக்கு உன்மீதிலுள்ள ஆசை ஒரு நாளும் குறையாதென்பது நிச்சயம். உனக்கு நம்பிக்கை இல்லாவிடில் சத்தியம் வேண்டுமானாலும் செய்துகொடுக்கத் தடையில்லை.

ஆன:—சத்தியமெல்லாம் இப்பொழுது தான். பிறகு சத்தியமென்பதற்கும் உங்களுக்கும் வெகுதூரமாகப் போய்விடும். எத்தனையோ பெயர்கள் சத்தியம்செய்து அறியாப் பேதைகளாகிய பெண்களை ஏமாற்றிக் கற்பைக் கெடுத்துக் கலியாணமும் செய்து கொள்ளாமல் கைவிட்டு விடுபவர்களைக் கதைகளிலும் வாசித்திருக்கிறேன், எவ்வளவோ பெயர்கள் சொல்லக் கேட்டுமிருக்கிறேன். ஆகையால் சத்தியம் பிரயோஜனமில்லை.

அர:—பெண்ணே! நீ சொல்லுகிறபடியெல்லாம் சிலர் செய்தாலும் நான் அப்படி ஒரு காலமும் செய்யமாட்டேன். நீ என் விருப்பத்திற் கிணங்காவிடில் அதற்குத் தக்கபடி நான் நடந்துகொள்வேன்.

பார்த்தாள் ஆனந்தவல்லி, பாபம் என்ன செய்வாள்! அப்பொழுது இருக்கும் சமயம் ஒரு வேளை தன்னை நிர்ப்பந்தித்தாலும் நிர்ப்பந்திப்பானென்று தோன்றிற்று. வேறு வழியில்லை. ஆகையால் அவள் அரைமனதுடன் "அரசே! நீர் சொல்லுகிறபடி அவசியம் கேட்கவேண்டியதுதானே?" என்றாள்.

அர:—ஆனந்தவல்லி! இன்னும் நீ என்னைச் சோதிப்பது தருமமாகாது. ஆகாயவாணி, பூமிதேவி அறிய, நான் உன் சொல்லை ஒருகாலும் தட்டுவதில்லை. மேலும் உன்னைவிட்டு அரைநிமிஷமும் பிரிவதில்லை. இது சத்தியம்.

பிறகு இருவரும் அவ்விடத்திலேயே காந்தர்வ விவாகம் செய்துகொண்டார்கள். உடனே அரசன் அவளைத் தன் அரண்மனைக்கு அழைத்துச் சென்றான். அன்று முதல் அவ்விருவரும் பாலும் நீரும் போலவும் மலரும் மணமும் போலவும், கரும்பும் ருசியும் போலவும் அதிகப் பிரேமையுடன் வாழ்ந்து வந்தார்கள்.

## II

இப்படியே சுமார் 2, 3 வருஷங்களாயின. பழகப் பழகப் பாலும் புளிக்கும் என்பதுபோல் அரசனுக்கு ஆனந்தவல்லியினிடம் உள்ள காதல் வர வரக்குறைய ஆரம்பித்தது. இப்படியிருக்குந் தருணத்தில் அவள் கர்ப்பமானாள். அதினால் இன்னும் வெறுப்பு அதிகமாயிற்று. தான் விவாகம் செய்துகொண்டவள் கர்ப்பமாயிருப்பாளானால் தனக்குப்பின் தன் அரசை ஆள்வதற்குக் குழந்தை பிறக்குமென்று எவ்வளவு சந்தோஷப்படுவான்? அப்படியில்லாததினால் அவளை வெறுக்க நேரிட்டது. மாதம் ஆக ஆக, அவள் இருக்கும் இடத்திற்குப் போவதையே நிறுத்திவிட்டான். இதனால் ஆனந்தவல்லிக்கு அளவற்ற விசனம் உண்டாயிற்று. இருந்த போதிலும் தைரியத்தைக் கைவிடாதிருந்தனள். சிலநாளைக்குப் பிறகு அவள் பிரசவ உபத்திரவப்பட்டனள். அரசனுக்குத் தெரிந்தும் உதவிக்குக்கூட ஒருவரையும் அனுப்பவில்லை. ஆனாலும் ஏற்கனவே அவளிடம் தாதியாயிருந்த இருவரும் அவளிடம் இரக்கப்பட்டு சமீபத்திலிருந்து வேண்டிய உதவிபுரிந்தனர். சிறிது நேரத்திற்கெல்லாம் கோடி சூரியனுக்குச் சமானமான ஓர் ஆண்குழந்தையைப் பெற்

ளுள். இந்த சுப சமாசாரம் அரசனுக்கு அறிவிக்கப்பட்டது. அப்பொழுதும் அவன் வரவில்லை. இதையெல்லாம் தெரிந்துகொண்ட ஆனந்தவல்லி அநேக விதமாக யோசித்துச் சிறிது நேரத்திற் கெல்லாம் தீர்மானமான ஓர் முடிவிற்கு வந்தாள்.

பிறகு தாதியரைக் கூப்பிட்டு அரசனிடம் சில முக்கிய சமாசாரங்கள் பேசவேண்டியிருப்பதால் அவரை அதிசீக்கிரம் தன்னிடம் அழைத்து வரும்படி சொல்லியனுப்பினுள். தாதிகளும் வேகமாய்ப் போய் அரசனிடம் இச்சமாசாரத்தை உரைக்க அவன் ஆலோசிக்கலானுன். "நான் சுமார் 3, 4 மாதகாலமாக அவளிடம் போவதை நிறுத்திவிட்டேன். அப்பொழுதெல்லாம் என்னை அழைத்து வரும்படி சொல்லாதவள் இப்பொழுது அழைக்கவேண்டிய காரணம் என்ன? ஒருகால் குழந்தையைப் பார்க்கும்படி அழைத்திருப்பாளோ? அப்படியானுல், பிறந்து இன்றைககுச் சரியாகப் பத்துநாள் ஆகிறதே! பிறந்த உடனேயோ அல்லது அதற்குப் பிறகோ வரும்படி சொல்லலாமல்லவா? மேலும் சில முக்கிய சமாசாரம் சொல்ல வேண்டுமென்று சொல்லி அனுப்பியிருக்கிருள். என்ன முக்கிய சமாசாரம்? எப்படியும் போய்க் கேட்டுவிட்டு வருவோம்" என்று அவளிருக்கும் இடத்திற்கு வந்தான்.

அரசன் வரவைக் கண்ட ஆனந்தவல்லி 'அரசே! வரவேண்டும், இவ்வாசனத்தில் அமரவேண்டும்' என்ருள். உடனே அரசன் உட்கார்ந்து 'என்னை அழைத்த சமாசாரம் என்ன? அதைச் சீக்கிரம் சொல்லு. நான் போகவேண்டும்' என்ருன்.

ஆன:—ஆம் வாஸ்தவந்தான், கூடிய சீக்கிரம் சொல்லிவிடுகிறேன். உங்களுக்கு அநேக வேலைகள் இருக்கலாம். அவற்றையெல்லாம் விட்டு விட்டு நீங்கள் இங்கு அதிகநேரம் தாமதிக்க முடியாதென்பதையும் நான் அறிவேன். அதிருக்கட்டும், தாங்கள் முதல் முதலில் என்னைச் சந்தித்து என்னைக் காந்தர்வமணம் புரியும்பொருட்டுச் செய்து கொடுத்த சத்தியங்களெல்லாம் ஞாபகமிருக்குமென்று நினைக்கிறேன். ஏன், அது உண்மைதானே?

அர:—அதைப் பற்றி இப்பொழுதென்ன? என்னை அழைத்த விபரத்தைச் சொல்லு.

ஆன:—இவ்வளவு அவசரப்படுகிறீர்களே! உங்களுக்கு ஞாபகப் பிசகாக இருந்தாலும் இப்பொழுது ஞாபகமூட்டுகிறேன். 'ஆகாயவாணி, பூமிதேவி அறிய நீ சொல்வதை ஒருகாலும் தட்டுவதில்லை. அதுவுமன்றி அரைக்ஷணமும் உன்னை விட்டுப் பிரிகிறதில்லை' என்று சத்தியம் செய்து கொடுத்தீர்கள். நான் அப்பொழுது என்ன சொன்னேன்? 'சத்தியம் இப்பொழுது தான். பிறகு அது இருந்தவிடம் தெரியாது மறைந்துபோம். ஆகையால் சத்தியம் பிரயோஜனமில்லை' என்றேன். அதற்கு நீங்கள் 'நான் ஒருகாலும் அப்படிச் செய்ய மாட்டேன்' என்று சொல்லி யாருமற்ற அனுதையாகிய என்னை ஏமாற்றி ஸ்திரீகளுக்கு முக்கிய ஆபரணமாகிய என் கற்பைக் கெடுத்தீர்கள். இது தான் சத்தியம் செய்ததற்குத் தக்க பலன். நீங்கள் சத்தியம் செய்து கொடுத்த இரண்டு வார்த்தைகளில் ஒன்றையாவது கைப்பற்றவில்லை.

அர:—பழைய சமாசாரங்களெல்லாம் இப்பொழுது எதற்கு? இதுதானே நீ சொல்ல வேண்டியவைகள்? என்று எழுந்து போக எத்தனித்தான்.

உடனே அவள் "அரசே! அவ்வளவு கோபங் கொள்ளலாகாது. இன்னும் ஒரு சமாசாரம்" என்று தன் குழந்தையை எடுத்துக்கொண்டு அரசனை நோக்கி "இந்தப் பக்கம் வாருங்கள்.

சீக்கிரம் சொல்லிவிடுகிறேன். பிறகு நீங்கள் வேகமாய் அரண்மனையை அடையலாம்'' என்று கொல்லைப்புறம் இருக்கும் கிணற்றுக்குச் சமீபம் அழைத்துக்கொண்டுபோய் அரசனிடம் குழந்தையைக் கொடுத்தாள்.

அவன் அதை வாங்கிக்கொண்டு உற்றுப் பார்க்க அதன் அழகையும் ராஜவம்சத்தின் அறிகுறிகள் இருப்பதையும் கண்டான். அப்பொழுது ஆனந்தவல்லி "அரசே! தாங்கள் 'உன்மேல் அதிக ஆசைகொண்டேன். என் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டும்' என்று ஆகாயவாணி, பூமிதேவி அறியச் சத்தியம் செய்தீர்களே! என்மேல் தாங்கள் வைத்த ஆசையை இதோ குழந்தை ரூபமாக உங்களுக்குக் கொடுத்துவிட்டேன். நீங்கள் வெறுத்தபிறகு எனக்கு இங்கு வேலையில்லை. இந்த 4 மாதகாலமாகத் தங்கள் ஆசை யென்னும் இக்குழந்தையைக் காப்பாற்ற நான் அதிக சிரமத்துடன் இப்பூமியில் இருந்துவந்தேன். ஆகையால் இதோ நான் போகிறேன். ஆனால் போகுமுன் உமக்கு ஒரு வார்த்தை சொல்லுகிறேன். அதாவது என் போன்ற ஏழைகளையோ பணக்காரர்களையோ கலியாணமின்றி அவர்கள் கற்பைக்கெடுக்காதீர்கள். அப்பாபம் உம்மை எளிதில் விடாது. நான் போய் வருகிறேன்'' என்று திடீரென்று கிணற்றில் குதித்துவிட்டாள்.

பார்த்தான் அரசன். "அடாடா, இதற்குத் தானா இவள் இங்கு அழைத்துவந்தாள்? இது தெரியாது போயிற்றே! பாபம், அவள் சொல்வது அவ்வளவும் உண்மையே'' என்று நினைத்து உடனே சில சேவகர்களை அழைத்து அவளை எடுக்கச் சொன்னான். அப்படியே வெளியில் எடுத்தார்கள். ஆனால் அவள் உயிர் போய் விட்டது. அவன் குழந்தையைப் பார்த்து "இதை எவ்விதமாய் வைத்துக் காப்பாற்றுவது? அவள் இருந்தாலும் குழந்தையைப்பற்றிய கவலை இல்லாமலிருக்கும்'' என்று சொல்லிக் குழந்தையை ஒரு தாதியிடத்தில் விட்டு வளர்க்கும்படி சொல்லிப் பிரேதத்தை எடுத்து அடக்கம் செய்யச் சொல்லித் தான் அரண்மனையை அடைந்தான்.

ஆகையால் விவாகம் செய்திருந்தால் இப்படியெல்லாம் நடக்காதல்லவா? அவ்வாசன் குழந்தையை வளர்க்கு நிமித்தம் அவள் இறந்ததற்கு மிகவும் சொல்பமான வருத்தத்தை அடைந்தானே யொழிய தன்னால் தானே அவள் அதிகச்சிறு வயதில் மரணத்தை வருவித்துக் கொண்டாள் என்று மனப்பூர்வமாக அவன் துக்கிக்கவில்லையல்லவா!

ருக்:—ஆனால் விவாகம் செய்யவேண்டியது அவசியம் தான் போலிருக்கிறது.

கா:—அவசியத்திலும் அவசியம். ஏதோ கூடிய வரையிலும் நமக்குச் சக்தியுள்ளதற்குத்தக்க இடத்தைத்தேடிக் கொடுத்தால் அவரவர்கள் அதிர்ஷ்டத்தின்படி நடக்கும். நம்மால் என்ன செய்யமுடியும்?

அதைக் கேட்ட ருக்மணி "சரி, நீ சொல்லியபடியே செய்வோம்'' எனக் காமாட்சியும் தன் வீட்டிற்குச் சென்றாள்.

சுபம்.

---

# பால்ய விவாகத் தடை.

ஸ்ரீமான் நாராயண ஐயர், கண்ணனூர்.

**பா**ல்யப்பெண்களுக்கும் அவர்களுக்குப் பிறக்கும் சிசுக்களுக்கும் நேரிட்டுவரும் ஆபத்துக்களை நீக்கும்பொருட்டு மேற்படி மசோதா கொண்டுவரப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது.

அடியிற் கண்ட விவரப்படி மேற்கண்ட ஆபத்துக்களுக்குக் காரணம் விவாகமே அல்லவென்றும், பெண்களை வளர்ப்பது முதலிய முறைகளின் மாறுபாடுகள்தான் என்றும் தோன்றுவதோடு, பிரஸ்தாப மசோதா உத்தேச பலனைக் கொடுக்காமல் பலவிதக் கெடுதல்களைக் கொடுக்கக் கூடுமென்றும், முக்கியமாய் ஜனசங்கியையில் பெரும் பகுதியான ஏழைகளுக்கே மிகுந்த கஷ்டத்தைக் கொடுக்கக்கூடுமென்றும் தோன்றுவதால், சகோதர சகோதரிகள் தீர்க்காலோசனை செய்து மசோதாவைச் சட்டமாக்காமல் நிராகரிக்க வேண்டுமாய்க்கேட்டுக்கொள்ளுகிறேன்.

நம் புராதன சாஸ்திரங்களையே சட்டமாகப் பாவித்து அதன்படி பால்ய விவாகங்களைச் செய்துகொண்டு வந்த நம் முன்னோர்களுக்குப் பிறந்த குழந்தைகள் திடகாத்திரர்களாயும், வீரர்களாயும், மேதாவிகளாயும் இருந்திருக்கிறார்கள் என்பது யாவராலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது.

அத்தர்ம சாஸ்திரங்களின்படி பெண்களுக்குச் செய்துகொண்டு வந்த 8, 9 வயது விவாகங்களை அநேகமாகக் கைவிட்டு 12, 13 வயதுக்குமேல் விவாகம் செய்யும் வழக்கம் பெரும்பாலும் நடைபெற்றுவரும் இக்காலத்தில் அதிபால்ய விவாகம் நடை பெற்று வந்த காலத்தில் இல்லாத ஆபத்துக்கள் பெண்களுக்கும் சிசுக்களுக்கும் நேரிட்டுவருவதும் எல்லோருக்கும் தெரிகிறது.

இவ்வாபத்துக்கள் எந்தப் பிரதேசத்தில் அதிகமாய் ஏற்பட்டு வருகின்றனவென்பதைச் சற்று நிதானித்து யோசித்தால் நடை உடை ஆகாரங்கள் முதலிய முக்கிய அநுஷ்டானங்களில் புதிய முறை புகுந்திருக்கு மிடங்களில், முக்கியமாய்ப் பட்டணங்களில் 100க்கு தொண்ணூறுக்கு மேற்பட்டும் உள்நாடுகளில் 100க்கு 10க்குக் குறைந்தும் இருக்குமென்றே தோன்றும்.

உலகத்திற்குள் நாகரிகம் முதலியவற்றில் உயர்ச்சி பெற்றிருக்கிற குடியேற்ற நாடாகிய அமெரிக்கா தேசத்தில் அத்தேசக் கட்டாயப் பெண் கல்வி இலாகாத் தலைவர் 14, 15 வயதுள்ள பெண்கள் பிள்ளைகளைப் பெற்றவர்களாகவிருந்த போதிலும் பள்ளியில் சேர்ந்து அவர்கள் தங்கள் படிப்பைப் பூர்த்தி செய்து கொள்ளவேண்டும் என்று உத்தரவு பிறப்பித்திருப்பதாய் முன்பு 'சுதேச மித்திரனில்' வெளிவந்திருக்கிறதைக் கொண்டு பிரஸ்தாப மசோதாவில் கண்ட விவாக நிர்ணய வயதுக்குள்ளேயே பிள்ளைகளைப் பெற்று வளர்க்கக்கூடிய படி பால்ய விவாகங்கள் நடந்து வருவதாய்த் தெரிவதோடு மரண விகிதமும் நம்தேசத்தில் இருப்பதைவிட அத்தேசத்தில் குறைவாகவும் மனிதர்களின் சராசரி வயது உயர்ந்து மிருப்பது நிச்சயம்.

விருக்ஷங்களின் பல உற்பத்தி காலத்தை அவற்றில் உற்பத்தியாகும் புஷ்பங்களால் அறிவது போலப் பெண்கள் புஷ்பவதிகளாவதைக் கொண்டு பிரஜோத்பத்தியின் சூசனை அறியப்படுகிறதென்பதும் நிச்சயம். இக்காரணத்தாலேயே பெண்களின் முதல் மாத

விடாயை "புஷ்பவதி" எனப் பெயரிட்டு உலகத்தில் வழங்கிவருவது எல்லோருக்கும் தெரிந்திருக்கலாம்.

பெண்கள் புஷ்பவதிகளானவுடன் பிரஜோத்பத்திக்கு யுக்த வயது வந்து விட்டதாகத் தான் அர்த்தம். இது தெய்வச் செயல், மாற்றக்கூடியதல்ல.

நல்ல பலனைக் கோரி விருக்ஷங்களுக்கு நாம் செய்நேர்த்திகள் செய்வதுபோல நல்ல பிரஜோத்பத்திக்காகப் பெண்களை அரோக த்ருடகாத்திரர்களாக இருக்கும்படி வளர்ப்பதும், அவர்களின் கர்ப்பப்பையை நோயில்லாமல் காப்பதுமாகிய சில முறைகளை அனுஷ்டிக்க வேண்டுவது தான் நியாயம்.

## முற்கால அனுஷ்டானங்கள்.

முற்காலத்திய குழந்தைகள் நடக்கக் சக்தி வந்ததும் தெருக்களிலும் வீடுகளிலும் தேகாப்பியாசத்துக் குரிய பல விளையாட்டுகளை விளையாடி வந்தார்கள். பெண்பிள்ளைகளுக்கு அத்துடன் வயதுக் கிரமத்துக்குத் தக்கபடி குடும்ப வாழ்க்கைக்கு அவசியமான வீட்டு வேலைகளைக் கற்றுக் கொடுப்பதன் மூலமாயும் தேகாப்பியாசத்தை வளர்த்து வந்தார்கள். தினம் மூன்று காலங்களிலும் சுத்தமான அன்னத்தையே முக்கிய ஆகாரமாகக் கொடுத்து வந்தார்கள். இந்த அப்பியாசங்களினால் பெண் பிள்ளைகள் அரோக த்ருடகாத்திரர்களாய் தேக வளர்ச்சி, தேகபலம், மனோபலம் முதலியவைகளில் சிறந்திருந்தார்கள். இப்பெண்களின் மாதவிடாய் காலங்களில் அனுபவத்தில் முதிர்ந்த தாய்மார்கள் அவர்களின் கர்ப்பப்பையில் உண்டாகும் அசுத்தங்களை முற்றிலும் உபாதியன்னியில் வெளிப்படுத்தவும், பெண்களுக்கு யமனாக விருக்கிற சூசிகா வாய்வு என்ற கொடிய நோயைத் தடுக்கவும் சுத்தமான அன்னத்தை மட்டில் ஆகாரமாய்க் கொடுத்து வேறு சில நிபந்தனைகளையும் ஏற்படுத்தி அதன்படி நடத்தி வந்தார்கள். கர்ப்பம் தரித்த பிறகும் அப்பெண்களுக்கு மாதக்கணக்குக்குத் தக்கபடி வீட்டு வேலையும் கொடுத்து வந்ததால், பிரசவ காலம் வரையில் அவர்கள் வீட்டு வேலைகளைச் செய்து கொண்டுவந்து சுகப்பிரசவமாய்ப் பிரசவித்து சூரர்களும் மேதாவிகளுமான தங்கள் குழந்தைகளால் உலகத்தை யலங்கரித்துத் தாங்களும் இன்பமடைந்து வாழ்ந்து வந்தார்கள்.

பெண்களை வளர்ப்பது, கர்ப்பப்பையையும் கர்ப்பங்களையும் காப்பது, பிரசவம் செய்விப்பது சிசுக்களை வளர்ப்பது முதலியவைகளெல்லாம் மூத்தோர்களாகிய பெண்மணிகளால் வைத்தியர்களுடைய உதவியை நாடாமல் குடும்ப அனுபவ வைத்திய முறைப்படி நன்கு காக்கப்பட்டு வந்திருக்கின்றன.

நம் தேச ஜன சங்கியையில் பெரும் பகுதியினர் வாழ்ந்துவரும் உள்நாடுகளில் பெரும்பாலும் இம்முறைகள் அனுஷ்டிக்கப்பட்டு டாக்டர் முதலிய வைத்திய சாதனங்களைக் கோராமல் முக்காலத்தவர்கள் போலவே வாழ்ந்து வருவதை இக்காலத்திலும் பார்க்கலாம்.

## தற்கால அனுஷ்டானமும் அதன் பலனும்.

நவீன நாகரிகம் அனுஷ்டானத்துக்கு வந்த பிறகு பெரும்பாலும் பட்டணங்களில் உள்ளவர்கள் தங்கள் பெண் குழந்தைகளை வெளிவாசலைத் தாண்ட விடுவதில்லை என்றே சொல்லலாம். 5 வயது பிறந்தவுடன் புஸ்தகங்களுடன் வீடுகளிலும் பள்ளிகளிலும் உட்காரவைக்கப் படுகிறார்கள். தேகாப்பியாசத்துக்குரிய விளையாட்டுகளாவது வீட்டு வேலைகளாவது அவர்களுக்குக் கொடுக்கப்படுவதில்லை. ஆகாரங்களும் புதிய முறையில் மாறிவிட்டன. வீட்டிற்குள்ளாவது தெருக்களிலாவது நல்லகாற்றுக் கிடையாது. புருஷர் வீட்டுக்குப் போனபிறகும் அப்

பெண்கள் சமையல் வேலையைத் தவிர மற்ற வேலைகளை யந்திர சாதனங்களாலும் வேலைக்காரிகளாலும் செய்வித்துக் கொள்ளுகிறார்கள். சிலர் சமையல்கூடச் செய்யாமல் கிளப்புகளிலிருந்து ஆகாரங்களைத் தருவித்துச் சாப்பிட்டுக்கொண்டு வருகிறார்கள். மாதவிடாய் காலங்களில் முன்னோர்களால் கர்ப்பப்பையின் பாதுகாப்புக்காக அனுஷ்டிக்கப்பட்டு வந்த முறைகளைக் கைவிட்டுப் பலவிதமான மாப் பண்டங்களையும் கடைப் பட்சணங்களையும் மிகுதியாய்ச் சாப்பிடுவதோடு சிலர் அன்னத்துக்குப் பதிலாகக்கூட அவைகளைச் சாப்பிட்டு வருகிறார்கள்.

இவ்வழக்கங்களால் அவர்களுக்கு தேகாப்பியாசம், நல்லகாற்று, ஆரோக்கிய ஆகாரம், கர்ப்பப்பையின் பாதுகாப்பு முதலியன இல்லாமற் போவதால் அப்பெண்களுக்கு தேக வளர்ச்சி, தேகபலம், மனோபலம் முதலியன குன்றிப் பலபேர்களுக்கு கர்ப்பப்பையில் சூசிகாவாய்வு தங்கி மாதவிடாய் காலங்களில் கர்ப்பப் பையிலுள்ள அசுத்தம் சரிவர வெளிப்படாத காரணத்தால் பிரசவ வேதனைக்குச் சமமான உபாதியை அனுபவிக்க நேரிடுகிறது.

இவர்களில் சிலருக்கு கர்ப்பமே தரிப்பதில்லை. நின்ற கர்ப்பம் சிலருக்குப் பூர்த்தியாவதில்லை. பூர்த்தியாகிப் பிறக்கும் குழந்தைகளும் பலஹீனர்களாக இருக்கிறார்கள். தேக பலம் குன்றிய பெண்களும் பிரசவ வேதனையைப் பொறுக்க முடியாமல் தவிக்க நேரிடுகிறது.

இவ்விதமாய்ப் பிறந்த பெண் பிள்ளைகள் தங்கள் தங்கள் தாய்மார்களின் வழியைப் பின்பற்றி அதிகக் கேவலமான நிலைமைக்கு வருகிறார்கள். மேற்கண்ட அனுஷ்டான பேதங்களால் உள் நாட்டுப் பெண்களில் 100க்கு சுமார் 10 பேர்களுக்குக்கூட சூசிகா வாய்வு உபாதி இருக்காது என்றும் பட்டணவாசிகளில் சுமார் 100க்கு 90 பேர்களுக்கு இருக்கு மென்றும் தோன்றுகிறது. இவ்வுண்மையை வைத்திய நிபுணர்களைக்கொண்டு தெரிந்து கொள்வது நலம்.

ஆகையால் தொன்றுதொட்டு அனுஷ்டித்து வந்த பெண்களின் பாதுகாப்பு கைவிடப்பட்டதே ஆபத்துகளுக்குக் காரணமே தவிர எந்த விவாகமும் காரணமாக மாட்டாதென்றே தோன்றுகிறது.

### 15 வயதுக்குட்பட்ட விதந்துகள்..

14 என்ற சட்ட வயது முடிந்தவுடன் கலியாணம் செய்த போதிலும், 15 வயதுக்குட்பட்ட விதந்துகள் குறையுமென்று தோன்றவில்லை. இது தெய்வ சங்கல்பம். தடுக்க முடியாதது.

அதிகச் சிறு வயது விதந்துகளைக் குறைக்குமென்றாலும் 15 வயதுள்ளவர்கள் எல்லோரும் உலகசுகத்தை அறியச் சக்தி யற்றவர்களாகையால் இதில் பிரயோஜனமில்லை.

15-வயதுக்கு மேற்பட்ட விதந்துகளைக் குரூபிகளாக்கும் வழக்கம் முதிர்ந்து விட்டதால் அதிபால்யத்தில் குரூபிகளாக்கப்படுகிறார்கள் என்பதைத் தடுக்கச் சட்டம் தேவையில்லை. மித்திரனில் வெளிவந்திருக்கும் தகவல்களைக் கொண்டு 15 வயதுக்குட்பட்ட விதந்துகளை ஜனசங்கிகைக்குச் சராசரி பார்த்தால் ஆயிரத்துக்கு இந்தியாவுக்கு ஒன்றும், சென்னை மாகாணத்துக்கு அரையே அரைக்காலும் வருகிறது.

நம் தேசத்தில் புனர் விவாகம் செய்து கொள்ளும் வழக்கம் உள்ள ஜாதியார்களும் இருப்பதால் அவ்வகுப்பார்களின் விதந்துகளை அந்த மொத்தத்தில் கழித்துக் கலியாணமாகாதவர்களுடன் சேர்க்கவேண்டியதுதான் நியாயம். இவ்விதம் செய்தால் விதந்துகளின் சராசரி இன்னும் குறையும். இந்தச் சராசரி அபரிமிதமானதாக நினைக்கவும் நியாயமில்லை.

### சுதந்திரம்.

நம்தேசத் தலைவர்களுக்கிருக்கிற சுதந்திரங்களில் தங்கள் பிதுர் தேவதைகளின் திருப்தியையும் அவர்களின் அனுக்கிரகங்களையும் பெற உத்தேசித்துப் பிள்ளைகளைப் பெற்று அவர்களுக்குத் தகுந்தவரன், வதுக்களைத் தேடி விவாகம் செய்து வைப்பதென்ற தொன்றுதொட்டு வரும் சுதந்திரம்தான் முக்கியமானது.

இக்காரணத்தால்தான் இறக்கும் தருவாயிலுள்ளவர்கள் கலியாணமாகாத தம் குழந்தைகளைப் பார்த்து இவர்களுக்குக் கலியாணம் செய்து வைக்காமல் போகிறோமே என்று துக்கப்படுகிறவர்கள் அதிகமாய் இருந்து வருகிறார்கள். இம்முக்கிய சுதந்திரம் சட்டத்தால் நீங்கிவிடும்.

### பெண் கல்வி.

இவ்விஷயம், பிறக்கப்போகும் பிள்ளைக்கு வைக்கப்போகும் பெயரில் தகராறு ஏற்பட்டதைப் போலிருக்கிறது. நம் தேசத்தில் பட்டணங்களில் மட்டில் தேவைக்குப் போதாததும் அறைகுறையானதுமான பெண்பாடசாலைகள் இருக்கின்றனவே தவிர அதிக ஜனசங்கியையுள்ள உள் நாடுகளில் 100 ஊர்களுக்கு ஒன்றுகூட இல்லை யென்பது வெளிப்படை.

ஆண்பிள்ளைகளின் கட்டாயக் கல்விக்கே அஸ்திவாரம் போடாமல் இருக்கும் தற்கால நிலைமையில் பெண் கல்விக்குத் தகுந்த சாதனத்தை ஒரு நூற்றாண்டுக்குள் எதிர்பார்ப்பதற்கில்லாமலிருக்கிறது. இந்த சாதனம் கிடைத்துப் படிப்பித்துக் கலியாணம் செய்ய வேண்டும் போலிருக்கிறது.

நம் தேசத்தவர்கள் ருது வயது வந்த பெண்களையும் ருதுவான பெண்களையும் ஆண் பிள்ளைகளுடன் சேர்ந்து படிப்பிக்கச் சம்மதிக்கிறதில்லையே தவிர தாலிகட்டினால் படிக்கக்கூடாது என்று சொல்லுபவர்கள் இருக்கவே மாட்டார்கள். ஆண் பிள்ளைகளின் சேர்க்கையே இல்லாமல் தகுந்த பாதுகாப்புடன் கூடிய பெண்பாடசாலைகள் எங்கும் ஏற்படுத்தப்பட்டால் எந்த வயதுப் பெண்களுக்கும் கல்வி கொடுக்கப் பெற்றோர்களும் மற்றவர்களும் சம்மதிப்பார்கள். அதில் சேர்க்கச் சம்மதப்படாவிட்டால் அமெரிக்கா கல்வி இலாகாத் தலைவர் செய்தபடி தகுந்த சட்ட மொன்றை அப்போது செய்துகொள்ள முடியாதா? ஆகையால் இம்மசோதாவினால் பெண்கல்விக்கு எவ்வித உதவியும் ஏற்படமாட்டாது.

### வரதக்ஷிணை குறையுமா?

நம் தேசத்தில் ருதுவாகுமுன் சில வகுப்பாரும் ருதுவானவுடன் கூடிய சீக்கிரம் மற்றவர்களும் விவாகம் செய்து கொடுத்துவிடுகிற வழக்கமே தவிர, ருதுவான பிறகு அதிக நாள் கலியாணம் செய்யாமல் வைத்திருக்க ஒருவரும் சம்மதிக்கிறதில்லை. ஆண்பிள்ளைகளுக்கு எந்த வயதிலும் கலியாணம்செய்வது வழக்கமாக இருந்துவருகிறது. சட்டவயதில் பெண்கள் ருதுவானவர்களாகவே இருப்பார்களாகையால் அவசரமாய்க் கலியாணம் செய்ய முற்படுபவர்கள் எல்லாம் பெண்களைப் பெற்றவர்கள்தான். பிள்ளைகளைப் பெற்றவர்களும் பிள்ளைகளும் போட்டி காட்டி அதிகப்பணம் கேட்க இவ்வருஷம் கலியாணஞ் செய்ய உத்தேசமில்லையென்று கிராக்கி காட்டுவார்கள். அவசரக்காரர் பெண்ணைப் பெற்றவர்கள் பிள்ளைகளுக்குச் சக்திக்கு மீறிய பணத்தைக் கொட்டிக் கொடுத்துக் கலியாண செலவுகளும் செய்ய நேரிடும் (சர்ட்டிபிகேட்டு செலவு உள்பட).

### பெண்களுக்கு விவாக சுதந்திரம்.

எதிர் காலத்தில் நடக்கப்போவதைத் தெரிந்துகொள்ளும் சக்தி மனித வர்க்கத்துக்குக் கிடையாது என்பது நிச்சயம். இதற்கா

கப் பெற்றோர்கள் தங்களுடையவும் பந்துக்களுடையவும் மற்றப் பெரியோர்களுடையவும் ஜோதிட வல்லவர்களுடையவும் யோசனைகளின் முடிவின் பேரிலும் தங்கள் பிள்ளைகள் நெடுநாள் சுகித்து வாழவேண்டு மென்று இஷ்ட தெய்வங்களின் பிரார்த்தனையின் பேரிலும் செய்து வருகிற விவாகங்களிலேயே சில தவறுதல்கள் நேர்ந்து வருகிறதைக் கண்ணாரக் கண்டிருக்கிறோம். மேற் கண்டவைகளில் ஒரு யோக்கியதையும் இல்லாத, தனக்கென்று புருஷனைத் தேடிக்கொள்ள லஜ்ஜையடையக் கூடிய, கல்வியறிவில்லாத, சஞ்சல புத்தியுள்ள பெண்களே புருஷர்களைத் தேடிக்கொள்ளும்படி பெற்றோர்கள் விட்டு விட்டால் என்னென்ன ஆபத்துகள் நேரக்கூடுமென்பதை நேயர்கள் அறிந்து கொள்ளலாம். பெண்களுக்கு இவ்வதிகாரம் கொடுக்கவேண்டுமென்று சொல்லுகிறவர்கள் மைனர்களுக்குத் தங்கள் சொத்துக்களைத் தாங்களே இஷ்டப்படி வினியோகம் செய்து கொள்ளலாமென்று சட்டத்தைத் திருத்த முற்படுவார்களா?

சட்டத்தால் எதிர்பார்க்கக்
கூடிய கெடுதல்கள்.

பூமண்டலத்துக்குள் நம் தேசத்தைத் தவிர வேறு பரம ஏழை தேசம் ஒருவராலும் காண முடியாது என்பது பிரசித்தம். இதில் ஜனத்தொகையில் பாதிக்கு மேற்பட்டவர்கள் ஒரு பைசா சொத்தும் இல்லாமல் மாதச் சம்பளமும், தினச் சம்பளமும் வாங்கி ஜீவிப்பவர்கள் என்பதும், அதுவும் கிடைக்காமல் பலர் பட்டினி கூடக் கிடக்கிறார்கள் என்பதும், சட்டப்படி விதிக்கக் கூடிய அபராதத் தொகையாகிய ஆயிரம் ரூபாய் சொத்து உடையவர்கள்கூட மிகவும் சொல்பம் என்பதும் வெளிப்படை.

தரித்திரத்துக்குப் பிள்ளை என்ற பழமொழிப் படி ஏழைகளுக்குப் பல குழந்தைகள் என்பதும் வெளிப்படை.

நடுத்தர அந்தஸ்திலுள்ளவர்களே ஒரு விவாகம் செய்வதற்கு எவ்வளவு கஷ்டப்படுகிறார்கள் என்றும், அக்கஷ்டத்தைச் சரிப்படுத்தப் பல வருஷங்கள் செல்லுகின்றனவென்றும் யாவரும் அறிந்த விஷயம். இவர்களுக்குக் கீழ்பட்ட ஏழைகள்தானே நம் தேசத்தில் அதிக சங்கியை உள்ளவர்கள். அவர்களுக்கு என்ன கதி மோட்சம்?

தங்கள் தரித்திர நிலைமையை உத்தேசித்து அவர்கள் தங்களுடைய ஒன்றுக்கு மேற்பட்ட குழந்தைகளின் விவாகங்களையோ பந்துக்களின் பல விவாகங்களையோ ஒன்று சேர்த்தும் தங்களிடம் அனுதாபமுள்ள தனவந்தர்கள் வீட்டில் நடக்கும் கலியாணத்தின் உதவியாலும் குறைந்த செலவிற் கலியாணங்களை இப்போது நடத்தி வருகிறார்கள்.

அவர்களுக்குக் கிடைக்கக் கூடிய மேற்கண்ட இச்சௌகரியங்களையும் சகாயங்களையும் சட்டம் அடியோடு போக்கிவிடும். பல குழந்தைகளைப் பெற்ற ஏழைகள் ஒவ்வொரு குழந்தைக்கும் தனித்தனிக் கலியாணம் செய்ய வேண்டி நேரிடுவதால் அவ்விதம் செய்ய அவர்களின் நிலைமை இடமளிக்குமா?

இத்துடன் ருது வயதிலாவது ருதுவானவுடனாவது கலியாணம் செய்து விடவேண்டும் என்ற நிர்ப்பந்தமும் சட்டத்தின் மூலம் நீங்கி விடுவதால் நாளடைவில் நம்மவர்கள் சாஸ்திர பூர்வமாய் முக்கிய சுதந்திரத்தோடு அனுஷ்டித்து வந்த விவாகம் என்கிற கொள்கையையே கைவிட நேரும். இதனால் பெற்றோர்களுக்கும் பிள்ளைகளுக்கும் தொன்றுதொட்டு இருந்து வந்த பந்தமும் அன்பும் நீங்கி விடும். இக்கஷ்டங்களுக்குட்பட்ட பெண்களில் பலர் காமுகர்களால் அதி சுலபமாக ஏமாற்றமடைந்து பல விதமான கஷ்டங்களுக்குள்ளாகவும் நேரும்.

விரோதிகளால் ருதுவான பெண்களுக்குச் சிறிது அபவாதம் உண்டுபண்ணப்பட்டால்

நம் தேச வழக்கப்படி அப்பெண்களை வழக்கப்படி கலியாணம் செய்து கொள்ள முன்வருவது கஷ்டம். சட்ட வயது முடிந்து செய்த கலியாணங்களையும் சட்ட விரோதமென்று விரோதிகளால் தூண்ட நேரும். ஜாதகம் ஒப்புக்கொள்ள முடியாத நிலைமையும் ஏற்படலாம்.

அப்போது டாக்டர்களின் தீர்ப்புக்குத் தான் ஆதரவு அளிக்க நேரும். இக்கஷ்டங்களைப் போக்க டாக்டர் சர்ட்டிபிகேட் முன்னால் பெற்றுக்கொண்டுதான் கலியாணம் செய்ய வேண்டுமென்ற விதி உடனே ஏற்படுத்த வேண்டியிருக்கும். கலியாணம் செய்பவரையும் கலியாண ஜாப்தாவில் அதற்கென்று ஒதுக்கி வைக்க நேரும்.

8—9 வயதுகளில் செய்து கொண்டு வந்த விவாகம் சட்டமில்லாமல் தானாகவே 14—15 வயது வரையில்கூட வந்து விட்டது. வரும் வேகத்தைப் பார்த்தால் சட்ட வயதுக்கு மேலும் கூடிய சீக்கிரம் போகும் போலிருக்கிறது. அதற்குள் எதற்காகச் சட்டம் செய்ய வேண்டும்? நம் தேசத்தவர்களை எல்லாம் கல்வியறிவிலும் நினைத்த போதெல்லாம் சிரமமில்லாமல் கலியாணம் செய்யக்கூடியபடி செல்வ நிலைமையிலும் உயர்த்திய பிறகு இச்சட்டம் செய்தால் ஒருகால் அநுஷ்டிக்க முடியுமென்று நினைக்கலாம்.

மேற்கண்ட ஆபத்துகளுள்ள காரணங்களைக் கமிஷன் அல்லது கமிட்டி மூலமாய் விசாரிக்கப்படாமல் இருந்தால் மசோதாவைக் கொண்டு வருபவர்களாவது கல்வி அறிவில் குன்றிய கிராம வாசிகளில் அனுபவத்திலும் யுக்தியிலும் முதிர்ந்தவர்கள் பலர் இருக்கலாம் என்று நம்பி நம் தேசமெல்லாம் சஞ்சாரம் செய்து ஆபத்துகள் பெரும்பாலும் நேரிட்டு வருகிற பிரதேசங்களையும் நேராமலிருக்கும் பிரதேசங்களையும் பிரித்துக்கொண்டு அந்தந்தப் பிரதேசங்களில் இருக்கிற அனுபவமுள்ள பெரியோர்களையும் வைத்தியர்களையும் கொண்டு நடை, உடை, ஆகாரம், ஆசாரம், அனுஷ்டானம் முதலியவைகளைப் போன்ற முக்கிய அம்சங்களில் இரு பிரதேசங்களுக்குமுள்ள பேதங்களைக் கண்டுபிடித்து அப்பால் ஆபத்துக்குக் காரணமான குற்றவாளியை இன்னாரென்று கண்டு பிடித்திருக்கவேண்டும்.

இவ்வித விசாரணையும் இல்லாமலே பால்ய விவாகத் தடை மசோதா கொண்டு வரப்பட்டிருந்தால் சாட்சிகளைக்கொண்டு விசாரிக்காமல் ஊக்கமாய்க் குற்றவாளி யென்று ஒருவரை அரஸ்டு செய்வதைப்போல ஆகிறது. உடலும் உயிரும் இருந்தாலல்லவோ பால்ய விவாகம் எதிர்வழக்காடும்.

மூன்று மாதகாலமாய் மித்திரன் மூலமாய்ப் பட்டணங்களிலிருந்தும் அதற்குச் சமானமான இடங்களிலிருந்தும் சுமார் 10 சாட்சிகளும் 30 டிபன்சுகளும் வெளி வந்திருக்கின்றன. உள் நாடுகளில் ஏராளமான டிபன்சுகள் இருப்பார்கள். வர்த்தமானப்பத்திரிகை சேர்வதில்லை ஆதலால் வெளிப்படவில்லை.

பட்டண வாசிகளாகிய பெண்மணிகளிற் சிலர் நம் தேசப்பெண்களிடத்தில் பூர்ண அனுதாபத்துடன் அவர்களின் நன்மையைக் கோரிச் சில கூட்டங்களில் பேசியிருப்பதைப் பாராட்டுகிறோம்.

ஆனால் அவர்கள் இப்பெரிய தேசத்திலுள்ள கோடிக் கணக்கானவர்களைக் கட்டுப்படுத்தக் கூடிய ஒரு மசோதாவைத் தங்கள் அனுபவங்களையும் தங்களைச் சுற்றியுள்ளவர்கள் அனுபவங்களையும் மட்டில் ஆதாரமாய்க் கொண்டு ஆதரிக்காமல், கிராமாந்தரங்களில் போய் அவ்விடத்தியப் பெண்களை விசாரித்து, அவர்களின் செல்வநிலைமை, கல்வி அறிவு, தேகாரோக்கியம், பழக்க வழக்கங்கள், பெண் கல்வி சாதனங்கள்

முதலிய பல விஷயங்களையும் தெரிந்து கொண்டு, தங்கள் கல்வி அறிவினால் தீர்க்க ஆலோசனை செய்து, செய்த முடிவின் பேரில் மசோதாவை ஆதரிக்கவோ நிராகரிக்கவோ வேண்டுமென்றும் அவ்விதம் செய்யாமல் மசோதாவுக்கு ஆதரவளித்துச் சட்டமாக்கின பிறகு அதனால் கஷ்டம் நேர்ந்தால் தங்கள் வகுப்பினரைத் தாங்களே கெடுத்து விட்டார்கள் என்ற பழிச்சொல்லை ஏற்க வேண்டியிருக்கும் என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்தியா மாகாண சட்ட சபைகளிலுள்ள ஜனப் பிரதிநிதிகள் மசோதாவைச் சட்டமாக்காமல் தடுப்பார்கள் என்று எதிர் பார்க்கிறேன்.

சுதேசமித்திரன்.

# பெண் வரம் கேழ்கப் பழனிக்குப் போதல்.

(ஸ்ரீமதி S. வாலாம்பாள்.)

மீனாக்ஷி—"ஐயா ஜோசியரே, வாரும் வாரும். நீர் வருவீரென்று நான் விடியற் காலமே எழுந்து என் காரியங்களை எல்லாம் முடித்துக் கொண்டு உமக்காகக் காத்துக்கொண்டிருக்கிறேன். வாரும், இப்படி பெஞ்சியில் உட்காரும். அடி, அலமேலு! இந்தாடி, ஜோசியர் வந்திருக்கிறார், அவருக்கு நல்ல காப்பியாய்க் கொஞ்சம் கொண்டுவா'' என்று தன் நாட்டுப்பெண்ணுக்குச் சொல்ல அவளும் ஜோசியர் தனக்குப் பெண்பிறக்கு மென்று ஜோசியம் சொல்ல வேண்டு மென்று நினைத்துக்கொண்டு நல்ல திக்காக $1\frac{1}{2}$ சேர் பிடிக்கும்படியான வெள்ளி லோட்டா நிறையக் காப்பி கொண்டு வந்து வைத்தாள்.

ஜோசியரும் "நான் இப்போது தான் சாப்பிட்டு வந்தேன். இருந்தாலும் உங்கள் பேச்சைத் தட்டாமல் சாப்பிடுகிறேன்'' என்று சொல்லி லோட்டா காப்பியை எடுத்து ஒரே வாயில் குடித்து விட்டார். பிறகு மீனாக்ஷி அம்மாளைப் பார்த்து "அடுத்த தெரு பிச்சுவய்யர் என்னை அவசரமாக வரச்சொன்னதாக ஆத்தில் பொம்மனாட்டி சொன்னாள். அவரைக்கூட லக்ஷியம் செய்யாமல் எழுந்து நேராக வந்து விட்டேன். எங்கே! குழந்தைஜாதகம் கொண்டு வாருங்கள். நான் புறப்பட்டு வரும்பொழுதே நல்ல சகுனமாயிற்று'' என்று சொல்லிக்கொண்டிருக்கும் பொழுது பல்லியும் டக்டு, டக்டு என்று அடிக்க, ஜோசியரும் "பார்த்தீர்களா அம்மா! எல்லாம் நல்லதாகவே இருக்கிறது. உங்கள் மனதிலுள்ள காரியம் ஜயமாகும்'' என்றார்.

மீனாக்ஷி "அடி அலமேலு, இந்தாடி. இந்தக் கொத்துச் சாவியை எடுத்துப் போய் பெரிய பெட்டியைத் திறந்து அதில் மேலண்டைப் பக்கத்திலிருக்கும் ஸில்க் மூட்டையை அப்படியே எடுத்து வந்து இப்படி வைத்து விட்டு முன் போலவே ஜாக்கிறதையாய்ப் பூட்டிச் சாவியை என்னிடம் கொடுத்து விடு'' என்றதும் அலமேலுவும் அவசரமாக மாமியார் சொன்னபடி பெட்டியைத் திறந்து ஸில்க் மூட்டையை எடுத்துக்கொண்டு முன்போலவே பெட்டியைப் பூட்டிவிட்டு சாவியையும் மூட்டையையும் மாமியாரிடம் கொண்டு வந்து கொடுத்தாள்.

ஜோசியரும் அந்தச் சின்ன ஸில்க் மூட்டையை அவிழ்த்து மீனாக்ஷி அம்மாளின் பிள்ளை சுப்பிரமணியன் ஜாதகத்தையும் நாட்டுப் பெண் அலமேலுவின் ஜாதகத்தையும் எடுத்

துக்கொண்டு பாக்கியை அப்படியே கட்டி வைத்து விட்டார். பிறகு இரண்டு ஜாதகங்களை யும் வெகு நேரம் பரிசோதனை செய்து நவக் கிரகங்களின் பலா பலன்களையும் கோசாரபலன், தசாபுக்தி முதலியவைகளையும் ஆராய்ந்து பார்த்து மனதில் நிச்சயம் செய்துகொண்டு சொல்லுகிறார்:—"அம்மா, நான் இவ்வளவு நேரம் சிரமப்பட்டுப் பரிசோதனை செய்து பார்த்ததில் இப்பொழுது உங்களுக்கு மிகவும் நல்ல காலம். உங்கள் பிள்ளையின் ஜாதகத்திற்கு மூன்று கிரகங்கள் உச்சமானபடியால் இதற்கு நிகரான ஜாதகம் அகப்படுவது அருமை. அந்த ஜாதகத்திற்கு புததசையில் சந்திரனின் புக்தி நடந்து கொண்டிருக்கிறபடியால் அடுத்த வருஷத்திற்குள் ஒரு பெண் குழந்தை பிறந்தாக வேண்டும். சந்திர புக்தியாயிருக்கிறபடியால் ரொம்ப சௌந்தரியமாகவும் வெகுபுத்திசாலியாகவும் தீர்க்காயுளாகவும் பிறக்கும். இருந்தாலும் ஐந்தாவது கிரகமாகிய புத்திரஸ்தானத்தை இராகு பார்த்துக் கொண்டிருக்கிறபடியால் அந்த தோஷ நிவாரணத்தின் பொருட்டு தெய்வப்பிரீதியாக சில காரியங்கள் செய்யவேண்டும்."

அதற்கு நாட்டுப்பெண் "இரும், இரும், ஜோசியரே! நீர் என்னமோ தோஷமென்று சொல்லுகிறீரே! நான் சிறுவயதாயிருக்கும்பொழுது என் தகப்பனார் வீட்டில் ஒரு ஜோசியர் வந்திருந்தார். அவர் என் ஜாதகம் ரொம்ப அதிர்ஷ்டமானதென்றும் ரொம்பக் குழந்தைகள் பிறக்குமென்றும்சொன்னார். நீர்என்னமோ—" அதற்கு மீனாக்ஷி "இந்தாடி பேசாதே. உன் வாயை அடக்கிக்கொள். உன் பெருமை எல்லாம் எனக்குத் தெரியும். அவர் சொல்லும்போது குறுக்கே ஒன்றும் சொல்லாதே. ஜோசியரே! நீர் சொல்லும். அது அப்படித்தான் பேத்தும். அதை நீர் லட்சியம் செய்யவேண்டாம்."

ஜோசியர்—"இருக்கட்டும் சொன்னாலென்ன, அதினால் ஒன்றும் பாதகமில்லை. அந்தம்மாள் சொல்வதும் ஒரு விஷயத்தில் நிஜந்தான். ஐந்தாவது கிரகமாகிய புத்திரஸ்தானத்தில் குரு இருக்கிறபடியால் அதிகக் குழந்தைகள் பிறக்குமென்று சொல்லியிருக்கலாம். இருந்தாலும் இராகு ரொம்பக் கெட்டவனானபடியால் அவன் பார்வை கொஞ்சம் தோஷத்திற்குரியது. அந்த தோஷ நிவாரணத்தின் பொருட்டுத்தான் சுப்பிரமணிய சுவாமி பிரீதியாக உங்கள் சக்திக்குத் தகுந்தபடி ஏதாவது செய்தால் போதும்."

மீனாக்ஷி—ஐயா, அதற்கென்ன. சுப்பிரமணியசுவாமிக்குச் செய்வதற்கு எங்கப்பா எனக்கு எவ்வளவோ சிரமப்பட்டு வேணது தேடி வைத்திருக்கிறார். எங்களுக்குப் பழனி சுப்பிரமணிய சுவாமிதான் குலதெய்வம்.

அலமேலு—"ஏனம்மா, நாம் பழனிக்குப் போய் ஆறுமாதமாகப் போகிறதோல்லியோ. அதனால்தான் சுவாமி ஜோசியர்வடிவமாக வந்து நமக்கு நினைப்பூட்டுகிறார்.

மீனாக்ஷி—ஆமாண்டி. ஜோசியரே, பார்த்தீரா! எனக்கு நினைவே யில்லை,

உடனே கொஞ்சம் கண்ணைப்பிசைந்து கொண்டு "என்னை எங்கம்மாவும் அப்பாவும் ஆணாய் ஆடை உடுத்திப் பெண்ணாய்ப் புடவை உடுத்தி வெய்யில் காற்று உடம்பின் மேல் படக் கூடாதென்று கண்ணுக்குக் கண்ணாய், பெட்டியில் வைத்துப் பூட்டிக் காப்பாற்றுகிறது போல் காப்பாற்றினார்கள். பாபி, நான்கொடுத்து வைக்காதவள். எங்கப்பாவுக்கு 80 வயது ஆச்சு, எங்கம்மாவுக்கு 78 வயது ஆச்சு. அதற்குள் அவாள் என்னை இந்தக் கஷ்ட துக்கத்திற்குள்ளாக்கி விட்டுப்போய்ச் சேர்ந்து விட்டார்கள். நான்தான் தங்க விக்கிர மாட்டமா குழந்தையை வாரிக்கொடுத்து விட்டு நன்றாய் கல்லைப்போல் உட்கார்ந்து இருக்கிறேன்." உடனே துக்கம் நெஞ்சை அடைக்க "ஜோசியரே! அது பெண்ணோ! அது பொண்ணில்லைங்கணம். நீர் பார்த்ததில்லையோ?"

ஜோசியர்:—"ஆமாம், நான் பார்க்காமலென்ன. நான் வரும் பொழுதெல்லாம் உங்களோடு உட்கார்ந்துகொண்டு என்னை எவ்வளவு பிரிய மாய்க் கூப்பிடுமே. அப்படிப்பட்ட குழந்தை யை இனி எங்கே காணப்போகிறேன்! அந்தக் குழந்தை இல்லாதது இந்தவீட்டிற்கே ரொம்பக் குறைந்திருக்கிறது" என்று மூக்கைச் சிந்தினர்.

ஜோசியர் மூக்கைச் சிந்தவே மாமியார் நாட் டுப்பெண் இருவருக்கும் துக்கம் நெஞ்சு அடைந்து விட்டது. சிறிதுநேரம் இருவரும் பிரலாபித்து அழுது விட்டு நடுவில் ஜோசியரின் சமாதானத்தாலும் முக்கியமாய் மறுவருஷம் பெண்பிறக்கப் போகிறதென்கிற எண்ணத்தினு லும் தங்களைத் தாங்களே சமாதானப்படுத்திக் கொண்டார்கள். பிறகு சிறிது அழுதுகொ ண்டே மீனாக்ஷி அம்மாள் "ஜோசியரே! அது கிடக்கட்டும். அழுது அழுது என் ஆவி உப்பி விட்டது. போனது போகட்டும். இனிமேலா வது நடக்கவேண்டிய காரியத்துக்கு யோசிப் போம். பழனிக்குப் புறப்பட 45 நாளைக்குள் ஒரு நல்ல நாளைப்பாரும்" என்று சொல்ல, ஜோசி யரும் "இன்றைக்கு மூன்றுவது நாள் திங்கள் சனி கிழக்கே சூலம். ஆகையால் புதன்கிழமை சாயந்திரம் 4-மணிக்குப் புறப்பட நாள் நன்று யிருக்கிறது. தங்கள் அதிருஷ்டம் ரயில் கூட $5\frac{1}{2}$-மணிக்குத்தான் புறப்படுகிறது. நீங்கள் கட் டாயம் அன்றைக்கே புறப்படலாம். அது தப்பி னுல் சமீபத்தில் நல்ல நாளில்லை" என்று சொல்ல, மீனாக்ஷி "அதெல்லாம் என்னத்திற்கு? கட்டா யம் புதன்கிழமை புறப்பட்டு விடுகிறேன். நீர் போய்விட்டு வரீரா. அடி அலமேலு! இந்தாடி, ஜோசியருக்கு வெற்றிலை பாக்கு, பழம் எல்லாம் கொண்டுவந்து கொடு" என்று சொல்ல, மாமி யார் சொல்படியே அலமேலுவும் நடுவில் வாடி னதும் அழுகினதும் மேலே நல்ல வெற்றிலை யும், புதுப்பாக்கு 4, 5ம், விலையாகாமல் நின்று விட்ட வாழைத்தாரில் நுனியில் உள்ள சிறிய பழமாயுள்ள பழங்களில் 10-பழமும் நல்ல பள பளப்பான புது வெள்ளித்தட்டில் கொண்டு வந்து வைத்தாள்.

மீனாக்ஷி—"ஏண்டி! ஜோசியருக்கு நல்ல வாழைப்பழம் நிறையக்கொண்டுவந்து வைக்கக் கூடாதா' என்று சொல்லிவிட்டு அதற்குள் தானாகவே 'ஆமாம், எனக்கு நினைவேகிடையாது. நேற்றுதானே தார் பழுக்க வைத்தது. அது பழுக்கவில்லை போலிருக்கிறது. கிடக்கட்டும்; ஜோசியரே. நான் பழனிக்குப் போய்விட்டு வந் து உமக்கு வேண்டியது தருகிறேன். இப்பொ ழுது இதை எடுத்துக்கொள்ளும்" என்று அதை ஜோசியரிடம் கொடுத்தாள். அவரும் இந்தமட்டு மாவது கிடைத்ததே என்று சந்தோஷமாய் வாங்கி அதைத் தலைப்பில் கொட்டி முடிவதற்குள் மீனாக்ஷி அம்மாள் "ஜோசியரே, எழுந்திருந்துவாச லில் போய் முடிந்துக்கொள்ளும். நாழியாகிறது எனக்கு" என்று ஜோசியரை அவசர அவசரமாக வாசலில் போகச்சொல்லி அவசர அவசரமாக வாசல் கேட்டைப் பூட்டிச் சாவியை எடுத்துக் கொண்டு உள்ளே வந்து விட்டாள். வந்ததும் பரபரப்புடன் "அடி, அலமேலு! புதன்கிழமை பழனிக்குப் புறப்படவேண்டும். நடுவில் நாலு நாள் தானிருக்கிறது. கையில் ஏதாவது பக்ஷண ங்கள் வேண்டாமா? ஏற்பாடு பண்ணினுயோ, அ தெல்லாம் நீ செய்திருக்கமாட்டாயே" என்றாள்.

அலமேலு—இல்லையம்மா! சீடைக்கும் முறுக் குக்கும், முக்குறுணி அரிசி நனைத்திருக்கிறேன். ரவை உருண்டையும் சோமாசியும் பண்ணுவ தற்கு ரவை வாங்க இராமசாமியைக் கடைக் குப் போகச்சொல்லி யிருக்கிறேன். குஞ்சா லாடுவும், ஓமப்பொடியும், காராப்பூந்தியும், மைசூர்ப் பாகும் செய்வதற்குக் கடலைமாவு அரைக்கச் சொல்லி காமாட்சியிடம் பதக்கு (இரண்டு மாக்கால்) கடலைப்பருப்பு கொடுத்தி

ருக்கிறேன். அவனுக்காக நாலு மரக்கால் நெல் போட்டிருக்கிறேன். இன்னும் என்ன செய்ய வேண்டுமோ அதை நீங்கள் சொன்னால் அப் படியே செய்கிறேன்.

மீனாக்ஷி—“அடி, பைத்தியமே! திரட்டுப் பால் வேண்டாமோ. இன்று முதல் நீ நம்மாத்து இரண்டு எருமை மாட்டுப் பாலையும் இரண்டு பசுவின் பாலையும் செலவழிக்காதே. பால், மோர் வாசலில் வாங்கிக் கொள்ளலாம். ஏண்டி! முருக் குக்கிந்த மூன்றுவது தெரு முத்தம்மாளைக் கூப்பிடு. அடுத்தாத்து அம்புஜத்தைக் கூப்பிடு. எதிராத்து எச்சிமியைக் கூப்பிடு. மற்றப் பக்ஷ ணங்கள் பண்ணுவதற்கு, நம்ம அனந்தராமன் பூணலுக்கு பக்ஷணம் பண்ண வந்தானே நாணு, அவனைக் கூப்பிட்டு வரச்சொல்லி மாரி முத்துவை அனுப்பு” என்று கட்டளையிட்டு விட்டு, பணவிஷயங்களைக் கவனிக்க பொக்கிஷ உள்ளாகிய ரேழி உள்ளே புகுந்து உட்பக்கம் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டாள். அலமேலு வும் மாமியார் உத்தரவுப்படிக்குப் பெண் பிறக் கப்போகிறதென்கிற சந்தோஷத்தினால் சகல காரியங்களையும் அன்றே செய்து முடித்து விட்டாள்.

மறு நாள் நாணுவும் வந்து, குஞ்சாலாடு, மைசூர்பாகு, ஜிலேபி, ஓமப்பொடி முதலியவை களைச் செய்து விட்டான். பழனிக்குப் புறப் படவேண்டிய புதன்கிழமையும் வந்துவிட்டது. அன்று விடியற்காலம் மூன்று மணிக்கே மாமி யாரும் மருமகளும் எழுந்து புளியோரை, ததி யன்னம், எலிமிச்சம்பழச்சாதம், இட்டலி, தோசை, சட்டினி, மிளகாய் பொடி, அவல்கருவடாம், பேனிக்கருவடாம், ஜவ்வரிசிக் கருவடாம், அரிசி அப்பளம், உளுந்தப்பளம், வாழைக்காய் வறுவல், உருளைக்கிழங்கு வறு வல், பஜ்ஜி முதலியவைகளும் செய்து எடுத்துக் கொண்டு தோய்ந்த நெய்யாகப் பெரிய ஈயம் பூசிய பித்தளை டப்பா நிறைய எடுத்துக் கொண்டு அவசரமாகச் சமயல் செய்து சாப் பிட்டுப் புறப்படத் தயாரானர்கள். ஆனல் மணி 10 தான் அடித்தது. இவ்வளவு ஏற்பாடுகள் செய்தும் தன் பிள்ளையாகிய சுப்பிரமணியன் வா வில்லையே என்கிற நினைவே மீனாக்ஷிக்கு வரவி ல்லை அந்த சமயத்தில். பேரன்களாகிய அனந்த ராமனும் கிட்டுவும், “அம்மா, அண்ணு இன்னும் வரவில்லையே, நாழியாய் விட்டதே, நம்மோடு அண்ணுவும் பழனிக்கு வரவேண்டாமா?” என் றதும், மீனாக்ஷியம்மாளுக்கு அப்பொழுது தான் சுப்பிரமணியன் தேவடியாள் வீட்டுக்குப் போயிருப்பது ஞாபகத்திற்கு வந்து, தாங்க முடியாத ஆத்திரத்துடன் பிள்ளையை வாயில் வந்தபடி திட்டிக்கொண்டிருக்கும் சமயத்தில் அவனும் வந்து சேர்ந்தான். இவளுடைய ஆத் திரத்தைக் கண்ட சுப்பிரமணியனும் தானும் நேருக்கு நேராகச் சண்டைபோட ஆரம்பித்து விட்டான். அந்த சமயத்தில் தான் பழனிக்குப் போகிற காரியத்தை நினைத்துக் கொண்டு பிள்ளையுடன் சண்டைபோடாமல் சமாதான மாகவே பேசி தன் ஆத்திரத்தை அடக்கிக் கொண்டாள் மீனாக்ஷி. பிள்ளையும் இவளுடைய சமாதானத்தைக் கண்டு ‘நம்முடைய நல்ல காலம் தான்! இவள் இந்தமட்டும் வாயை மூடிக்கொண்டாளே’ என்று தானும் சமாதான மாய்ப் பேச ஆரம்பித்து விட்டான். மீனாக்ஷியும் பழனிக்குப் புறப்படவேண்டிய காரியங்களை எல்லாம் பிள்ளையுடன் கலந்து பேசி ரயிலுக்குப் புறப்படப் பிள்ளையை துரிதப்படுத்தினள். சுப்பி ரமணியனும் தான் ஐந்தாறு நாள் தேவடியாள் செல்லத்தின் வீட்டிற்குப் போவதற்கில்லையே என்ற வருத்தத்துடனும் தாயார் சண்டைபோ டாத சந்தோஷத்தினலும் தானும் புறப்படச் சித்தமானன். மணி 12 அடிக்கவே இவர்கள் காலமே எட்டு மணிக்கே சாப்பிட்டாய் விட்ட படியினல் இவர்களுக்குப் பசி அதிகரித்து விட்

டது. எல்லோரும் ஒரு மணிக்குள்ளாக டிபன் சாப்பிட்டு விட்டார்கள். உடனே எல்லோரு மாக மூட்டை கட்ட ஆரம்பித்து விட்டார்கள். உப்புச்சீடை ஒருமரக்கால், வெல்லச்சீடை ஒரு மரக்கால், எட்டுச்சித்து முருக்கில் 100 முருக்கு, முக்குறுணி அவல், உரித்த தேங்காயளவுள்ள பொருவளங்காய் உருண்டையில் 100, குறுணி பிடிக்கும்படியான ஈயப்பானை நிறைய திரட்டுப்பால், ஜிலேபியில் 100, குஞ்சாலாடு 100, ரவை உருண்டையில் 100, ஓமப்பொடியில் 100, மைசூர்பாகு வில்லையில் 200, இதைத் தவிர இன்னும் சில பக்ஷணங்களையும் 4, 5 ஆள் தாராளமாய்ப்புகுந்து கொள்ளும்படியான ஒரு சிறிய கட்டுப் பெட்டியில் மிகவும் சிரமப் பட்டு அடைத்து வைத்தார்கள். ஒரு சாக்கில் 100 தேங்காயும், சுவாமி அபிஷேகத்திற்காக 50 இளநீரும், நாலு தார் பூவன் பழமும், இரண்டு தார் பேயன்பழமும், 100 வாழை இலையும் ஒரு மூட்டை அரிசி, அதற்குத் தகுந்தபடி பருப்பு வகைகள், உப்பு, புளி, ஏலக்காய், முந்திரிப்பருப்பு, குங்குமப்பூ, நல்லெண்ணெ, தேங்கா யெண்ணெ, நெய், நெருப்புப்பெட்டி முதல் விறகு மூட்டை தவிர, மற்ற சாமான்களை எல் லாம் குறைந்தது 4, 5 வண்டியாவது வேண்டு மென்னும்படி கூட்டி வைத்துவிட்டார்கள். வீட்டை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக் கொள் ளும்படி காரியஸ்தர் கிருஷ்ண ரெட்டியாருக்கு உத்திரவிட்டாள். மாடுகன்றைப் பார்த்துக் கொள்ளும்படி மாரிமுத்துவிற்கும் இராமசாமிக் கும் கட்டளையிட்டாள். வீடு பெருக்கும் கருப் பாயியைத் தான் பழனிக்குப் போய்வருமட்டும் வீட்டைவிட்டுப் போகக் கூடாதென்று கண் டிப்பாய்ச் சொல்லிவிட்டாள்.

மீனாக்ஷி—"அடி அலமேலு, இந்தா, நகை நட்டுகளைப் போட்டுக் கொள்" என்று நாமப் பட்டைச்சங்கிலி நாலுவடமும், அரைப்பவுன் மாலையும், ஒத்தைக்கல் சிகப்பு அட்டிகை, நற் பவழமாலை, தசாவதாரம் போட்ட நாக ஒத்து, கல்லிழைத்த கிளிகள்வைத்த கோணவங்கி, வளைவுள்ள சலங்கைகட்டின ஒட்டியாணம், இவைகளைத் தவிர இன்னும் சில்லரை நகைகளை யும் எடுத்துக் கொடுத்தாள். அலமேலுவும் பழனிக்குப் போகிறநிமித்தமாவது நகைகளை மாமியார் கொடுத்தாளே என்று சந்தோஷத் துடன் சீக்கிரமாக ஒரு நொடியில் அணிந்து கொண்டாள். பிறகு பேரன்களுக்கும் பிள்ளைக்கும் பட்டுவேஷ்டி, உருமாலை, ஸில்க் சட்டைகள் முதலியவைகளும் அலமேலுவுக்கு வேண்டிய உயர்ந்த சரிகைப் புடவைகள், காசிப்பட்டுக்கள், காச்சிஸில்க் முதலியவை களும் தனக்கு வேண்டிய வெண்பட்டு, நார் மடி முதலியவைகளையும் ஸ்டீல் டிரங்கு 4 நிறைய அடைத்துவைத்துவிட்டுச் செலவுக்காக ரூ. 500 பெட்டியில் வைத்துப் பூட்டிவிட்டு அதைத்தவிர டிக்கட்டுக்காகவும், வண்டி போர்டர் வழிச்செலவுகளுக்காகவும் 50 ரூபா யைச் சில்லரையாக மணிபாக்ஸில் போட்டு பத்திரமாக இடுப்பில் வைத்துக் கொண்டாள். இதற்குள் மணி நாலு அடிக்கவே எல்லோரும் சாப்பாட்டை முடித்துக் கொண்டு ரெட்டியாரைக் கூப்பிட்டு சொந்தவண்டியாகிய இரண்டு வில்வண்டியையும் கட்டிவாச் சொல்லி சாமான்கள் ஏற்றுவதற்கு இரட்டை மாட்டு வண்டியில் பெரியதாக இரண்டு வண்டி கொண்டுவரும்படி உத்தரவிட்டாள். ரெட்டி யாரும் நாலு வண்டிகளையும் வாசலில் கொண்டுவந்து நிறுத்திவிட்டார். வண்டிக்கார ளுகிய வீரனும், சுப்பனும் மீனாக்ஷியம்மாள் உத்திரவின்படியே சாமான்களை வண்டிகளில் நிரப்பிக் கீழேவிழாமல் கயிறுகளையும் கட்டி விட்டு வில் வண்டியில் பெட்டி படுக்கைகளை வைத்து மீனாக்ஷியம்மாள் வருகையை எதிர் பார்த்துக்கொண்டு வண்டியின் முன்புறத்திலே யே நின்று கொண்டிருந்தார்கள். உடனே

மீனாட்சியம்மாள் முன் ஏற்பாட்டின்படி வேலைக்காரி, வேலைக்காரர்களைக் கூப்பிட்டு வீட்டையும் மாடு கன்றுகளையும் கொல்லையில் தென்னை மரம், செடி கொடிகளையும் ஜாக்கிரதையாய்ப் பார்த்துக் கொள்ளும்படி கண்டிப்பான உத்தரவு செய்து பிள்ளை, நாட்டுப்பெண், சிறிய பேரன் கிட்டுவையும் ஒரு வில்வண்டியில் ஏறும்படி சொல்லி, தான் பெட்டிகள் வைத்துள்ள வண்டியில் பெரிய பேரன் அனந்தராமனுடன் ஏறிக்கொண்டு ரெட்டியாரைக் கூப்பிட்டு பால் கூஜாவையும் வெந்நீர் கூஜாவையும் கொணர்ந்து வைக்கும்படி சொல்லித் தன் வண்டிக்கு முன்னால் ஒரு சாமான் வண்டியும் நடுவில் இரண்டு வில்வண்டிகளும் கடைசியில் ஒரு சாமான்வண்டியையும் விடும்படி உத்தரவிட்டாள். மீனாட்சியம்மாள் உத்தரவுப்படி ரெட்டியாரும் கடைசியில் வரும் சாமான் வண்டியில் ஏறி உட்கார்ந்துகொண்டார். வண்டிக்காரர்களும் நல்லசகுனம் பார்த்து வண்டிகளை ஓட்ட ஆரம்பித்தார்கள்.

# பெண்களின் நிலைமை.

ஸ்ரீமதி கு. சேதுநாயகி அம்மாள்.

ஒரு தேசத்தின் நிலைமை அத்தேசத்துப் பெண்கள் நிலைமையையே ஒத்திருக்கின்றது. பண்டைக் காலத்திலே பாரத நாட்டுப் பெண்கள் ஒப்புயர் வற்ற உன்னத நிலையில் இருந்ததனாற்றான் அக்காலத்திலே இத் தேசமும் உன்னத நிலையிலிருந்தது. அவர்கள் கல்வியறிவுடனும் சமத்துவத்துடனும் சுதந்திரத்துடனும் இன்பமயமான வாழ்வு வாழ்ந்து வந்தனர். அவர்கள் அக்காலத்தில் மிகவும் கௌரவமாக நடத்தப்பட்டனர்.

நல்லிசைப் புலமை மெல்லியலார் பலரைத் தன்னகத்துக் கொண்டு விளங்கிய பாரத நாட்டிலே பண்டைக் காலத்திருந்த தாய்மாரின் வீரச் செயல்களைப் பற்றிச் சிறிது கூறுவோம். கண்ணகி யென்னும் கற்பிற் சிறந்த உத்தமி எவ்வாறு வீராவேசத்துடன் அரசன் அவைக் களம் சென்று தன் கணவன் கள்வனல்லன் என்னும் உண்மையை வெளிப்படுத்தினள். பெயராலன்றிச் செயலாலும் மங்கையர்க்கரசியார் என்று போற்றத்தக்க பாண்டிமாதேவியாராலன்றோ பாண்டி நாடு முழுவதும் திருநீற்றின் மகிமை பரவியது. சிவபக்தியிற் சிறந்த திலகவதியார், பரசமயப் படு குழியில் விழுந்தழுந்திய தம்பியாரைச் சைவசமயத்திற் சேர்த்ததனாலன்றோ, திருநாவுக்கரசர் அருளிச் செய்த அரிய தேவாரங்கள் இன்றைக்கும் உலகினர்க்கு உதவுகின்றன. ஓர் வீரத்தாய் தன் மகன் போரில் புறமுதுகு காட்டி ஓடினான் என்று சிலர் சொல்லக் கேட்டுப் போர்க்களஞ் சென்று பார்த்தபொழுது அங்கு அவன் மார்பில் அம்பு தாக்குண்டு இறந்து கிடப்பது கண்டு ஈன்ற பொழுதிலும் பெரிது மகிழ்ந்தனளாம். இவர்களைப் போன்ற எத்தனையோ வீரத்தாய்மாரின் சரித்திரங்கள் இன்றைக்குஞ் சிலையில் எழுத்துப்போல் மிளிர்கின்றன. அவற்றை விரித்துரைக்கிற் பெருகுமென விடுத்தோம். இது நிற்க.

தற்காலத்துப் பெண்கள் கல்வியறிவின்றி, மனவுறுதியற்று, ஊக்கங் குன்றி அடிமைகள் போன்று சொல்லற்கரிய அல்லற் படுகின்றனர். அவர்கள் பெரும்பாலும் தேக திடமற்றவர்களாயிருக்கின்றார்கள். கல்வியறிவும் தேக திடமுமே சந்தோஷத்தையும் உற்சாகத்தையும் சுறு சுறுப்பையும் தரவல்லன. இனி

அவர்களின் கல்வியறிவைப் பற்றிக் கூறப்புகின் அது மிகவும் பரிதாபகரமாயிருக்கின்றது. அவர்கள் கல்வியறிவுடன் இருந்தாற்ருன், ஆடவர்களுக்கு எவ்வழியிலும் உற்றதுணையா யிருந்து உதவிபுரிவர்.

"குழந்தை பிற்கால மனிதன்" என்பது ஒரு முதுமொழி. குழந்தைகளின் பிற்கால ஜீவியம் தாயின் வளர்ப்பிலேயே தங்கியிருக் கின்றது. ஆகையால் தாய்மார் கல்வியறிவு, சிசுபரிபாலனம் முதலியவற்றில் மேம்பட்ட வர்களாயிருந்தாற்ருன், குழந்தைகள் பிற்காலத் திலே நன்னிலையிலிருக்க முடியும்.

"இல்லாள் அகத்திருக்க இல்லாததொன் றில்லை" என்றபடி நற்குண நற்செய்கையுடைய மனையாள் வீட்டிலிருப்பாளாயின் அவ்வீட்டில் இல்லாததொன்றுமில்லை. "மனைக்கு விளக்கு மடவாள்" என்றது போல் ஒரு வீடு சிறப் புற்று விளங்குவதும் பெண்ணினலன்ருே! அப்படியே ஒரு தேசமும் நற்குண நற்செய்கை யுடைய பெண்கள் இருந்தாலன்ருே சிறப் புற்று விளங்கும்!

உலக கர்த்தாவாகிய பரமசிவனும் தமது பஞ்ச கிருத்தியத் தொழிலை உலகமாதாவாகிய பராசக்தியின் உதவியைக் கொண்டே நடத்து கிருர் என்ருல் அவரையே தமக்குத் தலைவ ணுகக் கொண்ட மனிதர் பெண்களின் உதவி யின்றி எவ்வாறு தமது கடமைகளை வெற்றி யுடன் நிறைவேற்றுவர்? ஒரு காலால் நிற்கும் ஒருவன் எவ்வாறு தனது முழுதைரியத்துட னும் நின்று தன் கருமத்தை முடிக்கமாட்டா னே, அதுபோலவே மனித சமூகமும் பெண் களின் உதவியின்றி எவ்வழியிலும் வெற்றி பெற முடியாதென்பது எவரும் மறுக்கொணு உண்மையாகும். ஆடவர்களுக்குப் பெண்களே எவ்வழியிலும் உற்றதுணையாயிருந்து உதவி புரிந்து உற்சாகத்தையும் அளிக்க வல்லவர்.

பண்டைக்காலத்துப் பெண்களின் உன்னத நிலையைப் புகழ்ந்து கொண்டு வாளாவிருத்தல் கூடாது. அவற்றை அனுசரித்து அதன் வழி ஒழுக முயற்சிப்போமாக. அவர்களின் உன் னத நிலையை நினைந்து தற்காலத்துப் பெண் பாலாராகிய நாம் பெருமை யுறுவது போலவே, தற்காலத்துப் பெண்களின் நிலைமை யைக் குறித்து எதிர்காலத்தார் பெருமை பாராட்டத்தக்கவண்ணம் நடக்கப் பிரயாசப் படவேண்டும்.

பிரசங்க மேடையில் நின்று பெண்கள் முன் னேற்ற விஷயமாக அநேக தீர்மானங்களைப் பேசிவிட்டு அவற்றை நிறைவேற்ருது விடு வதனுற் பிரயோசனமில்லை. அவற்றை அனு சரித்து வெற்றிபெறல் வேண்டும். பெண்கள் கல்வி நாடெங்கும் பரவச் செய்தல் வேண்டும். அவர்கள் அறிவை விர்த்தி செய்யத்தக்க பிர சங்கங்களை அறிஞர்களால் செய்விக்க வேண் டும்.

கும்பகர்ணன் நித்திரையில் ஆழ்ந்திருந்தது போல நித்திரையில் ஆழ்ந்திருந்த சகோதரர் களிற் சிலர் சற்று விழிப்படைந்து பெண்கள் முன்னேற்றம் அடைந்தாற்ருன் தேசமும் நன்னிலை அடையுமென உணர்ந்தனர். அவ் வாறு உணர்ந்தவர்களால் பெண்கள் முன் னேற்றம் அடையத்தக்க வழிகள் சில விடங் களிற் சிறிது ஆரம்பமாகி இருப்பது மிகவும் சந்தோஷத்தைத் தருகிறது. பெண்கள் கல்வி நாகரிகங்களிற் சிறந்து விளங்கவே, அவர் களைச் சார்ந்த குடும்பங்கள் சிறக்கவே, அக் குடும்பங்களிருக்கும் தேசத்து மக்கட் பகுதி யார் சிறந்து விளங்கவே, அத்தேசமும் சிறந்து விளங்கும். பெண்கள் நன்னிலை அடையவெற்றி வேற் பெருமாள் கிருபை புரிவாராக!

---

# ஓர் ஐந்தங்க நாடகம்.

(ஸ்ரீமான் அல்லாபிச்சை.)

(IV மலர், 751 ம் பக்கத்தொடர்ச்சி)

(பெயர் :—வாசகரிஷ்டப்படி.)

அங்கம் IV. களம் I.

அரண்மனையில் ஓர் அறை.

பத்மினி:—எனது பெருமானே! நண்பனுக்கேதேனும் தீங்கு நேர்ந்திருக்கின்றதோ? ஏன் அவர் தாம் வாக்களித்த வண்ணம் நேற்றிரவு இங்கு வந்தாரில்லை? நண்பன் என்னிடம் வாராமைக்குச் சிறந்த காரணம் இருக்க வேண்டும். சுந்தரன் ஒரு வேளை துன்பம் விளைவித்தானோ? ஓ, எனது நண்ப! நீ ஏன் வந்தாயில்லை? என் மீது கோபமோ? உன்னுடன் செல்வதாக யான் கூறினேனன்றோ? கூறியும் நீ வாராததற்குக் காரணமென்ன? காதலர் இன்னல் அனுபவித்தல் அவர் பெருங் கடமையோ?

[தாதி பிரவேசித்தல்] என்னருமைத் தாயே!

தாதி:—என்ன, எனது அருமைக்கண்ணே!

பத்மினி:—நண்பனைப் பார்த்துப் பல நாட்கள் ஆயின. நேற்றிரவு வருவதாக வாக்களித்தும் வந்தாரில்லை.

தாதி:—நண்பன் உன்னைக் காண நேற்றிரவு வந்தது திண்ணம்.

பத்மினி:— அப்படியாயின் ஏன் இங்கு வந்தாரில்லை.

தாதி:—நீ சிறிது நேரஞ் சென்று அறிவாய்; நீ காலைப் போசனம் அருந்தினையோ?

பத்மினி:—இல்லை, அம்மா! தயை செய்து கூறு. நீ கூறுவதை நோக்கின் நண்பனுக்குத் துன்பம் நேர்ந்திருக்கின்றது என்று கருதுகின்றேன்.

தாதி:—யான் பிறகு கூறுகின்றேன்.

பத்மினி:—இல்லை, அம்மா! உடனே தயை செய்து கூறுவாய். நீ கூற அஞ்சுதல் எனது இருதயத்தில் பெரு இன்னலை யுண்டாக்குகின்றது. நண்பனுக்குத் துன்பம் நேர்ந்துள்ளதோ?

தாதி:—கடவுள் செய்வன யாவும் நன்மையே. யான் யாவற்றையும் பிறகு கூறுகின்றேன்.

பத்மினி:—நீ இவ்வாறு காலங்கடத்தல் என்னை நீ நரகத்தில் தள்ளுதலை நிகர்க்கின்றது.

தாதி:—துன்பம் நேர்ந்திருக்கு மென்னும் அனுதாபமே உனக்கு இத்தகைய துன்பம் விளைவிக்கும்போது துன்பமுனக்கு என்ன தான் செய்யாது! யான் பிறகு கூறுகிறேன்.

பத்மினி:—எனது அன்னாய்! நீ கூறுவதினின்றும் நண்பனுக்குத் துன்பம் நேர்ந்துள்ளது திண்ணம் என்பது யாவரும் அறிவர். இத்தகைய துன்பம் விளைவித்தது யார்? அவர் இப்பொழுது எங்குள்ளார்?

தாதி:—பத்மினி! ஏன் அழுகின்றாய்? [தாதி பத்மினியின் கண்களைத் துடைக்கிறாள்.]

பத்மினி:—என்னருமைத் தாயே! யான் இப்பொழுது என்செய்வேன்? நீ தயை செய்து நடந்ததைக் கூறுவாய். நண்பனுக்கு என்ன நடந்தது? எனது அன்னாய்! யான் மிக்கதுர் அதிர்ஷ்டமுள்ளவள்.

தாதி:—என்னருமைக் குழந்தாய்! ஏன் அழுகின்றாய்? அழுவதாலுண்டாகும் பயன் யாது?

பத்மினி :—அம்மா! தயை செய்து நடந்ததைக் கூறு.

தாதி :—நேற்றிரவு நண்பன் இங்கு வரும் போது கந்தன் முதலிய பல கள்வர்கள் ஒன்று சேர்ந்து தாக்கினராம்.

பத்மினி :—தாக்கினோர் காயப்படுத்தி யிருக்க வேண்டும்.

தாதி :—ஆம், பத்மினி! அழாதே.

பத்மினி :—எத்தகைய காயம்?

தாதி :—என் சொன்னாய்? அழாதே பத்மினி! நண்பன் சீக்கிரம் குணமடைவான். பத்மினி! அழாதே.

பத்மினி :—எத்தகைய காயம்? எனது அன்னாய்! உண்மை பேசுதல் உனது இயற்கை யன்றோ?

தாதி :—யான் கூறுவதைக் கேட்பாய். நண்பன் கூடிய சீக்கிரத்தில் குணமடைவான்.

பத்மினி :—அம்மா! யான் கேட்பது ஒன்று, நீ கூறுவதோ மற்றொன்று. எத்தகைய காயம்?

தாதி :—பத்மினி! நீ மேன்மையான இருதயம் பெற்றுள்ளாய்.

பத்மினி :—இல்லை, அப்படியாயின் தாங்க இயலாத் துன்பத்தை என்னைப் படைத்தோன் எனக்களித்திரான்; நடந்ததைச் சொல்லு.

தாதி :—என்னருமைப் பத்மினி! அழாதே. அழுவதாலுண்டாகும் பயன் யாது?

பத்மினி :—அம்மா! நீ என் கூறுகின்றாய்? எத்தகைய காயம்?

தாதி :—உனது காதலன் கள்வர்களுடன் மிக்க வீரத்துடன் சண்டை செய்து பலருக்குப் பெருங் காயங்கள் விளைவித்தானும்.

பத்மினி :—அம்மா! யான் உன்னிடம் நண்பனது வீரத்தைப் பற்றிக் கேட்டேனில்லை. எத்தகைய காயம்?

[ஒரு தோழி பிரவேசிக்கின்றனள்]

பத்மனி :—அம்புஜம்! வா இங்கு.

அம்புஜம் :—எங்கள் அருமைப் பத்மினி! நமது மாளிகைக்குச் சிறிது தூரத்தில் ஒரு விபத்து நேர்ந்ததைக் கேள்வியுற்றனையோ?

பத்மினி :—இல்லை! இல்லை!

அம்புஜம் :—நேற்றிரவு பல கள்வர்கள் ஒன்று கூடி வனப்புற்ற தோற்றமும், பரந்த நெற்றியும், உயர்ந்த நாசியும், மேன்மையான உதடுகளும், கண்டோர் மயங்கத்தக்க மார்பும் வாய்ந்த ஓராடவனுக்குப் பல பெருங் காயங்களைத் தலையின்மீதும், மார்பின் மீதும், வயிற்றின் மீதும் விளைவித்தனராம். அவனுடைய பெயர் ஏதோ சொன்னார்கள். [சிறிது யோசித்து] அவனுடைய பெயர் நண்பனும். பாபம்! வயிற்றின் இடப்புறத்தில் மிக்க பெரிய காயமிருக்கின்றதாம். கைதேர்ந்த பல வைத்தியர்கள் அவன்...........

தாதி:—அம்புஜம்! போதும், உன்னை யாரோ கூப்பிடுகின்றார்கள். [நிஷ்கிரமிக்கின்றனள்]

பத்மினி.—[அழுதுகொண்டு] அம்மா! இப்பொழுது அவர் எங்குள்ளார்?

தாதி:—சிகிச்சைசாலையில், பத்மினி! ஏன் நீ இவ்வாறு அழுகின்றாய்?

பத்மினி:—அம்மா! எனக்கு மிக்க மயக்கமுண்டாகிறது. [சிறிது நேரம் கடந்து மூர்ச்சித்துக் கீழே விழுகின்றனள்.]

தாதி:—இத்தகைய நட்பினையாள் ஒரு போதும் கண்டேனில்லை. நண்பன் பிழைத்தல் மிக்க அரிது. இவ்விருவரைப்போன்ற காதலனையும், காதலியையும் யான் கண்டதேயில்லை. கடவுளே, இவர்களுக்கு இன்பமுண்டாக்

குக. அவன் இறப்பின் இவள் இறப்பதற்குச் சிறிதுமையப்பாடில்லை. கடவுளே இவளுடைய துன்பத்தை நீக்க வன்மையுள்ளவர்.

களம் 2.

வைத்தியசாலையில் ஓர் அறை.

(நண்பன் கட்டிலின் மீது கிடத்தப்பட்டுள்ளான். பத்மினி ஆடவனுடையணிந்திருக்கிருள்)

பத்மினி:—நண்ப! என் செய்கின்றனை? இவை யாவும் என்னாலன்றோ நேர்ந்தன?

நண்பன்:—என்னருமைப் பத்மினி, ஏன் இங்கு வந்தாய்? கொடுமை வாய்ந்தார் உன்னை இகழ்வாரன்றோ?

பத்மினி:—அவர்கள் இகழ்வதால் எனக்கு யாதொரு நஷ்டமுமில்லை. நண்ப! உனக்கு எப்படி இருக்கின்றது?

நண்பன்:—நோய் அதிகமாக இருக்கின்றது. இது இருக்கட்டும். பத்மினி! உன்னைக் கண்டது முத்தியைக் கண்டது போலிருக்கிறது. என்னருமைப் பத்மினி! உனது சிறந்த கரங்களால் எனது காயங்களைத் தொடு. அவை சீக்கிரம் குணமடையும். [பத்மினி கூறியவாறு செய்கின்றனள்.]

பத்மினி:—நண்ப! இவ்விபத்திற்குக் கர்த்தா யார்?

நண்பன்:—சுந்தரனுல் தூண்டப்பட்ட கந்தனும் அவர்கள் பொருமையுமே.

பத்மினி:—என்னருமைக் காதல! உனக்குத் துன்பம் விளைவித்த பாதகர்கள் இப்பொழுது எங்குள்ளார்?

நண்பன்:—சிறைச்சாலையில்.

[கோகிலம் பிரவேசிக்கின்றனள்]

பத்மினி:—[ஆச்சரியமடைந்து] அதோ, உன்னை நாடிவரும் மங்கை யார்?

நண்பன்:—யான் பிறகு கூறுகின்றேன். கோகிலம், அழாதே.

கோகிலம்:—நண்ப, யான் உன்னை இத்துன்பத்தினின்று நீக்கி இருக்கலாம். எனது கவலையின்மையும் மடமையுமே உனக்கு நேர்ந்த இத்துன்பத்திற்குப் பெருங்காரணங்கள்.

நண்பன்:—அஃது எவ்வாறு?

கோகிலம்:—அன்று கரியன் ஓடும்பொழுது ஒரு கடிதத்தை விட்டு ஓடினன். அக்கடிதத்தை யான் கொடுத்திருப்பின் இத்துன்பம் நேர்ந்திராது. [கடிதத்தை அவன் கையில் கோகிலம் கொடுத்தல். நண்பன் மெதுவாக வாசித்தல்]

பத்மினி:—[விலகி] இவ்வழகிய மங்கை யார்? இவள் நண்பனுக்கு எவ்வாறு சம்பந்தப்பட்டவள்? நண்பனும் மற்ற ஆடவர்களைப் போன்றவனே? இவள் இப்பொழுது இங்கே தனியே வருவதற்குக் காரண மென்ன?

நண்பன்:—கோகிலம், நீ மிக்க பெரும் பிழை செய்தாய். இஃது என்னிட மிருக்கட்டும்.

கோகிலம்:—ஆம், அண்ணு! என்னுடைய தோழிகள் வெளியே இருக்கின்றனர். நாளைய தினம் யான் வருகின்றேன்.

நண்பன்:—கோகிலம், அப்படியே செய். [கோகிலம் நிஷ்கிரமிக்கின்றனள்] என்னருமைத் பத்மினி! ஏன் அங்கு தனியே நிற்கின்றுய்?

பத்மினி:—இங்கு வந்த அம்மங்கை யார்?

நண்பன்:—அவள் என்னுடைய தங்கை.

பத்மினி:—நண்ப, உன்னுடைய தங்கை மிக்க அழகுவாய்ந்தவள்.

நண்பன்:—பதினுயிரம் தங்கையரின் அழகும் நட்பும் வாய்ந்த உன்னை எத்தங்கை தான் நிகர்வாள்?

பத்மினி:—எனது நண்ப, அதிகமாகப் பேச வேண்டாம்.

நண்பன்:—இக்காயங்கள் இப்பொழுது குண மடைவது போலத் தோன்றுகின்றன. [மணி ஒன்பது அடிக்கின்றது] பத்மினி! உனக்கு நேரமாகிறது. நீ தனிமையாகவா வந்தாய்?

பத்மினி:—வெளியே வண்டி நிற்கின்றது. நண்ப! கடவுள் உனக்கு உதவிசெய்வார். நீ குணமடைந்த உடனே நாம்.........

நண்பன்:—நல்லது, என்னருமைப் பத்மினி.

பத்மினி:—யான் போய் வருகின்றேன், நண்ப!

நண்பன்:—நல்லது பத்மினி! [பத்மினி நிஷ்கிரமிக்கின்றனள்]

"கடவுளே! பத்மினியைப் போன்ற மங்கையரும் வையகத்திலுளரோ? அழகுவாய்ந்து இருக்கலாம்; செல்வம் வாய்ந்து இருக்கலாம்; அறிவுவாய்ந்து இருக்கலாம்; இவற்றுடன் குணம், ஒப்பற்ற நட்பு, சிறந்த தைரிய முதலியவை வாய்ந்து இருத்தல் மிக்க அரிது. எனது பத்மினியோ ஒவ்வொரு குணத்திலும் திலகம் போல விளங்குகின்றனள். நிற்மலக் கடவுளே! அவள் எப்பொழுதும் சுகித்திருக்க உதவிபுரிவீராக!"

அங்கம் V. களம் I.

அரண்மனையில் ஓர் அறை.

பத்மினி:—[நண்பன் மாணத்தைக் கேட்டு] ஐயோ! இனி யான் என் செய்வேன்? இன்பம் முற்றுமொழிந்தது, உலகம் முற்று மழிந்தது. ஓ, கர்த்தாவே! பாபியாகிய எனக்கு இப்பூவின்மீது இனி என்னுளது? எனது இதயம் நீங்கிற்று; ஆருயிர் என்னை விட்டு விலகிற்று; சவமாகிய இவ் வெற்றுடம்பு இருந்து என் பயன்? ஓ நண்பனே! உனது அழகிய வதனத்தை யான் எவ்வாறு காண்பேன்? உலகத்தை வெறுத்து நீங்கினையோ? ஐயோ! இனி யான் என் செய்வேன்? ஓ எனது ஒப்பற்ற நண்ப! உனது இத்தகைய மரணத்திற்கு யான் காரணமன்றோ? என் பொருட்டு உனது உயிரையும் துரும்பெனக் கருதி அச்சிறுத்தையைக் கொன்றாய்; சுந்தரனால் என் பொருட்டுத் துன்பம் அநுபவித்தாய்; இப்பொழுது உயிரையும் என் பொருட்டு அர்ப்பணஞ் செய்தாய் [ஒரு சிறிய புட்டியைக் கையில் ஏந்தி] எவ்வகைச் செல்வமுமெனது துன்பத்தை நீக்கச் சக்தியற்று உள்ளது. என்றால் வையகத்திற்கு இனிமேல் சிறிதும் பயனில்லை. [புட்டியிலுள்ள விஷத்தைப் பார்த்து] துன்பத்தை நீக்கும் அமிர்தமே! எனது காதலனுடன் சேர்க்கும் தோழனே! இன்பத்தைப் பயக்கு மின்பமே! நீ என்னிட மில்லாவிடின் என் கதி என்ன? என்றும் துன்பம்; என்றுங் கேடு. நண்பன் அற்ற சுவர்க்கத்திலும் நண்பனுற்ற ஒரு காடு நன்று. எனது காதலனற்ற இவ் வுலகம் உலகமோ! ஒரு போது மில்லை. என்ன, எனது தாய்தந்தையர் கர்த்தனே! அவர்களுக்குச் சுகம் அளிப்பாய். [புட்டியை திறந்து விஷம் உட்கொண்டு] ஓ, எனது நண்ப! உன்னகத்திற்கு வாக்களித்தவாறு கூடிய சீக்கிரத்தில் வருகின்றேன். என்னை நேசிப்பாயன்றோ? நீ நேசிப்பாய், சிறிதும் ஐயமில்லை. [சீதை பிரவேசிக்கின்றனள்] சீதா! வருக, என்னிடம் வருக. [சீதையை முத்தமிட்டு] சீதா, என்னை இக்கட்டலின் மீது கிடத்து! (சீதை கிடத்துகின்றனள்).

சீதை:—இது என்ன விபரீதம்! என்னருமைப் பத்மினி, என் உனது கண்கள் சுழலுகின்றன.

பத்மினி:—நண்பன் இறந்தது நீ அறிவாயோ?

சீதை:—ஓ, காதலின் உருவே!

பத்மினி:—சீதா, அழாதே, யான் சுகத்தை நாடிச் செல்கின்றேன். எனது மார்பைத் தடவு! அழாதே, சீதா!

சீதை:—பத்மினி! உன்னைக் காண்பது எவ்வாறு? (பத்மினி இறந்தனள்) பரமபதநிழலை யடைந்தனையோ? [சவத்தை முத்தமிட்டு] அழகுமழிந்தது; குணமும் நீங்கிற்று. ஒ, துன்புற்ற உலகமே! இனி உனது பெருமை எங்கே? [சவத்தை உற்று நோக்கி] இது தசைவாய்ந்த முகமோ? ஓ, அழகே! ஓ குணமே! என்செய்வது? உலகமாவது மாயம். சாதியாவது அதனினும் மாயம். மாயத்தை நம்பி உண்மையை இழக்கின்றோம். ஒப்பற்ற பத்மினி தனது கருத்தினைப் பலமுறை தெரிவித்தனள். தெரிவித்துப் பயன் என்?

களம் 2.

வைத்தியசாலையில் ஓர் அறை.

நண்பன்:—என்னருமை இராமா வா !

இராமன்:—நண்ப! நீ இறந்து விட்டதாக நேற்றிரவு பரவிய வதந்தி பெருந்தீமை விளைவித்திருக்கிறது.

நண்பன்:—(திகிலடைந்து) இராமா! அஃது என்ன?

இராமன்:—நண்ப! அதனை உன்னிடம் யான் எவ்வாறு கூறுவேன்?

நண்பன்:—உடனே கூறு! கடவுளுக்காக அதனை மறைத்தல் வேண்டாம்.

இராமன்:—அவ்வதந்தியை நம்பிய பத்மினி...

நண்பன்:—(பெருமூச்சடைந்து)

பத்மினி:—அம்மங்கையைப் பற்றி என்ன?

இராமன்:—என்செய்வது? ஈசன் விதித்தவாறே நடக்கும் யாவும்.

நண்பன்:—இராமா! நடந்ததைக் கூறு!

இராமன்:—விஷமுண்டு இறந்தனள்.

நண்பன்:—ஒ! ஈசனே [மூர்ச்சித்துக் கட்டிலின்மீது விழுகின்றனன்].

இராமன்:—யான் இவ்விஷயத்தை இவனிடம் ஏன் கூறினேன்? அவள் இறந்த பின்னர் இவன் ஒருபோதுமுயிர் பிழைத்திரான். [நண்பனது காயத்திலிருந்து உதிரம் பெருகுதலைக் கண்டு] ஐயோ! பாபம்! [கோகிலம் பிரவேசிக்கின்றனள்] நல்லவேளையில் வந்தாய்.

கோகிலம்:—இராமா! ஏன் எனது அண்ணன் கட்டிலின்மீது இவ்வாறு கிடக்கின்றனர்?

இராமன்:—பிறகு கூறுகின்றேன். முதலாவது இக்காயங்களைச் செவ்வையாய் கட்டுவோம்.

களம் 3.

அரண்மனை.

[பத்மினியின் சவம் கிடத்தப்பட்டுள்ளது. அரசன், அரசி, பந்துக்கள் விசனமுற்று இருக்கின்றனர். மந்திரிமார், சேனைத் தலைவர்கள் முதலிய உத்தியோகஸ்தர்கள் விசனமுற்று இருக்கின்றனர். சுந்தரன் சாந்தமாக ஓரிடத்தில் இருக்கின்றனன். நண்பன் பிரவேசித்துச் சவத்தை யுற்றுநோக்குகிறான்.]

நண்பன்:—அழுது பயன் என்? புலம்பிப் பயன் என்? வருந்தி பயன் என்? துன்பம் அழியா. இன்பம் வளரா. [சுந்தரனைப் பார்த்து] ஒ, சுந்தரனே! எங்களிருவருக்கும் துன்பமளித்த நீ சுகமாயிருப்பாய்! கடவுள் உன்னை மன்னிப்பாராக! இவ்வையகமெனக்கு இனிமேல் பயனற்றது. நரகத்தினும் கொடுமை வாய்ந்தது [திடீரென்று மறைத்து வைத்துள்ள குற்றுடை வாளைத் தனது மார்பில் பாய்ச்சுகின்றனன். அங்குள்ள பலர் உதவிபுரிய வருகின்றனர்] ஒ, எனது அழகிய பத்மினி ! உன்னை அங்கு பார்ப்பேன். [உதிரம் ஏராளமாக மார்பிலிருந்து பாய்கின்றது. நண்பன் இறக்கின்றனன்.]

அரசன்:—சுந்தரா! இவ்விபத்திற்கு நீ எவ்வாறு கர்த்தாவானாய்? வனப்புற்ற இருவரும் மாண்டனரே.

சுந்தரன்:—எங்கள் தலைவ! யான் என் சொல்வேன்? இவ்விபத்தை விளைவித்த பாதகன் யானே. நண்பன் இத்தகைய அருங்குண முள்ளான் என்பதை யானறிந்தேனில்லை. அரசகுலத்தின் கௌரவத்தைக் கெடுக்கக் கருதிய பாதகன் என அவனைக் கருதினேன். சில கள்வர்களைக் கொண்டு, ஒரு நாளிரவு இவன் மீதிருக்கு மிக்காயங்களையும் விளைவித்தேன். இது காரணமாக இவன் வைத்தியசாலையிலிருக்கும் போது "நண்பன் இறந்தான்" என்னும் வதந்தி எங்கும் பரவிற்று. இதைக் கேள்வியுற்ற பத்மினி யோசிக்காமல் விஷமுண்டு இறந்தனள்.

அரசன்:—[அங்குள்ளாரைப் பார்த்து] தயைகூர்ந்து இவ்வாலிபனைப் பத்மினியினருகிலுள்ள அக்கட்டிலின் மீது கிடத்துங்கள். சுந்தரா! யானும் இவ்விபத்திற்கு ஒரு வகையில் கர்த்தாவாக இருக்கின்றேன். ஒரே கடவுளால் படைக்கப்பட்ட மாந்தரை உயர் குலத்தார், இழி குலத்தார் என்று கூறுவது ஓர் அன்னைக்குப் பிறந்த பல மக்களை இவன் உயர் குலத்தோன், அவன் இழி குலத்தோன் என்பதை ஒக்கும். இது மதியீனமே. பத்மினியின் விருப்பை யானறிந்தும், அவளுக்கு இன்ப முண்டாக்காமலித் துன்பத்தையுமுண்டாக்கினேன். [கோகிலம் பிரவேசிக்கின்றனள்] [அரசியைப் பார்த்து] இவள் பத்மினியை ஒத்திருக்கின்றனள். [கோகிலத்தை நோக்கி] ஓ, குழந்தாய்! நீ ஏன் அழுகின்றாய்?

கோகிலம்:—எங்கள் அரசே! யான் என் சொல்வேன்? தாயினும் சிறந்த தாயாகவும், தந்தையினும் சிறந்த தந்தையாகவுமிருந்த எனது அண்ணன் இறந்தனன். எனக்கு இப்பொழுது தாயுமில்லை, தந்தையுமில்லை, உறவினருமில்லை, எனது ஒப்பற்ற அண்ணனுமில்லை. ஓ, காருண்யம் வாய்ந்த பரம! இது உனது நீதியோ? அழகெனக் கூறுமிவ்வடிவை மாற்ற மண்ணாகக் கருதினையோ?

அரசன்:—ஓ குழந்தாய்! நீ சிறிதும் வருந்த வேண்டாம். நீ எனது அகத்தில் எனது மகளாக இருப்பாய். [தனது மந்திரிமார்களை நோக்கி] யாம் செய்யவேண்டிய கடன்களைக் கூடிய சீக்கிரத்தில் முடிக்கவேண்டும். இவர்களிருவரையும் எரித்தலாகாது. பத்மினிக்கருகே நண்பனை அடக்கவேண்டும். அழுவதால் சிறிதும் பயனில்லை.

களம் 4.

தனிமையான ஓரிடம்.

[சுந்தரன் தனது காத்தில் ஒரு குற்றுடைவாளைப் பிடித்திருக்கின்றனன்] யான் பெரும் பாதகன். ஒப்பற்ற குணமும் அழகும் வாய்ந்த பத்மினியின் மரணதிற்கும், குணக் குன்றாகிய நண்பனுடைய மரணத்திற்கும் யானே காரணம். கந்தன் தப்பியோடும் வண்ணம் சிறைச்சாலையின் மதிலிலிருந்து குதித்தபோது அவனை ஒரு புலி கோறல் செய்தது. கரியனும் மற்றப் பாதகர்களுமிருந்த சிறைச்சாலையின் மீது இடி விழுந்து அவர்கள் யாவரையும் அழித்தது. இவை யாவும் அவர்கள் செய்த கொடுமையின் பயனாகும். ஆயினும் இக் கொடுமைக்கும் இவ்விபத்துக்கும் யானே காரணமன்றோ? இவர்கள் இத்தகைய தண்டனை அடைந்தபோது, யான் எத்தகைய தண்டனையடையவேண்டும்? எனக்குத் தகுந்த தண்டனை மரணமே.

[கையிலுள்ள குற்றுடை வாளைத் தன் மார்பிற் பாய்ச்சிக்கொண்டு இறக்கின்றனன்.]

# மஹாகவி காளிதாஸன்.

(ஸ்ரீமான், M. C. கிருஷ்ணஸாமி.)

### I. காலம்.

நம் முன்னோர்கள் சரித்திர விஷயத்தில் கவனம் செலுத்தாமல் இருந்தபடியால், காளிதாஸன் எக்காலத்தில் இருந்தான் என்று அறிவது எளிதல்ல. ஒரு ஆங்கிலய பண்டிதர் கி. மு. 700-ல் காளிதாஸன் இருந்ததாகவும், இன்னொருவர், கி பி. ஆறும் நூற்றண்டில் இருந்ததாகவும், மற்றும் அநேகர் இவ்வாயிரம் ஆண்டுகளின் மத்தியில் வெவ்வேறு காலங்களில் இருந்ததாகவும் வரைந்திருக்கின்றனர். இவ் விவாதத்தில் அடிப்படையாக நிரூபிக்கப்பட்ட விஷயங்கள் இரண்டேயாகும். முதலாவதாக, சாளுக்கிய அரசனான 2-ம் புலிகேசிகாலத்திய ஐஹோல் சிலாசாஸனத்தில் காளிதாஸன், பாரவி இவ்விருவர்களுடைய பெயர்களும் காணப்படுகின்றன. இது சகவருஷம் 556, அதாவது கி. பி. 634-ல், செதுக்கப்பட்டதாக ஏற்படுகிறது.

கி. பி. 473 வருஷம் செதுக்கப்பட்ட மந்தாஸிர் சிலாசாஸனத்தில், காளிதாஸனால் செய்யப்பட்ட சில சுலோகங்கள் காணப்படுவதால் அவன் கிறிஸ்தவ சகாப்தம், ஐந்தாம் நூற்றாண்டிற்குப் பின் இருந்ததாகக் கொள்ள முடியாது. தற்கால ஐரோப்பிய பண்டிதர்கள், விக்ரமாதித்தியன் என்கிற பெயர் பூண்டு கி. பி. 357 லிருந்து 413 வரையில் ஆண்ட இரண்டாவது சந்திரகுப்தனுடைய சபையில் விளங்கியதாக அபிப்பிராயப்படுகின்றனர். நம் தேசத்தில் வெகு காலமாக வழங்கும் ஒரு சுலோகத்தில் விக்ரமாதித்தியன் என்னும் அரசனின் சபையை அலங்கரித்த நவரத்னங்களில் காளிதாஸன் ஒருவன் எனக் கூறப்பட்டிருக்கிறது. மேலும் 'விக்ரமோர்வசீயம்' என்னும் நாடகத்தின் பெயர்குறிப்பிடத் தக்கது. இதன் கதாநாயகன் புரூரவஸ். இதனால் காளிதாஸன் விக்ரமன் என்னும் பதத்தை இங்கு ஏன் உபயோகப்படுத்தவேண்டும் என்று கேள்வி பிறக்கிறது. 'மாலதீமாதவம்' 'மாளவிகாக்னிமித்திரம்' முதலிய கதாநாயக நாயகிகளின் பெயர்களைக் கொண்ட நாடகங்களில், நாயகியின் பெயரே முதலில் உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறது. இதனால் காளிதாஸன் தன் அரசனை கௌரவிக்க, இப்பெயரை இட்டானோ என ஊகிக்க இடமேற்படுகிறது. மேலும், அதேநாடகத்தில்முதல்அங்கத்தில், சித்திரதன், புரூரவஸ்ஸை நோக்கி अनुत्सेकः खलु विक्रमालङ्कारः (கர்வமின்மையே பராக்கிரமத்துக்கு அழகு) எனக் கூறுகிறான். இதிலும் விக்ரமன் என்னும்பதம், விக்ரமாதித்தியனை மறைபாடாக சுட்டிக் காட்டுகிறதோ எனச் சந்தேகிக்கலாம். இவை எல்லாம், காளிதாஸன் விக்ரமாதித்தியன் என்னும் அரசன் சபையில் வாழ்ந்ததாகக் காட்டும். டாக்டர் கீத், மாளவிகாக்னிமித்திரத்தில் கூறப்பட்டுள்ள அச்வமேதயாகம், சமுத்திரகுப்தனால் நடத்தப்பட்ட வேள்வியை சுட்டிக் காட்டலாமென்றும், குமாரசம்பவம் என்கிற பெயர் சந்திரகுப்தன் மகனான குமாரகுப்தனைக் குறிக்கலாமென்றும் கூறுகிறார். இக் காரணங்களைக் கொண்டு, காளிதாஸன் காலம், கிட்டத்தட்ட கி. பி. 400 என அபிப்பிராயப்படுகிறார். ஆனால் தன் பெயரால் கி. மு. 57-ல் ஆரம்பித்து ஒரு சகாப்தத்தை ஏற்படுத்திய விக்ரமாதித்தியன் காலத்தில், காளிதாஸன் வாழ்ந்ததாக வேறு சில பண்டிதர்கள் கூறுகின்றனர். சாகுந்தலத்தின் ஆறுவது (6) அங்கத்

தில் தனமித்திரன் என்னும் வர்த்தகன் இறந்த தாயும், அவனுக்குக் குழந்தை இல்லாததால், அவன் சொத்து அரசனைச்சேர வேண்டு மென்றும் கூறப்பட்டிருக்கிறது. இது ஆசிரியர் ஆப்டிக்கு (Apte) இறந்தவனுடைய மனைவி தன் கணவனின் சொத்தை அநுபவிக்கக் கூடாத காலத்தைக் குறிக்கிறதாகத் தோன்று கிறது. இது கிறிஸ்தவ சகாப்தத்தின் முன், பிரகஸ்பதி, சங்கர், லிகிதர், யக்ஞவல்கர் முதலானோர் தங்களுடைய தர்ம சாஸ்திரத்தை எழுதாது இருந்த காலமெனத் தோன்றும். மேலும் அதே அங்கத்தில், நகர காவலர்கள் செம்படவனை நோக்கி அவன் திருடியதற்காக மாரணதண்டனை அடையப் போவதாகக் கூறு கின்றனர். விக்ரமோர்வசீயத்தில், 5-ம் அங் கத்திலும் ஒரு சுலோகம் களவுக்கு மரண தண்டனையையே குறிப்பது போலிருக்கிறது. பிற்கால ஸ்மிருதியான பிரகஸ்பதி ஸ்மிருதியில் இத்தண்டனை குறைக்கப்பட்டிருக்கிறது. இத னால் பிரகஸ்பதி காலத்திற்கு அதாவது கி. பி. முதல் நூற்றாண்டுக்கு முன் காளிதாஸன் இருந்ததாகக் கொள்ளலாம்.

அச்வகோஷன் என்னும் புத்த கவி புத்த சரிதம் என்னும் ஒரு காவியத்தை எழுதி யிருக்கிறார். சில இடங்களில் அதற்கும் காளிதாஸன் ரகுவம்சத்துக்கும் மிக்க ஒற்று மை தென்படுவதால், இவர்கள் இருவருள் ஒருவர் மற்றவனுடைய நூலைப்படித்து வரைந் திருக்கவேண்டுமென்று தோன்றுகிறது. புத்த சரிதம் முதல் ஸர்க்கத்தில், புத்தஜன்மத்தைப் பற்றின வர்ணனை காளிதாஸன் 10-ம் ஸர்க்கத் தில் ராம ஜனனத்தின் வர்ணனையை ஒத்திருக் கிறது. மேலும், ரகுவம்சம் 7-ம் ஸர்க்கத்தில் அஜனும் இந்துமதியும் விவாகமாகி ஊர் வலம் வரும்போது, நகர ஸ்திரீகள் எக்காரியம் செய்து கொண்டிருப்பினும், அவைகளை அவசரத்துடன் விட்டு விட்டு ஜன்னல்களிடம் வேடிக்கைப்பார்க்க ஓடிவந்ததாக வரையப்பட் டிருக்கிறது. அதேமாதிரி, புத்த சரித்திரம் மூன்றும் ஸர்க்கத்தில், ஸித்தார்த்தனைப் பார்க்க கபிலவஸ்து மாதர்கள், நடந்து கொண்டதாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் காளிதாஸ னுடைய வர்ணனை அச்வகோஷனுடையதை அடிப்படையாக மட்டும் கொண்டு அதைவிட அழகாயிருப்பதாலும், காளிதாஸனுடைய காவி ய நடையே, அச்வகோஷனுடையதைப்போ லில்லாமல், 'கடினமற்றதாயு மிருப்பதால், காளி தாஸன் அச்வகோஷனுக்குப் பின் இருந்தவன் என்றே கொள்ள வேண்டும். அச்வகோஷன் காலம், கி. பி. முதல் நூற்றாண்டு என்பர்.

இக் காரணங்களால், காளிதாஸன், கி. பி. முதல் நூற்றாண்டிற்கும் ஐந்தாம் நூற்றாண் டுக்கும் இடையில் இருந்திருக்கவேண்டுமென ஏற்படுகிறது. இன்னும் தெளிவாகக் கூறு வது எளிதல்ல. அச்வகோஷனுக்கும் காளி தாஸனுக்கும் இடையில் சிறிதுகாலம் கழிந் திருக்கவேண்டும். ஏனெனில், பாஸன் முதலிய கவிகள் இவ்விருவர்களுக்கும் இடையில் இருந்திருக்க வேண்டும்.

(தொடரும்)

---

# எட்டுக் கெட்டு.

(பம்பாய் ஸ்ரீமான் நா. கு. கோபாலய்யங்கார்.)

"ஓ! என்ன துரதிர்ஷ்டம்!" என்று ஸ்ரீரங்கம் கிருஷ்ணய்யர் தன்காதத்திலேந்திட்ட தந்தியைத் திருப்பித் திருப்பிப் படித்து வந்தார். இதற்குள் காலை வேலைகளைக் கவனித்துவந்த அவர் மனைவி வேதம் தனதழுகிற குழந்தைக்கு க்ஷீரபானமும் செய்விக்காது கதறவிட்டு, அவ்விடம் தோன்றி "என்னன்னு! என்ன விசேஷம்? சம்மந்தி பிராமணர் வருகையோ?" என்றாள்.

"அடி போ: சம்மந்தியுமில்லை; சமாசாரமுமில்லை. நமது சீனிவாசன் இந்தவருஷம் பெரிய பரீட்சையில் தேறவில்லையென்று கோடியாத்துப் போடிராயர் தந்தியடித்திருக்கிறார்" என்றார் ஐயர்.

அம்மாள் வேதத்தின் மனம் மிக்க பேதமடைந்தது. பெருத்ததொரு சேதமடைந்தவள் போல் கிலேச முற்று, "ஏதோ நல்லசம்மந்தமாயிருக்கு, சீரும் செலுத்தியும் வேணதாய்ச்செய்வா, பையனின் மேல்படிப்புக்கும் வழியுண்டு என்று மனக் கோட்டை கட்டியிருந்தேன். அடியற்ற ஆகாசக் கோட்டையாயிற்று. பரீட்சைதேரும் விபத்து நமது குடியைக் கெடுத்தது. ராமேச்வரம் போனாலும் நமது சனீச்வான் நம்முடன் தானே வரும்" என்று கூடத்துள் சென்றாள்.

மறுநிமிடத்துள் "நான் சாயரட்சை புறப்பட்டு வருகிறேன், எல்லாம் நேரில்" என்று சீனிவாசனடித்திருந்த தந்தி கிடைத்தும், அவன் தவறியதினிமித்தம் தனக்கு வெளியாக்கவில்லை என்று எண்ணிய கிருஷ்ணய்யர் இவ்விஷயத்தை வேதத்திடம் சொல்லப் பிரியப்படாதிருந்து விட்டார்.

## II

அதேநிமிஷம் அடுத்த உறையூரில் சாலையையடுத்துள்ள

"வண்டினம் முறலும் சோலை மயிலினம்
ஆலும் சோலை
கொண்டல் மீதணவும் சோலை குயிலினம்
கூவும் சோலை"

யொன்றில் பதின்மூன்று வயதுள்ள ஒரு கன்னியாரத்னம் அழகே ரூபமாக ஆங்குபோந்து தனது தந்தையின் சொந்தமாகிய நந்தவனமெனும் பெருமையுடன் சந்தனமா முதலான இன்பந்தரும் மந்த மாருதந்தந்திடும் சுகந்தந்தனை மனமுவந்து நுகர்ந்த வண்ணம் உலாவி வரும் சமயத்து, தனது கணவன் யாவனோ, அவனுடைய குணங்கள் எவ்விதமோ வென்னும் எண்ணங்கள் இளகிய அவள் மனதில் ஊசலாடிச் சஞ்சலப்படுத்த நிற்கையில் "அடி குட்டி லக்ஷ்மி! வாம்மா!" என்று அவள் அன்னை அடுத்திருந்த மாடி மீதிருந்து உறக்கக் கூப்பிட்டது நிமித்தம், பரபரப்புடன் சென்ற சிறுமி அடுத்த நொடியில் தனதன்னையின் முன்னின்றாள்.

லக்ஷ்மியின் அன்னையாகிய கோமளம் அவ்வூரின் மணியகாரர் ராமபத்ரய்யரின் தர்மபத்தினியானதுபற்றி தோட்டி தலையாரி முதலிய ஆட்களினின்றும் தொண்டு செய்விக்கும் வன்மை பெற்றிருந்தாள். அச்சமயம் அங்குற்ற சிலருக்கு வேறு வேறு பணிகளைச் சித்தம் செய்யுமாறு பணியிட்டு நிற்பதைக் கண்டு சிறுமி ஒருவாறு யோசிக்கலானாள். அன்னையின் கரத்திலோ தந்தையாரின் 'அவசரம்' என்றிட்ட கடிதமிருந்தது. தன்னுடைய கலியாண ஏற்பாடுகளைத் தயார் செய்து விட்டு மாப்பிள்ளை தேடச்சென்ற விடத்தில் B.A. பரீட்சை தேறுபவனையே தேர்ந்தெடுப்பதாகக் கூறிச் சென்றதுவும் அவ்விஷயம் இருவரில் ஒருவன் நிச்சயிக்கப்பட்டு அவசரமாகக் கலியாணத்தை

முடிக்க வேண்டுமென்று தானும் புறப்பட்டு வாராமல் ஆளனுப்பி அன்றிரவே தங்களை ஸ்ரீரங்கத்திற்கு அழைத்துவர ஏற்பாடு செய்திருப்பதாகவும் தெரிந்தது. லக்ஷ்மியின் ஆச்சரியத்தை ஒருவாறு அடக்க எண்ணிக்கோமளம் "இதோபார், உங்கப்பா எழுதிய கடிதம்—உன் கலியாணம் நிச்சயப்பட்டு விட்டதாம். அதனுல் நம்மை உடனே புறப்பட்டு வரச் சொல்லுகிருர். ஏதோ சூது நடந்து விட்டதென்றும் தெரிகிறது. ஈசுவரா! என்ன வழி விடுவாயோ!" என்ருள்.

அன்றிரவு சுமார் எட்டுமணிக்கு ஸ்ரீரங்கம் செல்லும் ராஜபாட்டையில் முன் செல்லும் சாமான் வண்டியின் பின்னுல் நமது கலியாணப் பெண்ணும் அவள் தாயாரும் செல்ல, வண்டியைப் பாதுகாத்தவண்ணம் கிராம சிப்பந்திகள் ஓடோடியும் வந்து கொண்டிருந்தனர். வழி மேடுபள்ளங்களின்றி மூலை முடுக்குகளில்லாமல் இருபுரங்களிலும் வானோங்கிய மரங்களினின்றும் காற்றினசைப்பால் நில நிழலை மறைந்துக் காட்டிவரும் உன்னதக் காட்சியும், அருகிலமைந்த அருவிகளென்னுஞ் சிற்றோடைகளினின்று வெளிக்கிளம்பும் சல சல வென்னு மினிய ஓசையும் தமது நித்திய வாழ்வைப் பெருமைப்படுத்த இயற்கைத் தேவியாருளியவை யென இருமாப்புற்றிருந்த மாடுகள், தமக்குத் துன்பமளித்திடும் வண்டிக்காரப் பயல்களை ஆனந்த உறக்கமும், இனிய தெம்மாங்கும் கொள்ளவிட்டு, பாட்டுக்கிசைந்தவாறும் சக்கரங்கள் கிரீச்—கிரீச் என்று சப்திக்க, நடனமாதர் போல் அடிமேலடி எடுத்துவைத்து அழகாக நடந்துவந்து பொழுதுபுலரும் தருணம் தெற்குவீதியை அடைந்தன.

## III

அன்று செவ்வாய்க்கிழமை சதுர்த்தசி கூடிய சுபதினம். திரிசிரபுரத்துத் தேவநாயகர் தெருவில் 13-ம் நெம்பரில்லத்தில் மணி ஏழடிக்குந் தருணம். தாங்கம்பாடி அருணகிரியார் குடும்பத்தாரும் அன்னோரின் பந்துமித்திரகளத்திராதியோரும் பட்டு பீதாம்பரதாரிகளாய்—சர்வாபரண பூஷிதைகளாய் தெற்குவீதிக்குப் பறந்து சென்று கொண்டிருந்தனர். இவர்களையழைத்துச் சென்ற ருக்மணி சம்மந்தியம்மாள் என்ற தோரணையில் தனது வெள்ளோலையை நாலுபக்கமும் டாலடிக்கத் திருப்பி "அம்மா! வாருங்கோடி! மணி எட்டுக்குள் அங்கு போய்ச் சேரணும். நம்ம பிள்ளையாண்டானும் தயாராய்வந்து சேருவான். தெய்வயத்தனம் முடியணுமே!" என்று ஏக்கமுற்றவள் போல நடித்து "என்னுங்கோ! இன்னம் ரொம்ப தூரமிருக்கோ?" என்று கேட்டுக் கொண்டே தன் கணவனின் பின்வழியே சென்ருள்.

அம்மாடிமீதோ தானே மணமகனுப் விட்டோமெனக் கர்வங்கொண்ட ருக்மணியின் புத்திரனுகிய சீனிவாசன் அருகிலிருந்த அப்பாசாமியை நோக்கி "எங்காணும், நம்ம போடிாயர் சாமர்த்தியத்தைப் பாத்தீரோ ? அடித்தாலும்சரியான பிடி கிடைத்தது. அம்மடயனை வர ஒட்டாது செய்தது மன்றி அவன் பரீட்சையில் தவறியும் விட்டதாகத் தந்தியுமடித்து விட்டதற்கு நான் கொடுத்த 500 ரூபாய் அதிகமென்று நினைக்கின்றீரா?" என்று வினவ அப்பாசாமியு மதற்கு உடன்பட்டிருந்தமையால் "உறக்க உளராதே, ஒரு சிறு நம்பர் மாற்றிவிட்டதன் பயன் என்ன பெரியதுபார்" என்று அகமழிந்தான். சீனிவாசன் தனது நண்பனைக் கலியாண வீட்டில் யாதொரு கோளாறுகளும் நடைபெறுது பார்த்துவர உடனேயனுப்பிவிட்டு அலங்கரித்துக் கொள்ள உட்புகுந்தான்.

உள்ளே ஆளுயரமுள்ள நிலைக்கண்ணுடியொன்றிருந்தது. தான் B. A. பரீட்சையில்

அவ்வருடம் தேறிவிடுவதாகப் புரட்சி செய்து வீரியம் பேசிவந்தவனாதலால், தன் தவறுதலை வெளிக்குக்காட்டாது, தானே பரீட்சையில் தேறியவனென உறையூரின் மணியகாரருடைய பெண்ணை மணக்கவும், பின்னால் உடனே சீமைக்குப் போக வேண்டியதற்காக வாதட்சணைப் பணம் 4,000 ரூபாய்களினிது பெறவும் சித்தமாயிருப்பவன் போல சென்னை 'கிறுப்' வைத்திருந்தான். அவனுடைய குற்றங்கள் ஒவ்வொன்றாக வெளிவந்தன. பிள்ளையின் மாநிறத்தை மறைந்துக் காட்ட முக க்ஷவரம் செய்து கொள்ள யத்தனிக்கையிலே கன்னத்திலே சிறு கீரல் ஏற்பட்டது. முதற் கோணல் முற்றும் கோணலாகுமென பயந்து புழக்கடை வழியே அடுத்த கடையிற் சென்று காயத்தை மறைத்துக்காட்டப் பவுடரும் வாங்கிவந்தான். ஆக ஒழுங்காகக் கத்தரித்த தலையைச் சீவிவாரி உடுப்புப் பெட்டியண்டை வந்தான். ரூபாய்க்கு இரண்டு நீள மேஜோட்டு ஜதைகள் வைக்கப் பட்டிருந்த இடத்தினின்று இரண்டு வெளியிலெடுத்தான். அல்பவஸ்துக்கள், அவை வெள்ளையொன்றுங் கருப்பொன்றுமாகி நின்றன. இதனின் ஜோடியின் பிரிவாற்றுமையும் லட்சியம் செய்யாது அதன் மேல் நிஜாரும் மாட்டி விட்டு மணியைப் பார்த்தான். கைகடியாரம்—120 ரூபாய் கொடுத்து முதல் நாளே வாங்கியது அன்னகாரமில்லாமல் பிணமாய்க் கிடந்தது. கூடத்துக் கோடிச் சுவற்றுக் கடிகாரத்தை உற்றுப்பார்க்க அதுவும் குற்றுயிராகியிருந்தாலும் எட்டேகால் என்று சுட்டிக் காட்டியது. தனது காசி யாத்திரைப் பிரயாணம் எட்டே முக்கால் மணிக்காதல் பற்றி இன்னும் அரைமணி நேரத்தில் 3 மைல் தூரம் போக வேண்டும். ஆகவே உட்சட்டை போட்டுக் கொண்டானே யொழிய மேற்சட்டை யணிய நேரமற்றவனாகி வீதியில் நின்றிருக்கும் மோட்டாருள் செல்லும் பொழுது அணிந்து கொள்ள எண்ணிக் கரந்தனில் ஏந்தி மாடிப் படிவழியே கூடத்துள் வந்தான். வந்த இந்த நடையில் பாழும்படிக்கட்டு வழுக்கிவிட்டது. இறுதிப் படியை யினிது அடைய இதுவே சிறந்தவழி யென்று அகமகிழ்ந்தான். திடீரென்று அவன் மனதில் பேரிடிவிழுந்தது போலாயிற்று. வீதிக்கதவைத் தாழ்ப்பாளிட்டுக் கொண்டு எல்லாரும் போய்விடவே இவனின் கூக்குரல்களுக்கு யாதொரு பதிலும் வாவில்லை. மாடியின் கீழ்க்கதவே பூட்டப்பட்டிருந்தது பற்றி, புழக்கடை வழியாய்ப் போகமுடியாது போயிற்று. போக ஒரே வழியான மாடிமீது வந்து கடைசி ஜன்னல் வழியாக நடுத்தெருவில் துள்ளிக் குதித்தான்.

வீட்டில் நிச்சப்தமாயிருந்தது பற்றி காவற்காரக் குப்பன் இது தான் சமயமென்று எதிர்க்கடை மாரியாயிடம் புகையிலை வாங்கிப் போட்டுக் கொண்டிருந்ததையும் விட்டு ஓடோடியும் வந்து "சாமீ! சாமீ! ஏன் உளுந்தீங்க" என்று வினவினான். "மடப்பயலே, கதவை யேண்டா பூட்டியிருந்தாய்? மோட்டாரெங்கேடா?" என்று மிரட்டவே, குப்பன் நடு நடுங்கினான். ஏனெனில் வீதியில் காத்திருந்த மோட்டாரோட்டியிடம் "ஐயர் முன்னமேயே பூட்டாங்க" என்று அறியாமல் உளரித் துறத்திவிட்டிருந்தானாதலால் தன் குற்றம் வெளிப்படாதிருக்க "அந்தப்பய சாமீ! என்ன சொன்னாலும் கேக்கலீங்க. பாளுங் காப்பி குடிச்சாரூட்டான் பய, நாசமாய்ப் போவ, இன்னும் வாரலீங்க" என்று சமாதானம் சொன்னான். வீண்பேச்சுப் பேசி காலந்தள்ள முடியாதவனை சீனிவாசன் "வேறொரு வண்டி கொண்டுவாடா" என்று விரட்டினான். தலைதப்பியது தம்பிரான் புண்ணிய மென்று குப்பன் ஓடோடியும் வா ஓர் குதிரை வண்டி எதிர்ப்பட்டது. கும்பிடப் போன தெய்வம் குறுக்கிட்டாற் போலும் வந்த வண்டியில் சீனி

வாசனை அமர்த்தி "கலியாண வூட்டுக்கு தெற்குப்பொறம் ஓட்டப்பேன், பொலுதாச்சு" என்ருன்.

வேறு வழியில்லாது போக சீனிவாசன் அதனுள்ளமர்ந்தான். அப்பொழுது தான் அக்குதிரை குணசேகரம் வரையில் போய்வந்ததாதலால் இந்தத் தடவை மாதங் காதவழி ரேட்டுப்படிதான் நகருவதாகப் பயமுறுத்தியது. சீனிவாசன் வண்டிக்காரனுக்குப் பரிசு கொடுப்பதாகத் துரிதப்படுத்தவே அப்படுபாவி அக்கிழக் குதிரையை அடித்து அடித்து ரத்த விளாறு செய்துவிட்டானே யொழிய அவ்வண்டி தெற்கு வீதியண்டை செல்லும் பொழுது மணி 10–30 ஆயிற்றென்று, அங்கிருந்து வெளிவந்த பள்ளிப் பையன் ஒருவன் சொன்னன்.

## IV

அப்பொழுது தான் தெற்கு வீதியில் கிருஷ்ணய்யர் கிருகத்தினின்றும் மேளதாளமும்,முறமாக வேதோத்தமர்கள் சூழ்ந்திட்ட அழகியபந்தலில் லக்ஷ்மியுடன் உட்கார்ந்த சீனிவாசன் மணமுடி முடித்தவனுகி ஆனந்தசாகரத்தில் மூழ்கியிருந்தான். உறையூர் மணியகாரார் தனது நண்பர்களை வரவேற்று ஆச்சரியப்படும் அவர்களிடம் எவ்வாறு தரங்கம்பாடி அருணகிரியார் மோசடியான போடிராயரிடம் சூழ்ச்சி செய்து சீனிவாசனை அசௌக்கியமாக்கிக் கலியாண தினத்தன்று ஸ்ரீரங்கத்திற்கு வாரமற்றடுத்து அவனுடைய தந்தையாருக்கு அவன் பரீட்சையில் தவறினன், தரங்கம்பாடி சீனிவாசனே தேறினவன் என்று பொய்த் தந்திபடித்தது வந்ததும், தன்னை ஏமாற்றிக் கலியாணத்திற்குச் சம்மதம் பெற்றதும் அன்றிரவே சூதறிந்த கிருஷ்ணய்யர் மகன் இரவு மெயிலில் ஓடோடியும் வந்து உண்மையை வெளியாக்கித் தானே அந்த நம்பருக்குறியவனென்று நிரூபித்துக் காட்டித் தன்னைக் காப்பாற்றினன். "எனது சிறுமிக்குகந்த புருஷன் கிடைத்தது என் பாக்கியந்தான்" என்று விளக்கிக் காட்டினர். சகலகலாவல்லி போலவும் மகாலக்ஷ்மிபோலவும் அழகியான லக்ஷ்மி தனது பாக்கியத்தை நினைத்து மனமகிழ்ந்து அவனைப் பெற்றெடுத்த பெற்றோரையும் மற்றப் பெரியோரையும் மற்றுள்ள நண்பர்களையும் வணங்கிவரும் சமயத்தில் தரங்கம்பாடியார் உண்மை வெளிப்பட்டுப் போனதையுணர்ந்து சரேலென மறுபுறமாக ஆடல்பாடல்களை யடக்கி 'குந்தினையா சுரங்கே யுன்சந்தடியடங்க' என்ப இஞ்ஜி தின்ற குரங்கு போல, கெடுவான் கேடுநினைப்பதை நிரூபித்ததற்காக ஆயிரக்கால் மண்டபந்தனுட் சென்று மறைந்து கொள்வதையும் ஒரு நிருபன் அங்கு வந்து எல்லாரிடமு முறைக்க, எல்லாரும் 'கொல்' என்றும் கக்கட கடகட வென்றும் நகைக்க ஆரம்பிக்கவே நமது கதையும் முடிவுற்றது.

சுபம்.

பதிப்புரிமை ஆசிரியருக்கே உரியது.

# மனைவியின் உபதேசம்.

(ஸ்ரீமதி K. கமலாம்பாள்.)

கிருஷ்ணமூர்த்தி தன் மனைவியாகிய லக்ஷ்மியினிடத்தில் எவ்வளவு அன்பும் பிரியமும் வைத்திருந்தானென்பது சொல்ல முடியாது. அவளும் அவன் வைத்திருந்த அன்பிற்கும் பிரியத்திற்கும் உரியவள்தான். அவள் அழகும், அழகுக்குத் தகுந்த குணமும், பெண்களுக்குரிய

கல்வியைப் பூரணமாய்க் கற்றிருந்ததனால் அவளுடைய புத்திகூர்மையையும் கண்ட யார் தான் அவளிடம் பிரியப்படமாட்டார்கள்! அவளுக்கு எப்பொழுதும் பகவானைப்பற்றிய கதைகள் வாசிப்பதிலும், அவருடைய திவ்விய நாமங்களை உச்சரிப்பதிலும் அதிகப் பிரியம். கிருஷ்ணமூர்த்திக்கு பகவான் ஒருவர் உண்டு என்பதே தெரியாது. எல்லாம் லக்ஷ்மிதான். அவளும் தன் கணவனிடத்தில் அதிகப் பிரேமையும் அன்பும் உடையவள். ஆனால் கடவுள் என்பதே தெரியாத அவரிடம் வைக்கவேண்டிய பக்தி, பிரேமை, அன்பு முதலியவைகளை எல்லாம் தன்னிடத்திலேயே அளவுக்கு மிஞ்சி வைத்திருப்பதில் அவளுக்குக் கொஞ்சம் மன வருத்தம் என்றாலும் அதை வெளியிட்டவளில்லை. அவள் தன் மாமன், மாமி இவர்களிடத்திலும் அதிக மரியாதையும் பிரியமும் உள்ளவள். அவர்களும் இவளைத் தன் சொந்தப் பெண்ணைப்போல் பாவித்து வந்தனர். கிருஷ்ணமூர்த்தி தன் மனைவியை விட்டு அரை க்ஷணமும் பிரியமாட்டான். அதன் நிமித்தம் அவன் ஒரு வேலைக்கும் போக இஷ்டப்படவில்லை. அவனுடைய தகப்பனார் ஆண்பிள்ளையாயிருப்பவர்கள் வீட்டில் சும்மா இருப்பது அழகல்லவென்று அதிக சிரமப்பட்டு அவனை அவ்வூரிலேயே ஓர் வேலையில் அமர்த்தினர். பாதி வேலை செய்துகொண்டிருக்கும்பொழுதே மனைவியின் நினைவு வந்துவிடும். உடனே எல்லாவற்றையும் அப்படியே போட்டுவிட்டு வீட்டிற்கு வந்துவிடுவான். பிறகு ஆபீஸ் பியூன் இவனை அழைக்க வருவான். அதனால் அதிகக் கஷ்டத்துடன் திரும்பிப் போவான். அவள் பிறந்த வீடு சமீபத்தில் 4, 5 மைலில் தான் இருந்தது. அங்கு இரண்டொருநாள் போகக்கூட அனுமதி கொடுக்கமாட்டான். லக்ஷ்மியின் பெற்றோருக்கு அவள் ஏகபுத்திரியாதலால் அவளை அழைத்துப்போக வருவார்கள். அதற்கு அவன் 'இஷ்டமானால் இங்கு வந்து பார்த்துப்போங்கள்' என்று சொல்லிவிடுவான். லக்ஷ்மியும் கணவன் உத்திரவின்றி அரைக்கணமேனும் ஒரு இடமும் செல்வதில்லை.

ஒரு நாள் காலை கிருஷ்ணமூர்த்தி தன் மனைவியுடன் சந்தோஷமாகப் பேசிக்கொண்டிருந்தான். அப்பொழுது ஆபீஸ் பியூன் ஒருவன் வெகு வேகமாய் வந்து "தங்களை ஹெட் கிளார்க்கு உடனே அழைத்துவரச்சொன்னார்" என்றான். அப்பொழுது அவனுக்குப் போகக் கொஞ்சங்கூட இஷ்டமில்லை. ஒன்றும் சொல்லாமல் மௌனமாய் இருந்தான். உடனே லக்ஷ்மி "நாதா! என்ன யோசிக்கிறீர்கள்? என்ன அவசரக்காரியமோ? கேட்டுவிட்டு வாருங்கள்" என்றாள்.

கிருஷ்ணன்:—"அப்படி என்ன பிரமாதமான அவசரம் வந்துவிட்டது? எவ்வளவு அவசரமானால்தானென்ன? உன்னைவிட எனக்கொன்றும் பெரிதல்ல" என்றான்.

லக்ஷ்மி:—"நீங்கள் அப்படிச் சொல்லக்கூடாது. நானென்ன எல்லாவற்றையும்விட அவ்வளவு உயர்ந்தவள்? நீங்கள் போய் சீக்கிரம் வந்துவிடுங்கள். அதற்குள் நான் எங்கு போகப் போகிறேன்" என்று தைரியம் சொல்லி அவனை அனுப்பினள். அவனும் அரை மனதுடன் போய்ச் சேர்ந்தான்.

அவன் சென்று சுமார் கால் மணி நேரத்தில் வாசற் கதவை தடதடவென்று தட்டிய சத்தம் கேட்டது. உடனே லக்ஷ்மி தன் கணவர் தான் போக மனமில்லாது திரும்பிவிட்டாரோ என்று வெகு வேகமாய் வந்து கதவைத் திறக்க, ஒருவன் தந்தி ஒன்றைக் கொடுத்துச் சென்றான். தந்தி என்ற உடனேயே யாருக்கும் பயம் உண்டாவது சகஜமே. அதுபோல்

லக்ஷ்மியும் பயத்துடன் பிரித்துப் பார்க்க அதில் பின்வரும் சங்கதிகள் காணப்பட்டன.

'லக்ஷ்மியின் தாயார் மரணப் படுக்கையில் இருப்பதால் உடனே அவளை அழைத்துக் கொண்டு வரவும். அவளைப் பார்க்க அதிக ஆவலாயிருக்கிறாள்'.

இதைப் பார்த்ததே லக்ஷ்மியின் நிலைமை எப்படியிருக்குமென்று வாசகர்களே ஊகித்துக்கொள்ளலாம். உள்ளிருந்த லக்ஷ்மியின் மாமியார் தந்தி என்ற வார்த்தை அரைகுறையாகக் காதில் விழுந்ததினால் அது விஷயம் நிச்சயமாய்த் தெரிந்துகொள்ளும்பொருட்டு தன் மருமகளைக் கேட்க, அவளும் அதிலுள்ள விஷயத்தைத் தெரிவித்தாள். அதைக்கேட்ட அவள் மிகுந்த வியாகூலத்தை அடைந்தாள். ஏனெனில் லக்ஷ்மியை தற்சமயம் பிறந்த வீட்டிற்கு அனுப்புவது மிக்க அவசியமாக இருக்கிறது. தன் பிள்ளையோ வீட்டிலில்லை. ஆபீசில் அவசர சமாசாரமாக அழைத்து, அவன் போகச் சம்மதமில்லாமற் போயிருக்கும்பொழுது எப்படிப் போய் அழைத்து வருவது? என்ன செய்வதென்றே தெரியவில்லை. லக்ஷ்மிக்கு உண்டான துக்கத்திற்கு அளவில்லை. போக மனமில்லாதிருந்த தன் கணவனைத் தானே கட்டாயப்படுத்தி அனுப்பியதாலும், தான் அவர் உத்திரவன்னியில் இரண்டொரு நிமிஷங்கூட ஒரு இடத்திற்கும் போனதில்லையாதலாலும் அவள் அதிகத் துன்பமடைந்தாள்.

மேலும் மரணத்தருவாயிலிருக்கும் தன் தாயாரைப் பார்க்காமலிருக்க எப்படி மனம் வரும்? அவள் அச்சமயம் இருதலைக் கொள்ளி எரும்பு பேரலானாள்.

அவளின் பரிதாப நிலைமையைக் கண்ட மாமனும் மாமியும் அவளுக்கு அநேகவிதத் தேருதல்களைச் சொல்லி, "அம்மா! நீ கவலைப் படாதே. ஈசன் செயலுக்கு நாம் என்ன செய்வது? கிருஷ்ணமூர்த்தி வரும் வரையில் நாம் தாமதித்தால் அதற்குள் உன் தாயாரின் தேகநிலை எப்படியிருக்கிறதோ? ஆகையால், உன் பிறந்த வீடும் சமீபத்திலிருப்பதால் நீ போய் உன் தாயாரைப் பார்த்துவிட்டு அதிக பயம் ஒன்றும் இல்லாமலிருந்தால், முடியுமானல் சாயந்திரம் அவன் வருவதற்குள் திரும்பிவந்துவிடு. பிறகு, அவனையே அழைத்துப் போகலாம்" என்று தைரியம் சொல்லி ஓர் வண்டியில் அவளையும் துணைக்காக ஓர் வேலைக்காரியையும் அனுப்பினார்கள். லக்ஷ்மிக்குப் போக மனமில்லாவிடினும் தன் தாயாரைப் பார்க்க ஆவலுள்ளவளாக இருந்தபடியால் அவர்கள் சொன்னபடியே சென்றாள். ஆனால் அவள் உடல் போயிற்றே தவிர அவள் உயிர் இவ்விடத்திலேயே இருந்தது.

## II

இது இப்படியிருக்க ஆபீசுக்குச் சென்ற கிருஷ்ணமூர்த்தியின் நிலைமையைச் சற்று கவனிப்போம். இங்கிருந்து அவன் போனதும் அந்த ஆபீஸின் இன்ஸ்பெக்டர் (இன்ஸ்பெக்ஷனுக்கு) இவர்கள் வேலையைப் பரிசோதிப்பதற்கு வந்திருப்பதாகத் தெரிந்தது. அவர் எப்பொழுது பரிசோதனை முடிந்து போவாரென்று விசாரிக்க, சாயந்திரமென்றும் தெரிந்தது. அவனும் சாயந்திரம் எப்பொழுது வருமென்று அதிக ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டு தன் ஞாபகம் ஒருபுறமும், தன் இருப்பிடம் ஒருபுறமுமாக ஏதோவேலை செய்வதைப்போல் பாவனை செய்துகொண்டிருந்தான். நல்லவேளையாக இன்ஸ்பெக்டருக்கு இவனுடைய வேலையைப் பார்க்க சாவகாசம் இல்லை. மறுநாள் வந்து மீதியிருப்பவைகளைப் பார்ப்பதாகக் கூறிச்சென்றார். கிருஷ்ணமூர்த்தியும் அவர் எப்பொழுது போவாரோ என்று பார்த்திருந்தவனாதலால் அவர் போனதும் அவ

சாம் அவசரமாக வீட்டிற்கு ஓடோடியும் வந்தான். வரும் பொழுதே 'லக்ஷ்மி! லக்ஷ்மி!' என்று கூப்பிட்டுக் கொண்டே வந்தான். வீட்டிற்குள் வந்துபார்க்க அவளைக் காணோம். எங்கும் தேடினான், ஓடினான், ஒரு இடத்திலும் இல்லை. அவள் இல்லாதவீடு அவன் கண்ணுக்கு எப்படியிருந்ததென்றால், சந்திரனில்லா ஆகாயத்தைப் போலவும், தாமரையில்லாத் தடாகத்தைப் போலவும், மந்திரியில்லாத அரசனைப் போலவும், தந்தியில்லாத வீணையைப் போலவும் தாயற்ற குழந்தையைப்போலவும் இருந்தது. அவள் தாய் தந்தையர்களும் அவனிடம் எப்படி இச்சமாசாரத்தைத் தெரிவிப்பதென்று மௌனமுற்றிருந்தனர்.

எங்கும் தேடிக்காணமையால் பிறகு தன் தாயாரை நோக்கி "அம்மா! லக்ஷ்மி எங்கே? சீக்கிரம் தெரிவி" என்றான். அவளும் பயத்துடன் இவன் போன பிறகு தந்திவந்ததையும், அதன் பின்பு நடந்த விஷயங்களையும் விவரமாகத் தெரிவித்தாள். கிருஷ்ணமூர்த்தி என்ன செய்வான்? அவனுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. அப்பொழுது மாலை சுமார் 6-30 மணி இருக்கும். வானத்தில் இடியும் மின்னலுமாக இருந்தது. இன்னும் சிறிது நேரம் போனால் மழைவந்து தாங்காது போலிருந்தது. அவன் மழையையும் இடியையும் இருட்டையும் கவனிக்கவில்லை. கிளம்பி விட்டான் லக்ஷ்மியின் இருப்பிடத்திற்கு. உடனே அவன் தாயார் "அப்பா! இம் மழையிலும் இடியிலும் எங்கு போகப் போகிறாய்? லக்ஷ்மி நாளைக்குக் கட்டாயம் வந்து விடுவாள்" என்று பல விதத்தில் சொல்லியும் கேட்காமற் புறப்பட்டுக் கால் நடையாக அதிவேகத்தில் போய்க் கொண்டிருந்தான். மழையும் பெரிதாக 'சோ' என்ற சப்தத்துடன் பெய்ய ஆரம்பித்ததும் அவன் ஒரு நாளும் இரண்டு மூன்று மைல் நடந்தவனல்ல. அதினாலும் மழை, இருட்டு இவைகளினாலும் அவன் அதிகக் கஷ்டத்தை அடைந்தான்.

III

லக்ஷ்மியின் வீட்டில் என்ன நடக்கிறதென்று பார்ப்போம். அவள் சென்று தன் தாயைப்பார்க்க அவள் பிரக்ஞையற்றிருந்தாள். உடனே லக்ஷ்மி "அம்மா! அம்மா!" என்று கூப்பிடவும் தன் மகளின் குரலைக் கேட்ட தாய் கண் விழித்து "லக்ஷ்மி! என் கண்ணே! வந்து விட்டாயா? இனி என் உடம்புக்கு ஒன்றுமில்லை" என்று சொல்லி மறுபடியும் கண்ணை மூடிக்கொண்டாள். அவளும் தன் தாயின் பக்கத்தில் உட்கார்ந்து அவளுக்கு வேண்டியதைச் செய்து கொண்டிருந்தாள். அச்சமயம் இரவு எட்டு மணியிருக்கும். மழையோ அதிகக் கடுமையாகப் பெய்ந்து, அப்பொழுதுதான் சற்று ஓய்ந்திருந்தது. அச்சமயம் கிருஷ்ணமூர்த்தி வந்து வாசற்கதவைத் தட்டினான். அது உள்ளிருப்பவர் ஒருவர்களுக்கும் கேட்கவில்லை. ஏனெனில் வீடோ பெரிது, அதிலும் இவர்கள் இருந்த அறைக்கும் வாசலுக்கும் சற்று தூரமாகவே இருக்கும். மேலும் காற்றும் அடித்ததால் ஒருவர் காதிலும் கதவு இடித்த சத்தம் கேட்க வில்லை. இவனுக்கோ எப்படியாவது உள்ளே போக வேண்டு மென்ற ஆத்திரம் உண்டாயிற்று. எங்கும் ஒரே மையிருட்டு. என்னமாய் உட்செல்வது? சற்று யோசித்து, முடிவில் சுவரேறிக் குதிப்பதென்று தீர்மானித்தான். அதற்கும் ஏதாவது ஒன்றைப் பிடித்துக் கொண்டுதானே ஏறவேண்டும்? இருட்டில் தட்டித் தடுமாரிக் கொண்டு, எங்காகிலும் ஒரு கயிறு அகப்பட்டாலும் அதை ஆதாரமாகப் பிடித்துக் கொண்டு ஏறலாமென்று கையால் தடவிப்பார்த்தான். அப்பொழுது வாசச்சார்ப்பில் நீளமாக ஓர் கயிறு மாதிரி இவன் கைக்குத் தட்டுப்பட்டது. அது கயிறோ என்னவோ, அதையும் அவன் கவனிக்கவில்லை. அது கைக்குத் தென்பட்ட

நலமாகுமென்பதே பெரும்பாலார் செய்துள்ள தீர்மான மாயிருக்கின்றது.

ஆயிரம் குட்டிக்கரணம் பேட்டாவது அங்கி யணிந்து ஆபீசு சென்று தேடிவரும் ஐந்து ரூபாய்க்கு ஆயிரமாயிரமாகப் பணமீட்டும் தொழிலாளியின் அந்தஸ்து அணுவளவும் ஈடாகாதென்பதே நமது இளைஞர்களின் மூளையில் பற்றியுள்ள தொற்றுநோயாகப் பரவியுள்ளது.

இவ்வெண்ணம் ஆடவர்களுடன் நில்லாது சிறுகச் சிறுக நமது பெண்மக்களிடையிலும் தலைகாட்டி வருகின்றது. இதை யாரம்பத்திலேயே சீர்திருத்தாத பட்சத்தில் எதிர்காலத்தில் நமது பெண்ணுலகம் பெருத்த கஷ்டத்திற்காளாகுமானதுபற்றிப் பெண்கள் வாழ்க்கைக்கும் தற்காலக் கல்விக்கும் ஏதேனும் சம்பந்தமுள்ளதா வென்பதை ஆராய்வதே இவ் வியாசத்தின் நோக்கமாகும். இது பற்றி நன்கு சீர்தூக்கி ஆலோசித்துத் தமதபிப்பிராயங்களை நமது சிந்தாமணியபிமானிகள் வெளியிடுவார்களென நம்புகிறேம். இந்திய சரித்திரத்தில் ஆணுக்கும் பெண்ணுக்கும் எவ்வளவோ வித்தியாசமுண்டு.

ஆண்மக்களின் வாழ்க்கை வேறு, பெண்மக்களின் வாழ்க்கை நலன் வேறு. ஆடவன் அறிவைப் பாகுபடுத்துங் கல்வி கற்றுத் தனது ஜீவனத்தை நடத்திக்கொள்ளக்கூடிய பருவத்தில் மங்கை யொருத்தியை மணந்து இல்வாழ்வை ஆரம்பிப்பான். இல்லறத்தை நல்லறமாக நடத்தும் பொறுப்பு முழுதையும் பெண்பால் வகிப்பாள். குடும்பநிர்வாகத்திற்கு வேண்டிய பொருளைத் தேடி யளிப்பது கணவன் கடமை. உள்ளதைக் கொண்டு நிர்வாகம் செய்தல் பெண்ணின் பொறுப்பு. மக்களை நல்வழியில் வளர்த்தல் போன்ற காரியங்களில் பெண்மகள் பேர்பெற்று விளங்குவாள். இதுவே நம்முன்னோர்கள் வாழ்ந்த வாழ்க்கையாகும். வீட்டிலுள்ள பெண்மகளின் உதவியாலும் தூண்டுதலாலும் சமூகத்திற்கும் நாட்டிற்கும் ஊழியம் புரிந்த ஆடவர்களின் பெயரை சரித்திரப் புத்தகங்களில் காணலாம். ஆடவனுடைய வாழ்க்கையைப் பூர்த்திசெய்யக்கூடிய நிலைமையில் பெண்கள் வாழ்ந்து வந்தார்களன்றிப் பெண்கள் உத்தியோகத்தால் பொருள் தேடிக் காலங்கழிக்கப் பறக்கவில்லை.

நமதாடவரிடையே பரவிய உத்தியோகப் பேய் பெண்களிடமும் தலை காட்டிவிடுமானுல் இதைக் காட்டிலும் வேறு கஷ்டநிலை கிடையவே கிடையாது. தற்காலக் கல்வி கற்றால் தந்திரமாக ஜீவனம் செய்யலாமென்று நினைத்தல் பெரும் பிழையாம். உத்தியோகப் பேயின் வாய்ப்பட்ட ஆடவர்கள் இச்சமயம் கண்விழிக்கத் தொடங்கிவிட்டார்கள். பெண்கள் இனி இவ்வழி செல்வார்களாயின் இதை ஆடவர்கள் எதிர் காலத்தில் சற்றும் ஏற்கமாட்டார்களென்பது நிச்சயம். தற்காலம் நமது ஆடவர்களிடையே உண்டாயிருக்கும் உணர்ச்சியையும் அதனுல் ஏற்படக்கூடிய முடிவையும் சற்றுமறியாத பேதைப் பெண்கள் உத்தியோகக் கல்வியைப் பின்பற்றுவார்களாயின் பெண்களின் வாழ்க்கை பெரிதும் பாதிக்கப்படுமென்பது திண்ணம். தற்காலக் கல்விக்கும் பெண்வாழ்க்கைக்கும் எள்ளளவேனும் பொருத்தமிருக்கிறதாவென்பதைக் கவனிப்போம்.

(தொடரும்.)

# சிறு சம்பாஷணை.

இரமேசன் பிரசன்ன முகத்துடன் காவேரிக் கரை யோரமாகவே சென்று கொண்டிருந்தான். அவன் மனம் ஏகாந்தமான இடத்தை நாடியது. அதற்காக அவன் திருச்சிக் கோட்டையிலிருந்து ஸ்ரீரங்கம் ரோட்டின் சமீபம் வரையில் காவேரியின் ஓரமாகவே சென்று அவ்விடம் மணற்பாங்கான இடத்திலுட்கார்ந்துகொண்டான். வெகுநேரத்திற்கொருதரம் சில மனிதர்கள் ஆங்காங்கு சென்றுகொண்டிருந்தார்கள். காவேரி ஜலத்தின் சலசலப்புத் தவிர வேறொன்று மில்லாமலிருந்தது. சித்திரை மாதமாகையால் முக்கால் பாகம் மணலாகவிருந்தது. இவன் தன் மேல்உத்தரீயத்தை மணலில் உதறிப்போட்டு அதன்மேல் படுத்துக் கொண்டான். சிறிது நேரம் சென்றது. அப்பொழுதுதான் அவன் தான் தனிமையிலிருப்பதை உணர்ந்தான்.

ஆகா! இவ்வளவு ஏகாந்தமான ஸ்தலத்தில் நாம் ஒருவனாக யிருப்பதைக் காட்டிலும் சசீந்திரனையும் அழைத்துக்கொண்டு வந்திருந்தால் எவ்வளவு சந்தோஷமாக யிருக்குமென்று நினைத்துக்கொண்டிருக்கையில் பின் பக்கத்திலோர் குரலுண்டாயிற்று: "இரமேசா! என்னை நினைக்கும்பொழுதே நானும் வந்துவிட்டேன்" என்றான் சசீந்திரன்.

இரமேசன் :—ஆ, சசி! எப்படி வந்தாய்? நான் இவ்விடம் வந்திருப்பது உனக்கு எப்படித் தெரிந்தது? உனக்கு நூறுயுசுதான். உன்னையும் கூட்டிவாராமலிருந்தது எனக்கு நிரம்ப வேதனையாக விருந்தது.

சசீந்திரன் :—இரமேச்! ராமனிருக்குமிடம் அயோத்தியை அல்லவா? அதுபோல் நீ இருக்குமிடத்தில் நானில்லாமலிருப்பேனா? நான் ஹாஸ்டலிலிருந்து காவேரியின் பக்கம் வந்தேன். நீ ஸ்ரீரங்கம் ரோட்டின் பக்கம் போவது கண்டு நானும் அதுமுதல் உன்னைப் பின்தொடர்ந்துகொண்டே இதுவரையில் வந்தேன். நீ அப்பொழுதும் கவனிக்காமலிருந்ததால் பேசாமலிருந்தேன்.

இரமேசன் :—சசி! ஒரு சந்தேகம் தெளிந்தது. ஆனால் உன்னை நான் மனதில் நினைத்தது உனக்கெப்படித் தெரிந்தது?

சசீ :—அதற்காக ஒன்றும் ஆச்சரியப்படாதே! நீ மனதிற்குள் சொல்லுவதாக நினைத்துச் சற்று உயர்ந்த குரலிலேயே சசீந்திரனும் வந்திருந்தால் நன்றாகவிருக்குமென்றாய். நானும் இதோ வந்துவிட்டேனென்றேன். இவ்வளவுதான் விசேஷம்.

இப்படியிருவரும் சிறிது நேரம் சம்பாஷித்துக்கொண்டிருந்தார்கள். அப்படியே அவர்கள் வார்த்தை ஸ்வராஜ்யத்தைப்பற்றிப் போயிற்று.

இரமேச் :—சசி! நம் இந்தியாவிற்கு எப்பொழுது ஸ்வராஜ்யம் கிடைக்கும்?

சசீ :—நண்பா! நீ கொஞ்சநேரம் நான் சொல்லும் சமாசாரத்தைப் பொறுமையுடன் கேட்பாயாகில் ஸ்வராஜ்யம் எப்பொழுது கிடைக்குமென்பது நான் சொல்லாமலே விளங்கும்.

இரமேச் :—சசி! அதென்ன விஷயம், எனக்கு நீ இதுவரையிலொன்றும் சொல்லவில்லையே? சொல் கேட்போம்.

சசீ :—இரமேச்! இதுவரையில் நீயும் ஸ்வராஜ்யத்தைப்பற்றிக் கேட்கவில்லை. நானும் சொல்லவில்லை. இப்பொழுது சொல்லுகிறேன்.

"சுமார் இரண்டு வருஷத்திற்குமுன் வக்கீலொருவரிருந்தார். அவர் ஏதோ கேஸ் விஷயமாக விசாரிக்க அயலூர் போயிருந்தார். அவ்வூர் ரிஜிஸ்டர் ஆபீஸ் குமாஸ்தாவைப் பார்த்து தன் நம்பர் கட்டின் விஷயமாக விசாரித்தார். அந்த குமாஸ்தா, தன் காலையும் கையையும் பிரமாதமாக வீசி, தனக்குப் பிரமாதமான விஷயங்கள் அந்த நம்பர்க்கட்டைப்பற்றி தெரியுமென்றும் ஆனால் ஆயிரம் ரூபாய்கள் தனக்குக் கொடுத்தால்தான் சொல்லமுடியுமென்றும் சொன்னார்.

"வக்கீல் அவனைப் பார்த்து 'என்ன அய்யா! ஒரே அடியாக அடிக்கிறீரே? நானென்ன ஜோசியனா, முன்பாகவே தெரிந்து பணத்தை கட்டிக் கொண்டுவர?

"குமாஸ்தா :—உமக்கு இஷ்டமிருந்து கொடுத்தால் கொடும். இல்லாவிட்டால் பேசாமல் திரும்பிப் போம். அதை விட்டு வீண்பேச்சு எதற்கு?

"வக்கீல் :—ஏனய்யா! உமக்குப் பணத்தைக் கொடுத்துவிட்டு கேஸ் ஜயிக்காவிட்டால் என்னசெய்வது? சமாசாரத்தைச் சொல்லும். கேஸ் ஜயமானதும் உம்மிடம் பணம் கொடுத்துவிடுகிறேன்.

"குமாஸ்தா :—ஓகோ! அப்படியா சேதி! கேஸ் ஜயமானதும் உம்மை எங்கு தேடிக் கொண்டுவருவது? அதெல்லாம் முடியாது. ஒரு காரியம் செய்யும். உமது கட்சிக்காரனை எனக்குப் புரோநோட்டெழுதித் தரச் சொல்லி உம்மிடம் வைத்துக்கொள்ளும். கேஸ் ஜயித்ததும் என்னிடம் கொடுத்துவிடும்.

"வக்கீல் :—என்னய்யா! ரிஜிஸ்டர் ஆபீஸ் குமாஸ்தாவாக விருந்தும் விவகாரம் தெரியாமலிருக்கிறீரே! வக்கீல்கள் பேரில் புரோநொட்டெழுதிக் கொள்ளலாமா?

"குமாஸ்தா :—நான் தெரியாமல் சொல்லவில்லை அய்யா! என் பேருக்கே தான் நோட்டெழுதி நீர் வைத்துக்கொள்ளும் கேஸ் ஜயிக்காவிட்டால் நீர் எனக்கு நோட்டைத்

தரவேண்டாம். புரோநோட்டு உம்மிட மிருப்பதாக எனக்கு ரசீது கொடுத்து விடும். "வக்கீல் 'சரி சரி! இதோ காரியத்தை முடித்து விடுகிறேன்' என்று தன் கட்சிக்காரனை அழைத்துப் புரோநோட் டெழுதிப் பெற்றுக் கொண்டு, 'சொல்லுமய்யா! உமக்குத் தெரிந்த ரகசியத்தை' என்றார்.

"குமாஸ்தா தனக்கு ஒரு நிமிஷத்தில் பணம் கிடைத்ததாக அளவற்ற ஆனந்தத்துடன், வக்கீலைப்பார்த்து 'ஐயா! உமது நம்பர்க் கட்டைக் கோர்ட்டில் வியாஜ்யத்திற்குப் போட்டாயிற்று. இன்ன மிரண்டு தினத்தில் உமது கட்சி ஆளுக்கு சம்மன் வரும். அதற்கு வேண்டிய எற்பாடுகளைச் செய்து கொள்ளும். இதுதான் சமாச்சாரம் என்றார்.

"வக்கீலுக்குத் திடுக்கிட்டு விட்டது. 'இந்த சமாசாரத்திற்கா ஆயிரம் ரூபாய் கொடுக்கச் சொன்னீர்! "முன்னே கொடுத்து முதலிழந்த மாப்பிள்ளைக்குப் பின்னே கொடுத்துப் பெண்டு மிருந்த" சமாசாரம் மாதிரியாக வல்லவாயிருக்கிறது உமது சேதி! கோர்ட்டில் வியாஜ்யம் போட்டிருப்பது தெரியாமலா நாங்கள் விசாரிக்க வந்திருக்கிறோம். நீர் சொல்வது நெல்லுக்குள் அரிசி யிருந்தசேதி தான்.

"குமாஸ்தா :—ஒகோ! இப்படி முறைக்கிறீராக்கும். அப்பொழுது என் ஒத்துக்கொண்டீர்? எங்கே அய்யா போச்சு புத்தி? "எட்டினால் சிண்டைப்பிடி; எட்டாவிடில் காலைப் பிடி" என்றல்லவோ யிருக்கிறது உமது சமாசாரம். போனால் போகிறது, சும்மா அலைந்திருக்கிறேனே, பாபம், பிழைத்துப் போகட்டு மென்று சொன்னால் ரொம்ப ஜாஸ்தியாகப் பேசுகிறீரே. முன்னால் தெரிந்தால் ஏதாவது தஸ்தாவேஜுகளெல்லாம் எற்பாடாக வைத்துக்கொள்ளமாட்டீரா? எனக்கு ரசீது எழுதிக்கொடும். நேரமாயிற்று. வேலைகளிருக்கிறது.

"வக்கீல் பார்த்தார். அடடா, ஒரு நிமிஷத்தில் ஏமாற்றப்பட்டோமே. இதை ஏமாற்றத்தால் தான் வெல்லவேண்டும்" என்று நினைத்து, அடியிற் வருமாறு ரசீது கொடுத்தார் :—

'1924 வருஷம் பிப்ரவரி மாதம் 15-ந் தேதி நான் ரிஜிஸ்டர் ஆபீஸ் குமாஸ்தாவிற்கு எழுதிக் கொடுத்த ரசீதென்ன வென்றால்:—என் கட்சிக்காரன் கேஸ் ஜயமானதும் என் கட்சிக்காரனும் இந்த குமாஸ்தாவும் ஒற்றுமையுடன் வந்து என்னிடமிருக்கும் புரோநோட்டைக் கேட்டால், நான் என் கட்சிக்காரன் குறிக்கும் மனிதனிடம் புரோநோட்டைக் கொடுத்து விடவேணுகவும்

இப்படிக்கு,
வக்கீல்'

என்றெழுதிக் கொடுத்துப் போகச் சொல்லி விட்டார். நண்பா! இவர்கள் எப்படி ஒற்றுமையுடன் வந்து கேழ்கப்போகிறார்கள்? குமாஸ்தா தான் சொன்ன விஷயத்திற்காகப் பணத்தைத் தந்துவிடவேண்டு மென்பான். கட்சிக்காரன் இந்த உபயோகமற்ற சமாசாரத்திற்குப் பணம் கொடுக்கமாட்டே னென்பான். இருவரும் ஒற்றுமையுடன் வரப் போவது மில்லை. வக்கீல் பணம் கொடுக்கப்போவது மில்லை.

"இம்மாதிரியே நம் பாரத மக்கள்களுக்கும் வெளியிலிருக்கும் வரையில் சுதந்திர உணர்ச்சி, தியாகம், தேசபக்தி முதலிய எல்லா குணங்களுமிருக்கின்றன. ஆனால் காங்கிரஸ் கட்டடத்திற்குள் நுழைந்துவிட்டால் யாவுமே மறந்து, நான் உயர்ந்தவன், நான் படித்தவன், நான் புத்தி கூர்மையுள்ளவ னென்று ஒருவர்க்கொருவர் சண்டையிட்டுக்கொண்டு விடுகிறார்கள். இவர்கள் சச்சரவை நோக்கிய கவர்ன் மெண்டார் உங்களுக்குள் இன்னம் ஒற்றுமையில்லை. நீங்கள் யாவரும் ஒற்றுமையுடன் வரும் பொழுதுதான் ஸ்வராஜ்யமென்று சொல்லி அனுப்பி விடுகிறார்கள். வெளியில் வந்ததும் அடடா நாம் ஒற்றுமையுட னிருப்பதை மறந்து விட்டோமே என்கிறார்கள். நான் கூறிய வக்கீல் சமாசாரம் மாதிரி இவர்கள் ஒற்றுமை வரும்பொழுது தான் ஸ்வராஜ்யமும் கிடைக்கும்."

இரமேசன் :—சசி! நீ உரைத்தது மிக்க நன்றாயிருக்கிறது. ஆனால் சிறிது சந்தேகமாக விருக்கிறது. அதையும் விளக்கிவிடு. நியாயப்படி அக்குமாஸ்தா ரகசியமான விஷயம் சொல்லியிருந்தால் பணம் கொடுக்கவேண்டியதுதான். அவன் தான் ரகசியம் ஒன்றும் சொல்லவில்லையே. கோர்ட்டில் போட்டது எப்படி இரகசியமாகும்? வக்கீல் அப்

படி வாதித்தால் குமாஸ்தாவிற்கு ஒன்று மில்லாமல் போகிறது. அதைவிட்டு ரசீது இப்படிக் கொடுப்பானேன்?

சசி :—இரமேச்! வக்கீலப்படி வாதிக்க முடியாது. புரோநோட்டில் இரகசியம் சொன்னதற்காகக் கொடுப்பதாகச் சொன்ன ரூபாய்களென்று எழுதமுடியாது. அப்படி எழுதினுல் லஞ்சம் கொடுத்ததாகக் குற்றம் இவர்கள் பேரிலேயே சாரும். அதனுல் தான் வக்கீல் அந்த யுக்தி செய்தார். இப்பொழுது உன் சந்தேகம் தெளிந்ததா?

இரமேச் :—சசி! நன்ருகப் தெளிந்து விட்டது. வா, நேரமாயிற்று. சூரியன் மேற்கு திக்கில் சாய்ந்து விட்டான்.

இருவரும் மிக்க ஆனந்தமாக சம்பாஷித்துக் கொண்டே திருச்சியை அடைந்தார்கள்.

எல்லாம் வல்ல இறைவனைப் போற்றுக.

# நகைப் பைத்தியம்.

கிருத்திகா பௌர்ணமிக் கொண்டாட்டம் கருப்பூரில் மிக்க ஆனந்தத்துடன் நடந்து கொண்டிருந்தது. அவ்வூரில் பிராமண அக்கிரகாரத்தில் யாவரும் தங்கள் சக்திக்குத் தக்கபடி விளக்குகளேற்றி வைத்திருந்தார்கள். பிராமணுள் வீடுகள் சுமார் முப்பது இருந்தன. அதில் ஒரு வீடாவது ஒன்றைபோல் ஒன்றிராமல் பார்ப்பவர்களுக்கு வேடிக்கையாக விருந்தது. ஒன்று கூரைவீடு, மற்ரென்று நாட்டோடு, இன்னொன்று மங்களுரோடு, மற்ரென்று மாடி வீடு, இன்னொன்று பங்களா, இம்மாதிரியே அனேகவிதமாகவிருந்தன. கடைசியில் வாயிலில் அனேகம் பூஞ்செடிகளையும் மாங்களையும் உடைத்தான ஒரு பங்களாவில் அனேகம் காஸ் லைட்டுகளும், மேளம், பாண்டு முதலிய வாத்தியங்களும் முழங்கிக்கொண்டிருந்தன. அவ்வூர் பெரிய குடித்தனக்காராகிய சேஷப்பய்யர் எல்லோரையும் அங்குமிங்குமாகப் பார்த்து நிரம்ப அதிகாரங்கள் செய்துகொண்டிருந்தார். பிறகு சிறிதோய்ந்து சாய்மான ஆசனம் ஒன்றிலமர்ந்து தன் மனதிற்குள் ஆகா! நாம் இதுவரையில் ஒருவரும் செய்யாத அவ்வளவு விமரிசையாக என மகளிஷ்டப்படி கோலாட்டமுடிவை நடத்துகிருேமென்று ஆனந்தத்துடனிருந்தார்.

இங்கு இப்படியிருக்க வாயிலில் பெண்மக்கள் நாற்பது பெயர்கள் கூடியிருந்தார்கள். அதில் பெரியவளாகிய மாது அக்கூட்டத்தை மூன்று பங்காகப் பிரித்தாள். ஒரு பங்கில் பத்துப்பெயர்களும், மற்றப்பங்குகளில் பதினைந்து பெயர்களாகவும் பிரிந்தார்கள். ஒரு பங்கில் பத்துச் சிறுமியர்கள் தலை சிங்காரம், ஜடைநாகம் முதலான அணிகளால் அலங்காரம் செய்து கொண்டு பின்னல் கோலாட்டம் போட ஆரம்பித்தார்கள். மற்ரொருபங்கில் யுவதிகள் தாழம் பூவினுல் சித்திரமாகப் பின்னலிட்டு அனேக வைர ஆபரணங்க ளணிந்துகொண்டு, சுற்றுக் கோலாட்டம் போட்டார்கள். அதில் ஒரு யுவதி மாத்திரம் யாவரைக் காட்டிலும் அழகாகவும், அதிக அணிக ளணியாமலுமிருந்தாள். அவள் அழகே யாவர் கண்களையும் மயங்கச் செய்தது. அக்குமாரியே யாவரையும் அங்கு போங்கள், இங்கு வாங்கள் என்று கூறிக்கொண்டிருந்தாள். சேஷப்பய்யர் குமாரி அவள் தானென்று தோன்றிற்று. இன்னொரு பங்கில் மாதர்கள் சொல்ப அலங்காரங்களுடன் மண்டிக் கோலாட்டம் போட்டுக்கொண்டிருந்தார்கள்.

சந்திரன் களங்க மில்லாமல் பூர்ணகிரணத்துடன் காய்ந்துகொண்டிருந்தான். வானத்தில் மேகங்கள் சிறிதுமில்லாமல் நீல நிறமாக மாசு மருவற்று விளங்கியது. யாவரும் கொடமுருட்டி ஆற்றிற்குச் சென்று, இரவு ஒரு மணி வரையில் கேளிக்கையாகப் பலிகையை ஆற்றில் விட்டு நிலாச்சாப்பாடு அனேகம் சித்திரான்னங்களுடன் புசித்து வீடு திரும்பினுர்கள்.

மறு நாளுதயமாயிற்று. சேஷப்பய்யர் குமாரி விமலாவிற்கு உடம்பு மிக்க சோர்வுற்றிருந்தது, மனமும் சந்தோஷமற்றிருந்தது. மெதுவாக எழுந்து பின்பக்கத்திலிருந்த முற்றத்தில் போயுட்கார்ந்துகொண்டாள். சிறிது நேரம் சென்றது. தினம் சுருசுருப்புடன் தன் காலைக்கடன்களை முடித்துப் பழயமுதுண்ணவரும் தன் பெண்ணைக் காணுத அவளன்னை மகளை நெடுகவும் தேடிக்கொண்டே பின் பக்கம் வந்து தன் மகளின் பக்கத்தில் வந்து நின்ருள். விமலா தன் பக்கத்திலன்னை வந்திருப்பதைக் கவனியாமலே சிந்தனையிலாழ்ந்திருந்தாள்.

அன்னை :—விமலா! ஏனம்மா! இவ்வளவு நேரமாகியும் நீ பழயமுதுண்ண வரவில்லை? பின் பக்கத்திற்கு வந்து என்ன ஆலோசிக்கிறாய்?

விமலா அப்பொழுதுதான் தன் தாய் வந்திருப்பதை உணர்ந்து "இதோ வந்து விட்டேனம்மா!" என்று கூறி எழுந்திருந்தாள்.

விமலாவினன்னை, விமலாவின் முகக்குறிப்பால் அவள் ஏதோ கவலையுற்றிருப்பதாக நினைத்து, "விமலா! ஏனேளிக்கிறாய்? உன் மனது கவலையுற்றிருப்பதாக உன் முகக்குறிப்பால் தெரிகிறதே. "அகத்தினழகு முகத்தில் தெரியாதா?" என்னிடம் சொல்ல என்ன வெட்கம்? உனக்கு எது வேண்டினும் அளிக்கிறேன். சந்தோஷமாக யிரு" என்றாள்.

விமலா :—அம்மா! நீ என்னைக் கூறும்படி கேட்பதால் என் இஷ்டத்தைக் கூறுகிறேன். எனக்குச் சில அணிகள் வேண்டுமென்று ரொம்பவும் ஆசையாக இருக்கிறது. செய்து தருவாயா? நேற்றயதினம் நம் வீட்டிற்கு வந்திருந்த பெரிய வீட்டுக் குட்டிகள் யாவரும் காதிலும் மூக்கிலும் கையிலும் கழுத்திலுமாக அனேக ஆபரணங்களால் அலங்காரம் செய்துகொண்டிருந்தார்கள். இவ்வளவு பெரிய குடித்தனக்காரருக்கு ஒரே பெண்ணாகப் பிறந்தும் அவர்களைப் போலொன்றும் அணிந்து கொள்ளாமலிருப்பது ரொம்ப வருத்தமாக யிருக்கிறது. வேறொன்றுமில்லை.

இதைக் கேட்ட விமாலாவினன்னை வருத்தம் கலந்த சாந்தமுகத்துடன், "விமலம்! இதற்காகவா இவ்வளவு நேரம் ஆலோசித்துக் கொண்டிருந்தாய்? நீ இப்பொழுது எவ்வளவு அழகாக யிருக்கிறாய் என்பது தெரியுமா? இயற்கை அழகிருப்பவர்களுக்குச் செயற்கை அழகெனனத்திற்கு? செல்வமிருப்பதற்கும் அணி பூணுவதற்கும் யாதொரு சம்பந்தமும் கிடையாது. ஏற்கனவே சிருஷ்டிகர்த்தன் செய்த துவாரங்கள் போதாதென்று நாமும் ஏன் வீணாக அதிகப்படி செய்துகொள்ளவேண்டும்? இரவும் பகலும் உன் நன்மை கோரும் நாங்கள் அணிகளினால் உனக்கு நன்மையுண்டாகில் செய்து போடமாட்டோமா? அணிகள் சிறியோர் பெரியோர்களுக் கோர் ஜன்மசத்துரு. அணிகளால் கெட்ட குடிகளனந்தம். அதிக அணிகளணிந்துகொண்டால் திருடர்கள் கொள்ளை கொள்வார்கள். பல இடங்களுக்கணிந்து சென்றால் பார்ப்பவர்கள் அசூயை கொள்வார்கள் அம்மா! ஸ்திரீகளுக்குச் சிறந்த ஆபரணம் கற்பும் கல்வியுந்தான். இதை ஒருவரும் கொள்ளமுடியாது.

"வெள்ளத்தால் போகாது
வெந்தணலால் வேகாது,
வேந்தராலும் கொள்ளத்தான் முடியாது
கொடுத்தாலும் நிறைவொழிய குறைபடாது,
கள்ளர்க்கோ மிகவரிது,
காவலோ மிக எளிது
கல்வி என்னும் உள்ளத்தே பொருளிருக்க,
உலகெல்லாம் பொருள்தேடி உழல்வதேனே"

என்று நம் முன்னோர்கள் கூறியிருக்கிறார்கள். இதைத் தவிர்த்து வேறொன்றிற்கும் ஆசை கொள்ளாதே. நீ இப்பொழுது போட்டிருக்கும் ஆபரணங்களே எதேஷ்டமானது. எல்லோரும் அணிகள் போட்டுக்கொண்டால் நாம் போட்டுக்கொள்ளாமலே, அவர்களுக்கு சிறந்த படிப்பினை உண்டாக்குவோம். எப்பொழுதும் சந்தோஷமாக யிரு. "ஸந்தோஷம் ஸர்வபலம்" என்பதைத் தெரிந்துகொள். சொல்பம் கிடைக்கினும் திருப்தியாயிரு. திருப்தி என்பதில்லாமல் போனால் மனதிற்கு சாந்தியே உண்டாகாது. ஆசைக்கிடம் கொடுத்தால் அது மேன்மேலும் வளர்ந்து கொண்டே போகும். இன்றைக்கொன்று செய்துகொண்டால் நாளைக்கு மற்றொன்று வேண்டுமென்று தோன்றும். மனதும சதா சஞ்சலித்துக்கொண்டே போகும். நாம் நமக்குக் கீழிருப்பவர்களை அனுசரிக்க வேண்டுமேதவிர மேலிருப்பவர்களை பார்க்கக் கூடாது. இவ்விஷயங்களை உன்னுயிருள்ளளவும் பசுமர ஆணிபோல் மறக்காமலிருக்கவேண்டும். இனி எப்பொழுதும் புத்திசாலித்தனமாக நடந்துகொள்" என்றாள்.

விமலாவும் மிக்க மனத்தெளிவை அடைந்து, "அம்மா! இனி உன்னை எவ்விதத் தொந்திரவுகளும் செய்யமாட்டேன. அறியாமல் செய்ததற்கு மன்னித்துக் கொள். இனி கோடிவரினும் அணிகளுக் காசை கொள்ளமாட்டேன்" என்றாள்.

அது முதலிருவரும் மிக்க ஆனந்தத்துடனும் ஒற்றுமையுடனுமிருந்தார்கள்.

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

# சந்திரவர்மா.

## ஓர் நாடகம்.

(ஸ்ரீமான் R. நாராயணசாமிராவ், B.A.)

(268-ம் பக்கத் தொடர்ச்சி)

அங்கம் 4. களம் 1.

பவநகர். பீமசிங் தர்பார்.

(பீமசிங் தர்பார் நடத்திக் கொண்டிருக்கையில் கார்பாரி பிரவேசித்தல்)

கார்பாரி:—பவநகர் மன்ன வாழி! இராஜாதி ராஜ வாழி! ராணுவ வீர வாழி! இராஜ்யத்திற்கு வடக்கே மேற்குத் திசையை நோக்கிச் சஞ்சரித்துக் கொண்டிருந்த ஓர் மகரிஷியை அதிகாரிகள் அரண்மனைக் கழைத்து வந்திருக்கின்றனர்.

பீமசிங்:—கார்பாரி! அந்த மகானைத் தரிசிக்க நான் காத்துக்கொண்டிருப்பதாகத் தெரிவித்து அவரை உடனே இங்கழைத்து வாரும். (கார்பாரி செல்லல்)

(சந்திரவர்மா மகரிஷியைப்போல் வேடம் பூண்டு பிரவேசித்தல்.)

பீமசிங்:—(சிங்காதனத்தினின்றும் இறங்கி எதிர்கொண்டழைத்து வணங்கி) வரவேண்டும் முனிசிரேஷ்டரே! இதோ இந்த ஆசனத்தில் வீற்றிருக்கவேண்டும். தாங்கள் என் வீட்டிற்குவர நான் பூர்வஜன்மத்தில் என்ன தபம் செய்தேனோ!

சந்திரவர்மா:—கல்யாண்! கல்யாண்! சர்வேசுவரனுடைய அனுக்கிரகத்தால் தங்களுக்கு சர்வ மங்களமும் உண்டாகக்கடவது! நாராயண! நாராயண!

பீமசிங்:—யதீச்வா! தாங்களிருப்பது எவ்விடமென்பது எளியோனிட மறிவிக்கலாமோ?

சந்திரவர்மா:—மன்ன! என்னைப்போன்ற சந்நியாசிகளுக்கு "வீடேது, வாசலேது, விஷயமேது. வேந்தனே! மாடுமக்கள் மனைவியேது மற்ற மாவதேதுகாண். நாடு பெற்ற நடுவர் கையில் ஓலை வந்தழைத்திடில் ஓடு பெற்ற தவ்விலை பெறுது காணுமிவ்வுடல்." மன்ன! எனக்கு வீடில்லை, வாசலில்லை, ஊரில்லை, இடமில்லை, சுகமில்லை, துக்கமில்லை, ஒன்றுமில்லை. நான் லோகசஞ்சாரி. பூலோகம் முழுதும் என் வீடுதான்! நகர் நகராய்ச் சென்று என் சிஷ்யகோடிகளுக்கு நற்புத்தி புகட்டி அவர்கள் ஈடேறும் வழியை அவர்களுக்குப் போதிப்பது தான் என் தொழில்.

பீமசிங்:—(தனக்குள்) ஆ! அப்படியா! இந்த லோக சஞ்சாரியே கமலரேகையின் குலகுருவாயிருக்கக் கூடாதா? இருக்கட்டும். கொஞ்சங்கொஞ்சமாகத் தான் விஷயங்களை அறியவேண்டும். (உரக்க) ரிஷிபுங்கவரே! தங்களைப் போன்ற உத்தமர்கள் வரவை நான் வெகு ஆவலுடன் எதிர் பார்த்துக்கொண்டிருக்கிறேன். ஹே மகாத்மாவே! கொஞ்சகாலத்திற்கு முன் நானே ஆச்சரியப்படத் தக்க விதமாய் மிக்க அழகு பொருந்திய ஓர் தங்கப் பெட்டி என்னிடம் வந்து சேர்ந்தது. (சந்திரவர்மா பிரமித்தல்) அதை நான் அகஸ்மாத்தாய்த் திறந்து விட்டேன். அதற்குள் ஓர் கடிதமிருந்தது. ஆனால் அக்கடிதத்தை இங்குள்ளோர் ஒருவருமே படிக்க முடியவில்லை. பாத கண்டத்தில் வழங்கும் பாஷைகளனைத்தையும் கற்றுணர்ந்த பாஷ்யருங்க

னென்னும் அமைச்சனால் கூட அது இன்ன பாஷையிலெழுதப்பட்டிருக்கிற தென்று சொல்ல முடியவில்லை. பாஷ்யதுங்கன் சொல்லுகிறபடி அப்பெட்டி ஓர் தெய்வலோகப் பெட்டி யென்றும் அதிலிருந்த கடிதம் ஏதோ தெய்வபாஷையிலெழுதப் பட்டிருக்க வேண்டுமென்றும் நினைக்கவேண்டியதாக இருக்கிறது. தெய்வத் தன்மையுடைத்தான தங்களைப்போன்ற யோகீசுவரர்கள் கூட அதைப் படிக்க முடியாவிட்டால் வேறு யாரால் தான் முடியும்?

சந்திரவர்மா:—(தனக்குள்) கண்டுபிடித்து விட்டேன் கமலரேகை இருக்குமிடத்தை! இவர் சொல்லும் பெட்டி நான் அனுப்பியதாகத் தானிருக்கவேண்டும். அது எப்படியும் கமலரேகையைச் சென்றடையுமென்று மகேந்திர ராஜர் சொல்லவில்லையா? (உரக்க) ஹே துஷ்ட சம்ஹாரம் செய்து சிஷ்ட பரிபாலனம் செய்யும் மண்டலாதிபதி! தாங்கள் சொல்லும் சுவர்ணப் பெட்டியையும் அதற்குள்ளிருந்த லிகிதத்தையும் இங்கு கொண்டு வரச் சொல்வீர்களா? நாராயணா! நாராயணா!

பீமசிங்:—(கார்பாரியைப் பார்த்து) கார்பாரி! நீர் கமலரேகையின் அந்தப்புரத்துக்குச் சென்று அப்பெட்டியை வாங்கிக்கொண்டு வாரும். அரண்மனைக்கு ஓர் மகரிஷி வந்திருக்கும் விஷயத்தையும் அவளிடம் தெரிவியும். (கார்பாரி செல்லல்)

சந்திரவர்மா:—(தனக்குள்) கமலரேகை இங்கு தான் இருக்கிறாளென்பதில் இனியும் என்ன சந்தேகம்? ஹே ஈசுவரா! என் முயற்சி வீணாகாமல் அருள்புரிய என்னே நின் கருணை!

பீமசிங்:—கார்பாரி ஏன் இன்னும் வரவில்லை? கமலரேகையிடம் சென்று அப்பெட்டியை வாங்கிக் கொண்டுவர இவ்வளவு தாமதமா?

சந்திரவர்மா:—(தனக்குள்) கமலரேகையைப் பற்றி இம்மன்னன் இவ்வளவு தாராளமாகப் பேசுகிறானே. ஒரு சமயம் அவளை மணந்து கொண்டிருக்கலாமோ? அப்படி யிருப்பின், அவளிருப்பிடத்தைக் கண்டு பிடித்தும் என் முயற்சிகளெல்லாம் வீணாய் விடுமே! ஒன்றும் விளங்க வில்லையே! இருக்கட்டும். கொஞ்சங் கொஞ்மாகத்தான் விஷயங்களை அறியவேண்டும்.

(கார்பாரி பெட்டியைக் கொண்டுவந்து சந்திர வர்மாவிடம் கொடுக்க)

சந்திரவர்மா:—(சற்றுநேரம் பெட்டியையும் கடிதத்தையும் உற்று நோக்கி) நீங்களெல்லோரும் ஊகித்தபடியே இப்பெட்டி ஓர் தெய்வலோகப் பெட்டிதான். இக்கடிதமும் தெய்வ பாஷையில்தான் எழுதப்பட்டிருக்கிறது. ஆகையால் சாதாரண நரர்கள் இதைப் படிக்க முடியாது. என்னைப்போன்ற துறவிகளும் இதைப் பார்த்தவுடன் படித்தல் எளிதல்ல. ஆனால், இக்கடிதத்தை ஓர் மண்டலம், அதாவது நாற்பத்தைந்து நாள் பூஜையில் வைத்துப் பிறகு இதைப்பற்றித் தியானம் செய்தால் இதன் கருத்து வெளிப்படும். ஆகையால் இந்த லிகிதத்தை என்னிடம் கொடுத்துவைத்தால் நான் அதைப் பூஜையில் வைத்து அதன் அர்த்தத்தைச் சொல்லுகிறேன்.

பீமசிங்:—மகாத்மா! அக்கடிதத்தைத் தாங்களே வைத்துக்கொள்ளுங்கள். ஆனால் முனிவரே! தங்கள் வரவை நான் மற்றோர் காரியத்தை யுத்தேசித்தும் வெகு ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன். மகரிஷி! கமலரேகையின் பெயரை நான் இதற்குமுன் இரண்டொரு தடவை உச்சரித்தேனல்லவா? அவள் ஓர் இராஜகன்னிகை. எனக்கு ஏற்கனவே ஓர் மனைவியிருப்பினும்,

நான் கமலரேகையை என் பட்ட மகிஷியாகக் கொள்வதென்று நிச்சயித்திருக்கிறேன். அவளுக்கும் என்னை மணக்கச் சம்மதந்தானும். ஆனல் யாரோ தன் குலகுரு ஒருவரை வணங்கி அவர் அனுக்கிரகத்தைப் பெற்ற பின்புதான் என் மனைவியாகவேண்டுமாம். அவள் குரு ஓர் லோக சஞ்சாரியென்றும், தங்களைப்போன்ற யதீசுவரரென்றும் தெரிய வருவதால், தாங்களே ஒருகால் அவளுடைய குலகுருவாயிருக்கலாமென நினைக்கிறேன். ஆகையால் கமலரேகை தட்சணமே தங்களைத் தரிசித்தல் மெத்த அவசியம். தெய்வாதீனமாய்த் தாங்களே அவளுடைய குலகுருவாயிருப்பின், என் விவாகத்தைச் சீக்கிரம் முடித்துவிடலாமன்றே ?

சந்திரவர்மா:—(தனக்குள்) கமலரேகா! என்ன உன் புத்திகூர்மை? உன் குல குரு ஓர் லோக சஞ்சாரியா! அவர் ஓர் யதீசுவரரா! உன் விவாகத்திற்குமுன் அவருடைய அனுக்கிரகத்தைப் பெறவேண்டுமா! சபாஷ்! உன் புத்தியை மெச்சினேன்! என்னைச் சந்திக்க நல்ல உபாயம் செய்தாய்! (உரக்க) மன்ன! அனேக மன்னர்களும் பெரிய வம்சத்தினரும் என்னைத் தங்கள் குலகுருவாகப் பாராட்டி வருகிறார்கள். கமலரேகையும் என்னையே குருவாகக் கொண்டவளாயிருப்பின் எனக்கு மிகுந்த சந்தோஷமாயிருக்கும். அவளை என் முன்னிலைக்கு அழைத்து வந்தால்—

பீமசிங்:—ஆகா! தங்களை உடனே வந்து தரிசிக்கும்படி கமலரேகையிடம் சொல்லச் சொல்லுகிறேன்.

சந்திரவர்மா:—மன்ன! நானே உலகத்தைத் துறந்தவன். ஆகையால் நான் பூஜை செய்யவும் இடையூறின்றி நிஷ்டையிலமரவும் எனக்கு இடவசதி செய்து கொடுக்க வேண்டும்.

பீமசிங்:—பகவன்! அரண்மனையின் தென் பாகத்தைத் தங்கள் பூஜை முதலியவைகளுக்கு வைத்துக்கொள்ளலாம். தாங்கள் இடையூறின்றித் தியானம் செய்யக்கூடிய அறையொன்றையும் தங்களுக்குத் தருகிறேன். இவ்வரண்மனையின் உச்சிக் கோபுரத்தின் உச்சியில் ஓர் அறையிருக்கிறது. அவ்வறையிலிருந்து இந்நகர் முழுதும் தெரியும். அது அவ்வளவு உன்னதமான இடத்திலிருப்பதால் தியானம் பண்ண மிகவும் சிரேஷ்டமானது. மேலும் அவ்விடம் நிச்சப்தமாகவுமிருக்கும்.

சந்திரவர்மா:—மன்ன! மெத்த சந்தோஷம். ஆனல் உலகிலுள்ள ஜனங்களைச் சன்மார்க்கர்களாகச் செய்தலே என் தொழிலாதலால் இந்நகரத்தார்களெல்லோரும் அரண்மனைக்குத் தாராளமாய் வந்து என்னைத் தரிசிக்க தாங்கள் அனுமதியளிக்கவேண்டும். மற்றும் சிறையிலடைபட்டிருக்கும் கைதிகளுக்கும் நான் வாரத்திற்கொருமுறை உபதேசம் செய்து அவர்கள் ஆன்மாக்கள் ஈடேறும் வழியைக் கற்பிக்கவும் அனுமதி கொடுக்க வேண்டும்.

பீமசிங்:—எனக்கென்ன தடையுளது? யாராயிருந்தாலும் தங்களை தரிசிக்க தாராளமாய் அரண்மனைக்கு வரலாமென்று தண்டோரா மூலமாய் நகரத்தார்களெல்லோருக்கும் அறிவித்துவிடுகிறேன். நாம் உடனே தங்கள் பூஜாக்கிரகத்திற்குச் சென்றால் அங்கு கமலரேகை தங்களை தரிசிப்பாள்.

சந்திரவர்மா:—அரச! மெத்த சந்தோஷம். நாம் பூஜாக்கிரகத்திற்குச் செல்லலாம். நாராயண! நாராயண!

(எல்லோரும் செல்லல்.)

(காட்சி முடிகிறது)

அங்கம் 4. களம் 2.

காலம்—காலை.

பவநகர். ஓர் தெரு.

(இராஜசிம்மனும் ஸ்ரீதரனும் பிரயாணிக ளைப்போல் மாறுவேடம் பூண்டு பிரவேசித்தல்.)

ஸ்ரீதரன் :—இராஜசிம்மா! உயர்குலத்தில் ஜனித்த நமக்கும் இங்ஙனம் மாறுவேடம் பூண்டு அலையவேண்டிய கதி யுண்டாகியிருப் பது அதிசயமல்லவா? நம்முடைய உறவின ராவது வேறு சினேகிதராவது நம்மை இப் பொழுது பார்த்தால் நாம் இன்னாரென்று அறிந்துகொள்ள முடியுமா?

இராஜசிம்மன்:—நம்முடன் எவ்வளவு பழகிய வர்களாக விருந்தபோதிலும் நம்மை யறிந்து கொள்ள முடியாதென்றே நினைக்கிறேன். அதிருக்கட்டும், ஜனங்களெல்லோரும் கூட் டங் கூட்டமாய் அரண்மனைக்குச் செல்வ தும் வருவதுமாயிருக்கிறார்களே! அரண் மனையில் யாது விசேஷமோ தெரியவில் லையே. (அவ்வழி சென்றுகொண்டிருந்த பத்மாட்சியை நிறுத்தி) பாட்டி! இன்றைய தினம் அரண்மனையில் என்ன விசேஷம்? ஜனங்கள் திரள்திரளாய் அரண்மனைக்குட் செல்வதும் வருவதுமாயிருக்கிறார்களே!

பத்மாட்சி:—நீங்களெல்லாரும் எந்த ஊரப்பா! இப்படிக் கேட்கிறீர்களே.

இராஜசிம்மன் :—நாங்கள் அயலூரிலிருந்து வந்தவர்கள். அரண்மனையில் ஏதாவது கலி யாணமோ?

பத்மாட்சி :—அப்பா! அரண்மனைக்கு ஓர் பெரிய யோகீசுவரர் வந்திருக்கிறார். அவ ரைத் தரிசித்து அவருடைய அனுக்கிரகத் தைப் பெறுவதற்குத்தான் எல்லோரும் அரண்மனைக்குச் செல்லுகிறார்கள். இதோ நான்கூட அங்கு போய்த்தான் வருகிறேன். சுவாமியாருடைய விபூதிப்பிரசாதம் இதோ என் கையிலிருக்கிறது பார்.

இராஜசிம்மன் :—(பத்மாட்சி கையிலணிந் திருந்த மோதிரத்தைப் பார்த்து ஆச்சரியத் துடன்) அம்மா! பாட்டி! இன்னும் ஒரே கேள்வி. தாங்கள் அணிந்திருக்கும் மோதி ரம் என்ன அழகாயிருக்கிறது? அது யாரு டையது? இம்மாதிரி மோதிரத்தை நான் பார்த்ததே கிடையாதே. அதை யாரிடத்தி லிருந்து வாங்கினீர்கள்?

பத்மாட்சி:—அதை ஏன் கேட்கிறாய்? இந்த மோதிரத்தை அந்த மகாலக்ஷ்மி எனக்குக் கொடுத்தாள். அந்த மகாலக்ஷ்மி மகாராஜியா யிருக்கணும்! எங்காத்துக்காரரை ஜயிலிலே இருந்து கொண்டுவந்த மகாலக்ஷ்மி மக ராஜியா யிருக்கவேண்டும்.

இராஜசிம்மன்:—பாட்டி! ஏதோ மகாலக்ஷ்மி, மகாலக்ஷ்மி யென்கிறீர்களே! அந்த மகா லக்ஷ்மி யார்? அவளுக்கு வேறு யாதொரு பெயரும் கிடையாதா?

பத்மாக்ஷி:—அவள்தானப்பா எங்கள் வீட்டில் வளர்ந்த மகாலக்ஷ்மி கமலரேகை! அவ ளைப் பார்த்தும் ரொம்ப நாளாய் விட்டது! (கண்ணீர் விடுதல்)

இராஜசிம்மன் :—ஹா! கமலரேகையா! அவள் எங்கே இருக்கிறாள்?

பத்மாக்ஷி:—அந்தக் குழந்தையும் அரண்மனை யில் தான் இருக்கிறாள்! எனக்கு நாழியாச்சு, நான் போகிறேன்!

இராஜசிம்மன்:—பாட்டி! அந்த மோதிரம் மிகவும் அழகாயிருக்கிறது. அதற்கு என்ன விலை கேட்கிறீர்களோ கொடுக்கிறேன். அதைக் கொடுக்கமுடியுமா?

பத்மாக்ஷி:—ஆ! நன்றாகக் கேட்டாய்! என் உயிரே போனாலும் அதைக் கொடுப்பேனா! உன் பணத்தை நீயே வைத்துக் கொள். எனக்கு உன் பணமும் வேண்டாம், காசும் வேண்டாம். நன்றாகக் கேட்டாய்! அழகாயிருக்கிறது! (சென்றுவிடல்)

ஸ்ரீதரன்:—இதென்ன ஆச்சரியம்! இராஜசிம்மா! அந்த மோதிரத்தைப் பார்த்தவுடன் உனக்குக் கமலரேகையின் ஞாபகம் வரக் காரணமென்ன?

இராஜசிம்மன்:—ஸ்ரீதரா! கண்டு பிடித்து விட்டோம் கமலரேகை இருக்குமிடத்தை. இனிமேல் பட்சியைத் திருடிச்செல்ல வேண்டியது தான்!

ஸ்ரீதரன்:—நான் கேட்ட கேள்விக்குப் பதிலைக் காணோமே!

இராஜசிம்மன்:—ஸ்ரீதரா! அம்மோதிரம் கமலரேகையின் மோதிரம். அதை அவள் அணிந்திருந்ததை நான் எவ்வளவோ தடவைகளில் பார்த்திருக்கிறேன். ஆனால் அவ்வழகியின் மோதிரம் இந்தக் கிழவியிடத்தில் வந்தது தான் எனக்கு அதிக ஆச்சரியத்தை விளைவிக்கின்றது.

ஸ்ரீதரன்:—அப்படி யெனில் நாம் உடனே அரண்மனைக்குச் செல்வோம் வா. நீ சொல்லுமாறு கமலரேகையை அபகரித்துச் செல்வதெனில் முதலில் அரண்மனைக்குட் சென்று துப்பறிய வேண்டும். அங்ஙனம் செய்யச் சரியான பிரமேயம் இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது. யாரோ சுவாமியார் அரண்மனையிலிருக்கிறாராமே. அவரைக் காண எல்லோரும் செல்லலாமாம். ஆகையால் அம்முனிவரைக் காணச் செல்வதைப்போல் நாம் அரண்மனைக்குட் செல்வோம் வா.

இராஜசிம்மன்:—எப்படியும் நாம் அரண்மனைக்குச் செல்லுகிறோம். அந்த சுவாமியாரையும் கண்டு தரிசித்து விட்டு வருவதில் உனக்கென்ன ஆட்சேபனை?

ஸ்ரீதரன்:—எனக் கொன்றும் ஆட்சேபனை இல்லை. இப்பொழுதே அரண்மனைக்குச் செல்வோம் வா. (இருவரும் செல்லல்)

(காட்சி முடிகிறது.)

அங்கம் 4. களம் 3.
சந்திரவர்மாவின் பூஜாக்கிரகம்.
காலம்—முற்பகல்.

(சந்திரவர்மா முனீசுவராய் விளங்க ஜனங்களெல்லோரும் வணங்கிச் செல்லல். இராஜசிம்மன் கடைசியாக வணங்குதல். ஸ்ரீதரன் சற்று தூரத்தில் நின்று கொண்டிருத்தல்.)

இராஜசிம்மன்:—யோகீச்வர! நமஸ்கரிக்கிறேன்.

சந்திரவர்மா:—இராஜசிம்மா! தீர்க்காயுஷ் வந்தஹ! உனக்கு சர்வ மங்களமுமுண்டாவதாக!

இராஜசிம்மன்:—(திடுக்கிட்டு ஆச்சரியத்துடன்) இதென்ன ஆச்சரியம்! எளியோனான என்னுடைய பெயர் சுவாமிகளுக்குத் தெரியக் காரணமென்ன வென்பது அறியக் கூடவில்லையே!

சந்திரவர்மா:—எல்லாம் சொல்லுகிறேன். ஆனால் முதலில் நான் கேட்கும் கேள்விகளுக்கு விடையளி. உன் பக்கத்திலிருக்கும் வாலிபன் யார்? அவன் உன் மித்திரனாயின் இங்கேயேயிருக்கட்டும். அன்றேல் உடனே அவனை வெளியிலனுப்புவாய்!

இராஜசிம்மன்:—மகாத்மா! அவனைச் சிறிதும் சந்தேகிக்க வேண்டாம், அவன் என்னுடைய உயிர்த்தோழன்.

சந்திரவர்மா:—அப்படியெனில் நீ முதலில் வெளியில் நிற்கும் பாராக்காரனிடம் சென்று இப்பொழுது இங்கு கொஞ்சம் உபதேசம் நடக்கப்போகிறபடியால் ஒருவரையும் சற்று நேரம் உள்ளே விடவேண்டாமென்று சொல்லிவிட்டு நீ கதவை மூடி உள்ளே தாளிட்டுக்கொண்டுவா.

(இராஜசிம்மன் அங்ஙனமே செய்துவிட்டு வருகிறான்.)

சந்திரவர்மா:—(தன் இயற்கைக் குரலுடன்) இராஜசிம்மா! இதோ என் கையிலிருக்கும் இத்தழும்பைப் பார். என் குரலினின்றும் நான் யாரென்பதை யறியமுடியவில்லையா? ஆச்சரியத்தால் கூச்சலிடாதே.

இராஜசிம்மன்:—(ஆச்சரியத்துடன்) யார்? சந்திர—வர்மா!

சந்திரவர்மா:—ஆம், இராஜசிம்மா! உன்னைச் சிறு வயதுமுதல் தூக்கி வளர்த்த சந்திரவர்மாதான் நான்! உன் தந்தையிடம் விசுவாசத்துடன் அமைச்சனாயிருந்த சந்திரவர்மாதான் நான்! என்னருமை இராஜசிம்மா! கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்ததைப்போல் உன்னைக் கண்டுபிடிக்க வேண்டி நான் அலைந்துகொண்டிருக்கும் சமயத்தில் தெய்வாதீனமாய் நீயே இங்கு வந்துவிட்டாய். நான்—

இராஜசிம்மன்:—சந்திரவர்மா! என் தந்தை சௌக்கியமாயிருக்கிறாரா தெரியுமா? அவர் கதி யாதாயிற்றென்பதே எனக்குத் தெரியவில்லையே.

சந்திரவர்மா:—இராஜசிம்மா! உன் தந்தையைப்பற்றிக் கவலைப்படாதே! அவர் க்ஷேமமாகத்தானிருக்கிறார். ஆனால் இப்பொழுது இதைப்பற்றிப் பேச இது தகுதியான இடமன்று. ஆகையால் நான் இனி சொல்லப்போவதைக் காது கொடுத்துக் கேள்.

இராஜசிம்மன்:—ஆ! என் தந்தை சௌக்கியமா யிருக்கிறாரா? ஆ! ஆனந்தத்தால் பேசவும் நாவெழவில்லையே. சந்திரவர்மா!—

சந்திரவர்மா:—இதைப்பற்றியெல்லாம் பேச இது சமயமன்று. ஆனால் ஓர் விஷயம் சொல்லுகிறேன். ஆச்சரியத்தால் கூச்சலிடாதே, சந்தோஷத்தால் கலங்காதே. உன் காதலி கமலரேகை இந்தக் கணத்தில் இவ்வரண்மனையிலேயே யிருக்கிறாள்.

இராஜசிம்மன்:—அது எனக்கு முன்னமேயே தெரியும்.

சந்திரவர்மா:—(ஆச்சரியத்துடன்) உனக்கு எப்படித் தெரியும்?

இராஜசிம்மன்:—இன்று தெருவில் ஓர் கிழவி கமலரேகையின் மோதிரத்தை அணிந்திருந்ததைப் பார்த்து அவளை வினவினேன். அப்பொழுது தெரியவந்தது.

சந்திரவர்மா:—அந்தக் கிழவிதான் உன் காதலியை மூர்ச்சையினின்றும் தெளிவித்துத் தன் வீட்டிலேயே வெகு அன்புடனும் அபிமானத்துடனும் வளர்த்துவந்த பத்மாக்ஷியாயிருக்கவேண்டும். நான் கமலரேகையுடன் பேசியபொழுது அந்தக் கிழவிக்குத் தன் ஞாபகார்த்தமாகத் தன் மோதிரத்தை யளித்ததாகச் சொன்னாள்.

இராஜசிம்மன்:—சந்திரவர்மா! யாரோ ஓர் சுவாமியார் வந்திருப்பதாக நான் கேள்விப்பட்டபொழுது அந்த சுவாமியார் என்னரிய சந்திரவர்மாவாக இருக்கக்கூடுமென்று நான் கனவிலும் நினைக்கவில்லை. கமலரேகை இவ்வரண்மனையிலிருப்பதை அறிந்தோமாகையால் அவளை யெப்படியாவது திருடிச் சென்றுவிட வேண்டுமென்று தீர்மானித்தோம். ஆனால் அப்படிச் செய்வதற்குமுன்

அரண்மனையின் உளவு கொஞ்சம் அறியலா மென்றே சுவாமியாரைக் காணச் செல்வ தாக ஓர் சாக்குச் சொல்லி இங்கு வந்தோம். (ஸ்ரீதரனைப் பார்த்து) ஸ்ரீதரா! சும்மா அரு கில் வா.

ஸ்ரீதரன்:—நமஸ்கரிக்கிறேன்.

சந்திரவர்மா:—தீர்க்காயுஷ்யமஸ்து! (இராஜ சிம்மனைப் பார்த்து) இராஜசிம்மா! உங்க ளால் கமலரேகையைத் திருடிச் செல்ல முடி யுமா? இதென்ன பேதமை! அது உங்க ளால் முடியாத காரியம். ஆனல் நாமெல் லோரும் ஒன்று சேர்ந்துவிட்டபடியால் இனி நாம் ஒன்றுக்கும் அஞ்சவேண்டிய தில்லை. உன் தந்தையின் நேச அரசர்கள் பலர் இருக்கிறார்கள். முன்னறிக்கையே யில்லாமல் இந்த வங்கநாட்டுக் கொடியோன் படையெடுத்து வந்ததால் உன் தந்தையின் நேச அரசர்களிலொருவரேனும் உன் தந் தைக்குதவி புரிய முடியவில்லை. ஆனல் ஒரு கேள்வி. உன் தோழன் இவ்விஷயத்தில் உனக்குதவி புரிவானு?

இராஜசிம்மன்:—சந்திரவர்மா! ஸ்ரீதரன் எனக் காக எதையும் செய்வான். நான் சிறையி னின்று தப்பியதே ஸ்ரீதரனல்தான். அவன் என்னை விடுவித்திராவிடின் நான் இந்நேரம் வாளுக்கிரையாகியிருப்பேன்.

ஸ்ரீதரன்:—என் சிநேகிதனுக்காக நான் என் னுயிரையும் இழக்கத் தயாராயிருக்கிறேன்.

சந்திரவர்மா:—மெத்த சந்தோஷம். நான் உங்க ளிருவர்களையும் ஓர் காரியத்திற்காக அனுப்ப விரும்புகிறேன். அதை நீங்கள் பழுதின்றிச் செய்து முடிக்கவேண்டும். இதோ இக்கடி தங்களை யெடுத்துக்கொள்ளுங்கள். நீங்க ளிருவரும் வெவ்வேறாக உன் தந்தையின் நேச அரசர்களான புருஷபுரத்தை யாளும் பராக்கிரமன், உஜ்ஜைனி மன்னனான வீர மார்த்தாண்டன், மத்ரா தேசத்தையாளும் விக்கிரமகேது, கலிங்க மன்னனான ஜயசிங், கல்யாணியை யாளும் சோமேசுவரன் முத லியவர்களிடம் சென்று அவரவர்கள் விலாச மெழுதியிருக்கும் கடிதத்தை யவரவர்களுக் குக் கொடுக்கவேண்டும். அப்படிச் செய் வீர்களானல், ஒவ்வோர் அரசனும் ஆயிரக் கணக்கான படைகளை உடனே உங்களுடன் அனுப்புவார்கள். அச்சேனைகளையெல்லாம் திரட்டிக்கொண்டு இன்னும் ஒரு மாதத்திற் குள் திடீரென்று இந்நகர் நோக்கி வரவேண் டும். சேனைகள் ஐந்தாறு காதத்திற்கப்பால் வரும்பொழுதே நீங்களிருவரும் முன்னல் இங்கே வந்துவிடுங்கள்.

இராஜசிம்மன்:—சந்திரவர்மா! எல்லாம் செய்துவிடுகின்றோம். ஆனல் இன்னும் ஒரு மாதத்திற்குள் எப்படி இவ்வளவும் செய்து முடிப்பது? நாங்கள் நடந்து செல்வதெனில் புருஷபுரம் போய்ச்சேரவே இரண்டு வாரங்க ளாகுமே.

சந்திரவர்மா:—உங்களை நான் நடந்து போகச் சொல்லவில்லை. இதோ இந்த மோகராப் பைகளை யெடுத்துக்கொள்ளுங்கள். இந்நகர் குதிரைகளுக்குப்பெயர்போனது. ஆகையால் என்ன செலவழிந்தபோதிலும் ஒவ்வொரு வனும் ஒவ்வோர் வாயுவேகமுள்ள குதி ரையை வாங்கிக்கொள்ளுங்கள்.

இராஜசிம்மன்:—சந்திரவர்மா! இவ்விஷயத்தில் எங்களுடைய சாமர்த்தியத்தைப் பாருங் கள். நாங்கள் வாயுவேகமாய்ச் சென்று இன்னும் ஒரு மாதத்திற்குள் திரும்பி வந்து விடுகின்றோம். ஆனல் சந்திரவர்மா! நான் செல்லுமுன் கமலரேகையை யோர் முறை சந்திக்க ஏதாவது வழி—

சந்திரவர்மா:—இராஜசிம்மா! சமயத்தில் மதியை யிழந்து விடாதே! நான் சொல்லும் வண்ணம் செய்!

(ஸ்ரீதானும் இராஜசிம்மனும்) அப்படியே செய்கிறோம். நாங்கள் சென்றுவருகிறோம்.

சந்திரவர்மா:—சென்று வாருங்கள். உங்கள் முயற்சி பயன்படுமாறு சர்வவல்லமையுள்ள ஜகதீசன் அனுக்கிரகம் செய்வாராக!

(கடிதங்களையும் மோகராப் பைகளையும் பெற்றுக்கொண்டு இருவரும் செல்லல்.)

(காட்சி முடிகிறது.)

அங்கம் 4. களம் 4.

உத்தியான வனம். ஓர் மண்டபம்.

காலம்—இரவு.

(மோகனுவும் சித்திராங்கியும் பிரவேசித்தல்)

மோகனு:—அடி சித்திராங்கி! நானென்ன அழகிற் குறைந்தவளாடி? என் ரூபம் என் பெயருக்கேற்றபடி கண்டோர் மனதைக் கவரக் கூடியதாயில்லையா? என்னைக் காட்டிலும் இந்தச் சண்டாளி கமலரேகை அதிக ரூபவதியா? அவள்தானடி எனக்குச் சத்துருவாக வாய்த்திருக்கிறுள்! என்னமோ மருந்து போட்டு என் கணவரை மயக்கி விட்டாளே.

சித்திராங்கி:—அம்மா! தங்களைப் காட்டிலும் இந்தக் கமலரேகை அதிக ரூபவதி யென்று யார் தான் சொல்லத் துணிவார்கள்? ஆனல் தங்களுக்குத் தற்காலம் ஏதோ கெட்டதிசை இருக்கிறது போலும். ஆகையால்தான் அரசர் தங்களை அவமதிக்கிறுரென்று நினைக்கிறேன். (சுகுணு பிரவேசித்தல்)

மோகனு:—இதோ சுகுணு வந்து விட்டாள். அவளைக் கேட்டால் தெரியுமே. எனடி சுகுணு! மகாராஜாவின் கலியாண முகூர்த்தம் எப்பொழுது நிச்சயித்திருக்கிறுர்கள்?

சுகுணு:—மகாராணி! மகாராஜாவின் கலியாணமா?

மோகனு:—ஆம்! உன் புது யஜமானி கமலரேகை இருக்கிறுளே! அவள்தானே இப்பொழுது மகாராஜாவின் பட்ட மகிஷியாகப் போகிறுள். ஏதோ ஒன்றும் தெரியாதவள் போல் நடிக்கிறுயே. பேஷ்! உனக்கும் எனடி இந்த மோசக் கருத்து. சும்மா உள்ளதை என்னிடம் சொல்லடி. ரதியைப்போல் விளங்கும் உன் யஜமானியை நான் என்ன செய்யப் போகிறேன்?

சுகுணு:—அம்மா மகாராணி! தாங்கள் கோபத்தினுல் வாயில் வந்தபடி யெல்லாம் பேசுகிறீர்கள். எனக்குத் தெரிந்ததைச் சொல்லுகிறேன். இவ்விஷயத்தைப்பற்றிக் கமலரேகை பேசுவதைப் பார்த்தால், அவளுக்கு அரசரை மணக்கக் கொஞ்சமாவது இஷ்டமில்லை யென்று தோன்றுகிறது.

மோகனு:—சுகுணு! எனக்கு உன் சாமர்த்தியமெல்லாம் நன்ருய்த் தெரியுமடி. என்னையா ஏய்க்கிறுய்? உனக்குச் சமயத்திற் கேற்றபடியெல்லாம் தோன்றும். அடடா! நல்ல ருத்திராக்ஷப் பூனையாயிருக்கிறுயே! நீயுமா எனக்குச் சத்துருவாக வாய்த்திருக்கிறுய்?

சுகுணு:—தாங்கள் என்னமோ நினைத்துக் கொண்டு என்னமோ பேசுகிறீர்களே! நான்—

மோகனு:—அடி சித்திராங்கி! இந்த சுகுணு பேசுவதைக் கேட்டாயா? இவள் அந்தச் சண்டாளியுடன் சேர்ந்து எனக்கு விரோதமாகக் காரியங்களைச் செய்வதும் தவிர என்னையே இப்பொழுது ஏளனமும் செய்கிறுள் பார்த்தாயா? இவளா என்னை ஏளனம் செய்வது? அடி சுகுணு! நீ வெகு கெட்டிக்காரி.

என்னுடன் நீ பேசவேண்டாம். போ! கமலரேகை மகாராஜாவை மணக்கச் சம்மதந்தானென்று சொன்னது எனக்குத் தெரியாதா? யாரோ தன் குலகுரு வரவேண்டுமென்று இவ்வளவு நாள் காத்துக்கொண்டிருந்தாள். அவரும்தான் வந்துவிட்டாரே! எப்பொழுது குலகுருவும் வந்து விட்டாரோ இனிமேல் முகூர்த்தம் வைக்க வேண்டியது தானே.

சுகுணை:—மகாராணியாரே! ஒரே வார்த்தை சொல்லி விடுகிறேன். இப்பொழுது வந்திருக்கும் சுவாமியார் கமலரேகையின் குலகுரு வல்லவாம்! இதுவரை வந்த சுவாமியார்களைப் போல் இவரும் இதற்கு முன் கமலரேகையைப் பார்த்ததே இல்லையாம்!

மோகனை:—என்ன ? உண்மையாகச் சொல்லுகிறாயா? அல்லது—

சுகுணை:—உண்மையாகத்தானம்மா!

மோகனை:—அடி சித்திராங்கி! இவள் பொய் சொல்லுகிறாளென்று தோன்றுகிறதெனக்கு. நீ சென்று எப்படியாவது உண்மையை அறிந்து கொண்டு வருகிறாயா?

சித்திராங்கி:—அம்மா! சுகுணை பொய் சொல்ல மாட்டாளம்மா.

மோகனை:—இல்லையடி! அவள் பழைய சுகுணை அல்லள். இப்பொழுது அவள் கமலரேகைக்காக என்ன வேண்டுமென்றாலும் செய்வாள்.

சுகுணை:—அம்மா! இப்படி யெல்லாம் என்னை தூஷிப்பதென்றால் நான் போகிறேனம்மா. (செல்லல்)

மோகனை:—உள்ளதைச் சொன்னால் யாருக்கும் கோபந்தான் வரும். அந்தத் துரோகியுடன் சேர்ந்து எனக்குத் துரோகம் நினைப்பது மன்றி சேர்ந்து என்னை மோசம் செய்யவு மன்றோ பார்க்கிறாள்.

சித்திராங்கி:—சுகுணை சொல்வது உண்மையாகத் தானிருக்க வேண்டுமென்று நினைக்கிறேன். ஆயினும் நானும் சென்று இரகசியமாக எல்லாவற்றையும் விசாரித்துக் கொண்டு வருகிறேன். தாங்கள் மனக்கிலேசத்தை அடைந்தவர்களாயிருப்பதால், தங்கள் அந்தப்புரத்திற்குச் சென்று சற்று சயனித்துக் கொள்ளுங்கள்.

மோகனை:—எனக்குத் தூக்கம் வரவில்லையடி. அந்தப் பாபி வந்த நாள் முதல் எனக்குத் தூக்கமேது? எனக்குத் தூக்கமும் வரவில்லை —ஒன்றுமில்லை.

சித்திராங்கி:—அப்படியெனில் ஓர் காரியம் செய்யுங்கள். இன்று பூர்ணசந்திரன் வெகு காந்தியுடன் பிரகாசிக்கிறான். இன்று உத்தியான வனம் வெகு ரமணீயமாயிருக்கும். ஆகையால் சற்று உலாவினால் மனதிற்குச் சமாதானமும் அமைதியும் உண்டாகும். தாங்கள் சற்று உலாவி விட்டு அந்தப்புரத்திற்கு வாருங்கள். நான் சென்று உண்மையை விசாரித்துக் கொண்டு அந்தப்புரத்திற்கு வந்து விடுகின்றேன்.

மோகனை:—சரி, நீ செல். நான் உலாவி வருகிறேன். (சித்திராங்கி செல்லல்)

மோகனை:—(உத்தியான வனத்தில் உலாவிக் கொண்டே தனக்குள்) அந்தப் பாபி யாரோ அறிகிலேனே! அவள் எதற்காக இவ்வாண் மனைக்கு வந்தாள்? என் இன்பங்களை அழிக்கவா? என் கணவர் இதயத்தைக் கொள்ளைகொண்ட அந்தப் பாபியை நான் என்ன செய்கிறேன் பார்! இவளைக் காட்டி

னும் நானென்ன அழகில் குறைந்தவளா? அப்படி யிருந்தும் அரசர் அவளிடத்தில் மயங்கி யிருக்கிறரே! ஆ! அவள் யாரோ மாயக்காரி! ஏதோ மருந்தோ மந்திரமோ போட்டு என் கணவரை வசீகரித்துக்கொண் டிருக்கிறள். அவள் வாழ்வெல்லாம் இன் னும் எத்தனை நாளென்று பார்க்கிறேன்! என்னுடைய பகை அவளை என்ன பாடு படுத்து மென்பதைப் பார்க்கிறேன்.—ஆ!— அதோ — அம்மேடையின் பேரில் — உட் கார்ந்திருப்பவள் யார்? யாரோ யௌவன ஸ்திரீயைப்போல் தோன்றுகிறதே! ஏதா வது வன தேவதையோ! அல்லது மோகி னியோ!......ஆ! அவள் அந்தப் பாபி கமல ரேகையோ! (சற்று உற்று நோக்கி) ஆ! அவள்தான்! அவள் எதற்காக இங்கு உட் கார்ந்திருக்கிறள்? இவ்விரவில் இவ்விடத் தில் அவளுக்கு என்ன வேலை? ஒருகால் என் கணவரைச் சந்தித்து உரையாடவோ? ஆ! இவளுடைய சூதுகளையறிய இதுதான் சமயம். நல்லவேளையாய் இவ்விடத்தில் மரங் கள் அடர்த்தியாயிருக்கின்றன. அவள் சமீ பத்திற் சென்று ஓர் மரத்தின் பின்னுலிருந்து நின்று என்ன நடக்கிறதென்பதைப் பார்க் கலாம்.

(சென்று ஓர் மரத்தின்பின் ஒளிந்துகொள்ளல்.)

கமலரேகை:—(புலம்புதல்) ஜகதீசுவரி! என்னை இக்கதிக்குள்ளாக்க வேண்டுமா? ஏற்கனவே எனக்கேற்பட்ட கஷ்டங்களும் அவமானமும் போதாதென்று என்னை இவ்வரசன் கையிற் சிக்கிக் கொள்ளும்படி செய்தாய்? தேவி! என்மீது உனக்குக் கிருபை இல்லையா? என் மீது கருணை கூர்ந்து என் துயர்களைக் களைய மாட்டாயா? ஐயோ! இவ்வரசன் இந்திராணி யை யொத்த உத்தமியை மனைவியாக அடைந்திருந்தும், காமம் தலைக்கேறி என்னை யேன் தன் மனைவியாக வேண்டுமென்று தொந்தரவு செய்கிறன்? இத்தனை நாட்க ளாய் என் குலகுரு வரவேண்டுமென்று ஓர் சாக்குச் சொல்லி அரசனை ஏமாற்றி விட் டேன்! ஆனல் எவ்வளவு காலம்தான் இப் படி ஏமாற்றமுடியும்? ஆனல் சந்திரவர்மர் வந்த பிறகு நான் எதற்காகக் கவலைப்பட வேண்டும்?—ஆ! சந்திரவர்மரே! ஏன் இன் னும் வரவில்லை? (சுற்றி முற்றிப் பார்த்தல்)

மோகன:—(ஒளிந்தபடியே தனக்குள்) இதென்ன? என் காதுகளையே நான் நம்ப முடியவில்லையே! நான் விழித்துக் கொண் டிருக்கிறேன அல்லது கனவு காண்கிறேன? நான் நினைத்ததெல்லாம் தவறு போலிருக்கி றதே!

கமலரேகை:—(தனக்குள்) ஆ! அதோ ஏதோ அரவம் கேட்கிறது. சந்திரவர்மர் தான் வரு கிறரோ? (சந்திரவர்மா பிரவேசித்தல்)

சந்திரவர்மா:—கமலரேகா! தைரியத்தைக் கை விடாதே! உன் கஷ்டங்களெல்லாம் முடியுங் காலம் சமீபித்து விட்டது. நீ என்ன தந்திர மாய் அரசரை ஏமாற்றி விட்டாய்! இனி நீ ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம். நான் சொல் வதை அமைதியுடன் கேள். ஆச்சரியத்தா லாவது சந்தோஷ மிகுதியாலாவது கலங் காதே! உன் காதலன் இராஜசிம்மனும் இவ்வரண்மனைக்கு வந்துவிட்டான்.

கமலரேகை:—ஆ! அப்படியா? என்ன அற்பு தம்! ஹே சந்திரவர்மரே! நான் இங்கிருப்பது அவருக்குத் தெரியுமோ?

சந்திரவர்மா:—எல்லாம் தெரியும். அவன் உன்னை எவ்வளவு மிகுதியாகக் காதலிக் கின்றனென்பது அவன் இங்கு தோன்றிய விதத்தினின்றே நன்கு விளங்கிற்று! உன்

காதலனை ஓர் காரியத்திற்காக வேறு ஊரு க்கு அனுப்பியிருக்கிறேன். இன்னும் ஒரு மாதத்திற்குள் அவன் வந்து விடுவான். அது வரை நீ தைரியமாயிருக்கவேண்டும்.

கமலரேகை:—தாங்களிருக்கையில் நான் இந்த அரசனைக்கண்டு எதற்காகப் பயப்படவேண் டும்?

சந்திரவர்மா:—மெத்த சந்தோஷம். உன் காத லன்வந்த சங்கதியைத் தெரிவித்து உனக்குத் தைரியத்தைக் கொடுக்கத்தான் உன்னை இங்கு வரச்சொன்னேன். ஆனால் நாளை முதல் நீ விசேஷமான சந்தோஷக் குறிக ளைக் காண்பிக்காதே! எப்பொழுதும் போல வே நடந்துகொள்ளவேண்டும்! (திடுக்கிட்டு) ஆ! —அதோ!—யார்?—அம்மரத்தின் பின் னால்—இப்பொழுது காற்றில் புடவையோ என்னவோ மரங்களுக்கிடையில்-பறந்ததே! யார் அது? (பயத்துடன்) நாம் பேசுவதை யாரோ கவனிக்கிறார்கள் போலிருக்கிறதே! (மரத்தின் பின் சென்று பார்க்க, மோகனா வாயிருக்கக்கண்டு பிரமித்தல். மோகனா மரத் தின் பின்னிருந்து வரல்)

கமலரேகை:—ஆ! யார்! மகாராணியா! (பிர மித்தல்)

மோகனா:—நீங்களிருவரும் பயப்படவேண் டாம்! நான் உங்கள் சத்துருவல்லள். உங்க ளுடைய க்ஷேமத்தையே கருதுகிறவள். நீங்கள் பிரமிக்கவேண்டாம். நான் எப்படி இங்கு வந்தேனென்பதையும் சொல்லி விடுகிறேன். நீங்கள் பேசுவதைத் தப்பாக இருந்து கவனிக்க நான் வந்தவளல்லள்! கமலரேகா! நான் உன்மீது பொறாமை கொண்டு உனக்குத் தீங்கு செய்ய உத்தே சித்திருந்தேன்! நீ என் கணவரை மயக்கி விட்டாயென்றும், ஓர் மாயக்காரியென்றும், சண்டாளியென்றும், என் விரோதியென் றும் உன்னைப் பலவாறு கடிந்து பேசினேன். ஏதோ தற்செயலாய் உலாவ வந்தபொழுது நீ இங்கிருப்பதைப் பார்த்து இம்மரத்தின் பின்னொளிந்து நீ புலம்பினதைக்கேட்டேன். அப்படிக் கேட்டதால் உன் விருத்தாந்தம் எனக்குப் பூராவாகத் தெரியாவிடினும், நீ ஒரு பாபமுமறியாதவளென்று எனக்குத் தெரியவந்தது. கமலரேகா! நீ உன் காதல ரையடைய என்னாலாகும் உதவியைச் செய்ய நான் தயாராயிருக்கிறேன்! உன்னை என் கணவருடைய கையினின்றும் தப்புவிக்க நான் என்ன வேண்டுமென்றாலும் செய் வேன்! ஆகையால் உன் கஷ்டங்களை எல் லாம் என்னிடம் பயமின்றிச் சொல். நீங்க ளிருவரும் ஒன்றுக்கும் பயப்படவேண்டாம்.

சந்திரவர்மா:—மகாராணியே! இவ்வரண்மனை யில் தங்களுடைய சிநேகமும் உதவியும் எங்களுக்குக் கிடைக்குமென்று நான் கனவி லும் நினைக்கவில்லை. இதுவும் அதிர்ஷ்டவசம் தான். தங்களிடத்தில் உண்மையைச் சொல்லி விடுகிறேன். கமலரேகையைத் தேடி அவளை அவளது காதலனான கோசல தேசத்து இளவரசன் இராஜசிம்மனிடம் சேர்ப்பிப்பதற்காகப் போட்டுக் கொண்டது தான் இந்த வேடமல்லாது நான் உண்மை யில் ஓர் துறவியல்ல. நல்ல வேளையாய் இவ ளுடைய காதலனையும் நான் சந்தித்து விட் டேன். இன்னும் ஒரு மாதத்திற்குள்ளா கவே எப்படியும் கமலரேகையை இவ்விடத்தி லிருந்து அழைத்துச் சென்று விடுவேன். அதுவரை தாங்கள் கமலரேகையைத் தங் களுடைய ஆதரணையில் வைத்துக்கொண்டு சமயத்திற் கேற்ப எங்களுக்குதவிபுரிய வேண்டுமாய்ப் பிரார்த்திக்கிறேன்.

கமலரேகை:—மகாராணி! சிறு வயதிலேயே அன்னையை யிழந்த எனக்குத் தங்களைக் கண்டதும் ஓர் ஆனந்தம் பெருகுகிறதம்மா! என்னைத் தங்கள் புத்திரியாக பாவித்து என்னை ஆதரிக்கவேண்டும்.

மோகனு :—(கமலரேகையை அணைத்துக் கொண்டு) கமலரேகா ! என் கண்ணே ! உன்னைக் கண்டோர் ஏன் உன் பேரில் காதல் கொள்ளமாட்டார்கள் ? தேவலோக ரம்பையைப் போல் விளங்கும் உன்னை என் புத்திரி என்றழைக்க நான் கொடுத்து வைக்கவேண்டுமே ! சற்றுமுன் நான் மதியின்றி அநியாயமாய் உன்னைத் திட்டினேன். உன் உண்மையான மனுேபாவம் இப்பொழுதன்றோ தெரியவந்தது. என் செல்வமே ! நீ என்னுடன் என் அந்தப்புரத்துக்கு வா. நீ அரண்மனையைவிட்டுச் செல்லும்வரை என் அந்தப்புரத்திலேயே இருக்கவேண்டும். பிறகு நான் அடிக்கடி உன் நகருக்கு வந்து உன்னைப் பார்த்து ஆனந்திப்பேனென்பது திண்ணம். (சந்திரவர்மாவைப் பார்த்து சிரித்துக் கொண்டே) மகரிஷி! கமலரேகைக்கு இன்னும் ஏதாவது உபதேசம் பாக்கி இருக்கிறதோ ?

சந்திரவர்மா :—(சிரித்துக் கொண்டு) இன்றைக்கு அநேகமாய் உபதேசம் சம்பூர்ணமாய் விட்டது. இன்னும் கொஞ்சம் தான் பாக்கி. அதையும் செய்து விடுகிறேன். (கமலரேகையைப் பார்த்து) கமலரேகா ! ஹே ! ராஜகுமாரி ! நீ உன் காதலனை அடையும் வரை

"மாதவர்கள் அடி பேணி
மற்றவர்கள் விதிமுறையே
யோதிய நல் வழிவழுவா
தூபவசித்திங்கு உன்னுடைய
காதலனை யெப்போழ்தும்
கருத்திடை வைத்துயர் தவம்செய்
ஈதுனக்குக் கர்மங்காண்
என்தும் என் கண்மணியே !"

(கம்பராமாயணம்)

(மோகனுவைப்பார்த்து) மகாராணி ! உபதேசம் சம்பூர்ணமாய் விட்டது.

மோகனு:—கமலா ! இனி நாம் செல்வோம் வா. இப்பொழுது நள்ளிரவாயிருக்கும் போலிருக்கிறதே ! யாராவது இச்சமயத்தில் நம் சுவாமியாரை இங்கு கண்டால் அவர்பேரில் சந்தேகமுண்டாகும்! ஓர் பெரிய மகரிஷிக்கு இரண்டு பெண்மணிகளுடன்—நள்ளிரவில்—நிலா வெளிச்சத்தில்— அரண்மனை உத்தியான வனத்தில்—என்ன வேலை ? ஆகையால் நாம் நம் அந்தப்புரம் செல்வோம் வா. (சந்திரவர்மாவைப் பார்த்து) சுவாமின் ! தாங்கள் தங்களுடைய ஆசிரமத்திற்கோ அல்லது பூஜாக்கிரகத்திற்கோ சென்று உலகப்பற்றையெல்லாம் துறந்துவிட்டுப் பகவத் தியானம் செய்கிறீர்களா ? (நகைத்தல்)

சந்திரவர்மா:—(நகைத்துக்கொண்டே) ஹே, பெண்மணிகளே ! தீர்க்க சுமங்கலிபவ ! சர்வ வியாபியாயும், அனந்தகுண கல்யாணனுயும், எங்கும் ஏக ஒளியாய் வாக்கு மனதிற் கெட்டாது சமயாதீதமாயும் விளங்கும் எல்லையற்ற அகண்டாகார ஸ்வரூபியாகிய சர்வேசுவரன் உங்களுக்கு அனுக்கிரகம் செய்வாராக ! மங்களானிபவந்து !

(எல்லோரும் சிரித்துக்கொண்டே பிரிதல்)

(காட்சி முடிகிறது)

# நகர வாழ்க்கை.

(ஸ்ரீமான் கா. சி. சிவசங்கர முதலியார்.)

சிந்தாமணி வால்யம் IV எண்கள் 9—10ல் 'நகரவாழ்க்கை' என்பது பற்றி ஸ்ரீமதி சிவப்பிரியையம்மையார் எழுதிய கட்டுரையைப் படித்தபோது என் கருத்தை யாதரிக்க இக்காலத்திலும் ஒரு நல்லிசைப் புலமை மெல்லியரார் தோன்றியிருப்பதை நோக்கி எனக்கு அளவிலா மகிழ்ச்சி பொங்குகிறது. இத்தகைய அன்னையர் பலர் முன் வந்து சொற் பொழிவுகளாலும் நூல் வெளியீடுகளாலும் ஆண்மக்களின் உள்ளத்தையும் பெண்மக்களின் உள்ளத்தையும் உண்மைக் கல்வியிலும் உண்மை யொழுக்கத்திலும் உண்மை இன்பத்திலும் திருப்ப வேண்டும். பெண்மக்கள் எதை உயர்வென்றோ தாழ்வென்றோ சொல்லுகிறார்களோ அதைத்தான் ஆண்மக்கள் விடாது பற்றுகின்றனர். புதிய போலி நாகரிகப் பெண்மக்கள் தமது கணவரை உத்தியோகஞ் செய்து காப்பி,டீ,பீர், ஒயின் குடித்து, சட்டை தொப்பி காற் கவசம் அணிந்து மோட்டார்கார் முதலிய நேர்க்களமைத்துக்கொண்டு நாடகம் சர்க்கஸ் முதலிய காட்சிசாலைகளுக்குப் போய் அவைகளால் நுகரும் இன்பமே பிறப்பின் பயன் என்று தம்பால் தமதுளப்பாங்கால் திருப்புவதாலேயே ஆண்மக்களும் போலி நாகரிகப் புது மது நுகர்வதில் ஊன்றி விட்டார்கள்.

நாட்டுப் புறத்தில் பயிர்த்தொழில் செய்யும் ஒரு சிறிய ஏழைக்குக்கூட ஒரு சொந்தமான குடிசையிருக்கும். இரண்டு மூன்று அல்லது ஆறு மாதத்திற்குக் குறையாமல் வேண்டிய நெல்லோ, கம்போ, கேழ்வரகோ, தினையோ, சோளமோ வீட்டில் இருக்கும். நகரத்தில் மாதத்திற்கு ஆயிரம் பெறும் மகாராஜனுக்குக் கூட சம்பளம் பெற்ற பத்து நாளைக்கெல்லாம் கைப் பொருள் நீங்கிக் கடன் வாங்கும் நிலையுண்டாகின்றது. வருவாய் ஏற ஏற உயர்ந்த உணவு, உயர்ந்த உடை, உயர்ந்த வாகனம், உயர்ந்த மாடி, உயர்ந்த மரியாதை வேண்டியிருக்கின்றது. திடீரென்று உத்தியோகம் போனால் என் செய்வது என்று தெரியாது உள்ளங் கலங்கி இனிய மனைவி மக்களை நீங்கி வேற்றார்களுக்கேகி எங்கே உத்தியோகம் கிடைக்கும், எங்கே உணவு கிடைக்குமென்றுதேடி அலுத்தபோது ஆறோ குளமோ அடைந்து உட்கார்ந்து ஏங்குகின்றார் பலர். 'ஆற்றங்கரையின் மாமு மரசறிய வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே—ஏற்றம் உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர் பழுதுண்டு வேறோர்'பணிக்கு' என்ற ஔவையார் வாக்கை எடுத்துக் காட்டி ஆண்மக்களை பயிர்த்தொழில் செய்யத் திருப்பவேண்டும். இல்லற முறை, சிக்கனம், உடலியல் நூல், சுகாதாரம், மருந்து, உள்ள நூல் முதலிய உண்மைக் கல்வியைக் கற்க ஆண்மக்களையும் பெண்மக்களையும் தூண்டவேண்டும். உடம்பைத் திறந்து கொண்டிருக்கும் மிருகங்களும் பறவைகளும் பருவங்கண்டு இன்பம் நுகர்வதையும் செயற்கையுடையால் உடம்பை மூடுவதால் மக்கள் இடைவிடாது இன்ப நுகர்வதையும் அதனால் வரும் நோய், மூப்பு,மரணம், மெலிந்த பிள்ளைப்பேறு முதலிய கேடுகளையும் எடுத்து மக்களுக்குக் காட்டி செயற்கை அலங்காரத்தை நீக்க வேண்டும். உடம்பை முற்றிலும் மூடுவது சூரிய வொளியையும் காற்றையும் உடம்பிற் படவொட்டாது தடுத்து உடம்பை நோய்க்கிறையாக்குகிறது என்று தெரிவிக்க வேண்டும். சென்னையில் மகளிரைக் கூர்ந்து நோக்கும் பழக்கமுடைய ஆடவர் மலையாளத்து

மகளிர் நடுவில் சிலகாலம் வாழ்ந்து வந்தால் அவர்கள் குணம் மாறிவிடும். கெட்ட பொருளேயும் மூடிவைத்தால் அதற்கு மனதை யிழுக்கும் செயல் உண்டாகிறது. உயர்ந்த பொருளேயும் திறந்து வைத்துவிட்டால் அதை யாரும் கவனிப்பதில்லை. கூடியவரை ஆட்வரும் மகளிரும் சூரிய வொளியும் காற்றும் பெறும்படி உடம்பை மெல்லிய சிறு போர்வையால் மறைப்பதே தகுந்த உடை. பல கணக்கில்லாத நோய்கள் மலிந்து இளமையிற் சாவு அதிகப் பட்டிருக்கும் இக்காலத்தில் இவ்வல்லலை யொழிக்க ஒரு முறையிருக்கிறது. அதுவும் ஔவையாராகிய பெண்பாலால் அருளிச் செய்யப் பெற்ற குறளே. அதிற் கூறியபடி ஆண்களும் பெண்களும் வாயுதாரணே செய்வார்களானல் நோயற்ற மெய்யும் நீடித்த ஆயுளும் நிலைபெற்ற இளமையும் பெறுவார்கள் என்பதை யெல்லாம் செய்தி, நூல்கள்மூலமாயும் விளக்கவேண்டும். இவையெல்லாம் முதலில் பெண்பாலரால்தான் கையாளப்பெறவேண்டும்.

# புனர் ஜன்மம்.

(ஒரு சிறு கதை)

(ஸ்ரீமான் வ. கிருஷ்ணஸ்வாமி சர்மா)

"பிராணேசா! இச்சங்கடத்திற்கு என் செய்வது? ஏதோ எனது பாட்டனரும், உமது பாட்டானரும் சண்டையிட்டுக் கொண்டனரென்றல் அதனை இன்னும் எனது பிதா மறக்காமல் உங்கள் வர்க்கத்தையே தூற்றுதலேனே? ஆ! 'வீரராஜனது குடும்பத்தையே சுட்டெரித்தாலும் என் மனம் திருப்தியடையாது!' என்று எனது பிதா பலமுறை கூறியிருக்கிறாரே—" என்று எங்கினள் மங்கையர்க்கரசி போன்ற மங்கை யொருத்தி.

மினு மினு வென்று மின்னும் மேனியும், கம்பீரமான தோற்றமும், அதி அழகான முக மண்டலமும் அமையப் பெற்றிருந்த வாலிபனெருவன் தனது காதலி இங்ஙனங் கூறியதைக் கேட்டு வருத்தமடைந்தவனுய், "என் கண்மணி! ஏன் உனது பிதாவை மட்டும் நிந்திக்கிருய்? எனது பிதாவும் அவ்வளவு பிடிவாதக்காரர்தான். ஆனலும் எனக்கு இல்லக்கிழத்தியாக நீ ஆவதில் அவருக்கு உள்ளூர ஆனந்தமே உண்டாகும். ஆகவே நமது விவாகத்திற்கு அவரது அனுமதி பெற்று விடலாம். ஆனல் உனது தந்தையான தவளசேகரர் ஒரு நாளும் சம்மதிக்க மாட்டாரென்று எண்ணுகிறேன்" என்று பதிலளித்தான்.

"ஆம்! அது சுத்த முரட்டுத்தனமே. ஏதோ நிலவிஷயமாக வந்த சண்டை நமது பாட்டன் காலத்தோடு போயும் இன்னும் அதையே காரணமாக வைத்துக்கொண்டு உங்கள் குடும்பத்தோடு எனது தகப்பனர் தீராப்பகை காட்டுவது முரட்டுத்தனமே. ஆகா! நாமிருவரும் காதலிப்பதை—என்?—சந்தித்துப் பேசுவதையேனும் எனது தந்தை அறிவரேல் அனர்த்தமே விளேயும். இத்தன்மை வாய்ந்தவரா நமது விவாகத்திற்கு அனுமதியளிக்கப் போகிருர்?" என்று வகையேது மறியாது வாடினள் அவ்வளேக் கையாள்.

"அவரது சம்மதியைப் பெற தந்திர மொன்றும் செய்தல் முடியாதோ?" என்று கேட்டான் கமலநாதன்.

"ஆம்! ஒன்று செய்யலாம். எனக்கு இப்பொழுதுதான் அந்த யோசனை உண்டாயிற்று" என்று கூறி,புஷ்பவல்லி தனது காதலன் காதில் ஏதோ ஓதினாள்.

அதனைக் கேட்ட கமலநாதன் அச்சமடைந்தவனாய், "அந்தோ! கண்மணி! அப்படிச் செய்தல் வேண்டாம்" இதை உன் தந்தை சகியார்" என்று கூறினான்.

புஷ்பவல்லியோ, "இல்லை! இல்லை! நாம் ஒன்றுகூட அதுவே தக்க உபாயம்" என்று பின்னும் பல தடவை உறுத்திக்கூற கமலநாதனும் 'சரி' என்று கூறினான்.

* * * *

"என் வயிற்றிற் பிறக்கத் தக்கவளல்ல நீ! ஏ! பேதாய்! அக்குடும்பத்திற்கும் நமக்குமுள்ள வைரத்தை நீ அறியாய். உன்னைக் குழி வெட்டிப் புதைத்தாலும் புதைப்பேனே தவிர அந்தக் கமலநாதனுக்கு உன்னைக் கட்டிக்கொடுக்கவே மாட்டேன். பேஷ்! இரண்டு புறுக்களும் இரகசியமாய்ச் சந்தித்து விஷயத்தை இவ்வளவு தூரம் கொண்டுவந்து விட்டனவே" என்று கோபச் சிரிப்பொன்றைச் சிரித்து சீரியும் விழுந்தார் தவளசேகரர்.

"அப்பா! நான் கூறிவதைச் சற்று கவ..." என்று புஷ்பவல்லி பூராவும் கூறுவதற்குள் தவளசேகரர் அளவுக்கு மீறி ஆத்திரங் கொண்டவராய், "பேஷ்! தகப்பனுக்குப் பிள்ளைகள் புத்தி கூறுங்காலமன்றோ இது. சட்! பேசாதே. நீ கூறுவதெதையும் நான் கவனிக்க வேண்டுவதில்லை. என் முன் நில்லாதே" என்று கூறினார்.

"அப்பா! தாயற்ற என்னைத் தடபுடலாய் ஏசுதலுந் தகுமோ? ஆகட்டும்! உமது இஷ்டப்படியே எல்லாம் ஆகுக! என்னைக் குழி வெட்டிப் புதைக்கும் சிரமம் உமக்கு வேண்டாம்" என்று கண்களில் நீர் ததும்பக் கூறிவிட்டுச் சரேலென் அவ்வறையை விட்டு அகன்றாள் அவ்வனிதை. அவ்வறையை விட்டு நீங்கும் போது அவள் அணிந்திருந்த பச்சை வர்ணப் புடவை தவளசேகரர் மீது சற்றே பட்டது.

* * * *

உல்லாசகரமான மாலை. தென்றல் காற்று அதி சுகமாய் வீசுகிறது. அந்நகர் நதியின் பாலத்தில் ஒன்றிரண்டு ஜனங்களே நடமாடிக் கொண்டிருக்கின்றனர். அப்பொழுது ஒரு வனிதை பாலத்தின் கைப்பிடிச்சுவரில் கைகளை யூன்றிக்கொண்டு ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தவள், "ஆம்! அது தான் கடைசி முடிவு" என்று அடிக்கடி கூறிவிட்டு திடீரென்று நதியின் வெள்ளப் பிரவாகத்தில் 'தொபீல்' என்று விழுந்து விட்டாள்.

அந்நதியில் வெள்ளம் வருங்காலத்தில் அதில் வீழ்ந்தோர் அரிதினுமரிது. அச்சமயம் கண்ணுக் கெட்டியவரையில் ஒருவரையுங்காணோம். ஆனால் நாம் கூறிய பெண்பால் ஆற்றில் விழுந்ததைக் கவனித்த இடையன் ஒருவன் உதவிக்காகக் கூச்சல் போட்டும் ஒருவரும் வாராததைக் கண்டு போலீஸ் ஸ்டேஷனுக்கு ஓடினான்.

போலீஸ் வீரர் பலர் ஓடி வந்து அவள் கைப்பிடிச் சுவரின் மீது வைத்திருந்த புத்தகத்தைப் பார்த்து, அதினின்றும் விழுந்தவள் தவளசேகரரது அருந்தவப் புதல்வியான புஷ்பவல்லி என்று உணர்ந்தனர்.

இதற்குள் விழுந்தவளை ஆற்றில் தேடச் சென்ற செம்படவர் பலர் ஒரு வித பலனுமில்லாது கரைசேர்ந்தனர். ஆனால் அவர்களுள் சற்று தூரம் சென்ற ஒருவன் மட்டும் கரையோரத்தில் ஒரு சிறிய குச்சியில் அகப்பட்டுத் தொங்கிக் கொண்டிருந்த சிறிய பச்சைத் துணி யொன்றைக் காட்டினான்.

அதனைக் கண்ட இடையன், "அது அம் மாது அணிந்திருந்த புடவையின் ஒரு பாகமா யிருக்கவேண்டும். ஏனெனில் பச்சை நிறப் புடவை யொன்றையே அவள் தரித்திருக்கக் கண்டேன்" என்று கூறினன்.

யாது செய்தும் என்ன பயன்? எவராலும் சவத்தைக்கூடக் கண்டுபிடிக்க முடியவில்லை. ஊரெங்கும் அதே பேச்சாயிருந்தது.

*　　*　　*　　*

" தந்தையே!

எனது வாழ்நாளின் சுகத்தைக் கோராத தாங்கள் இருக்கும் இவ்வுலகினில் எனக்கு ஏதுங் காரியமில்லை. தாங்கள் குழி வெட்ட வேண்டிய சிரமங்கூடப் படவேண்டாம். யான் பரந்து செல்லும் நதிப்பிரவாகத்தின் துணையைக் கொள்ளுகிறேன்.

அன்னையை இழந்ததோடு தங்கள் அன்பையு மிழந்த,

" புஷ்பவல்லி "

என்று எழுதப்பட்டிருந்த கடிதத்தை ஒரு கையில் வைத்துக்கொண்டே பலவாறு பரித வித்தார் தவளசேகரர்.

" ஆகா! என்ன ஆத்திரப்பட்டேன்! எனது குணமணியான தவமணியைத் துலைத்தேனே! ஆ! எதற்கும் நானே காரணம். நகரத்தாரெல் லோரும் நல்லோனெனக் கொண்டாடும் கமல நாதனை அவள் காதலனாகத் தேர்ந்தெடுத்தது எவ்வளவோ சிலாக்கிய மென்பதை அப்போது அறியாமற் போனேனே! இனி என்ன பயன்? சாஸ்வதியே போன்ற அறிவும், இரதியே போன்ற அழகும், அன்னமே போன்ற நடை யும் கொண்டிருந்த பொக்கிஷத்தைத் துலைத்த பாபி நான் இன்னும் உயிரோடிருப்பதேனோ?' என்று பலவிதமாய்க் கூறி விம்மினர் ஆத்திரத் தால் ஆபத்தைத் தேடிக்கொண்ட நமது சேகரர்.

*　　*　　*　　*

நாட்கள் சென்றன, மாதங்களும் கழிந்தன. தவளசேகரர் துரும்பாய் இளைத்துப் போய்ப் படுக்கையில் படுத்திருக்கிறார். "ஆ! புஷ்பா! இப்போதேனும் நீ உயிர் பெற்று வந்தாலும் க்ஷணமே உன்னை உன் காதலனுக்கு அளித் திடுவேனே! நீயும் வருவாயோ?" என்று கத றிக் கொண்டிருந்தவர் திடீரென்று யாரோ தம் பக்கத்தில் இருப்பதை உணர்ந்து அப்பக்கம் திரும்பினர்.

"ஆ! நீயா! நீ தானு! எனது தவந்தானு! இல்லை! இல்லை!—ஒருகால் ஆவேசமோ— நீயே புஷ்பவல்லியாயிருப்பின்—ஆகா! இல்லை இருக்காது—என்! நீ சாகவில்லை போலிருக் கிறது. சே! சே! நீ அவளது ஆவேசந்தான்" என்று பக்கத்தில் இருந்த உருவத்தைப் பார்த் துச் சொன்னர் தவளசேகரர்.

"அப்பா! நான் ஆவேசமுமில்லை ஒன்று மில்லை, உமது புஷ்பவல்லிதான்!" என்று இனிய குரலில் அவ்வுருவங் கூறக்கேட்ட தவளசேகரர் ஒன்றையும் யோசிக்காது அவளை உடனே கட்டியணைத்துக் கொண்டு பூரிப்படைந்தார்.

"அப்பா! நீங்கள் என் மனம் போல் இனி நடக்கத் தடையில்லையே? என் கணவனையும் என்னையும் மன்னிப்பீர்களா?" என்று உசாவி னள் புனர் ஜன்மம் பெற்ற புஷ்பவல்லி.

"இனித் தடையுமுண்டோ! நீ உயிர் பெற்று வந்தது மின்றி எனது உயிரையுங்காத்த உன க்கு மாறியுங் கூறுவேனோ?" என்று ஆனந்தக் கண்ணீர் வழியப் புகன்றார் தவளசேகரர்.

"அது கிடக்கட்டும்! அப்பா! நான் இறந்தது எப்படி? பிழைத்தது எவ்விதம்? இத்துணை நாட்கள் எங்கிருந்தேன்? இவற்றைப்பற்றி நீங்கள் என் என்னைக் கேட்கவில்லை?" என்று மெல்லெனக் கேட்டாள் அம்மென்மொழியாள்.

"அது பற்றி ஆவதென்ன? நீ பிழைத்து வந்ததே போதும்" என்று கூறி மற்றுமோர் முறை தமது புத்திரியை ஆலிங்கனம் செய்து கொண்ட தவளசேகரர் அளவற்ற ஆனந்த மடைந்தார்.

* * *

"கண்மணி! உனது யுக்தி தந்திரத்தா லன்றோ நமக்கு விவாகம் நேரிட்டது. ஆ! நீ பிறர் உன்னை இன்னாரென அறியப் புத்தக மொன்றைப் பாலத்தின் கைப்பிடிச் சுவற்றில் வைத்துவிட்டு, ஒரு இடையன் மட்டும் உன்னைப் பார்க்கும்போது நதியில் வீழ்ந்ததும், பாலத்தினடியில் பதுங்கியிருந்த நான் உன்னைத் தட்சணமே ஏந்திக் கரை சேர்த்ததும் எல்லாம் உனது யோசனையாலன்றோ? அங்ஙனம் நீ செய்திராவிட்டால் உனது பிதா நீ இறந்துபோனதாக எண்ணியிருக்கவும் மாட்டார். நமது விவாகமுந் தடைப்பட்டுப் போயிருக்கும்" என்றான் கமலநாதன்.

"நாதா! என்னால் ஒன்றுமில்லை. எல்லாம் தங்களது ஆசீர்வாதத்தால்தான். தனக்குகந்த கணவனை மணந்து வாழ்வதிலும் வேறு வாழ்க்கை நலம் பெண்மக்கட்குளதோ! என் தாய் இருந்திருப்பின் என் விவாக விஷயத்தில் எனக்கு மாறுதலாக நடப்பாளோ? நற்காரியத்திற்கு ஒரு சிறு தவறு செய்தால் அதனால் கடவுள் கோபிக்க மாட்டானன்றோ? அன்றியும் நீங்கள் அன்று அவ்வளவு சாமர்த்தியமாய் என்னைக் காப்பாற்றியிராவிடில்—அப்பா! கண்டிப்பாய் அவ்வெள்ளத்திற்கன்றோ இரையாயிருப்பேன். இவ்வளவிற்கும் உங்கள் மெய்யன்பே காரணம்" என்று பணிவாய்க் கூறினாள் புஷ்பவல்லி.

"மனிதர்க்கேற்ற மந்திரி மாதர்களே! ஆகவே நீ அவையடக்கமாகப் பேசினும் உனது புத்தித் திறமையை யான் மெச்சாமலிருக்க முடியாது" என்று கூறிப் புன்னகை புரிந்தான் கமலநாதன்.

# பிரஹ்லாத விஜயம்.

(ஸ்ரீமான் K. நடராஜய்யர்)

(எல்லா உரிமைகளும் ஆசிரியருடையது.)

(288-ம் பக்கத் தொடர்ச்சி.)

## பத்தாம் அத்தியாயம்.

இவ்விதம் அசுரப்பாதகர்களால் உலகம் அழிக்கப்படுவதைத் தேவர்கள் கண்டு, இனித் தங்களுக்கும் ஆபத்து வருமென்று பயந்து தேவலோகத்தை விட்டு மாற்றுருவத்துடன் ஓடி மலைக் குகைகளிலும் காடுகளிலும் ஒளிந்து கொண்டார்கள். தேவலோகமானது சந்திரனில்லாத வானம் போலும், தாமரையில்லாத் தடாகம் போலும், நாயகனில்லாத காரிகையின் அழகு போலும், மடக்கொடியில்லா மனை போலும் தேவர்களில்லாமல் பாழடைந்து மூதேவிக்குறைவிடமாக விளங்கிற்று.

சக்கரவர்த்தி ஹிரண்யாக்ஷனுக்கு உத்தரக் கிரியைகளைச் செய்து முடித்துவிட்டு, அந்தப் புரத்தையடைந்து அங்கு துக்கத்தினால் பிரலாபித்துக்கொண்டிருக்கும் தன் தாயாரான திதி தேவியையும், சகோதரன் மனைவி ருஷாபானு என்பவளையும், அவள் புத்திரர்களான சகுனி, சம்பரன், திருஷ்டன், பூதசந்தாபனன், விருகன், காலநாபன், மகாநாபன், ஹரிச்மச்ரு, உத்கசன் என்பவர்களையும் அவர்களுக்கு ஆறுதலான வார்த்தைகளைச் சொல்லிச் சமாதானப்படுத்தினர்.

"அம்மணி! சூரர்கள் சத்துருக்களை எதிர்த்து யுத்தம் செய்து அவர்களைக் கொல்வதும், அவர்களால் கொல்லப்படுவதும் சகஜமானது. யுத்த களத்தில் சத்துருவினால் கொல்லப்பட்டவன் வீர சொர்க்கத்தை அடைகிறான். உலகத்தில் ஜனித்த ஒவ்வொரு பிராணிக்கும் மரணம் நிச்சயம். இராக்காலத்தில் சத்திரத்தில் தங்கியிருக்கும் பல பிரயாணிகள் காலையில் தனித் தனியாய்ப் பிரிந்து போவதைப்போல, இவ்வுலகமாகிற சத்திரத்தில் கர்மசம்பந்தத்தினால் தாயென்றும், தகப்பனென்றும், மனைவியென்றும், புருஷனென்றும், பிள்ளையென்றும், பந்துக்களென்றும் சேர்ந்திருப்பவர்கள் தங்கள் பிராரப்தவினையின்படி பிரிந்துபோவதில் ஆச்சரியமொன்றுமில்லை. சர்வசாதாரணமான இவ்விஷயத்தைக் குறித்து நாம் துக்கப்படுவதே முட்டாள்தனம். ஆத்மா ஜனனமரணமில்லாதவனும், சுத்தனும், எங்கும் நிறைந்தவனும், சர்வக்ஞனும் (அதாவது எல்லாவற்றையுமறிந்தவனும்) தேகத்தைக் காட்டிலும் வேறாகவும், ஜோதிஸ்வரூபனும் இருக்கிறான். இப்படிப்பட்ட ஆத்மா, தன்னுடைய மாயையினாலே சத்துவம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணரூபங்களான தேகங்களைச் சிருஷ்டித்துக் கொண்டு, தான் அதில் வசிக்கின்றான். ஜலம் காற்றினால் அலைக்கப்படும்போது அதில் பிரதிபலிக்கும் விருட்சங்கள் அசைவதுபோலவும், கண் சுழலும்போது பூமியே சுற்றுவது போலவும் காணப்படுகிறதல்லவா? அதைப்போல சத்துவம் முதலான குணங்களினால் மனது கலக்கத்தை அடையும்போது ஆத்மாவும் விகாரத்தையுடையவன்போல் காணப்படுகிறான். அந்த ஆத்மாவுக்கு தேகத்திலே நான் மனுஷ்யன், சகலமும் எனது தான், சுகமுள்ளவன் என்ற அபிமானம் உண்டாவதுதான் (அக்ஞானம் அதாவது) புத்தியில்லாமை என்று சொல்லப்படுகிறது. அந்த அக்ஞானத்திலிருந்து பிரியமான வஸ்துக்களோடு சேர்க்கையும், அதனால் கர்மமும், கர்மத்தினால் பலவித யோனிகளிலும் ஜனனமும், பிரியமான வஸ்துக்களைப் பிரியும்போது துக்கமும், மரணமும் உண்டாகிறது. இதற்கு உதாரணமாக முன் காலத்தில் நடந்த ஒரு கதையைச் சொல்லுகிறேன் கேளுங்கள்! 'உசீநரமென்னும் தேசத்தில் பிரசித்திபெற்ற சுயக்ஞன் என்றொரு அரசனிருந்தான். அவன் சத்துருக்களால் யுத்தத்தில் கொல்லப்பட்டான். சத்துருக்களின் பாணங்களினால் மார்பு பிளக்கப்பட்டு, சரீரமுழுவதும் ரத்தத்தினால் பூசப்பட்டு, பயங்கரமான ரூபத்துடன், தலைமயிர்களை விரித்துக்கொண்டு, யுத்த பூமியில் விழுந்து கிடந்த அந்த அரசனை அவனுடைய மனைவிகளெல்லாரும் சூழ்ந்து கொண்டு, தாங்கமுடியாத சோகத்துடன் பல விதமாகப் பிரலாபித்தார்கள். அவர்கள் அழுது கொண்டிருக்கும்போதே சூரியன் அஸ்தமனத்தை அடைந்தான். பிரேதத்துக்கு தகனம் முதலியன செய்யாமல், அதை மடியில் வைத்துக்கொண்டு அவர்கள் பிரலாபித்துக் கொண்டிருப்பதை அறிந்த யமதர்மராஜன் தானே ஒரு பாலனுருவத்துடன் அங்கு வந்து அவர்களுக்குச் சமாதானம் சொல்ல வாரம்பித்தார். "பெண்மணிகளே! உலகத்தில் ஜனித்த பிராணிகளெல்லாம் மரிப்பது நிச்சயமென்பதை நீங்கள் நன்றாயறிந்திருந்தும் இவ்விதம் துக்கப்படுவது ஆச்சரியமாயிருக்கிறது. மனுஷ்யன் எங்கிருந்து வந்தானோ அந்த இடத்தையே திரும்பவும் அடைகிறான். அதைக் குறித்து நீங்கள் வருத்தப்படுவதினால் என்ன பிரயோஜனம்? நாம் கர்ப்பத்திலிருக்கும்போது யாரால் ரட்சிக்கப்படுகிறோமோ அந்த பகவானே நம்மை எங்கும் ரட்சிக்கிறார். அவரே உலகத்தை சிருஷ்டிக்கிறவராகவும், ரட்சிக்கிறவராகவும், சங்கரிக்கிறவராகவுமிருக்கிறார். வீட்டில் தாயார், தகப்பனர் முதலான பந்துக்களினால் நன்றாகப்

பாதுகாக்கப்பட்டாலும், பகவானுடைய கடா ட்சமில்லாதவன் நாசத்தையடைகிருன். ஆத்மா தேகத்தைக் காட்டிலும் வேருகவும் ஜனன மரணமில்லாதவனுயுமிருக்கிருன். ஏ! முட்டாள் ஸ்திரீகளே! உங்கள் புருஷனுடைய சரீரமானது முன்னிருந்த விதமாகவே இப்பொழுது மிருந்தும், உங்களுடைய அழுகையைக் கேட்டு, அவன் பதில் சொல்லாததேன்? இந்த தேகத்திலே இந்திரியங்களுடைய வியாபாரத்துக்கு முக்கிய காரணமாயும், இந்திரியங்களின் மூலமாக எல்லா விஷயங்களேயும் பார்த்துக் கொண்டும், கேட்டுக் கொண்டும், பேசிக் கொண்டு மிருக்கிறதாயும், சரீரத்தை நடத்துகிறதாயுமுள்ள வஸ்துவுக்கே ஆத்மா என்று பெயர். அந்த ஆத்மா எப்பொழுது தேகத்தில் நான், என்னுடையது என்ற அபிமானத்தை அடைகிறதோ அப்பொழுதே கர்மத்தினல் கட்டப்படுகிறது. அதனுல் துக்கமும் அக்ஞானமும் உண்டாகிறது. எப்பொழுது ஆத்மாவானவன் சரீரத்திலுள்ள அபிமானத்தை விட்டு விடுகிருனே அப்பொழுதே—அந்த நிமிஷமே—எல்லாக் கர்மங்களிலிருந்து நீங்கி ஜோதிஸ்வரூபனுய் விளங்குகிருன். இந்த உண்மையை அறிந்தவர்கள் விசனத்தை அடையவே மாட்டார்கள். அதைவிட்டு, புத்தியில்லாமல் நீங்கள் எத்தனே ஆயிரம் வருஷங்கள் அழுது பிரலாபித்தபோதிலும், இந்த பர்த்தாவை அடையப் போகிறதில்லே. ஆதலால் துக்கத்தை விட்டு, பிரேதத்துக்கு தகனம் முதலான உத்திரக்கிரியைகளேச் செய்து முடியுங்கள்'' என்று சொல்லி விட்டு யமதர்மாராஜன் மறைந்து போய்விட்டார். அந்த ஸ்திரீகளும் குழந்தையின் உபதேசத்தைக்கேட்டு ஆச்சரிய மடைந்தவர்களாய் சுயக்ஞனுக்குப் பிரேத கிருத்தியங்களேச் செய்து முடித்தார்கள். ஆகையால் அம்மணி! நீங்கள் ஹிரண்யாக்ஷனேக் குறித்து வீணுகத் துக்கிக்க வேண்டாம். ஒவ்வொருவனுக்கும் அனேகம் பிறப்புண்டாகையால் அவனுக்குத் தாய் தந்தையரும், புத்திரர்களும், சுற்றத்தாரும் அனேகம் பேருளர். ஆதலால் தந்தையார்? புத்திரன்யார்? தான் யார்? அன்னியன் யார்? தன்னுடையதென்பதெது? அன்னியனுடையதெது? இதெல்லாம் வீண் அக்ஞானமே யொழிய வேறில்லே.''

இவ்விதம் சொன்ன சக்கரவர்த்தியின் வார்த்தையைக்கேட்டு, திதிதேவியானவள் புத்திர சோகத்தைவிட்டு, மருமகளான ருஷாபானுவுடன் தத்துவ விசாரணேயில் புத்தியைச் செலுத்தினுள்.

இங்கே ஒரு விஷயம். சக்கரவர்த்தி தமோ குணமுள்ளவராய் பகவானே விரோதித்துப் பதினுயிரக்கணக்காக நிரபராதிகளான ஜனங்களேக் கொலே செய்தும் இன்னும் சொல்லொணு அக்கிரமங்களேப் புரிந்துக்கொண்டும் வந்ததாக முன்பு சொல்லப்பட்டிருக்க, இப்பொழுது பழுத்த தத்துவ ஞானியைப்போல் தன் தாயார் முதலானேருக்குச் சரமாரியாக வேதாந்த ரகசியங்களே உபதேசித்ததாகச் சொல்வதெங்ஙனம் பொருந்தும்? ஒருவர் பிரஜைகளுக்குக் கொடுமை செய்பவராகவும் அதே சமயத்தில் தத்துவ விசாரணே செய்யும் பெரிய ஞானியாகவும் இருப்பதாகச் சொல்வது பரஸ்பரம் முரண்படுகிறதே என்று வாசகர்கள் நினேக்கலாம்.

வேதாந்த புஸ்தகங்களேப் படித்துவிட்டதினுலும், பிறர்க்கு உபதேசம் செய்ததினுலும் ஒருவன் வேதாந்தியாக முடியாது. அந்த உபதேசப்படி தானே அனுஷ்டித்து, இந்திரியங்களே நிக்கிரகம் செய்து, சம்சாரபந்தத்திலிருந்து விடுபட்டு, ஆத்மஞானத்தை அடைந்தவன் தான் ஞானியாகிருன். எந்த விஷயங்களேயும் பிறர்க்கு உபதேசம் செய்வது எல்லோருக்கும் சகஜம். ஆனல் அதன்படி அனுஷ்டிப்பவர்கள் மட்டும் மிகச் சிலரே யென்பது அனுபவ பூர்வமாக அறிந்த உண்மை. புண்ணியபலமோ அல்லது

பகவானின் அனுக்கிரகமோ இன்றி சம்சாரம் முதலானவைகளில் வெறுப்பேற்பட்டு அவைகளிலிருந்து விடுபடுவதும், ஆத்மஞானத்தை அடைவதும் சாத்தியமில்லை. எல்லாவற்றையும் துறந்தவர்களென்று சொல்லிக் கொள்ளும் சன்னியாசிகளிலேயே அனேகருக்கு உலகப் பற்றுதல் முற்றும் ஒழிந்தபாடில்லை என்றால், சக்கரவர்த்தியைப் பற்றிக் கேட்பானேன்? முன் ஜன்மத்தில் அவருக்கு நேரிட்ட சாபத்தினாலும், அவர் தாயாரான திதிதேவி பொறாமையே உருவெடுத்து வந்தவளாய்த் தன் சக்களத்தியான அதிதியையும், தேவர்களையும், தேவசகாயனான பகவானையும் விரோதித்து வந்தபடியால் அவளுடைய பழக்கத்தினாலும், மேலும் அவள் சாயங்காலத்தில் தன் பர்த்தாவுடன் கூடிக் கருத்தரித்து இவர்களைப் பெற்றதினாலும், சக்கரவர்த்தியும், அவர் சகோதரனும் பாபிகளாயும் உலகத்தைப் பீடிக்கின்றவர்களாயுமிருக்க நேரிட்டது. அதனாலேயே அவர் வேதாந்த ரகசியங்களைப் பூராவுமறிந்திருந்த போதிலும், தான் அதனால் எவ்வித பயனையுமடையாது, உலகத்துக்கு உபத்திரவத்தைச் செய்து கொண்டிருந்தார்.

நிற்க, சக்கரவர்த்தி தன் தாயார் முதலானவர்களின் சோகம் மாறிவிட்டதை அறிந்து கொண்டு தான் ஒருவராலும் ஜயிக்க முடியாதவராகவும், கிழத்தனம், மாணம் முதலியன இல்லாதவராகவும், மகா பராக்கிரமசாலியாகவும், எல்லா உலகங்களுக்கும் அதிபதியாகவும் ஆகவேண்டுமென்று கோரி, தபஸ் செய்வதற்காக மந்திர பர்வதத்தை அடைந்தார். அங்கு ஓர் தாழ்வரையில், மாவுரிகளைத் தரித்துக் கால் பெருவிரலால் பூமியில் நின்றுகொண்டு, கைகளை உயரவெடுத்து, ஆகாயத்தை நோக்கியபடியே, அன்னாகாரமின்றி, மிக உக்கிரமாகத் தவம்புரிந்து கொண்டிருந்தார்.

பதினோராம் அத்தியாயம்.

முன்பு ஹிரண்யகசிபுவுக்குப் பயந்து, ஒருவர் கண்ணிலும் படாமல் பூமியில் சஞ்சரித்துக் கொண்டிருந்த தேவர்கள், திரும்பவும் தேவலோகத்தை அடைந்து, தங்களுக்கு இதுவரையில் அசுரர்களால் செய்யப்பட்ட கெடுதிகளையும், அவமானத்தையும் நினைத்துக் கோபத்தை அடைந்தவர்களாய் ஏராளமான சேனைகளுடன் சோணிதபுரத்தை வளைத்துக்கொண்டு முற்றுகையிட்டார்கள். இச்சம்பவத்தை யறிந்த தூதர்கள், சக்கரவர்த்திக்குப் பதிலாக ராஜ்ய காரியங்களைக் கவனித்துக் கொண்டிருக்கும் முதன் மந்திரியான சம்பரனிடத்திலோடி அறிவித்தார்கள். அதைக் கேட்டவுடன் மந்திரிக்கு அதிக கோபமுண்டாகி, உடனே போர்க்கோலம் கொண்டு நால்வகை சேனைகளோடும் வெளிப்பட்டுக் கோட்டை வாயிலை நெருங்கி, பிரளயகாலத்துச் சமுத்திரத்தைப்போல் கொந்தளித்துக்கொண்டிருக்கும் சத்துருக்களின் சேனைகளைக் கண்டவுடன் "ஏது? இன்றைய தினம் நாம் உயிருடன் திரும்பப்போவதில்லை" என்று தீர்மானித்துக்கொண்டவனாய்த் தேர்த்தட்டில் அப்படியே ஸ்தம்பித்து உட்கார்ந்து விட்டான்.

"இதுகாறும் நம்மால் பலவிதத்திலும் அவமதிக்கப்பட்ட தேவர்கள், நமது அரசர் தவஞ் செய்யப் போயிருப்பதை அறிந்து, இது தான் தக்க தருணமென மிக்க வீராவேசத்துடன் வந்திருக்கிறார்கள். வந்திருப்பவர்களோ மகாபலிஷ்டர்கள். நாம் அவர்களுக்குத் திரணப் பிரமாணமாகும். சத்துரு பலம், தன் பலம், கால பலம் இவைகளை நன்றாயாராய்ந்து, சாம, தான, பேத, தண்டம் என்னும் நால்வகை உபாயங்களில் எது உசிதமோ அவ்வுபாயத்தினால் சத்துருக்களை அழிக்க வேண்டுமே அல்லாது, விருதாவாக முரண்டிக் கொண்டிருப்ப

தினல் நமது பிராணனை இழப்பதைத் தவிர வேறு பிரயோஜனத்தை நாம் அடையப் போவதில்லை யென்பது திண்ணம். 'படை யெடுத்து வந்தவர்கள் நம்மைவிட பலத்திற் குறைந்தவர்களாயிருந்தால் அவர்களை யுத்தம் செய்து அழிக்கவேண்டும். நம்மைவிட பலிஷ்டர்களானால் தந்திரோபாயங்களினால் அவர்களை வெல்லவேண்டும்' என்பது நீதி சாஸ்திரங்களின் துணிபு. சத்துருக்களுக்குப் பயந்து ஓடி ஒளிப்போமென்றாலும், அதனால் தீராத அபகீர்த்தி யுண்டாவதோடு, நாம் எங்கு ஓடி ஒளிப்பினும் அவர்கள் தேடிக் கண்டுபிடித்தும் விடுவார்கள். இது பரியந்தம் நமது பெண்டு பிள்ளைகள் சுற்றத்தார் முதலானவர்களுடன் க்ஷேமமாய் வாழ்ந்துகொண்டிருந்தோம். இன்றைய தினம் நமக்குப் பெரிய துன்பம் நேரிடப் போவதாகக் காணப்படுகிறது. அதை விட்டு சத்துருக்கள் நம்மைத் துன்பப்படுத்தாமலிருக்கும்படி நாமவர்களைச் சரணமடையவோ மென்றாலும், நமதரசர் இதைக் கேள்விப்பட்டால் நம்மைக் கட்டாயம் கொன்று போடுவார். இந்த விதிக்கென்ன செய்வது? வீணே யோசித்துக்கொண்டிருப்பதினால் பயனென்ன? ஊழின்படிக்கு வருகிற துன்பம் ஒருவனுடைய முயற்சியால் விலக்கப்படுமோ?. ராஜாதிராஜனான ஹிரண்யகசிபு சக்கரவர்த்தியவர்களின் பிரதம மந்திரியாக விருக்கும் நாம் சத்துருக்களுக்கு வணங்குவதோ? அவர்களுடனெதிர்த்து ஜயங்கொள்ளவேண்டும், அல்லது அவர்களால் கொல்லப்பட்டு வீரசொர்க்கத்தை அடையவேண்டும். இவ்விரண்டிலொன்றைத் தவிர வேறு வழியில்லை. பிராரப்த வினையின்படி நடக்கட்டும்.''

இவ்விதம் பற்பல யோசனைகள் செய்து, முடிவில் சத்துருக்களை யெதிர்த்து யுத்தம் செய்வதே சரியெனத் தீர்மானித்துக் கொண்டான். பின்னர் அசுரர்களும் தேவர்களும் ஒருவர்க்கொருவர் நெருங்கி, ரத வீரர்களோடு ரத வீரர்களும், யானை வீரர்களோடு யானை வீரர்களும், குதிரை வீரர்களோடு குதிரை வீரர்களும், பதாதிகளோடு பதாதிகளும் கைகலந்தெதிர்த்து, ரத்தம் வெள்ளமாய்ப் பெருகி ஆறுபோலோட, பயங்கரமாய் யுத்தம் செய்தார்கள். அப்போது பராக்கிரமசாலிகளான தேவர்களுக்கு அதிக கோபமுண்டாகி, அசுர சேனைகளில் புகுந்து, தேர்களை யெடுத்துத் தேர்கள் மீதெறிந்தும், யானைகளை யெடுத்து யானைகள் மீது மோதியும், சிலரைப் பற்களுதிர வறைந்தும், சிலரைப் பனை நாரைப்போல் கிழித்தும், சிலரைக் கழுத்தை முறித்தும், சிலரை ஈட்டிகளினால் குத்தியும், சிலரைக் கதைகளினால் புடைத்தும், சிலரைக் கசக்கிப் பிழிந்தும், சிலரைக் குடல்சரிய வுதைத்தும், சிலரை நிலத்தைக் கவ்விக் கொண்டிருக்கும்படி மோதியும், சிலரைத் திசைகளில் வீசியும், சிலரைச் சுள்ளிகளைப்போல ஒடித்தும், சிலரை மூளை சிதறச் சாடியும், இவ்விதம் அளவற்ற அசுரர்களை அதஞ்செய்தனர். அந்த யுத்த பூமியில் பல கோடி கவந்தங்கள் கூத்தாடின. பூதபைசாசங்கள் அங்கிருந்த மாம்சங்களை வயிறு புடைக்க வுண்டு, தேவர்களுடைய வீரத்தைப் புகழ்ந்து பாடிக்கொண்டிருந்தன. நாய், பருந்து, காக்கை, கழுகு, நரி முதலியவைகள் பிணங்களைத் தின்று ஊளையிட்டுத் திரிந்தன. சம்பரன் தேவராஜனுடனெதிர்த்துப் பலவிதமான கோர யுத்தங்களைச் செய்து, முடிவில் இந்திரனுடைய பாணங்களினால் துளைக்கப்பட்டுத் தேரின் மீதே மூர்ச்சித்து வீழ்ந்தான். யுத்தத்தில் கொல்லப்பட்டவர்கள் போக பாக்கியுள்ள அசுரவீரர்கள் தங்கள் உயிர் பிழைத்தால் போதுமென்று, ரசாதலமென்னும் லோகத்துக்கு ஓடிப்போனார்கள். தேரின் மீது மூர்ச்சித்துக் கிடந்த சம்பரன், சாரதியின் சைத்தியோபசாரங்களினால் மூர்ச்சை தெளிந்தெழுந்து

தன்னை சமுத்திரம் போலச் சூழ்ந்திருந்த சேனைகளைக் காணுதவனுயேங்கி, பின்வருமாறு ஆலோசிப்பதாயினன் :—

"வெகுகாலமாய்த் தேவர்களை வாட்டி ஜயப் பிரதாபத்தைப் பெற்றிருந்த நாம் இப்பொழுது பலம் குறைந்து மழுங்கும்காலம் நேரிட்டு விட்டது. நம்முடன் வந்த ஏராளமான சேனைகளையும் மாளக் கொடுத்து, ஏனென்பாரெவருமின்றி ஏகாங்கியாயிருக்கின்றனம். பகைவர்களோ சகல சேனைகளோடும் வீறியிருக்கின்றார்கள். இனியும் சண்டை செய்தோமாகில் தேவராஜன் கரத்திலுள்ள வஜ்ராயுதத்தினுல் நாம் கொல்லப்படுவதற்கையமில்லை. யுத்தத்தில் பின்னடையாமல் சண்டைசெய்து, சத்துருக்களினுல் கொல்லப்பட்டாலும், பலராலும் சுத்த வீரனெனக் கொண்டாடப்பட்டுப் பெரிய கீர்த்தியை யடைவதோடு, வீரசொர்க்கத்தையும் பெறலாம். அப்படிக்கின்றி நிலையில்லாத இவ்வுயிரை ரட்சிப்பதற்காகப் புறங்காட்டி ஓடிப்போவதினுல் நமக்கு எக்காலத்திலும் தீராத அபகீர்த்தி நேருவதன்றியில், கேவலம் பெண்மக்களும் நம்மை ஏளனமாகப் பேசிக் கொள்ள நேரிடும். சத்துருக்களை ஜயிக்கச் சக்தியின்றித் திரும்பும் வீரனை அவனுடைய தாய், தந்தை, மனைவி முதலியவர்களே அவமதித்திகழ்வார்களென்றுல், அன்னியர்களைப் பற்றிக் கேட்பானேன்? ஆயினும் மூட்டுத்தனமாக இன்றைக்கே சண்டைசெய்து, பிராணனை யிழப்பதைவிட, எங்கேயாவது மறைவாய் வசித்துக்கொண்டிருந்து, நமது சக்கரவர்த்தி வந்தபின், ஏராளமான சேனைகளைக் கூட்டிக் கொண்டுபோய் தேவர்களை வெற்றிகொள்வதே உத்தமமாகத் தோன்றுகிறது. சூரனுக விருப்பவன் யுத்தத்தில் ஒருவேளை இளைத்துப் பின் வாங்கின போதிலும், மற்றொருவேளை பகைவரை வாட்டி வெற்றி பெறின் 'இராஜ தந்திரி' யென்று பலாாலும் புகழப்படுவான். இப்படிச் செய்வதில் இகழ்ச்சியு முண்டாகாது. அப்படியே அபவாதம் நேர்ந்தபோதிலும் பெரிதல்ல. அருமையான பிராணனை இழந்து விட்டால் திரும்பவும் வருமோ? உயிருடனிருந்தால், எப்பொழுதாவதொரு சமயம் சத்துருக்களைப் பழிவாங்கவும், சுகபோகங்களை யனுபவிக்கவும் சந்தர்ப்பம் நேரிடும். இவ்வுலகத்தில் நாம் எங்கு ஒளித்திருந்தாலும், சத்துருக்கள் நம்மைவிடார்கள். ஆதலால் அசுரர்களுக்கிருப்பிடமான ரசாதலமென்னும் உலகத்தை யடைந்து, நமதரசர் வரும் வரையில் அங்கேயே வசித்துக் கொண்டிருப்போம். இன்னெரு சங்கடமிருக்கிறதே! நாம் ஓடிப்போனபின் தேவர்கள் சோணிதபுரத்திலுள்ள சகல ஐசுவரியங்களையும் கொள்ளையடிப்பதோடு, அனுதைகளாயிருக்கும் நமது மனைவிமக்களையும் துன்புறுத்துவார்களே! ஆயினும் இதைப்பற்றி நாம் கவலைப்படுவதா லென்ன பயன்? நாம் இங்கிருந்தாலும், நம்மால் அதைத்தடுக்க முடியாது. அவர்களையும் காப்பாற்றமுடியாமல் போவதோடு, நமது பிராணனையு மிழக்கவேண்டி நேரிடும். அவாவர்கள் தலைவிதியின்படி நடக்கட்டு மென்று விட்டு விட்டு, நாம் உயிர் பிழைத்து ஓடிப்போவதே உத்தமம்" என்று இவ்விதம் தீர்மானித்துக் கொண்டவனுய்த் தனது மாயையினுல் யாவருங் காணுதபடி யுத்தகளத்தினின்றும் மறைந்து, ரசாதலத்தை யடைந்தான்.

இவ்விதம் அசுரவீரர்களெல்லோரும் ஓடிப் பதுங்கிவிட்டதைக் கண்டவுடன், ஜயசாலிகளான தேவர்கள், உத்சாகத்துடன், அசுரராஜாவினுடைய பட்டணத்தைக் கொள்ளையிட்டார்கள். அங்கிருக்கும் சமஸ்த ஐசுவரியங்களையும் அபகரித்துக் கொண்டபின், அமராவதியும் நாணத்தக்கதாய்ச் சகல சிறப்புகளையும் பெற்று விளங்கின அந்நகரை அடியோடழித்தார்கள். அங்கிருக்கும் சோலைகள், தோப்புக்

கள், உத்தியானவனங்கள் முதலானவைகளை நாசமாக்கி மரங்களைவேருடன் பறித்துத் தள்ளியும், நவரத்தினங்களால் நிர்மாணிக்கப்பட்டிருந்த உப்பரிகைகள், சித்திரகூடங்கள், மண்டபங்கள் முதலானவைகளை இடித்து நிரவியும், பரிமள மிகுந்த தாமரைமுதலிய புஷ்பங்களாலும் அன்னபட்சிகளாலும் நிறைந்திருக்கும் ஓடைகள், பொய்கைகள், தடாகங்கள் முதலியவைகளைக் கலக்கியும், யானைக் கொட்டாரங்கள் அசுவசாலைகள் ஆயுதசாலைகள் முதலியவைகளைத் துகள்படுத்தி, யானைகளையும் குதிரைகளையும் கொன்றும், ரதங்களைப் பொடிபடுத்தியும், நகரைச் சூழவிருந்த பொன்மதிலைப் பெயர்த்து அகழிகளில் தள்ளித் தூர்த்தும், இவ்விதமாக அஷ்டலக்ஷ்மிகளும் தாண்டவமாடிக் கொண்டிருந்த ஐம்பது யோசனை விஸ்தீர்ணமுள்ள அந்த சோணிதபுரத்தை உருத் தெரியாமல் நாசமாக்கினார்கள்.

## பன்னிரண்டாம் அத்தியாயம்.

சக்கரவர்த்தினி அப்போது நான்கு மாதம் கருவுற்றிருந்தாள். பத்தரைமாற்றுத் தங்கம் போன்ற அவளுடைய சரீரமும், பவழத் துண்டைப் பழித்த அதரமும் சலவைக்கல்லைப் போல் வெளுத்து, அவள் வயிற்றிலிருக்கும் புத்திரனுடைய கீர்த்தியை வெளிப்படுத்தின. அவள் கண்களானவை தனது நாயகனைப்பார்க்காத விசனத்தினால் வாட்டமுற்றவைபோல் குழிந்து உள்ளிட்டிருந்தன. அவள் கருப்பமுற்றுளென்று யாவருக்கும் காட்டுவதைப் போல் மெல்லிய இடையானது பெருத்தது. அவள் பாதங்கள் நூபுரங்களைத் தாங்கச் சக்தியின்றித் தளர்ந்தன. அவள் வயிற்றிலிருந்த கருவானது வளர்ந்து வருந்தோறும் கருப்பச் சின்னங்களான சேம்பல், மயக்கம், அரோசிகம் முதலியவைகள் அவளிடம் விளங்கி வந்தன. தன் சரீரசிரமத்தை நீக்கிக்கொள்ளும்பொருட்டு, தனது தாதிகளுடன் அடிக்கடி உப்பரிகைகளிலும், உத்தியானவனங்களிலு முலாவியும், லதாகிருகங்களில் வீற்றிருந்து குளிர்ந்த காற்றை யனுபவித்தும், கதைகள், காவியங்கள், நாடகங்கள் முதலானவைகளைப் படித்தும், சதுரங்கம், சொக்கட்டான் முதலியன விளையாடியும், கிளி, சாரிகை முதலான பட்சிகளுடன் கொஞ்சி வசனித்தும், மிகுந்த இன்பத்தோடு தனக்கிஷ்டமானபடி பொழுதுபோக்கிக்கொண்டிருந்தாள். இப்படி உல்லாசமாக இருக்கும் காலத்தில் சத்துருக்கள் படையெடுத்து வந்து நகரைக் கொள்ளையிட்டால் அவள் மனம் எப்படியிருக்கும்? அசுரர்கள் எல்லோரும், சத்துருக்களை எதிர்த்து யுத்தம் செய்து, தோல்வியுற்றுத் தங்கள் உயிர் பிழைத்தால் போதுமென்று ஓடிப்போய் விட்டார்கள். பட்டணத்திலோ ஒரு புருஷன் கூட இல்லை. கேவலம் ஸ்திரீகளும் குழந்தைகளும் என்ன செய்வார்கள், பாபம்! தங்களைச் சத்துருக்கள் கையினின்றும் காப்பாற்றுவோரில்லாமல், தங்கள் வீடு வாசல்களையும், பொருள்களையு மிழந்து, கோவெனக் கதறியழுகிறார்கள். லீலாவதியின் மனம் பயத்தினால் துடித்தது. என்ன துன்பம் நேரிடப் போகிறதோ வென்று கலங்கினாள். கண்களில் நீர் தாரை தாரையாய்ப் பெருக, தங்களை இந்த ஆபத்திலிருந்து காப்பாற்றும்படி பகவானைப் பிரார்த்தித்தாள்.

"பகவானே! பக்தவத்சலனே! ஆபத்பாந்தவனே! சகலஜீவராசிகளையும் காத்தருளுகின்றவரே! ஜகதீச்வரியே! உலகமாதாவே! தங்களுடைய சரணாவிந்தங்களையன்றி, எங்களுக்கு வேறு கதியில்லை. என் பிராணநாதர் இல்லாத சமயத்தில் சத்துருக்கள் இங்குவந்து எங்களை இம்சிக்கிறார்கள். கேவலம் அபலைகளான நாங்கள் என்ன செய்வோம்? கருணாநிதியே! தங்களைச் சரணமடைந்தோம், எங்

களை இத்துன்பத்திலிருந்து ரட்சித்தருளவேண்டும். எங்களுடைய பொருள்களையும், உயிரையும் இழந்தபோதிலும் எங்கள் கற்புக்கு மட்டும் பங்கம் நேரிடாதவாறு காப்பாற்றவேண்டும். சத்துருக்கள் பழிபாபத்துக் கஞ்சார்களே! கொடுமையே குடிகொண்டிருக்கும் அவர்கள் எங்களைக் கொண்டுபோய் என்ன செய்வார்களோ? ஐயனே! எங்களுக்கு எவ்வித உதவியுமில்லையே! கேவலம் ஒரு சிறு பாலகன் துணைகூட இல்லாமல் அனாதைகளாயிருக்கும் நாங்கள் தங்களைத் தவிர வேறு யாரைச் சரணமடைவோம்? எங்களை ஆதரித்து, ரட்சிக்காமல் பாராமுகமாயிருந்தால், கிருபாநிதியென்ற தங்கள் பெருமைக்குத் தாழ்வல்லவோ? பகவானே! தங்களையல்லது எங்கள் துக்கத்தைத் தீர்க்கவல்லவர் வேறு யாரிருக்கின்றனர்? கஜேந்திரவரதனே! முதலைவாய்ப்பட்ட கஜேந்திரனை ரட்சித்த தாங்கள் எங்களை இப்படிக் கைவிடுதல் முறையோ? என்னையனே! பிரபுவே! தீனர்களான எங்களைக் காப்பாற்றும்!'' என்று ஸ்தோத்திரம் செய்தாள்.

இவ்விதம் அவள் கலங்கிக்கொண்டிருக்க, தேவர்கள், சக்கரவர்த்தியின் அரண்மனையில் பிரவேசித்து, அதிலுள்ள பற்பல வளங்களையும், லக்ஷ்மீவிலாசத்தையும் பார்த்து ஆச்சரியத்துடன், அதன் அழகைப் புகழ்ந்தார்கள்.

“ஆ! பதினான்கு உலகங்களிலுமிரா நின்ற சமஸ்த செல்வங்களும் இவ்வாண்மனையிலடங்கியிருப்பது அற்புதக் காட்சியாகத் தோன்றுகிறது. இதின் ஐசுவரியப் பெருக்கத்தை வருணிக்க ஆதிசேஷனாலும் முடியாது. இதைப் பிரம்மதேவர் நிர்மாணித்தாரென்று சொல்வதற்குமில்லை. அப்படியே அவர் நிர்மித்தாலும் கைலாசம், வைகுண்டம், சத்தியலோகம், அமராவதி முதலானவைகளிலுள்ள சமஸ்த சிறப்புக்களையும் கொண்டு இதைப் படைத்திருக்க வேண்டும். இவ்வாண்மனையைப் பார்க்காதவர்களே அளகாபுரியையும், அமராவதியையும், போகவதியையும் மிகுந்த செல்வங்களைப் பெற்றிருப்பதாகப் புகழ்வார்கள். இதற்கு இணையாகச் சொல்லக்கூடிய வஸ்துவேறெந்த உலகத்திலுமில்லை. இதன் பெருமைகளை முழுவதுந் தெரிந்து அனுபவிக்கும் பொருட்டு, அரிய தவஞ்செய்து சிரஞ்சீவியாக இருக்க வரம்பெற்று இவ்வாண்மனையில் வசித்து, இதிலுள்ள செல்வங்களை அனுபவித்து இன்புறவேண்டுமே யொழிய இதன் ஒப்புயர்வற்ற மகிமைகளை ஒருவன் கண்ணால் பார்த்து முற்றிலும் அறிய முடியாது. இதுவரையில் இத்தகைய செல்வங்களை நாம் கண்டதுமில்லை. கேட்டதுமில்லை. இந்த நிமிஷமே இவையனைத்தையும் சொர்க்க லோகத்துக்குக் கொண்டுபோக வேண்டும்'' என்று தீர்மானித்துக் கொண்டவர்களாய் அரண்மனையிலுள்ள சகல செல்வங்களையும் அபகரித்தார்கள்.

சக்கரவர்த்தினி இருக்கும் அந்தப்புரத்தையும் பலர் சூழ்ந்துகொண்டனர். இதைக் கண்ட லீலாவதி வலையிலகப்பட்ட பெண் மானைப்போல் வாடிப் பரிதவித்து அரண்மனையிலுள்ள எல்லா ஸ்திரீகளையும் ஒன்று சேர்த்து அவர்களுடன் தன்னறையில் உட்கார்ந்துகொண்டு, தாமரையிலை நீரையொப்ப மனம் நிலைபெறாமல் கலங்கிக்கொண்டிருந்தாள். ‘ஐயோ! பகவானே! எங்களை இப்படிப் பரிதபிக்க விடுதல் நீதியோ?’ என்று புலம்பிப் பதைபதைத்து வாடினாள். தங்களுக்கு நேர்ந்த ஆபத்தைப் பலவாறெண்ணித் தியங்கினாள். கண்ணில் நீரொழுகச் சிறிது நேரம் அசைவற்றுச் சோர்ந்து கிடந்தாள். எங்கள் வாழ்வுக் கழிவு நேர்ந்ததோவென்று வாயிலறைந்து கொண்டாள். எங்களைக் காப்பாற்றுபவரொருவருமில்லையோ வென்று நாற்றிசைகளினும் விழிகளைச் சுற்றிப் பார்த்தாள். மறுபடியும் பெருமூச் செறிந்தாள். இவ்விதம் துக்க

சாகரத்துள் மூழ்கிக் கரைகாணுமல் அவர்கள் தத்தளித்துக் கொண்டிருக்கும்போது தேவ ராஜனே அறைக்குள் நுழைந்தான். அவனைக் கண்டவுடன் ஸ்திரீகளுக்குப் பாதிப் பிராணன் போய்விட்டது. அவர்கள் சரீரம் வியர்க்க, மார்பு படபட வென்றடிக்க, நடுநடுங்கி, நெஞ்சுலர்ந்து, ஆவி சோர்ந்து, சித்திரம்போல் பிரமித்து அசைவற்றிருந்தார்கள்.

லீலாவதியோ ஆபத்து தலைக்குமேல் வந்துவிட்டபின் துக்கித்துக் கொண்டிருப்பதில் பயனில்லை யென்று தீர்மானித்துக் கொண்டவளாய், கலைந்துபோன தன்னுடைய சிந்தைகளை ஒருமைப் படுத்தி, மனதைத் தேற்றிக்கொண்டு இந்திரனை நோக்கி, "மைத்துனரே! உட்காருங்கள்! உங்கள் வரவு நல்வரவாகட்டும். எங்களுக்கு யாதொரு கெடுதியும் நேரிடாதவாறு, அபலைகளான எங்களைக் காப்பாற்றவேண்டும். நாங்கள் சகல சௌக்கியங்களையுமனுபவித்தவர்களாயிருந்தபோதிலும், இப்போது நிர்க்கதியானேம். புருஷர்களைப் பிரிந்து வேறு கதியில்லாமல் தவிக்கிறேம். நாங்கள் தங்கள் அடைக்கலம். எங்கள் மீது கருணை காட்டவேண்டும். அனுதைகளான எங்களை ரட்சிக்கவேண்டும்" என்று சொல்லிக் கண்ணீர் விட்டழுதாள்.

"பெண்ணே! உன் புருஷன் எங்களுக்குச் செய்திருக்கும் கொடுமைகளை நினைக்கும்போது நான் எவ்விதம் உன்னிடம் கருணை காட்டக் கூடும்? ஆயுள் முடிவு காலத்தில் தன்னிடம் கருணைகாட்ட வேண்டுமென்று யமதர்மராஜனிடம் எவ்வளவு மன்றாடினாலும் அவன் உயிரைக் கொண்டு போகாது விட்டு விடுவானே? என்னிடம் நீ எள்ளளவு கருணையையும் எதிர்பார்க்கமுடியாது. உன்னைச் சொர்க்க லோகத்துக்குக் கொண்டு போவதற்காகவே வந்திருக்கிறேன். ஆனல் உன்னுடைய முகத்துக்காக, உன் சகிகளுக்கும் மற்ற ஸ்திரீகளுக்கும் எவ்விதத் துன்பமும் செய்யாது விட்டு விடுகிறேன். இதுவே நான் உனக்காகச் செய்யும் பெரிய உபகாரமாகும்" என்றான் இந்திரன்.

லீலாவதி முகம் வெளுத்து, உடல் நடுங்கி, மனந் திடுக்கிட்டு, மெய் பதறி, மூர்ச்சையாய் விழுந்தாள். பக்கத்திலுள்ளவர்கள் செய்த சைத்தியோபசாரத்தினல் சிறிது நேரத்துக்கெல்லாம் மெதுவாகக் கண் திறந்து இந்திரனை நோக்கினள். இந்திரனும் இவளைப் பார்த்தானாயினும், அவன் முகக்குறிகள் பயங்கரமாயிருந்தன. "சுரபதியே! அரசர்கள் ஒருவருக்கொருவர் யுத்தம் செய்வதும், நாடு நகரங்களை யிழந்து பலவித கஷ்டங்களை அனுபவிப்பதும் சகஜந்தான். ஆனல் ஜயத்தை அடைந்தவர்கள் தோற்றுப் போனவர்களின் ஸ்திரீகளை உபத்திரவிக்க மாட்டார்கள். என் புருஷன் உங்களுக்குச் செய்த கொடுமைக்காக நிரபராதியான என்னை இம்சிப்பது நியாயமா? மேலும் நான் உங்களைச் சரணமடைந்தவள். சரணமடைந்தவர்கள் எவ்வளவு கொடிய சத்துருக்களாயினும் அவர்களைக் காத்து ரட்சிக்கவேண்டுமென்று தர்மசாஸ்திரங்கள் கூறுகின்றன. சரணமடைந்தவர்களை ரட்சிக்காமல் கைவிட்ட மகாபாபிக்குப் பிராயச்சித்தமேயில்லை. எனக்குப் பிறரால் எவ்விதத் துன்பங்களும் நேரிடாமலே நீங்கள் காப்பாற்ற வேண்டுவது முறைமையாயிருக்க, நீங்களே எனக்குக் கொடுமை செய்ய நினைப்பது தர்மமா? எல்லா தர்மங்களையும் அறிந்தவராயும் புத்தியிற் சிறந்த பிருகஸ்பதி பகவானை குருவாக உடையவராயும், மூவுலகங்களுக்கும் தர்மாதிகாரியாயுமிருக்கும் தாங்களே இவ்விதம் தர்மம் தப்பி நடக்கலாகுமா? மிகுந்த தரித்திரராயிருப்பவர் அகன்ற சாம்பிராச்சியச் செல்வத்தை அடைவதும், சகல சௌக்கியங்களையும் அனுபவித்த பாக்கியவான்கள் மிகுந்த கஷ்டங்களை யனுபவித்து வாடு

வதுமுண்டு. செல்வமும் வறுமையும், இன்பமும் துன்பமும் பிராணிகளுக்கு நிலைப்பட்டதல்ல. சந்திரன் பூர்வபட்சத்தில் விருத்தி அடைந்தும், அபர பட்சத்தில் தேய்ந்தும் வருவதை நீங்கள் கண்டதில்லையோ? அதுபோல் ஒருவர் வாழ்வும் தாழ்வும் எக்காலத்திலும் நிலைத்திருக்காது. தர்மத்துக்கு மட்டும் எக்காலத்து மழிவில்லை. அதர்மம் ஸ்தாபிதமாக நிற்பதுமில்லை. ததீசி மகரிஷி தன்னை யாசித்த தேவர்களுக்குத் தன் பிராணனைக் கொடுத்து உபகாரம் பண்ணவில்லையா? அதே விதமாக யுத்தத்தில் பின் வாங்காதவர்களான எத்தனையோ ராஜாக்கள் காலவித்தியாசத்தினால் தாங்கள் அனுபவித்த சகல சம்பத்துக்களையு மிழந்தபோதிலும், தர்மத்தைக் கைவிட்டார்களில்லை. சரணாகத ரட்சணத்திற்கு மிஞ்சின தர்மமில்லை. ஆதலால் பிரபுவே! சரணமடைந்த எங்களுக்கு எவ்விதத் துன்பமும் நேரிடாமல் காப்பாற்றும். அதனால் உங்களுக்கு மிகுந்த கீர்த்தியுண்டாகும்'' என்றாள் லீலாவதி.

"பெண்ணே! ஏன் வீணாகப் புலம்பிக்கொண்டிருக்கிறாய்? உன்னுடைய உபதேசத்தைக் கேட்பதற்காக நான் இங்கு வரவில்லை. நான் சொல்லுகிறபடி நடந்துகொண்டால் உனக்கு எவ்விதத் துன்பமும் நேரிடாது. இந்தப் பாதகனை (ஹிரண்யகசிபுவை) நம்பி உன் வாணாளை ஏன் வீணாக்கிக் கொள்ளுகிறாய்? இவன் வீரனாயிருந்தால் தன் சகோதரன் கொல்லப்பட்டதைப் பொறுத்திருப்பானா? தன்னையே நம்பிக் கொண்டிருந்த ஏழை ஜனங்களைப் பதைக்கப் பதைக்கக் கொலைசெய்து, உலகத்தை அழித்து சாபத்தை மூட்டை கட்டிக்கொண்டான். அந்த ஏழைகள் விட்ட கண்ணீர்—அவர்களின் சாபம்—இவனைச் சுற்றாமல் விடுமோ? எங்களுக்கும் எவ்வளவோ கொடுமைகளைச் செய்து எங்களைப் பலவிதத்திலும் உபத்திரவப்படுத்தியிருக்கிறான். இதுவரையில் காலத்தை எதிர் பார்த்துக் கொண்டிருந்தோம். நாங்கள் எதிர் பார்த்த காலம் வந்து விட்டது. இவன் செய்து கொண்டிருக்கும் தவத்தை உடனே அழித்து, இவன் சகோதரன்போன இடத்திற்கே இவனையும் அனுப்பிவிடப் போகிறோம். இவன் தலைப் புழு மாண்டுபோய் விட்டது. இவனை நம்பி ஏன் உன் காலத்தைக் கெடுத்துக் கொள்ளுகிறாய்? தேவஸ்திரீகளும் கண்டு நாணத்தக்க லட்சணமமைந்த கட்டழகியே! உன் பருவத்தைப் பாழ் படுத்திக் கொள்ளாதே! இந்தப் பருவகாலம் என்றென்றைக்குமிருக்குமோ? இதில் ஒரு நாள் போனாலும் திரும்ப வருமோ? உனக்கென்ன குறைவு? அரம்பாஸ்திரீகள் அடி பணிந்து நிற்க, சகல போகபாக்கியங்களையும் பெற்று, வானோர் புகழ, வையகங் களிக்க வாழலாம். இந்திரலோகமே உன் சொந்தமல்லவோ! கற்பகவிருட்சம், காமதேனு, சிந்தாமணி, ஐராவதம் முதலியன வெல்லா முன்னுடையவைகளே! தேவாமிர்தத்தைப் பானஞ் செய்து, மரணம், கிழத்தனம் முதலியவைகளிலிருந்து விடுபட்டவளாய், எப்பொழுதும் பதினாறே வயதுள்ள பரமசுந்தரியாய் விளங்கலாம். என்னுடன்கூட நந்தன மென்னும் உத்தியானவனத்தில் உலாவிக்கொண்டும், சகல பாக்கியங்களையு மனுபவித்துக்கொண்டும் தேவலோகத்துக்கு அரசியாயிருக்கப் போகிறாய். அறுபதினாயிரம் அப்ஸரஸ்திரீகள் நீ காலாலிட்ட பணிகளைத் தலையால் செய்யக் காத்திருப்பார்கள். நீ பார்த்துப் பகர்ந்ததே வேதவாக்கியம். உன்னை இச்சித்திருக்கும் என் மனம் வேறொரு ஸ்திரீயைக் கனவிலும் நாடுமோ? இந்திராணி போகத்தினையும், அரம்பாஸ்திரீகளின் வனப்பினையும் மதியாமல் உன் செந்தாமரைப் பாதத்தையே தஞ்சமடைந்தேன். அனாதைபோல் இப்படி அவஸ்தைப்படுவானேன்? என்னுடன் தேவபோகங்களை அனுபவித்துக்கொண்டிருக்கும்போது இந்தப் பஞ்சைப்பயலை நீ கனவி

னும் நினைக்கப் போவதில்லை. எழுந்து வா, போவோம்! என்னிடத்தில் அன்பு வைத்து, என்னை உன்னுடைய தாசனாக ஏற்றுக்கொள்'' என்று கெஞ்சினான் தேவராஜன்.

லீலாவதியின் மனம் ஆயிரம் விருச்சிகங்கள் கொட்டினாற்போல் வேதனை அடைந்தது. அவளுடைய மார்பு படபட வென்றடித்தது. கண்கள் சுழன்றன. இந்த வார்த்தைகளைக் கேட்பதே மகா பாபமென்று இருகரங்களினாலும் காதுகளை மூடிக்கொண்டாள்.

"ஹரி! ஹரி!! என்ன வார்த்தைகள் சொன்னீர், மைத்துனரே! தாங்கள் இவ்விதம் வசனித்தல்தகுமோ? நான் தங்கள் சகோதரர் மனைவி—தங்களுக்குப் பெண்ணல்லவோ? என்னைக் குறித்து இத்தகைய பாதகச் செயலைத் தாங்கள் மனதில் நினைப்பதும் தர்மமோ? தாங்களும் என் பிராணநாதரும் சகோதரர்களாயிருந்தும், விதிவசத்தினால் ஒருவருக்கொருவர் பரமசத்துருக்களாயிருக்கிறீர்கள். ஆயினும் குலத்துக்கே அவமானத்தை விளைவிக்கக் கூடிய காரியத்தை நீங்கள் செய்யலாகுமோ? குலாபிமான மென்பது எல்லோருக்கும் பொதுவல்லவோ? ஒரு குலம் உன்னதஸ்திதியிலிருப்பதும், மேன்மேலும் விருத்தியடைந்து மிகுந்த கீர்த்தியுடன் விளங்குவதும் அக்குலத்திலுள்ள பெண்மணிகளின் கற்புநிலையையும், ஆண்மக்களின் தர்மமான நடத்தையையுமே பொறுத்திருக்கிறது. ஒரு ஸ்திரீயின் கற்புக்குச் சிறிதளவேனும் பங்கம் நேரிடுமாகில், அக்குலத்துக்கே பெரிய அவமானமும் பழிச்சொல்லும் ஏற்படுவதோடு, குலமும் சீக்கிரத்தில் க்ஷீணித்து விடும். சகோதரன் மனைவியான என்னுடைய கற்புக்குப் பழுது வாராமல் காப்பாற்றவேண்டுவதே தங்கள் கடமையாயிருக்க, தாங்களே என்னைப் பெண்டாளப் பார்ப்பது தர்மமோ? ரூபத்திலும், லட்சணத்திலும், போகத்திலும் நிகரற்ற திவ்வியசுந்தரியான சசிதேவியைப் பத்தினியாகத் தாங்கள் அடைந்திருந்தும் அவளைத் துறந்து, பிறர் மனைவியை இச்சித்தல் முறையோ? தங்கள் மனதுக் கினிய தேவபோகங்களை யளிக்கக் கூடிய கண்மணி அவளல்லவோ? அவளிடங் காணாத வின்பம் என்னிடத்திலென்ன இருக்கிறது? பரஸ்திரீயை மனதில் நினைப்பதும் மகாபாபமாச்சுதே! பிருகஸ்பதி பகவான் தங்களுக் குபதேசித்த நீதியைக் காற்றில் பறக்க விட்டீர்களோ? தர்மசாஸ்திரங்களைத் தாங்கள் வாசிக்கவில்லையோ? கணவனைப் பிரிந்து தனியே யிருக்கும் பெண்களை இவ்விதம் வஞ்சிப்ப தழகோ? பிறர் மனைவி தாய்க்கு சமானமல்லவோ? அவர்களிடம் வசனிக்கத் தகாத வார்த்தைகளைப் பேசலாகுமோ? அக்கினி சாட்சியாக என் அகங்கை பிடித்த அன்பரையன்றி, மற்றெவரையும் கனவிலும் கருதேன். எனக்கு விரதம், நோன்பு, தவம் முதலியனவெல்லாம் அவரே. அவரே குரு, அவரே தெய்வம். அவரையன்றி மும்மூர்த்திகளே எதிரில் வரினும் நான் நிலைதவறேன். தேவபோகம், அமிர்தம், திரண்ட செல்வம் முதலியவைகளைத் துச்சமாக மதிக்கிறேன். கற்பொன்றிருக்குமாகில் மேற்குறித்த எல்லாப் பொருள்களும், கீர்த்தியும், தனக்குத்தானே வந்தடையும். அவ்வளவு சிறப்புற்ற கற்பென்னும் இரத்தினத்தை இழந்து சொல்பப் பொருள்களுக் கிச்சை கொள்ளுவேனோ? எவ்வளவு கஷ்டங்கள் நேரிட்டபோதிலும், புருஷன் எப்படிப்பட்டவாயிருந்தாலும், பதிவிருதையான ஸ்திரீகளுக்கு அப்புருஷனுடன் கூடி, அவரையே தெய்வமென மதித்து, அவருக்கு சிசுருஷை செய்து கொண்டிருப்பதே பெரும் பாக்கியமாகும். அதுவே தர்மசாஸ்திரங்களின் விதி. அதினால் இம்மையில் சகல பாக்கியங்களையும், என்றும் அழிவில்லாத கீர்த்தியையும், மறுமையில்

மோட்ச சாம்பிராஜ்ஜியத்தையும் அடையலா கும். அவள் பத்தினிக் கடவுளெனப் பிறரால் போற்றப்படுவாள். அவளால் பிறந்தவிடம், புகுந்தவிடம் இரண்டிற்கும் மிகுந்த மேன்மை யுண்டாகும். பதிவிருதைகளின் மனம் கற்பு நிலையினின்று மெக்காலத்தும் தவறாது. எனக் குப் பிரபஞ்சவாழ்க்கை யெல்லாம் புருஷனே. மதயானையைப் போன்ற நடையும், மேக கர் ஜனை போன்ற ஸ்வரமும், முழங்கால்கள் வரை யில் நீண்டு பருத்திருக்கின்ற புஜங்களும், காத ளவு மோடிய விசால நேத்திரங்களும், சத்து ருக்களை நடுங்கச் செய்கின்ற தேஜஸ்ஸும், சிம் மம் போன்ற பராக்கிரமமும் உடைய மகானுபா வரான என் பர்த்தாவையே நான் எப்பொழு தும் தியானித்துக்கொண்டிருக்கிறேன். நான் அவருக்கே சொந்தம். என் உடல், பொருள், ஆவி எல்லாம் அவருடையனவே. அவரைத் தவிற, கூடப் பிறந்த சகோதரனேயாயினும் மற்றவர்களின் முகாலம்பனம் பண்ணிப் பேச வும் மாட்டேன். இது சத்தியம்" என்று லீலா வதி மிகுந்த படபடப்புடன் கூறி, "எப்பொழு தாவது என் கற்புக்குப் பங்கம் நேரிடுவதா யிருந்தால் ஜலத்தில் வீழ்ந்தோ, விஷத்தைத் தின்றோ, அக்கினியில் பிரவேசித்தோ என் னுயிரை மாய்த்துக் கொள்ளுவேனேயன்றி பரபுருஷனுக்கொருநாளும் இடங்கொடேன்" என்று தொடர்ந்து மொழிந்தாள்,

"கண்ணே! முப்பத்திமுக்கோடி தேவர் களுக்கும் அரசனாய்—அஷ்டதிக்கு பாலகர்கள், கந்தர்வர், யட்சர்கள், வித்தியாதரர்கள் முத லானவர்களுக்கும் அதிபதியாய்—மூவுலகங் களுக்கும் சக்கரவர்த்தியாய்,—விளங்குகிறவனு யும், நூறு அசுவமேத யாகங்களைச் செய்து சத மகனென்று பெயர் பெற்றவனும், தேஜஸ்வி யாயும், பிரதாபசாலியாயும், மகாமேதாவியா யும், அமிர்தபானஞ் செய்தவனும், சமஸ்த லட்சணங்களும் பொருந்தினவனும், மன் மதனும் கண்டு நாணத்தக்க திவ்ய சுந்தரனும், மரணமில்லாதவனுமிருக்கும் என்னை விட்டு, பாபியாயும், உலகங்களை அழிக்கின்றவனும், எல்லோராலும் நிந்திக்கப்பட்டவனும், விகார மான கோரரூபத்தையுடையவனும், சீக்கிரத் தில் நாசத்தையடையப்போகிறவனுமாகிய இருக் கிற அசுர பாதகனை ஆசிரயித்து ஏன் வீணாகக் கெட்டுப்போகிறாய்? என்னுடைய ராஜ தானி யாகிய அமராவதி என்னும் நகரமானது ஆயி ரம் யோசனை நீளமும் ஐந்நூறு யோசனை அக லமுமுள்ளது. முழுவதும் சுவர்ணத்தினாலும், வைடூர்யம், மாகதம், இந்திர நீலம், கோமேத கம் முதலான ரத்தினங்களாலும் நிர்மாணிக்கப் பட்டது. வஜ்ரமயமானப் பிராகாரங்களை யுடை யது. பரிமளமிகுந்த புஷ்பங்கள் நிறைந்த பாரி ஜாதம் முதலான விருட்சங்களையுடைய நந்தன மென்னும் உத்தியானவனத்தையுடையது. ஜன்மாந்திரங்களில் மிகுந்த புண்ணியஞ் செய்த பாக்கியசாலிகளுக்கேயன்றி, மற்றவர்களுக்கு அந்நகரத்தை நேத்திரங்களால் தரிசிக்கும் பாக் கியமும் கிடைக்கத்தக்கதன்று. அடி! மானே! நீ முன் ஜன்மங்களிற் செய்த புண்ணிய பரி பாகத்தினால், அந்நகரத்துக்குச் சக்கரவர்த்தினி யாய், சுதர்மை என்னும் சபையிலுள்ள தேவ சிம்மாசனத்தில் வீற்றிருந்து அரசு செலுத்தப் போகிறாய்! மன்மத பாணத்தினால் வாடிவதங்கு மென்னைத் திரஸ்கரிக்காதே. என் செல்வமே! இவ்வுலகமுழுவதும் உன் மயமாகவே எனக்குத் தோற்றுகிறது. சுற்றிலும் எதைப் பார்த்தா லும் நீயாகவே இருக்கிறாய், சதாகாலமும் உன்னை நினைத்து நினைத்து என் மனம் அனலி லிட்டமெழுகுபோல்உருகிக்கொண்டிருக்கிறது. நான் மகாவீரனாயும் வஜ்ராயுதத்தையுடையவ னுமிருந்தும் இந்த மன்மதனுடைய புஷ்ப பாணங்களை மட்டும் எதிர்த்து நிற்க எனக்குச் சக்தியில்லை. இந்தப்பாபி—மன்மதன்—உன் நிமித்தமாக என்னைக் கொல்லுகின்றான்.

உன்னுடைய திவ்யதிருமேனியையே எப்பொழுதும் என் மனதில் தியானித்து, சதா பூஜித்து, உன்னுடைய நாமத்தையே பஜித்துக் கொண்டிருக்கிறேன். தங்க விக்கிரகம் போன்ற உன்னுடைய கோமள சரீரத்தை என் ஆசை தீர அணைத்து ஆலிங்கனஞ் செய்து கொண்டாலன்றி என் தாபம் தணியப்போவதில்லை. என்னாசைக் கண்ணாட்டியே! என்மீது கிருபை வைத்து, உன் கடைக்கண் பார்வையால் என் மனங் குளிரும்படி செய்! உனக்கெந்தப் பொருளின்மீதிச்சை யிருந்தாலும், அது எந்த உலகத்திலிருந்தபோதிலும், இந்த நிமிஷமே வரவழைத்துத் தருகிறேன். உனக்குப் பூ முடிப்பது, கால் பிடிப்பது, சாமரம் வீசுவது முதலான கைங்கர்யங்களை நானே செய்து உன் மனதைச் சந்தோஷப்படுத்துவேன். நீ இப்பொழுது என்னை நிராகரித்தாலும், அதற்காகப் பிறகு பச்சாத்தாபப்படுவாய். என்னைக் காட்டிலும் ஐசுவர்யத்திலும், சம்பத்திலும், அழகிலும் மேம்பட்டவர்கள் ஒருவருமேயில்லை. என்னைப் போல் உன்மீது அடங்காக்காதல் கொண்டு, உன்னையே தஞ்சமென்றடைந்தவர்களையும் நீ பார்க்கப் போவதில்லை. கிடைத்தற்கரிய உத்தம பதவி உனக்காகக் காத்துக்கொண்டிருக்கிறது. எந்தப் பதவியை அடைவதற்காக மனிதர்கள் எவ்வளவோ யாகங்களையும், தபசுகளையும் செய்துகொண்டும், சொல்லொணாக் கஷ்டங்களை அனுபவித்துக் கொண்டுமிருக்கிறார்களோ அப்படிப்பட்ட சொர்க்கலோக வாசத்தை,—என்? மூவுலகங்களுக்கும் சக்கரவர்த்தினியா யிருக்கும் பாக்கியத்தை—ஒரே வார்த்தையினால் நீ அடைந்து விடலாம். என் கானமயிலே! என்னைக் கட்டியணைத்துக் கனிவாய் முத்தம் கொடுத்துக் காத்தருள்! மன்மத பாணத்தினால் மார்பு பிளக்கப்பட்டு, வேறு கதியின்றி உன்னையே சரணமடைந்தேன். என்னை உன்னுடைய அன்பனாக ஏற்றுக்கொள்" என்று அவளுடைய பாதங்களில் விழுந்து கெஞ்சினான் தேவராஜன்.

"பிரபுவே! வசனிக்கத் தகாத வார்த்தைகளைப் பேசுகிறீர். பிறருக்குரியவளான என்னைக் 'கண்ணே' என்றும் 'மணியே' என்றும் 'முத்தே' என்றும் நீர் அழைக்கலாகுமோ? நற்குடிப் பிறப்பையும், குலமானத்தையும் கைவிட்டீர். அன்பனில்லா வேளையில் வந்து வம்பு மொழிகளைப் பேசிப் பெண்பாபத்தை ஏன் கொட்டிக்கொள்ளுகிறீர்? சொந்த மனைவியைச் சந்நிதியில் விட்டு, அன்னியர் தாரங்களை அன்பாயழைக்க, உமக்கெந்த சாஸ்திரம் போதித்தது? தர்ம மறிந்த பெரியோர்கள்—உத்தம குலத்தில் பிறந்த சத்தியவான்கள்—தங்கள் உயிரேபோயினும் பிறர் மனைவி, பிறர் பொருள் இவைகளை விரும்பமாட்டார்களே! உம்மைப்போல் துடுக்குத்தனமாய்ப் பேசார்களே. உலகம் போற்றும் உத்தமி—கற்பரசி அதிதி தேவியின் திருமணிவயிற்றிலுதித்த உமக்கு இந்த துர்புத்தி எங்கிருந்து உண்டாயிற்று? தேவர்களும், அப்சரஸ்களும், திக்பாலகர்களும் வணங்கிப் போற்றும் திவ்விய சரணாரவிந்தங்களையுடைய நீர் கேவலம் பெண்பாலாகிய என்னுடைய காலடியில் வீழ்ந்து கிடப்பதழகோ? அதுவுமன்றி நான் வேறொருவரின் எச்சிற்பட்டவள். பிறரால் அனுபவிக்கப்பட்டவளாகவும், உம்மிடத்தில் ஆசையில்லாதவளாயுமிருக்கும் என்னைப் பலவந்தமாக அணைப்பதினால் உமக்கென்ன சுகமுண்டாகப் போகிறது? என்னைக் காட்டிலும் லட்சணமுள்ள எத்தனையோ யுவதிகள் விவாகமாகாத கன்னிகைகளாயிருக்கிறார்கள். அவர்களிலொருத்தியை அக்கினி சாட்சியாக விவாகஞ் செய்துகொண்டு நீர் சுகித்திருக்கலாம். அதினால் எவ்விதப் பழிச்சொல்லும் ஏற்படாது. உமக்கும் க்ஷேமமுண்டாகும். அதைவிட்டு, என்னை நீர் பலவந்தப்படுத்தி, எக்காலத்திலும் மாறாத அபகீர்த்தியையும் பழியையும் பாபத்

தையும் தேடிக்கொண்டலைவானேன்? நாளை வருங்கெடுதிகளை நீர் யோசிக்கவில்லை போலுங் காண்கிறது. இந்தக் குற்றம் உம்முடனற்றுப் போகாதே. உம்மை யண்டின தேவர்களுக்கும் நாசத்தை யுண்டாக்குமே. பிருகஸ்பதி முதலான பெரியோர்களின் நீதி வாக்கியங்களைக் கற்றும், உமக்குப் புத்தி தெளியாமற் போனதேன்? புலி பசித்தாலும் புல்லைத் தின்னுமோ? எவ்வளவுதான் மன்மத பாணத்தினுல் பீடிக்கப்பட்டாலும், பரஸ்திரீகளை நினைக்காலாகுமோ? சற்றுநோ வின்பத்துக்காகக் காலம் முழுவதும் கஷ்டப்படலாமோ? சுரபதியே! வீணுகக் கெட்டுப்போகாதீர். நீர் மகா புத்திமானுயிருந்தும், காமன் கைக்கணையால் கருத்தழிந்து, தாழ்ந்த ஜாதிக்காரரைப்போல் அதர்மத்துக்குள்பட்டு தாறுமாருய் நடப்பதைக் கண்டு எனக்கு ஆச்சரியமுண்டாகிறது. உம்மை நொந்துகொள்வதில் பயனில்லை. வீணுக, காலத்துக்குத் தகுந்தபடி விபரீத புத்தி உமக்குண்டாயிற்று. இப்பொழுது மென்ன? ஒன்றும் மிஞ்சிப்போய் விடவில்லை. என்னை விரும்பிப் பொல்லாத வார்த்தைகளைப் பேசும் கெட்ட நினைப்புகளையும், துற்புத்தியையும் விட்டு, தர்மத்தைக் கைக்கொண்டு நடந்தால் உமக்கு க்ஷேமமுண்டாகும். மூவுலகத்துக்கும் அதிபதியாய், தேவபோகங்களை அனுபவித்துக் கொண்டு சுகமாய் வாழலாம். இல்லாவிடில் நீரும் உம்மைச் சேர்ந்தவர்களும் சீக்கிரத்தில் நாசத்தையடைவீர்கள். அமிர்தபானஞ் செய்திருப்பதினுல் நமக்கு மரணமில்லை யென்று மதங்கொள்ளாதீர். உமது உயிருக்கு என்றும் அழிவில்லையாயினும், சகல சம்பத்துக்களையுமிழந்து, பதாதியாய்ப் பலவித துன்பங்களையும் அனுபவித்துக்கொண்டு உலகினில் உழன்று திரிய நேரிடும். கேவலம் பெண்பாலான இவளோ நமக்கு புத்தி சொல்வது என்று கர்வங் கொள்ளாதீர். குழந்தைகளேயாயினும் கிளிப்பிள்ளைகளேயாயினும், அவர்கள் சொல்லும் வார்த்தைகள் ஹிதமாயும், தர்மசாஸ்திரங்களுக் கொத்தவைகளாயுமிருந்தால், அவற்றை கிரகித்துக்கொள்ள வேண்டுமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். நமது குலத்துக்குக் களங்கம் உண்டாகக் கூடாதென்ற எண்ணத்தினுலும், நீர் எனது மைத்துனர் என்ற அபிமானத்தினுலும் இவ்வளவு தூரம் சொன்னேன். அதன்படி இனிமேலாவது நடந்து உமக்கு க்ஷேமத்தைத் தேடிக்கொள்ளும். இனி மற்ெருரு தரம் இவ்விதமான வார்த்தைகளைப் பேசாதீர்'' என்று லீலாவதி மிகுந்த கோபத்துடன் மொழிந்தாள்.

(தொடரும்.)

## பத்மா.

(ஸ்ரீமதி S. R. ஜயம்மாள்.)

1.

பகல் பன்னிரண்டு மணி இருக்கும். கோடை காலமாதலால் பாஸ்கரன் மிகவும் தீட்சண்யத்துடன் தன் காரியத்தை நடத்திக்கொண்டிருக்கிறுன். அந்த சமயத்தில் பத்மாவிற்கு எட்டாவது பிறந்த நாளுக்கு இன்னும் இரண்டு நாட்களே இருப்பதால் அவள் சிற்றம்மை வீடு முழுவதும் மாக்கோலம் இட்டுக்கொண்டிருந்தாள். பத்மாவிற்கும் விடுமுறை நாட்களாக விருந்ததினுல் அவளும் ராஜத்தின் பக்கத்தில் வேடிக்கை பார்த்துக்கொண்டு நின்றுகொண்டிருந்தாள்.

அவள் தாய் அன்னபூரணி அம்மாள் சமையல் கட்டுக்கு முன்புறமிருக்கும் தாழ்வாரத்தில்

பாயின்மீது உட்கார்ந்துகொண்டு வெற்றிலை மென்றுகொண்டே சரேலென்று ஏதோ ஆலோசித்துவிட்டு "அடி பத்மா! அப்பா கோர்ட்டுக்குப் போய்விட்டாரோ? ஓடிப்போய் பார்த்துக்கொண்டு வா" என்று தன் பெண்ணை அழைத்துக் கூறினாள்.

பத்மாவும் ஓடிப்போய்ப் பார்த்துவிட்டு வந்து இன்னும் தன் தந்தை கோர்ட்டுக்குப் போகவில்லையென்றும், உடை தரிக்கும் அறையில் (Dressing room) உடை தரித்துக்கொண்டிருப்பதாகவும் விடை அளித்துவிட்டுச் சென்றாள். உடனே அன்னம்மாள் எழுந்திருந்து அவ்விடம் சென்றாள்.

"இன்று என்ன யோசனை? கோர்ட்டிலிருந்து நேராக வீட்டிற்கு வருவதாகவா?" என்று அன்னம்மாள் கேட்டுக்கொண்டே உள் நுழைந்தாள்.

அதற்கு வக்கீல் அனந்தராம அய்யர் "ஆமாம், தினம் கிளப்பில் என்ன வேலை இருக்கிறது? அதுவுமல்லாமல் உடம்பும் சரியாக இல்லை. ஆதலால் நேராக வீட்டிற்கே வந்துவிடலாமென்று இருக்கிறேன்" என்று சொன்னார்.

"என்ன? நேராக வீட்டிற்கே வந்துவிடுகிறீரா? குழந்தை பிறந்த நாளிற்கு இன்னும் இரண்டு நாட்களே இருக்கின்றன. நாக ஒத்திற்கு நானே பண்ண கொடுக்கிறேனென்றும், 'வேண்டாம் நானே ஆர்டர் செய்கிறேன்; உன்னைத் தட்டான் மோசம் செய்துவிடுவான்' என்று சொன்னீர்கள். இன்றைக்கு நீங்களும் நகை பண்ண ஆர்டர் கொடுக்கச் செல்லாமல் நேராக வீட்டிற்கு வந்துவிட்டால் நகை எப்பொழுது பண்ணிவருகிறது?" என்று மளமளவென்று மூச்சுவிடாமல் அன்னம்மாள் பேசத் தொடங்கினாள்.

அய்யருக்கு பதில் கூற முடியவில்லை. மௌனத்துடன் உடுப்புகளை தரித்துக்கொண்டு வாசலிற்கு வந்தார். அங்கு வண்டி காத்துக்கொண்டிருக்க அதில் ஏறிக் கச்சேரிக்குச் சென்றார்.

அன்னபூரணியம்மாளோ என்னமோ முணுமுணுத்துக்கொண்டே பாயில் வந்து படுத்துக்கொண்டு கண் அயர்ந்தாள்.

அன்றையதினம் சாயங்காலம் பத்மாவதி தன் நேசிகளுடன் அவள் வீட்டு வாசலில் விளையாடிக்கொண்டிருக்க அன்னபூரணியம்மாள் வாசல் தாழ்வாரத்தில் (Verandah) ஓர் சாய்வு நாற்காலியின்மீது உட்கார்ந்துகொண்டு அவர்களைப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

அப்பொழுது ராஜம் விளையாட்டிலிருந்து ஓடிவந்து "அக்கா! அடுத்தாத்து மைத்ரேயி ஒரு நாக ஒத்து போட்டுக்கொண்டு வந்திருக்கிறாள். மிகவும் நன்றாக இருக்கிறது" என்றாள்.

"எங்கே, அவளை அழைத்துக்கொண்டுவா பார்ப்போம்" என்றாள் அன்னம்.

அப்படியே ராஜமும் அவளை அழைத்துக்கொண்டுவர, அன்னம்மாள் அவள் கையைத் திருப்பித் திருப்பிப் பார்த்துவிட்டு "மிகவும் நன்றாகத்தான் இருக்கிறது. புதியதாடீ!" என்று கேட்டாள்.

அதற்கு மைத்ரேயி ஆமாம் என்று தலையை அசைக்க "எந்தத் தட்டான் செய்தது?" என்று அன்னம்மாள் வினவ, தனக்குத் தெரியாதென்று மைத்ரேயி சொல்லிவிட்டு விளையாடச் சென்றாள்.

சிலநேரத்திற்கெல்லாம் அய்யரவர்கள் கால் நடையாக அவர் வீட்டு (Compound) க்குள் நுழைவதைக்கண்ட அவர் அகத்துக்காரியானவள் தொண்டையைச் சரிப்படுத்திக்கொண்டு தன் ஆசனத்தில் சரியாக அமரலானாள்.

அவர் வீட்டின் வாசற்படியை மிதிக்கு முன்னமே அன்னம்மாள் "ஏன் வண்டியில் வரவில்லை?" என்று அவரை வினவினாள்.

அதற்கு அய்யர் "கச்சேரியில் வேலை அதிக மாக இருந்ததால் வண்டியை காக்க வைக்காமல் பிரபுவின் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பி விட்டேன். என் வேலைகள் முடிந்ததும் கால் நடையாகவே நான் வீட்டிற்கு வந்துவிட்டேன்" என்று சொன்னர்.

"ஆனல் இன்றைக்கும் கடைக்குப் போக வில்லையா? பாருங்கள்! பக்கத்து வீட்டு வீரபத்திர அய்யர் பெண் மைத்ரேயிக்கு அவள் தாய் 10, 15 நாட்களுக்கு முன்புதான் ஒரு நாக ஒத்து பண்ணப்போவதாக சொன்னுள். அதற்குள் அந்தப் பெண் போட்டுக்கொண்டு வந்துவிட்டது. நான் அவள் பிறந்த அன்றைக்கே பிடித்து சொல்லிக்கொண்டிருக்கிறேன்" என்று பூர்வ கதைகளை ஆரம்பித்தாள்.

"இந்தப் பிறந்த நாளிற்கு நான் வாங்கிக்கொடுத்த புடவைக்குக் குத்திக்கொள்ளும் வைர ஊசியை (Brooch) குத்தி இட்டுவிடு. நாக ஒத்திற்கு அப்புறம் பார்ப்போம்" என்று சொல்லி விட்டு பதிலை எதிர்பார்க்காமல் பரபரப்புடன் உள் நுழைந்து உடுப்புகளை மாற்றிக்கொண்டு சமையற்காரன் கொணர்ந்த தின்பண்டங்களைக் கூடத் தின்னுமல் வெறும் தேத்தண்ணீரை அருந்திவிட்டுக் கையில் ஒரு தடியை (Walking stick) எடுத்துக்கொண்டு வேறு வழியாக வெளியிற் சென்றுர்.

அன்னம்மாள் மிகவும் கோபாக்கினியுடன் என்னவோ பலமாகக் கூறிக்கொண்டு இருந்த விடத்திலேயே உட்கார்ந்திருந்தாள்.

இந்தம்மாளுக்கோ பழைய காலத்து நகைகளும் வழக்கங்களுந்தான் பிடிக்கும். புலாக்கும், நத்தும், மூக்குத்தியும், மாட்டியும், காரையும், காசுமாலையும், வங்கியும், நாக ஒத்தும் பண்ணிப் போட்டுப் பெண்ணை அழகு பார்க்க வேண்டுமென்று ஆசை. அனந்தராம அய்யருக்கோ நகை பண்ணுவதிலேயே சும்மாப் பணம் செலவழிப்பதென்றுல் இஷ்டமில்லை. அவர் இந்தக் கால நாகரிகத்தின்படி நடப்பவர். முக்கியமாய் வேண்டிய சில நகைகளை செய்து தன் பெண்ணிற்குப் போட்டிருந்தார். அதுவுமல்லாமல் எப்பொழுதாவது நல்லமாதிரி நகையைக் கண்டால் உடனே வாங்கி வந்துவிடுவார்.

அய்யருக்குத் தன் பெண்ணை நன்றுகப் படிக்க வைத்து ஒரு நல்ல உத்தியோகத்திலிருக்கும் வாலிபனுக்குக் கொடுத்துக் கலியாணம் செய்ய வேண்டுமென்று ஆசை. அதற்குத் தகுந்தவாறு பெண்ணும் நல்ல புத்திசாலியாகப் பாட்டிலும் படிப்பிலும் நன்றுகப் பயின்றுவந்தாள். பார்ப்பதற்கும் மிகவும் லட்சணமாக இருந்தாள்.

இவர்கள் வெகு நாட்களாய் மதுரையிலேயே வசித்துவந்தனர். அனந்தராம அய்யருக்கு பத்மா என்று ஒரு பெண்ணும், பிரபாகரனென்னும் ஒரு பிள்ளை ஆக இரண்டே குழந்தைகள் தான்.

பிறந்த நாளும் அதிக சம்பிரமத்துடன் நடைபெற்றது. அன்னம்மாளும் கடைசிவரைக்கும் தன் ஜபம் ஜயிக்கவில்லையாதலால் அந்த வைர ஊசியையே போட்டாள்.

## II.

சில நாட்களுக்கெல்லாம் திருச்சி சங்கரய்யர் ஐயாயிரம் ரூபாய்கள் வரதட்சிணை கொடுப்பதாகவும் அதைத் தவிர்த்துப் பத்து ஆயிரம் ரூபாய்களுக்கு சீர்வகைகள் செய்வதாகவும் தன் பெண் சுசீலாவை அனந்தராம அய்யர் புத்திரன் பிரபாகரனுக்குக் கலியாணம் செய்துகொள்ளவேண்டுமென்று அனந்தராம அய்யரை வற்புறுத்தினர்.

அய்யருக்கோ வரதட்சிணை வாங்குவதென்றுல் பிடிக்காது. அதுவுமல்லாமல் தன் பிள்ளை நன்றுகப் படித்து வேலைக்கு வந்தபின் கலியாணம் செய்யவேண்டுமென்பது அவர் இஷ்டம். ஆனுல் அவர் சம்சாரத்தின் உபத்திரவம் பொறுக்க முடியாமல் கலியாணம் செய்து கொள்ளச் சம்மதித்தார். கலியாணமும் நன்றுக

நடைபெற்றது. கலியாணம் ஆகி ஆறு மாதத்திற்கெல்லாம் பெண்ணும் வீடு வந்து சேர்ந்தாள்.

அன்னபூரணியம்மாள் சந்தோஷத்திற்கு அளவே இல்லை. இவ்வளவு தினங்களாய்த் தான் என்ன சொன்னபோதிலும் மறுத்துக் கொண்டிருந்த தன் கணவன் இந்த விஷயத்திற்கு மறுக்காமல் தான் சொன்ன விதமே நடத்தினதற்கு மிகவும் சந்தோஷங் கொண்டாள். இப்படியே பத்மாவையும் தன் தமையன் பிள்ளை ராகவனுக்குக் கொடுத்துக் கலியாணம் செய்ய வேண்டுமென்று அப்பொழுதப்பொழுது தன் கணவனின் செவியில் போட்டுக்கொண்டிருந்தாள்.

ராகவன் கறுத்த மேனியுள்ளவனும், குட்டையாகவும், நல்ல பருத்த தேகமுடையவனையும், யானையின் கண்களைவிடக் கொஞ்சம் சிறிய கண்களுடையவனும், உச்சிக்குடுமி வைத்துக் கொண்டு காதில் மொச்சைக்காயவ்வளவு பருமன் வைரக்கடுக்கனும், கையில் மாட்டுச் சங்கிலியைவிடக் கொஞ்சம் பருமனுள்ள தங்கச் சங்கிலியையும் அணிந்துகொண்டு விளங்கினான். பத்மாவோ சிறுத்த தேகமும், வெளுத்த மேனியும், முத்துக்கள்போலப் பல்களுடையவளும், பரந்த முகமும், நீண்ட கண்களுமுடைய 11 வயது பாலகி.

இப்படியிருக்கக் கோடைகால ரஜா வந்தது. பிரபாகரனும் சென்னையிலிருந்து விடுமுறை நாட்களைக் கழிக்க மதுரை வந்து சேர்ந்தான். தாய் வீடு சென்றிருந்த சுசீலாவும் மாமி அகம் வந்து சேர்ந்தாள்.

இப்பொழுது பத்மாவிற்கு வயது பன்னிரண்டு ஆகிறது. 6-ம் வகுப்பு (III Form) தேறி விட்டாள். இனி மதுரையில் அவளுக்குப் படிக்கப் பெண்பள்ளிக்கூடத்தில் வகுப்பு இல்லை. இவ்வளவு படிக்கவைப்பதே அவள் தாய்க்குச் சம்மதமில்லை. அவள் தந்தை தயவினால் அதற்குள் கலியாணம் செய்துகொள்ளாமல் வாசித்துக் கொண்டிருந்தாள்.

அவள் தாயோ "ஐயோ! இன்னும் சும்மா இருக்கிறீரே. பெண் பருவம் அடையும் காலம் கிட்டிவிட்டதே. வரன்தேடும் பாடும் இல்லையே. சிவசிவா என்று நம் ராகவனுக்குக் கொடுத்துக் கலியாணத்தை நடத்தி விடலாமே. எவ்வளவு தடவை நான் சொல்லுவேன். இனிப் பள்ளிக்கூடம் போகவேண்டாம், நாலு பெயர் கண்களில் விழுந்தால் என்ன சொல்வார்கள் என்று எவ்வளவு சொன்னாலும் இல்லை; உன்னைப்போல் எல்லோரையும் வீண்வம்பு அளந்துகொண்டு படிப்பில்லா மூடமாய் இருக்கச் சொல்லுகிறாயா என்று பத்மாவும் சொல்ல ஆரம்பித்து விட்டாள். இனி என்ன செய்வேன்; இன்றைக்குச் சொல்லிப் பார்க்கிறேன். என்ன சொன்னாலும் சரி. நாளன்றைக்கு ஞாயிற்றுக்கிழமை. நாளை புறப்பட்டு கோயம்புத்தூர் போய் அண்ணா, நான் எல்லோரும்சேர்ந்து பிரபுவின் விடுமுறை நாட்கள் முடியு முன் கலியாணத்திற்கு முகூர்த்தம் பார்த்துவிடுவது" என்று அன்னபூரணியம்மாள் சாயந்திரம் பூந்தோட்டத்தில் உலாவிக்கொண்டே மனோராஜ்யம் செய்துகொண்டிருந்தாள்.

பங்களாவில் நடுக்கூடத்தில் (Drawing hall) பெரிய கடியாரமொன்று 'டிங்க், டிங்க், டிங்க்' என்று இரவு 10 மணி அடித்தது. அனந்தராம அய்யர் மாடியின் மீது படுக்கும் அறையில் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டு (Hindu) பேப்பர் வாசித்துக் கொண்டிருந்தார். அருகில் ஓர் சிறிய மேஜையின் மேல் ஓர் விளக்கும், சில புத்தகங்களும், ஒரு லோட்டாவில் பாலும், ஓர் வெள்ளிக் கூஜாவில் குடிக்கத் தண்ணீரும் வைக்கப்பட்டிருந்தன.

அந்த சமயத்தில் அன்னம்மாள் வெற்றிலைத் தட்டொன்றைக் கையில் ஏந்திக்கொண்டு வந்து அவர் அருகில் விரித்திருந்த ஓர் ரத்தின கம்ப

ளத்தின்மேல் உட்கார்ந்தாள். அய்யர் அவள் வருகையைக் கவனிக்கவில்லை.

சில நேரம் கழித்து அன்னம்மாள் "என்ன! பேசமாட்டேளா? பேப்பரில் என்னவிசேஷம்? அதின் மேல் மிகவும் கவனமாயிருக்கிறேளே" என்றாள்.

அதற்கு அய்யர் பேப்பரிலிருக்கும் ஓர் சித்திரப்படத்தை அவளுக்குக் காட்டி "இதோ ஓர் இந்தியப் பெண்ணுக்கும் ஓர் பார்சி வாலிபனுக்கும் கலியாணமாம். நானும் ஜாதிபேதம் பாராமல் ஒரு படித்த வாலிபனுக்கு அவன் எந்த ஜாதியாயிருந்தாலும் சரி, நம் பத்மாவைக் கொடுத்துக் கலியாணம் செய்ய வேண்டுமென்று யோசித்துக் கொண்டிருந்தேன்" என்றார்.

அதைக் கேட்ட அன்னம்மாள் திகைத்து என்ன செய்வதென்று தெரியாமல் "என்ன சொன்னீர்கள்! நம் ரத்தினம் பத்மாவை ஜாதியற்ற ஒரு மடையனுக்குக் கொடுக்க யத்தனிக்கிறீரா? குலம் கோத்திரமற்ற ஒருவனுக்குக் கொடுத்தால் நம் குழந்தை என்ன செய்யும்? நம் வீட்டை ஒரு நாய்கூட மதிக்காதே. நம் வீட்டுச் சோற்றை நாம் ஜாதி கெட்டுப்போய் விட்டோமென்று ஒரு காகம்கூடக் கொத்தாது" என்று என்னென்னமோ சமாரியாகப் பேசலானாள்.

அய்யர் இவை ஒன்றையும் கவனிக்காமல் வாசித்துக்கொண்டிருந்தார். பின் அன்னம்மாள் "ஏன் வெருமனிக்கிறீர்? நான் பத்மாவையும் அழைத்துக்கொண்டு கோயம்புத்தூரில் அண்ணா வீட்டுக்குப் போகவேண்டுமென்றிருக்கிறேன்" என்றாள். "போயேன், ஆனால் பத்மா என்னத்திற்கு பின்னால் வால்?" என்றார்.

"அவள் பெரியவளான பின் அண்ணா, ராகவன் ஒருவரும் பார்த்ததில்லை. ராகவன் பார்த்து ஒப்பினால் பிரபுவின் கோடைகால ரஜா முடியுமுன் கலியாணத்தைச் செய்து முடித்து விடலாம்" என்று சொன்னாள்.

"என்ன சொன்னாய்? கலியாணமா? இப்பொழுதுதான் குழந்தைக்கு வெடிய வெடியப் பன்னிரண்டு வயது ஆகிறது. அதற்குள் படித்துக்கொண்டும் விளையாடிக்கொண்டும் இருக்கும் குழந்தைக்குக் கலியாணமாம். பார்ப்போம்" என்று அய்யர் கூறிவிட்டு மௌனம் சாதித்தார்.

"நம்மவரில் பன்னிரண்டு வயது வரையிலும் யார் கலியாணம் செய்யாமல் இருக்கிறார்கள்? நன்றாகச் சொன்னீர். பெற்றவளுக்குத் தெரியும் அந்தக் கஷ்டம். கலியாணம் என்னும் வார்த்தையின் முதல் அக்ஷரம் சொல்லு முன் படிக்க வேண்டுமென்கிறீர். பெண்டாட்டி குழந்தைகளுக்குச் சம்பாதித்து போடவேண்டுமோ? என் தமையனுக்கும் ராகவனுக்கும் பெண்கள் படிப்பதென்றாலே பிடிக்காது" என்று மூச்சுவிடாமல் பேசத் தொடங்கினாள். "அதெல்லாம் எனக்குத் தெரியாது. பத்மாவிற்கு 16 வயது முடியுமுன் நான் கலியாணம் செய்யப் போவதில்லை" என்று மனதிற்குள் கூறிக்கொண்டு, "சரி, உன் தமையன் வீடு போகலாம். என்றைக்குப் புறப்படப் போகிறாய்? நாளன்றைக்குக் கோகிலம் (அய்யருடைய தங்கை) வரப் போகிறாள். நீ போய் விட்டால் எப்படி?" என்றார் அய்யர். "கோகிலம் வந்தால் வருகிறாள். அவளுக்கென்ன இது புதிய வீடா? வீட்டிலோ சுசீலா, பிரபு, நீங்கள் எல்லோரும் அவளை வரவேற்க இருக்கிறீர்களே" என்று சொல்லிவிட்டுப் பரமசந்தோஷத்துடன் அவ்விடத்தினின்று எழுந்து சென்றாள்.

மறுநாட் காலை அன்னம்மாள் அவசரமாய்ச் சாமான்களைக் கட்டிக்கொண்டிருந்தாள். அவ்விடம் பத்மா ஓடி வந்து "என்ன அம்மா! அவசரமாய் மூட்டை கட்டுகிறாயே. எங்கே பயணம்?" என்று கேட்டாள்.

"மாமா ஆத்துக்குத் தான். உன் சாமான்களையும் இப்பொழுதே கொண்டுவா" என்றாள்.

"உம், நான் வரமாட்டேன். அங்கு வந்தால் 'நாட்டுப்பெண், நாட்டுப்பெண்' என்று மாமா, மாமி எல்லோரும் என்னைப் பரிகாசம் செய்வார்கள்" என்று கூறினாள்.

"ஆம், பெண்ணாய்ப் பிறந்தால் ஒரு வீட்டிற்கு நாட்டுப்பெண் ஆகத்தான் வேண்டும். அதற்கெல்லாம் பயப்பட்டால் முடியுமா? சீக்கிரம் சாமான்களைக் கொண்டுவா" என்று அன்னம் சொன்னாள்.

"இல்லை, நான் வரவில்லை. நாளைக்கு அத்தை, கமலம், கிட்டு எல்லோரும் வரப்போகிறார்களாம். நீ போய்விட்டு வா!" என்று பத்மா சொல்லிவிட்டுப் படிக்கச் சென்றாள்.

"சரி, அப்பனைப் போலவே பெண்ணும் சொல்லுகிறாள். எப்படியோ போகட்டும்" என்று அன்னம்மாள் நினைத்துக்கொண்டு கோபத்தைத் தாளாதவளாய் பதில் அளிக்கவில்லை.

அன்றைய தினமே அன்னம்மாளும், அவள் தங்கையும் கோயம்புத்தூர் புறப்பட்டுப் போனார்கள்.

மறு நாள் விடியற் காலம் அனந்தராம அய்யர் வீட்டு வாசலில் ஓர் குதிரை வண்டி வந்து நின்றது. அந்த வண்டியின் சத்தத்தைக் கேள்வியுற்றதும் படுக்கையை விட்டு எழுந்து பல் விளக்கப் போய்க்கொண்டிருந்த பத்மா அத்தை வந்து விட்டாளென்று தெரிந்துகொண்டு வாசலுக்கு ஓடி வந்து, "வா கமலா! கிட்டு வா!" என்று ஒவ்வொருவரையாய் அழைத்தாள். எல்லோரும் உட் சென்றார்கள். க்ஷேம சமாசாரங்களை ஒருவருக்கொருவர் விசாரித்த பின் எல்லோரும் பல் விளக்கிக்கொண்டு காப்பி அருந்தச் சமையலறைக்குச் சென்றார்கள்.

இப்படியே சில தினங்கள் சென்றன. கோயம்புத்தூரிலேயோ அன்னபூரணியம்மாள் அவள் தமையன் எல்லோரும் கலியாணத்தைப் பற்றி யோசித்துக்கொண்டிருந்தார்கள்.

ஒரு நாள் எல்லோரும் சாப்பிட்டுக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது கோகிலம் பத்மாவை அவள் எந்த வகுப்பில் வாசிக்கிறாளெனக் கேட்டாள். அதற்கு பத்மா தான் III Form தேறி விட்டதாகவும் அதற்கு மேல் படிக்க அந்த ஊரில் பள்ளிக்கூடத்தில் வகுப்பு இல்லை என்றும் விடை யளித்தாள்.

"அண்ணா! ஆனால் பத்மாவை என்னுடன் அனுப்பிவிடேன். கமலாவும் இந்த வருடம் IV Form போகப் போகிறாள். அவளுடன் இவளும் படிக்கட்டுமே. பிரபுவும் அவ்விடமே இருக்கிறான்" என்றாள் கோகிலம்.

"ஆகா! அப்படியே செய்யலாம். நானும் அப்படியே யோசித்திருக்கிறேன். ஆனால் உன் மதனி ஒப்பமாட்டாளே" என்று மிகவும் விசனத்துடன் தன் தங்கையின் முகத்தைப் பார்த்துக்கொண்டே மொழிந்தார் ஐயர்.

"மன்னி அப்படித்தான் சொல்லுவாள். அவளுக்கு முன்னே பிடித்தே படிப்பென்றால் விஷம்போல் இருக்கும். நீ அனுப்பி விடு" என்று சொன்னாள் கோகிலம்.

பிறகு எல்லோரும் மௌனமாய்ச் சாப்பிட்டு விட்டுக் கை அலம்பிக்கொள்ளச் சென்றார்கள். கோகிலம் தான் இன்னும் 4, 5 நாட்களில் மன்னி வரவைப் பார்த்துவிட்டு ஊருக்குப் போவதாகவும், குழந்தைகளுக்கு இன்னும் 7, 8 நாட்களில் பள்ளிக்கூடம் திறந்துவிடுவதாகவும் தன் தமையனுக்குத் தெரிவித்தாள்.

அன்றையதினம் இரவெல்லாம் அனந்தராம அய்யருக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. பின் இவ்வாறு யோசிக்கலானார். "கோகிலமோ பத்மாவைப் படிக்க அனுப்பச் சொல்லுகிறாள். எனக்கும் குழந்தையைத் தக்கமட்டில் நன்றாகப் படிக்க வைக்கவேண்டுமென்று மிகவும் ஆசையாக இருக்கிறது. ஆனால் அன்னம் இதற்கு ஒப்பமாட்டாளே. என்ன செய்வேன்? படிக்க

அனுப்பாவிட்டால் கோகிலம் 'அன்று பெண்டாட்டி சொற்படிக்கெல்லாம் ஆடுகிறுன், கிஞ்சிற்றும் தைரியமில்லை' என்று நினைத்துக் கொள்வாள். அனுப்ப முயன்ருலோ தான் சொல்லும் சொற்கள் எதுவும் லட்சியமே இல்லையென்று அன்னம் சினந்துகொள்வாள். மரத்தின்மேல் காடியும் கீழே புலியும் இருக்கும்பொழுது பாதிமரத்தில் தொங்கிக்கொண்டிருக்கும் மனிதனுடைய கஷ்டத்தைப்போல் நானும் தவிக்கிறேன். என் செய்வது?'' என்று யோசித்துக்கொண்டிருக்கும்பொழுது மணி ஒன்று அடித்தது.

அய்யர் படுக்கையை விட்டெழுந்து ஒரு சாய்வு நாற்காலியைத் தூக்கிக்கொண்டு போய் வெளி மாடியில் போட்டுக்கொண்டு அதில் சாய்ந்த வண்ணமாகப் பலவித யோசனைகள்செய்யலானுர். மணி இரண்டும் அடித்தது, மூன்றும் அடித்தது. அய்யருக்கு என்ன செய்வதென்று புலப்படவில்லை. கடைசியில் இனி யார் என்ன சொன்னபோதிலும் சரி, தன் பெண்ணைப் படிப்பதற்குத் தன் தங்கையுடன் சென்னைக்கு அனுப்புவதாகத் தீர்மானித்துக்கொண்டு உட்சென்று படுக்கையில் உறங்கலானுர்.

இரண்டு மூன்று நாட்கள் கழிந்ததும் அன்னபூரணியம்மாளும் ஊர் வந்துசேர்ந்தாள். அன்றைபதினம் மத்தியானம் எல்லோரும் காப்பி குடித்தபின் பெண்டுகள் தலை பின்னிக் கொள்ள உட்கார்ந்தார்கள். சுசீலா தலை பின்னிக்கொள்வதற்கு வேண்டிய சாமான்களைக் கொண்டுவந்து தன் மாமியாரிடம் வைத்துவிட்டுப் பூப்பறித்துக்கொண்டுவரத் தோட்டத்திற்குச் சென்ருள்.

அன்னம்மாள் கோகிலத்திற்குத் தலை பின்னிக்கொண்டிருக்கும்பொழுது அனந்தராம அய்யருக்கும் அன்று கோர்ட்டு இல்லாததால் அவர் அவ்விடம் ஏதோ பேசுவதற்காக வந்தார்.

அவரைக் கண்ணுற்றதும் அன்னம்மாள் "எல்லாம் நிச்சயம் செய்துவிட்டேன். இந்த மாதம் இன்றைக்குத் தேதி இரண்டாயிற்று. கலியாண முகூர்த்தம் வருகிற மாதம் 15-ந் தேதி வைத்திருக்கிறது. வெள்ளிப்பாத்திரம் முதலியவை வாங்க என் தமையனுக்கே நன்ருகத் தெரியுமாதலால் அவனையே சென்னையிலிருந்து தருவிக்கச் சொல்லிவிட்டேன்'' என்று சொன்னுள்.

அய்யர் வாயைத் திறக்கவே இல்லை. திரும்பவும் யஜமானியம்மாள் கோகிலத்தைக் குறித்து "என்ன கோகிலம்! நீயும் கலியாணத்தைக் கழித்துக்கொண்டு ஊர் வந்து சேருகிறேனென்று மாப்பிள்ளைக்கு எழுதிவிடு'' என்ருள்.

"இல்லை மன்னி! நான் நாளனன்றைக்குப் புறப்படவேண்டும். குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடம் திறந்து விடுகிருர்கள். அப்புறம் அவர்களுக்குப் பாடம் போய்விடும். அண்ணு கூடப் பத்மாவை என்னுடன் படிக்க அனு...'' என்று கோகிலம் சொல்லி முடிக்கு முன் "படிக்கவா? நன்ருகத்தான் இருக்கிறது, பொம்மனுட்டிப் பெண்ணுக்கு இத்தனை நாட்களாய்ப் படித்தது போதாதா? கலியாணத்திற்கு நிற்கும் பெண்ணுக்குக்' கலியாணம் செய்யும் யோசனையை விட்டுப் படிக்க அனுப்புகிருராம் படிக்க!" என்று அடிவயிற்றிலிருந்து உரக்கக் கூவினுள் அன்னம்மாள்.

அதற்குள் இந்த வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டுவந்த பத்மா "ஆமாம் அம்மா! நான் அத்தையுடன் சென்னைக்குப் படிக்கச் செல்லப் போகிறேன். நானும் கமலாவும் ஒரே வகுப்பில் தான் படிக்கிருேம். நான் அடிக்கடி கடிதம் போடுகிறேன். நவராத்திரி ரஜாவிற்கு இங்கு வந்துவிடுகிறேன்'' என்று மிகவும் சந்தோஷத்துடன் மொழிந்தாள்.

அன்னம்மாளுக்கு இந்த வார்த்தைகளை எல்லாம் கேட்கக் கேட்க எரிகிற உடம்பில் எண்

ணையைக் காய்ச்சிக் கொட்டினாற்போல் இருந்தது. என்ன செய்வாள் பாபம்!

இவ்வளவு நாழிகையாகப் பெட்டிக்குள்ளிருக்கும் பாம்புபோல் இருந்த அய்யாவர்கள் மெள்ள "இந்த வருஷம் கலியாணம் நடக்குமென்பது உன்னுடைய வீண் எண்ணம். நீ என்ன சொன்னபோதிலும் சரி, நான் பத்மாவை இன்னும் அதிகம் படிக்கவைத்துவிட்டு அப்புறம் அவளாக இஷ்டப்பட்ட வாலிபனைக் கொண்டு கலியாணம் செய்யப்போகிறேன்" என்று திடமாய்க் கூறிவிட்டு அவ்விடத்தை விட்டு அகன்றார்.

அன்னபூரணியம்மாள் சரசரவென்று தலை பின்னிவிட்டு அய்யரை வீடுமுழுவதும் தேடினாலும் அவரைக் காணவில்லை. கடைசியாக அவர் கிளப்புக்குச் சென்றுவிட்டதாக ஒரு ஆள் தெரிவித்தான். இப்படியே அன்றைய தினம் முதல் யஜமானரைக் கண்டு பேச யஜமானியம்மாளுக்கு மிகவும் அரிதாகவிருந்தது.

III.

அன்னபூரணியம்மாளும் பெண்ணைச் சென்னைக்குப் படிக்க அனுப்பாமலிருப்பதற்கும், அந்த வருஷமே அவளை ராகவனுக்குக் கொடுத்துக் கலியாணம் செய்வதற்கும் எவ்வளவோ முயற்சிகள் செய்தாள். பாபம்! ஒன்றும் பலிக்கவில்லை. கடைசியில் பத்மா சென்னைக்குச் சென்று பள்ளிக்கூடத்தில் சேர்ந்துவிட்டாள். விடுமுறை நாட்களில் அவளும் அவள் தமையனுமாய் மதுரைக்கு வந்துவிட்டுப் போவார்கள். பின் பிரபுவிற்கும் படிப்பு முடிந்ததால் சேலத்தில் ஓர் இஞ்சினியர் வேலையில் அமர்ந்து குடும்பத்தை நடத்தி வந்தான். பத்மா ஒவ்வொரு தடவை தன் தமையன் வீடு சென்று தன் மதனி, மருமகன் கமலாகரன் எல்லோருடனும் வேடிக்கையாக இருந்துவிட்டு வருவாள்.

அவளுக்கு வயதும் பதினைந்து ஆயிற்று. கமலாவும், பத்மாவும், இவர்கள் நேசி சாந்தாவும் ஒரே வயதினர், ஒரே உயரம், ஒரே பருமன், ஒரே நிறம், ஒரே பள்ளிக்கூடத்தில் மெட்ரிகுலேஷன் பரீட்சைக்கு வாசித்து வந்தனர். ஆனால் சாந்தா மாத்வப்பெண். கமலா, சாந்தா இருவர் வீட்டினரும் மைலாப்பூரிலேயே வசித்து வந்தனர். ஆனால் சாந்தா வீடு கமலா வீட்டைவிடப் பள்ளிக்கூடத்திற்கு தூரமாக விருந்தது. ஆதலால் சாந்தா தினம் அவள் தமையன் டாக்டர் வி. ராமசந்திரனுடன் மோடார் சைகிலில் (side car)ல் பள்ளிக்கூடத்திற்கு வந்து போவாள். கமலாவும், பத்மாவும் பள்ளிக்கூடத்திற்கு நடந்து போவார்கள்.

ஒரு நாள் கமலாவுக்கு ஜுரமாதலால் பத்மா மட்டும் பள்ளிக்கூடம் போய்விட்டு சாயந்திரம் ஐந்து மணிக்கு வீட்டிற்குத் திரும்பி வந்துகொண்டிருந்தாள். நாலு தெருக்கள் சேரும் ஒரு இடத்தில் வரவே ஒரு பலத்த மழை பெய்ய ஆரம்பித்தது. உடனே பத்மா தங்கியிருப்பதற்கு ஓர் இடத்தைத் தேடுவதற்குள் அவள் எதிரில் ஓர் பஸ் வந்துகொண்டிருந்தது. இடதுபுறம் திரும்பினால், அங்கிருந்து இரண்டு குதிரைகள் பூட்டிய ஓர் வண்டி அதிவேகத்துடன் வந்துகொண்டிருந்தது. பின்புறத்திலிருந்து டாக்டர் வி. ராமசந்திரன் தன் தங்கை பள்ளிக்கூடத்திற்குப் போய் அவளை அழைத்துக்கொண்டு வீட்டை நோக்கி வந்துகொண்டிருந்தான்.

பத்மா ஒரு அடி முன் வைப்பதற்குள் அந்த பஸ் அவள் கிட்ட நெருங்கிவிட்டது. என்ன செய்வாள் பாபம்! நல்லவேளையாக அவளுக்கும் அந்த பஸ்ஸிற்கும் இரண்டடி தூரம் விட்டிருந்ததால் அதினின்று தப்பித்துக்கொள்ளவே, குதிரை கட்டிய வண்டியும் அவளைத் தாண்டிக்கொண்டு சென்றது. அப்பொழுது

அந்த வண்டியின் ஒரு சக்கரம் அவளைத் தள்ளி விட்டது. உடனே பிரக்ஞை தப்பிக் கீழே விழுந்துவிட்டாள்.

இந்தப் பரிதாபகரமான காட்சியைக் கண்டவுடனே ராமசந்திரன் மோடார் சைகிலை நிறுத்திவிட்டு அவளிடம் வந்து அவளையும் சாந்தா உட்கார்ந்திருந்த (side car)ரில் போட்டுக்கொண்டு மறுபடியும் தன் ஆஸ்பத்திரிக்குச் சென்று அவளுக்கு வேண்டிய சிகிச்சைகளைச் செய்வித்தான். தலையில் மாத்திரம் பலத்த காயம் பட்டிருந்தது.

பின் ராமசந்திரன் பத்மாவின் அத்தையின் வீட்டை சாந்தாவின் மூலமாகத் தெரிந்து கொண்டு அவர்கள் வீட்டிற்கு ஒரு சீட்டை ஒரு ஆளிடம் கொடுத்தனுப்பினான்.

பத்மாவின் அத்தை கோகிலம் மணி ஏழு அடித்தும் பத்மா வீட்டிற்கு வாராததைக்கண்டு என்ன செய்வதென்று தெரியாமல் மிகவும் ஏக்கமுற்றிருந்தாள். அவள் புருஷன் சுப்பிரமணியனும் ஆபீசிலிருந்து வந்திருக்கவில்லை. வீட்டிலிருந்த சேவகனும் அன்றைக்கு ரஜாவிலிருந்தான்.

"என்னடி செய்வது கமலா? குழந்தையை இன்னும் காணுமே. நான் காலமேயே சொன்னேன். தனிமையாகப் போகவேண்டாம், நாளைக்கு இருவருமாகப் போகலாமென்றேன். அதற்கு பத்மா பரீட்சை நாள் கிட்ட வந்து விட்டதென்றும் தைரியமாகப் போய் வருவதாகவும் சொன்னாள். இன்னும் வரக்காணுமே. வழியில் என்ன ஆபத்து நேர்ந்ததோ என்னமோ. நான் அண்ணா, மன்னிக்கு என்ன பதில் சொல்வேன்? அப்பாவையும் இன்னும் காணுமே" என்று கோகிலம் கண்களில் தாரைதாரையாகப் பெருகும் ஜலத்தைத் தன் புடவைத் தலைப்பினால் துடைத்துக்கொண்டு தன் பெண்ணினிடம் தழுதழுத்த குரலில் மொழிந்தாள்.

"அம்மா! ஏன் இப்படி பயப்படுகிறாய்? பத்மாவிற்கு ஒரு ஆபத்தும் நேர்ந்திருக்காது. பள்ளிக்கூடத்தில் ஏதாகிலும் உபன்யாசம் செய்திருப்பார்கள். ஆதலால் வீடுவர நேரம் ஆயிருக்கும். நீ பயப்படாதே. எல்லாம் சுவாமி நமக்கு நன்மைதான் செய்வார்" என்று கமலா தன் அன்னைக்குத் தைரியம் கூறிவிட்டு "டே, கிட்டு! நம்ப வீட்டுத் தெருவின் கோடிவரையிலும் போய் பத்மா வருகிறாளா, பார்த்துவிட்டு வாப்பா" என்று தன் தம்பியை அழைத்து அன்புடன் கூறினாள்.

"கோடி என்றால் எனக்கு எந்தக் கோடி என்பது தெரியாதே, அக்கா" என்றான் கிட்டு.

"அதாண்டா, அம்முலு வீட்டு வரையிலும் போய்ப் பார்த்துவிட்டு வா. வேகமாக ஓடிப் போய்ப் பார்த்து விட்டு வா. நான் உனக்கு பெப்பிரமின்டு கொடுக்கிறேன்" என்று அதற்குக் கமலம் சொல்லி அவன் கையில் இரண்டு பெப்பிரமென்டு வைக்கவே, கிட்டு மூச்சு வாங்க வாங்க ஓடிப்போய்ப் பார்த்துவிட்டு "பத்மா வரவில்லை" என்று கமலத்தினிடம் கூறிக் கொண்டிருந்த சமயத்தில், வாசற் கதவண்டை இருவர் யாரோ பேசும் குரல் கேட்கவே எல்லோரும் அவ்விடம் சென்றார்கள்.

"சுவாமி! இது தானே சுப்பிரமணிய அய்யர் வீடு?" என்றான் ஒரு ஆள்.

"ஆமாம்! என்ன அது கையில்?" என்று சுப்பிரமணியன் கேட்க அந்த ஆள் அவர் கையில் ஒரு நிருபத்தை வைத்து விட்டு "என் யஜமான் டாக்டர் வி. ராமசந்திரர் ஆஸ்பத்திரியிலிருந்து இந்தக் கடிதத்தைத் தங்களுக்குக் கொடுத்தனுப்பி இருக்கிறார்" என்றான்.

சுப்பிரமணியன் அந்தக் கடிதத்தை விரித்து வாசித்துக் கொண்டிருக்கும்பொழுது, "ஆஸ்பத்திரியில் என்னடா விசேஷம்?" என்று கோகிலம் ஆனை மிகவும் நடுக்கத்துடன் கேட்டாள்.

அவன் யாரோ ஒரு சிறுமியைத் தன் யஜமானர் ஆஸ்பத்திரியில் கொண்டு வந்து படுக்கவைத்திருப்பதாகவும், அந்தப் பெண்ணுக்கு மிகவும் அடிபட்டிருப்பதினல் மூர்ச்சித்திருப்பதாகவும் கூறி விடைபெற்றுக்கொண்டு சென்றான்.

பின் கோகிலம் "கமலா! நான் சொல்லவில்லையா? பார்த்தாயா? என் செல்வமே! பத்மா! பத்மா! உன்னை நான் உயிருடன் பார்க்க வேண்டுமே, ஆ! ஜகதீசா!" என்று முறையிட்டாள்.

பின் எல்லோரும் ஆஸ்பத்திரிக்குச் சென்றார்கள். பத்மாவும் மூர்ச்சை தெளிந்து பக்கத்தில் சாந்தாவும் அவள் தமையனும் நிற்பதைக்கண்டு தான் அங்கு இருப்பதற்கு ஆச்சரியங்கொண்டிருந்தபொழுது கமலா முதலியவர்கள் வருவதைக் கண்டு சற்று மனம் தெளிந்தாள். சுப்பிரமணியன் அன்றே அனந்தராம அய்யருக்குத் தந்தி அடித்தான்.

அனந்தராம அய்யருக்கு இரவெல்லாம் சரியாகத் தூக்கம் வாராததால் விடியற் காலம் ஐந்து மணிக்கெல்லாம் மாடியிலிருந்து கீழே வந்து கொண்டிருந்தார்.

அதற்குள் யஜமானர் வருவதைக்கண்ட ஒரு ஆள் ஒரு தந்தியைக் கொணர்ந்து அவரிடம் கொடுத்தான். "எப்பொழுதுடா இதுவந்தது?" என்று அய்யர் அவனை வினவினர்.

"மிகவும் நேரம் ஆச்சுது சுவாமி. சுவாமியை நித்திரையினின்று எழுப்ப மனமில்லாமல் வைத்திருந்தேன்" என்று அதற்கு சேவகன் பதிலளித்தான்; இனி மேல் தந்தி வந்தால் அவ்விதம் தாமதிக்கக் கூடாதென்று அவனுக்குக் கூறிவிட்டு தந்தியை உடைத்து வாசித்தார். வாசித்தவர் கம்பம் போல் ஸ்தம்பித்து நின்றுவிட்டார். கண்களில் நீர் பெருக, அவ்விதமே பதினைந்து நிமிஷங்கள் நின்றார். பின் மனைவி இறங்கி வரும் சத்தத்தைக்கேட்டு, தன் நிலைமையைக்கண்டு அவள் பயப்படுவாளென்று கண்களைத் துடைத்துக்கொண்டு, "அன்னம்! நம் பத்மா வண்டியில் சிக்கிக்கொண்டு அடிபட, ஆஸ்பத்திரியில் விட்டிருக்கிறார்களாம்" என்று அரையும் குறையுமாக மிகவும் கஷ்டத்துடன் கூறினர். "என்ன! நம் பத்மாவா! நான் அப்பொழுதே சொல்லவில்லையா? படித்தவபோதும், அங்கும் இங்கும் அனு—" என்று அன்னம் உரக்கச் சொன்னாள். அய்யர் "சரி போதும், உன்னை நான் இப்பொழுது ராமாயணம் படிக்கச் சொல்லவில்லை. சென்னைக்குப் புறப்பட சித்தமாக இரு" என்று சொல்லிக்கொண்டே அவ்விடத்தை விட்டுச் சென்றார். பின் இருவரும் அன்றைய தினமே சென்னைக்குப் புறப்பட்டுப் போய்ச் சேர்ந்தார்கள். பத்மாவிற்கும் கொஞ்சம் கொஞ்சமாக சுகமாக ஆரம்பித்தது.

தினத்திற்கு நாலைந்து தடவை ராமசந்திரன் பத்மாவைப்போய்ப் பார்த்துக்கொண்டும் வேண்டிய மருந்துக்களைக் கொடுத்துக்கொண்டும் வந்தான். இருவரும் ஒருவரை ஒருவர் நேசித்துக்கொண்டு வந்தனர்.

பத்மாவோ தன் உள்ளத்திலிருப்பதைத் தன் பெற்றோர்களுக்கும் ராமசந்திரனுக்கும் எவ்வாறு தெரிவிப்பதென்று பரிதபித்தாள். அன்று மூர்ச்சை தெளிந்தவுடன் அவனைக்கண்டவுடனேயே இருவர் கண்களும் ஒன்றாகச் சேர்ந்தன. அன்றைய தினம் பத்மா ராமசந்திரனை மனதில் வரித்து விட்டாள். பத்மா அவரைத் தான் கலியாணம் செய்துகொள்ளப் போவதாகவும் அவரை விட்டால் வேறொருவரையும் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை யென்றும் பலவித யோசனைகள் செய்தாள்.

"இன்று அவர் என்னைப் பார்க்கவரும்பொழுது நாமிருவரும் தனித்திருந்தால் அவருக்கு என் உள்ளத்திலிருப்பதைக் கூறி விடுகிறேன்" என்று ஒரு நாள் மனதை திடப்படுத்திக்கொண்டாள்.

இது இப்படி இருக்க ராமசந்திரனுக்கும் அவள் மேல் இருந்த அன்பு அதிகரித்துக் கொண்டு வந்தது. அவனும் தன் மனதிலிருப்பதைத் தன் பெற்றோர்களுக்குத் தெரிவித்தால் அவர்கள் தன்னை என்ன வென்று நினைப்பார்களோ. பத்மாவின் பெற்றோர்களுக்குத் தான் சொன்னாலும் "கிஞ்சிற்றும் யோசிக்காமல் ஜாதி விட்டு ஜாதி எந்த விதம் கேட்கிறான்?" என்று சொல்லுவார்களோ; அல்லது அவளிடமே தெரிவித்தாலும், அவள் மறுத்து விட்டால் தனக்கு மிகவும் அவமானமாகுமே என்று பலவிதம் யோசித்தான். கடைசியில் பத்மா தீர்மானித்த தினமே, அவனும் அவளிடம் தன் இஷ்டத்தைத் தெரிவிப்பதாகத் தீர்மானம் செய்துகொண்டான்.

அன்றைய தினம் சுமார் 4 மணிக்கு ஆஸ்பத்திரியில் ஒவ்வொரு வியாதியஸ்தரையும் பார்த்து விட்டுக் கடைசியில் பத்மா படுத்திருக்கும் அறைக்குள் வந்தான். அவன் வரவைக்கண்டவுடன் ஏதோ வாசித்துக்கொண்டிருந்த பத்மா அவனைக் கண்டு வெட்கத்துடனும் புன்முறுவலுடனும் சாய்வு நாற்காலியில் தலையைக் குனிந்த வண்ணம் சாய்ந்திருந்தாள்.

ராமசந்திரன் அவள் அழகிய வதனத்தைக் கண்டு மகிழ்வுற்று அங்கு யாரும் இல்லாமையைக் கண்டு சுவாமிக்கு வந்தனமளித்துவிட்டு மெள்ள அவளிடம் வந்து அவள் கைகளைப் பற்றிக்கொண்டு "என்ன பத்மா, உடம்பு எப்படி இருக்கிறது, தேவலை தானே?" என்று புன்சிரிப்புடன் வினவினான். 'ஆமாம்' என்று பத்மா தலையை அசக்கினாள். இருவரும் சில நேரம் மௌனமாயிருந்தார்கள்.

பின் ராமசந்திரன் பத்மாவை நோக்கி "ஏன் என்னிடம் பேசமாட்டாயா? நான் யார்? இவ்வளவு வெட்கப்படுகிறாயே" என்று மிருது மொழிகளுடன் கூறினான்.

பத்மா சிறிது நேரம் தயங்கி இன்னும் தாமதித்தால் யாராகிலும் அவ்விடம் வந்து விடுவார்களென்று மெள்ள "நான் மனதில் வரித்திருக்கும் நண்பர்" என்று தன் இனிய சொற்களில் மொழிந்து விட்டு மிகவும் கூச்சப்பட்டவளாய் நிலத்தை நோக்கினாள்.

ராமசந்திரன் குயிலினும் இனிய அவள் குரலைக் கேள்வியுற்று அதிக மகிழ்வுடன் அவளுடன் பேசிக்கொண்டிருந்தான். பின் அவன் இந்த சம்பந்தம் தன் பெற்றோர்களுக்கு முழுவதும் சம்மதமென்று அவனுக்குத் தெரியுமென்றும் பத்மாவின் பெற்றோர்கள் சம்மதப்படுவார்களாவென்றும் அவளைக் கேட்டான். "என் தந்தையும் இஷ்டப்படுவார் ஆனால்—" என்னு முன் துக்கம் வந்து பத்மா நெஞ்சை அடைத்துக் கொள்வதைக்கண்ட ராமசந்திரன் "சரி, அவள் தாய் இந்த விஷயத்திற்கு இசையமாட்டாள் போலிருக்கிறது. அவளை மெள்ள துக்கத்தினின்று மீட்கவேண்டும்" என்று யத்தனித்து "பத்மா! தெய்வகிருபையால் எல்லாம் நல்லதாகவே முடியும். நீ சும்மா யோசனைப்பட வேண்டாம். அப்புறம் உடம்பு கெட்டுப்போய் விடும். நேரமாகிறது, நான் போய் வருகிறேன்" என்று சொல்லிக்கொண்டே தன் சட்டை ஜேபியிலிருந்து தன்னுடைய புகைப்படமொன்றை எடுத்து அவளிடம் நீட்டினான். பத்மாவும் மிகவும் சந்தோஷத்துடன் அந்தப் படத்தை அவனிடமிருந்து வாங்கிக்கொண்டாள். அவன் அவ்விடத்தை விட்டுச் செல்ல மனமில்லாதவனாய்ச் சென்றான்.

IV.

பத்மாவிற்கு உடம்பு வாசியானதுமே பள்ளிக்கூடம் சென்றாள். பரீட்சையில் வகுப்பில் முதலாவதாகத் தேறினாள். ரஜாவும் வரவே பத்மா அவள் அத்தை முதலியவர்களுடன் மதுரைக்குச் சென்றாள்.

ராமசந்திரன் தாயார் யசோதாபாய் தன் பிள்ளை எந்தப் பெண் வந்தாலும் கலியாணம் செய்துகொள்ள மறுத்து விடுகிறுனே என்றும், தன் மருமகளைக் கண்டு என்று சந்தோஷப்படுவதென்றும் ஏக்கங்கொண்டவளாய் "அவள் எந்த ஜாதியாக விருந்தாலும் சரி. எவளை என் மகன் ஒப்புகிறுனே அவளையே என் மகனுக்குக் கலியாணம் செய்து விடுகிறேன். மருமகளென்று ஒருவள் வீட்டிற்கு வந்தால் போதும் எனக்கு" என்று வாய்விட்டுச் சொல்லியவண்ணமாகக் கூடத்தில் ஓர் சோபாவின் மீது ஒரு நாள் உட்கார்ந்திருந்தாள். இவைகளை கேட்டுக்கொண்டே சாந்தா அவ்விடம் வந்தாள். ஏதோ ஜோடு சப்தம் கேட்பதைக் கண்டு தன் பிள்ளைதான் ஆஸ்பத்திரியிலிருந்து வந்து விட்டானே வென்று திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். அது தன் பெண்ணுக இருக்கக் கண்டு "என்ன சாந்தா, எதற்கு ட்ரெஸ் செய்துகொண்டிருக்கிறுய்? எங்கு செல்லப் போகிறுய்?" என்று வினவினுள்.

"கடற் கரைக்குச் (beach) செல்லப்போகிறேன். இன்று நீ வருகிறதில்லையா?" என சாந்தா கேட்டாள். "நான் என்னத்திற்கு, நீ சென்றுவிட்டு வா" என்று தாயார் பதிலளித்தாள். "நீ வராத காரணம் எனக்கு தெரியும். இன்னும் நாட்டுப்பெண் வரவில்லையே என்று ஏக்கங்கொண்டிருக்கிறுய். எனக் கென்னமோ மன்னி வந்து விட்டாள்" என்று நகைத்துக் கொண்டு கூறினுள். "யார் உன்னுடைய மன்னி? சொல் பார்ப்போம்" என்று தாயார் ஆவலுடன் கேழ்க்க, "அன்றைக்கு அண்ணு வண்டியில் சிக்கிக்கொண்ட ஓர் பெண்ணைக் காப்பாற்றினுனே, அவளைத் தான் சொன்னேன்" என்றுள் சாந்தா.

அதற்கு யசோதாபாய் "ஹோ! அவளா! அய்யர் ஜாதியல்லவா" என்று வினவினுள். "என்ன ஜாதியானுலும் தேவலை என்று ஐந்து நிமிஷத்திற்கு முன்பு தானே சொன்னுய்? அண்ணுவும் அவளும் ஒருவரை ஒருவர் நன்றுக நேசித்து வருகிறுர்கள்" என்றுள் சாந்தா.

பின் "அதெப்படி உனக்குத் தெரியும்?" என்று மிகவும் ஆத்திரத்துடன் கேட்டாள் அவள் தாய்.

"பத்மா ஆஸ்பத்திரியில் படுத்துக்கொண்டிருக்கும்பொழுது ஒரு நாள் நான் பள்ளிக்கூடத்திலிருந்து வீட்டிற்கு வருமுன் அவளை பார்க்கச் சென்றேன். அவள் அறைக்குள் பிரவேசிக்கும்பொழுது அவள் ஏதோ ஒரு புகைப்படத்தைக் கையில் வைத்துக் கொண்டு அதையே உற்று நோக்கிக் கொண்டு ஓர் நாற்காலியில் உட்கார்ந்திருந்தாள். நான் அங்கு சென்று ஐந்து நிமிஷத்திற்கப்பால், அப்பொழுதுதான் நான் அங்கு வந்ததாக எண்ணி உடனே அந்தப் படத்தை தன் படுக்கை அடியில் மறைத்து வைத்தாள். அது என்னவென்று கேட்டதற்கு அது அவளுடைய தமயனின் கடிதமென்று சொன்னுள். சில நேரத்திற்கப்பால் அவள் (bath roo:n) க்கு சென்றபொழுது நான் அதை எடுத்துப் பார்த்துவிட்டு நம் அண்ணன் புகைப்பட மென்று அறிந்துகொண்டேன். அவள் வந்தவுடன் அவளுக்கு நான் ஆருயிர்த் தோழியாதலால் எல்லாசமாச்சாரங்களையும் எனக்குக் கூற வேண்டுமென்று நான் மிகவும் கேட்டுக்கொண்டபின், எல்லாவற்றையும் சொன்னுள். அவள் தாய் ஒருவள் தவிர மற்ற எல்லோருக்கும் இந்த சம்பந்தம் அநேகமாக இஷ்டப்படுமென்று தான் நினைப்பதாகச் சொன்னுள்" என்றுள் சாந்தா. பின், "பத்மா மிகவும் நற்குணமுடையவள், புத்திசாலி, அழகி; பணக்கார இடத்தில் ஏகபுத்திரியாகவும் பிறந்திருக்கிறுள். அசப்பில் என் தமக்கை நிர்மலா மாதிரி இருக்கிறுள்" என்றும் இன்னும் அநேக விதத்தில் சாந்தா பத்மாவை அவள் தாயினிடம் புகழ்ந்து கூறினுள். பின்னும் "அவள் தன் மதனியாக வந்துவிட்டால் தன் சந்தோஷத்

திற்கு அளவே இல்லை'' என்றும் சாந்தா கூறினாள். "ஆனால் இப்பொழுது அப்பா வந்ததும் எல்லாவற்றையும் சொல்லுகிறேன். அவர் இஷ்டப்பட்டால் உன் அண்ணன் வாயி லிருந்தே அவன் இஷ்டத்தைக்கேட்டுவிடலாம். நீ பீச்சுக்குப் போய்விட்டு வா, நேரம் ஆகிவிடுகி றது'' என்று அவள் தாய் பெண்ணை அனுப்பி விட்டுத் தான் தோட்டத்தில் உலாவச் சென் றாள்.

இந்த அம்மாளுக்கு இரண்டு பெண்களும் ஒரு பிள்ளையும் தான். பெரிய பெண் கலியாண மாய் மாமியார் வீடு சென்று விட்டாள். அவள் பெயர் தான் நிர்மலா. மற்றிருவரையும் வாசகர் களுக்கே தெரியும். இவள் யஜமானர் வாசுதேவ ராவ் மைசூர் சீமையில் ஓர் பெரிய உத்தியோ கத்திலிருந்து இப்பொழுது உபகாரச் சம்பளம் பெற்று வருகிறார். ஆகையால் தம்பதிகளிரு வரும் பிள்ளையிடம் வந்திருக்கிறார்கள். பிள்ளை யும் சீமைக்குப் போய் வாசித்துவிட்டு சென் னையில் வேலைக்கு வந்து இரண்டு வருஷங் கள் ஆகின்றன.

அன்றைய தினம் இரவு எல்லோரும் சாப் பிட்டுவிட்டு ட்ராயிங் ஹாலில் (Drawing Hall) வந்து வெற்றிலை போட்டுக்கொண்டு உட்கார்ந் தார்கள். அப்பொழுது சாந்தா மெள்ள அவள் தமையன் வீற்றிருக்கும் சோபாவின் கையில் வந்துட்கார்ந்துகொண்டு "என்ன? அண்ணா! நீ இன்னும் கலியாணம் செய்து கொள்ள மாட் டேனென்கிறாய். அம்மாவோ அதே யோச னையில் மிகவும் ஆழ்ந்திருக்கிறாள்'' என்றாள்.

அதற்குள் அவள் தந்தை "உனக்கென்ன டாப்பா! உன் தங்கையே பெண் பார்த்திருக் கிறாள். பெண் தேடும் சிரமமே இல்லை'' என்று சொன்னார். "சாந்தா! யார் அவள்? அவள் பெயரென்ன? ஊரெது?'' என்று ராமன் பரிகா சமாகக் கூறினான். பின் அவன் தாய் "சொல் லம்மா, சாந்தா! இப்பொழுதாவது தங்கை சொல்லும் பெண்ணை அண்ணன் மணம் புரியு வானா பார்ப்போம்'' என்றாள்.

"பத்மா தான் என் மன்னி! இல்லையா அண் ணா?'' என்றாள் சாந்தா. அதற்கு "தூ! அவள் நம் ஜாதியே அல்ல'' என்று புன்சிரிப்புடன் மொழிந்தான் ராமன்.

"ஜாதி என்ன? ஜனம் என்ன? பெண் மன திற்கு ஒப்பினால் சரி'' என அவன் தாய் சொன் னாள். ராமசந்திரன் அதிக ஆச்சரியத்துடன் "ஏது அம்மா! இப்படியெல்லாம் சொல்ல எப்பொழுது கற்றுக்கொண்டாய்?'' என்று கேட்டான். "ஆனால் அவன் நீ என்ன சொல் வாயோ என்று பயந்தான்போலும். அவனுக்கு அந்தப் பெண்தான் இஷ்டம் போலிருக்கு'' என்று அவன் தந்தை தன் மனைவியிடம் குலுங்கக் குலுங்க நகைத்துக்கொண்டு கூறினார். அதற்கு எல்லோரும் கொல்லென்று சிரித்தார்கள். இவ்விதம் எல்லோரும் சில நேரம் வேடிக்கையாகப் பேசிவிட்டு சாந்தாவும் அவள் தாயும் படுக்கச் சென்றபின், ராம சந்திரன் தன் விருப்பத்தைத் தன் தந்தைக்குச் சொல்ல, அவரும் அதற்கு இசைந்து மறுநாள் அனந்தராம அய்யருக்கு ஓர் நிருபம் எழுதுவ தாகத் தீர்மானித்துக்கொண்டு இருவரும் நித்தி ரைக்குச் சென்றார்கள்.

அனந்தராம அய்யர் காலை சுமார் ஒன்பது மணிக்குத் தன் கச்சேரி ரூமில் தபால்களை பார்த் துக்கொண்டிருந்தார். அதில் ஒரு மஞ்சள் தட வின கவர் அகப்பட்டது. அதை உடைத்துப் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது கையில் புத்தகத்தை எடுத்துக்கொண்டு பத்மா அவ் விடம் பிரவேசித்தாள். அய்யர் அவளை "வந்த விஷய மென்ன?'' என்று சிரித்துக்கொண்டே கேட்டார். அதற்கு அவள் தன் புத்தகத்தைச் சுட்டிக்காட்டி "இதில் வாசிக்கும்பொழுது இரண்டு பதங்களுக்கு அர்த்தம் தெரியவில்லை

யாதலால் அவைகளை உங்களைக்கேட்டுத் தெரிந்து கொள்ளலாமென்று வந்தேன்'' என்றாள். "அதிருக்கட்டும், இப்பொழுது தன் பிள்ளைக்கு உன்னைக் கொடுக்க முடியுமாவென்று ராமசந்திரனின் தந்தையினிடமிருந்து எனக்கொரு நிருபம் வந்திருக்கிறது. நான் என்னமோ அவனைக் கண்ட தினம் பிடித்தே அவனை என் மாப்பிள்ளையாகச் செய்யவேண்டுமென்று சுவாமியை தியானித்துக் கொண்டிருக்கிறேன். உன் இஷ்டம் என்ன?'' என்று அய்யர் தன் பெண்ணைக் கேட்டார்.

பத்மா மிகவும் நாணத்துடன் அதற்குத்தான் இஷ்டப்பட்டவள்போல் தன் தந்தையை ஒரு பார்வை பார்த்தாள். அய்யரும் அவள் மனதிலிருப்பதை அறிந்து சந்தோஷத்துடன் அன்றையதினமே வாசுதேவராவுக்குப் பதில் போட்டுவிடுவதாகத் தீர்மானித்தார். அன்னம்மாளை கேட்டால் அவள் ஆட்சேபிப்பாளென்று அவளைக் கேட்கவே இல்லை.

பத்மா தன் பதிவிரதா தர்மத்தை காப்பாற்றிக்கொள்ளப்போவதை நினைத்து நினைத்து சந்தோஷங்கொண்டவளாய் தனக்கு வேண்டியதைத் தன் தந்தையினிடம் கற்றுக்கொண்டாள்.

இந்த சம்பாஷணை நடந்து 7, 8 நாட்களுக்கெல்லாம் அய்யர் பதில் கடிதத்தைப் பெற்று வாசித்துவிட்டு மிகவும் சந்தோஷங் கொண்டவராய்த் தன் மனைவி சமையலுக்காகக் காய் நறுக்கிக்கொண்டிருக்கும் அறைக்கு வந்து "அன்னம்! பெண்ணுக்கு இன்னும கலியாணமாகவில்லையே என்று ஏக்கங்கொண்டிருந்தாயே. இதோ கலியாணத்திற்குப் பதினைந்து நாட்களே இருக்கின்றன. கலியாணத்திற்கு வேண்டியவைகளை சீக்கிரம் சித்தப்படுத்தவேண்டும'' என்று அடங்கா மகிழ்ச்சியுடன் கூறினார். "என்ன! கலியாணத்திற்கு 15 நாட்கள்தானா இருக்கின்றன? யாருககுக் கொடுக்கிறீர்கள்? நம் ராகவனுக்குத் தானே?'' என்று கேட்டாள்.

"இல்லை, நம் பெண்ணை ஆபத்திலிருந்து காப்பாற்றிய ராமசந்திரனுக்குக கொடுக்கப் போகிறேன். அவன் இப்பொழுது 500 ரூபாய் சம்பளத்திலிருக்கிறான். வயதும் 25 தான். சீமைக்குப்போய் 4 வருஷம் படித்துவிட்டு வந்திருக்கிறான்'' என்று அய்யர் சொன்னார். "பூர்வோத்திரம் தெரியாத, அதிலும் நம் ஜாதியற்ற, அவன் எவ்வளவு பணக்காரனாக இருந்தாலென்ன...'' என்று அன்னம் தன் கதையை எடுத்துரைக்க ஆரம்பித்தாள். அய்யர் அவை ஒன்றையும் செவியிற் போட்டுக் கொள்ளாமல் நடக்கவேண்டிய காரியங்களுக்கு ஏற்பாடு செய்யச் சென்றார்.

பின் கலியாணத்திற்கு உற்றார் உறவினர்கள் எல்லோரும் இருபக்கங்களிலும் வந்து சேர்ந்தார்கள். அன்னபூரணியம்மாளும் எல்லாவற்றையும் மனதிலேயே அடக்கிக்கொண்டு சம்பந்திகளை உபசரிப்பதும் வந்தவர்களை விசாரிப்பதும் முதலிய வேலைகளை நடத்திவந்தாள். கலியாணம் மிகவும் விமரிசையாக நடந்தேறியது.

கலியாணம் நடந்த ஐந்தாம் நாள் பத்மாவும் ராமசந்திரனும் ஒரு பரிசாரகன், இரண்டு சேவகர்களுடன் நீலகிரிக்குச் சென்று பதினைந்து நாட்கள் அங்கு சந்தோஷமாகக் காலம் கழித்துவிட்டுச் சென்னைக்கு வந்து சேர்ந்தார்கள். வாசுதேவராவும் யசோதாபாயும் தங்கள் நாட்டுப்பெண்ணின், அழகையும் பொறுமையையும், சாந்தத்தையும், தங்களுக்கு அன்புடன் பணிவிடை செய்வதையும், தங்களுடைய புதல்விக்கு உற்ற நேசியாகவும் இருப்பதைக்கண்டு அகமகிழ்ந்தார்கள். கலியாணத்திற்கு வந்த சாக்கில் நிர்மலாவும் தன் தமையன் வீட்டில் 2 மாதங்கள் தங்கிவிட்டு திரும்பிச் சென்றாள். தன்னுடைய இஷ்டார்த்தம் (தெய்வ கிருபையால்) நிறைவேறியதற்கு நம் அனந்தராம அய்யருடைய சந்தோஷம் அளவுக்கு அடங்காதிருந்தது. பத்மாவும் ராமசந்திரனும் நீடூழி காலம் சுகமாக வாழ்ந்து வந்தார்கள்.

சுபம்.

# தத்தாத்ரேய ஜயந்தி.*

## மார்கழி மாதத்தில் நடக்கும் ஓர் திருவிழா.

மார்கழி மாதப் பௌர்ணமியன்று ஸ்ரீ தத்தாத்ரேயர் ஜனனமானர். அவர் மகாராஷ்டிரத்திலுள்ள அகல்கோப் என்னுமிடத்தில் அவதரித்ததாகச் சொல்லப்படுகிறது. அங்கே அவருக்காகப் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும் ஒரு கோவிலில் கல்லில் செதுக்கப்பட்ட அவர் பாத சின்னங்கள் இப்பொழுதும் காணப்படுகின்றன. இப்பாத சின்னங்கள் வருஷத்தில் வெவ்வேறு சமயங்களில் ஆராதிக்கப்படுகின்றன. மேல இந்தியாவில் வேறு ஒன்றிரண்டு இடங்களில் இவருக்குக் கோவில்களிருக்கின்றனவென்றாலும் அவர் அவதார தினம் பெரும்பாலும் வீடுகளிலேயே கொண்டாடப்பட்டு வருகிறது. தத்தாத்ரேயரைப்பற்றி இந்தியாவின் மற்ற பாகங்களிலுள்ளோருக்கு அநேகமாய் ஒன்றுமே தெரியாது.

தேவதைகளும் மனுஷ்ய சுபாவம் உள்ளவர்களென்பது இத்தத்தாத்ரேயருடைய வரலாற்றிலிருந்து ஏற்படும். பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மும்மூர்த்திகளும் தங்கள் தேவிமார்களுடன் வானுலகில் வசித்துவருகிறார்கள். இவர்களில் சிவன் சம்ஹாரகர்த்தா, விஷ்ணு ரட்சணகர்த்தா, பிரம்மா சிருஷ்டிகர்த்தா. இவர்கள் தேவிமார்களுக்கு முறையே பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி என்று பெயர். அத்ரி ரிஷியின் பார்யையான அனஸூயை என்பவள் பூலோகத்தில் மாத்திரமல்லாமல் பிரபஞ்சம் முழுதிலுமே மிக சிரேஷ்டமான உத்தமி என்று மகாவிஷ்ணு தன் தேவியிடத்தில் ஒரு நாள் தெரிவித்தார். இதையறிந்த திரிமூர்த்திகளின் தேவிமார்கள் பொறாமையடைந்ததுமல்லாமல் அனஸூயையைத் தங்கள் கணவன்மார்கள் முன்னிலையிலும் உலகத்தார் முன்னிலையிலும் அவமானப்படுத்தி அதனால் உலகில் தங்களைத்தவிர வேறு எவரும் குணத்திலும் நன்னடக்கையிலும் உயர்ந்தவரில்லை என்று ருஜூப்படுத்த வேண்டுமென்று ஏற்பாடு செய்துகொண்டார்கள். ஒருநாள் இம்மூன்று தம்பதிகளும் சொக்கட்டான் ஆடப் புருஷர்கள் ஒரு கட்சியாகவும் ஸ்திரீகள் ஒரு கட்சியாகவும் உட்கார்ந்தார்கள். ஆட்டம் ஆரம்பிக்கு முன் தோற்ற கட்சியினர் ஜயித்த கட்சியினர் சொல்லும் எதையும் செய்து முடிக்கவேண்டுமென்று ஒரு பந்தயம் வைத்துக்கொண்டார்கள். ஆட்ட முடிவில் தேவிமார்கள் ஜயமடைந்தார்கள். உடனே அவர்கள் கணவன்மார்கள் தாங்கள் என்ன செய்யவேண்டுமென்று கேட்டார்கள். பூலோகம் சென்று அனஸூயைக்கு அவமானம் விளைவிக்க எதையேனும் செய்துவரும்படி அவர்கள் தம் கணவன்மாரிடம் சொன்னார்கள். அதைக் கேட்டவுடன் திரிமூர்திகள் மிகவும் வருத்தமடைந்து என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்தார்கள். ஆனால் தாங்கள் செய்துகொடுத்த வாக்குறுதியைச் செய்து முடிக்கக் கடமைப்பட்டிருந்தபடியால் அவர்கள் உடனே புறப்பட்டு விட்டார்கள். அவர்கள் சாதுக்களைப்போல் வேஷந்தரித்து அனஸூயையின் கிருகத்தை அடைந்து பிச்சை கேட்டார்கள். துரதிருஷ்டவசத்தால் அன்றுதான் அவள்

(* கல்கத்தாவில் பிரசுரமாகும் Young Men of India வின் டிசம்பர் மாத சஞ்சிகையில் ரூபென் மனோஹர்லால் அவர்கள் B.A., எழுதியுள்ள வியாசத்தின் மொழி பெயர்ப்பு. K. R. S.)

வீட்டிலிருந்த தானியமெல்லாம் செலவழிந்து போய் விட்டபடியால் யாசகர்களுக்குக் கொடுக்க அவள் வீட்டில் ஒன்றுமேயில்லை. போதாக்குறைக்கு அவள் கணவனும் அச்சமயம் வீட்டிலில்லை. இந்து குடும்பங்களில் பிச்சை கேட்டு வந்தோருக்குப் பிச்சையிடாமல் அனுப்புவது இன்றும் வழக்கமில்லையாகையாலும், அவ்வுத்தமி நிஜபக்தி நிறைந்தவளாகையாலும், பகவான் பெயரைச் சொல்லிக் கொண்டு வந்த சாதுக்களுக்குப் பிச்சை யளிக்க முடியாமலிருந்ததைப் பற்றி அவள் மிகவும் வெட்கமடைந்தாள். வந்திருந்த பிச்சைக்காரர்களில் ஒருவர் விஷ்ணு வென்பதை அறியாமல், தன் மேல் கிருபைகூர்ந்து பிக்ஷுக்களுக்கு அளிக்க தானியம் அளிக்க வேண்டுமென்று அவள் மகா விஷ்ணுவைப் பிரார்த்தித்துக் கொண்டாள். அவள் பக்த சிரோமணியாதலாலும், பகவான் எங்கும் நிறைந்திருப்பவராதலாலும், ப்ரமபதத்திலும் எப்பொழுதும் ஒரு மூர்த்தி உண்டு ஆகையாலும் அவர் அவள் பிரார்த்தனைக்கிணங்கி அவள் வீடு முழுவதும் மூட்டை மூட்டையாய்த் தானியங்களைக் கொண்டு நிறப்பி விட்டார். இதைக்கண்டு அக மகிழ்ந்து பகவானுக்கு நன்றி செலுத்தி, வெளியில் காத்திருந்த சாதுக்களைக் கூப்பிட்டு உள்ளிருந்து தங்களுக்கு வேண்டிய அளவு தானியம் எடுத்துக்கொள்ளும்படி வேண்டிக்கொண்டாள். தங்களுக்குக் கொடுக்க வீட்டில் ஒன்றுமில்லாத சமயத்தில் அவளைப் பரீட்சிக்க வந்ததற்காகவும், தாங்கள் ஏமாற்றமடைந்ததற்காகவும் அவர்கள் மிகவும் வெட்கி அவ்விடம் விட்டகன்று தங்கள் ஸ்தானத்தை அடைந்தார்கள். அனஸூயையின் குணாதிசயங்களைப் பற்றியும் அவள் பக்தியின் பெருமையைப் பற்றியும் அவர்கள் தங்கள் தேவிமார்களுக்குச் சொன்னார்கள். இதைக் கேட்டதும் தேவிமார்களுக்கு அதிகக்கோபம் எழுந்தது. தாங்களே அனஸூயைக்கு அவமரியாதையும் கெட்ட பெயரும் கொண்டு வருவதென்று தீர்மானித்தார்கள்.

இந்தச் சூழ்ச்சியை நிறைவேற்றி முடிப்பதற்காக அவர்கள் தங்கள் கணவன்மார்களுக்குத் தெரியாமல் தங்கள் ஸ்தானங்களைவிட்டு பூலோகம் வந்து சேர்ந்தார்கள். அனஸூயையின் வீட்டிற்கெதிரே ஓடிக்கொண்டிருந்த ஓராற்றங் கரையில் வந்திறங்கி, அங்கே லக்ஷ்மி ஒரு சிறு பெண்ணுருவையும் சரஸ்வதி நடுத்தர வயதுடைய ஒரு ஸ்திரீ உருவையும் பார்வதி 70, 80 வயதுள்ள ஒரு தொன்று கிழவி யுருவையும் அடைந்தார்கள். உடனே பெரிய ஸ்திரீகள் இருவரும் கூடவிருந்த சிறு பெண்ணைத் தூக்கி ஓடுகிற ஆற்று வெள்ளத்தில் போட்டு விட்டு ஒத்தாசைக்கு ஆள் வேண்டுமென்று கூக்குற லிட்டார்கள். தண்ணீரில் போடப்பட்ட சிறுமி தேவதையாகையால் அவளுக்கு மரணமில்லையென்றாலும் இக்கூக்குரலைக் கேட்ட அனஸூயை அவ்விடம் ஓடி வந்து சட்டெனத் தண்ணீரில் குதித்து அச்சிறுமியின் உயிரைக் காப்பாற்றினாள். இதைக்கண்ட தேவிமார்கள் வெட்கித் தலை குனிந்து பொன்னுலகம் அடைந்தார்கள்.

ஆனால் அவர்கள் இதோடு நின்றுவிட உத்தேசிக்கவில்லை. மறுபடியும் ஏதாவது செய்வதென்று தீர்மானித்துத் தம் கணவன்மார்களை சங்கராசாரியரைப்போல் சன்னியாசி வேஷம் தரிக்கச்செய்து மறுபடியும் அனஸூயையிடம் அனுப்பினார்கள். இவர்களைக் கண்ட அனஸூயை அவர்களுக்கு சாஷ்டாங்கமாக தெண்டனிட்டுக் கை கூப்பி நின்று அவர்கள் உத்திரவை எதிர்பார்த்திருந்தாள். தங்களுக்குப் பசி அதிகமாயிருந்தபடியால் உடனே தங்களுக்கு அமுது படைக்கும்படி அவர்கள் கேட்டார்கள். வாய்த்தகாத இப்பேற்பட்ட மகான்கள் வந்ததால் பிரீதி அடைந்த அனஸூயையும் வெகு சந்தோஷத்துடன் சரியென்று ஒத்துக்

கொண்டாள். அவள் ஒத்துக்கொண்டவுடன், அவள் தன் துணி முதலானவைகளை அவிழ்த்து வைத்துவிட்டு நிர்வாணமாய்ச் சமையல் செய்யவேண்டுமென்றும், அப்படியே தங்களுக்கு விருந்து பரிமாற வேண்டுமென்றும் செய்து முடிக்கக்கூடாத ஒரு நிபந்தனையை ஏற்படுத்தினார்கள். இதைச் செவியுற்று அனஸூயை மிகவும் வருத்தமடைந்தாள். ஆனால் அப்படி அவள் செய்யாவிட்டால் தாங்கள் சாப்பிடமாட்டோமென்றும், அப்படிச் சாப்பிடாவிட்டால் தாங்கள் பசியால் பிராணனைவிட நேரிடுமென்றும், அப் பாபம் அவளைச் சுற்றிக் கொள்ளுமென்றும் அவர்கள் சொன்னபடியால் அவள் கடைசியாய் இதற்கு ஒத்துக் கொண்டாள். அவளுக்கு பகவானிடத்தில் பரிபூரணமான பக்தியுண்டாகையால் இந்த இக்கட்டில் பகவான் தன்னைக் காப்பாற்றுவார் என்று அவள் நம்பி இதற்கு சம்மதித்தாள்.

அனஸூயையின் கணவன் வீட்டிலில்லாத சமயத்தில் அவளைச் சந்தித்துத் தங்கள் காரியத்தை முடித்துக்கொள்ளவேண்டு மென்று மும்மூர்த்திகளும் கருதியபடியால் இச்சமயத்திலும் அவர்கள் அவள் புருஷன் நித்திய கர்மானுஷ்டானத்திற்காக ஆற்றிற்குச் சென்றிருந்த சமயம் இவர்கள் அவ்விடம் வந்து மேற்கூறியபடி ஏற்பாடு செய்துகொண்டார்கள். ஒவ்வொரு இந்துவும் மூன்று வேளை ஸ்னானம் செய்து காயத்ரீ மந்திரத்தை உச்சரித்து அர்க்கியம் விடக்கடமைப்பட்டுள்ளான். அனஸூயையின் புருஷன் வீட்டை விட்டுப் போகும் போது அர்க்கியப்பிரதானம் செய்து விட்டுப் போயிருந்தார். சாதாரணமாக இந்த அனுஷ்டானம வீட்டிலேயே நடைபெற்றால் அர்க்கிய தீர்த்தத்தை ஒவ்வொரு இந்து வீட்டிலும் வளர்க்கப்படும் துளசிச் செடியில் விடுவது வழக்கம். அப்படி வீட்டில் துளசிச் செடி இல்லாமலிருந்தால் வீடு ஈரமாய்ப் போகமலிருப்பதற்காக, இந்த அர்க்கிய தீர்த்தத்தை வாயகன்ற பாத்திரத்தில் ஏந்தி வைப்பதுண்டு. இது போல் அனஸூயை அன்று அர்க்கிய தீர்த்தத்தை ஒரு பாத்திரத்தில் ஏந்தி வைத்திருந்தாள்.

பிற்பாடு அனஸூயை வந்திருந்த சாதுக்களை ஆற்றில் போய் நித்திய கர்மங்களை முடித்துக்கொண்டு திரும்பிவரும்படியும் அதற்குள் தான் சமையல் செய்து வைப்பதாயும் சொன்னாள். அவர்கள் போனபிறகு, தன் துணியைக் களைந்து விட்டு அவர்கள் திரும்புமுன் சமையல் செய்து முடித்து ஸ்தல சுத்தி செய்து, இலைகளைப் பாப்பி மறுபடியும் தன் ஆடைகளையணிந்துகொண்டு காத்திருந்தாள்.

அவர்கள் பதினொன்றரை மணி சுமாருக்கு வீடுவந்து சேர்ந்தார்கள். அவரவர்கள் போஜனத்துக்கு அமரவேண்டிய இடம் திட்டம் செய்யப்பட்டபிறகு அவர்கள் பிராமணர்கள் வழக்கத்தை அனுசரித்துத் தங்கள் கௌபீனங்களைத் தவிர மற்ற ஆடைகளையெல்லாம் களைந்து விட்டுச் சாப்பிட வந்து உட்கார்ந்தார்கள். அவர்களுக்கு உணவு பரிமாற வேண்டிய காலம் நெருங்கவே அவள் அந்த வயது வந்த ஆண்பிள்ளைகளுக்கெதிரில் நிர்வாணமாய் இல்லாமலிருப்பதற்கு வேண்டிய யுக்தியைத் தனக்குக் காட்டிக் கொடுத்து அதனால் சாதுக்களின் கெட்ட அபிப்பிராயம் பலன் படாமற் போகும்படி செய்யவேண்டு மென்று அவள் மகா விஷ்ணுவைக் குறித்துப் பிரார்த்தித்தாள். இப்படிப் பிரார்த்தித்துக்கொண்டிருக்கும் போதே அவள் தன் கணவனால் முன்னேவிடப்பட்டு பாத்திரத்தில் ஏந்திவைக்கப்பட்டிருந்த அர்க்கிய தீர்த்தத்தில் சிறிதளவு தன் கையில் எடுத்துக் கொண்டு மகா விஷ்ணுவின் நாமத்தை யுச்சரித்து அந்த ஜலத்தை அந்த சாதுக்கள் பேரில்

தெளித்தாள். உடனே அவர்கள் சிறு குழந்தைகளாக மாறிவிட்டார்கள். அப்பொழுது அவள் ஒரு சங்கோசமுமில்லாமல் தன் ஆடைகளைக் களைந்துவிட்டு அவர்களுக்கு பரிமாறத் தயாராயிருந்தாள். ஆனால் அச்சிறு குழந்தைகள் பெரியவர்களுக்காக வடிக்கப்பட்ட உணவை உட்கொள்ளச் சக்தியற்றவைகளானதால் அவள் அவைகளை யெடுத்து ஸ்தன்ய பானம் செய்யும்படி செய்தாள். அக்குழந்தைகளைக் கண்டமாத்திரத்திலேயே அவள் ஸ்தனங்கள் பால்சுரக்க ஆரம்பித்தன.

நாரதர் திரிலோக சஞ்சாரியாய், தேவர்களுக்கு தூதனும், மனிதர்களுக்கு புத்திமதி சொல்லிக் கொண்டும் திரிந்துகொண்டிருக்கும் ஓர் ரிஷி. அவர் பிரம்மதேவனின் குமாரனென்றும் கருதப்படுவார். அவர் திரிமூர்த்திகளும் அனஸூயை வீட்டில் குழந்தைகளாய் ஸ்தன்ய பானம் செய்துகொண்டு வளர்ந்து வந்ததை அறிந்தவுடன் அவர் ஓடோடியும் சென்று இவ் வெட்கக்கேட்டை அவர்கள் தேவிமார்களிடம் தெரிவித்தார். அவர்கள் அடக்கொணு கோபத்துடன் பூலோகம் வந்து அனஸூயையைக் கண்டு விசாரித்துத் தங்கள் கணவன்மார்களைக் கொடுக்கும்படி கேட்டார்கள். வந்தவர்கள் இன்னாரென்று அறியாமல் தான் முட்டாள்தனமாய்ச் செய்த இக்காரியத்துக்காக அனஸூயை மிகவும் வருந்தி, தேவிமார் பாதங்களில் சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்துத் தன் குற்றத்தைப் பொறுத்துக்கொள்ளும்படி வேண்டிக்கொண்டாள். தவிர, அவள் தனக்குக் குழந்தைகளில்லையாகையாலும் இக்குழந்தைகள் தன்னிடம் ஸ்தன்யபானம் செய்தபடியாலும் அவைகள் தன்னிடத்திலே இருக்கலாமென்று சொன்னாள். ஆனால் இது தேவிமார்களுக்கும் அவர்கள் புருஷர்களுக்கும் இஷ்டமில்லை. அப்பொழுது தங்கள் தங்கள் புருஷனைப் பார்த்து எடுத்துக் கொள்ளும்படி தேவிமார்களைப் பார்த்து அனஸூயை சொன்னாள். ஆனால் மூன்று குழந்தைகளும் ஒரே மாதிரியிருந்தபடியால் யார் யார் என்று அவர்களுக்கு விளங்கவில்லையாகையால் அவர்கள் மிகவும் தத்தளித்தார்கள். அப்புறம் அவர்கள் ஒருவாறு தேறி ஒவ்வொருவரும் ஒவ்வொரு குழந்தையைத் தங்கள் கையில் எடுத்துக் கொண்டவுடன் அவைகள் வயதான புருஷர்களாக மாறிவிட்டன. அப்பொழுது அவர்கள் மாற்றுப் புருஷனுடனிருப்பதைக் கண்டு வெட்கமடைந்தனர். மும்மூர்த்திகள் தங்கள் பழய ஸ்வரூபம் அடைந்தவுடன் அனஸூயை இஷ்டப்பட்டால் அவளுக்குத் தங்கள் மூவரின் சக்தியம்சமான ஒரு புத்திரனை அளிப்பதாகச் சொன்னார்கள். அனஸூயை இதற்கிணங்கவே அப்பொழுதே தத்தாத்ரேயர் அவதாரமானார். "தத்தா" என்றால் இமைப்பொழுதில் நடந்தது என்று பொருள். தத்தாத்ரேயரின் அவதாரம் சரியாய்ப் பகல் 12 மணிக்கு. மும்மூர்த்திகளின் அம்சமும் கொண்ட இவருக்கு மூன்று முகங்களும், ஒரு உடலும், நான்கு கைகளும், இரண்டு கால்களும் உண்டு. இவ்விதமாகத்தத்தாத்ரேயர் மும் மூர்த்திகளின் சக்திகளின் அம்சமாய் உலகில் அவதரித்தார். மும்மூர்த்திகளும் அவர்கள் தேவிமார்களும் அனஸூயையின் குணத்தையும் அவள் கற்பையும் புகழ்ந்து தம் உலகம் சென்றனர்.

நாளடைவில் தத்தாத்ரேயர் புத்தியிலும், சக்தியிலும், படிப்பிலும் விருத்தியடைந்து வந்து கடைசியாக ஒரு தேவதையானார். அவர் ஒரு பெரிய நாடோடி. காலை ஸ்னானம் ஓரிடத்திலும், மத்தியான போஜனம் ஓரிடத்திலும், இராப் படுக்கை மற்றோரிடத்திலுமாக ஒரே நாளில் இரண்டு, மூன்று இடங்களில் காணப்படுவார். இவ்விடங்கள் வடக்கே காசியையும் தெற்கே கொல்லாப்பூரையும் போன்ற அவ்வளவு விலகிய இடங்களாகும். அவர் தேக

வியோகத்தைப் பற்றி ஒன்றும் நிச்சயமாய்த் தெரியாது. ஆனால் பஞ்சகங்கை நதியும் கிருஷ்ணா நதியும் சங்கமமாகுமிடத்தில் அவர் அந்தர்தானமானார் என்று கதையுண்டு. இவ் விடத்தில் அவருக்கு ஒரு கோவிலுமிருக்கிறது.

தத்தாத்ரேய பூஜை சிலவிடங்களில் அவர் ஜனன தினத்தின் காலையிலும், சிலவிடங்களில் மாலையிலும் நடைபெறுகிறது. மற்றும் சிலர் அவர் ஜன்மதினத்திற்கு 3, 5 அல்லது 9 நாள் முன்னதாகவே அதைக் கொண்டாடுகிறார்கள். மாலை 6 மணிக்கு பூஜை நடைபெறும். திரி மூர்த்திகளின் அம்சமாகவே அவர் பூஜிக்கப் படுகிறார். தத்தாத்ரேய ஜயந்தியன்று ஜனங்கள் ஒன்றுகூடி, கீர்த்தனைகள் பாடி, பஜனைசெய்து உபன்னியாசங்கள் முதலானவை நடத்துவார்கள். ஜயந்தி முற்பட்ட நாட்களில் இவை நடைபெறுவிட்டால் பாதகமில்லை. ஆனால் அவர் பிறந்நாளில் பிறந்தவேளையாகிய 12 மணிக்கு அவசியம் பஜனைகளும் பூஜையும் நடைபெற வேண்டும். சாதாரணமாய் இவை காலை 9 மணிக்கு ஆரம்பமாகி சரியாய் 12 மணிக்கு முடிவுபெறுகின்றன. மற்ற பண்டிகை தினங்களிற் போல இன்றும் ஜனங்கள் உபவாசம் அநுஷ்டிக்கிறார்கள்.

# ஒற்றுமையின் வெற்றி.

(சகோதரி வி. பாலம்மாள்.)

(319-ம் பக்கத் தொடர்ச்சி.)

## ஏழாவது அத்தியாயம்.

### ஆபத்பாந்தவன்.

பகல் இரண்டு மணி வேளையில் கதிரவன் தனது கிரணங்களை வீசுவதால் உண்டாகும் வெப்பம் சகிக்கமுடியாமலிருக்கிறது. வெய்யிலின் கொடுமையால் தெருவில் ஜனங்கள் நடமாட்டமே யில்லை. இச்சமயம் ஆனந்தபுரத்தின் பெரிய தெருவிலிருக்கும் ஒரு பெரிய மாளிகையின் மேல் அறையில் நோயாளி ஒருவன் தூங்கிக்கொண்டு இருக்கிறான். நோயாளியின் படுக்கை யருகில் வடிவழகு வாய்ந்த மாதரசி ஒருத்தி உட்கார்ந்து ஏதோ ஒரு புத்தகம் படித்துக்கொண்டிருக்கிறாள். அவ்வழகியின் முகவொளியானது அவள் ஹிருதயத்திலுள்ள பரிசுத்த நிலைமையை வெளிப்படுத்தக்கூடியதாயிருக்கிறது. கபடமற்ற ஹிருதயமும், வித்தியாசமற்ற கண்ணோட்டமும், சிரித்த முகமும், சிறந்த தோற்றமுமுடைய இப்பெண்மணி யார்? நமது ராதைதான். அவள் கையிலிருந்த புத்தகத்தைக் கீழே வைத்துவிட்டு நோயாளிக்கு விசிற வெண்ணி நாற்காலி விட்டெழுந்ததும் இந்த அரவத்தால் நோயாளி கண் விழித்துக் கொள்ள நேரிட்டது.

நோயாளி:—அக்காள், நீ நெடுநேரமாய் இங்கு உட்கார்ந்திருக்கிறாயல்லவா?

ராதை:—ஆம், உட்கார்ந்துதானிருக்கிறேன்.

விஜயன்:—அக்கா! நான் ஒரு துஷ்டனால் அடிபட்டு வீழ்ந்ததுதான் எனக்குத் தெரியும். எனக்கு மூர்ச்சை தெளிந்து ஞாபகம் வந்த சமயம் நான் ஆனந்தபுரத்திலிருப்பதாயும் நீயும் உனது கணவரும் செய்யும் சிகிச்சையால் மீண்டும் பிழைத்ததாயு மறிந்தேன். அன்பார்ந்த சகோதரியே! நீங்களிருவரும் என் விஷயத்தில் இவ்வளவு சிரத்தை எடுக்கக் காரணமேன்? ஊண், உறக்கம் விட்டு என்னைப் பாமரிப்பதால் நீங்களிருவரும் மிகவும் மெலிந்து துர்ப்பலமாயிருக்கிறீர்கள். நான் இப்பொழுது பெரிதுங் குணமடைந்துவிட்டேன். இனி என்னைப்பற்றி நீங்கள் கவலைப்படவேண்டியதில்லை.

ராதை இதுகேட்டுக் கண்ணீர் உதிர்த்தாள். விநயன் மனம் வருந்தி, "அக்கா! நீ இவ்விதம் அழக் காரணமென்ன?" என்றான்.

ராதை:—தம்பி! இவ்வுலகில் கணவனைத் தவிர வேறு பந்துக்கள் ஒருவரும் எனக்கில்லை. தந்தை, தாய், அண்ணன், தம்பி என்றவர்களுமில்லை. நான் எனது புருஷனுடைய ஆதரவினால் உயிர் வைத்திருக்கிறேன். உலகம் என்னைப் பேசிவரும் அபவாதம் கொஞ்சமல்ல. இவ்வித துர்ப்பாக்கியசாலியான என்னை நீ அக்காள் என்று கூப்பிடுவது கண்டு எனக்குண்டாகும் சந்தோஷத்திற்கு அளவே கிடையாது. எனக்கும் நற்குணம் வாய்ந்த ஒரு தம்பி இருக்கிறானென்ற ஆனந்தத்தினால் அழுதேன். இது ஆனந்த பாஷ்பமன்றிக் கண்ணீரல்ல.

விநயன்:—அக்கா! நற்குணங்களுக்கெல்லாம் இருப்பிடமாகிய உனக்கும் அபவாதச்சொல் ஏற்படுமா? காரணமறிவிப்பதில் உனக்கு வருத்தம் நேரக்கூடுமாயின் நான் மீண்டும் கேட்கமாட்டேன்.

ராதை:—உலகமறிந்த விஷயத்தை உனக்கறிவிப்பதில் ஆட்சேபமென்ன விருக்கிறது? என் மனம் பரிசுத்தமாயிருக்கும்வரை எனக்குக் கெடுதி கிடையாது. எனக்கு ஏற்பட்டிருக்கும் அபவாதம் நான் வயதடைந்தபின் விவாகம் செய்துகொண்டதே யாகும். என்னை விவாகம் செய்துகொண்டதற்காக எனது கணவர் கிராமத்தாரால் விலக்கப்பட்டார். தந்தையாலும் குடும்பத்திலிருந்து நீக்கப்பட்டார். மாதவன் என்னைக் கலியாணம் செய்துகொண்டது எனக்குள்ள ஐசுவரியத்தைப் பொருத்ததல்ல. நான் பரம ஏழை. பரோபகார சிந்தை வாய்ந்த ஒரு பெரியவரால் நான் வளர்க்கப்பட்டேன். அவர் எனக்கு உபதேசித்து வந்த நீதிமொழிகளே எனக்குச் சிறந்த பொருள். பெண் மக்கட்குரிய படிப்பையே எனக்குப் படிப்பித்தார். தன்னைத்தான் கண்ணியமாய்க் காத்துக்கொள்ளும் வழியை நன்கு போதிக்கப்பட்டேன். அச்சமயம் மாதவன் என்னை விவாகஞ் செய்ய விரும்பினர். திடீரென்று மார்பு வலி யுபத்திரவத்தால் பெரியவர் தேகவியோக மடைந்துவிட்டார். அநாதையாகிய என்னை மாதவன் மணக்கக்கூடாது என்று பெற்றோர், ஊரார் அனைவரும் தடுத்தும் இக்கலியாணம் நிறைவேறிற்று. இதுதான் என் சரித்திரம்.

விநயகுமாரன் இதுகேட்டு "அக்கா! நீ இதற்காகவோ வருந்துகிறாய்! கடவுள் கண் விழித்திருந்து தர்மம் என்பது ஒன்று உண்டாயின் உத்தமர்களுக்குக் கஷ்டமும் நேரிடுமோ? உனக்கு க்ஷேமமுண்டாகத் தடையில்லை. ஆனால் தற்சமயம் நீங்களிருக்கும் நிலைமையில் என்பொருட்டு இவ்வளவு பணம் செலவழித்துக் காப்பாற்றி வருவது எங்ஙனம்?" என்று கேட்டான்.

ராதை:—இவையெல்லாம் ஈசன் செயலென்பதில் தடையில்லை. ஒரு புண்ணிய புருஷர் எங்களுக்கு உதவி புரிந்திராவிடில் வேறு கதிமோட்சமே இல்லை. மரத்தடியில் இறந்ததற்குச் சமானமாக வீழ்ந்து கிடந்த உன்னை நாங்கள் இவ்வூருக்கு எடுத்து வந்தோம். பிறகு உனக்கு வேண்டிய சிகிச்சை செய்ய வழி என்னவென்று யோசித்தோம். தெருக்கள்தோறும் பிச்சை எடுத்து உன்னைக் காப்பாற்றுவதாய்த் தீர்மானித்து மாதவன் வெளியிற் சென்றார். அச்சமயம் தெய்வ கிருபையால் மகானுபாவர் ஒருவர் எனது கணவரிடம் சம்பாஷித்துச் சகல விஷயங்களையும் தெரிந்துகொண்டு இருநூறு ரூபாய்களை மாதவனிடம் அளித்து உன்னைக் காப்பாற்றச் செய்தார். அவர் நாள் தவறாது உன்னைப் பார்த்துப் போவார். உனக்கு நல்ல நினைவுண்டாகிச் சற்று குணமானபிறிருந்து

முன்போல் அதிகமாய் வரக்காணோம். இத் துணையாரையே ஆபத்பாந்தவனென்று புகழ முடியும்.

விநயன் :—அக்கா! அப்பெரியவர் யார்?

ராதை :—அவர் பெயர் புருஷோத்தமன். மற்றப்படி அவரைப்பற்றி ஒன்றும் தெரியாது.

இவ்விதம் பேசிக்கொண்டிருக்கும்போது யாரோ உள்ளே வரும் காலடிச் சத்தம் கேட்டு ராதை தனது புருஷனுடன் புருஷோத்தமனும் வருவதறிந்து வேறொரு அறைக்குள் சென்றாள்.

புருஷோத்தமனும் மாதவனும் நோயாளியின் படுக்கையருகில் வந்தார்கள். விநயன் உட்கார்ந்திருப்பது கண்டு புருஷோத்தமன் சந்தோஷித்தார். மாதவன் விநயனை நோக்கி "விநய! உனக்கு உயிர்ப் பிச்சை அளித்த உத்தமர் புருஷோத்தமன் வந்திருக்கிறார்" என்றதும் விநயகுமாரன் எழுந்து அவரை நமஸ்காரம் செய்தான். புருஷோத்தமன் விநயனை ஆசீர்வதித்து, "விநய! உனக்கு இரண்டொரு தினத்தில் பூரண சுகமுண்டாய்விடும். இதற்கு மேல் நீ யாது செய்ய நினைத்திருக்கிறாயென்பதை நானறிந்துகொள்ளலாமா?" என்றார். இதற்கு விநயன் "மகானுபாவரே! உங்கள் தயவால் நான் பிழைத்தெழுந்ததுபற்றித் தாங்கள் பணிக்கும் ஊழியத்தைச் சிரமேற்கொண்டு நடப்பதே எனது கடமை. இச்சமயம் நான் தேவபுரம் சென்று வர விரும்புகிறேன்" என்றான்.

புருஷோத்தமன் :—குழந்தாய்! நீ எனக்கு இவ்வளவு தூரம் உபசார வார்த்தை சொல்வது கூடாது. ஏனெனில் நான் உன்னை முன்பின் அறியாதவனல்ல. உன் தந்தையும் நானும் பாலிய சினேகிதர்கள்தான். அற்ப காரணங்கொண்டு உன் தகப்பனிடம் எனக்கு விரோதமுண்டாயிற்று. நான் செய்தது பிழை. சினேக தர்மத்திற்கேற்றதல்லவென்பதை நான் உணர்ந்ததிலிருந்து வெட்கப்பட்டுத் தலைமறைவாய்த் திரிந்துகொண்டிருக்கிறேன். மீண்டும் உன் தந்தையுடன் எக்காலம் நட்புக்கொள்வதென்று நான் கவலையுற்றிருந்தேன். உன்னால் எனக்கு நற்காலமுண்டாயிற்று. இதிருக்கட்டும். என்னால் நீ பிழைத்தெழுந்தாயென்பது பிழை. பரோபகாரிகளான ராதா மாதவர்கள் உன் விஷயத்தில் நடந்துகொண்டதேயாகும். அவர்களில்லாவிடில் நீ பிழைத்தெழ வழியே இல்லை. நீ உன் வாழ்நாள் முடிய அவர்களுக்கு நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறாய்.

விநயன் :—தெய்விககுணம் பெற்றிருக்கும் ராதா மாதவர்களை மனதினால் நினைக்கவும் எனக்கு யோக்கியதை இல்லை. இங்ஙனமாயின் நான் அவர்களுக்கு யாது பிரதியுபகாரம் செய்ய முடியும்? ஆனால் அவர்கள் மீது உலகம் வீண் பழி சுமத்தி இருப்பது நீக்கப்படவேண்டுமென்ற ஆவல் எனக்குக் கொஞ்சமல்ல.

புருஷோ. :—எனக்கு எல்லாம் தெரியும். ஆதாரமற்ற அபவாதம் அரை விநாடியில் விலகிவிடக்கூடியதே. இதுபற்றி நாம் சிந்தித்தல் அநாவசியம். நிற்க, உனக்கு ஏற்பட்டிருக்கும் கவலையும் ஆபத்தும் அதன் காரணமும் தெளிவாய் எனக்குத் தெரியும். நீ வீடு விட்டு வந்தபின் உன் தந்தைக்குப் பல கஷ்டம் நேர்ந்துவிட்டது. வீடு தீக்கிரையாயிற்று. தற்சமயம் உன் தந்தை தேவபுரத்திலிருக்கிறார். நீ ராதா மாதவர்களுடன் அங்கு செல். லீலாவதியைப்பற்றித் தக்க ஏற்பாடு செய்திருக்கிறேன். அவளைச் சமீபத்தில் காணலாம். நான் மறுமுறை உன்னை தேவபுரத்தில் பார்க்கிறேன்.

இவ்வாறுரைத்துப் புருஷோத்தமன் விநயகுமாரனின் பதிலை எதிர்பாராமலே வெளியிற்

சென்றுவிட்டதறிந்து மாதவன் "அப்பா! விஜய! நீ வீண் கவலைப்படக்கூடாது. உனக்கினி நற்காலமே" என்றான்.

இது கழிந்த இரண்டு மூன்று தினத்தில் விஜயன் பரிபூரண சுகமடைந்தான். அவன் மனதிலுள்ள கவலை கொஞ்சமல்ல. "லீலாவதி எங்கிருப்பாள்? துஷ்டனிடமகப்பட்டிருக்கும் பேதைப் பெண் எவ்வாறு கஷ்டப்படுகிறாளோ? நான் இறந்துவிட்டதாகவே பிரஸ்தாபமுண்டாயிருப்பது கேட்டுத் தந்தை மனம் எவ்வளவு துயரடைந்திருக்கும்? வீடு தீக்கிரையானதற்கும் வீரநாராயணன் காரணம். பிள்ளையையும் வீட்டையுமிழந்த துயரம் தாங்காது அவர் தேவபுரம் வந்திருக்கிறார்போலும். வீரநாராயணனும் உன்மத்தராகவனும் இனியும் என்ன செய்யக் காத்திருக்கிறார்களோ?" இவ்வாறு எண்ணி எண்ணி மனம் தவித்தான். ராதா, மாதவன் உள்பட விஜயன் தேவபுரம் புறப்படவிருக்கும் சமயம் புருஷோத்தமனிடமிருந்து ஒரு கடிதம் கிடைத்தது. அதில் லீலாவதியை ரங்கபட்டணத்தில் சிறை வைத்திருப்பதாயும் அவ்விடத்திலேயே காளனுக்கு அவளை விவாகம் முடித்துவிடுவதாக உன்மத்தராகவன் ஏற்பாடுகள் செய்துகொண்டிருப்பதாயும், இதைத் தவிரப் போலீசில் தான் தக்க ஏற்பாடு செய்திருப்பதாயும், கடிதம் கண்டதும் புறப்பட்டு வரும்படியாயும் எழுதியிருந்தது. விஜயன் இது கேட்டுத் திகைத்தான். ராதா, மாதவர்களின் சொற்களால் சற்று தைரியமடைந்து விஜயகுமாரன் அவ்விருவர்களுடன் தேவபுரம் செல்லச் சித்தமானான்.

எட்டாவது அத்தியாயம்.

மனக்கோட்டை கட்டிய மணமகன்.

இன்று ரங்கபுரியிலுள்ள ஒரு மாளிகையிலிருக்கும் கோலாகலமும் சந்தோஷமும் அசாத்தியம். இன்றிரவில் ஒரு கலியாணம் நடக்கவிருப்பது காரணம் போலும். மணமகன் யார்? காளன். மணப்பெண் லீலாவதி. இதை நடத்துவதில் முன் நிற்பவன் உன்மத்தராகவன். அங்கு ஒரு பிராணி தவிர மற்றவர்களெல்லோரும் பரமானந்தமுடையவர்களாகவே இருக்கின்றனர். தனக்குக் கலியாணம் நடக்கப் போவதுபற்றிக் காளனுக்குச் சந்தோஷம். தான் பிடித்த பிடிவாதம் நிறைவேறுவதில் உன்மத்தனுக்கு உற்சாகம். மற்றவர்களுக்கு விருந்து சாப்பாட்டை உத்தேசித்துத் திருப்தியுண்டாயிருக்கலாம். இவ்வளவு சம்பிரமத்தில் லீலாவதிமட்டும் தனியே ஓரறையில் அழுது கொண்டிருக்கிறாள். அவள் அழுகிறதானால் அழட்டும். அதனால் நமக்கென்ன? உலகில் எவ்வளவோ ஜனங்கள் தங்களுக்குத் தோன்றிய சமயம் அழுகிறார்கள். எல்லோருடைய அழுகையையும் நாம் கவனிப்பதென்றால் நமது ஆயுள் முழுவதும் போதாது. அழவேண்டியவர்கள் அழுதுகொண்டிருக்கட்டும். இவர்கள் அழுகையின் நிமித்தம் நாம் நமது காரியத்தை விட்டுவிடுவது சாத்தியமா? லீலாவதியின் அழுகையை லட்சியம் செய்யவேண்டியதனவசியம். அவளிஷ்டத்தை அனுசரித்து நடக்க வேண்டுமென்பது கட்டாயமா என்ன? சம்சாரத்தில் எல்லோருடைய இஷ்டத்திற்கும் குறுக்கின்றிக் காரியங்கள் நடைபெறுகின்றனவா? அதிலும் விசேஷமாய்க் கலியாண விஷயத்தை மணப்பெண்ணின் இஷ்டத்தை யனுசரித்துப் பெற்றோர்கள் நடத்துகிறார்களா? காலம் மீறிவிடுகிறது, முப்பத்திரண்டு லட்சணமும் பொருந்திய வரன் கிடைப்பதென்றால் சுலபமில்லை, அதிகம் ஆராய்ச்சி செய்தால் கிடைப்பதரிது. பெண்ணின் தலைவிதிபோலாகிறது, எல்லா மீசன் செயல், என்றிவ்வாறான காரணங்களை யாதாரமாகக் கொண்டு பெண் மக்களின் விவாகம் நடைபெறுவது சகஜமாயிருக்க இச்சமயம் லீலாவதியை கவனிப்பார் யார்?

உன்மத்தராகவன் அவ்வீட்டின் முதற்கட்டில் இஷ்டமானவரையில் குடித்துக்கொண்டும் தனது சகபாடிகளுடன் பேசிக்கொண்டுமிருந்தான். அச்சமயத்தில் அவ்வறையின் கதவு திறக்கப்பட்டுப் பெருத்த எற்றச்சால்போன்ற ஒரு தோற்றம் தோன்றியது. இவர்கள் திடுக்கிட்டு உற்று நோக்குங்கால் அவ்வுருவைப் பதார்த்தத்திற்குச் சிறிய கைகால்கள் தென்பட்டதால் சிறிது நேரத்தில் மணமகன் காளனென்று தெரிந்தது. சிரிப்பென்றால் இன்னதென்று அறியாத காளன் இன்று ஓயாமல் பல்லைக் காட்டிச் சிரிப்பது கண்டு எல்லோர்க்கும் சந்தோஷமுண்டாயிற்று. அங்கிருந்தவர்களிலொருவன் உன்மத்தனை நோக்கி 'விவாக முகூர்த்தம் எத்தனை மணிக்கு?' என்றான்.

உன்மத்தன்:—இரவு ஒன்பது மணிக்கு மேல் எப்பொழுதானாலும்.

சினேகிதன்:—நோங்கழித்து நடப்பது சிலாக்கியம்.

காளன்:—அதேன்?

சினேகிதன்:—நாமெல்லாம் அதுவரை விநோதமாய்ப் பொழுது போக்கலாம்.

காளன்:—உங்கள் பேச்சைக்கேட்டால் எனக்குப் பயமாயிருக்கிறது. கலியாணச் சடங்கை சீக்கிரம் நடத்திவிட்டால் பிறகு இஷ்டம் போல் பொழுது போக்கலாம்.

உன்மத்தன்—மாமா! நீ ஏனஞ்சுகிறாய்? நானிருக்கும் பொழுது கலியாணம் நடக்கத் தடை ஏது?

காளன்:—வேறொன்றுமில்லை. நீ இருக்கும் போது எனக்குப் பயமில்லை. மாலை வேளையாயிற்று. கலியாண மென்றால் இழவு, மெத்த சள்ளையாயிற்றே. சீக்கிரம் ஆரம்பித்துவிடலாம் என்பதே என் உத்தேசம்.

உன்மத்தன்:—மாமா! உனக்கென்ன பித்தமா? இன்னம் நடுமத்தியான வேளையாகவில்லையே.

காளன்:—சாயங்காலமாக அதிக நேரமாகுமா? எனக்கென்னமோ இப்போது மாலை ஐந்து மணியானது போலிருக்கிறது.

உன்மத்தன்:—இதோ பார் கடியாரம். பகல் இரண்டு மணி தான்.

காளன்:—கடியாரம் நின்று போயிற்றோ என்னமோ? கடியாரத்தை நம்பினால் காரியமாகுமா? எல்லா கடியாரமும் ஒன்றுபோல் தானிருக்குமா? விலைக்கும் பெரிது சிறியதிற்கும் தக்கபடி தானே மணியும் இருக்கக் கூடும். ஒவ்வொருவன் கடியாரத்தில் ஒவ்வொரு மணி தான்.

உன்மத்தன்:—மாமா, கலியாணமென்றால் ஏனிவ்வளவு ஆத்திரப்படுகிறாய்?

இவ்விதம் அவர்கள் தங்களுக்குத் தோன்றியவாறு பேசிக்கொண்டிருந்தார்கள். மாலைப் பொழுதும் நெருங்கிற்று. காளன் செய்த தொந்தரவினால் அஸ்தமித்ததும் விவாகத்தை முடித்துவிடுவதாய் நிச்சயமாயிற்று.

தனித்து உட்கார்ந்து அழும் லீலாவதிக் கருகில் வேறொருவருமில்லை. தினந்தோறுமிருந்த காவலும் கட்டும் இன்று இல்லை. ஏன்? விவாகம் நடக்கப்போகிறது, இனி பயமென்ன? இன்று அவள் முகத்தில் ஒளி யில்லை.

அனந்தபுர மெங்கே? தாய் எங்கே? விநயனெங்கே? லீலாவதி எங்கே? இன்று அவளுக்குக் கலியாணமாம். இதென்ன விபரீதம்! லீலாவதியின் தாய் தன் பெண்ணை அனந்தராமன் மீட்டு வருவானென்றும் விநயன் ஆபத்திலிருந்து பிழைத்து விட்டானென்றும் தைரியமாயிருக்கும் சமயம் இன்னமிரண்டு மணி நேரத்தில் இவளுக்குக் கலியாணம் நடக்கப் போகிறது. பெண்ணுக்கேற்ற புருஷனாகவாவது இருக்கிறானா? ரூபம், குணம் எல்லாம் விபரீதம்! லீலாவதி அழாமலென்ன செய்வாள்? பாபம், தலைமயிர் தரையில் அலங்கோலமாய்ப் புரளுகிறது. கண்கள் அழுதழுது சிவந்திருக்கின்றன. இவளை இச்சமயம் பெற்ற தாய் கண்டாலும் தன் பெண் அல்லவென்றே மறுப்பாள். லீலாவதி நேடுநேரம் கதறி ஓய்ந்து தனக்குள் "இனி நான் பிழைத்திருந்து பயனில்லை. சுகமற்ற வாழ்க்கைக்கு முன் உயிரிழப்பதே மேன்மை. இனி இச்சன்மத்தை வைத்திருக்க மாட்டேன். தற்கொலை புரிந்து கொள்வதே உபாயம்" என்றிவ்வாறு தீர்மானித்து எழுந்தாள். தூக்கிட்டுக்கொள்ளும் நிமித்தம் கட்டிலில் பின்னப்பட்டிருக்கும் நாடாவைச் சுருக்குக் கயிறாகச் செய்துகொண்டாள். கட்டில் மீதேறி நின்றுகொண்டு "விநயகுமார, இச்சன்மத்தில நீ தான் எனக்குக் கணவன். உன்னை விவாகஞ்செய்யமுடியாவிடில் என் வாழ்நாளைச் சன்னியாசியாகவே கழிப்பதிலும் எனக்கு விருப்பமே. ஆனால் எனக்கிஷ்டமற்றவனை நிர்ப்பந்த

மாய் நான் விவாகிக்க நேரிட்டிருப்பதை நான் சகியேன். நமது அன்பு உண்மைக் காதல் ஆகையால் இவ்விபரீத சம்பவத்திற்கு நான் இடங்கொடுக்கமாட்டேன். என் வாழ் நாள் இதோடு முடிந்தது" என்று வாய் விட்டுச் சொல்லிக்கயிற்றைக்கழுத்தில் மாட்டிக்கொண்டு ஊசலாடலானாள். அதே சமயத்தில் அவ்வறையின் கதவு தடாலெனத் திறக்கப்பட்டது. விஜயகுமாரன் கயிற்றை அறுத்தெறிந்து லீலாவதியைப் பிடித்துக்கொண்டான். இருவரும் சந்தோஷப் பெருக்காலும் விசனத்தின் ஆற்றுமையாலும் மூர்ச்சையடைந்து விட்டார்கள்.

## ஒன்பதாவது அத்தியாயம்.

## குரங்கின் கைப் பூமாலை.

மாலை ஐந்து மணியாயிற்று. சரளகுமாரி தன்னறையில் உட்கார்ந்திருக்கிறாள். அவளிடத்தில் கவலையும் விசனமும் குடிகொண்டிருந்தன. சமீபத்தில் தோழி பத்மாவதி உட்கார்ந்திருந்தாள்.

சரளை அழ அவளைப் பத்மாவதி சமாதானம் செய்துகொண்டிருந்தாள். இதற்குக் காரணம் உன்மத்தனின் தின லீலையன்று. உன்மத்தன் விஜயகுமாரனைக் கொன்றுவிடும்படி ஏற்பாடு செய்ததும் விஜயன் தப்பிப் பிழைத்து வெளியில் வந்ததுமே காரணம். உன்மத்தன் செய்த குற்றத்திற்குப் பன்னிரண்டு வருஷத்திற்குக் குறையாமல் சிறைவாசம் ஏற்படுமென்ற வதந்தியுண்டாயிருக்கிறது. தவிர லீலாவதியைத் திருடிச் சென்றதற்காக உன்மத்தன், காரளன இவர்கள்மேல் வழக்குத் தொடரப்பட்டுமிருக்கிறது. இவ்வளவும் மகானுபாவன் புருஷோத்தமன் செய்த ஆராய்ச்சியும் பிரயத்தினமுமென்று நாம் சொல்லவேண்டியதில்லை. வீரநாராயணனிடம் அவ்வூராருக்கிருந்த பயம், கட்டுப்பாடு முதலியவைகளெல்லாம் காற்றாய்ப் பறந்துவிட்டன. கிராமாதிகாரியா யிருப்பதாலும் ஒருகால் தப்பித்துக்கொள்வானோ என்ற பயத்தாலும் பகிரங்கமாய்த் திட்டவில்லை. ஆனாலும் ரகசியமாய்ப் பேசி வந்தார்கள். ஜனங்கள் வாயை அடக்க முடியுமா?

வீரநாராயணன் தன் மகனுக்குற்றிருக்கும் ஆபத்தை நீக்குவதில் பணச்செலவைச் சற்றும் கணக்கிடவில்லை. அவன் அடிக்கடி மேலதிகாரிகளையும் போலீஸ் தலைவர்களையும் கண்டு வந்தான். நீதி, நியாயம், உண்மை இவைகள் இச்சமயமும் உலகிலிருப்பதாக வீரநாராயணனுக்கு எண்ணமே இல்லை. பணத்தினால் சாதித்துக்கொள்ளலாமென்ற தைரியமவனுக்குண்டு. வீட்டில் "சங்கடநாச ஸ்தோத்திரத்தைப்" பாராயணம் செய்யும்படி வைதிகர்களுக்குக் கட்டளையிட்டான். ஊரிலுள்ள சிவாலய விஷ்ணு வாலயங்களில் ஸஹஸ்ர நாமார்ச்சனை இருவேளையும் நடக்கிறது. பிராமண சந்தர்ப்பணை யொரு பக்கம். ஏழை எளியவர், கூன் குருடு எல்லோருக்கும் வேளை தவறாது அன்னாமளித்தல் மற்றொரு பக்கம். இவ்வளவும் எதற்காக? தான் செய்துள்ள குற்றம் ஜயிப்பதற்காக. தவிர, பாரிஸ்டர்களும் வக்கீல்களும் தயாரானார்கள். லஞ்சம், கைக்கூலி என்பனவற்றை உதாரத் தன்மையிலுபயோகிக்க முயன்றான். என்ன இருந்தும் நியாயாதிபதி மட்டும் திடசித்தமுள்ளவர்; மனச் சாட்சியை அனுசரிப்பவர்; ஜனங்களின் நன்மை, தீமை தமது மனோபாவனையிலும் கையெழுத்திலும் கட்டுப்பட்டிருப்பதை நன்றாயுணர்ந்தவர். அவர் உன்மத்தனை ஜாமீனில் விடச் சம்மதிக்கவில்லை. பிள்ளையின் தலை தப்புவதில் வீரநாராயணன் செய்த சாகசத்தை இச்சிறு கிரந்தத்தில் எழுதி முடியாது. உத்தமி சரளகுமாரி அழுதுகொண்டிருப்பதைக் கவனியாமல் இத்துஷ்டனைப் பற்றி நமக்கென்ன? சுய நலங் கருதியாவது தேச க்ஷேமத்தில் சற்று சிரத்தை காட்டியிருப்பானானாலும் அவனைச் சற்றேனும் மதித்துப் பேசலாம். அதிகாரவர்க்கத்தினருக்கிட்ட தூபதீப நிவேதனங்களில் இவன் கைப்பணம் செலவாயிற்றன்றி வேறு லாபமில்லை. குற்றம் மறையுமா? தேசகைங்கரியத்தில் ஊக்கமும் உணர்ச்சியுமற்ற பாதகனை நாம் நினைப்பதும் பாபமே.

இவ்வளவு பெரிய குற்றத்திற்கு ஆளாயிருக்கும் தனது புருஷனைப்பற்றிச் சரளை விசனப்படாமலிருப்பதெங்ஙனம்? காலாந்தரத்தில் சீர்திருந்திவிடுவானென்றும் அதற்குத் தனது பணிவும் அடக்கமும் பொறுமையும் முக்கிய சாதனமெனவும் இவள் எண்ணி இருந்தாளல்லவா? ஸ்திரீகளுக்கு ஒரே துணையாயும் உற்ற பந்துவாயும் இம்மை மறுமை இருவழிக்கும் நன்மை அளிப்பவனுயுமுள்ள கணவன் புத்திஹீனனாயும் மிருகத்தன்மை வாய்ந்தும் கொடும்பாபியாகவும் ஏற்படுவானானால் இதை

யாரிடம் முறையிடுவது? இதற்கு விமோசன மேது? தனது நடவடிக்கையாலும் குணத்தாலும் வாய்மொழியாலும் ஒருவிதத்திலும் குற்றம் செய்யாத உத்தமிகளுக்கு இத்தகைய கஷ்டம் வாய்ப்பதும் கடவுளின் சம்மதமோ அல்லது முன் செய்த தீவினையோ? தான் எண்ணிய எண்ணமும் பாழாகிக் கொடுங்குற்றத்திற்கும் ஆளாயிருக்கும் கணவனைப்பற்றி நினைக்க நினைக்கச் சாளேயின் துக்கம் அலைபோல் மோதிற்று. அருகிலிருந்த பத்மாவதி சாளேயை நோக்கி, "நீ இவ்வாறு உருகிச் சாவதில் பயனென்ன? சோறு தண்ணீரில்லாமல் அலறுவதில் லாபமேதேனுமுண்டா? தைரியத்தைக் கைக்கொண்டு நல்லதையே கோரிக்கொண்டிரு. வரும் விதி வந்தால் படும் விதி பட்டுத்தான் ஆகவேண்டும்" என்றாள்.

சாளே:—தோழி! என் ஜன்மத்தைச் சுடவேண்டும். நான் மகாபாபி. என்னைப்போன்ற துரதிர்ஷ்டமுள்ளவர்கள் வேறு உண்டோ?

பத்மா:—உனக்கென்னடியம்மா குறை?

சாளே:—போதும். என் கணவர் இச்சமயம் என்ன எண்ணி எங்குகிருரோ? நான் அவருக்கு மனைவியாயிருந்தும் அவர் துன்பத்தை நீக்கமாட்டாதவளாயிருக்கிறேன். நான் பிழைத்திருப்பதைக் காட்டிலும் உயிரிழப்பதே நலம்.

பத்மா:—இச்சமயத்தில் நீ உன் புருஷனுக்கு ஒருவித உதவியும் செய்யமுடியாது. வீண் யோசனை ஏன்?

சாளே:—நானிக்கஷ்டத்தைப் பார்த்தும் உயிர் பெற்றிருக்கவேண்டுமா?

பத்மா:—வீணுய்ப் பிதற்ருதே; அழாதே; பட்டினி கிடக்காதே. உன் மாமனர் தம் பிள்ளையைப்பற்றிப் பெரிதும் கவலை எடுத்திருக்கிருர். 'பணம் பத்தும் செய்யும்' என்றபடி எப்படியாவது உன் புருஷன் விடுதலைபாவான். நீ வீண் துயரம் கொள்ளாதே.

இது கேட்டு சாளே ஒருகால் நன்மை ஏற்படக்கூடாதா என்ற நம்பிக்கையால் தனது குல தெய்வங்களை மனதில் தியானித்துத் தனது புருஷனுக்கு ஒரு ஆபத்தும் நேரிடாவண்ணம் காப்பாற்ற வேண்டுமாறு வேண்டிக் கொண்டாள், தனது வேண்டுதலுக்காகவாவது தன் கணவனைக் காப்பாற்றும்படி பிரார்த்தித்தாள்.

இச்சமயம் வெளியில் பேரிடிபோன்ற ஒரு குரல் கேட்டது. பத்மாவதி உடனே வெளியே சென்றுவிட்டாள். சாளே அக்குரல் தனது புருஷனுடையதென்றறிந்து அதிக சந்தோஷத்துடனெழுந்தாள். இதற்கு உன்மத்தன் பேய்போல் சத்தமிட்டு ஓடிவந்து மனைவியின் தலைப்பின்னலை கரகரவென்று இழுத்து அவ்வறை முழுவதும் சுற்றி இழுத்து, "அடி! பாதகி! விநயனுக்குக் கையெழுத்தில்லாக் கடிதம் எழுதியது யார்?" என்று கூவினன்.

சாளே, "நாத! இதென்ன விபரீதம். சற்று என்னை விடுங்கள்" என்று கேட்டதும் உன்மத்தன் கோபம்மீறி பெருத்த தடிகொண்டு அவள் முதுகில் ஐந்து ஆறு முறை ஓங்கியடித்தான். இவ்வேதனையைச் சகிக்கமாட்டாதவளாய், "சுவாமி! நான் குற்றமிழைத்ததுண்டு. பொறுக்கவேண்டும். தாங்கள் சற்று சிரமபரிகாரம் செய்துகொள்ளுங்கள். வீட்டில் புசித்து ஒரு வாரமாயிற்றே. சாப்பாடு தயாராயிருக்கின்றது. சாப்பிட்ட பிறகு தாங்கள் செய்யும் சிட்சையை ஏற்றுக் கொள்கிறேன். தயவு செய்யுங்கள். இது ஒரு விஷயத்திலாவது என் சொல்லை ஈடேற்றுங்கள்" என்று மன்றுடினள். உன்மத்தனுக்கு இந்நல்மொழியெல்லாம் அதிக வீராவேசத்தை யுண்டாக்கின. இது வழக்கந்தானே. அவிவேகிகளுக்கு நல்லுரை ஏற்குமா? தவிர குரங்கு அறியுமோ பூமாலையின் சிறப்பை?

உன்மத்தன், "அடி வேசி! உன்னையா நான் மன்னிப்பது. உன்னையா நான் மன்னிப்பது. உன்னை இப்பொழுதே சிட்சிக்கிறேன் பார்" என்று சாளேயைக் காலால் உதைத்தும் கைத்தடியால் அடித்தும் கரகரவென்றிழுத்தும் சித்திரவதை செய்தான். சாளேயின் மண்டை உடைந்து ரத்தம் வெள்ளமாயோடிற்று. சாளே, "சுவாமி! காப்பாற்றும்" என்று அலறினள். உன்மத்தன் அடிப்பதை நிறுத்தவில்லை. மூர்ச்சித்துக் கீழே விழுந்துவிட்டாள். வாயாலும் மூக்காலும் ரத்தம் பெருகியது. கண் திறந்தபடி தரையிற் கிடந்தாள்.

சமையலறையிலிருந்த வேலைக்காரி யொருத்தி உன்மத்தனின் இறைச்சலைகேட்டு ஓடிவந்து இக்கொடிய காட்சியைக்கண்டு "கொலை, கொலை"என்று அலறிச் சத்தமிட்டாள். வீட்டிலுள்ளவர்களெல்லாம் இச்சத்தம் கேட்டு அவ்

வறையிற் புகுந்தார்கள். உன்மத்தன் மூர்ச்சித்துக் கிடப்பவளேயும் விடாது அடித்த வண்ணமாயிருக்கிறதைக் கண்டு அவனைப் பிடித்துக்கொண்டு கையிலுள்ள குண்டாந்தடியைப் பிடுங்கிக்கொள்வதற்குள் ஊர் கூடிவிட்டது. உன்மத்தனைக் கட்டிப்பிடித்து வேறொரு அறையிலடைத்துப் பூட்டிவிட்டுச் சரளகுமாரிக்கு உபசாரம் செய்ததுடன் தக்க வைத்தியர்களுக்கும் சொல்லியனுப்பினர்கள். சாலே பிழைப்பதரிது என்று பேசிக்கொண்டார் பலர்.

வீரநாராயணன் தனது சாமர்த்தியத்தால் பணத்தைப் பணமென்று பாராமல் வாரியிரைத்துத் தன் மகனை ஜாமீனில் அழைத்து வந்த பெருமையைத் தனது இஷ்டமித்திரர்களிடம் பேசிக்கொண்டு வெற்றிலே மென்று தின்ற வண்ணவாய்த் தன்னறையிலுட்கார்ந்திருந்தான்; இச்சமயம் வீட்டினுள் உண்டான சந்தடிகேட்டு ஓடிவந்து பார்த்தான்; பிரமாதம் விளைந்திருப்பதைக் கண்டான்; இதை யொரு வழியிலும் தப்புவிக்க முடியாதென்பதை யறிந்தான். என்? சரளகுமாரி பிழைக்கமாட்டாள்.

விதியே! இதுவோ தம்பதிகளின் இணக்கம்? இன்னும் கடவுள் சிருஷ்டியில் என்னென்ன விநோதங்கள் ஏற்பட விருக்கின்றனவோ? இம் மாதிரியான பிராணிகள் எவ்வளவு உதிக்கப் போகின்றனவோ? இதைக் காட்டிலுமதிபயங்கரச் செய்கைகளேயும் நடத்தக்கூடிய பிராணிகள் எங்குதலேமறைவாயிருக்கின்றனவோ? விஸ்தாரமான உலகின் ஒரு பாகத்திலிருக்கும் நாம் எல்லாவற்றையும் அறிந்து கொள்ளல் சாத்தியப்படுமா?

## பத்தாவது அத்தியாம்.

## கெடுவான் கேடு நினைப்பான்.

இரவு பன்னிரண்டு மணி. சரளகுமாரி மாரணப் படுக்கையிலிருக்கிறாள். வைத்தியர்கள் சமீபத்திலிருந்து கொண்டே மருந்துகள் கொடுத்துக்கொண்டிருக்கிறார்கள். வீரநாராயணன் தலையில் கை வைத்துக்கொண்டு ஒன்றும் தோன்றாதவனாய் அங்கு உட்கார்ந்திருக்கிறான். அவன் மனைவியும் சாகக் கிடக்கும் மருமகளைப் பார்த்துக் கண்ணீர் விட்டழுது கொண்டிருக்கிறாள். அக்கம்பக்கத்திலுள்ள சில ஸ்திரீகள் வாயிற்படி யருகில் நிற்கிறார்கள். வீரநாராயணன் வைத்தியரை நோக்கி, "இப்பொழுது தேகஸ்திதி எவ்விதமிருக்கிறது?" என்று வினவினன்.

வைத்தியர்கள் சாலேயின் நாடியையும் சுவாசத்தையும் பரீட்சித்து, "அய்யா! எங்கள் முயற்சியில் சற்றும் குறைவில்லே. சாலே பிழைப்பது மட்டும் அரிது. இன்னம் அரை மணி நேரம் தான் உயிரிருக்கும். நாங்கள் என்ன செய்வோம்?" என்றார்கள்.

இது கேட்டதும் வீரநாராயணன் மனைவி தலையிலடித்துக்கொண்டு அழலானாள். மற்றுமுள்ள ஸ்திரீகளும் சாலேயின் நற்குணத்தை வர்ணித்து அலறினர்கள். வைத்தியர்கள் இனி அங்கிருப்பது சரியன்றென்று வெளியே சென்று விட்டார்கள்.

சிறிது நேரத்தில் சாலேக்கு மாரணவேதனை யுண்டாயிற்று. இனிப் பிழைக்கப்போவதில்லே யெனத் தெரிந்து அவளேப் படுக்கையுடன் வெளிக்கட்டில் கொண்டுவந்தார்கள். இப்பரிதாபகாமான காட்சியைக்கண்டு கதறி அழாதாரில்லே. இதை எழுதவும் முடியாது. நமது கையிலுள்ள எழுதுகோலும் தவறுகிறது. வீரநாராயணன் ஒன்றுந்தோன்றாது திடுக்கிட்டான். தன் பிள்ளேக்கு நேரவிருக்கும் தண்டனையை எண்ணி மனந்தவித்தான். எதை யொளித்தபோதிலும் உன்மத்தன் சாலேயை அடித்துக் கொன்றான் என்பதை மறைத்தல் முடியாதகாரியம். அனந்தாமனுக்குத் தான் செய்த கொடுமையே இவ்வளவிற்கும் காரணமென்பதை யுணர்ந்தான். ஊராரின் வயிற்றெரிச்சல் முழுவதும் இவ்விதம் தன்னைத் தாக்குவதா யறிந்தான். இனி என்ன நினைத்துத்தான் என்ன? கண் கெட்ட பிறகு சூரிய நமஸ்காரம் பலிக்குமா?

சாலே சற்று கண் விழித்து, 'சுவாமி!' என்றாள். இது கேட்டு அங்கிருப்பவர்கள் சென்று உன்மத்தனே அழைத்தும் அப்பாபி வாவில்லே. மற்றொரு முறை கண் விழித்துச் சாலே நோக்கினள். தன் கணவன் அங்கில்லே என்பதறிந்ததும் அவள் கண்களிலிருந்து கண்ணீர் பெருகிற்று. பத்மாவதி கிட்டச்சென்று, "சரளகுமாரி! உனக்கென்னவேண்டும்?" என்றாள்.

சாலே மூன்றும் முறை விழித்துப் பார்த்து, "கணவர் இங்கு வரவில்லேயா?" என்று கேட்டாள்.

இதற்கு, பத்மாவதி "வருவார், கவலைப்படாதே," என்றதும், "இல்லை, இல்லை. அவர் வரவில்லை. இதுவே கடைசியாக நான் அவரைப் பார்க்க நினைப்பது. இனி இல்லை. இப்பொழுதும் என்மேல் இரக்கமுண்டாக வில்லையா? ஆச்சு! மார்படைக்கிறது. ஒரே தடவை நான் காணக்கூடாதா?" என்று புலம்பினள். வாய் குழறிற்று; அங்கிருப்பவர்கள் ஒன்றும் பேசாது அழுதார்கள். திரும்பவும் சரளை கண்விழித்தாள். "அவர் வரவில்லை. வேண்டாம், வரவேண்டாம். எனக்கு அவர்தான் தெய்வமாகையால் என் மனதிலிருந்துகொண்டிருக்கிறார். எனது மன்றாட்டத்தைத் தெரிவியுங்கள். என்னை மன்னிக்கும்படி நான் கேட்டுக்கொண்டதாய்ச் சொல்லுங்கள். என் உயிருடனாவது அவருக்கு ஏற்பட்டிருக்கும ஆபத்துக்கள் விலகட்டும். அவர் திருவடியே எனக்குத் துணை." இதற்குமேல் பேச்சு எழவில்லை. கைகால்கள் குளிர்ந்தன. மேல்மூச்சுண்டாயிற்று. கண்கள் விழித்தபடி இருந்தன. பிராணவாயு பறந்தோடிவிட்டது. சரளையின் தேகம் அசைவற்றிருக்கிறது. பொன்னிறமானமேனியில்கருநிறமுண்டாயிற்று. அவிவேகியான புருஷனால் சரளை தன் நம்பிக்கை பொறுமை எல்லாவற்றையு மிழந்து மடிந்தாள். சரளைக்கு அவள் வாழ் நாளில் சுகமென்பதே தெரியாது. மாணமடைந்ததால் அவள் இனிச் சுகமடைவாள் என்பதில் தடை இல்லை. பதிவிருதா சிரோமணியான அவள் நல்லுலகில் வரவேற்கப்படுதல் நிச்சயம். அவள் ஆன்மா பரிசுத்த வெளியிற் கலந்தது. இனி இக்கொடிய உலகின வேதனை யொன்றும் அவளுக்கேற்படாதல்லவா? அவ்வீட்டிலுள்ளவர்களின் அழுகைக்குரல் ஆகாயத்தையும் ஊடுருவிச் சென்றது. இவ்வேளையில் உன்மத்தன் உண்மையில் உன்மத்தனானன். அவன் வாய்க்கு வந்ததைப் பிதற்றிக்கொண்டு, சரளையின் பிணத்தருகில் வந்து, "என் சரளையைக கொன்ற பாபியார்? யாராயிருந்தாலும் சரி, இதோ தலையை உடைத்து விடுகிறேன பார்!" என்று கர்ச்சித்தான். இவனுக்குச் சித்த பிரமை உண்டாயிருப்பதறிந்து அங்குள்ளவர்கள் இவனைக் கயிறுகொண்டு கட்டி யிழுத்து வேறிடம சென்றார்கள். வீரநாராயணன் 'இனி இதொன்று பாக்கியிருந்தது போலும். வருவன எல்லாம் வரட்டும்' என்று தெளிந்தான்.

## பதினொன்றாவது அத்தியாயம்

### நன்மை விதைத்தால் நன்மை விளையும்.

லீலாவதியின் கஷ்டங்களெல்லாம் சூரியனைக் கண்ட பனிக்கூட்டம்போல் நீங்கிவிட்டன. தேவபுரத்தில் எல்லோரும் சேர்ந்து இருக்கிறார்கள். அனந்தபுரமிருந்து லீலாவதியின் தாயும் வந்துவிட்டாள். ராதையும் மாதவனும் அங்குதானிருக்கிறார்கள். அனந்தராமன் உள்பட அனைவரும் ஆனந்தக்கடலிலாழ்ந்திருந்தார்கள். அவ்விடம் புருஷோத்தமன் திடீரென்று வந்து சேர்ந்தார். இவரைக்கண்டதும் அனந்தராமன் ஓடோடியும் வந்து கட்டிக்கொண்டு, "நண்பா! உன்னைத் திரும்பவும் காணக்கூடிய பாக்கியமெனக்கிருந்ததே. நீ இல்லாவிடில் விநயன் மாண்டு போயிருப்பான். லீலாவதியைக்கண்டு பிடிப்பதேது. உன்னால் நானடைந்த நன்மை கொஞ்சமோ," என்று ஆனந்தக்கண்ணீர் விட்டான்.

புருஷோத்தமன்:—நண்பா! நீயே பாக்கியசாலி. உனது நற்குணமே சிறந்தது. உன்னை வஞ்சித்துவிட்டு ஓடிய என்னை நீ புகழுதல் நியாயமா? எல்லாம் உனது நற்குணத்திற்கு நன்மை விளைந்தது.

"நீ எனக்கு வஞ்சனைசெய்ததாய் எண்ணிய போதிலும் அதனால் நான் கஷ்டப்படவில்லை. உன்னால் எனக்கு நேர்ந்தனவெல்லாம் நன்மைதான்" என்று கூறி அனந்தராமன் உள்ளிருக்கும் சிறுவர்களை யழைத்தான். விநயன், லீலாவதி, ராதை, மாதவன் இவர்கள் புருஷோத்தமனை நமஸ்கரித்தார்கள்.

புருஷோத்தமன் அனந்தராமனை நோக்கி, "அய்யா! இங்கு வந்திருக்கும் ராதா மாதவர்கள் அன்னியரல்ல. நெடுநாள் கண்டுகொள்ளாவிடில் பந்து முறைமையும் மறந்துபோய்விடுகிறது. நான் செய்த ஆராய்ச்சியால் சில விஷயங்களைக் கண்டுபிடித்தேன். ராதை உன் பெரிய தகப்பன் பிள்ளையின் மகள்தான்" என்றார்.

அனந்தராமன், ராதையைக் கிட்ட உட்காரச் செய்து, "குழந்தாய்! நீ பாலகோபாலன் மகளா? ஏதோ மனஸ்தாபத்தால் நான் பாலகோபாலனைக் கண்டு நெடுநாளாயிற்று. உனக்கேற்ற புருஷன் கிடைத்திருப்பது பூஜா

# CHINTHAMANI.

**A HIGH CLASS TAMIL MONTHLY.**

*(Devoted mainly to the cause of Indian Women.)*

EDITOR — SISTER V. BALAMMAL.

**Vol. V.]** **February 1929.** **[No. 7.**


श्री शारदायै नमः ।



श्रीरामचन्द्रपरब्रह्मणे नमः

# சிந்தாமணி

## சுபோத ராம சரிதம்

COMPOSED AND ANNOTATED BY

SISTER V. BALAMMAL

DAUGHTER OF

*Late Dr. A. R. VAIDYANATHA SASTRIAR, M.A., M.B. & C.M*

(*All Rights reserved by the Authoress*)

## सुबोधरामचरिते

### ॥ सुन्दरकाण्डः ॥

विहायाशोकवनिकां विभीषणगृहं तथा ।
दग्ध्वा लङ्कापुरीं सर्वां तुतोष पवनात्मजः ॥ ३५ ॥

पवनात्मजः வாயு குமாரன் अशोकवनिकां அசோகவனத்தையும் तथा அப்படியே विभीषणगृहं விபீஷணர் வீட்டையும் विहाय விடுத்து लंकापुरीं இலங்கை நகர் सर्वां முழுவதையும் दग्ध्वा கொளுத்திவிட்டு तुतोष சந்தோஷித்தார்.

सीतानिकटमासाद्य प्रणम्याश्वास्य तां पुनः ।
प्रतिप्रयाणाय मतिं चक्रे पवननन्दनः ॥ ३६ ॥

पवननन्दनः மாருதியானவர் पुनः மறுபடியும் सीतानिकटं சீதையினிருப்பிடத்தை आसाद्य அடைந்து तां அவளை प्रणम्म நமஸ்கரித்து आश्वास्य ஆறுதல் மொழிகள் கூறி प्रतिप्रयाणाय திரும்பிச் செல்ல मतिं चक्रे விரும்பினார்.

अनुज्ञाप्य च तां कृच्छ्रादारुह्यारिष्टभूधरम् ।
उल्लङ्घ्य सागरं तूर्णमपश्यद्वानरानसौ ॥ ३७ ॥

असौ மாருதியானவர் तां சீதையை कृच्छ्रात् கஷ்டப்பட்டு अनुज्ञाप्य உத்தரவளிக்கச் செய்து अरिष्टभूधरं கரையிலுள்ள மலை மீதேறி सागरं கடலை तूर्णं விரைவில் उल्लङ्घ्य च தாண்டி वानरान् தன் கூட்டாளிகளை अपश्यत् கண்டார்.

अञ्जनातनयं दृष्ट्वा जाम्बवत्प्रमुखास्तदा ।
ससम्भ्रमं तमालिङ्ग्य तुतुषुः प्लवगोत्तमाः ॥ ३८ ॥

तदा அப்பொழுது जांवत्प्रमुखाः ஜாம்புவானை முதலாகக்கொண்ட प्लवगोत्तमाः வானர வீரர்கள் अंजनातनयं ஆஞ்சனேயனை दृष्ट्वा கண்டு ससंभ्रमं பரபரப்புடன் तं அவரை आलिंग्य கட்டி யணைந்து तुतुषुः ஆனந்தமடைந்தார்கள்.

(*To be continued*)

ஸ்ரீராமஜயம்.




தமிழ் நாட்டுப் பெண்மணிகளின் முன்னேற்றத்தை முக்கிய
மாகக்கொண்டு வெளிவரும் ஓர் உயர்தர மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை.

பத்திராதிபர் சகோதரி வி. பாலம்மாள்.

மலர் V.] மாசி. [இதழ் 7.

# பெண்மக்கள் வாழ்க்கையும் தற்காலக் கல்வியும்.

முற்றுடர்ச்சி.

(பத்திராதிபர்.)

மனிதர் ஒவ்வொருவரும் கல்வி கற்கவேண்டியது அவசியமே. கல்விப் பயிர்ச்சியற்ற அறிவு நல்வளர்ச்சியுறாது. நன்னெறி கொள்ளாது. கல்வியினால் வளர்க்கப் பெற்ற அறிவினாலேயே தங்கள் வாழ்க்கைக்குரிய சாதனங்களைத் தேடிக்கொள்ளல் மாந்தரியல்பு. தற்சமயம் ஆடவர்களிடையே வழங்கப் பெறும் கல்வி உத்தியோகக் கல்வியே யன்றி அறிவை வளர்க்கும் கல்வியென்று மேதாவிகள் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். பள்ளியில் மாணவர் படிப்பது எதற்கு என்றால் உத்தியோகம் பெறுவதற்கெனவே என்று நம்மிடையே சுமார் நூறு வருட காலங்களாக ஏற்பட்டுள்ளது. தற்காலம் உயர்தரக்கல்வி பயிலும் மாணவர்களுக்கு அவர்கள் படித்துள்ள அயல் தேச சரித்திரங்களும் உருப்போட்டு வைத்திருக்கும் ஒரு கட்டுப் புத்தகங்களிலுள்ள விஷயங்களும் தவிர்த்துப் பிறிதொன்றும் தெரிய. தெரிந்து கொள்ள—நியாயமே இல்லை. இன்னது படித்தால் இன்ன உத்தியோகம் பெறலாம் என்று கல்வியிலாகா அதிகாரிகளால் நியமிக்கப் பட்டிருக்கின்றது. இவற்றில் ஏதாவதொன்றை நாடி அதற்கென ஏற்படுத்தப்பட்டிருக்கும் புத்தகங்களை மனப்பாடமாக்கிப் பரீட்சையில் எழுதிவிடுவதே தற்காலப் படிப்பு. ஏதேனும் ஒரு முறையில் படித்த மாணவனை மற்றொரு உத்தியோகம் பார்க்கச் சொன்னால் அம்முறையைத் தான் படிக்கவில்லை யென்றே பதிலளிப்பானன்றி வேறில்லை. எப்படியோ ஒரு விதமாகத் தட்டிக் கொட்டி எட்டுக் குட்டிக்காணம்

போட்டு ஓர் உயர்தரப் பரீட்சையில் சிலர் தேறிய போதிலும் முன் போல் உத்தியோகம் கிடைத்தல் அரிதாய் விட்டது. இனி வருஷா வருஷம் கலாசாலைகளினின்றும் வெளிவர விருக்கும் பட்டதாரிகளின் கதியென்ன வென்பதைக் கடவுள் தான் அறியவேண்டும். வியாபாரம், விவசாயம் முதலிய தொழில்களைப் புறக்கணித்துக் கையிலுள்ள முதலையும் பெருவாரியாகச் செலவழித்து இக்கல்வியைக் கற்று முடிவில் வேலையில்லாத் திண்டாட்டத்தில் அகப்பட்டு 'வீணாய் விட்டோமே' என்ற கூக்குரல் வாலிப உலகில் உண்டாகிவிட்டது. இந்தியா பொருளாதார முறையில் செழிப்புற வேண்டுமாயின் முன் போல் தொழிற் கல்வி பெருகி தேசம் விருத்தியடையவேண்டுமென தேசாபிமானிகள் முறையிடுகிறார்கள். தற்சமயமுள்ள வரிச் சுமையைத் தாங்காது கழுத்தை நெளித்துக்கொண்டிருக்கும் பேதை மக்கள் இன்னமும் வருஷந்தோறும் லட்சக்கணக்கான வாலிபர்கள் ஈசல் புற்றைப்போல் உத்தியோகந் தேடி வெளிக் கிளம்புவார்களாயின் நமது கதியென்ன வென்று யோசிக்கின்றார்கள். தோளில் தசைப் பற்றற்று உடம்பில் நல்ல ரத்தமற்று நடக்கச் சக்திபற்று கன்னங்குழிந்து கண்களில் ஒளியற்று அரைவயிறும் கால் வயிறுமாகக் காலங்கழிக்கும் தன் மக்களைக் கண்டு பாரதத்தாய் உரத்தகுரலில் ஓலமிட்டழுகின்றாள். இவ்வளவு நெருக்கடியான சந்தர்ப்பத்தில் நமது பெண் மக்களும் இக்கல்விப் பயிர்ச்சியில் ஈடுபடுவதைக் கண்டு சந்தோஷிக்க முடியவில்லையே. மெத்த சுறுசுறுப்புடன் படிக்கும் பெண்ணைக் கண்டு 'நீ எதற்காக இப்படிப் படிக்கின்றாய்?' என்று வினவினால் 'ஏன் நான் பிறருக்குச் சுமையாகப் பிறரை எதிர் பார்த்துக் காலங் கழிக்க வேண்டும்? எனக்கு உத்தியோகங் கிடைத்தால் நான் சுதந்திரமாக ஜீவிப்பேன்' என்கிறாள். அல்லது 'இக்காலத்தில் அரசாங்க பாஷையாக இருக்கும் ஆங்கிலம் அறியாது எவ்விதம் காலங்கழிப்பது'? என்கிறாள். 'பெண்கள் படிக்கவேண்டாமா'? என்கிறாள். உத்தியோக வேட்டையில் தமக்குள்ளாகவே பற்பலப் போராட்டங்கள் நடத்திக் கொண்டிருக்கும் ஆடவர்களுக்கிடையே ஒவ்வொரு படித்த பெண்ணுக்கும் சுலபமாக உத்தியோகங் கிடைத்து விடுமா? ஆங்கிலத்தை வேறு வழியில் கற்க முடியாதா? பெண்கள் படித்தவர்களாக இருக்கவேண்டுமாயின் அதற்காக உத்தியோகக் கல்வியில் பயில்வதில் பயன் யாது? பெண்கள் பொருள் தேடக் கூடிய சக்தி பெறவேண்டுமாயின் அதற்காக உத்தியோகம் நாடுதல் சௌகரியமானதா?

பெண்கள் சுதந்திரமென்றால் ஆடவர்களைப் போல உத்தியோகம் செய்தல் என்று நினைப்பது வீண் யோசனையல்லவா? அறிவிலும் ஆலோசனையிலும் நல்வழியறிந்து நடப்பதிலும் குடும்பத்தை நிர்வகிப்பதிலும் சுதந்திரமுள்ளவர்களாக இருக்கவேண்டுமென்பதை மறுப்பார் யார்? பெண்கள் மூடர்களாக இருக்கவேண்டுமென்றும் கல்வியறிவில்லாதிருக்க வேண்டுமென்றும் நினைப்பாருண்டா? பெண்கள் தங்கள் வாழ்க்கையிலும் சிறப்புற்று ஆடவர்களுக்கு உற்ற துணையாகவிருந்து பலவழியிலும் உதவி புரிந்து மேன்மையாக மதிப்புடன் வாழக் கூடிய அம்சம் ஓர் சிறிது மற்ற தற்காலப் படிப்பைப் படித்ததினால் எல்லாமறிந்து விட்டதாகக் கூறமுடியுமா? பொறுமையும் சிந்தனையும் சிக்கனமும் அடக்கமும் சகிப்புத் தன்மையும் கொண்டு தன்மதிப்பையும் நிலைநிறுத்தி மனைவி, தாய், மகள், சகோதரி என்ற முறைகளில் ஆடவர்களுக்கு உதவிபுரிய வேண்டியவர்களான பெண்கள் ஆரம்பம் முதல் ஆடம்பரமும் அனுவசியப் பொழுது போக்கு மமைந்துள்ள தற்காலக் கல்வியைப் பயின்று அதனால் அறிவு

வளர்ந்து படித்தவர்களென்று பெயர் படைக்க முடியுமா? இளம் வயதிலிருந்து குடும்பக் காரியங்களைக் கண்ணோக்கத்தாலும் முறையே சிறுகச் சிறுகச் செய்தும் தேர்ச்சியடைய வேண்டிய பெண் மகளைக் காலை முதல் மாலை வரை பள்ளிக்கூடத்தில் அடைத்து வைப்பது தானா படிப்பு? வீட்டிற் கணிகலன்களாகிய மக்களைப் பெற்று அவர்களுக்குத் தாங்களே நல்லாசானாக அமர்ந்து நல்வழி போதிக்கக் கூடிய உயர்பதவியிலும் பெண்கள் போற்றத் தக்கவர்களென்ற அந்தஸ்திலும் இருந்த விடத்திலேயே எளிய முறையில் எல்லாவற்றையும் சாதித்துக்கொண்டு புகழ்பெறக் கூடியவர்களாகிய பெண்மணிகளுக்கு தற்காலப்படிப்பில் உண்டாகக்கூடிய நன்மை யாது? இத்தகைய கல்விமுறை எதற்கு?

பெண்கள் அறிவிற் சிறந்து வாழவேண்டுமென்பதே ஆடவர்களின் நோக்கமாயிருந்தும் பெண் மக்கட்குரிய படிப்பைப் போதிக்கும் கல்விச்சாலைகளையும் ஏற்படுத்த முன்வராதது பெண்களின் துர்ப்பாக்கியமே ஆகும். வேறு வழியில்லாததினால் தற்காலக் கல்விச்சாலைகளுக்குத் தம் பெண்மக்களை யனுப்பப் பெற்றோர்கள் முற்படுகிறார்களல்லாது வேறில்லை. கலியாணத்திற்காகக் கற்றுக் கொடுக்கப்படும் ஹார்மோனியம் பாட்டையும் படித்தோமென்ற பெயருக்காக அனுப்பப்படும் தற்காலப் படிப்பையும் கொண்டு பெண்கள் தங்கள் வாழ்க்கையை நடத்திக்கொள்ளக் கூடிய ஆற்றலையும் உயர் மதிப்பையும் அடைந்துவிட முடியுமா? உலகத்தையாள்பவள் பெண். உலகத்தை உன்னத வழியில் சிறப்பிப்பது பெண்மக்களின் உயரிய வாழ்க்கை. ஆடவர்களை நன்னெறியில் கட்டுப்படுத்துதல் பெண்கல்வி. தன் நிலைமையையும் அதிர்ஷ்டத்தையும் தலைவிதியின் அமைப்பையும் சீர்தூக்கி நன்கறிந்து அதற்கேற்ற வழியில் நடந்துகொள்ளல் பெண்மக்கட்குரிய படிப்பன்றி பெண்மக்கள் வாழ்க்கைக்கும் தற்காலக் கல்விக்கும் அணுவளவும் சம்பந்தமில்லை என்பதே நமது அபிப்பிராயம்.

சுபம்.

# இரு நிற உலகம்.

(ஸ்ரீமதி P. மங்களாபாய்.)

பண்டைகாலத்திய சங்கதி; நமது இந்த பரத கண்டத்தில் தேவதத்தனென்னும் பெயருடைய ஓர் சுசிலமுள்ள பிராமணன் இருந்தான். அவன் வெகுவாய்த் தனது காலத்தையெல்லாம் கடவுள் சிந்தனையிலும் பஜனை செய்வதிலும் கழித்து வந்தான். அவனுடைய பத்தினியுங்கூட அவனுக்குத் தக்கவளாகவே வாய்த்திருந்தனள். கந்த மூலங்களையும் கனிகளையும் புசித்து உதர நிர்வாகம் செய்து கொண்டு அவர்கள் தம் பொழுதை ஆனந்தமாகக் கழித்து வந்தார்கள். அன்றி, தமது சக்தியின்படி பரோபகாரமும் செய்து புண்ணியத்தைத் தேடிக்கொண்டிருந்தனர்.

சில தினங்களில் கடவுளருளால் தேவதத்தனுக்கு ஓர் அழகிய புத்திரன் பிறந்தான். அவனுடைய அந்த கோமளமான சரீரம், நீரோட்டமுள்ள கண்கள், சந்திரனைப் போன்ற சாந்தமும் கம்பீரமுமான முகம் இவைகளைப் பார்த்து அவ்விருவரும் தாம் மிகவும் தந்நியர்களென்று நினைத்திருந்தனர். அந்த துஷ்டனான காலனுக்கு இதைப் பார்த்து சகிக்கமுடியவில்லை. அச் சிறுவன் நடக்கவும் ஆரம்பிக்கவில்லை, அதற்குள் அந்த இரக்கமற்ற காலன் வந்து அவனைக் கொண்டு சென்றனன்.

ஆயிற்று! வீட்டில் ஒரே கூக்குரல் உண்டாயிற்று. வீடுமுழுவதும் மயானம் போல் காணப்

பட்டது. எவனுடைய சகவாசத்தில் தான் ஆனந்தமாய் காலத்தைக் கழித்து வந்தானே, எவனுடைய சுகத்திற்காகத்தன் சக்திக்கு மிஞ்சி சிரமப்பட்டானே, அந்த கிருக ரத்தின மான ஏகபுத்திரனை பாலகன் திடீரென்று தன்னைவிட்டுச் சென்றதைக் கண்டு, அந்த துக்கத்தினால் தேவதத்தன் கேவலம் பித்தனைப் போலாயினன். பாலகனுடைய அன்னையின் உள்ளத்திலோ இடிதான் விழுந்தது போலாயிற்று. அவள் பாலகனுடைய சவத்தை மார்புடன் அணைத்துக்கொண்டு மயானத்திற்கு வந்தாள். தன் வயிற்றிற் பிறந்த பிண்டத்திற்கு உயிரில்லாமற் போயிருந்த போதிலும், அவளுக்கு அதை தகன பூமியில் வைக்க மனம் வரவில்லை, ஸகஜந்தான், தாயின் உள்ளமே தான் அது!

அங்கு அவள் அடிக்கடி அப்பாலகனை உற்று நோக்கிக் கூக்குரலிட்டு அழலானாள். அவ்வழுங் குரலைக் கேட்டு அங்கொரு கழுகு வந்தது. அதனுடைய கண்ணெல்லாம் அந்த அபலையின் தோளிலிருந்த உணவை நாடியது. (பக்ஷியத்தை நாடியது.) அதனால் அதன் நாவில் தண்ணீர் ஊறலாயிற்று. பிறகு அது மகாயோகியினைப் போல் நடித்து அவளை நோக்கிச் சொல்லிற்று: "அம்மா! உன் தலையில் எழுதியிருந்தபடி நடந்து விட்டது. அதற்கென்ன செய்வது? இப்பொழுது அந்த பாலகனைக் கீழே வைத்து விட்டு வீட்டிற்குப்போ! இதுவரையில் இந்தக் காலன் கணக்கற்ற ஜனங்களுடைய உயிரைக் கொண்டு சென்றான். அவர்களை யெல்லாம் அவர்களுடைய ஆப்தர்கள் இவ்விடத்திற்றான் வைத்து விட்டு இல்லஞ் சென்றனர். சும்மா அழுதழுது ஏன் ஜீவனை அலற்றிக் கொள்ளுகிறாய்? அம்மா! எந்தப் பிராணி ஜன்மமெடுக்கின்றனனோ, அவன் சாகத்தான் போகிறான் என்பதை உறுதியாய் நம்பு. அது தேவாதிகளுக்கும் விட்டதல்ல. அப்படியிருக்க நம் கதை என்ன? இதோ பார்! இந்த இடத்தில் எத்தனை சிதைகள் பற்றி யெறிந்து கொண்டிருக்கின்றன! ஆகையால் இத்தகைய பயங்கரமும் அமங்கலமுமான இடத்தில் ஒரு விநாடியும் தங்காமல் நீ வீட்டிற்குச் செல். இல்லாவிடில் சற்று நேரத்தில் சூரியன் அஸ்தமித்து, எங்கும் இருள் சூழ்ந்து கொள்ளும். அதைக் கண்டு நீ பயப்படுவாய்" என்றது.

இவ்வாறு இந்தக் கழுகின் வார்த்தையைக் கேட்டு அவள் மிக்கக் கஷ்டத்துடன் எழுந்து செல்லலானாள். அப்போது "நில்லு! நில்லு"! என்னும் சத்தம் அவள் காதில் விழுந்தது. அவள் பின்னால் திரும்பிப் பார்க்க ஒரு நரியானது தனது பசியைத் தீர்த்துக் கொள்ளும் பொருட்டுக் குகையின் வாயிலில் பதுங்கி உட்கார்ந்திருப்பதைக் கண்டாள். அது அந்தப் பிணத்தைக் கிழித்துத் தின்ன மிகவும் ஆத்திரப்பட்டுக் கொண்டிருந்தது. ஆனால் பகலில் நிசாசரனுடைய பலம் ஒன்றும் பயன்படவில்லை. ஆதலால் அது மிகவும் நிராசையடைந்து உட்கார்ந்த விடத்திலிருந்தே பின் வருமாறு கெஞ்சிக் கேட்டுக் கொண்டது. "அம்மா! சற்று நில்லு. இந்தக் கழுகின் பேச்சை நம்பிப் போய் விடாதே. ஏனெனில் அந்த சவத்தின் தேகத்தில் மறுபடியும் உயிர் புகும் புகாதென்பதென்ன? எந்த நேரத்தில் எப்படியாகும் என்கிற நிடமமென்ன? எவனைப் பார்த்ததனால் நீ எப்போதும் ஆனந்தம் அடைகிறாயோ, உனது துக்கமெல்லாம் பரிகாரமாய்க் கொண்டிருக்கிறதோ, அந்த உன்னுடைய உயிருக்குயிரான கண்மணியை நீ ஏன் நிஷ்டூரமாக இந்த மண்ணில் தள்ளிவிட்டுப் போகிறாய்? எவனை நீ உன் உள்ளங்கையில் சுகுமாரமான புஷ்பத்தைப் போல் ஏந்திப் பிடித்துக் கொண்டிருந்தனையோ அவனைப்பற்றி உன்னுள்ளத்தில் லேசமும் அன்பில்லாமற் போனது ஆச்சரியமாயிருக்கிறது! உங்களைவிட எங்கள் பசு பட்சி

களின் ஜாதி எவ்வளவோ மேல். ஏனெனில் நாம் நம் ஜனங்கள் பேரில் நிஷ்காமமான அன்பைப் பாராட்டுகிறோம். ஆனால் உன்னுடைய புத்திரஸ்னேகமானது லோபமூலமாய்க் காணப்படுகிறது. இல்லாவிடில் அவன் செத்தான் என்று நீ அவனை விட்டு விட்டுப் போயிருக்க மாட்டாய். நிற்க! இனியாவது நீ சூரியப்பிரகாசம் இருக்கிறவரையில் இங்கிருந்து அசையாதே. இந்த இறந்த பாலகன் மறுபடியும் எழுந்திருப்பானென்று மனதில் நினைத்துக் கொண்டே இருந்தாலாயிற்று'' என்றது

நரியின் வார்த்தையைக் கேட்டு வேறு வழியொன்றும் தோன்றாமல் பாபம் அவ்வபலை மறுபடியும் அவ்விடத்திற்கே வந்தனள். அப்பொழுது அந்தக் கழுகு கோபங் கொண்டு, "அடி பிரமைபிடித்தவளே! உனக்கு படமிருக்கட்டும். கேவலம் நரியின் வார்த்தையை நம்பி நீ மறுபடியும் இங்குவந்து சவத்தைக் கட்டிக் கொண்டுஉட்கார்ந்தனையா? இதனால் நீ புத்திர சுகத்தை அடையப் போகிறாயா? அடி பைத்தியமே! இந்த ஜடதேகத்திற் மறுபடியும் உயிர் வருமென்கிற ஆசையை நீ கனவிலும் வைத்துக் கொள்ளாதே. பிறப்பானது மனிதர்களுடைய கையிலில்லை. இது கேவலம் ஈசுவரனுடைய திருவிளையாட்டாகும். அப்படியிருக்க நீ ஏன் வீணாக இங்கு தங்கி ஆயுட்காலத்தை வீண் போக்குகிறாய்? எழுந்து வீட்டிற்குப்போ'' என்றது.

கழுகின் பேச்சுக்கு அவள் மனதிற்கிசைந்து அவள் இல்லஞ் செல்லப் புறப்பட்டாள். அப்பொழுது நரி அவளைத் தடுத்துக்கொண்டு "நில்லு! நீ ஏன் புறப்பட்டுப்போக ஆத்திரப்படுகிறாய்? இன்னும் பகல் இரண்டு நாழிகையிருக்கிறது. அது வரையிலாவது நீ நிர்ப்பயமாய் இங்கிரு'' என்றது.

இவ்வாறாக அதது அதனதன் நலத்தைப் பற்றி நீதியை அவளுக்குச் சொல்லி பக்ஷியத்திற்காகத் தத்தளித்துக் கொண்டிருந்தது. காரணம், பக்ஷிபத்தைத் தின்ன கழுகிற்கு பகல் நேரம் தேவையாயிருந்தது. நரிக்கு இரவு தேவையாயிருந்தது. ஆகையால் அது அவளை இருள் சூழும்வரையில் தங்கச் சொல்லியது.

இவ்விரண்டின் உபதேசத்தால் அவள் முற்றிலும் பயந்துபோய்விட்டபடியால் வீட்டிற்குப் போவதா, அல்லது அங்கே தங்குவதா என்பது அவளுக்குத் தோன்றவில்லை.

இவள் இத்தகையக் கவலையிலிருக்கும் பொழுது அந்த தயாளப் பிரபுவாகிய கடவுள் அவள் பேரில் கருணை கொண்டு, திடீரென்று பூமியில் ஸுதாரஸ மாரியைப் பொழிந்து இறந்த—அல்லது நித்திரித்துக் கொண்டிருந்த—பாலகனை எழுந்திருக்குமாறு செய்தனர். அப்பாலகன் உடனே எழுந்து தவிழலானான். அச்சமயத்தில் அன்னைக்குண்டான ஆனந்தத்திற்கோர் அளவே இருக்கவில்லை. அவள் அவனை இடுப்பில் எடுத்துக்கொண்டு அன்புடன் முத்தமிட்டனள். இந்த மிதமிஞ்சிய ஆனந்தத்தினால் அவள் சற்றுநேரம் மெய் மறந்து விட்டாள். அவளுக்கு அப்பாலகனை எங்குவைக்கட்டும், என்ன செய்யட்டுமென்றாய் விட்டது. பாபம்! அவ்வபலை அழுது கொண்டே வந்தனள். ஆனால் ஈசுவரன் கிருபையால் நகைத்துக் கொண்டே இல்லஞ் சென்றாள்.

பசித்திருந்த பசுபக்ஷிகள் மாத்திரம் தமது மாயாவி வார்த்தைகள் பயன்படாமற் போயினவே யென்றும், கைக்கெட்டியது வாய்க்கெட்டாதது போலாயிற்றே என்றும் வருந்தலாயின.

சாராம்சம் என்னவென்றால் உலகம் முழுதும் சுய நலத்திலேயே கண்ணுங் கருத்துமாயிருக்கின்றது. அன்றி எப்பொழுது எத்தகைய சமயம் வாய்க்கிறதோ அத்தகைய நிறத்தைக் காட்டிக்கொண்டிருக்கிறது என்பது மாத்திரம் உண்மை.

"சாலாபத்ரக்'' என்னும் மகாராஷ்டிர சஞ்சிகையிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டது.

சுபம்.

# மஹாகவி காளிதாஸன்.

(115-ம் பக்கத் தொடர்ச்சி)

(ஸ்ரீமான் M. C. கிருஷ்ணசாமி.)

## II. சரிதம்.

காளிதாஸனுடைய சரித்திரத்தைப் பற்றி நமக்கு ஒன்றும் சரிவரத் தெரியாது. நாடகங்களின் பிரஸ்தாபனைகளில் கவிகள் தங்களைப் பற்றி எழுதுவதுண்டு. ஆனால் காளிதாஸனோ தன் பெயரையும், நாடகத்தின் பெயரையும் தவிற வேறு ஒன்றையும் கூற முன்வரவில்லை. இது அவனுடைய வினய குணத்தைக் காண்பித்தாலும், நாம் அவனைப் பற்றி ஒன்றும் அறிவதற்கில்லையே என வருத்த மூட்டுகிறது.

அநேக கதைகள் அவனைப்பற்றி தேசத்தில் வழங்குகிறது உண்மை. ஆனால் அவை நம் பத்தகுந்தன அல்ல. விக்கிரமாதித்தியனுடைய சபையைச் சார்ந்த 'நவரத்தினங்களில்' காளிதாஸன் ஒருவன் எனக் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் இவ் ஒன்பதின்மரும் ஒரே காலத்தில் இருந்ததாகத் தெரியவில்லை. ஒரு கதையின் பிரகாரம் காளிதாஸன் பால்யத்தில், புத்தியற்றவனயிருந்ததாயும், அவனைப் படிப்பினல் கர்வமடைந்த ஓர் அரச குமாரிக்கு வேண்டுமென்றே சிலர் மணம் செய்வித்தனரென்றும் பின்னர் உண்மை அறிந்த அப்பெண், தன் கணவனை வீட்டைத் விட்டுத் துரத்தி விட்டதாகவும், அவன் அந்த அவமானத்தைப் பொறுமல் காளி தேவியினிடம் முறை இட்டு அவள் வரப்பிரசாதத்தால் புலவனய்த் திரும்பினன் என்றும் தோன்றும். இன்னொரு கதை காளிதாஸனையும், பவபூதியையும் ஒரே காலத்தில் இருந்ததாகக் கூறுகிறது.

நிற்க, காளிதாஸன் நூல்களிலிருந்து நமக்குத் தெரியக் கூடிய சில விஷயங்களைக் கவனிப்போம். அவன் நம் தேசத்தில் அநேக இடங்களில் பிரயாணம் செய்திருப்பதாக அநேக காரணங்களால் புலப்படுகிறது. ரகுவம்சத்தில் 4-ம் ஸர்க்கத்தில் ரகுவின் திக்விஜயத்தை வர்ணிக்கையில் இந்தியாவின் பூகோள அமைப்பை அறிந்ததாகக் காட்டுகிறன். அக்காவியத்தில் 13-ம் ஸர்க்கமும் இதற்கு சான்றாகும். மேக சந்தேசமும் இதை நிரூபிக்கிறது டாக்டர் பௌதாஜி என்பவர் (Dr. Bhau Daji) காஷ்மீரத்தில் வளரும் குங்குமப் பூவைக் காளிதாஸன் கண்ணால் கண்டவன் போல் வருணித்திருப்பதால், அங்கு அவன் சென்றிருக்கவேண்டும் எனக் கூறியிருக்கிறார்.

உஜ்ஜைனி நகரின்மேல் மிக்க அன்புள்ளவனய்க் காளிதாஸன் காணப்படுகிறன். மேக ஸந்தேசத்தில் யக்ஷன் மேகத்தை நோக்கி அந்நகரம் அளகாபுரிக்குச் செல்லும், நேர் வழியில் இல்லாவிட்டாலும், அதன் அழகைக் கண்டு களித்துச் செல்வதே கண்ணை பெற்றதின் பயனகும் என கூறிக் அதன் விபவங்களை விவரிக்கிறன். இதைக் கொண்டும் முன் கூறியபடி விக்கிரமன் என்னும் பதத்தைச் சாதுர்யமாய் இரண்டொரு இடங்களில் விக்கிரமன் என்னும் அரசனை மறைத்துக் காட்டப் பிரயோகித்திருப்பதாலும் உஜ்ஜைனி நகரில் விக்கிரமாதித்தியன் சபையில் காளிதாஸன் விளங்கியதாகக் கூறும் கதையில் சிறிது உண்மை இருப்பதாகக் கொள்ளலாம். இதைத்தவிர அவன் நூல்களிலின்றும் அவன் சரித்திரத்தைப் பற்றி வேறு ஒன்றும் புலப்படவில்லை.

(தொடரும்.)

# சந்திரவர்மா.

## ஓர் நாடகம்.

(ஸ்ரீமான் R. நாராயணசாமிராவ், B.A)

(340-ம் பக்கத் தொடர்ச்சி)

அங்கம் 4. களம் 5.

அரண்மனையில் ஓர் அறை.

காலம் – காலை.

பீமசிங் :—கார்பாரி! நேற்றிரவு எனக்குச் சரியான தூக்கமேயில்லை! வெகு கெட்ட கனவுகள் கண்டு பலதடவைகளில் திடீரென்று விழித்துக்கொண்டேன். இதற்கெல்லாம் காரணமென்ன என்பதும், இக்கனவுகளின் பலன் யாதாயிருக்கலாமென்பதும் அறியக்கூடவில்லை.

கார்பாரி :—கனவுகளுக்குக் காரணம் சாதாரணமாக அஜீரணம் தான் என்று சொல்வார்கள். மனக் கவலையும் ஓர் காரணமென்றும் சொல்வார்கள்! அப்படி கோரமான கனவுகள் என்ன கண்டீர்கள்?

பீமசிங் :—நான் கண்டது ஒரு கனவல்ல. ஒன்றன் பின்னொன்றாய்ப் பல கனவுகள் கண்டேன். அவைகள் எல்லாம் ஞாபகத்திலில்லை! ஏதோ எல்லாம் தாறுமாறாக—ஆ! அதோ மகரிஷி வந்து விட்டார்! என் கனவுகள் கிடக்கட்டும்!

(சந்திரவர்மா பிரவேசித்தல்)

வரவேண்டும் யதீசுவரா! வீற்றிருங்கள். அந்தத் தெய்வத் தன்மையுடைத்தான கடிதத்தின் கருத்து விளங்கியதோ?

சந்திரவர்மா :—அதிலெழுதியிருப்பதைக் கேளுங்கள். (படித்தல்) "பூலோக, புவர்லோக, சுவர்லோகமெனும் மூன்று லோகங்களிலாயினும், அதல, விதல, சுதல, ரஸாதல, தலாதல மகாதல, பாதாளமெனும் சப்த லோகங்களிலாயினும் யாரேனும் இத்தங்கப் பெட்டியை யடைந்து, அதை அதிப்பிரியமாய் எந்த ஸ்திரீ ரத்தினத்திற்குத் தான் அவளிடம் கொண்ட அன்பிற்கு அறிகுறியாக அளிக்கிறார்களோ, அந்த ஸ்திரீரத்தினம் இதை யடைந்த சில மாதங்களில் ஓர் மிகவும் வலிமையும் பராக்கிரமும் பொருந்திய மன்னனுடைய இராணியாவாள்!" மகாராஜ், இதுதான் இதில் எழுதப்பட்டிருக்கிறது!

பீமசிங் :—யோகீசுவரா! இதைக் கேட்டவுடன் நான் புளகாங்கிதனானேன்! பூலோகத்திலுள்ள நான் இப்பெட்டியை யடைந்து, நான் காதலிக்கும் ஸ்திரீரத்தினமாகிய கமலரேகைக்கு, அவளிடத்தில் எனக்கிருக்கும் அன்பிற்கு அறிக்கையாக அதை அளித்தேன்! மற்றும் அவள் என் பட்டமகிஷியாக வேண்டுமென்றும் வேண்டினேன்! அவள் என்னை மணக்கச் சம்மதந்தானென்று சொல்லிய போதிலும், எங்கே அவளுடைய குலகுரு வாராமலேயேயிருந்து விடுவாரோ, அதனால் எங்கே என் விவாகத்திற்கு இடையூறு உண்டாகுமோவென்று பயந்து கொண்டிருந்தேன்! தாங்கள் கமலரேகையின் குலகுரு வல்லவென்று தெரிந்தது முதல் இந்த பயம் எனக்கு அதிகரித்துக்கொண்டேயிருந்தது! ஆனால் தெய்வத்தன்மையுடைய அந்தக் கடிதத்தின் அர்த்தம் தெரிந்தது முதல் என் மணத்தைப்பற்றிய பயமெல்லாம் சூரியனைக் கண்ட பனிபோல் பறந்து விட்டது! ஆ! கமலரேகை ஓர் வலிமையும் பராக்கிரமமும் பொருந்திய அரசனுடைய

இராணியாவாளென்றீர்களே! அத்தகைய வலிமையும் பராக்கிரமமும் பொருந்திய அரசன் என்னையன்றி வேறு யாராய் இருக்கக் கூடும்?

சந்திரவர்மா :—அது தான் எனக்கும் தெரியவில்லை— (ஓர் சேவகன் பிரவேசித்தல்)

சேவகன் :—மகாராஜ்! சுவாமியாரைத் தேடிக் கொண்டு யாரோ இரண்டு வாலிபர்கள் வந்திருக்கிறார்கள்.

பீமசிங் :—யதீசுவர! தங்களை இதுவரை சிரமப் படுத்தியதே தவறு. தங்கள் தரிசனம் கிடைக்கவேண்டி எத்தனை பேர்கள் காத்துக்கொண்டிக்கிறார்களோ! ஆகையால்—

சந்திரவர்மா :—மன்ன! நான் சென்று பிறகு சாவகாசமாக வருகிறேன்.

(சந்திரவர்மாவும் சேவகனும் செல்லல்)

கார்பாரி :—மகாராஜ்! நான் சொல்வதைச் சற்று கவனிக்கவேண்டும். இவர் உண்மையில் ஓர் மகான் என்று நினைக்கிறீர்களா?

பீமசிங் :—கார்பாரி! இதென்ன தெய்வத் தன்மையுள்ள ரிஷீசுவரரைப் பற்றி நீர் இப்படிப் பேசத் துணிந்தீர்?

"கையில் தண்ட கமண்டலுக்கள் இடையிற்
காவிக்கரை வேஷ்டியும்,
மெய்யில் பஸ்மவிலேபமும் களமதில்
மாசற்ற ருத்தி ராக்ஷமும்,
பொய்யாம் இவ்வுலகத்தை விட்டிவர்
பூண்டிங்கு ஸந்யாஸமும்
மெய்யாம் சங்கரர் எனவே வருகிறார்
விச்வேசனைப் போற்றியே!"

அவருடைய மகிமை உமக்கென்ன தெரியும்? போம்.

கார்பாரி :—மகாராஜ்! நான் பேசுவதை மன்னிக்கவேண்டும். இன்று வந்த வாலிபர்கள் இந்த யோகீசுவரருடைய சிஷ்யர்களல்லர். அவர்களை உற்று நோக்கு மிடத்து, அவர்கள் உயர்குலத்தோராய் இருக்கக் கூடுமென்று தோன்றுகிறது.

பீமசிங் :—உயர்குலத்து வாலிபர்களாயிருந்தாலென்ன? இதற்குமுன் இவ்வாலிபர்கள் இம் மகானை எங்கேயாவது பார்த்திருக்கலாம். தற்காலம் அவர் இங்கிருப்பதை யறிந்து அவர் அனுக்கிரகத்தைப் பெற இங்கு வந்திருக்கலாம்.

கார்பாரி :—மகாராஜ்! என்னை மன்னிக்கவேண்டும். எனக்கு மாத்திரம் இந்தச் சாமியார் அரண்மனை வந்தடைந்ததுமுதல் இவர் மேல் சந்தேகம் ஏற்பட்டுவிட்டது. ஆகையால் அவருடைய பழக்கவழக்கங்களைக் கவனித்து வந்தேன்! எல்லாம் சந்தேகத்தை விளைவிக்கக்கூடியதாகவே இருக்கின்றன! மகாராஜ்! இப்பொழுது வந்திருக்கும் இவ்விரு வாலிபர்களும் சுமார் ஒரு மாதத்திற்கு முன் இங்கு வந்திருந்தார்களென்பதை அறிவீர்களோ?

பீமசிங் :—கார்பாரி! உமக்கு வயதாய் விட்டதனால் இருண்டதெல்லாம் பேய் என்று பயப் படுகின்றீர் போலும்! சித்தசுவாதீனமில்லாதவன் பேசுவதைப் போல்—

கார்பாரி:—மகாராஜ்! நான் சித்தசுவாதீனமின்றியா பேசுகிறேன்? மகாராஜ்! ஒரு மாதத்திற்குமுன் இவ்விரு வாலிபர்களும் இங்கு வந்திருந்தபொழுது இம்மகான் உள்ளே ஒருவரையும் விடவேண்டாமென்று பாராக்காரனிடம் சொல்லிவிட்டுக் கதவை உள்ளே தாளிட்டுக்கொண்டிருந்தார். அச்சமயத்தில் நான் தற்செயலாய் அங்கு சென்றேன். கதவு உட்பக்கம் தாளிடப்பட்டிருந்தபடியால் எனக்குச் சற்று சந்தேகம் உண்டாயிற்று. ஆகையால் கதவிலிருக்கும் சாவியின்

துவாரத்தின் வழியாய் உள்ளே என்ன நடக்கிறதென்று பார்த்தேன். இவ்விரு வாலிபர்களும் உள்ளே யிருந்தார்கள். அப்பொழுது இந்த யோகீசுவரர் தன் உள்ளாடையினின்றும் இரண்டு மொகராப் பைகளை யெடுத்து அவ்வாலிபர்களிடம் கொடுத்ததை என் கண்களாலேயே பார்த்தேன்! நகரில் விசாரித்ததில், அப்பணத்தைக் கொண்டு இவ்விரு வாலிபர்களும் இரண்டு விலையுயர்ந்த பந்தயக் குதிரைகளை வாங்கிக்கொண்டு எங்கேயோ சென்றுவிட்டதாகத் தெரிந்தது. இந்த மகான் உண்மையில் ஓர் துறவியாயிருந்தால் இவரிடம் மொகராப் பைகளிருக்கக் காரண மென்ன?

பீமசிங்:—கார்பாரி! நீர் சொல்வதை நான் நம்புவதெனில் இந்த மகரிஷியைச் சந்தேகிக்க வேண்டியிருக்கும்போலிருக்கிறதே!

கார்பாரி:—மகாராஜ்! அதிருக்கட்டும். இந்த மகானுடைய பெயர் இன்னதென்பது தங்களுக்குத் தெரியுமோ?

பீமசிங்:—எனக்குத் தெரியாதே! நான் இதுவரையில் அதை விசாரிக்கவில்லையே! உமக்குத் தெரியுமா என்ன?

கார்பாரி:—ஆம் தெரியும். அவர் பெயர் சந்திரவர்மா.

பீமசிங்:—சந்திரவர்மாவா! இது உமக்கு எவ்வாறு தெரிந்தது?

கார்பாரி:—அந்த மகான் இவ்விரு வாலிபர்களுடன் வெகு இரகசியமாகப் பேசிக்கொண்டிருந்தபொழுது அவர்கள் பேசிய வார்த்தைகள் என் காதிற்படாவிட்டாலும், இவ்விரு வாலிபர்களில் ஒருவன் அப்பெயரால் அந்த வேடதாரியை யழைத்ததை என் காதுகளாலேயே கேட்டேன்.

பீமசிங்:—என்ன ஆச்சரியம்! சந்திரவர்மாவா! ஆ! அப்பெயர் கொண்ட அரசனொருவனிருக்கிறானென்று கேள்விப்பட்டிருக்கிறேன். மேலும் அப்பெயர் கொண்ட ஒருவன் கோசல தேசத்தரசனயிருந்த மகேந்திரராஜனிடம் அமைச்சனயிருந்தானென்றும் கேள்வி.

கார்பாரி:—மகாராஜ்! அவர் யாராயிருந்த போதிலும் ஒரு மகரிஷியின் பெயர் இப்படியாயிருக்கும்?

பீமசிங்:—இல்லை இல்லை. கார்பாரி! நீர் சொல்வதெல்லாவற்றையும் நான் நம்புகிறேன். என்னை மோசம் செய்து ஏதோ துன்பத்திலாழ்த்தவே அந்த வேடதாரி இப்படியெல்லாம் செய்துவருகிறான்போலிருக்கிறது.

கார்பாரி:—மகாராஜ்! இவ்விஷயத்தில் எனக்கிருந்த கிஞ்சித்து சந்தேகமும் சற்றுமுன் நேர்ந்த ஓர் சம்பவத்தால் நிவர்த்தியாகிவிட்டது.

பீமசிங்:—என்ன அது? சீக்கிரம் சொல்லும்.

கார்பாரி:—மகரிஷி இங்கிருந்தபொழுது காற்றில் அவர் மேலாடை சற்று விலகிற்றே, மகாராஜா கவனித்தீர்களா?

பீமசிங்:—மேலாடை விலகிற்று? அப்படியெனில் உள்ளாடை வேறு இருக்கிறதாயென்ன?

கார்பாரி:—ஆம் மகாராஜ்! காஷாய உடை மேலேயிருக்க உள்ளே அரசர் அணிந்துகொள்ளும் விலையுயர்ந்த ஆடையை அணிந்துகொண்டிருந்தார்.

பீமசிங்:—அப்படியா! அந்த அயோக்கியனை இப்பொழுதே கண்டந் துண்டமாக வெட்டிவிடுகிறேன் பார்!

கார்பாரி:—மகாராஜ்! அவ்வுள்ளாடையில் ஓர் உடைவாளையும் பார்த்தேன். மகாராஜ்! உடனே சென்று அவர் தரித்துக்கொண்டிருக்கும் காஷாய உடையைக் கழற்றச்

சொல்லிப் பரிசோதித்தால் எல்லாம் வெளியாகும்.

பீமசிங்:—அப்படியா! அந்த அயோக்கியனை நம்பியன்றோ மோசம் போனேன்! கார்பாரி! என் வாளை யெடுத்துக்கொடும். நீரும் ஓர் வாளை யெடுத்துக்கொண்டு என்னுடன் வாரும். மற்றோர் வீரனும் ஆயுதபாணியாய் நம்முடன் வரட்டும். நாம் மூவரும் உடனே சென்று அந்தத் துரோகியைப் பரிசோதிப்போம். பிறகு அவனைச் சித்திரவதை செய்கிறேன். வாருங்கள் செல்வோம்.

(கோபாவேசத்துடன் செல்லல்.)

(காட்சி முடிகிறது.)

அங்கம் 4. களம் 6.

பவநகர் அரண்மனை அந்தப்புரம்.

காலம்—முற்பகல்.

(கமலரேகை, மோகனா, சித்திராங்கி மூவரும் விளையாடிக்கொண்டிருத்தல்.)

சித்திராங்கி:—என்ன அம்மா! என்னமோ கவலை கொண்டவர் போலிருக்கிறீர்களே!

மோகனா:—யார், நானா? ஒன்றுமில்லையே!

சித்திராங்கி:—அப்படியானால் ஏதாவது விளையாடலாம் வருகிறீர்களா?

மோகனா:—என்ன விளையாடவேண்டுமென்கிறாய்?

சித்திராங்கி:—அம்மானை விளையாடுவோமா?

மோகனா:—அம்மானை வேண்டாமடி! அம்மானை, அம்மானையென்று உனக்கு எப்பொழுதும் அம்மானையிலேயே பைத்தியம்.

சித்திராங்கி:—அம்மானை வேண்டாமம்மா; சுவர்க்கப்படம்?

மோகனா:—அடியம்மா! என்னைக் கார்க்கோடகன் விழுங்கிவிடும். நான் வரவில்லையம்மா!

சித்திராங்கி:—சதுரங்கம்?

மோகனா:—ஒன்றும் வேண்டாமடி—

கமலரேகை:—ஒன்றும் வேண்டாம். அம்மணி எனக்கு ஏதோ மனவருத்தமாயிருக்கிறது. காரணம் தெரியவில்லையே. ஒரு பாட்டுப் பாடுகிறீர்களா? கொஞ்சம் மனதிற்குச் சமாதானமுண்டாகும்.

மோகனா:—என்னைக்காட்டிலும் சித்திராங்கி தான் நன்றாகப் பாடுவாள். சித்திராங்கியே பாடட்டும்.

சித்திராங்கி:—என்னைப் பாடச்சொல்லிப் பிறகு கேலி செய்யவா? நான் மாட்டேன்.

மோகனா:—இல்லையடி, மனதை உருக்கத்தக்கதாய் ஏதாவது ஓர் பாட்டுப் பாடு. கேட்கலாம்.

சித்திராங்கி:—பிறகு கேலி செய்யக்கூடாது.

மோகனா:—இல்லையடி, சும்மா பாடு.

சித்திராங்கி:—சரி, அந்த வீணையைக் கொண்டு வருகிறேன்.

(சென்று கொண்டு வரல்)

சித்திராங்கி:—(வீணையை மீட்டிப் பாடுதல்.)

இராகம்: ஆனந்தபைரவி. தாளம்: ரூபகம்.

பல்லவி.

ஐயையோ யிந்த மோசம் செய்தவன் யாரோ
அநியாயம் யார் செய்தாரோ

அநுபல்லவி.

பாரிலென்றனைப்போல பாதகியுமுண்டோ
பரகதியான என்றன் விதியுமிப்படியாமோ

சரணம்.

என் நகர் தனைவிட்டு இந்நகரமடைந்து
மன்னவர் வகைமோசம் மனதில் நினைந்துருக

மோகனா:—போதும், போதும்! சித்திராங்கி! என்ன பாட்டைப் பாட ஆரம்பித்தாய்? தன் மனது துக்கமாயிருப்பதாகக் கமலரேகை சொன்னாளே! இப்பொழுதுதான் இந்த

அழுகிற பாட்டைப் பாடுகிறதோ?—ஆ! என்ன கமலரேகா! என்ன இப்பொழுது வேடனைக் கண்டு திடுக்கிட்ட மானைப்போல் வெறித்துப் பார்த்தாய்? என்ன விசேஷம்?

கமலரேகை:—அம்மா! என் இடது கண் துடிக்கின்றதே. என் இடது புஜமும் மயிர்க்கூச்ச லிடுகிறதே. இது சகுனமோ அபசகுனமோ தெரியவில்லையே.

மோகனை:—பெண்களுக்கு இடது கண் துடித்தால் சகுனந்தானென்று சொல்லுவார்கள்.

சித்திராங்கி:—ஆமாம், கமலரேகா! என் கலியாணம் நிச்சயிக்கப்பட்ட சமயத்தில் எனக்கும் அப்படித்தான் இடது கண் துடித்தது.

மோகனை:—சித்திராங்கி! இரு, ஏதாவது உளரிக்கொண்டே யிருக்கிறாயே. இரு, கீழே ஏதோ சப்தம் கேட்கிறதல்லவா? கவனி.

சித்திராங்கி:—அம்மா, அம்மா! என்ன இது? அம்மா, அம்மா! யாரோ மாடிப்படியேறி இவ்வறையை நோக்கி ஓடிவருவதுபோ லிருக்கிறதே.

கமலரேகை:—அம்மா, அம்மா! எனக்கேதோ பயமாயிருக்கிறது. என்னைத்தான் யாராவது தேடிக்கொண்டு வருவார்கள். அம்மா, அம்மா! தாங்கள்தான் என்னை இரட்சிக்க வேண்டும்.

மோகனை:—அம்மா, நீ ஒன்றும் பயப்படாதே! யாராகிலும் என் முன்னிலையில் உன்னைத் தொடுவார்களா? நீ பயப்படாதே!

(சுகுணை பரபரப்புடன் ஓடிவருதல்)

சுகுணை:—ஐயோ! அம்மா! அம்மா! கமலரேகா! ஐயோ! ஐயோ!

மோகனை:—அடியே சுகுணை! என்னடி விஷயம்? ஏனடி கத்துகிறாய்? என்னடி இது?

சுகுணை:—அம்மா! எல்லாம் தெரிந்துவிட்டது. மகாராஜா மகரிஷியைக் கொல்லப் போய்விட்டார்! எல்லாரையும் கொல்லப் போகிறாராம்!

கமரேகை:—ஆ! ஆ! (மூர்ச்சித்தல்)

மோகனை:—ஆ! என்ன விபரீதமடி யிது! கமலரேகா! கமலரேகா! சித்திராங்கி! உடனே கொஞ்சம் தண்ணீர் கொண்டுவாடி! என்னடி சுகுணை! இப்படியும் இடிவிழுந்தாற்போல் சங்கதியைச் சொல்வதாடி! சித்ராங்கி, நீ கமலரேகையின் முகத்தில் தண்ணீர் தெளித்து அவளுக்குப் பிரக்ஞை வரும்படி செய். நான் உடனே அரசர் இருக்குமிடத்திற்குச் செல்லவேண்டும்! இல்லாவிட்டால் ஏதாவது விபரீதம் நேரிட்டு விடும்! சுகுணை, அரசர் எங்கேயடி யிருக்கிறார்?

சுகுணை:—அம்மா, அவர் உச்சிக் கோபுரத்திற்குச் சென்றிருக்கிறார்!

மோகனை:—அப்படியா! நீயும் என்னுடன் வா. மெள்ள மெள்ள ஏறிவிடுவோம்!

சுகுணை:—வாருங்கள் செல்லலாம்.

மோகனை:—சித்திராங்கி, கமலரேகையின் மூர்ச்சையைத் தெளிவித்து அவளுக்குத் தைரியத்தைக் கொடு! எது எப்படியிருந்தாலும் எல்லோரும் க்ஷேமமாயிருக்கிறார்களென்று சொல்லிவை! நான் சீக்கிரம் வந்துவிடுகிறேன்.

(சுகுணையும் மோகனையும் செல்லல்)

(காட்சி முடிகிறது).

அங்கம் 4. களம் 7.

பவநகர் உச்சிக்கோபுரத்தின் உச்சியறை.

காலம்—முற்பகல்.

சந்திரவர்மா:—இராஜசிம்மா! ஸ்ரீதரா! சென்ற காரியம் எப்படி முடிந்தது? சீக்கிரம் சொல்லுங்கள்!

இராஜசிம்மன் :—சந்திரவர்மா! தாங்கள் கவலைப்படவேண்டாம். நாலாபக்கங்களினின்றும் படைகள் திரண்டுவருகின்றன. என் தந்தையிடத்தில் இவ்வரசர்களுக்கிருக்கும் அபிமானத்தை என்னென்றுரைப்பேன்! நாங்கள் சென்ற கணமே ஒவ்வோர் அரசரும் ஏராளமான சேனையை எங்களுடன் அனுப்பி விட்டார்கள்! சந்திரவர்மா! அதோ பாருங்கள்! சேனைகள் சமீபத்தில் அணுகுவதால் வெகுதூரத்தில் ஆகாயம் வரையிலும் புகையைப்போல் தூசி கிளம்புவதைப் பாருங்கள்!

சந்திரவர்மா :—இராஜசிம்மா! ஸ்ரீதரா! இப்பொழுது தான் நீங்கள் தைரியமாயிருக்க வேண்டும். நான் இன்று அரசனுடன் பேசிக்கொண்டிருக்கையில் என் மேலாடை காற்றில் சற்று விலகிவிட்டது. அரசன் எங்கே என் உள்ளாடையைப் பார்த்துவிட்டானோ வென்று பயப்படுகின்றேன். அவன் பார்த்திராவிட்டாலுங்கூட நகரை நாற்புறமும் சேனைவந்து சூழ்வதைப் பார்த்து ஒன்றுந் தோன்றாமல் இங்கு வந்தாலும் வரலாம். ஆகையால் நீங்கள் தைரியத்தைக் கைவிடாமல் சமயத்திற்கேற்ப நடந்து கொள்ள வேண்டும்! உஷார்!—ஆ! யாரோ பலர் கோபுரப்படிகளை யேறிவரும் சத்தம் கேட்கவில்லையா?

இராஜசிம்மனும் ஸ்ரீதரனும்:—ஆம்!

சந்திரவர்மா :—நீங்களிருவரும் அமைதியாயும் தைரியமாயும் இருக்கவேண்டும்! ஸ்ரீதரா! உன்னுடைய உடைவாளில் ஓர் கை யிருக்கட்டும்! நீங்களிருவர்களும் இவ்விரு கதவுகளின் பின்னொளிந்து கொள்ளுங்கள். நான் தியானத்திலிருப்பவனைப்போல் நடிக்க வேண்டும்.

(ஸ்ரீதரனும் இராஜசிம்மனும் ஒளிந்து கொள்ளல். சந்திரவர்மா ஜபமாலையைக் கையில் வைத்துக்கொண்டு மேல் பார்த்த வண்ணம் நின்று கொண்டிருத்தல். போர்வீரனும் கார்பாரியும் உருவிய வாளுடன் பின்தொடர்ந்து வர, பீமசிங் ஆயுதபாணியாய்க் கோபாவேசத்துடன் பிரவேசித்தல்.)

பீமசிங் :—(சந்திரவர்மாவைப் பார்த்து) அடா துரோகி! அயோக்கியப் பயலே! யாரிடம் காட்டுகிறாய் உன் சாமர்த்தியத்தை! நான் கேட்கும் கேள்விகளுக்குஉடனே பதிலளிக்காவிடின் இக்கணமே உன்னை இவ்வாளுக்கு இரையாக்கி விடுவேன்! உண்மையில் நீ யார்? எதற்காக இவ்வேடம் பூண்டிருக்கிறாய்? இன்று வந்த வாலிபர்கள் யார்? உடனே பதிற் சொல்லுகிறாயா என்ன?

சந்திரவர்மா :—மன்ன! என் இவ்வளவு கோபாவேசம்? கோபம் பாபம் சண்டாளம்!

“ஆபத்துக் குதவாப் பிள்ளை
அரும்பசிக் குதவா வன்னம்
தாபத்தைத் தீராத் தண்ணீர்
தரித்திர மறியாப் பெண்டிர்
கோபத்தை யடக்கா வேந்தன்
குருமொழி கொள்ளாச் சீடன்
பாபத்தைத் தீராத் தீர்த்தம்
பயனில்லை யேழுந்தானே”
(விவேகசிந்தாமணி)

எனும் முதியோர் வாக்கை மறந்து விட்டீர்களோ! நான் உலகத்தைத் துறந்தவனாயிருக்க, நான் வேடதாரியா? ஆனால் இன்று வந்த வாலிபர்களைப் பற்றித் தாங்கள் கிஞ்சித்து சந்தேகங் கொண்டிருக்கலாம். மகாராஜ், அவர்களிருவரும் ஓரரசனுடைய தூதர்கள். தங்கள் நகருக்கு வரவேண்டு மென்று என்னை யழைக்க வந்திருந்தார்கள்!

பீமசிங் :—தூராத்மா! போதும். நிறுத்து உன் பிரசங்கத்தை. மகரிஷியைப் போல் வேடங்

தரித்து என்னை ஏமாற்றினதுமன்றி இப்பொழுது பொய்யும் சொல்லுகிறயா! அட சண்டாளா! உன்னை நான் எளிதில் விடப் போவதில்லை! உன் காஷாய உடையைக் கழற்று பார்க்கலாம்! நீ கழற்று விட்டால் என் வீரர்களை விட்டு உன்னை உயிருடன் உரித்துவிடச் சொல்லுவேன்.

(இராஜசிம்மனும் ஸ்ரீதானும் சந்தடி செய்யாமல் போர் வீரர்கள் பின்னல் வந்து திடீரென்று அவர்கள் கையிலிருந்த வாள்களைப் பிடிங்கிக்கொண்டுவிடல். பீமசிங் பின்னல் என்ன நடக்கிறதென்று பார்க்கத் திரும்பின சமயத்தில் சந்திரவர்மா அவனையும் நிராயுத பாணியாக்கிவிடல். சந்திரவர்மா தன் காஷாய வஸ்திரத்தைக் களைந் தெறிந்துவிட்டு ஓர் கையில் பீமசிங் வாளையும் மற்றோர் கையில் தன் உடைவாளையும் வைத்துக்கொண்டு)

சந்திரவர்மா:—பீமசிங்! உஷார்! நீ இப்பொழுது ஓர் அடிபெடுத்து வைத்தாலும் உயிரற்ற பிணமாவாய். உன் பின்னிருப்பவர்களும் நிராயுதபாணிகளென்பதைத் தெரிந்துகொள்.

பீமசிங்:—(கத்துதல்) ஐயோ! கொலை! கொலை! சேவகர்களே! வீரர்களே! வாருங்கள்! கொலை! கொலை!

கார்பாரியும் போர் வீரனும்:—கொலை! கொலை! ஐயோ! மகாராஜாவைக் கொலை செய்கிறார்கள்!

(கத்துதல்.)

சந்திரவர்மா:—பீமசிங்! நீங்கள் ஏன் வீணுய்க் கத்தி உங்கள் கண்டங்களை வரட்சியாக்கிக் கொள்ளுகிறீர்கள்? நாமிருக்கும் இடத்தை மறந்து விட்டீர்களோ? நாமிருப்பது உச்சிக் கோபுரத்தின் உச்சியறையன்றோ? நீங்கள் இன்று முழுதுங் கதறினலும் ஒருவருக்கும் கேட்காது. பீமசிங்! கத்துவதிற் பிரயோசனமில்லை! இதோ இச்சாளரத்தின் வழியாய்ப் பார்! உன் நகரை லட்சக்கணக்கான படைகள் சூழ்கின்றன பார்! நீ எங்களை இப்பொழுது ஒன்றும் செய்யமுடியாது! ஆனல் நான் இங்கிருந்து ஓர் ஸைகை காட்டினலும் அரைமணியில் உன் நகர் சாம்பலாகிவிடும்! ஆகையால் நான் சொல்லப் போகும் விஷயத்தைக் கவனமாய்க் கேள்.

பீமசிங்:—(திடுக்கிட்டு) சந்திரவர்மா! நீ யாரென்பதைக் கூட நானறியேன்! நான் உனக்கு யாது தீங்கிழைத்தேன்? நீ எதற்காக என்னை இப்படி எல்லாம் வருத்துகின்றனை? மேலும் என்னுடன் போர் புரிவதெனில், போர்க்களத்தில் பகிரங்கமாக என்னை எதிர்த்தால் அது உன் வீரத்தைக் காட்டும். என்னை இப்படி மோசஞ் செய்து—

சந்திரவர்மா:—பீமசிங்! பேஷ்! என் பெயரையும் எவ்வாறே தெரிந்துகொண்டிருக்கிறயே! நான் யாரென்பதையும் சொல்லிவிடுகின்றேன். நான் கோசல தேசத்தரசனயிருந்த மகேந்திரராஜரிடம் அமைச்சனயிருந்தவன்! இதோ இவன் மகேந்திரராஜருடைய ஏகபுதல்வனன இராஜசிம்மன்! இவன் ராஜசிம்மனுடைய தோழன்! இப்பொழுது நான் சொல்லும் வண்ணம் நீ செய்யவேண்டும்! மறுத்தால் உன் சிரம் உன் உடலை விட்டு நீங்குவதுடன் உன் இராஜ்யமும் உன் சந்ததிகளைவிட்டு வேறு அரசர்களிடம் சென்று விடும்! என்ன சொல்லுகிறய்?

பீமசிங்:—ஆதியிலிருந்து உன்னை முற்றும் நம்பிய எனக்கு இப்படியும் துரோகம் செய்யலாமா? சந்திரவர்மா, நான் உனக்கு யாது தீங்கிழைத்தேன்? நீ இங்கு வந்தது முதல் உன்னைச் சகல மரியாதைகளுடன் நடத்த

வில்லையா? என்னை யிவ்விதம் செயலற்றவ னாக்கிவிட்டு இப்பொழுது இப்படிக் கண்டிப்பாய்ப் பேசுவது உனக்கு நியாயமா?

சந்திரவர்மா:—பீமசிங்! அந்தக் கதையெல்லா மிருக்கட்டும். நான் சொல்வதைக் கவனி. என் சொற்படி நடக்காவிட்டால் நீயாவது உன் போர்வீரர்களாவது உயிருடன் இவ்வறையை விட்டுச் செல்லுதல் பொய்! ஆனால் நான் சொல்லுகிறபடி செய்துவிட்டாயானால் உன்னை நாங்கள் ஒன்றுஞ் செய்ய மாட்டோம். சேனைகள் உன் நகரை எவ்வளவு சீக்கிரத்தில் சூழ்கின்றனவோ அதற்கும் சீக்கிரத்தில் உன் நகரினின்றும் நீங்கிவிடும். இல்லாவிட்டால் உஷார்!—ஆ! (திடுக்கிட்டு) யார் அங்கே?

(மோகனவும் சுகுணவும் பிரவேசித்தல்)

மோகன:—(ஓடிவந்து) ஆ! நாதா!—என்ன இது?——யார் இவர்கள்?——இவர்—— சுவாமியாரா?

பீமசிங்:—நீ என் இங்கு வந்தாய்? இக்கொடியவன் உன்னையும் கொன்றுவிடுவான். நீ சென்று விடு!

சந்திரவர்மா:—பீமசிங்! நீ இவ்வளவு மூடனா? அம்மணி, மகாராணி! ஆணையாகச் சொல்லுகிறேன்! நான் ஒருவருக்கும் தீங்கு செய்யக் கனவிலும் நினைக்கவில்லை. தாங்கள் இங்கேயே யிருங்கள்! (பீமசிங்கைப் பார்த்து) பீமசிங்! உன் அரண்மனையிலிருக்கும் கமலரேகை இராஜசிம்மனுக்குக் காதலியாக நியமிக்கப்பட்டவள்! இவர்களுடைய மணம் நிறைவேறியிருக்கவேண்டிய தினத்தன்றுதான் அந்தப் பாபி சூரசேனன் கோசல தேசத்தை நோக்கிப் படையெடுத்து வந்தான்! ஆனால் அதிருக்கட்டும். நீ உன் வசத்திலிருக்கும் கமலரேகையை எங்கள் வசம் ஒப்புவித்துவிடவேண்டும்.

பீமசிங்:—கமலரேகை என்னையே காதலிக்கின்றாள்! உங்களுடன் வரச் சம்மதியாள்! அவளிஷ்டத்திற்கு மாறாக—

சந்திரவர்மா:—பீமசிங்! நீ இவ்வளவு மூடனா? கமலரேகை உன்னைக் காதலிக்கவுமில்லை, உன்னை மணக்கச் சம்மதிக்கவுமில்லை!

பீமசிங்:—இதை நான் எவ்வாறு நம்புவேன்? தான் என்னையே காதலிப்பதாக அவளே சொல்லியதை என் காதுகளாலேயே கேட்டேனே! மேலும் அக்கடிதம்—

சந்திரவர்மா:—எல்லாவற்றிலும் மோசம் போனாய், பீமசிங்! அப்பெட்டியை நான் தான் அனுப்பினேன்! அக்கடிதத்தையும் நான் தான் எழுதியது! எழுதியிருப்பது தெய்வ பாஷையுமல்ல, ஒன்றுமல்ல! அது கிரேக்கிய பாஷை! மேலும் அதைப் படித்து அர்த்தம் சொல்லியது யார்? நான் தானே! நான் சொல்லியது பொய்யா? அவள் ஓர் அரசனது இராணியாவாளென்று தானே சொன்னேன்! இராஜசிம்மன் கோசலத்தரசனாய் விளங்கும்பொழுது கமலரேகை கோசல தேசத்து இராணியாய் விளங்குவாள்! பீமசிங்! கமலரேகையிடம் கொண்ட ஆசையை ஒழித்துவிடு! வீண் வாதம் செய்யாதே! அவள் உன்னுடைய பொருளல்லள்! என் வீணாப் பிறர் பொருளுக்கு ஆசைப்படுகிறாய்?

"தானத்திற் குறித்து மன்று
தாங்கினார் தீயிற் சால
ஹீனத்தினுய்க்க நிற்கும்
எச்சத்தை யிழக்கப்பண்ணும்
மானத்தை யழிக்கும், துய்க்கின்
மாற்றலர்க் கடிமையாக்கும்
ஊனத்தீ நரகத்துய்க்கும்
பிறர் பொருள் உவக்கின் வேந்தே"

(சாந்தி புராணம்)

மோகனு :—நாதா, இந்த ஒருத்திக்காக நாங்களெல்லோரும் உயிரை விடுகிறதா? அதற்கென்ன செய்வது? தங்களுக்கென்ன அவளிடத்தில் அவ்வளவு மயக்கம்? அவள் வருவதற்கு முன் நான்தான் பூலோகத்திலிருக்கும் இந்திராணி என்பீர்களே! இப்பொழுது அவளை விடமாட்டேனென்றால் எல்லோருடைய கதியும் என்னவாகிறது?

பீமசிங் :—சந்திரவர்மா, இப்பொழுது என்ன செய்யவேண்டு மென்கிறாய்? தெளிவாகச் சொல்!

சந்திரவர்மா :—இந்தக்கணமே கமலரேகையை எங்களிடம் ஒப்புவித்துவிடவேண்டும்! பிறகு இந்நகரிலிருக்கும் சதாநந்தரெனும் வேதியரையும் அவருடைய பார்யை பத்மாக்ஷியையும் எங்களிடம் ஒப்புவித்து விடவேண்டும்! அதன் பின் நாங்கள் சமாதானமாய்ச் சென்று விடுகிறோம்!

மோகனு :—அதற்கென்ன செய்வது? வேறு வழியில்லை. அவர்கள் சொல்லுகிறபடி செய்யவேண்டியது தான்!

பீமசிங் :—நானென்ன சொல்வது! இப்பொழுது நான் உங்களுடைய கையிற் சிக்கிக் கொண்டிருக்கிறேன். ஆகையால் நீங்கள் சொல்லும் வண்ணம் செய்யவேண்டியது தான்! ஆனால், கமலரேகை, சதாநந்தர், பத்மாக்ஷி இம்மூவரையும் உங்களிடத்தில் ஒப்புவித்த பிறகு நீங்கள் நகரைத் தாக்காமல் சேனையுடன் திரும்பிச் சென்றுவிடுவீர்களன்றோ?

சந்திரவர்மா :—அவ்விஷயத்தில் கொஞ்சமேனும் சந்தேகிக்கவேண்டாம்! இப்பொழுது கோசல நாட்டையாளும் சூரசேனனைத் தோற்கடித்து மறுபடியும் கோசல நாட்டையாள வேண்டுமென்பதே எங்களுடைய நோக்கமன்றி உங்களுக்குத் தீங்கிழைக்க வேண்டு மென்பதல்ல. ஆனால் ஒன்று! நாம் இந்நகரைவிட்டு வெளியே சென்று நம் சேனையையடையும் வரையில் எங்கள் தலையிலிருக்கும் ஓர் ரோமத்திற்கும் தீங்கிழைப்பதில்லை யென்று நீ பிரமாணஞ் செய்து கொடுக்கவேண்டும்!

மோகனு :—வேறு வழியில்லை—

பீமசிங் :—என் குலதெய்வத்திற்குப் பொதுவாக உங்களுக்கு யாதொரு தீங்கும் செய்யவில்லை என்று உறுதியாய்ச் சொல்லுகிறேன். ஆனால் சேனையுடன் திரும்பிச் சென்று விடுவதைப் பற்றித் தாங்கள் வாக்களித்ததையும் மறந்து விடக்கூடாது!

இராஜசிம்மன் :—நாங்கள், கமலரேகை, சதாநந்தர், பத்மாக்ஷி இம்மூவரையு மழைத்துக் கொண்டு சேனையுடன் தக்ஷணமே இந்நகர் விட்டுச் சென்று விடுகின்றோமென்று ஆணையாகச் சொல்லுகிறேன்!

சந்திரவர்மா :—பீமசிங்! மகாராஜ்! இனிமேல் நம்மிருவருக்கும் யாதொரு மனஸ்தாபமுமிருக்கக் காரணமில்லை. இவ்வறையை விட்டுச் செல்லும்பொழுது மகாராணியும் அவர்களிஷ்டப்படி வரட்டும். ஆனால் முதலில் கார்பாரி செல்லவேண்டும். அவருக்குப் பின் ஸ்ரீதரன் உருவிய வாளுடன் வருவான்! ஸ்ரீதரனுக்குப் பின்னால் இந்தப் போர்வீரன் செல்லவேண்டும். அவனுக்குப்பின் இராஜசிம்மன் உருவிய வாளுடன் வருவான்! பிறகு தாங்கள் செல்லவேண்டும். தங்களைத் தொடர்ந்துகொண்டு நான் வருவேன்; இவ்விதமாகத்தான் கமலரேகையின் அந்தப்புரத்துக்குச் செல்லவேண்டும். அவளை யழைத்துக்கொண்டு வந்தபின், இராஜசிம்மன் ஸ்ரீதரன், கமலரேகை, மகாராணி இவர்கள் முதலில் நகரைவிட்டு வெளியிலிருக்கும் நம் சேனையைச் சென்றடைய வேண்டியது.

அவர்கள் அங்கு சென்றடைந்துவிட்ட சங்கதி தெரிந்ததும் நான், சதாநந்தர், பத்மாக்ஷி மூவரும் போவோம். எல்லோரும் க்ஷேமமாய் நம் சேனையை யடைந்தபிறகு மகாராணியார் ஓர் வித பயமுமின்றி அரண்மனைக்குப் பல்லக்கில் திரும்பி வந்துவிடலாம்! நாங்கள் நகர்விட்டுச் செல்லும்பொழுது ஒருவரும் எங்களைத் தாக்கக்கூடாதென்று நகரத்தார்களெல்லோருக்கும் தண்டோரா மூலமாய்த் தெரிவித்து விடவேண்டும். நான் சொல்லும் ஏற்பாட்டின்படி, நாங்கள் க்ஷேமமாய்ச் சேனையைச் சென்றடையும்வரை மகாராணியை ஜாமீனாக நாங்கள் வைத்துக்கொள்ளுகிறோம்!—ஆனால் மகாராணியார் உயிரிழக்கும்படி நேரிட்டாலும், நாங்களும் அவர்களுடன் உயிரிழக்கவேண்டியிருக்குமென்று நினைக்க வேண்டாம்! சேனைகள் இப்பொழுது கோட்டைவாயிலை யடைந்துவிட்டன பாருங்கள்!

பீமசிங்:—நான் இப்பொழுது என்ன செய்ய முடியும்? நீங்கள் எதைச் செய்யச் சொன்னாலும் செய்யவேண்டியது தான். வாருங்கள் செல்லலாம்.

(சந்திரவர்மா செல்லிய முறைப்படியே எல்லோரும் செல்லல். மோகனனும் சுகுணனும் சந்திரவர்மாவைப் பின்பற்றி வரல்.)

(காட்சி முடிகிறது.)

அங்கம் 5. களம் 1.
ஓர் வெளிப்பிரதேசம்.
(ஜயசீலன் பிரவேசித்தல்.)

ஜயசீலன்:—இதென்ன விந்தை! என் மைந்தன் புருஷபுரத்திலிருப்பானென்று நினைத்து அங்கு சென்று நான் அறிந்த விஷயங்கள் எனக்கே வியப்பைத் தருகின்றனவே! ஸ்ரீதானே புருஷபுரத்திற்கே வரவில்லையாம்! ஆனால் இராஜசிம்மன் மாத்திரம் தனியாக வந்து சூரசேனனைத் தோற்கடிக்க ஓர் பெரும் சேனையைத் திரட்டிக்கொண்டு சென்றானாம்! ஸ்ரீதரன் எங்கே சென்றிருக்கக்கூடும்? மற்றும், இராஜசிம்மன் சேனையைக் கொண்டு பவநகரை நோக்கிச் சென்றிருக்கிறானென்று கேள்விப்பட்டேன்! பவநகர் நோக்கிச் செல்லக் காரணமென்ன? அயோத்தியாபுரியை நோக்கிச் செல்வதெனில் தென் கிழக்காகவன்றோ சேனைகள் செல்லவேண்டும்! ஒன்றும் விளங்கவில்லையே!

(மற்றோர் புறமாக வத்ஸனும் மகேந்திரராஜனும் அந்தணர்களைப் போல் வேடம் பூண்டு பிரவேசித்தல்.)

வத்ஸன்:—ஆதித்யா, பல நகரங்களினின்றும் சேனைகள் திரண்டுகொண்டிருக்கின்றனவென்று எல்லோரும் சொல்லிக்கொள்ளுகிறார்களே! எந்த அரசன் எந்த தேசத்தை நோக்கிப் படையெடுக்கப் போகிறானோ தெரியவில்லையே!

மகேந்திரராஜன்:—மதிவதனா, யாராவது ஒரு சூரசேனன் காரணமின்றி அநியாயமாய் ஒரு மகேந்திரராஜனுடைய நகரைத் தாக்க ஏற்பாடு செய்துகொண்டிருக்கலாம்! நமக்கென்ன இந்தக் கவலை?

வத்ஸன்:—அப்படியல்ல. ஏதோ விசேஷம் இதிலிருக்கவேண்டுமென்று எனக்குத் தோன்றுகிறது. ஏனெனில், பல அரசர்களுடைய சேனைகள் ஒன்றாகத் திரள்கின்றனவென்று எல்லோரும் சொன்னாலும், எந்த இராஜ்யத்தை நோக்கி அப்படைகள் செல்கின்றனவென்பது ஒருவருக்கும் தெரியவில்லையே! அது ஆச்சரியமாகவன்றோ யிருக்கின்றது! ஆ! அதோ ஓர் மனிதன் வருகிறான்! அவனை விசாரிப்போம்!

(ஜயசீலன் பிரவேசித்தல்)

வத்ஸன் :—ஐயா, நமஸ்காரம். தாங்கள் யார்? எந்த ஊர்?

ஜயசீலன் :—நமஸ்காரம். நானிருப்பது மிதிலாபுரி. நானோர் பிரயாணி. தாங்கள் யார்? எந்த ஊர்?

வத்ஸன் :—நாங்களும் பிரயாணிகள் தான். நாங்களிருப்பது அயோத்தியாபுரி. இப்பொழுது க்ஷேத்திர யாத்திரை செய்து வருகிறோம்.

ஜயசீலன் :—அப்படியா? மெத்த சந்தோஷம். இப்பொழுது எந்த க்ஷேத்திரத்திற்குப் போகிறீர்கள்?

வத்ஸன் :—ஐயா, ஏதோ இத்தேசத்தில் சமீபத்தில் போர் விளையப்போகிறதென்று சொல்லிக்கொள்ளுகிறார்கள். அதனால் எங்கு செல்வதென்றே தோன்றவில்லை. எந்த மன்னன் எந்த தேசத்தை நோக்கிப் படையெடுத்து வரப்போகிறான்? தங்களுக்கேதாவது தெரியுமோ?

ஜயசீலன் :—நான் கேள்விப்பட்டதில், ஏதோ கோசல தேசத்தையாண்ட மகேந்திராஜனுடைய புதல்வர் உதவிக்காகப் பல நகரங்களினின்றும் சேனைகள் திரள்வதாயும், அச்சேனைகள் வங்கநாட்டரசனும் தற்காலம் அயோத்தியை யாள்பவனுமான சூரசேனனுடன் சமர் புரியப்போவதாகவும் கேள்விப்பட்டேன். ஆனால்—

மகேந்திராஜன் :—(ஆவலுடன்) ஆ! அப்படியா?

வத்ஸன் :—(மகேந்திராஜனை ஜாடையாகப் பார்த்து விட்டு) ஐயா! என்ன கடைசியில் ஆனாலென்று இழுத்தீர்கள்?

ஜயசீலன் :—இல்லை. சேனைகள் பவநகர் நோக்கிச் சென்றிருக்கின்றனவாம். அதற்குத்தான் காரணம் தெரியவில்லை. அதிருக்கட்டும். தாங்கள் தோழர் மிகவும் ஆவலுடன் விசாரித்தாரே. அயோத்தியாபுரியில் அவருக்கு வேண்டியவர்கள் யாராவது இருக்கிறார்களோ?

வத்ஸன் :—நாங்கள் இருப்பது அயோத்தியாபுரி என்று முன்னமேயே யறிவிக்கவில்லையா? நம்முடைய நாட்டை அந்தக் கொடுங்கோல் மன்னன் ஆள ஆரம்பித்ததும் நாங்கள் அவ்வூர் விட்டுப் புறப்பட்டு விட்டோம்.

ஜயசீலன் :—அப்படியா! நானிருப்பது மிதிலாபுரியாக இருப்பினும் மகேந்திராஜருடைய க்ஷேமத்தில் நான் மிகவும் கவலை கொண்டவன். என்னுடைய சிநேகிதர்களிலொருவர் கோசல தேசத்திலேயே இருப்பவர். அவர் மகேந்திராஜரை மிகவும் பெருமையாக என்னிடம் புகழ்ந்திருக்கிறார். அவருடைய புதல்வர் மறுபடியும் இராஜ்யத்தை அடைய என் உயிரையுங் கொடுக்க தயாராயிருக்கிறேன்!

வத்ஸன் :—அப்படியா! நாங்களும் மகேந்திராஜரிடம் இராஜபக்தி யுள்ளவர்கள். தாங்களும் அப்படியே யிருப்பதால், நாம் மூவரும் பவநகர் நோக்கிச் சென்று சேனையுடன் கலந்து என்ன நடக்கிறதென்று பார்ப்போமே. தங்கள் அபிப்பிராயம் என்ன?

ஜயசீலன் :—ஐயா! என்னுடைய அபிப்பிராயமும் அதுவே. நாம் மூவருமாக இணைபிரியாமலிருந்து நடப்பதை கவனிப்பதுடன் மகேந்திராஜருடைய குமாரனுக்கு நம்மாலான உதவியையும் புரியவேண்டும். ஆனால் நாம் ரஜபுத்திரவீரர்களைப் போல் உடையணிந்து கொண்டால்தான் அப்படிச் செய்ய முடியும்.

வத்ஸன் :—ஆதித்யா! உனக்கேதாவது ஆட்சேபணை யுண்டோ?

மகேந்திரராஜன் :—மதிவதனு! எனக்கொன்றும் ஆட்சேபணையில்லை.

வத்ஸன் :—அப்படியெனில் எல்லோரும் பவநகரை நோக்கிச் செல்லலாம் வாருங்கள்.

(எல்லோரும் செல்லல்)

(காட்சி முடிகிறது)

அங்கம் 5. களம். 2.

அயோத்தியாபுரியின் வெளிப்புறம்.

ஸ்ரீ தேவியின் கோயில்.

காலம்: பிராதக்காலம்.

(சந்திரவர்மா, இராஜசிம்மன், ஸ்ரீதரன் மூவரும் ஆயுதபாணிகளாகப் பிரவேசித்தல். ஒற்றர்களும் பரிஜனங்களும் அவர்களுடன் மகேந்திரராஜன், வத்ஸன், ஜயசீலன் மூவர்களும் இராஜபுத்திரவீரர்களைப் போல் வேடம் பூண்டு, புடை சூழப் பிரவேசித்தல்.)

சந்திரவர்மா :—இராஜசிம்மா! ஸ்ரீதரா! உங்கள் கவசங்களை எல்லாம் அணிந்துகொண்டு விட்டீர்களா? "நேயமுடனே தன் சரீரத்தை எண்ணுத நிர்வாகியே சூரனும்" என்னும் வாக்கியத்தை நாம் இன்று மறந்து விடக் கூடாது! ஆனல், முன்பின் யோசியாமல் ஆபத்திற்குட் பாய்ந்து விடவும் கூடாது. நம்முடைய சேனை மிகவும் திரண்டதாக இருக்கிறது. நம் சேனையின் பலத்தை யுணர்ந்த சூரசேனனுடைய படைகள் மனதில் அதைரியங்கொண்டிருக்கின்றன! ஆகையால், நாம் தைரியத்தைக் கைவிடக்கூடாது! தைரியத்தைக் கொண்டவர்களிடத்தே எப்பொழுதும் ஜயலக்ஷ்மி சென்றடைவாள்! ஆனல் யுத்தகளத்திற்குச் செல்லு முன்னர் நாம் கோயிலுக்குட் சென்று ஸ்ரீ அம்பாளைத் தரிசித்து அவளுடைய அனுக்கிரகத்தைப் பெறலாம்.

(கோயிலுக்குட் பிரவேசித்தல்)

(எல்லோரும் தேவியை வணங்குதல்)

சந்திரவர்மா :—ஹே ஜகதீசுவரீ! திரிபுரசுந்தரீ! லோகமாதா! ஈசுவரீ! பாரம்பரையாக இவ்விராஜ்யத்தை யாண்டுவந்த செங்கோல் மன்னரான மகேந்திர மகாராஜாவின் குலத்திற்குத் திலகமாய் விளங்கும் இராஜசிம்மனுக்கு மறுபடியும் சிங்காதனம் கிடைக்க, ஹே தேவி! நீயே அருள் புரியவேண்டும். இன்று நடக்கப் போகும் கொடும் போரில் எங்களுக்கு வெற்றியை யளித்து ரட்சிக்க வேண்டுமாய்க் கோரி நின் திருவடியைச் சிந்திக்கிறோம்! ஹே தேவி! எங்களுக்கு வரமளித்திடல் வேண்டும்! (தீபத்திலிருந்து சுடரொளி பறக்கிறது) அப்பா! இராஜசிம்மா! அம்பாள் வரமளித்து விட்டாள்! இன்று தேவி நமக்குத் துணையாயிருந்து நமக்கு ஜயத்தைக் கொடுப்பாளென்பதிலையமில்லை. ஆகையால் உடனே போர்க்களத்திற் கேகலாம் வாருங்கள்! (ஓர் மணியின் ஓசை கேட்டல்) ஆ! நல்ல சகுனமாகிறது! வாருங்கள் செல்லலாம்!

(சில போர் வீரர்களும் ஒற்றர்களும் 'ஜய! விஜயீபவா!' என்று கட்டியம் கூறிக்கொண்டு எதிரே வரல்) வீரர்களே! ஒற்றர்களே! உங்கள் வாக்கு நல்வாக்காகுக!! இன்று நடக்கப் போகும் சமரில்தான் உங்கள் திறத்தைக் காண்பிக்கவேண்டும்! வங்க நாட்டுப் படையை வென்றால்தான் நாம் வீரர்களாவோம்! அதன் பிறகு ஸ்ரீ தேவியின் திருவருளால் இராஜசிம்ம மகாராஜாவுடைய குடை நிழலில் எல்லோரும் இனிது வாழலாம்!

எல்லோரும் :—ஜய! விஜயீபவா!

மகேந்திரராஜன் :—(தனக்குள்) ஹே! சந்திரவர்மா! என்னே உனது விசுவாசம்! அமை

ச்சனென்றால் இப்படியன்றோ இருக்க வேண்டும்!

(எல்லோரும் செல்லல்)

(காட்சி முடிகிறது)

அங்கம் 5. களம். 3.

அயோத்தியாபுரிக் கோட்டையின் ஒரு பாகம்.

காலம்: பிராதக்காலம்.

(சூரசேனன் யுத்த சபை கூடியிருத்தல்)

சூரசேனன்:—மந்திரிகளே! இப்பொழுது நாமென்ன செய்வது? அந்த அயோக்கியன் இராஜசிம்மனை ஓடவிட்டது என்ன மதியீனம்! அவன் எங்கேயோ சென்று ஓர் திரண்ட சேனையைத் திரட்டிக்கொண்டு நம்மை எதிர்க்க வந்துவிட்டானே! என்ன செய்வது?

ஓர் மந்திரி:—மகாராஜ்! நாம் சமாதானமாய்ப் போய்விட்டாலென்ன?

வீரசிங்கம்:—மகாராஜ்! சமாதானமா? என்ன வார்த்தை இவர் சொல்லுகிறார்? சண்டை செய்து பகைவர்களை முறிக்காமல் சமாதானம் செய்துகொள்வதா?

மற்றோர் மந்திரி:—சமாதானம் செய்துகொள்ள நாம் தயாராயிருந்தாலும், எதிரிகள் சம்மதிக்க வேண்டுமே.

ஓர் மந்திரி:—எனக்கோர் யோசனை தோன்றுகிறது. இராஜசிம்மனைச் சமாதான உடன்படிக்கை செய்துகொள்ள அழைப்பதைப் போல் அழைத்து, அவன் எச்சரிக்கையின்றியிருக்குந் தருணத்தில் அவன் மேற்பாய்ந்து அவனைக் கொன்று விட்டாலென்ன?

சூரசேனன்:—அது சரியான யோசனைதான்! மந்திரி! உன்னுடைய புத்தியை மெச்சினேன்! நீயே சென்று நமது இஷ்டத்தை இராஜசிம்மனிடம் தெரிவித்து சமாதான உடன்படிக்கை செய்துகொள்ள அவனை அழைக்கிறாயா?

மந்திரி:—நான் போகிறேன். ஆனால் அவன் வருகிறானோ இல்லையோ? நம்முடைய வீரசிங்கத்தைப் போகச் சொல்லலாமே!

வீரசிங்கம்:—மகாராஜ்! நாம் சமாதானம் செய்துகொள்ள இஷ்டப்பட்டாலும் எதிரிகள் இஷ்டப்படமாட்டார்கள். நான் ஓர் உபாயம் சொல்லுவேன். இப்பொழுது விடியும் நேரமாய் விட்டது. ஆகையால் நாம் இன்றிரவு வரை நம் சேனையை யுத்த களத்திற்கு அனுப்பாமலிருந்துவிட்டு, நள்ளிரவில் மகாராஜாவும் நாமெல்லோருமாகக் கோட்டையின் பின் வாசல் வழியாக ஒருவருக்குந் தெரியாமல் ஓடிப்போய் விட்டாலென்ன?

சூரசேனன்:—அதுவும் நல்ல யுக்திதான்! ஓர் காரியம் செய்வோமே! நம்முடைய சேனாதிபதி இருந்து யுத்தம் நடத்தட்டும். நீ சொல்லியபடி நாம் இந்நகர் விட்டு இரவில் ஓடி விடுவோம்!

சேனாதிபதி:—மகாராஜ்! எதிரிகளுடைய படைகள் மிகவும் திரண்டிருக்கின்றன. ஏற்கனவே நமது வீரர்களெல்லோரும் மனதில் அதைரியம் கொண்டிருக்கிறார்கள். மகாராஜாவும் சென்றுவிட்டால, அவர்கள் யுத்தமே செய்யாமல் வெறிப்புக் கொண்ட ஆடுகளைப் போல் போர்க்களத்தினின்றும் ஓடி விடுவார்கள். மகாராஜாவே நேரில் யுத்தத்தை நடத்தினால்தான் அவர்கள் தைரியமாய்ப் போர்புரிவார்கள்.

சூரசேனன்:—சேனாதிபதி! நீ சொல்வது சரிதான். எனினும் நான் புறப்பட்டுப் போகிறேன். நீ நம்முடைய படைகளுக்குத் தைரியத்தைக் கொடுத்து யுத்தத்தை நடத்து!

(ஓர் தளகர்த்தன் பிரவேசித்தல்)

தளகர்த்தன்:—மகாராஜ்! எதிரிகள் கோட்டையை முற்றிலும் சூழ்ந்துகொண்டு விட்

டார்கள். இனியும் நாம் போர்புரியாமலிருந்தால், பொறியிலகப்பட்ட எலிகளைப் போல் நாம் கோட்டைக்குள்ளேயே கிடந்து சாகவேண்டியதுதான்.

சூரசேனன் :—அதிருக்கட்டும். நாம் அவசரமாக இந்நகர் விட்டுச் செல்ல வேண்டியிருக்கிறது. அங்ஙனம் செல்ல வழியிருக்கிறதல்லவா ?

தளகர்த்தன் :—மகாராஜ் ! இந்நகர் விட்டு வெளியில் எந்தப்புறத்திலும் ஓர் கொசுக்கூட எதிரிகளுடைய கையிற் சிக்கிக்கொள்ளாமல் போகமுடியாது.

சூரசேனன் :—(பயத்தினால் முகம் வெளுத்து) அப்படியா !

(ஓர் இராணுவ வீரன் பிரவேசித்தல்)

இராணுவ வீரன் :—(பரபரப்புடன்) மகாராஜ் ! மைதானத்தில் கோட்டை மதிற் சுவற்றண்டையில் யாரோ நின்றுகொண்டு தங்களையழைத்து வரச் சொல்லுகிறான் ! ஏதோ வெகு அவசரமான சங்கதி சொல்லவேண்டுமாம்.

சூரசேனன் :—அவன் யாராயிருக்கலாம் ? யாராவது பகைவனாயிருந்து நான் தோன்றியவுடன் ஓர் அம்பு எய்து என்னைக் கொன்று விட்டாலென்ன செய்வது ?

வீரசிங்கம் :—அப்படி எதிரியாக இருந்தால் தங்களை இப்படி யழைக்கமாட்டான் ! யாரோ சினேகிதனாகவோ அல்லது எதிரிகளில் நமக்கு ஹிதத்தைச் செய்யக் கூடியவனாகவோதான் இருக்கவேண்டும்.

சூரசேனன் :—வாருங்கள் ! எல்லோருமாகச் செல்லலாம். (எல்லோரும் மதிற் சுவற்றண்டையிற் செல்லல். சூரசேனன் வெளியில் எட்டிப் பார்க்க, மைதானத்தில் மகேந்திரராஜன் நின்று கொண்டிருத்தல்.)

சூரசேனன் :—ஆ ! (திடுக்கிட்டு) பிசாசு ! ஐயோ ! ஐயோ ! பிசாசு !

மந்திரிகள் :—மகாராஜா ! என்ன இது? என்ன விசேஷம் ? ஏன் இப்படி அச்சப்படவேண்டும்? முகம் வெளுத்துவிட்டதே! பிசாசா ? பிசாசு எங்கே யிருக்கிறது ? நாங்கள் பார்க்க வில்லையே !

சூரசேனன் :—(பயத்தினால் உடல் பதற) மந்திரிகளே ! எனக்கு மயக்கம் வரும்போலிருக்கிறது. நான் இவ்விடம் விட்டுச் செல்வோம் ! வாருங்கள்.

வீரசிங்கம் :—மகாராஜ் ! கொஞ்சம் தைரியத்தைக் கைவிடாதீர்கள் ! என்ன விஷயம் தெரியவில்லையே ! பிசாசா! அது எங்கேயிருந்தது ? சொல்லுங்கள் ! அதை என்ன பாடு படுத்துகிறேன் பாருங்கள் !

சூரசேனன் :—இப்பொழுது ஒரு பிசாசு மகேந்திரராஜனுடைய ரூபத்துடன் என் முன் நின்றது! அதோ அவ்விடத்தில் தான். (சுட்டிக் காட்டுதல்)

(அப்பொழுது அவ்விடத்தில் ஜயசீலன் நின்றுகொண்டு தன் வாளை ஓங்கி வெட்டுவதைப் போலவும் குத்துவதைப் போலவும் அபிநயம் செய்ய)

சூரசேனன் :—(வெருண்டு) ஹா ! ஜயசீலன் ! பிசாசு ! உருவம் ! ஐயோ ! (மூர்ச்சித்தல்)

மந்திரிகள் :—ஐயையோ ! செத்துப் போன ஜயசீலன் இப்பொழுது இங்கு எப்படி வரமுடியும் ! ஆ ! உருவம் ! உருவம் ! (வீரசிங்கனைத் தவிர, மற்றவர்களெல்லோரும் அவ்விடத்தை விட்டு ஓடுதல்)

வீரசிங்கம் :—ஆ ! ஜயசீலன் எதிரிகளுடன் வந்திருக்கிறான் போலிருக்கிறது ! இன்று சூரசேனன் முதலியோருடைய ஆயுள் நிச்சயம் முடிவடைந்து விடும். நானும் அவ

னுடன் மாள்வதா? நானோர் முறை ஜயசீல னுடைய உயிரைக் காப்பாற்றவில்லையா? உடனே ஜயசீலனிடம் அடைக்கலம் புகுந்து அவனுடைய கால்களில் விழுந்தாயினும் என்னுயிரைக் காப்பாற்றிக் கொள்வது தான் நலம். சூரசேனன் எப்படிப் போனால் நமக்கென்ன?——ஆ! சூரசேனன் மூர்ச் சித்துக் கிடக்கிறான்! மந்திரிகளெல்லாரும் ஓடிவிட்டனர். ஆ! இக்கண்டசரம் நமக்குப் பிரயோசனப்படும்! ஆ! உள்ளாடையில் மொகராப் பைகளிருக்குமே! ஆ! இதோ இருக்கின்றன. (சூரசேனன் போட்டிருந்த ஆபரணங்களையும், மொகராப் பைகளையும் திருடி எடுத்துக் கொள்ளல்.)

ஆ! இது போதும்! இன்று நரி முகத்தில் தான் விழித்திருக்கிறேன்! எவ்வளவு திரவி யம், எவ்வளவு திரவியம்! (ஓடுதல், ஓடும் பொழுது கால் தவறி மதிற் சுவற்றினின்றும் தவறி அகிழில் விழுந்து மரித்தல்)

சூரசேனன் :—(மூர்ச்சை தெளிந் தெழுந்து) ஐயையோ! என்னை விட்டு விட்டு எல்லா ரும் ஓடிவிட்டார்கள்! ஆபரணங்களை யெல் லாம் கொள்ளையடித்துக்கொண்டு போய் விட்டார்கள்! ஐயோ! உருவம்! பிசாசு! (வெருண்டு ஓடுதல்)

(காட்சி முடிகிறது)

(தொடரும்)

# மரண ஓலை.

(ஒரு சிறு கதை)

(ஸ்ரீமான் அ. ப. சுப்பிரமணியன்.)

1

சென்னைத் திருமயிலைக் கிழக்குக் கோடியில் உற்ற அழகியதோர் பங்களாவின் தோட்டத் தின்கண் வளர்ந்த தருக்கள் மாலை யாதவன் செங்கிரணக்களா விலங்குவனவாய்த் தத்தம் சிரத்தை யுயர்த்தியும் தாழ்த்தியும் குளிர் காற் றை நாற்புரத்திலு மினிமையாய்ப் பரப்பின. அது இரு மாடி வாய்ந்த வழகியதோர் மனை. சுவற்றின் வெளிப்புரத்தில் மஞ்சணிறமை தீட்டி யிருந்தது. அந்த ரமணீகரமான வீட்டில் முதன்மாடியின் தெருப்புரத்து அகன்ற அறை யே நமது சிறு கதையை ஆரம்பிக்க முற்படு கின்றது.

அவ்வறையின் மூலையொன்றிலிருந்த வோரழ கிய மஞ்சத்தின் மீது மெதுவான படுக்கை யொன்று விரிக்கப்பட்டிருந்தது. அதன் மீது முப்பதிற்கதிகப்படாத வயதுடைய மனித னொருவன் படுத்திருந்தான். அடி முதலிடுப்பு வரையில் கம்பளப் போர்வையொன்றைப் போர் த்திய வண்ணம் மல்லாந்து படுத்திருந்த அம் மனிதன் தனதிரு கரங்களையும் மார்பின் மீதிரு த்திக்கொண்டு, தனது கூறிய பார்வையைக் கூரைமேற் செலுத்தியவனாய் முணுமுணுத் துக்கொண்டிருந்தான். அவனிரு கரங்கள் அதி க ப் ப ட் ட வியாதியால் வருந்தியதனாலிளைத்து மற்று வெளுத்திருந்தன. முகமோ சவம் போல் வெளுத்திருந்தது. கண்ணின் பார்வை பிரகாச மற்றேங்கி இருந்தது. கன்னங்களும் உதடுக ளும் சிடுங்கிய முகமும் அவனது வருத்தத் தைத் தெரிவித்தன. அவனது பெருமூச்சினால் அவனது சக்தியின்மை தெளிவாயிற்று.

அதற்கெதிரான மூலையில் ஒரு மேஜை யிருந் தது. அதன்மீது பல வகைப்பட்ட மருந்துப் புட்டிகளும், பஞ்சு, துணி முதலானவைகளும்

இருந்தன. அம்மேஜையின் அருகே இருந்த ஒரு சோபாவின் மீது நான்கு வயதுள்ள ஒரு சிறு ஆண் குழந்தை பிரமையடைந்த பார்வையுடன் மிரளமிரள விழித்துக்கொண்டு கால் நீட்டி உட்கார்ந்து கொண்டிருந்தது.

சிறிது நேரத்திற்குப் பிறகு இராமசேஷையர் என்ற (மஞ்சத்தின் மீது படுத்திருந்த) அம் மனிதன் அப்படியு மிப்படியும் மெதுவாய்ப் புரண்டு பெருமூச்சு விட்டு, சக்தியற்றுத் தள்ளாடிய குரலில் "சாரதே!" என்று கூப்பிட்டான். அடுத்த அறையில் ஏதோ வேலை செய்துகொண்டிருந்த ஒரு மங்கை, இதுகேட்டு அங்கு ஓடோடி வந்தாள். அவள் பார்வைக்கு குணவதியாகவும் பணவதியாகவும் தோன்றினள்.

"ஏன் ? திரும்பவும் அந்தப் பாழும் வயிற்று வலி வந்துவிட்டதா ?" என்று தீரமான குரலில் கேட்டாள்.

"ஐயோ! என்னுயிர் போகிறதே...ஆவி துடிக்குதே—சாரதா! வயிற்றுவலி பொறுக்கக் கூடியதாயில்லையே—ஆ! இதோ வாந்தி—" என்று அதற்கு மேலே சொல்ல அசக்தனுய்த் தனது வயிற்றை இருகரங்களாலும் தடவிக் கொண்டு உட்கார்ந்து தத்தளித்துத் தடுமாறினன்.

சாரதை உடனே அருகிலிருந்த பீங்கான் பாத்திரமொன்றை எடுத்துவர எழுந்தாள். ஆனு லக்கணமே பெருத்த சப்தத்துடன் இராமசேஷன் வாந்தியெடுத்துவிட்டான். அது கண்டு அப்பதிவிரதை சட்டென்று அவனது சிரத்தைத் தனது கரங்களாற் தாங்கி நின்றுள். இன்னொருதாம் வாந்தி வெளிவந்ததும் சாரதையின் சேலையெங்கும் அசங்கியமாகிவிட்டது. ஆனலதை அணுவளவும் சட்டை செய்யாத அப்புனிதவதி ஒரு கைத்துணி கொண்டு தனது காதலனது முகத்திலும் கழுத்திலும் அரும்பிய வியர்வையைத் துடைத்து அவனைச் சமாதானப்படுத்திவிட்டு வாய் கொப்பளிப்பதற்கு ஜலமுங் கொண்டுவா அவனும் வாயைச் சுத்தி செய்தான். ஜல பாத்திரத்தைக் கீழே வைத்துவிட்டுத் தன் மணாளனைப் படுக்கைமீது செவ்வனே படுக்க வைத்துவிட்டுத் தொட்டியினருகே சென்று தனது புடவையைச் சுத்தி செய்ய ஆரம்பித்தாள். அப்பொழுது சோபா மீதிருந்த குழந்தை அச்சத்தால், "அம்மா!" என்று மெதுவாகக் கூப்பிடச் சாரதை, "என் கண்ணே! என் பயப்படுகிறுய்? அப்பாவுக்கு ஒன்றுமில்லை, பயப்படாதே. பேசாமல் உட்கார்ந்துகொண்டிரு. நீ சாது அல்லவா?" என்று வாத்சல்யத்துடன் கூறிவிட்டுக் கணவன் வாந்தி எடுத்ததை அலகு கொண்டு சுத்தி செய்தாள்.

அப்பொழுது அங்கு சேவகன் விளக்குக் கொண்டுவந்து வைத்தான். சாரதை புன்சிரிப்புப் பூத்த முகத்துடன் மணாளனை யணுகி உடம்பையும் நெற்றியையும் தொட்டுப் பார்த்து "இப்பொழுது ஜுரம் குணப்பட்டு வருகிறது. அதைரியப்படவேண்டாம்" எனச் செப்பி அவனருகே சற்றுட்கார்ந்தனள்.

சற்றுநேரம் அங்கு மௌனம் குடிகொண்டிருந்தது. குழந்தை கேசவன் இமைக்காமல் யாவற்றையும் பார்த்துக்கொண்டிருந்தான். இராமசேஷன் முகத்தில் திடீரென்றோர் மாறுதலேற்பட்டதும் அவன் எதையோ சொல்ல வாயெடுத்தான். சாரதை இடை மறித்து, "இப்படி பலவீனமாயிருக்கும்போது தயவு செய்து ஒன்றும் பேசவேண்டாம். என் பிராணகாந்தா! தைரியத்தைக் கொள்ளுங்கள். பரமேசுவரனை ஸ்ரீமந்நாராயணனை நம்புங்கள். எது நம்மை யணுகும்? இதற்கெல்லாம் அதைரியப்படலாமா? பிறர் நோயால் வருந்தும் போதெல்லாம் அவரவர்க்கேற்றவாறு

தேறுதல் மொழியும் தங்களது மனச் சாந்தி எங்கு போயிற்று? ஏனிந்தப் பதட்டம்? கடவுளை நம்பினோர் கைவிடப்படுவரோ? நாமோ சர்வத்தையும் நாராயணனிடம் ஒப்புவித்திருக்கிறோம். நம்மைக் காத்தளிப்பது அவனது காரியமாயிற்று அல்லவா? அவன் கடனடியேனையுந் தாங்குல், நங்கடன் பணி செய்து கிடப்பதே அல்லவா?" எனக் கிள்ளையுங் கேட்டு நாணுமாறு இனிதிசைத்தனள்.

சற்று மனச்சாந்தியடைந்த இராமசேஷன் தனது பிரிய பத்தினியின் முதுகைத் தனதிடது காத்தாற்றடவிக்கொண்டு வலது காத்தாலவளை யணைத்து முகத்துடன் முகம் சேர்த்துக் கண்ணீர் சொரியலானான். அந்தோ! பாபம்! அக்கண்ணீர்த் துளிகள் எத்தனை விஷயங்களைத் தம்முள் அடக்கிக்கொண்டிருந்தனவோ? யாரறிவர்? சொல்வதற்குமரிய மனோதுக்கமெல்லாம் கரைந்து ஒருங்குதிரண்டு கண்ணீர் உருவந் தாங்கி வெளிவந்தன போலும்.

"சே! இப்படி யழுவது தங்கட்கழகல்ல. தாங்கள் எதைப்பற்றி வருந்தவேண்டும்?" என்று மணாளனைச் சமாதானப்படுத்தினாள் அவ்விள நன்னுதல்.

"சற்று வீணையை எடுத்து வாசிக்கமாட்டாயா?" என்று மனந்தேறிய இராமசேஷன் சொன்னான்.

சாரதை யங்ஙனமே செய்யக் கருதி வீணையைக் காத்திலேந்திச் சுருதி கூட்டினள்.

* ("முத்து தமிழ் மாலை கோடி" என்ற திருப்புகழ் மெட்டு.)

(1) கண்ணே, கண்மணி, சோதியே, வாராய்!
அண்ணாமலையா, வன்பா, வாராய்!
தண்ணாரு டாமோதரா, வாராய்!
—ஹரிவாராய்!

(2) ஜோதி சொரூபன் வந்தமர்ந்தான்!
ஜாதி கடந்தென் னிதயம் புகுந்தான்!
ஆதி யனாதி வந்தமர்ந்தான்!
—ஹரிவந்தான்!

(3) நான் ஜீவாத்மா, அவன் பரமாத்மா!
நானு மவனும் சேர்ந்தொருவாத்மா!
ஊனு முயிரும் சேர்ந்தோர் பேராத்மா!
—ஏகாத்மா!

(4) மாயா சக்தி யிங்கு செல்லாது!
மாயா ப்ரகிருதி யென்னை வெல்லாது!
மாயா விகாரம் இனிமே லேது?
—வாதேது?

கேசவனுக்கு யாவும் கனவெனத் தோன்றியது. பாட்டின் இறுதியைக் கேட்டதே இராமசேஷன் தியானத்திலிறங்கினான். அவன் கண்கள் மூடப்பட்டே இருந்தன.

சிறிது நேரத்திற்கெல்லாம் சாரதை கையில் மருந்துடன் நின்றாள்.

"ஆ! அப்பாபி மருந்தை எனக்கு ஏன் கொடுக்கிறாய்? சாரதே! அதைக் கீழே கொட்டிவிடு. அப்பாழும் மருந்தைக் கீழே கொட்டிவிடு" என்று கெஞ்சிய குரலில் இரந்து கூறினான் இராமசேஷன்.

"ஐயோ, அப்படிச் சொல்லவேண்டாம். நீங்கள் என்ன குழந்தையா?" என்று சிரித்தாள் சிறுமி சாரதை. ஆனாலவள் மனத்துற்ற துக்கம் அளவிறந்தது.

"ஆம்! நான் ஒரு குழந்தைதான். ஆ! உன் குழந்தையாய் நான் பிறந்திருந்தால்..."

"சட்! என்ன பேச்சு? நானல்லவா தங்களுடைய பெண்ணாக இருக்கிறேன். எனக்கு உயிரானவர் நீர்தாமல்லவா? ஐயோ! இதைக் குடியுங்களேன்!"

கடைசியில் இராமசேஷன் அதைக் குடித்தான். சிறிது சர்க்கரை மருந்துக்குப் பின் சென்றது.

* ஆசிரியருடையது—அ. பா. சு.

"இன்னுமொரு பாட்டு—சாரதே!" என்ருன் இராமசேஷன்.

சாரதைக்கு இரண்டாந்தரம் சொல்லவேண்டியதில்லை. மீண்டும் சுருதிகூட்டிப் பாடினுள்.

* ("சங்கு சக்ரதர" என்ற மெட்டு.)

(1) மனவண்டு ச்யாமளா சரண நீலோற்பலத்
தனிப் பூவில் லயித்தது காண்!
காளி திவ்ய சாணுரவிந்தப் பூவில்
தாழ்வின்றி யாழ்ந்தது காண்!

(2) மலர்மார்ப்பில் விருப்பமாம் மண்ணிச்சை
கலங்காத தொருகாலும்! [யழகாலே
அன்னை திவ்ய சாணுரவிந்தப் பூவில்
நன்வண்டு தஞ்சமாக—

(3) கருமேனி தன்னுடன் கலந்துறவாடவே
ப்ரகிருதி, பூதம், பறக்க—
கடையில் கமலநயனி யபிலாஷைத்
தடையின்றி நிறைவேற—

(4) சச்சிதானந்தப் பேரானந்த சாகரம்
பொங்கித் ததும்பிட—
இச்சுகதுக்க மிரண்டையும் பொருளென்
என்றும் மதித்திடேனே [று

"ஆ! ஆ! எத்தகைய பாட்டு! எத்தகைய பக்தி! எத்தகைய ஞானம்! சாரதை! என்னைப் பெற்றெடுத்த தாய் நீயே! என்னுடலை போஷிக்கும் தாயும் நீயே! அதிலும் சாரதே! உயர்ந்த ஞானுபதேசம் செய்யுங் குருமூர்த்தியாகவும் நீ எனக்கு இருக்கிருய்! ஆம், நீயே எனக்கு குரு! உன்னை நான் ஜகதம்பிகையாக எண்ணி வணங்குகின்றேன்."

"போதும்! போதுமே! நாதா! தங்கள் வாக்கினின்றும் இத்தகைய வார்த்தைகள் வரலாமா? தாங்களன்ருே என்னுடைய தெய்வம்" என்று சாரதை சொல்லிக்கொண்டே போக, இராமசேஷன் வருத்தத்தால் கடுகடுத்த முகத்துடன் ஓர்புறம் திரும்பி "ஐயோ, சாரதே! எனதந்தியகாலம் இதோ நெருங்குகிறது. ஆ! இந்த வயிற்றுவலியே என்னைக் கொல்லுகின்றது" என்றலறினுன்.

இதுவரை திடமனத்துடனிருந்த சாரதை திடுக்கிட்டாள். அப்பொழுது அங்கு வந்த பாபு—இராமசேஷன் தம்பி—அது அறிந்து டாக்டருக்கு டெலிபோன் கொடுக்கப் போனுன்.

"ஐயோ! சாரதே! இதென்ன எங்கும் ஒரே காரிருள்? விளக்கைச் சற்று தூண்டமாட்டாயா? ஆ! என் கண்மணி கேஸ் (குழந்தை கேசவன்) எங்கே? ஆ!—"

சாரதை கேசவனை எடுத்து இராமசேஷன் அருகில் அமர்த்தினுள்.

"ஆ! என் கண்மணி, என் கண்மணி! உன்னை ஸ்ரீமந்நாராயணன் காப்பானுக.—ஆம்—"

எங்கும் சற்று மௌனம்.

சாரதை பயந்து அலறினுள் "ஆ, என் பிராணநாதா! என்னைச் சற்றுப் பாருங்களேன்?"

மறுமொழி பெருமூச்சுடன் கிடைத்தது. "ஆதிமூலமே!......" கடைசியில் இச்சப்தம் சிறிது சிறிதாய் மெலிவடைந்து நசித்தது.

ஆ! ஒரு சீவனழிந்தது. கடவுள் காப்பாராக! வாழ்க்கையென்னும் சாகரத்தூடே ஒலியின்றி ஆதியின்றி உண்டான ஒரு சிறு நீர்க்குமிழி உடைந்து கடல் நீருடன் ஒன்றுகிவிட்டது. இதைக் கவனிப்பவர் யார்?

சாரதை பிரமித்து நின்ருள். உண்மை விளங்கியதே "ஐயோ! தெய்வமே! நம்பினவரை நடு ஆற்றில் கைவிட்டாயே!" என்றலறி ஸ்மரணை தப்பி மண்மேல் வீழ்ந்தாள்.

* ஓர் மொழிபெயர்ப்புப் பாட்டு—அ. பா. சு.

உம்! துரதிர்ஷ்டம் பிடித்த பெண்ணே! பாக்கியம் அனுபவிக்கக் கொடுத்து வைக்காத சிறுக்கியே! உன்னையேன் திட்டவேண்டும்! எல்லாம் ஈசன் செயல்.

ஆ! சாரதே! நீயேனலறவேண்டும்? என் அழவேண்டும்? என் ஸ்மாணே தப்பவேண்டும்? ஆண்டாண்டு தோறு மழுது புரண்டாலும் மாண்டார் மீள்வாரோ? இது உனக்கு நன்ருய்த் தெரியுமே. உன் புத்தி எங்கு போயிற்று?

ஆ, சிறு பெண்ணே! உன் மணுளன் உயிருடனிருந்தபோது அவனை அல்லும் பகலும் ஆருயிரைப்போற் காத்தருளினுய். அவன் சுகங் கருதி நின் சுகத்தையும் நின் சர்வத்தையும் தியாகம் செய்தாய். ஆ! அதெல்லாம் பழங்கதையாகிவிட்டதே. இப்பொழுது நீயழ வேண்டியதே. உம், அழு! நன்ருயழு! உறக்க அழு. ஈசனின் இரக்கமற்ற செவியிணே நின் கதறலைக் கேட்கட்டும்.

வாசகர்களே! இத்தகைய சாதுக்களை—சத்தியமான நடக்கை யுடையவர்களை—இக்கதிக்குள்ளாக்கும் ஈசன் ஆராதிக்கத் தகுந்தவனு? இதையாழ்ந்து யோசிப்பவன்போல் குழந்தை கேசவன் ஏங்கி வாடிய முகத்துடன் பிரமித்து நோக்கினுன். எங்கும் நிச்சப்தம்! எங்கும் சாந்தி! அறையில் எங்கும் விளக்கின் வெளிச்சம்.

II.

இராமசேஷ ஐயர் கோயம்புத்தூரில் ஒரு பிரசித்திபெற்ற வக்கீலாக இருந்துவந்தார். புத்தி கூர்மையிலும் வாயாடித்தனத்திலும் அவருக்கு நிகரானவர் கோயம்புத்தூரிலே கிடையாது. ஆனுலவர் சத்தியவந்தர். கடவுளிடம் பக்தி யுடையவர். வேதாந்த அறிவு வளர்ந்தவர். சமஸ்கிருதத்தில் மிகுந்த பயிற்சி பெற்றிருந்தார்.

அவர் மனைவி சாரதை. அவ்விள நங்கை பொற்பினுல் இலக்குமி என்றுங் கற்பினுலருந்ததி யென்றும் கண்டோரெல்லாம் கைகுவித்து வணங்கத்தக்க சகல நற்குண நற்செயல்கள் பெற்றவள். அழகில் ரதிதேவியை வெல்லுபவள். கற்பில் கண்ணகியைப் புறங்காண்பவள். சங்கீதத்தில் அபாரமான பாண்டித்தியம் பெற்றிருந்தாள். வாசிப்பதெல்லாம் பிரேமை, ஞானம் இவைகளைப்பற்றியே. பாடுவதெல்லாம் ஸ்ரீமந்நாராயணன்மீதே. கணவன் மனச் சோர்வுற்ற காலத்தும் அவனைச் சங்கீதத்தாலுற்சாகப்படுத்தியும் கிள்ளை மொழி கொண்டு புத்துயிரளித்தும் வந்த புனிதவதி அவள்.

இவர்களுக்கு ஒரு புத்திரன் பிறந்திருந்தான். அவன் பெயர் கேசவன். சதா கேசிலேயே உழன்று வந்த அவன் தகப்பனுர் "கேஸ்" என்று அவனைக் கூப்பிட்டு வந்தார். அக்குழந்தை மகத்தான வசீகர சக்தி வாய்ந்ததாயிருந்தது. கண்டவரெல்லா மக்குழந்தையையணைத்து முத்தமளித்திடாமற் போவதில்லை. அவனது மழலைச் சொல்லும் தளர் நடையும் சதிபதிகளுக்கும் பிறருக்கும் அளவிறந்த உவப்பளித்தது. அவன் சிறு நடை நடந்து சிற்றில் சிதைத்து சிறு தேர் உருட்டிச் சிறு பானை கொட்டி விளையாடுவது கண்ட இராமசேஷ ஐயர் அடிக்கடி தனக்குள் சொல்லிக்கொள்ளுவார்:—

"அரிகொள் பொன்புனைக் கிண்கிணி
 தண்டையோ டணிந்தத்
தருண மென்றளிர் சீறடித்
 தளர்நடைச் சிறுவர்
மருவாத செவ்வாம்பல் வாய்
 மழலையா ரமுதம்
பருகிலாச் செவி பாவையின்
 செவியெனப் படுமால்,"

சற்று ஒரு மாதத்திற்கு முன்புதான் இராம சேஷ ஐயருக்குப் பிரமாதமான ஜுரமும் வியாதியுமுண்டானது. கோயம்முத்தூரில் நல்ல வைத்தியர்கள் கிடையாதென்று இராமசேஷர் தன் சகோதரன் பாபுவைத் துணையாகக் கொண்டு சாரதையுடனும் குழந்தை கேசவனுடனும் சென்னைக்குச் சென்று தேகாரோக்கியத்தைக் கவனிக்கலானார். சற்று குணமே முதலில் உண்டானது. ஆனால் வரவர இராமசேஷர் க்ஷீணமடைந்து வந்தார். அவரது மரணச்சேதி கேட்ட கோயம்முத்தூரில் அன்றெங்குங் கலவரமே. எல்லோரும் வேதாந்தம் பேசினார்கள்.

"ஐயோ, பாபம்! ஒரு மாதத்திற்குமுன் கல்லாயிருந்த மனிதன்—தங்கமான மனுஷன்—பெண்டாட்டியையும் பிள்ளையையும் அனாதைகளாக்கிவிட்டுப் போய்விட்டான். யமன் யாருக்குத்தா னஞ்சுகின்றான்? ஒருநாளைக்கு எல்லோரும் போகவேண்டியதே. இவ்வனித்திய உலகில் எதுதான் நித்தியம்?"

சில நாட்கள் சென்றன. துக்கத்தால் வெடித்து வீங்கிய சாரதை கேசவனுடன் கோயம்புத்தூருக்குத் திரும்பிச் சென்றாள். பாபு துணையாக வந்தான். ஒரு வாரம்—இரண்டு வாரம் முழுவதும் துக்கம் விசாரிப்பதில் கழிந்துவிட்டது. குழந்தை கேசவனுடன் கோயம்புத்தூரில் தனது கிருகத்தில் வசிப்பதெனத் தீர்மானித்தாள். இராமசேஷர் தன் மகனுக்கும் மனைவிக்குமாக இரண்டு லட்சம் ரூபாய் பெறுமான ஆஸ்தி வைத்திருந்தார். சர்க்கார் சாரதையைக் கேசவனுக்குக் கார்டியனாக நியமித்தார்கள்.

ஒரு மாத காலத்திற்குமுன் தான் தனது உயிரனையச் செல்வனுடன் விளையாடிக்கொண்டிருந்த இடமெல்லாம் இப்போது சூன்யமாய்ப் பாழடைந்திருப்பது கண்டு கண்ணீர் விட்டலறினாள். சர்வமும் நிறைந்திருந்த தனது கிருகம் இப்பொழுது நாதனற்று ஏங்கியிருப்பது கண்டு ஏங்கியழுதாள். எங்கு சென்றாலும் துக்கம்தான். கேசவனைக் கண்டு அவள் பரிதபித்தது ஈசனுக்கே தெரியும். ஆனலச்சிற்றிளபாலகன் அதரவிந்த முகத்தினற்புத தேஜஸானது அவளை யடிக்கடி தேற்றிவந்தது. நாள் முழுவதும் இரவு முழுதும் சர்வலோக நாயகனான ஸ்ரீமந் நாராயண மூர்த்தியைக் கரைகடந்த பக்தியுடன் கரைந்து துதித்துவந்தாள். இறந்துபோன தனது நாதனும் நாராயணன் அம்சமே என்றெண்ணி யெண்ணித் தேறுதலடைந்து ஆனந்தித்து வந்தாள். தனக்குள் அடிக்கடி கூறி வந்தாள்: "என் நாதா! உம்மை யடைவதற்கு நானும் ஒரு சமயம் வருவேன். என்னை நீர் தடையின்றி வரவேற்பீர் என்றறிவேன்."

"உயிருடனுலவுந் தனது மணாளனைத் தெய்வமெனத் தொழும் புனிதவதி பரமயோகீசுவரனைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு சிறந்தவள். கணவனிறந்தும் அவனையே தெய்வமென் றாராதித்துவரும் புனிதப்பதிவிரதையோ முன் சொன்னவளைக் காட்டினும் கோடி தடவை சிறந்தவளாய் ஒப்பற்று விளங்குவாள்" என்பது ஓர் பெரியாரின் ஒப்பற்ற உண்மை வாக்கு.

நாட்கள் பறந்தன, மாதங்கள் ஓடின. வருடங்கள் சென்றன. நாளொரு மேனியும் பொழுதொருவண்ணமுமாய் அருமையுடன் கேசவன் வளர்ந்து தற்சமயம் இண்டர்மீடியட் முதல் வகுப்பில் வாசித்து வந்தான். சாரதையின் சங்கீத ஞானமவனுக்கு மிருந்தது. அவனுக்கு அவள் வீணை கற்றுக் கொடுத்தாள்.

## III

"அழிவற்றவனும் அளவற்றவனும் அவ்யக்தனும் மாறுதலற்றவனும் நித்தியனுமான என்

னைச் சதா தியானிப்பவர்கள் இறுதியில் என்னையே அடைகிறார்கள்."

"என்னையே சதா ஏக மனத்துடன் திடமாக தியானிப்பவர்களை நான் சம்சார சாகரத்திலிருந்து அதி சீக்கிரம் காப்பாற்றுகிறேன். ஆதலால் என்னையே சர்வகாரணனென் றறிந்து நின் சகலத்தையும் என்மீது போட்டுவிடு."

"ஆதலின் நின் மனத்தை என்மீது நிறுத்து. என் விஷயத்தில் உன் புத்தியைச் செலுத்து. உனது சர்வத்தையும் எனக்கர்ப்பணம் செய்துவிட்டு மனவமைதியுடனிரு.பாபமாவது புண்ணியமாவது உன்னை வெருட்ட மாட்டாது. உன்னிடத்தில் நானெப்போதும் இமைக்காத கண்களுடன் அன்புருவாயிருக்கிறதைச் சீக்கிரம் அறிந்துகொள்."

கீதையின் இச்சுலோகங்களை யவன் வாசித்து முடித்ததுதான் தாமதம். உடனே அவன் இரு கண்களிலிருந்து கண்ணீர் பளபளவெனத் தாரை தாரையாகக் கீழேவீழ்ந்து அவன் கரத்திலிருந்த கீதைப் புத்தகத்தை நனைத்தன. ஆனால் இஃதொன்றையுமவன் கவனிக்கவில்லை. அவன் மனம் இவ்வுலகத்தி லில்லை. அமைதியும் ஆனந்தமும்பொங்கித்ததும்பும் அற்புத உலகமொன்றில் அவனரசனாய் வீற்றிருந்தான். அவனுடல் கல்லுருவமென அசைவற்றிருந்தது.

சிறிது நாழிகை கழிந்தது மவன் மனம் பகிர்முகப்பட்டது. அவன் உதடுகள் அச்சத்துடனசைந்தன. உடலெங்கும் வியர்வை அரும்பிற்று. மயிர் சிலிர்த்தது. நா தழதழவெனக் குழறியது. பகவானது திருவடியிணையில் லயித்த கேசவனது மனம் இன்னும் நிலைகுலையவில்லை. இன்னும் கண்ணீர் தாரை தாரையாகவே வந்து கொண்டிருந்தது. சிறிது நேரத்திற்கெல்லாமவன் மெதுவாய்ப்பாட ஆரம்பித்தான், காலை ஆதவன் சாளரத்தின் கம்பிகளுக்கிடையே தனது பொன்னொளி பாப்பிக் கேசவனது முகத்தில் தாண்டவமாடிய பிரம்ம தேஜஸை வெளிப் படுத்தினான் :—

*(1) மூர்த்திதனையே நினைந்திடுவாய் :
மனந்தனைக் கவருமவனுடைய
கீர்த்தியை நீயுனது—கிளியே!—
இனிமைக்குரலாற் பாடிடடி.

(2) நான்கு விதங்களாமந்த
அமிருதச் சுவை பழங்கடின்று
நீநினைதான் மாவைக்கிளியே!—
ஆனந்தமயமாக்கிடடி.

(3) "எந்தன் ஆத்மானன் தனவன்"
என்றே கூவிப்பாடிடடி.
எந்தன் வாணுளின்—கிளியே!—
அன்புமயமானவனடியே.

அப்பொழுது சாரதை யங்கு வந்தாள். கேசவனுக்கு அது தெரியாது. அவன் பாடிக் கொண்டே போனான் :—

(4) தாகத்தால் வான்மழைக்
காகத்தவித்திடும் சாதகப் பட்சியைப்
ஜீவாமிருதத்திற்காக [போல்
ஏங்கிக்கிளியே! கதறிடடி.

சாரதை மெதுவாகக் கூப்பிட்டாள் :— "கேஸ்!" கேசவன் கண் விழித்துப் பார்த்துச் சற்று திகைத்தான்.

"என்ன வேண்டுமம்மா?"

"ஒன்று மில்லையப்பா......சாப்பிடப் போதாகவில்லையா? மணி பத்தரையடித்து ஐந்து நிமிஷமும் ஆய்விட்டதே..."

"என்ன?...பத்தரையா?...அம்மா!"

சாப்பாடு முடிந்தது. சாரதை கூடத்தில் புலித்தோல் ஒன்றின் மீது அமர்ந்து கொண்டு

*இஃதோர் மொழிபெயர்ப்புப் பாட்டு—அ. பா. உ

சற்று ஒரு மாதத்திற்கு முன்புதான் இராம சேஷ ஐயருக்குப் பிரமாதமான ஜுரமும் வியாதியுமுண்டானது. கோயம்முத்தூரில் நல்ல வைத்தியர்கள் கிடையாதென்று இராமசேஷர் தன் சகோதரன் பாபுவைத் துணையாகக் கொண்டு சாரதையுடனும் குழந்தை கேசவனுடனும் சென்னைக்குச் சென்று தேகாரோக்கியத்தைக் கவனிக்கலானார். சற்று குணமே முதலில் உண்டானது. ஆனால் வரவர இராமசேஷர் க்ஷீணமடைந்து வந்தார். அவரது மரணச்சேதி கேட்ட கோயம்முத்தூரில் அன்றெங்கும் கலவரமே. எல்லோரும் வேதாந்தம் பேசினார்கள்.

"ஐயோ, பாபம்! ஒரு மாதத்திற்குமுன் கல்லாயிருந்த மனிதன்—தங்கமான மனுஷன்—பெண்டாட்டியையும் பிள்ளையையும் அனாதைகளாக்கிவிட்டுப் போய்விட்டான். யமன் யாருக்குத்தா னஞ்சுகின்றான்? ஒருநாளைக்கு எல்லோரும் போகவேண்டியதே. இவ்வனித்திய உலகில் எதுதான் நித்தியம்?"

சில நாட்கள் சென்றன. துக்கத்தால் வெடித்து வீங்கிய சாரதை கேசவனுடன் கோயம்புத்தூருக்குத் திரும்பிச் சென்றாள். பாபு துணையாக வந்தான். ஒரு வாரம்—இரண்டு வாரம் முழுவதும் துக்கம் விசாரிப்பதில் கழிந்துவிட்டது. குழந்தை கேசவனுடன் கோயம்புத்தூரில் தனது கிருகத்தில் வசிப்பதெனத் தீர்மானித்தாள். இராமசேஷர் தன் மகனுக்கும் மனைவிக்குமாக இரண்டு லட்சம் ரூபாய் பெறுமான ஆஸ்தி வைத்திருந்தார். சர்க்கார் சாரதையைக் கேசவனுக்குக் கார்டியனாக நியமித்தார்கள்.

ஒரு மாத காலத்திற்குமுன் தான் தனது உயிரனையச் செல்வனுடன் விளையாடிக்கொண்டிருந்த இடமெல்லாம் இப்போது சூன்யமாய்ப் பாழடைந்திருப்பது கண்டு கண்ணீர் விட்டலறினாள். சர்வமும் நிறைந்திருந்த தனது கிருகம் இப்பொழுது நாதனற்று ஏங்கியிருப்பது கண்டு ஏங்கியழுதாள். எங்கு சென்றாலும் துக்கம்தான். கேசவனைக் கண்டு அவள் பரிதபித்தது ஈசனுக்கே தெரியும். ஆனாலச்சிற்றிள பாலகன் அதரவிந்த முகத்தினற்புத தேஜஸானது அவளை யடிக்கடி தேற்றிவந்தது. நாள் முழுவதும் இரவு முழுதும் சர்வலோக நாயகனை ஸ்ரீமந் நாராயண மூர்த்தியைக் கரை கடந்த பக்தியுடன் கரைந்து துதித்துவந்தாள். இறந்துபோன தனது நாதனும் நாராயணன் அம்சமே என்றெண்ணி யெண்ணித் தேறுதலடைந்து ஆனந்தித்து வந்தாள். தனக்குள் அடிக்கடி கூறி வந்தாள்: "என் நாதா! உம்மை யடைவதற்கு நானும் ஒரு சமயம் வருவேன். என்னை நீர் தடையின்றி வரவேற்பீர் என்றறிவேன்."

"உயிருடனுலவுந் தனது மணாளனைத் தெய்வமெனத் தொழும் புனிதவதி பரமயோகீசுவரனைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு சிறந்தவள். கணவனிறந்தும் அவனையே தெய்வமென் றாராதித்துவரும் புனிதப்பதிவிரதையோ முன் சொன்னவளைக் காட்டினும் கோடி தடவை சிறந்தவளாய் ஒப்பற்று விளங்குவாள்" என்பது ஓர் பெரியாரின் ஒப்பற்ற உண்மை வாக்கு.

நாட்கள் பறந்தன, மாதங்கள் ஓடின. வருடங்கள் சென்றன. நாளொரு மேனியும் பொழுதொருவண்ணமுமாய் அருமையுடன் கேசவன் வளர்ந்து தற்சமயம் இண்டர்மீடியட் முதல் வகுப்பில் வாசித்து வந்தான். சாரதையின் சங்கீத ஞானமவனுக்கு மிருந்தது. அவனுக்கு அவள் வீணை கற்றுக் கொடுத்தாள்.

III

"அழிவற்றவனும் அளவற்றவனும் அவ்யக்தனும் மாறுதலற்றவனும் நித்தியனுமான என்

னைச் சதா தியானிப்பவர்கள் இறுதியில் என்னையே அடைகிறார்கள்."

"என்னையே சதா ஏக மனத்துடன் திடமாக தியானிப்பவர்களை நான் சம்சார சாகரத்திலிருந்து அதி சீக்கிரம் காப்பாற்றுகிறேன். ஆதலால் என்னையே சர்வகாரணனென் றறிந்து நின் சகலத்தையும் என்மீது போட்டுவிடு."

"ஆதலின் நின் மனத்தை என்மீது நிறுத்து. என் விஷயத்தில் உன் புத்தியைச் செலுத்து. உனது சர்வத்தையும் எனக்கர்ப்பணம் செய்துவிட்டு மனவமைதியுடனிரு. பாபமாவது புண்ணியமாவது உன்னை வெருட்ட மாட்டாது. உன்னிடத்தில் நானெப்போதும் இமைக்காத கண்களுடன் அன்புருவாயிருக்கிறதைச் சீக்கிரம் அறிந்துகொள்."

கீதையின் இச்சுலோகங்களை யவன் வாசித்து முடித்ததுதான் தாமதம். உடனே அவன் இரு கண்களிலிருந்து கண்ணீர் பளபள வெனத் தாரை தாரையாகக் கீழேவீழ்ந்து அவன் கரத்திலிருந்த கீதைப் புத்தகத்தை நனைத்தன. ஆனால் இஃதொன்றையுமவன் கவனிக்கவில்லை. அவன் மனம் இவ்வுலகத்திலில்லை. அமைதியும் ஆனந்தமும்பொங்கித்ததும்பும் அற்புத உலகமொன்றில் அவனாசனுய் வீற்றிருந்தான். அவனுடல் கல்லுருவமென அசைவற்றிருந்தது.

சிறிது நாழிகை கழிந்தது மவன் மனம் பகிர்முகப்பட்டது. அவன் உதடுகள் அச்சத்துடனசைந்தன. உடலெங்கும் வியர்வை அரும்பிற்று. மயிர் சிலிர்த்தது. நா தழ தழவெனக் குழறியது. பகவானது திருவடியிணையில் லயித்த கேசவனது மனம் இன்னும் நிலைகுலையவில்லை. இன்னும் கண்ணீர் தாரை தாரையாகவே வந்து கொண்டிருந்தது. சிறிது நேரத்திற்கெல்லாமவன் மெதுவாய்ப்பாட ஆரம்பித்தான், காலை ஆதவன் சாளரத்தின் கம்பிகளுக்கிடையே தனது பொன்னொளி பாய்ப்பிக் கேசவனது முகத்தில் தாண்டவமாடிய பிரம்ம தேஜஸை வெளிப் படுத்தினான் :—

*(1) மூர்த்திதனையே நினைந்திடுவாய் :
மனந்தனைக் கவருமவனுடைய
கீர்த்தியை நீயுனது—கிளியே !—
இனிமைக்குரலாற் பாடிடடி.

(2) நான்கு விதங்களாமந்த
அமிருதச் சுவை பழங்கடின்று
நீ தினதான் மாவைக்கிளியே ! —
ஆனந்தமயமாக்கிடடி.

(3) "எந்தன் ஆத்மானன் தனவன்"
என்றே கூவிப்பாடிடடி.
எந்தன் வாணுளின்—கிளியே!—
அன்புமயமானவனடியே.

அப்பொழுது சாரதை யங்கு வந்தாள். கேசவனுக்கு அது தெரியாது. அவன் பாடிக் கொண்டே போனான் :—

(4) தாகத்தால் வான்மழைக்
காகத்தவித்திடும் சாதகப் பட்சியைப்
ஜீவாமிருதத்திற்காக [போல்
ஏங்கிக்கிளியே! கதறிடடி,

சாரதை மெதுவாகக் கூப்பிட்டாள் :— "கேஸ்!" கேசவன் கண் விழித்துப் பார்த்துச் சற்று திகைத்தான்.

"என்ன வேண்டுமம்மா ?"

"ஒன்று மில்லையப்பா......சாப்பிடப் போதாகவில்லையா ? மணி பத்தரையடித்து ஐந்து நிமிஷமும் ஆய்விட்டதே..."

"என்ன ?...பத்தரையா ?...அம்மா !"

சாப்பாடு முடிந்தது. சாரதை கூடத்தில் புலித்தோல் ஒன்றின் மீது அமர்ந்து கொண்டு

---

*இஃதோர் மொழிபெயர்ப்புப் பாட்டு— அ. பா. ஆ

சற்று ஒரு மாதத்திற்கு முன்புதான் இராம சேஷ ஐயருக்குப் பிரமாதமான ஜுரமும் வியா தியுமுண்டானது. கோயம்முத்தூரில் நல்ல வை த்தியர்கள் கிடையாதென்று இராமசேஷர் தன் சகோதரன் பாபுவைத் துணையாகக் கொண்டு சாரதையுடனும் குழந்தை கேசவனுடனும் சென்னைக்குச் சென்று தேகாரோக்கியத்தைக் கவனிக்கலானர். சற்று குணமே முதலில் உண்டானது. ஆனல் வரவர இராமசேஷர் க்ஷீணமடைந்து வந்தார். அவரது மரணச்சேதி கேட்ட கோயம்முத்தூரில் அன்றெங்கும் கல வரமே. எல்லோரும் வேதாந்தம் பேசினர்கள்.

"ஐயோ, பாபம்! ஒரு மாதத்திற்குமுன் கல்லாயிருந்த மனிதன்—தங்கமான மனுஷன்—பெண்டாட்டியையும் பிள்ளையையும் அனுதைகளாக்கிவிட்டுப் போய்விட்டான். யமன் யாருக்குத்தா னஞ்சுகின்றான்? ஒருநாளைக்கு எல்லோரும் போகவேண்டியதே. இவ்வனித்திய உலகில் எதுதான் நித்தியம்?"

சில நாட்கள் சென்றன. துக்கத்தால் வெடித்து வீங்கிய சாரதை கேசவனுடன் கோயம்புத்தூருக்குத் திரும்பிச் சென்றாள். பாபு துணையாக வந்தான். ஒரு வாரம்—இரண்டு வாரம் முழுவதும் துக்கம் விசாரிப்பதில் கழிந்துவிட்டது. குழந்தை கேசவனுடன் கோயம்புத்தூரில் தனது கிருகத்தில் வசிப்பதெனத் தீர்மானித்தாள். இராமசேஷர் தன் மகனுக்கும் மனைவிக்குமாக இரண்டு லட்சம் ரூபாய் பெறுமான ஆஸ்தி வைத்திருந்தார். சர்க்கார் சாரதையைக் கேசவனுக்குக் கார்டியனுக நியமித்தார்கள்.

ஒரு மாத காலத்திற்குமுன் தான் தனது உயிரனையச் செல்வனுடன் விளையாடிக்கொண்டிருந்த இடமெல்லாம் இப்போது சூன்யமாய்ப் பாழடைந்திருப்பது கணடு கண்ணீர் விட்டலறினாள். சர்வமும் நிறைந்திருந்த தனது கிருகம் இப்பொழுது நாதனற்று ஏங்கியிருப்பது கண்டு ஏங்கியழுதாள். எங்கு சென்றாலும் துக்கம்தான். கேசவனைக் கண்டு அவள் பரிதபித்தது ஈசனுக்கே தெரியும். ஆனலச்சிற்றிள பாலகன் அரவிந்த முகத்தினற்புத தேஜஸானது அவளை யடிக்கடி தேற்றிவந்தது. நாள் முழுவதும் இரவு முழுதும் சர்வலோக நாயகனை ஸ்ரீமந் நாராயண மூர்த்தியைக் கரை கடந்த பக்தியுடன் கரைந்து துதித்துவந்தாள். இறந்துபோன தனது நாதனும் நாராயணன் அம்சமே என்றெண்ணி யெண்ணித் தேறுதலடைந்து ஆனந்தித்து வந்தாள். தனக்குள் அடிக்கடி கூறி வந்தாள்: "என் நாதா! உம்மை யடைவதற்கு நானும் ஒரு சமயம் வருவேன். என்னை நீர் தடையின்றி வரவேற்பீர் என்றறிவேன்."

"உயிருடனுலவுந் தனது மணாளனைத் தெய்வமெனத் தொழும் புனிதவதி பரமயோகீசுவரனைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு சிறந்தவள். கணவனிறந்தும் அவனையே தெய்வமென் றாராதித்துவரும் புனிதப்பதிவிரதையோ முன் சொன்னவளைக் காட்டினும் கோடி தடவை சிறந்தவளாய் ஒப்பற்று விளங்குவாள்" என்பது ஓர் பெரியாரின் ஒப்பற்ற உண்மை வாக்கு.

நாட்கள் பறந்தன, மாதங்கள் ஓடின. வருடங்கள் சென்றன. நாளொரு மேனியும் பொழுதொருவண்ணமுமாய் அருமையுடன் கேசவன் வளர்ந்து தற்சமயம் இண்டர்மீடியட் முதல் வகுப்பில் வாசித்து வந்தான். சாரதையின் சங்கீத ஞானமவனுக்கு மிருந்தது. அவனுக்கு அவள் வீணை கற்றுக் கொடுத்தாள்.

III

"அழிவற்றவனும் அளவற்றவனும் அவ்யக்தனும் மாறுதலற்றவனும் நித்தியனுமான என்

னைச் சதா தியானிப்பவர்கள் இறுதியில் என்னையே அடைகிறார்கள்."

"என்னையே சதா ஏக மனத்துடன் திடமாக தியானிப்பவர்களை நான் சம்சார சாகரத்திலிருந்து அதி சீக்கிரம் காப்பாற்றுகிறேன். ஆதலால் என்னையே சர்வகாரணனென் றறிந்து நின் சகலத்தையும் என்மீது போட்டுவிடு."

"ஆதலின் நின் மனத்தை என்மீது நிறுத்து. என் விஷயத்தில் உன் புத்தியைச் செலுத்து. உனது சர்வத்தையும் எனக்கர்ப்பணம் செய்து விட்டு மனவமைதியுடனிரு.பாபமாவது புண்ணியமாவது உன்னை வெருட்ட மாட்டாது. உன்னிடத்தில் நானெப்போதும் இமைக்காத கண்களுடன் அன்புருவாயிருக்கிறதைச் சீக்கிரம் அறிந்துகொள்."

கீதையின் இச்சுலோகங்களை யவன் வாசித்து முடித்தது தான் தாமதம். உடனே அவன் இரு கண்களிலிருந்து கண்ணீர் பளபள வெனத் தாரை தாரையாகக் கீழேவீழ்ந்து அவன் கரத்திலிருந்த கீதைப் புத்தகத்தை நனைத்தன. ஆனால் இஃதொன்றையுமவன் கவனிக்கவில்லை. அவன் மனம் இவ்வுலகத்திலில்லை. அமைதியும் ஆனந்தமும்பொங்கித்ததும்பும் அற்புத உலகமொன்றில் அவனாசனுய் வீற்றிருந்தான். அவனுடல் கல்லுருவமென அசைவற்றிருந்தது.

சிறிது நாழிகை கழிந்தது மவன் மனம் பகிர் முகப்பட்டது. அவன் உதடுகள் அச்சத்துடனசைந்தன. உடலெங்கும் வியர்வை அரும்பிற்று. மயிர் சிலிர்த்தது. நா தழு தழுவெனக் குழறியது. பகவானது திருவடியிணையில் லயித்த கேசவனது மனம் இன்னும் நிலைகுலையவில்லை. இன்னும் கண்ணீர் தாரை தாரையாகவே வந்து கொண்டிருந்தது. சிறிது நேரத்திற்கெல்லாமவன் மெதுவாய்ப்பாட ஆரம்பித்தான், காலை ஆதவன் சாளரத்தின் கம்பிகளுக் கிடையே தனது பொன்னொளி பாய்ப்பிக் கேசவனது முகத்தில் தாண்டவமாடிய பிரம்ம தேஜஸை வெளிப் படுத்தினான் :—

*(1) மூர்த்திதனையே நினைந்திடுவாய் :
மனந்தனைக் கவருமவனுடைய
கீர்த்தியை நீயுனது—கிளியே!—
இனிமைக்குரலாற் பாடிடடி.

(2) நான்கு விதங்களாமந்த
அமிருதச் சுவை பழங்கடின்று
நீ தினதான் மாவைக்கிளியே! —
ஆனந்தமயமாக்கிடடி.

(3) "எந்தன் ஆத்மானன் தனவன்"
என்றே கூவிப்பாடிடடி.
எந்தன் வாணாளின்—கிளியே!—
அன்புமயமானவனடியே.

அப்பொழுது சாரதை யங்கு வந்தாள். கேசவனுக்கு அது தெரியாது. அவன் பாடிக் கொண்டே போனான் :—

(4) தாகத்தால் வான்மழைக்
காகத்தவித்திடும் சாதகப் பட்சியைப்
ஜீவாமிருதத்திற்காக [போல்
ஏங்கிக்கிளியே! கதறிடடி.

சாரதை மெதுவாகக் கூப்பிட்டாள் :— "கேஸ்!" கேசவன் கண் விழித்துப் பார்த்துச் சற்று திகைத்தான்.

"என்ன வேண்டுமம்மா ?"

"ஒன்று மில்லையப்பா......சாப்பிடப் போகவில்லையா ? மணி பத்தரையடித்து ஐந்து நிமிஷமும் ஆய்விட்டதே..."

"என்ன ?...பத்தரையா ?...அம்மா !"

சாப்பாடு முடிந்தது. சாரதை கூடத்தில் புலித்தோல் ஒன்றின் மீது அமர்ந்து கொண்டு

---

*இஃதோர் மொழிபெயர்ப்புப் பாட்டு— அ. பா. உ

பக்தவிஜயத்தை வாசித்துக் கொண்டிருந்தாள். கேசவன் ஆத்திரமாய் உள்ளே வந்தான்.

"கண்மணி! என்ன சமாசாரம் ?"

"கடிதம் வந்திருக்கிறது."

"யாரிடமிருந்து ?...உனது மாமனுடைய கையெழுத்து அல்லவா அது ?"

தற்செயலாகக் கேசவனின் பார்வை அவள் முகத்தின் மீது சென்றது. என்று மில்லாத புன்னகை ஆங்கு தவழுவது கண்டு வியப்புற்ருன்.

"ஆம்!"

"என்ன எழுதியிருக்கிருன் ?..."

"ஒரு நல்ல சமாசாரம்......சாவித்திரியுடன் மாமா இன்று மாலே மங்களூரிலிருந்து வருகிருராம்..."

சாரதை தனக்குள் எதையோ நினைத்துக் சந்தோஷத்தால் சிரித்துக்கொண்டு தரையை நோக்கினுள்.

"மங்களூர் மெயில் இங்கு வருவதில்லே. போத்தனூருடன் திரும்பிச் செல்கிறது. அம்மா! நான் போய் அவர்களே அழைத்து வரட்டுமா ? சாவித்திரியைக் கண்டு ஒரு வருடத்திற்கு மேலாகிறதல்லவா ? ஏனம்மா! நான் போய்வரட்டுமா ?"

"போய்வா கண்மணி! மகாராஜனுய்ப் போய்வா."

அவன் உள்ளம் பூரித்தது.

கேசவனுக்குச் சகோதர சகோதரிகள் ஒருவரும் இலர். அவனது குழந்தைப் பருவம் முதல் அவன் சாவித்திரியைச் சகோதரியாக நேசித்து வந்தான். சாரதைக்கு மூத்த சகோதரர் (அண்ணனுர்) ஒருவரிருந்தார். அவர் பெயர் விசுவநாதர் தற்சமயம் அவர் ஒரு பெரிய இஞ்சினீர் உத்தியோகத்திலிருந்து கொண்டு மாதம் அறுநூறு ரூபாய் சம்பளம் பெற்று வருகிருர். அவரது ஏகபுத்திரியாகிய சாவித்திரிக்கு இப்பொழுது பன்னிரண்டு வயதாகிறது. இச்சிறுவயதிற்குள் அவள் தமிழிலும் ஆங்கிலத்திலும் நல்ல பயிற்சி அடைந்திருந்தாள். சங்கீதத்தில் நல்ல ஞானமும் பெற்றிருந்தாள். அழகும் குணமும் அவளிடத்தில் ஒருங்கே அமைந்தன வெனலாம்.

அன்று மத்தியானம் முழுவதும் கேசவன் அன்று மாலே தானணிந்து செல்ல வேண்டிய உடைகளேச் சீர்படுத்திக்கொண்டிருந்தான். சாவித்திரி வந்தால் அவளுக்கு இன்ன பொருள்களே எல்லாம் வாங்கித்தரவேண்டு மென்றும், அவளே இங்கிங் கெல்லா மழைத்துச் சென்று காட்டவேண்டு மென்றும், அவளுடன் இன்னின்ன விதமாய்ச் சம்பாஷிக்க வேண்டு மென்றும், கூடுமானுல் அவளேக் கோயம்புத்தூரில் குறைந்தது ஒரு மாதமாவது இருத்த வேண்டு மென்றும் அவன் எண்ணி யெண்ணி மனம் பூரித்தான். தனது படுக்கை யறையை நன்ருகச் சுத்தி செய்து ஒழுங்கு படுத்திச் சாவித்திரிக்காகச் சித்தப்படுத்தினுன்.

மாலே நெருங்கினதும் அழகிய உடைகளே அணிந்துகொண்டு போத்தனூருக்குப் போனுன். விசுவநாதர் சாவித்திரியினது கையைப் பிடித்துக்கொண்டு மெயிலிலிருந்து கீழிறங்கினுர்.

"மாமா! வாருங்கள்—எல்லோரும் சௌக்கியந்தானே ?...........ஆ! சாவித்திரி!!......" என்று அதற்கு மேல் ஒன்றும் உரைக்க முடியாதவனுய்க் கேசவன் சந்தோஷத்தால் அழுகாய் மலர்ந்த முகத்துடனவளருகுற்று அவளது கரத்தைப் பிடித்துக் கொண்டான். ஆனுல் அவனிடம் முன்னிருந்த மாதிரியிராமல் சாவித்திரி வெட்கத்தால் தலேகுனிந்து கொண்டுவாளாவிருந்தாள். விசுவநாதர் சிரித்துக் கொண்டு "நீ என் சிரமத்துடன் இவ்வளவு

தூரம் வரவேண்டும்? எனக்கு வழிதெரியாதா என்ன?—" என்றார்.

சாவித்திரியின் மாறுதலைக் கண்டு வியப்படைந்திருந்தாலும் கேசவன் அதைப்பொருட்படுத்தாமல் அவளது இடது காத்தைத் தனதிரு கரங்களாலும் பிடித்துக்கொண்டு அவளை அதிக வாஞ்சையுடன் பார்த்தான்.

"சாவித்திரி! ஏது இந்த வைரத் தோடுகள்? கையிலணிந்துகொண்டிருக்கும் வைர வளையல்களை எப்பொழுது வாங்கினார்கள்?"

சாவித்திரி மௌனம் சாதித்தனள்.

"ஏன் என்னுடன் பேசமாட்டேன் என்கிறாய் அம்மா? ஏன் தலை குனிந்துகொண்டு சிரிக்கிறாய்? என்னை நிமிர்ந்து பார்க்கமாட்டாயா?"

ஆனால் அது அசாத்தியம். விசுவநாதரின் உதடுகள் சிரிப்பினால் தாண்டவமாடின.

எல்லோரும் கோயம்புத்தூருக்குச் செல்லும் புகைவண்டியில் ஏறிக்கொண்டார்கள். அவர்கள் வீடடைந்தபோழ்து சுமார் ஏழரை மணியிருக்கும்.

சாரதை கூடத்தில் ஒரு மூலையிலுள்ள நாற்காலியின்மீதமர்ந்துகொண்டிருந்தாள். இவர்கள் வண்டியிலிருந்து இறங்கியதும் சாரதை எழுந்து முன்வந்து சாவித்திரியின் சிரசின்மேல் தனதிரு கைகளையும் வைத்து ஆசீர்வதித்துவிட்டு அவளது மேல் வாய்ப்புறம் தடவிப் புன்சிரிப்புடன் கேசவனை நோக்கினாள்.

விசுவநாதர் உள்ளே வந்தார்.

"அண்ணா, வா! மன்னி சௌக்கியமா? ஏதோ இனியாவது நல்ல காலம் பிறக்குமென்றெண்ணுகிறேன்" என்று சாரதை மெதுவாகக் கூறினாள். சாவித்திரி ஒரு மூலைக்குச் சென்று தாழ்த்திய தலையை நிமிர்த்தாமல் கால்விரல் நோக்கிக்கொண்டிருந்தாள்.

"அம்மா! சாவித்திரி பெரிய மனுஷியாகிவிட்டாள். உன்னுடன் ஒன்றும் பேசுகிறதில்லை. இதோ பார்! இப்படியே எப்பொழுது மிருக்கிறாள். அவளை என்னுடன் பேசச் சொல்லம்மா!" என்று பெருமூச்சுடன் கேசவன் கூறினான்.

"ஆமாம். கேஸ்! நீயும் பெரிய மனுஷனாகிவிட்டாய். அவளும் பெரிய மனுஷியாகிவிட்டாள். ஏனம்மா சாவித்திரி! அப்படித்தானே?" என்றார் விசுவநாதர்.

கேசவன் சாவித்திரி அருகிற் சென்று அவளது வலது தோள் மீது தனதிடது கரமமர்த்தி வலது காத்தாற் சிரமுயர்த்தி "வா! சாவித்திரி, போனமாதம் நான் சில அழகிய சவாமிபடங்கள் வாங்கியிருக்கிறேன். காண்பிக்கிறேன் வா!"

அவளது பதிலையும் பாராமல் அவளை இழுத்துக் கொண்டு தன்னறைக்குச் சென்றான் கேசவன்.

"கேசவனுக்கு சமாசாரமொன்றும் தெரியாது போலிருக்கிறது." என்று மெதுவாக உசாவினார் விசுவநாதர்.

"ஆம்! தானாகவே தெரிகிறது. அதற்கென்ன அவசரம்? இதுவுமோர் விளையாட்டுத் தானல்லவா? இது எனக்கு அளவிறந்த சந்தோஷத்தைத் தருகிறது" என்று பூரித்த முகத்துடன் சாரதை விளம்பினாள்.

கேசவனது படிப்பறையில் நான்கு பெரிய படங்களும், மகாத்மாஜீ, தாஸ், திலகர் முதலியோரது சிறு போட்டோப் படங்களும் மாட்டியிருந்தன.

சாவித்ரி! இதோ பார்! "இந்த விவேகானந்தர் படம் எப்படியிருக்கிறது? உங்களகத்திலிருக்கும் ஸ்வாமிஜீ படம் ஒருவிதமாகத்தானிருக்கிறது. அது எனக்குப் பிடிக்கவில்லை. இதில்

பார், அவர் புதுமாப்பிள்ளை மாதிரி ஜம் என்றிருக்கிறார்...ஆ! கலியுகக் கிருஷ்ணன்''...... என்று அதைச் சற்று உற்று நோக்கித் தயங்கி மற்றோர் படத்தைச் சுட்டிக்காட்டி, "அந்தக் கிருஷ்ணன் படம் எவ்வளவு அழகாயிருக்கிறது பார். பூஜை அறையிலிருக்கும் கிருஷ்ணபடம் இவ்வளவு லாவண்யமாயில்லை......'' என்று அவன் சொல்லிக் கொண்டே போகும் போது அதுவரையில் தலை நிமிர்ந்திருந்த சாவித்திரி எதையோ நினைத்துச் சட்டென்று தலை குனிந்து சற்று பின் சென்றாள்.

"என் என்னுடன் பேசாதிருக்கிறாய்? என்னிடம் சொல்லமாட்டாயா?''

ஆனாலவள் விடையொன்றும் சொல்லாமலே தலையைச் சிறிதுயர்த்திக் கடைக் கண்ணாலவனை நாணத்துடன் நோக்கி, மீண்டும் தலை குனிந்து கொண்டாள். அவளது பார்வை கேசவனுக்குப் புதியதோர் சேதியை அறிவித்தது:—

"கண்களிருக்க வாயிருந்தேன்பலன்?''

IV.

அன்றிரவு சபைகூடியபோது விசுவநாதர் வாயில் வெற்றிலையை அரைத்துக் கொண்டே, "சாவித்திரிக்கும் அப்படியுமிப்படியுமாக வயது பன்னிரண்டாகிறதல்லவா!'' என, சாரதை சற்று புரளியாக, "எங்கேயாவது வரன் பார்த்திருக்கிறாயா?'' என வினவக் கேசவனும், "யாருக்குச் சாவித்திரியைக் கொடுக்கத் தீர்மானித்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

விசுவநாதர் சிரித்துக் கொண்டு பதிலொன்றும் சொல்லாமல் எழுந்து சாளரத்தினருகில் சென்று வாயிலுற்ற வெற்றிலையை உமிழ்ந்து விட்டுத் தனது பழைய ஸ்தானத்தை யடைந்து சொன்னார்: "ஏனப்பா! கேஸ்! நீ யிருக்க எனக்கென்ன விசாரம்? இன்னும் சித்திரைக்கு இரண்டே மாதங்கள் இருக்கின்றன. ஒரு நல்ல முகூர்த்தம் பார்த்து..............'' என்பதற்குள் கேசவனுத்திரமாக, "என்ன?........... எனக்கா?......நிறம்ப நன்றாயிருக்கிறதே! அதனாற்றான் சாவித்திரி என்னைக் கண்டு நாணி என்னுடன் பேசாமலிருக்கிறாளோ?.....அவள் எனக்குச் சகோதரியாக வேண்டுமே...மாமா! என்ன இது? எனக்கின்னும் வயதாகவில்லையே? இப்பொழுது தானே பதினேழு ஆகிறது. அதற்குள் விவாகத்திற்கென்ன அவசரம்?'' என்று சொன்னான்.

இப்படிக் கேசவன் சொன்னதினால் முழுது மேமாற்ற மடைந்த விசுவநாதர் சட்டென்று, "ஆ! இதென்ன? சாரதே! உன் பிள்ளை இப்படிச் சொல்லுகிறானே?.........கேஸ்! நீ இன்னும் குழந்தைதானே. உனக்கொன்றுந் தெரியாது. அப்பா! குணமும் புத்தியும் அழகும் உள்ள நமது குழந்தை அன்னியனொருவனுக்கு வாழ்க்கைப்படுவதென்றால் அது எனக்குப் பிடிக்கவில்லை. அதுவுமின்றிக் கையில் வெண்ணெய் இருக்க நெய்யிற்கலைவானேன்? நீ அவளுக்கத்தானாக இருப்பதனாலேயே அவள் மீது உனக்கு இயற்கையான பாத்தியத்தை உண்டு எனலாம். இதை நீ தட்டக் கூடாது. இது புராதன காலந்தொட்டு ஹிந்துக்களின் ஆசாரமாக—வழக்கமாக—இருக்கிறது. மேலும் நீயும் தக்கவயதுடையவனாயிருக்கிறாய். பதினேழு வயதிற்குக் கலியாணம் செய்வதால் தீங்கொன்றுமில்லை. அது சாஸ்திர விரோதமுமாகாது; ஆசார விரோதமுமாகாது. உன் தகப்பனருக்குப் பதினைந்தாம் வயதிற்றான் விவாகம் நடந்தது. உன் மாமனாகிய எனக்கும் பதினாறுவது வயதிற்றான் விவாகம் நடந்தது. நம்மவர்களில் எல்லோருக்கும் அநேகமாய்ப் பதினைந்து, பதினாறு, பதினேழு, பதினெட்டு வயதுகளில் விவாகம் நடக்கிறது. இதைச் சற்று கவனி! கேஸ்! ஹிந்

துக்களுக்குள் விவாகம் என்பது கிறிஸ்துவர் களுக்குள் உள்ள விவாகம் போல் அன்று. நமது விவாகமானது ஏறக்குறைய தீர்மானச் சடங்கு (Betrothal) மாதிரியேதான். நிஜ மான விவாகம் சாந்தி முகூர்த்தத்திற்றான் நடக்கிறது. ஆதலால் நீ அதைரியமடையக் காரணம் இல்லை. இப்பொழுது நடக்கவேண்டிய தெல்லாம் இச்சிறு சடங்கே; அதாவது விவாகமே. அதற்குப் பிறகு உன்னிஷ்டப் படி நீ உன் படிப்பு முடிந்தபிற்பாடு சாந்தி கலியாணம் செய்து கொள்ளலாம். அதற்கு ஒரு அவசரமும் இல்லை. பெண்ணுக்கும் தகுந்த பக்குவ வயது பிற்பாடுதான் வருகிறது. ஆதலால் எதற்கும் நன்றாக யோசனை செய். உன் மனதை நீயே கேட்டுப் பார். சாவித்திரி அழகிலாவது படிப்பிலாவது குணத்திலாவது மற்றப் பெண்களுக்குக் குறைந்தவளல்லள். உனக்கிது நன்றாகத் தெரியுமே. நீ அவளைக் குழந்தைப் பருவம் முதல் நன்றாயறிவாய். அவளுக்கும் உன்னைத் தவிர வேறு நல்ல வரன் கிடையாது. எல்லாவற்றையும் நன்றாகக் கவனி. இத்தனை நாள் நான் செய்த மனக் கோட்டையை இடித்து விடாதே. என் பிரியமுள்ள கேஸ்! உங்களிருவருக்கும் என்று விவாகம் நடக்கும் என்று நான் காத்துக் கொண்டிருக்கிறேன். உனது தாயாருக்கும் இது சந்தோஷத்தையே அளிக்கும். பாபம்! அவள் சிறு வயதிலேயே கணவனை இழந்து வருந்தியவள். இனியவளுக்கு அமைதியும் சந்தோஷமும் ஆறுதலுங் கிடைக்க வேண்டுமானல் உன்னாற்றான் கிடைக்கவேண்டும். உன் தாயாரின் சந்தோஷத்தை நீ விரும்புகிறாயா? உன் தாயை மகிழ்விப்பது உன் கடமையல்லவா? மாதா முதல் தெய்வம். எதற்கும் உன்னிஷ்டமப்பா! நான் சொல்லுவதற்கின்னு மென்ன விருக்கிறது? நீ நன்றாக யோசித்து எது நல்லதோ அதைச் செய். நீ புத்திசாலி. உனக்கு நான் சொல்லவேண்டிய தொன்றுமில்லை. இருந்தாலும் எதைச் செய்வதானாலும் உன் தாயைக் கேட்டு நீ செய்வதே சிறந்ததாகும்'' என்று சொல்லி விட்டுச் சோர்வுடன் அவனை யுற்றுப் பார்த்தார்.

“மகனே! உன் மாமன் சொல்வதைக் கேள். நியாயமிருப்பதற்கு நீ சம்மதிக்கவேண்டியதே. இது நியாயம்; இது நியாயமன்று என்று உனக்கே தெரியும். ஆத்திரப்படாதே. பதறிய காரியம் சிதறும். ஆதலால் எதையும் தீர யோசித்துச் செய்; நீ சிறுவன். உனக்கின்னும் உலக அனுபவம் போதாது. ஒருவன் தன் சொந்த இதய உணர்ச்சிகளை நன்றாக அறியவேண்டும். ஆத்திரத்தால் தன் மனதிற் கெதிராக நடந்து விட்டுப் பின்பு பச்சாத்தாபமடைபவர் பலர். குழந்தாய்! எதையும் ஆழ்ந்து யோசனை செய். பெரியவர்களாகிய நாங்கள் உனது நன்மையையும் க்ஷேமத்தையும் அபிவிருத்தியையும் கோருவோமே யன்றித் தீமையையுங் கெடுதலையும் என்றும் தேடோம் என்பதை நன்றாகத் தெரிந்துகொள். கண்மணி! இத்தனை நாள் துக்கத்திலேயே ஆழ்ந்திருந்த எனக்கு உன் முகமே ஆறுதலளித்து வந்தது. உன்னை நம்பியே நானும் வாழ்ந்து வந்தேன். ‘நல்ல காலம் ஒரு நாள் வரும்’ என்ற என் தேறுதலான நம்பிக்கையைக் கெடுத்து விடாதே. என் செல்வமே! நீ என் கண்ணல்லவா? எனக்காகவாவது நீ இதை மறுக்கக்கூடாது. இதுவரை என் சொல்லை நீ மீறியதே இல்லை. இதில் மட்டும் மனஸ்தாபமேன்? குழந்தாய்! என்னைச் சந்தோஷப்படுத்தவல்ல காரியத்தைச் செய்ய நீ பின்வாங்குவது அழகாயிருக்கிறதா? இது உனக்கு தருமமா? உன்னைப் பெற்று, கண்ணுக்குக் கண்ணாய் உயிருக்குயிராய் வளர்த்த எனக்காக நீ சிறிது இரக்கம் காட்ட மாட்

டாயா? ஆ! 'மாட்டேன்!' என்று கேஸ் ஒரு போதும் சொல்லமாட்டானே. அது எனக்கு நன்ருய்த் தெரியும். ஏதோ கால வித்தியாசத்தினுல் இப்பொழுது அவன் சொல்லுகிருனே தவிற வேறில்லே. பிள்ளாய்! எனக்கு இவ்வளவு சொத்தும் பிறவும் இருந்தென்ன பயன்? இனி சந்தோஷம் வரவேண்டுமாயின் உன்னுற்ருன் வரவேண்டும். இதை கவனி, கேஸ்! ஆத்திரப்படாமல் சாவதானமாய் எதையும் யோசித்து விட்டுச் சொல்" என்றுருக்கமான நீண்ட தோர் பிரசங்கம் புரிந்தாள் சாரதை. அவள் பேசும்போது அவளது கண்களிலிருந்து அடிக்கடி கண்ணீர் கசிந்து வந்தது, முகமுஞ் சிவந்தது.

கேசவனே ஒன்றும் சொல்லாமல் திகைத்தபடி யிருந்தான். அவன் முகம் திடீரென்றேற்பட்ட இச்சம்பவத்தால் விகாரமடைந்திருந்தது. ஐந்து நிமிஷம் அங்கெங்கும் மௌனம் செங்கோலோச்சிவந்தது. அருகிருந்த ஒரு விளக்கின் தழலில் விட்டில் பூச்சியொன்று விழுந்து தத்தளித்துப் பின்னிறந்தது கண்டு கேசவன் பெருமூச்செறிந்தான்.

"மனிதன் வாழ்க்கையும் இவ்விதமே ஆகும். துன்பமிருப்பதறிந்தும் துன்பத்தையே தழுவி துன்பமடைந்திடுகின்ருன் மனிதன் மோகத்தினுல். இன்பம் என்னும் மேற் பூச்சுக் கொண்ட துன்பங் கண்டு மயங்கி அதற்கடிமைப்பட்டு தனது மதத்திற்கும் நாட்டிற்கும் சமூகத்திற்கும் தான் செய்ய வேண்டிய கடமைகளே மறந்து துன்பத்திலாழ்ந்தழிவதென்னே! நாமு மிந்நிலக்காளாவது அபாயத்தை அறிந்தே கிருஷ்ண சர்ப்பத்தின் வாயில் விரலே நீட்டுவது போன்றது ஆகும். முக்தியடைவதோ, பிரம்மக்ஞானமடைவதோ, ஈசுவர தரிசனம் பெறுவதோ, சாதனசதுஷ்டிய மெய்வதோ, இவை யாவுங் கஷ்டமானவைகளே. ஆயினும்—என் மனமே! அதைரியப் படாதே. அபிலாஷையுடன் கூடியிரு. நம்பிக்கையைக் கைவிடாதே. கீழ்திசையடைந்து தத்தளித்து வரும் உன் மதத்தை ஒரு கண்ணுல் பார். உணவின்றி வருந்திச் சாகும் உன் சமூகத்தை மற்ருெரு கண்ணுல் பார். உனது பரிசுத்தமான அழகிய ஆரிய நாட்டிற்கு, தரித்திரத்தால் ஏங்கிக் கதறும் நின் தேசத்திற்கு உதவிசெய்வதற்காக உன் இரண்டு கரங்களேயும் நீட்டு. அயல் நாட்டவரனைவரும் உனது நாட்டின் மேன்மையைச் சிறிதுமுணராமல் முன் பின் பாராது வாயில் வந்தபடி யெல்லாம் தூற்றுவது கண்டு—என் இதயமே!—எப்படிச் சகிக்கப் போகிருய்? இந்த அற்ப ஜன்மத்தினுல் உன்னைப் பெற்ற தாயினும் பன்மடங்கு உயர்ந்த இந்தியத் தாய்க்கு—பாரத மாதாவுக்கு—உதவமுடியுமாயின் நீ அதற்குச் சற்றும் தயக்கமுந் தாமதமுமின்றிச் சம்மதித்திட வேண்டும். வருவது வரட்டும். நமது கடமை வேலே செய்வதே. பலாபலன்களே நாமேன் சிந்திக்க வேண்டும். என் சித்தமே! உண்மையாகக் கூறுமிடத்து நீ விவாகத்திற்குடன்படுவையாயின் உயிரோடிருப்பினும் இறந்த மாதிரியே! உன்னுற் பிறகு உன்னுடை சமூகம் மதமிவைகட்குப் பிரயோசனம் ஒன்றும் இல்லே. நீ இருந்து யாருக்குஞ் சுகமில்லே. பாருக்கே சுமையாக இச்சம்சாரத்தினின்றும் நீங்கிக் கரையேறும் மார்க்கத்தையும் அறவே மறந்திடுவை. நீ இன்னுந் துன்பத்திலாழ்கின்ருய். நீ பிறந்தும் பிரயோசனமில்லே. எவ்வளவோ புழுக்கள் பிறக்கின்றன. பிறந்து அழிகின்றன. இது யாருக்குத் தெரிகிறது. அதுமாதிரிதான் உன் ஜன்மமும். ஜாக்கிரதை! எச்சரிக்கையுடன் காலே முன்னே வை. இருட்டிற் சென்று படுகுழியிலிறங்காதே. மங்கையர் மோகமாய்

மயங்கித் தினந்தோறு மங்கம் புளகிதமாய் அவ ரிடுமேவல் கொண்டாடி உழைப்பாயேல் அனி யாயமாய் நாளையுங் கழிப்பாயே—"

V.

மணியும் பன்னிரண்டாயிற்று. நித்திரா தேவிக்கு இன்னும் மனம் வரவில்லை-இரங்கவும் இல்லை. ஏழையாகிய கேசவன் படுக்கை மேல் படுத்துப் புரண்டு கொண்டிருந்தான். எண் ணாத எண்ண மெலாம் எண்ணியாய் விட்டது. மண்டையிலும் துவாரம் உண்டாய் விடும்போ லிருந்தது. இனி எண்ணுவது கேடுகாலத் திற்கே. பெரு மூச்சுவிட்டான்; புரண்டான்; பின்பு ஒருவாறு தேறி எழுந்து அறையின் கத வைத் திறந்து தாழ்வாரத்திற்கு மெல்லச் சென்றான். சந்திரன் தனது களங்கமற்ற கிரணங்களை வீசிக்கொண்டிருந்தான். அடிக் கடி வெண்ணிற மேகங்கள் ஒன்றன்பின் ஒன் றாக முன்வந்து மதி பிடிக்க முயன்றன. ஆனால் நிலவு அவைகட்ககப்படாமல் தன் வழியில் போய்க் கொண்டிருந்தான்.

"ஆம்! மனிதனது வாழ்க்கையுமிப்படித் தான் இருக்கிறது. ஒவ்வொருவனும் நித்திய மான பேரின்பமடையத் தன்னாலானமட்டும் முயலுகின்றான். இருந்தும் எல்லாம் வீணா கிறது. பேரின்பமாகிய சந்திரன் அகப்படுவது அதிசயந்தான். ஓடோடிச் செல்லும் காற்றின் மீது மழையானது ஆயிரக்காண நீர் தாரையா கிய அம்பு எய்து அதைப் பிடித்திட முயலு கிறது. ஆனால் பந்தமற்ற தன்மையாகிய காற்று இந் நீரம்புகளுள் ஒன்றாலும் அடி யுண் ணாமல் சுயேச்சையுடன் தாராளமாய்ப் பறந்து செல்லுகிறது."*

முந்தின இரவில் உலகெங்கணும் அமைதியும் ஆனந்தமும் நிறைந்திருப்பதாய்க் கண்ட கேச வன் இன்று அவ்வமைதியும் ஆனந்தமும் எங் கும் இல்லாதது கண்டு—தனக்குள் ஆங்கிலக் கவியாசராகிய ஒர்ட்ஸ்ஒர்த் (Wordsworth) பாடின பாட்டொன்றைப் பாடிக் கொண் டிருந்தான்.

* (1) புற்றரை, அருவி, உலகம் முதலிய காட்சியனைத்தும் கனவிற் காணக் தக்க மேன் மையும் புதுமையும் தாங்கிய சாந்தி ஒளி பெற்றனவாய் விளங்கிய காலம் ஒன்றிருந்தது. அன்றிருந்த மாதிரி இன்றில்லை. எப்பக்கம் திரும்பிப் பார்த்தாலும், பகலிலும் இரவிலும் எங்கெங்கு திரிந்து பார்த்தும், அவ்வொளியை நான் இன்னும் கண்டு முடியவில்லை.

(2) இவ்வழகிய வானவில் அடிக்கடி தோன்றி மறைகிறது. இக்கமல மலரும் அழகு விஞ்சி விகசிக்கிறது. களங்கமற்ற ஆகாயத் தில் சந்திரனும் தன்னொளி பரப்பித் திரிந்தாடிச் சந்தோஷிக்கின்றான். அலையற்ற அழகிய ஏரி நீரில் ஆகாயமழகுடன் பிரதிபிம்பிக்கிறது. சூரி யோதயமும் அழகு மிகுந்து ஒளிர்கிறது. இருப்பினும்—இவ்வுலகமெங்கணும் சென்று சுற்றிச் சலிப்படைந்த நான்—முன்னோர் காலத் தில் இவ்வுலகத்தின்கண் தங்கி இலங்கிய சாந்தி ஒளி இப்பொழுது உலகத்தை விட்டு அரவே நீங்கிப்போய் யாவரும் அறியலாகா இட மொன்றிற்குச் சென்று விட்டதையறி கிறேன்.

* * * *

அடுத்த நாள் மாலை கேசவன் சிற்றுண்டி யருந்திக் கொண்டிருந்த போது சாவித்திரி அவ் விடத்திற்குத் தற்செயலாக வந்தாள். அவனங் கிருப்பதைப் பார்த்ததும் அவள் நெருப்பு மிதித்

---

*இரவீந்திர நாதத் தாகூர் அவர்களின் "சித்ரா" என்னுமோரங்க நாடகத்தினின்று இது எடுக்கப்பட்டது.

* Wordsworth's "Ode on Immortality of the Soul"

தவள் போல் துடிதுடித்துக் கண்ணீர் விட்டுச் சென்ருள். அதுகண்டு கேசவன் மனம் வருந்தினுன். அவன் கண்கள் கண்ணீர் சொரிந்தன.

அன்று சாயங்காலம் சாவித்திரி தோட்டத்தில் உள்ள கல் பெஞ்சி (Bench) ஒன்றன் மீதமர்ந்து எதையோ சிந்தித்தவண்ணம் இருந்தாள். தற்செயலாகக் கேசவன் அங்கு வரவும் அவள் சட்டென்றெழுந்தோட ஆரம்பித்தாள். ஆனுல் கேசவன் அவளைக் கரத்தால் நிறுத்தினுன். அவன் முகத்தைச் சற்றும் பாராமல் தலை குனிந்த வண்ணம் முகத்தில் யாதொரு சந்தோஷக் குறியுமின்றி உடலெங்கும் வியர்வை யரும்பச் சாவித்திரி நடு நடுங்கி நின்ருள்.

"என்ன சாவித்திரி! என்னுடன் நீ ஏன் பேசுகிறதில்லை. என் மீது கோபமா?"

சாவித்திரி மௌனமாயிருந்தாள்!

"சாவித்திரி! உன் கோபத்திற்கு நான் என்ன செய்தேன்? நான் உன்னை மணக்க மறுத்தேனென்று கோபிக்கின்ருய்? சாவித்திரி! நீயே கவனித்துப் பார். விவாகத்திற்குத் தகுந்த வயதெனக்கு வந்துவிட்டதா? என் படிப்பெல்லாம் முடிந்தபிறகே நான் விவாகத்தைப் பற்றி எண்ணப் போகிறேன்—அதுவுமின்றி—அதுவுமின்றி—சாவித்திரி! நான் உனக்குத் தகுந்த கணவனு......?"

"இப்படி எல்லாம் என்னிடம் பேசவேண்டாம். அத்தான்!........"

அதற்குள் வெட்கமும் துக்கமும் நெஞ்சையடைக்க அவள் கண்ணீர் வடித்தாள். அது கண்டு சகிக்காத கேசவன் தள்ளாடிய பலவீன குரலில் கூறினுன்:—

"சாவித்திரி! நீ இப்படியழுவதழகன்று, மற்றப் பெண்களைப் போல் நீ புத்திபற்றவளல்லள். நீ புத்திசாலி. நான் சொல்வதைக் கேள். என் பிரியமுள்ள சகோதரி! என்னைப் போன்ற யுவாக்கள் எல்லாம் விவாகம் புரிந்துகொண்டு வீடுவாசல் குடும்பமே கதி என்றுட்கார்ந்து கொண்டால் நமது தாய் நாடு என்றுதான் சுதந்திரம் பெற்று வாழப் போகிறது? நமது மதம் என்றுதான் ஒளியுடன் பிரகாசிக்கப் போகிறது? நமது சமூகம் என்று தான் வறுமையற்று வீரத்துடன் தலை நிமிர்ந்து..........."

"அப்படியானுல் நீங்கள் கலியாணம் செய்து கொள்ளப் போகிறதில்லையா?" என்று சாவித்திரி கேட்டாள்.

"இல்லை. ஒரு காலத்திலும் இல்லை......"

"ஆயுள் முடிவுவரையில் பிரம்மசாரியாயிருக்க........"

"ஆம்! ஆம்!! சாகும்வரையில் பிரம்மசாரியாகவே இருப்பேன்"

சற்று மௌனம் எங்கும்!—ஆண்டுள்ள செடி கொடி காய் கனி மலர்கள் எல்லாம் சிறுவரது சம்பாஷணையை உற்றுக் கேட்பன போல் அசைவற்றுத் திகைத்து நின்றன.

"அத்தான்! எனக்கு விபரந் தெரிந்தது முதல் இதுவரையில் உங்களையே என் காதலனுய் எண்ணி நான் மனக் கோட்டை பல கட்டினேன். ஆனுல் அத்தகைய பாக்கியம் பாபியாகிய எனக்கு......"

"சட்! சட்!! நிறுத்து! என் சாவித்திரி! இத்தகைய வார்த்தைகளை நீயா பேசவேண்டும்?......"

"இருந்தாலும் என் மனமும் இதயமும் உங்களையே பூரணமாக விரும்புகின்றன; வேறெதையு மவைவிரும்பமாட்டா. ஆதலால் நீங்களென்னை எல்லோர் முன்னிலையில் அக்கினி சாட்சியாய் மணந்திராவிடினும்,—என் மனம், வாக்கு, காயம், உடைமை ஆகிய யாவும் உங்களுக்கே அர்ப்பணம் செய்யப்பட்டன; அவைகள் உங்களுடையனவே ஆகும்......"

"சாவித்திரி! இதென்ன?"

"அத்தான்! நீங்கள் ஆயுள் முழுதும் பிரம்மசாரியாயிருந்து தேசசேவை செய்யத் தீர்மானித்திருக்கிறீர்கள்—அல்லவா? எனது கடமை உங்கள் வேலையைச் செய்வதே.. நானும் பிரம்மசாரிணியாக—கன்னிகையாக—ஆயுள் முழுவதும் இருந்து தேசசேவை இயற்றத் தீர்மானித்துவிட்டேன். ஆனால் என்னிதயபத்தில் வீற்றிருக்கும் கடவுள் இதோ இந்தக் கேசவமூர்த்திதான்........."

"சாவித்திரி! இதென்ன? இப்படிப்பேசுகிறாய்!........."

"எப்படிப் பேசுகிறேன்? அத்தான்! எனது உறுதியான தீர்மானத்தைக் கூறினேன்.. அவ்வளவுதான்......"

அடுத்த வினாடி சட்டென்று அவ்விடத்திலிருந்து சென்று விட்டாள் சாவித்திரி. கேசவன் திகைப்பினால் தத்தளித்து அதே இடத்தில் நின்று அருகிலிருந்த மரத்தின் உயர்ந்த கிளை நுனியில் விரிந்த மஞ்சணிற மலரை மிரள மிரள நோக்கினான்.

"இது கனவா? உண்மையா?"

அப்பொழுது அங்கு ஒரு காக்கை வந்துட்கார்ந்து "காகா" என்றது.

காக்கைக்கும் கொஞ்சம் பேசத் தெரியும். அது சொன்னதின் தாத்பரியம், "ஆம்! இது உண்மையே!" என்பதே.

* * * *

## VI.

சாவித்திரியைத் தான் மணப்பது கண்டிப்பாக முடியாத காரியமென்று கேசவன் சொல்லிவிட்டான். விசுவநாதரும் ஏமாற்றமடைந்த தன் பெண்ணுடன் மங்களூருக்குத் திரும்பிப் போய்விட்டார். பரீட்சை முடிந்தது. நீண்ட கோடைக் கால விடுமுறை நாட்களும் தொடங்கின.

வர வர சமஸ்கிருதமும் பூஜையும் பாட்டும் அதிகமாயின. கேசவன் சதா தியானத்திலேயே மூழ்கியிருப்பான். விவாக சமாசாரத்தைப் பற்றிச் சாரதை பேச ஆரம்பித்தால் கேசவன் முழு வெறுப்புடன் கூறுவான். "போதுமே! அம்மா! போதும். எனக்கு விவாகம் நடந்து விட்டால் அத்துடன் நானழிந்த மாதிரியே தான்"

ஆனால் கேசவனது மனம் இப்பொழுது சற்று மாறிக் கொண்டுவந்தது. தேசம், மதம், அவைமீது தான் எவ்வளவு அபிமானம் கொண்டிருந்தாலும் சாவித்திரியையும் தான் விசுவாசிப்பதாக உரைத்தான் கேசவன். இவ்வெண்ணத்தை மறந்து விட அவன் தன்னாலானமட்டும் முயன்றான். அறுபது நாழிகையும் புத்தகமும் கையுமாகவே இருப்பான். இருப்பினும் அடிக்கடி சாவித்திரியின் உருவம் கண்ணீர் விட்டு மெய் சோர்ந்து பெருமூச்சுடன் தன்னெதிரில் நின்று அழுவதாக அவன் நினைப்பான். அப்பொழுது அவன் மனம் பாடுபடுவது ஈசனுக்கே தெரியும். அவனது தேசபக்தி, மதபக்தி எல்லாம் சற்று அப்பால் நின்று கொண்டு வேடிக்கை பார்த்து, கொல்லென்று சிரிக்கும். நாளாக நாளாகச் சாவித்திரியைப் பற்றித் தன் மனம் மிகவும் எண்ணுவதையவனுணர்ந்தான். ஆனாலவ்வெண்ணம் வெறும் காதலுணர்ச்சிகளாலுண்டானதன்று.

சாரதையின் மனோவியாகூலத்தை நாட்கள் அதிகப்படுத்தின. தனது ஒரே மகன் இப்படியெல்லாம் சொல்லித் திரிவது கண்டு அவள் அவனுக்குக் கூடிய சீக்கிரமே விவாகம் செய்து விடுவதென்று தீர்மானித்து விட்டாள்.

ஒரு நாளிரவு வழக்கம் போல் நெடு நேரம் படித்து விட்டு விளக்கொளி குறைத்துப் படுக்கைமீது படுத்துப் புரண்டு பற்பலவாறு எண்ணிக்கொண்டிருந்த கேசவன் அப்படியே தூக்கத்திலாழ்ந்து விட்டான். கரமிரண்டினால் முகம் மூடி விம்மி விம்மி அழுதுகொண்டு

சாவித்திரி பெருமூச்சுடன் தன்னருகே வந்து முழங்காற் பணியிட்டு, "அத்தான்! அத்தான்!!" என்று எதையோ சொல்லி மன்றுடுவதாகக் கனவு கண்டு, "சாவித்திரி! எழுந்திரு!!" என்று கூவினன். விழித்துப் பார்க்க யாதும் இல்லாதது கண்டு தயங்கி நெடு நேரம் பிரமையிலாழ்ந்தவனுயிருந்தான். பின்பு ஒருவாறு தேறித் தனக்குள் மெதுவாகக் கூறிக் கொண்டான். "என் விவாகம் சுயநலம் பற்றியதன்று; தேச நன்மைக்கும் குறைவொன்று மேற்படாது."

அடுத்த நாட்காலை விசுவநாதருக்கு அழகிய கடிதமொன்றில் அழகான எழுத்துக்களில் அழகிய பொருள்படச் சில வரிகளை வரைந்து அனுப்பினன். அவைகளுள் சில வருமாறு.

"அன்புள்ள மாமா!...........எனது எதிர்பாராத கடிதம் தங்களுக்குப் பெருத்த வியப்பளிக்கலாம்...........சாவித்திரியை மணப்பதாக நான் கடைசியில் தீர்மானம் செய்து விட்டேன்........................அடுத்த மாதத்தில் விவாக சுபமுகூர்த்த மொன்று பார்க்கவும். ....................இத்தனை நாள் நான் கொடுத்த சிரமத்தையும் மனோவியாகூலத்தையும் நீங்கள் பொருட்படுத்தமாட்டீர்களென்பதை நான் நன்குய் அறிவேன்.........சாவித்திரிக்கு அளவற்ற மனவருத்த மளித்ததற்காக நான் பூரணமாக மன்னிக்கப்படவேண்டியவனே........................"

கடிதம் எழுதி முடிந்ததும் தனக்குள்ளேயே அவன் எதையோ நினைத்துச் சிரித்துக் கொண்டு ஆங்கில பாஷையில் சில கவிவரிகளைச் சொல்லிக் கொண்டான். எட்வின் அர்னல்டு (Edwin Arnold) என்பவர் செய்தருளிய "ஆசியாவின் ஜோதி" (Light of Asia) என்னும் நூலின் இரண்டாம் பாகத்திலிவ்வரிகளிருக்கின்றன. தனது சிறு பிள்ளையாகிய சித்தார்த்தன் சிறு வயது முதல் கொண்டு உலகப் பற்றற்றிருப்பது கண்டு அஞ்சிய அவன் தந்தை அவனை உலகத்தாருடன் ஒன்றுக்கும் வகை ஒன்றுளதோ எனத் தன் அமைச்சர்களை வினவ அவர்கள் சொன்னர்கள்.

"Maharaja ! love
*Will cure these *thin* distempers ;
weave the spell
Of woman's wiles about his *idle* heart.
What knows this *noble* boy of beauty yet,
*Eyes that make heaven forgot, and lips of balm?*
Find him soft lives and pretty playfellows ;
*The thoughts ye cannot stay with brazen chains*
*A girl's hair lightly binds."*

('மகாராஜா! காதலானது இவையெல்லாவற்றையும் சரிப்படுத்திச் சொஸ்தப்படுத்தி விடுகிறது. பெண்ணின் மாயதந்திரமாகிய ஜாலவித்தை இவனது புத்தியை மயக்கிவிடலாம். இச்சிறு பையனுக்கு—சுவர்க்கத்தையும் மறக்கடிக்கும் கடைக்கண் பார்வையினுடையவும், அமிருதம் தவழ்ந்து ஒழுகிப்பெருகும் இதழிணையினுடையவுமான்—வசீகர அழகைப் பற்றி என்ன தெரியும்? அவனுக்கு மிகுந்த அழகுடைய மனைவி யொருத்தியைத் தேடிக் கொடும். இரும்புச் சங்கிலிகளாலும் கட்டப்படாத மனத்தைப் பெண்ணின் கூந்தலில் வளர்ந்த சிறுமயிர் கட்டிவிடும்.')

* * * *

## VII.

காலம் சென்ற நமது நண்பர் ஸ்ரீமான் B.R. இராஜம் ஐயர் "பிரபுத்தபாரத"த்தில் தாம் வெளியிட்ட வாசுதேவ சாஸ்திரிகளினுடைய கதையில் ஒரு அதிகாரத்தில் வெகு வேடிக்கையாக இங்ஙனம் எழுதுகிறார் :—

"வாசகர்களே! நீங்கள் எப்பொழுதாவது தபாற்காரனைப் பற்றி யோசனை செய்த

*Light of Asia—Book the Second.

துண்டா? ஒரு நாட்காலைப் பொழுதிற்குள் அவன் எவ்வளவு குறும்பு செய்து விடுகின்றான்! ஒருவனுக்கு அவன் கலியாண சமாசாரம் கொண்டு வருகிறான்; மற்றொருவனுக்கு மரண சமாசாரம் கொண்டு வருகிறான். எவ்வளவு பட்சபாதம்! சில நாழிகைகளுக்குள் சிலரை அவன் மாப்பிள்ளைகளாகவும், மற்றுஞ் சிலரை விதவைகளாகவும் செய்துவிடுகிறான்; சிலருக்குத் தவறான மணிவிகளைக் கொண்டு வந்து விடுகிறான்; சிலரைப் பொய்க் கேசினால் துன்புறுத்துகிறான். இன்னும் சிலருக்குப் பணத்தையும் காலத்தையும் வியயம் செய்ய உபயோகமற்ற கடிதங்களை அளிக்கின்றான். இன்னும் சிலரை அவன் நாளை நாளை என்று ஏமாற்றுகிறான். ஆனால் ஒரு விஷயத்தில் மட்டும் அவன் பட்சபாதம் பாராட்டுகிறதில்லை. எல்லாரிடத்திலிருந்தும் அவன் சட்டத்தில் அனுமதி பெறாத வரி யொன்றைப் பெறுகிறான். தீபாவளி, தசரா சமயங்களிலும், மணியார்டர், இன்ஷியூர் வரும் சமயங்களிலும், அவ்வரியை வசூல் செய்ய அவன் தவறுவதே கிடையாது."

இரண்டு மாதகாலத்திற்கு முன் சாவித்திரியைத் தான் மணப்பதாகக் கேசவன் எழுதிய கடிதத்தைக்கொண்டுவந்த அதே தபாற்காரன் இன்றும் ஒரு கடிதத்தை விசுவநாதரிடம் கொண்டுவந்து கொடுத்தான். ஒன்று மறியாத அவர் தினசரிச் சமாசாரப் பத்திரிகையைப் படிப்பதை நிறுத்திவிட்டு, மூக்குக் கண்ணாடியை ஒழுங்காக மூக்கின்மேல் நிறுத்திக் கொண்டு, வந்த கடிதத்தைப் பிரித்து வாசித்தார்.

"அண்ணா அவர்களுக்கு நமஸ்காரம். உபய குசலோபரி; சென்ற ஐந்தாறு நாட்களாகக் கேசவன் ஜுரத்தால் வருந்துகின்றான். டாக்டர் பார்த்து வருகிறார். இப்பொழுது குணமொன்று மேற்படவில்லை ஜோசியம் பார்த்ததில் சௌபாக்கியவதி சாவித்திரிக்கு இது போதாத காலம் என்று தெரியவந்தது. ஆகையினால் அவள் தினந்தோறும் அதிகாலையிலேயே எழுந்து கொண்டு ஸ்நானம் செய்து கௌரியைத் தொழுது ஒரு சுமங்கலியைப் பூஜித்து இரவிக்கைத்துண்டு ஒவ்வொன்று கொடுத்து வர வேண்டும். இந்த மாதம் முழுவதும் இப்படிச் செய்தால் நல்லது. விசாரப்படவேண்டாம். நான் குழந்தையை நன்றாக கவனித்து வருகின்றேன்.

இப்படிக்கு,
உங்கள் தங்கை, சாரதை.

காட்டுத்தீயென சமாசாரம் உடனே வீடு முழுதும் பரவிவிட்டது. சரசுவதி (விசுவநாதர் மனைவி) யும் சாவித்திரியும் விசாரப்பட்டார்கள். சாவித்திரியின் பிறைமுகமேங்கியது. அந்த விநாடியே இறக்கை கொண்டு பறந்து கோயம்புத்தூருக்குச் செல்லப் பெரிதும் விரும்பினாள். ஆனால் விசுவநாதர், "விசாரப்படாதே! சாவித்திரி! ஏதோ ஜுரம் கொஞ்ச மிருந்தால் என்ன? நான் நாளை கோயம்புத்தூருக்குச் சென்று பார்த்து வருகிறேன்" என்று சொன்னார்.

அன்று முழுவதும் சாவித்திரிக்குச் சாப்பாடு ஒன்றும் பிடிக்கவில்லை. நித்திரையின்றி அன்றிரவு முழுதும் மனம் புழுங்கினாள். அடுத்த நாள் வைகறையிலேயே எழுந்து ஸ்நானம் செய்து கௌரி தேவியை பூஜித்துத் தனது தோழியாகிய தாயம்மாளை அழைத்து அவளை பூஜித்துபசரித்து இரவிக்கைத் துண்டையும் கொடுத்தாள்.

அன்றே விசுவநாதரும் கோயம்புத்தூருக்குப் புறப்பட்டுச் சென்றார்.

* * * *

வீட்டு வாயிலில் குதிரை வண்டி ஒன்று நின்றதும் அதினின்று விசுவநாதர் பரபரப்பாய் இறங்கினார். வண்டிக்காரனுக்குச் சத்தமளிக்கப்பட்டது. சாமான்களை எடுத்துச் செல்ல

வந்த சேவகனுல் சாரதையும் கேசவனும் மாடியறையில் இருப்பதாகத் தெரியவந்தது. அவசரமாக அவர் மாடிப்படிகளின் மீதேறிச் சென்ருர்.

"வா! அண்ணு!!" என்று சாரதையின் குரல் கேட்டது.

மாடியறையில் மஞ்சமொன்றின் மீது கேசவன் மெலிவடைந்து படுத்துக் கொண்டிருந்தான்.

"வாருங்கள் மாமா! இப்பொழுதுதான் வந்தீர்களோ?" என்று கேசவன் கேட்டான். அவன் குரல் பலவீனமாயிருந்தது.

விசுவநாதர் அதற்கு விடை ஒன்று மளிக்காமல் வெருண்ட பார்வை குடிகொண்ட முகத்துடனவனருகே சென்று அவனது சிரத்தின் மீதும் மார்பின் மீதும் கரம் வைத்துணர்ந்து தாது பரீட்சித்துவிட்டு அருகே இருந்த ஆசனத்தின் மீது "உஸ்!" எனக் களைப்புடன் உட்கார்ந்து பெரு மூச்சு விட்டுத் தலைப்பாகை எடுத்து அருமையான குழந்தை போல் அதைத் தனது மடிமீது வைத்துக்கொண்டு சாரதையை வினவினர்.

"எத்தனை நாளாக ஜுரம்? என்ன ஜுரம்? டாக்டர் பார்த்து என்ன சொன்னர்? இப்பொழுது சற்று தேவலையா? சாவித்திரி மிகவும் விசாரப்படுகிருள். என்னுடனிங்குவர விரும்பினள். நான்தான் வேண்டா மென்றேன்."

சாவித்திரி என்ற பெயரைக் கேட்டதும் கேசவன் எதையோ சட்டென்று நினைத்துக் கொண்டான். அவன் முகத்தில் குபீரென்று இரத்தமேற அவன் பெரு மூச்சுவிட்டுக் கண்ணினின்றொழுகிய தாரை நீரைக் கரத்தால் வடித்தெறிந்தான்.

விசுவநாதர் கேட்ட கேள்விகளில் எதற்கு முதலில் விடை சொல்வதென்று அறியாது தயங்கித் தடுமாறியவளாய்ச் சாரதை சிறிது நேரத்திற்குப்பிறகு தனது தொண்டையை நன்ருகக் கனைத்துக்கொண்டு ஒரு தடவை பெருமூச்சுவிட்டுப் பின்பு தீனதொனியில் சொன்னள்.

"அண்ணு! குழந்தைக்கு ஜுரம் வந்து ஒரு வாரம் ஆகிறது. அன்றயதினம் டென்னிஸ் (Tennis) விளையாடப் போய்விட்டு வந்தவனுக்கு என்ன கிரகசாரமோ தெரியவில்லை. காய்ச்சல் வந்திருக்கிறது. அன்றிரவு மெத்த தலைவலியும் உடம்பு வலியு மிருந்ததால் ஆகாரம் ஒன்றும் வேண்டாமென்று சென்ஞன். நானுடனே உடம்பைத் தொட்டுப் பார்க்க மிகவும் உஷ்ணமாயிருந்தது. தேர்மாமீடர் (Thermometer) வைத்துப் பார்த்ததில் 101° ஜுரமிருந்தது. அன்றிரவு ஓவல்டின் (Ovaltine) குடித்து விட்டுப் படுத்துக் கொண்டான். அடுத்த நாட்காலை டாக்டர் வந்து பார்த்து மருந்து கொடுத்தார். ஆனல் காய்ச்சல் வாவா அதிகரித்து வந்தது. டாக்டரும் சென்ற நான்கு நாட்களாகத் தினமும் மும்முறைவந்து பார்க்கிருர். அபாயகரமாக ஒன்றும் இல்லை என்று சொல்லுகிருர். வியாதி என்ன என்று கேட்டதற்கு அவர் பதிலொன்றும் சொல்லாமல் கேசவனிடம் இங்கிஷில் எதெதையோ பேசிவிட்டுப் போனர். மலச்சிக்கலுக்காக தினந்தோறும் எனிமா வைக்கிருர். என்னிடம் ஒன்றும் சொல்லுகிறதில்லை. இதோ டாக்டர் வரும் நாழிகையும் ஆய்விட்டது. விவரமாக எல்லாவற்றையும் கேட்டுப் பார். அண்ணு! பாபம்! குழந்தை ஒரு வாரமாகச் சாப்பாடு இல்லாமல் கஞ்சிகுடித்து வருகிறது. உடம்பெல்லாம் மூங்கில் போல் இளைத்து விட்டது. யார் செய்த பாபமோ? யார் கண்திருஷ்டிப்பட்டதோ? நானும் வேண்டாத தெய்வத்தை எல்லாம் வேண்டியாய் விட்டது. இவனுக்கு அடிக்கடி ஜுரம் வருவதுண்டு, ஆனல் ஒரு வாரத்திற்குள் குணமாய்விடும். இப்

பொழுது மட்டும் ஏனோ இப்படி இருக்கிறது? நல்ல ஜோசியனைக் கொண்டு இவன் ஜாதகத்தையும் சாவித்திரியின் ஜாதகத்தையும் பார்த்ததில் இவன் ஜாதகத்தில் யாதொரு கெடுதலும் இல்லை என்றும் சாவித்திரியின் ஜாதகத்திற்கு இன்னும் ஒரு மாதம் போதாதென்றும் தெரிந்தது. அதற்குப் பரிகாரமும் சொல்லி யிருக்கிறான். சாவித்திரி கௌரி பூஜை செய்து வருகிறாளா?"

"ஆம், அவள் மிகுந்த சிரத்தையுடன் செய்து வருகிறாள். பாபம்! சிறு குழந்தை!! நேற்று கௌரியின் படத்திற்கு அதிக நேரம் பூஜை செய்து விட்டு எதையோ நினைத்துக்கொண்டு "ஓ" என்று அழுதாள்"........என்று விசுவநாதர்சொல்லும் பொழுது கேசவனதுடலில் உதிரம் மட்டற்ற கொதிப்புடன் பாய்ந்து குதித்து ஓடியது. "ஆ! ஆ!!" என்றானவன். "பிறகு நான்.தேற்றினேன். அவள் இங்குவர ஆத்திரப்படுகிறாள்" என்று தரைநோக்கிக் கூறினார் விசுவநாதர்.

சாரதையின் துக்கம் நிறைந்த செவிகளில் அவர் சொன்னதொன்றும் ஏறவில்லை. கேசவனும் ஒன்றுமுரைக்காமல் மறுபுறம் திரும்பிப் படுத்துக்கொண்டு பெருமூச்சுவிட்டான்.

"இப்பொழுது எப்படி இருக்கிறது?" என்று விசுவநாதர் கேட்க, கேசவன் "சற்று குணமாகி வருவதாக டாக்டர் கூறினார்" என்றான்.

அவ்வமயம் மாடிப்படிமீது மனிதர் காலடிச் சத்தம் கேட்டது. சாரதை "இதோ டாக்டர்" என்றெழுந்தாள்.

டாக்டரைக் கண்டதும் அவருக்கு வந்தனம் செலுத்திவிட்டு நின்றார் விசுவநாதர். டாக்டரும் எதிர் வந்தனமியற்றிவிட்டுக் கேசவனது கை,இருதயம்,வயிறு,மார்பு, நாக்கு, கண் இவைகளைப் பார்த்துவிட்டு தெர்மாமீட்டர் கொண்டு ஜுரம் அளந்தார்.

"இப்பொழுது தேவலை" என்றார் டாக்டர்.

"எத்தனை டெம்பரேசர் (Temparature)?" என்றார் விசுவநாதர். "102·1" என்று டாக்டர் சொல்லி அக்கருவியையும் காத்தையும் சுத்தி செய்தார்.

"இன்று மலம் சரியாய்ப் போயிற்றா?" என்றார் டாக்டர்.

"சரியாகவே போயிற்று. பாபம், குழந்தை வயிற்றில் என்ன இருக்கிறது? ஒரு வாரமாக ஆகாரம் இன்றி இருக்கிற அவன் வயிற்றில் என்ன இருக்கப்போகிறது?" என்றாள் சாரதை.

அப்போது மேற்கே கௌளி சட்டுசட்டென்று சத்தம் உண்டாக்கியது. "இன்று முழுவதும் இங்கேயே பாழும் பல்லி சொல்லுகிறது. என்னவோ? ஸ்ரீமந்நாராயணன்தான் காப்பாற்றவேண்டும்" என மனம் சோர்ந்து மொழிந்தாள் சாரதை.

"என்? இப்பொழுது உடம்பு எப்படி இருக்கிறது? அபாயம் ஒன்றுமில்லையே?" என்று விசுவநாதர் கேட்க, டாக்டர் முகம் சுளித்து, "உம்! அப்படி ஒன்று மில்லை. இப்பொழுது குணமாகியே வருகிறது" என்று சாரதையை நோக்கி, "அம்மா! இன்றிரவு நானிங்கு தங்க வேண்டிய அவசிய மில்லை. எதற்காகவேனும் அவசரமாய் வேண்டுமாயின் உடனே ஆளனுப்புங்கள், நான் கண்டிப்பாய் வருகிறேன்"என்று சொல்லிச் சென்றார்.

பின்பு சாரதை கை நிறைய உப்பும் மிளகாயும் எடுத்துக் கேசவன் தலையைச்சுற்றி எரியும் அடுப்பின் தணலுள் எறிந்தாள். நெடி ஒன்றும் உண்டாகாதிருக்கக் கண்டு,"அப்பா! என்னதிருஷ்டி? என்ன திருஷ்டி!!" என்று சொல்லிக்கொண்டே மேல் மாடிவந்து, "கீழே இருந்தால் இரைச்சலும் கூப்பாடும் அதிகமென்று மாடியிலேயே படுக்க வைத்தேன்" என்று செல்லி விசுவநாதரை நோக்கி, "நீ ஏதாவது சிற்றுண்டி அருந்தி

ஞபா?—கைகால் கழுவிவா. சமயற்காரனிடம் உனக்கேதாவது சிற்றுண்டியும், டீயும் கொடுக்கச் சொல்லுகிறேன்" என்று கூறிவிட்டு, "அடே! சிவராமா! இதோ வந்திருக்கிற அண்ணுவுக்கு வேண்டியதை எல்லாம் சரிவரச் செய்யடா" என்ருள்.

"அப்படியே ஆகட்டும் அம்மா! என்று சமயற்கார சிவராமன் தாழ்வாரத்திலின்று கூறினன்.

* * * *

## VIII

இரவு மணி பன்னிரண்டு! உலகெங்கணும் சூழ்ந்த இருள் ஒலியற்றமைந்திருந்தது. வானத்தில் சந்திரன் கரியமேகங்களாலடிக்கடி மறைக்கப்பட்டுத் தத்தளித்து வருந்திக் கொண்டிருந்தான். 'துவாரகை' யினது (கேசவனது வீட்டின்) தோட்ட மாங்களெல்லாம் அன்றிரவு நடக்கப்போகும் விசேஷ சம்பவத்தைப் பற்றித் தலையை நீட்டி நீட்டிப் பேசிக் கொண்டிருந்தன. காற்று சற்று குளிர்ந்து வீசிக் கொண்டிருந்தது.

நாம் கவனிக்க வேண்டியது மாடி அறையே. ஒரு மூலையில் சாளரத்தினருகே மேஜை ஒன்று இருந்தது. அதன்மேல் மங்கலாக தீபமொன்றெரிந்து கொண்டிருந்தது. அவ்விளக்கைச் சுற்றி மருந்து புட்டிகளும் பஞ்சுந் துணியும் பிறவும் இருந்தன. மற்றும் ஒரு சிறு கைப் புத்தகமும், எழுது கோல் ஒன்றும் (Pencil) இருந்தன. காற்றின் வேகத்தாலச்சிறு புத்தகம் திறந்த போழ்து, அத்தீபம் அதனுள் எழுதியிருப்பதை வருமாறு வாசித்தது:—

| | காலை. | மாலை. | சாயங்காலம். | இரவு. |
|---|---|---|---|---|
| செவ்வாய் | 102·7° | 103·6° | 103·5° | 103·5° |
| புதன் | 102·8° | 103° | 103° | 103 2° |
| வியாழன் | 103 ° | 103·4° | 103·5° | 103·3° |
| வெள்ளி | 102·9° | 103·4° | 103·4° | 103·4° |
| சனி | 103·1° | 103·° | 102·8° | 102·8° |

அது சாரதை எழுதியது. கேசவனுக்கு அன்றன்றிருந்த ஜுரத்தின் அளவை அங்கு குறித்திருந்தாள்.

அம்மேஜைக் கருகிருந்த மஞ்சத்தின் மீது கேசவன் படுத்துக்கொண்டிருந்தான். மஞ்சத்தின் நாற்புரங்களிலும் கொசுவலை தொங்கிற்று. ஆண்டுள்ள படுக்கைமீது கேசவன் உடல் முழுதும் போர்த்தியவண்ணம் படுத்திருந்தான். ஆனல் அவன் நித்திரையிலிருந்தான் என நிச்சயமாகக் கூறமுடியாது. ஏனெனில் அவனது கால் அடிக்கடி அசைந்துகொண்டிருந்தன. அம்மஞ்சத்தருகே தரைமீது விரித்தபாய்மீது சாரதை படுத்துறங்கிக் கொண்டிருந்தாள். பாபம்! சென்ற ஒரு வாரமாக அல்லும் பகலும் விழித்த கண் மூடாமலிருந்த அவள் இன்றிரவு அடக்கமுடியாத நித்திரையின் பாரத்தால் சற்று தலை தாழ்த்தினள். ஆ! அவ்வளவுதான். உடனே அதுவரை எந்த மூலையிலோ ஒளிந்து இருந்த நித்திரை அவளை மயக்கமாகிய பெருத்த சாகரத்தோடே ஆழ்த்தி விட்டது.

அறை எங்கும் சாம்பிராணியின் வாசனை. எங்கும் சாந்தி குடிகொண்டிருந்தது. சற்று நேரத்திற்கெல்லாம் பெருமூச் சொன்று கேட்டது.

ஆ! இன்னும் கேசவன் தூங்கவில்லை. அடிக்கடி அப்படியுமிப்படியுமாகப் புரளுகிருன்; பெருமூச்சு விடுகிருன். அந்தோ! பாபம் நிம்மதியற்ற ஜீவன்! பத்துமணி வரையில் அனலென வெம்பிய உடலோ இப்பொழுது உள்ளங்கால் முதல் உச்சந்தலை வரையில் ஜில்லென்று குளிர்ந்து இருக்கிறது. என்ன செய்வான் நமது கதாநாயகன்? எண்ணக்கூடாத எண்ணங்களை எல்லாம் எண்ணி எண்ணித் துக்கிக்கிருன்—பாபம்—அதுவரையில் மங்கலான கிரணங்கொண்டு பிரகாசித்த நிலவு அவன்

படும் மரண அவஸ்தை காண மனம் வருந்திச் சாவினு மிருண்ட கார்முகிற்றெடரொன்றில் மறைந்திருக்கிறது.

"என் வாழ்வுமிது மாதிரியே தான். சந்தோஷம் சமாதானம் சாந்தி இவை யாவுமின்றி இதுவரை யான் தத்தளித்து வருந்தினேன். இனிமேலாவது சாந்தியடையலாம் என்று நம்பிய என்னை இதோ மரணம் எதிர்பார்த்து நிற்கிறது. ஆம்! நான் சாகவேண்டியதே. போகுங் காலம் சமீபித்துவிட்டது" என்று முணுமுணுத்தவன் எதை எதையோ எண்ணிக் கண்ணீர்விட்டான்.

நண்பர்களே! ஆத்திரப்படவேண்டாம். எதற்காக வீண் ஆத்திரம்? தினந்தோறும் நடக்கும் சம்பவந்தானே இது. தினந்தோறும் பலர் பலர் தத்தம் மனைவிமார்களையும் மக்களையும் பிரிந்து நமனுலகேகுவது சகஜந்தானே. இதற்காக வருந்துவானேன்? பரபரப்படைவானேன்? அமைதியுடனிருங்கள். என் வாசகர்களே! நிம்மதியுடனிருங்கள்.

நேய! இதோ நமன் வந்து விட்டான். யமன் உன் வீட்டிற்கு வந்துவிட்டான். மரண பாசங் கொண்டு இருண்ட ரூபந்தாங்கி எருமை மீது வெகுண்ட பார்வையுடன் இதோ யமன் உன் வீட்டிற்கு வந்துவிட்டான். ஆம்! நீ போகவேண்டியதே. நீ இவ்வுலகத்திலிருந்து நீங்கவேண்டிய காலம் சமீபித்துவிட்டது. நீ கண்டிப்பாகப் போகவேண்டியதே. உன் மன எண்ணங்கள் எவ்விதமிருந்தாலும் நீ உனது மூட்டையைக் கட்டிக்கொண்டு யமபுரம் பிரயாணத்திற்குச் சித்தமாக—ஆயத்தமாக இருக்கவேண்டியதே. உன் கல்வியின் திறமையை யமனிடம் காட்டாதே. ஆ! அது வீணாகும். உனது அளவு மிஞ்சிய செல்வம் உபயோகப்படாது. உனது மனைவியானவள் அன்புடன் தழுவிய உனது அழகிய உடலை இன்னுஞ் சிறிது நாழிகைக்குள் எல்லாம் யமன் தழுவப் போகிறான்; உடனே அக்கினிச் சுவாலைகளுமனது அழகிய உடலின் மீது அளவற்ற முத்தங்களைப் பிரயோகிக்கப் போகின்றன. ஆம்! இவைகள் நிகழப் போவது நிச்சயம்.

यावत्पवनो निवसति देहे
तावत्पृच्छति कुशलं गेहे ।
गतवति वायौ देहापाये
भार्या बिभ्यति तस्मिन् काये ॥

—श्रीमच्छङ्करः—भजगोविन्दं—६.

*உயிருடைதேகமதை ஆவலாய்த் தழுவிய
உயிர்போன்ற மனைவியும் உயிரற்றிருக்குங்கால்
உயிரற்ற சவந்தனை உற்றுற்று நோக்கிப்பின்
உயிர்வாட்டும் பயத்தால் 'ஓ' வென்றலறுவாள்.

ஸ்ரீமத் சங்கார்—பஜகோவிந்தம்—6.

இவைகளைத் தடுக்க உன்னாலாகுமா? என்ன செய்யப்போகின்றாய்? உனது பணப் பெட்டியைக் காட்டி யமனை ஏமாற்றுவாயோ? உனது கல்வியின் திறத்தால் நமனை விரட்டி விடுவாயோ? அன்றி உனது உடலழகால் சாவை மயக்கப் போகிறாயா? அல்லது உன்னிடம் பொதிந்து விளங்கும் நல்ல குணங்களால் ஆயுள் முடிவை வசம் செய்யப்போகிறாயா? சொல் பார்ப்போம். இவைகள் எதனாலும் யமன் ஏமாறமாட்டான், ஜாக்கிரதை. மரியாதையுடன் அவன் கட்டளையைச் செய்தாலுண்டு. இன்றேல் அக்கொடியவன் சற்றுமிரக்கமற்ற இதயம் உடையவனாய்த் தனது கருணையில்லாத காத்தால் உன் கழுத்தின்மீது அர்த்த சந்திர பாணத்தைப் பிரயோகம்செய்து அதன் பூரண பலமதையும் கிரகிப்பான் என்பது உண்மை.

"ஆயுதமெடு! ஆயுதமெடு! ஓ! மானிட!
யுத்த சன்னத்தமாய் யமன் நின் வீட்டை

*'பஜகோவிந்தம்' இதன் ஆசிரியரால் மொழிபெயர்க்கப்பட்டு ஸ்ரீராமகிருஷ்ண விஜயத்தில் வெளிவந்துள்ளது.

வங்தெதிர்த்திடுவான்: பக்தியாம் ரதம் தன்னில் ஏறிடுவாய்: நீ சடுதியிலே
ஞானமாம் அம்பறுத் தூணிகட்டிக் கொண்டு
அன்பென்னும் நாணேற்றி உன் நாவை
ஜகதம்பிகையின் திவ்ய நாமமாகிய
அம்பைக் குறி வைத்தெய்குவையே:
ரதங்களையும் போர் வீரர்களையும் விலக்கு:
பிசகாதவுபாய மொன்றுனக்குச் சொல்லு [வேன்:
உனது யுத்தகளத்தை கங்கையின்
புனித கரைதனிலமைத்திடுவாய்—''
என்று பெரியவர் பாடியது பொய்யா மொழி தானே

இதைக் கவனியுங்கள். ஒரு விசேஷம். இறப்பவர்கள் சாவு வரும் சில நாழிகைக்கு முன்னமேயே அதையறிந்து விடுகிறார்கள். இவ்வுலகத்திலுள்ள எதனாலும் தாம் காப்பாற்றப்பட முடியாதென்ற எண்ணமவர்கட்குதிக்கிறது. இது என் பிரத்தியட்சமான அனுபவம்.

கதாநாயகனுமித்தகைய அவஸ்தையிலிருக்கிறான் பாபம்—இன்னொருதாம் சொல்லுகின்றேன். நிம்மதியற்ற ஜீவன் சற்று நேரம் கழிக்கிறது. அவனும் எழுந்து உட்காருகிறான். உடனே கண்முன் இருள் தோன்றுகிறது. அவன் மெதுவாக,'ஆ!' என்றலறுகிறான். திரும்பவும் மௌனம்—சிறிது நேரத்திற்கெல்லா முட்கார்ந்தபடி பலவிதமாக எண்ணுகின்றான்.

என் பிரியமுள்ள கேசவா! என் அன்புள்ள தம்பி!! உனக்கினி இந்த உலக விவகாரங்கள் வேண்டாம். கடவுளானவர் நீ இறக்கவேண்டுமென்று கட்டளையிட்டிருப்பாரானால் நீ கண்டிப்பாக இறக்கவேண்டியதே. அவரது கட்டளையை நிறைவேற்றுவதால் நீ நல்லதையே செய்கிறாய். பிறருக்கு மாணம் நேரும்போதெல்லாம் வேதாந்தம் பேசும் உன் அறிவும் ஆற்றலும் எங்கு சென்றன? அனித்தியமாகிய உடல் போகிறதே என்று வேதாந்தியாகிய நீ என் வருந்தவேண்டும்? மாணத்தினால் உனக்கென்ன கெடுதல் வரப்போகிறது? நீ என்ன தீச்செயல் புரிந்தனை? ஒன்றுமில்லையே. அங்ஙனமாயின் மாணத்திற்கஞ்சுவானேன்? நண்ப! மரணமானது உன்னை இச்சலனலோகாவஸ்தையினின்றுங் காப்பாற்றி நித்திய நிம்மதியளிக்கும் சிநேகிதனாக இருக்கிறது. உன் வாழ்க்கையின் லட்சியப் பொருள் நிம்மதியே என்று வாய்ப்பறை சாற்றினையே. இப்பொழுது மாணத்தினால் வரும் நிம்மதியடைய ஏன் தயங்குகிறாய்? ஆ! இதென்ன? ஏனழுகிறாய்? சாவித்திரியை நினைத்தா?—இவைகளெல்லாம் இப் பரந்த உலகத்தின் பற்பல தேசங்களிலும் தினந்தோறும்—மணிதோறும் — விஞடிதோறும் — நடக்கின்ற அற்ப சம்பவங்கள் தாமே. இதற்காக நீயேனழவேண்டும்?

அன்புடைய அம்பி! இம்மாணமானது உன்னை அழிக்கச் சக்தியற்றது. சாவானது உனக்குப் புதிய உடலை அளிக்கப்போகிறது. அவ்வுடல் இவ்வுடலினும் மிக்க தூயதாயிருக்கும். அதற்குச் சிறிதுமையமில்லை. கேவலம் மாமிச பிண்டமாகிய இவ்வுடல் போனால் என்ன? இவை யாவும் நீ அறியாதவையல்ல.

நீ நித்தியன்; நாமரூப ரகிதன்; பந்தங்களிலிருந்து விடுப்பட்டவன்; சுதந்திரம் அறிவு ஆனந்தம் அமைதி பொருந்தியவன்; உன்னை யழிக்கச் சக்திவாய்ந்தது ஒன்றும் இல்லை. உன்னை அக்கினி எரிக்காது, நீர் நனைக்காது, காற்று உலர்த்தாது. நீ எதற்குமஞ்சவேண்டியதில்லை. அச்சமே உனது சத்துரு. அந்த அச்சந்தான் மரணமாகும். ஆதலால் மாணத்திற்கு நீ அஞ்ச வேண்டாம். இதைப்போல் எவ்வளவோ ஜன்மமெடுத்திருக்கிறாய். எடுக்கவும் போகிறாய். ஒவ்வொரு தடவையும் இறக்கும்போதெல்லாம் இங்ஙனமே கதறினாய். இப்பொழுதும் அப்படியே கதறித் தயங்குகிறாய். ஏனித்தயக்கம்? இவ்வு

லகம் உனது நித்தியவாசஸ்தலம் அன்று. இவ்வுலகம் ஒரு வாடகை வீடுபோன்றதே. நீ கொடுத்த வாடகைப் பணம் முடிந்ததும் நீ மரியாதையுடன் உன் சொந்த வீட்டிற்கே திரும்பிப் போகவேண்டும். சகோதரா! மற்றும் இவ்வுலகில் பிரிவதற்கரிய இன்பம் எதைக் கண்டனை? இவ்வுலகம் முழுவதும் மரணம், மூப்பு, வியாதி இவைகளால் சூழப்பட்டிருக்கின்றதே. இதை நீ அறியாயா?..............நண்ப! நீ நித்தியன், உன்னுடலே அழியப்போகிறது. "பனைமரம் நிலைத்து நிற்கிறது. அதன் பழங்களில் ஒன்றிரண்டு கீழே விழுமானால் அவைபொருட்டு அழுவது மதியீனம்" என்னும் பகவான் இராமகிருஷ்ணரது வாக்கை நீ அறிவாயோ!

உனக்கு நிம்மதிவேண்டுமா? 'வேண்டும்' என்கிறாய்! அழிவற்ற ஆனந்தம் வேண்டுமென்கிறாய்! அங்ஙனமாயின் "ஓம்நமோநாராயணாய"! என்று சொல். ஆ! நீ இதைச் சொல்லாமல் வேறெதையோ நினைத்துக்கொண்டு மஞ்சத்தினின்றும் மெதுவாக இறங்கித் தவிழ்ந்துகொண்டே மேஜையருகிலிருக்கும் நாற்காலிக்குச் செல்லுகிறாய்; பின் சலிப்படைகிறாய். இதோ! நாற்காலின்யின்மீது அமர்கிறாய். பெருமூச்சு விடுகிறாய். கண்களினின்றும் கண்ணீர் பெருகுகின்றனவே. ஏன்? என்ன சமாசாரம்? அத்துளிகளில் எந்த எந்த விஷயங்களை எல்லாம் பூட்டி வைத்திருக்கிறாய்! ஆ! உன் சாமர்த்தியமே சாமர்த்தியம்.

ஆம்! மீண்டும் காரிருள்உன்கண்முன்தோன்றுகிறது. மீண்டும் நீ கதறுகிறாய். சற்று சமாளித்துக்கொள்ளுகிறாய். ஒருநிமிடம் இங்ஙனம் கழிகிறது. நீ மேஜைமீதிருக்கும் சிறு கைப்புத்தகத்தில் ஆண்டிருக்கும் எழுதுகோலால் எதையோ எழுதுகிறாய்—ஆ! கைநடுங்குகிறது, நாவுலருகிறது, வியர்வையரும்புகிறது—இதோ! இதோ! கடிதம் முடிந்து விடுகிறது. நீ மீண்டும் எழுந்து சென்று மஞ்சம்மீதமர்ந்து கொள்ளுகிறாய். மீண்டும் இருள் தோன்றுகிறது. கண்ணீர் தாரை தாரையாக வடிகிறது; மூச்சுத்திணறுகிறது ஆ! நீ படுக்கிறாய். எழுந்து கொள்கிறாய், மீண்டும் படுக்கிறாய்; நண்ப! எழுந்து கொள்வதால் பிழைத்துக் கொள்ளலாம் என்று நினைக்கிறாய்? ஐயோ— அற்ப எண்ணமே!— துரதிருஷ்டம் பிடித்த நேய! "சாவித்திரி" எனக்கதாரதே. உனக்கும் அவளுக்கும் இனி யாதொரு சம்பந்தமும் கிடையாது. "நாராயணா" என்றுகத்து. "ஓம்" என்று உரக்கச்சொல்; "பகவானே! உன்னைச் சரணமடைகின்றேன். இவ்வந்தியகாலத்திலவஸ்தைப் படுங்கால் உந்தன் பாதமே தஞ்சம். நின்னடியிணைகீழுற்றவர் நிழலிலிருத்து. ஏழைக்கிரங்கு. என்னைய! நீயே இனி எனது ஸர்வம். நீயே என் மாதா; நீயே என் பிதா; நீயே என் நண்பன்—நீயே எனது சர்வம். நாராயணா! உனதருட்பார்வையை அருளமாட்டாயா?" என்று மன்றாடு.

ஓம்! சாந்தி:! சாந்தி:!! சாந்தி:!!!

நிம்மதியற்ற ஆன்மாவுக்கு அன்றிரவானது நிம்மதி யளித்தது. எங்கும் நிம்மதி பொங்கித் ததும்பியதும் அறியப்படாத ஆனந்தராஜ்யத்தின் செங்கோல் ஓங்கிவளர்ந்தது.

* * * *

சாளரவழியாக ஒரு விட்டிற் பூச்சி அறைக்குள் பறந்துவந்தது. குளிர் காற்றானது மேஜைமீதிருந்த சிறு புத்தகத்தை அப்படியும் இப்படியும் புரட்ட முயன்று கொண்டிருந்தது. ஆண்டிருந்த தீபம் தனது மங்கலான ஒளியைப்பாப்பி அப்பூச்சியை நோக்கி, "சகோதரா! உனது வரவு நல்வரவு ஆகுக. உனக்குச் சதா நல்லதுண்டாகட்டும். தயவு செய்து இந்தக் கடிதத்தைச் சற்று உறக்கவாசி, கேட்போம்" என்றது. அதுவும் உறக்கப் படித்தது.

வாசகர்களே! பயப்படவேண்டாம். சாரதை இந்த சப்தத்தினால் எழுந்திருக்கவில்லை. பாபம்—கள்ளங்கபடம் களங்கமற்ற சாதுவான பிராணி—துரதிருஷ்டமே! உன் தலையிலும் இப்படியா எழுதியிருக்கவேண்டும்? அக்கினியில் வைப்பதால் பொங்கிப் பொங்கிப் பாத்திரத்தினின்று தரை மீது வழிந்து விழுந்தோடிப் பிரயோஜன மற்றுப்போன மணம் பொருந்திய வெண்மையான பாலைக் குறித்து அழுவது மதியீனமே ஆகும்; அழாதே அம்மா! அழாதே! அழுவதற்கும் உனக்கு வாய் இருக்கிறதா?

மாண ஓலையுடன் இக்கதை முடிவு பெறட்டும்.

"மாணத்தருவாயிலிருக்கிற கேசவனெழுதிய மாண ஓலையிது. இஷ்டமிருப்பின் சாவித்திரி புனர்விவாகம் புரிந்து கொண்டு நீண்ட காலம் சுகமேவாழட்டும். அல்லது உலகபாசத்தை அறவே விலக்கி நிம்மதி யடையட்டும்; ஆற்றிலொரு காலும், சேற்றிலொரு காலும் வேண்டவே வேண்டாம். இவ்விரண்டிலொன்றே எனக்குப் பூரண நிம்மதியையளிக்கக்கூடியது. என் தாய் என் மாணத்திற்காக வருந்தவேண்டியதில்லை. யாவற்றையும் ஏழைகட்கீந்து விட்டு இறைவனைத் தொழுவது மேலான காரியம். அதிகம் எழுத முடியாது. இதோ மாணம் என்னைக் கூப்பிடுகிறது. இதோ நானும் போகிறேன். வேறு உடலும் வேறு தாயும் என்னை எதிர் பார்க்கிறார்கள்." ஓம்! சாந்தி:!

சுபம்!

## பின்னுரை.

மாணத் தருவாயிலிருந்த கேசவன் தன் தாயை ஏன் கூப்பிடவில்லை என்று என் நண்பர் ஒருவர் கேட்கிறார். நான் சொல்லுவதாவது மாணத்தின் நிச்சய வரவு அறியப்பட்டிருந்தது. யாரிருப்பினும் மாணம் கட்டாயம் வருமாதலின் தாயின் விழிப்பு உபயோகமற்றதாம். தாயை எழுப்பின் மாண சமயத்தே மன நிம்மதி பெறமுடியாது. சாவித்திரியின் விஷயமாகவும் பேசமுடியாது. இவ்விரண்டுமற்ற மாணமானது வெறுக்கத்தகுந்ததாம். அநேகமாக இவைகளே காரணங்களாக இருக்கக் கூடும். இருந்தாலும் எதையும் நான் நிச்சயமாகச் சொல்லமுடியாது. எதன் பொருட்டுச் சாரதையை எழுப்பாமல் இருந்தானோ—அது எனக்குத் தெரியாது.

அவன் இப்பொழுது எவ்விடத்தில் யார் மகனாகப் பிறந்திருக்கிறான் என்று கேட்டறிந்து அவ்விடத்திற்கே நேராகச் சென்று மேற்படி காரணங்களைத் தெரிந்துகொள்வது மிகவும் சிறந்தது. எனக்கும் அவைகளைத் தெரியப்படுத்தினால் நல்லதாகும். நானும் மெத்த வந்தனம் செலுத்துவேன்.

# பூர்ணசக்தி.

(ஸ்ரீமான் கி. லக்ஷ்மணசர்மா.)

## இருவகை வைத்தியம்.

சக்தி யென்பது நம் நலங்களுக்கெல்லாம் அடிப்படையாயுள்ளது. சக்திக் குறைவினால் நாம் செய்யும் தொழில்கள் எல்லாம் துன்பமாகவே தோன்றுகிறது. சக்தி நிரைந்துள்ளவன் எளிதாக எல்லாக் காரியங்களையும் செய்து விடுவதும் தவிர, ஆநந்தமும் சந்தோஷமும் நிரம்பிய மனதுடன் வாழ்கிறான்.

வருங்கால உலகத்தை உருவாக்குவதாகிய பெரிய தொழிலிலிருக்கிற பெண் மக்களுக்கு சக்தி அதிகமாக வேண்டுமென்றே சொல்ல வேண்டும்.

மேலும் சக்திக்குறைவினால்தான் எல்ல நோய்களும் உண்டாகின்றனவென்பதும் உண்மை. இதை மறுப்பவர் யாருமில்லை.

நோய்க்குக் காரணமாவது அணுப்புழுக்கள் தான் என்று சொல்லுகிற மேல் நாட்டு வைத்தியர்கள் கூட, சக்திகுறைந்த உடம்பில் தான் அந்தப் புழுக்கள் நோய்களை உண்டாக்கக்கூடு மென்று ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஆனால் அவர்கள் தப்பான நோக்கத்துடன் ஆராய்ச்சி செய்வதனால், இந்த உண்மை அவர்களுக்கு நல் வழிகாட்டவில்லை. அணுப்புழுக்களை எதிர்ப்பதற்காகக் குருட்டு யுக்திகள் செய்வதிலேயே அவர்கள் புத்தியெல்லாம் செலவாகி விடுகிறது. நாம் நோயற்றிருப்பதற்காக, அந்த வகை வைத்தியர்களை நம்பக் கூடாது.

சக்தியின் தத்துவத்தை உள்ளபடி அறிந்து, அதைப் பரிபாலிக்கும் வழிகளை போதிக்கிறவர்கள் வேறு. அவர்களாவது இயற்கை வைத்தியர். மற்ற வைத்தியர்களுக்கும் இவர்களுக்கும் கொஞ்சமேனும் ஒற்றுமை கிடையாது. இருதிறத்தாருக்கும் பொதுவாக ஒன்றேதானுண்டு. அதாவது, இருவகையாரும் மனித தேகத்தின் நன்மையைக் கோருகிறார்கள் என்பது மட்டும் தான். இயற்கை வைத்திய மல்லாத மற்ற வைத்தியங்களைச் செயற்கை வைத்திய மென்று அழைப்போம்.

செயற்கை வைத்தியர்கள் இயற்கை வைத்தியமானது நன்றே என்று பொதுக் கூட்டங்களில் ஒப்புக்கொள்வார்கள். இயற்கை வைத்தியர்கள் ஒருகாலும் செயற்கை வைத்தியத்தை நன்றெனச் சொல்லவேமாட்டார்கள்; அது கொடிதென்றே சொல்லுவார்கள்.

இருவகை வைத்தியங்களுக்குமுள்ள தாரதம்மியத்தை எடுத்துக் காட்டக்கூடிய ஒரு திருஷ்டாந்தத்தைச் சொல்லுகிறேன்.

சொர்க்கப்படமென்றொரு விளையாட்டு ஒன்று நமக்குள் முற்கால மிருந்தது. அதில் அநேக வரிசை கட்டான்களிருக்கும். அதில் கீழ்ப்படியிலிருந்து மேல்படிக்குப் போகிறது போல பாவனையாக, சோழிகளைக் கொண்டு விளையாடுவதுண்டு. இப்படி மேல் போகிற ஒருவன் இடையிடையே, சிற்சிலக் கட்டான்களில் ஏணிகளையும் பாம்புகளின் வாய்களையும் சந்திக்கலாம். ஏணிகளின் அடி படிந்திருக்கும் கட்டானுக்குள் தங்கினால், அங்கிருந்தபடியே ஏணியின் உச்சிக் கட்டானுக்குப் போக உரிமையுண்டு. ஏணியானது ஏதாவது தவம், தானம் முதலிய புண்ணியத்தைக் குறிக்கும். பாம்பின் வாயில் விழுந்தால், அதன் வால் தங்கும் கீழ்ப் படிக்கட்டானுக்குப் போகவேண்டும். இது ஏதாவது பாப பலன்.

இயற்கை வைத்தியத்தினால் வாழுகிறவன்—அதாவது என்ன நேர்ந்தாலும் செயற்கை வைத்தியம் செய்துகொள்ள மறுத்து, இயற்கை வைத்தியத்தைக் கொண்டே தனக்கு வரும் நோய்களைத் தீர்த்துக் கொள்பவன்—எப்போதும் சொர்க்கப்பட விளையாட்டில் ஏணிகளின் அடிகளையே அடைகிறவனை ஒத்தவன். எந்த நோய் அவனுக்கு நேர்ந்தாலும், அவனை அதிக நாள் பீடிக்காமல், எளிதாகத் தணிவதுந் தவிர, பிற்காலத்தில் அவன் முன்னிலும் அதிக சக்தியும் சௌக்கியமும் பெற்றிருக்கும்படி நேருவது நிச்சயம். இதனால் இயற்கை வைத்தியத்திலிருக்கிற ஒருவனுக்கு நோய்கள் அனுகூலமாகின்றன. நோய்க்கு பயப்படுவது இயற்கை வைத்தியத்தாருக்குக் கிடையாது. இயற்கை வைத்திய நம்பிக்கையுள்ள குடும்பங்களில், அநேகமாய்ப், பிறக்கும் குழந்தைகள் எல்லாம் தீர்க்காயுசுடனும் கூடியமட்டில் நல்ல தேகத்துடனும் வாழ்வதைப் பார்க்கலாம். என் குடும்ப அனுபவம் அப்படியே இருந்து வருகிறது.

செயற்கை வைத்தியர்களை நம்பி வாழ்கிறவர்களுடைய கதியானது சொர்க்கப்பட்ட விளையாட்டில் அடிக்கடி பாம்பு வாய்களில் அகப்பட்டுக்கொள்ளுகிறவர்களை ஒக்கும். செயற்கை வைத்தியம் செய்துகொள்ளும் ஒவ்வொரு தடவையும் தேக நலங்கள் குறையும். சக்தி மங்கிக்கும். இலேசான நோய்களுக்கே ஆளாகும்

ஒருவன், செயற்கை வைத்தியர்களுடைய மூர்க்கத்தனமான செயல்களால் பளுவான நோய்களுக்கே ஆளாவான். அற்பாயுளனாய் மாளவும் நேரும்.

புதுக்கோட்டையில் என் நண்பர் ஒருவர் இருந்தார். அவர் பெயர் வெங்கடவராக தீக்ஷிதர். அவர் நல்ல தேகபலமுள்ளவர். சுத்த மனதும், பல நல்ல பழக்கங்களுமுள்ளவர். யாதொரு கெட்ட வழக்கமுமில்லாதவர். செயற்கை வைத்தியத்தின் பயனாய் அவர் அகால மரணத்துக்காளானார். அவருக்கு வந்த நோய் காய்ச்சல். இயற்கையில் அது கொல்லும் தன்மையுள்ளதல்ல. அவர் சாகும் நிலைக்கு வந்து, மூர்ச்சையாக வெகு நாள் கிடந்தார். நான் பார்க்கப்போன சமயம் சிறிது மூர்ச்சை நீங்கி, என்னைப் பார்த்துத் தான் இயற்கையை விட்டுச் செயற்கை வைத்தியத்திற்குள்ளான குற்றத்தினால்தான் தனக்கு அந்த கதி வந்ததென்று சொல்லிவிட்டு, மறுபடி மூர்ச்சையிலாழ்ந்தார்.

இயற்கை முறையில் பூர்ணசக்தி பெறுவதற்கான பல அனுஷ்டானங்கள் உண்டு. அவற்றில், செயற்கை வைத்தியரை பகிஷ்காரம் செய்து, தேவை நேரும் போதெல்லாம் இயற்கை வைத்தியமே செய்து கொள்வது என்ற உறுதியுடன் வாழ்வது முதன்மையானது. மற்ற அனுஷ்டானங்களால் மட்டும் ஒருவன் பூர்ண சக்தியைப் பெறமுடியாது. எப்போதாவது நோய் வருவது நிச்சயமாகையால், அப்போது செய்துகொள்ளும் செயற்கை வைத்தியத்தினால், அது வரையிலும் நல்ல அனுஷ்டானங்களின் பயனையெல்லாம் விழுங்கிவிடும். செயற்கை வைத்திய நம்பிக்கை யுள்ளவர்கள் தேக பரிபாலன முறைகளால் அதிக நன்மை பெறமுடியாது என்று இதனால் அறியவேண்டும். நோய்களைத் தடுக்கும்பொருட்டு, செயற்கை வைத்தியர் செய்யும் காரியங்கள்—அம்மைகுத்துவது முதலியது—உண்மையில் தேக நலத்தைக் கெடுக்கும் காரியங்களே. இதைப் பற்றி விரிவாய்ப் பின் ஒருசமயம் எழுதுகிறேன்.

இயற்கை வைத்தியத்துக்கு நிதர்சனமாக ஒரு எருமைக் கன்று தனக்குத்தானே வைத்தியம் செய்துகொண்ட கதையைச் சொல்லுகிறேன். இது தேவண்ணகேரே என்ற ஒரு கிராமத்தில் ஒரு பிராமணச் செல்வர் வீட்டிலிருந்தது. இதற்குத் தீராத நோய்வந்து, மருந்துகளால் குணப்படாதது கண்டு, அதை சுயேச்சையாக அவிழ்த்து விட்டார்கள். அதன் மேல், அது வெயிலில் குளிர்காய்ந்து, தண்ணீர் மட்டில் சாப்பிட்டுப் பட்டினியிருந்து, மூன்று நாளில் குணமடைந்து விட்டது. வெட்ட வெளியிலுள்ள நல்ல காற்று, வெயில், தண்ணீர் இந்நான்குந்தான் மகா மருந்துகள் என்று இதனால் நாம் காணவேண்டும். இயற்கை வைத்தியத்தின் விரிவான விவரங்களை "மருந்தில்லா வைத்தியம்'' என்னும் நூலில் காணலாம். இது 'புதுச்சேரி, இயற்கையில்லம்', என்ற விலாசத்தில் கிடைக்கும். இனி, பூர்ணசக்தியின் மற்ற அம்சங்களை வர்ணிக்கிறேன்.

(தொடரும்)

---

EVERY HOUSE
SHOULD STOCK A BOTTLE OF
AMRUTANJAN
THE BEST PAIN BALM.
Price As. 10 a bottle.




# கிராமக் கைத்தொழில்கள்.

[இந்தியாவிலுள்ள எல்லாக் கட்சியாரும் ஒற்றுமைப்பட வேண்டுமென்று சிறிது காலமாக நடைபெற்றுவரும் முயற்சியை நேயர்கள் அறிந்துகொண்டிருப்பார்கள். இது சம்பந்தமாக ஸ்ரீமதி பெசண்டம்மையாரும் நூல் நூற்க இசைந்திருக்கிறார் என்பதும், இந்தியாவில் கிராமக் கைத்தொழில்கள் விருத்தியாகவேண்டுமென்று தாம் கூறியிருப்பதாக அம்மையார் தெரிவித்திருக்கிறார் என்பதும் நேயர்களறிந்த விஷயங்களே. இச்சமயத்தில், பெசண்டம்மையார் சுமார் பத்தாண்டுகளுக்கு முன்னர் கிராமக் கைத்தொழில்களைப் பற்றிச் செய்துள்ள ஓர் உபந்நியாசத்தின் சில பாகங்களை அன்பர்கள் படித்தல் முற்றிலும் பொருந்தும். கீழ்க் காணப்படும் அம்மையாரின் உபந்நியாச சாரத்தை நேயர்கள் ஊன்றிப் படிக்கவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறோம்.]

இந்தியாவின் பண்டைக்கால ஆட்சிமுறையைக் கவனிக்குமாறு முதலில் உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். இதனைக்கொண்டு, இந்தியர்களுடைய ஆட்சிமுறைத் திறனை நன்கு அறிந்துகொள்ளலாம். தன்னுடைய நிர்வாகத்தைத் தானே கவனித்துக்கொள்ள இந்தியாவுக்குச் சக்தி இருக்கிறதென்பதை அது புலப்படுகிறது. தற்காலத்தில் பெரிய ஸ்தாபனங்களை இந்தியர்கள் நிர்வகிக்க வில்லையாயினும்—அதற்கு அரசியல் காரணங்கள் பலவுள—ஆட்சி நிர்வாகத்திறமை இன்னும் இந்தியர்களைவிட்டு விலகவில்லை; அத்திறமை அதிகமாகிக்கொண்டு வருகிறதென்றுங் கூறலாம்.

* * * *

பண்டைக்காலத்தில் கிராமமே எல்லாவற்றிற்கும் ஆரம்ப ஸ்தானமாக இருந்ததென்பதை நேயர்கள் அறிவார்கள். அக்காலத்தில் ஒவ்

வொரு கிராமமும் தன்னுடைய தேவையைத் தானே சரிப்படுத்திக்கொண்டு வந்தது; தனது நிர்வாகத்தைத் தானே நடத்திக்கொண்டு வந்தது. நாம் பழையபடி கிராமவாசத்திற் காதல், கிராம நிர்வாகத்திற் காதல் செல்ல முடியாதென்பது நிச்சயம். ஏனென்றால் இப்பொழுது போக்குவரவு வசதிகள் அதிகமாகிவிட்டன. ஆனால் இந்தக் கிராம ஆட்சிமுறை ஆதியில் எந்நோக்கங்கொண்டு ஏற்படுத்தப்பட்டதோ அந்நோக்கம் இன்னும் சாகவில்லை. ஆனால் அது தூங்கிக்கொண்டிருக்கிறதென்றே சொல்ல வேண்டும். இப்பொழுது சிறிது காலமாக அவ்வுறக்கம் கலைந்து வருவதைக் குறித்து அனைவரும் சந்தோஷப்படுவர்.

* * * *

நிர்வாகத்தை மேற்போட்டுக்கொண்டவர்கள் தாங்கள் எந்தெந்த விஷயங்களைக் கவனிக்க வேண்டும் என்பதை நன்கு தெரிந்துகொண்டார்களானால் அங்கு சுயஆட்சிமுறை நிறம்பட நடைபெறும் என்பது அனைவரும் ஒப்ப முடிந்த ஓர் உண்மை. ஆனால் தற்காலத்தில் இஃது அநுபவ ரூபமாகச் சரியாக அநுசரிக்கப்படுவதில்லையென்று சொல்லவேண்டும். ஆனால் பண்டைக்காலத்து கிராம நிர்வாகத்தில் ஸ்தலஸ்தாபனங்களால் ஜனங்களுக்குப் பயனுண்டாகுமாறு ஆட்சி முறை அமைக்கப்பட்டு நடைபெற்று வந்தது. கிராமங்களில் பஞ்சாயத்து சபைகள் ஏற்படுத்தப்பட்டிருந்தன. இப்பஞ்சாயத்து சபைகளின் மூலமாக கிராமவாசி ஒவ்வொருவனும் கிராம நிர்வாகத்தில் பங்கெடுத்துக்கொண்டு வந்தான் என்று சொல்லவேண்டும். கிராமவாசிகள் தங்களுடைய பிரதிநிதிகளின் யோக்கியதையை அறியவும், தங்களுடைய வேலைகளைக் கவனித்துக்கொள்ளவும் சந்தர்ப்பம் இருந்தது. இந்த ஒரு கிராம நிர்வாகத்திற்கடுத்தபடியாகப் பத்து கிராமங்களடங்கிய ஒரு நிர்வாகத் தொகுதி ஏற்பட்டிருந்தது. இந்தப் பத்து கிராமங்களும் அடங்கிய நிர்வாக அரசாங்கத்தில், ஒரு கிராம அரசாங்கத்துக்குள்ள அதிகாரம், செல்வாக்கு முதலியவைகளை விட அதிகமான அதிகாரம், செல்வாக்கு முதலியன இருந்தன. இதேமாதிரி நூறு கிராமங்களடங்கிய நிர்வாகத் தொகுதி ஏற்பட்டிருந்தது. இங்ஙனம் ஏற்பட்டிருந்த தொகுதிகளுக்கு கீழ்ப்பட்ட தொகுதிகளிலிருந்து பிரதிநிதிகள் தெரிந்தெடுக்கப்பட்டார்கள். பண்டைக்காலத்தில் நமது இந்தியா தேசத்தில் அநுஷ்டிக்கப்பட்டு வந்த இதே முறையை இப்பொழுது ஜப்பானியர் தங்கள் தேசத்தில் அநுசரித்து வருகின்றனர். ஜப்பானிலும் ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒவ்வொருசபையுண்டு. கிராமசபைகளால் தெரிந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளடங்கிய தாலுகா சபைகள் ஒவ்வொரு தாலுகாவுக்கும் உண்டு. தாலுகா சபைகளினால் தெரிந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் அடங்கிய ஜில்லா சபைகளும், ஜில்லா சபைகளினால் தெரிந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் அடங்கிய பெரிய சபையும் இங்ஙனமே வரிசைக் கிரமமாகச் சபைகள் உண்டு. கிராமத்திலிருந்து ஆரம்பமான ஆட்சி முறையே சரியான சுயஆட்சிக்குக் கொண்டு வந்துவிடும் என்பது இவைகளினால் நன்கு புலனாகும். இப்பொழுது, கிராமங்கள் இருக்கின்றன; தாலுகா போர்டுகள் இருக்கின்றன; ஜில்லா போர்டுகள் இருக்கின்றன. நகரங்களைப் பொறுத்தமட்டில் முனிசிபாலிடிகள் இருக்கின்றன. இவைகளையெல்லாம் ஒன்று படுத்த வேண்டியதே உங்கள் கடமையாகும். இப்பொழுது புதிதாக நீங்கள் மூன்று ஸ்தாபனங்களை ஏற்படுத்த வேண்டும். மாகாண விஷயங்களைப்பற்றி கவனிக்க ஒரு மாகாண பார்லிமெண்ட் இருக்க வேண்டும். இதற்கடுத்தாற்போல், இந்தியாவுக்குப் பொதுவான விஷயங்களைக் கவனிக்க இந்தியா பார்லிமெண்ட் ஒன்று

இருக்க வேண்டும். பிறகு இந்த அகில இந்திய பார்லிமெண்டால் தெரிந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் (பிரிட்டிஷ்) ஏகாதிபத்தியத்திற்குப் பொதுவான விஷயங்களைத் கவனிக்கும் சபையில் அங்கத்தினர்களாய் அமரவேண்டும். இந்த வரிசைக் கிரமமாக ஆட்சிமுறை அமைக்கப்பட்டால், ஒவ்வொரு மனிதனுக்கும் ஆட்சிமுறையில் பங்கு ஏற்படும். இதன் பயனாக பண்டைக்கால கிராம ஆட்சிமுறையை நாம் புதுப்பித்தவர்களாவோம். ஜனவிருப்பத்துக்கிணங்க ஜனநாயக ஆட்சிமுறை ஏற்பட்டது போலாகும். ஒவ்வொருவனுக்கும் அவனுடைய அரசியல் அறிவுக்குத் தகுந்த வண்ணம், அதை அவன் உபயோகிக்கும் வண்ணம், ஆட்சிமுறையில் கலப்பு ஏற்படும். இதனால் திறமையானவர்கள் உயர்ந்த பதவியை படிப்படியாக அடையத் தடையொன்றும் இராது. ஒரு கிராமத்திற்பிறந்த ஒருவன், முதலில் தனது கிராம சபையில் அங்கம்பெறலாம். அங்கு அவன் நல்ல வேலைகளைச் செய்து அதன்பயனாகச் செல்வாக்கைப் பெற்று தாலுகா சபைப் பிரதிநிதியாக வரலாம். இங்ஙனமே படிப்படியாக முன்னேறிப் பெரிய பதவியை யடையலாம். இங்ஙனமே, இங்கிலாந்து அரசாங்கமொன்றில், மந்திரி பதவி வகித்த Mr. ஜோசப் சேம்பர்லேன் என்பவர், தமது கிராம சபையில் முதன் முதலாக அங்கம் பெற்று அப்படியே படிப்படியாக முன்னேறி மேற்படி பதவியை யடைந்தார். ஆதலின் தன் தேசத்திற்கு ஒருவன் பெரிய நன்மையைச் செய்யவேண்டுமானால், அவன் முதலில் கிராம நிர்வாகத்திலேயே ஈடுபட வேண்டு மென்பது இதுகாறும் கூறியவற்றால் நன்கு விளங்குகிறது.

* * * *

ஜப்பானில், ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் பிள்ளைகளுக்கு விவசாயக் கல்வி போதிக்கப்படுகிறது. பிறகு உயர்தர வகுப்புகளில் இயற்கைப் பொருட்பாடங்கள் போதிக்கப்படுகின்றன. இங்ஙனம் பல வகுப்புகளாகப் பிரிக்கப்பட்ட மாணவனுடைய பள்ளிக்கூட வாழ்வு முடிவில் அவன் விவசாயத்திலும் அது சம்பந்தமான வேறு துறைகளிலும் வல்லவனாகக் கொண்டு விடுகிறது. இதேமாதிரியான விவசாயக் கல்வியை இந்தியாவிலுள்ள ஒவ்வொரு கிராமப் பள்ளிக்கூடங்களிலும் போதிக்க வேண்டுமென்று நான் கூறி யிருக்கிறேன். இந்தப் பள்ளிக்கூடங்களுக்கு ஜமீன்தார்களின் பிள்ளைகள் கட்டாயம் சென்று கல்வி பயிலும்படி செய்யவேண்டும். பிறகு ஒவ்வொரு ஜில்லாவுக்கும் ஒரு விவசாயப்பண்ணை இருக்க வேண்டும்.

* * * *

முற்காலத்தில் ஒவ்வொரு கிராமத்திலும் கைத்தொழிலாளர் கூட்டங்கள் இருந்தன வென்பது நீங்கள் அனைவரும் அறிந்த விஷயமே. இப்பொழுதும் சில கிராமங்களில் இக்கூட்டங்கள் இருக்கின்றன. இப்பொழுது மைசூர் மகாராஜாவினால் கட்டப்பட்ட அரண்மனையைப் பாருங்கள். இந்த அரண்மனைபழைய முறைப்படி பழக்கப்பட்ட இந்தியத் தொழிலாளர்களாலேயே கட்டப்பட்டது. பண்டைக் காலத்தில் இந்தக் கைத்தொழில்களுக்கு அரசாங்கத்தார் ஆதரவு காட்டி வந்தனர். இப்பொழுது இந்தியாவில் கூட்டுறவு இயக்கம் பரவிவருகிறது. இந்த இயக்கத்தின் மூலமாகவே இந்தியாவின் கைத்தொழில்கள் பரவ வேண்டும். ஆனால் மேனாட்டில் இதுகாலை இருப்பதுபோல் முதலாளி, தொழிலாளி என்ற பிரிவினை இருக்கக் கூடாது. இந்த ஏற்பாட்டினால், உழைக்கும் வரையில் கூலி என்ற திட்டத்திற்கு வந்து விடுகிறது. இதனால் முதலாளி தொழிலாளி பிணக்குகள் அடிக்கடி நிகழ்கின்றன. சிறந்த அறிஞர்கள் இவ்விரண்டையும் ஒற்றுமைப் படுத்தப் பலவித முயற்சிகளைச்

செய்து கொண்டு வருகிறார்கள். ஐக்கிய நாணய இயக்கத்தின் மூலமாகவே இந்த அறிஞர்கள் உழைத்துக்கொண்டு வருகிறார்களென்பது குறிப்பிடத் தக்கது.

* * * *

இந்த இயக்கத்தை இந்தியாவில் எங்ஙனம் பரப்ப முடியும் என்ற கேள்வி பிறக்கும். கல்வி மூலமாகவே என்று நான் பதிற்கூறுவேன். ஜனங்களுக்குப் போதிய கல்வி கொடுத்தாலன்றி அவர்கள் இந்த இயக்கத்தினால் உண்டாகும் நன்மைகளை அறியமாட்டார்கள். இந்த ஐக்கிய சங்கங்கள் மூலமாக நமது புராதனக் கைத்தொழில்களை விருத்தி செய்யலாம். நெசவுத்தொழில் இப்பொழுது அழியுந் தருவாயிலிருக்கிறது. ஆனால் இன்னும் பூரணமாக அழிந்துவிடவில்லை. நெசவுக்காரர்களை ஒன்றாகக்கூட்டி, புதிய மாதிரியான முறைகளை அவர்களுக்குக் கற்பித்து ஒவ்வொரு கிராமத்திற்கும் அவர்களைப் பகுதி பகுதியாகப் பிரித்தனுப்பி நெசவுத் தொழிலை விருத்தி செய்யலாம். வங்காளத்திலுள்ள சிராம்பூர் என்ற இடத்தில் பதினாயிரம் பேர் நெசவுத்தொழிலைக் கற்றுக்கொள்கிறார்கள். இவர்கள் ஐக்கியப்பட்டு வேலை செய்வதன் பயனாக, முன்னர் இவர்கள் செய்த வேலையை விட நான்கு மடங்கு அதிகமான வேலையைச் செய்கிறார்கள். முதலில் நெசவுக்காரனுக்கு வேண்டியது அவன் தொழிலுக்குரிய சாமான்களேயாம். இதை அவனுக்கு ஓர் ஐக்கிய நாணயச் சங்கத்தின் மூலமாக உதவலாம். இங்ஙனமே அழிந்து போய்க்கொண்டிருக்கும் எல்லாவிதக் கைத்தொழில்களுக்கும் நாம் மீண்டும் புத்துயிர் கொடுக்கலாம்.

* * * *

இங்ஙனமே கல்வியின் மூலமாகவும் கூட்டுறவு இயக்கத்தின் மூலமாகவும் சுகாதாரம், குடும்ப வாழ்வு முதலிய அனைத்தையும் ஜனங்களுக்குச் சொல்லிக்கொடுக்கலாம். இவைகள் யாவும் கிராம வாழ்க்கைக்கு முக்கியமாக வேண்டப்படுபவைகள் என்று உங்களுக்கு அறிவுறுத்துகிறேன். (நவசக்தி)

# பெண் அரசியல்.

ஓர் சிறு நாடகம்.

(ஸ்ரீமான் ஜனரத்னம்.)

முதல் காட்சி.

(நீலகண்டன் என்ற தஞ்சை வாசி நித்திரை போயிருந்த சமயம் கனவு கண்டு விழித்துப் பார்க்கிறான். அவன் தன் தேசத்தை விட்டுப் புதியதொரு தேசத்தில் தான் வந்திருப்பதை அறிகிறான்.)

நீலகண்டன் :—ஆகா! இது என்ன ஆச்சரியம்! தஞ்சாவூரில் எனது வீட்டில் நித்திரை செய்திருந்தேன். இப்போது எங்கிருக்கிறேன்? இங்கு எப்படி வந்தேன்? இது ஏதோ சிங்காரவனம் போல இருக்கிறதே. கவர்னருக்கு விருந்து நடத்திய தோட்டம் அல்லவா இது! ஆம்! நான் யாருடன் இருந்தேன். நினைவு வருகிறது. சீர்திருத்தப் பிரசாரகர்கள் சிலர் என்னுடன் இருந்தார்கள். ஆம், அவர்களுடன் பல விஷயங்கள் பேசிக்கொண்டிருந்தேன். விவாக வயது, தேவதாசிகள், ஸ்திரீகளுக்குச் சம உரிமை முதலிய பல விஷயங்களைப்பற்றி விவாதம் செய்திருந்தோம். ஆம்! இப்போது நன்றாக நினைவு உண்டாகிறது. எனது நண்பர் என்னை ஒரு புதிய தேசத்திற்கு இட்டுச்

செல்வதாகக் கூறினர். அந்த தேசத்தில் ஸ்திரீகளே ராஜ்யம் நடத்தி வருவதாகவும், புருஷர்கள் செய்யும் பல அலுவல்களையும் பெண்களே கவனித்து வருவதாகவும் சொன்னர். அந்த ஊருக்குப் போய்ப் பார்க்க வேண்டியது அவசியம்தான் என்று எண்ணினேன். ஒரு வேளை அவரது தந்திரம் தான் இதுவோ! தூக்கத்தில் என்னைக் கொண்டு வந்து இந்த ஊரில் விட்டு விட்டாரோ! என்ன அதிசயம்! ஒன்றும் விளங்கவில்லையே!

(சிங்கார வனத்தைச் சுற்றிப் பார்க்கிருன்.)

இந்தத் தோட்டத்தை நான் இதுவரையில் பார்த்திருப்பதாக ஞாபகம் இல்லை. இதோ இந்தத் தண்ணீர் தொட்டியில் ஏதோ எழுதியிருக்கிறதே (படிக்கிருன்). "ஸ்ரீமதி பத்மாவதி அம்மாள் தர்மம்." சரி! நிச்சயம் நான் பெண்கள் ராஜ்யத்தில் வந்து சேர்ந்தேன். இதோ இந்தக் கல்லாசனத்தில் உட்காருவோம்.

(இரண்டு ஸ்திரீ போலீஸ்காரர்கள் வருகிருர்கள்)

1—ம் போலீஸ்—இவன்யாரோ தேசாந்திரி போலிருக்கிறதே.

2—ம் போலீஸ்—அல்ல! உடுத்திருக்கும் மாதிரியைப் பார். சீமாட்டி வீட்டில் இருப்பவன் போல் தோன்றுகிறது. எதற்கும் விசாரிப்போம். (அவனிடம் நெருங்கிச் செல்கிருர்கள்.)

2—ம் போலீஸ்:—நீ யார்? எந்த ஊர்? இங்கு எப்படி வந்தாய்? இந்த இரவில் என்ன செய்கிருய்?

நீலகண்டன்:—(மெதுவாக) சபாஷ்! உண்மையாகவே ஸ்திரீ போலீஸ் வீரர்கள். என்ன தைரியமாக ஒரு அன்னிய புருஷனுடன் பேசுகிருர்கள்! சரிதான்! இந்த விநோத தேசத்தில் இன்னும் பல விநோதங்கள் பார்க்கலாம்.

1—ம் போலீஸ்:—என்ன ஐயா! சும்மா, முண, முண என்று பேசிக் கொண்டிருக்கிருய்? நீ என்ன பைத்தியமா?

நீலகண்டன்:—இது என்ன ஸ்திரீகள்! இவ்விதம் விரட்டுகிருர்கள்!

(அப்படியே ஆச்சரியத்துடன் திகைத்து நிற்கிருன்.)

2—ம்:—இவன் நம்மை ஏளனம் செய்கிருன். சும்மாவிடக்கூடாது, இரண்டு பூசை கொடுத்தால்தான் வழிக்கு வருவான். (இடுப்புக் கச்சையிலிருந்து சிறிய தடியை எடுக்கிருள்.)

1—ம்:—அவசரப்படாதே. இன்னும் விசாரிப்போம், நாம் பேசுவது அவனுக்கு விளங்குகிறது அல்லவா?

2—ம்:—நமது பாஷையில்தானே முண முண என்று பேசுகிருன்.

1—ம்:—டேய்! ஒழுங்காக நடந்துகொள். திருப்தியான ஜவாப் சொல்லாவிடில் உன்னை தண்டனை செய்வேன்.

2—ம்:—இன்னமும் பைத்தியக்காரனைப் போல் இருக்கிருன்.

1—ம்:—கச்சேரியில் கொண்டுபோய் விடுவோம்.

நீலகண்டன்:—பெண்களே! என்னை ஏன் கச்சேரிக்குக் கூப்பிட்டுப் போகவேண்டும்? அங்கு யாரிடம் ஒப்புவிப்பீர்கள்?

1—ம்:—போலீஸ் அதிகாரி நீலவேணி அம்மாளிடம் உன் கதையைச் சொல்லிக் கொள்ளலாம்.

நீலகண்டன்:—நல்ல விந்தை! போலீஸ் அதிகாரியா, அவர் மனைவியா?

2—ம்:—சீ! என்ன அவமரியாதையாகப் பேசுகிருய்?

நீலகண்டன் :—நீ போய் உங்கள் அதிகாரியை அழைத்துவா. புருஷர்களை இட்டுவா. நீங்கள் போங்கள்.

2—ம் :—ஏ முட்டாள்! புருஷர்கள் வரமாட்டார்கள். உன்னைப் போல ஊர் சுத்தும் புருஷர்கள் இவ்வூரில் இல்லை.

1—ம் :—போலீஸ் கச்சேரியில் உன்னைப் பரீட்சை செய்ய இரண்டு புருஷர்கள் உண்டு. அவர்களை உன்னோடு இருக்கும்படி சொல்கிறேன்.

2—ம் :—இன்றிரவு கச்சேரியிலிருக்கட்டும். நாளைக் காலை அதிகாரிகள் உத்தரவுப்படி செய்யலாம். (இரண்டு பேரும் நீலகண்டனைத் தள்ளிக் கொண்டு செல்கின்றனர்.)

இரண்டாம் காட்சி.

(பெஞ்சு மாஜிஸ்ட்ரேட் கச்சேரி கலைந்து எல்லாரும் போகிறார்கள்)

முத்தாம்பாள் :—ரஞ்சினி அம்மாள்! இந்த அந்நியனை நீங்கள் காப்பாற்றுவதாக ஒப்புக்கொண்டீர்களே, ஏன்?

ரஞ்சினி அம்மாள் :—அவனைப் பார்த்தால் சாது என நிச்சயமாகச் சொல்வேன். மேலும் அவன் அந்நிய நாட்டான். நமது ஊருக்கு எவ்வாறோ தப்பி வந்தான் எனத் தோன்றுகிறது. நம்முடைய சட்டத்தின்படி ஒவ்வொரு புருஷனும் ஒரு ஸ்திரீயின் பாதுகாப்பில் இருக்கவேண்டும் என்றபடி நான் பாதுகாப்பதாகச் சொன்னேன்.

காதம்பரி அம்மாள் :—இன்னொருவர் இவ்விதம் ஒப்புக்கொண்டு அவனைத் தன் வீட்டுக்கு இட்டுச் சென்றால் வம்புப் பேச்சு ஏற்படும். உமது விஷயத்தில் அவ்விதம் சொல்வதற்கில்லை.

ஹைமவதி :—சட்! வாயை அலம்பு! ஜில்லா போர்டு பிரசிடண்டும் சட்டசபை உப அக்கிராசனபதியுமான ரஞ்சினி அம்மாளின் தூய்மையைப் பற்றிக் கனவிலும் சந்தேகிக்கலாமா? அவர் நமது இதிஹாசங்களில் சொல்லப்பட்ட ரஞ்சினி தேவியே என வேண்டும்.

காதம்பரி :—நான் தப்பிதமாகச் சொல்லவில்லையே. அவரிடம் இந்த அந்நியன் இருப்பதால் நல்லது என்றுதானே சொல்கிறேன். அவனைப் பார்த்தால் ஏதோ காட்டு தேசத்திலிருந்து வந்தவன் போலிருக்கிறது. நம்மை எல்லாம் வெறித்து நோக்குகிறான். கொஞ்சமும் நாணம் அடக்கம் இல்லாமல் எதிர் நின்று பேசுகிறான். நமது நாட்டுப் புருஷர்கள் இவ்விதம் எதிர் நின்று பேசத் தொடங்கினால் அப்புறம் ராஜ்யம் கெட்டுப்போம். சமூக வாழ்வு நசித்துப்போகும்.

முத்தாம்மாள் :—நமது நாட்டிலும் சில புருஷர்கள் இவ்விதம் தைரியமாகப் பேசுவார்கள்; எனினும் இவன் மிகவும் அநாகரிகமானவன்தான். சில நாட்கள் ரஞ்சினி அம்மாளிடம் நமது நாட்டு நாகரிகத்தில் பழக்கம் பெற வேண்டும்.

காதம்பரி :—ஆனால், ரஞ்சினி அம்மாள் பழய காலத்திய மூடவழக்கங்களை விலக்கவேண்டும் என்ற சீர்திருத்த சபைத் தலைவர் அல்லவா?

ரஞ்சினி அம்மாள் :—நண்பர்களே! இந்த அந்நியனது நன்னடக்கை ஜாமீன் ஆக நான் ஏற்றுக்கொண்டது வாஸ்தவம். சில நாட்கள் என் வீட்டில் வசிக்கட்டும். பிறகு இந்த விஷயத்தைப் பற்றி ஆலோசிப்போம்.

(எல்லோரும் போகிறார்கள்)

மூன்றும் காட்சி.

(ரஞ்சினி அம்மாள் பங்களாவில் முன் கூடம்)

ரஞ்சினி அம்மாள் :—நீலகண்டா! நீ எங்கள் வீட்டில் ஒரு வாரமாக இருக்கிறாய். உனக்கு அசௌகரியமாயிருந்தால் தெரிவித்

துக் கொள். திவான் கமலாதேவிக்கு மனு எழுதிக் கொள்ளலாம்.

நீலகண்டன் :—தாயே! எங்கள் ஊரில் நான் உயர்ந்த உத்தியோகத்தில் இருந்தவன். இந்த ஊரின் ஆசார முறைகளும் வழக்கங்களும் புதிதாக இருப்பதால் எனக்கு பிரமிப்பாக இருக்கிறது.

ரஞ்சினி :—அப்படி உனக்கு பிரமிப்பு உண்டாகும்படி என்ன புதிய ஆசாரங்கள் காண்கிறாய் ?

நீலகண்டன் :—எல்லாம் ஆச்சரியம்தான். இந்த ஊரில் புருஷர்கள் எவ்விதம் இருக்கிறார்களோ அவ்விதம் எங்கள் ஊரில் ஸ்திரீகள் இருப்பார்கள்.

ரஞ்சினி :—ஆனல் ஸ்திரீகள் உத்தியோகம் செய்வதில்லையா ? என்ன விநோதம் ?

நீலகண்டன் :—அம்மணீ! நீங்கள் ஒரு முறை எங்கள் ஊருக்கு வந்தால் உங்களுக்கு ஆச்சரியமாயிருக்கும்.

ரஞ்சினி :—நன்றாகச் சொன்னாய்! இதோ என் மக்களைக் கூப்பிடுகிறேன். ஜெகதாம்பா? (ஒரு மணி அடிக்கிறாள். ஒரு பணிப் பெண் வருகிறாள்.) லட்சுமி, பார்வதி இருவரையும் வரச்சொல் (பணிப் பெண் செல்கிறாள்) இதோ என் புத்திரி கலாசாலையிற் பயின்று பி.ஏ. பட்டம் பெற்று, திவான் கச்சேரியில் உத்தியோகத்திலமர்ந்திருக்கிறாள். பார்வதி கலாசாலையிலிருந்து விடுமுறை நாட்களுக்கு வந்திருக்கிறாள். லட்சுமிக்கு விவாகமாகி எட்டு வருஷங்களாகின்றன. பார்வதிக்கு இவ்வருஷம் செய்ய உத்தேசம். (பார்வதியும் லட்சுமியின் புருஷன் ஒரு பெண் குழந்தையை நடத்திக் கொண்டு நாணிக் கொண்டும் வருகிறார்கள்) ஏ! நாராயணா! குழந்தையை இப்படிக் கொடுத்துவிட்டுக் காப்பி எடுத்து வா! (நாராயணன் செல்கிறான்)

பார்வதி! உனக்குக் கலியாணம் செய்ய வேண்டும். திவான் கமலாதேவியின் மகன் உனக்குப் பிடித்திருக்கிறதா ?

பார்வதி!—அம்மா! இப்போது என்ன அவசரம்! நான் ஜர்மனிக்குப் போய் இரண்டு வருஷம் ரசாயன சாஸ்திரம் பயின்று வர வேண்டும்.

ரஞ்சினி :—கமலாதேவியின் மகனுக்கு வயது 13 ஆகிவிட்டது. நமது தேச வழக்கப்படி பத்து வயதிற்குள் ஆண்பிள்ளைகளுக்கு விவாகம் செய்யவேண்டும்.

பார்வதி :—அதெல்லாம் மூட வழக்கம். உங்களுக்குத் தெரியாதா? பெண்கள் உத்தியோகம் செய்ய ஆரம்பித்துத் தானே சம்பாதிக்கிறபோதுதான் விவாகம் செய்யவேண்டும் என்று நீங்களே பல முறை பிரசங்கம் செய்திருக்கிறீர்களே.

லட்சுமி :—தங்காய்! அதெல்லாம் மேடைப் பிரசங்கம். வீட்டு வழக்கத்தை மாற்றலாமா?

(நாராயணன் காப்பி எடுத்துக் கொண்டு வருகிறான்)

பார்வதி :—ஏண்டா! நாராயணா! நீ அக்காவைக் கலியாணம் செய்து கொள்ளும் போது உனக்கு என்ன வயது ?

(நாராயணன் காப்பியை எடுத்து லோட்டாவில் விட்டுக் கொண்டு லஜ்ஜையுடன் மௌனமாக யிருக்கிறான். நீலகண்டன் ஒரு புறம் நகைப்பை அடக்கிக்கொண்டு ஆச்சரியமாக நிற்கிறான்)

ரஞ்சினி :—ஏண்டா! நாராயணா! இவ்வளவு நாள் நமது வீட்டில் பழகியும் நாட்டுப்புறத்துப் புருஷர்கள் போல் இருக்கிறாய்! என்ன நீலகண்டா! புன்சிரிப்புக் காட்டுகிறாய் ?

பார்வதி :—நீங்களே நாட்டுப்புறத்து வழக்கப்படி விவாகம் செய்ய ஏற்பாடு செய்திருக்கிறீர்களே! (மோட்டார் சப்தம் கேட்கிறது)

திவான் வந்துவிட்டார். அக்கா! நீ போய் அழைத்துவா!

ரஞ்சினி :—ஏன்! உன் மாமியாராகப் போகிறவரை நீயே இட்டு வரலாகாதா? (திவான் கமலா தேவி வருகிறாள். கூட ஒரு சரிகை பில்லை அணிந்த சேவகி ஒருவளும் வருகிறாள்)

ரஞ்சினி :—(எழுந்து) வாருங்கள். இப்படி அமருங்கள்.

(எல்லோரும் உட்காருகிறார்கள். நாராயணன் உள்ளே சென்று ஒரு தட்டில் பலகாரங்கள் எடுத்து வந்து மேஜையின்மீது வைக்கிறான். லட்சுமி திவானுக்கு உபசாரம் செய்கிறாள்)

கமலாதேவி :—இதோ நிற்பவன்தானா அயல் நாட்டு மனிதன்? இவன் எப்படி நடந்து கொள்கிறான்?

ரஞ்சினி :—மிகவும் மரியாதையாகவே இருக்கிறான். அவன் நாட்டு நாகரிகமே வேறு. நம்முடைய வழக்கங்கள் அவனுக்கு ஆச்சரியமாகவே இருக்கின்றன.

கமலாதேவி :—உங்களுடன் எப்போதும் வசித்திருப்பதாகப் பத்திரம் எழுதிக் கொடுத்தானா?

ரஞ்சினி :—நான் ஒன்றும் அவனை விசாரிக்கவில்லை. நீங்களே கேளுங்கள்.

நீலகண்டன் :—திவான் தேவியே! நான் ரஞ்சினி அம்மாள் பாதுகாப்பில் இருப்பதாக எழுதிக் கொடுக்கிறேன்.

கமலாதேவி :—சரி! அப்படி உட்கார்ந்திரு. இவள் யார்? லட்சுமி குழந்தையா?

ரஞ்சினி :—ஆம்!

கமலாதேவி :—நீர் அதிர்ஷ்டசாலிதான். எல்லாம் ஸ்திரீ ரத்தினங்களாகவே பெற்றிருக்கிறீர்கள். எனக்கு எட்டுப் பிள்ளைகள் இருக்கிறார்களே. மூன்று பிள்ளைகளுக்கு விவாகம் ஆயிற்று. இன்னும் ஐவர் உளர்.

ரஞ்சினி :—என்ன நீங்களும் இவ்விதம் பேசுகிறீர்கள்! தற்காலச் சீர்திருத்தம் வேண்டுமென்று பிரசங்கம் செய்கிறீர்களே! பிள்ளை பிறந்தால் துர்பாக்கியம் என நினைப்பது நமது சமூகத்திலுள்ள மூடவழக்கமல்லவா? பெண்ணும் சரி, பிள்ளையும் சரி என்று பாவிக்கவேண்டும் அல்லவா?

கமலாதேவி :—அது எல்லாம் பிரசங்கம் செய்வது எளிது. நீலகண்டா! உங்கள் ஊரில் எவ்விதம் வழக்கம்?

நீலகண்டன் :—எங்கள் தேசத்தில் பிள்ளை பிறந்தால் பெரும் பாக்கியம் எனக் கருதுவார்கள். ஒரு குடும்பத்தில் பெண்கள் பிறந்தால் பெரும் நாசம் என வருந்துவார்கள்.

ரஞ்சினி :—பார்த்தீர்களா! என்ன! பெண் குடும்பநாசமாம்?

நீலகண்டன் :—ஒரு பெண்ணைப் பெற்றவன் தகுந்த வரன் தேடி விவாகம் செய்வித்துப் பெண்ணைப் புருஷனுடன் சேர்த்துவைக்க ஆயிரக்கணக்காகச் செலவு செய்ய வேண்டும்.

கமலாதேவி :—இது என்ன தலை கீழ்ப்பாடமாக இருக்கிறது!

நீலகண்டன் :—நீங்கள் அப்படிச் சொல்கிறீர்கள். உங்கள் வழக்கம் தலை கீழ்ப்பாடம் என நான் நினைக்கிறேன்.

கமலாதேவி:—அப்படியிருந்தால் எனக்கு மிகவும் நல்லதாயிற்றே. என் மூன்று பிள்ளைகளுக்கும் முப்பதினாயிரம் ரூபாய் செலவழித்தேன். என்ன ரஞ்சினி அம்மாள்! நீர்தான் சீர்திருத்தத்தில் சேர்ந்தவராயிற்றே. உமது பெண் பார்வதிக்கு என் மகனை விவாகம் செய்து கொள்ளலாம். ஒன்றும் பணம் கேட்காதீர்.

ரஞ்சினி :—எனக்கு ஒருவித ஆட்சேபனையுமில்லை; ஆனால்—

கமலாதேவி :—சரிதான். 'ஆனல்' போட்டு விட்டீர்களே.

ரஞ்சினி :—பார்வதி ஜெர்மனிக்குப் போக வேண்டுமென்று துடியாக இருக்கிருள்.

கமலாதேவி :—பேஷ்! ஒரு மகன் நிமித்தம் அவன் மனைவி இங்கிலாந்து சென்று I.C.S. பரீட்சை படிக்கப் பதினயிரம் கொடுத்தேன். அது மாதிரியே பார்வதிக்கும் கொடுக்க வேண்டுமென்று கேட்கிறீரா?

ரஞ்சினி :—எனக்கென்ன! உமது மகனச்சு! உமது மருமகளாயிற்று!

கமலாதேவி: —சரி, நான் கொடுக்கிறேன். இந்த மாதக் கடைசியில் முகூர்த்தம் வைக்கலாம் அல்லவா?

பார்வதி :—நமக்குள் நிச்சயம் செய்துகொண்டால் போதுமே. விவாகம் நான் திரும்பி வந்த பிறகு நடக்கலாம்.

ரஞ்சினி :—அதுவும் நல்ல யோசனைதான்.

கமலாதேவி :—அது முடியாது. என் மகனுக்கு இந்த வருஷமே வயது 13 ஆயிற்று. இன்னும் மூன்று வருஷம் விவாகம் இல்லாமல் இருப்பதென்ருல் உலக அபவாதமாகும். மேலும் என் வயோதிகரான தாயார் ஒப்புக்கொள்ளமாட்டார்.

ரஞ்சினி :—என் பந்துக்களைக் கலந்து இன்னும் இரண்டு நாளில் நிச்சயமாகச் சொல்கிறேன்.

கமலாதேவி:—அப்படியே செய்யுங்கள். இன்று ஆண் கல்வி விஷயமாக ஒரு உபன்னியாசம் டவுன் ஹாலில் இரவு எட்டு மணிக்கு நடைபெறும். அதற்குமுன் சீர்திருத்தச் சங்கத்தின் கமிட்டி மீட்டிங்கு நடக்கவேண்டும்.

ரஞ்சினி :—நான் 7 மணிக்கு வருகிறேன்.

கமலாதேவி :—நீலகண்டனையும் அழைத்து வாருங்கள்.

(கமலாதேவி புறப்பட்டுச் செல்கிருள். நீலகண்டனும் பார்வதியும் இருக்கிருர்கள். மற்றவர்கள் போகிருர்கள்)

பார்வதி :—நீலகண்டா! உன்னுடன் சாவகாசமாகப் பேசவேண்டும். உன் ஊர் முதலிய விஷயங்களைச் சொல்.

நீலகண்டன் :—என் ஊர் தஞ்சாவூர். நான் பி.ஏ., பி.எல். பாஸ் செய்து வக்கீலாக இருந்தேன். எங்கள் ஊரில் புருஷர்கள்தாம் உத்யோகம் செய்பவர்கள். ஸ்திரீகள் வீட்டு வேலை செய்வார்கள்.

பார்வதி :—யார் ஸ்திரீகளா? பேஷ்! எங்கள் ஊரில் பார்த்தனையா? வீட்டில் சமையல் செய்வதும் மற்ற வேலைகள் செய்வதும் புருஷர்கள் தான். புருஷனுக்கு சுயேச்சை கிடையாது. சிறுவனயிருக்கும்பொழுது தாயார் சம்ரட்சணையிலும் விவாகமானபிறகு பத்தினி பாதுகாப்பிலும் பிறகு புத்திரி போஷணையிலும் இருக்கவேண்டும். அது இருக்கட்டும். உனக்கு மனைவி இருக்கிருள் என்று ஊகிக்கிறேன்.

நீலகண்டன் :—இருக்கிருள். எனக்கு இரண்டு குழந்தைகள் உண்டு.

பார்வதி :—எங்கள் ஊரில் தாரம் இழந்தவனுடைய மூக்கு நுனியை வெட்டி விடுவது வழக்கம். சில உத்தம புருஷர்கள் தங்கள் மனைவிகள் இறந்தவுடன் அவர்களுடன் உடன்கட்டை ஏறி விடுவது வழக்கம். ஆனல் இப்போது—

நீலகண்டன் :—புருஷர்களா உடன்கட்டை ஏறுவது?

பார்வதி :—இதிலென்ன ஆச்சரியம்? பத்தினி விரதர்கள் மகாசிரேஷ்டர்கள் அல்லவா? எங்கள் மதத்தில் புருஷர்களுக்கு இயற்கையான மேன்மைக்குணம் பத்தினி பக்திதான். மகா உத்தமனுகிய ராமசரித்திரம் நீ கேட்டிருக்கிருயா?

நீலகண்டன்:—வால்மீகி ராமாயணம் நன்ருய்ப் படித்திருக்கிறேன். கற்பிற்கரசியான மகா பதிவிருதை அல்லவா சீதா தேவி!

பார்வதி :—அந்த ராமன் மகா பத்தினி விரதன். சூர்ப்பனகை என்ற கொடிய அரக்கி ராமனை சிறைப்படுத்திவைத்து அவனை விவாகம் செய்துகொள்ள வெகுபாடுபட்டாள். ஆனல் சீதாதேவி கொடிய யுத்தம் செய்து சூர்ப் பனகையையும் அவள் சேனைகளையும் நாசமாக்கி ராமனைச் சிறைமீட்டிக்கொண்டு வந்தாள். பத்தினி பக்தனுகிய அந்த ராமன் தன் பக்தியை மெய்ப்பிக்க அக்கினியில் குளித்தான். அவன் பத்தினி பக்தி மிகுந்தவனுதலின் ஒரு வித அபாயமுமின்றி உத்தமனுக வெளி வந்தான். பிறகு சீதை ராமனைக் கூட்டிக் கொண்டு பட்டாபிஷேகம் செய்துகொண்டு ராஜ்யம் நடத்தினுள். சீதா ராஜ்யத்தின் மகிமையே மகிமை !

நீலகண்டன் :—இது புதிய ராமாயணமாக இருக்கிறதே!

பார்வதி :—உனக்கு ஒன்றும் தெரியவில்லையே. எங்கள் உபாத்தினி அம்மாளிடம் நீ ஒரு மாதம் பாடம் படிக்கவேண்டும். சரி ! நாம் சற்று வெளியே உலாவி வருவோம்.

(போகிருர்கள்.)

நான்காவது காட்சி.

(டவுன்ஹாலில் பலஸ்திரீகள் கூட்டமாக வீற்றிருக்கின்றனர். ஏழெட்டு புருஷர்கள் தனியாக முன்வரிசையில் வீற்றிருக்கின்றனர்)

ஒரு ஸ்திரீ :—திவான் கமலா தேவி அக்கிராசனம் வகிப்பதாகச் சொன்னுர்களே! ஏனம்மா பங்கஜம்! சமூக வழக்கங்களையும் கட்டுப்பாடுகளையும் மாற்றுவதற்கு ராஜாங்கத்தார் தலையிடுவது நியாயமா ?

பங்கஜம் :—என் கூடாது? மூடவழக்கங்களால் ஜனங்களின் ஆயுசும், திட சரீரமும் க்ஷீணமடைந்து போகின்றன.

பத்மாவதி :—இதெல்லாம் விதண்டாவாதம். எங்கள் குடும்பத்தில் பல தலைமுறைகளாகப் புருஷர்களுக்குப் பத்து வயதில் விவாகம் செய்வது வழக்கம். என்ன குறை ஏற்பட்டது?

(திவான் வருகிருர். கூட சில ஸ்திரீகளும் வருகிருர்கள். ரஞ்சினி, பார்வதி, நீலகண்டன், லட்சுமி, நாராயணன் முதலியவர்களும் வருகிருர்கள். எல்லோரும் மேடையில் அமருகிருர்கள்.)

திவான் :—சபையோர்களே ! இன்று என்னை பிரசிடெண்டாக இருக்கும்படி கேட்டுக் கொண்டதற்கு வந்தனம். இன்று பிரசங்கம் செய்பவரைப் பற்றி உங்களுக்கு அறிமுகம் செய்விக்கவேண்டியதில்லை. மகாமகோபாத்யாய ஸ்ரீமதி அனசூயா தேவி பல தேசங்களில் பிரயாணம் செய்தவர். ஜனங்களது க்ஷேமத்திற்காக எப்போதும் உழைப்பவர். அவர் பிரசங்கத்தைக் கேட்கும் பாக்கியம் நமக்குக் கிடைத்ததுபற்றி நாம் மிகவும் சந்தோஷப்படுகிறோம். அவரைப் பேசுமாறு வேண்டிக் கொள்ளுகிறேன்.

அனசூயாதேவி :—(கரகோஷத்தினடையே எழுந்து) சபையோர்களே ! முதலில் என்னை இந்த சபையில் பிரசங்கம் செய்யச் சொல்லித் தாமே அக்கிராசனம் வகிக்கும் திவான் தேவிக்கு எனது வந்தனம் செலுத்தவேண்டியது கடமை. நான் இவ்வூரிலேயே பிறந்து வளர்ந்தவள். ஆயினும், பல தேசங்களைச் சுற்றிப் பார்க்கச் சென்று சுமார் எட்டு வருஷகாலமாயிற்று. நமது ஜன சமூகம் முன் எந்த நிலைமையிலிருந்ததோ அவ்வாறே இப்போதும் இருக்கிறதாக எனக்குத் தோன்றுகிறது. கல்வியிலும் தற்கால நாகரிகத்திலும் மற்ற ஜனங்கள் மேனேக்கிச் செல்வதைப் பார்த்த நான் நமது ஜனங்

கள் இவ்வாறு என் முன் வரக்கூடாது எனப் பன்முறையும் சிந்தித்தேன். ஜனங்களின் க்ஷேமமும், ஆரோக்கியமும் குறைந்து போவதற்கு முக்கிய காரணம் நமது சமூகத்தில் உள்ள பல அசங்கிய வழக்கங்களும் அநாகரிக சம்பிரதாயங்களும் தான். (சிலர் ஷேம் (Shame) எனக் கூச்சல்)

நம்முடைய தேசத்தில் ஆண்பிள்ளைகளை மிகவும் கேவலமாக நடத்துகிறோம். பெண், ஆண் இருவரும் சம உரிமை உடையவர்கள். ஆண் பிள்ளைகளுக்குக் கல்வி கற்பிக்கக்கூடாது என்று தர்க்கம் செய்பவர்கள் தொகை இப்போது குறைந்திருக்கும் (கூச்சல்—நிச்சயமில்லை.)

ஆண் பிள்ளைகளுக்கான பிரத்தியேகப் பள்ளிக்கூடங்களை ராஜாங்கத்தார் நாளடைவில் அதிகப்படுத்தி வருகிறார்கள். சில பட்டணங்களில் பெண் பிள்ளைகளுக்குக் கட்டாயப் படிப்பு ஏற்பட்டிருக்கிறது. தேசம் முழுதும் ஆண் பிள்ளைகளுக்குக் கட்டாயப் படிப்பு செய்யவேண்டும். (கூச்சல்—இந்த யுகத்தில் இல்லை). படிப்பு மாத்திரம் விருத்தியாவது போதாது. என்ன தான் ஆண் பிள்ளைகள் மாத்திரம் படித்தாலும் பொது ஜனங்களுக்கே ஒரு சீர்திருத்தம் உண்டாகவேண்டும். முக்கியமாக ஸ்திரீகளாகிய நாம் எல்லோரும் அவர்களிடம் பச்சாத்தாபம் கொண்டு அவர்களைக் கேவலமாக நடத்தாமல் நாகரிகப்படுத்தவேண்டும்.

பால்ய விவாகம் கூடாது என்று சட்டம் ஏற்படுத்தினால் ஒழிய சீர்திருத்தம் ஏற்படாது. மனிதக் கட்டும், பலமும் ஏற்படுமுன் பத்து வயதிலும் பன்னிரெண்டு வயதிலும் விவாகம் செய்வதால் அவர்களிடம் உண்டாகும் மக்கள் சோனிகளாக இருக்கிறார்கள். ஜனங்களது வீர்யம் குன்றிப்போகிறது. மேலும் இவர்களது பத்தினிகள் இளவயதிலேயே பிரசவிக்க வேண்டியிருப்பதால் அகால மரணம் ஏற்படுவது சகஜம். இவ்விதம் தாரமிழந்த புருஷர்கள் நமது நாட்டில் பலர் இருக்கிறார்கள். ஜன சங்கியையில் புருஷ விதவர்கள் கணக்கு கோரமாக இருக்கிறது. ஐயோ பாபம்! இவ்விதவர்களின் நிலைமை பரிதாபமானது. ஒரு ஸ்திரீ மாத்திரம் புருஷன் இறந்த பிறகு மறு விவாகம் செய்து கொள்ளலாம். ஆனால் தாரம் இழந்த புருஷன் எவ்வளவு பால்யமாயிருந்தபோதிலும் அவனுடைய மூக்கை அறுத்து அவனை வெளி வர வொட்டாமற் செய்து, அவனைப் பார்ப்பதே அபசகுனம் என்பதும் அவனை வீட்டிற்குள் அடிமையாக நடத்திவருவதும் நாம் எல்லோரும் அறிந்த விஷயம். (கூச்சல்—பெரும்புளுகு) உண்மையைச் சொன்னால் உங்களுக்குக் கோபம் உண்டாகிறது. புண்ணிய வசமாக ராஜாங்கத்தில் சட்டம் செய்துவிட்டபடியால் தாரமிழந்த புருஷர்கள் தம் பத்தினிகளுடன் உடன்கட்டை ஏறும் வழக்கம் இப்போது இல்லை. தாரமிழந்த விதவர்கள் மறு விவாகம் செய்துகொள்ளலாம் என ஒரு பாடாக நாம் எல்லாரும் விதி ஏற்படுத்திக்கொள்வது நாகரிகமாகும். இப்படிச் செய்வதால் நாம் சில தீமைகளையும் விலக்கிக் கொள்ளலாம் (சிலர்—என்னடியம்மா, தீமைகள்?) மேலும் புருஷப் பிள்ளைகளுக்கு மனைவிகள் தேட நமது ஜனங்கள் என்ன பாடுபடுகிறார்கள்! ஒரு புருஷப் பிள்ளை பிறந்து விட்டால் அக்குடும்பத்திற்கு ஆபத்து வந்தது என வேண்டும். மூவாயிரம் நாலாயிரம் எனப் பணம் கொடுத்தாலன்றி ஆண் பிள்ளைக்கு விவாகம் செய்வது வெகுகஷ்டம். கலாசாலைப் படிப்பு விருத்தியாகி நமது பெண்கள். பி.ஏ. எம்.ஏ., பட்டம் பெற்று வருவதின் பயனாக புருஷப் பிள்ளைகள் விவாகச் சந்தையிலிருந்து சுலபமாக வெளி வருவது சிரமமாயிற்று. சில வருஷங்களாக இந்த நகரத்தில் சீர்திருத்தச் சங்கம் ஏற்படுத்தி இருப்பதாக

அறிந்து சந்தோஷப்படுகிறேன். புருஷப் பிள்ளைகளைப் பெற்ற ஸ்திரீகள் எல்லாரும் பணம் கொடுத்து தத்தம் பிள்ளைகளுக்கு விவாகம் செய்வதில்லை எனப் பிரமாணிக்கம் செய்திருக்கிறார்கள். ஆனால் பெண்களைப் பெற்றவர்களோ அவ்விதம் வாக்குத்தத்தம் செய்யவில்லை. (கூச்சல்—யார் அவர்கள்?) பேர் சொல்லக்கூடாது. இன்னொரு விஷயத்திலும் நாம் சீர்திருத்தம் செய்யவேண்டும். நமது சமூகத்தில் தேவடியான்கள் என்று சில புருஷர்களைத் தனிப்பட ஒரு ஜாதியாக வைத்திருப்பது மகா கேவலம். ஆனால் இவ்வித சீர்திருத்தங்கள் செய்வதற்குச் சட்ட சபையில் விதிகள் ஏற்படுத்தினால் மாத்திரம் போதாது. ஸ்திரீகளாகிய நாம் எல்லோரும் ஒருமித்து நமது மனோபாவத்தைத் திருத்தி பரிசுத்தமாக்கிக் கொள்ள வேண்டும். (ஒரு சப்தம்—நீ மகா பரிசுத்தமானவள்.)

(சபையில் குழப்பமுண்டாகிறது). (திடீரென்று நீலகண்டன் மேடையின்மீது ஏறுகிறான்)

நீலகண்டன் :—சபையோர்களே! அயல் நாட்டானாகிய நான் சொல்லும் சில வார்த்தைகளைக் கேட்குமாறு நான் பிரார்த்தித்துக் கொள்ளுகிறேன்.

(கூச்சல்—இவன் யார்?—உட்கார்—ஏ புருஷ மிருகமே! வாயை மூடு.) எங்கள் ஊரிலும் இதேமாதிரி சீர்திருத்தச் சங்கம் ஒன்று உண்டு. ஆனால் எங்களூரில் ஸ்திரீகள் முன்னேற்றத்திற்காக நாங்கள் பாடுபடுகிறோம். பால்ய விவாகம் குறையவேண்டுமென்றும் விதவா விவாகம் செய்யலாம் என்றும் தேவதாசிகள் ஜாதியை ஒழித்துவிடவேண்டு மென்றும் நாங்களும் தீர்மானம் செய்து வருகிறோம். (இவன் யார் மூடன்—பைத்தியக்காரன்—வெளியே தள்ளு—ஸ்திரீகள் முன்னேற்றமா! சீ, போ!)

திவான் :—(எழுந்து நீலகண்டனை இருக்கச் செய்து) சபையோர்களே! இந்த மனிதன் அயல் நாட்டான். அவன் நமது ரஞ்சினி தேவியால் பாதுகாக்கப்பட்டு வருகிறான். அவன் ஊரில் உள்ளதைச் சொல்வதால் உங்களுக்கு ஏன் கோபம் வருகிறது?

(சபையில் ஆரவாரம் உண்டாகிறது. "யார் ரஞ்சினியின் ஆளா?" 'அவன் அராஜியக்காரன். அவனை அடித்துத் தள்ளு. திவானும் மற்றவர்களும் நழுவி விடுகிறார்கள். பார்வதி நீலகண்டனைப் பக்கத்து வாசல் வழியாக வெளியே கொண்டு போகிறாள்.)

## ஐந்தாம் காட்சி.

நீலகண்டன் :—என்ன ஆச்சரியமான உலகம்! நமது ஊரில் ஸ்திரீகள் நிலைமை என்ன! இவ்வூரில் புருஷர்கள் நிலைமை என்ன! ஏதேனும் சீர்திருத்தம் என்றால் இவ்விதம் சச்சரவுகள் ஏற்படுவது சகஜம் தான்.

(பார்வதியும் உபாத்தியாயினியம்மாளும் வருகிறார்கள்.)

உபாத்தியாயினி :—நீலகண்டா! அந்தச் செய்யுள்கள் பாடம் செய்தாயிற்றா? சொல் பார்ப்போம்.

நீலகண்டன் :—

(1) "தெய்வம் தொழான் தன் தாரமே தொழுவான்
பெய்யெனப் பெய்யுமழை"

(2) "தவமது செய்தே பெற்றெடுத்த காரிகையை
நலமது கருதி மனமுவந்து மதனுக்கு மணமுடிக்க
—அவனும்
ஜலமது கொண்டு தினமும் சதியின் பாதபூஜை
செய்து பெறும்
பலமது கொண்டு பூதலத்தை வெல்லுவானம்மா"

(3) "ஆர் கலியுகத்து ஆடவர்காள் கேளீர்!
பின் தூங்கி முன் எழுந்து பணிவுடன்
பன்முறை பத்தினியை வணங்கி பக்தியுடன்
தன் தாரமே கதியெனக் கருதுவான்
பத்னிவ்ரதன்"

(4) "படிதாண்டா புருஷனொருவன் பெறற்கரிய பேரின்பம்
நாடி ஆண்டொரு முறை பத்னியின் தாமரை மலர்
அடிதீண்டி ஆசிகூறி அன்புடன் அவளது பாதமலர்
முடிசூட்டிப் பல்லாண்டு வாழ்வான் பத்னிவ்ரதன்"

பார்வதி :—பேஷ்! முதலில் இந்த மூடபக்தி புகட்டினாக்கும்! என்ன நீலகண்டா! பதிவிரதை பாட்டுப் போய் பத்தினிவிரதப் பதம் கற்றுக்கொண்டாயா?

உபாத்தியாயினி :—பார்வதி! நமது ஜனங்களுக்குள் பத்தினிவிரதம் மகா உத்க்ருஷ்டமானது. புருஷர்களது ரத்தத்திலேயே ஊறி வருவது. நீங்கள் சீர்திருத்தக்காரர்கள் என்ன செய்தபோதிலும் அந்த இயற்கை குணம் மாறாது. ஒரு புருஷனுக்கு மாதா, பிதா, குரு, தெய்வம், அரசன் சகலரும் பத்தினிதான். பத்தினியே அவனுக்குப் பரமபதம்.

பார்வதி :—ஒரு விதத்தில் அது உண்மைதான். ஆனால் யோசித்துப் பார்த்தால் இந்த எண்ணம் பல நூற்றாண்டுகளாக ஸ்திரீகள் தந்திரம் செய்து இந்தப் புருஷர்கள் மனதில் புகட்டி அவர்களுக்கு இயற்கையாகச் செய்துவிட்டார்கள்.

உபாத்தியாயினி :—அடி அசடே! சமூகக் கட்டுப்பாடு இல்லாவிடில் சின்ன பின்னமாகிவிடும். பத்தினி பக்தி மகாசிரேஷ்டமானது என்ற மதக் கொள்கை இல்லாவிடில் உங்கள் ஸ்திரீகளின் கதி அதோகதி தான்.

பார்வதி :—வாஸ்தவம்! ஆனால் அதை மூடத்தனமாக அசங்கியப்படுத்துவது கேவலம். "பத்னி பாதோதகம் அமிர்தம்" என்றும் "பத்னி உச்சிஷ்டம் தேவப்பிரசாதம்" என்றும் சொல்வது தகுமா?

நீலகண்டன் :—எங்கள் ஊர் புராணங்களில் பல பதிவிரதைகள் பதிபாதோதகத்தினால் அரியகாரியங்கள் செய்திருப்பதாகவும் பதியின் உச்சிஷ்டத்தை அமிர்தமெனப் பதிவிரதைகள் உட்கொள்ளவேண்டுமென்றும் சொல்லியிருக்கிறது.

உபாத்தியாயினி :—உன் வாய்த் துடுக்கு இன்னும் போகவில்லை. உன் தேசம் மிலேச்ச தேசம். அநாகரிக வழக்கங்களைப்பற்றி இன்னொரு முறை இங்கு பேசாதே!

நீலகண்டன் :—தாயே! புத்தி வந்தது. இனி சொற்படி செய்கிறேன்.

உபாத்தியாயினி :—இன்னும் இரண்டு மாதங்கள் ஒழுங்காகப் பயின்று அதன் பிறகு உன்னை மகாராணியிடம் அழைத்துச் செல்வேன்.

நீலகண்டன் :—பாக்கியம்!

பார்வதி :—நீலகண்டா! உன் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்.

(தொடரும்)

# பழிக்குப் பழி.

(ஸ்ரீமான் நா. கு. கோபாலய்யங்கார்.)

(பதிப்புரிமை ஆசிரியருடையது)

அஞ்சனபுரம் அரசன் அமரேசனின் ஆட்சிக்குட்பட்ட அரண்களுள் மிகவும் புராதனமான செங்கோட்டையில் காலை மணி ஆறிருக்கும். சுற்று வட்டாரமெங்கும் மூழ்கிக் கிடந்த பனியில் மப்பு மந்தாரத்தில் நிலவி வந்த நிச்சப்தத்தைப் பங்கமுறுத்திய வண்ணம், "ஏ! பரமேச்வரா! அநாதரட்சகனென்றும் ஆபத்பந்து வென்றும் அகிலாண்டகோடி ஜீவராசிகளுக்கும் நாயகனான நீ இக்கணம் என்னை இப்பாபியினின்றும் மீட்கமாட்டா

யோ? ஐயோ! ஐயையோ! அபலையான என்னை அனாதையாக்கி அல்லலுருத்தும் அற்பனும் ஓர் அரசனோ? ஏ சண்டாளா! நீ யொரு ரஜபுத்திரனென்றும் ஆண்மகனென்றும் ஆட்சி நாடாத் துதல் நீதியோ? சிச்சி! என்னை இன்னும் வருத்தாது ஓடிப்போ. என்னாவி இவ்வுடலிலிருக்கு மட்டும் உனது செயலை மறக்கேன்'' என்று கீழே விழுந்து ஓலமிட்டுப் புரண்டு அழும் ஓர் கன்னிகையின் கூக்குரல் முடியு முன்னரே, அமரேசன் கோபமும் தாபமும் பொங்கி வழிய உடலின் உதிரம் கொதிப்படைந்து சிவந்த கண்கள் வழியே துள்ளித் தெறிக்கத்துடிக்கும் மீசையை முறுக்கிவிட்டுப் பற்கள் நொருங்கிடுமாறு நரநரவெனக் கடித்துக்கொண்டான்.

"சிச்சி! நீயும் ஒரு பேதையல்லவா? அதனாற்றான் பேதமையிருவாகி நிற்கிறாய். உனது வாழ் நாளைச் சுகப்படுத்திக்கொள்ள நீ விரும்புகிறாயில்லை. அழகைப் பாழ்படுத்தியது போலவே இக்கணமே உன்னுயிரையும் மாய்க்க என்னால் முடியும். எனினும் இன்னு மொருமுறை தவணை தருகிறேன்'' என்றான்.

அவ்வார்த்தைகள் ஆறடி யுயரமுள்ள கற்சவர்களைத் தாண்டி வெளிவரு முன்னரே அரசன் வெளிவந்தான்.

அங்கு வாயிலண்டையில் இராக்கால முழுதும் கண்ணிமை கொட்டாது காவற்புரிந்த காதர்கான் பொழுது விடிந்த பின்னரே அரசனை உள்ளே விடுத்துப் பின்னர் தன்னையே மறந்து பெருங்குரட்டையிலாழ்ந்தான். அரசனும் சிறைப்பட்ட லலிதாவும் அன்று சமாதானமாகி நட்பினராகி வெளியேறியதாகக் கனவு கண்டுகொண்டிருந்த காவற்காரனின் பெருந் தூக்கத்தில் 'பூஜை வேளையில் காடி வந்து விட்டது 'போல, விழுந்த அடிகாளாலுணர்ச்சி பெற்று இடிவிழுந்ததுபோல எழுந்து நின்றான். "காவற்காக்கும் ஜோர் இதுதானா? மடப்பயலே'' என்று பின்னு மிரண்டடிகள் அரசன் கொடுக்கவே 'தலை தப்பியது தம்பிரான் புண்ணியம்' என்று, அந்த சிபாய் ஓடோடியும் சென்று'புதருள் மறைந்துகொண்டான்.

II

மறுநாட்காலை ஜாமக் கோழி அனைவரையும் தட்டியெழுப்பியது போல அமரேசனின் நித்திரையைக் கெடுத்தது. மந்திரி பாஸ்கரனின் "லலிதா கூண்டிலில்லை'' என்ற கர்ணகடூரமான வசனங் கேட்டு அலரிப்புடைத்து ஆத்திரத்துடன் துள்ளியெழுந்த அரசனின் கலவரமடைந்த மனது எண்ணாத எண்ணங்களை எண்ணியது. என்றும் நினையாதவாறு ஏக்கங் கொண்டான். கடந்த நாட்காலை தம்மிருவருக்கும் நடந்த வாக்குவாதங்களையும் தனது சபதம் வீணாயிற்றென்பதையும் குறித்து மிகவும் வருந்தினான். அழகும் அஞ்சா நெஞ்சமும் படைத்த அவ்வணங்கின் தீரச் செயலையெண்ணி நெஞ்சம் புண்ணானது கண்டான் பாஸ்கரன்.

"பிரபோ! வீணில் அவதியுருவதில் பயனில்லை. அவள் தனது தந்தையாரின் பிறவிக் குணங்களைப் பெற்றதைக் காட்டிவிட்டாள்."

அன்பற்ற இடத்தில் ஆசை வைக்க வேண்டாம் என்று நன்மதி கூறியும் கேளாத அரசனின் ஆத்திரம், பாதபுரி அரசனின் மைத்துனன் பார்த்திபன் தன்னிடம் தூதாக வந்திருந்தும் தன்னுடைய அனுமதியின்றி மாயமாகியதை ஒற்றன் கூறக் கேட்டு நெஞ்சம் பிளந்திட கர்ஜித்தான். அங்கிருந்த அனைவரும் நடுநடுங்கினர். கெடுவானுக்குத்தான் கெட்டபுத்தி தோன்று மென்று எண்ணிக்கொண்டாரே யொழிய நாவசைக்க முடியாதவராகி நின்றனர்.

ருத்திரரூபனாகி நின்ற அமரேசன் பார்த்திபனே அவ்வணங்கை யழைத்துச் சென்றிருக்க

வேண்டுமென்று உறுதியாக எண்ணி 'அப் பதரை' நையப்புடைத்துப் புத்திபுகட்ட எண்ணினான். மறுகணமே தனது புத்திக்கும் விருப்பத்திற்கும் இணங்கிய வீரருவருடன் ஆயுதபாணிகளாகி பரதபுரி போகும் வழியிலுள்ள அரண்யந்தனில் வெறிபிடித்தவர் போலக் குதிரைகளை விரட்டி "பார்த்திப லலிதாக்களைக் கொல்லுங்கள்" என்று ஆர்ப்பாட்டம் செய்தது பல காதமட்டும் காடுகளில் எதிரொலி எழும்பியது.

III

காவற்காரக் காதர்கான் அரசனளித்த அடிகள் பொறுக்காது ஓடிச் செல்லும் சமயம் அரசன் மறைந்திட்ட மறுகணமே லலிதா காற்றுள்ள போதே தூற்றிக்கொள்ள எண்ணி மெல்லப் பின்புறமாக ஒளிந்து நழுவி விட்டாள். வலி சற்று மட்டான பின்னரே காவற்காரன் மெல்ல வந்து அவ்வபாயத்தை நினையாது போட்டது போட்டபடியிருக்கக் கண்டு மெல்லக் கதவை இறுகத் தாளிட்டு இரட்டைப் பூட்டையும் பூட்டிவிட்டான். அவனுடைய வேலைமுடிந்தது. அரசன் மறுநாள் தான் வருவானாதலால் ஆரத்திர நித்திரைபுரிய ஆயத்தம்செய்து சிறிது போழ்தில் இவ்வுலகையே மறந்துவிட்டான்.

இதுவே தக்க சமயமென்று மெல்ல மெல்ல அடிமேலடி வைத்துப் புதற்குள் முழுதும் அரண் கண்ணிற்கு மறைந்த பின்னரே ஓடத் தொடங்கினாள். மெல்லியாள் என்றும் புஷ்பங்களுக் கொப்பானவள் என்றும் கூறும் பெண்பால் விதியை எண்ணி எக்கமுற்றுக் கால் தள்ளாட, பெருமூச்சுவாங்க, நாவுலர, தலை விரிகோலமாய் முட்கள் புதர்களை லட்சியம் செய்யாது கடந்த தூரமே லாபமென்று ஓடோடியும் வரும் வழியில் ஒரு உலர்ந்த ஆலமரத்தின் வேர் தடுக்க, அடிபட்ட புள்ளிமான் போல் அலறி வீழ்ந்தாள்.

காலைக் கடன்களைக் கழித்துச் சென்று வரப் போந்த பார்த்திபன் அக்காட்டில் பெண்குரல் கேட்டுப் பரிந்தோடிச் சென்று பார்க்க லலிதா ஸ்மரணை தப்பிக் கிடந்தாள். ஆபத்திலகப்பட்ட அணங்கெனத் தீர்மானித்து ஓடோடியும் சென்று நீர் கொணர்ந்து மூர்ச்சை தெளிவித்துப் பின்னர் அவளுடைய வரலாற்றை வினவினான். தனது தந்தையாரின் தமக்கை புதல்வனான வீரேந்திரரே அக்கன்னிகையின் தந்தை யெனக் கேட்டதும் அவனுடல் நடுங்கியது. வீரேந்திரரைத் தனதில்லத்தினின்றும் விரட்டிப் பராரியாக்கி மரிக்கச்செய்து தன்னையும் சிறைவைத்திருந்ததை விஸ்தாரமாகச் சொன்ன லலிதாவிடம் அவனுக்கு இயற்கையிலே மகா தயாளுவானதால் மிகவும் இரக்கம் உண்டாய் அப்பொழுதே பரதபுரிக்குச் செல்லும் மார்க்கத்தில் லலிதாவைக் குதிரையிலேற்றிக் கொண்டு வெகு வேகமாகப் பறந்து சென்றான்.

* * * *

IV

வாயுவேகமாகப் பறந்துசென்று குதிரை பரதபுரியில் பார்த்திபனின் அரண்மனையில் அவர்களை விடுத்த பின்னர் சில நாட்கள் மனோவசீகமாகக் கழிய மார்கழித் திருநாளும் வந்தது. அச்சுற்றுவட்டங்களினின்றும் பல ஊர்க்குடிகள் பரதபுரியில் நடக்கும் வேடிக்கை விநோதங்களைக் கண்டு களிக்க பரமேச்வரியின் திருக்கோயிலுக்குள் ஆழ்ந்திருந்தனர். அரசன் ராஜநந்தனன் தனது சுற்றத்தாருடன் சுவாமிதரிசனார்த்தம் விஜயம் செய்வதாக ஏற்பாடாயிருந்ததால் முக்கண்ணனின் அலங்காரம் செப்பத் திறமற்றதாக விருந்தது. எங்கும் மேளதாளமும் வேதகோஷ்டிகளும் பண்டித சிரோமணிகளும் அணியணியாக நின்று சுவாமி தரிசனம் செய்து கொண்டிருந்தனர். அரசனின் பட்டராணி தேக அசௌக்கியமாயிருந்ததால் அவளுக்கு உதவிபுரிய எண்ணி லலி

தாவும் அரண்மனையிலே தங்கிவிட்டபடியால் சுவாமி சன்னிதானத்தண்டை அவள் காணப் படவில்லை.

அரசன் தன்னுடைய பந்துக்களுடன் தமக்குரிய மரியாதைகளைப் பெற்று வரும் சமயம் அரண்மனையில் திடீரென்று கொள்ளைக்காரர் புகுந்தனரென்று கூக்குரல் கிளம்ப அரசன் எல்லோருக்கு முன் பின்புறமாக ஓடிச் சென்று பார்த்தான். நாலாபக்கங்களினின்றும் ஜனங்கள் குழுமி அரண்மனையை முற்றுகை போட்டது போலாக்கினார்கள். குடிகளின் கலவரத்தைத் தணித்து உட்சென்ற பார்த்திபன் புன்சிரிப்புடன் அரசனைக் கண்டு "ஆபத்தொன்றுமில்லை" என்று சமாதானம் கூறினான். எனினும் அங்கு சிதறுண்டு கிடந்த சிப்பாயையும் அருகே வெறுப்புடனுற்றுநோக்கிப் பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்த லலிதாவையும் கண்டு அரசன் பிரமித்தான். பார்த்திபன் லலிதாவைச் சுட்டிக்காட்டி "இப்பெண் நமது உறவினள். பிறவியிலும் இருந்ததுபோலவே இன்று செயற்கையிலும் செய்து காட்டினாள். நாமனைவரும்—புருடர்கள் எல்லோரும் சுவாமி கோயிலுக்குச் சென்றதையும் இங்கு சகோதரி தன்னந்தனியே சில ஊழியர்களுடன் தங்கி நின்றதையும் உணர்ந்த இக்கயவன் இவளுக்குத் துன்புறுத்தி அதன் மூலமாக நமக்கெல்லாருக்கும் தீங்கிழைக்க எண்ணி நமது சிப்பாய்களின் உடை பெற்றுவந்த இவன்......" என்று சொல்லிக்கொண்டே கீழேவிழுந்து துடித்துக் கொண்டிருந்த ஆளின் உருவத்தைக்காட்ட ராஜநந்தனன் திடுக்கிட்டான். ஏனெனிலதுவே அஞ்சனபுரத்து அமரேசனின் உருவம். பார்த்திபனை வருத்த எண்ணி மகாராணியை நோயாளி என்பதையுங் கருதாது ஹிம்சிக்கத் துடங்கினதும் அடுத்த அறையில் தங்கியிருந்த லலிதா மகாராணியின் கூக்குரலைக்கேட்டு ஓடோடியும் வந்து அரசனின் கைத்துப்பாக்கி கொண்டு கயவனென்று பார்க்காமலே முகத்தைத் தாக்க முகமெங்கும் குத்துக் காயங்கள் திடீரென்று எதிர்பாராதபடி விழவே கீழே விழுந்து விட்டதாகவும், பின்னரே லலிதாவுக்குத் தன்னைச் சிறையில் படாத பாடுபடுத்தித் தந்தையாரையும் தகனமாக்கிய சண்டாளன் தன் கையாலே மாண்டிட ஈசன் எழுதிய ஆச்சரியத்தையும் கொண்டு உற்று நோக்கிய லலிதாவின் மனம் கலவரமடைந்திருந்ததையும் பார்த்திபன் விவரமாக அரசனுக்குரைத்தான்.

V

ஆப்த்திலகப்பட்ட அணங்கும் அவள் தனது வஞ்சத்தைத் தீர்க்க வழியேற்பட்ட விபத்தும் ராஜநந்தனனுக்கு ஒருபுறம் ஆச்சரியத்தை விளைவித்தது. லலிதா தமதுநெருங்கிய உறவினளென்றும் அவள் தந்தை இழந்து தவிக்கும்போது தேறுதல் கூறி மகிழ்ச்சி கூறி வாழ்க்கை நலத்தை எடுத்தோதிவரப் பார்த்திபனே உரியவனென்று எண்ணினான். நாட்கள் சென்று வாரங்களாகி மாதங்களாக மாறின. மரித்த அரசன் அமரேசன் தன்னுயிரிழக்குந் தருவாயில் கூறியபடி பார்த்திபனை அஞ்சனபுரத்திற்கு அரசனாக நியமித்துவிடவே அவன் பிரியமும் கண்ணியமும் கொண்ட லலிதாவிடம் விடை பெற மகாராணியிடம் போந்தான்.

அங்கு மகாராணியோ தனது சகோதரி போலப் பாவித்துத் தன்னை ஆபத்தினின்று மீட்ட லலிதாவிடம் தன்னை விட்டுப் பிரியாதிருக்க வேண்டும் என்றும் தனது இளைய சகோதரனை பார்த்திபனையே மாலையிட வேண்டுமென்றும் வற்புறுத்தி நின்றனள். தன்னுயிரைக் காத்து உண்ண உணவும் அளித்த உத்தமனை நிராகரிக்க—அன்பினுயிரான—கருணைக் கடலான—காதற்கிளியான பார்த்திபனை மணக்க மனமும் இசையுமோ? அதிலும் அஞ்சனபுரி பட்ட மகிஷியாகி நிற்கும் பாக்கியத்தைப் பெற்றிட்டாள் என்றே முடிப்போம்.

சுபம்.

".9

# CHINTHAMANI.

A HIGH CLASS TAMIL MONTHLY.

*(Devoted mainly to the cause of Indian Women.)*

EDITOR SISTER V. BALAMMAL.

Vol. V.] March—April 1929. [No. 8-9.

श्री शारदायै नमः ।



श्रीरामचन्द्रपरब्रह्मणे नमः

# சிந்தாமணி

## சுபோத ராம சரிதம்

COMPOSED AND ANNOTATED BY
SISTER V. BALAMMAL
DAUGHTER OF
*Late Dr. A. R. VAIDYANATHA SASTRIAR, M. A., M. B. & C. M.*
(*All Rights reserved by the Authoress*)

सुबोधरामचरिते

॥ सुन्दरकाण्डः ॥

अथ दृष्टेति वचनान्मुदितैस्तैस्सहाङ्गदैः ।
गत्वा मधुवनं तत्र यथेच्छमपिबन्मधु ॥ ३९ ॥

अथ பிறகு (ते அந்த வானரர்கள்) दृष्टा (சீதை) காணப்பட்டாள் इति என்ற वचनात् வார்த்தையினால் मुदितैः சந்தோஷித்தவர்களான सहाङ्गदैः அங்கதன் முதலியவர்களான तैः மற்ற வர்களுடன் (सह கூட) मधुवनं மதுவனத்தை गत्वा சென்று यथेच्छं இஷ்டப்படி मधु தேனை अपिवत् குடித்தார்கள்.

मधुपानसुसन्तुष्टैस्सार्धं कपिवरैरसौ ।
राघवं प्राप्य हनुमान्ननाम विनयेन तम् ॥ ४० ॥

मधुपानसुसन्तुष्टैः தேனைக் குடித்ததினால் உற்சாக முற்றவர்களான कपिवरैः வானர வீரர்களுடன் सार्धं கூட असौ அந்த हनुमान् ஆஞ்சனேயர் राघवं ஸ்ரீராமரை प्राप्य அடைந்து तं அவரை विनयेन வணக்கத்துடன் ननाम நமஸ்கரித்தார்.

दृष्टा सीता मयेत्युक्त्वा तस्मै चूडामणिं ददौ ।
मणि मालोक्य तं रामो हर्षशोकाकुलोऽभवत् ॥ ४१ ॥

(सः ஹனுமார்) सीता சீதை मया என்னால் दृष्टा காணப்பட்டாள் इति இவ்விதம் उक्त्वा சொல்லி तस्मै ஸ்ரீராமபிரானிடம் चूडामणिं சூடாமணியை ददौ அளித்தார். रामः ஸ்ரீராமர் तं அந்த मणिं சூடாமணியை आलोक्य பார்த்து हर्षशोकाकुलः சந்தோஷம் துக்கம் இரண்டுமுள்ளவராக अभवत् ஆனார்.

कान्ताविभूषणं दृष्ट्वा मत्वा तामङ्कवर्तिनीम् ।
शुश्राव मारुतिमुखाज्जानकीवृत्तमादरात् ॥ ४२ ॥

(सः ஸ்ரீராமர்) कान्ताविभूषणं சீதையின் ஆபரணத்தை दृष्ट्वा கண்டு तां சீதையை अंकवर्तिनीं மடியிலிருப்பது போல मत्वा எண்ணி मारुतिमुखात् ஆஞ்சனேயரால் जानकीवृत्तं ஜானகியின் நிலைமையை आदरात् கவனத்துடன் शुश्राव கேட்டார்.

॥ इति सुन्दरकाण्डस्समाप्तः ॥

சுந்தரகாண்டம் முற்றிற்று.

(*To be continued*)

௫௭

ஸ்ரீராமஜயம்.

# ஜகன்மோகினி

தமிழ் நாட்டுப் பெண்மணிகளின் முன்னேற்றத்தை முக்கிய
மாகக்கொண்டு வெளிவரும் ஓர் உயர்தர மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை.

பத்திராதிபர் சகோதரி வி. பாலம்மாள்.

மலர் V.] பங்குனி—சித்திரை. [இதழ் 8-9.

## சன்மார்க்கமும் பெண் கல்வியும்.

(பத்திராதிபர்.)

இந்தியாவின் நடைமுறை காலத்தை ஆராய்ந்து நோக்கின் அதன் பண்டையச் சன்மார்க்க முறைகள் குறைந்து அழிந்து வருதலைக் கண்டறியலாம். அன்றாடம் பிச்சை புகுந்து வயிர் வளர்க்கும் ஏழைமக்கள் முதல் அதியுன்னதமாக உயர்த்திக் கட்டப்பட்டு விளங்கும் உப்பரிகை வாசிகள் வரை ஆங்காங்கு சன்மார்க்கம் குறைந்து வருவதைக் காண்கிறோம். மனிதன் ஏழையாயிருப்பினும் பெரும் பணக்காரனாக விருப்பினும் ஒவ்வொருவனும் சன்மார்க்க நெறி கொண்டு நடக்காதவரை மக்கள் வாழ்க்கையில் பெருந்துன்பமும் அரசாங்க அமைப்பில் பெருத்த மாறுதல்களும் ஏற்படத் தடையில்லை. இந்திய நாடு பழம் பெரு நாடு. ஆன்ம ஞானமே பெரிதென மதிக்கும் நாடு. அனித்தியமான உயிரை விடுத்து அழிவற்ற மானத்தைக் காப்பாற்றுதலே பிறவிப் பயனெனக் கருதும் நாடு. பிறர் துன்பங் காணச் சகியாத நாடு. கடவுள் பக்தியிற் கரைகடந்த பற்றுதலுள்ள நாடு. கல்விக் களஞ்சியமெனப்புகழ் கொண்ட நாடு.

> "இந்தப் பாருக்குள்ளே நல்ல நாடு
> எங்கள் பாரத நாடு"

என்றார் ஸ்ரீமான் பாரதியார். ஏன்?

> "ஞானத்திலே பரமோனத்திலே உயர்மானத்திலே
> அன்னதானத்திலே கானத்திலே அமுதாக
> நிறைந்தக் கவிதையிலே உயர் நாடு"

இத்தகைய புகழ்பெற்ற நாட்டில் தேய்பிறை போல் சன்மார்க்கம் குறைந்து வருவதேன்?

நீதிஸ்தலங்களும் (கோர்ட்டுகளும்) நியாயவாதிகளும் (வக்கீல்களும்) நாளுக்கு நாள் பெருகி வருவதேன்? லட்சக்கணக்கான பொருளும் ஒப்பற்ற உயிரும் மடிவதேன்? உயர்தரக் குடும்பங்களில் பொருளும் ஏழை மக்களில் உயிரும் வீணாவதேன்? இம்மட்

டோ. நியாயஸ்தலவழக்குகளில் ஆடவர் மட்டும் குற்றவாளிகளெனப்படல் சகஜமாயினும் மிகுதியாகப் பெண் மக்களும் குற்றவாளிகளாக—குற்றத்திற்கு உடந்தையாயிருந்தவர்களாக—குற்றம் புரியத்தூண்டுபவர்களாக ஏற்படுகின்றார்களே. இவைகளுக்கு மூலகாரணம் யாது? நன்மார்க்கமே உருவாக விளங்கிய நன்னாட்டில் சன்மார்க்கம் குறையக் காண்பதென்றால் இதைக் காட்டிலும் மனம் வருந்தத்தக்க விஷயம் வேறு முளதோ! அறிவு செம்மையாயிருக்கும்வரை அன்னாரின் நடவடிக்கைகளில் சன்மார்க்கமே பொருந்தியிருக்கும். அறிவு கெடுமாயின் கெட்ட அறிவு செல்லும் வழி துன்மார்க்கமேயாகும். நல்லறிவுள்ளவன் ஒருகாலும் தீயகருமங்களைச் செய்யத் துணியான். அறிவை நல்வழிப்படுத்துதலே கல்வியென்றும் அதனால் அறிவுபெறும் பயன் ஞானமெனவும் கூறப்படுகின்றது.

மக்களிடையே தற்காலம் வழங்கப்படும் கல்வி உத்தியோகக் கல்வியல்லாது அறிவை வளர்க்கும் கல்வி அன்று. ஆனால் இது பற்றி அரசாங்கத்தை நாம் குறை கூறல் கூடாத காரியம். மதத்தினாலும் பாஷையினாலும் வேறுபட்டிருக்கும் அரசாங்கமானது பொதுவாக ஒரு கல்வியைப் புகட்டமுடியுமல்லாது சன்மார்க்கக் கல்வியைப் போதிக்க முடியாது. மக்களுக்குச் சன்மார்க்கத்தைப் பரவச்செய்வதற்காகவே பலவேறு மதங்கள் ஏற்பட்டுள்ளன. சன்மார்க்க போதனைகளை மதத்தின் பெயரால் மதாசாரியர்களின் கட்டளை கொண்டு பரவச் செய்தலே ஏற்றதாகும். பலவேறு மதங்கள் கொண்ட இந்தியாவில் ஆங்கில அரசாங்கம் அவரவர்களுக்கேற்ற மதத்தின்படி கல்வி போதித்தல் முடியாத காரியம். கிறிஸ்து மதாசாரியர்கள் மட்டும் தங்களது விடாமுயற்சியாலும் தீவிர உணர்ச்சியாலும் தங்கள் மதத்தின் பெயரால் சன்மார்க்க போதனைகளைச் செய்து வருகிறார்கள். மக்களுக்கு நன்னெறி விளங்கும் பொருட்டு நமது பண்டைய அரசர்களால் நியமிக்கப்பட்ட மடாதிபதிகளும் மதாசாரியர்களும் இருக்குமிடந் தெரியாது உறங்கிக் கிடக்கின்றனரன்றி முன் வந்து சன்மார்க்கக் கல்வி புகட்டக் காணோம்.

பர்மா ராச்சியத்தில் வசிக்கின்ற பொங்கிமார்களென்ற சன்னியாசிக் கூட்டத்தார்கள் அன்றாடம் பிச்சையெடுத்துவரும் உணவைக் கொண்டு பல பாலகர்களுக்கு அமுதிட்டு மார்க்கக் கல்வியைப் புகட்டுவது போல நமது சன்னியாசிக் கூட்டமும் மடாதிபதிகளும் செய்து வருவார்களாயின் மக்களிடையே சன்மார்க்கம் குறையுமோ? துன்மார்க்கம் வளருமோ? "நீ தீயவழி நடந்தாய். மதக்கட்டுப்பாடுகளை மீறினாய். ஆகையால் உன்னை ஜாதிவிலக்குச் செய்துள்ளோம்" என்று மதாசாரியர்கள் கூறுவதன்றி இவ்வளவிற்கும் மூலகாரணமாயுள்ள சன்மார்க்கக் கல்வியை போதிக்க முற்படுகின்றார்களில்லையே. இதற்குத்தானோ நம் முன்னோர்கள் இவர்களுக்கு லட்சக்கணக்கான சொத்துக்களையும் பேர் பெற்ற மடங்களையும் பூரண அதிகாரத்தையும் அளித்துச் சென்றார்கள்? ஏழ்மையிலும் தாழ்மையிலும் தத்தளிக்கும் நாம் முன்னொருகால் அரசர்களால் கட்டப் பெற்ற ஆலயங்களையும் மடங்களையும் புதுப்பிக்கக்கூடிய செல்வப்பெருக்குக் கொண்டிருப்பதெங்ஙனம்? இவ்வாறு இந்தியர்களுக்கு சன்மார்க்கக் கல்வி குதிரைக் கொம்பாகிவிட்டதினால் பெரியோர்கள் மட்டுமன்றி இளைஞர்களும் குற்றவாளிகளாய் விடுகின்றனர்.

நாகரிக வாழ்க்கையின் காரணமாக ஆங்காங்கு சிறுவர்களியற்றும் குற்றங்களை கவனித்து அவைக்கேற்ற தண்டனை விதிப்பதற்கான கோர்ட்டுகளும் ஏற்பட்டு வருகின்றன. இத்தகைய நீதிஸ்தலத்திற்கு ஆடவர்களை நியாயாதிபதியாக்குவதா அல்லது பெண்மக்

களே நீதிபதிகளாதல் வேண்டுமா என்ற பிரசினையும் ஆங்காங்கு தோன்றி வருகின்றது. முடிவாக ஆராய்ந்து பார்க்குமளவில் ஆடவர், பெண்கள், சிறுவர் எல்லோரும் பிழை செய்கின்றனரென்றும் இதுபற்றி இவர்களை அரசாங்கமும் மதாசாரியர்களும் தண்டனை விதித்தல் அவசியமாகவும் ஏற்படுகின்றது.

இதே நிலையில் மக்களின் வாழ்க்கை நடத்தப் பெருமாயின் சன்மார்க்கமென்ற சொல் அடியுடனழிந்து நீதிஸ்தலங்களும் நியாயவாதிகளும் அளவுகடந்து பெருகி, சட்டங்களுக்கும் புதிய புதிய வியாக்கியானங்களும் (கருத்துரைகள்) சீர்திருத்தங்களும் செய்ய நேரிடுமென்பதில் சந்தேகமே இல்லை.

(தொடரும்)

# அஹோபிலம்.

## நல்லமலையிலுள்ள ஒரு திவ்விய தேசம்.

(ஸ்ரீமான் S. R. அனந்தநாராயண அய்யர்.)

எழில் பல வாய்ந்து விளங்கும் தென்னிந்தியாவிலுள்ள மலைவரைகளில், கர்னூல் ஜில்லாவிலுள்ள நல்லமலை யென்னும் மலைத்தொடரைவிடச் சிறந்தது வேறில்லை.

அதன் எழில் வேறுபாடுகள் கண்டோர் மனதைக் கவர்கின்றன.

இந்த மலைவரை முழுவதுமே, மகாபுண்ணியமான பிரதேச மென்பது ஹிந்து மதத்திற் பற்றுள்ளாரது நம்பிக்கை. இதன் தலைப்பாகத்தில் "பாலாஜி" யென்னும் பிரசித்தி பெற்ற மிகப்புண்ணிய ஸ்தலமான திருப்பதி க்ஷேத்திரமும், மத்திம பாகத்தில் அஹோபிலமும், கடைப்பாகத்தில் சரித்திரப் பிரசித்தமான ஸ்ரீசைலமும் இருக்கின்றன தெலுங்க நாட்டின் "திரிலிங்கம்" என்றும் "திலிங்கணம்" என்றும் சொல்லப்படும் மூன்று லிங்கங்களில் இந்த ஸ்ரீசைலமும் ஒன்றும்.

நல்ல மலைத்தொடரிலுள்ள மனோரம்மியமான திவ்விய தேசங்களில் அஹோபிலமே மிகச் சிறந்தது. அது கொஞ்சகால முன்வரை, தென்னிந்தியாவிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களது மடங்களில் முக்கியமான அஹோபில மடத்தின் இருப்பிடமாகவு மிருந்தது. ஸ்ரீவைஷ்ணவர்கள் அதைப் பூலோக வைகுண்டமெனக் கருதுகின்றனர்.

அது குண்டக்கல்லிலிருந்து பெஜவாடாவுக்குப் போகும் வழியிலுள்ள நந்தியால் என்னும் ஊரிலிருந்து இருபத்தொன்பது மைலுக்குத் தெற்காக விருக்கின்றது. அங்கு செல்ல விரும்புவோர் நந்தியால் ரயில் ஸ்டேஷனிலிருந்து புறப்பட்டு, சமவெளியில் இருபது மைல் தூரத்திற்கப்பாலுள்ள பிரதாப ருத்திர மகாராஜனது பட்டணமான ருத்திரவரத்திற்கு மோட்டாரில் சென்று, அங்கிருந்து ஜட்கா அல்லது இரட்டை மாட்டு வண்டியேறி, மனதிற்கின்பந்தரும் வனங்களினிடையே சென்று தங்களது யாத்திரையை முடித்தல் வேண்டும்.

அஹோபிலம் என்பது "அஹோ—அதோ, பிலம்—குகை" என்ற இரண்டு சம்ஸ்கிருதச் சொற்களால் அமைந்துள்ளது. இந்தப் பெயர் வந்ததற்குக் காரணம் பின்வருமாறு நமது புராணங்களில் கூறப்பட்டிருக்கின்றது.

ஸ்ரீ மகாவிஷ்ணுவின் மனதிற்கினிய வாகனமான கருடபகவான், அக்கடவுளின் கிருபையைப் பெறவேண்டித் தவஞ் செய்து வருகையில், அவருக்கு இம்மலையில் அக்கடவுளைத் தேடும்படி நியமனமாயிற்று. அந்நியமனப்படி கருட பகவான் இம்மலைக்கு வந்து தேடுகையில் அவர் எம்பெருமான் இம்மலைக் குகைகள் ஒன்றில் நரசிம்ம வடிவமாக எழுந்தருளியிருக்

கக்கண்டு மிக ஆனந்தித்து, "அஹோ பிலம்!" "அஹோ குகை" என்று கூவ, அது முதல் இம் மலைக்கு அஹோபிலம் என்றும் கருடாசலம் என்றும் பெயர் வழங்கலாயிற்று.

பிரஹ்லாத ஆழ்வார் விஷயமான புராதன சம்பவங்களெல்லாம் இம்மலையிலேயே நிகழ்ந்தனவாக நமது புராணங்கள் கூறுகின்றன. அச் சம்பவங்களின் சுருக்கம் என்னவென்றால் :—

"ஸனகரும் ஸனந்தனரும் ஸ்ரீமகாவிஷ்ணுவைத் தரிசிக்கும்பொருட்டு, அவரது இருப்பிடமாகிய வைகுண்டத்திற்குச் சென்றபோது அங்கிருந்த வாயிற் காப்போராகிய ஜயன், விஜயன் என்ற இருவரும் அவர்களைத் தடுத்தனர். அப்பொழுது அவர்கள் அவ்விருவரையும் அசுரயோனியில் மூன்று தரம் ஜனிக்குமாறு சபிக்க, அவ்விருவரும் முதல் ஜன்மத்தில் ஹிரண்ய கசிபுவாகவும் ஹிரண்யாட்சனுகவும் பிறந்தனர். ஹிரண்யாட்சனைத் திருமால் வராகாவதாரஞ் செய்து கொன்றார். அதைக் கண்ட ஹிரண்யகசிபு அவரிடம் தீராப் பகைகொண்டு, தன் உடன்பிறந்தானைக் கொன்றவனை யழிக்க வரம் பெறுமாறு பிரம்மாவை நோக்கித் தவஞ் செய்தான். பிரம்மாவும், "உனக்கு நீர், நெருப்பு, ஆகாசம், பூமி இவைகளில் அழிவில்லை. மனிதன், மிருகம், பறவை, ஊர்வன முதலியவைகளாலும் அழிவில்லை" என்று வரமளிக்க, அவன் சகல சராசரங்களையும் அண்டங்களையும் எதிர்த்து ஸ்ரீ மாகவிஷ்ணுவைப் போருக்கழைத்தான். அக்காலத்தில் அவனுக்கு ஒரு புத்திரன் பிறந்திருந்தான். அவன் பிறந்தது முதல் தன் தகப்பனது வைரியான ஹரியினிடத்து மட்டில்லாத பக்தியுடையவனு யிருந்தான். பிரஹ்லாதாழ்வார் ஸ்ரீ மகாவிஷ்ணுவே தெய்வமென்றும், அவரே எங்கும் வியாபித்திருப்பவரென்றும் எவ்வளவோ வற்புறுத்திக் கூறினும் ஹிரண்யகசிபு இறுமாப்பும், திருமாலிடம் பகைமையும் கொண்டிருந்ததினால் தன் மகனது வார்த்தையை நம்பவில்லை.

தகப்பனும் மகனும் இவ்வாறு வாதாடி வருகையில் ஒரு நாள் ஹிரண்யகசிபு தன்னாண் மனையிலிருந்த ஒரு தூணைக் காலாலுதைத்துத் தன் மகனை நோக்கி, "உன் தெய்வம் எங்குமுளதென்றால், அதை இத்தூணிலிருந்து வரச் சொல் பார்ப்போம்! என்றான்.

பகவானும் தனது பக்தனது மொழியைக் காப்பாற்றுவதற்காகப் பகலும் இரவுமல்லாத சந்தியா காலத்தில் மனிதனும் மிருகமுமல்லாத நரசிம்ம ரூபமாய் அத்தூணைப் பிளந்து கொண்டு வெளிவந்து, ஹிரண்யன்மேற் பாய்ந்து அவனைக் கொன்றார். இவ்வாறு அஜிதன் என்று நினைத்து வந்த ஹிரண்யனுடைய வரமும் திறனற்றதாயிற்று. கடப்பாரெவரே கடுவினையை ?

இங்குள்ள "செஞ்சு" என்னும் மலை ஜாதியார் ஸ்ரீ நரசிம்மர் தங்கள் ஜாதிக்கன்னிகை ஒருத்தியை மணந்து கொண்டதாகச் சொல்லுகிறார்கள். அன்றியும், அவர்கள் தமது கணவனின் தவறைக்கண்டு மனநொந்த லக்ஷ்மீதேவியார், அவரது சந்நிதியை விட்டகன்று, கொஞ்ச தூரத்திலுள்ள "மாறுகொண்டா" வென்னும் மலையின்மேல் தனியாகக் கோவில் கொண்டதாகவும் சொல்கின்றனர். அஹோபிலக் கோவில் மூலஸ்தானத்தில் பெருமாளின் சமீபத்தில் லக்ஷ்மீதேவியார் காணப்படாமைக்கு இதுவே காரணமாம்.

இந்தக் கதை புராண சம்மதமானதன்று; என்றாலும் இந்த "செஞ்சு" ஜனங்கள் இதை ஆதாரமாகக்கொண்டு, விஷ்ணு பக்தர்களாக விருப்பதுமன்றித் திருவிழாக்காலங்களில் யாத்திரிகர்களிடமிருந்து பலவகையான வரிகளை வசூல் செய்கின்றனர்.

அஹோபிலத்தைப்பற்றி கி. பி. எட்டாம் நூற்றாண்டிற்கு முந்தின விருத்தாந்தங்களைத் தெரிவிக்கக் கூடிய ஆதாரங்கள் ஒன்றுமில்லை.

கி பி 31—10—776ல் பிறந்தலென்று நிச்சயிக்கப்பட்டுள்ள வைஷ்ணவ ஆழ்வார்களிலொருவராகிய திருமங்கையாழ்வார் இந்த ஸ்தலத்தைத் தரிசித்ததாகச் சொல்லப்பட்டும்.

பதினான்காம் நூற்றாண்டில், 1300 முதல் 1309 வரை ஆண்டு வந்த கேகத்திய அரசனான இரண்டாம் பிரதாபருத்திர மகா ராஜன் அஹோபிலம் வந்து, கோவில்களை தரிசித்து, அங்கு இன்றுவரையுள்ள உத்சவ வாகனங்களைச் செய்து வைத்ததாகவும் சொல்லப்பட்டிருக்கின்றது.

பங்காள தேசத்து பக்த சிரோமணிகளில் ஒருவரான கிருஷ்ண சைதன்னியரும் பஞ்சாப் தேசத்திலுதித்து சீக்கிய மதத்தை ஸ்தாபித்தவரான நானக்ஷா என்பவரும் இந்த ஸ்தலத்திற்கு வந்ததாக அவர்களது சரிதைகள் கூறுகின்றன.

பதினாறும் நூற்றாண்டில், இந்தப் பிரதேசத்தை யாண்டுவந்த விஜயநகர அரசர்களிற் பிரசித்தி பெற்றவரான கிருஷ்ண தேவராயரென்பவர் இங்குள்ள கோபுரங்களையும் பாதி வேலையாய் நிற்கும் மண்டபங்களையும் கட்டியதுமன்றி, கோவிலுக்குக் கிராமங்களையும் நிலங்களையும் இனமாகக் கொடுத்தார்.

சிவாஜி மகாராஜாவும் 1674ம் வருஷம் ஸ்ரீசைலஞ் சென்றபொழுது, இந்த க்ஷேத்திரத்திற்கும் வந்தார்.

விஜயநகர ராஜ்யம் க்ஷீணித்தபொழுது, இங்குள்ள கோயில்களும் க்ஷீணிக்கலாயின. விக்கிரகாராதனையை வெறுத்தவரான மகமதியர்கள் இந்தப் பிராந்தியத்தைக் கைப்பற்றியபொழுது, அவர்கள் இங்குள்ள கோயில்களை இடித்து, விக்கிரகங்களை யுடைத்துத் தலைகீழாக்கி, கோவில்களுக்குச் சேர்ந்த நகை நட்டுகளையும் மானிய கிராம நிலங்களையும் கைப்பற்றிக்கொண்டனர். மிகநேர்த்தியான விக்கிரகங்களுங் கூட எவ்வாறு உடைபட்டன வென்று அறிவதற்கு, இங்குகாணப்படும் ஹனுமான் விக்கிரகம் ஒன்றைப் பார்த்தாலே போதும்!

பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் கர்னூலை யாண்டு வந்த முனவர்கான் என்னும் நவாபு, அஹோபில யாத்திரைக்காரர் மீது 'தலைவரியும்'' வசூலித்து வந்தான். அப்போது கோவில் அர்ச்சகராக விருந்த சடகோபஜீயங்கார், தமக்கு மகமதியரால் நேர்ந்த கொடுமைகளை நீக்கும் பொருட்டுப் பெனுகொண்டையில் அரசு செலுத்தி வந்த ரங்கராயலுவை வேண்டிக்கொள்ள, அவ்வரசன் ஜீயங்காரின் உதவிக்காக கண்டிக்கோட்டைப் பாளயகாரனை வெங்கடபதி ராஜுலுவை அனுப்பினான். இவ்விருவருமாகச் சேர்ந்து மகமதியரது சேனையை முறியடித்துத் தங்களது வெற்றியின் ஞாபகத்திற்காகக் கல்லினால் ஒரு அழகான ஜயஸ்தம்பத்தையும் வெட்டி நாட்டினர்.

கீழ் அஹோபிலத்தில் உள்ள கோவிலுக்கு முன்னாக விருக்கும் அந்த துவஜஸ்தம்பத்தில் அப்போது நடந்த போரைப் பற்றிய விஷயங்கள் வெட்டப்பட்டிருக்கின்றன.

மலையடிவாரமான கீழ் அஹோபிலம், அதற்கு மேல் ஆறு மைல் தூரத்தில் பவநாசி நதிக்கரையில் உள்ள மேல் அஹோபிலம், மற்றைய வேறு ஏழு இடங்களிலுள்ள கோவில்கள் ஆகிய இவை யொன்பதும் நவநரசிம்ம க்ஷேத்திரங்களாம். அஹோபிலத்திலுள்ள இந்த ஒன்பது ரூபங்களுடனும் தோன்றி, விஷ்ணுவானவர் ஹிரண்யகசிபுவைக் கொன்றாராம்.

இறுதியிற் சொல்லிய ஏழு கோயில்களும் இந்த மலையின் மேல் பத்து மைல் தூரத்திற்குள் ஓரோரிடத்தில் இருக்கின்றன. அவற்றிற் பெரும்பான்மையானவை பலங்குறைந்தவரால் எளிதிற்போய்ச் சேரமுடியாதவை. அவை (1) ஜ்வாலா நரசிம்மர், (2) காரஞ்ச நரசிம்மர், (3) யோகானந்த நரசிம்மர், (4) வராக நரசிம்மர், (5) செஞ்சு நரசிம்மர், (6) பிரஹ்லாத நரசிம்மர், (7) உக்ரஸ்தம்ப நரசிம்மர் என்பனவாம்.

இங்குள்ள மலைத்தொடரானது நான்கு மலைவரைகளாகப் பிரிந்து, மூன்று அழகான பள்ளத்தாக்குகளை அடக்கிக்கொண்டு, ஏறக்குறையத் தென் வடலாக ஓடுகின்றது.

இம்மூன்று பள்ளத்தாக்குகளிலும் மத்தியிலுள்ள அஹோபிலப் பள்ளத்தாக்கே மிக ரமணீயமானது. அதன் இருபுறமுமுள்ள மலைகள் சிறிதும் இடைவிடாதனவாகவும் மூவாயிரம் அடி உயர்ந்தனவாகவும் இருக்கின்றன. அஹோபிலப் பள்ளத்தாக்கின் முகத்துவாரத்திற்றான் கீழ் அஹோபிலம் இருக்கின்றது. அங்குள்ள மூர்த்திக்கு லக்ஷ்மீநரசிம்மர் என்று பெயர். அங்குள்ள கோவில் நமது தென்னாட்டுக் கோவில்களை யொத்திருக்கின்றது. இந்தக் கோவிலிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் எவ்வளவோ வேலைப்பாடான மண்டபங்களும் சிலைகளும் இருந்தாலும், அவையெல்லாவற்றிலும் மேலே சொல்லியபடி கிருஷ்ண தேவராயரால் ஆரம்பிக்கப்பட்டு முடிவுபெறாமல் நின்றுபோன மண்டபத்திலுள்ள வெகு வேலைப்பாடான கற்றூண்களே முதன்மை யானவை.

அவற்றைப்பற்றி பெர்கூஸன் என்பவர் தமது "இந்து ஐரோப்பிய சிற்பம்" என்னும் நூலிற் பின்வருமாறு எழுதியிருக்கிறார்:—"அதன் அமைப்பும் ஒழுங்கும் விஜயநகரத்திலுள்ள விட்டோபாவின் கோவிலை யொத்திருக்கின்றன. தென்னிந்தியாவிலுள்ள வெகு நேர்த்தியும் கெட்டியுமான கட்டிடங்களுக்கு இதையே ஒரு உதாரணமாகச் சொல்லலாம். எவராயினும் தென்னிந்தியாவிலுள்ள சிற்பங்களின் சரிதைகளை எழுதுவாரானல், அவர் இந்தக் கோயிலைப் பற்றி யெழுதுகையில், இது முந்தியவைகளைப் போல் நுண்மையும் அழகும் பெற்றிராவிடினும் அக்காலத்திலேயே கட்டப்பட்ட மற்றெல்லாக் கட்டிடங்களைக் காட்டிலும் சிறந்த தென்றே யெழுதுவார்"

கீழ் அஹோபிலத்தில், இப்பொழுதும் வெகு அழகாகக் கட்டப்பட்டிருந்த வீடுகளும் கோவில்களைச் சுற்றிப் பாழாகக் கிடக்கும் கட்டிடங்களும் மண்டபங்களும் கல்லினற் படி கட்டப்பட்டுள்ள பல தீர்த்தங்களும் காணப்படுவதினல், அது ஒரு காலத்தில் செழிப்பான பட்டணமாகவே இருந்திருக்க வேண்டுமென்று நினைக்க இடமிருக்கின்றது.

அங்குள்ள தீர்த்தங்களில் எப்போதும் பளிங்குபோல் தெளிந்த ஜலம் கிடைக்கும் "பார்க்கவக் கோனேறு" என்னும் தீர்த்தமே மிகச்சிறந்தது. மார்ச், ஏப்ரல் மாதங்களில், இக்கோவிலில் நடக்கும் வருடோத்சவங்களுக்கு வரும் ஜனங்களின் உபயோகத்திற்காக இக்கோனேறிலிருந்து கோவிலுக்கு ஒரு குழாய் வைக்கவேண்டுமென்று இந்த ஜில்லா போர்டார் யோசனை செய்து வருகின்றனர்.

முன் சொல்லியபடி மேல் அஹோபிலம் இங்கிருந்து ஆறு மைல் தூரத்திற்கப்பாலிருக்கின்றது. ஐந்துமைல் தூரம்வரை காட்டு வழியொன்றுண்டு. ஆறுவது மைலைக் கடப்பது மிகக்கஷ்டம்.

வண்டியோடும் வழியனைத்தும் மிகாமணீயமான பவனசிப் பள்ளத்தாக்கினுள்ளேயே செல்கின்றது. இந்தப் பள்ளத்தாக்கு மேலே செல்லச் செல்ல அதிகம்பீரமாய்த் தோன்றுகின்றது. இருபுறமுமுள்ள கற்பாறைகள் முண்டும் முடிச்சுமாயிராமல் சிறிதும் இடைவெளியின்றி ஒன்ருகச்சேர்ந்து விளங்குகின்றன. உள்ளே செல்லச் செல்ல, அடர்ந்து வளர்ந்துள்ள செடி கொடிகள் நிறைந்த பள்ளத்தாக்கும் குறுகி விடுகின்றது. கடைசியாக, மேல் அஹோபிலக் கோவிலின் அருகில், பள்ளத்தாக்கின் இரு கைகளும் செங்குத்தாக ஒன்ருய்க் கூடி விடுகின்றன.

இங்கிருந்து கட்புலனகும் பள்ளத்தாக்கில் சிறிது சிறிதாகக் குறுகிக் கிடக்கும் கற்பாறைகளின் தோற்றமும் கொஞ்ச தூரத்திலிருந்து கொந்தளிப்புடன் புரண்டுவரும் பவனசியின் பளிங்குபோன்ற நீரோட்டமும் அது கற்பாறைகளை மோதி வந்ததினல் சலித்தது போல் ஆங்காங்கே தெளிந்து சலனமின்றி அகன்றிருப்பதும் எண்ணிறந்த குன்றுகள் ஒன்றன் பின்னென்ருக உயர்ந்து விளங்கும் தோற்றமும் மிக அற்புதமாயிருக்கின்றன.

இவ்வாறு மனதைக் கவரும் இடங்களுக்குப் புண்ணியந்தேடவும், புராதன கட்டிடப் பரீட்சை சரித்திர விசாரம் முதலியவைகளை யுத்தேசித்துப் போகாவிடினும், அவற்றின் அழகைப் பார்த்து ஆனந்திக்கவாவது அவ்விடங்களுக்குச்சென்று தன்வாழ் நாளின் ஒரு சிறு பாகத்தையேனும் கழியாத ஜன்மம் சபலமானதென்று நினைக்கலாமா?

மேலும், தெய்வகிருகமான கணக்கிட முடியாத பலவகைப்பட்ட இடையூறுகளையும் பொருட்படுத்தாது இவ்விடஞ் சென்று இக்கோவில்களைத் தரிசித்தவர்களை எவ்வளவு உயர்த்திப் புகழினும் அது மிகை யாகாது!

# சந்திரவர்மா.

## ஓர் நாடகம்.

(ஸ்ரீமான் R. நாராயணசாமிராவ், B.A.)

(407-ம் பக்கத் தொடர்ச்சி)

அங்கம் 5. களம் 4.

(அணியணியாய் வகுக்கப்பட்டுள்ள சேனை யுத்த சந்நத்தமாய் ஜய கோஷம் செய்து கொண்டிருத்தல். இராஜசிம்மன் ஓர் மேடை யின்பேரில் நின்றுகொண்டு சொற் பொழிவு நிகழ்த்தல்)

இராஜசிம்மன் :—புண்ணிய பூமியான இப்பாத நாட்டின் புகழை எங்கும் பரவச்செய்து உங்கள் ஜயப் பிரதாபத்தையும் வல்லபத்தையும் நிலை நாட்ட உண்மையான மனவுறுதியுடன் நிற்கும் சுத்தவீரர்களே! தளகர்த்தர்களே! இராணுவ வீரர்களே! அதி வீரர்களே! மகா வீரர்களே! போர் முகத்தில் விஜயனைப் போல் முனைந்து தேர் செலுத்திச் சமர்புரிய வல்ல பராக்கிரமம் பொருந்திய சமாத, அர்த்தாத, அதிரதர்களே! பகைவரை ஸ்தம்பிக்கச் செய்து, அவர்கள் செருக்கையடக்கி நிர்த்தூளியாக்க வல்ல மகாவீரர்களே! நான் கூறுவதைக் கேண்மின். முன்னெச்சரிக்கையே யில்லாமலும் நியாயமாய்ச் சண்டைக்கழைக்காமலும் யுத்த தர்மத்தை முற்றும் மறந்தும் நள்ளிரவில் கள்வர்களைப் போல் காந்து வந்து இராஜ்யத்தைக் கொள்ளைகொண்ட வங்க நாட்டுப் படைகளை நாம் இன்று எதிர்த்து ஜயமடையப்போகிறோம். (யுத்தகோஷம்) இந்நாளே நாம் மூவுலகங்களும் கிடுகிடுக்கும்படியாகப் போர்புரிய வேண்டிய நன்னாள்! திரைகடலைப்போல் திரண்டிருக்கும் இப்பெருஞ் சேனையைக் காண என் மனம் உவப்படைகின்றது! ஆனால் போரென்றால் உயிரை வெறுத்தாலன்றி முடியாது. தேகத்தில் போர்க் கவசங்களை யணிந்திருத்தல் மாத்திரம் போதாது. தைரியமென்னும் கவசத்தையும் அணிந்து கொள்ளவேண்டும். தைரிய லட்சுமிதான் யுத்த சமயத்தில் நமக்கு வெற்றியைக் கொடுக்க வல்லவள். சிலர் உயிரை யிழக்கவும் கூடும். ஆனால் முன் வைத்த காலைப் பின் வாங்காமல், எதிரிகளைக் கண்டு பயந்து புறங்காட்டி ஓடாமல் போர் புரியும் சுத்த வீரன் இறந்தால் வீர சுவர்க்க மடைவான், அன்றி, பிழைத்திருப்பின் என்று மழியாப் புகழ் படைத்தவனாவான். வீரர்களே! இந்த யுத்தத்தில் நியாயம் நம்முடைய பக்கமே யிருக்கிறதென்பதை எல்லோருமறிவீர்! நியாயமுள்ளவரிடத்தே தைரிய மிருக்கும்! தைரியங் கொண்டவரிடத்தே ஜய லட்சுமி சென்றடைவாள். ஆகையால் தைரியத்தைக் கைவிடாதீர்கள். நியாயத்தை உலகில் நிலை நாட்டுவது கடவுளுடைய கடமை. ஆகையால் ஈசன் நமக்கு நிச்சயம் வெற்றியளிப்பாரென்பதில் ஐயமில்லை! ஹே! அணியணியாய் வகுக்கப்பட்டுள்ள காலாட் படைகளே! ஹே! ரத கஜ துரக பதாதிகளை நடாத்தும் வீர தீர தளகர்த்தர்களே! நம்முடைய கட்சி நியாயமற்றதென்று யார் யார் நினைக்கிறீர்களோ, அவர்கள் இக்கணமே போர் புரியாமல் இக்களத்தினின்றும் சென்று விடலாம். யார் யார் தம்முயிரைச் சந்தோஷமாக இழக்கத் தயாராயில்லையோ, யார் யார் தங்கள் வீரத்தையும் மனோதிடத்தையும் தங்கள் துணைக் கருவிகளாகக் கொள்ளாமலிருக்கின்றீர்களோ, யார் யார் இன்று யுத்தம் புரிய இங்கு வந்ததைப்பற்றி

வருந்துகிறீர்களோ, அவர்களும் இக்கணமே இக்களத்தை விட்டுச் சென்று விடலாம். ஹே! சுத்தவீரர்களே! பாரத சிகாமணி களே! எல்லோரும் ஒரு மனப் பட்டுப் போர்புரியுங்கள்! ஈசன் உங்களுக்கு வெற்றி யைக் கொடுத்து இரட்சிப்பார்! (ஜயகோ ஷம்) ஆ! அதோ பாருங்கள்! வங்க நாட் டுக் கொடியானது படை யெழுந்து வருகின் றது. ஆ! இதுவே தருணம்! இதுவே சம யம்! இராஜபுத்திரர்களே! க்ஷத்திரியர் களே! ஜய ஜய வென்று கோஷம் செய்து கொண்டு சத்துருக்களை எதிர்த்து தும்சப் படுத்துவோம்! (சேனை ஆரவாரிக்கின்றது) வாருங்கள்! வாருங்கள்! ஜயமடைவோம்! புகழடைவோம்! ஜயக்கொடியை நாட்டு வோம்! பாரத வீரர்களுக்கு இணையான சேனாவீரர்கள் இவ்வுலகிலேயே யில்லை யெனும் உண்மையை நிலை நாட்டுவோம்! (சேனை யுத்த கோஷஞ் செய்து கொண்டு போர்புரியப் புகுதல்)

(காட்சி முடிகிறது)

அங்கம் 5. களம் 5.

போர்க்களத்தை யடுத்த ஓரிடம்.

காலம்—காலை

(சில போர்வீரர்கள் பாரா காத்துக் கொண் டிருக்க, கமலரேகை, பத்மாக்ஷி, சதாநந்தர் எல் லோரும் கவலையுடனிருத்தல். ஓர் ஒற்றன் ஓர் பாண் மீது நின்றுகொண்டு யுத்தம் நடப்ப தைப் பார்த்து நடப்பதை சதாநந்தரிடம் தெரி வித்தல்)

சதாநந்தர் :—அப்பா! நன்றாகப் பார்! இராஜ சிம்மன், சந்திரவர்மா, ஸ்ரீதரன் எல்லோரு மிருக்குமிடம் தெரிகிறதா? ஆ! அதோ ஏதோ தூசி கிளம்புகிறதே! யுத்தம் ஆரம்ப மாய் விட்டதா? ஆ! ஈச்வரா!

ஒற்றன் :—சுவாமி! பார்க்க பயங்கரமாக இருக்கிறது. இருதிறத்தாரும் இப்பொழுது நெருங்குகிறார்கள். புயற்காற்று வீசும் பொழுது கடலில் அலைகள் கிளம்பிப் பாய்வ தைப் போல் படைகள் வெருண்டு எதிரிகளை நெருங்குகின்றன. ஆ! இராஜசிம்ம மகா ராஜாவின் யானை முன்னால் செல்லுகின்றது. பக்கத்தில் ஸ்ரீதரருடைய யானையும் செல் கின்றது. ஆ! சந்திரவர்மா அதோ இடது கைப்பக்கத்தில் தைரியமாகச் சேனையை நடாத்துகிறார். ஆ! அந்த அயோக்கியன், சூரசேனன்! கொடும்பாபி! அதோ வருகி றான்.

கமலரேகை :—ஆ! ஈச்வரீ! அம்பிகே! கிரு பாநிதி! (பத்மாக்ஷியைக் கட்டிக்கொண்டு) அம்மா! அம்மா!

பத்மாக்ஷி :—அம்மா! பயப்படாதே! ஜகதீச் வரியை நினைத்துத் துதி. குழந்தாய், பயப் படாதே.

ஒற்றன் :—ஆ! சேனைகள் ஒன்றோடொன்று மோதிக் கொள்ளுகின்றன. ஈசா! இப் பொழுது ஒன்றுமே தெரியவில்லையே! தூசி மூடுபனியைப் போல் சூழ்ந்து கொண்டு விட்டதே.

சதாநந்தர் :—அப்பா! பார்! பார்! எல்லோ ரும் க்ஷேமமா பார்.

ஒற்றன் :—ஐயா! ஒன்றுமே தெரியவில்லை. தூசி அடங்கினால்தான் தெரியும். ஆ! காற்று பலமாக அடிக்கிறது. கிளம்பும் தூசி யைச் சீக்கிரம் அடித்துச் சென்று விடும். ஆ! இப்பொழுது கொஞ்சம் தெரிகிறது.

சதாநந்தர் :—இராஜசிம்மன் எங்கே? மற்ற வர்கள் எங்கேயிருக்கிறார்கள்? உடனே பார்.

ஒற்றன் :—ஆ! என்ன கோரக் காட்சியிது! ஐயா! நூற்றுக் கணக்கான வீரர்கள் மடிந்து

கிடக்கிறார்களே! என்ன விபரீதம்!—ஆ! எங்கே மகாராஜாவைக் காணோம்!

கமலரேகை:—ஆ! ஹா! (மூர்ச்சித்தல். பத்மாக்ஷி மூர்ச்சையைத் தெளிவிக்கிறாள்.)

ஒற்றன்:—ஐயா! இப்பொழுது மறுபடியும் இருதிறத்தாரும் நெருங்குகிறார்கள். ஆ! மகாராஜா அதோ இருக்கிறார். எவ்வளவு தீரத்துடன் யானையை நடத்துகிறார். கோசல ராஜ்யக் கொடி உயரத்தில் பறக்கிறது. ஐயா, சுவாமி! நம்முடைய படைகள் கலங்குவதைப் போல் தோன்றுகிறதே!

சதாநந்தர்:—ஈச்வரா! அப்பா, இப்பொழுது?

ஒற்றன்:—ஆ! சந்திரவர்மா அம்பாரியின் பேரில் நின்றுகொண்டு சேனையைத் தைரியப்படுத்துகிறார். ஆ! என்ன ஆண்மை! ஸ்ரீதரர் மகாராஜாவின் பக்கத்திலேயே யானையைச் செலுத்துகிறார். ஆ! ஸ்ரீதரர் சூரசேனனை எய்து அம்புகளைத் தொடுக்கிறார்! ஐயோ! ஐயோ! (மௌனம்)

சதாநந்தர்:—என்னப்பா! என்ன நடந்துவிட்டது?

ஒற்றன்:—ஐயா! இருங்கள்! இராஜசிம்ம மகாராஜாவின் யானை விழுந்துவிட்டது. ஐயோ! மகாராஜா எங்கே? ஸ்ரீதரர் எங்கே? ஸ்ரீதரருடைய யானையின் பேரில் ஒருவருமில்லையே!—கடவுளே! இருவர் ஸ்ரீதரருடைய யானையின் பேரில் ஏறுகிறார்கள். ஆ! மகாராஜாவும் ஸ்ரீதரரும் ஒரே யானையின் பேரில் ஏறியிருக்கிறார்கள். ஸ்ரீதரர் மறுபடியும் சூரசேனனை எய்து அம்பு தொடுக்கிறார்.—இப்பொழுது—ஆ! என்ன வலதுகைப்பக்கத்தில் கலவரமாக இருக்கிறது? பேஷ்! சந்திரவர்மா குதிரைப் படைகளுடன் எதிரிகளின் பின் பக்கமாக வந்து தாக்குகிறார். ஆ! எதிரிகளுடைய படையில் ஏகக் குழப்பமாய் விட்டது. ஓடுகிறார்கள்! ஓடுகிறார்கள்! தென்திசை நோக்கிச் சிலர் ஓடுகிறார்கள். பேஷ்! பேஷ்! ஸ்ரீதரருடைய அம்புகள் சூரசேனனுடைய யானையைக் கொன்று விட்டன. ஆ! ஓடுகிறான், சூரசேனன் ஓடுகிறான். பயங்கொள்ளி! ஆ! மகாராஜா குதித்துவிட்டார். யானையினின்றும் குதித்து சூரசேனன் பின்னால் ஓடுகிறார். ஆ! இருவரும் சண்டை செய்கிறார்கள். ஈசா! ஐயோ! யாரோ இருவர்கள்—யாரோ—ஐயோ மகாராஜாவுக்குத் தெரியாமல் பின்னால் ஈட்டியுடன் வருகிறார்களே. ஆ! பேஷ்! பேஷ்! யாரது! நம்முடைய வீரர்கள் யாரோ மூன்றுபேர் அவர்களிரண்டு பேரையும் வீழ்த்திவிட்டார்கள்! ஆ! மகாராஜாவும் சூரசேனனும் சண்டைசெய்கிறார்கள். விழுந்தான்! விழுந்தான்! ஆ! வேரற்ற மரம் பேரில் விழுந்தான்! சூரசேனன் விழுந்தான்! ஆ! எதிரிகளெல்லோரும் ஓடுகிறார்கள்! (திடுக்கிட்டு) ஆ! என்னயிது? நாமிருக்கும் இடத்தை நோக்கிச் சில குதிரை வீரர்கள் வெகு வேகமாக வருகிறார்களே!

சதாநந்தர்:—யார், யார்? எதிரிகளா பார்.

ஒற்றன்:—பயப்படவேண்டாம். நம்முடைய குதிரை வீரர்கள் தான் வருகிறார்கள். இதோ வந்து விட்டார்கள். ஆ! அதோ ஜயபேரிகை முழங்குகிறது. கோட்டைக் கோபுரத்தின் உச்சியில் இராஜசிம்ம மகாராஜாவின் கொடியை ஏற்றிவிட்டார்கள். சத்துருக்கள் சின்னபின்னமாய்விட்டனர்.

பத்மாக்ஷி:—அம்மா! கமலரேகா! கலங்காதே. தேவியின் பரிபூர்ண கிருபையை நாம் அடைந்திருக்கிறோம். எல்லோரும் க்ஷேமமாயிருக்கிறார்களாம். யுத்தம் முடிந்து விட்டது! நமக்கு ஜயம் கிடைத்துவிட்டது.

*சதாநந்தர் :*—ஆ! என்னே ஜகதீச்வரியின் கிருபை!

(எல்லோரும் தேவியைத் துதித்தல்)
(ஓர் ஜமேதார் பிரவேசித்தல்)

*ஜமேதார் :*—ராஜாதி ராஜ ராஜ கம்பீர ராஜ சிம்ம மகாராஜா அவர்கள் இக்கடிதத்தைத் தங்களிடம் கொடுக்கும்படி ஆக்ஞாபித்தார்கள். (கடிதத்தைக் கொடுத்தல்)

*சதாநந்தர் :*—(படித்தல்)

ம-ா-ா-ஸ்ரீ சதாநந்தருக்கு, வேதிய சிகாமணியே! அம்பிகையின் திருவருளால் நாம் வெற்றியடைந்தோம். எதிரிகள் ஓடிவிட்டனர். என் தந்தையை வென்ற கொடியவன் உயிரையும் பழிக்குப் பழியாக வாங்கியாய்விட்டது. இனித் தனிமையாகத் தாங்களெல்லோரும் அவ்விடத்திலிருத்தல் தவறு. ஆகையால் உடனே புறப்பட்டு அரண்மனை சென்றடையவேண்டும். இதைக் கொண்டுவரும் ஜமேதார் உங்களைப் பத்திரமாக அரண்மனைக்கழைத்துச் செல்வார். எங்களுக்குக் கொஞ்சம் வேலையிருப்பதால் இன்று மாலை அரண்மனை வந்தடைகிறோம். என்னே ஜகதீச்வரியின் கிருபை!

இப்படிக்கு,
தங்கள் அன்புள்ள,
இராஜசிம்மன்.

*சதாநந்தர் :*—எல்லாம் பரமேச்வரியின் கிருபை! வாருங்கள், எல்லோரும் அரண்மனைக்கேகலாம்.

(எல்லோரும் செல்லல்)
(காட்சி முடிகிறது)

அங்கம் 5. களம் 6.

*அயோத்தியாபுரி அரண்மனைக் கொலுமண்டபம்.*

(சந்திரவர்மா, இராஜசிம்மன், கமலரேகை, ஸ்ரீதரன், சதாநந்தர், பத்மாக்ஷி எல்லோரும் அமர்ந்திருத்தல். ஒற்றர்களும் பரிஜனங்களும் சூழ்ந்திருத்தல். அவர்களுடன் மகேந்திரராஜனும், வத்ஸனும், ஜயசீலனும் இராஜபுத்திர வீரர்களைப்போல் மாறு வேடம் பூண்டு இருத்தல். ஓர் அழகிய சிங்காதனத்தின்பேரில் மகேந்திரராஜனுடைய பட்டாக்கத்தி புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டு வைக்கப்பட்டிருத்தல். அதன் கீழ் மற்றோர் சிறிய சிங்காதனம் அமைக்கப் பட்டிருத்தல்.)

*சந்திரவர்மா :*—ஹே, இராஜசிம்ம! உன் தந்தையின் இருப்பிடத்தை யறிந்து கொள்வதற்காக நாம் எவ்வளவோ பாடுபட்டும் வீணாய் விட்டது. அவரைப்பற்றி யாதொரு சமாசாரமும் அறிய முடியாவிடினும், சூரசேனனுடைய கையில் அவர் சிக்கிக்கொள்ளவில்லை யென்று திண்ணமாய்த் தெரிகிறபடியால், வேறு எங்கேயாவது அவர் உயிருடன்தானிருக்க வேண்டுமென்பதில் ஐயமில்லை. ஆகையால், மகாராஜாவின் இருப்பிடத்தை அறிய ஒற்றர்கள் மூலமாயும், வேவுக்காரர்கள் மூலமாயும் விடாமுயற்சி செய்வோம். விடாமுயற்சியால் ஆகாத காரியம் ஒன்று மில்லை.

"முயற்சியாற் கர்மமெல்லாம்
முடிந்திடுமெவர்க்குஞ்சால
முயற்சியை யின்றி யெண்ணின்
முதவது வதொன்று மின்று."

(உத்தம நீதி)

ஆகையால், உன் தந்தையைப் பற்றிய சமாசாரம் கிடைக்கும்வரையில், நீ சொல்லுமாறு இராஜ்ய பாரம் உன் தந்தையின் பெயராலேயே நடத்தப்படவேண்டும். அதுவரை, நீ இராஜப்பிரதிநிதியாக இருந்து அரசாட்சி செய். முதலில் சிங்காதனத்தின் பேரிலிருக்கும் உன் தந்தையின் வாளை வணங்கிக் கோசல தேசத்தரசாட்சியை யொப்புக்கொள்.

இராஜசிம்மன் :—ஹே, சந்திரவர்மா! நான் என்ன செய்வேன்! என் தந்தையின் க்ஷேமத்தை யறியாமல் ஓர் நாள் கழிப்பது ஓர் யுகமாகத் தோன்றுகிறது. அவருக்கு ஏதாவது ஆபத்து நேர்ந்திருக்குமோ வென்று சந்தேகிக்கும் வேளைகளில் என் மனம் படும் பாட்டை என்னென்று சொல்வேன்!

ஹே, சந்திரவர்மா! தங்களுடைய அரும் பெருங்குணங்களை என்னென்று சொல்வேன்! எவ்வாறு புகழ்வேன்! தங்களுக்கு என் நன்றியை எவ்வாறு செலுத்துவேன்! என் தந்தை தங்களுக்கிட்ட கட்டளைகளை நிறைவேற்றுவதற்காகத் தங்கள் உயிரையும் பொருட்படுத்தாமல் உழைத்தீர்கள்! என் தந்தையை வென்ற சூரசேனனைப் பழிக்குப் பழியாக வென்று இத்தேச பரிபாலனத்தை என்னிடம் ஒப்புவிக்கிறீர்கள். எனினும் ஹே, சந்திரவர்மா! நானோ ஓர் அனுபவமில்லாத வாலிபனாயிருக்கிறேன். தாங்களோ அரசாட்சியில் தேர்ச்சியும் அனுபவமுமடைந்தவர்கள். என் தந்தை வரும் வரையில் எனக்குப் பதிலாகத் தாங்கள் இராஜப்பிரதிநிதியாயிருந்து இவ்விராஜ்யத்தை யாண்டால், அதற்குள் நான் இராஜதந்திரங்களைக் கற்றுக்கொள்வேன். இதற்கு மாத்திரம் தாங்கள் தடை சொல்லக் கூடாது.

சந்திரவர்மா :—இராஜசிம்மா, இல்லை யில்லை. நீ சொல்வது சரியல்ல. அரசாட்சியில் தேர்ச்சி யடைவதெப்படி? அரசாட்சி செய்தால் தானே நாளடைவில் தேர்ச்சியடையலாம். மேலும், நான் உன்னதபதவியிலிருந்து அனுபவித்ததெல்லாம் போதும். மீதியிருக்கும் என் வாணுட்களை நான் வேறு வழியில் கழிப்பதாகத் தீர்மானித்திருக்கிறேன். ஆகையால் இராஜசிம்மா! நீதான் அரசாட்சியை யொப்புக்கொள்ளவேண்டும்.

இராஜசிம்மன் :—என்னரிய சந்திரவர்மா! இனித் தங்கள் வாழ் நாட்களை எவ்விதம் கழிப்பதாகத் தீர்மானித்திருக்கிறீர்கள்? அதை என்னிடம் தெரிவிக்கக்கூடாதா?

சந்திரவர்மா :—இராஜசிம்மா, எல்லாம் சொல்லுகிறேன். நீ முதலில் கமலரேகையுடன் உனக்காக அமைக்கப்பட்டிருக்கும் சிங்காதனத்திலமர்ந்து செங்கோலை யொப்புக்கொள்!

இராஜசிம்மன் :—(கமலரேகையைப் பார்த்து) நம் அரிய சந்திரவர்மாவின் கட்டளைப்படியே செய்வோம். ஆனால் இருவருமாக முதலில் சந்திரவர்மாவையும் சதாநந்தரையும் பத்மாக்ஷியையும் வணங்கி அவர்கள் அநுக்கிரகத்தைப் பெறலாம்.

(இருவரும் சந்திரவர்மாவை வணங்குதல்)

சந்திரவர்மா: —தீர்க்காயுஷ்யமஸ்து! ஹே, இராஜசிம்மா! நின் கீர்த்தி எங்கும் பாவக்கடவது! நின் செங்கோல் தழைத்தோங்குக! நின் ஆயுள் வளருக! உன் நாமம் நீடித்து நிலைத்து விளங்குக! ஹே, கமலரேகா! தீர்க்கசுமங்கிலிபவா! நீங்களிருவரும் அரசனும் இராணியுமாக வெகுகாலம் சகல சம்பத்துடன் வாழ எல்லாம் வல்ல ஈசன் அருள்புரிவாராக!

(இருவரும் சதாநந்தரை வணங்குதல்)

இராஜசிம்மன் :—வேதியர் குலத்துதித்த கருணைகூர் வள்ளலே! வேதிய சிரோமணியே! நமஸ்கரிக்கின்றேன்.

சதாநந்தர் :—தீர்க்காயுஷ்யமஸ்து! தீர்க்காயுஷ்யமஸ்து! குழந்தைகளே! (கண்ணீர் பெருக) குழந்தை கமலரேகா! கோசல அதிபதி இராஜசிம்மா! நான் பூர்வ ஜன்மத்தில் செய்திருக்கும் ஏதோ பூஜாபலனால் உங்களை இப்பொழுது ஆசீர்வதிக்கும் பாக்கியத்தைப்

பெற்றிருக்கிறேன்! நீங்கள் நீடூழிகாலம் வாழவும், உங்கள் கீர்த்தி எங்கும் பரவவும் எல்லாம் வல்ல ஈசன் கிருபை செய்வாராக!

(இருவரும் பத்மாக்ஷியை வணங்குதல்)

கமலரேகை:—என்னரிய அம்மா! (கண்ணீர் சொரிந்து) நமஸ்கரிக்கிறேன்! தாங்கள் தான் என் அன்னை. என்னைத் தங்கள் கிரகத்தில் அன்புடன் ஆதரித்ததுபோல் தங்கள் கிரகமாகிய இவ்விடத்திலும் என்னை ஆதரிக்க வேண்டும். தங்களுக்கு என்னிடத்திலிருக்கும் அன்பிற்கு ஓர் அளவு முண்டோ?

இராஜசிம்மன்:—அம்மா! பவநகர் தெருவில் தங்களை நான் சந்தித்தபொழுது கமலரேகையின் மோதிரத்தை என்ன விலையானாலும் விற்கமாட்டேனென்றீர்களே! என்னே உங்கள் அன்பு! உங்களுடைய ஆசியினால் தான் நாங்கள் இப்பதவியை யடைந்திருக்கிறோம். அன்புடன் ஆசீர்வதிக்கவேண்டும்.

பத்மாக்ஷி:—(கண்ணீர் பெருக) மகாலட்சுமி கமலா! நீ எங்கள் கிரகத்திற்கு வந்த தினமே நாங்கள் கிருதார்த்தர்களாகி விட்டோம். மகாலட்சுமி! எங்கள் முதுமைப் பருவத்தில் உங்களை ஆசீர்வதிக்க நாங்கள் என்ன தபம் செய்தோமோ! குழந்தைகளே! நான் பூர்ண மனதுடன் ஆசீர்வதிக்கிறேன். மகாவிஷ்ணுவும் மகாலட்சுமியுமே உருவெடுத்து வந்தாற் போன்ற உங்களுக்குச் சகல சம்பத்துக்களும் உண்டாகும்!

(வாத்திய கோஷங்கள் முழங்க, அந்தணர் ஆசீர்வதிக்க, ஒற்றர்கள் கட்டியங்கூற, எல்லோரும் புஷ்பமாரி சொரிய, இராஜசிம்மனும் கமலரேகையும் பெரிய சிங்காதனத்தை மும்முறை வலம் வந்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, மகேந்திரராஜனுடைய வாளை வணங்கி, சிறிய சிங்காதனத்தில் அமர்தல்.)

இராஜசிம்மன்:—ஹே, சந்திரவர்மா! தாங்கள் எவ்விதம் தங்கள் வாழ் நாட்களைக் கழிப்பதாக உத்தேசித்திருக்கிறீர்கள்? தயவு செய்து தெரிவிக்கவேண்டும்.

சந்திரவர்மா:—இராஜசிம்ம மகாராஜ்! சொல்லுகிறேன். நான் மந்திரியாக மகேந்திர மகாராஜாவிடம் விசுவாசமாய் உழைத்தது பெரிதல்ல. என் அரசர் எனக்கிட்ட கட்டளைகளை நிறைவேற்றியதே எனக்குத் தெவிட்டாத ஆனந்தத்தைத் தருகிறது. நான் மந்திரி உத்தியோகத்தை இழந்தபின், ஓர் துறவியின் உடையைத் தரித்துக் கொண்டேன். ஆனால் உடைமாத்திரம் துறவியினுடையதாய் இருந்ததேயன்றி, மற்ற மனோபாவங்களெல்லாம் சாதாரண நரர்களுக்குள்ளவைகளாகவே இருந்தன. இதுவரையில் நான் வேடதாரியாயிருந்து துறவிகளின் ஆசிரமத்திற்கே ஓர் இழிவு வரும்படியாக நடந்துகொண்டேன். ஆனால் அது என் பேரிற்குற்றமல்ல. என் வேந்தருடைய ஆக்ஞையை நிறைவேற்றவே அங்ஙனம் செய்ய நேர்ந்தது. மேலும் ஒருவரையொருவர் காதலிக்கும் உங்களிருவருடைய மணமும் நடந்தேறியிருக்கவேண்டிய தினத்தன்று நீங்கள் பிரிக்கப்பட்டீர்கள். ஆகையால் உங்களிருவரையும் மறுபடியும் சேர்த்து வைத்ததே ஒரு பெரும் புண்ணியமன்றோ? ஆனால் ஏதோ நடந்ததிருக்கட்டும். இனிமேலாவது நான் உண்மையாக ஓர் துறவியாகி, எனக்கு நான்முகன் விதித்திருக்கும் பாக்கி நாட்களில் என் மனதைப் பகவத் பக்தியில் செலுத்தி இப்பிறவியெனும் ஓர் இருட்கடலினின்றும் உய்யுமோர் விதம் தேடலாமென்று எண்ணுகிறேன்.

இராஜசிம்மன்:—சந்திரவர்மா! தாங்கள் சொல்வதைக் கட்டாயம் நிறைவேற்றுவீர்

களென்பதில் ஐயமில்லை. ஆனால், தங்களைவிட்டுப் பிரிந்து நான் எவ்விதம் உயிர் வாழ்வேன்? தங்களுடைய உதவியும் புத்திமதியுமின்றி நான் எவ்விதம் இராஜ்யபரிபாலனம் செய்வது? ஹே, சந்திரவர்மா! தாங்கள் இப்பொழுது கட்டாயம் துறவறம் கொள்ளத்தான் வேண்டுமோ?

சந்திரவர்மா:—இராஜசிம்மா! மனிதர்கள் வாழ்நாள் சிலவே. அதில் சரி பாதி தூக்கத்தில் கழிந்து விடுகிறது. மீதியிருப்பதிலும் பாதி குழவிப் பருவமாயும், விருத்தாப்பியப் பருவமாயும் கழிந்து விடுகிறது. ஆகையால் மனிதர்கள் பகுத்தறிவை நன்கு உபயோகப் படுத்திச் சன்மார்க்கத்தில் காலங்கழிக்க ஏற்படும் அவகாசம் கொஞ்சம் தான். "எப்போதாயினும் கூற்றுவன் வருவான். அப்போதந்தக் கூற்றுவன் தன்னைப் போற்றவும் போகான், பொருளொடும் போகான்." ஆகையால், இப்பொழுது நான் துறவறம் கொள்ளாவிடின் பின்னல் எப்பொழுது கொள்ளப் போகிறேன்? நீ ஒன்றும் தடை சொல்லாதே.

இராஜசிம்மன்:—மகாத்மா! நான் தடை சொல்லவில்லை. தாங்கள் இப்பொழுது கட்டாயம் துறவறம் கொள்ளத்தான் வேண்டுமென்றால், நான் கோரும் மற்றோர் காரியத்தைச் செய்வதாகக் கருணையுடன் ஒப்புக்கொள்ளவேண்டும்.

சந்திரவர்மா:—இராஜசிம்மா! என்னிடம் உனக்கென்ன இவ்வளவு அபிமானம் ஏற்பட்டுவிட்டது? நான் யாது செய்ய வேண்டுமென்கிறாய்?

இராஜசிம்மன்:—ஹே, மகாத்மா! தாங்கள் துறவறம் பூண்டபிறகு இந்நகரிலேயே யிருக்கவேண்டும். நகருக்கு வெளியில் நதி தீரத்திலிருக்கும் நந்தவனத்தில் தங்கள் பன்னகசாலையை ஏற்படுத்திவிடுகிறேன். நாங்களெல்லோரும் தங்களை அனுதினமும் தரிசித்துத் தங்கள் அனுக்கிரகத்தைப் பெறக் கூடிய பாக்கியம் எங்களுக்குக் கிடைத்தால் நாங்கள் கிருதார்த்தர்களாவோம். மகாத்மா! தாங்கள் அப்பொழுது பொய்யாகக் கமலரேகையின் குல குருவாயிருந்தீர்கள். இனி உண்மையிலேயே எங்கள் குல குருவாயிருக்க வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறேன்.

சந்திரவர்மா:—இராஜசிம்மா! நீ சொல்லும் வண்ணம் நான் இங்கேயே துறவியாய் வாழ்கின்றேன். இராஜீய விஷயங்களில் உனக்கேதாவது சந்தேகம் கேட்க வேண்டியிருந்தால் தாராளமாய்க் கேள், ஏதோ எனக்குத் தெரிந்தவரையில் சொல்ல முயற்சி செய்கிறேன்.

இராஜசிம்மன்:—மெத்த சந்தோஷம். நான் இப்பொழுதே சிற்சில விஷயங்களைப் பற்றித் தங்களைக் கேட்கவேண்டியிருக்கிறது. மகாத்மா! எனக்கோர் விசுவாசமுள்ள அமைச்சனிருக்க வேண்டாமா? அந்த ஸ்தானத்திற்கு என் தோழனான ஸ்ரீதரனைக் காட்டிலும் உரித்தானவர்கள் வேறு யாரிருக்கிறார்கள்? என்னுடன் சினேகம் செய்த நாளே ஸ்ரீதரன் எனக்கு சுயேச்சையை யளித்தான்! அதுமுதல் கஷ்டமோ நஷ்டமோ, சுகமோ துக்கமோ எல்லாவற்றையும் ஸ்ரீதரன் என்னுடன் சந்தோஷமாகப் பகிர்ந்திருக்கிறான்! மேலும் ஸ்ரீதரன் அமைச்சர் குலதிலகரான ஜயசீலருடைய புதல்வனாயிருக்கையில், அவன் ஜயசீலரைப் போல் புகழ்படைத்தவனாவானென்பதில் யாது ஐயமுளது?

சந்திரவர்மா :—இராஜசிம்மா! சரியான யோசனை. ஸ்ரீதரா! இன்று முதல் நீதான் கோசலதேசத்துப் பிரதான அமைச்சன்! நீ அமைச்சர் குலத்திலேயே உதித்தவனுகை யாலும் அந்த மகான் ஜயசீலருடைய குமாரனுனதாலும், உன் கடமைகளைப் பற்றி நான் உனக்கொன்றும் அதிகமாகச் சொல்லவேண்டியதில்லை. நீ இப்பொழுதைப் போலவே எப்பொழுதும் உன் நேசரும் இத்தேசத்தரசருமான இராஜசிம்ம மகாராஜாவின் மந்திரியாக விசுவாசத்துடன் உன் கடமைகளைச் செய்துகொண்டிருப்பாயாக!

ஸ்ரீதரன் :—(எல்லோரையும் வணங்கி) ஹே, மகாத்மா! மகாராஜ்! மகாராணி! சதானந்தரே! அம்மா பத்மாக்ஷி! சபையோர்களே! எல்லோரையும் வணங்குகிறேன். (சந்திரவர்மாவைப் பார்த்து) ஹே, மகாத்மா! நாங்களெல்லோரும் தங்கள் நிழலிலிருக்கும்வரை எங்களுக்கு என்ன குறையிருக்கக்கூடும்! எளியோனுன நான் என் உயிரையும் பொருட்படுத்தாமல் என் கடமையை விசுவாசமாய்ச் செய்வேன். (இராஜசிம்மனையும் கமலரேகையையும் வணங்கி) மகாராஜ்! மகாராணியாரே! வணங்குகின்றேன்.

இராஜசிம்மன் :—மந்திரி ஸ்ரீதரா! உன் உத்தியோகத்தின் அந்தஸ்துக்கு அறிகுறியான பட்டாக்கத்தி, வீரகண்டாமணி, ரத்தின மகுடம் இவை மூன்றையும் இதோ பெற்றுக்கொள்! (ஸ்ரீதரன் பெற்றுக்கொள்ள எல்லோரும் கரகோஷம் செய்தல்.)

சந்திரவர்மா :—இராஜசிம்மா! நீ இப்பொழுது ஓர் பெரும் இராஜ்யத்தையாளும் அரசனுய்! உன் ஆட்சியில் செங்கோல் கோணுமல் இருப்பதாக! துஷ்ட சம்ஹாரம் செய்வதிலன்றி சிஷ்டபரிபாலனம் செய்வதிலும் எல்லாம் வல்ல இறைவன் உனக்கு நற்புத்தியும் ஊக்கமும் அளிப்பாராக. லட்சக்கணக்கான குடும்பங்கள் இப்பொழுது உன் ஆதரணையிலிருக்கின்றன. இக்குடும்பங்களைப் பாதுகாத்து உன் குடை நிழலில் இனிது வாழ ஏற்பாடு செய்தல் உன் கடமை! ஓர் பெரிய இராஜ்யத்தை யாளுதல் எளிதென்று எண்ணவேண்டாம். உன் பல்லாயிரம் பிரஜைகளுக்கும் நீயே பிரத்தியட்ச தெய்வமாக இருக்கவேண்டும். பிணியைப் பரிகரிப்பதிலும், துயரத்தைக் களைவதிலும், நியாயத்தை நிலை நிறுத்துவதிலும், வறுமையை வேரோடு களைவதிலும் உன் விடா முயற்சியைச் செலுத்துவாய். முக்கியமாக நடு நிலைமையைக் கைவிடாதே. பிரஜைகளும் உன்னிடம் விசுவாசத்துடனும் பயபக்தியுடனும் இருப்பார்கள். தூய்மை, வாய்மை, தெய்வபக்தி, இராஜபக்தி, அறிவு, அபிமானம், காருண்யம் எல்லாம் உன் ஆட்சியில் அபிவிருத்தியடைய வேண்டுமாய்க் கடவுளை யனுதினமும் பிரார்த்தித்துக்கொண்டேயிரு. தெய்வதாராதனம் உன் தந்தையின் காலத்தில் நடந்ததுபோல், உன் ஆளுகையிலும் மும்மாமாக நடத்தப்பட வேண்டும். பழைய கோயில்களைப் புதிப்பித்தும், புதுக் கோயில்களைக் கட்டியும், உன் பிரஜைகளின் வாழ்வு புனிதமாகும்படி செய்வாயாக! உன்னை அண்டினவரை ஆதரித்து, தஞ்சமென்றடைந்தோரைத் தேற்றிப் போற்றிக் காப்பாற்றி, உன் குடிகளெல்லோருக்கும் பிதாவாக விளங்குவாய்! 'குடி உயர முடி உயரும்' என்பதை மறந்து விடாதே!

ஹே, இராஜசிம்மா! உன் பக்கத்திலிருக்கும் இராஜகுமாரி கமலரேகையை நீ மணந்து கொள்ள இன்றே முகூர்த்த நாளாயிருக்

கிறது. உன் மணத்தை முடித்து விட்டு நான் என் புதிய ஆசிரமத்தைக் கடைப்பிடிக் கிறேன்.

ஹே, இராஜசிம்மா! போர்க்களத்தில் நமக் காக உயிரை விட்ட ஒவ்வோர் சுத்தவீர னுடைய குடும்பத்தையும் சம்ரட்சணை செய் வது உன் கடமை. ஆகையால் அதை அறிந்து, ஒவ்வொரு குடும்பத்திற்கும் ஏராள மான நிலங்களை இனமாக அளிப்பாய்; கஜா னாவிலிருந்து வருஷா வருஷம் அக்குடும்பங் களுக்குத் தகுந்த பண உதவியையும் செய்துவா.

இராஜசிம்மன் :—அப்படியே செய்கிறேன். ஈசனது திருவருளால் செங்கோல் கோணா மல் அரசாட்சி செய்ய முயற்சி செய்கிறேன்.

சந்திரவர்மா :—யுத்தகளத்தில் மரித்தவர் களுடைய விஷயத்தில் உன்னுடைய கடமை யைச் சொல்லிவிட்டேன். நேற்று நடந்த கொடும் போரில் அதிதீரத்துடன் ஆபத்துக் கஞ்சாது போர் புரிந்து புகழடைந்தவர்கள் இதோ நிற்கிறார்கள். (மகேந்திரராஜன், வத்ஸன், ஜயசீலன் மூவரும் முன்வரல்) இந்த சுத்தவீரர்களிடம் உன் நன்றியைச் செலுத்துவாய்.

இராஜசிம்மன் :—(சிங்காதனத்தினின்றும் இறங்கி) சுத்த வீரர்களே! உங்களை நான் எவ்விதம் புகழ்வேன்! நான் சூரசேன னுடன் சண்டை செய்கையில் எனக்குப் பின்னிருந்து என்னைத் தாக்கிய இரு வீரர் களை நீங்கள் வீழ்த்தியிராவிட்டால் அவர்கள் என்னைக் கொன்றிருப்பார்கள். ஆகையால் நீங்களே எனக்கு உயிர்ப் பிச்சை கொடுத்த வர்களானீர்கள். எனக்கு நீங்கள் செய்திருக் கும் இப்பேருபகாரத்தை நான் என் ஆவி யுள்ளளவும் மறக்கமாட்டேன். இதற்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகி றேன்! நீங்கள் யாவரென்பதை இனியும் நான் அறியாமலிருக்கலாமோ? உங்கள் தேசமெது? உங்கள் நாமதேய மென்ன? தயவு செய்து தெரிவியுங்கள்.

மகேந்திரராஜன் :—(ஆனந்த பாஷ்பம் சொரிய அடக்க முடியாத ஆனந்தத்துடன்) ஆ! கடவுளே! ஆகா! சந்திரவர்மா! என்னரிய இராஜசிம்மா! என் கடவுளே! என் கண் ணே! என் அருந்தவப் புதல்வ! என் உயிரே! (சென்று அணைத்துக் கொள்ளல்.)

இராஜசிம்மன் :—ஹா! அருமைத் தந்தையே! என்னை ஈன்றெடுத்த பிதாவே! (அணைத்துக் கட்டிக் கொள்ளல்) என் கடவுளே! கட வுளே! காணாமற் போன தந்தையைக் கண் டேன்! கண்டேன்! இழந்த செல்வத்தை மறுபடியும் அடைந்தேன்! அடைந்தேன்! ஈச்வரா! நின் கருணையே கருணை!

மகேந்திரராஜன் :—(ஆனந்த பாஷ்பம் பொழி தல்) குழந்தாய்! என் கண்மணி! என் உயிரி னுக்குயிரான உயிரே! உன்னை மறுபடியும் நான் மணக்கோலத்துடன் கண்டேனே! நானே பாக்கியவான். (கமலரேகை நமஸ் கரித்தல்) கமலரேகா! தீர்க்க சுமங் கலிபவா! உன்னை நான் மறுபடியும் என் மைந்தனுடைய காதலியாகக் கண் டேனே! நானே பாக்கியவான்!

சந்திரவர்மா :—மகாராஜ! மண்டலாதிபதி! தாங் கள் இட்ட கட்டளைகள் பகவானுடைய உதவியால் நிறைவேறின.

மகேந்திரராஜன் :—(சந்திரவர்மாவை அணைத் துக் கொண்டு) என் சந்திரவர்மா! என் நண்பா! விசுவாசமே உருவெடுத்து வந்த என் அரிய சந்திரவர்மா! என்னே உனது விசுவாசம்! என்னே உன் குணம்! என்

மைந்தனையும் கமலரேகையையும் மறுபடியும் உயிருடன் எனக்களித்த நீயே என் பிரத்தியட்சக் கடவுளன்றோ! சந்திரவர்மா! ஒரு காலத்தில் நான் மகாபாபியென்று என்னையே நொந்துகொண்டிருந்தேன். நானே தன்யனென்பது இப்பொழுது தெரிகிறது. ஹே, சந்திரவர்மா! உன்னையும் இதோ இருக்கும் வத்ஸனையுமொத்த மகான்களை நண்பர்களாகக் கொண்டிருக்கும் எனக்கு யாது குறையிருக்கக்கூடும்!

சந்திரவர்மா :—யார்? வத்ஸரா! ஆ! வத்ஸரே, வத்ஸரே, நமஸ்காரம்! நாம் மறுபடியும் உயிருடன் சந்திக்க—

வத்ஸன் :—சந்திரவர்மா! தங்களுடைய தரிசனம் கிடைத்த மாத்திரத்தில் நாங்கள் கிருதார்த்தர்களானோம்.

ஜயசீலன் :—(ஓர் புறமாக) ஸ்ரீதரா! என் அருமைக் குழந்தாய்!

ஸ்ரீதரன் :—ஆ! என்னருமைத் தந்தையே! தந்தையே! தந்தையே!

(அணைத்துக் கொள்ளல்)

இராஜசிம்மன் :—ஆ! ஜயசீலரா! என்ன அற்புதம்! ஸ்ரீதரனுடைய தந்தை! ஜயசீலரே! நமஸ்காரம். என்னுயிரை எனக்களித்தவரன்றோ தாங்கள். என் நன்றியை யேற்றுக் கொள்ளவேண்டும்! (மகேந்திரராஜரைப் பார்த்து) பிதாவே! நான் சூரசேனனுடைய கோரமான சிறையிலிருந்து உயிருடன் தப்பித்தது இம்மகானுடைய முயற்சியால் தான்.

ஜயசீலன் :—மகாராஜ்! நமஸ்கரிக்கிறேன்!

மகேந்திரராஜன் :—ஆ! ஜயசீலரா! என் மாறுவேட நண்பர் ஜயசீலரா! மிதிலாபுரிப் பிரயாணி ஜயசீலரா? ஜயசீலரே! நான் எல்லோருக்கும் கடமைப்பட்டவன். என் மைந்தனைக் காப்பாற்றிய மகானுன உமக்கு நான் அடிமையன்றோ! நான் இதுவரை தங்களைத் தெரிந்து கொள்ளாததற்கு மன்னிக்கவேண்டுமாய் மன்றாடுகிறேன்.

சந்திரவர்மா :—ஜயசீலப்பிரபு! தங்களை இதற்கு முன் நான் சந்தித்திலேனாயினும், தங்கள் கீர்த்தியும் புகழும் கேட்டிருக்கிறேன். அரசர் எனக்கிட்ட கட்டளைகள் நிறைவேறியது உங்களால் தான். தங்கள் நட்பு எனக்குக் கிடைக்க நான் யாது தபம் செய்தேனோ!

ஜயசீலன் :—மகாராஜ்! சந்திரவர்மா! வத்ஸரே! உங்களெல்லோருடைய நட்பையும் சகவாசத்தையுமடைய நான் என்ன புண்ணியம் செய்தேனோ! என் நட்பை ஏற்றுக்கொள்ள வேண்டுமாய் மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறேன்! ஹே, சந்திரவர்மா! தங்கள் நண்பரென்று சொல்லிக்கொள்ளவும் நான் அருகனோ என்பது எனக்கே சந்தேகமாயிருக்கிறது.

இராஜசிம்மன் :—அருமைத் தந்தையே! கமலரேகை கதியற்றிருந்த சமயத்தில் அவளை அன்புடனும் அபிமானத்துடனும் ஆதரித்துத் தங்கள் கிரகத்தில் தங்கள் சொந்தக் குழந்தையைக் காட்டிலும் மேலாக வளர்த்து வந்த வேதிய சிரோமணியும் அவர் பார்யையும் இதோ இருக்கிறார்கள். அவ்விருவர்களுக்கும் நாமெல்லோரும் மிகவும் கடமைப் பட்டவர்களாயிருக்கிறோம்.

மகேந்திரராஜன் :—(சதாநந்தரையும் பத்மாக்ஷியையும் வணங்கி) வேதியர் குலமணியே! மறையோய்! அம்மா! நான் எவ்விதம் என் நன்றியைச் செலுத்துவேன்! எல்லோரும் என்பேரில் கருணைவைத்ததால் நான் மறுபடியும் இவ்வுலக இன்பங்களை அடைந்தேன்.

நான் எல்லோருக்கும் அடிமை! (நமஸ்கரித்தல்).

சதாநந்தர்:—மகாராஜ்! எல்லாம் ஈசன் செயல்! நாங்கள் என்ன செய்துவிட்டோம்? ஏதோ எல்லாம் பகவத் அனுக்கிரகம். தீர்க்காயுஷ்ய மஸ்து! தீர்க்காயுஷ்யமஸ்து!

இராஜசிம்மன்:—அருமைத் தந்தையே! தங்களை என்னெதிரில் வைத்துக்கொண்டே தெரியாமல் தங்களுக்குப் பதிலாக நான் செங்கோலை ஒப்புக்கொண்டேன்! மண்டலாதிபதி! இதோ செங்கோலை ஒப்புக் கொள்ளவேண்டும்.

மகேந்திரராஜன்:—இராஜசிம்மா! சந்திரவர்மா! ஹே, சபையோர்களே! நான் சொல்வதைச் செவி சாய்த்துக் கேளுங்கள்! எனக்கோ வயது முதிர்ந்து விட்டது. இனி நான் இராஜ்ய பாரத்தை வகித்தல் இயலாத காரியம். இப்பூமண்டலத்தில் அனேக அரசர்கள் தங்கள் முதுமைப் பருவத்தில் தங்கள் குமாரர்களுக்கு முடி சூட்டி ஆனந்தித்திருக்கின்றனரன்றோ? அவ்விதமே செய்ய நானும் ஆசைப்படுகின்றேன். என் மைந்தன் செங்கோல் ஒப்புக்கொண்டதை என் கண்களாலேயே கண்டேன். ஆனால் பரம்பரையாக நம் குல அரசர்கள் வீற்றிருந்த சிங்காதனத்தில் ஏறி மகுடாபிஷேகம் செய்துகொண்டதைக் காண்கிலேன். ஆகையால் இதோ நானே மகுடத்தைச் சூட்டுகிறேன்.

எல்லோரும்:—அதுவும் நல்ல யோசனை தான்!

இராஜசிம்மன்:—மகாராஜ்! தந்தையே! நான் அரசனாதல் தங்களுக்கு இன்பத்தை விளைவிக்குமெனில் தங்கள் ஆக்ஞைப்படி நடக்கிறேன்.

(வாத்தியங்கள் முழங்க, அந்தணர் ஆசி கூற, ஒற்றர்கள் கட்டியங்கள்கூற, பேரிகை முழங்க, இராஜசிம்மனும் கமலரேகையும் மகேந்திரராஜனை வணங்கிப் பெரிய சிங்காதனத்திலமர்தல். மகேந்திரராஜன் தன் கைகளால் தன் மைந்தனுக்கு மகுடாபிஷேகம் செய்தல்.)

மகேந்திரராஜனும் மற்றவர்களும்:—ஜய விஜயீபவா! ஜய விஜயீபவா! ஜய விஜயீபவா!

மகேந்திரராஜன்:—சபையோர்களே! என் மைந்தனுடைய கலியாணத்திற்கு இன்று சுப முகூர்த்தமாக இருப்பதாக சந்திரவர்மா சொன்னார். வேத சாஸ்திரங்களிற் சிறந்த வேதிய சிரோமணியான சதாநந்தரைக் கொண்டு இப்பொழுதே இராஜசிம்மனுடைய விவாகத்தையும் முடித்து விடுவோம். படாடோபம் இல்லாமலேயே மணம் நிறைவேறட்டும். முன் ஒரு தரம் படாடோபத்துடன் கலியாணத்திற்கு ஏற்பாடு செய்தது போதும். சந்திரவர்மா! தங்களுடைய அபிப்பிராயமென்ன?

சந்திரவர்மா:—எனக்கு மெத்த சந்தோஷம்.

சதாநந்தர்:—மகாராஜ்! சபையோர்களே! நான் எனக்கு விவரம் தெரிந்த நாள் முதல் ஏதோ எனக்குத் தெரிந்தவரை வேதம் ஓதிவந்திருக்கிறேன். என்னுயிரினும் மேலாக நான் நேசிக்கும் இவர்களுடைய விவாகத்தை முடித்து வைப்பது என்னுடைய கடமை! இன்று முகூர்த்தம் நடத்த சந்திரவர்மா எல்லாவற்றையும் சித்தமாக வைத்திருக்கிறார். இப்பொழுது மிகவும் சுபமான காலம் ஆகையால் விவாகச் சடங்குகள் இப்பொழுதே ஆரம்பிக்கலாம்.

மகேந்திரராஜன்:—அப்படியே செய்வோம்.

(விவாகச் சடங்குகள் நடத்தல். கடைசியில் கன்னிகைகள் மங்களம் பாட, ஒற்றர்கள் கட்டியங் கூற, மங்கள வாத்தியங்கள் முழங்க, அந்தணர் ஆசீர்வதிக்க, சந்திர

வர்மா, மகேந்திரராஜன், சதாநந்தர், பத்மாக்ஷி எல்லோரும் ஆனந்தக் கண்ணீர் பெருக்க, துந்துபி முழங்க, பேரிகை சப்திக்க, எல்லோரும் புஷ்பங்களை வருஷிக்க, மிகுந்த கோலாகலத்துடன் சுபமுகூர்த்தத்தில் இராஜசிம்மன் கமலரேகைக்கு மாங்கல்யதாரணம் செய்தல். தம்பதிகளை எல்லோரும் ஆசீர்வதித்தல். அந்தணர்களுக்கும் மற்றப் பிரஜைகளுக்கும் சந்தனம், புஷ்பம், தாம்பூலம், சுவர்ண தானம், பூமிதானம், கோதானம், சகலவித தானங்களையும் கொடுத்தல். எல்லோரும் ஆனந்த பரவசராய் இருத்தல்.)

மகேந்திரராஜன் :—சபையோர்களே! என்னே ஈசனது கருணை! என் வாழ்நாளில் இது தான் புனிதமான நாள்! என் மைந்தனுடைய பட்டாபிஷேகமும் மணமும் ஒரே நாளில் நடந்தேறின. அதற்கு அறிக்கையாக நான் என் பிரஜைகளுக்குச் சிற்சில நன்கொடைகளை அளிக்க விரும்புகிறேன். இது முதல் பதினைந்து வருடங்களுக்குக் குடிகள் ஒருவிதமான வரியும் இராஜாங்கத்துக்குச் செலுத்தவேண்டியதில்லை. (கரகோஷம்) சிறைச்சாலைகளிலிருக்கும் கைதிகளெல்லோரையும் விடுவித்திருக்கிறது. (கரகோஷம்) இப்பொழுது யுத்தத்தில் கைது செய்திருக்கும் எதிரிகள் எல்லோரையும் மன்னித்திருக்கிறது. (கரகோஷம்) இன்று மாலை இந்நகரவாசிகளனைவர்க்கும் சுவர்ணம் வழங்கப்படும். (கரகோஷம்) இன்று முதல் பத்துவருஷங்கள் வரை அரண்மனையில் ஏழைகளுக்கு அன்னதானமும் வஸ்திரதானமும் செய்யப்படும். (கரகோஷம்) நகருக்கு வெளியிலிருக்கும் ஸ்ரீதேவியின் கோயிலைப் பல்லாயிரம் பொன் செலவழித்துப் பெருங் கோயிலாகக் கட்டப்படும்! (கரகோஷம்!) சபையோர்களே! மற்றேர் விக்ஞாபனம். என்னரிய சந்திரவர்மா துறவறங் கொள்வதாகத் தீர்மானித்திருக்கிறார். நான் இப்பொழுது துறவறங் கொள்ளாவிடினும், அவருடைய சிஷ்யனாக அவருடன் வாழலாமென்று நினைக்கிறேன்! எனக்கும் வயதாய் விட்டதனால், ஆத்மவிசாரணை செய்யவேண்டியது அவசியமெனத் தோன்றுகிறது.

வத்ஸன் :—மகாராஜ்! நானும் சந்திரவர்மாவின் சிஷ்யனாகத் தங்களுடன் வரத் தயாராயிருக்கிறேன்.

ஜயசீலன் :—மகாராஜ்! சந்திரவர்மா அவர்களுடைய சிஷ்ய கோஷ்டியில் என்னையும் ஒருவனாகச் சேர்த்துக்கொள்ளவேண்டுமாய்க் கோருகிறேன்.

மகேந்திரராஜன் :—ஆ! இது ஒரு சத் சங்கமே! சந்திரவர்மா துறவறங்கொண்டு எங்களுக்கு குருவாக விளங்க, நாமெல்லோரும் அவருடைய சிஷ்யர்களாக இருப்பதைவிட மேலான பதவி இனி இவ்வுலகில் நமக்கென்ன யிருக்கிறது? ஹே, சபையோர்களே! எல்லோரும் எழுந்து நின்று ஸ்ரீ இராஜசிம்ம மகாராஜாவையும், கமலரேகை மகாராணியையும் வாழ்த்துவோம்.

எல்லோரும் :—(எழுந்து நின்று) ஜயவிஜயீபவா! இராஜசிம்ம மகாராஜா, கமலரேகை மகாராணி பல்லாண்டு பல்லாண்டு பற்பல வாண்டு வாழி! ஜயவிஜயீபவா!

(காட்சி முடிகிறது)

[முற்றிற்று.]

மங்களம்.

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெலா மரநாமமே
சூழ்க வையகமுந் துயர் தீர்க்கவே!

# பரோபகாரம்.

(ஸ்ரீமதி குகப்பிரியை.)



"பரோபகாராய இதம் சரீரம்" என்னும் பழமொழி பொதுவாக வடமொழி தெரிந்தவர்களுக்கும் தெரியாதவர்களுக்கும் தெரிந்திருக்கக் கூடும். பிறர்க்குதவி செய்தல் உலகில் மனிதராய்ப் பிறந்த நாம் ஒவ்வொருவரும் செய்ய வேண்டிய கடமை.

அன்றியும் நாம் எக்காலத்தும் எவ்விடத்தும் யாதொருவிதமான பிரதியுபகாரத்தையும் எதிர்பாராமலே நம்மாலியன்ற உதவியைச் செய்யவேண்டும்.

ஆஸ்திகத்தன்மை மிகுந்த நம் நாட்டில் கடவுளுக்குத் தொண்டு செய்தலைவிட அவரைப் பணியும் தொண்டர்களுக்குத் தொண்டு செய்தலே சிறந்தது என்று கூறப்படுகிறது. இதனாலேயே "இறைவரோ தொண்டருள்ளத் தொடுக்கம்" என்றார் ஔவையார்.

வேதத்தில் "மனுஷயக்ஞம்" என்பதைக் குறித்துச் சொல்லுங்கால் மனிதனுடைய முக்கியமான கடமைகளில் பிறர்க்குதவி செய்தலையே முதன்மையாய்க் கூறப்பட்டிருக்கிறது என்று அறிவாளிகள் கூறுவர்.

அன்பர் பணிசெய்யவெனை ஆளாக்கிவிட்டு
விட்டால்
இன்பநிலை தானே வந்தெய்தும் பராபரமே

என்று கூறினர் தாயுமானவர். ஆதலால் பரோபகாரத்தினாலேயே "முக்தி" என்னும் வீடும் கிடைக்குமென்பதே பெரியோர் கொள்கை என்பது விளங்குகிறதல்லவா?

பாபம் நிறைந்து கிடக்கும் இவ்வுலக வாழ்க்கை கானல் நீரென்றும் துறத்தலே நன்மையென்றும் சொல்லும் சாதுக்கள் கூடப் பிறருக்குதவி என்னும் பெருங் குணத்தால் முக்தி அடையலாமென்று சொல்லியிருக்கிறார்கள்.

மறமலின் உலகவாழ்க்கையே வேண்டும்—
வந்து நின் அன்பர் பணி செய்தால் அறமது
[கிடைக்கும்.

என்றதின் உட்கருத்து இதுவேயன்றோ!

திருவருட்பிரகாசவள்ளலாரெனும் இராமலிங்க சுவாமிகள்

அப்பா நான் வேண்டுதல்
கேட்டருள் புரிதல் வேண்டும்
ஆருயிர்கட் கெல்லாம் நான்
அன்பு செயல் வேண்டும்

என்று கூறியிருக்கிறார்.

நன்மையொன்றுண்டு, அது என்ன? உதவி செய்தோமென நாமடையும் சந்தோஷமே.

உதாரணமாக, பசியால் வருந்தும் ஒரு ஏழைக்குணவளித்துப் பசியைத் தணித்தவுடன் நம்முடைய மனதில் ஒருவிதமான உற்சாகமுண்டாகிறது. இந்த உற்சாகமானது பிறகு துன்பமாய் மாறக் கூடியதன்று. இதன்றி இன்னொரு நன்மை என்னவென்றால், பிறர்க்குதவிசெய்பவரிடம் பொதுவாக ஜனங்கள் பிரீதிகொள்ளுகிறார்கள். உதவி செய்யுமுன் மனம் இளகிக் கருணை உண்டாகிறது; கருணையுள்ள மனத்துடன் செய்யும் உதவியானது கடவுளின் அருளுக்கு ஆளாக்குகிறது.

ஆனால் சிலர் கௌரவத்திற்காகவோ டம்பத்திற்காகவோ முன் வினைகளைத் தொலைக்கும் என்பதற்காகவோ தான தருமங்கள் செய்கிறார்கள். மேற்கூறிய கருத்துக்கள் எவையுமின்றிப் பலனைக் கோராமல் நாம் செய்யவேண்டிய கடமை என்று எண்ணிச் செய்தலே உத்தமம். இப்படிச் செய்வோருக்குண்டாகும் மனோற்சாகம் என் உண்டாவதில்லை என்றால், "தன்னுயிரைப் போல் மன்னுயிர்" என்ற பேதமற்ற உணர்ச்சியினாலேயே.

பரோபகாரம் என்ற செயலுக்குத் தன்னவர், பிறர், உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்கிற பேதமே கூடாது. உதாரணமாக, சத்திரம் கட்டுபவர்களும் குளம் வெட்டுபவர்களும் தங்கள் இனத்தாருக்காவது, தங்கள் நண்பருக்காவது, சுற்றத்தாருக்காவது என்று எண்ணியிருப்பார்களா? அவர்களுடைய கொள்கை என்ன? யாராயிருப்பினும் சரி, அவர்கள் நமக்கு வேண்டியவர்களே, இவர்களுடைய இன்பதுன்பங்கள் நம்முடையவைகளே என்னும் கருத்தல்லவா. ஆதலால் மானிடராய்ப் பிறந்த நாம் ஒவ்வொருவரும் பரோபகாரத்துக்காகவே இவ்வுடலைச் சுமந்திருத்தல் வேண்டுமென்றும், கேவலம் நாம் ஆடவும் பாடவும் உண்ணவும் உறங்கவுமல்லவென்றும் ஒவ்வொருவரும் அறிந்து அதன்படி நடத்தல்வேண்டும் என்பதே கடவுளுடைய விருப்பம்.

# மாயா விநோதக் கடிதம்.

(ஸ்ரீமான் S. A. ஸ்ரீநிவாச சர்மா,)
(*Auditor, A.-G.'s Office, Madras.*)

நான் சாயந்திரம் என் உத்தியோக அலுவலை முடித்துக்கொண்டு வீட்டிற்கு உற்சாகத்துடன் திரும்பி வந்தேன். என் பிரிய மனைவி புன்சிரிப்புடன் என் உத்தியோக சிரமத்தினால் ஏற்பட்ட என் பசிக்களைப்பை ஆற்றச் சிற்றுண்டியையும் காப்பியையும் தயாராய் வைத்துக்கொண்டு என் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருப்பது வழக்கம். நான் என் கச்சேரியிலிருந்து திரும்பும்பொழுது அந்த வழக்கம் ஞாபகம் வரவே எனக்கு மேற்சொன்ன உற்சாகம் உண்டானது. நான் வீடு சேர்ந்ததும் என் உத்தியோக உடையைக் கழற்றி, கைகால், முகம், முதலியவைகளைச் சுத்தி செய்துகொண்டு என் சாய்வுநாற்காலியில் உட்கார்ந்துகொண்டு, அன்று நான் காலையில் வெளியே சென்றபிறகு வந்த தபால் கடிதங்களைப் பார்த்துக்கொண்டே சிற்றுண்டியருந்துகிற வழக்கப்படிக் கடிதங்களைக் கையில் வைத்துக்கொண்டு வாயில் அல்வாத்துண்டுகளைப் போட்டு மென்றுகொண்டிருந்தேன். அப்பொழுது எனக்கு வந்த நாலு கடிதங்களில் ஒரு அரையணாக் கார்டு என்னை மயிர்க்கூச்சலிடும்படிச் செய்தது. அப்படி முழுவதும் பயப்படும்படியாய் நான் நடுங்காவிட்டாலும் வாயில் மென்றுகொண்டிருந்த

அல்வா முழுங்கமுடியாமல் அவ்வளவு சீக்கிரம் நாக்கு உலர்ந்துவிட்டது. காப்பியும் ருசிக்க வில்லை.

அருகில் நின்று விசிறிக்கொண்டிருந்த என் மனைவி ஆச்சரியமடைந்த கண்களுடன் என்னைப் பார்த்தவளாய் "நாதா! என்ன விசேஷம்? ஏதோ பேயைக் கண்டவர்களைப்போல் பார்க்கி றீர்களே" என்றாள். என் திகிலை ஒருவாறு அடக்கிக்கொண்டு "ஒன்றுமில்லை, இப்பாத்திரங்களை அலம்பிவிட்டு உன் சிற்றுண்டியையும் முடித்துக் கொண்டு வா, சொல்கிறேன்" என்றேன்.

அவள் அதேமாதிரி முடித்துக்கொண்டு வந்ததும் "இந்தக் கார்டைப் பார்" என்று அவள் கையில் அதைக் கொடுத்தேன்.

அவள் அதைக் கையில் வாங்கிப் பார்த்ததும் நடுங்கினவளாய் ஒரு மெல்லிய கூச்சலுடன் என்மேல் சாய்ந்து "நாதா! என்ன பயங்கரம்! இதற்கு என்ன அர்த்தம்?" என்றாள்.

அக்கடிதத்தில் பெயர், ஊர், தேதி ஒன்றுமில்லாமல் "இந்த வருஷம் முடிவதற்குள் மரணமடையச் சித்தமாயிரு" என்று அச்சு எழுத்து மாதிரி எழுதியிருந்தது.

"அர்த்தமா? வேண்டுமென்று பயமுறுத்துவதற்காக எவனாவது பைத்தியக்காரன் அல்லது போக்கிரி எழுதியிருக்கவேண்டும். இம்மாதிரிக் காரியங்களைச் செய்ய மனிதர்களுக்கு வெட்கம் இல்லாமற் போயிற்றே! இந்தப் பித்தலாட்டங்களுக்கு நீ பயப்படவேண்டியதில்லை. இருந்தாலும் போலீஸ் ஸ்டேஷனிற்குச் சென்று என் நண்பன் ஸப்இன்ஸ்பெக்டர் நடேசனிடம் காண்பிக்கிறேன்" என்று சொல்லி அவளைத் தேற்றினேன்.

"ஆமாம், அப்படியே செய்யுங்கள். அதை எழுதின போக்கிரியைப் போலீசார் கண்டு பிடித்துச் சிறைச்சாலைக்கு அனுப்பவேண்டும் என்று என் இஷ்டதெய்வத்திற்கு வேண்டிக் கொள்கிறேன்" என்றாள்.

நான் போலீஸ் டாணாவில் இந்தக் கார்டைக் காண்பித்தவுடன் ஸப்இன்ஸ்பெக்டர் நடேசய்யருக்கு உண்டான ஆச்சரியத்திற்கு அளவில்லை. "இந்த மொட்டைக் கடிதத்திலிருந்து கண்டுபிடிப்பது மிகவும் கஷ்டம். இருந்தாலும் அந்தக் கார்டை இங்கு வைத்து விட்டுப் போ. என்னால் ஆனதைப் பார்க்கிறேன்" என்றான்.

நான் சற்று யோசித்து "இவ்விஷயத்தைப் பற்றி உன் அபிப்பிராயம் என்ன?" என்றேன்.

அவன் என்னைச் சற்று ஏற இறங்கப் பார்த்து நிதானமாய் "உனக்கு யாராவது விரோதிகள் உண்டா?" என்றான்.

நான் சிரித்துக்கொண்டே "அது எப்படிச் சொல்ல முடியும்? எனக்குத் தெரிந்த எல்லா மனிதர்களும் என்னிடத்தில் பிரியமாயிருக்கிறதாகத்தான் நான் எண்ணிக்கொண்டிருக்கிறேன். ஆனால் இப்பொழுது ஞாபகம் வருகிறது. என் மோட்டார் ஓட்டி"—என்றேன்.

உடனே ஸப்இன்ஸ்பெக்டர் பரபரப்புடன் தன்னுடைய கைநோட் புஸ்தகத்தையும் எழுதுகோலையும் எடுத்துக்கொண்டு "மேலே சொல், என்ன சமாச்சாரம்?" என்றான்.

"அப்படி ஒன்றும் இல்லை, என் மோட்டார் வண்டியை இப்பொழுது நானே ஓட்டுகிறது உனக்கே தெரியும். ஆனால் சென்ற ஆறுமாதம் முன்வரையிலும் என்னிடம் முத்துசாமி என்று ஒரு டிரைவர் இருந்தான். ஒரு நாள் நான் புதியதாய் வரவழைத்திருந்த மோட்டார் ட்யூப்களைக் காணவில்லை. அவன் மேல் எனக்கு மிகவும் சந்தேகமிருந்ததால் நான் அவனைக் கேட்க அவன் குடிமயக்கத்தால் மரியாதையின்றித் தாறுமாறாய்ப் பதில் சொன்னதால்

அவனை வேலையை விட்டு விலக்கினேன். அவன் வெளியிற் போகும்பொழுது, "என்ன சார், இருங்கள் பார்த்துக் கொள்கிறேன்" என்று உளரிவிட்டுச் சென்றான்" என்றேன்.

"சரி, சரி, அவன் கையெழுத்து உன்னிடம் இருக்கிறதா? இருந்தால் அதையும் இக்கார் டையும் பார்க்கலாம்" என்றான்.

"ஆ! அவன் மாதாமாதம் சம்பளம் வாங்கிக் கொண்ட ரசீதுகள் இருக்கின்றன, தருகிறேன். ஆனால் இவ்வளவு தைரியமாய்க் கார்டில் எழுதுகிறவன் தன் கையெழுத்தைத் தெரியும்படி இக்கார்டில் எழுதுவானா?" என்றேன்.

"சாதாரணமாய் உனக்கும் எனக்கும் தெரியாது. எப்படி மறைத்து எழுதினாலும் இங்கு ஒரு எழுத்து, அங்கு ஒரு கீறல் இவைகளிலிருந்து சுலபமாய் நிபுணர்கள் கண்டுபிடித்து விடுவார்கள். அப்படிக் கண்டுபிடிக்கும் நிபுணர்கள் எங்கள் தலைமையாபீசில் இருக்கிறார்கள்" என்றான்.

நான் பிறகு வீடுசென்றதும் முத்துசாமி கையெழுத்துப் போட்ட மூன்று ரசீதுகளைப் போலீஸ் டாணாவிற்கு அனுப்பினேன். ஆனால் இந்த சிரமம் எடுத்திருக்கவேண்டியதில்லை. மறுநாள் சிங்கபூரிலிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் முத்துசாமி தான் செய்தது மிகவும் பிசகு என்றும் இப்பொழுது ஒரு ராணுவ உத்தியோகஸ்தனிடம் வேலை கிடைக்கும்போலிருக்கிறதால் தன் பழைய கிருத்தியங்களை மன்னித்துவிட்டுத் தனக்கு ஒரு நற்சாட்சிப்பத்திரம் அனுப்பும்படியாயும் எழுதியிருந்தான். நேற்றுவந்த கார்டு ப்ராட்வேயில் தபாலில் போட்டிருந்தபடியாலும் இக்கடிதம் சிங்கபூரிலிருந்து வந்ததாலும் இந்த மாயா விநோதக்கார்டை எழுதியது முத்துசாமியாயிருக்கமுடியாது என்று நிச்சயத்துக்கொண்டு இவ்விஷயத்தை ஸப் இன்ஸ்பெக்டருக்கும் தெரியப்படுத்தினேன்.

அப்படியானால் யாரிடமிருந்து அக்கார்டு வந்தது? இக்கேள்வி இரவும் பகலும் என்னைத் தொந்திரவு செய்தது. நடேசய்யரும் தங்களால் முடியவில்லை என்று அக்கார்டை ஒருமாதத்திற்குப்பிறகு திருப்பிவிட்டான். நான் உத்தியோகத்திற்கு தினம் செல்லும் பொழுது அக்கம்பக்கம் பார்த்துக்கொண்டு மோட்டாரை ஜாக்கிரதையாய்ச் செலுத்திக் கொண்டுபோனேன். வெளியில் கடைகளில் ஒன்றும் வாங்கித்தின்கிறதில்லை. காகிதங்கள், கடிதங்கள் இவைகளில் விஷம் தடவி அவைகளால் சாவு ஏற்படும் என்று நான் கதைகளில் வாசித்திருந்ததால் எப்பொழுதும் கையில் கையுறை போட்டுக்கொள்ள ஆரம்பித்தேன். இரவில் தூங்கும்பொழுது யாரோ ஒருவன் என்னைக் கத்தியாலாவது துப்பாக்கியாலாவது கொல்ல வருகிறதாக துர்சொப்பனங் கண்டு அடிக்கடி விழித்துக்கொள்ளத் துடங்கினேன்.

என் மனைவிக்கு நாய்கள் என்றால் மிகவும் வெறுப்பு; அவ்வளவு வெறுப்புடன் இருந்துங்கூட இரவில் வீட்டைப் பாதுகாக்க ஒரு நாய் வாங்கவேண்டுமென்று என்னிடம் சொன்னதின்பேரில் நாய் வியாபாரியிடம் சென்று நல்ல ஜாதி நாயாக ஒன்று வாங்கி வீட்டில் கட்டிக் கொண்டு வளர்க்க ஆரம்பித்தேன். இந்த நாய் இரவில் குரைக்கிற சப்தம் பொறுக்கவில்லை. ஒரு இரவாவது எனக்கும் என் மனைவிக்கும் தூக்கமே கிடையாது. ஆனால் இந்த விபரீதக் கார்டை எழுதினவன் இரவில் என் கிருகத்திற்கு வரபயப்படுவான் என்ற தைரியத்தினாலே பேசாமல் இந்த அவஸ்தையைப் பொறுத்துக்கொண்டிருந்தோம். ஒரு நாள் காலையில் நான் காலைக்கடனை முடித்துக்கொண்டு வெளிப்பக்கம் வந்தபொழுது என் பக்கத்து இரண்டு வீடுகளுக்கடுத்த வீட்டுக்காரர் மிகவும் கவலையுற்ற முகத்துடன் செல்வதைக்

கண்டேன். என்னை பார்த்ததும் "இங்கு பார், ராமகிருஷ்ணா! இந்தக் கார்டை பார், நேற்றுக் காலையில் எனக்குக் கிடைத்தது. இதைப் பார்த்தது முதற்கொண்டு என் வீட்டில் எல்லாருக்கும் ஒரே திகில்தான்" என்றார்.

நான் அக்கார்டைப் பார்த்து "ஈச்வரா! ஒரே கார்டு, ஒரே எழுத்து, ஒரே வார்த்தைகள்!" என்று கத்தினேன். அவர் "என்ன விசேஷம்?" என்று கேட்டதும் எனக்குக் கிடைத்த கார்டு விஷயங்களை எல்லாம் தெளியச் சொன்னேன். இதைக் கேட்டதும் அவர் "ஆம்! ராமகிருஷ்ணா! இது ஒரு பைத்தியக்காரன் செயலாய்த்தான் இருக்கவேண்டும். இருந்தாலும் நான் போலீஸ் ஸ்டேஷனுக்குச் செல்கிறேன்" என்று சொல்லி வேகமாய்ச் சென்றார்.

போலீசார்கள் என் விஷயத்தில் எவ்வளவு பிரயாசை எடுத்துக்கொண்டார்கள் என்பதை நான் அவரிடம் சொல்லாமல் நமக்கென்ன என்றிருந்தேன்.

இம்மாதிரி மூன்று மாதங்கள் சென்றன. வருஷம் முடிவடையும் காலமும் சமீபித்தது. என் உள் மனதில் திகிலும் ஜாஸ்தியாகத் துடங்கியது. நான் என் சிநேகிதன் ஸப் இன்ஸ்பெக்டர் மூலியமாய் ஒரு லைஸென்ஸ் வாங்கிக்கொண்டு ஒரு கைத்துப்பாக்கியும் வாங்கினேன். இதை இரவிலும் பகலிலும் என்னருகிலேயே வைத்திருந்தேன். அஸ்தமித்தபிறகு வீட்டை விட்டு வெளி நகருகிறதே கிடையாது.

ஒரு நாள் இரவு என்னுடைய தினசரிப் பத்திரிகையாகிய சுதேசமித்திரனை வாசித்துக்கொண்டிருந்தபொழுது அதில் அன்று பதிப்பித்திருந்த ஒரு விஷயம் என் மூளையில் இருகப் பாய்ந்தது. அது பின்வருமாறு:—

"இச்சென்னை ராஜதானியில் எங்கு பார்த்தாலும் ஆச்சரியமான மொட்டைக் கடிதங்கள் பரவியிருக்கின்றன என்று எங்களுக்குச் செய்தி எட்டிக்கொண்டிருக்கின்றது. எல்லாக் கடிதங்களும் ஒரே விதமான எழுத்துகளால் எழுதப்பட்டு யாராருக்கு அனுப்பப்பட்டதோ அந்தந்த விலாசதார்கள் எல்லாரும் இந்த வருஷ முடிவிற்குள் அவரவர்கள் மரணத்தை எதிர்பார்க்கும்படி எழுதப்பட்டிருக்கின்றன. இக்கடிதங்களை எழுதினவர்களைக் கண்டுபிடிக்க இதுவரையில் எடுத்துக்கொண்ட பிரயாசைகள் எல்லாம் வீணாயின என்று அறிகிறோம். இவைகளெல்லாம் ஒரு பைத்தியக்காரனுடைய செயல்கள் என்று நாம் நினைக்கிறோம். ஆனால் இவ்விஷயத்தில் போலீஸ் இலாகா தலைமையாபீஸ்காரர்கள் மிகவும் ஊக்கமுடையவர்களாய் இருப்பதாகத் தெரிகிறபடியால் அதிசீக்கிரத்தில் ருசிகரமான விஷயங்கள் வெளியில் வரும் என்று எதிர்பார்க்கிறோம்."

இதை வாசித்ததும் இதுகாறும் திகிலடைந்திருந்த என் மனம் சற்று நிம்மதியடைந்தது. இந்த ராஜதானி முழுவதும் கார்டுகளை பரப்பிய போக்கிரி அவ்வளவு மனிதர்களையும் ஏக காலத்தில் கொல்லத் துணியமாட்டான் என்று ஒருவாறு மனதைத் தேற்றிக்கொண்டு அன்று இரவு சற்று நன்றாய்த் தூங்கினேன்.

இம்மாயா விநோதக் கடிதங்கள் விஷயம் தேசமுழுவதும் ஒரு பெரிய கிளர்ச்சியை உண்டாக்கிற்று. பத்திரிகைகளில் எல்லாம் இவ்விஷயந்தான். ஒரு அரையணாப் பத்திரிகை ஒன்று அம்மொட்டைக் கடிதங்களில் ஒன்றை போட்டோ எடுத்து படம் அச்சிட்டிருந்தது. அடையாரில் ஒரு மதசம்பந்தமான பத்திரிகை இம்மொட்டைக் கடிதங்களின் ஆசிரியனுடைய சூட்சம சரீரத்தின் படம் ஒன்றை வெளியிட்டது! பெரிய பத்திரிகையின் பிரசுரா

லயங்களில் இம்மொட்டைக் கடிதங்கள் விஷயமாய்க் கடிதங்கள் கூடை கூடையாய் குவியலாயின. துப்பற்றியும் தமிழ் நாவல்கள் எழுதும் நூலாசிரியர்கள் எல்லாரும் தங்களுக்குத் தோன்றிய சூழ்ச்சிகளை எழுதலானார்கள். தெருவெல்லாம் வைக்கப்பட்டிருக்கும் தபாற் பெட்டிகள் அருகிலும் தபாலாபீஸ் பெட்டிகள் அருகிலும் மாறுவேஷமணிந்து போலீஸ்காரர் மறைவாக உட்கார்ந்து காவல் காக்க வேண்டுமென்று ஒருவர் எழுதினர். ஒரு இந்திய "ஷெர்லாக் ஹோம்ஸ்" மோப்ப நாய்களை அம்மொட்டைக் கடிதத்தில் எழுதப்பட்ட மையை வாசனை பிடிக்கவிட்டு அந்த மையின் வாசனையால் குற்றவாளியை கண்டுபிடித்து விடலாம் என்று எழுதினர்! இந்த மாதிரி அதி சூழ்ச்சியாய் அனேகர் எழுதலானார்கள். ஆனல் இவைகளை ஒருவரும் சட்டை செய்யவில்லை.

போலீஸ் இலாகாவை வைதவர்களுக்குக் கணக்கில்லை. சோம்பேறிகள் என்றும், மூளையில்லாதவர்கள் என்றும், தூங்குமூஞ்சிகள் என்றும் அநேக திவ்விய சொற்கள் வழங்கின. இதரதேசத்துப் பத்திரிகைகளில்கூட இந்த தேசத்துப் போலீஸ் வழிகளை நிந்தித்துத்தங்கள் தேசத்துப் போலீஸ் இலாகாவைச் சிலாகித்து வியாசங்கள் வெளிவந்தன! இவ்விஷயத்தில் ஜனங்களின் உற்சாக உணர்ச்சியைக் கண்டு மகிழ்ந்து சென்னையில் ஜனங்கள் தலைவரும், காங்கிரஸ் கட்சியை சேர்ந்தவரும், கோடீச்வாருமாகிய லக்ஷ்மீகாந்தம் என்பவர் இம்மாயாவினோத மொட்டைக் கடிதங்களின் ஆசிரியரைக் கண்டு பிடிக்கச் சரியான ருசுவைச் காட்டுகிறவர்களுக்குத் தான் ஐயாயிரம் ரூபாய் வெகுமதி கொடுப்பதாயும் அப்பணம் ஏற்கனவே சுதேசமித்திரன் பத்திராதிபர்வசம் ஒப்புவிக்கப் பட்டிருப்பதாகவும் விளம்பரப்படுத்தினர். இவ்வளவு பணம் கொடுப்பதாகச் சொல்லியும் ஒரு துப்பும் வெளிவரவில்லை.

சென்னை சட்டசபையில் இவ்விஷயமாய்க் கேள்வி கேட்கப்பட்டது. அது பின்வருமாறு சுதேசமித்திரனில் வெளிவந்தது.

"சென்னை சட்டசபை"

காப்டென் ஸர் மகாராஜா சத்யேந்திரபகதூர், எம்.எல்.ஸி., கனம் ஹோம் மெம்பரைப் பார்த்து கேட்ட கேள்வி:—"இப்பொழுது இந்த ராஜதானி முழுவதும் பரவி அதனல் ஜனங்களுக்கு பீதியும் கலவரமும் உண்டாக்கியிருக்கும் மாயா வினோத மொட்டைக்கடிதங்களின் ஆசிரியரைக் கண்டுபிடிக்கப் போலீஸ் இலாகா ஏதாவது பிரத்தியேக முயற்சிகள் எடுத்துக் கொண்டிருக்கின்றதா?"

கனம் ஹோம் மெம்பரின் பதில்:—"இவ்விஷயமாய் துரைத்தனத்தாருக்கு ஒன்றும் தெரியாது." (எதிர்க்கட்சியின் சிரிப்பு.)

டிசம்பர் மாதம் முப்பத்தொன்றும் தேதி வந்தது. அன்று என்ன நடக்கப் போகிறதோ என்ற யோசனையுடன் படுக்கையை விட்டு எழுந்திருந்தேன். என் மனைவியின் முகத்தில் ஈயாடவில்லை. அன்று விடுமுறையாகையால் நான் வெளியிற் செல்லவில்லை. "வருஷமுடிவிற்குள் மாணத்தை எதிர்பார்க்கவேண்டும்" என்று அந்தக் கடிதம் சொல்லியிருக்கிறது. இன்றே வருஷக்கடைசி நாள். என் மாதிரியாகவே எவ்வளவோ பெயர்கள் திகிலடைந்து கொண்டிருப்பார்கள் என்று எண்ணுகையில் அது வேறு கலக்கம் உண்டாயிற்று. பகல் பத்து மணிக்கு நான் ஸ்னானம் செய்துவிட்டு வேறு உடையணிந்து வெளியில் வந்தபொழுது என் மனைவி சிரிப்பு மிகுதியால் அடக்கமுடியாமல் கண்களில் நீர் பெருகத் தூணைப் பிடித்துக்கொண்டு நின்றுகொண்டிருந்தாள்.

"நாதா! நாதா! இது ரொம்ப ரொம்ப வேடிக்கை!" என்று சிரித்தாள்.

"சரி, இவளுக்கு ஹிஸ்டீரியா வந்து விட்டது" என்று எண்ணி "என்ன நடந்தது? என்ன அவ்வளவு சிரிப்பு?" என்றேன்.

"ஓ! என்னால் அடக்கமுடியவில்லை, ஹா! ஹா! அதி விநோதம்! விநோதம்!—வேடிக்கை! என்னால் மூச்சுவிடக் கூடமுடியவில்லை" என்று மறுபடியும் குபீலென்று சிரிக்கலானாள்.

நான் உடனே நன்றாய்க் கோபம்கொண்டவன் மாதிரி நடித்து "என்ன நடந்தது சொல்" என்றேன். அதற்கு அவள் பதில் சொல்லாமல் என் மேஜைக்குச் சென்று ஒரு அரையணா கார்டைக் கொண்டுவந்து நீட்டினாள்.

"என்ன! இன்னொரு கார்டா? ஈச்வரா! இதற்குச் சிரிப்புக் கூடவேண்டுமா?" என்று திகிலுடன் சொன்னேன்.

"அதை வாசியுங்கள், வாசியுங்கள்" என்று அவள் திணறிக்கொண்டு பதிலளித்தாள்.

உடனே பதறுகின்ற கைகளால் அக்கடிதத்தை வாங்கி வாசித்தேன். "முன்னால் வந்த கடிதத்தைத் தணல்சூட்டில்காட்டவும்" என்று எழுதியிருந்தது. என் மூளையில் ஒரு ஆச்சரிய யோசனை தோன்றியது.

"எங்கே? எங்கே? அந்தப் பழைய கடிதம்?" என்று கூக்குரலிட்டேன்.

"இதோ இருக்கிறது" என்று இன்னும் சிரித்துக்கொண்டே என் மனைவி அதை என்னிடம் கொடுத்தாள். உடனே அக்கடிதத்தை நெருப்பின் சூட்டில் காண்பித்தேன். எனக்கும் அடக்கமுடியாமல் சிரிப்பு வந்தது. "இவ்வருஷம் முடிவதற்குள் மரணமடைய சித்தமாயிரு" என்ற வார்த்தைகளின் கீழ் பின்வரும் வார்த்தைகள் தோன்றின: "அப்படி மரணமடையச் சித்தமில்லாவிட்டால் கதர் உடையை உபயோகப்படுத்து. எதற்காகச் சீமை உடைகளை யணிந்து மரணத்திலும் கேடுகெட்ட அடிமையாய் இருக்கிறாய்? வெள்ளைக்காரர்கள் எவராவது தங்கள் தேச உடையைத் தவிர மற்றவைகளை உபயோகப்படுத்துகிறார்களா? இதை ஏன் நீ மறந்து போகிறாய்? உன் தேசத்தை அடிமைத்தனத்திலிருந்து மீட்க உன்னாலானதை நீ ஏன் செய்யக் கூடாது? சுத்தமாயும் உண்மையாயுமுள்ள கதர் வேண்டுமானால் சென்னையில் மவுண்ட் ரோட்டில் இருக்கும் லக்ஷ்மீகாந்தம் லிமிடட் கம்பெனியில் கிடைக்கும். உடை நல்லதாயும் விலை சரசமாயும் இருக்கும்" என்று இரகசிய மையினால் எழுதப்பட்டிருந்தது.

எனக்கு உண்டான சந்தோஷத்தினால் சற்று நேரம் ஒன்றும் தோன்றாமல் உட்கார்ந்திருந்தேன்.

"நாதா! இவ்வாச்சரிய விஷயத்தை என்றும் மறக்கமாட்டேன். நான் இனிமேல் என் கராச்சி சில்க் புடவைகளை விட்டுக் கதர் உடையைத்தான் அணியப்போகிறேன். நம் இந்து தேசத்தவர்களிலும் இவ்வளவு நன்றாய் விளம்பரம் செய்யும் நிபுணர்கள் இருக்கிறதே நமது தேசத்திற்கு நல்ல காலம். என்ன சொல்லுகிறீர்கள்?" என்றாள்.

"அதுதான்சரி. இந்தக் கதர் உடையை நானும் அணியப் போகிறேன். வியாபாரப் போக்குத் தெரிந்து உலகமெங்கும் பிரசித்தி அதிசீக்கிரத்தில் அடையும் எந்தக் கம்பெனியும் லாபம் கொடாமல் இராது. ஆகையால் உன் பெயரால் லக்ஷ்மீகாந்தம் கம்பெனியில் இன்று இருநூறு பங்குகள் வாங்கப்போகிறேன்" என்றேன். என் மனைவிக்கு உண்டான சந்தோஷத்தினால் என்னை ஆனந்த ஆலிங்கனம் செய்து கொண்டாள். ஏற்கனவே வாங்கின நாயையும் அன்றே விற்றுவிட்டு அன்று முதல் நாங்கள் இருவரும் கதர் உடையையே உடுத்துக் கொண்டு சுகமாய் வாழ்ந்து வந்தோம்.

சுபம்!

# இரு விவாகங்கள்.

## (காவேரிக்கரையில் பிறந்தவள்.)

### நாடக பாத்திரங்கள்.

| | | |
|---|---|---|
| நாராயணய்யர் | ... | ஓர் தனவந்தர் |
| கோவிந்தன் | ... | அவர் மகன் |
| காமாக்ஷி | ... | அவர் மகள் |
| ராஜம்மாள் | ... | அவர் மனைவி |
| அவர் தாயார் | | |
| வெங்கடராமய்யர் | ... | நாராயணய்யர் நண்பர் |
| கிருஷ்ணமூர்த்தி | ... | அவர் மகன் |
| லக்ஷ்மி | ... | அவர் மகள் |
| அனந்தராமன் | | |
| ஜானகி | ... | அவன் மனைவி |
| விசாலாக்ஷி | ... | அவன் தங்கை |
| சுசீலா | ... | அவள் தோழி |
| முத்து | ... | ஒரு தனவந்தரின் மகளை மணந்து கொண்ட ஒரு அல்ப மனிதன் |
| சிவன், நடேசன் | ... | ஊரிலுள்ள இரு சேம் பேறிகள் |
| ராமய்யா | ... | ஓர் தரகன் |

அங்கம் 1. களம் 1.

இடம் :—அனந்தராமன் வீட்டு வாசற் பக்கம்.

(விசாலாக்ஷியும் சுசீலையும் உட்கார்ந்திருக் கின்றனர்)

விசா :—சுசீலா! உனக்கு சகலமும் தெரிந் தால் நீ இப்படிச் சொல்லமாட்டாய்.

சுசீ :—ஆனாலும் இப்படியா முகத்தைத் தொங்கவிட்டுக் கொண்டிருப்பது? ஒரு நிமிஷமாவது முகத்தில் மாறுதல் உண்டா காதா? சிரிப்பே இப்படி மறைந்து போகுமா?

விசா :—எனது தாயும் தகப்பனும் இறந்து, என்னை வெறுக்கும் எனது தமையனாலும் அவன் மனைவியாலும் சதா இழிவுபடுத்தப் பட்டு—

சுசீ :—ஆம்! உண்மையில் நீ மிக்க கஷ்டத் திற்குள்ளாகி இருக்கிறாய். இருந்தாலும் நீ தைரியத்தைக் கைவிடாமல் பொறுமையா யிருப்பது உன்னைப் போன்ற புத்திசாலி களுக்கழகு. துக்கத்திற்கிடங் கொடுக்காதே.

விசா :—சுசீலா! என் மனதில் குடிகொண் டிருக்கும் ஆறாத் துயரம் வேறொன்றுக்குமே இடங் கொடுக்காது. நான் ஏதோ ஒரு பெரும் சாபத்தால் சூழப்பட்டிருக்கிறேன். எதைப்பற்றி நினைத்தால் எனது துக்கம் பெருகுகிறதோ, அதையே என் மனம் நாடுகிறது. என்ன முயற்சித்தும் பயனில்லை.

சுசீ :—விசாலம்! சாபமாவது! அதெல்லா மொன்று மில்லை. வீணாய்ப் பழைய சங்கதி கள் எதையாவது நினைத்துக்கொள்ளாதே. தைரியமாய் மனதில் தோன்றும் குறைகளை உதறித் தள்ளவேண்டாமோ?

விசா :—சொல்லுவது எளிதே தவிர, அப்படிச் செய்வது மிகக் கஷ்டம். எனது உயர்ந்த பிடிலை என்னிடமிருந்து பிடுங்கி அவனது மைத்துனிக்கு அளித்துவிட்டான். வெகு நாட்களாய்ப் பொக்கிஷம் போல் பாதுகாத் துக்கொண்டிருந்த எனது அருமையான புஸ்தகங்களைப் பழைய விலைக்குக் கடையில் போட்டான். பிறகு அவனும் அவன் மனை வியும் என்னை மிகக் கொடுமையாய் ஏசினார் கள். சுசீலா! ஒருபொழுதுகூட நான் துக்கிக்கவில்லை......

சுசீ :—அதெல்லாம் அவ்வளவு பெரிய காரிய மில்லை. உன் தந்தை இறந்த துக்கம்தான் உன்னை பாதிக்கிறது.

விசா :—உண்மையே. ஆயினும் என்னை சதா துக்கத்தில் அழுத்தி என்னை நகரவேதனைக்

குட்படுத்துவது என் தந்தையின் மரண மல்ல.

சுசீ :—விசாலம்! அத்துக்கத்தை என்னிடம் சொல்லக் கூடாதா? என்னுலியன்றதை நான் செய்யத் தயார்.

விசா :—இவ்வுலகில் என்னைப் போன்ற துர்ப் பாக்கியவதி எவருமே இரார். இத்துக் கத்தை ஒழிப்பதற்கு ஒரே வழிதான்.

சுசீ :—ஆமாம்! ஒரே வழி தான்.

விசா :—என்ன! என்ன சொல்லுகிறாய்?

சுசீ :—நானென்ன சொல்லப் போகிறேன்? உனது விவாகத்தைப் பற்றிதான் சொன் னேன்.

விசா :—நானென்று சொன்னேன். நீ வேறென்று நினைத்துக்கொண்டாய். என் தாயாரைப் பின்தொடர முடிவு செய்து கொண்டேன்.

சுசீ :—இதென்ன அசட்டு வார்த்தை? இறந்த உன் தாயாரைப் பின்தொடருவதாவது?

விசா :—அவளைப் போலவே தற்கொலை செய்துகொள்வது.

சுசீ :—இதென்ன புதுமை! உனது தாய் தற்கொலை செய்துகொண்டாளா?

விசா :—ஆமாம்! கிணற்றில் விழுந்து இறந்தா ளாம். நேற்றுதான் எனது பந்து ஒருவள் மூலமாய்க் கேள்விப்பட்டேன்.

சுசீ :—"அந்தோ! பரிதாபம்! உனது சோக நிலை இப்பொழுதே விளங்கியது.

விசா :—எனது தகப்பனுர் ஊரிலில்லாத சம யத்தில் வீட்டில் இரண்டு மூன்று சாமான் கள் காணமற் போயினவாம். அவைகளை எனது தாயார் கடையில் போட்டுவிற்றதாக வும், தான் நேரிடப் பார்த்தாகவும், போலீ சுக்குச் சொல்லிவிட்டால் எனது தாயாரை ஜெயிலில் கொண்டுவைத்து விடுவார்கள் என்றும் எனது தகப்பனுரின் மூத்த மனைவி க்குப் பிறந்த இந்த அனந்தராமன் சொன்ன னும். தனது இளைய தாயாரைக் கொன்றவன் இவனே. இவனுடனல்லவோ நான் இருக்க நேரிட்டது!

சுசீலா :—அந்தோ! பரிதாபம்! பயந்து கிணற்றில் விழுந்தாளா?

விசா :—அப்பொழுது நான் எட்டு வயதுக் குழந்தை. பள்ளிக்கூடத்திற்குச் சென்றிருந் தேன். திரும்பி வந்தபொழுது பிரேதத்தை தகனம் செய்ய ஏற்பாடு செய்துகொண் டிருந்தனர். அனுதையாக்கப்பட்ட நான் ஒரு மூலையில் பிரமித்து நின்றுகொண்டிருந் தேன். மாரடைப்பினுல் இறந்துவிட்டதாக எனக்கு எல்லோரும் சொன்னுர்கள். எனக்கு நெருங்கிய பந்து ஒருவள் மூலமாக இன்னெரு விஷயம் தெரியவந்தது. அவன் எனக்கு ஒரு வரன் பார்த்திருக்கிருனம். கேட்டாயா சுசீலே! என் அத்தையே அந்த வரனை உயர்வாய் மதிக்கவில்லை. அவன் யாரோ.........

சுசீலே :—நீ கண்டிப்பாய் மறுக்கப் போகிரு யல்லவா? தகுந்தவனுயில்லாவிடில் மணப்ப தெப்படி?

விசா :—எதிர்க்காமலென்ன செய்யக்கூடும்? என்மேல் அளவற்ற விரோதங் கொண்ட அவன் எனக்கு எத்தகைய மனிதனைப் புருஷ ணுகத் தேடுவான்? கிணறுதான் கடைசிப் படுக்கையாகுமோ என்னமோ? இதோ வருகிருன். மறைவாய் நின்று கொண்டிரு.

(அனந்தராமன் வருகிருன். சுசீலே மறைந்து கொள்கிருள்.)

அன :—என்னடீ! என்ன செய்கிருய் இங்கு? அப்பா இருந்தபொழுது எத்தனை கர்வத்

துடன் இருந்தாய்? இப்பொழுது பார்! உனக்கு விவாகம் நானே செய்துவைக்கும்படி நேரிட்டது. முழிக்கிறதைப் பார்! ஆமாண்டீ! உனக்கு அகமுடையான் தேடியிருக்கிறேன். கலியாணம் கூடிய சீக்கிரத்தில் நடக்கப்போகிறது. உனக்குக் கலியாணம் செய்வதைவிடக் கல்லெடுப்பு செய்வது தான் சரி. ஆயினும் நான் கலியாணம் எப்படியோ கஷ்டப்பட்டாவது செய்துவிடத் தீர்மானித்திருக்கிறேன். இந்தக் காரியம் முடிந்ததும் நீ புருஷன் வீட்டிற்குத் தொலைந்து போவாய். பிறகு நான் உன் முகத்தில் விழிக்கவேண்டிய பிரமேயமே ஏற்படாது.

(ஜானகி வருகிறாள்)

ஜானகி:—என்னடி செய்கிறாய் இங்கு? போ உள்ளே!

விசா:—உன்னிஷ்டம் தானோ? விவாகம் தடையில்லாமல் நடந்துவிடுமோ?

அன:—இன்னும் அதே கர்வமா? அதே அகங்காரமா? உனக்கு மூத்தவனாகிய என்னைத் தவிர உனக்கு விவாகம் செய்துவைக்க வேறு யாருக்கு அதிகார மிருக்கிறது? சட்டப்பிரகாரம் எனக்கு உன்மேல் இருக்கும் அதிகாரம் எவ்வளவென்று உனக்குத் தெரியுமா?

விசா:—நீ சட்டம் பேசி என்னை மிரட்டமுடியாது. உனது அதிகாரம் என்னிடம் சாயாது. (உள்ளே போகிறாள்)

அன:—(கோபத்துடன் பல்லைக் கடித்து) இன்னும் அதே கர்வமா? அதே அகங்காரமா? கூடியசீக்கிரத்தில் உனது கொட்டத்தை அடக்கி உன்னைச் சதா கண்ணும் கண்ணீருமாக இருக்கும்படி செய்யாவிடில் என் பெயர் அனந்தராமன் அல்ல—(மனைவியைப் பார்த்து) இவள் தாயாரை என் தந்தை எனக்குப் பதினைந்து வயதானபிறகு விவாகம் செய்துகொண்டார். அவளது வாழ்நாள் முழுதும் அவள் ஒரு வினாடியும் சந்தோஷமில்லாமல் இருக்கும்படி அவளை ஹிம்சிக்க வேண்டுமென்று விவாக தினத்தன்று ஒரு சபதம் செய்துகொண்டேன். இந்தப் பெண்ணை அவள்பெற்ற தினமும் அதேமாதிரி அந்தச் சிசுவை ஹிம்சிக்கத் தீர்மானித்துக்கொண்டேன். ஆனால் இவள் அவள் தாயைப் போன்றவள் அல்லள். வெகு இறுமாப்பும் தைரியமும் உள்ளவள்.

ஜான:—கோபாலன் அசடாயிற்றே, இவள் காலிலேயே விழுந்து கிடப்பானே!

அன:—வெங்கட்டராமய்யர் மகன் கிருஷ்ணமூர்த்தி அசடா? அவன் இவளை விவாகம் செய்துகொள்ள இச்சைப்படுவதாக எத்தனையோ தடவை என்னிடம் சொல்லியிருக்கிறான். அவன் நல்ல புத்திசாலி. அவனும் இவள் காலில் விழுந்து கிடப்பானா?

ஜான:—ஆனால் அவன் இந்த விவாகத்தைத் தடுக்க முயற்சிப்பானே.

அன:—அவன் ஊரிலில்லை. எனக்கு இந்த விசாலாக்ஷியின் மேல் இருக்கும் விரோதத்திற்கு அவளை எவ்வளவு துன்புறுத்தினாலும் திருப்தி ஏற்படாது. ஒரு முழுமுட்டாளை அவளுக்குக் கணவனாக ஏற்படுத்தினால் புத்திசாலியும் மானியுமாகிய அவளுக்கு அவனால் அநேகவித அவமானங்கள் உண்டாகி மனமுடைந்து போவாள். அப்பொழுது இவள் இறுமாப்பைப் பார்க்கவேண்டும்.

ஜான:—உள்ளே வாருங்கள், இங்கு நின்று பேசவேண்டாம். (போகிறார்கள்)

சுசீலா:—(வெளியே வந்து) இந்தக் கிருஷ்ணமூர்த்தி எங்கிருக்கிறான்? அவனுக்குத்தான் இவ்விஷயத்தைத் தெரிவிக்கவேண்டும். எப்

படியும் என்னுலியன்றதைச் செய்யத்தான் போகிறேன். கடவுள் தான் துணை.

(போகிருள்.)

களம் 2.

அனந்தராமன் வீட்டில் ஓர் அறை.

(அனந்தராமனும் முத்துவும் சம்பாஷித்துக் கொண்டிருக்கின்றனர்.)

அன :—நீர் வீணுய் யோசிக்கவேண்டாம். நான் அவளுக்குக் கொடுக்கப் போகும் மருந்தில் கெடுதலொன்றுமில்லை.

முத்து :—மருந்து கொடுக்கத்தான் வேண்டுமோ ?

அன :—ஆமாம்! இல்லாவிடில் அகங்காரம் கொண்ட அவள் மசியவேமாட்டாள்.

முத்து :—மருந்தின் வேகம் எப்படி? அதென்ன செய்யும் ?

அன :—ஒன்றும் செய்யாது. முகம் வெளுத்திருக்கும், மயக்கமாயிருக்கும். அவ்வளவே—வேறொன்றுமில்லை—கலியாணம் நடக்கும்பொழுது அவள் முகம் வெளுத்துக் காணப்பட்டால் நீங்கள் ஒருவரும் கவனிக்கக்கூடாது.

முத்து :—சரி.

அன :—கோபாலனுக்குச் சொல்லவேண்டாம். கலியாண விஷயம் ரகசியத்தில் இருக்கட்டும். முகூர்த்த சமயத்தில் அவனுக்குத் தெரிவித்தால் போதுமல்லவா ?

முத்து :—போதும்! அவன் என் மனைவி சொல்லை மறுக்கவே மாட்டான். போய் வருகிறேன். (போகிருன்.)

(ஜானகி வருகிருள்)

ஜான :—ஐயோ ! மோசம் ! மோசம் !

அன :—என்னடி! என்ன?

ஜான :—ஐயோ! மோசம் செய்துவிட்டாளே!

அன :—என்ன செய்தாள் ?

ஜான :—அவளைக் காணுமே!

அன :—எங்கே போனுள் ?

ஜான :—ஐயோ! யாரிடம் போய் என்ன சொல்வாளோ? அல்லது இந்த துஷ்டை என் தலையில் கல்லைத் தூக்கிப்போட்டாளோ ?

அன :—(நடுங்கி) என்ன ? தற்கொலை செய்து கொண்டாள் என்று எண்ணுகிருயா ?

ஜான :—ஆமாம்! அப்படித் தான் இருக்குமோ ?

அன :—ஐயோ! என்ன செய்வது? நான் என்ன செய்வது ? (உள்ளே ஓடுகிருன்)

ஜான :—அம்மா! பராதேவதே! ஈச்வரீ! எங்களுக்கு ஒரு கெடுதியும் வாராமல் காப்பாற்ற வேண்டும் தாயே! மதுரை மீனுக்ஷி! உனக்கு மடியுடன் மா விளக்குப் போட்டுப் பாலபிஷேகம் செய்துவைக்கிறேன். திருமங்கலியம் செய்து போடுகிறேன். நீதாண்டி காப்பாத்தணும் தாயே! (போகிருள்.)

அங்கம் 2. களம் 1.

நாராயணய்யர் வீடு.

(நாராயணய்யர் மேஜைமேலிருந்து கடிதத்தை எடுத்துப் படித்தவண்ணம் வருகிருர்.)

நாரா :—இதென்ன விந்தை !

"எனது அன்பு மிக்க கனகம்,

உன்னை மணக்க எனக்கு அபரிமித ஆவலிருந்தும், எனது தந்தையின் உத்தரவின்றி மணப்பது யுக்தமென்று தோன்றவில்லை. அவருக்குத் தெரிவிப்பதே உசிதம். உனது தந்தைக்கும் தெரிவிப்பது அவசியம். ஆயினும் நீ வற்புறுத்துவாயேல், நான் உன் கருத்துப்படி நடக்கத் தயார்.

உன்னையே நம்பிய
கோவிந்தன்".

அன்புமிக்க கனகம் யாரோ ? எனது உத்திரவின்றி மணக்க வற்புறுத்துகிருள் இப்பெண். எதனுல் அப்படிவேண்டுகிருள்? இந்த மூடனும்

அப்படியே செய்யத் தயாராம்! என்ன ஆச்சரியம்! என்ன ஆச்சரியம்! (உரக்க) முனுசாமி!

(முனுசாமி வருகிறான்.)

நாரா :—கோவிந்தய்யர் எங்கே? சீக்கிரம் இங்கே வரச்சொல்.

முனு :—அவர் வெளியிற் போயிருக்கிறார்.

நாரா :—அம்மாளை இங்கே கூப்பிடுகிறேன் என்று சொல். (முனுசாமி போகிறான்.)

நாரா :—(உலாவிக்கொண்டு) கடிதமோ ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருக்கிறது. பெண் எக்குலத்தைச் சேர்ந்தவளோ? எவ்வகுப்பைச் சேர்ந்தவளோ? ஒன்றுமே புரியவில்லை. எனக்குத் தெரியாமல் மணந்துகொள்ள வேண்டிய காரண மென்ன? பையனை இஷ்டம் போல் உடுக்கவும் இஷ்டம் போல் திரியவும் விட்டதின் பயன்தான் இது. கலாசாலையில் படிக்கும்பொழுது படிப்பினால் அவனுக்குக் கொஞ்சம் அலுவலிருந்தது. இப்பொழுதோ கலாசாலைப் படிப்பு முடிந்து இரண்டு வருஷங்களாகின்றன. வேலையொன்றுமின்றித் தனக்குத்தானே யஜமானாகச் சுகவாசியாய் இருக்கிறான். இவனது வயதில் நெற்றி வியர்வை நிலத்திற் படப் பதினைந்து ரூபாய்ச் சம்பளத்திற்கு உழைத்தேன். கோவிந்தனுக்கோவெனில் தனது உடுப்புக்களைக் கையிலெடுத்துக் கொடுக்க ஒரு ஆள் இருக்கிறான். தலையை வாரிக்கொள்வதற்கு எவ்வளவு உயர்ந்த சாமான்கள்! காலில் போட்டுக்கொள்ள எவ்வளவு உயர்ந்த ஜோடுகள்! அறுசுவையுடன் தயாரித்த உணவை உண்ண போஜன அறைக்குக்கூட வராமல் தனது அறையிலேயே வரவழைத்துக்கொள்கிறான். காலம் எப்படி மாறியிருக்கிறது!

(ராஜம் வருகிறாள்)

ராஜம் :—என்ன யோசனை செய்கிறீர்கள்? ஏதாவது விசேஷமுண்டா?

நாரா :—அம்மாள் எங்கேயோ அவசரமாகப் புறப்படுவதுபோல் இருக்கிறதே?

ராஜ :—இன்று எங்கள் க்ளப்பில் வருஷாந்திரக் கொண்டாட்டம்.

நாரா :—(அவளது கைகளை நோக்கி) இதென்ன வளையல்களில்கூட வைரங்களா?

ராஜ :—நமது செட்டியார் நேற்று வந்து இந்த வளையல்களை எடுத்துக்கொண்டால்தான் ஆயிற்று என்று ஒரே பிடிவாதமாய்ச் சொன்னார். உங்களுக்குத்தான் இவை ஏற்கும் என்று சொன்னார்.

நாரா :—அவன் பரம அயோக்கியனாயிற்றே. வைரங்கள் அவ்வளவும் மட்டமாயிருக்கும் விலைமாத்திரம் ஏகமாய்ச் சொல்வான். எப்படியிருந்தும் வைர வளையல் வேண்டாம். நன்றாயில்லை.

ராஜ :—க்ளப்பில் வைரவளையல்கள் போட்டுக்கொள்ளாதவர்களே கிடையாது. அங்கு போய் நான் பொன் வளையல்களுடன் நின்றால் உங்களுக்கு அவமானமில்லையா?

நாரா :—என் தாயார் வெறுங்கையுடன் தான் இருந்தாள். அவளால் என் தகப்பனாருக்கு யாதொரு அவமானமும் நேரிடவில்லை. நீ தான் சொல்லேன்; நான் என் தாயாரை எவ்வளவு கௌரவமாக நடத்தினேன்? நமது கோவிந்தனைப் பார்! யாரையோ நம்மிருவருக்கும் தெரியாமல் மணந்து கொள்ளப் போகிறானாம்! இதோ பார்!

(கடிதத்தைக் கொடுக்கிறார்)

ராஜ :—(கடிதத்தை முற்றிலும் படித்து விட்டு) இப்படி நேரிட்டதற்கு நீங்கள் தானே காரணம். வயது வந்த பிள்ளைக்குக் கலியாணம் பண்ணாமல் இருக்கலாமோ?

நாரா :—அப்படியா! நான் கொண்டு வந்த வரன்களை யெல்லாம் குற்றம் சொல்லி நீக்கினது யார்? அவன் கலியாணம் செய்து கொள்ள இஷ்டப்படவில்லை என்று என்னிடம் அடிக்கடி சொன்னது யார்?

ராஜ :—சரி! உங்கள் வழக்கம்போல் என் மீது பாய்கிறீர்களே! கோவிந்தனுக்குக் கலியாணம் செய்யவேண்டாமா, கோவிந்தனுக்குக் கலியாணம் செய்ய வேண்டாமா என்று எத்தனையோ தடவை வற்புறுத்தியிருக்கிறேன். நீங்கள் காதில் வாங்கிக் கொள்வதேயில்லை. தவிர நீங்கள்......

நாரா:—உனது பிரசங்கத்தைக் கிளப்பில் போய் செய்யலாம். என்னை தயவுசெய்து மன்னித்துவிடு. எனது முக்கிய சிநேகிதர்களின் பெண்களை அழகில்லை, நாகரிகம் இல்லை என்று ஊரில்லாத வக்கணைகள் சொல்லித் தள்ளினது யார்? நீயோ நானோ?

ராஜ :—உங்களுக்குச் சிநேகிதர் பிரியமானவர் என்றால் அவர் பெண்ணை நமது கோவிந்தனுக்குக் கலியாணம் செய்துகொள்வதா? கிளப் முதலிய இடங்களுக்கழைக்துப் போனால் கண்ணுக்கு அழகாக நகைகள் வேண்டாமோ? நாலு இங்கிலீஷ் வார்த்தை பளிச்சென்று சொல்லவேண்டாமோ?

நாரா :—கிளப்பில் பளிச்சென்று வார்த்தை சொல்வதில் நீ தான் கெட்டிக்காரி. எப்.ஏ. வகுப்பில் வாசிக்கும் லக்ஷ்மிக் கென்ன? இங்கிலீஷ் குறைச்சலா?

ராஜ :—அவள் மகா மேதாவி, மிதமிஞ்சின கர்வமுள்ளவள்.

நாரா :—அப்படியானால் வணக்கமுள்ள பெண் வேண்டுமானால் நமது விசாலாக்ஷிக் கென்ன?

ராஜ :—காதில் ஒரு சொத்தைத் தோடு.

நாரா:—சொத்தைத் தோட்டைக் கழற்றி வேறு நல்ல தோடு போட நமக்குச் சக்தியில்லையா? உனது மூடத்தனத்தினால் கடைசியில் என்ன பலனுண்டாயிற்று பார்த்தாயா? இந்த கனகம் என்பவள் எந்த மதத்தைச் சேர்ந்தவள்? அவள் எக்காரணம் பற்றி எனக்குக் கலியாண விஷயம் தெரிவிக்கக் கூடாதென்கிறாள்?

(வேலைக்காரன் பிரவேசிக்கிறான்)

வேலை :—அம்மணி! ரோஜா சந்திரன் என்ற பெயர்கொண்ட ஒரு அம்மாள் தங்களைக் காண வந்திருக்கிறார்.

ராஜ :—எனது அறையில் உட்காரச் சொல்; இதோ நான் வருகிறேன்.

(வேலையாள் போகிறான்)

நாரா :—பெயர் எவ்வளவு விநோதமாக யிருக்கிறது! ரோஜா வேறு, சந்திரன் வேறு. ஒரே பெயர் போதாதா?

ராஜ :—ரோஜா என்பது அவள் பெயர். சந்திரன் என்பது புருஷன் பெயர்.

நாரா :—ராமசந்திரன் என்ற பெயரை மாற்றிச் சந்திரன் என்ற பெயரை வைத்துக்கொண்டானோ? ரோஜா என்று அவள் பெயராம்! நாசமாய்ப்போக.

ராஜ :—உங்கள் தாயாரைப் போல் திட்டுகிறீரே. அவள் பெண்ணைத் தான் நமது கோவிந்தனுக்குக் கலியாணம் செய்து வைக்கவேண்டும்.

நாரா :—பேஷ்! அவள் பெண்ணா? க்ஷயரோக முள்ள சந்திரனுக்குப் பெண் பிறந்தால் அந்தப் பெண் எவ்வளவு அழகாயிருக்கும்? தவிர, நமது புராணங்களில் சந்திரனுக்குப் பெண் பிறந்ததாக ஒரு இடத்திலும் சொல்லப்படவேயில்லை. ரோஜா என்று சாதாரணமாய் தாசிகள் தான் பெயரிட்டுக் கொள்வார்கள். அந்தப் பெண் பெயர் என்ன?

ராஜ:—அந்தப் பெண் பெயரைச் சொன்னால் அதற்கும் ஒரு குதர்க்கமான வியாக்கியானம் கொடுப்பீர்கள். நான் போகிறேன். அவளைக் கார்க்கவைப்பானேன்?

நாரா:—ஆமாம்! சீக்கிரம் போ! ரோஜா புஷ்பம் வாடிப்போய்விடும். புஷ்பித்து இப்பொழுது வெகு நேரமாயிருக்கும். சந்திரன் கூட இன்று பிரகாசமாயிராது. இன்று அமாவாசை. (ராஜம் கோபமாய்ப் போகிறாள்.)

நாரா:—பையன் வீட்டுக்கு வந்ததும் அன்பு மிக்க சனகத்தைப்பற்றி விசாரிக்கவேண்டும். மூட்டாள் யாரிடம் சிக்கிக்கொண்டானோ? (போகிறார்)

அங்கம் 2. களம் 2.

கிருஷ்ணமூர்த்தியின் அறை.

(கிருஷ்ணமூர்த்தியும் ஒரு நண்பனும்)

நண்:—நீ இந்த சமயத்தில் திடீரென்று புறப்படுகிறேன் என்கிறாயே.

கிரு:—என்ன செய்வது? அக்கடிதம் அவ்வளவு அவசரப்படுத்துகிறது.

நண்:—சரி! பிறகு உன்னிஷ்டம். நான் போகிறேன். (போகிறான்.)

கிரு:—(தனக்குள்) 'விசாலாக்ஷியை பலாத்காரமாய் அனந்தராமன் யாருக்கோ விவாகம் செய்து கொடுக்கப்போகிறான். அவள் தற்கொலை செய்து கொள்ளப் போகிறாள்.' இதைத் தவிர வேறொரு விவரமும் அந்த அநாமதேயக் கடிதத்தில் காணப்படவில்லை. இந்த அனந்தராமனிடம் எவ்வளவு தடவை நான் விசாலாக்ஷியை விவாகம் செய்துகொள்ள விரும்புவதாகச் சொல்லியிருக்கிறேன்! அந்த துஷ்டன் இப்படிச் செய்வான் என்று நான் எண்ணவேயில்லை. எதற்கும் நான் இப்பொழுது ஊருக்குப் புறப்படுகிறேன். தற்கொலை செய்து கொள்ளத் துணிவாளா? எதற்கும் ஈசன் தான் காப்பாற்றவேண்டும். (போகிறான்.)

அங்கம் 2. களம் 3.

நாராயணய்யர் வீடு.

(நாராயணய்யரும் அனந்தராமனும் சம்பாஷித்துக்கொண்டிருக்கின்றனர்.)

நாரா:—அனந்தராமா! இன்னொரு முறை இப்படிச் சொல்லாதே. பரமசாதுவாகிய விசாலாக்ஷியா அப்படி செய்யக்கூடியவள்!

அன:—நீர் சொல்வது வேடிக்கையாயிருக்கிறது. விசாலாக்ஷி பரமசாதுவா? அப்படியிருந்தும் அவள் ஏன் இப்பொழுது வீட்டிலில்லை? கேவலம் ஒரு சமையற்காரனுடன் ஓடிப் போவானேன்?

நாரா:—அனந்தராமா! உன்னைத் தூக்கி ஜன்னலுக்கு வெளியில் எறியவேண்டுமென்று தோன்றுகிறது.

அன:—நீர் அவளைக் கண்டுபிடிக்க ஏதாவது உதவி செய்வீர் என்று உம்மிடம் சொல்ல வந்தேன். அகாரணமாய்க் கோபித்துக் கொள்வீரென்று தெரியாது.

நாரா:—உன் தந்தைக்குப் பிறந்த உன் தங்கையின் மீது வாய் கூசாது இவ்வளவு பெரிய பழியைப் போடுகிறாயே. உனது துஷ்டத்தனத்தை என்னென்றுரைப்பது? உன்னிடமிருந்து துன்பப்படுவதைவிட எங்காவது குளம் குட்டையில் விழுந்து இறந்திருக்கலாமல்லவா?

அன:—(நடுங்கி) உண்மையில் அப்படி எண்ணுகிறீரா? ஐயோ!

நாரா:—(தனக்குள்) துஷ்டன் நடுங்குகிறான். (பிரகாசமாய்) எனக்கென்னமோ நிச்சயமாய் அப்படித்தான் இருக்கும் என்று தோன்றுகிறது. விசாலாக்ஷி இறந்து விட்டாள். விசாரணை நடந்தால் உன் பாடு கஷ்டம் தான்.

அன :—(கெஞ்சிக்கொண்டு) ஐயா! உண்மையில் நான் அவளை ஒன்றும் செய்யவில்லை. அவள் என்னை ஆபத்தில் மாட்டிவைப்பதற்காக இந்தக் காரியம் செய்திருப்பாள். அவள் பிறந்தது முதல் எனக்குத் துன்பம் தான்.

நாரா :—நீ ஆயுள் முழுதும் துன்பப்பட்டால் கூட எனக்கு சந்தோஷம் தான். முனுசாமி! இந்த அயோக்கியனை வெளியில் தள்ளு.

(அனந்தராமன் அவசரமாய்ப் போகிறுன்.)

நாரா :—தொலைந்தான்! விசாலாக்ஷி எங்கு போயிருப்பாள்? தனக்கு மிக்க நெருங்கிய சினேகிதி எவள் வீட்டிற்காகிலும் போயிருப்பாளோ? (காமாக்ஷி வருகிறுள்.)

காமா :—அப்பா! அந்தம்மாளை எங்கே இருக்கச் சொல்வது?

நாரா :—எந்தம்மாளை?

காமாக்ஷி :—நேற்று புதிதாய் ஒரு உபாத்தினி வந்தாளே, அவளுக்கு இங்கேயே கொஞ்சம் இடம் கொடுத்தால் உபகாரமாயிருக்குமாம்.

நாரா :—உனது தாயாரைக் கேட்டுக்கொள்.

காமா :—குதிரை லாயத்திற்கடுத்த அறையை அம்மாள் ஒழிக்கச் சொல்கிறுள்.

நாரா :—(தனக்குள்) பாபம்! விசாலாக்ஷி உண்மையில் இறந்திருப்பாளோ?

காமா :—அப்பா! அவள் எப்படி இருக்கிறுள் தெரியுமா? நீக்ரோ ஜாதியைப் போல் கன்னங்கரேலென்று இருக்கிறுள்.

நாரா :—(தனக்குள்) இந்த விசாலாக்ஷியை இவ்வளவு நாட்கள் கவனியாமலிருந்து விட்டேன். என்ன மூடன் நான்! கூடியவரையில் கஷ்டப்பட்டுத்தேடி, தகுந்த வரனைப் பார்த்துக் கலியாணம் செய்து வைக்க வேண்டும். இறந்திருக்க மாட்டாள். அவ்வளவு துணிவு இந்த வயதில் ஏற்படாது.

காமா :—பெயர் மாத்திரம் கனகமாம்.

நாரா :—(திடுக்கிட்டு) கனகமா! கனகமா?

காமா :—(ஆச்சரியப்பட்டு) ஆமாம்! கனகம் தான் அவள் பெயர்.

நாரா :—வயதென்ன விருக்கும்? என்ன ஜாதி? அவளை இங்கே கூப்பிடு.

காமா :—அவளை அம்மா கிளப்பிற்கழைத்துப் போயிருக்கிறுள். அவள் எனக்கு உபாத்தினியாகவும் அம்மாவுக்குத் தோழியாகவும் இருப்பாள். வயது தெரியவில்லை. ஒரு பெரிய மூக்குக்கண்ணுடி போட்டிருக்கிறுள். கைம்பெண்.

நாரா :—அவளாயிராது, அவளாயிராது.

காமா :—என்ன இராதென்கிறீர்களே. கைம்பெண்தான்.

நாரா :—சரிதான்.

காமா :—அந்த இடம் தேவலையா?

நாரா :—பாபம்! அவள் ஏழையென்றுல் காற்று வேண்டாமோ? அந்த அறையில் ஜன்னலே கிடையாதே.

காமா:—பாட்டி அதைவிடச் சிரியதாயிருந்த ஓர் அறையில் தான் பிரசவித்ததாகச் சொல்லுகிறுள்.

நாரா :—ஆனுல் அதற்கிப்பொழுதென்ன செய்யலாம்? இந்த ஏழைப் பெண்ணை ஹிம்சிப்பதா? என் வீட்டில் காற்றில்லாத இடத்தில் ஒருவரும் கஷ்டப்படக்கூடாது. வேறு தகுந்த இடம் பார்த்துக் கொடு.

(போகிறுர்)

காமா :—கொஞ்சம் இடம் கொடுத்தால் கூட அவள் போதும் என்கிறுள். பாபம்! இடமுமில்லையாம், உறவினர்களுமில்லையாம். எவ்வளவு நீளமான கூந்தல்! எவ்வளவு மிருதுவான குரல்! அவ்வளவு கறுப்பாயில்லாவிடில் அழகாகத்தானிருப்பாள்.

எனது அறைகளிலொன்றை ஒழித்துக் கொடுக்கிறேன். அவளைப் பார்த்தால் ரொம்ப பரிதாபமாயிருக்கிறது.

(போகிருள்)

அங்கம் 2. களம் 4.
ஒரு தெருவு.

(சிவன், நடேசன் பிரவேசிக்கிருர்கள்)

சிவன் :—கடைசியில் என்ன ஒரே ஒரு டம்ளர் விஸ்கி வாங்கிக் கொடுக்கிருன்! தினம் அவன் தமையன் மனைவி அவனைத் திட்டுவதும், அவன் நம்மிடம்வந்து குறை சொல்லுவதும்.

நடேச :—ரொம்ப அலுத்துப் போய் விட்டதா உனக்கு ?"

(கோபாலன் பிரவேசிக்கிருன்)

கோபா :—நமது உத்தியோகம் என்ன ? நமது கௌரவம் என்ன ?

நடேச :—ஆம்! நான் சொன்னபடி தங்கள் உத்தியோகம் என்ன ? தங்கள் கௌரவமென்ன ?

கோபா :—நம்மை ஒருவர் கழுதை என்று சொல்வதா ?

சிவன் :—(ஒருபுறமாக) தப்பிதம் தான். ஏனெனில் கழுதையை விட இவன் மூடனல்லவா ?

கோபா :—கழுதையிலும் முட்டாள் கழுதை என்றல்லவோ சொன்னுன் !

சிவன் :—(சிரித்து) கழுதையிலும் முட்டாள் கழுதையா ?

கோபா:—தோழர்களே! நான் சொன்னது உங்களுக்கு எப்படிப் படுகிறது?

நடேச :—மிக்க நியாயமாகப் படுகிறது.

சிவன் :—ஆமாம் ! எனக்கும் நியாயமாகப் படுகிறது. கழுதையிலும் முட்டாள் கழுதை.

கோபா :—கேவலம் ஒரு ஸ்திரீ, பதின்மூன்று பெயர்களுடன் பிறந்த என்னை !

நடேச :—பதின் மூன்று பெயர்களுக்கும் திலகமாக உதித்த தங்களை.

கோபா :—மானங்கெட்டபயலே என்பதா ?

நடேச :—(சிரித்துக் கொண்டு) ஏ முட்டாள் கழுதை ! ஏ மானங் கெட்ட பயலே ! என்பதா ?

கோபா :—என்னை மணக்க விரும்பும் அந்த லக்ஷ்மி கூட எனக்கு இணையில்லையே.

நடேச:—அவள் எப்படித் தங்களுக்கிணையாகக் கூடும் ?

கோபா :—(முஷ்டியைக் காண்பித்து) அந்த கோவிந்தனைக் கண்டால் இனி என்ன செய்வேன் என்று எண்ணுகிருய் ?

சிவன் :—(ஒரு புறமாக) அந்த முஷ்டியால் பயத்துடன் உன் தலையில் ஓங்கிக் குட்டிக் கொள்வாய்.

நடேச :—என்ன செய்வீர் ?

கோபா :—ஒரே அடிதான். நீ நான் சண்டையிடும் பொழுது பார்த்ததில்லை. அநேகந் தடவை சண்டையிட்டு—

சிவன் :—(ஒரு புறமாக) அநேகந்தடவை மண்டை உருண்டிருக்கிறதா ?

(ராமைய்யா வருகிருன்)

நடேச :—(சிவனிடம்) இவன் ஒரு கஜப் போக்கிரி.

ராமை :—தாங்கள் மூவரையும் கண்டது என் நற்காலந் தான். நமஸ்காரம் ! (கோபாலனிடம்) மனதை நிச்சயப்படுத்தினீரா ? வலிய வந்த ஸ்ரீதேவியை உதைத்துத் தள்ள மாட்டீரென்றெண்ணுகிறேன்.

கோபா :—இல்லை, அப்படி எண்ணுதீர்.

ராமை :—அந்தப் பெண்ணின் பெற்ருேர்கள் வேறெந்த வரனையும் கவனிக்கவில்லை. இதைப் பாரும். (ஓர் படத்தைக் கொடுக்கிருன்.)

கோபா :—(படத்தைப் பார்த்து) என்ன அழகு! என்ன புன்சிரிப்பு!

ராமை :—பூர்ண சந்திரன் போன்ற முகம்.

நடேச:—(சிவனிடம்) பூர்ண சந்திரனைப் பூரண கிரகணம் பிடித்தாற் போன்ற முகம்.

ராமை :—வயது பதினைன்றே முக்கால்.

நடேச :—(சிவனிடம்) பத்தொன்பதே முக்கால்.

சிவன் :—அடபோடா! இதென்ன பேச்சு! இப்படி வா. ஒதுங்கி நிற்போம்.

(கொஞ்சம் விலகி நிற்கிறார்கள்)

ராமை :—(தனக்குள்) இவர்கள் நல்லகாலமாய் விலகிப் போனார்கள். (பிரகாசமாய்) நாளைய மறுதினம் நல்ல முகூர்த்தம்.

கோபா :—இவ்வளவு சீக்கிரத்திலா?

ராமை :—இல்லாவிடில் தாங்கள் செய்து கொள்வதாகக் கையெழுத்திட்டுக் கொடுத்தால் போதும்.

(நடேசன் சிவனிடமிருந்து, கோபாலனருகில் வருகிறான்)

நடேசன் :—(தனக்குள்) பாபம்! கோபாலனை இந்தப் போக்கிரியுடன் தனிமையில் விடக் கூடாது.

கோபா :—(நடேசனிடம்) என்னைக் கையெழுத்துப் போடச் சொல்லுகிறார்.

நடேச :—இதென்ன ஐயா! புது வழக்கமாயிருக்கிறதே!

ராமை :—ஆனால் தேதியைக் குறிப்பிடுங்கள்.

கோபா :—எனது தமையனைக் கேட்கவேண்டும்.

ராமை :—இப்பேர்பட்ட காரியங்களில் பெரியவர்களைக் கேட்பதைவிடக் கேட்காமலிருத்தல் நலம். ஏனெனில் தங்களது மனப்போக்கின்படி அவர்கள் இணங்கார்கள். பிறகு அவர்களை மீறி நீங்கள் விவாகம் செய்து கொள்ள வேண்டும். வீண் மனஸ்தாபம் உண்டாகும்.

நடேச :—ஆனால் விவாகத்தை ரகசியத்தில் முடிக்கலாமா?

ராமை :—தேதியைக் குறிப்பிட்டு லக்னப் பத்திரிகை போட்டு விட்டுப் பிறகு தெரிவிக்கலாம். புகைப்படம் மாத்திரம் நான்கு கொணர்ந்து கொடுத்திருக்கிறேன்.

கோபா :—நான்கும் வெகு அழகாயிருந்தன.

ராமை :—நான் இதோ போய் அவள் தகப்பனை அழைத்து வருகிறேன். நாளைய மறுதினம் நல்ல முகூர்த்தம்.

நடேச: —அதிருக்கட்டும்! அந்தப் பெண்ணைப் பார்க்கவேண்டு மென்று அவர் இச்சைப் படுகிறார்.

ராமை :—இதென்ன வேடிக்கை! அவசியம் பார்க்க வேண்டுமா? என்ன?

நடேச :—ஆமாம்.

ராமை :—அவர் ஒன்றும் சொல்லவில்லையே!

கோபா :—நடேசன் சொல்லியபடி தான் செய்வேன்.

ராமை :—இது சாத்தியப்படாதே! அந்தக் குழந்தை ரொம்ப வெட்கப்படுவாள்.

கோபா :—ஆனால்............

நடேச :—என்ன செய்வது? பார்க்கத் தான் வேண்டும்.

ராமை :—அதற்கென்ன? நாளைக்கு ஏற்பாடு செய்கிறேன். இன்றைக்கு லக்னப் பத்திரிகை போட்டுவிடலாம்.

நடேச :—இன்றைக்குப் பார்த்து விட்டு நாளைக்கு லக்னப் பத்திரிகை போடலாம்.

ராமை :—(தனக்குள்) இவன் ஒரு சனியனாக முளைத்தானே.

நடேச :—ஐயா! அவர் பார்த்துத் தான் பிறகு விவாகத்திற்கு சம்மதிப்பார்.

ராமை :—சரி! இன்னம் அரை மணி நேரத்தில் அவர்கள் வீட்டிற்கு வாருங்கள். நான் போய் அவர்களுக்குத் தெரிவிக்கிறேன்.

(போகிறான்)

கோபா :—நான் போய் நல்ல உடை உடுத்திக் கொள்கிறேன். (போகிறான்)

சிவன் :—என்டா! அவனும் போய் விட்டானே.

நடேசன் :—இப்பொழுது வருவான். வா நாமும் போவோம். (போகிறார்கள்)

அங்கம் 2. களம் 5.

லக்ஷ்மியின் வீட்டிலுள்ள தோட்டம்.

(கோவிந்தன் பிரவேசிக்கிறான்)

கோவி :—(தனக்குள்) தகப்பனுருக்குத் தெரியாமல் விவாகம் செய்துகொள்ளவேண்டுமென்கிறாள். கிடக்கிறாள்! இனி இவள் அசட்டுத்தனத்திற்கெல்லாம் இடங் கொடுக்கக் கூடாது! ஏதோ மனப் பிராந்தியினால் இன்று காலையில் அக்கடிதம் எழுதினேன். அதை இப்பொழுது மறுத்துவிட்டு இவளது கோபத்தை லக்ஷியம் செய்யாது வீடு போய்ச் சேரவேண்டும்.

(லக்ஷ்மி வருகிறாள்)

கோவி :—லக்ஷ்மி! நான் காலையில் அனுப்பிய கடிதம் கிடைத்ததா?

லக்ஷ்மி :—காலையில் வந்த கடிதங்கள் ஒன்றையுமே நான் இன்னம் பார்க்கவில்லை.

கோவி:—(ஆச்சரியத்துடன்) ஆனால் உனக்குக் காலையில் அநேக கடிதங்கள் வருமோ?

லக்ஷ்மி :—ஆம்! (ஓர் பெரிய காகிதக் கட்டை வேலையாள் கொணர்ந்து கொடுக்கிறான்.)

லக்ஷ்மி :—(கடிதங்களின் மேற் பக்கம் பார்த்துவிட்டு) உங்கள் கைபெழுத்துள்ளது ஒன்றுமில்லையே! அக்கடிதத்தில் என்ன எழுதியிருந்தீர்கள்?

கோவி :—உன்னிஷ்டம் போலவே நடக்கத் தயாரா யிருப்பதாக எழுதியிருந்தேன்.

லக்ஷ்மி :—ஆனால் ரிஜிஸ்டரில் பெயரெழுதி வைக்கத் தங்களுக்கு யாதொரு தடையுமில்லையே.

கோவி :—பிராமணர்கள் ஹோமம் வளர்த்தி விவாகம் நடத்துவதில் என்ன தோஷம்? அதை விளக்கிச் சொன்னால் நான் ஒப்புக் கொள்ளத் தயார்.

லக்ஷ்மி :—(துக்கத்துடன்) ஐயோ! கடைசியில் நீங்கள் இப்படிச் சொல்வீரென்று எண்ணவேயில்லையே. பிராமணர்கள் ஹோமம் வளர்த்தால்தான் விவாகமா? ரிஜிஸ்டரில் பெயரை எழுதிவைத்தால் விவாகமாகாதா? நமது பெற்றோர்களுக்குத் தெரியாமல் விவாகம் செய்துகொண்டு பிறகு அவர்களுக்குத் தெரிவிக்கலாம்.

கோவி :—(தனக்குள்) சரி, இப்படிச் சொல்வோம். அதுதான் சரியான வழி. (பிரகாசமாய்) லக்ஷ்மி! எனக்கு ஒரு ஆவலிருக்கிறது. அதன் பிரகாரம் நீ நடந்தால் நான் ரிஜிஸ்டர் மூலமாக விவாகம் செய்துகொள்ளத் தயார்.

லக்ஷ்மி :—(ஆவலுடன்) அதென்ன சொல்லுங்கள்.

கோவி :—கலியாணம் என்பது அனுவசியமான ஒரு சம்ஸ்காரம். ஏன்! நானும் நீயும் இப்பொழுதே புருஷன் மனைவியாய் விடுவோம்; பிறகு ரிஜிஸ்டர் ஆபீசுக்குச் செல்வோம். ஆங்கிலேயர்கள் அப்படித் தான் செய்வார்கள்.

லக்ஷ்மி :—நடுக்கத்துடன் எழுந்து) எனது அசட்டுத் தனத்தினாலல்லவோ நான் இப்பேர்பட்ட அவமானகரமான வார்த்தைகளைக் கேட்க நேரிட்டது. (வெளியிற் செல்ல எத்தனிக்கிறாள்.)

கோவி:—லக்ஷ்மி! நான் வேடிக்கைக்காகச் சொன்னேன். உண்மையில் நான் அப்படிச் செய்பவனல்ல; நீ வீணாய் பயப்படுகிறாய். என் தகப்பனார் மேல் ஆணை! நான் இனி இப்பேர்பட்ட வார்த்தைகளைச் சொல்வதே யில்லை.

லக்ஷ்மி:—(பயம் தணிந்து) ஏன் அப்படி அச்சம் உண்டாகப் பேசினீர்?

கோவி:—ரிஜிஸ்டர் ஆபீசுக்குப் போவது ஆங்கிலேயர்களைப் போலிருக்க வேண்டுமென்ற பிரமையினால் தானே. அவர்கள் விவாகமாவதற்கு முன்பே சில சமயம் குழந்தைகளைக் கூடப் பெற்று விடுவார்கள்.

லக்ஷ்மி:—ஆமாம்! நெருப்பின் முன் வியர்வை கொட்ட, காது செவிடாய்விடுமாறு மந்திரங்கள் கேட்டால்தான் புருஷன் மனைவியோ?

கோவி:—ரிஜிஸ்டர் ஆபீசில் பெயரை எழுதி வைத்தால் மாத்திரம் என்ன? மனமொத்துப் போய் விட்டால் பிறகு என்ன? நமதிஷ்டம் போலிருந்தால் போயிற்று.

லக்ஷ்மி:—என்னை கேவலமான நடத்தையுள்ளவள் என்று எண்ணி விட்டீர் போலிருக்கிறது.

கோவி:—அப்படி நான் எண்ண வில்லை யென்பது நீ அறியாத தன்று.

லக்ஷ்மி:—கடைசியில் நீர் சொல்வது தான் என்ன? நெருப்பினருகில் உட்கார்ந்து தான் விவாகம் செய்துகொள்வீரா?

கோவி:—ரிஜிஸ்டர் ஆபீசுக்குப் போவதெனில் நாம் ஒரு மதத்தையும் சேர்ந்தவர்களல்லர் என்று சொல்லவேண்டும்.

லக்ஷ்மி:—சொன்னால் போயிற்று. நமது மதமென்ன அவ்வளவு உயர்ந்ததா? எவ்வளவு பெயர்கள் அப்படிச் செய்திருக்கிறார்கள்?

கோவி:—வேறு வேறு மதத்தினர்கள் மணந்து கொண்டால் அப்படிச் செய்வார்கள். ஒரே மதத்தைச் சேர்ந்த நீயும் நானும் அப்படிச் செய்யவேண்டிய நிர்ப்பந்தம் என்ன?

லக்ஷ்மி:—எனக்கு அப்படிச் செய்யவேண்டுமென்று வெகு நாளாக ஆவல்.

கோவி:—(வெறுப்புடன்) சரி! நீ இப்படியே ஒவ்வொரு காரியத்திலும் கோணலாய் இறங்குவாய். உன் மனம் போனபடி யெல்லாம் நடக்க ஆரம்பித்துவிடுவாய். உனக்கு நேர் வழியே தெரியாதுபோலிருக்கிறது. உன்னிடம் அசட்டுப் பிடிவாதமே மேலிட்டிருக்கிறது. பேஷ்! உன்னை மணந்தால் என் பாடு வெகு சௌக்கியம் தான். நான் போய் வருகிறேன். எனது ஜாதி, மதம் எல்லாவற்றையும் ஒரு அசட்டுப் பெண்ணின் அசட்டு ஆசைக்காக நான் விட்டுவிடத் தயாராயில்லை.

லக்ஷ்மி:—(கோபமாக எழுந்து) உங்களது பிரசங்கத்தைக்கேட்க நான் ஒரு குழந்தையல்ல. எப். ஏ. இவ்வருஷம் தேறியதும், அடுத்த வருஷம் பீ. ஏ. வகுப்பில் சேரவேண்டிய நான் தங்களை விட எவ்விதத்திலும் தாழ்ந்தவளல்ல.

கோவி:—(பரிகாசமாய்) நான் தங்களை விட சகல விதத்திலும் தாழ்ந்தவனே. மன்னிக்க வேண்டுகிறேன். (போகிறான்)

லக்ஷ்மி:—(துக்கத்துடன்) நான் வெகு நாட்களாகக் காதலித்த இவரும் வெறுத்துப்போய் விட்டார். அவர் சொல்லியபடி செய்வதென்றால் எனது சிநேகிதிகள் ஒருவரும் மதிக்க மாட்டார்களே. (கடிதக்கட்டை எடுக்கிறாள்) இவையெல்லாம் இவ்விஷயத்தைக் குறித்தே எழுதப்பட்டவைகள். நான் தான் முதலில் இப்படி நடப்பதாக நிச்சயமாய் உறுதிமொழி கூறினேன். நான் ரிஜிஸ்

டர் மூலமாக விவாகம் செய்து கொண்டால் தாங்களும் அப்படியே செய்வதாக அவர்கள் சொன்னார்கள். ஐயோ! இவர் இவ்வளவு கோபத்துடன் போய் விட்டாரே.

(போகிறாள்)

அங்கம் 2. களம் 6.

புருஷர்கள் கிளப்.

(நாராயணய்யர் பத்திரிகையை படித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார்)

நாரா :—(தனக்குள்) இன்று ஏன் ஒருவரு மில்லை? பொழுது போக்குவது கஷ்டமா யிருக்கிறது. (தூர முத்து வருவதைப் பார்த்து) அடாடா! இந்த மூடனா வருவது! நம்மையே நோக்கி வருகிறானே! அடாடா! தப்பும் வழியில்லை. (பேப்பரால் முகத்தை முற்றும் மூடிக்கொள்கிறார். முத்து இவரு கில் உள்ள ஓர் நாற்காலியில் உட்காரு கிறான்.)

முத்து :—(தனக்குள்) நல்ல வேளை பெரிய மனிதராகிய இவரிடம் வந்தோம். நமக்குத் தெரிந்த சமாசாரங்களை எல்லாம் இன்று சொல்லிவிடலாம். (பிரகாசமாய்) நமஸ்காரம்! சௌக்கியந்தானே!

(நாராயணய்யர் பத்திரிகையைக் கவனமாய்ப் பார்க்கிறார்)

முத்து :—எங்கள் தகப்பனாருக்கு நாங்கள் பதின்மூன்று குழந்தைகள் ஸார்! அவர்களுள் நான் மூத்தவன் என்று எண்ணுகிறீரா? அல்லது கடைசி மகன் என்று எண்ணுகிறீரா! சற்று தயவுசெய்து பத்திரிகையைக்கீழே வையுங்கள். நான் வேண்டிக் கொள்கின்றேன். (நாராயணய்யர் பெருமூச்சுடன் பத்திரிகையைக் கீழே வைக்கிறார்.)

முத்து :—(மகிழ்வுடன்) என்னை மூத்தவன் என்று எண்ணுகிறீரா?

நாரா :—(துக்கத்துடன்) உம்மைப்போல் இன்னும் பன்னிரெண்டு பெயர்கள் இருக்கிறார்களா?

முத்து :—(பெருமையுடன்) சே! சே! என்னைப்போல் இருக்கமுடியுமோ? அவர்களெல்லோரும், பாபம்! கொஞ்சம் மந்த புத்தியுள்ளவர்கள்; ஆனால் என்னைவிட அவர்கள் தாழ்ந்த நிலையிலிருந்தாலும், நான் சாதாரணமாய் என்னிடம் அவர்கள் பேசினால் நான் பதில் சொல்லாமலிருப்பதில்லை. ஒரே ஒரு தடவைதான் எனது பெரிய தமக்கைக்கும் எனக்கும் கொஞ்சம் இவ்விஷயத்தைப் பற்றி சச்சரவு உண்டாயிற்று.

நாரா :—நான் ஏற்கனவே இவ்விஷயத்தைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். விவரம் முழுதும் எனக்குத் தெரியும்.

முத்து :—(ஆச்சரியப்பட்டு) அப்படியா! எனது தமக்கையை என் மனைவி வெளியில் இழுத்து வந்தாள் என்பதை நீர் அறிந்திருக்கலாம். ஆனால் என் மனைவி என்னை (தலையைத் தடவிக் கொள்கிறான்.)

நாரா :— அந்த விஷயம் முழுதும் நேரில் பார்த்ததுபோல் நான் அறிவேன்.

முத்து :—அவள் கொஞ்சம் கோபக்காரி ஐயா! எனது மனைவியைத்தான் சொல்லுகிறேன். (தலையைத் தடவிக்கொள்கிறான்)

நாரா :—(எழுந்து அவன் தலையை உற்றுப் பார்த்துவிட்டு மறுபடியும் உட்கார்ந்து கொள்கிறார்) குட்டு விழுந்ததும் ஒரு ஔன்ஸ் ரத்தமாவது வெளிக்கிளம்பி இருக்கும்; வடு அப்படியே இருக்கிறது.

முத்து :—(ஆச்சரியத்துடன்) என்ன! வடு இருக்கிறதா? ஆனால் எத்தனை வடுக்கள் இருக்கின்றன?

நாரா :—(அவனருகிற் சென்று எண்ணுவது போல் பாவித்து) பத்துப், பதினைந்து இருக்கும்.

முத்து:—நான் குழந்தையாக இருந்தபொழுது ஒரு பெரிய ஆணி குத்தியது. அதினுல் பெரிய காயம் ஏற்பட்டு, வடு உண்டாயிற்று. அந்த ஒரு வடு தான் இருக்குமென்று நினைத்தேன்.

நாரா :—(ஒரு புறமாக) அந்த ஒன்று தான் இருக்கிறது.

முத்து :—எனது நாலாவது தம்பி என்ன செய்தான் ஒரு நாள்.

நாரா :—உமது மனைவி உம்மைச் சச்சரவு நடந்த தினம் என்ன செய்தாள்?

முத்து :—அந்தப் பேச்சு வேண்டாமையா. எனது மூன்ருவது தம்பி—

நாரா :—உமது மனைவி என்ன செய்தாள்? சொல்லும்.

முத்து :—நீர் தான் அறிவீரே, அந்தப் பேச்சு எதற்கு?

நாரா :—உமது மூன்ருவது தம்பி, நாலாவது தம்பி இவர்களைப் பற்றின பேச்சு வேண்டாம்.

முத்து :—ஆனல் அவர்களைப்பற்றி வேண்டாம். எனது ஏழாவது தம்பி—

நாரா :—கூடாது ஐயா! கூடாது! அவர்களைப் பற்றிச் சொல்வதானல் உமது மனைவியைப் பற்றிச் சொல்லி விட்டுத்தான் சொல்லவேண்டும்.

முத்து :—இதென்ன பிடிவாதம் ஸார்!

(வெங்கடராமையர் பிரவேசித்து தூரத்தில் ஒரு நாற்காலியில் உட்காருகிருர்.)

நாரா :—ஓய்! தலையைத் தடவிக்கொண்டிரும்! அதோ, அவருடன் பேசிவிட்டு வருகிறேன். (வெங்கடராமையர் அருகில் கிடக்கும் ஒரு நாற்காலியில் போய் உட்காருகிருர்.)

வெங் :—நீர் ஏன் ரெட்டியார் வீட்டுப் பாட்டுக் கச்சேரிக்குப் போகவில்லை?

நாரா :—எனக்கு அழைப்புக் கடிதம் வரவில்லை.

வெங் :—உமது பெயரை எழுதியபொழுது நான் அருகில் தானே இருந்தேன்.

நாரா :—(தனக்குள்) அக்கடிதத்திற்கு பதிலாகத்தான் முனுசாமி கோவிந்தன் கடிதத்தை என் மேஜையின் மீது வைத்து விட்டான் போலிருக்கிறது. (பிரகாசமாய்) எனக்குக் கடிதம் கிடைக்கவில்லை.

வெங் :—எனது பெண் லக்ஷ்மியைப் பார்த்திருக்கிறீரோ?

நாரா :—பார்த்திருக்கிறேன்.

வெங் :—அவள் ஏதோ ஒரு சங்கத்திற்குச் சென்றிருக்கிருள். நான் இன்று அவள் கடிதங்களைப் பரிசோதிப்பதென்று தீர்மானித்துத்தான் ரெட்டியார் வீட்டிற்குப் போகவில்லை.

நாரா :—உங்களுக்குத் தெரியாமல் கடிதங்கள் போக்கு வரவு வைத்துக் கொள்வதுண்டோ?

வெங் :—சில பெண்கள் சேர்ந்து ரிஜிஸ்டர் மூலமாகத் தங்கள் விவாகங்களை நடத்திக்கொள்வதாகத் தீர்மானித்திருக்கிருர்களாம். தானே முதலில் அப்படிச் செய்வதாக லக்ஷ்மி சொல்லியிருக்கிருளாம்.

நாரா :—நான் லக்ஷ்மியை புத்திசாலி என்றல்லவோ எண்ணியிருந்தேன்.

வெங் :—தவிர இன்று சாயந்திரம் கோவிந்தன் எனது வீட்டிற்கு வந்து லக்ஷ்மியுடன் தனிமையில் வார்த்தையாடிவிட்டுப்போனதாகத் தெரிகிறது.

நாரா :—என்ன! கோவிந்தன் அவ்விடமா வந்தான்?

வெங் :—ஆமாம்! இதற்கு முன்பு கூடச் சில தடவைகளில் அங்கு வந்து அவளுடன் தனிமையில் வார்த்தையாடினதாகத் தெரிகிறது.

நாரா :—இதென்ன! அநியாயமாயிருக்கிறதே. (ஜேபியிலிருந்து கடிதத்தை எடுத்துக் கொடுக்கிருர்.) பார்த்தீரா! கனகத்தை மணக்கப்

போகிறவன் உமது பெண்ணுடன் ஒருவருக்கும் தெரியாமல் தனிமையில் வார்த்தையாடுவதா?

வெங் :—(சந்தோஷத்துடன்) கனகம் தான் லக்ஷ்மி! கடிதம் தவறிப்போனால் ஒருவருக்கும் தெரியாமலிருப்பதற்காகக் கனகம் என்ற பெயருடன் அவர்களுக்குள் கடிதங்கள் எழுதப்பட்டு வந்தனவாம்.

நாரா :—(தனக்குள்) விவாகத்திற்கு முன்பு காதற் கடிதம் எழுதுவதா? நாசமாய்ப் போக இவள் படிப்பு! (பிரகாசமாய்) பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று. இருவருக்கும் விவாகத்தை நடத்தி வைத்து விடுவோம். இந்தக் காரியம் முடிந்தது போலவே வைத்துக்கொள்வோம். அனந்தராமனை அறிவீரல்லவா?

வெங் :—அறிவேன்.

நாரா :—அந்த உள்ளே போகலாம் வாருங்கள். முத்து உபத்திரவமின்றிப் பேசலாம்.

(இருவரும் கதவைச் சாத்திக்கொண்டு ஒரு உள்ளே போகிறார்கள். முத்து வருகிறான்)

முத்து :—கதவைச் சாத்திக்கொண்டு போய் விட்டார்கள். அனந்தராமன் போதை மருந்து வைத்திருக்கிறான் என்று இவரிடம் சொல்வதற்குள் அவர் வந்து சேர்ந்தார். எப்படியும் யாரிடமாவது இவ்விஷயத்தைச் சொல்லியே தீரவேண்டும். மனைவியிடம் சொல்லலாமென்றால் அவள் கோபக்காரி, என்ன செய்வாளோ? (தலையைத் தடவிக் கொண்டு போகிறான்.)

அங்கம் 3. களம் 2.

நாராயணய்யர் வீடு.

(ராஜம்மாள் உட்கார்ந்திருக்கிறாள். காமாக்ஷியும் கனகம் என்ற பெயர் பூண்ட விசாலாக்ஷியும் நின்று கொண்டிருக்கிறார்கள்.)

ராஜம் :—எனக்கென்னமோ ஒருவர் மேலும் குற்றம் சொல்வது வழக்கமில்லை. ஆயினும் முகத்தை அழுதவண்ணம் வைத்துக் கொண்டிருந்தால், இவ்வீட்டில் சரிப்படாது. எனக்கும் பிடிக்காது.

காமாக்ஷி :—(மெதுவாக) அம்மா! கொஞ்சம் தயவு செய்து—

ராஜ :—தயவாவது! உன்னை விட புத்திசாலி இவ்வுலகில் கிடையாதென்று நீ எண்ணிக் கொண்டிருக்கிறாய். நற்சாட்சிப் பத்திரங்கள் ஒன்று கூட இல்லையே என்று கிளப்பில் எல்லோரும் கேட்கிறார்கள்.

காமா :—அம்மா! நீங்கள் யோசிக்காமல் ஏதோ

ராஜம் :—என்னடீ அம்மா! ஏதோ இரண்டு எழுத்துத் தெரிந்து விட்டதினால், இருபத்தைந்து வருஷங்கள் பெரியவளாகிய என்னை விட நீ உயர்ந்த புத்திசாலியாய் விடுவாயோ? என் வீட்டில் எனக்கு அதிகாரமுண்டு. யாரை என்ன சொல்வது, எப்படி வைப்பது என்ற விஷயங்கள் எனக்குத் தெரியும்.

காமா :—இருந்தாலும் இத்தம்மாள் பாபம் ஏதோ கஷ்டதிசையினால்—

ராஜம் :—அதெல்லாம் எனக்குத் தெரியாது. அவரவர்கள் ஸ்திதிக்குத் தகுந்தபடி வணக்கமாய் நடக்கது கொள்ளத்தான் வேண்டும். முகம் கறுப்பாயிருந்தாலும், கொஞ்சம் சிரிப்பிருந்தால் சௌகரியமாயிருக்கும். நான் கடைசி முறையாகச் சொல்லுகிறேன். புன்சிரிப்புடனும் வணக்கத்துடனும் இருக்க வேண்டும். இல்லாவிடில் இங்கு சரிப்படாது (போகிறாள்.)

காமா :—நீங்கள் வித்தியாசமாய் எண்ண வேண்டாம். இங்கு எல்லோரும் நல்லவர்கள் தான். என் தாயார்தான் யோசிக்காமல் பேசி விடுவார்.

விசா :—இல்லை அம்மா! அவர் மேல் குற்றம் இல்லை. நான் தகுந்தபடி நடந்து கொண்டால் அவர் குற்றம் சொல்லமாட்டார்.

(காமாக்ஷியின் பாட்டி வருகிறாள்)

காமா-பாட்டி :—காமாக்ஷி! போடி! சாப்பாடு தயாராய் விட்டது. (காமாக்ஷி போகிறாள்)

காமா-பாட்டி :—இதைப் பார், கனகம்! நீ இந்தமாதிரி சுடு சுடு என்று முகத்தை வைத்துக் கொள்ளக் கூடாது. உனக்குத் தாய் தந்தையர் இல்லையா? உனக்கு எந்த ஊர்?

விசா :—அம்மணி! நான் மகாதுரதிர்ஷ்டம் உள்ளவள். பூர்வ ஜன்மங்களில் பெரிய பாபக் கிருத்தியங்களைச் செய்து, இந்த ஜன்மத்தில் பிறந்தது முதல் ஒரு வினாடி கூடச் சந்தோஷமின்றிக் காலங்கழித்தேன்.

காமா-பாட்டி :—இதென்ன அம்மா! பெரிய புராணக் கதைமாதிரி யல்லவோ இருக்கிறது! உனக்கு எந்த ஊர்? இவ்வளவு காலம் யார் வீட்டில் வேலையிலிருந்தாய்?

விசா :—நான் இது வரையில் வேலையே செய்ததில்லை அம்மணி!

காமா-பாட்டி :—ஆனால் என்ன செய்துகொண்டிருந்தாய்?

விசா :—எனது பந்து ஒருவர் வீட்டிலிருந்தேன்.

காமா-பாட்டி :—அவர் இப்பொழுது எங்கே?

விசா :—இறந்து விட்டார் அம்மணி.

காமா-பாட்டி :—(மெதுவாய்) என்னமோ, எனக்கு நம்பிக்கையே இல்லை. (பிரகாசமாய்) உனக்குப் புருஷன் கூட இறந்தா போனான்?

விசா :—ஆம் அம்மணி!

(காமாக்ஷி வருகிறாள்)

காமா :—நீங்களும் வாருங்கள் சாப்பிட.

காமா-பாட்டி :—ஏண்டி! எனக்குத் தெரியாதோ? நான் அவளை அழைத்து வரமாட்டேனோ? உனக்கு ஏன் புத்தி வர வர இப்படி உலக்கைக் கொழுந்தாய்ப் போய்விட்டது? உன்னைச் சொல்வதில் உபயோகமில்லை. எக் கேடும் கெட்டுப் போங்கள். (போகிறாள்)

**அங்கம் 3. களம் 2.**

ஓர் தெருவு.

(கிருஷ்ணமூர்த்தி வருகிறான்)

கிரு :—(தனக்குள்) தந்தையோ லக்ஷ்மியின் மேல் மிக்க கோபமாயிருக்கிறார். அவள் பழைய முறையில் விவாகம் செய்து கொள்ள இஷ்டப்படவில்லையாம். விசாலாக்ஷி எங்கே? யாரைக் கேட்பது? நான் இங்கு வந்தும் பிரயோஜனமில்லையே.

(முத்து வருகிறான்)

முத்து :—கிருஷ்ணமூர்த்தியா? நல்ல காலம்!

கிரு :—ஏனையா? என்ன விசேஷம்?

முத்து :—அனந்தராமன் தங்கை ஓடிப்போய் விட்டாளாம்.

கிரு :—ஏன்?

முத்து :—அவன் அவளுக்கு போதை மருந்து கொடுத்து என் தம்பிக்கு விவாகம் செய்து கொடுக்கத் தீர்மானித்திருந்தான்.

கிரு :—(கோபத்துடன் முத்துவைக் குலுக்கி) ஏனையா அநியாயமாய் ஒரு பெண்ணை சதியாலோசனை செய்து இம்சிக்கத் தீர்மானித்தீர்கள்?

முத்து:—(பயந்து) ஐயா! விடும். எனது மனைவி வழியாக நீர் எனக்கு பந்து என்று எண்ணுகிறேன்.

கிரு :—(நகைத்து) அந்தப் பெண் இப்பொழுது எங்கே சொல்லும். உமக்குத் தெரிந்த வரையில் ஒளிக்காமற் சொல்ல வேண்டும்.

முத்து :—சத்தியமாய் எனக்குத் தெரியாது.

கிரு :—சரி! வேறு யாரையாவது விசாரிக்கிறேன்—நீர் வாரும்—என்னிடம் உமக்குத் தெரிந்ததை விவரமாய்ச் சொல்லும்.

(இருவரும் போகிறார்கள்)

அங்கம் 3. களம் 3.

நாராயணய்யர் வீடு.

(நாராயணய்யரும் கோவிந்தனும் உட்கார்ந்திருக்கின்றனர்)

நாரா.—நான் ஒரு சந்தோஷ சமாசாரம் சொல்லப்போகிறேன். நீயோ துக்கக் கடலில் மூழ்கியிருக்கிறாய்.

கோவி:—கொஞ்சம் தலைவலியாயிருக்கிறது. வேறொன்று மில்லை (தனக்குள்) லக்ஷ்மி இவ்வளவு பிடிவாதம் செய்கிறாளே.

நாரா:—வெங்கடராமையரும் நானும் அடுத்த வெள்ளிக்கிழமை தினம் நல்ல முகூர்த்தமாயிருப்பதால், லக்ஷ்மிக்கும் உனக்கும் விவாகம் செய்துவைக்கத் தீர்மானித்தோம். உனக்கு சம்மதம் தானே?

கோவி:—அவள் இஷ்டம் எப்படியோ?

நாரா:—உன்னை மணந்து கொள்வதில் அவளுக்கு இஷ்டமிராதா?

கோவி:—அவள் பிடிவாதமாய் ரிஜிஸ்டர் மூலமாகத்தான் விவாகம் செய்து கொள்ளுவேன் என்கிறாள்.

நாரா:—ஏனப்படிச் சொல்லுகிறாள்? நீயும் அப்படியே செய்வதாக ஒப்புக்கொண்டாயா?

கோவி:—இல்லை. நான் முடியாதென்று சொல்லிவிட்டேன்.

நாரா:—(மகனை முதுகில் தட்டி) பேஷ்! நீ இவ்வளவு புத்திசாலி என்று நான் எண்ணவேயில்லை. நீ என்ன செய்ய வேண்டும் தெரியுமா? ஏதாவது யுக்தி செய்து அவளை அந்த எண்ணத்தை விடச் செய்ய வேண்டும். கொஞ்சம் புத்தியை உபயோகப்படுத்து. நீ பெரிய பரீட்சைகள் தேறியதற்குக் கொஞ்சம் பலனருக்கட்டும். போய் ஏதாவது செய். ஆனால் மூரட்டுத்தனமே கூடாது. தெரிந்ததா? ஞாபகமிருக்கட்டும், மூரட்டுப் பேச்சே கூடாது. (போகிறார்கள்)

அங்கம் 3. களம் 4.

ஓர் தெருவு.

(நடேசனும் கோபாலனும் பிரவேசித்தல்)

கோபா:—முகம் குதிரையைப் போல் நீண்டிருக்கின்றது.

நடேசன்:—மூக்கு கிளியைவிடக் கூர்மையாயிருக்கிறது.

கோபா:—விழிகள் ஆந்தையைப் போல் இருக்கின்றனவே.

நடேசன்:—முகத்தில் காடியைப் போல் உதடு தொங்குகின்றது.

கோபா:—முகத்தில் பைத்தியக் களை சொட்டுகிறதே.

நடேசன்:—நம்மைக் கண்டதும் அது ஒரு இரைச்சல் போட்டதே பார்த்தீரா?

(சிவன் வருகிறான்)

சிவன்:—இரைச்சல் போட்டதா?

நடேசன்:—'இவனை வெளியில் தள்ளு' என்று பெரிய இரைச்சல் போட்டான்.

(ராமையா வருகிறான்)

ராமை:—அந்தக் குழந்தைக்கு வெட்கம் மிகவும் அதிகம். அதனால்தான் அப்படிச் சொன்னாள்.

நடேச:—அவ்வளவு வெட்கமும் வினயமும் அழகும் உள்ள மனைவி தனக்கு வேண்டாம் என்கிறார்.

ராமை:—வேண்டாமென்று இனிமேல் சொல்லலாமா?

நடேச:—சொன்னாலென்ன?

ராமை:—குழந்தைதானே! அதற்குச் சரியாய்ப் பேசவும் நடக்கவும் தெரியுமா?

நடேச:—அவ்வளவு பாலியத்தில் விவாகம் செய்யலாமா?

ராமை:—கோபாலையர் ஒன்றும் பேசவேயில்லை.

கோபா:—நடேசன் சொன்னது சரி.

ராமை :—முகூர்த்தம் என்றைக்கு வைத்துக் கொள்ளலாம் ?

கோபா :—நான் விவாகமே செய்து கொள்ளப் போவதில்லை.

ராமை :—ஏனையா ?

கோபா :—அந்தப் பெண் எனக்கு சரியாயில்லை.

ராமை :—ஏன் ? அப்பெண்ணிடம் எவ்விதத்தில் தோஷமிருக்கிறது ?

நடேச :—அவளிடம் தோஷமேயில்லை. அவரிடம் தான் தோஷம்.

ராமை :—நீர் ஏன் ஒன்றுமே சொல்ல மாட்டேனென்கிறீர்?

கோபா :—எனக்கு அந்தப் பெண் வேண்டாம்.

ராமை :—காரண மென்ன, ஐயா?

நடேச :—காரணமேன் ஐயா கேட்கிறீர்? வேண்டாமென்றால் பேச்சென்ன அப்புறம் ?

ராமை :—காரணம் சொல்லாமலிருக்கக் கூடாது.

நடேச :—இருந்தால் என்ன செய்வீர் ?

ராமை :—உங்களுக்கு கௌரவம் என்பதே இல்லை.

நடேச :—சரிதான் ! போம், பிறகு அந்தப் பெண்ணின் பூர்வோத்திரங்களெல்லாம் வெளியாய்விடும்.

ராமை :—(தனக்குள்) இவன் ஏது அசாத்தியமாயிருக்கிறனே !

நடேச :—அந்தப் பெண்ணிற்கு வைத்தியர் வந்து மருந்து கொடுக்கிறரே, ஏதாவது குணம் தெரிகிறதா ?

ராமை :—தொண்டையில் ஏதோ சிகிச்சை செய்கிறர் !

நடேச :—மூளை சரியாயில்லாததற்கல்லவோ மருந்து கொடுப்பதாகச் சொன்னர் ?

ராமை :—அந்த வைத்தியா அப்படிச் சொல்லியது ?

நடேச :—வைத்தியர் சொல்வாரா ? வேறு யாரோ சொன்னர்கள்.

ராமை:—அதெல்லாம் நம்பவேண்டாம். போய் வருகிறேன்.

நடேச :—ஒரே ஒரு வார்த்தை. கொஞ்சம் இருங்கள். கோவிலுக் கெதிரில் ஒரு பாழடைந்த வீடு இருக்கிறது. அந்த இடத்தில் இந்தப் பெண்ணைப் போட்டுப் பூட்டி வையுங்கள். வௌவால் முதலிய ஜந்துக்கள் பறக்கும். அவைகளுடன் அவள் நன்றய் சம்பாஷித்துக் கொண்டிருப்பாள்.

ராமை :—(கோபமாய்) ஏது ஐயா, உமக்கு இவ்வளவு துஷ்ட எண்ணம் ? பாழடைந்த வீட்டில் போட்டுப் பூட்டுவானேன் ?

நடேச :—அவர்கள் வீட்டில் தனிமையில் ஓர் அறையில் போட்டுப் பூட்டிவதைவிட......

ராமை :—கடவுள் தான் உமது துஷ்டத்தனத்தை அடக்கவேண்டும். (போகிறன்)

கோபா :—நடேசா ! பைத்தியத்தை என் தலையில் கட்டப் பார்த்தார்களே !

சிவன் :—(சிரித்து) ஆமாம் ! அசல் பைத்தியம்!

கோபா :—அந்த லக்ஷ்மியை விவாகம் செய்வது தான் நல்லது.

நடேச :—ஆம் அதுதான் நல்லது.

கோபா :—கோவிந்தனைக் கண்டால் கொஞ்சம் அழுத்தமாக என்னைப்பற்றிச் சொல்லு.

நடேச :—அப்படியே செய்கிறேன்.

(கோவிந்தன் வருகிறன்)

கோவி :—இந்தத் தந்திரம் அநேகமாய்ப் பலிக்கலாம். பலிக்காவிடில் என்ன செய்வது ? பிரும்ம சமாஜமாம். அதில் சேருவதாம். எவ்வளவு பரிகாசத்திற்கு இடமுண்டாகும் !

கோபா :—நானும் அந்தப் பயலை நேரில் கண்டு பயமுறுத்துகிறேன்.

நடேச :—அதோ கோவிந்தன் வருகிறான்.

சிவன் :—ஏதோ முணுமுணுக்கிறான்.

கோபா :—(பயத்துடன்) ஐயோ! நான் சொன்னது அவன் காதில் விழுந்திருக்கும். வேகமாய்ப் போகலாம் வா.

நடேச :—(ஒருபுறமாக) ஒரு வேடிக்கை பண்ணுகிறேன். (பிரகாசமாய்) அவன் தங்களை அடிக்கவல்லவோ வருகிறான்.

கோபா:—(நடுக்கத்துடன்) என்னையா?—நான் ஒரு அபராதமும் செய்ய வில்லையே!—தெருக்கோடியிலிருக்கும் பிள்ளையாரே—இன்று என்னைக் காப்பாற்றும்—எவ்வளவு தோப்பிக்கரணம் வேண்டுமானாலும் போடுகிறேன்.

கோவி :—தவிர, அவள் எனது அபிப்பிராயத்தைக் கொஞ்சமேனும் மதிக்கவில்லையே. நான் அவள் சொன்னபடியே ஒரு பொம்மையைப்போல் ஆடுவதா?

கோபா :—என்ன சொல்லுகிறான்?

சிவன் :—'இந்த முட்டாள் கழுதை என் எதிரில் வந்து நிற்பதா?' என்கிறான்.

கோபா :—ஐயோ! நான் ஒரு ஓரமாகத்தானே நிற்கிறேன்.

கோவி :—தந்தை அவளுக்கு புத்திமதி சொல்ல மாட்டாரோ? அவரையும் மீறி அவள் நடந்து கொள்ளுவாளோ?

கோபா :—இப்பொழுதென்ன சொல்லுகிறான்?

நடோ :—'பிள்ளையாருக்குத் தோப்புக் கரணம் போடுவானாம். எனக்குப் போட்டாலென்ன?' என்கிறான்.

கோபா :—(தனக்குள்) இவனுக்கே போட்டு விடுவோம். அதனால் என்ன? ஆனால் இவர்களுக்குத் தெரியாமல் இருக்கவேண்டும். (பிரகாசமாய்) நீங்கள் கொஞ்சம் அப்புறம் போயிருங்கள். நான் இவனுடன் சமாதானமாய்ப் பேசிப் பார்க்கிறேன்.

(சிவனும் நடேசனும் ஒரு புறம் போகிறார்கள்)

கோபா :—(கோவிந்தன் பின் நின்று தோப்புக் கரணம் போடுகிறான்) என்னை மன்னியும்; தப்பிதம்.

கோவி :—(திரும்பிப் பார்த்து) இதேது! பைத்தியமா?

கோபா :—(எண்ணுகிறான்) இரண்டு, மூன்று—

கோவி :—அடாடா! கோபாலனா! எனக்கு ஏன் போடுகிறாய்? பாபம்! பயப்படாதே. (கையைத் தூக்கி எழுப்பி விட்டு போகிறான்)

(நடேசனும் சிவனும் வருகிறார்கள்)

கோபா :—நடேசா! அந்தப் பயல் எப்படி ஓடுகிறான் பார்!

நடே :—ஆமாம், பயந்து ஓடி விட்டான்.

கோபா :—அவன் எவ்வளவு பணிவாக நடந்து கொண்டான் தெரியுமா உங்களுக்கு?

சிவன் :—வெகு பணிவு! தோப்பிக்கரணம் போட்டானா?

கோபா :—(தனக்குள்) என்ன துரதிர்ஷ்டம்! இவன் பார்த்து விட்டானே! (பிரகாசமாய்) தோப்புக்கரணம் போட்டது அவன் தான்.

சிவன் :—ஆமாம்! முட்டாள் கழுதைதான் தோப்புக்கரணம் போட்டது.

கோபா :—என்ன! நான் போட்டேன் என்று சொல்லுகிறாய்?

நடேச :—(சிவனிடம்) அவன் தன் பெயரை மாத்திரம் நன்றாகத் தெரிந்து கொண்டிருக்கிறான்.

கோபா:—(தனக்குள்) ஏதோ என்னைப் பரிகசிக்கிறார்கள்; தவிர இருவரும் ரகசியம் பேசிக் கொள்கிறார்கள். இருக்கட்டும், நான் இன்று விஸ்கி வாங்கிக் கொடுக்கப் போகிறதில்லை.

நடேச:—அப்படி நினையாதீர். நாங்கள் என்றும் நீங்கள் சொல்வதை வேதவாக்காகக் கொள்வோம்.

கோபா:—சரிதான், நான் வேறு விதமாக நினைத்தேன். சிவன் ஒரு விதமாகச் சொன்னான்.

சிவன் :—இல்லை, இல்லை. நான் ஒரு தப்பிதமும் நினைக்கவில்லை. இதோ கடை வந்து விட்டது.

(போகிறார்கள்)

அங்கம் 3. களம் 5.

வெங்கடாராமையர் வீட்டிலுள்ள தோட்டம்.

(லக்ஷ்மி உலாவிக் கொண்டிருக்கிறாள்)

லக்ஷ்மி :—(தனக்குள்) தந்தையோமிக்க கோபமாயிருக்கிறார். தந்தையுடன் இன்று என்னால் தர்க்கிக்கவும் முடியவில்லை. அவர் சொல்வது முற்றிலும் நியாயமாக இருக்கிறது. கோவிந்தனை நான் கண்டு, நான் செய்தது அபராதம் என்று சொல்வதா? சே! மிக்க அகௌரவமாக இருக்குமே! ஏதோ ஒரு சிறிய காரணத்தையாவது முன்னிட்டு அவர் வேண்டுகோளுக்கிணங்கினது போல் பாவனை செய்வதென்றால் எவ்வளவு சந்தோஷகரமாக இருக்கும். அவர் மறுபடியும் இப்பக்கம் வரவேமாட்டார் போலல்லவோ இருக்கிறது! (தூரமாக கோவிந்தன் வருவதைப் பார்க்கிறாள்) அடாடா! என்ன அதிர்ஷ்டம்! என்ன அதிர்ஷ்டம்!

(கோவிந்தன் கையில் ஓர் சிறிய மூட்டையுடன் வருகிறான்)

கோவி :—லக்ஷ்மி! போய் வருகிறேன்; இதுவே கடைசிமுறையாக நான் உன்னுடன் பேசுவது.

லக்ஷ்மி :—(கலவரத்துடன்) ஏன்! எங்காவது வெளிதேசம் செல்லுகிறீரா?

கோவி :—வெளிதேசமென்ன? உள்தேசமென்ன? இனி எனக்கு எல்லா தேசமும் ஒன்றே.

லக்ஷ்மி :—ஐயோ! ஏன் அவ்வளவு வெறுப்புடன் பேசுகிறீர்?

கோவி :—(மூட்டையைக் காண்பிக்கிறான்) இதோபார்! ஒருவருக்கும் தெரியாமல் கொஞ்சம் துணிகளை மாத்திரம் எடுத்து வந்தேன். பரதேசியைப்போல் ஊரூராய்ச் சென்று காலந் தள்ளப்போகிறேன்.

லக்ஷ்மி :—ஊரைவிட்டுப் போகவேண்டாம்.

கோவி :—ஒரே ஒரு வார்த்தை சொல். இதோ இம் மூட்டையை எறிந்து விடுகிறேன்.

லக்ஷ்மி :—அதென்ன வார்த்தை?

கோவி :—அக்கினிசாட்சியாக என்னை மணந்து கொள்கிறாயா?

லக்ஷ்மி :—(புன்சிரிப்புடன்) அப்படியே செய்கிறேன்.

கோவி :—பேஷ்! பேஷ்! எவ்வளவு நல்ல மூட்டை இது?

லக்ஷ்மி :—(மூட்டையை வாங்கிக்கொண்டு) இதில் என்ன இருக்கிறது? அவிழ்த்துக் காண்பியுங்கள் பார்க்கவேண்டும். ஏதோ கெட்டியாய்க் கல்லைப் போல் இருக்கிறதே.

கோவி :—(வாங்கிக்கொண்டு, தனக்குள்) அவசரத்தில் அருகிலிருந்த சாமான்களை எல்லாம் அள்ளிப் போட்டேன். துணியே போடவில்லை. காலால் அடிக்கிற பெரிய பந்து ஒன்று, சீப்பு, இன்னம் ஏதோ சில சில்லரைச் சாமான்கள் எல்லாம் அள்ளிப் போட்டேன். இவளுக்குக் காண்பிக்கக் கூடாது. (பிரகாசமாய்) லக்ஷ்மி! இப்பொழுது அவிழ்த்தால் கட்டுவது கஷ்டம்! வீட்டில் சாப்பாட்டிற்கு எனக்காகக் காத்துக்கொண்டிருப்பார்கள்; போய் வருகிறேன்.

லக்ஷ்மி :—(தனக்குள்) இதில் ஏதோ சூதிருக்கிறது. பெரிய கல்லொன்று இதில் இருக்கிறது. அதில் துணியேயில்லை. (பிரகாசமாய், தயவு செய்து காண்பியுங்கள்.

(உள்ளிருந்து லக்ஷ்மி! லக்ஷ்மி!)

லக்ஷ்மி :—தந்தை கூப்பிடுகிறார். போய் வருகிறேன். (போகிறாள்)

கோவி :—நல்ல வேளை! அவளை சமயத்தில் யாரோ கூப்பிட்டார்கள். பரீட்சை தேறியதற்கு பலனிருக்கட்டும் என்று தந்தை சொன்னார். லக்ஷ்மியே கிடைத்து விட்டாள் இனி என்ன? (போகிறான்)

அங்கம் 3. களம் 6.

நாராயணய்யர் வீடு.

(விசாலாக்ஷி உட்கார்ந்திருக்கிறாள்)

விசா :—(தனக்குள்) தற்கொலை எதற்காகச் செய்துகொள்ளவேண்டும். சே! வேண்டாம்! காமாக்ஷியிடம் உண்மையைச் சொன்னால் அவள் உதவி செய்வாள் என்பதைப் பற்றிச் சந்தேக மில்லை. அவள் மிக்க நல்ல பெண். (காமாக்ஷி வருகிறாள்)

காமா :—(ஆச்சரியத்துடன்) யார்! இங்கே உட்கார்ந்திருப்பது?

விசா :—காமாக்ஷி! நீ தான் என்னைக் காப்பாற்ற வேண்டும். நான் தான் அந்த விசாலாக்ஷி! நான் நிரபராதி

காமா :—ஆனால் வர்ணம் பூசிக்கொண்டா இருந்தாய்?

விசா :—உன்னிடம் எனக்கு நேர்ந்த கஷ்டங்களைச் சொன்னால் நீ மனமிரங்குவாய் என்பது நிச்சயம்.

காம :—இங்கு பேசவேண்டாம், தோட்டத்திற்குச் சென்று பேசலாம். ஒன்றுக்கும் பயப்படாதே. என் தந்தை மிகவும் நல்லவர். அவர் கூடியவரையில் உனக்கு உதவி செய்வார். (போகிறார்கள்)

அங்கம் 3. களம் 7.

நாராயணய்யர் வீடு.

(நாராயணய்யர் படுக்கையறையில் உட்கார்ந்திருக்கிறார்)

நாரா :—கோவிந்தன் லக்ஷ்மி தன் அசட்டுப் பிடிவாதத்தை விட்டுவிட்டதாகச் சொல்லுகிறான். அவள் நல்ல பெண் தான். பார்ப்பதற்கும் அழகாயிருக்கிறாள். புத்திசாலி.

(ராஜம் வருகிறாள்)

ராஜ :—அந்த உபாத்தினி நல்ல மாதிரி தான் என்றாலும், நற்சாட்சிப் பத்திரங்களே இல்லை. என்னமோ எனக்கு இளகின மனது. நான் அவளை ஒன்றும் சொல்லவில்லை.

நாரா :—இளகிய மனமுள்ளவளாயிருப்பதால் தான் அவளுக்கு குதிரை லாயத்திற்கருகிலுள்ள அறையைக் கொடுக்க ஏற்பாடு செய்தாய்.

ராஜ :—யார்தான் ஒரு வாலிபப் பெண்ணை திடீரென்று ஒரு குடும்பத்திலழைத்துக் கொள்வார்கள். முகத்தைச் சுளித்துக் கொண்டே யிருக்கிறாள். எனக்கோ ஏற்கெனவே அதிக உற்சாகம் கிடையாது. அப்படி இருக்கும்பொழுது இவளைத் தோழியாக அமர்த்திக் கொண்டால்.......

நாரா :—தோழி எதற்கு உனக்கு? நீ என்ன ஓர் அரசன் மகளா? அல்லது அரசன் மனைவியா? அவள் காமாக்ஷிக்கு மாத்திரம் உபாத்தினியாக இருக்கட்டும்.

ராஜ :—உங்கள் தாயாருக்குக் கூட அவள் மீது கோபம்.

நாரா :—அந்தப் பெண் மிக்க துர்ப்பாக்கியவதி, பாபம். இல்லாவிடில் உங்களிடத்தில் சிக்கிக் கொள்ளுவாளா?

ராஜம் :—ஆமாம்! அனந்தராமனை வாயில் வந்தபடி வைது அவமதித்து துரத்தினீர்களாமே, எதற்காக?

நாரா :—அவன் தங்கையை வீட்டைவிட்டுத் துறத்தியிருக்கிறுன் போதாக் குறைக்கு அவளுக்கு ஒரு கெட்ட பெயரையும் வைக்கிறுன்.

ராஜ :—அவனு கெட்ட பெயர் வைக்கிறுன்? இன்று கிளப்பில் எல்லோரும் அப்படியே சொல்லுகிருர்கள். அதற்கென்ன சொல்லுகிறீர்கள்?

நாரா :—சரி! இந்தப் பேச்சு வேண்டாம். வீணுய் எனக்குக் கோபம் வரும். கோவிந்தன் கடிதத்தைப் பார்த்தாயே. லக்ஷ்மிக்குத்தான் அக்கடிதம் எழுதினுனும். அவர்களிருவருக்கும் வெள்ளிக்கிழமை தினம் விவாகத்தை நடத்தலாமென்று எண்ணுகிறேன்.

ராஜ :—(கோபமாய்) அதென்ன? என்னை ஒருவரும் கேழ்கவில்லையே.

நாரா :—என்னை மாத்திரம் யார் கேட்டார்கள்?

ராஜ :—கிடக்கிறது, இதைப்பற்றி என்ன? வேறு தகுந்த பெண்ணை நான் பார்த்து......

நாரா :—ஏன்? லக்ஷ்மிக்கென்ன?

ராஜா :—எனக்குப் பிடிக்கவில்லை.

நாரா :—இனி மாறுவது கிடையாது, கலியாணம் நடந்தது போலவேதான்.

ராஜ :—அவள் பாட்டனுர் மிக்க ஏழையாயிருந்தார்.

நாரா :—எனது பாட்டனுர் உபாதானம் வாங்கினுர்.

ராஜ :—எப்பொழுதும் என்னை அலட்சியம் பண்ணவேண்டுமா? ஒரு காரியத்திலும் என்னைக் கலந்து யோசிக்கக் கூடாதா?

(கோவிந்தன் வருகிறுன்)

கோவி :—அம்மா! தங்களுக்குச் சம்மதம் தானே?

நாரா :—(தனக்குள்) இக்காலத்தில் பையன்களுக்கு வெட்க மென்பதே கிடையாது. பெண்களுக்குத் தான் என்ன? அவர்களுக்கும் வெட்கமே கிடையாது. இவள் பதிலே சொல்ல மாட்டாள் போலிருக்கிறது. (பிரகாசமாய்) சம்மதம்தான்! நீ கவலைப்படாதே.

கோவி :—அப்படியா! அம்மாவுக்கு இஷ்டமிராதோ என்று எண்ணினேன்.

ராஜ :—கோவிந்து! நீ நான் சொன்னதை லட்சியம் செய்யாது, என்னை அவமதித்தும், நீ நன்றுயிருக்க வேண்டு மென்பதே என் பிரார்த்தனை.

கோவி:—(தனக்குள்) இந்தப் பிரார்த்தனை சாதாரணமாய் அடங்காக் கோபத்தில்தான் ஏற்படும். ஆயினும் எனக்கு இப்பொழுது இதைத் தாங்க சக்தியில்லை. படுக்கைக்கு நான் போகிறேன். (போகிறுன்)

நாரா:—கொஞ்சம் கௌரவமாக நடந்து கொள்ளக் கூடாதா? விலக்க முடியாத காரியத்தை அனுசரித்துக்கொண்டு நடக்கக்கூடாதா?

ராஜ :—ஒருவருக்கும் அடிபணியாத நான் இனி லக்ஷ்மிக்கு அடிபணிய வேண்டும். (போகிறுள்.)

(வெங்கடராமையர் வருகிறுர்)

நாரா :—வாருங்கள்! வாருங்கள்!

வெங்:—கிருஷ்ணமூர்த்தி வந்திருக்கிறுன். விசாலாக்ஷியைத் தேடப் போகிறுனும்.

நாரா :—விசாலாக்ஷியைவிடத் தகுந்த மருமகள் உங்களுக்குக் கிடைப்பதரிது.

வெங்:—என்னமோ பலர் பலவிதமாக அவளைப்பற்றிச் சொல்லுகிறுர்கள். அவன் வயதான பையன். அவன் இஷ்டப்பட்டால் விவாகம் செய்துகொள்ளட்டும்.

(ராஜம் வருகிறுள்)

வெங் :—சீர் முதலியவைகளில் ஏதாவது குறைவுகள் இருந்தால் நீங்கள் தயவு செய்து உடனே எங்களுக்குத் தெரிவிக்கவேண்டும்.

ராஜ:—தாங்கள் அப்படி எண்ணக்கூடாது. நான் குற்றங் குறை சொல்பவளன்று.

வெங்:—அப்படியா? மிக்க சந்தோஷம். போய் வருகிறேன். (போகிறார்)

நாரா:—(மனைவியை முதுகில் தட்டி) பேஷ்! அப்படித்தான் கௌரவமாக நடந்து கொள்ளவேண்டும்! (ராஜம் போகிறாள்) விசாலாக்ஷி! எல்லோரும் உன்னைப்பற்றிக் கேவலமாக நினைக்கிறார்கள். அனாதையாகிய நீ எங்கு சென்று துக்கத்தை அனுபவித்துக்கொண்டிருக்கிறாயோ? நீ நெறி தவறி யாருடனோ சென்றாய் என்று நீயே சொன்னாலும் நான் நம்பேன்.

(விசாலாக்ஷி காமாக்ஷியுடன் வருகிறாள்)

விசா:—(நாராயணய்யர் பாதங்களில் விழுந்து) நான் அனாதை, காப்பாற்றவேண்டும்.

நாரா:—காமாக்ஷி! இந்தப் பெண் யார்? அழாதே அம்மா! என்னால் கூடியதை நான் உதவி செய்யத் தயார்.

காமா:—இவள் தான் எனக்கு உபாத்தினியாக இருந்தாள். விசாலாக்ஷி! தாங்கள் இவளைப் பார்த்ததில்லையா?

நாரா:—(விசாலாக்ஷியை அருகிலழைத்து) நற்காலமாய் இங்கு வந்து சேர்ந்தாயே! என்ன ஆச்சரியம்! நான் இப்பொழுதே உன்னைப் பற்றி நினைத்துக்கொண்டிருந்தேன். விசாலாக்ஷி! நீ ஒன்றுக்கும் கவலைப்படாதே! இறந்த உன் தகப்பனாராக என்னை எண்ணிக் கொள். என்ன அதிர்ஷ்டம்! எனக்குப் பரம சந்தோஷ முண்டாகிறது! விசாலாக்ஷி! அசட்டுத்தனமாய்த் தற்கொலை செய்து கொள்ளாதிருந்தாயே.

(கிருஷ்ணமூர்த்தி வருகிறான்)

நாரா:—கிருஷ்ணமூர்த்தி! நீ யாரைத் தேடுவதற்காக இவ்வூருக் வந்தாயோ அவள் அதோ நிற்கிறாள் பார்! அவள் தனது தமையன் வீட்டிலிருந்து, நேராக இவ்விடத்திற்கு வந்து சேர்ந்தாள். நான் மூன்று நாட்களாய் இந்த விசாலாக்ஷி எங்கு போனாளோ என்று யோசித்துக் கொண்டிருந்தேன். அவளும் மூன்று நாட்களாக இவ்விடமே இருந்திருக்கிறாள்.

கிருஷ்:—நான் எதிர்பார்க்கவேயில்லை. எங்கு போய்த் தேடலாமென்று தங்களிடம் ஆலோசனை கேட்கலாமென்று வந்தேன். எதிர்பாராத நற்செய்தி கிடைத்தது.

நாரா:—விசாலாக்ஷி! இந்த வாலிபனை மணக்க உனக்கு யாதொரு தடையுமில்லையே?

காமா:—ஒரு தடையுமில்லை யென்று சொல்லுகிறாள். (விசாலாக்ஷி வெளியிற் போகிறாள்)

நாரா:—பேஷ்! கிருஷ்ணமூர்த்தி! ஒரு விவாகத்திற்குப் பதிலாக இருவிவாகங்கள் நடைபெறப் போகின்றன! (தனக்குள்) நான் என்ன சொல்லி என்ன? அவள் போன திசையையே உற்று நோக்குகிறான். ஒருவேளை அவளைப் பின் தொடர்ந்து செல்வானோ!

கிருஷ்:—தங்களுடைய தயவை நான் என்றும் மறவேன்.

நாரா:—நான் போய் உனது தந்தையிடம் இவ்விஷயத்தைத் தெரிவித்துவிட்டு வரப் போகிறேன். கோவிந்தன் கலியாணம் இன்றைக்கு நான்காம் நாள். அப்பொழுதே உனது விவாகமும் நடக்கவேண்டுமென்பது எனது எண்ணம்.

கிருஷ்:—நானும் தங்களுடன் வருகிறேன்.

நாரா:—பேஷ்! காமாக்ஷி! நீ போய் விசாலாக்ஷியுடன் பேசிக்கொண்டிரு. கிருஷ்ணமூர்த்தி! வா—போவோம். விசாலாக்ஷியின் விவாகத்தை எவ்வளவு சிறப்பாக நடத்தப் போகி

றேன் பார்! எனக்கு அறிவு உண்டான நாள் முதல் இப்பேர்ப்பட்ட சந்தோஷத்தை நான் ஒரு நாளும் அடைந்ததில்லை. இன்று இப்படி நடக்குமென்று யார் எதிர் பார்த்தார்கள்! (போகிறார்கள்)

அங்கம் 3. களம் 8.

கலியாண மண்டபம். கலியாணம் நடக்கிறது.

(வெங்கடராமையரும், நாராயணய்யரும் சம்பாஷித்துக் கொண்டிருக்கின்றனர்)

நாரா:—அனந்தராமன் தீராகோபாயிருக்கிறானும். பாபம்! அவனும் சந்தோஷமாயிருந்தால் நலமாயிருக்கும்.

வெங்:—அவன் செய்த அக்கிரமங்களுக்கு—

நாரா:—இல்லை. உண்மையில் பச்சாதாபப்பட்டு வருந்துகிறானும். நேற்று என்னிடம் மன்னிப்புக் கேட்டு, தங்கையைப் பார்க்க விரும்புவதாகவும் ஒரு ஆளிடம் சொல்லியனுப்பினான். விவாகம் முடியட்டும், விசாலாக்ஷியை அவனிடம் அழைத்துச் செல்கிறேன்.

வெங்:—அதோ பாருங்கள்! நம்மை அழைக்க வருகிறார்கள். வாருங்கள்! லக்னம் வந்துவிட்டது. (போகிறார்கள்)

(முடிவு.)

# சிங்காரவல்லி.

ஒரு சிறுகதை.

(ஸ்ரீமான் M. C. கிருஷ்ணசாமி)

அதிக விடியற் காலை; சூரியன் அப்பொழுது தான் தோன்றினான். காகங்கள் கத்துவதும், கோழிகள் கூவுவதும் நன்றாய்க் கேட்கப்படலாயின. அப்பொழுது காவேரியில் ஜலம் அதிகத் தெளிவாகவும் வெது வெதுப்பாகவும் ஓடிக்கொண்டிருந்தது. அந்த சமயத்தில் ஒரு இளங் கன்னிகை அவ்வாற்றின் கரையில் ஒரு படியின் மேல் உட்கார்ந்துகொண்டு ஏதோ ஆழ்ந்த யோசனையில் இருப்பதாகக் காணப்படுகிறாள். அவள் பக்கம் ஒரு குடம் கிடக்கிறது. அவளுக்கும் தெரியாமல் அவள் கண்களில் தண்ணீர் ததும்பிக்கொண்டிருந்தது.

அவள் யார்? ஏன் இந்த அதிகாலையில் அவ்விடம் செல்லவேண்டும் என்று கேட்பீர்களானல், அதற்கு மிக்க துக்ககரமான அவள் பூர்வீக சரித்திரத்தைச் சொல்லித்தானக வேண்டும்.

அவள் யார் என்றால், அழகான பதினாறு வயது நிறையாத, ஆதரவற்ற, அவளுடைய சுகத்தைக் கவனிக்க யாருமற்ற ஒரு இளம் மங்கை. இது என்ன வேடிக்கை? அவளுக்குப் பதினாறு வயது என்று சொல்லும்போதே, அவளுக்குக் கலியாணமாய், குண்டோதரன் போல் ஒரு புருஷன் இருக்கவேண்டுமே. மேலும், இக்காலத்தில் பதினாறு வயதுக்குள் இரண்டு பிள்ளைகளைப் பெற்றுவிடுவார்களே. அப்படியிருக்க, இவள் ஏன் தனிமையாக இவ்விடம் வந்து துக்கப்படவேண்டும்? அவள் பக்கத்தில் குடம் இருப்பதைப் பார்த்தால், அங்கு தண்ணீர் எடுத்துச் செல்வதற்கு அல்லவா அவ்விடம் அவள் வந்திருப்பதாகத் தோன்றுகிறது! இவள் ஏன் அங்கு வரவேண்டும்? வேறு யாருமில்லையா? என்று விதம் விதமான கேள்விகள் பிறக்குமல்லவா? அவைகளுக்கெல்லாம் அவள் தாயற்ற பிள்ளை என்ற ஒரே பதில். எப்பொழுது ஒரு குழந்தைக்குத் தாயார் இறந்து விட்

டாளோ, அத்துடன் அதற்கு வலதுகை ஒடிந் தாப்போல்தான். தாயார்தான் பெண் குழந்தையானாலும், ஆண்குழந்தையானாலும், ரொம்ப வாத்சல்யத்தோடு வளர்ப்பது. பெண் குழந்தையானால், அவள் வளர வளர மெல்ல மெல்ல அவளுக்குச் சகல காரியங்களையும் சொல்லிக் கொடுத்து, பிறகு அவள் தன் புருஷன் வீட்டில் ஒரு கஷ்டமும் படாமலிருக்கும் பொருட்டு அவளுக்கு அங்கு நடந்து கொள்ளும் விதம் முதலிய சகலத்தையும் சொல்லிக் கொடுப்பது தாயல்லவா? மேலும் பெண்ணுக்குத் தக்க வயது வந்தவுடன், அவளுக்குத் தகுந்த கணவனைத் தேடிக் கலியாணம் செய்விப்பது யார்? பிறகு அவள் தன் புக்ககத்தில் சௌக்கியமாக வாழ்ந்து வந்தால்தான் அப்பெண்ணின் தாயாருக்குத் தான் எடுத்துக் கொண்ட கஷ்டத்திற்குக் கொஞ்சம் சந்தோஷம் ஏற்படும். ஆனால் அவ்விடத்தில் அப் பெண் தன் நாத்தியாலும் புருஷனாலும் கஷ்டப்படுகிறாள் என்று கேட்டால், அப்பொழுது அந்தப் பெண்ணின் தாயாருக்கு மனது எவ்வளவு கஷ்டப்படும்! அப்பொழுது அவளால் என்ன செய்யக்கூடும்?

நம் கதா நாயகியான சிங்காரவல்லி அவ்விதத் தாயின் அருமையை, பிரீதியை இன்னது என்று அறியாதவள். ஏனென்றால், இவள் சிறு குழந்தையாக இருக்கும்பொழுதே அவள் தாய் தன் பெண்ணின் கஷ்டங்களை பார்க்கக் கூடாது என்றோ என்னமோ, பரமன் அடியை போய்ச் சேர்ந்தாள்.

ஒரு பெண் அவள் இரண்டு வயது குழந்தையானாலும் அவளுக்குக் கலியாணம் செய்விக்கப் பட்ட அவள் கணவன் என்று சொல்லப்பட்ட மூன்று நான்கு வயதுள்ள குழந்தை திடீரென்று இறந்து விட்டால், இப்பெண் குழந்தை பெரியவளானால், அவள் விதவை தான். அப்பட்டந்தான் அவளைச் சேரும். ஆனால் இக்காலத்தில் கேவலம் குழந்தைகள் மணம் அதிகம் கிடையாது. குழந்தைகளுக்கு அல்லது இளம் பெண்களுக்கு விதவைப் பட்டம் சூட்டினால் அவைகளுக்கு என்ன தெரியும்? ஒரு வீட்டில் இளம் பெண், அதனுடைய ஐந்தாம் வயதில் கலியாணமாய் அவள் புருஷன் உடனே இறந்து விட்டான் என்று வைத்துக் கொள்வோம். அப்பொழுதுமுதல் அவள் விதவையாய் விடுகிறாள். அதற்குத்தகுந்தாற் போல் அவள் பூவைத்துக் கொள்ளக் கூடாது, குங்குமம் மஞ்சள் முதலியவைகளைப் பூசிக் கொள்ள கூடாதல்லவா? இவைகள் எல்லாம் தவிர அவள் ஒரு வீட்டிற்கு சுபத்திற்குப் போகக்கூடாதல்லவா? அப்பெண்களுக்கு அவைகள் எல்லாம் என்ன தெரியும்? தன் தாயார் அல்லது மூத்த சகோதரிகள் தலைவாரிக் கொண்டு புதிய புடவை கட்டிக்கொண்டு பூ முதலியவைகளை வைத்துக்கொண்டு புறப்பட்டால், இச்சிறு பெண், விதவையான பெண், தான் விதவை, ஒரிடத்திற்கும் போகக்கூடாது, பூ வைத்துக் கொள்ளக் கூடாது என்று அறிவாளா? வழக்கப் பிரகாரம், அவளும் அவர்களுடன் கூடப் போக ஆசைப்பட்டு அழுவாள். வாசகர்களே! அப்பொழுது அப்பெண்ணின் தாயார் மனம் எப்படி இருக்கும் என்று நீங்களே சற்று யோசித்துப் பாருங்கள். எல்லாப் பெண்களும் விதவையாய் விடுகிறார்களா, எங்கோ நூற்றில் ஒருத்தி அவள் துர்திர்ஷ்டத்தினால் அப்படியானால் மற்றவர்களுக்கு என்ன என்று சிலர் குதர்க்கம் பேசப்புறப்படுவது சகஜம். அப்படி நூற்றுக்கு ஒருத்தி தான் என்று வைத்துக் கொண்டாலும் அவள் பிழைப்பு அடியோடு கெட்டுப் போய் விட்டதல்லவா? அவள் இந்த பூமியில் இருந்து கஷ்டப்படுவதைவிட இறப்பதே மேல் அல்லவா? ஆனால் பெற்ற

தாய்மார்களுக்குத் தங்கள் பெண்கள் விதவைகளாகிக் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தாலும் தங்கள் எதிரில் ஜீவித்துக்கொண்டிருந்தால் திருப்தி. அதற்கு மாருக அப்பெண் இறந்து விட்டால் அந்தப் பெண்ணின் கஷ்டம் அத்துடன் முடிந்ததே, இன்னும் எவ்வளவு நாள் அவள் இப்படிக் கஷ்டப்பட்டுக்கொண்டு ஒரு வீட்டின் மூலையில் உட்காருவது என்று எண்ணாமல் அதற்காக அழுகிறார்கள். இது பெற்றோர்களின் வாஞ்சை. அது யாரால் தடுக்க முடியும்? இதை இவ்வளவுடன் நிறுத்தி நம் கதையைத் தொடங்குவோம்

சிங்காரவல்லி சிறு வயதிலேயே பெற்ற தாயை இழந்து விட்டாள் என்று முன்னமே சொன்னோமல்லவா! அவள் தகப்பனாகிய கோவிந்த அய்யர், தாய் இறந்த இரண்டு மாதத்திற்குள்ளாகவே இரண்டாங் கலியாணம் செய்துகொண்டார். புருஷர்களுக்கு என்ன? இரண்டு அல்லது மூன்று, வாழைமரக் கலியாணம், தென்னைமரக் கலியாணம் வேண்டுமானாலும் செய்து கொள்ளுகிறார்கள். அதற்கெல்லாம் அவர்களுக்கு துக்கமே கிடையாது. முதல் மனைவி இறந்த பத்து தினங்களுக்குள் வேறு விவாகத்திற்கு ஜாதகம் பார்க்க ஆரம்பித்து விடுகிறார்கள். யாராவது, "என்ன! இவ்வளவு சீக்கிரம் கலியாணமா? முதல் மனைவி போய் ஒரு வருஷங்கூட ஆகவில்லையே" என்று கேட்டால், உடனே இரண்டாங் கலியாணம் செய்து கொள்ளப் போகும் பிள்ளைக்கு தாயாரோ, தமக்கையோ 'அதற்கு என்ன செய்வது? சம்பாதிக்கிறான். புருஷன், எங்கேயாவது கெட்டு அலைந்தால் என்ன செய்வது. அது எல்லாம் இந்தக் காலத்தில் பார்த்தால் முடியுமா? துக்கம் என்று எவ்வளவு நாள் இருக்கிறது?' என்று சொல்ல ஆரம்பித்து விடுகிறார்கள். இவர்களையே நாம் ஒரு கேள்வி கேட்காமல் இருக்க முடிகிறதில்லை. பெண்களுக்கு மாத்திரம் கலியாணம் இது என்று தெரியாமலும் இருக்கும் பெண்ணுக்குக் கலியாணம் செய்து விட்டுப் புருஷன் இறந்து விட்டால், அவளுக்குக் கொஞ்சம் தன் அறிவு வந்தவுடன் 'உனக்குப் புருஷன் இறந்து விட்டான். நீ அவனையே எப்பொழுதும் நினைத்துக்கொண்டு மற்ற விஷயங்களில் உன் மனதைச் செலுத்தாமல் இருக்கவேண்டும்' என்று சொல்வது மிகவும் அழகா? பாட்டி தாத்தாக்களே, 'தர்மசாஸ்திரத்தை எடுத்துப் பாருங்கள். ஒருவனை ஒரு பெண் மனதில் ஸ்மரித்து விட்டாலே அவளுக்கு அவன் கணவனாய் விடுகிறான் என்று இருக்கிறது. அவள் பிறகு வேறு ஒருவனையும் கண்ணெடுத்துக் கூடப் பார்க்கக் கூடாது என்று இருக்கிறது' என்று சொல்லப் புறப்பட்டு விடுகிறார்கள். ஆனால் மற்ற விஷயங்கள் எல்லாம் இப்பொழுது தர்ம சாஸ்திரம் போல் நடக்கிறன்றனவா? முன்காலத்தில். வயது முதிர்ந்து விட்டால், சம்சார வாழ்க்கையில் மனதை விட்டு விட்டு, மோட்ச மார்க்கத்தை அடையக் காட்டுக்குச் சென்று தபசு செய்யச் செல்லுவார்கள் என்று நாம் கேட்டிருக்கிறோம். இக்காலத்தவர்கள் அப்படிச் செய்கிறார்களா? எந்த நாட்டுப்பெண்ணை நாம் நசுக்கமாட்டோம், எவனுக்கு முதல் நாட்டுப் பெண்ணைத் துரத்தி விட்டு மறு கலியாணம் செய்விக்க மாட்டோம் என்றல்லவோ யோசனை. புருஷர்கள் தாயார் வார்த்தையைக் கேட்டுக்கொண்டு கை பிடித்த பெண்ஜாதி என்று பாராமலும் தன்னையே நம்பி இருக்கிறவள் என்று நினையாமலும் அவளை அடித்து உபத்திரவம் செய்தால் அவன் நல்ல பிள்ளை. அதுவே தாயார் வார்த்தையை இது விஷயங்களில் கேட்காமல் ஒருவன் இருந்து விட்டால் பாட்டிமார்கள் தங்கள் ஜபம்சாயவில்லையே என்று 'இக்காலத்துப் புருஷர்கள் பெரியவாள், பெருமாள் என்று பார்க்கிறார்

களா? எங்கேயும் பாராமல் ஒரு சிறுக்கி இப்பொழுது வந்து விட்டால் அவளையே சரணாகதி என்று விழுந்து விடுகிறார்கள். அந்தப் பிடாரி புருஷனையும் கையிற் போட்டுக் கொண்டு நம் பேரிலேயும் சீறி விழுகிறாள். நாம் இருப்பதே அவளுக்குக் கஷ்டமாயிருக்கிறது' என்று ஊரில் சொல்ல ஆரம்பித்துவிடுகிறார்கள். இது அவன் காதில் விழாமற் போகாது. அது தெரிந்தால் அவன் என்ன செய்வது? இப்படியும் போகிறதற்கில்லை, அப்படியும் போகிறதற்கில்லை. திரிசங்கு சுவர்க்கம்தான். ஆனால் இப்படியே எல்லாரும் இருக்கிறார்கள் என்று வாசகர்கள் கோபித்துக்கொள்ள வேண்டாம். உலகவழக்கம் மாமி தான் நாட்டுப்பெண்களைப் படுத்துவது என்று ஏற்பட்டிருக்கிறது. ஆகையினால் பொதுவாக எழுதினேன். மாமிகளில் எவ்வளவோ நல்லவர்களும் இருக்கிறார்கள். மாமியாரைத் திண்டாட வைக்கும் நாட்டுப் பெண்களும் இருக்கிறார்கள்.

கோவிந்த அய்யருக்கு ரொம்ப வயதாய் இருக்கவில்லை. நாற்பது வயதிற்கு இரண்டு தான் குறைச்சல். மாசம் இருநூறில் ஒரு பெரிய உத்தியோகத்தில் இருந்தார் ஊரில் பூமி காணி இருந்தது. ஆகையால் இவர் இரண்டாங் கலியாணம் செய்து கொள்ளாமலிருப்பாரா? அத்துடன் சிங்காரவல்லியின் சிற்றன்னையாகிய அமிர்தவல்லிக்கு வயது பதினாறு தான். கலியாணகாலத்தில் அவளுக்கு வயது வந்து இரண்டு வருஷம் ஆச்சுது என்று ஜனங்கள் சொல்லிக் கொண்டார்கள். ஆனால் கோவிந்த அய்யர், தேடுகிறபோதே பெரிய பெண் வேண்டும் என்று நினைத்துக்கொண்டிருந்ததால் அவர் இவைகளை எல்லாம் கவனிக்கவில்லை. மேலும் அவள் அதிக அழகாயிருந்ததும் தவிர நன்றாகப் பாடத்தெரியும். மூன்றாவது பாரம் வரையில் வாசித்திருந்தாள். ஆகையினால் இங்கிலீஷ் வாசிக்கத் தெரிந்திருந்தது. இவைகள் எல்லாம் அவர் மனதுக்கு ஒத்துப் பிடித்ததால் உடனே கலியாணம் செய்துகொண்டு விட்டார். இக்காலத்தில் பெண் பேசவந்தால் 'பெண்ணுக்கு என்ன தெரியும்? பாட்டு வாசிக்கத் தெரியுமா? இங்கிலீஷ் தெரியுமா? எத்தனை கிளாஸ் படித்திருக்கிறாள்? வரதட்சணை என்ன? நீங்கள் என்ன நகை பெண்ணுக்குச் செய்து போடப் போகிறீர்கள்?' என்று அடுக்கடுக்காய்க் கேள்விதான். ஒருவனுக்கு ஐந்து பெண்கள் இருந்து அவனும் ஏழையாயிருந்தால் அவன் கதி அதோகதிதான்.

கோவிந்த அய்யர் கலியாணம் செய்து கொண்டவுடன் இந்த அபூர்வ அழகிய சுந்தரி நமக்குக் கிடைத்தாளே என்று நினைத்து அவளே சரணமென்று மோகப் பித்தேறி ஒன்றையும் கவனிக்காமல் அவள் கீறின கோட்டைத் தாண்டாமலிருந்தார். இது அவள் செய்த பாக்கியம் தான். எவ்வளவு இடங்களில் முதல் சம்சாரத்தை இம்சித்துக் கொன்றான் அந்தப் படுபாவி என்று ஜனங்களுக்கு தெரிந்திருந்தாலும்கூட அவனுக்குத் தாங்கள் அருமையாக வளர்த்த பெண்ணை கிளியைப் பூனை வாயில் கொடுப்பது போல் கொடுக்கிறார்கள். என்ன செய்வது! யாரை நோவது! அது காலத்தின் கொடுமையே. அவன் அவளையும் இம்சை செய்ய ஆரம்பிக்கிறான். சுபாவம் யாரை விடும். இங்கே அமிர்தவல்லியின் அதிர்ஷ்டமும் சிங்காரவல்லியின் துர் அதிர்ஷ்டமுமே என்று கூற வேண்டும். வந்தவுடனேயே அது குழந்தையாக இருந்தாலும் மூத்தாள் பெண்மீது வெறுப்புத் தோன்றிவிட்டது. தன் கோபத்தையும் அதிகாரத்தையும் அக்குழந்தையின் மீது எப்படிக் காண்பிப்பது என்று காத்துக் கொண்டிருந்தாள். அதற்கு ஏழு வயது ஆனவுடனேயே சுமாராகத் தன் அதிகாரத்தைக்

காட்ட ஆரம்பித்தாள். வர வர வீட்டுக் காரியங்கள் எல்லாம் சிங்காரவல்லியே செய்ய வேண்டும். அது வரைக்கும் வைத்துக்கொண்டிருந்த சமையல் ஆட்களை எல்லாம் அவளுக்குப் பத்து வயதானவுடன் நிறுத்திவிட்டு அனுப்பிவிட்டாள். காலையில் இவள் மெள்ள 8-மணிக்கு எழுந்து வருவதற்குமுன் அப்பெண் காப்பி, அத்துடன் ஏதாவது பலகாரம் செய்து வைத்திருக்க வேண்டும்; இல்லாவிட்டால் உதை அடி. பிறகு காவேரிக்குச் சென்று அங்கு குளித்து விட்டுத் தண்ணீர் கொண்டு வரவேண்டும். மத்தியானக் காப்பி, பலகாரம், இரவு போஜனம் எல்லாம் ஒரு சிறிய பத்து வயதுப் பெண் செய்யவேண்டுமென்றால் எவ்வளவு கஷ்டமாயிருக்குமென்று நீங்களே நினைத்துப் பாருங்கள். தனக்குக் குழந்தை பிறக்க வேண்டுமென்று எவ்வளவோ தானம், தர்மம், பூஜை, நோன்பு, யாத்திரை எல்லாம் செய்து பார்த்தாள் அமிர்தவல்லி. ஒன்றும் பலிக்கிறதாகத் தெரியவில்லை. ஆகையினால் தன் எல்லாக் கோபத்தையும் சிங்காரவல்லியின் மேல் காட்ட ஆரம்பித்தாள். அவள் யாருடனும் பேசக் கூடாது. வெளியிற் செல்லக் கூடாது. யாராவது சிங்காரவல்லியின் தாயின் பந்துக்கள் அவளைப் பார்க்க வந்தால் அப்பொழுது ரொம்ப அடக்கம் ஒடுக்கமாக 'சிங்காரம்! யாரோ உன்னைப் பார்க்கவந்திருக்கிறார்கள். இப்படிவா அம்மா!' என்று கூப்பிட்டுவிட்டுத் தான் உள்ளே காரியம் செய்வதுபோல் போவாள். அவர்கள் பெண்ணைப் பார்த்துவிட்டுப் போன பிறகு 'இவர்களுக்கு எல்லாம் இங்கே என்ன காரியம்? இவர்கள் ஜோலிக்கு நாம் போகிறோமா? இவர்கள் ஏன் இப்படி அடிக்கடி வந்து தொந்தரவு செய்ய வேண்டும்'? என்று வாய் ஓய்கிறவரையில் ஆசீர்வாதம் செய்வாள். இப்பேர்க்கொத்த ராக்ஷசி கையில்தான் நம் சிங்காரவல்லி அகப்பட்டுக் கொண்டு தத்தளித்தாள். தகப்பனுக்கோ, இளையாளின் மோகத்திலீடுபட்டுத் தான் இருப்பதாகவே நினைவில்லை என்று சிங்காரவல்லிக்கு நன்றாகத் தெரியும். ஒரு நாளும் ஒருவரிடமும் அமிர்தவல்லியைப் பற்றியாவது தன் தகப்பனைப் பற்றியாவது வெளியில் ஒருவார்த்தை சொன்னது கிடையாது. யாராவது தாய் வீட்டு பந்துக்கள் கேட்டால் 'சித்தி ரொம்ப பட்சமாகத்தான் பார்த்துக்கொள்கிறாள்' என்று சொல்லுவாள். ஒவ்வொரு சமயம் அமிர்தவல்லி, சிங்காரவல்லி என்ன தன் பந்துக்களுடன் பேசுகிறாள் என்று ஒத்துக் கேட்பதும் உண்டு. என்ன அவள்மேல் தப்புக் கண்டு பிடிக்கலாம், எதற்காக அடிக்கலாம் என்று பார்ப்பாள். ஒன்றும் அகப்படாவிட்டால் 'நீ ஏன் என் புடவையைச் சரியாக நேற்றுத் தோய்க்கவில்லை. உனக்கு வர வர கொழுப்பு அதிகமாய் விட்டது; நீ என்ன செய்வாய்? என்று அடி உதை கொடுக்காமலிருந்தால் அன்று அவளுக்குத் தூக்கம் வராது. அது இல்லாவிட்டால் தளிகையிலாவது காப்பியிலாவது ஏதாவது ஒன்றில் வெகு சீக்கிரம் தப்புக் கண்டுபிடித்துவிடுவாள். ஆமாம், பத்துப் பன்னிரண்டு வயதிலிருக்கும் சமாச்சாரத்தை சொல்லுகிறீர்களே, ஆரம்பம் முதலிலேயே அவளுக்குப் பதினாறு வயது. கலியாணம் ஆய் விட்டதே; சமாசாரத்தை விட்டு விட்டு என்ன என்னமோ எழுதுகிறீர்களே என்று நீங்கள் கேட்பீர்கள். ஆகையினால் அதையும் சொல்லுகிறேன்.

சிங்காரவல்லிக்குப் பன்னிரண்டு வயது ஆச்சுது; அவள் படும் இம்சை வெளியில் யாருக்குத் தெரியும்! ஆனால், வழக்கம் போல் வம்பர் மகாசபை அன்றும் சாரதாம்பாள் வீட்டில் கூடிற்று. அன்று கமலாம்பாள் அக்கிராசனம் வகித்து, சிங்காரவல்லியைப்பற்றிப் பேச ஆரம்பித்தாள்:—

கமலா :—சுசீலா! கேட்டயோ! நம் கோவிந்த அய்யர், அந்த மொழுநீளப் பெயர்வாய்ந்தவர், நம் தெருவில் மூன்றுவது மாடிவீட்டில் இருக்கிறாரே, அவர் முதல் சம்சாரத்தின் பெண் சிங்காரவல்லி எப்படிக் குதிரைபோல் வளர்ந்து இருக்கிறாள். இன்னும் கலியாண மில்லையாமே!

சுசீலா :—என்னமோ, நேற்று கூட அமிர்த வல்லியைப் பார்க்கச் சென்றேன். அவளும் அந்த விஷயத்தைப்பற்றிப் பேசவே இல்லை. உனக்கு அவசரமாயிருக்கு, அவாளுக்கு அவ்வளவு அவசரம் இல்லை போலிருக்கிறது.

சாரதா :—நன்றாயிருக்கிறது சுசீலா சொல்லு வது. இக்காலத்தில் இப்படிப் பதினாலு வயதி லும் பதினாறு வயதிலும் கலியாணம் செய்வ தால்தான் மழையே பெய்கிறது கிடையாது. நான் ஐந்து வயதில் கலியாணம் செய்விக்கப் பட்டேன். பத்து வயதிற்குள் கலியாணம் செய்விக்காமற் போனால், அப்பெண்ணின் தாயார், தகப்பனார் நரகத்திற்கு போவாள் என்று தர்ம சாஸ்திரம் சொல்லுகிறது. அப்படியிருக்க, அவாள் இஷ்டம், இவாள் இஷ்டம் என்ன இருக்கிறது? இதில் மூத் தாள் பெண் ஆயிற்றே என்று ஒரு வேளை அமிர்தவல்லி சும்மா இருக்கிறாளோ என் னமோ, யார் கண்டா?

கமலா:—எதுவாகத்தான் இருக்கட்டுமே. அமிர் தவல்லி அவளை ரொம்பப் படுத்துவதாகக் குசு குசு என்று சமாசாரம். அவள் அப்படி வைத்துக்கொண்டிருந்தால், மற்றவர்களும் அப்படியே செய்யப் புறப்படுவார்கள். ஆகை யால், சுசீலா! உனக்குத்தான் அமிர்த வல்லி ரொம்ப சிநேகிதி ஆயிற்றே. அவளி டம் நாளைச் சென்று சிங்காரவல்லிக்கு வரன் தேடி, ஒன்றும் கிடைக்கா விட்டால், ஒரு கிழத்துக்காவது தள்ளிவிடச் சொல்லி விட்டுவா.

சாரதா :—சுசீலா ஒரு காரியத்தில் பிரவே சித்தால் அது முடியாத காரியமா! இது போனால் போகட்டும். அந்தச் சிறுக்கி இருக் கிறாளே, நேற்று வந்தவள், (இது நாட்டுப் பெண்ணைக் குறித்து), அவாள் தகப்பனார் பணம் அனுப்பித்தாராம். அதற்கு சோப்பு, அதன் பாழாப்போன பெயர் வரவில்லை. ஒரு புட்டி வாசனை எண்ணெயாம், மூஞ்சிக்குப் போட்டுக்கொள்ள ஏதோ செகப்பா யிருக் கிற பொடியாம், இவைகளை எல்லாம் வர வழைத்தாளாம். அதை எல்லாம் எதற்கடி வரவழைத்தாயென்று கேட்டால், 'கிழத் திற்கு இதை எல்லாம் கட்டிக்கொண்டு என்ன? 'காடு வாவா என்கிறது, நாடு போ போ' என்கிறது உம் பிள்ளை வாங்கிக் கொடு த்தால் கேள்' என்று சொன்னாள். பிள்ளை யிடம் சொன்னாலோ, 'ஆமாம் அவளுடைய தகப்பனார் பணம் கொடுத்தால் அவள் வாங் கிக் கொள்கிறாள். நீ ஏன் இதற் கெல்லாம் பிரவேசிக்கிறாய்?' என்கிறான். இன்னும் கொஞ்ச நாள் போனால் என்னையே வீட்டை விட்டு விரட்டித் துரத்தி விடுவான் போலிருக் கிறது அந்தச் சிறுக்கியின் வார்த்தையைக் கேட்டு. அவள் கட்டையில் போக. (இது நாட்டுப் பெண்ணுக்கு ஆசீர்வாதம்.)

கமலா :—உம், இது ஒரு பிரமாதமா. எங்க வீட்டில் நடக்கும் அதிசயத்தைக் கேட்டால் தெரியும். எப்பொழுதும் குசு குசு தான். உள்ளே போனால் குசு குசு, வெளியில் வந் தால் குசு குசு தான். எப்பொழுதும் இது என்ன குசு குசு என்றால், என்னை அடிக்க வருகிறான். ஆபீசிலிருந்து சாயங்காலம் 5-மணிக்கு வந்ததும் இவள் ரெடியாய், சோப்புப் போட்டு முகம் கழுவி, பவுடர் போட்டுக்கொண்டு, ரிப்பன் போட்டு ஜடை போட்டுக்கொண்டு, பட்டுப் புடவை உடுத்தி,

காராச்சி சில்க் ரவிக்கை போட்டுக் கொண்டு அது எல்லாருக்கும் தெரியவேண்டு மென்று மார்பு பாதி திறந்து கொண்டு, கையில் கைகுட்டையுடன், காலில் லேடி பூட்ஸாம் போட்டுக் கொண்டு, அவனுடன் சற்றும் வெட்கமில்லாமல் கிளம்பி விடுகிறாள். சினிமாவாம், நாடகமாம், ஏதோ சொல்லிக் கொள்கிறார்கள். 'வேண்டாமடா, நீ தான் போகிறாய். அவளையும் கெடுத்து விடாதே' என்றால், 'ஷட்டப் யுவர் மௌத்' (Shut up your mouth) என்று அடிக்கவரான். அதற்காக நான் இப்பொழுது ஒன்றும் அந்த ஜோலிக்கே போகிறதில்லை. 'கிருஷ்ணா! ராமா! கோவிந்தா!' என்று என் காரியம் என்னமோ பார்த்துக் கொள்கிறேன்.

விசாலாட்சி:—மூன்றாந்தெருவு கோபால அய்யர் பெண் ராதா புருஷன் செத்து நாலு வருஷம் ஆச்சுதே. இப்பொழுது அவளுக்குப் பதினாறு வயதாச்சுதே. இன்னும் சிறிய வளாம். அவள் தலை மயிரை எடுக்காமலும், நகை வாங்காமலும் இருக்கிறார்கள். பேருக்கு அந்தத் தாலி தவிர மற்ற நகைகளுக்கும் குறைச்சலில்லை. ஒரு சினிமா, டிராமா, பாட்டுக்கச்சேரி முதலியவைகளுக்கு தாராளமாய்ப் போகிறாள். கைப்பிடித்த புருஷன் போனபிறகு இது எல்லாம் என்ன வேண்டியிருக்கிறதோ தெரியவில்லை. நாளைக்கு யாருடனாவது ஓடி விடுகிறாள்!

கமலா:—நன்றாயிருக்கு நீ சொல்லுவது. அந்தப் பெண்ணுக்கு என்ன தெரியும்? அவள் பேரில் ஒரு தப்பிதமும் இல்லை. தாயார், தகப்பனார் அல்லவோ அவளை அடக்கவேண்டும்.

சாரதா:—என்னவானாலும் கமலா சொல்லுவது போல், அவளுக்கும் உடம்பில் இருக்கவேண்டும். சரி, நாழிகையாகிறது. உள்ளே செல்லட்டுமா? கொஞ்சம் காரியம் இருக்கிறது.

இப்படி அவள் சொல்ல, எல்லோருக்கும் அப்பொழுதுதான் தங்கள் வீட்டிலும் காரியம் இருக்கிறது என்று நினைவு வர, எழுந்து சென்றார்கள்.

முன் கவுன்சல் கூடித் தீர்மானித்தபடியே சுசீலா அமிர்தவல்லி வீட்டிற்குச் சென்றாள். அப்பொழுதுதான் அமிர்தவல்லி சிங்காரவல்லியை ஏதோ திட்டிக் கொண்டிருந்தாள். சுசீலா சென்றவுடன் பேச்சை நிறுத்தி அவளைப் பார்த்து 'வரவேண்டும், வரவேண்டும், இப்படி உட்காரலாமே! எங்கே இவ்வளவு நாளாகக் காணவில்லையே' என்று யோக க்ஷேமம் விசாரிக்கலானாள்.

சுசீலா:—ஆமாம், கொஞ்சம் உடம்பு சரியாக இல்லை, மேலும் இதர ஜோலி. இக்காலத்தில் நாட்டுப்பெண்கள் வந்தால் நம் இஷ்டப்படி நடக்கிறதுகளா.........

அமி:—ஏன் அவ்வளவு தூரம் சென்று விட்டீர்கள்! சொந்தப் பெண்கள்? ஏன்! சிங்காரவல்லி! இவளைக் கண்டிப்பதிலேயே என் ஆயுள் முடிந்து போகும் போலிருக்கிறது. பன்னிரண்டு வயது ஆயிற்று. இன்னும் சின்னக் குழந்தையைப் போலிருக்கிறாள். ஒரு காரியம் தெரியாது இவள் வீட்டில் இருக்கிறாளே என்று இல்லை. (நிஜமாக அமிர்தவல்லி இருக்கிற இடத்தை விட்டு நடமாடுகிறதில்லை என்று முன்னமே சொல்லி இருக்கிறேன்.) நானே எதற்கும் போகவேண்டும். வெளியில் சொன்னால் வெட்கக்கேடு. அத்துடன் மூட ஜனங்கள் ஏதாவது நினைத்துக் கொண்டாலும் நினைத்துக் கொள்வார்கள். ஆகையினால்......

சுசீலா:—நினைக்கிறதாவது? அவர்களைப் பற்றி என்ன? பெண் சரியாக நடக்கவேண்டு

மென்று உங்களைவிட வேறு யாருக்கு அக்கரை? இது எல்லாம் கிடக்கட்டும். அவளுக்கு எப்பொழுது கலியாணம்? கலியாணம் ஆனால் எல்லாம் சரியாய்விடும்.

அமி:—கலியாணத்தைபற்றி இன்னும் யோசிக்கவே இல்லை. எல்லாம் நான்தான். அவர் என்ன இதை எல்லாம் யோசிக்கிறாரா? அத்துடன் இந்தக் காலத்துக் கலியாணம் பழையகாலத்தது போலவா? கையில் இருக்க வேண்டாமா? B.A. 1000, B.A., B.L. 2000. M. A. 3000, இப்படி இரண்டு எழுத்து கூடினால் 2, 3 எண்களும் ஜாஸ்தியாகிறது. கிடக்கிறாள் அவள். வேலை வந்தால் எல்லாம் ஆகிறது. நம்மிடம் பணமும் இல்லை அப்படிக் கொட்ட......

சுசீலா:—உங்களுக்கு உலக விவகாரமே தெரியவில்லை. நீங்கள் அவளுக்குக் கலியாணம் செய்யாமலிருந்தால் உலகம் உங்களைப் பழிக்காதோ. ஆகையினால் உங்களுக்கு நான் வேண்டியவளாயிருப்பதால் ஒரு வார்த்தை சொல்லுகிறேன். இப்பொழுதே உங்கள் பெண்ணைப் பற்றிதான் இங்கே எல்லாம் பேச்சாயிருக்கிறது. ஆகையினால், கிழவனோ, குமரனோ யாராவது ஒருவனுக்கு அவளைத் தள்ளி சீக்கிரம் உங்கள் கையைக் கழுவிக் கொள்ளுங்கள். நீங்கள் ஏன் அவளுக்காகப் பேச்சு வாங்கவேண்டும். நான் போய் வருகிறேன்.

இது நடந்த மறுநாள் இரவு 7 மணிக்கு கோவிந்தராகவ அய்யர் அப்பொழுதுதான் சாப்பிட்டுவிட்டு மெத்தை ரூமில் பேப்பர் பார்த்துக் கொண்டிருந்தார். கீழே சிங்காரவல்லி அடுப்பங்கரை வேலைகளையெல்லாம் சுறுசுறுப்பாய் செய்து கொண்டு இருக்கிறாள். அப்பொழுது அமிர்தவல்லி, தானும் உடனே சாப்பிட்டுவிட்டு எப்பம் விட்டுக்கொண்டு, கையில் தாம்பூலத் தட்டை எடுத்துக்கொண்டு, கோவிந்த அய்யருக்கு எதிரில் வந்து நின்றாள். அவர் பேப்பரில் அதிக கவனத்தைச் செலுத்தி இருந்ததால், இவள் வந்ததைக் கவனிக்கவில்லை. இவள் இரண்டு தடவை கனைத்த பிறகுதான் சட்டென்று திரும்பிப்பார்த்தார்.

கோ:—நீயா? யாரோ என்று பார்த்தேன். இன்று என்ன இவ்வளவு சீக்கிரம் வந்து விட்டாய்! தினம் கீழேயே ஒரு தூக்கம். பிறகு அல்லவோ நான் கூப்பிடவேண்டும்!

அமி:—ஆமாம். எல்லாம் உங்களுக்கு விளையாட்டாகவே இருக்கிறது. இன்று உங்களுடன் முக்கியமாகப் பேசவேண்டுமென்று வந்தேன்.

கோ:—என்ன அவ்வளவு முக்கிய சமாச்சாரம்? சீக்கிரம் சொல், நான் பேப்பர் படிக்கவேண்டும்.

அமி:—எப்பொழுதும் பேப்பர் படிக்க வேண்டும், புஸ்தகம் படிக்க வேண்டும் என்ற வார்த்தைதானா? என்னுடன் பேசுவது என்றால் உங்களுக்குக் கஷ்டந்தான். எதிராத்துப் பங்கஜத்தைப் பாருங்கள். தினம் ஜோடியாய் பீச்சுக்குப் போகிறார்கள். அல்லது பக்கத்தாத்து கோமளத்தைப் போல், டிராமா சினிமாவுக்குப் போக உங்களை கூப்பிடுகிறேனா? ஏதோ வார்த்தை சொல்ல உங்களிடம் வந்தால், என்னுடன் பேசக்கூட உங்களுக்குக் கஷ்டமாயிருக்கிறது. இது என் தலையில் எழுத்துப் போலிருக்கிறது. இல்லாமற் போனால் என் வயிற்றில் ஒன்று பிறந்து நான் பொழுது போக்க அந்தப் பாழும் ஈச்வரன் கொடுக்க மாட்டானா?

கோ:—என்ன இப்படிக் கோபித்துக் கொள்ளுகிறாயே? ஏதோ பேப்பரில் கொஞ்சம் முக்கிய விஷயம் இருந்ததால் படிக்கலாமென்று சொன்னேன். வா, இப்படி உட்காரு.

கோபித்துக் கொள்ளாதே. என்ன அந்த முக்கிய சமாச்சாரம், சொல்லு.

அமி:—என்ன? எல்லாம் நம்ப பெண்ணைப்பற்றி தான். மகாராஜி! அவள் என் காலில் கட்டி விட்டுப் போய் விட்டாள். எனக்குத்தானே எல்லாம். உங்களுக்கு என்ன இதைப் பற்றியெல்லாம் கவலை.

கோ:—என்ன நம்ப பெண்ணைப் பற்றி? ஏதாவது நீ சொல்லுவதைக் கேட்கமாட்டேன் என்கிறாளா? அப்படி ஒன்றும் காணோம் என்று தோன்றுகிறதே. அப்படி இல்லா விட்டால், அன்றே என் நோட்டீசுக்கு சமாச்சாரம் கொண்டு வந்திருப்பாயே.

அமி:—சொன்னதைக் கேட்கிறாளா அவள். வர வா தடிக்கழுதைக்கு ஆகிறுப் போல் வயது ஆச்சுது. ஏதாவது சொன்னால் எதிர்த்து வாயாடுகிறாள். அவளைப்பற்றிச் சொல்ல வேண்டு மென்றால் எவ்வளவோ சொல்லலாம். நாம்தான் கஷ்டப்படுகிறோமே, உங்களுக்கும் அந்தக்கஷ்டம் ஏன் என்று நான் வாய் திறக்கவில்லை.

கோ:—இதுதானா முக்கிய சமாச்சாரம். உனக்குதான் சர்வ அதிகாரம் கொடுத்து இருக்கிறேனே. உள்ளே என்ன நடக்கிறது என்று நான் வந்து பார்க்கிறேனா! உன் இஷ்டத்துக்கு விரோதமாக நடந்தால், நன்றாக அடித்துக் வழிக்குக் கொண்டுவா. இது கூடவா நான் சொல்லவேண்டும். சிங்காரம் இப்படி எல்லாம் இருப்பாள் என்று நான் கனவிலும் நினைக்கவில்லை.

அமி:—இப்படிக் கலியாணம் செய்யாமல் எவ்வளவு நாள் வைத்திருக்கப்போகிறீர்கள்? அவளுக்கு யாரையாவது கலியாணமென்று ஒரு தாலியைக் கட்டிவிட்டால் பிறகு அவன் பாடு. ஊரரிடம் ஒரு பேச்சு ஏன் கேட்க வேண்டும்? நேற்று தெரியுமோ? மூன்றாந் தெருவு சுசீலா வந்திருந்தாள். ஊரெல்லாம் நம் பெண்ணுக்கு ஏன் கலியாணம் செய்ய வில்லை என்ற பேச்சாயிருக்கிறதாம். சிங்காரமோ நன்றாக வளர்ந்திருக்கிறாள். ஒரு வேளை பெரியவளாய் விட்டால்.........

கோ:—ஊராருக்கு என்ன? 'அவாள் மேல் என்ன தப்பு கண்டு பிடிக்கலாம். இவாள் மேல்என்ன தப்பு கண்டுபிடிக்கலாம்'என்ற எண்ணமே! அவசரப்பட்டுக்கொண்டு, அவளை எங்கேயாவது அவர்களுக்காக ஒரு குருடனுக்கோ, முடவனுக்கோ தள்ள வேண்டுமா? இதைப்பற்றி இனி விசாரித்து நல்ல இடத்தில் அவளைக் கொடுத்தால் போகிறது.

இந்த சமாச்சாரம் நடந்த மூன்று மாதத்திற்குப் பிறகு சிங்காரவல்லிக்குக் கலியாணம் நடந்தது. வரதட்சணைக்குப் பயந்து, தாய் தகப்பனில்லாத ஒரு பிள்ளைக்குக் கும்பகோணத்தை அடுத்த ஒரு சிறு கிராமத்தில் கலியாணத்தை ஒரு மாதிரி கோவிந்த அய்யர் முடித்து விட்டார். பணமிருக்கிறவர்களே இப்படி எல்லாம் திருச்சானூரில் செய்பலாமா, சிங்கப்பெருமாள் கோவிலா, திருநீர்மலையா என்று யோசிக்கிற பொழுது ஏழைகளைக் கேட்கவே வேண்டாம். ஆனால் உலகத்தில் ஏழைகளுக்கே ஆசை அதிகம்.

சிங்காரவல்லியின் புருஷனான நடராஜன் நல்ல புத்திசாலி. B. A. தேறி, L. T. க்கு படித்துக்கொண்டிருந்தான். கோவிந்த அய்யர் வரதட்சிணை ஒன்றும் கொடுக்கவில்லை. ஆனால் படிப்புக்கு சகாயம் செய்வதாக வாக்களித்தார். கலியாணப் பிள்ளை பக்கத்து உறவு அப்பிள்ளையின் ஒன்று விட்ட தாதா, பாட்டி தான் கலியாணத்துக்கு வந்திருந்தார்கள்.

கலியாணமாய் இரண்டு வருஷகாலம் வரையில் மாமனார் வீட்டிலேயே நடராஜன் சாப்பிட்

டுக் கொண்டிருந்தான். ஆனால் ஒரு நாள் திடீ ரென்று அவன் காணப்படவில்லை. அவன் அறையில் ஒரு கடிதத்தில் தனக்கு இந்த உலகம் பிடிக்கவில்லை என்றும், தன்னைத் தேடுவ தில் பிரயோஜன மில்லை என்றும், தான் சொல் வது எங்கே என்று சொல்ல முடியாதென்றும் எழுதி இருந்தது.

இதைத் தெரிந்து கொண்டு சிங்காரவல்லி பட்ட துயரம் அவ்வளவு இவ்வளவு என்று சொல்ல முடியாது. அமிர்தவல்லி உள்ளுக்குள் சந்தோஷபட்டுக்கொண்டாலும், வெளியில் துக்கப்பட்டவள் போல் காண்பித்துக் கொண் டாள். கோவிந்த அய்யரும் எங்கே எங்கே யோ தேடியும் நடராஜன் சமாச்சாரமே தெரிய வில்லை. அவன் எதற்காக வீட்டை விட்டு ஓட வேண்டும்? அமிர்தவல்லியின் கொடுமையைச் சகிக்காமலா? ஏனென்றால் அவன் அங்கு இருக்கும்பொழுதும் சிங்காரவல்லியை அவள் இம்சிக்காமல் விடவில்லை. ஒவ்வொரு சமயம் இவன் தன் அறையில் இருக்கும்பொழுதே, இவன் வெளியே சென்றுவிட்டான் என்று எண்ணி சிங்காரவல்லியைத் திட்டுவதும், 'உனக் காக இன்னொருவனுக்கு தண்டச் சோறு போடவேண்டும்' என்று சொல்லுவதும் இவன் அடிக்கடி கேட்டிருந்தான். ஆனாலும் அதற் காக அவன் ஓடியிருந்தால் அவன் ஒரு பெரிய தப்பிதம் செய்துவிட்டான்.

ஏனென்றால், இதனால் சிங்காரவல்லிக்கு துக்கம் ஒரு பக்கமும், அமிர்தவல்லியின் இம்சை இன்னொரு பக்கமும்தான் அதிகமா யின. கலியாணம் பன்னிரண்டு வயதில், பதினாலாம் வயதில் புருஷன் ஓடிப்போன ஒரு மாதத்துக் கொல்லாம் சிங்காரவல்லி புஷ்பவதி யானாள். அவன் ஓடிப்போய் இரண்டு வரு ஷம் ஆய்விட்டது. அவன் இருக்கிறானோ, அல்லது இறந்தானோ ஒன்றும் தெரியவில்லை. ஆகையினால் நான் முதன், முதல், எழுதியபடி, அதிக விடியற்காலையில் ஏன் சிங்காரவல்லி ஆற்றங்கரையில் படியின் மேல் உட்கார்ந்து துக்கப் பட்டுக்கொண்டிருந்தாள் என்று சொல்லாமலே சிந்தாமணி அபிமானிகளுக்கு விளங்குமென்று நினைக்கிறேன்.

இப்படியே மாதங்கள், வருஷங்கள் கடந்து கொண்டே சென்றன. நடராஜன் ஓடிச் சென்று நான்கு வருஷங்கள் ஆய்விட்டன. அவ னிடமிருந்து ஒன்றுமே தெரியவில்லை என்று முன்னமே சொல்லி இருக்கிறேன். அமிர்த வல்லியின் அட்டகாசம் வரவா அதிகரித்ததே ஒழிடக் குறையவில்லை. நடராஜனின் பிணம் மாதிரி ஆற்றங்கரையில் பார்த்ததாக யாரோ ஒரு கதை கிளப்பிவிட்டார்கள். சிங்காரவல் லிக்கு எப்பொழுது விதவைப் பட்டம் கட்டலா மென்று காத்துக் கொண்டிருந்த அமிர்த வல்லிக்கு இது ரொம்ப அநுகூல மாக இருந்தது. அந்த சமாச்சாரம் வாஸ் தவமா என்று விசாரிக்காமலே சிங்கார வல்லிக்கு விதவைப்பட்டம் சூட்டிவிட்டாள். போட்டுக் கொண்டிருந்த ஒன்று, இரண்டு நகையையும் கழற்றிக்கொண்டு விட்டாள். 'கலி யாண தடபுடலில் தாலிகட்ட மறந்துவிட் டார்களாம்' என்றபடி, முதலில் சிங்காரவல்லி யிடமிருந்து அந்தப் புனிதமான, பூர் வீகர்களால் புருஷனுக்கும் மனைவிக்கும் உள்ள பந்துத்வத்தைக் காண்பிக்கும் அந்த திருமங் கலியத்தைக் கழற்றிக்கொண்டு விட்டாள் அந்த ராட்சசியான அமிர்தவல்லி. எல்லா வற்றையும் சிங்காரவல்லி கொஞ்சங்கூடப் பின் வாங்காமல் கழற்றிக் கொடுத்து விட்டாள். ஆனால் எது எடுத்தால் என்ன? இதனால் சிங் காரவல்லியின் அழகு குறைந்து விட்டதா? இல்லவே இல்லை. நாளுக்கு நாள் அவள் அழகு ஜாஸ்தியாகிக் கொண்டே வந்தது. சந்த னக்கட்டையைத் தேய்த்துக்கொண்டிருந்தால்

அதனால் அதன் வாசனை குறைந்து விடுகிறதா? இனி சிங்காரவல்லியின் தலைமயிர் ஒன்றுதான் அமிர்தவல்லிக்கு மனதை ரொம்பக் கவர்ந்து கொண்டிருந்தது. "நமக்கு அவன் இறந்து விட்டானென்று இன்னும் சரியாகத் தெரியாம லிருக்கும் பொழுது, நாம் அவளை அமங்கலி யாக்குவது நன்றாக இல்லை" என்று மாத்திரம் கோவிந்த அய்யர் ஒன்றுக்கு இரண்டு தடவை சொல்லிப் பார்த்தார். ஆனால் அவள் கேட்கிற வழியைக் காணோம். மேலும் இந்த விஷயங் களுக்கெல்லாம் அவர் பிரவேசிக்கக் கூடாது என்று கண்டிப்பாய்ச் சொல்லி விட்டதால் அதற்கு மேல் அவர் ஒன்றும் சொல்லவில்லை. அப்பொழுதுதான் அவருக்குத் தான் இளையா ளின் மோகத்தால் தன் பெண்ணை சரியாகக் கவனிக்க வில்லை என்று மனதிற் பட்டது. அது முதல் அவர் கொஞ்சம் அக்கறைபாக வீட்டு விஷயங்களை கவனிக்கலானார். அதனால் தான் சிங்காரவல்லியின் தலை மயிரை எடுப்பதைப் பற்றி அமிர்தவல்லி கோவிந்த அய்யரிடம் அதிகமாகப் பேச பயந்தாள்.

கோவிந்த அய்யரைத் திடீரென்று கும்ப கோணத்திலிருந்து மதராசுக்கு மாற்றி விட் டார்கள். ஆகையினால் அவர்மாத்திரம் மதரா சுக்கு வந்து ஒரு ஓட்டலில் தங்கியிருக்கலா னார். இச்சமயத்தை அமிர்தவல்லி வீணாக் காமல் சிங்காரவல்லியிடத்தில் காண்பிக்கலா னாள். இவ்வித இம்சை பொறுக்க முடியாமல் சிற்சில சமயங்களில் தற்கொலை செய்து கொள்ள எண்ணுவாள். ஆனால், 'சே! அது பாபத்தொழில்' என்று மனதைத் தானே தைரி யப்படுத்திக்கொள்வாள்.

இவ்விதமாக விஷயங்கள் நடந்து கொண் டிருக்கும் பொழுது அமிர்தவல்லி வீட்டிற்கு அமெரிகன் கிராப்வைத்த தலையுடனும், உயர் ந்த frame போட்ட மூக்குக் கண்ணாடியுடனும், கையில் ஜில் என்று ரிஸ்ட்வாச்சுடனும், இடுப் பில் 1703 மான் சஸ்டர் வேஷ்டியுடன், ஸில்கு ஷர்டு,மேலே சரிகை அங்கவஸ்திரம் இவைகளு டனும் அட்டகாசத்துடன் ஒருவன் ஒரு வண் டியில் வந்து இறங்கினான். அவன் காதில் ரவைக் கடுக்கன் ஜொலித்துக்கொண்டிருந்தது. வந்த வன்யார்? சிங்காரவல்லியின் புருஷனான நடரா ஜனா? ஆனால் அவன் வந்த ஜோரையும், நேராக உள்ளே சென்றதையும் பார்த்தால் நடராஜனாக இருக்கமாட்டான் என்று தோன்றிற்று. மேலும் திரும்பி அவ்வீட்டிற்கு அவன் திரும்பு வானா? அப்படி அவன் மனைவியை அழைத் துக் கொள்வதாய் வந்தாலும் அங்கு வாமலே அழைத்துக் கொள்ளலாமல்லவா? ஆகையி னால் அவன் நடராஜன் அல்ல வென்று நிச்சய மாகத் தெரிகிறது. ஆனால் வேறுயார் என்றால் அமிர்த வல்லியின் சிற்றன்னையின் பிள்ளை யான சுந்தரம்தான்.

சுந்தரம் சிறியகுழந்தையாக இருந்த பொழு தே அவன் தகப்பனார் காலகதி அடைந்து விட் டார். தாயாரான கோமளவல்லி அதிகச் செல் வமாகத் தன் பிள்ளையை வளர்த்து வந்தாள். இரண்டு, மூன்று வீடுகளும் நிலங்களும் இருந் ததால், அவன் பணக்காரனாகவே இருந்தான். இவன் ஒரே பிள்ளையாகையால் இவன் இஷ்ட படியெல்லாம் இவன் தாயார் விட்டு விட்டாள். ஆகையினால் சிறுவயது முதற் கொண்டே கெட்ட சவகாசத்தில் அமர்ந்து விட்டான். அதற்குச் சரியாகவே இவனுக்கு துஷ்டர்கள் சிநேகமானார்கள். குடி, புகையிலை, சுருட்டு முதலியவைகளை வெகு சீக்கிரம் கற்றுக் கொண்டு விட்டான். நாடகம், சினிமாவுக்குப் போகாத நாள் கிடையாது. இவனுக்குத் தெரி யாத வேசிகளும் கிடையாது. முகத்தில் பெரிய அம்மை அடையாளங்கள் பார்க்கிறதற்கு கோரமாக இருந்தன. எப் பொழுது இந்த ஷோக்கில் புத்தி சென்று விட் டதோ அப்பொழுது படிப்பில் பூஜ்யம் என்று

தெரிந்து கொள்ளலாம். ஒவ்வொரு கிளாசில் இரண்டு வருஷம் இருந்து கொண்டு நான் காம் பாரம் வருவதற்குள் இருபத்திரண்டு வயதாய் விட்டது. இவனைவிடச் சிறிய பிள்ளைகள் இவனைக் கண்டால் பரிகாசம் செய்ய ஆரம்பித்தார்கள். பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயர் கூட, 'அப்பன் சம்பாதித்த பணம் இருக்கிறது. இந்தப் படிப்பு இழவைக்கட்டிக்கொண்டு ஏன் மார் அடிக்கிறாய். உனக்குத்தான் தாசி காந்தாமணி காத்துக் கொண்டிருக்கிறாளே. அங்கு சென்று உன் காலத்தைக் கழித்தாலும் சந்தோஷமாயிருக்கும்' என்று சொல்லுவார். அப்பொழுதே இவன் தாசி வீடு செல்வது ரொம்ப பிரசித்தமாக இருந்தது. இப்பேர்ப் பட்டவனுக்கு சிங்காரவல்லியைக் கொடுத்துக் கலியாணம் செய்யவேண்டு மென்று அமிர்தவல்லி ரொம்பப் பிரயாசைப்பட்டாள். ஆனால் அவன் விஷயம் முழுவதும் கோவிந்த அய்யருக்குத் தெரியுமாகையால் அவனுக்குப் பெண்ணைக் கொடுப்பதை விடக் கிணற்றில் தள்ளலாமென்று சொல்லி அந்த விஷயத்தில் ரொம்பப் பிடிவாதமாக இருந்து விட்டார். அப்பொழுது முதற் கொண்டு சுந்தரம் அமிர்தவல்லி வீட்டிற்கு அடிக்கடி வருவதை நிறுத்திவிட்டான். இதற்கு முன் அடிக்கடி அமிர்தவல்லி வீட்டிற்கு வாராமலிருக்கமாட்டான். சிங்காரவல்லி ரொம்ப அழகாயிருந்ததால் அவளைக் கலியாணம் செய்துகொள்ள வேண்டு மென்றும், தவிர வேறுயாருக்கும் மாமா சிங்காரவல்லியைக் கலியாணம் செய்து கொடுக்கமாட்டார் என்றும் மனப்பால் குடித்துக் கொண்டிருந்தவனுக்கு இது பெரிய ஏமாற்றமாக ஆயிற்று.

தனக்குப் புருஷத்துணையாக இருக்கட்டுமென்று அமிர்தவல்லி அவனுக்குக் கடிதமெழுதி வரவழைத்தாள். சுந்தரம் வந்ததைப் பார்த்த அமிர்தவல்லி "சுந்தரம், வா, வா, நீ எந்த வண்டியில் வந்தாய்? ஏன் வருவதற்கு முன் கடிதங்கூடப் போடவில்லை? என் கடிதங் கிடைத்த உடன் புறப்பட்டுவந்து விட்டாயா?" என்று படிப்படியாக அநேகக் கேள்விகளைக் கேட்டாள். அச்சமயம், சிங்காரவல்லி ஏதோ காரியனிமித்தம் அவ்விடம் வர, சுந்தரனைப் பார்த்து திடுக்கிட்டாள். அமிர்தவல்லி அவனுக்குக் கடிதமெழுதினது முதலியவை இவளுக்குத் தெரியாதாகையால் அவன் ஏன் இவ்வளவு நாள் வராமல் இப்போது தகப்பனார் ஊரிலில்லாத சமயத்தில் வரவேண்டுமென்ற பல எண்ணங்கள் அவள் மனதிலுதித்தன. அவள் அவ்விடத்தை விட்டுச் செல்லுமுன், சுந்தரம் அமிர்தவல்லியை நோக்கி "அக்கிராதகப் பயலிடமிருந்து பிறகு சமாச்சாரம் தெரியவில்லையே''? என்று கேட்டான். அதற்கு அமிர்தவல்லி, "இது தெரியாதோ! அவன் அப்பொழுதே இறந்தான்'' என்று பதில் அளித்தாள். இதைக் கேட்ட சுந்தரம் "மாமா அப்பொழுதே எனக்கு அவளைக் கலியாணம் செய்து கொடுத்திருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்" என்று சிரித்தான். பிறகு இருவரும் பல விஷயங்களைப் பற்றி பேசிக் கொண்டார்கள். ஆனால் மேலே சொன்ன விஷயங்கள்தான் சிங்காரவல்லி காதில் விழுந்தது. அவள் மனது அப்பொழுது எப்படித் துடித்திருக்குமென்று வாசகர்களே தெரிந்துகொள்வார்களென்று நினைக்கிறேன்.

சுந்தரம் வந்தது முதல் சிங்காரவல்லிக்கு மடியில் நெருப்புக் கட்டிக்கொண்டிருந்தது போலவிருந்தது. ஏனென்றால் சுந்தரம் முதலிலேயே போக்கிரி என்று சொல்லி இருக்கிறேனாகையால் அவளிடம் அடிக்கடி வலியப் பேசப் போகிறதும், அமிர்தவல்லி எதற்காகவாவது அவளை அடித்தாலும் திட்டினாலும் அவள் பேரில் ரொம்ப பிரீதியிருக்கும் பாவனையாக

அவளுக்குப் பரிந்துகொண்டு பேசுவதுமாக இருந்தான்.

இப்படி யிருக்கும் சமயத்தில் ஒரு நாள் சாயங்காலம், அமிர்தவல்லியை யார்வீட்டுக்கோ வெற்றிலை பாக்குக்கு அழைத்திருந்தார்கள். அதனால் அவள் சென்று இருந்தாள். சிங்காரவல்லிக்கு விதவைப்பட்டம் அமிர்தவல்லி அதிக சுலபமாகச் சூட்டிவிட்டதால் அவளை அழைத்துச் செல்லவில்லை. சிங்காரவல்லி அப்பொழுது தான் தன் வேலைகளை முடித்துக் கொண்டு ஓரிடத்தில் உட்கார்ந்தாள். 'ஏதடா, ஒரு சிறிய பெண்ணை வீட்டில் ஒருவரும் இல்லாமல், ஒரு வாலிபன் இருக்கும் போது விட்டுச் செல்லுகிறோமே' என்று அமிர்தவல்லி சற்று யோசித்திருந்தாளானால் அவள் ஒருவேலைக்காரியையாவது சிங்காரவல்லிக்குத் துணையாக வைத்துச் சென்றிருப்பாள். சுந்தரன் வருவதற்கு முன்பு அவ்விதமே செய்வது வழக்கமாக இருந்தாள். இந்தத் தடவை அவ்விதம் ஒன்று மில்லாமல் அமிர்தவல்லி சென்றது சிங்காரவல்லிக்கு ஆச்சரியமாகவே இருந்தது. அவள் தன் அறையில் ராமாயணம் அயோத்தியா காண்டம் படித்துக் கொண்டிருந்தாள். அப்பொழுது திடீரென்று சுந்தரன் அவ்விடத்தில் பிரவேசித்தான். அவனைப் பார்த்தவுடன் லஜ்ஜை ஒரு பக்கமும் பயம் ஒரு பக்கமும் அவளைச் சூழ்ந்து கொண்டது. உடனே அவ்விடத்தை விட்டுச் செல்ல நகர்ந்தாள்.

சுந்தரம் :—சிங்காரம்! ஏன் நான் வந்தேன் என்று எழுந்து செல்லவேண்டும்? சிங்காரம்! உன்பேரில் எனக்கு எவ்வளவு பச்சாத்தாபமென்று கடவுள் ஒருவர்தான் அறிவார்.

சிங்காரவல்லி :—(முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு) வீட்டில் சித்தியும் இல்லாமல் இருக்கும் சமயத்தில் நீங்கள் இவ்விதம் தனியாக இங்கு வந்து என்னுடன் வார்த்தையாடல் அழகா? யாராவது பார்த்தால் இது நன்றாயிருக்குமா? அல்லது சித்தியே வந்தால் என்ன சொல்லுவாள்?

சுந் :—(சிரித்து) அடி பேதையே! அதற்கெல்லாம் தகுந்த முன் எச்சரிகை யில்லாமல் உன்னிடம் இவ்வளவு தைரியமாக வருவேனா! வாசற்கதவைத் தாளிட்டிருக்கிறேன். உன்னையே அடைய நான் தபஸ் செய்து கொண்டிருந்தேன். ஆனால் மாமா என்னை ஏமாற்றி விட்டார். இப்பொழுதோ உன்னை யாருக்கோ ஒரு அற்பனுக்குக் கொடுத்து விட்டார். அவன் யார் என்று கூட உனக்குத் தெரியாது. அவன் உன்னை நடுத்தெருவில் விட்டு ஓடி விட்டான். மேலும் அதனால் அகால மரணத்தையும் அடைந்தான்.

சிங் :—தாங்கள் சொல்லுவது தப்பு. அவர் இறந்து விட்டார் என்று எக்காரணத்தால் சொல்லுவீர்கள்? அப்படி அவர் இறந்து விட்டாலும் என் மனதில் அவர் இன்னும் உயிருடன் தானிருக்கிறார்.

சுந் :—சிங்காரம்! இது என்ன பேச்சு! அவன் முகச் சாயலுடைய சவத்தை ஆற்றிலிருந்து எடுத்ததாக ஜனங்களே சொல்லும் போது வேறு அத்தாட்சி வேண்டுமோ? அப்படி அவன் உயிருடன் இருந்தால் தான் கைப் பிடித்த பெண்ணை, தன்னையே நம்பி இருக்கும் அபலையை எவ்வளவு வருஷங்கள் ஆனாலும் பார்க்காமலும், கடிதமெழுதாமலும் இருப்பானோ?

சிங் :—அவர் திரும்பி வந்தாலும், வராவிட்டாலும் என் காலத்தை இப்படியே கழிக்க எனக்குக் கஷ்டமில்லை. எப்பொழுது ஒரு தரம் அவரால் தொட்டு மாங்கலியம் கட்டப் பட்டேனோ அதுடன் அவருக்கு என்றைக்கும், என் ஆயுள் இருக்கிறவரையிலும், நான் பாத்தியப்பட்டவள்.

சுங் :—ஆனால் அழகான இவ்வுலகத்தில் உலக சுகங்களை எல்லாம் அனுபவிக்காமல் தன்னந்தனியே, சித்தி என்னும் கொடிய பேயினால் இம்சிக்கப்பட்டு ஆயுள் முடியக் காலங் கழிக்க விரும்புகிறாயா ?

சிங் :—தாங்கள் சொல்லும் வார்த்தையின் தாத்பரியம் அறிய ஆவலாயிருக்கிறேன். நான் பூர்வ ஜன்மத்தில் செய்த பலாபலன்களை இப்பொழுது அனுபவிக்கிறேன். ஆகையினால் ஒருவரைச் சொல்லுவதில் பிரயோசனமென்ன? சித்தி நல்லவள்தான். ஆனால் எதற்கோ என்பேரில் அவளுக்குக் கொஞ்சம் வெறுப்பு, அவ்வளவு தான்.

சுங்:—நன்றாய்ச் சொன்னாய். நான் தினந்தான் பார்க்கிறேனே! உன்னை அடிக்காத நாளும், வையாத நாளும் உண்டோ! நானே அவளைக் கோபித்துக் கொண்டிருக்கிறேன். நீ இஷ்டப்பட்டால் நான் அவைகளை எல்லாம் தடுத்து, உனக்கு சுகத்தை உண்டாக்குவேன்.

சிங் :—எப்படி முடியும்? நான் இறந்தேனானால் ஒரே அடியாக இக்கஷ்டங்களினின்றும் விடுபடுவேன்.

சுங் :—நீ அப்படிச் சொன்னால் என் மனம் அதிகக் கஷ்டப்படுகிறது. என்னை நீ புனர் விவாகம் செய்து கொள். நீ இஷ்டப்பட்டு ஒரு வார்த்தை சொல். அப்பொழுதே நான் இவ்வுலகத்தில் அடையாத சுகத்தை அடைந்தவன் ஆவேன். நான் அனேகம் செய்யாத காரியங்களைச் செய்திருக்கிறேன். பணத்தின் ஆசையைக் காட்டி, கலியாணம் செய்து கொள்வதாகச் சொல்லி அநேக அழகான சிறு வாலிபப் பெண்களைக் கெடுத்து விட்டு நடுத்தெருவில் விட்டிருக்கிறேன். இப்பொழுதுதான் நான் செய்தது தப்பிதம் என்று எனக்குத் தெரிகிறது. நீ என்னை மாத்திரம் கலியாணம் செய்துகொண்டால், சித்தியின் கொடுமையிலிருந்து விடுபடுவாய். உன் கை காத்து வேலை செய்ய அனேக ஆட்கள் காத்துக் கொண்டிருப்பார்கள். நீ காலால் இட்ட வேலையை நான் செய்யத் தயாராகக் காத்திருக்கிறேன். யாரோ ஒருவனுக்காக ஆயுள் முழுவதும் கஷ்டப்பட்டுக்கொண்டிருப்பேன் என்று சொல்லுவது பேதமை புத்தியாகும். என்னைப் பட்சமாகப் பார்த்து ஆனந்தமாகக் காலங்கழிக்க அடையாளமாக முன்னால் ஒரு முத்தம் கொடு பார்க்கலாம்.

சிங் :—முடியாது, முடியாது தயவு செய்து என்னிடம் அணுகவேண்டாம். நான் யாருமற்ற அனாதை, அபலை. ஐயோ! தயவு செய்து என்னை அணுகவேண்டாம்.

சுங் :—(சற்று பின் வாங்கி) சிங்காரம்! நான் நீ நினைக்கிறபடி அவ்வளவு பொல்லாதவன் அல்ல. ஆகையினால் உனக்கு நான் யோசித்துச் சொல்லச் சவகாசம் கொடுக்கிறேன். உனக்குத் திரும்பி இரண்டு விஷயங்களை ஞாபகப்படுத்துகிறேன். ஒன்று, என்னைப் புனர் விவாகம் செய்துகொள்ள இஷ்டப்படாவிட்டால், அதனால் ஆயுள் பரியந்தம் சித்தியின் கொடுமைக்கு ஆளாகிறது. மற்றொன்று, என்னை விவாகம் செய்துகொண்டு அதனால் நானும் நீயும் சுகமடைவது. நீ தீர யோசித்து விடை சொல்லு. சித்திக்கு எல்லா சமாச்சாரமும் தெரியும். அவளும் நான் உன்னை விவாகம் செய்துகொள்ள இஷ்டப்பட்டுவிட்டாள். என் காரியத்தை முடித்துக்கொள்வதற்காகவே உன்னைத் தனியாக விட்டுவிட்டுச் சென்றிருக்கிறாள். அநேகம் பெண்களை நான் கெடுத்துவிட்டதுபோல் உன்னையும் ஒரு நொடியில் செய்துவிடுவேன். ஆனால் அது எனக்கு இஷ்டமில்லை. உன்னுடன் என்

ஆயுள் முழுவதும் சுகிக்கவேண்டுமென்று இருக்கிறது. சித்திவரும் நேரமாயிற்றாகை யால் நான் செல்லுகிறேன். இன்னும் ஒரு மாதம் உனக்கு சாவகாசம் கொடுத்திருக்கி றேன். நீ என் இஷ்டத்திற்கு ஒத்துக் கொள்ளாவிட்டால் பலாத்காரமாக உன்னை, உன் பெயரை, கெடுத்துவிட நேரிடும் என்ப தையும் மனதில் வைத்துக்கொள் என்று சொல்லிவிட்டு அவ்வறையை விட்டு அகன் ருன்.

சிங்காரவல்லி அவன் சென்றவுடன், துக்கந் தாங்கமாட்டாமல் அழுதாள். ஆனால் அவளுக்கு உபசார வார்த்தை சொல்லுகிறவர்கள் யார் இருக்கிறார்கள். பிறகு ஏதோ நினைத்துக் கொண்டு ஒரு பெரிய மூச்சுவிட்டாள்.

நம் கதாநாயகியைப் போலுள்ளவர்கள் இருக் கிறபடியாலல்லவோ உலகத்தில் மழை பெய் கிறது. கேவலம் புதுநாகரிகம் என்று வெள்ளைக் காரர்களைப்போல் நம் பெண்களும் புருஷனு டன் கைகோர்த்துக்கொண்டு புறப்பட்டு விட் டால் பார்க்கிறவர்களுக்கு எவ்வளவு விகாரமா யிருக்கிறது. அவர்களில், தம்பதிகள் இஷ்ட படாவிட்டால், கோர்ட்டுகளுக்குச் சென்று விவாக ரத்து செய்துகொண்டு விடலாம். விதவை புனர்விவாகம் செய்து கொள்ளலாம் அவர்களுடைய ஆசார ஒழுக்கங்கள் நமக் கும் வரவேண்டுமென்று இஷ்டப்படுகிறவர்க ளும் உண்டு. அதற்காக இப்பொழுது அநேக சங்கங்கள் உண்டாயிருக்கின்றன. ஆனால் அவைகளைப்பற்றி எழுத இக்கதையில் இட மில்லையாகையால், அவைகளைப்பற்றித் தனியாக வியாசமாக எழுதலாமென்று இருக்கிறேன்.

சுந்தரம் மனப்பால் என்னமோ குடித்துக் கொண்டிருந்தான். அமிர்தவல்லி முன்போல் அவ்வளவு சிங்காரவல்லியை இம்சை செய்ய வில்லை. அது எதற்கோ? ஒரு வேளை சுந்தரத் தின் போதனையோ? விநாடி, நிமிஷம் என்று நாள் ஓடிக்கொண்டே ஒரு மாதமும் ஆயிற்று. 'நாளை இரவுக்குள் நீ எனக்குச் சம்மதிக்காவிடில் நாளை உன்னை நிச்சயம் கெடுத்துவிட்டுத் தான் மறு காரியம் பார்ப்பேன்' என்று சுந்தரம் கண்டிப்பாய்ச் சொல்லிவிட்டான். ஆனால் சிங் காரவல்லியின் மனதில் என்ன இருந்தது என்று அவன் என்ன கண்டான்!

கடைசி நாள், அதாவது சுந்தரத்தின் கடைசி கெடுவு நாள், விடியற்காலை சிங்காரவல்லி வழக் கம்போல் அதிகாலையில் எழுந்திருந்தாள். அன்று அவள் முகம் என்று மில்லாத அழகு பொருந்தியதாக இருந்தது. கையில் குடத்தை எடுத்துக்கொண்டு வழக்கப் பிரகாரம் காவே ரிக்குச் சென்றாள்.

அன்று காவேரியில் நீர் அதிகத் தெளிவாய் ஓடிக்கொண்டிருந்தது. அதிக விடியற்காலை யாகையால் ஜனங்கள், முக்கியமாகப் பெண்கள், இன்னும் அங்கு வரவில்லை. ஆனால் அங்கு ஒரு வாலிபச் சன்னியாசி அங்கு மிங்கும் உலாவிக் கொண்டு யாதோ ஆழ்ந்த யோசனையில் இருந் தாப் போலிருந்தது. சிங்காரவல்லி கையில் குடம் எடுத்துக்கொண்டு சன்னியாசி இருக் கும் துறைக்கு வந்தாள்.

சன்னியாசி அவளைக் கண்டவுடன் அவள் தன்னைப் பார்க்கக் கூடாது என்றோ அல்லது எதற்கோ அவ்விடத்தில் இருந்த மரங்களின் நடுவிற் சென்று மறைந்துகொண்டார். சிங் காரவல்லி யாராவது இருக்கிறார்களோ என்று சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, ஒருவரும் காணாததால் திருப்தியடைந்தவள் போல் கைகளைச் கூப்பிக் காவேரியைக் குறித்துக் கொஞ்சநேரம் ஸ்தோத்திரம் செய்தாள்.

அவ்விடத்தில் ஓரிடத்தில் ஆற்றின் நடுவே கொஞ்ச தூரத்தில் ஒரு கற்பாறை இருந் தது. அங்கே, வழக்கமாக ஜனங்கள் நதி

யில் வெள்ளமில்லாத காலங்களில் வேடிக்கையாக அதிலிருந்து ஆற்றில் குதித்து நீஞ்சல் அடித்து விளையாடுவது வழக்கம். ஆனால் நீஞ்சத் தெரிந்தவர்கள்தான் அவ்விடத்திலிருந்து குதித்து விளையாடலாம். நீஞ்சத் தெரியாதவர்கள் குதித்தால் அதோகதிதான். சிங்காரவல்லி குடத்தை அப்படித் துறையிலேயே வைத்துவிட்டு அக்கற்பாறையின் மேல் சென்றாள். மறைவிடத்திலிருந்து இவள் செய்யும் காரியங்களை யெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த சன்னியாசிக்கு இவள் செய்வதெல்லாம் ஆச்சரியத்தைக் கொடுத்தது. சாதாரணமாகப் பெண்கள் வந்தால் குடத்தைச் சுத்தம் செய்துவிட்டு இரண்டு முழுக்கு பரபரப்பாய்ப் போட்டுவிட்டுப் பிறகு குடம் நிறையத் தண்ணீரை எடுத்துக்கொண்டு போகிற வழக்கம் போல் இவள் செய்யாமலிருந்ததால் அவருக்கு அதிக ஆச்சரியத்தைக் கொடுத்தது அரிதல்ல. அப்பொழுதே மற்றத் துறையில் ஜனங்கள் வர ஆரம்பித்தார்கள். அவர்கள் வந்து நீராடிச் செல்வது சன்னியாசிக்கு நன்றாய்த் தெரிந்தது. இவர்கள் இருந்தவிடம் சற்று தூரமாக இருந்ததால் ஜனங்கள் இவ்விடத்திற்கு அதிகமாக வரவில்லை. ஒருவர் கண்ணுக்கும் படக்கூடாது என்றே சன்னியாசி இவ்விடத்தை நாடியது. அதே காரணத்துக்கோ என்னமோ சிங்காரவல்லியும் அவ்விடத்திற்கே சென்றாள்.

அக்கற்பாறையின்மேல் சென்ற சிங்காரவல்லி சற்று முற்றும் ஒரு தடவை பார்த்தாள். சன்னியாசி அவள் அங்கிருந்து வேடிக்கை பார்க்கச் சென்றிருக்கிறாள் என்று நினைத்துக்கொண்டு தன் பார்வையை அவ்விடத்திலிருந்து வேறு பக்கம் திருப்பினார். ஆனால் சற்று நேரத்திற்கெல்லாம் தொப்பென்று ஓசைக் கேட்டது. ஆ! அவ்விடத்திலிருந்து சிங்காரவல்லி ஆற்றில் விழுந்திருந்ததைப் பார்த்தார். அவருக்கு இன்னது செய்வதென்று தெரியவில்லை. இதை அவர் எதிர் பார்க்கவில்லையாகையால் உடனே சென்று அவளைக் கரைக்குக் கொண்டு வராவிட்டால் அவள் இறப்பது நிச்சயம். இவரோ சன்னியாசியாயிற்றே! பெண்களை எப்படித் தொடுவது? அவருக்கு அனேக யோசனைகள் மனதில் தோன்றி மறைந்தன. அதற்குள் சிங்காரவல்லி இரண்டு தடவை முழுகி எழுந்ததைக் கண்டார். உடனே ஒரே பாய்ச்சலாகத் தண்ணீரில் குதித்து அவளை கரைக்குக் கொண்டு வந்தார். அக்கம்பக்கத்திலிருந்த ஜனங்கள் இவள் அப்பாறையிலிருந்து கீழே விழுந்ததைக் கண்டு ஓ! என்று கூச்சல் போட்டுக் கொண்டு அவ்விடத்திற்கு ஓடி வந்தார்கள். ஆனால் அவர்கள் வருவதற்குள் ஒரு வாலிபச் சன்னியாசி சிங்காரவல்லியைக் கரைக்குக் கொண்டுவந்து அவளுக்கு உபசாரம் செய்துகொண்டிருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டார்கள். சிங்காரவல்லி சன்னியாசியால் மீட்கப்படுவதற்குள் அதிக நீரைக் குடித்து விட்டதாலும் விழுந்த அதிர்ச்சியாலும் பிரக்ஞையற்றவளாயிருந்தாள். கொஞ்ச நேரம் கழித்து அவளுக்குப் பிராண பயமில்லை என்று சொல்லிய சன்னியாசியின் வார்த்தையைக் கேட்ட ஜனங்களுக்கு மிகவும் சந்தோஷம் ஏற்பட்டது. சன்னியாசியை வாயாரப்புகழ்ந்தார்கள். அவர்களைச் சூழ்ந்திருந்த கூட்டத்தில் பெண்களும் புருஷர்களும் இருந்தார்கள். அவர்களில் வயது முதிர்ந்த ஒருவர் சன்னியாசியை நோக்கி "சுவாமி! இப்பெண்ணைக் காப்பாற்றியதற்காக நாங்கள் ரொம்ப கடமைப் பட்டிருக்கிறோம். இவள் தாயற்ற பெண். தகப்பனால் கவனிக்கப்படாமல் சிற்றன்னையினால் அதிகக் கொடுமையாக நடத்தப்பட்டு வந்தாள். ஒரு வேளை அக்கஷ்டத்திலிருந்து நீங்கும் பொருட்டுத் தன் பிராணனைப் போக்கிக்கொள்ளும் நோக்கத்துடன்............." (இச்சமயத்தில் சன்னியாசியின் முகம் சற்று மாறுப்பட்டது. ஆனால் அதை ஒருவரும் கவனிக்கவில்லை.)

"நான் இவ்வூருக்குப் புதிது. உலகயாத்திரை செய்துகொண்டு இன்று காலைதான் இவ் விடம் வந்தேன். ஆற்றில் ஸ்னானம் செய்யலா மென்று இவ்விடத்தை அடைந்தேன். அதற் குள் இப்பெண் இவ்விடத்திற்கு வந்தாள். சற்று நாழிகைக்கெல்லாம் தொப்பென்று ஓசை கேட்டுத் திரும்பிப்பார்க்க இவள் ஆற்றில் முழுகி எழுந்திருந்ததைக் கண்டேன். நீங்கள் சொல்லியபடி இந்த துரதிர்ஷ்டசாலியான இப் பெண்ணின் தாயார் தந்தை எவரோ? தாயார் இல்லை என்று சொன்னீர்களே. இவ்வளவு சீக்கிரம் இவள் விதவையானதும் வருந்தத் தக்கதே" என்றார் சன்னியாசி.

அக்கூட்டத்திலிருந்த கிழவி ஒருவள், "அப் பா! கருணாமூர்த்தியே! இன்று காலை நீர் ஒரு உயிரைக் காப்பாற்றினீர். ஹா! அதோ பாரும். அவள் கண்திறந்து பார்க்கிறாள்.(அச்சமயத்தில் சிங்காரவல்லி கொஞ்சம் கண்ணைத் திறந்து திரு ம்பியும் மூடிக்கொண்டாள்) இப்பெண்ணின் தாயாரையும் தந்தையையும் எனக்குத் தெரியும். இவள் பெரிய குடும்பத்தைச் சேர்ந்த பெண். ஆனால் அவள் தலைவிதியால் அவளுக்கு ஈச்வரன் இவ்வளவு கஷ்டத்தைக் கொடுத்தான். அவள் தகப்பனார் இவ்வூரில் ஒரு பெரிய உத்தியோ கத்திலிருந்தார். அவர் பெயர் கோவிந்த அய் யர். (இப்பெயரைக் கேட்டவுடன் சன்னியாசி க்கு தூக்கிப்போட்டாப்போலாயிற்று.) அவ ரைக் கொஞ்சநாள் முன்தான் சென்னைக்கு மாற்றிவிட்டார்கள். இவளுக்குத் தாயார் கிடை யாது. இவள் தகப்பனார் உடனே வேறு கலியாணம் செய்து கொண்டார். இவள் குழந் தையாக இருந்தபோதே அது நடந்தது. இளை யாள் மோகத்திலேயே ஈடுபட்டு இவளை அவர் சரியாக கவனிக்கவில்லை. அம்மகா பாதகி இவளை ரொம்ப இம்சித்து வந்தாள். பிறகு கலி யாணம் செய்தார்கள். ஆனால் அவள் கண வன் திடீரென்று ஒரு நாள் காணாமற் போய் விட்டான். கோவிந்த அய்யர் அவனுக்காகத் தேடாத இடங்களில் எல்லாம் தேடினார். ஆனால் அவன் அகப்படவில்லை. ஒரு நாள் ஒரு பிணம் இவ்வாற்றின் கரையில் மிதந்து வந்தது. அது இவள் புருஷனான நடராஜன் போலிருந்த தால், அதை எல்லோரும் நடராஜன் என்றே நம்பி ஊரில் ஒரு வதந்தி கிளப்பிவிட்டார்கள். அது நிஜமோ, பொய்யோ பகவானுக்குத் தான் தெரியும். அதற்காக இவள் சிற்றன்னை இவளுக்கு விதவைப்பட்டம் சூட்டிவிட்டாள். இவள் இப்படி இருக்க இதுவே காரணம். அமிர்தவல்லியின் தங்கை பிள்ளை வந்திருக்கி றான் என்றும், அவனால் இவள் மானம் கெடும் என்றும் ஊரில் இன்னொரு வதந்தி. ஒருவேளை இவைகளுக்காக இவள் ஆற்றில் வந்து பிராணனை விட யத்தனித்துக்கொண்டி ருக்கலாம்" என்று கிழவி பேசிக்கொண்டிருந்த போது வாலிபச் சன்னியாசியின் கண்களிலிரு ந்து நீர் தாரை தாரையாய்ப் பெருகிக் கொண் டிருந்தது. சிங்காரவல்லி அவள் சிற்றன்னையால் துன்புறுத்தப்பட்டு வந்தாள் என்றும், அவள் தங்கை பிள்ளையினால் தன் கற்பிற்கு பங்கம் வரும் என பயந்து அதினின்று தப்புவதற்கா கத் தற்கொலை செய்து கொள்ளத் தீர்மானித் திருக்கலாம் என்றும் கேட்டவுடன் அவர் 'கோ' வென்றலறிக்கொண்டு நினைவற்றுக் கீழே விழுந்தார். இவ்வித சம்பவம் ஏற்பட்டதினால் பக்கத்திலிருந்தவர்கள் அவரை உற்றுநோக்கி, அவர் முகச்சாயையிலிருந்து அவர் வெகுநாட் களுக்கு முன் காணாமற் போன நடராஜனாய்த் தானிருக்க வேண்டு மென்று ஊகித்து அவ ருக்குச் சைத்தியோபசாரங்களைச் செய்து அவ ருக்குப் பிரக்ஞை வரும்படி செய்தார்கள்.

தன்னினைவு வந்து கண்திறந்த சிங்காரவல்லி தன்னைக் காப்பாற்றிய மகா புருஷன் பிரக்ஞை யற்றுக் கிடப்பதைக் கண்டு திடுக்கிட்டாள். பக்கத்தில் பேசிக்கொண்டிருந்தவர்களின் சம்

பாஷாணயிலிருந்து தன்னைக் காத்த அம்மகான் தன்னை வெகு நாளைக்கு முன் விடுத்துச் சென்ற தன் கணவன் என்று அறிந்து அடக்கொணுமகிழ்ச்சி யடைந்தாள். தனக்குச் சுபாவமாயுள்ள நாணத்தின் மிகுதியால் தட்டித் தடுமாறி மெல்ல எழுந்திருந்து அக்கும்பலில் போய்க் கலந்துகொண்டாள்.

அவள் மனதிலுண்டான ஆனந்தத்தை வருணிக்க நம்மால் இயலாது பரமதரித்திரனுக்குக் குபேர சம்பத்து கிடைத்தாப் போலும், இயற்கைக் குருடன் கண்திருஷ்டி அடைந்தாப் போலும், வயது காலத்தில் அருமையாய்ப் பெற்றெடுத்து வளர்த்த குழந்தை இறந்து போய் அது மீண்டும் உயிர்பெற்றதனுல் அதன் பெற்றோருக்குள்ள சந்தோஷத்தைப் போலும் சிங்காரவல்லியின் ஆனந்தம் இருந்ததென்று ஒருவாறுகச் சொல்லலாம்.

நடாராஜன் திடீரென்று அவளைச் சிற்றன்னையின் கையில் நசுங்கும்படி விட்டுச் சென்றது எதற்கு என்று நமக்கே தெரியவில்லை. ஒரு வேளை கால சக்கரத்தின் கொடுமையோ, அல்லது சிங்காரவல்லியின் துரதிர்ஷ்டமோ! கடவுளின் மகிமையைப் பாருங்கள். உலக சுகங்களில் வெறுப்பு ஏற்பட்டுச் சன்னியாசியாக மாறி ஊரெல்லாம் சுற்றித் தன்னூரில் கொஞ்ச நாள் யாரும் அறியாமல் இருந்துவிட்டுச் செல்லலாம் என்று வந்த சன்னியாசியாகிய நடாராஜனைத் திரும்பவும் சம்சார பந்தத்தில் கொண்டு வந்து விட்டு விட்டார். அதிலும் அவனுலேயே அவன் மனைவி உயிர் காப்பாற்றப்பட்டதும் ஆச்சரியமே!

நடாராஜன் திரும்பி வந்ததும் சிங்காரவல்லியை ஆற்றிலிருந்து காப்பாற்றியதும் காட்டுத்தீபோல் ஊர் முழுவதும் பரவி விட்டது. சுந்தரத்துக்கும் அமிர்தவல்லிக்கும் அது எட்டாமலிருக்கவில்லை. அமிர்தவல்லிக்கு ஒரு பெரிய இடி தலையில் விழுந்தாப்போலிருந்தது. சுந்தரம் கெட்டவனுயிருந்தாலும் நல்ல குணமும் ஒவ்வொரு சமயம் தோன்றும் தனக்காகச் சிங்காரவல்லி உயிரைப் போக்கிக்கொள்வாளென்று அவன் கனவிலும் நினைக்கவில்லை. ஆகையால் இச்சமாச்சாரம் கேட்டவுடன் ஆற்றங்கரைக்கு ஓடோடியும் வந்து நடாராஜனையும் அவன் சன்னியாசிக் கோலத்தையுங் கண்டு திடுக்கிட்டுப் பிறகு தெளிந்து, அவன்தான் நடாராஜன் என்று அங்கு இருப்பவர்களால் சொல்லக்கேட்டு அவனைக் கட்டிக்கொண்டு "நடாராஜா! என்னை மன்னித்துவிடு இதைச் சொல்லவும் என் நாவு கூசுகிறது, இன்று நீ இல்லாவிட்டால் நான் ஒரு பெண் தன் உயிரை இழக்கும்படி செய்த பாபத்திற்கு ஆளாயிருந்திருப்பேன். நான் மகாபாதகன். நான் செய்ய நினைத்த மகாபாதகமான தொழிலை நினைக்க நினைக்க எனக்கே வெட்கமாயிருக்கிறது. ஏன் இன்னும் இவ்விடமே இருக்க வேண்டும்? வீட்டிற்குச் செல்லலாமே. சிங்காரம் அதிகக் களைத்து இன்னும் ஈரவஸ்திரத்துடனே இருக்கிறுளே" என்று சொன்னுன். அதற்கு சன்னியாசி 'சுந்தரம்! உன் குணத்துக்கு மெச்சினேன். கெட்ட காரியத்தைச் செய்ய நினைத்ததற்காகப் பச்சாதாபப்பட்டதற்கே கடவுள் உன்னை மன்னித்து விடுவார். நீ சாப்பிடும் வீடு என்னுடையதுமல்ல, உன்னுடையதுமல்ல. அது அமிர்தவல்லியினுடையது. ஆகையினுல் இவளை அங்கு அழைத்துவா எனக்கு இஷ்டமில்லை. கொஞ்சநாள் சிநேகிதன் வீட்டில் தங்கிவிட்டு நான் சென்னைக்குச் செல்ல உத்தேசித்திருக்கிறேன்" என்றுன். சுந்தரன் அதற்குமேல் ஒன்றும் சொல்ல வில்லை. ஜனங்கள் தம்பதிகளை ஆசீர்வதித்துவிட்டு ஒவ்வொருவராகத் தங்கள் கிரகங்களுக்குச் செல்ல ஆரம்பித்தார்கள். அன்று முழுவதும் அவ்வூரில் இதே பேச்சாக இருந்தது. நடாராஜன் (இனி

நடராஜன் என்றே கூப்பிடுவோம்) சிங்காரவல்லியை அழைத்துக்கொண்டு தன் பாலிய சிநேகிதனான பத்மநாபன் வேண்டுகோளுக்கு இணங்கி அவன் வீட்டிற்குச் சென்றான். எந்தக் காரணத்தினாலோ அமிர்தவல்லி சிங்காரவல்லியை வந்து பார்க்கவே இல்லை.

பத்மநாபன் கோவிந்த அய்யருக்கு விவரமாக நடராஜன் திரும்பிவந்ததைப் பற்றித் தந்தி அடித்து அவரை உடனே புறப்பட்டு வரும்படி எழுதி இருந்தான். இதற்குச் சில தினங்களுக்கு முன்பு கோவிந்த அய்யருக்கு மலேயா நாட்டிலிருந்து ஒரு கடிதம் வந்திருந்தது அதில் நடராஜனின் சிறிய தகப்பனாரான சீனிவாச அய்யர் இறந்துவிட்டபடியாலும் அவருக்குப் பிள்ளைகள் மனைவி ஒருவருமில்லாததால் அவர் சொத்து முழுவதையும் நடராஜனுக்கு உயில் மூலமாக எழுதிவைத்திருந்தபடியாலும் அதை வந்து கைவசப்படுத்திக்கொள்ளும்படி சீனிவாச அய்யருடைய வக்கீல் எழுதியிருந்தார். இதைப் பார்த்தது முதற்கொண்டு கோவிந்த அய்யருக்கு ரொம்பக் கஷ்டமாயிருந்தது. இதை எல்லாம் அனுபவிக்க நடராஜன் இல்லையே என்று வருத்தப்பட்டுக் கொண்டிருக்கும் சமயத்தில் தபாற்காரன் பத்மநாபன் தந்தியைக் கொண்டு வந்து கொடுத்தான். தந்தி என்றவுடன் அவர் மனம் திடுக்கிட்டது. ஆ! ஈச்வரா! இன்னும் என்ன கஷ்டம்தான் அனுபவிக்கவேண்டுமோ! என்று அத்தந்தியை உடைத்துப் பார்க்க அவருக்கும் தெரியாமல் ஆநந்தம் உண்டாயிற்று. உடனே அடுத்த வண்டியிற் புறப்பட்டு வருவதாகப் பதில் தந்தி அடித்துவிட்டு ஒரு மாசத்திற்கு லீவு வாங்கிக்கொண்டு கும்பகோணம் வந்து சேர்ந்தார். அவரை ஸ்டேஷனில் பத்மநாபனும் சுந்தரமும் சந்தித்து வீட்டிற்கு அழைத்துச் சென்றார்கள். நடராஜன் தன் வீட்டிற்கு வரமாட்டேனென்று, சொல்லியது அவருக்கு ரொம்ப மனதுக்குக் கஷ்டமாயிருந்தாலும் அதை வெளியிற் காட்டிக்கொள்ளவில்லை.

நடராஜனைக் கட்டிக்கொண்டு "அப்பா! எதற்கப்பா சொல்லாமல் ஓடி விடவேண்டும்? உனக்குக் கஷ்டமாயிருந்தால் என்னிடம் சொல்லக்கூடாதா?" என்று பலவிதமாகச் சொல்லித் தன் சந்தோஷத்தைத் தெரிவித்தார். பிறகு பத்மநாபன் சமாச்சாரம் சொல்ல ஆரம்பிப்பதற்கு முன்பே சுந்தரம் அவர் காலில் விழுந்து தான் செய்ய நினைத்த குற்றத்தையும், அதற்காக சிங்காரவல்லி பிராணனைப் போக்கிக்கொள்ள ஆற்றில் விழுந்ததையும், பாலிய சன்னியாசியாகிய நடராஜன் அவளைக் காப்பாற்றினதையும்பற்றிச் சொல்லித் தான் தெரியாமற் செய்த பிழையை மன்னிக்கும்படி வேண்டினான். உடனே அவர் அவனைக் கட்டிக்கொண்டு "அப்பா! உன் பேரில் என்ன பிழை? எல்லாம் கடவுளின் சித்தம் போலும். உன்னால் இல்லாவிட்டால் அந்தக் கபட சன்னியாசி சிங்காரவல்லியைப் பார்க்காமலே இவ்வூரை விட்டுச் சென்றுவிட்டிருந்த பிறகு என் பெண் ஆற்றில் விழுந்து இறந்திருந்தால் எப்படி முடிந்து இருக்குமோ! எல்லாம் ஈசன் செயல்" என்று அவனைத் தேற்றினர்.

பிறகு மலேயா நாட்டிலிருந்த நடராஜன் சிறிய தகப்பனாரின் தாராள புத்தியைப் பற்றியும் அவர் உயிலைப்பற்றியும் பிரஸ்தாபித்தார். அங்கு இருந்தவர்களில் நடராஜனைப் புகழாதவர் கிடையாது. நடராஜன் எல்லாருக்கும் "என் லக்ஷ்மியான என் மனைவி என்னிடம் வந்தவளே" என்று சொல்லிச் சந்தோஷப்பட்டான்.

"நடராஜா! அது இனி என் வீடு கூட இல்லை. உன் வீடே. என் வீடு, என் சொத்து முழுவதும் இனி உன்னுடையதே. ஆகையால் நீ தயவு செய்து மறுக்காமல் எனக்காக ஒத்துக் கொண்டுவரவேண்டும்" என்று கேட்டுக்

கொண்டார். அதற்கு நடராஜன், "எனக்கு ஒரு தடையுமில்லை, ஆனால் சிங்காரவல்லியின் இஷ்டம் எப்படியோ?" என்று அவளைப் பார்த்தான். அவளும் தனக்கு ஒரு அப்பயந்தாமுமில்லை என்று பதிலளித்தாள். மேலும் நடராஜன் தனக்கு அமிர்தவல்லியின் பேரில் ஒரு வித மனஸ்தாபமும் கிடையாதென்றும் தான் அவளைத் தன் தாயாராகக் கருதுவதாயும் விளம்பினான், எல்லாரும் அவனுடைய உதார குணத்துக்கு மெச்சி கோவிந்த அய்யர் வீட்டை அடைந்தார்கள். அமிர்தவல்லி இவர்களை எதிர்கொண்டு அழைத்துத் தன் தப்பிதத்தை எல்லாம் மறந்துவிடும்படி சிங்காரவல்லியையும் நடராஜனையும் வேண்டிக்கொண்டாள். சிங்காரவல்லி அவளை அப்படி எல்லாம் சொல்லக் கூடாதென்று பரிந்து தடுத்துவிட்டாள்.

கோவிந்த அய்யர் தன் மாப்பிள்ளையாகிய நடராஜனுக்காக மலேயாவுக்குச் சென்று சீனிவாச அய்யருடைய் ஆஸ்திகளுக்குச் சரியான ஏற்பாடு செய்துவிட்டு வரச் சென்றார். ஒரு கடிதத்தில் ரொக்கம் நிலம் எல்லாம சேர்ந்து ஐந்து லட்சம் இருக்குமென்று எழுதி யிருந்தார்.

சுந்தரம் தன் கெட்ட வழக்கத்தை யெல்லாம் விட்டு விட்டு அடிக்கடி நடராஜனைப் பார்க்க வந்து சென்றுகொண்டிருந்தான். சிங்காரவல்லி தன் செல்வச்செருக்கினால் கடவுளை மறக்கவே இல்லை. 'அவரே நமக்கு என்றும் நினைக்காத சுகத்தைக் கொடுத்தது' என்று தினம் அவரை மனதில் தியானம் செய்து வந்தாள். அமிர்தவல்லியே இப்பொழுது வீட்டுக் காரியங்களைச் செய்ய ஆரம்பித்தாள். சிங்காரவல்லி எவ்வளவு சொல்லியும் கேட்கவில்லை. "நீ என் பெண். நம் வீட்டில் நான் செய்யமால் வேறு யார் செய்யவேண்டும்?" என்பாள். மலேயாநாட்டில் காரியங்களை யெல்லாம் சரியாக முடித்து விட்டு கோவிந்த அய்யர் திரும்பித் தன் வேலையை ஒத்துக்கொண்டார். நடராஜன் அவரைத் தன் வேலையை ராஜீனாமாக் கொடுக்கச் சொல்லியும் அவர் கேட்கவில்லை.

நடராஜன் தன் ஆஸ்திகளை எல்லாம் பாழாக்காமல் தேச கைங்கரியத்தில் செலவழித்துக் கொண்டு நல்ல பெயரையும் கீர்த்தியையும் அடைந்தான். அவர்கள் எல்லாரும் சௌக்கியமாகவும் ஆனந்தமாகவும் நீடூழிகாலம் வாழ்ந்து வந்தார்கள்.

சுபம்!

# பண்டை இந்தியாவில் வெள்ளக்கஷ்ட நிவாரணம்.

## எத்தகைய முறைகள் அநுசரிக்கப்பட்டன?

"ஒரு சரித்திரமாணவர்" எழுதியது.

இந்திய அரசியல் நூலாகப் பெரிதும் கொண்டாடப்படும் கௌடில்யருடைய அர்த்த சாஸ்திரத்தில் வெள்ளப் பெருக்கு உண்டாவதைப்பற்றியும் அதற்குப் பரிகார முறைகள் என்னென்ன செய்ய முடியும் என்பதைப்பற்றியும் கூறப்பட்டிருக்கின்றன. நாட்டிற்கு ஆதி தெய்விக சம்பந்தமான துன்பங்கள் ஐந்து உண்டாகும் என்று கௌடில்யர் கூறுகிறார். அக்கினி, உதகம் (வெள்ளம்) வியாதி, தர்ப்பிட்சம் (பஞ்சம்) மாரகம் ஆகிய இவ்வைந்தினாலேயும் நாட்டிற்குத் தீங்குகள் நேரலா மென்று இவர் தெரிவிக்கிறார். இவைகளில் நெருப்பினாலும் வெள்

ளத்தினாலும் ஏற்படும் சேதங்கள் மிக முக்கியமானவையென்றும், நெருப்பினால் உண்டாகும் சேதத்திற்குப் பரிகாரம் செய்ய முடியாதென்றும் வெள்ளத்தினால் ஏற்படும் கஷ்டங்களை ஒருவாறு நீக்கலாம் என்றும் கௌடில்யருடைய ஆசிரியர் அபிப்பிராயப்படுகிறார். ஆனால் கௌடில்யர், தம் ஆசிரியருடைய அபிப்பிராயத்திற்கு மாறுபட்டு, நெருப்பினால் உண்டாகும் சேதம் ஒரு கிராமத்தையோ அல்லது ஒரு தனி இடத்தையோ பாதிக்குமென்றும், ஆனால் வெள்ளம் அநேக ஆயிரங் கிராமங்களையும் பாதிக்கக் கூடுமென்றும் அபிப்பிராயப்படுகிறார்.

*　*　*　*

தேசத்திற்குப் பொதுவான துன்பங்களில் வெள்ளமும் ஒன்று என்று கௌடில்யர் அபிப்பிராயப்படுவது முற்றிலும் பொருந்தும். ஜனங்கள் வெள்ளத்தினால் கஷ்டப்படும்பொழுது, அவர்களுடைய துன்பங்களை உடனே பரிகரிக்க வேண்டுமென்றும், ஏனென்றால் இவர்களிடத்திலிருந்து பணம், பொருள், தொழில், சேனை முதலியன கிடைக்கின்றனவென்றும் விசாலாட்சர் என்ற ஓர் அரசியல் நிபுணர் அபிப்பிராயப்படுகிறார். தெய்விக சம்பந்தமான வெள்ளம் முதலிய துன்பங்கள் எவையேனும் நேர்ந்துவிட்டால், ஜனங்களுக்கும் அவர்களுடைய சொத்துக்களுக்கும் உடனே பாதுகாப்புக் கொடுக்கவேண்டுமென்றும், முதலில், தங்களுடைய கஷ்டத்தைப் போக்கவேண்டுமென்று ஜனங்கள் கடவுளைப் பிரார்த்தித்துக் கொள்ளவேண்டுமென்றும், அதர்வ வேதத்தில் கூறியுள்ளபடி சில சடங்குகளைச் செய்ய வேண்டுமென்றும் கௌடில்யர் அபிப்பிராயப்படுகிறார். மற்றும் வெள்ளத்தாலோ நெருப்பினாலோ துன்புற்ற ஜனங்களுக்கு அவைகளால் துன்புறாத ஜனங்கள் வேண்டிய உதவிகளைச் செய்யவேண்டுமென்றும், இங்ஙனம் உதவி செய்வோருக்கு அரசாங்கத்தார் போதிய பணம் கொடுக்கவேண்டுமென்றும் சொல்லப்பட்டிருக்கின்றன. ஜனங்களில் எவரேனும் தம்மாலியன்ற உதவியைச் செய்ய மறுத்தால் அவர்கள்மீது கடுமையான நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டனவென்றும் சொல்லப்பட்டிருக்கின்றது. மற்றும் இங்ஙனம் உதவி செய்ய முன்வந்த ஒருவன் தலைமை பூண்டு ஒரு காரியத்தைச் சொன்னால் அதற்கு எல்லாரும் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும் என்றும் கூறப்பட்டிருக்கிறது. 'எவனொருவன் பொது நன்மைக்காக உழைக்கிறானோ அவனுடைய வார்த்தையை எல்லோரும் கேட்கவேண்டும்' என்று யாக்ஞவல்கியர் தெரிவிக்கிறார்.

*　*　*　*

ஆற்றோரங்களில் குடியுள்ள கிராமத்தார்கள் மழை காலங்களில், வெள்ளத்தினால் பாழாக்கக் கூடாத பிரதேசங்களில் குடியேறி வசிக்கலாமென்றும், படகுகள், மூங்கில்கள், மரப் பலகைகள் முதலியவைகளை அனைவரும் வைத்துக் கொண்டிருக்க வேண்டுமென்றும் இங்ஙனம் வைத்துக்கொண்டிருப்போர், வைத்துக் கொண்டிராதவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்யவேண்டுமென்றும், படகுகள் முதலியவைகளை வைத்துக்கொண்டிருப்போர், வெள்ளத்தினால் அடித்துக்கொண்டு போகப் பட்டவர்களை மீட்காமற்போனால் பன்னிரண்டு பணம் அபாரதம் விதிக்கப்படுவார் என்றும் அர்த்தசாஸ்திரம் கூறுகிறது. வெள்ளப் பெருக்கெடுத்தோடும்போது வேதத்தை அறிந்தவர்கள் எப்பொழுதும் ஜபம் செய்துகொண்டிருக்க வேண்டுமென்று அடிக்கடி வற்புறுத்திக் கூறப்பட்டிருக்கிறது. மற்றும் ஒவ்வோர் இடத்திலும் கஷ்டப்பட்டவர்கள், அந்தந்த இடத்தினராலேயே உதவி செய்யப்படவேண்டுமென்

றும், இத்தகைய தேசப்பொதுவான கஷ்டங்களில் ஜனங்கள் ஒற்றுமையாயிருந்து வேண்டிய உதவிகளை ஒருவர்க்கொருவர் செய்துகொள்ளவேண்டுமென்றும் பல நூல்கள் வற்புறுத்திக் கூறுகின்றன.

மதுரையில் வரகுணபாண்டியன் ஆட்சி செய்துகொண்டிருந்த காலத்தில் வைகையாறு திடீரென்று வெள்ளப் பெருக்கெடுத்தோட ஆரம்பித்தது. உடனே ஜனங்கள் பயத்தினால் கூக்குரலிட ஆரம்பித்தார்கள் அரண்மனையிலிருந்த பாண்டிய மன்னன் இதனைக் கேட்டு வெளிவந்து பார்த்தபோது தெருக்களில் ஜலம் பெருகியோடுவதைக் கண்டான். உடனே, தனது மந்திரிமார்களை யழைத்து, நகரத்திற்குள் ஜலம் வரவொட்டாதபடி தடுத்து ஒரு பெரிய அணைபோடும்படி உத்தரவு செய்தான். உடனே மந்திரிமார்கள் எங்கு உடைப்பு எடுத்துக்கொண்டிருக்கிறதோ அங்கு சென்று, ஜனங்களை அழைத்து மண்ணையும் மணலையும் போட்டு ஓர் அணைகட்ட வேண்டுமென்ற தங்கள் முயற்சியில் அனைவரும் உதவிசெய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். உடனே ஒவ்வொரு வீட்டுக்காரரும் இம்முயற்சியில் ஈடுபட்டு உழைக்கலானார்கள். அறுபது அடி உயரம் இந்த அணையை எழுப்ப வேண்டியிருந்தது. பணக்காரர்கள் இரண்டு தொழிலாளர்களையும் மற்றக் குடியானவர்கள் ஒவ்வொரு தொழிலாளியையும் உதவ வேண்டுமென்று விதிக்கப்பட்டது. எனவே, சில மணி நேரத்திற்குள் அநேகர் கூடி ஜனகன் என்ற உத்தியோகஸ்தன்கீழ் மேற்கூறப்பட்ட வேலையைச் செய்யத் தொடங்கி விட்டார்கள். இந்த உத்தியோகஸ்தன் தொழிலாளர்களை நோக்கி "உங்களுக்கேற்பட்ட பங்குப்படி, மண் மூட்டையாலும் மணல் மூட்டையாலும் கரையை நிரப்புங்கள். இதைச் செய்யாவிட்டால் அரசர் உங்களுக்குக் கடுமையான தண்டனை விதிப்பார். இவ்வேலைகள் எவ்வளவு தூரம் நடைபெற்றிருக்கின்றன வென்பதை மேன்பார்வை செய்ய அரசர் உடனே இங்கு வருவார்" என்று கூறி வேலை வாங்கினான். இதனால், அரசன் ஜனங்களுடைய துன்பத்தைப் பரிகரிக்க எவ்வளவு முயற்சிகள் எடுத்துக் கொண்டான் என்பது நன்கு புலனாகும்.

* * * *

முற்காலத்தில், வெள்ளக் கஷ்ட நிவாரண முறைகள் எங்ஙனம் அநுசரிக்கப்பட்டன வென்பதற்குச் சில சாஸன ஆதாரங்களும் இருக்கின்றன. குப்த வமிசத்தைச் சேர்ந்த ஸ்கந்த குப்தன் என்பவனுடைய ஆட்சியில், விடா மழை பொழிந்துகொண்டிருந்ததன் பயனாக சுதர்சனம் என்ற ஏரி உடைப்பெடுத்துக் கொண்டது. மற்றும் ரைவதகம் என்ற மலையினின்று எழுந்த ஆறுகளின் இருகரைகளிலும் வெள்ளம் புரண்டோடியது. பலாசினி என்ற ஓர் ஆறும் இது சம்பந்தமாகக் கூறப்பட்டிருக்கிறது. ஜனங்கள் கவலைமேலீட்டினால் ஒருநாள் இரவு முழுவதும் கண் விழித்துக் கொண்டிருந்தார்களென்றும், அரசகுமாரனை சக்ர பாலிதன் என்பவன் ஜபம் செய்யும்படி ஏற்பாடு செய்ததாகவும், பிராமணர்கள் முதலானவர்களுக்குப் பற்பல தானங்களை வழங்கினான் என்றும் சாஸனம் கூறுகிறது. நூறு முழ நீளமும் அறுபத்தெட்டடி அகலமும் எழு ஆள் உயரமும் உடைய ஓர் அணை ஏராளமான பணச்செலவுடன் கட்டப்பட்டதென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த அணைகட்டி முடிந்ததும், அந்த ஏரியைச் சுற்றியிருந்த கிராமங்கள் செழிப்புற்றன என்றும், அநேக ஆண்டுகள் இந்தப் பிரதேசத்தில் வெள்ளப்பெருக்காவது பஞ்சமாவது உண்டாகவில்லையென்றும் தெரிகின்றது.—நவசக்தி.




# மகளுடைத்தால் மண்கலம்
# மருமகளுடைத்தால் பொன்கலம்.

(ஸ்ரீமதி C. Y. மணி)

சென்னையைச் சார்ந்த மைலாபூர் சாலைத் தெருவில் ஒரு நாள் சுமார் பகல் பன்னிரண்டு மணிக்கு ஒரு மாடி வீட்டின் உள் இருந்த மாது ஒருவள் உள்ளிருந்து வந்து வாயிற் திண்ணையில் உட்கார்ந்து கொண்டாள். சென்னையில் அனேகமாய் ஆண்மக்கள் யாவரும் உத்தியோகத்திலமர்ந்திருப்பதால் அவரவர்கள் வேலைகளுக்குப் போய்விட்டால், வீட்டுப் பெண்மக்களுக்கு வேலைகளிருப்பதில்லை. வீட்டுவேலை முடிந்தவுடன், தாய்மார்கள் பெண்குழந்தைகளின் படிப்பில் சிரத்தை எடுத்துக்கொண்டிருந்தால் அக்குழந்தைகளுக்குப் புஸ்தகம் வாசிப்பதிலோ பத்திரிகை படிப்பதிலோ புத்தி செல்லும். இக்காலத்திலும் சிலர் இரண்டும் கெட்டவர்களாகயிருப்பதால் அவர்களுக்கு ஒன்றிலும் புத்தி செல்வதில்லை. வம்பு வளர்ப்பதில் மாத்திரம் அவர்கள் சளைப்பதில்லை. அப்படியே வீட்டின் வாயிலை அடைந்த அம்மாள் தன் சபைக்கு அங்கத்தினர் யார் வருகிறார்களென்று பார்த்துக் கொண்டிருந்தாள். பாக்கி அவ்வீதியிலிருக்கும் மாதர்கள் தங்கள் காரியங்களை முடித்துக் கொண்டு வாயிலை அடைந்தார்கள். உடனே யாவர் கண்களும் அந்த மாடிவீட்டை நோக்கின. ஒரே காலத்தில் யாவர் முகமும் மலர்ந்தன. உடனே எல்லோரும் மாடி வீட்டை வந்தடைந்தார்கள். அவ்விருத்த மாதுக்கு அவர்களைப் பார்த்து அளவற்ற ஆனந்தமுண்டாயிற்று. அவர்களுக்கு மிகுந்த

நல்வரவுகூறி, "ஏண்டி சிக்கி (சரஸ்வதி), தச்சி (தனலக்ஷ்மி), எச்சி (லக்ஷ்மி), முச்சி (முத்து லக்ஷ்மி), பிச்சி ,, என்று ஒவ்வொருவருக்கும் கால்பெயர், அரைப்பெயர், முக்கால் பெயரா கச் சொல்லிக் கூப்பிட்டு முதல் நாள் (மீட்டிங்) சபை கலைந்ததிலிருந்து, இன்றையதினம் சபை கூடியவரையில் கேட்டுக்கொண்டு, சபையை முதலான விசேஷங்களையும் கேட்டுக் கொண் டாள். இவர்கள் யாவரும் வந்துகூடிய சற்று நேரங்கழித்து கடைசியாக ஒரு ஸ்திரீ அங்கு வந்து சேர்ந்தாள். அவளை யாவரும் அதிசய மாக நோக்கி ஒரே வாக்காய், "ஓ பத்தாசி! (பத்மாசனி) எப்ப வந்தே? ஆறுமாதமாய் உன்னை இவ்வூர்ப் பக்கமே காணலியே? உன் மாமியார் வீட்டில் யாவரும் க்ஷேமமா"? என்று விசாரித்தார்கள். அவளும் அவர்களுக்கு இன் முகம் காட்டித் தன்னுடைய சுகக்ஷேமங்களைக் கூறிவிட்டு அந்த விருத்தமாதை நோக்கி, 'சேச்சிப்பாட்டி! உன் மருமாள் (தமயன்மகள்), மருமான், அவனகமுடையாள் யாவரும் க்ஷேமமா'? என்று கேட்டாள்.

"பத்தாசி! எல்லோரும் சௌக்யமே. ஏன் நிற்கிறாய்? திண்ணையில் வந்துட்காரு" என்று சேச்சி அவளுக்கு ஆசனம் கொடுத்து, வம்பர் மகாசபை அங்கத்தினர் யாவரும் வந்து விட் டார்களாவென்று பார்த்தாள். அவளுக்கே அங் கிருந்த யாவர் வாயைக்காட்டிலும் வாய் பெரி தாக யிருந்தபடியால் தானே அக்கிராசனம் பெற்றுக்கொண்டாள். அக்கிராசனாதிபதிக்கு அங்கு உயர்ந்த ஆசனமில்லாத படியால் திண் ணையின் சார்மனையில் சாய்ந்து கம்பீரமாக உட்கார்ந்துகொண்டாள்.

இவர்கள் இப்படியிருக்க, பத்தாசி வந்த சந் தோஷத்தில் இவர்கள் போட்ட கூச்சலால் வீட்டிற்குள் வேலைசெய்துகொண்டிருந்த சுர் சுந்தராங்கி என்ன விசேஷமோ வென்று பார்ப் பதற்காக வாயிலை யடைந்து எட்டிப் பார்த் தாள். அங்கள் வீட்டின் திண்ணையில் சாலத் தெருவிலுள்ள ஸ்திரீகள் ஒருவர் பாக்கியில்லா மல் கூடியிருப்பதையும் தன் புருஷனின் அத்தை (சேச்சி) அக்கிராசனம் வகித்திருப்ப தையும் பார்த்தாள். 'இன்றையதினம் இவர்கள் வாயில் யாருடைய பெயர் அகப்பட்டுக் கொண்டு அரைபடுமோ தெரியவில்லையே! ஜக தீசா! என்றைய தினம்தான் மாதர்களுக்கு வம்பு பேசும் தொழில் வேறுக்கப்படுமோ தெரியவில்லையே' என்று அவ்விடமே நின்றிருந் தாள்.

மேற்கூறிய மாதர்கள் பத்தாசி வந்த சந் தோஷத்தினால் மெய்ம்மறந்து, அங்கு சுந்த ராங்கி நிற்பதையே கவனிக்காமல் அடியில் வரு பேசலானார்கள்:—

பத்தாசி:—பாட்டி! உன் மருமாள் புருஷன் வீடுபோய் இரண்டு வருஷமாகிறதே? இன் னும் குழந்தை ஒன்றையும் காணம் போ லிருக்கிறதே!

சேச்சி:—(மிகுந்த வருத்தத்துடன்) ஆமம்மா! தாய் தகப்பனற்ற குழந்தை. இந்த கபாலீச் வரரும் கற்பகாம்பாளும கண்திறந்து பார்க் கணும்.

பத்தாசி:—உங்க மருமானகமுடையாள் இவ்விடமிருக்கிறாளோ அல்லது பிறந்தகம் போயிருக்கிறாளோ?

சேச்சி:—பத்தாசி! நான் அச்சிறுக்கியுடன் ஒரு மாதமாய்ப் பேசுவதேகிடையாது. அவ ளைப் பிறந்தாத்தில் யாரழைக்கிறாள்?

அப்பக்க துப்புக்கு மஞ்சளில்லே
ஆவென்ற வாயிக்கு அன்ன மில்லே
சிக்குத்தலேக்கொரு எண்ணெயில்லே
சிராடிவா பிறந்தாத்தில் என்றிருக்கிறது.

எங்கு போக இடம்? இங்குதான் கிடக்கிறது.

பத்தாசி:—(சற்று விவேகமுள்ளவளான படியால்) பாட்டீ! அவள் என்ன தவறுதல்

செய்தாள்? நீங்கள் அவளுடன் ஏன் பேசுவதில்லை?

சேச்சி :—ஏனா? சொல்லறேன் கேள். மாதா மாதம் ஏதோ ஒரு பத்திரிகை வெளிவருகிறதாம். அதில் இவள் ஏதோ கதையாம், வியாசமாம், புத்திமதியாம், மதிப்புரையாம்! எல்லாம் தான் எழுதி அவர்களுக்கு இனாமாகக் கொடுத்து விடுகிறாளாம். என்ன அநியாயம்? என்ன துணிச்சல்? அதை எனக்காவது சொன்னாளா? அதுவுமில்லை. பொம்மனாட்டிகட்டை! ஆம்பளை மாதிரி இதெல்லாம் எழுதலாமோ? நான் ஒரு நாள் லஸ்ரோட்டில் என் ஆத்துக்காரருக்கு அத்தானுக்கு மருமானுத்திற்குக் காரியமாய்ப் போயிருந்தேன். அந்த மருமான் என்னிடம் 'உங்காத்து மாட்டுப்பெண் எழுதியிருப்பதை நாங்கள் படித்தோம். ரொம்ப நன்னாயிருந்தது' என்றான். எனக்கு அப்படியே நாக்கைப் பிடுங்கிக் கொள்ளலாமாவென்று யிருந்தது. ஒரு குடித்தனப் பொம்மனாட்டியைப் பத்தி அசல் புருஷாள் பேசலாமா? "கங்கை ஒரு கோடி கீழ் நாடும் மேல் நாடும். சங்கையில்லா எழுகடலும் தட்டி இறைகிறது. "நாடு சிரிக்கிறது, நங்கபுரம் ஏசறது." எனக்கு ரொம்பக் கோபமாய்ப் போச்சு. 'நம்ம ஜாதி என்ன? குலமென்ன? கோத்திரமென்ன? நம்ம போரா எல்லார் வாயிலும் அடிபடுவது' என்று ரொம்பக் கோபமாய் ஆத்துக்கு வந்தேன். இவள் என் மருமானுக்கு சாதம் போட்டுக் கொண்டிருந்தாள். 'என்ன அநியாயம்? இம்மாதிரி எல்லாத்திற்கும் எழுதலாமா'? என்று கேட்டேன். அதற்கு இந்தத் துணிச்சல் கட்டை பொம்மனாட்டி இதெல்லாம் எழுதலாமென்றும் அதனால் ஒரு கெட்டபெயரும் வாராதென்றும் ஒரு நாழி இறைந்தாள். என் மருமானும் அவளுடன் சேர்ந்துகொண்டு, "அத்தே! அதில் ஒன்றும் தப்பிதமில்லை" என்று பரிந்து பேசினான். மாயச் சிறுக்கி அவனுக்கும் ஏதாவது மருந்து இட்டு விட்டாளோ என்னவோ? அன்று முதல் நான் அவளுடன் பேசுவதே கிடையாது எனக்கென்ன? மெத்தக் காலமாச்சு, சத்தெக்காலம். இவர்களுக்கு வரும் மான அவமானம் எனக்கா இவளுக்கா? எக்கேடு கெட்டு எருக்காய் முளைக்கட்டுமே!

பத்தாசி :—பாட்டீ! சுந்தராங்கி இவ்வளவு புத்திசாலியா? ரொம்ப அடக்கமாகயிருக்கிறாளே? நீர் இவ்வளவு கோபப்படுவது நியாயமல்ல. எனக்கென்ன? "கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்ப மேன்?" அது போகட்டும் உங்க மருமாளெப்படி? அவளாவது உங்க இஷ்டப்படி யிருந்தால் தானே உமக்கு சந்தோஷமாயிருக்கும்.

சேச்சி :—இவளைச் சொன்ன வாயால் அவளைச் சொன்னால் வாய் வெந்துபோகும். எவ்வளவு சிக்கனம்! எவ்வளவு அடக்கம்! புருஷன் வீட்டுக்குப்போய் இரண்டு வருஷம் தானே ஆகிறது. எவ்வளவு பொறுப்பாயிருக்கிறாள் தெரியுமா? இவள் அவர்கள் வீட்டுக்கும் போகும்வரையில் எங்க மாப்பிள்ளை மாதம் முப்பது ரூபாய் கொடுத்து மோட்டார் ஓட்டி வைத்துக்கொண்டிருந்தார். என் மருமாள் அவர் வீடு போனதும் அதெல்லாம் நிறுத்தி விட்டுத் தானே சிரமப்பட்டுக் கற்றுக் கொண்டு தினம் இரண்டு வேளையும் கோர்ட்டுக்குப் புருஷனைக் கொண்டு விட்டு அழைத்துக் கொண்டு வருகிறாள்.

பத்தாசி :—ஏன் பாட்டீ! அவளுக்கு மாமி நாத்தி ஒருவருமில்லையா? பொம்னாட்டி மோட்டார் விட்டால் அவாள் வெறுமனே யிருப்பாளா? நான் உம் மருமாளைப் பார்த்து ரொம்ப நாளாகிறது. இவ்விடம் சமீபத்தில் வருவாளா?

சேச்சி :—மாமி இல்லாமலென்ன? கிழக்கோட்டான் ஒன்றுயிருக்கிறது நாகரிகமில்லாமல் அது உளறினுல் யார் அதன் வார்த்தையைக் கேழ்ப்பார்கள். அது கிடக்கு ஒரு மூலேயில். என் மருமாள் ராயபேட்டையிலிருந்து தினம் சாயங்காலம் நடந்து வந்து என்னைப் பார்த்துப் போவாள், காலுக்கு ஏதோ பூடிஸாம் (பூட்ஸ்). அதைப் போட்டுத்தான் வருகிறுள். நான் அசட்டுத் தனமாக அது என்னத்துக்கு என்று கேட்டேன். டாக்டர் எல்லாம் காலில் ஒன்றும் போட்டுக் கொள்ளாமல் நடக்கக் கூடாதென்று சொல்லரானும். கண்ட எச்சிலே மிதித்தால் வியாதிகள் வருமாம். விஷக்கல்லு குத்தினுல் கால் வீங்கிக் கொள்ளுமாம். முன்நாளில் நாமெல்லாம் ஒன்றும் தெரியாமல் மூடமாக இருந்தோம், இந்த நாளில் அப்படியிருக்காளா? பச்சைக்குழந்தை முதல் எல்லாம் தெரிகிறது. தினம் என்னைப் பாத்துட்டு இதற்கு சமீபத்தில் பந்து (டென்னிஸ்) விளையாடும் கிராண்டு (கிரௌண்டு) ஒன்று இருக்கிறதாம். அதில் விளையாடி விட்டு ஏழு மணிக்குத் திரும்பிப் போய்விடுவாள்.

பத்தாசி :—பாட்டீ! பெண்கள் பந்து விளையாடலாமோ? ஏழு மணிக்கு ஒத்தியாக ராயபேட்டைக்குப் போகலாமோ?

சேச்சி :—உனக்கு ஒன்றும் தெரியவில்லே. பட்டணவாசத்தில் பிறந்தும் புகுந்தது பட்டிக்காடாகையால் தெரியவில்லே, பந்தாடினுல் தேகத்திற்கு ரொம்ப வலுவுண்டாகும். சரீரம் சுவாதீனமாக வருமாம். உடம்புக்கு ரொம்ப நல்லதாம். என் மருமாள் கெட்ட காரியமே செய்யமாட்டாள். திரும்பிப்போகும்பொழுது இருட்டி விடுவதால் பஸ்ஸில் ஏறிக்கொண்டு போகிறுள். அதில் ஆயிரம் பேர் போகிறுர்கள். என்ன பயம்?

இவற்றையெல்லாம் வாயிற்படிக்குப் பின்பக்கமிருந்து கேட்டுக்கொண்டிருந்த மங்கை நல்லாள் 'ஆகா! என்ன உலகம்? மகளுக்கொரு ஞாயம், மருமகளுக்கொரு ஞாயம். மகள் சிலிப்பர்ப் போட்டு நடப்பது, பந்தாடுவது, ஒண்டியாக பஸ்ஸில் போவது எல்லாம் ஞாயம். மருமகள் வீட்டிலிருந்தபடி பத்திரிகைகளுக்கெழுதுவது அநியாயம். ஆகா! என்ன வசவு திட்டு சகிக்க முடியவில்லேயே!' என்று கண்ணீர் பெருக்கினுள். பிறகு சிறிது மனம் தெளிந்து இதற்கு இப்பொழுதே ஒரு பரிகாரம் தேடிக் கொள்ள வேண்டுமென்று நினைத்து, கொஞ்சம் தைரியத்துடன் வாயிலே யடைந்து, யாவரையும் பொதுவாக நோக்கி, 'அம்மாமார்களே! இன்றையதினம் அத்தை அவர்கள் சொல்லியவற்றையெல்லாம் கேட்டேன். இதுவரையில் அத்தைக்கு என்ன அபசாரம் பட்டேன்? ஏன் என்மேல் கோபமாகயிருக்கிறுர் என்பது தெரியாமல் என்ன பரிகாரம் செய்தும் இவர்கள் கோபம் தணியவில்லே. அன்றையதினம் நான் பதிலுரைத்ததற்காகக் கோபமாய் இருப்பதாக இப்பொழுதே அறிந்தேன். இங்கு நீங்களிவ்வளவு பெயர்களும் கூடியிருக்கிறீர்கள். நான் அன்று அத்தைக்கு உரைத்த பதிலேயும் உங்களுக்குத் தெரிவிக்கிறேன். தப்பிதமாக இருந்தால் நீங்கள் யாவரும் யோசனை செய்து எனக்கு என்ன தண்டனை விதிக்கினும் பெற்றுக் கொள்கிறேன்.

'நான் குடும்பங்களிலுள்ள விஷயங்களை வெளியிட்டு அதனுல் பிறருக்கு நம்குடும்பத்தின் மேல் மதிப்பில்லாமல் செய்யக்கூடியவளல்ல. ஒரு குடித்தன மென்றுல் ஆயிரமிருக்கும் என்றிருக்கும் தன்மைவாய்ந்தவள். அத்தை அவர்கள் யாவற்றையும் வெளியிட்டு விட்டதால் நான் இனி என் நியாயத்தைச் சொல்லிக்கொள்ளாவிடில் என் மேல் பெரிய பழி சாருமென்று

நினைத்துக் கூறுகிறேன்.' இதற்குள் சேச்சிப் பாட்டிக்கு அளவற்ற கோபம் பொங்கலாயிற்று காலை நீட்டிக் கையை ஆட்டி "ஏண்டி! தடிச்சி! வாசலுக்கும் லச்சர் (லெக்சர்) செய்ய வந்தூட்டயோ? மானங்கெட்டவளே! அன்னிக்கு உன் ஆம்படையான் யிருந்தான் நீ ஆடுவதைப் பார்ப்பதற்கு. இன்னிக்கு ஒத்தருமில்லை. போ உள்ளே" என்று அதட்டினுள். அதற்குள் பத்தாசி என்பவள் சுந்தராங்கிமேல் சிறிது இரக்கம்கொண்டு "ஏன் பாட்டீ! வீணுகக் கத்தரே! இவதான் என்ன சொல்கிருள் பார்ப்பமே? இவ அன்னிக்கு உமக்கு என்ன பதில் சொன்னுள் என்பதை நாங்களும் அறிந்துகொள்கிரேமே" என்று கிழவியை சமாதானம் செய்தாள். சேச்சி ஒன்றும் சொல்லமுடியாமல் மருமகளைச் சுட்டுவிடுவாள் போல் ஒரு பார்வை பார்த்து விட்டு வாயை மூடிக்கொண்டாள்.

இந்த அமளி சிறிது அடங்கியவுடன், சுந்தராங்கி தன்னை சேச்சி இவ்வளவு பெயர்களெதிரிலும் செய்யும் அவமானங்களையும் பொறுத்துக்கொண்டு, இப்பொழுதே தன் நியாயத்தை நிலைப் படுத்திக்கொள்ள நினைத்து இரு கண்களினும் வழிந்தோடும் கண்ணீருடன் யாவரையும் பார்த்து "அம்மா! நான் அன்றைய தினம் சொன்ன பதிலைக் கேளுங்கள். "அத்தே! நான் உங்களுக்குத் தெரியாமல் பத்திரிகைகளுக்கு எழுதியதற்கு மன்னிக்கவேணும். அதனுல் ஸ்திரீகளுக்கு மானத் தணிவாவது அவமானமாவது ஒன்றும் கிடையாது. 'சிறியோர் செய்த சிறு பிழை எல்லாம் பெறியோராயின் பொறுப்பது கடனே' என்றபடி தாங்கள் பொறுக்கவேணும்" என்றேன். அதற்கு அத்தை அவர்கள் மிகுந்த கோபத்துடன், "நாங்களெல்லாம் எந்தப் பத்திரிகைக்கு எழுதினேம், என்னவாசித்தோம், எதுக்கெல்லாம் எழுதினேம்? பொம்மனாட்டிக் கட்டைக்கு என்ன தைரியம்! பொம்மனாட்டிக்கு க்காரியம் தெரியவேண்டியது முக்கியம். படிப் பென்னத்திற்கு! பாட்டென்னத்திற்கு? எங்களுக்கெல்லாம் தெரியாத புத்தி யுக்தியும் நீங்களென்ன கண்டுவிட்டீர்கள். இனி நீ புஸ்தகத்தைத் தொட்டால் கையை ஒடித்து விடுவேன்" என்ருர். அதற்கு நான் "அம்மா! முன் காலத்தில் மிகவும் படித்த மாது சிரோமணிகளிருந்தார்கள். நடுவில் படிப்பில்லாமலிருந்தார்களே ஒழிய வேறில்லை. அதனுல் ஒன்றும் குற்றமில்லை" என்றேன். அத்தை அவர்கள் ஒரே பிடிவாதமாக முன் நாளில் ஸ்திரீகள் படித்ததே கிடையாதென்று சாதித்தார்கள். அதற்கு அவர் மருமான் முன்நாளில் ஸ்திரீகள் படித்தவர்களாக யிருந்தார்களென்று ஒரு கதை இவர்களுக்குச் சொன்னுர்கள். அதற்குத்தானிவர் மருமான் என்பேல்பரிந்து பேசினதாகவும் நான் மருந்து இட்டு விட்டதாகவும் குற்றம் சாட்டுகிருர்". இதைக்கேட்ட அங்குள்ள அனேகரும் முன்காலத்தில் படித்த ஸ்திரீகள் கிடையாதென்று நினைப்பவர்களாதலால் சுந்தராங்கியின் புருஷன் தன் அத்தைக்குச் சொன்ன கதையைத்தங்களுக்கும் சொல்லும்படி கேட்டார்கள். சுந்தராங்கியும் அடியிற் வருமாறு கூறலானுள்:—

'முன் ஒரு காலத்தில் காஞ்சீபுரத்தில் தேவதாசி குலத்திலுதித்த மாது ஒருவளிருந்தாள். அவளுக்குத் தன்பேரில் பாக்கள் செய்துகொள்ளவேண்டுமென்று வெகு நாளாக ஆசையாக இருந்தது. அதற்குத் தகுந்த சந்தர்ப்பத்தை எதிர்பார்த்திருந்தாள். இப்படி யிருக்க ஒரு நாள் அவ்வூருக்குக் கம்பர் வருவதாகக் கேழ்விப்பட்டாள். அவரும் இவள் எதிர்பார்த்தபடி வந்து சேர்ந்தார். இவள் அவரை மிக்க வந்தனுதிகள் செய்து தன் இஷ்டத்தை வெளியிட்டாள். அவர் நாலாயிரம் பொன் கொடுப்பின் நாலடியில் ஒரு பா இயற்றித்தருவதாகச்சொன்னுர். இவள் அவரை அழைத்து வந்து, தன்னுடைய திர

வியங்களை எல்லாம் திரட்டிப் பார்த்தாள். எல்லாம் சேர்த்தும் இரண்டாயிரம் பொன்தானிருந்தது. இதை அவரிடம் கொடுத்து இதற்கே நாலடியில் ஒரு பா இயற்றித்தரவேண்டுமென்று மிகவும் கெஞ்சிக் கேட்டுக்கொண்டாள். அவர் அப்படியே செய்வதாகப் பணத்தைப் பெற்றுக்கொண்டு அவளை ஒரு கரி தரச்சொல்லி, அதால் அவள் வீட்டின் வாயிற்சுவரில் 'தண்ணீருங் காவிரியே, தார் வேந்தன் சோழனே, மண்ணாவது சோழமண்டலமே' என்று எழுதிவிட்டு முடிந்து விட்டதாக உத்தரவு பெற்றுக்கொண்டு போய்விட்டார். இவளுக்குத் தமிழில் அதிக பாண்டித்தியமில்லாதபடியால் தன்னைப் பற்றியே ஏதோ எழுதியிருப்பதாக சந்தோஷத்துடனிருந்தாள். கையிலிருந்த பணத்தையெல்லாம் அவரிடம் கொடுத்துவிட்டபடியால், செலவுக்குப் பண வறட்சியுண்டாயிற்று நகை, நாணயம்,காணி, பூமி யாவற்றையும் விற்றுச் சாப்பிட்டாயிற்று. தரித்திரம் வந்து மூண்டு விட்டது. சாப்பாட்டிற்கு மிகவும் கஷ்டமாய்விட்டது. பிறகு யாசகம் செய்து கம்பு பெற்று அதைக் கூழாக்கி அதில் தண்ணீரைவிட்டுச் சாப்பிட்டுக்கொண்டிருந்தாள். இது இப்படியிருக்க ஒரு நாள் ஒரு வயோதிகமாது வெய்யிலால் நடக்க முடியாமல் மேற் கூறிய தேவதாசியின் வாயிற் திண்ணையில் வந்துட்கார்ந்து இருமினாள். உள்ளிருந்த தேவதாசி வாயிலில் அயல் குரலைக் கேட்டு வந்து பார்த்தாள். தேவதாசியை அவ்வயோதிகமாது கெஞ்சலாகப் பார்த்து "அம்மா! மிக்க பசியும் தாகமுமாகயிருக்கிறது. தயைசெய்து ஏதாவது வார்ப்பின் ஆனந்தத்துடன் உண்பேன்" என்றாள். அதைக் கேட்ட தேவதாசிக்கு மிகுந்த இரக்கமுண்டாயிற்று. வறுமையை அனுபவித்தவர்களுக்கல்லவோ அதன் கொடுமை தெரியும். 'ஆகா! நாம் தானம், தருமம் ஒன்றும் செய்யாமல் சேர்த்த பணத்தை நாம் எப்படிச் சேர்த்தோமோ அப்படியே கம்பன் கொள்ளை கொண்டுவிட்டான். இப்பொழுது தருமம் செய்ய எனக்கு மனமிருக்கிறது. ஆனால் கையில் ஒன்றுமில்லை' என்று நினைத்து, 'அம்மா! நான் பரமதரித்திரி. என்னிடம் ஒன்றும் கிடையாது. மூன்று நாள் முன் காய்ச்சிய கூழ் இருக்கிறது தேவளையானல் கொடுக்கிறேன்' என்றாள். இதைக்கேட்ட கிழவி 'அம்மா! இச்சமயம் தாங்கள் எதைக் கொடுக்கினும் அதை அமிருதமாக உண்பேன்' என்றாள். உடனே அம்மாது உள்ளே சென்று அந்தப் பழைய கூழை வார்த்தாள். கிழவியும் அதைப் பரிவுடன் உண்டு, மிக்க இளைப்பாக இருந்தாள். அத்திண்ணையிலேயே படுத்துக் கொண்டாள். அம்மாதும் வீட்டிற்குள் சென்றுவிட்டாள். உடனே அக்கிழவி சற்று படுத்திருந்து விட்டு வெளியிற் செல்ல எழுந்தாள். தற்செயலாக அக்கிழவியின் கண்கள் மேற்சுவற்றை நோக்கின. அங்கு கரியால் எழுதப்பட்டிருந்த பாட்டைப் பார்த்தாள். அது பாதி எழுதியிருந்தது. அதைப் பூர்த்தி செய்ய நினைத்து அவ்விடம் ஏதாவது எழுதும் பொருளிருக்கிறதாவென்று சுற்று முற்றும் பார்த்தாள். வீதியில் காவிக்கற்கள் நிறைய குமிக்கப்பட்டிருந்தன. இதைப் பார்த்தாள் கிழவி. அவளுக்கு மிகவும் ஆனந்த முண்டாயிற்று. உடனே அவள் காவிக்கல்லில் ஒன்றையெடுத்துக் கம்பன் அரையாக எழுதிய பாட்டைப் பூர்த்தி செய்துவிட்டு ஓசைப்படாமல் போய்விட்டாள். தேவதாசிக்கு வர வர தனமும் தானியமும் ஏதேஷ்டமாக விருத்திக்க ஆரம்பித்தன. தனக்கு எதனால் இப்படிப்பட்ட மகா ஐசுவர்யம் உண்டாயிற்று என்று தெரியாமலிருந்தாள். ஒரு நாள் தன் வீட்டைப் பெரிதாகக் கட்ட நினைத்து வாசலில் வந்துட்கார்ந்து எப்படிக் கட்டலாம் என்று ஆலோசனை செய்துகொண்டே மேலே நிமிர்ந்து பார்த்தாள். உடனே அவள் திருஷ்டி கம்பன் எழுதிய பாட்டின்மேல்

பட்டது. கம்பன் கரியிலெழுதியிருந்ததற்குப் பக்கத்தில் காவியில் ஏதோ எழுதியிருந்ததைப் பார்க்கலானாள். அதில் அவன் பாட்டைப் பூர்த்தி செய்யப்பட்டிருந்தது. 'கம்பன் நம்மைப்பற்றி ஒன்றும் சொல்லாமல் ஏமாற்றிவிட்டான் பின் யார் நம்மைப்பற்றிப் பின்னால் முடித்து இருக்கிறார்கள்?' என்று யோசித்தாள். அவள் மனதில் பளீரென்று ஞாபகமுண்டாயிற்று. 'ஆகா! நாம் ஒரு நாள் கஞ்சிவார்த்தோமே, அக்கிழவி தான் இதை எழுதி யிருக்கவேண்டும். அக்கிழவி யாராக யிருக்கலாம்?' என்று வேதனைப்பட்டுக் கொண்டிருந்தாள். அச்சமயத்தில் வீதியில் ஒரு கிழவர் போய்க்கொண்டிருந்தார். அவர் இந்த தேவதாசிக்கு ரொம்ப சிநேகர். உடனே அத் தேவதாசி அவரைக் கூப்பிட்டாள். அவரும் வந்து 'அம்மா! சிலம்பி! உன் சுக க்ஷேமமெப்படி?' என்றார். இவளும் தன் சரிதையை அவருக்குச் சொல்லி அக்கிழவி யாராகவிருக்கலாமென்றாள். அக்கிழவர் அவளைப் பார்த்து 'நீ அப் பாடலைக் காண்பித்தால் யார் செய்ததென்று சொல்வேன்' என்றார். உடனே அவள் 'ஐயா! இச்சுவற்றைப் பாருங்கள். அதிலெழுதியிருக்கிறது' என்று அவருக்குக் காண்பித்தாள். அதில் அடியில்வருமாறு எழுதியிருந்தது:—

"தண்ணீருங் காவிரியே
தார்வேந்தன் சோழனே
மண்ணாவதும் சோழமண்டலமே
—பெண்ணாவாள்
அம்பொற் சிலம்பி
அரவிந்தத் தாளணியும்
செம்பொற் சிலம்பே சிலம்பு

என்று எழுதப்பட்டிருந்தது. உடனே கிழவர் 'அம்மா! இதில் மேல் அடி ஒன்றரையும் கம்பனுடையது. கீழடிகள் ஔவை யென்னும் மாதர்க்கரசியுடையது. ஆகையால் உன் வீட்டில் கூழ்குடித்தவள் ஔவையாராகத்தானிருக்கவேண்டும். நீ என்ன பாக்கியம் செய்தாயோ அவ்வம்மைக்கு கூழ்வார்க்க?' என்று சொல்லிப் போய்விட்டார். சிலம்பியும் அதுமுதல் மிகவும் சௌக்கியமாய் வாழ்ந்து வந்தாள்.

'இதைத்தானம்மா இவர்கள் மருமகன் சொன்னார். ஔவையாருக்குப் படித்ததினால் ஏதாவது குறை நேர்ந்ததா? அவர் கீர்த்தியை இன்னமும் நாம் சொல்லிக்கொண்டிருக்கிறோம். 'கற்றோருக்குச் சென்ற விடமெல்லாம் சிறப்பு.' இதனால் அவர்களுக்கு இழிவாவது பழிப்பாவது நேர்ந்ததா? வீணாக ஊக்கமுடைய ஸ்திரீ ஜாதிகளைத் தூற்றி, வீணாக அவர்கள் மனோசக்தி, ஊக்கம், அறிவு யாவற்றையும் இழந்துவிடச் செய்கிறார்கள். இந்த மாதிரி நம் இனத்திற்குள் சச்சரவு இருக்கும் வரையில் நம் இந்து மகா சங்கம் சிறப்பையும் கீர்த்தியையும் ஒரு நாளும் அடையாது. நான் ஜனங்களுக்கு பயப்படவில்லை. என் மனசாட்சிக்கு விரோதமான காரியத்தை நான் செய்யவே மாட்டேன். "மடியில் கனமிருந்தாலல்லவா வழியிற் பயம்." என் நியாயத்தைப் பிறர் சொல்லாதபடியால் நானே உரைக்க நேர்ந்தது' என்று மிக்க இரக்கம் கொடுக்கும்படியாக உரைத்தாள்.

இவள் சொல்வதைக் கேட்ட அங்கிருந்த மாதர்கள் யாவர் மனதிலும் சுந்தராங்கி சொல்வது மிக்க நியாயமாகப்பட்டது. அவர்கள் மனதில் கிழவியின் கபவஞ்சகம் நன்றாக விளங்கிவிட்டது. அவர்கள் சுந்தராங்கியைத் தேற்றி 'அம்மா! நீ வருத்தப்படாதே. உனக்கு இதனால் ஒரு பழிப்பும் ஏற்படாது. இவ்வளவு நாள் இக்கிழவி ரொம்பவும் நல்லவளென்று நினைத்திருந்தோம். இன்றைபதினம் இவள் குணம் வெட்டவெளிச்சமாய் விட்டது. இனி நாங்களும் வம்பு தும்புக்குப் போகமாட்டோம். நேரமாய்விட்டது. போய்வருகிறோம்' என்று எல்லோரும் போய்விட்டார்கள்.

சுந்தராங்கி தான் எதிர்பார்த்ததற்குமேல் ஜய மடைந்ததாக ஆனந்த மடைந்தாள். சேச்சிப்பாட்டி 'என் எதிரிலேயே பாக்கிப் பேர்கள் என்னை ஏசியதால் பழிவாங்குகிறேன். நாளைக்கு யாராவது என் வீட்டு வாசற்படி ஏறட்டும், காலை முறித்து விடுகிறேன்!' என்றும், 'மழமழ வென்று சன்ன காரையிட்ட திண்ணையில் குறு குறு என்று உட்கார இடங்கொடுத்தால் கொழுப்பேறுமலென்ன செய்யும்? இனி இவர்களை விட்டேனு' என்றும் கர்ச்சித்து விட்டு ஓர் மூலையில் முடங்கினுள்.

சுபம்!

# நமது பெண்மக்கள் நிலை.

(ஸ்ரீமான் மயிலை இரத்தினசபாபதி முதலியார்)

பண்டை பாரதநாடு சுதந்தரவாழ்வை அடைய வேண்டுமென்று அரிய பெரிய காரியங்களைச் செய்து வருபவர்கள் பலரும் நமது தேசத்துப் பெண்மக்கள் நிலையை அறியவேண்டியது அவசியமாகும். ஒரு தேசத்துப் பெண்மக்கள் எந்நிலையி லிருக்கிறார்களோ அந்நிலையிலேயே தேசமும் இருக்கும் என்பது அரசியல் நிபுணர்களின் முடிவான கொள்கை. நமது நாட்டுப் பண்டை நூல் ஆராய்ச்சியால் பெண்மக்கள் நிலையை நன்கு உணரலாம். பெண்மக்கள் பண்டைக்காலத்தில் பலவழியிலும் மேல் நிலையை யடைந்திருந்தார்களென்பதில் சிறிதும் ஐயமில்லை. அவர்களை அத்தகைய உயர்ந்த நிலைக்குக் கொண்டுவந்தது அவர்களது கற்பொழுக்கமேயாகும்.

பண்டைக் காலத்துப் பெண்மக்கள் நிலையை உள்ளபடி உணர்ந்தவர்கள் இக்காலத்து நிலையைப் பற்றி விசனிக்காமலிருக்க முடியாது. மேல் நாட்டு வழக்க ஒழுக்கங்களைப் பெற்ற நாளாக நமது நாட்டு ஒழுக்கமுறைகள் குன்றலாயின. மேல்நாட்டுக் கல்வியைப் பயின்று வருவதால், நம்மவர்கள் மேல் நாட்டு நாகரிகத்தில் நாட்டம் கொள்கிறார்கள். மேல் நாட்டவர்களின் அறிவு வெளிப்பொருள்களாகிய பூத பௌதிக ஆராய்ச்சியேயாகும். மேல் நாட்டில் நாளுக்கு நாள் கண்டுபிடிக்கும், நச்சுக்காற்றுகளையும் கொலைக் கருவிகளையும் வெடிமருந்துகளையும் கவனிக்கில் மேல் நாட்டில் இன்னும் ஆத்மஞான உணர்ச்சி உண்டாகவில்லை யென்று சொல்வது மிகையாகாது. எந்த நாட்டில் ஆத்மஞான உணர்ச்சி முதிர்ச்சி பெறவில்லையோ அந்நாடு அநாகரிக நாடேயாகும். உண்மை நாகரிகம் இன்னதென்பதை அறியாத மேல் நாட்டவர் கூட்டுறவால் ஆண்மக்கள் நிலையும் பெண்மக்கள் நிலையும் மாறியிருக்கின்றன.

நமது பெண்மக்களில் பலர் மேல் நாட்டுப் பெண்மக்களைப் போல் தாங்களும் ஆகவேண்டுமென்று அவர்களின் நடை, உடை, பாவனைகளை ஒழுகிவருகின்றார்கள். நம்முடைய நாட்டு வழக்க ஒழுக்கங்களுக்கு மாறுபடாத சில மேல் நாட்டு ஒழுக்கங்களை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்கிற பெண்மக்கள் பலருண்டு. நம்முடைய நாட்டு ஒழுக்கம் முறைகளையே பின்பற்றவேண்டுமென்று ஒழுகிவருபவர்கள் பலருண்டு.

பெண்மக்களுக்குரிய அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்னும் அரிய குணங்களை மறுத்து, பொதுக் காரியங்களிலும் சட்டசபைகளிலும் நிருவாகசபைகளிலும் அங்கத்தவர்களாக வேண்டுமென்றும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் வேற்றுமையில்லை யென்றும் சொல்லும் கூட்டம் நாட்டில் பல பாகங்களில் பரவிவருகின்றது.

இவ்வித அந்தஸ்துகளுக்கு ஸ்திரீ சமூகத்தில் ஒரு சிலரே தகுதியல்லாது பொது நன்மை யென்பவைகளைக் கனவிலும் அறியாத சிலர் பக்க சிபார்சுகளாலும் செல்வாக்காலும் இத்தகைய பதவிகளைக் கைப்பற்றுதலால் யாது நன்மை விளையப்போகிற தென்பது நன்கு விளங்கவில்லை.

மேல் நாட்டவர் வழக்க ஒழுக்கங்களில் நல்லவைகளைக் கைக்கொண்டு, சட்டசபைக்குச் செல்ல முயலாமல், கல்வி, அறிவு, நன்னடை இவைகளைப் பண்படுத்தி, தெரியாத காரியங்களில் தலையிட்டுத் தவிக்காமல், ஆடவர்களுக்கு ஆதரவாய், உற்சாகத்தையும் உள்ளக் களிப்பையும் ஊக்கத்தையும் ஊட்டிவரும் தேவிமார்கள் பலர் நம் தேசத்திலுண்டு. கல்வியின்றி, அறிவின்றி, எவ்வித உணர்ச்சியுமின்றி, பிறர் சொன்னதைச் சொல்லிக்கொண்டு காலங் கழித்து, ஆடவர்களின் வேலைக்காரிகளென்று தங்களை நினைத்துக்கொண்டிருக்கும் பெண்மக்கள் பலரிருக்கின்றனர்.

நாம் பிறந்த நாடு இந்தியா என்பதை மறந்து, மேல் நாட்டுக் கல்வியினாலும் நாகரிகத்தினாலும் கட்டுண்டு, கண்டதே காட்சி, கொண்டதே கோலமென்று எண்ணிப் பலர் நடந்து வருகின்றார்கள். இவர்களைப் பெண்ணுலகம் பின்பற்றுமாயின், நம் நாட்டுக் கற்பொழுக்கம் அறவே ஒழிந்து, புருஷபக்தி பறந்து போய்விடுமென்பது ஆப்த வாக்கியம். மேல் நாட்டு நாகரிகத்தை நம் நாட்டுப் பெண்மக்கள் மேற்கொள்ளவேண்டுமென்று சொல்லும் பெண்மக்களை அநாதரவு செய்யவேண்டுவது நம்முடைய செயற்கரிய கடனாகும்.

மேல் நாட்டு வழக்க ஒழுக்கங்களில் கொள்ளற்பாலனவற்றைக் கொண்டும், தள்ள வேண்டியவைகளைத் தள்ளியும், தம் வீடுகளை இந்து வீடுகளைப் போலப் பாதுகாத்தும், தன் பர்த்தா தலையிட்டுள்ள தேசகாரியங்களில் ஊக்கத்தை ஊட்டிப் பெருந்துணை செய்யும் பெண்மக்களால் நம் நாடு பண்டைப் பெருமையை அடையவேண்டும். இவர்களால் தான் பெண்ணுலகம் திருந்தவேண்டும். இவர்களால் கல்வி அறிவு இல்லாத ஏழை மாதர்களைச் சீர் திருத்தலாம்.

நமது நாட்டில் எண்ணில்லாக் கைம்பெண்கள் இருக்கின்றார்கள். இவர்களில் பலர் வீண் காலத்தை கழித்து வருகின்றார்கள். புருஷனை யிழந்தவர்கள் பல பரோபகாரமான காரியங்களைச் செய்யலாம். சோம்பலால் வழக்கிட்டு வீண்காலம் போக்குவதைக் காட்டிலும், விதவைகளுக்கு தேசபக்தியை உண்டாக்கி, கைத்தொழில்களைப்போதித்தால் அதனால் அவர்கள் பிறர் உதவியை நாடாது உலகில் வாழ்ந்து வரலாகும். எண்ணிலா விதவைகள் வீணேகாலங் கழித்து மாண்டு போகின்றார்கள். பெண்மக்களின் முன்னேற்றத்தை நாடி, விதவைகளுக்கு தேசாபிமானத்தை உண்டாக்கினதுமில்லை, கைத்தொழில்களைக் கற்பித்ததுமில்லை. ஆடவர்களின் கூட்டுறவின்றி விதவைகளாகவே ஒரு கழகம் கண்டு, அக்கழக வாயிலாக, தேசபக்தியையும் கைத்தொழில்களையும் கற்பித்தால் நாட்டுக்கு நலனுண்டாகும்.

ஆங்கிலம் பயின்ற சில பெண்மக்கள், மேல் நாட்டு அநாகரிகத்தைக் கொண்டுவந்து கற்பொழுக்கம் பெரிதும் நிரம்பிய நம் பெண்மக்களிடையில் நுழைக்க முயல்வது அறியாமையும் அறக்கொடிய பெரும் பாபமுமாகும். இத்தகைய பெண் கூட்டத்தவர்களுக்குப் பெருந்துணை செய்யும் ஆண்மக்களை என்னென்று சொல்வது! கல்வி, அறிவு, உயர் சத்தியகடை உடைய ஆடவர்கள் நம் நாட்டுப் பெண் மக்களின் பண்டைப் பெருமையையும் தற்கால சிறுமையையும் உள்ளபடி உணர்ந்து அவர்கள் முன்னேற்றமடையப் பாடுபடுவது பெரிய கடனாகும்.

# சிந்தாதேவி.

## ஓர் சிறு கதை.

(ஸ்ரீமான் B. S. குமாரஸ்வாமி பிள்ளை.)

சிந்தாதேவியும் இராமமூர்த்தியும் விசுவநாதனும் எப்பொழுதும் ஒன்றாய் விளையாடித் திரிவார்கள். அவர்கள் பத்துப் பன்னிரண்டு வயதானவர்கள் அவர்கள் வசித்த இடம் ஒரு சிறு கிராமம். ஊருக்குப் பின்பக்கம் ஒரு பெரிய மலைச்சாரல்; முன்பக்கம் சமுத்திரக்கரை; மலைச்சாரல் 4-மைலுக்கப்பால் இருக்கலாம்; சமுத்திரத்திற்கோ 1-மைல் தூரங்கூட நடந்து போக வேண்டாம். சிந்தாதேவியின் தாய் தந்தையர்கள் ஏழைகளாயினும் அவள் அழகிலும் குணத்திலும் மிகவும் சிறந்தவள். இராமமூர்த்தி நல்ல திட சரீர முள்ளவன்; கடலிலும் வனத்திலும் மலையிலும் குகையிலும் அஞ்சாமல் அலைந்து திரிவான்; பாலியத்திலேயே சமுத்திரத்தில் நீந்திக் கரை யேறுவான். விசுவநாதன் சற்றே இளைத்த உடம்பை யுடையவன்; கல்வியில் தேர்ந்தவன்; எப்பொழுதும் புத்தகமும் கையுமாகவே இருப்பான். இராமமூர்த்தி தன்னை வந்து அழைத்தால் மட்டுமே வெளியே இறங்குவான். பள்ளிக்கூடத்திற்கும் இம்மூவரும் சேர்ந்தே போவார்கள். விளையாட்டிற்குப் போகும் பொழுதும் அவ்வாறே கையைக் கோர்த்துக் கொண்டலைவார்கள். மற்றக் குழந்தைகள் இவர்களைக் கண்டு என்ன பேசியபோதிலும் இவர்கள் அதை கவனிப்பதில்லை; அனேகமாகத் தினசரி சமுத்திரக்கரைக்கே போவார்கள்; மீன் பிடிக்கும் செம்படவர்கள் உபயோகிக்கின்ற படகுகளிலோ கட்டுமரத்திலோ ஏறி இரண்டு மூன்று மைல் தூரம் சமுத்திரத்தில் சென்று இருட்டுவதற்குள் திரும்புவார்கள். அச்சமயங்களில் விசுவநாதனுக்குச் சற்றே அச்சமிருந்தாலும் இராமமூர்த்தி மிகுந்த மனோதைரியத்துடன் "படகு கவிழ்ந்தாலும் நான் உங்களிருவரையும் என் புஜபல பராக்கிரமத்தால் நீந்திக் கரை சேர்ப்பேன்" என்பான். பள்ளிக்கூடம் விடுமுறை நாட்களில் கட்டமுது கட்டிக் கொண்டு மலைப்பக்கம் போவார்கள். அங்கு அனேக குகைகள் உண்டு. அவைகளில் ஒன்றைப் பெருக்கி சுத்தி பண்ணிப் பெரிய கற்களின்மேல் உட்காருவார்கள். மரங்களும் கொடிகளும் குத்துச் செடிகளும் அடர்ந்த பக்கங்களில் பகல் முழுவதும் எங்கும் ஓடி விளையாடுவார்கள். இராமமூர்த்தி பெரிய மரங்களில் ஏறிக் கிளைகளின் வழியாய் மற்ற மரங்களுக்கு தாவிச் சாடுவான். மரக்கனிகளையும் வேறு கனிகளையும் மரத்தடியில் அண்ணார்ந்துபார்த்து நிற்கும் விசுவநாதனுக்கும் சிந்தாதேவிக்கும் பறித்து எறிவான். கீழிறங்கியவுடன் பல கிழங்கு வகைகளைத் தோண்டி யெடுத்து அவைகளை அக்கினி மூட்டிச் சுட்டு இவர்கள் இருவருக்கும் அன்பாய்க் கொடுப்பான். விசுவநாதனோ இயற்கை யழகையும் வனத்தின் அமைப்பையும் காவின் புஷ்பங்களையும் மாலைப்பொழுதையும் பார்த்துப் பெரு மகிழ்ச்சி யடைந்து அவ்வதிசயங்களை இனிய வசனங்களால் தன் நண்பருக்குத் தெரிவிப்பான். அப்பொழுது சிந்தாதேவி இராமமூர்த்தியின் மனோதைரியத்தையும் விசுவநாதனுடைய மௌனமான ஆலோசனையையும் கண்டு மனமுவந்திருப்பாள்; ஆயினும் இவ்விருவரிலும் யார் சிறியர் என்று அவளுக்குச் சொல்ல முடியாது இரண்டு நண்பர்களும் அவளுக்கு வேண்டியவர்களே. இருவரின் நட்பும் இன்றியமையாததே; சரீரபலமும் அறிவின் அபிவிருத்தியும் அவசிய மென்றே எண்ணினாள்.

நாலைந்து பிராயந்தொட்டுப் பன்னிரு பிராயம் வரையும் ஒரு நாளேனும் விட்டுப் பிரியாத இவரது நட்பும் வளர்ந்து வந்தது.

கதிரவன் நடுவானம் எய்தினவுடன் மேற்கூறிய குகையிற் புகுந்து கட்டமுதைச் சாப்பிட்டு விட்டுச் சமீபத்திலுள்ள சுனையில் தாக விடாய் தீர்த்து விட்டு குகையின் முன்பக்கத்தில் மணலை விரித்து உட்கார்ந்திருப்பார்கள். சில சமயங்களில் இரு நண்பர்களும் அப்பெண்ணைப் பார்த்து "நாங்கள் இருவரும் உன்னை உயிரைப்போல் பாதுகாக்கிறோம். உன் காலிற் பட்ட முள் எங்கள் கண்களிற் பட்டதாக உணர்கின்றோம். உனக்கு வேண்டியவற்றை எங்கிருந்தும் கொணர்கின்றோம். ஆனால் யார் மீது நீ அதிக அன்பு கொண்டிருக்கின்றாய்?" என்று விளையாட்டாய்ப் பேசுவதுண்டு சில சமயங்களில் பதிற்பேசாமல் மௌனமாய் இருப்பாள். சில சமயங்களில் குணமே சிறந்ததென்றும் சரீர பலமே சிறந்ததென்றும் கூறுவாள். ஒரு நாள் "நீங்கள் இருவரும் ஒருவராயிருந்தால் என்னைப் போன்ற பாக்கியசாலி யார்! இருவரும் எனக்கு வேண்டியவரே; யாரை வேண்டாமென்று தள்ளுவேன்" என்று கூறியதைக் கேட்டு இரண்டு பாலிய சிநேகிதர்களும் குலுங்க நகைத்தார்கள்.

இராமமூர்த்தி தந்தை யற்றவன். சொற்ப காலட்சேபத்திற்கு வேண்டும் பொருள் தேடி வைத்துக் காலஞ்சென்ற ஒரு மாலுமியே அவனுடைய பிதா. அடிக்கடி கப்பலேறி அயலூர் சென்று பொருள் சம்பாதித்துக் கொணர்ந்து இரண்டு மூன்று மாதங்கள் தன் ஊரில் தாமதித்துவிட்டுப் பின்னும் வேறு வியாபாரக் கப்பல்களிற் சென்று சொற்ப பொருள் சம்பாதித்துக் கொணர்வார். இராமமூர்த்தியின் தாய் கொணர்ந்த பொருளை அதிக செட்டுத்தனமாகச் செலவுசெய்து அதில் மீதம் வைத்திருப்பாள். ஒரே குழந்தை இராமமூர்த்தியே அவர்களுக்குண்டு. அவனுக்கிளைய சகோதரி யொருவள் பாலிய வயதிலேயே இறந்து போய்விட்டதாகத் தாய் தந்தையர் கூறி அவனுக்குத் தெரியும்.

விசுவநாதனுடைய தகப்பனார் பரம்பரையாக ஒரு பெருங் குடும்பத்தைச் சேர்ந்து பிரபுப்பட்டம் பெற்றவர். அவ்வூருக்கும் அவர் ஒரு கௌரவ மாஜிஸ்டிரேட்டு ஆவர். தன் குடும்ப காரியங்கள்பற்றியும் அரசாங்கக் காரியங்கள்பற்றியும் சமுதாய முன்னேற்றம் நாடியும் தன் ஊருக்கப்பால் இருகாத தூரமுள்ள மாகாணத் தலைநகருக்குச் செல்வார். இரண்டு மூன்று நாட்கள் அவ்விடத்தில் தாமதித்து ஆகவேண்டிய காரியங்களை நுட்ப சாமர்த்தியத்துடன் முடிவுசெய்துகொண்டு தனது இல்லத்திற்கு வேண்டிய சாமான்களும் தயார் செய்துகொண்டு வருவார். தன்னுடைய அரண்மனைக்கு வந்தவுடன் தானே சிந்தாதேவி, இராமமூர்த்தி, விசுவநாதன் இவர்களுக்கு அணி ஆடைகளும், புத்தகங்களும், விளையாட்டுச் சாமான்களும் வாங்கிக்கொணர்ந்தவைகளைக் கொடுப்பார். அவர்கள் அவைகளைப் பெற்று ஆனந்தமடைவார்கள்.

சிந்தாதேவி தந்தையில்லாதவள். அவள் தாய் கற்பகவல்லிக்குப் புருஷன் இறந்த நிமித்தமாக மரண விகிதக் கம்பெனியிலிருந்து 20,000 ரூபாய் கிடைத்ததுண்டு. ஒரு சிறு வீடும் அதின் பின்பக்கமாக சிறு தோட்டமும் உண்டாயிருந்தன. பழைய வேலைக்காரப் பெண் ஒருத்தியும் உண்டு. குழந்தை மூன்று வயதுப் பிராயத்திலேயே தந்தையை இழந்து விட்டாலும், கற்பகவல்லி மிகச் செட்டுத்தனமாக இல்லறக் காரியங்களைப் பார்த்துக்கொண்டு குழந்தைக்கும் தற்கால நாகரிகத்தின்படி நகை நட்டுகள், அணி ஆடைகள் தயார் செய்து, நல்ல

விதமான கல்வி அறிவையும் புகட்டி வந்தாள். இராமமூர்த்தி, விசுவநாதன் இவர்களும் இவர்கள் வீட்டார்களும் மிகுந்த உத்தமர்களென்றறிந்து அவர்களுடைய வீட்டிற்கு மட்டுமே சிந்தாதேவி போய்வர அநுமதி பெற்றிருந்தாள்.

வங்காளக்குடாக்கடலின் சமீபமுண்டாயிருந்த தில்லையம்பதி யென்ற நகரமே இவர்கள் வசித்து வந்த ஊர். சமீபமுள்ள தலைநகர் 'விஞ்சைநகரம்' எனப் பெயருடையது. இவர்கள் சமீபத்திலிருந்த மலையைச் சிறுமேரு என்பார்கள். இப்பெயர்கள் இக்காலத்து மாறுபட்டிருக்கலாம். அன்றி வேறு புனைப் பெயர்களால் அழைக்கப்படலாம். அதைப் பற்றி நாம் கவனிக்க வேண்டியதில்லை.

சிந்தாதேவி அழகிலும் குணத்திலும் அறிவிலும் அபிவிருத்தியடைந்து வருந்தோறும் இராமமூர்த்திக்கும் விசுவநாதனுக்கும் அவள் பேரிலுள்ள உண்மையான குற்றமற்ற காதல் வளர்ந்தோங்கி வந்தது. இருவரும் ஆப்த நண்பர்களாயினும் இக்காரிய மொன்றில் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுப்பதாக வில்லை. "நாம் இக்காரியத்தில் நீ பெரியவன் நான் தகுதியுடையவன், உன்னை விரும்புவாள், என்னை மறக்கமாட்டாள் என ஒருவருக்கொருவர் சண்டை செய்வதில் பிரயோசன மில்லை. எவ்விதத்திலும் நம்மிருவரில் ஒருவரையே அவள் மணந்து கொள்ள முடியும்" என்று விளையாட்டுச் சண்டை போட்டுக் கொள்வார்கள். ஆனால் ஒருவரிடமாவது தன் உள்ளன்பை, மனதிலுள்ள எண்ணத்தை, அவள் தெரியப்படுத்தவில்லை. இவ்வாறு வருடங்கள் இரண்டு மூன்று கடந்தன. சிந்தாதேவியும் தகுந்த பக்குவமடைந்து வீட்டை விட்டு வெளியே போகப்படாதென்ற கட்டளைக்குட்பட்டாள். புத்தகங்கள் வாசிப்பதிலும் சிறு தையல் வேலைகள் பார்ப்பதிலும் தன் வீட்டிற்குப் பின்பக்கமுள்ள பூந்தோட்டம், காய்கனித்தோட்டம் இவைகளைச் சீர்படுத்துவதிலும் தனது நேரத்தைச் செலவு செய்து வந்தாள். நண்பர்களிருவரும் சேர்ந்தோ தனியாகவோ சில வேளைகளில் அவள் வீட்டிற்குச் சென்றால் சொற்ப நேரமே அவர்களுடன் பேசிக் கொண்டிருப்பாள். அவர்கள் அகன்ற பின்னரே, தன் தாயாரிடம் அவர்களுடைய குணம் குற்றங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருப்பாள்.

"நாமொன்று நினைக்க தெய்வமொன்று நினைக்கும்" என்ற உலகவழக்கின்படி நாம் மேற்கூறிய குடும்பங்களில் எதிர்பாராத சில சம்பவங்கள் ஏற்பட்டன. விசுவநாதனுடைய தந்தையார் வியாதியால் பீடிக்கப்பட்டு ஒரு மாதம் வரையும் படுக்கையிலிருந்து எவ்வித சிகிச்சை செய்தும் குணம் அடையாமல் மண்ணுலகத்தைத் துறந்து விண்ணுலகெய்தினார். குடும்பப் பொறுப்பு முழுமையும் விசுவநாதனைத் தாக்கியது. தந்தையார் மிகுந்த நுட்ப அறிவு மிகுந்தவராதல்பற்றித் தம் சொத்துக்களின் வரவு செலவு திட்டங்களையும் அரசாங்கக் கடமைகளையும் சமுதாயச் சீர்திருத்தங்களையும் மிகவும் ஒழுங்காக நடத்திவந்தார். விசுவநாதனுக்கோ கண்ணைக் கட்டி நடுக்காட்டில் விட்டாற் போலத் திகைத்துத் தடுமாறி ஆலோசனை செய்யவேண்டியதாயிற்று. தன் அன்னையின் அநுபவத்தையும் தந்தையின் சினேகிதர்களின் ஆலோசனையையும், சில சமயம் இராமமூர்த்தியின் புத்திமதியையும், பின்பற்றித் தன் கடமைகளைச் செலுத்திக் கொண்டிருந்தான். தான் செய்கின்றவைகள் தன் மனோரம்மியத்திற்கு முற்றும் பொருந்தவில்லை. தன் அன்னையோ, இல்லற காரியங்களின் மேன்பார்வைக்கே சக்திகுன்றியும்

மிகுந்த மனக்கவலையுடனும் காணப்பட்டாள். அவளைக் கண்டால் கல்லும் மிகவும் கரைந் துருகு மென்றே கூறலாம். ஆனதால் விசுவ நாதன் தனது இல்லற வாழ்க்கைக்கு இணை வேண்டு மென்ற ஆவசியத்தை உணர்ந்தான். இராமமூர்த்திக்கும் துன்பம் நிகழாதிருக்க வில்லை. விசுவநாதன் தந்தையை யிழக்க இராம மூர்த்தி தாயை யிழந்தான். தனது மணவாளனை ஏழு வருஷத்துக்கு முன்தானே இழந்த அம் மாது நாளுக்கு நாள் மெலிந்து வாடி இப்பொ ழுது திடீரென ஒரு நொடிப்பொழுதில் மாய்ந்து விட்டாள். அவளை யிழந்த இராமமூர்த்தி துக்க சாகரத்திலாழ்ந்தனன். கையில் உள்ள சிறு பொருளைச் சிக்கனச் செலவுசெய்து இல்லற காரியங்களை இனி ஒழுங்காக நடத்த யார் உளர் என்ற கவலை அவனை மிகவும் வாட்டியது. கற் பகவல்லி சில நாட்களில் அவனுடைய வீட்டிற் குப் போய் வீட்டைப் பெருக்கிச் சுத்தஞ் செய்து சொற்பப் பணிவிடைகளும் செய்து திரும்புவாள். இனிமேல் கற்பகவல்லியின் வீட்டை உற்றுநோக்குவோமாயின் அவ்வீட் டிற்கு வேண்டும் பொருள்கள் ஒன்று மில்லையா யினும் ஆடவரில்லா அரண்மனை யொப்ப சற்றே வாட்டமுற்றிருந்தது. சிந்தாதேவியும் மெலிவுற்றே காணப்பட்டாள். வழக்கம் போல் சிரித்து விளையாடுவதில்லை. எப்பொழு தும் கவலையுற்றவளாய் ஆலோசனை நிறம்பியவ ளாய் அடிக்கடி பெரு மூச்செறிந்து ‘என்ன செய்வோம்’ எனப் படுத்து நித்திரை போவாள் கற்பகவல்லி இம்மாற்றத்தின் காரணம் தெரி யாமல் திகைத்தாள். மிகவும் இனிய வசனத் தோடு ஒரு நாள் மன்றாடிக் கேட்டபொழுது “சமயம் வரும்பொழுது சொல்வேன். என்னைத் துன்பப்படுத்த வேண்டாம்” என்று சிந்தா தேவி பதில்கூறி அன்னையின் வாயை மூடிவிட் டாள்.

தனது இல்லற காரியங்களைப் பார்த்துத் தனக்கு உணவு அளிக்க ஆளின்றி இராம மூர்த்தி சஞ்சலம் அடைந்துகொண்டிருக்க, விசுவநாதன் தனது ஜோலியின் நெருக்கத்தி னாலும் பல சமயங்களில் தனக்குற்ற உண்மை சொல்வதற்கு இணையொன்றில்லா ததுபற்றியும் இணையிலா அன்றில்போல் ஏங்கி உயிர் வாடினான். ஆகவே நண்பர் இரு வரும் இரவும் பகலும் சிந்தாதேவியை நினை ந்தே அவளன்னியில் தம் வாழ்வு நலம் பெற முடியாதென உன்னுவாராயினர். மிகுந்த ஆலோ சனையுடனும் சாதுரிய வார்த்தையினாலும் நண் பர்களிருவரும் தத்தம் குறைகளையும் அக் குறைகளினின்றும் நீங்கி நலம் பெறவேண்டும் மார்க்கங்களையும் கற்பகவல்லிக்கு எடுத்துக் கூற அவளும் அவர்களது அபிப்பிராயங்களைத் தன் குமாரத்திக்கும் தெரிவித்துவந்தாள். தனது அரண்மனையில் கல்வி செல்வங்களால் ஆக வேண்டும் ஐசுவரியங்கள் யாவும் நிறைந்திருக் கின்றதாகவும் தனது தாயைத் தேற்றவும், தனக்கு இல்லற மேன்பார்வைக்கு யஜமாட்டி யொருத்தியே குறையென்றும் அக்குறையினை நிவர்த்திக்க சிந்தாதேவியே தகுந்த உத்தமி என்றும் விசுவநாதன் கூறினான். தனது தற்கால நிலைமை ஒரு கதியற்ற தென்றும் தன்னைக் காப்பாற்றுவதற்கும் தன் உயிரைப் போற்றுவதற்கும் சிந்தாதேவியினுஞ் சிறந்த கன்னிகை யில்லையென இராமமூர்த்தி கூறி னான். இவர்கள் சொல்வன முற்றும் உண்மை யென உணர்ந்த கற்பகவல்லியும் இன்னபடி செய்வதென்றறியாது ஏக்கமுற்றாள். இருவருக் கும் இரக்கங் கொண்டாள். தாயின் அபிப் பிராயத்தை விரும்பிய சிந்தாதேவிக்கு “அறி விலும் குணத்திலும் நிகரற்ற விசுவநாதனே உனக்கு உத்தமமானவன். இன்றைக்கிருந்து நாளைக்கேகும் நிலையற்ற பொருளை நான் விரும் பவில்லை. என் செல்வமே, உன் அபிப்பிராயம்

என்ன?'' என்று கற்பகவல்லி கூறினள். மூன்று நாள் சென்றபின்தான் தனது அபிப்பிராயம் கூற முடியுமென்று சிந்தாதேவி சிரித்தமுகத்துடன் வீட்டிற்குள் சென்றாள். விசுவநாதனின் தாயாரும் அவனும் தினசரி கற்பகவல்லியை அழைத்துச் சற்றேனும் சந்தேகந்தோன்றாது "எப்போது நல்ல நாள் பார்ப்பது? சிந்துவுக்கும் ஏதாவது தடையுண்டோ? ஏதோ, அம்மா! உங்களுக்குத்தான் சற்றே ஆழ்ந்த யோசனையுண்டு. உங்கள் செல்வக் குமாரத்திக்கு இச்சென்மத்தில் ஜகதீசன் ஒரு குறைவும் வைக்கமாட்டார்'' என்று பேசிக்கொண்டிருந்தார்கள். கற்பகவல்லியின் வீட்டிற்குப் போய் தோட்டத்தையும் வீட்டையும் மிக சுத்தமாகவும் அழகாகவும் வைத்திருக்கும் தன்மையை வியந்து பேசிப் போவார்கள். ஒருநாள் இராமமூர்த்தியும் அவர்கள் வீட்டிற்குச் சென்று தன் நிலைமையினை மிகுந்த இரக்கத்துடன் இனிய வசனங்களால் கூறி "சிந்தாதேவியன்னியில் நான் இவ்வுலகில் உயிர் வாழ்ந்திருப்பதே இயலாத காரியம். தேவிக்கு உகந்தவன் மூர்த்தியே'' என்றுரைத்து, வாடிய முகத்துடன் கண்களில் நீர் சொரிய சிந்தாதேவியை உச்சிமுதல் உள்ளங்கால்வரையும் பார்த்து அவள் அழகினைப் பருகி கற்பகவல்லியை இருகை கூப்பி வணங்கி வீட்டினின்றும் வெளியிலிறங்கிப் போய்விட்டான். இவ்வாறு நாட்கள் பல சென்றன; வாரங்கள் பல கழிந்தன; மாதங்கள் பத்துப் பன்னிரண்டாயின. கடைசியாய் வருடமொன்றும் திகைந்தது.

ஒரு நாள் பொழுது விடிந்தவுடன் சிந்தாதேவி தன் அன்னையையழைத்து "இன்றைக்கு முடிவுக்கு வந்தேன். நான் காலையில் ஸ்னனம் செய்து வீட்டு வேலைகளையும் பார்த்து முடித்தபின் விசுவநாதரையும் அவர் தாயாரையும் இவ்விடம் அழைத்து வருவீர்களாயின்மிகவும் நன்று'' என்றாள். அவள் விருப்பத்திற் கிணங்கி மாலை இரண்டு மணிக்கு உயர்ந்த பீட்டன் வண்டியில் வெகு நேர்த்தியான புதிய உடை தரித்து, தாயும் மகனும் வந்திறங்கினார்கள். எல்லோரும் நாற்காலிகளில் உட்கார்ந்தார்கள். சற்று நேரம் மௌனமாயிருந்தபின் விசுவநாதனின் தாய் சிந்தாதேவியையும் கற்பகவல்லியும் பார்த்து பேச ஆரம்பித்தாள்.

"சிந்து! நீ தான் எங்களை வாவழைத்தாய்! என்ன காரணமோ தெரியவில்லை. எங்களை இவ்விடம் வரவழைத்து விட்டு நீ மௌனமாயிருப்பானேன்? உனக்கு வேண்டியதென்ன?'' என்றாள்.

கற்பகவல்லி:—நானும் இப்பொழுது இதே வார்த்தைகளைத் தான் கூற எண்ணினேன்.

சிந்தாதேவி:—நான் சென்ற ஒரு வருடமாக ஆலோசனை செய்து இப்பொழுது கூறப் போகின்ற முடிவுரையில் கூடுதல் குறைவிருந்தால் மன்னிக்கவேண்டும். நமது மூன்று வீட்டுக் காரியங்களையும் அவ்வீட்டு ஆட்களையும் அவர்களது குணங்களையும் நான் மிகவும் நன்றாய் அறிவேன். எனக்கு இப்பொழுது வயது பதினைந்து; இராமமூர்த்தியின் வயது பதினெட்டு; விசுவநாதரின் வயது பதினேழு. வெகுநாளாக இருவரையும் சகோதரர்களாகவே எண்ணியிருந்தேன். ஆனால் அவர்களின் அன்பு வளர்ந்தோங்கிக் காதலாகிவிட்டது. இன்னும் நான் அவர்களுடைய சகோதரியாகவே இருக்க அவர்கள் அநுமதி கொடுப்பார்களாயின் இன்னும் பலவருடங்கள் விவாகம் மறந்திருப்பேன். ஈசனது அருளால் விசுவநாதருக்கு வேண்டியதொன்றில்லை; அவர் விரும்பும் பொருள்கள் ஒன்றில்லை. இவ்வூரிலும் அயலூர்களிலும் அவருடைய

நட்பையும் அன்பையும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்ற ஆடவர் மகளிர் வெகு பேர்களை யான் அறிவேன். எந்தப் பிரபுவும் சீமாட்டியும் அவர்களுக்குப் பெண் கொடுக்கக் காத்திருக்கின்றார்கள். இஃது உண்மையிலேயே அறிவிலும் ஆலோசனையிலும் நியாய நீதிகள் எடுத்துரைப்பதிலும் சாந்த குணத்திலும் பொறுமையிலும் விசுவநாதர் மிகவும் பெயர் பெற்றவர் என்பதை ஒருவராலும் மறுக்கமுடியாது. அனேக தர்க்க தார்க்கிகங்களை வெகு நுட்பமாய் நிதானித்து முரண்பட்ட இருவகுப்பினர்களும் சமாதானம் அடையுமாறு அவர் கூறுவதான பொறுமையும் புன்னகையும் நிரம்பிய தீர்மானங்களை நான் சிந்தித்து மகிழ்வேன். அவர்களின் தன்மையை அறிந்தவர்களில் என்னைப்போல் ஒருவர் இருப்பார் என்று நான் எண்ணமாட்டேன். ஆனால் என்னைப் பார்க்கிலும் அழகிலும் செல்வத்திலும் குணத்திலும் கல்வியறிவிலும் உயர்ந்த பெண்கள் எத்தனையோ பேர்கள் இருக்கிறார்கள். விசுவநாதருக்கு வாழ்க்கைத் துணைவியாகி அவரது அன்பான புன்னகையை எதிர்பார்த்திருக்கிறார்கள். நான் அவரை மணம் புரிவேனாயின் நான் பாக்கியசாலிதான்; எனக்குப் பெருமையும் மேன்மையும் பெருகிவளரும். ஆனால் அப்பொழுது சுயநலத்தை விரும்புகின்ற பேதையர்களில் ஒருத்தி ஆவேன். சுயநலங்கருதாது இராமமூர்த்தியவர்களின் தற்கால நிலைமையை ஆராய்ந்து பார்க்கும்பொழுது அவர்பேரில் எனக்கு மிகுந்த இரக்கமும் அனுதாபமும் ஏற்படுகிறது. அவருடைய விசேஷ குணங்களை அறிந்தவர்கள் மிகச் சுருக்கம்; வேண்டும் பொருளில்லை; வேண்டிய பொருள் கொடுத்து உதவுவாரில்லை; ஒரு சாதாரண மானுமியின் பையனை மணம்புரிய முன் வருபவர் யார்? அவர்பேரில் நீங்கள் இரக்கங்கொண்டு என்னை அவருக்கு அளிப்பீராயின் நான் உண்மையாய் அவரைக் காப்பாற்றுவேன். இதுவே எனது தாழ்மையான கருத்துரை.

விசுவநாதன்:—உன் மனப்படி நடப்பதே எனக்குச் சித்தம். உன் மனம் ஒரு முடிவெய்தியிருக்க நான் என்ன கூறுவது. இராமமூர்த்திக்கு வேண்டிய பொருள் கொடுத்து வேறொரு பெண்ணை நான் பார்த்து வைத்தபின் நீ என்னைப்பற்றிக் கவனித்தால் போதும்.

விசுவத்தின் தாயார்:—எத்தனையோ பெண் வீட்டார் வந்த போதிலும் உன்னையன்றி வேறோர் பெண்ணை ஏறிட்டும் பார்ப்பதில்லையென்றே அவன் கூறிக்கொண்டிருக்கிறான். நான் சொல்கின்றவைகள் அவன் காதில் ஏறுவதில்லை.

கற்பகவல்லி:—நானும் என்னாலியன்ற மட்டும் வாதாடிக் கொண்டுதானிருக்கிறேன். அம்மா! சிந்து! எனக் கென்னவோ நீ சொல்வதெல்லாம் அவ்வளவு உத்தமமாகத் தோன்றவில்லை. நீ நெடுநாள் வாழவேண்டும் பயிர். குழந்தை குட்டிகளுடன் கடைசிவரையும் காப்பாற்றுவதற்குத் தகுதியானவர் யார்? உன் வாழ்வைக் கெடுக்க நான் எதிர் நிற்கவில்லை.

சிந்து:—இவைகளையெல்லாம் ஒரு வருடமாய் ஆலோசனை செய்த பின்னரே இம்முடிவு எய்தினேன். தாழ்ந்தாலும் உயர்ந்தாலும் என்னைத்தவிர இராமமூர்த்தி வேறொருவரை ஏறிட்டும் பார்க்கமாட்டார்! நான் அவரைக் கைவிட்டால் அவர் மணம் புரியாமலே தன் வாழ்நாளைக் கழித்து விடுவார். இதையறிந்த பின்னரே நான் என் முடிவு கூறினேன்.

விசுவம்:—நானும் உன்னையன்றி வேறொரு இணைதேடச் சொப்பனத்திலும் எண்ணமுடி

பாது. இந்த ஜன்ம பலன் இவ்வளவே; என் இருதயம் முழுமையும் உன் உருவம் அமைந்திருக்க, அதை அவண் நின்றும் அகற்றி விட நான் சமர்த்தனல்லேன். உன் முடிவுரையை, தீர்மானத்தை, அறிந்தபின் சுய நலங்கருதி உன்னை வற்புறுத்தத் துணியேன். விவாகம் புரியாமல் என் வாணுளனைத்தும் வீணாளாய்க் கழிப்பேன். உன்னை இன்றுமுதல் மறந்துவிட என் இதயத்தோடு மன்றுடிப் போர் புரிவேன். பிறர்பால் நாடிய இருதயத்தை பிறர் பொருளை இச்சித்துக் கவர்ந்துகொள்ள விசுவம் துணிவதில்லை. நமது பாலிய சினேகத்தை, நம் முன்னோர்களின் மகத்துவமான உத்தமமான, மிகவும் அபூர்வமான ஆத்ம சினேகத்தை, என்றும் ஞாபகத்தில் வைத்துக் கொண்டு உனக்கு, உன்னைக் கைப்பற்றும் என் நண்பனுக்கு, எப்பொழுதாவது ஆபத்தோ துன்பமோ நேரிடுமாயின், அப்பொழுதானே என் அன்னைக்குத் தெரிவித்தால் நான் எவ்விடமிருந்தாலும் எப்பொருள் வேண்டினும் உதவி ஆதரிப்பேன் என்ற கருத்தை ஒரு நாளும் மறந்து விடாதே!

சிந்து எழுந்து நின்று தன் இருகண்களினின்றும் கண்ணீர் சொரிய "அங்ஙனமே ஆகுக. இதிலும் பெரிய உத்தம சினேகத்தை நான் எங்கே காண்பேன்?" என எல்லோரையும் இருகைகூப்பி வணங்கினாள்.

அவளுடைய சோகத்தை, துன்பத்தைத் தாங்கமுடியாமல் விசுவநாதன் மௌனமாய் வெளியில் வந்துவிட அவன் தாயும் பின்றொடர்ந்தாள். இருவரும் வீடுசேர்ந்தபின், மிகவும் உத்தமியான தாய் தன் மகனுக்குப் பலவாறு நல்லறிவைப் புகட்டி தன்னுடைய அனுபவத்தில் கண்கூடாகப் பார்த்த உண்மைகளை உதாகாணமாய்க் காட்டி "விதியின் பயனை யாவரே வெல்ல வல்லார்? உனக்கோ, அவளுக்கோ, யாருக்கு நன்மையோ? யாருக்கு மேன்மையோ? அங்நிகழ்வினை அறிய நானும் வாழ்ந்திருப்பேனோ?" என்று இனிய மொழி பகர்ந்து மகனைத் தேற்றினாள்.

உ

ஸ்ரீசரஸ்வதி சகாயம்

## சிந்தாமணி வாழ்த்து

("கோமதியப்பன்" பாடியது.)

நேரிசை வெண்பா

(சங்கராபரண இராகத்திற் பாடுக.)

1. ஈசனருள் ஏந்தி நம தேந்திழையர் ஏற்றமுறத்
தேசநலம் பேணுந் திறலினதாய்ப்—பாசமுடன்
சிந்தா மணியென் செழுஞ்சுடரைத் தானளித்தாள்
எந்தாய்ப்பா லம்மாள் இசைந்து

2. வனிதைக் குலதிலக வஞ்சிக் கொடியாம்
புனிதப்பா லம்மாள் புரக்க—இனிதலர்ந்து
செந்தா மரையழகும் செங்கரும்பின் செஞ்சுவையும்
சிந்தா மணிசிந்துஞ் சேர்ந்து

3. பல்லா யிரஞ்சந்தா பல்கியறி வாளருயர்
சொல்லார்ந்து சோபிதமே சூழ்ந்தென்றும்—நல்லார்வம்
தந்தா தரவுற்றுத் தாரணியிற் றான்வாழ்க
சிந்தா மணியே சிறந்து

# வீரமதி.

## (ஸ்ரீமதி S. R. ஜயம்மாள்.)



நம் இந்தியப் பெண்மணிகளுக்குக் கற்பே சிறந்த பூஷணம். ஒரு பெண் எவ்வளவு செல்வமுடையவளாக இருந்தாலும், எவ்வளவு அழகு வாய்ந்தவளாக இருந்தாலும், அவள் தன் கற்பை இழந்தவளாக இருந்தால் குப்பையிலும் கடையாவாள். கற்புடைய மாதர்களின் புகழ் எக்காலத்திலும் இப்புவியில் சாசுவதமாக இருக்கும். செல்வம் ஓர் இடத்தில் நிலையாக நில்லாதிருப்பது போலும், சௌந்தரியம் முதுமைப் பருவம் அடைய அடைய மழுங்கிப் போவது போலும், கற்பு எக்காலத்திலும் அழியாது. அனசூயை இரும்புக்கடலையைப் பொரியச்செய்ததும், திருமூர்த்திகளையும் குழந்தைகளாக்கியதும், சாவித்திரி யமனிடம் சென்றிருந்த தன் பதியின் உயிரைக் காப்பாற்றிக்கொண்டதும், சீதை அக்கினிப்ரவேசம் செய்தபொழுது அக்கினிபகவான் அவளுக்கு யாதொரு கஷ்டத்தையும் கொடுக்காமல் குளிர்ந்திருக்க செய்ததும், தமயந்தி காட்டில் வேடனை சாம்பல் ஆக்கியதும் இந்தக் கற்பரசிகளின் கற்பின் சக்தியினாலல்லவா? இவர்களைப்போல் சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு முன் இருந்த வீரமதி என்னும் பதிவிருதா சிரோமணியின் சரித்திரத்தை எடுத்துரைக்கத் தொடங்கியுள்ளேன்.

குஜராத் ராஜ்யத்தைப் பிரஜனென்னும் பெயருள்ள ஓர் சாவட வம்சத்து அரசன் ஆண்டு வந்தான். இவன் தந்தை ஜீவித்திருந்தும் மிகக் கிழவனாயிருந்ததினால் பிரஜனே ராஜ்யத்தை ஆண்டுவந்தனன். அந்தக் கிழ அரசனுக்கு ஐந்து, ஆறு குழந்தைகள் உண்டு. எல்லோரிலும் மூத்தவன் பிரஜனும், இளையவள் வீரமதி என்னும் ஒரு புதல்வியும் தான். ஆதலால் வீரமதியை எல்லோரும் மிக்க அன்புடன் வளர்த்துவந்தனர். வீரமதி மிக்க அழகு வாய்ந்தவளாகவும், கல்விப் பயிற்சி யுடையவளாகவும், ஸ்திரீகளுக்கு முக்கியமாக வேண்டிய நற்குணங்களமைந்தவளாகவும், தன் தமயன்மார்கள் வில்வித்தை முதலியவைகள் கற்றுக்கொள்ளும்பொழுது பக்கத்திலிருந்து அவைகளிலும் தேர்ந்தவளாகவும் இருந்தனள்.

இப்படி யிருக்க, வீரமதிக்குப் பதினைந்து வருஷங்களானதும், அவள் தமயன் அவளுக்கு மண முடிக்க எண்ணி, தேசதேசங்களிலிருந்த ராஜகுமாரர்களின் சித்திரப் படங்களைத் தருவித்து வீரமதிக்குக் காண்பித்து, அவரவர்களின் சரித்திரங்களை அவளிடம் எடுத்துரைத்தான். அவர்களில் தாரா நகரத்தையாண்டுவந்த

உதயாதித்தியனென்னும் மகாராஜனின் சற்புத்திரனை ஜகதேவனின் சௌந்தரியத்தையும், சற்குணங்களையும், பராக்கிரமத்தையும் கேள்வியுற்று அவனை மணக்கச் சம்மதிக்கவே, அதை மாளவ தேசத்தின் சக்கரவர்த்தியான உதயாதித்தியனுக்குத் தெரிவித்தான்.

உதயாதித்திய மகாராஜாவிற்கு இரண்டு மனைவிகள். அவர்களில் மூத்தவளுக்கு ரணதவளனென்று ஒரு புத்திரனும், இளையவளுக்கு ஜகதேவனென்று ஒரு மகனும் இருந்தனர். மூத்தவள் அரசனைத் தன் காமவலையிற் சிக்க வைத்துக்கொண்டு இளையவளை அரண்மனையிலிருந்து துரத்திவிட்டனள். பின் மந்திரியான திரசிம்மன் ராஜனிடம் சிபார்சு செய்து சில கிராமங்களையும் வசிக்க ஒரு பங்களாவையும் இளைய மனைவிக்கும் ஜகதேவனுக்குமாகக் கொடுக்கச் செய்தான். ஆனால் சிலநாட்களில் அரசனுக்கு அவர்கள்மேல் கொஞ்சம் பிரியம் உதிக்க மறுபடியும் அவர்களை அரண்மனைக்கு அழைத்துக்கொண்டான்.

சில நாட்களில் குஜராத் மன்னன் பிரஜனின் கடிதத்தைக் கண்டு மகிழ்வுற்ற உதயாதித்தியன் (அப்பொழுது ரணதவளனுக்கு மணம் முடிந்திருக்கவில்லையாதலால்) எங்கு தன் மூத்த மனைவி இந்த விஷயத்திற்கு உத்தரவு கொடுக்க மாட்டாளோ வென்னும் பீதியுடன் அவளுக்கு இந்த விஷயத்தைத் தெரிவித்தான். நல்லவேளையாக அவள் ஒப்பவே குஜராத் மன்னனுக்குத் தெரிவித்தான். பின் கலியாணமும் மிகவும் நன்ருக நடைபெற்றது.

உதயாதித்தியனுக்கும் கிழத்தனம் நெருங்க, அவன் மூத்த மனைவிக்கு "எங்கு தன் பிள்ளையை விட்டு ஜகதேவனுக்குப் பட்டம் சூட்டிவிடுவாரோ" என்னும் பயம் அதிகரித்தது. ஜகதேவன் எல்லா வித்தைகளிலும் தேர்ச்சி யடைந்தவனாகவும் ராஜகாரியங்களை நடத்தத் தகுந்தவனாகவும் இருந்தான். ரணதவளன் சிறு வயதிலிருந்தே பைத்தியம் பிடித்தவன் போலிருந்தான்.

ஜகதேவன் தன் மூத்த தாயார் தன்மீது பிரியத்துடனிருக்க வேண்டுமென்று அடிக்கடி அவள் அந்தப்புரம் சென்று அவளிடம் பேசி வருவான். இந்தக் கருத்தை வைத்துக் கொண்டு அந்த ராணி அவன் மேல் கெட்ட எண்ணங் கொள்ளுமாறு அரசனிடம் சொல்லவே, அரசன் அவனை தேசத்திலிருந்து துரத்தி விட்டான்.

பின் ஜகதேவன் சில ஆயுதங்களுடன் குதிரையின் மேல் ஏறிக்கொண்டு (தன் பத்தினி பிறந்தகத்திற்குப் போயிருந்ததால்) அவளிடம் போய் விடைபெற்று பாட்ண என்னும் ராஜ்யத்திற்குப் போக எண்ணி, தன் பத்தினியிருக்கும் ஊரை நோக்கிக் குதிரையை ஓட்டலானன். சில நாட்களில் வீரமதியிருக்கும் ஊரின் அருகில் ஓர் நந்தவனத்தை யடைந்தான். காலம் சாயங்காலமாக இருந்ததினல் குதிரைக்குக் கொஞ்சம் சிரமப்பரிகாரமானபின் நிலவில் ஊர் போய்ச் சேரலாமென்று குதிரைக்குத் தண்ணீர் காட்டி அதை ஒரு மரத்திற் கட்டி விட்டு தானும் சில தின்பண்டங்களைத் தின்று புல்லின் மேல் படுத்துக்கொண்டு உறங்கலானன்.

ஜகதேவன் ராஜ்யத்தை விட்ட உடனேயே அவன் மூத்த தாயார் சில கொலையாளிகளுக்கு திரவியத்தை கொடுத்து, அவன் எங்கிருந்தாலும் கொன்று விட்டு வரும்படி அனுப்பிவித்தாள். அவர்களில் சிலர் இங்கு வந்து படுத்திருந்த ராஜகுமாரனைக் கை கால்களைக் கட்டித் தூக்கிக்கொண்டு காட்டிற்குள் சென்றனர்கள்.

சில நேரத்திற்கெல்லாம் வீரமதியும் அவள் தோழியும் புருஷ வேஷதாரிகளாய் காட்டில் வேட்டையாடி விட்டு வீட்டை நோக்கி அந்த நந்தவனத்தின் வழியாக வந்தனர். அப்

பொழுது அந்த வனத்தின் ஆள்கள் ஒரு இராஜ குமாரன் அந்த வனத்திற்கு வந்திருந்ததாக வும் அவனை நால்வர்கள் பிடித்துக்கொண்டு காட்டிற்குள் சென்றதாகவும் வீரமதியினிடம் தெரிவிக்கவே, உடனே அவனை அந்தக் கள்வர் களினின்றும் காப்பாற்ற இருவரும் காட்டை நோக்கிக் குதிரைகளை வேகமாகச் செலுத்தினர்.

பின் இருவரும் நான்கு கள்வர்கள் கை கால் கட்டிய ஒரு சுந்தர புருஷனை நடுவில் வைத்துக்கொண்டு கொல்ல யோசித்துக் கொண்டிருந்ததைக் கண்டு, அவர்கள் மேல் அம்புகளை விடத்தொடங்கினர். ஒரு பெரிய சண்டை நடந்தது. அந்தப் பெண்மணிகளிரு வரும் இரண்டு கள்வர்களைக் கொல்லவே மற் றிருவரும் அவ்விடத்திலிருந்து தப்பித்துக் கொண்டு ஓடி விட்டனர். பின் வீரமதி அந்த ராஜகுமாரனைப் பார்த்து தன் கணவனென்று தெரிந்துகொண்டு கட்டுகளை அவிழ்த்து அவனைத் தன் ஊருக்கு அழைத்துச் சென்று, வேண்டிய சிச்ரூஷைகளைச் செய்தபின் அவ னுக்கு தன் நிஜசொரூபத்தைக் காண்பிவித்தாள். ஜகதேவன் தன் மனைவியின் பராக்கிரமத்தை நினைத்து நினைத்து உள்ளம் பூரித்தான். பின் எல்லோரும் "ஏன் திடீரென்று முன்தெரிவிக் காமல் வந்தீர்கள்?" என்று அவனை வினவினார் கள். அதற்கு ஜகதேவன் தான் வந்த கார ணத்தை யெடுத்து அவர்களுக்கு உரைத்தான். தன்னைக்காட்டிற்குள்பிடித்துக்கொண்டுபோன கள்வர்கள் தன் பெரிய தாயார் தன்னை கொல்ல அனுப்பின ஆட்களென்பதையும் ஜகதேவன் அவர்களுக்குத் தெரிவித்தான். இன்னும் தாமதித்தால் இந்த ஊருக்கும் கெடுதி நேரிடு மென்றும், தான் இப்பொழுதே புறப்பட்டுப் பாட்னா சமஸ்தானம் சென்று, அங்கு ஓர் உத்தியோகம் கிடைத்தபின் வீரமதியைத் தன் னிடம் அழைத்துப் போவதாயும் ஜகதேவன் குஜராத் மன்னனை வீரமதியின் தமயனிடம் கூறினான்.

ஆனால் வீரமதி 'கணவனைவிட்டுப் பிரிந்திருக் கும் மனைவியானவள், தலையிலிருந்து விழுந்த மயிரினும் இழியவளாவாள்; உடைந்த சட்டி யின் விள்ளலைவிடப் பிரயோசன மற்றவளா வாள். பதிவிருதைகளுக்கு அடையாளம் எது வென்றால் கணவன் எவ்வளவு கஷ்டத்திலிருந் தாலும் அவன் அருகிலிருந்து அவன் கஷ்டத் தில் பாதியை தான் ஏற்றுக்கொண்டு தன்னா லான உபகாரத்தை அவனுக்குச் செய்வதுதான் நல்லது' என்று தன் தமயனிடம் கூறி அவ னைப் பின்பற்றினாள். இருவரும் சகல ராஜசுகங் களையும் தியஜித்துவிட்டு இரண்டு குதிரைக ளின்மேல் ஏறிக்கொண்டு சில ஆயுதங்களு டன் அவ்வூரை விட்டகன்றனர்.

ஒரு நாள் பகல் ஓர் கிராமத்தில் தங்கி ஆகா ரம் எடுத்துக்கொண்டு சிரமப்பரிகாரம் செய்து கொண்டனர். பின் அந்த ஊர் வாசி களைப் பாட்னாவிற்குப் போகும் வழி எது வென்று விசாரித்தனர். அதற்கு அவர் கள் பாட்னாவிற்குப் போக இரண்டு வழி களிருப்பதாகவும் ஒரு வழியில் பிரயாணிகளைத் தின்று மிக்க கஷ்டம் கொடுக்கும் இரண்டு கொடும் புலிகள் இருப்பதாகவும் சொன்னார் கள். அதைக் கேட்ட வீரமதி "நாம் புலிகள் இருக்கும் ஆரண்யத்தின் வழியாகவே சென்று அக்கொடும்புலிகளைச் சங்கரித்து ஜனங்களுக்கு உபகாரம் செய்வோம்" என்று தன் பிராண நாதனுக்குத் தெரிவித்தாள். இருவரும் வெகு சந்தோஷத்துடன் அவ்வழியாகச் சென்றனர். பத்து மைல்கள் தாண்டினவுடன் "இந்தப் புலி யைக் கொன்று எங்களைக் காப்பாற்றுங்கள்" என்று இருவர் கதறும் சத்தத்தைக் கேள்வி யுற்று, இருவரும் சுற்று முற்றும் நோக்கி, சத்தம் வரும் வழியை நோக்கிச் சிறிது தூரம்

சென்றனர். கொஞ்ச தூரத்தில் இரண்டு மனிதர்கள் ஓர் மரத்தில் நடுநடுங்கிய வண்ணம் உட்கார்ந்திருக்க, கீழே ஓர் பெரிய புலி அவர்களை மரத்தினின்று விழச் செய்ய ஆனமட்டிலும் பயங்கரமாக அவர்களை முறைத்துப் பார்த்துக்கொண்டும், கர்ச்சித்துக்கொண்டும், அந்த மரத்தைச் சுற்றியவண்ணம் இருந்தது. உடனே இருவரும் அதன்மேல் பாணங்களை விடக் குறி தப்பி புலி ஜகதேவனைச்சமீபிக்க, வீரமதி தன் ஈட்டியினுல் அதன் வயிற்றைக் குத்தினுள். உடனே முன்னிலும் பயங்கரமாக கர்ச்சித்துக்கொண்டு அந்தப் புலி கீழே சாய்ந்து மாண்டுவிட்டது. இதைக் கேட்டுக் கொண்டிருந்த புதரிலிருந்த பெண் புலியானது அதிக அகங்காரத்துடன் தன் பிராண காந்தனைக் கொன்ற பகைவர்களைப் பழிவாங்க எண்ணி முதல் ஜகதேவன் குதிரைமேற் பாய்ந்தது. உடனே தம்பதிகளிருவரும் அதன்மேல் பாணங்களை விட அதுவும் மாண்டது. ஜகதேவனின் குதிரையும் மாளவே அவன் மிகவும் விசனங்கொண்டு அதன்மேல் தன் அங்கவஸ்திரத்தை எடுத்துப் போர்த்தினுன். பிறகு மரத்திலிருந்த இருவரும் கீழே இறங்கித் தங்களை ஆபத்தினின்றும் காப்பாற்றிய தம்பதிகளின் கால்களில் விழுந்து பணிந்து அவைகளைத் தங்கள் கண்களில் ஒற்றிக்கொண்டனர். பின் அவர்கள் யார் என்பதை அறிவிக்கவேண்டுமென்று அத்தம்பதிகள் அவர்களை வேண்டினுர்கள்.

அதற்கு "உதயாதித்தியன் சிறியமனைவி தன் பிள்ளை எங்கிருக்கிறுனென்று தேடி வரும்படி மந்திரியான தீரசிம்மனை அனுப்பி இருக்கிறுன். அவருக்கு சாப்பாட்டிற்கு ஏற்பாடு செய்ய நாங்களிருவரும் முன் வந்துகொண்டிருக்க, வழிதப்பி இந்த அரண்யத்தைச் சேர்ந்தோம்" என்று அவர்கள் தெரிவித்தனர். பின் எல்லோரும் தீரசிம்மன் இருக்கும் இடத்தை நோக்கிச் செல்லலானுர்கள். கொஞ்சதூரம் சென்றதும் குதிரைகளின் காலடிச் சத்தம் கேட்கவே தீரசிம்மன் முதலியோர்கள்தான் வருகிறுர்களோ வென்று, அவர்கள் வரவை எதிர்பார்த்துக்கொண்டு அவ்விடமே நின்றுகொண்டிருந்தனர். சில நாழிகைக்குள் வருபவர்கள் ஜகதேவன் பெரிய தாயாரால் ஏவப்பட்ட கொலை பாதகர்களென்று தெரிந்துகொண்டு தம்பதிகளிருவரும் ஆயுதபாணிகளாய் நின்றுகொண்டிருந்தனர். மற்ற இருவரும் மரத்தின்மேல் ஏறிக்கொண்டனர்.

சில நாழிகைக்கெல்லாம் பெரிய யுத்தம் ஆரம்பித்துவிட்டது. வீரமதி அந்த சத்துருக்களின் அதிபதியின் மேல் ஓர் அம்பைவிட அது குறிதப்பி அவன் ஏறிக்கொண்டிருந்த குதிரையின் மேல் விழ, அது மாண்டு விட்டது. அதிபதியும் மூர்ச்சித்துக் கீழே விழுந்து விட்டான். இந்த அகங்காரத்தை வைத்துக்கொண்டு மற்றவர்கள் பலமாக யுத்தம் செய்ய ஆரம்பித்தனர். இன்னும் யுத்தம் செய்தால் பயனில்லை யென்று தம்பதிகளிருவரும் கத்திகளைத் தங்களைச்சுற்றிலும் வீச ஆரம்பித்தனர். எவ்வளவு பாணங்களை இவர்களிருவர்களின் மேல் பிரயோகித்தாலும் அந்தக் கத்திகள் அவர்கள் மேல் படாமல் தடுத்துக்கொண்டிருந்தன. சில நேரத்திற் கெல்லாம் வீரமதி மிகவும் சோர்ந்தவளாய்க் கத்தியை நழுவவிட்டு விட்டாள். அதைக் குனிந்து எடுத்துக்கொள்ளுமுன் பின்னிருந்த ஒரு சத்துரு அவளைத் தள்ளினுன். உடனே அவள் கீழே விழுந்து மூர்ச்சித்துப் போய்விட்டாள். அதற்குள் நல்ல சமயமாக தீரசிம்மன் தன்னுடன் இருபது ஆட்களை அழைத்துக்கொண்டு அவ்வழியே வந்துகொண்டிருந்தான். தீரசிம்மன் இந்த தம்பதிகளைக் கண்டு ஜகதேவ வீர

மதிகளென்று தெரிந்து அதிக சந்தோஷங்கொண்டு, அந்தப் பகைவர்களை சிறைசெய்து, இந்த இருவருக்கும் சைத்தியோபசாரம் செய்தான். எல்லோரும் அன்று அவ்விடமே சமையல்செய்து சாப்பிட்டனர்.

பின் தீரசிம்மன் "தங்கள் தாய் தங்களைப்பற்றி மிக்க கவலைகொண்டவராய்த் தங்களை உடனே அழைத்து வரும்படி உத்தரவளித்திருக்கிறார். நடந்த சமாசாரங்களனைவற்றையும் அரசரிடம் கூறினால் ரணதவளனின் தாயை சிட்சித்துத் தங்களை அன்புடன் ராஜ்யத்திற்கு அழைத்துக் கொள்வார்'' என்று எவ்வளவோ விதம் ஜகதேவனிடம் கூறினன்.

ஆனால் ஜகதேவன் "நான் பிரபஞ்சத்தில் சிறிதேனும் ஜனங்களுக்கு நன்மை செய்து நல்ல பெயரெடுத்தபின் என் தாய் தந்தைகளைக் காண வருவதாய் அவர்களிடம் வாக்களித்து விட்டு வந்திருக்கிறேன். ஆதலால் நான் இப்பொழுது வரமுடியாது. என் க்ஷேமசமாசாரத்தைப்பற்றி என் தாயாரிடம் கூறிவிடு'' என்று தீரசிம்மனுக்குச் சொல்லி அவனிடமிருந்து தனக்கு ஒரு குதிரையை வாங்கிக்கொண்டு, தன் மனைவியுடன் அவ்விடத்தை விட்டகன்றான்.

இப்படியே அனேக கஷ்டங்களை அனுபவித்துக்கொண்டு பாட்னாவின் சமீபத்தை அடைந்தார்கள். ஜகதேவன் சமீபத்திலிருந்த ஏரிக்கரையில் வீரமதியையும் குதிரைகளையும் நிறுத்தி விட்டு, தான் ஊருக்குள் தங்கி இருப்பதற்கு ஒரு இருப்பிடம் தேடச் சென்றான். சிலநேரத்திற்கெல்லாம் ஏரியிலிருந்து தண்ணீர் கொண்டுபோக ஒரு ஸ்திரீ அவ்விடம் வந்தாள். அவள் வீரமதியின் சௌந்தரியத்தைக் கண்டு ஆச்சரியம் கொண்டவளாய் அவளை யாரென்று கேட்டாள். கபடமற்ற வீரமதி தன் வரலாற்றை யெல்லாம் ஆதியோடந்தமாய் அவளிடம் கூறிக்கொண்டாள். பின் அந்த ஸ்திரீ வீட்டிற்குப் போய் தன் யஜமானியிடம் தான் ஏரிக்கரையில் கண்ட பெண் மணியைப்பற்றியும் அவள் வரலாற்றைப்பற்றியும் கூறினாள்.

அப்பொழுது அந்த நகரத்தை ஜயசிங் சித்தராஜ் என்னும் அரசன் ஆட்சிபுரிந்து வந்தான். சகல சற்குணங்களும் நிறைந்த அந்த அரசன் தன் அதிகாரிகளின் மேல் மிக்க நம்பிக்கை வைத்து அவர்களைக் கவனிக்காமலிருந்ததினால், ஊரில் மிகவும் அநியாயங்கள் நடந்து கொண்டிருந்தன. அந்த ஊர் பாதுகாப்பவன் தான் அனேக கெட்ட காரியங்கள் செய்து கொண்டிருந்ததுமல்லாமல், திருடர்களுக்கும் திருட ஒத்தாசை செய்து கொடுத்து அவர்கள் கொடுக்கும் திரவியத்தை வாங்கித் தின்றுகொண்டும் இருந்தான். அவன் அவ்வூரில் அநேக வேசிகளுக்கு வசிக்க சௌகரியப்படுத்தி கொடுத்திருந்தான். எல்லா வேசிகளிலும் அதிக சௌந்தரியவதியான நாகமணி என்றொரு வேசி இருந்தாள். ஆதலால் அவள்வீட்டிற்கு அனேக ஆடவர்கள் வந்து கொண்டிருந்ததினால் சீக்கிரத்திலேயே பெரிய பணக்காரியாய் விட்டாள். அவள் வீடு ஒரு அரண்மனையைப்போலவும், அவள் தோட்டம் தேவலோகத்திலிருக்கும் நந்தவனமோ என்று எண்ணுமாறும் இருந்தன. அந்தத் தேவடியாள் தான் கெடுவது போதாதென்று அனேக குலப்பெண்களை மோசம் செய்து வீட்டிற்குள் அழைத்துக்கொண்டு வந்து, பலவந்தமாய் அவர்களைக் காமாவேசத்துடன் தன் வீட்டிற்கு வரும் ஆடவர்களிடம் வசப்படுத்தி அந்த ஆடவர்கள் கொடுக்கும் தொகையைப் பெற்று அனேககற்பரசிகளின் கற்பைக் கெடுத்துக்கொண்டிருந்தனள். அந்தக் கெட்ட ஆடவர்களில் ஊர் காப்பவன் பிள்ளை லாலுதாசனும் ஒருவன்.

நாகமணி தன் ஆள்காரி வந்து கூறியவற்றைக் கேட்ட உடனே அவளுக்குக் கையில் கொஞ்சம் தொகையை வைத்துவிட்டு, தான் ராஜ ஸ்திரீயைப்போல் வேஷம் தரித்துக்கொண்டு பல்லக்கில் உட்கார்ந்துகொண்டு சில சேவகர்களுடன் ஏரிக்கரையை அடைந்தாள். அங்கு வீரமதியைக் கண்டு "நாங்கள் இருக்கும்பொழுது எங்களுக்கு முன் தெரிவிக்காமல் நீங்கள் ஏன் இங்கு வந்து கஷ்டப்படுகிறீர்கள்? நான் ஜகதேவனின் சிற்றம்மை மகள், இந்த ஊர் அரசனின் மனைவி. அரசன் ஜகதேவனைக்கண்டு தெரிந்துகொண்டு அவனை அரண்மனைக்குப் அழைத்துச் சென்றார். நான் தங்களை அழைத்துப்போக வந்தேன். குதிரை முதலியவைகளை ஆட்கள் கொண்டு வந்து விடுவார்கள். தாங்கள் என்னுடன் வரலாம்" என்றாள். கபடமென்பதே இன்னதென்று தெரியாத வீரமதி அந்த துஷ்ட வேசியின் வீட்டை அடைந்தாள்.

சில நேரங் கழித்து நாகமணி அவளைச் சாப்பிட அழைத்தாள். அதற்கு வீரமதி "உங்கள் அண்ணன் சாப்பிடாமல் நான் சாப்பிடமாட்டேன்" என்று பதிலளித்தாள். பின் அந்த வேசி ஜகதேவன் அரசனுடன் சாப்பிட்டு விட்டதாகச் சொல்லி வீரமதியைச் சாப்பிட அழைத்துக்கொண்டு சென்றாள். சாப்பிட்டானதும் ஒரு சேடி வீரமதியை ஓர் அழகிய அறைக்கு அழைத்துச் சென்று அங்கு சிரம பரிகாரம் செய்துகொள்ளும்படி சொல்லி விட்டுச் சென்றாள்.

வீரமதி தன் நாயகன் தன்னைக் காணச் சாயங்காலம் வருவானென்று எண்ணி அந்த சமயத்தை எதிர்பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். சாயங்காலமானபின் ஓர் சேடி அவளைச் சாப்பிட அழைத்தாள். அதற்கு அவள் தன் கணவன் சாப்பிட்டுவிட்டு வந்தபின் அவருக்கு வெற்றிலை மடித்துக் கொடுத்துவிட்டுத் தான் சாப்பிடுவதாகக் கூறவே, சேடி சில தின்பண்டங்கள் நிறைந்த ஒரு தட்டைக் கொண்டு வந்து வீரமதியினிடம் வைத்துவிட்டு, வெளிச் சென்று அவ்வறையின் வெளித் தாப்பாளைப் போட்டுக்கொண்டு சென்றுவிட்டாள். இதைக் கண்ட வீரமதி ஏதோ விபரீதம் நடக்கப் போவதாக எண்ணி நடுநடுங்கினாள்.

நாகமணி தினம் ஒரு அழகிய பெண்ணை லாலுதாசனிடம் சேர்த்து அவனிடம் தொகை பெற்று வருவது வழக்கம். இன்று தினத்தை விடத் தொகை அதிகம் கிடைக்கப் போவதாக நினைத்து மிக்க குதூகலத்துடனிருந்தாள். முன் அவள் இந்த விஷயத்தை அவனிடம் சொல்ல, அவன் ஊரெல்லாம்தேடி ஜகதேவனைப் பிடித்து சிறையில் அடைத்துவிட்டு, தான் நன்றாகச் சிங்காரித்துக்கொண்டு நாகமணி அகம் வந்து சேர்ந்தான். நாகமணி மிகவும் சந்தோஷத்துடன் அவன் கொடுத்த பெருந்தொகையைப் பெற்றுக்கொண்டு வீரமதி இருக்கும் அறை மாடியிலிருந்ததால் அங்கு அழைத்துச் சென்று அந்த அறையை அவனுக்குக் காண்பிவித்து விட்டுத் தன் அறைக்குப் போய்விட்டாள்.

வீரமதி யாரோ மாடி ஏறிவரும் சத்தத்தைக் கேட்டுத் தன் கணவன்தான் வருகிறானென்று உள்ளம் பூரித்தாள். ஆனால் கதவைத் திறந்து கொண்டு ஒரு பயங்கர சொரூபமுள்ளவன் வருவதைக் கண்டு திகைத்தாள். பின் தன் பதிவிரதாதன்மையைக் காப்பாற்றிக்கொள்ள எண்ணித் தைரியங்கொண்டு அவனுக்கு அனேக நற்போதனைகள் போதித்தாள். ஆகிலும் அந்த துராத்மா தன் கெட்ட கையால் அந்தப் புண்ணியவதியை ஸ்பரிசிக்கக் கிட்ட அணுகவே, தன் இடுப்பில் அணிந்திருந்த வாளை உருவி அவனைச் சிரச்சேதம் செய்தாள்.

இவளல்லவா பதிவிரதை! ஹா! இந்த மாதிரிப் பெண்களைப் பெற்ற நம் பாரதமாதா எவ்வளவு

புண்ணியம் செய்திருக்கவேண்டும். அந்த காலத்தில் ரஜபுத்திர ஸ்திரீரத்தினங்கள் ஆபத்து காலத்தில் தங்களைக் காப்பாற்றிக்கொள்ள ஒட்டியாணம் போல் வளையும்படியான கத்தியொன்றை ஒவ்வொருவரும் ரகசியமாக வைத்துக்கொண்டிருந்தனர். அந்த ரகசிய வாளின் சகாயத்தினாலேயே வீரமதி தன் கற்பைக் காத்துக்கொண்டனள். பின் அந்தக் கற்பரசி மெள்ள மாடியை விட்டிறங்கி மாடிக்குவரும் வழியின் கதவையே மூடித் தாப்பாள் இட்டுவிட்டு, மேல் வந்து அந்த துஷ்டனின் சவத்தை ஒரு துணியில் மூட்டை கட்டி அந்த அறைக்கு ஒரே ஜன்னல் இருந்ததினால் அதின் வழியாக அந்த மூட்டையைத் தெருவில் எறிந்து விட்டாள். பின் வீரமதி "இன்னும் என்ன நடக்கப் போகிறது பார்ப்போம்" என்று கத்தியைக் கையில் பிடித்தவண்ணமாக அந்த அறையின் ஜன்னலண்டை நின்றுகொண்டிருந்தாள்.

இரவில் ஊரைக் காக்கும் காரியாரிகள் அன்று இரவும் அவ்வழியாக வர, நாகமணி வீட்டின் எதிரிலிருந்த சாக்கடையில் ரத்தத்தில் தோய்ந்த ஒரு மூட்டை கிடப்பதைக் கண்டு திடுக்கிட்டு அதை அவிழ்த்துப் பார்க்க அதில் தங்கள் அதிகாரியின் மகன் சவமாகக் கிடந்ததைக் கண்டு தங்கள் அதிகாரியிடம் போய்த் தெரிவித்தனர். அவன் உடனே நாகமணி இல்லம் சென்று அவளை விசாரிக்க, அவள் "உன் மகன் மாடியில் புதிய பெண்ஜாதியுடன் சரசசல்லாபத்திலிருக்கிறான்" என்று சிரித்துக்கொண்டு கூறினாள். பின் ஊர்காப்பவன் (கொத்தவால்) தன் பிள்ளை சவமாகக் கிடந்ததைச் சொன்னான். அந்தத் தேவடியாள் திடுக்கிட்டு மாடிப்படியினிடம் சென்று கதவு தாப்பாள் இடப்பட்டிருந்ததைப் பார்த்து, எவ்வளவு தட்டினாலும் கதவு திறக்கப்படவில்லை. பின் உள்ளிருப்பவளை உரக்கக் கூவியும் பார்த்தாள். ஆகிலும் உள்ளிருந்து ஒரு வார்த்தையேனும் கேட்கவில்லை. ஆதலால் கொத்தவாலிடம் வந்து தெரிவித்தாள். பின் அவன் வீரமதி யிருக்கும் உள்ளின் ஜன்னலிற்கு நேராக ஓர் ஏணியை வைத்துவிட்டு அதின் மேல் ஏறிப் போக ஒரு ஆளை அனுப்பினான். அவன் அதில் ஏறிப்போய் ஜன்னலிற்குள் தலையை நுழைத்தவுடன், வீரமதி அவன் தலையை தன் கத்தியினால் சேதித்தாள். அவன் தலை அறைக்குள்ளும், தேகம் தெருவிலும் விழுந்தன. பின் மற்றொரு ஆள் தைரியத்துடன் ஏறி வர அவனையும் அந்தக் கற்பரசி அவ்விதமே செய்தாள். அவ்விதமே பதினொரு பெயர்களின் கதியும் ஆயிற்று! அதற்குள் கதிரவன் உதிக்கவே இந்தச் சேதி ஊர் முழுவதும் பரவிற்று. உடனே அந்த ஊர் அரசன் அவ்விடம் வந்து, அந்தத் தலையில்லாச் சவங்களைக் கண்டு ஆச்சரியமுற்றான். பின் தானே அந்த ஏணியில் அரைவாசி தூரம் ஏறி அவ்விடமே நின்றுகொண்டு "ஏ ஸ்திரீ ரத்தினமே! எதற்காக என் பிரஜைகளை இவ்விதம் சம்கரிக்கின்றாய்? யார் உனக்கு ஆபத்து விளைவித்தார்களென்பதை எனக்குத் தெரிவித்தால், உடனே தண்டிக்கிறேன்" என்றான்.

அதற்கு வீரமதி "நான் தாரா நகரத்தின் அதிபதியான உதயாதித்திய மகா ராஜாவின் நாட்டுப் பெண். குஜராத் மன்னனின் தங்கை. என் பெயர் வீரமதி" என்று சொன்னாள். இன்னும் நடந்த சங்கதிகளனைவற்றையும் சாங்கோபாங்கமாய்க் கூறிவிட்டு "என் கற்பைக் காத்துக்கொள்வதற்காக இந்தப் பன்னிரண்டு பெயர்களையும் கொன்றேன்" என்றாள். பின் அரசனுக்கு ஆச்சரியமும் சந்தோஷமும் பொங்க "ஏ வனிதாரத்தினமே! பதிவிரதைகள் செய்ய வேண்டிய காரியத்தைச் செய்தாய். ராஜபுத்திர ஸ்திரீகளுக்குக் கீர்த்தி கொண்டு வந்தாய், நான் உன்னை என் பெண்ணைப்போல்

பார்த்துக்கொள்கிறேன். உன் கணவனை ஆட்களை விட்டு தேடச் சொல்கிறேன். பயமின்றிக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வா'' என்று அன்புடன் கூறினன்.

ஆனாலும் வீரமதி ''என் பிராணநாதனைக் கண்டாலொழிய இந்தக் கதவை திறக்கமாட்டேன்'' என்றாள். பின் ராஜன் ஜகதேவனைத் தேடிக் காராக்கிருகத்திலிருந்து விடுவித்து அழைத்துக்கொண்டு வந்தான். வீரமதி தன் பதியைக் கண்டு அதிக ஆனந்தங்கொண்டு கதவைத் திறந்தாள். பின் அரசன் நாகமணியை பிடித்துச் சிறையில் அடைக்கச் சொல்லிவிட்டு, ஜகதேவ வீரமதிகளைத் தன் ரதத்திலேயே உட்காரவைத்துக்கொண்டு அரண்மனைக்குச் சென்றான். அந்த ஊரில் வீரமதியைக் கண்ட ஒவ்வொருவரும் அவளைப் புகழ்ந்தார்கள்.

பின் ராஜன் ஜகதேவனின் சற்குணங்களைக் கண்டு மெச்சி அவனுக்கே கொத்தவால் வேலையைக் கொடுத்தான். அன்றைய தினம் முதல் துஷ்டர்களுக்குக் கஷ்டமும், நல்லவர்களுக்கு சௌக்கியமும் உண்டாயிற்று

இப்படியே சில நாட்கள் அந்த தம்பதிகள் சௌக்கியமாக இருந்தனர். இப்படியிருக்க ஒரு வருஷம் ஊர் முழுவதும் அம்மையினால் அனேகம் பிரஜைகள் செத்துப்போய்க் கொண்டிருந்தனர். எத்தனை உபாயங்கள் செய்தாலும் அந்த ரோகம் ஊர் முழுவதும் பரவிக் கொண்டே இருந்தது. இதைக் கண்ட அரசன் சர்வப்பிரஜைகளும் மாண்டுவிடப் போகிறார்கள் என்று பயந்து நித்தியம் அந்த ஊருக்கு வெளியிலிருந்த காளிகாதேவி கோவிலிற்குப் போய் அம்மனுக்குப் பூஜைசெய்துவிட்டு வந்துகொண்டிருந்தான். இவைதக்கண்ணுற்ற சிலதுஷ்டர்கள் யோசித்து இதுதான் ஜகதேவனைக் கொல்ல சமயமென்று, ஒரு நாள் அரசன் கோவிலிற்கு வருமுன் அவர்களில் ஒருவனை அம்மன் பின்னால் ஒளித்து வைத்தனர். பின் அரசன் வந்து ஏகாந்தமாய் தேவிக்குப் பூஜைசெய்து கொண்டிருக்கும்பொழுது ''ஏ அரசனே! உன் அற்புதமான பக்தியைக் கண்டு மெச்சினேன். சகல சற்குணங்களும் நிறைந்த ஒரு ராஜ குமாரனை எனக்கு பலி கொடுத்தால் ஊர் முழுவதும் ரோகம் போய் உன் பிரஜைகளனைவரும் சௌக்கியமாக இருப்பார்கள்'' என்று அந்த துஷ்டன் கூறினன். அரசன் தேவி என்று நம்பி ''ஓ! தாயே! என் ராஜ்யத்தில் சகல சற்குணங்களும் நிறைந்தவன் எவன் என்பதைத் தாங்களே தெரிவிக்கவேண்டுமென்று கோருகிறேன்'' என்றான். அதற்கு துஷ்டன் ''வத்சனே, உன் தேசத்தில் சகலசற்குணங்களும் நிறைந்த ராஜகுமாரன் கொத்தவாலான ஜகதேவனேயாவான்'' என்று கூறினன். இதைக் கேட்டு மனம் கலங்கினவனாய் அரசன் அரண்மனை சென்றான்.

ஜகதேவன் அரசன் முகம் வாடியிருந்ததைக் கண்டு ஏன் என்று அரசனை வினவ, அவன் கோவிலில் தேவி சொல்லியதைச் சொன்னான். பின் ஜகதேவன் ராஜ்யத்திற்காக எவ்வளவு கஷ்டப்படச் சொன்னாலும் தான் சந்தோஷமாகச் செய்வதாகச் சொல்லி கோவிலுக்குப் புறப்பட்டான். அரசன் வேண்டாமென்று எவ்வளவு கூறியும் கேட்கவில்லை. அப்பொழுது ஜகதேவனுக்கு ஒரு பிள்ளைக் குழந்தை பிறந்திருந்தது. அதற்கு ஜகத்தவளன் என்று பெயரிட்டிருந்தனர். பின் வீரமதியும் குழந்தையையெடுத்துக்கொண்டு புறப்பட்டனள். முதல் குழந்தையைக் கொன்று பின் வீரமதியும், அப்புறம் ஜகதேவனென்றும் குறிப்பிட்டுக்கொண்டதைக் கண்ட அரசன் மனம் தாளாதவனாய் ''ஜகதேவனே! உங்களைக் கொல்ல எனக்கு மனம் வரவில்லை, நீங்கள் அரண்மனைக்குத் திரும்புங்கள்'' என்றான். இதைக்கேட்ட தேவி

யின் பின்னிருந்த துஷ்டன் "அரசனே! ஜக தேவனை விடாதேயுங்கள். அவனால் உங்களுக்கு மிகவும் லாபம் கிடைக்கும்" என்றான். இதைக் கேட்ட அரசன் சந்தேகங்கொண்டு தேவியின்பின் போய்ப்பார்க்க அங்கு ஒரு மனிதன் நின்றுகொண்டிருந்தான். உடனே அவனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் பிடித்து அரசன் தண்டித்தான். பின் ஜகதேவன் தனக்குக் காட்டிய கருணைக்குத் தான் எவ்வளவு பரிசுகள் அளித்தாலும் போதாதென்று அரசன் தன் பெண் பிரபாவதியை அவனுக்குக் கொடுத்து மண முடித்து அனேக கிராமங்களை அவனுக்கு வரதட்சிணையாகக் கொடுத்தான்.

இது இப்படியிருக்க உதயாதித்திய ராஜன் தன் ராஜ்யத்தைத் தன் மூத்த மனைவி சொன்னபடி நடத்திவர, ராஜ்யத்தில் அனேக அனியாயங்கள் நடக்க ஆரம்பித்தன; பிரஜைகள் கஷ்டப்பட்டனர். இவைகளெல்லாவற்றையும் நன்குணர்ந்த அடுத்த தேசத்தரசனொருவன் தாரா நகரத்தின் மேல் யுத்தத்திற்கு வந்து, உதயாதித்தியனைத் தோற்கடித்து அவனைச் சிறையில் அடைத்திருந்தானென்று ஜகதேவனின் காதிற் கெட்டியது. உடனே ஜகதேவன் மாமனாரிடம் விடைபெற்றுக்கொண்டு தாரா நகரத்தின் சத்துருக்களை ஜயித்து, தந்தையைச் சிறையிலிருந்து விடுவித்து ராஜ்யத்தை அவனிடம் கொடுத்தான்.

மந்திரி சிரேஷ்டனான தீரசிம்மன் ஜகதேவனின் சற்குணங்களையும், அவன் பெரிய தாயார் அவனுக்கு இழைத்த தீங்குகளையும் அரசனுக்கு சவிஸ்தாரமாகக் கூறினான். பின் அரசன் அவன் மூத்த மனைவியை அரண்மனையிலிருந்து ஓட்டப்பார்க்க, ஜகதேவனின் தாய் அவ்விதம் செய்யக் கூடாதென்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டாள்.

ஜகதேவனுக்கு இரண்டு மனைவிகளிருந்தும் மிக்க சற்குணங்களும், அழகும் வாய்ந்தவளான வீரமதியே அவனுக்குப் பட்டமகிஷியானாள்.

சுபம்.

# நேபாள வாசிகள்.

நேபாளத்திலுள்ள ராஜாங்கக் கல்லூரியில் பிரதம ஆங்கில போதகாசிரியாக இருந்துவரும் ஸ்ரீமான் சஞ்சீவ சௌத்ரி "நேபாளவாசிகள் சந்தோஷமாக இருக்கின்றனரா?" என்ற மகுடமிட்டொரு வியாசம் எழுதியுள்ளார். அதில் பின்வரும் ருசிகரமான விஷயங்கள் காணப்படுகின்றன:—

இந்தியாவிலேயே சுயேச்சை வாய்ந்ததாகவும் பலம் பொருந்தியதாகவும் இருக்கும் ஹிந்து ராஜ்யம் நேபாளம் ஒன்றுதான் உள்ளது. நேபாளத்திற்கும் வெளி தேசங்களுக்கும் ரெயில்வே போக்குவரத்தோ, அன்றி தந்திப் போக்குவரத்தோ கிடையாது. நேபாள தேசத்தார் இதர தேசங்களிடம் அவநம்பிக்கை கொண்டு அவர்களைச் சந்தேகிக்கின்றனர். நேபாளத்திற்குள் வர அன்னியருக்கு அந்நாட்டரசாங்கத்தார் சுலபத்தில் அனுமதி கொடுப்பதில்லை. நேபாளத்தில் பெரிய கைத்தொழிற்சாலைகளாவது, அன்றி யந்திர அமைப்பு சாஸ்திரங்களைப்பற்றிப் போதிக்கும் பெரிய கல்லூரிகளாவது கிடையாது. நேபாளத்தில் அச்சுக்கூடங்களாவது வெளி உலகில் நடைபெறும் சமாசாரங்களை தினந்தோறும் அறிவிக்கப் பத்திரிகைகளாவது கிடையாது. அங்குள்ளோர் ஏகாந்தமாக இருந்துவருகின்றனர். அவர்கள் வெளியுலகை அலைத்து வரும் பிரசினைகள்

எதைப்பற்றியும் சிறிதுகூட நினைப்பதில்லை. நேபாளம் ஹிமாசலத்தின் மத்தியில் இருப்பதால் அங்குள்ளவர்கள் உலக சந்தடி இல்லாமல் ஏகாந்தமான இடத்தில் நிஷ்டை இருக்கும் சாதுக்களைப் போலிருக்கின்றனர்.

சட்ட திட்டங்கள்.

நேபாளத்தின் சட்டங்கள் பெரும்பாலும் புராதனமான ஹிந்துக்களது சட்டங்களையே தழுவியதாக இருக்கின்றன. அச்சட்டதிட்டங்கள் பலநூற்றாண்டுகளாக ஏற்பட்ட அனுபவங்களுக் கிணங்க மாற்றப்பட்டோ அன்றி திருத்தப்பட்டோ இருக்கின்றன. கோயில்களிலுள்ள விக்கிரகங்களின் தன்மையில் பௌத்தர்களது செல்வாக்கால் சிறிது மாற்றமேற்பட்டிருக்கின்றது. இந்தியால் கண்டிக்கபட்டு வெறுக்கப்படும் கலியாணசம்பந்தமானப் புராதனமான விதிகளை நேபாளம் தற்பொழுதுகூட அங்கீகரிக்கின்றது: இவற்றை எல்லாம் பார்த்தவுடன் நேபாளத்திற்குப் புதிதாக வந்தவர்கள் மனதில் நேபாள வாசிகள் மிக்க துக்ககரமான நிலைமையிலிருப்பதாக ஓர் அபிப்பிராயம் ஏற்பட்டு விடுகின்றது. ஆனால் நேபாள வாசிகள் சந்தோஷமாக இருக்கின்றனரா என்பதுபற்றியும் இந்த ராஜ்யத்திலுள்ளவர்கள் வாழ்க்கை யின்பங்களை நுகர்கின்றனரா இல்லையா என்பது பற்றியும் சந்தேகங்கள் தோன்றி நேபாளத்திற்கு வருகின்றவர்களுக்கு மனக்கலக்கத்தை யுண்டு பண்ணுகின்றன. ஆனால் இது சம்பந்தமான உண்மைகள் அந்நாட்டிற்கு வருகின்ற அன்னியர்களுக்குச் சீக்கிரம் புலனாகி விடுகின்றன. அந்நாட்டிற்குப் புதிதாக வருகின்றவர் இந்தியராக இருந்தால் இது சம்பந்தமான உண்மை நிலை இன்னும் சீக்கிரமாகப் புலனாகிவிடும். தற்காலம் இந்தியாவிலுள்ளவர்களுக்குச் சுதந்தர முடைமையால் என்னென்ன சௌகரியங்கள் ஏற்படு மென்பது தெரியாது.

இந்தியாவிலுள்ளவர்கள் தாங்கள் சுதந்தர புருஷர்களாக இருந்தால் தங்களுக்கு என்னென்ன நன்மைகள் ஏற்படக் கூடுமென்பதை சித்தாந்த ரூபமாக உணர்ந்திருக்கக் கூடுமேயன்றி அனுபவ பூர்வமாக உணர்ந்திருக்க முடியாது. இந்தியாவிலுள்ளவர்கள் தங்களது நாடு சுதந்தர மடைந்துவிட்டால் ஜெர்மனி அல்லது யுனைடெட் ஸ்டேட்சிலுள்ளவர்களைப் போன்று சந்தோஷமாக இருப்பார்களென்று நினைத்துக்கொண்டிருக்கின்றார்கள். அமெரிக்கா, இங்கிலாந்து, ஜெர்மனி, ஜப்பான் முதலிய தேசங்களில் ஏற்பட்டிருப்பது போன்று பெரிய தொழிற்சாலைகள் ஏற்பட்டிருக்கு மென்றும் பூத, பௌதிக, ரசாய்ன சாஸ்திரங்களையும் யந்திரங்களின் அமைப்பைப் பற்றிய சாஸ்திரங்களையும் போதிக்கும் பெரிய பள்ளிக்கூடங்கள் ஏற்பட்டிருக்கு மென்றும் நினைக்கின்றனர். இந்தியர்கள் பூத, பௌதிக, ரசாயன சாஸ்திரங்களைப்பற்றிய ஆராய்ச்சியிலும் கைத்தொழிலிலும் எவ்வளவுக்கெவ்வளவு முன்னேற்ற மடைகின்றனரோ அவ்வளவுக்கவ்வளவு அவர்கள் உலகில் தலை நிமிர்ந்து சுதந்தர புருஷர்களாக நடக்க முடியு மென்று கருதப்படுகின்றது. நேபாளமானது அம்மாதிரியான லட்சியத்தை மனதிற்கொண்டிருக்கவில்லை. ஏற்கெனவே அது சுயேச்சையாக இருந்து அதனால் ஏற்படும் இன்பங்களை நுகர்ந்து வருகிறது. இம்மாதிரி இருந்துகொண்டே அது மெதுவாகவும் ஆனால் உறுதியாகவும் உயர்ந்த ஸ்திதியை யடைந்துகொண்டே வருகின்றது. அந்நாடு சுதந்தரம் வாய்ந்ததாக இருப்பதால் என்னென்ன நன்மைகளை அடைந்திருக்கின்றதென்பதை நாம் ஆராய்ந்து பார்ப்போமாக.

உணவுப் பொருள் விஷயம்.

நேபாள தேசத்தில் விளையும் உணவுப் பொருள் எதையும் ஏற்றுமதி செய்யக்கூடா

தென்று அந்நாட்டு அரசாங்கம் சட்டஞ் செய்து தடுத்திருக்கின்றது. நேபாள தேச கவர்ன்மெண்டாருக்குத் தங்கள் ஜனங்களை யும் நேபாளத்தில் உற்பத்தியாகும் உணவுப் பொருள்களின் தன்மையையும் பற்றிய விவரங் கள் நன்ருகத் தெரியும். உணவுதான் மிக்க முக்கியமானதென்றும் அதனை விற்று ஏற் படுத்திக் கொள்ளும் சௌகரியங்கள் அவ் வளவு முக்கியமானவை யல்லவென்றும் நேபாளத்திற்குத் தெரியும். பணத்தைவேண்டு மானல் ஒருவர் குவித்து வைத்துக்கொள்ள முடியுமேயன்றி உணவுப் பொருள்களைச் சேக ரித்துக் குவித்து வைத்துக்கொள்ள முடியா தென்பது நேபாள வாசிகளுக்கு நன்கு தெரிந் திருக்கின்றது. இதனல் நேபாளமானது பிரிட் டிஷ் இந்தியாவிலுள்ள நாம் நிர்ப்பந்தத்தின் காரணமாகச் செய்து வருவதுபோன்று உண வுப் பொருள்களை விற்று வேறெதையும் வாங்கு வதேயில்லை. நாம் அன்னியர்களைப் போஷிக் கின்ருேம். உயிர் தரித்து நிற்பதற்கு இன்றி யமையாததாக இருக்கும் உணவுப் பொருள் களை ஆடம்பரமான வாழ்க்கைக்கு வேண்டிய வற்றை வாங்கிக்கொள்வதற்காகக் கொட்டிக் கொடுத்து விடுகின்ருேம்.

ஜவுளி விஷயத்தில்
பிறரை எதிர்பார்த்து நிற்கவில்லை.

நேபாள வாசிகளுக்கு வேண்டிய துணியா னது அந்த தேசத்திலேயே நெசவு செய்யப் படுகின்றது. நேபாளமானது தனக்கு வேண் டிய ஜவுளிக்காக அன்னிய நாடுகளிலுள்ள நெச வுக்காரர்களையோ அன்றி ஆலைகளையோ நம்பி யிருக்கவில்லை. நேபாளதேசம் மலைப் பிரதே சத்திலுள்ளது. ஆனல் இங்குள்ளவர்களெல் லாம் மலைச்சாதியாரல்லர்.

நேபாள வாசிகளிற் பெரும்பான்மையோர் தேகமனைத்தையும் துணியால் மூடிக்கொள்ளு கின்றனர். அவர்களுக்கு பிரிட்டிஷ் இந்தியாவி லுள்ள நம்மவரைக் காட்டிலும் அதிகமான துணி வேண்டியிருக்கின்றது. ஏனெனில் 6 மாதத்திற்கு மேல் குளிர்காலமாக இருக்கின் றது. 6 மாதத்திற்கு மழை பெய்கின்றது. இத ஞல் நேபாளத்திற்கு ஏராளமாகத் துணி வேண்டியிருக்கின்றது. இப்படியிருந்தபோதி லும் நேபாளமானது தனக்கு வேண்டிய துணி யனைத்தையும் தானே உற்பத்திசெய்து கொள்ளுகின்றது.

அவர்கள் அவ்வாறு செய்து கொள்வ தற்கு இரண்டு விஷயங்களே காரணமாக இருக்கின்றன. (1) நேபாள வாசிகள் மிகவும் ஆடம்பரமற்ற வாழ்க்கையை நடத்துகின்ருர் கள். (2) சுதந்தரமாக இருக்கும் அதன் கவர்ன் மெண்டு ஆடம்பரத்திற்காக உபயோகப்படும் அன்னிய நாட்டுச் சாக்குகளுக்கும் அன்னிய நாட்டுஜவுளிகளுக்கும் ஏராளமாக வரிவிதிக்கின் றது. தெய்வத்தின் கண்ணிற்படாதிருந்தாலும் இருக்கலாம், ஆனல் நேபாள கவர்ன்மெண்ட் உத்தியோகஸ்தர்கள் கண்ணிற்படாமல் எந்தச் சாமானையும் நாட்டிற்கு உள்ளே கொண்டு போக முடியாது. நேபாள வாசிகள் தங்களுக் கென சில ஆடம்பரமான பொருள்களைப் பெற்றிருக்கின்றனர். நேபாளத்தில் மிக்க நேர்த் தியான கம்பளங்கள் உற்பத்தி செய்யப்படு கின்றன. அதன் சிற்ப வேலைகள் அதி அற்புத மாக இருக்கின்றன. சீனர்கள், மொகலாயர் கள் இவர்களது சிற்ப சாஸ்திர முறையும் நேபாள சிற்ப சாஸ்திர முறையும் கலந்திருப்ப தானது அந்நாட்டிலுள்ள கட்டிடங்களைப் பார்த்தால் தெரியவரும். நேபாள தேசத்தில் மரத்தில் செய்யப்பட்டிருக்கும் சிற்ப வேலை க்கு இணையே கிடையாதெனக் கூறலாம். அதன் கோபுரங்கள், கோயில்கள், விமானங் கள், அரண்மனைகள் இவற்றைப் பார்த்தால்

நேபாள வாசிகள் இதர நாடுகளிலுள்ள சிற்ப சாஸ்திரத்திலுள்ள நுட்பங்களை யெல்லாம் எவ்வளவு நன்றாக உணர்ந்து அவற்றைக் கையாண்டிருக்கிறார்கள் என்பது தெரியவரும். தற்சமயம் அது ஆங்கிலேயாது முறைகளைக் கையாண்டு பார்க்க முயற்சி செய்துவருகின்றது. அன்னிய நாட்டுச் சிற்பசாஸ்திர முறைகள் சுதேச முறைகளை இருந்தவிடம் தெரியாதபடி செய்துவிட முடியாது. ஏனெனில் பிற நாட்டு முறைகளைக் கையாளும்பொழுதும் நேபாள வாசிகள் தங்களது முறைகளைக் கைவிடுவதில்லை.

ராணுவப் பயிற்சி.

இவற்றை எல்லாம் விட முக்கியமானதொன்று உண்டு. அஃதென்னவெனில் நேபாள தேச வாலிபர்களுக்கு யாதொரு விதமான சிபார்சும் வேண்டியிருக்கவில்லை. அவர்கள் மிக்க சுலபமாக ராணுவத்தில் சேர்ந்து கொள்ளலாம். நேபாள தேசத்து ராணுவ முறையானது மிக்க சிறந்ததாக இருக்கின்றது. ஜனங்கள் கொடுக்கும் வரிப்பணத்தில் ஒரு பகுதி அந்நாட்டு வாலிபர்களின் சம்பளமாகத் திருப்பிக் கொடுத்து விடப்படுகிறது. ஆயிரக் கணக்கான மைலுக்கப்பாலுள்ள அன்னியர்கள் எவரும் அந்நாட்டின் செல்வத்தையும் உறிஞ்சுவதுபோல் உறிஞ்சிக் கொழுக்கவில்லை. நேபாள தேசத்தின் இயற்கைச் செல்வத்தைச் சரண்டிச் சென்று அங்குள்ள ஜனங்களை எளியவர்களாகக் கஷ்டப்படும்படி செய்பவர் எவருமிலர். சிறு பிராயம் முதற்கொண்டே நேபாள தேசத்தவருக்கும் பொய்ச்சண்டை செய்வதன் மூலம் ராணுவ முறைகளெல்லாம் போதிக்கப் படுகின்றன. யுத்தமென்றால் அது கூர்க்கர்களுக்கு வெறும் விளையாட்டுப் போன்று அவ்வளவு சகஜமானது. கூர்க்கர்கள் தங்களது தாய்நாட்டின் கௌரவத்திற்காக எப்பொழுதும் போராடத் தயாராக இருக்கின்றனர்.

ஸ்திரீகளின் நிலைமை.

நேபாள ஸ்திரீகள் எப்பொழுதும் கோஷா முறையை அனுஷ்டிப்பதில்லை. அவர்கள் தாராளமாகத் தெருக்களில் நடந்து செல்லுகின்றனர். கோயில்களுக்குத் தங்களிஷ்டம் போல் சென்று வருகின்றனர். அவர்கள் ஊர்வலங்களிலும் திருவிழாக்களிலும் கலந்து கொள்ளுகின்றனர். தாழ்ந்த வகுப்புச் சிறுவர், சிறுமிகள் கட்டுப்பாடின்றித் தங்களை மணந்து கொள்ளும்படி ஒருவரை யொருவர் கேட்டுக் கொள்ளுவார்கள். ஹிந்துமத சம்பிரதாயங்களும் சட்டங்களும் மிக்க பலமாகக் கையாளப்பட்டுவரும் இந்நாட்டில் இம்முறையானது எப்படிவந்து பரவியதென்பது தெரியவில்லை. இதிலிருந்து நேபாளத்தில் சிறுவர் சிறுமிகள் பரஸ்பரம் சம்மதித்த பின்னர் கலியாணஞ் செய்யப்படுகின்ற முறையானது அடியோடு இல்லாமற் போய்விடவில்லை என்று ஏற்படுகின்றது. நேபாள ஸ்திரீகள் சுதந்தரமுடையவர்களாக இருப்பதால் அந்நாட்டார் சந்தோஷமுடையவர்களாக இருக்கின்றார்கள்.

கட்மாண்டு என்ற தலைநகரில் எங்கும் மின்சார விளக்குப் போடப்பட்டிருக்கின்றது. இந்நகருக்கு 20 மைல் தூரத்திலுள்ள இடத்திலிருந்து ரெயிலில் சாமான்கள் வருகின்றன. இங்கு மோட்டார்கள் அதிகமாக இருப்பதால் அவை பொது ஜனங்களுக்கு மிக்க தொந்தரவு விளைவிப்பதாகக் கூறப்படுகின்றது. நேபாளமானது மெதுவாகவும் ஜாக்கிரதையாகவும் முன்னேறிச் சென்றுகொண்டிருக்கின்றது. ஒரு முதல் கிரேட் கல்லூரி இந்நாட்டிலிருக்கின்றது. இந்நாட்டரசாங்கத்தார் கூர்க்க பாஷையில் கல்வி கற்பிக்கும் ஒரு சர்வகலாசாலையை ஏற்படுத்துவதுபற்றி யோசித்துக் கொண்டிருக்கின்றார்கள். நேபாளத்திற்கு இவற்றை எல்லாம் விட அதிக சந்தோஷத்தை

அளிக்கக்கூடிய அம்சம் ஒன்றிருக்கின்றது. அஃதென்னவெனில் அது ஒரு ஹிந்து அரசரைப் பெற்றிருக்கின்றதென்பதுதான். அவர் ஹிந்து மத ஆசாரங்களைக்கொண்டு தெய்வ வழிபாடுடன் திருவிழாக்களையும் கொண்டாடி வருகின்றார். சண்டையில்லாத காலங்களில் பீரங்கிகள் வெடிமுழக்கம் செய்தால் துர்க்கா தேவி பூஜை ஆரம்பித்துவிட்டதென்று ஜனங்கள் அறிந்துகொள்ளுவார்கள். சிவ சதுர்த்தசி யன்றும் குண்டுகள் போடப்படும். இந்த இரண்டு தினங்களிலும் சிப்பாய்கள் யுத்த சின்னங்களுடன் அணிவகுத்து நிற்பார்கள். அவர்கள் அரைமணி நேரம் வெடி தீர்க்கும் குண்டுகளின் சத்தம் அந்தப் பள்ளத்தாக்கனைத்தையும் அதிரச் செய்யும். இவற்றையெல்லாம் கண்டு ஆனந்தமும் பெருமையுமடையும் ஹிந்து நேபாள தேசத்தை விட்டு இப்பால் வந்தால் அவனது மனதில் எழுந்த ஆனந்தமும் பெருமையும் கனவுபோன்று திடீரென்று மறைந்து விடும். சுதேசமித்திரன்.

# மாமியார் அவதாரம்.

(ஸ்ரீமதி காதம்பரீ)

முன்னொரு காலத்தில் நைமிசாரண்யத்தில் தபசுசெய்துகொண்டிருந்த சௌனகர் முதலிய மகரிஷிகள் சூதரை நோக்கி "ஏ பிராம்மணோத்தம! இக்கலியுகத்தில் பால்யாவஸ்தையிலிருக்கும் யுவதிகளுக்குப் புத்தி புகட்டுபவளும், குடும்ப நிர்வாகம் செய்பவளும், அவளுடைய நாமச்ரவண மாத்திரத்தாலேயே வதூக்கள் பீதியடையும்படி செய்யும் திறமையுள்ளவளுமான மாமியார் என்பவள் ஜனனமாவாள் என்று தெரிகிறதே. அவள் யார்? யாது லட்சணங்கள் அமைந்தவள்? அவள் குணங்கள் யாவை? அவளால் ஜனசமூகத்திற்கு எவ்விதத்தில் நன்மை? இவைகளை எங்களுக்கு விஸ்தரிப்பீராக" என்று வணக்கத்துடன் கேட்டுக்கொண்டனர்.

இங்ஙனம் முனிகளால் பிரார்த்திக்கப்பட்ட சூதர் சொல்லுகிறார்: "கேளீர் தபோதனர்காள்! கலியுகத்தில் மாமியார் என்பவள் ஏற்படுவாள். அது வாஸ்தவம்தான். அவளுடைய விருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள்:—

"ஒரு சமயம் மகாலக்ஷ்மியும் அவளுடைய நாட்டுப்பெண்ணாகிய சரஸ்வதி தேவியும் மேரு பர்வதத்தின் பாரிசத்தில் இருக்கும் உத்தியானங்களில் உல்லாசமாக சஞ்சரித்துக்கொண்டிருந்தனர். அச்சமயம் இவர்கள் வருகையால் பீதியடைந்து, ஆனால் அதி வாலிபத்தால் ஓடச் சக்தியற்று விழித்த ஓர் நரிக்குட்டியைக் கண்டனர். அதை இருவரும் அணுகி எடுத்து அதன் பயத்தை நிவர்த்திசெய்து அதனுடன் விளையாடிக் காலத்தைக் கழித்தனர்.

"இவ்விதமிருக்கையில் சந்தியா சமயமும் வந்தது. தேவ, யக்ஷ, கின்னர கணங்கள் க்ஷீராப்தி சென்று பரமாத்மாவை ஸ்துதிசெய்யப் புறப்படலானார்கள். ஆனால் பிரம்மதேவன் மட்டும் தயாராகவில்லை. அவருடைய புஷ்பக்குடலை சூனியமாக விருந்தது. ஆடைகள் உலரவில்லை. அர்க்கியாதிகள் சித்தம் செய்யப்படவில்லை. இவைகளைச் செய்பவளான சரஸ்வதி நரிக்குட்டியுடன் விளையாடிக்கொண்டிருந்தாள்.

"பரமாத்மா மகாவிஷ்ணுவை ஸ்துதிசெய்யக் கூட்டங் கூட்டமாக அசுர கணங்கள் வந்துகொண்டிருந்தார்கள். அவர் பக்கத்திலோ லக்ஷ்மி தேவியைக் காணோம்.

"பிரம்மாவிற்குக் கோபம் ஏற்பட்டது. இவ்வண்ணம் தங்கள் கடமையை மறந்து ஒன்று கூடி விளையாடும் அவ்விரு தேவிகளையும் சபிக்கலானார். சாபம் என்னவென்றால் "சமயாசமய மறியாது ஒன்றுசேர்ந்து விளையாடிக்கொண்டிருக்கும் உங்கள் அம்சங்களைக் கொண்டு பூலோகத்தில் உற்பத்தியாகிறவர்களான ஸ்திரீகளெல்லோருக்கும் தாரதம்மியமறியாத ஒற்றுமைக் குறைவு ஏற்படக்கடவது" என்பதே.

"கேளுங்கள் மகரிஷிகளே! இவ்வண்ணம் சபிக்கப்பட்ட மகாலக்ஷ்மியின் அம்சத்தைக் கொண்டு பிறப்பவளே மாமியார். இனி அவளுடைய குணங்களை வர்ணிக்கிறேன்.

"எவளொருவள் வது வீட்டிற்குள் நுழையும்பொழுதே தன் பிரசன்ன முகத்தையும் சிடுத்துக்கொள்ளுகிறாளோ, எவளொருவள் பேதையான வதுவின் அறியாச்செய்கைகளைப் பெரிய குற்றங்களாக பாவித்து அவைகளைக் கடுமையான குரலில் எடுத்துரைக்கிறாளோ அவளே மாமியாரெனப்படுவள். தான் செய்வதில் ஓர்விதப் பிசகாயினும் அறியாமல் தன் காரியங்களுக்கெல்லாம் நியாயம் உரைப்பவளே மாமியார்.

"அவள் எல்லாம் கடமையைக் கைப்பிடித்துச் செய்வதாகவே எண்ணுவாள். நாட்டுப்பெண் வேலையாட்களிடம் கொஞ்சம் தாராளமாகப் பரிசு கொடுப்பவளாயிருப்பின் அப்பெண்ணுக்குச் சிக்கனம் தெரியவில்லை என்று அவளைக் கண்டித்து புத்தி புகட்டித் தன் கடமையை நிறைவேற்றுவாள். தன் பெண் அவ்விதமிருப்பின் பெண்ணின் பெருந்தன்மையை ஸ்தோத்தரிப்பாள்.

"பர்த்தாவின் மாதா பிதாக்களுக்குக் கைங்கரியம் செய்வது மிகவும் பாக்கியமானது என்று நியாயமுரைத்து நாட்டுப்பெண்ணைத் தங்களிடமே வைத்துக்கொள்ளுவாள். சிறு வயதில் ஸ்திரீகள் புருஷன்வீடு சென்று அதிகம் புதல்வர்களைப் பெற்றுக் கஷ்டப்படுவதால் தேகாரோக்கியம் கெட்டுவிடுவதுமன்றிப் புதல்வர்களும் திடகாத்திரர்களாய் இருப்பதில்லை என்று வைத்தியர்கள் கூறும் நியாயத்தை உரைத்துத் தன் பெண்ணைத் தன்னிடமே வைத்துக்கொள்ளுவாள். அவள் தன் மாமியார் கர்நாடக மனிதரென்று அவள் சொல்லைத் தட்டி நடப்பாள். தன் நாட்டுப்பெண் புது நாகரிகமாக இருக்கப் பார்க்கிறாள் என்று அவளைத் தூற்றுவாள்.

"பகவானிடம் இருக்கும் பக்தியினால் தான் கோவிலுக்குப் போவாள். "பரமாத்மா எங்கும் இருக்கிறார். அவரை மனதிலேயே தியானித்தால் போதும்" என்று நாட்டுப்பெண்ணுக்குச் சொல்லுவாள்.

"பெண் எவ்வளவு அழகாகப் பாடுகிறாள். அதைக் கேளுங்கள்" என்று தன் பெண் பாடுவதைக் கேட்க எல்லாரையும் கூப்பிடுவாள். "குலஸ்திரீகள் தாசிமார்களைப்போல் பாட்டுகள் பாடுவது மிகவும் பிசகு" என்று நாட்டுப்பெண்ணைக் கண்டிப்பாள்.

"அற்ப விஷயங்களையும் கடுகடுத்து உரைப்பாள். நாட்டுப்பெண் பிரயாசையுடன் கிருககிருத்தியங்களைச் செய்திருந்தாலும் அதை எள்ளளவும் அங்கீகரிக்கமாட்டாள். அதில் எவ்விதம் குற்றம் உண்டென்று பார்ப்பாள்.

"ஆனால் இவ்விதம் செய்வது தன் கடமையென்றும், அப்பெண்ணைத் திருத்துவதே முக்கிய காரியமென்றும் எண்ணுவாள். தன்னைத் திருத்திக்கொள்வோமென்ற எண்ணம் அவளுக்கு உண்டாகவே மாட்டாது. இவ்வித குணங்களுள்ளவளே மாமியார்.

"நாட்டுப்பெண் தன் பர்த்தாவிற்கு அதிக சிச்ருஷை செய்தால் 'அவளுக்கு வெட்கம் கிடையாது. துணிச்சல்தனம்' என்பாள்.

"அப்பேதை வது வெட்கி நின்றால் 'தன் கணவனுக்கு வேண்டிய சிச்ருஷைகூடச் செய்யத் தெரியாத ஜடம்' என்பாள்.

"ஹே ரிஷிகளே! அவள் இனிய மொழி கூறினால் நாட்டுப்பெண் கர்வமடைந்து கெட்டு விடுவாள் என்று எண்ணுவாள். இவ்விதமானவளே மாமியாரெனப்படுவாள்.

"சில ஸ்திரீகள் மிகவும் பதிபக்தியினால் பிரம்ம தேவரின் சாபத்திலிருந்து விமோசனமடைந்திருக்கிறார்கள். அவர்கள் நாட்டுப்பெண்ணை அடைந்திருந்தபோதிலும் இவ்வித குணங்களில்லாதவர்களாய் மகாலக்ஷ்மியின் அம்சங்களே யாவார்கள். அப்படிப்பட்டவர்களைக் கலியுகத்தில் குலதெய்வங்களாகப் பூசித்துவருபவர்களுக்கு மோட்சம் கிடைக்கும் என்பதில் ஐயமில்லை. இதுதான் மாமியாரின் வரலாறு."

இவ்வண்ணம் சூதரால் சொல்லப்பட்ட அவ் வரலாற்றைக் கேட்டு மகரிஷிகள் திருப்தி யடைந்தனர்.

# தமிழ் மகளிரும் தாய் மொழியும்.

(ஸ்ரீமதி கு. கமலாம்பிகை அம்மாள்.)

தமிழ் மக்கள் முதலாவது தமது தாய் மொழியைப்பற்றி அறிந்திருக்க வேண்டியது இன்றியமையாததன்றோ! ஆகலின் முன்னர் தமிழ் மொழியைப் பற்றிச் சிறிது கூறுவாம்.

## தமிழின் பெருமை.

"மொய் தாரணி குழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால்
வைதாரையு மங்கு வாழவைப்போன்"

என்று முருகப்பெருமான் திருவருட் செல்வராகிய அருணகிரி நாதர் கந்தரலங்காரத்திலே அருளிச் செய்தமை காண்க. இத்தகைய தமிழ் மொழியின் பெருமையைப் பற்றிக் கூறவும் படுமோ! கூறவும் வேண்டுமோ! தமிழ் மொழியைப்பற்றிக்கூறும் ஆற்றல் அணுவளவேனும் சிற்றறிவுடையவளாகிய என்பாலில்லை. ஆயினும் ஆராய்ச்சியுடைய அறிஞர்கள் கூற்றைச் சிறிது கூறுவாம்.

தமிழ் மொழியானது அளவிட்டுக் கூறுதற்கரிய காலந்தொட்டு வழங்கப்பட்டு வருகிறது. தலை, இடை, கடை என்னும் முக்கழகங்களாலும் ஆராயப்பட்டது. மூவேந்தரால் போற்றப்பட்டது. இயல், இசை, நாடகம் என முக்கூறுடையதாய் வழங்கப்பட்டது. இலக்கண வரம்புடையது. இனிமையுடையது. உயர்ந்த நாகரிக முடையது. தமிழ் மொழியின் இலக்கண வரம்புபோல் வேறு எம்மொழியிலும் இல்லை என்பர்.

இன்பத்தில் உயர்ந்தது கல்வி இன்பம். இனிமையில் இனிமை செந்தமிழ் இனிமை. தமிழ் மொழியிலோ சொற்சுவை பொருட்சுவை ததும்பும் பாடல்கள் கடலெனப் பரந்து கிடக்கின்றன.

"பொன்னின் சோதி போதினுற்றம் பொலிவேல்போல்
தென்னுண்டேனிர்தீஞ் சுவை செஞ்சொற் கவியின்பம்"

என்று இராமாயணத்தில் மிதிலைக் காட்சிப் படலத்தில் கம்பர் சீதாப்பிராட்டியாரின் ஒப்பில் பேரழகின் பெருமைக்கும் செஞ்சொற் கவியின்பத்தின் அருமைக்கும் உவமை கூறுகின்று

ரென்றால் செந்தமிழ்க் கவியின் இனிமையைக் கூறவும் வேண்டுமோ? இந்த இனிமையானது நாவினால் உணரத் தக்கதல்ல, உள்ளத்தால் உணர்ந்தனுபவிக்க வேண்டியதே. செந்தமிழ்க் கவியின் இனிமையை உணராத உள்ளமும் உள்ளமோ! கல்லாத மக்களும் மக்களோ!

## தாய் மொழிப் பற்று.

ஒரு நாடு சிறந்து விளங்க வேண்டுமாயின் அந்நாட்டு மகளிர் கல்வி நாகரிகங்களிற் சிறந்து விளங்க வேண்டுமன்றோ? நாட்டு மக்கள் நன்னிலை அடையவேண்டுமாயின் அவர் தம் தாய் மொழியைப் போற்றி வாழ்தல் இன்றியமையாதது. தாய் மொழியைப் போற்றாத எந்த நாடும் முன்னேற்றமடைய மாட்டாது. தாய் மொழியைப் போற்றாதவர் தாய் நாட்டைப் போற்றமாட்டார்; தம்மை உணரமாட்டார்; தம் உரிமையுடன் வாழமாட்டார்; சுய உணர்வுடன் இருக்கமாட்டார்; அவரைப் பிறர் மதிக்க மாட்டார். தாய் மொழியைப் போற்றி வாழும் நாடுகளே தலை சிறந்து விளங்குகின்றன என்பது வெள்ளிடைமலை.

தாய் மொழி பிறமொழிகளிலும் பார்க்க மிக எளிதாகக் கற்றுக் கொள்ளலாமன்றோ? தாய் மொழி மூலம் கல்வி கற்று அறிவை வளர்ப்பது தாயாரால் வளர்க்கப்படுவது போலவும், பிறமொழி மூலம் கல்வி கற்று அறிவை வளர்ப்பது பிறரால் வளர்க்கப்படுவது போலவும் இருக்கும். கல்வியறிவுள்ள தாய்மாரால் வளர்க்கப்படும் குழந்தைகள் எளிதாக நன்னிலையடைவர். தமிழ்த் தாயானவள் கல்வி, வீரம், ஞானம் முதலான அருங்குணங்கள் ஒருங்கமையப் பெற்ற நற்றாயாய் விளங்குகின்றாள். இத்தகைய நற்றாய் இருக்க நாமேன் பிறரால் வளர்க்கப்படவேண்டும்? தாயின் எவ்வளவு அன்பு இருக்கிறதோ அவ்வளவு அன்பு தாய் மொழியிலும் இருக்கவேண்டும். தாய் மொழியைக் கற்குந்தோறும் அன்பும் வளர்ந்து கொண்டு வரும்.

தமிழ்க் கல்வியே தமிழ்ப் பெண்களுக்குரிய கல்வியாகும். அதுவே அவர்களுக்குத் தகுந்த அறிவையும் பெண்மைக் குணத்தையும் தருவதாகும். தமது சொந்தப் பழக்க வழக்கங்கள் மூலம் சீர்திருத்தமாய் வாழ்வதற்கும் தாய் மொழிக் கல்வியே சிறந்ததாகும். பண்டைக் காலத்திருந்த தமிழ் மகளிர் தாய் மொழியைப் போற்றி வாழ்ந்து தலை சிறந்து விளங்கினர். தமிழ் மொழியைப் போற்றுவார் குன்றவே தாய்மொழிக் கல்வி குன்றிற்று. தாய்மொழிக் கல்வி குன்றவே பெண்கள் கல்வியும் குன்றிற்று. தமிழ்ப் பெண்கள் தாய் மொழியை மறக்கவே தாய் நாட்டையும் மறந்தனர்; தம்மை மறந்தனர்; சுய உணர்வை இழந்தனர்; தம் கடமையை மறந்தனர்; உரிமையை இழந்தனர்; அடிமைத் தன்மையை அடைந்தனர். சுய உணர்வென்பது அவர்கள் உள்ளத்திலேயே ஒடுங்கி இருப்பது. தாய் மொழிக் கல்வி நிரம்பப் பெறவே அது அவர்களிடை அரும்பும். பெண்களின் உரிமை யென்பது ஒருவரால் தூக்கிக் கொடுக்கப்படுவதல்ல; போராடிப் பெற வேண்டியது மல்ல; அது அவர்கள் கல்வி அறிவு பெற்றுத் தத்தம் கடமைகளைச் செவ்வனே ஆற்றுவார்களானால் அவர்களை அடைவதற்கு வழி வினவிக் கொண்டு வரும். பெண்களின் அடிமைத் தன்மை பென்பது அவர்கள் உள்ளத்தினமைப்பைப் பொறுத்தது. குறைந்த அறிவே அடிமைத் தன்மை அடையச் செய்வது; அவர்கள் உயர்ந்த அறிவு பெற்றுப் பரந்த நோக்கமு மடையவே தம்மை அறிவார்கள்.

## ஆங்கிலம்.

தாய்மொழியைக் கற்கவேண்டு மென்றால் பிறமொழிகளைக் கற்கவேண்டா மென்பதல்ல.

முதன்மையாகத் தாய்மொழியைக் கற்க வேண்டுமென்பதே. கற்க விரும்புவோர் வேறு எத்தனை மொழிகளையும் கற்கலாம். அவற்றுள் ஆங்கிலம் நமது அரசியல் மொழியாயிருத்தலின் அதனைக் கற்க வசதியுடையோர் கற்றுக் கொள்ளலாம். அரசரெப்படி ஊருமப்படி என்றவாறு அரசியல் மொழியைக் குடிகள் அறிந்திருக்கலாம். இன்னும் அது பல நாடுகளில் பரந்த ஒரு பொதுமொழியாயிருக்கிறது. அதனால் அதனை அறிந்திருந்தால் தற்கால அரசியல் நடவடிக்கைகளையும் உலக நடவடிக்கைகளையும் நன்றாய் அறியலாம். பிறமொழிகளிலிருக்கும் நூல்கள் பல ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கின்றன. அவற்றில் அரிய நூல்களைத் தமிழில் மொழி பெயர்க்கலாம். தற்காலம் அரசியல் முறைகள் முதலிய யாவும் ஆங்கிலத்தில் நடைபெறுவதனால் அதனை எழுதப் பேச வாசிக்க அறிந்திருப்பது நல்லது. வசதியில்லாதவர்கள் தாய்மொழியை நன்றாகக் கற்றுக்கொள்ளலாம்.

### தற்கால நாகரிகம்.

தற்காலம் தாய்மொழிக் கல்வியைச் சிலர் நாகரிகக் குறைவெனக் கருதிக் கற்க விரும்புவதில்லை. சில பிள்ளைகள் விரும்பினாலும் பெற்றோர் கவனிப்பதில்லை. ஆனால் பிறமொழிகளிலோ கண்ணுங் கருத்துமாயிருப்பார்கள். சில தாய்மாருக்குப் பிள்ளைகள் தமிழில் என்ன படிக்கிறார்கள் என்பதும் தெரியாது. சிலருக்கு ஆங்கிலக் கல்வியைப் பற்றி மாத்திரம் ஒருவாறு தெரியும். பொதுவாகப் பிள்ளைகளின் படிப்பைத் தாய்மார் அறிந்திருப்பார்கள். முக்கியமாகத் தாய்மாரே தாய் மொழிப் படிப்பைப் பற்றி அறிந்திருப்பார்கள். சில பிள்ளைகள் பள்ளிக்கூடப் படிப்பு நிறுத்தியதும் வீட்டிலிருந்து தையல், பின்னல், ஓவியம் வரைதல் முதலானவற்றை ஊக்கமாகப் பழகுகிறார்களேயன்றித் தமிழை கவனிக்கிறார்களில்லை. இவர்கள் தையல் முதலியவற்றையும் அறிந்திருக்கத்தான் வேண்டும். ஆனால் முதன்மையாகத் தமிழ் மொழியையன்றோ கற்கவேண்டும்.

பெண்கள் கல்விக்கும், நாகரிகத்திற்கும் மூக்குக் கண்ணாடியும், போதுகாட்டியும், (கைக்கடிகாரமும்) அடிபுதையரணும் (சப்பாத்தும்) அறிகுறிகளாகமாட்டா. அவற்றுடன் ஆங்கிலத்தில் எழுதவும் பேசவும் அறிந்திருந்தாலும் அறிவுக் கல்வியாக மாட்டாது. தற்காலம் மூக்குக் கண்ணாடியும் போதுகாட்டியும் (கைக்கடிகாரமும்) அடிபுதை அரணும் (சப்பாத்தும்) அணிந்து ஆங்கிலத்தில் எழுதவும் பேசவும் கற்றவுடன் தம்மைத்தாமே கல்வியறிவாலும் நாகரிகத்தாலும் மேம்பட்டவர்கள் என்று கருதி மகிழும் மகளிரும் உளர். அன்னாரைக் கண்டு அவர்தாமே கல்வி நாகரிகங்களில் தலை சிறந்தவரென்று கருதி மயங்குவார் சிலர். ஏமாந்து போவார் வேறு சிலர். இவர்களிற் சிலருக்குத் தமிழ் தெரியாது. இவர்கள் தமக்குத் தமிழ் தெரியாது என்பதனால் ஆங்கிலந் தான் பெரிதும் தெரியுமெனப் பிறரெண்ணி மதிப்பார்கள் எனக் கருதுகின்றனர். இவர்களிற் சிலர் இசையும் அறிந்திருப்பார்கள். ஆனால் தமிழில் தெரியாது. தமிழில் கற்றால் நாகரிகக் குறைவென்பதே இவர்கள் கருத்து. இவர்களிற் சிலர் ஆங்கிலம் அறியாதவர்களுடனும் பல ஆங்கிலச் சொற்களைக் கலந்து பேசி அவர்களைத் திகைக்கச் செய்கின்றனர். பலர்க்கும் விளங்கப் பேசுவதே நாகரிகமன்றி மயங்கப் பேசுதல் நாகரிகமாகாது. இவர்களைக் கண்டு ஆங்கிலம் அறியாத சிலரும் ஆங்கிலச் சொற்களைக் கலந்து பேசுவதே நாகரிகமெனக் கருதிப் பல ஆங்கிலச் சொற்களைக் கலந்து பேசித் தமிழ் மொழியின் இனிமையையுங் கெடுக்கின்றனர். இவர்கள் தமிழ் கற்றவ

ருடன் அதிகம் பேசுவதில்லை. அவர்களுடன் கலந்து பழக விரும்புவதுமில்லை. பொதுவாக இவர்களிடம் சமரசநோக்கம் குறைவு என்று கூறலாம். இவர்களைத் தமிழராயுங் காணேம், ஆங்கிலேயராயுங் காணேம். கறுத்த ஆங்கிலேயரென ஒரு வகுப்பாராயிருக்கின்றனர் போலும். இவர்கள் இப்போதுள்ள வகுப்பு வேற்றுமைகள் போதாவென்று தாமும் ஒரு வகுப்பை வகுக்கின்றனரோ? உலகப்பற்றைத் துறக்கும் துறவிகள் போலத் தாய்மொழிப் பற்றை அறவே துறப்பாரும் உளர். இவர்களைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை.

பிற நாடுகளுக்குச் சென்ற சில பெண்கள் திரும்பித் தாய் நாட்டிற்கு வருவதற் கிடையில் தாய் மொழிச் சொற்கள் பலவற்றை மறந்து விடுகின்றனர். இவர் நாடோறும் பேசும் தாய்மொழிச் சொற்களை மறந்து விடுகிறார்களாயின் தூரத்தே யிருக்கும் தாய்நாட்டை எவ்வாறு மறந்து விடாது திரும்பி வந்து விடுகின்றனரோ அறியோம். பிறநாடு புகுந்து அந்நாட்டவருடன் ஒன்றி வாழுங்கால் அவர்தம் மொழிச் சொற்கள் மற்றவர்பாற் கலத்தல் இயல்பே. ஆயினும் அங்ஙனம் கலந்து பேச விரும்பிப் பல பிறமொழிச் சொற்களை வலிந்து கலந்து பேசுகின்றனர். இன்றியமையாத பிற மொழிச் சொற்களை வலிந்து கலந்து பேசுதல் எவ்வாறெனின் இனிமையுள்ள கரும்பிருக்க வலிமையான இரும்பு கடித்தலை யொக்கும். இவர்கள் இவ்வாறு வலிந்து கலந்து பேசுவதின் இரகசியத்தை யறிய வாசகர்கள் பெரிதும் விரும்புவார்கள். அது என்னையோவெனின் பிறர் தம்மை நாகரிக முடையவரென மதிக்க வேண்டு மென்பதே.

இவர்கள் நிலை இவ்வாறிருக்க இனி இவர்களின் குழந்தைகளைப்பற்றிச் சிறிது கவனிப்போம். இவர்கள் குழந்தைகளை அழைக்கும் பொழுதே பேபி (Baby) என்று அழைக்கத் துவக்குகின்றனர். பேபி (Baby) என்று அழைப்பதற்கும் குழந்தாய் என்று அழைப்பதற்கும் என்ன வேறுபாடு? அவ்வாறு அழைப்பதனால் குழந்தைகளில் என்ன உயர்வு உண்டாகிறது? இன்னும் தாய்மொழியின் இனிமையான ஒலியைக் கேட்கமாட்டாதவராகின்றனர். இவர்களிற் சிலர் குழந்தைகளின் தாய் மொழி உணர்வின் முளையைக் கிள்ளியே வளர்ப்பார்கள். இவர்கள் குழந்தைகளைப் பிறமொழிகளிலேயே பேசவும் பழக்குகிறார்கள். இவர்கள் தங்கள் குழந்தைகள் பிறமொழிகளிற் பேசுவார்களே யன்றித் தமிழில் பேசமாட்டார்கள் என்று பெருமையாகப் பேசிக் கொள்வர். இதனால் என் பெருமை?

தாய் மொழிப் பற்றில்லாத தாய்மாரால் வளர்க்கப்படும் குழந்தைகளிடமும் தாய் மொழிப்பற்றில்லை; சுய உணர்வில்லை. அவர்கள் தமிழ்மொழியின் அருமையறியார்; பெருமையறியார்; அது கற்ற பெரியோரை மதியார். சிலர் தமிழ் கற்றவரை இழிவானவரெனக் கருதுகின்றனர். தமிழ் கற்றவரை இழிவானவரெனக் கருதுவது முதல் அது கற்றவரையும் இரண்டாவது தமிழ்மொழியையும் இழிவாகக் கருதுவது போலத் தோன்றினும் முடிவில் தம்மையே அவ்வாறு கருதுகின்றவராகின்றனர். இவர்கள் ஆங்கிலம் மாத்திரம் படித்தாற் போதுமென்பர். இவர்களுக்குப் பிறநாடுகளின் வரலாறுகள் தெரியுமேயன்றித் தமிழ் நாட்டைப்பற்றித் தெரியாது. தமிழிலுள்ள நூல்கள் அறிய வேண்டுமாயின் மொழிபெயர்ப்பில் படிக்கலா மென்பர். மொழி பெயர்ப்பில் இவ்வளவு இனிமை காண முடியாது. தாய் மொழியிலிருக்கும் நூலை மொழி பெயர்ப்பில் அறிய விரும்புவது தலையைச் சுற்றி மூக்கைத் தொடுதலை யொக்கும். இவர்

கள் தமிழிலிருக்கும் திருவாசகம் திருக்குறள் முதலிய அரிய நூல்களைக் கற்று இன்பம் அடைய மாட்டாதவர்களாயிருக்கின்றனர். இவர்கள் இவ்வாறிருக்கப் பிறநாட்டார் இந்த அரிய நூல்களை மொழிபெயர்த்துக் கற்று இன்பம் அடைகின்றனர். இது எவ்வாறெனில் தாமரையில் இருக்குந் தேனை அந்தத் தண்ணீரிலிருக்கும் தவளை அறியமாட்டாதிருப்ப, தூரத்திலிருக்கும் வண்டுகள் வந்து தேனை எடுத்துச் சென்று உண்டு இன்பமடைதலை பொக்கும். இவர்கள் தமிழ் மக்களாகப் பிறந்தும் தமிழ் மொழியைக் கல்லாதிருப்பது இவர்களின் தவக் குறைவோ?

சில பெண்கள் ஆடை அணிகளை விலையுயர்ந்தனவாக மாற்றி மாற்றி அணிவதனால் மாத்திரம் தம்மைச் சீர்திருத்த முடையவாாகவும் முன்னேற்ற மடைந்தவாாகவும் கருதுகின்றனர். ஆடை அணிகள் மாத்திரம் ஒருவரை முன்னேற்ற மடையச் செய்யமாட்டா. கல்வியறிவிருந்தால் எல்லாம் தாமே வரும். தாய் மொழிக் கல்வியே சீர்திருத்தம், முன்னேற்றம் முதலிய எல்லாவற்றிற்கும் அடிப்படையாகும். பொதுவாகத் தற்கால நாகரிகத்தில் தாக்குண்டவர்களிடம் தாய் மொழிப் பற்றில்லை; உயர்ந்த கல்வியில்லை; விரிந்த அறிவில்லை; பரந்த நோக்கமில்லை; தாய் நாட்டின் நினைவில்லையென்று கூறலாம். தற்கால நாகரிகத் திருவிளையாடல்களை யாரே கூறவல்லார்! கம்பர் புகழேந்தி போன்ற புலவர்களாலாகுமன்றி மற்றையோரால் ஆகாது.

### பண்டைக் காலப் பெண்கள் நிலை.

பண்டைக் காலத்திருந்த பெண்கள் தாய் மொழியில் மிகுந்த பற்றுடையவாாயிருந்தனர். அதனால் அவர்கள் தாய் நாட்டிலும் மிகுந்த பற்றுடையவாா யிருந்தனர். அவர்கள் கல்வி யறிவு நிரம்பப் பெற்றிருந்ததனால் தங்கள் கடமைகளைச் செவ்வனே ஆற்றினர். அதனால் அக்காலத்தில் தமிழ்நாடு தலை சிறந்து விளங்கிற்று. அவர்களிற் சிலர் நமக்குதவுமாறு அரிய நூல்கள் பலவற்றையும் செய்து வைத்தனர். தற்காலப் பெண்கள் சிலருக்கு அவர்களின் பெயரும் தெரியாது; அவர்கள் இயற்றிய நூல்களின் பெயரும் தெரியாது; தெரிந்தாலும் வாசித்துணரமாட்டார்; வாசித்தாலும் அவற்றின் ஆழ்ந்த பொருள்களை விளக்கத்தக்கவர் மிகச் சிலரே.

### தற்காலப் பெண்கள் நிலை.

இடைக் காலத்தில் தமிழ்க்கல்வி அவ்வளவு விரும்பிப் போற்றப்படவில்லை. ஆயினும் தற்காலம் தமிழ்மக்கள் தம் தாய்மொழியை நினைக்கத் தொடங்கியிருக்கின்றனர். அதனைப் பலரும் விரும்புகின்றனர். பெண்பாலாரால் பெரிதும் விரும்பிக் கற்கப்படுகிறது. சில பெண்கள் பண்டிதைகளாயும் இருக்கின்றனர். அவர்கள் கட்டுரை வாயிலாகவும் உபன்னியாச வாயிலாகவும் மற்றையோரையும் தாய் மொழியை விரும்பிக் கற்கும்படி தூண்டுகின்றனர். இவர்களின் தாய்மொழிப் பற்று பெரிதும் மகிழ்வடையத் தக்கதாகும். பெண்பாலரால் தாய் மொழி விரும்பிக் கற்கப்படுவதனால் இனித் தமிழ் மக்கள் தாய்மொழியைப் போற்றுவார்களென எதிர்பார்க்கலாம். தாய்மொழிக் கல்வி பாவுமாயின் தமிழ்நாடு நன்னிலையடையுமென்பதற்கைய மில்லை.

### பெண்கள் கடமை.

தற்கால நாகரிகத்தின் நிலைகண்டு தமிழ்த் தாய் நாணமடைகிறாள்; வருந்துகிறாள்; ஓலமிடுகிறாள். நோயுற்ற காலத்தில் தாய்மார் பெண்மக்களை விரும்புவதுபோல அவளைக் கவனிக்க வேண்டியது பெண்மக்கள் கடமை. தானும் பெண்மக்களை எதிர்பார்க்கிறாள். சகோதரிகளே! தற்கால நாகரிகப் புயலால்

தாக்குறாது நிமிர்ந்து நில்லுங்கள் ; தாய்மொழியைப் போற்றிவாழ நீங்களே முன்வர வேண்டும். பிறநாடுகளிற் பெண்கள் எவ்வாறு தத்தம் தாய்மொழிகளைப் போற்றி வாழ்கின்றனர் என்பதை நோக்குங்கள். அவர்கள் பிறமொழிகளை நன்றாகக் கற்றிருந்தாலும் தாய் மொழியில் மிகுந்த பற்றுடையோராயிருக்கின்றனர். தமிழ்ப்பெண்களிற் பிறமொழி கற்றவருட் பெரும்பாலாருக்குத் தாய்மொழிப் பற்றில்லை. நீங்கள் தாய்மொழிக்குத் தொண்டு செய்வதையே உங்கள் நோன்பாகக் கொள்ளுங்கள். நித்திய கருமங்களை நாடோறும் தவறாது செய்வது போலவே தாய்மொழித் தொண்டையும் ஒருநாளும் தவறாது செய்தல் வேண்டும். பெருஞ்செல்வ வாழ்க்கையில் அமர்ந்திருக்கும் போதும் சோம்பலுறாது வருந்திப் பலநூல்களைக் கற்றுத் தமக்கும் பிறர்க்கும் பயன்படும்படி வாழுங்கள். அல்லும் பகலும் தமிழ்த்தாயை நினையுங்கள். எங்கே சென்றாலும் எந்தச் சமயத்திலும் நீங்கள் தமிழ்த்தாயையும் தாய் நாட்டையும் மறந்து விடக் கூடாது. பிறரும் தாமாகவே உங்களைத் தமிழ்மக்கள் என அறியத்தக்கதாக வாழுங்கள். தமிழ் மக்கள் பண்டைக்காலந் தொட்டுச் சீர்திருத்தமாக வாழ்கின்றனர் என்று அறியத் தக்கவாறு நடவுங்கள் எல்லாவற்றிற்கும் பிறரைப் பின்பற்றியுழலாதீர்கள்.

எந்த மொழியையும் எழுதும்பொழுதும் பேசும்பொழுதும் அதனதன் தனித்த நிலையிற் காணப்படுதல் போலக் கலப்பில் இனிமைகாண முடியாதன்றோ? தமிழை எழுதும்பொழுது பிறமொழிச் சொற்களைக் கலவாது எழுதப் பழகவேண்டும். பிறமொழிச் சொற்களைக் கலந்து வழங்கினால் தமிழ்ச் சொற்கள் பல நாளடைவில் வழக்கிலில்லா தொழியுமன்றோ! அதனாற் தமிழ் மொழி வளம்படாதொழியுமன்றோ! இன்றியமையாத பிறமொழிச் சொற்களை வீணே கலந்து பேசுதல் கூடாது. தமிழ் மொழியைத் தனித்த நிலையிற் பேசும் பொழுது செவிக்கும் இனிமை பயக்கும்; பலர்க்கும் விளங்கும்.

உங்கள் குழந்தைகட்கும் தாய்மொழிக் கல்வியை ஊட்டுங்கள். பெண்குழந்தைகள் தாமாகவே தாய்மொழியை விரும்பியும் படிப்பார்கள். ஆண் குழந்தைகள் உத்தியோகக் கல்வியின் பொருட்டுத் தாய்மொழியைக் கவனியாதும் விட்டு விடுவார்கள். ஆகையால் முக்கியமாக அவர்களைத் தாய்மொழிப் பற்றுடையவர்களாகச் செய்ய வேண்டியது தாய்மாரின் கடமை. தமிழ்மொழியைத் தற்கால நிலைக்கேற்றவாறு வளமுறச் செய்ய வேண்டியது அறிஞர்கள் கடமை. அதனைப் போற்றி வாழுதல் நமது கடமை. தாய்மொழியை வளர்ப்பதற்குப் பிறரை எதிர்பார்க்க வேண்டியதில்லை. அது பிறரால் வளங்குறைகிறதென்று அவர் மீது பழி சுமத்த வேண்டியதில்லை. நாம் விரும்பிப் போற்றுவோமாயின் பிறர் தடுக்க வருகின்றனரா?

அன்புடனும் அடக்கத்துடனும் சுய உணர்வுடனும் தமிழ்த் தொண்டாற்றுங்கள். சுயமரியாதையுடன் வாழுங்கள். தமிழ் அறிஞர்களுக்கு என்றுங் கடமைப் பாடுடையவாயிருங்கள். உங்கள் கடமைகளை யெல்லாம் பிறர் சொல்ல வேண்டியதில்லை. நீங்களே அறிந்து ஆற்ற வேண்டும்.

## முடிவுரை.

தமிழ்த்தாய்மார்களே! எழுங்கள்! எழுங்கள்!! தாய்மொழியைப் போற்றுங்கள்; தமிழின்பம் நுகருங்கள்; அதனை வளர்க்க முன்வாருங்கள்; உங்கள் கடமைகளை ஆராயுங்கள்; ஆராய்ந்து ஆற்றுங்கள்; ஆற்றுவோர்க்கியன்ற உதவி புரியுங்கள்; கருதிய கருமங் கைகூடுமட்டுங் கண்ணுங் கருத்துமாயிருங்கள்; மெய் வருத்தம் பாராதீர்கள்; விடாமுயற்சியுடன்

உழையுங்கள்; சமாச நோக்குடன் உழையுங்கள்; ஒத்துழையுங்கள். நீங்கள் உங்கள் கடமைகளை நன்ருய் ஆற்றுவீர்களாஞல் தமிழ் மணம் உலகெங்கும் கமழுமன்ரே!

தமிழ் மொழிப்பற்றையும் அதனை வளர்க்கத்தக்க வல்லமையையும் எமக்குத் தரும்படி முருகப் பெருமான் திருவடியினை வணங்குவோமாக!

# வழக்கம்.

ஒரு சிறு சம்பாஷணை

(ஸ்ரீமதி K. கமலாம்பாள்.)

ஒரு நேர்த்தியான மாலைப்பொழுதில் ரங்கம் என்பவள் ஒரு வீதி வழியாகச் சென்று கொண்டிருந்தாள். அவ்வீதியில் ஓர் வீட்டின் தெருத்திண்ணையில் உட்கார்ந்திருந்த ராஜம் என்பவள் அவளைப் பார்த்தாள். ஆனல், அவளைச் சரியானபடி அடையாளங் கண்டுபிடிக்காதவள் போல், சற்று யோசித்துக்கொண்டிருந்தாள். இதற்குள் ரங்கம் இவள் வீட்டிற்குவந்து "ஏண்டி ராஜம், என்னுடன் பேசக்கூடாதா? நானும் தெருக்கோடியில் வரும்பொழுதே அந்தரங்க சிநேகிதியாகிய நீ கூப்பிடுவாயென்றே நினைத்திருந்தேன். மேலும் நீ என்னைப் பார்க்கவில்லையோ என்றும் நினைத்தேன். ஆனல் அரை நாழிகையாக என்னை நீ உற்றுப் பார்த்தும் பாராதவள் போல் இருக்கக் காரணம் என்ன? அப்படி நான் செய்த பிசகுதானென்ன? நீ கூப்பிடாவிட்டாலும் என்னுடைய ஆசையானது உன்னைப் பார்க்கும்படி தூண்டியபடியால் நாஞகவாவது உன்னுடன் பேசுகிறேன்.

ராஜம்:—என் பிரிய தோழியாகிய ரங்கம்! இரண்டொரு நிமிஷங்களுக்குள் என் மனோபாவத்தைத் தெரிந்து கொள்ளாமல் ஒரு சிறு பிரசங்கம் செய்து முடித்து விட்டாயே! உன்னுடன் பேசாமலும் உன்னைக் கூப்பிடாமலும் நான் எப்பொழுதாவது இருந்ததுண்டா? நீ இதை யோசிக்க வேண்டாமா? உன்னை இப்பொழுது பார்த்த யார் தான் உன்னை முன் பார்த்த ரங்கம் என்று சொல்ல முடியும்? நான் உன்னைப் பார்த்து சுமார் இரண்டு வருஷங்களுக்கு மேலாகிறது. நீ இப்பொழுதிருக்கும் நிலைமையில் உன்னைக் கண்டு கொள்ள முடியவில்லை. நீ தெருக் கோடியில் வரும்பொழுதே நான் பார்த்தது உண்மைதான். ஆனல் நீ என்று நினைக்கவில்லை. யாரோ உபாத்தியாயினி என்று நினைத்திருந்தேன். அதனல் தான் உன்னை வரவேற்கவில்லை. அதனல் உன் சிறு பிரசங்கத்திற்கு இடமேற்பட்டது. நீ பழைய ரங்கமில்லை. இப்பொழுது புது ரங்கமாக மாறிவிட்டாய்.

ரங்:—ராஜம்! நீ சொல்வது ஆச்சரியமாக இருக்கிறதே! என்னைக் கண்டு கொள்ள முடியாத மாறுதல் என்னிடம் என்ன இருக்கிறது? சொல் பார்ப்போம்!

ராஜ:—உனக்கு சுமார் இருபது வயதாகியும் நீ ருதுவாகாத பெண்ணைப்போல் மாம்பழக் கட்டும், கழுத்தின்கீழ் சாண்வரையில் திரந்தும் தோள்பட்டையை விட்டு இறங்காமலும் அதில் சுமார் ஒரு ஆள் தாராளமாக நுழையக்கூடியதுமான கைகளையுடைய ரவிக்கையும், முகத்தில் பௌடரும், தலையைத் தூக்கிவாரிக் கோணல் வகுட்டோடு

கூடிய பின்னலையும் பார்த்த யார் தான் உன்னைக் கண்டு கொள்ளமுடியும்?

ரங்.:—இதற்குத்தானு அடையாளந் தெரிய வில்லை என்றாய்? நீ சுத்த கர்னாடகமாகவே இன்னமும் இருக்கிறாய். இதெல்லாம் இந்த நாள் வழக்கமென்று உனக்குத் தெரியாது போலிருக்கிறது. நீயும் என்னைப்போல் ஒரு தரம் பட்டணம் (Madras) போய் வந்தால் அங்கிருப்பவர்களைப் பார்த்தபிறகு இவ்வளவு தூரம் பேசமாட்டாய்.

ராஜ.:—இந்த நாள் வழக்கம் நானறியேனென்பது உண்மைதான். தற்காலம் நான் உன்னைப் போலுள்ள நவீன நாகரிகக்காரர்கள் எத்தனை பெயர்களையோ பார்த்திருக்கிறேன். அவைகளுக்காகப் பட்டணத்திற்குப் போக வேண்டிய அவசியமில்லை. ஆனல் எனக்கு உன்னைப்போல் அவைகளை அனுசரிக்க இஷ்டமில்லை. அதிருக்கட்டும், வழக்கம் என்று சொன்னையல்லவா? அந்த வழக்கம் என்றால் என்ன? அதை முதலில் சொல், பார்ப்போம்.

ரங்.:—அதெல்லாம் எனக்குத் தெரியாது. இந்த நாளில் எல்லோரும் இப்படித்தான் செய்துகொள்ளுகிறது வழக்கம். அதனல் நானும் அப்படியே செய்துகொண்டிருக்கிறேன். வழக்கமென்பது இன்னதென்று நீதான் சொல்லேன்!

ராஜ.:—எனக்கு உன்னைப் போல் நாகரிகம் தெரியாது. அதன்படி பேசவும் தெரியாது. ஆயினும் எனக்குத் தெரிந்தமட்டில் வழக்கம் என்பதைப் பற்றிச் சொல்லுகிறேன் கேள். வழக்கமென்பது நல்லதோ கெட்டதோ எதை நாம் சேர்ந்தாப் போல் சிலநாட்கள் செய்கிறோமோ அதுவே பழக்கத்தில் வந்துவிடும். உலகத்தில் எல்லோருமே எக்காரியத்திற்கும் வழக்கம் வழக்கம் என்று சொல்லுகிறார்கள். நல்லதிற்கும் வழக்கம் தான் கெட்டதிற்கும் வழக்கம்தான். நீ இந்த நாள் வழக்கம் என்று சொல்வது போல் சிலர் உலக வழக்கமென்றும், சிலர் தேச வழக்கமென்றும், சிலர் ஊர் வழக்கமென்றும், சிலர் பழைய காலத்து வழக்கமென்றும், சிலர் புதுநாள் வழக்கமென்றும், சிலர் கிராமாந்திர வழக்கமென்றும், சிலர் நகர வழக்கமென்றும், சிலர் வீட்டு வழக்கமென்றும், சிலர் குடும்பவழக்கமென்றும் சொல்வதை நீயும் கேட்டிருப்பாய். நாம் உண்பதற்கும், உடுப்பதற்கும், குழந்தைகளை வளர்ப்பதற்கும் வழக்கமென்றே சொல்லுகிறோம்.

உதாரணமாக ஒருவன் தினந்தோறும் அதிகாலையில் எழுந்து நித்திய கர்மானுஷ்டானங்களை முடித்துக் கடவுளைப் பூஜித்து வருகிறான். அதேமாதிரி அவன் சுமார் பத்துப்பதினைந்து தினங்கள் செய்வானுனல் அவனுக்கு அதுவே வழக்கமாய்ப் போய் விடும். ஒருநாள் அப்படிச்செய்ய முடியாவிட்டால் அதனல் அவன் அதிக கஷ்டப்படுவான்.

அப்படிக்கின்றி ஒருவன் தினம் 10-மணிக்கு எழுந்திருந்து தந்த சுத்தி செய்யக் கூட சாவகாசமின்றித் தன்னைப் போலுள்ள சிநேகிதர்களோடு சீட்டாட ஆரம்பித்தானுனல் அவனுக்கு அன்னங்கூட அவசியமில்லை. அதுபோல் அவனுக்கு மேற் சொன்ன தினங்கள்கூடத் தேவையில்லை. இன்னும் சீக்கிரமாகவே வழக்கத்தில் வந்து விடும். அப்படிச்செய்ய ஒரு நாள் தவறினல் அவன் படும் பாடு கடவுளுக்கே தெரியும். முதலில் சொன்னதை நல்லவழக்கமென்றும் இரண்டாவது சொன்னதைக் கெட்டவழக்கமென்றும் நாம் சொல்லுவோம்.

இதற்கு ஒரு சிறிய திருஷ்டாந்தம் சொல்லுவர் எங்கள் ஊரில் ஒரு சாஸ்திரிகள் இருந்தார். அவருக்கு கணேசன் என்று ஒரு பிள்ளையிருந்தான். அவன் நல்ல யோக்கியமான பையன். அவனுக்குச் சுமார் இருபது வயதிருக்கும். அவன் உத்தியோகத்தின் நிமித்தம் பம்பாய்க்குப் போனான். போய் சுமார் இரண்டு மாதத்தில் அவன் தகப்பனாருக்கு உடம்பு அதிக அசௌக்கியமாயிருந்தபடியால் அவன் திரும்பி வரும்படியாயிற்று. அப்பொழுது அவனைப்பார்த்த அவன் பெற்றோருக்கே அடையாளங் கண்டு பிடிப்பது கஷ்டமாயிருந்தது. ஏனெனில் அவன் தலைக்கிருப்பும் சுருட்டுக் குடிப்பதும் எச்சல் தீட்டு ஒன்றும் தெரியாதிருப்பதும் இன்னும் அவ்விடம் கெட்ட வழக்கங்கள் என்னென்ன உண்டோ அவைகளெல்லாம் இவனுக்கு அதிசீக்கிரத்தில் வந்துவிட்டன. அதைக் கண்ட அவன் தாயார் "என்னடா கணேசா! உன்னைப் பார்த்தால் முன் கணேசனாகத் தோன்றவில்லையே? பிராமணனுடையதேஜஸ் உன் முகத்தில் கொஞ்சங் கூடயில்லையே! சரியாய் நாஸ்திகனாட்டமாயிருக்கிறதே"! என்று அதிக வருத்தத்துடன் சொன்னாள். அப்பொழுது அவன் "அம்மா! உனக்கென்ன ஒன்றும் தெரியவில்லையே! இதெல்லாம் அந்த ஊர் வழக்கம். இத்தனை நாள் இந்த ஊரில் செய்யும் வழக்கப்படி நடந்தாய்விட்டது. அந்த ஊருக்குப் போனபிறகு அந்த வழக்கப்படி நடக்க வேண்டாமா? எந்தெந்த ஊரில் என்னென்ன வழக்கமோ, அதைத் தான் நாமும் அனுசரிக்கவேண்டும்" என்று சொன்னான். அவனுடைய பேதமையைப் பார்! அந்த ஊர் வழக்கமாம். அந்த ஊரில் செய்வது நாமும் செய்து தானாக வேண்டும் என்ற கட்டாயம் ஏதாவதுண்டா? அல்லது அதற்காக தண்டனைகள் செய்வார்களா? ஏன், நம்மைப் பார்த்துதான் அவர்கள் நம்முடைய வழக்கத்தைச் செய்து கொள்ளட்டுமே! நாம் எந்தக் காரியத்தையும் ஒருவரைப் பார்த்து அதை வழக்கத்திற்குக் கொண்டுவரப் பிரயாசைப்படக்கூடாது. நாம் பிறரைப்பார்த்து அவர்போல்நடக்க ஆரம்பிக்கிறதாயிருந்தால் முதலில் அதனால் நமக்கு என்ன பிரயோஜனம்? அப்படி நடக்க நமக்குக் கட்டுமா? அது நம்முடைய மனதிற்குப் பிடித்ததாயிருக்கிறதா? அது நம் அந்தஸ்திற்கு ஏற்றதா? என்பதை கவனித்து அது நமக்குக் கட்டுமானதாயும் அதினால் ஏற்கனவே செய்துகொண்டிருந்த வழக்கத்தைவிட நமக்குப் பிரயோஜனமானதாயும் பார்ப்பவர்களுக்கு ஏற்றதாயும் இருந்தால் மட்டும் சமயத்திற்குத் தக்கபடி கொஞ்சம் மாற்றிக்கொள்ளலாமே யொழிய ஒரே அடியாகப் புதிய வழக்கத்தை அனுசரிப்பது சரியல்ல. நம்மைப் பிறர் பரிகசிப்பதற்கு நாம் இடந்தரலாகாது.

ரங்.:—ராஜம், நீ என்னைப் பிரசங்கம் செய்தாயென்று சொன்னாயே! நீ தான் இப்பொழுது பெரிய லெக்சர் கொடுத்து விட்டாய். உனக்கு இவ்வளவு தூரம் தெரியுமென்று இதுவரையில் உன் பிரிய சிநேகிதியாகிய எனக்குக் கூடத் தெரியவில்லையே! இன்னும் ஏதாவதிருந்தால் அதையும் சொல், கேட்கிறேன்.

ராஜ.:—ஒருவருக்கும் தெரியாத விஷயத்தை நான் ஒன்றும் சொல்லி விடவில்லை. நீ சொன்னதற்கு பதில் சொன்னேனே தவிர வேறில்லை. இப்பொழுது இந்த நாள் வழக்கமென்று நீ சொன்னது கடைசியில் முன்னாலேயே இருந்த பழைய வழக்கமாக மாறி வருகிறது. நடுவில் கொஞ்சகாலம் புது வழக்கமாக இருந்தது. முன்னெல்லாம்

ரவிக்கைக்குக் கை கொஞ்சம் குட்டையாக இருந்தால் குறத்தி, தொம்பச்சி என்று சொல்லிக்கொண்டு ஆடவர்களைப் போல் முழங்கைக்குக் கீழ் கைவைத்து சட்டை மாதிரி ரவிக்கை போட்டுக்கொண்டிருந் தார்கள். ஆனால் இப்பொழுது அவைக ளெல்லாம் அடியோடு போய்ப் பழைய குறத்தி ரவிக்கை தான் வந்திருக்கிறது. இப் பொழுது அது தேவலையாம். எதையும் பிறரைப் பார்த்துச் செய்வது தான் இந் நாள் வழக்கம். இதைப்பற்றி இன்னம் எவ் வளவோ சொல்லலாம். நாழிகையாயிற்று. நான் இப்படிச் சொன்னேனென்று நீ கோபித்துக் கொள்ளாதே. இது உனக்குச் சொன்னதல்ல, உலகத்தில் நடப்பதைச் சொன்னேன். எனக்கென்னமோ அவை கள் பிடிக்கிறதில்லை. உன் இஷ்டப்படி நீ நடக்க யாதொரு ஆட்சேபமுமில்லை.

ரங். :—நீ சொன்ன விஷயத்தில் எனக்கு எள் ளளவும் கோபமென்பதே கிடையாது. நீ சொல்லியவைகளும் உண்மைதான். நான் அங்கு நடப்பவைகளைப் பார்த்துக் கற்றுக் கொண்டேன் என்பதும் வாஸ்தவம் தான். என் தோழியாக உனக்குப் பிடிக்காத விஷ யம் எனக்கு வேண்டுமென்று அவசியமில்லை. நாளையமுதல் நானும் உன்னைப் போலவே இருப்பேன்.

ராஜ. :—எனக்காக நீ மாற்றிக்கொள்ள வேண் டியதேயில்லை. அவரவர்கள் இஷ்டம். ஆனால் நீயே யோசித்துப்பார். எந்தெந்த ஜாதி எப்படியிருக்க வேண்டுமோ அப்படி யிருப்பதுதான் அழகு. அப்படியில்லா விடில் பலவித ஜாதி வித்தியாசங்களும் அவ ரவர்கள் செய்யவேண்டிய காரியங்களும் தனித்தனியாக யிருப்பானேன். உனக்கு மனப்பூர்வமாக இஷ்டமிருந்தால் அப்படியே நடக்கலாம். எனக்காக நிர்ப்பந்தப்பட வேண்டாம்.

ரங். :—ஆம் ராஜம்! நீ சொல்லியபடியே என் முழு மனதுடனும் சொல்லுகிறேன். இப் பொழுதுதான் நீ என் அன்புள்ள சகி என்று நிச்சயமாகத் தெரிகிறது. வா, நாம் கோவிலுக்குச் சென்று வருவோம்.

என்று சொல்ல, இருவரும் அம்மன் தரிசனத் திற்குச் சென்றார்கள்.

சுபம்.

# விநாயகர் துதி.

(வித்வான். கே. எஸ். விசுவநாத சாஸ்திரியார்)

எண்சீரடி ஆசிரிய விருத்தம்.

சிவபால பக்த பரிபால வென்று
துதிசெய்து நின்னை வழிபாடு செய்யும்
தவமொன்று மின்றி யிடராளு மென்னைத்
தாழ்வொன்று மின்றி யருள்செய்ய வேண்டும்
தவமாற்று மாற்றல் சிறிதேனு மின்றிச்
சோர்வுற்று நின்று தடுமாறு கின்றேன்
கவலுற்ற வுந்த னடியாரை யாளச்
சேண்பாக்க நின்ற வுமைபால போற்றி. (1)

பவதாப முற்று மிகவாடு மெங்கள்
பரிதாப நீக்க வருளோடு நீளாத்
தவளுது தேக்கி யுபசார மாற்றுந்
தனவானை மானச் சேண்பாக்க மென்ற
தவதேய முற்ற வொருவாவி பாங்கர்
திருக்கோயில் கொண்டு சிறியேனை யாளவ்
நவமன்று தூய வருளோடு நின்ற
நிலையாகு மென்று தயைசெய்தல் வேண்டும். (2)

அவமாகு மிந்த நரர்செய்கை யாவு
மவமாகு மென்று சேண்பாக்க மாகு
மிவணுடி வந்து சுயமாக நின்று
எமையாளு மீச! மலைமாது பால!
எமராற்று மில்ல முடனுகி யாவு
மமராது முன்றி விடைமேவு தேவ!
தவராம மென்று மடியேனை யாளச்
சிறுகாலை கூர வருள்செய்தல் வேண்டும். (3)

# "சத்தியாக்கிரகம்."

(ஸ்ரீமான் ஆரியூர் வ. பதுமநாப பிள்ளை.)

'சத்தியாக்கிரகம்' என்பது சத்தியம், ஆக்கிரகம் எனும் இரு சொற்களால் ஆகியது. 'உண்மை கடைப்பிடித்தல்' என்பது அதன் பொருள். அஃது அநாதியாக உள்ளதொன்றாகும். அஃது பயன் கருதாப் பணியுமாகும். அறநெறி நின்று அச்சம் சிறிதளவுமின்றி, அதர்மத்தைக் கண்டவிடத்து அதனை எதிர்த்து சாத்விகப் போர் புரிந்து நிற்பவனே சத்தியாக்கிரகியாவன். அத்தகைய சத்தியாக்கிரகியின் உள்ளத்தில் பழிக்குப் பழி வாங்கும் நோக்கமாதல் முனைப்பாதல் தற்புகழ்ச்சியாதல் சிறிதும் தோன்றுதல் கூடாது. அன்னோர் தமது பகைவரிடத்தும் அன்பே பாராட்டுவர்; அன்புளங்கொண்டே பிறரைத் திருத்த முயல்வர்; அன்புப் பொறைகொண்டு நடந்து உயிர் துறக்க நேரினும் உவகையோடு உயிர் துறப்பர்; 'பலவானே மிஞ்சுவான்' என்ற கொள்கை கேவலம் விலங்கினத்திற்குப் பொருந்துமேயன்றி, மனித இனத்திற்குச் சிறிதும் பொருந்தாது. (ஈண்டு, பலமென்றது மிருக சக்தியே.) உடல் வன்மையிலும் உள்ள வன்மையே சாலச் சிறந்தது. உண்மைச் சத்தியாக்கிரகிகள் ஆண்டவனுக்கும் அறத்திற்குமன்றி வேறெதற்கும் சிறிதும் அஞ்சார் "இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்—துன்பம் உறுதல் இலன்" எனும் செந்நாப்போதார் செம்மொழிக்கேற்ப, டாம்பிகக் களியாட்டுகளிலாவது பிறர் தம்மைப் புகழவேண்டும் என்னும் நோக்கத்திலாவது அன்னார் தமது கருத்தைச் செலுத்தாது பயன் கருதாப் பணி செய்து வருவதால் துன்பம் வந்தவிடத்து உளம் துளங்கார்; துன்பங்களனைத்தும் தம்மைத் தூயோராக்க இறைவனால் தோற்றுவிக்கப்படும் சோதனைகளேயென்று கருதி அவற்றை மகிழ்வொடு ஏற்றுக்கொள்வர். அஹிம்சா தர்மத்தினின்றும் சிறிதும் வழுவாது, எத்தகைய துன்பங்கட்கும் அஞ்சிப் பின்னிடாது உற்சாகத்தொடு உட்பட்டு பிறர் இழைக்கும் கொடுமைகளைப் பொறுமையோடு ஏற்று நடந்துகொள்வதால் பிறரைத் திருத்த முயல்வதே சத்தியாக்கிரகத்தின் இலக்கணம். ஆன்ம சக்தியை வளர்க்கத்தக்க அரிய தியாகத்தைச் செய்தவர்களே சத்தியாக்கிரகிகள் ஆவர். அஹிம்சா தர்ம நெறியும் தியாகமும் இடுக்கணழியாமையும் மெய்யன்பும் ஒருங்கு சேர்ந்த ஒன்றே 'சத்தியாக்கிரகம்' எனப்படும். இற்றைக்கு இரண்டாயிர ஆண்டுகட்கு முன்னரே இத்தமிழ் நாட்டில் எழுந்த சில சத்தியாக்கிரகப் பொன்னுரைகள் ஈண்டுக் குறிப்பிடற்பாலன:—

"இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்"

"இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்
என்ன பயத்ததோ சால்பு?" [கால்

"மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்
தகுதியான் வென்று விடல்"

"இடுக்கண் வருங்கால் நகுக; அதனை
அடுத்தூர்வது அஃது ஒப்பதில்."

தன்னைத் துன்புறுத்திபவர்கட்குத் தானும் துன்பிழைக்க முயல்வதால் வன்மமே வளர்ந்து பெருகுமேயன்றி அமைதி விளையாது. அதனுள் இருவருள் ஒருவரும் நலம் பெறார். துன்

புறுத்தப்பட்டவன் அன்புளங் கொண்டு பிறன் இழைத்த தவறுகளைப் பொறுத்து அஞ்சா திருப்பனேல் அவனைத் துன்புறுத்தியவனது மனம் இளகத் தொடங்குகின்றது; தனது பிழையை அவன் உணர்கின்றான்; தனது புன் செயலைக் குறித்துப் பெரிதும் இரங்குகின்றான். வெற்றி பெற்றவன் துன்புறுத்தப்பட்டவனே யன்றி துன்புறுத்தியவனன்று. அன்புளங் கொண்டு சீற்றங் கொள்ளாது பொறுத்திருந்த அச்சீரியோன் தனது வெளிப்பகைவனாகிய துன்புறுத்தியவனைத் திருத்தியதோடு, தனது உட்பகைவனாகிய சினத்தினின்றும் தன்னைக் காத்துக்கொள்வதால் சத்தியாக்கிரகத்திற்குத் தகுதியுடையவன் ஆகிறான். ஆனால், துன் புறுத்தப்பட்டவன் பதிலுக்குப் பதில் செய்யப் போதிய ஆற்றலின்மையாலோ அச்சத்தினாலோ உள்ளத்திற் பொறுமையும் அன்புமின்றியோ துன்பத்தை ஏற்றுக்கொள்வானாயின் அஃது சத்தியாக்கிரகமாகாது; கோழையின் பாற் படுவதேயாகும். உண்மையறிவின்மை யாலேயே பேதைகள் பிறரைத் துன்புறுத்து கின்றனர் என்று கருதி அத்தகையோரது மூர்க்கச் செயல்கட்காகத் தாம் ஆண்டவனிடம் மன்னிப்புக் கேட்கும் சீரியோரே சத்தியாக்கிரக வீரர்களாவர். துராக்கிரகத்தைத் தொலைக்க முயல்வதில் முனைந்து நிற்கும் சத்தியாக்கிரகி எத்தகைய சோதனைகட்கும் உள்ள உறுதி சிறிதும் குன்றான்; பிறர்க்குக் கேடு சூழும் எண்ணம் அவன் மனத்திற் கனவிலும் தோன்றாது. மற்றும், பிறரைச் சீர்திருத்தவோ பிறருக்குப் புத்தி கற்பிக்கவோ முன்வரும் ஒருவன் முதலில் தன்னைச் சீர்திருத்திக்கொள்ளவேண்டும். தன்பாலுள்ள குற்றங்களையும் குறைகளையும் களைய முயலாத ஒருவன் பிறரைக் குறை கூறவோ பிறரைச் சீர்திருத்தவோ ஒரு சிறிதும் தகுதியுடையவனல்லன். இற்றைக்குச் சுமார் ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னிருந்த ஏசு நாதாது பொன்னுரைகள் ஈண்டு கவனிக்கற் பாலன:—

"மாயக்காரனே! முன்பு உன் கண்ணிலிருக்கிற உத்திரத்தை எடுத்துப் போடு; பின்பு, உன் சகோதரன் கண்ணிலுள்ள துரும்பை எடுத்துப்போட வகைபார்ப்பாய். தீமையோடு எதிர்த்து நிற்கவேண்டாம். ஒருவன் உன்னை வலது கன்னத்தில் அறைந்தால், அவனுக்கு மறு கன்னத்தையும் திருப்பிக் கொடு. உங்கள் சத்துருக்களைச் சிநேகியுங்கள்; உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மை செய்யுங்கள். அப்படிச் செய்வதனால் நீங்கள் பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதாவுக்குப் புதல்வர்களாயிருப்பீர்கள்."

## பண்டைச் சத்தியாக்கிரகிகள்.

மிகப் பழங்காலந் தொட்டே நமது பாரத நாடு சத்தியாக்கிரகிகள் பலரைக் கண்ட திருநாடு. ஆண்டவன் ஒருவன் உளன் எனும் உண்மையை மறுத்து, தன்னையே ஆண்டவனாகப் போற்றுமாறு பிறரை ஆணவ மேலீட்டால் வலியுறுத்திய இரணியனது மிருக சக்தியும் கொடுஞ்செயல்களும் துணையிலொன்றனைத் துணையென உடையவனான பிரகலாதனது ஆன்ம சக்தியின்முன்—அன்புப் பொறுமையின்முன்—சத்தியாக்கிரகத்தின் முன்—என்னாயின? இறுதியில் வெற்றி பெற்றவன் இரணியனா, பிரகலாதனா?

அன்பர்களே! சிந்தியுங்கள். துராக்கிரகம் கடைப்பிடித்தோர் தந்தையாயினும் தாயாராயினும் ஆசிரியராயினும் சத்தியாக்கிரகிகள் அவர்களது துராக்கிரகத்தைத் தொலைக்க முயலாது வாளா கிடவார். தந்தையாயிற்றே என்று பின்னடைந்து இரணியனது அதிகாரத்திற்கு அஞ்சியிருப்பனேல் பிரகலாதனை இன்று இப் பூவுலகம் போற்றுமா? தாயாராயிற்றே என்று கைகேசியின் சூழ்வினைக் கிணங்கியிருப்பனேல்

பாதனை இன்று புவனம் புகழுமா? ஆசிரிய ராயிற்றே என்று பரசுராமரது வற்புறுத்த லுக்கு இணங்கி தனது பிரமசரிய விரதத்தைக் குலைத்துக்கொண்டிருப்பரேல் பீஷ்மரை இன்று பிரபஞ்சம் மதிக்குமா? துராக்கிரகிகள் எவ ராயினும் அவரைத் திருத்த முயல்வதே சத்தி யாக்கிரகிகள் கடனும். எவர் எப்படிக் கெட் டுப்போனாலும் நமக்கென்ன என்று துராக் கிரகம் எழுந்தவிடத்தும் அதனோடு சாத்விகப் போர் தொடுக்க முயலாது வாளா கிடப்போர் துராக்கிரகத்திற்குத் துணை சென்றவரை ஒத்த வர் ஆவர்.

துராக்கிரகிகள் எத்துணை மிருகசக்தி மிக்கோ ராயினும் உண்மைச் சத்தியாக்கிரகிகள் அவர் களது மூர்க்க சக்திக்குச் சிறிதும் அஞ்சார். அச்சம் எனும் பேய்க்கு இரையாவோர் சத்தி யாக்கிரகிகளல்லர். சமண முனிவரது சூழ் வினைக்கெளியவனாகிய அரசனது அமைச்சர் கள் சிவமெனும் செம்பொருளை உணர்ந்த திரு நாவுக்கரசரை அழைத்தபோது அடிகள் யாது கூறினர்? "நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம், நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணி வோ மல்லோம், இன்பமே எந்நாளுந் துன்ப மில்லை" என்றன்றோ வீரமுழக்கம் செய்தார்! அவ்வளவோடு நின்றாரா? சமணர்கள் தம் மைக் கல்லொடு பிணைத்துக் கருங்கடலில் தள் ளியபோதும், தமது உள்ள உறுதியினின்றும் சிறிதேனும் பிறழ்ந்தாரோ! "கற்றுணைப் பூட்டி யோர் கடலிற் பாய்ச்சினும், நற்றுணையாவது நமச்சிவாயவே" என்றன்றோ மனந்தேறியிருந் தார்! சத்தியாக்கிரகிகட்கு சத்தெனும் செம் பொருளாய இறைவன் துணையிருக்கும்போது மூர்க்கசக்தியுடையோர்முனைப்பு அவர்களை என் செய்யும்? நெருப்பிற்சுடச் சுட பொன்னுக்கு மாற்றுு உயர்வதுபோல் துன்பங்கள் நுகர நுகர சத்தியாக்கிரகிகள் தூய்மையாளராகின்ற னர். ஆகவே, அன்னோர் துன்பங்களைக் கண்டு சிறிதளவும் அஞ்சாது தம்மைத் தூயோராக்க இறைவனால் அனுப்பப்பட்ட வையே அவை என்று தெளிந்து அவற்றை மனமுவந்து வரவேற்று நிற்பர்.

திருவாசகம் என்னும் அருள் நூலைத் தமிழகத் தார்க்கு அளித்த மாணிக்கவாசகனார் தமக்கு இழைக்கப்பட்ட துன்பங்களைக் கண்டு பரிக் சித்து—"யாவர்கோனென்னையும் வந்தாண்டு கொண்டான்—யாமார்க்குங் குடியல்லோம் யாதுமஞ்சோம்"—என்று வீறு கொண்டு நின் றன்றோ வேந்தனது மூர்க்கசக்தியை வென் றார்!

நமது நாட்டில் மட்டுமின்றி, பிறநாடுகளி லும் சத்தியாக்கிரகிகள் தோன்றியுள்ளார்கள். அறிவிலாக் கயவர்கள் தம்மைச் சிலுவையில் அறைந்தபோதும் சினங் கொள்ளாது அவ் விழிந்தோர் பொருட்டு ஆண்டவனிடம் மன் னிப்பு வேண்டி நின்ற ஏசுநாதரும்; 'அறியா மையை அறிவாகக் கொண்டு இறுமாந்து கிடப் பது' அஞ்ஞானமென்று அறிவுறுத்தியதன் பய னாக மாணதண்டனை விதிக்கப்பெற்று புன் சிரிப்புடன் நஞ்சையருந்தி உயிர்துறந்த ஸோக் ரதரும் சத்தியாக்கிரகத்திற்கு இலக்கியமாவர். புத்தர் பெருமானது வாழ்வு முழுவதும் சத் தியாக்கிரக மணமே மகழ்வதை என்னென்று எடுத்துரைப்பது? விரிப்பிற் பெருகுமாதலின், மேற்செல்வேன்.

சத்தியாக்கிரகம் வேறு;
சாத்விக எதிர்ப்பு வேறு.

"சத்தியாக்கிரகத்திற்கும் சாத்விக எதிர்ப் புக்கும் மிக்க வேற்றுமை உண்டு. 'சாத்விக எதிர்ப்பு' (Passive Resistence) பலமற்றவர்க ளுடைய ஆயுதம்; அதன்படி ஒருவன் தன் இலட்சியத்தை அடைய பலாத்காரத்தை உப

யோகிக்கலாம். ஆனால், சத்தியாக்கிரகம் பலவானுடைய ஆயுதம்; அதன்படி, ஒருவன் எவ்வித பலாத்காரத்தையும் உபயோகிக்கக் கூடாது. எதிரியின்மீது பலாத்காரத்தை உபயோகித்தல் என்பது 'சத்தியத்தை நாடுதல் என்பதில் அடங்காது என்றும் பொறுமையாலும் அனுதாபத்தாலுமே எதிரியை அவனுடைய பிழையினின்றும் விலக்கவேண்டுமென்றும் அறிந்தேன். ஆகவே, எதிரிக்குத் துன்பம் செய்வதன் மூலமாயல்லாமல் தனக்கே துன்பத்தை விளைவித்துக் கொள்வதன் மூலமாய்ச் சத்தியத்தை நிலைநாட்டுதல் என்பதே சத்தியாக்கிரகத்தின் பொருளாகும்' —என்பன இந்நாளில் நமது பாரத பூமியில் சத்தியாக்கிரக வீரராக விளங்கிவரும் மகாத்மாவின் மணிமொழிகள். 'சாத்வீக எதிர்ப்பு' என்னும் சொல் குறுகிய நோக்கம் கொண்டது; 'சத்தியாக்கிரகம்' என்னும் சொல்லோ மிக்க உந்நதமான சீரிய பொருளைத் தருவது.

இறைவன் உண்மை வடிவினனாக விளங்குகின்றான். ஆகவே, சத்தியத்தின் சக்தி மற்றெல்லாவற்றினும் மிகமிகச் சிறந்ததாகும். வாய்மையைக் கடைப்பிடித்து வாழ்வோரே மக்களாவர்; அல்லாதார் மாக்களேயாவர். எம்பெருமான் காந்தியடிகள் சத்தியாக்கிரகத்தின் தன்மையைப் பேசவந்த விடத்துப் பின் வருமாறு கூறுகிறார்:—

"சத்தியாக்கிரகம் நாற்புறத்திலும் கூர்மையுள்ள வாளாகும். அதை எவ்விதத்திலும் உபயோகிக்கலாம். அது உபயோகிப்பவனையும் எதிரியையும் ஆசீர்வதிக்கும்; இருதிறத்தார்க்கும் பயன்தரும். ஒருதுளி இரத்தம் கூட சிந்தாமல் கணக்கிலடங்காத நன்மையைத் தரும். அது துருப்பிடிப்பதுமில்லை; அதைத் திருடவும் முடியாது. இத்தகைய ஆயுதத்தை பலஹீனர்களுடைய ஆயுதமென்றும் பகர்வது நகைப்பிற்கிடமானதே."

ஆங்காங்கு எழும் தூராக்கிரகங்கட்கு ஏற்றவாறு சத்தியாக்கிரகமும் உதவி மறுத்தல், சட்டமறுப்பு, பிறாது பாவங்கட்குத் தாம் கழுவாய் தேடுதல், உண்ணாவிரதம், உயிர்நீத்தல் முதலிய பலதிறப்பட்ட வழிகளில் எழும். எம்முறைபற்றி 'சத்தியாக்கிரகம்' மேற்கொள்ளப்படினும் பொருமையாதல் துன்பங் கண்டஞ்சுதலாதல் சினமாதல் சத்தியாக்கிரகிகளது மனத்தில் சிறிதும் தோன்றக்கூடாதென்பதே கவனிக்கத்தக்கது.

குறைவிலா நிறைவுடையவன் இறைவன் ஒருவனே. ஆதலால் மனித உடல் தாங்கிய எவரும் சிற்சில சமயங்களில் தவறு இழைத்துவிடுதல் இயல்பே. சத்தியாக்கிரகம் மேற்கொண்ட சான்றோர் தம்மையும் அறியாது பிழை யாதேனும் இழைத்துவிடுவரேல் "தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக் கொள்வர் பழி நாணுவார்" என செந்நாப்போதார் செப்பியவாறு தமது தவறு குறித்துப் பெரிதும் வருந்தி வருந்தி உண்ணாவிரதமிருந்து, ஆண்டவனை நோக்கி அழுது தொழுது மன்னிப்பு வேண்டி நின்று அத்தவறுக்குக் கழுவாய் தேடிக்கொள்வர். தமது பிழைகளைத் தாமே உணர்ந்து வருந்துவோர் மீண்டும் வழுக்கி வீழ்வது அரிது. "யானே பொய்யென் னெஞ்சும் பொய் என்னன்பும் பொய், ஆனால் வினையேன் அழுதாலுன்னைப் பெறலாமே" என்றார் மணிவாசகனார். தமது பிழைகளைத் தாமே உணர்ந்து வருந்தி, அகம் கரைந்து ஆண்டவனை நோக்கி அழும் சத்தியாக்கிரகிகள் இந்நாளில் எத்துணைபேர்! தமது பிழைகளை உணர்ந்து, தம்மைத் திருத்திக் கொள்ளாது பிறருக்கு உபதேசிக்க முன்வரும் தலைவர்கள் பெருகிவரும் இக்காலத்திலே சத்தியாக்கிரகத்திற்கே தனிப்பெரும் இலக்கியமாய் நமது பாரத பூமியிலே காந்தியடிகள் வாழ்ந்து வருவதும் நம்மவர் தவப்பயனேயாம்.

இந்தியரேயன்றி ஏனைய நாட்டினரும் வியந்து போற்றிவரும் சாந்த உருவினராய காந்தியடிகளது வாழ்விலே இளமைதொட்டே சத்தியாக்கிரகம் வளர்ச்சி பெற்று வந்திருக்கின்றது. நமது அடிகள் இளமையில் தமது அன்னையிடம் பொய் சொல்ல அஞ்சி, தீச்சார்பால் கொண்டிருந்த புலால் உண்ணலை ஒழித்தார்; இங்கிலாந்திலிருந்த காலத்திலும், தமது அன்னைக்கு அளித்த வாக்குறுதிகளை நிறைவேற்ற வேண்டி நண்பர்களது வெஞ்சினத்திற்கும் அஞ்சாது மாமிச உணவு வைக்கப்பட்டிருந்த இடத்தினின்றும் திடீரென எழுந்து வெளியேறிச் சென்றார்; தென்னாப்பிரிக்காவில் தன்னை நையப் புடைத்த கயவனையும் அன்புளங்கொண்டு மன்னித்துவிட்டார். இன்னும் பற்பல அரியனவும் நிகழ்ந்தன. அடிகளது வாழ்வே 'உண்மையோடியைந்த வாழ்வு' ஆகும். சத்திய சோதனைகள் நிரம்பியனவாகும். அவ்வப்போது நேர்ந்த சோதனைகட்கு அடிகள் எளியராகி இருப்பரேல், இன்று இவ்வுலகம் முழுவதும் அடிகளை சத்தியாக்கிரக வீரராகக் கொண்டு போற்றுமோ?

'காந்தி எங்களுக்கு வேண்டும்; ஆனால் காந்தீயம் வேண்டாம்' என்று பேசித் திரியும் தலைவர்கள் இந்நாட்களில் மலிந்து விட்டனர். அடிகளது மணி மொழிகளை ஏற்று நடவாது, அடிகளை மட்டும் போற்றுவது என்ன தேசாபிமானமோ அறிகிலேன். சத்தியாக்கிரக திலகங்களான சாவித்திரி வழியுதித்த—திரௌபதியின் வழித்தோன்றிய—கண்ணகியின் வழிவந்த—மங்கம்மையின் வழிப்பிறந்த பாரத நாட்டு வீரத் தாய்மார்களே! துராக்கிரகத்தை எதிர்த்து நின்று வெற்றி பெற்ற பிரகலாதன் வழிப்பிறந்த, காலனது கர்வத்தைக் களைவித்த மார்க்கண்டேயர் வழிவந்த தமிழ்நாட்டு இளைஞர்களே! மிருக சக்தியைப் புறங்கண்ட அப்பர் வழிவந்த—பகைவனிடத்தும் கருணையே காட்டிய மெய்ப்பொருள் நாயனர் வழித்தோன்றிய தமிழ் நாட்டினரே! எழுமின்! விழிமின்! சத்தியாக்கிரக நெறியொன்றே நயக்கு விடுதலையளிக்கக்கூடியதென்பதை அனைவரும் நன்கு உணர்மின்! அறநெறி நின்று உண்மையையும் அஞ்சாமையையும் ஒண் பெருங் கருவிகளாகக் கொண்டு நமது இலட்சியம் நிறைவேறும்வரை தளர்வும் உட்பூசலும் சிறிதுமின்றி, சத்தியாக்கிரக வீரர்களாகி அன்னை நலத்தின்பொருட்டு அனைவிரும் சேர்ந்துழைத்துச் சிறந்திடுமின். 'ஒன்றுபட்டாலுண்டு வாழ்வே—நம்மில், ஒற்றுமை நீங்கில் அனைவர்க்குந் தாழ்வே'. பாரதத்தாய் உங்கட்கு திருவருள் பொழிவாளாக. ஜயபாரத! வந்தேமாதரம்!

# நம் தேசமுன்னேற்றமும் பெண்களின் விவாகவயதும்.

(ஸ்ரீமதி ஜயலக்ஷ்மி அம்மாள்.)

பெண்மக்களின் முன்னேற்றத்தைக் கருதி மாதந்தோறும் வெளிவந்துலவும் சிந்தாமணியானது அறிவுக்கு விளக்கம் கொடுக்கும் ஓர் உயர்ந்த மணியாகவே இருக்கிறது.

அதன் முதல் பக்கத்தில் வெளிவரும் பத்ராதிபரின் வியாசங்கள் (Editorial) பெண்களின் கல்வி, ஒழுக்கம், உயர்ந்த நோக்கம், அவர்களுக்கு வேண்டியதான சொத்தின் உரிமை, விவாகம் சுவாதந்திரியம் முதலான விஷயங்கள் மிகவும் போற்றத் தகுந்ததாக இருக்கின்றன.

இப்பொழுது அதிகக் கிளர்ச்சியுடன் தினப்

பத்திரிகைகளிலும் மாத பத்திரிகைகளிலும், வெளிவருகிற விஷயமும் இதை சட்டமாகக் கொண்டு வரவேண்டுமென்று ஜனங்கள் பலர் அபிப்பிராயப் பட்டதின் நிமித்தமாக (Age of consent commitee) என்று சட்டசபை மூல மாக ரேமிக்கப்பட்டதில் விசாரணை செய்யும் பெண்களின் விவாக வயது, சம்மத வயது, என்பதைப் பற்றியும்; எத்தகைய கல்வி நம் ஹிந்து சமூக ஸ்திரீகளுக்கு நன்மை புரியும் என்பதைப் பற்றியும், எனது சிற்றறிவிற் கெட்டிய வரையில் வரைகின்றேன்.

பால்ய விவாகமானது ஸ்திரீகள் கல்வி கற்ப தற்கும், திடகாத்திரமான சரீரத்தை அடைவ தற்கும், திடமுள்ளதும் ஆரோக்கிய முள்ளது மான மக்களைப்பெறுவதற்கும் தடையாய் இருக் கிறதென்பது உலகோர் அறிந்த உண்மை.

மேலும், அவர்கள் தகுந்த வயதை அடைவ தற்கு முன் பெரிய பாரமாகிய குடித்தன பாரத்தையும், கொடிய வேதனையாகிய பிள் ளைப்பேறு வேதனையையும், அரிய பொருப் பாகிய மக்களைப் பெறுதல் (வளர்த்தல்) ஆகிய சிரமத்தைக் கொடுப்பதனால் தான் நம் தேச ஸ்திரீகள் வாலிப வயதிலேயே கிழவிகளைப் போல் தோற்றவும், சிலர் Hysteria, Tuberclosis முதலான வியாதிகளுக்கு ஆளாகிறவர் களாகவும் இருக்கிறார்கள்.

விவாக வயதை 14 ஆக்கவேண்டுமென்று சிலரும் 16 ஆக்கவேண்டுமென்றும் 18 வயது ஆக்கவேண்டுமென்றும் சிலரும் (Age of consent committee) விவாக வயது விசாரணைக் கமிட்டி முன்பு தங்கள் தங்கள் அபிப் பிராயங்களைத் தெரிவித்தலும், சாஸ்திர நிபுணர் களின் வாக்கும் வைத்திய நிபுணர்களின் வாத மும் சட்ட நிபுணர்களின் ஆமோதிப்பும் நாம் தினப்பதிப்பில் வாசிப்பதால் இவ்விடத்தில் விவ ரிப்பது அனாவசியம்.

நம்தேசத்தின் சீதோஷ்ண ஸ்திதியை உத் தேசித்தும் நம் ஹிந்துக்களின் விவாக சம்மந்த மாகிய ஆழ்ந்த தத்துவத்தைக் கூர்ந்து யோசிக் கின், பெண்களின் விவாக வயதை 12 ஆகவும் சம்மத வயதை 16 ஆகவும் நாமாகவே அனுஷ் டிப்பது சரி என்று தோன்றுகிறது.

ஏன் எனில், பெண்கள் தக்க வயதை அடை ந்தவுடன் அவளுக்குத் தகுந்த மணமகனைத் தேடி அவன் கையில் ஒப்பிவித்தலே தங்க ளுக்கு முக்கியமானதும் பாரமானதும் ஆகிய பொருப்பென்று ஹிந்துப் பெற்றோர்கள் கருதி யிருப்பதாலும், அபலைகளான ஸ்திரீகள் வயது வந்த பிறகு விவாகமின்றி தனித்திருப்பின், தங்கள் கற்பைக் காத்துக்கொள்வது சிரம மென்றும், வஞ்சகமுள்ள சில ஆடவர்களால் ஏமாற்றப் படுவார்களென்றும் கருதியே அறி விற் சிறந்த நம் மூதாதைகள் பெண்கள் தக்க பருவமடையு முன்னமோ அல்லது அடைந்த வுடனே தகுந்த கணவனைத் தேடி மணமுடிக் கும் வழக்கத்தை யுடையவர்களாய் இருந்தார் கள். மகா கல்விமானாகவும், பெரிய ராஜனாகவும் ஞானியாகவும் இருந்த "ஞான ஜனகன்" எனப் பேற் பெற்ற ஜனகனும், சீதை, லோக மாதாவான ஜானகி வயதை அடைந்தவுடனே சீதைக்குத் தகுந்த மணாளனைத் தேடி அவன் கையில் ஒப்புவிக்க வேணுமே என்று கவலை கொண்டதும், ராஜ சபையில் சிவதனுசை ஒடித்த ராஜசிம்மமான ஸ்ரீராமசந்திர மூர்த் திக்குப் பாணிக்ரஹணம் செய்து கொடுக்கும் போது மிகுந்த சந்தோஷத்துடன் ஆனந்த பரிதராய் "இயம் ஸீதா மமஸுதா ஸஹதர்ம சரீதவ, ப்ரதைச்ச சைனும் பத்ரம் தே பாணிம் க்ருண்ஹிஷ்வ பாணிணும்" என்று சொல்லி பாணிக்ரஹணம் செய்து கொடுத்ததை ராமாய ணம் படித்தவர் அறியாத தன்று. சிலர், பெற் றோர்கள் இப்படி பாணிக்கிரகணம் செய்து கொடுப்பது சரியில்லை என்றும் இதனால் மண

மக்களின் வாழ்கையில் இன்பம் அதிகமில்லாமல் துன்பம் மிகுந்திருக்கிறதென்றும் வாதட்சணை என்னும் கொடிய நோய் பரவுவதற்கு இதுதான் காரணமென்றும், பெண்கள் தகுந்த வயது வந்த பிறகு தாங்களே தங்கள் வாழ்கைத்துணைவனைத் தேடிக்கொள்வதுதான் மிகவும் சிறந்ததென்றும், மேல் நாட்டார் அப்படிச் செய்வதால்தான் பல சீர்திருத்தங்களையும், முன்னேற்றங்களையும் உடையவர்களாக இருக்கிறார்களென்றும் சொல்லவும், வியாசங்கள் எழுதவும் காண்கிறோம். அந்தோ! இது எத்தனை அறியாமையாக இருக்கிறது! நம்மவர் விவாக வழக்கத்தில் சிலருக்குத் துன்ப மேற்படின், பெரும்பாலார்க்கும் இது எப்படி பொருத்தமாகும்?

பெண்களின் பெற்றோரும் பிள்ளைகளின் பெற்றோரும் உற்றாரும் உறவினரும் யோசித்து நடத்தும் கலியாணங்களிலேயே தவறுதல் நேரிடின், அபலையான ஸ்திரீ தன் புத்தி ஒன்றைக்கொண்டே முடித்துக்கொள்ளும் விவாகமானது எப்படி ஜாஸ்தி சிறப்புடையதாக இருக்கும்?

மேல் நாட்டார் நாகரிகத்திற் சிறந்தவரா யிருப்பினும் விவாக விஷயத்தில் அவர்கள் வழக்கம் மிகவும் வெறுக்கத் தக்கதாகவே இருக்கிறது.

அவர்கள் தகுந்த வயது வந்த பின்பு தானே மணமகனைத் தேடி மணம் முடித்துக் கொண்டாலும்கூட வெகு சீக்கிரத்திலேயே அன்பும் ஒற்றுமையும் இல்லாதவர்களாய் (Divorce) விவாக ரத்து செய்து கொள்ளுகிறார்கள். வேறொருவனைப் பார்த்து மணம் செய்து கொள்ளுகிறார்கள். ஒரு கிழவனை அவன் பணத்திற்காகவும் ஒரு யுவனை அவன் அன்பிற்காகவும் காதலிக்கிறார்கள்!!

நம் இந்து ஸ்திரீகளோவென்றால் ஒருவனுக்கே தன் உடல் பொருள் ஆவி மூன்றையும் அர்ப்பணம் செய்து, திரிகாண சுத்தமாய் அவனையே தெய்வமாகக் கருதி, உள்ளன்புடன் உபசரித்து, கணவன் எவ்வளவு அன்பு இல்லாதவனாய் இருந்தாலும், தன்னைக் கொடுமையாய் நடத்தினாலும், அல்லது மற்றொருத்தியை மணம் செய்துகொண்டாலும், பொறுமையுடனும் சந்தோஷத்துடனும் இருப்பவர்களாய் ஸ்திரீ ரத்னங்களென விளங்குகிறார்கள்.

இது நிற்க, ஸ்திரீகளின் கல்வி எத்தகையதாய் இருக்கவேண்டும்? ஆடவரின் கல்வியைப்போல் (College) உயர்தரக் கல்வி வாசித்துப் பட்டங்கள் பெற்று உத்தியோகம் செய்ய வேண்டுமா? அல்லது சுகாதார முறைப்படி வீடுகளை வைத்துக்கொள்ளவும், நன்றாய்க் குடித்தனம் செய்யவும், குழந்தைகளை ஆரோக்கியமுள்ளவர்களாகவும், புத்திசாலிகளாகவும் வளர்க்கவும், உலக விஷயங்களையும், ராஜாங்க விஷயங்களையும் அறியப் போதுமான ஆங்கில பாஷா ஞானமும் உடைத்தானவர்களா யிருந்தால் போதுமா?

எனில், வியாதி அணுகாமல் சுகாதார முறைப்படி வீடுகளை வைத்துக்கொண்டு வருவாய்க்குத் தகுந்த செலவு செய்துகொண்டு, சரியான உடைகள், காலக்கிரமப்படி ஆகாரங்கள் முதலியவைகளால் குழந்தைகளைப் போஷித்து, வெளியிற் சென்று வேலை செய்து களைத்துவரும் தங்கள் புருஷனைத் தக்கபடி உபசரித்து உலகத்தில் நடைபெறும் விஷயங்கள், அற்புதங்கள், ராஜாங்க விஷயங்களும் சட்டங்களும் அறிவதற்குப் போதுமான ஆங்கில பாஷா ஞானமும் இருந்தாற் போதுமெனவே எமது அறிவில் தோன்றுகிறது.

ஸ்திரீகள் பட்டம் பெற்று உத்தியோகம் செய்யப்புகின் வீட்டிலுள்ள குழந்தைகளையும்

தம் புருஷர்களையும் தகுந்தபடி கவனிக்கத் தக்க மனிதர்கள் இல்லாமற் போவதோடு கூட, பொருள் குன்ற, ஆவி யொடுங்கப் படித்து B.A., M.A., M.L. முதலான பட்டங்கள் பெற்றும் வேலை கிடைக்காமல் திண்டாடும் ஆண் மக்களோடு பெண் மக்களும் போட்டி போடப்புகின் வேலைத் திண்டாட்டம் மிகுதியாகிவிடும்.

அல்லது ஆண் மக்கள் வீட்டிலிருந்து குடித்தனம் செய்து குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளும்படியாய் ஆய் விடினும் ஆகலாம்!!!

ஆதலால் நம் பெண்மணிகள் தகுந்த வயதில் மணம் முடித்துக்கொண்டு அறிவுடன் குடித்தன முறையில் விளங்குவதே மேன்மை.

எல்லாம் வல்ல இறைவன் நம் தேசத்துக்கும் நம் தேய ஸ்திரீகளுக்கும் நன்மை புரிவாராக.

## கடித எண் 2.

சகோதரி வி. பாலம்மாள்.

சிந்தாமணி ஆபீசு

சென்னை 11—4—29.

பர்மா, மலாயா, சைகோன் முதலிய வெளிநாடுகளில் வசிக்கும் சகோதரிகளுக்கும் மற்றைய சகோதர சகோதரிகளுக்கும் என் அன்பார்ந்த வந்தனம். க்ஷேமம் கோருவது மஃதே.

என் அன்பிற் சிறந்த சகோதரிகளே !

உங்களுக்கு நான் கடிதமெழுதி வெகு நாட்களாயின. சென்ற டிசம்பர் மாத மத்தியில் நான் ரங்கூன் சென்று 22—3—29ல் சென்னைக்குத் திரும்பினேன்.

எனது சுற்றுப் பிரயாண காலத்தில் நீங்களளித்த உபசரிப்பையும் ஆதரவையும் நான் என்றும் மறவேன். நீங்கள் என்னை மெய்யன்புடன் விசாரித்து எழுதியுள்ள கடிதங்களுக்கு வந்தன மளிக்கின்றேன். எனக்குள்ள அளவு கடந்த வேலைக்கிடையே ஒவ்வொருவருக்கும் தனித்தனியே பதிலளிக்க வியலாதிருப்பது பற்றி இக்கடிதமூலம் என் க்ஷேமத்தை அறிவிக்கின்றேன். நிருபமனுப்பக்கூடியவர்களை மாதாமாதம் எழுதி அனுப்பிக்கொண்டிருக்கும் படிக்கும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

உங்கள் க்ஷேமத்திற்கு அடிக்கடி கடிதமெழுதிக் கொண்டிருக்க வேண்டுகிறேன். சைகோன் வாசிகளான சந்தா நேயர்கள் 1929 வருஷம் ஜூன் மாதமிருந்து 30-மே மாதம் வரை சேரவேண்டிய ஒரு வருஷ சந்தா ஏழரை ரூபாயைத் தாமதமின்றி முன் பணமாக அனுப்பக்கோருகிறேன். மற்றுமுள்ள சந்தாதார்களையும் தங்கள் சந்தாவைக் கணக்கிட்டு பாக்கியின்றி அனுப்பக் கேட்டுக் கொள்ளுகிறேன். புதுவருஷமாகிய சுக்கில வருஷம் "சிந்தாமணி"க்கும் அதன் சந்தாதார்க்கும் அளவற்ற அபிவிருத்தியையும் குறையாச் செல்வத்தையுமளிக்குமாறு எம்பிரானை ஏத்தித் தொழுகின்றேன். தமிழ்ச் சகோதர சகோதரிகளால் கண்மணி போன்று போற்றப்படும் பொன்மணியாகிய நம் சிந்தாமணியை இனி ஒவ்

# CHINTHAMANI.

A HIGH CLASS TAMIL MONTHLY.

*(Devoted mainly to the cause of Indian Women.)*

EDITOR SISTER V. BALAMMAL.

Vol. V.] May 1929. [No. 10.


श्री शारदायै नमः ।



श्रीरामचन्द्रपरब्रह्मणे नमः

# சிந்தாமணி

## சுபோத ராம சரிதம்.

COMPOSED AND ANNOTATED BY

SISTER V. BALAMMAL

DAUGHTER OF

*Late Dr. A. R. VAIDYANATHA SASTRIAR, M.A., M.B. & C.M.*

(*All Rights reserved by the Authoress*)

सुबोधरामचरिते

॥ अथ युद्धकांडप्रारम्भः ॥

दशदिक्प्रथितसुकीर्तिं दशरथहृदयाम्बुजतमार्तण्डम् ।
दशवदनानुजपालं दशवदनारिं रघूद्वहं नौमि ॥

ततो रामस्ससौमित्रिस्सुग्रीवेण समन्वितः ।
प्रेक्षमाणः प्रियावाप्तिं प्रतस्थे दक्षिणां दिशम् ॥ १ ॥

ततः பிற்பாடு ससौमित्रिः லக்ஷ்மணருடன் கூடியவராயும் सुग्रीवेण சுக்கிரீவருடன் समन्वितः கூடியவராயும் உள்ள रामः ஸ்ரீராமர் प्रियावाप्तिं சீதையை யடைதலை प्रेक्षमाणः (सन्) எதிர்பார்த்தவராக दक्षिणां தென்புறத்திலுள்ள दिशं திசையைக்குறித்து प्रतस्थे புறப்பட்டார்.

अथासङ्ख्यैः कपिगणैर्हनूमत्प्रमुखैर्मुदा ।
सानुजः प्राप रामोऽसौ तीरं दक्षिणवारिधेः ॥ २ ॥

अथ பிறகு असंख्यैः கணக்கிலடங்காத कपिगणैः வானர சைனியங்களுடனும் हनूमत्प्रमुखैः ஆஞ்சனேயர் முதலியவர்களுடனும் असौ அந்த रामः ஸ்ரீராமர் सानुजः (सन्) தம்பியுடன் கூடினவராக दक्षिणवारिधेः தென் சமுத்திரத்தின் तीरं கரையை मुदा சந்தோஷத்துடன் प्राप அடைந்தார்.

तदा विभीषणो नाम राक्षसो रावणानुजः ।
अग्रजं दुर्मतिं त्यक्त्वा राघवं शरणं ययौ ॥ ३ ॥

तदा அச்சமயம் रावणानुजः ராவணனுக்குத் தம்பியும் विभीषणः नाम விபீஷணனென்ற பெயருள்ள राक्षसः ராக்ஷஸன் दुर्मतिं கெடுபுத்தியுள்ள अग्रजं தமையனை त्यक्त्वा விடுத்து राघवं ஸ்ரீராமபிரானை शरणं அடைக்கலமாக ययौ அடைந்தான்.

(*To be continued*)

ஸ்ரீராமஜயம்.




தமிழ் நாட்டுப் பெண்மணிகளின் முன்னேற்றத்தை முக்கிய
மாகக்கொண்டு வெளிவரும் ஓர் உயர்தர மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை.

பத்திராதிபர் சகோதரி வி. பாலம்மாள்.

மலர் 5.] சுக்ல—வைகாசி. [இதழ் 10

# சன்மார்க்கமும் பெண் கல்வியும்.

(தொடர்ச்சி)

(பத்திராதிபர்.)

" நீதி யிறந்தலை வம்பருமே
நேர்வழி வந்திடச் செய்பவர் யார்?
ஓதிய மானமிழந்தவரை உயர்
உத்தமராக்க முயல்பவர் யார்?"

ஸ்ரீமான் தேசிகவிநாயகர்.

களவாடாமை, கள்ளுண்ணாமை, பிறர்க்கின்னல் விளைவியாமை, பிறரைத் துன்புறுத்தாமை; இவைகள் சன்மார்க்கச் செயல்களாகும். இதற்கெதிரிடையாகப் புரியப்படும் செய்கைகள் துன்மார்க்கச் செயல்களெனப்படும். தீய வழியில் மனிதனைச் செலுத்துவது பாலியப் பழக்கமே. இளமையில் நன்மார்க்கத்தில் வளர்க்கப்படுவதுடன் வாலிபப் பருவத்தில் சன்மார்க்கக் கல்வியும் புகட்டப்படுதல் இன்றியமையாததாம். எத்தகைய தீச்செயல்களுக்கும் பொய் சொல்லுதலே ஆரம்பத்தோற்றமாயமைந்துள்ளது. சிறுவர் பொய் பேசுதற்குத் தாய் தந்தையர் இருவரும் காரணமென்றாலும் தாய் முக்கிய காரணமாகின்றாள். தன் குழந்தை செய்த தவறை வீட்டிலுள்ள வேறு குழந்தை மீது சுமத்திவிடும் தாயின் மக்கள் பொய் பேசுவதற்கு வேறு போதனை தேவையில்லை.

மூடத்தனத்தால் தான் செய்த பிழைகளை மறைக்கும் பொருட்டுப் பொய் பேசும் தாயினால் மக்களுக்கும் இப்பழக்கமுண்டாகின்றது. ரகசியமாய்த் தின்பண்டங்கள் வாவழித்துத் தன் மக்களுக்கு மட்டும் தனிமையில் கொடுத்துப் பிறர் கேட்டால் ஒன்றும் சாப்பிடவில்லை என்று சொல்லும்படி உபதேசிக்கும் தாய்மார்களால் பிள்ளைகள் இளமை முதல்

பெரும் பொய்யர்களாகத் தடையேது? நகையாசையால் கணவனை லஞ்சம் வாங்கத்தூண்டி அவனையும் பெரும் பழிக்காளாக்கக் கூடிய பெண்களை மணப்பதால் ஆடவர்களும் சன்மார்க்க மற்றுவிட நேரிடுமல்லவா? குடும்ப கலகங்கள் பெரும்பாலும் பெண்களாலேயே ஆரம்பிக்கப்பட்டு ஆடவர்களிடையே இதனால் ஹைகோர்ட் வரை விவகாரமும் சில சமயம் அடிதடியும் ஏற்படுமாயின் ஆடவர்களிடம் சன்மார்க்கம் தலை காட்டவும் முடியாது. இவ்வாறு சிறு வயது முதல் தக்க வயதுவரை ஆடவர்களுக்கு சன்மார்க்கம் ஏற்படுவதற்குப் பெண் மக்களே காரணமாவார்கள். பெண்களிடம் கல்வி யறிவு இருக்குமாயின் உலகத்தை துன்மார்க்கப் பேய்க்கு ஆளாக்காது காப்பாற்றவெளிது.

தீய வழியிற் செல்ல விருந்த கணவனைக் காப்பாற்றிய காரிகைகளையும் துன்மார்க்கத்திலாழவிருந்த மக்களை மீட்டு வந்த மங்கைமார்களையும் கொண்ட பாரத நாடு உயர்ந்து விளங்குவதற்குப் பெண் கல்வியே மூலகாரணமாகும். சகோதரனை மீட்ட திலகவதியும் கணவனை மீட்ட மங்கையர்க்கரசியும் கணவனுக்குபதேசித்த சூடாலையும் மெஞ்ஞானம் படைத்த புனிதவதியாரும் நம் பாரதப் பெண்களன்றோ?

பொருள் தேடிக் குடும்பத்தைப் பாரமரிக்க வேண்டிய ஆடவனுக்குத் தன் தொழில் முறையில் பல துன்பங்கள் விளையக்கூடும். இவன் வீட்டிலுள்ள பெண் மக்கள் நற்புத்தியுடையவளாயிருப்பின், கல்வி யறிவுற்றிருப்பின், கணவனைப் பணப் பேய்க்களாக்காது காப்பாற்றலாம். பெண்களிடம் கல்வி யறிவிருந்தால் சிக்கனம் ஏற்படுகின்றது. மனைவியிடம் சிக்கனம் இருந்தால் அவள் கணவன் சன்மார்க்கத்தில் தலைசிறந்து விளங்குவான். பெற்ற தாயிடம் நற்குணங்களிருப்பின் அவள் பெற்ற மக்களுக்கும் நற்குணமமைகின்றது. இதனாலேயே "தாயைப்போல் மக்கள், நூலைப்போல் சேலை" என்றதோர் பழமொழியும் வழங்கலாயிற்று. பெண்கள் தங்கட்குரிய கல்வி கற்று சீரிய வழியில் வாழ முற்பட்டால் உலகம் சன்மார்க்கத்தைக் கனவிலும் கைவிடாதென்பது நிச்சயம். பெண் கல்வி பரவினால் கோர்ட்டுகள் ஒழியும், வீட்டு விவகாரங்கள் விலகும், வீண் சண்டை தொலையும், துன்மார்க்கம் தூர ஓடும், சன்மார்க்கம் தழைத்து நிற்கும். இக்காரணம் கவனியாது பெண் மக்களுக்கும் தற்காலக் (உபயோகமற்ற) கல்வியைப் புகட்டி அவர்களைப் பொருள் தேடும் யந்திரங்களாகப் பழக்கி விட்டால் அயல் நாடுகளில் நாம் கேள்வியுறும் பல இன்னல்கள் பாரத நாட்டிலும் புகுந்து மக்களுக்கு இன்னலை விளைவித்து விடும் என்பதை ஸ்திரீ வித்தியாபிமானிகள் நன்கு கவனிப்பார்களாக. பெண் மக்கட்குரிய கல்வியை ஏற்படுத்தி பாரதத்தாயின் பெரும்புகழை நிலைநாட்டுவார்களாக. இந்திய மக்களின் இயற்கைச் சன்மார்க்கத்தை என்றுங் குறைவின்றி வளர்ப்பார்களாக. இந்நாட்டு நன்னெறியை எந்நாடும் கைப்பற்றி நடக்க வழி காட்டுவார்களாக. பெண்மக்கள் உத்தியோகக் கல்வி கற்று பணப் பேய்க்காளாகி தேகத்திடமும் மனவலிமையுமற்று உலகவளர்ச்சியும் தடைப்பட்டுத் தத்தளிக்காது பெண்மக்களையும் அன்னார்களுக்கேற்ற கல்வியையும் நல்லப் பிரஜைகளையும் நன்மார்க்கத்தையும் ஆதரித்து வளர்ப்பார்களாக.

# "மாதர் கடமைக் கும்மி"

(ஸ்ரீமான் ஆ. வ. பதுமநாப பிள்ளை.)

கும்மியடி பெண்ணே! கும்மியடி சிந்தை
குளிர்ந்து மகிழ்ந்து கும்மியடி
நம்மன்னை பாரததேவி நலத்தினை
நாடிக் கும்மி அடித்திடடீ! (1)

செல்வத் திறைவி திருமகளாம்; இந்த
செவ்விய மேதினி பூமகளாம்;
பல்விதமாகிய சத்திக்குரியவள்
பார்வதி; போர்மகள் துர்க்கையடி. (2)

தேவியரின்றி யெத் தேவர்களேனும்
திருவருள் செய்வரோ? பூமியிலே
ஆவியனையவர் பெண்மணிகள்; அவர்க்
காடவர் தேகத்தை ஒத்தவராம். (3)

"இல்லதென்? இல்லவள் மாண்பானலென
ஈறிற்புகழ் திருவள்ளுவரே
சொல்லிய உண்மை உணர்ந்தால், பின்னொரு
சோகம் விளையுமோ வாழ்க்கையிலே? (4)

மாண்டகணவனை மீண்டுயிர்ப்பித்த நன்
மாது சாவித்திரி; திங்கள் பத்தும்
ஈண்டிய துன்பத்திடை வனத்திற் சிறை
இருந்த அருந்தவ ஜானகியார். (5)

மூர்த்திகள் மூவரை பாலர்களாக்கிய
முனிமனையவள் அநுசூயா;
பார்த்திப ரைவர் மனமகிழ் பாஞ்சாலி
மங்கைநல்லாள் சத்திய பாமாவும். (6)

முதலிய மாதர் திலகங்கள் பலர்—
முன்னர் விளங்கிய இந்நாட்டில்
பதவியும் பட்டமும் பெற்றிடப் பாவையர்
ஐயோ மலிந்தார்களிந்நாள். (7)

ஏட்டுக் கல்வி கற்றடிமை வேலைக்கு—
ஏங்கி நிற்கின்ற றிளைஞர்பலர்;
நாட்டின் முன்னேற்றத்தை நாடியுழைத்திடும்—
நல்ல தொண்டர்கள் சிலர்தாமே! (8)

ஆடவ ரேங்குதல் போதாதோ? இனி—
மங்கைகளு மேங்கவேண்டுங் கொலோ?
மூடத்தனம் புறநாகரிகத்திலே—
மோகங்கொண்டு குலாவுவதே! (9)

உயர்தரக் கல்வி சில மங்கையர் பெற்று—
உத்தியோகங்களில் வீற்றிருந்தால்
பயனென்னவோ? அதனாலிங்கு வாடும்பல்—
பாவையர் துன்பங்கள் நீங்கிடுமோ? (10)

உயிர்க்குறுதி செயும் உண்மைப் பொருளை—
உணர்த்துவதே மெய்க்கல்வியடி!
அயிர்த்திட* லின்றியே நற்கலைச் செல்வத்தை-
அனுபவிப்ப ததன்பயனும். (11)

அத்தகை மெய்க்கல்வி தன்னையே மங்கையர்—
ஆவலொடு கற்கவேண்டுமடி!
எத்தகை நிலையுற்றாலு மற்றவற்
குற்றது செய்தல் பெண்கல்வியடி (12)

சின்னஞ் சிறுகுழந்தைகளைப் பலரித்—
தேசத்திற் 'கலியாணம்' செய்கின்றார்;
பின்னுறுந் துன்ப முணர்வரோ? அவர்—
பேதைமை உன்னவும் கூசுதடி! (13)

மிக்க இளமையில் மங்கல நாணற—
'விதவை' எனப்பெயர் சூட்டிவிட்டே
மக்களவரை விலங்குகள் போலவே—
மதித்து நடத்தல் பெருங்கொடுமை! (14)

சீரிய கல்வி யதுவின்மையால் பலர்—
சேர்ந்துரையாடுவர் வம்புகளே
பாரினி லேனைய மாதர் முன்னேறவும்—
பாரதமாதர் பின்னேக்குகின்றார். (15)

உண்டு முடுத்தும் உறங்கியுமே நாளும்—
உகத்தலை யன்றிப் பிறிதறியார்;
கண்டிலர் வாழ்க்கையின் சீரிய நோக்கத்தை—
கருதில ருயிர்க் குறுதியையே (16)

---

*அயிர்த்திடல்=சந்தேகித்தல்;

புள்ளும் விலங்கு மவ்வாறு வாழ்கின்றன ;—
புகழும் மனித உடல்தாங்கிக்
கொள்ளும் பேறுபெற் றூருயிர்க்குறுதியைக்—
குறித்து மூபலாவிடிற் பயனென் ? (17)

ஆடவரன்னிய நாகரிகத்தினில்—
ஆர்வங்கொண்டே யலைந்தாலும்,
பீடு*டை மங்கையர் பண்டை நாகரிகம்—
பேணில ராயின் இன்றென்னுமே? (18)

'மாதரார் கற்பினில் நின்ற வைய' மென்பர்—
மாகவி கம்பரும் ; மங்கையர்தம்
ஓதருங் கற்பினுலல்லவோ வின்றுமிவ்—
வுத்தம பாரத மோங்குவதே ! (19)

வீரமும் தொண்டும் மெய்க்கல்வியும் ஞானமும்
வேற்றுமையின்றி இருபாலரர்க்
கார்வமொடும் பெறத்தக்கனவே ! அவை—
ஆடர்க்கேயல, மாதர்க்குமே ! (20)

கண்ணகி வீரத்தை, கோதையின் ஞானத்தை,-
காரிகை மங்கம்மை ஆட்சியினை,
எண்ணரிய தமிழ் மங்கையர் கல்வியை—
என்னென்று சொல்லிப் புகழ்வதடி ! (21)

செந்தமிழ்நாட்டினில் மாதரிற் பேதைமை—
சேர்ந்திருத்தலு மெவர் குற்றம் ?
அந்தகர்போலு மவரை யடக்கியாள்—
ஆடவர் தங்களின் குற்றமன்றே ! (22)

'பெண்ணுக்கு விடுதலையில்லை யெனி'லிங்கு—
பேணும் 'சுயஆட்சி' கூடுவதோ ?
மண்ணுக்கிறைவியும் பூமகளே ! அது—
மறந்து பெண்ணை அடக்குவதோ ? (23)

'சிறை காக்குங் காப்பெவன் செய்யும் ? [ளூர்
மகளிர்தம்—சீர்நிறை காத்தலே தலை' யென்
மறைசெய்த வள்ளுவர் ; உள்ளத்திலே யொரு-
மாசிலதே லச்சம் கொள்வதுமேன் ? (24)

பாரதநாடு பழம்புகழ் நாடு ; இது—
பார்முழுவதுக்கும் ஆசானாய்
ஏர்பெற்றிருந்த தொர் காலமுண்டு; இன்று-
ஏங்கிக்கிடத்தல் விதிவசமே ! (25)

இந்திய மக்களின் நாகரிகத்திற்கும்—
இங்கிலாந்தாதிய வேற்றுநாட்டு
பந்தம் மிகும் நாகரிகங்கட்கு மென்றும்—
பற்பலவும் பொருந்தா சிறிதும் ! (26)

தற்கால மாதர் அயல் நாகரிகந்—
தழுவிநடந்தால், தமிழ்த்தாய் தொல்
பொற்பையிழந்து குலைந்திடல் திண்ணமாம்—
போத மகளிர் பணியிதுவோ ? (27)

அம்மையல் விட்டு, நன்மெய்க்கல்வி பெற்றுமே
ஆருயிர்க் கெல்லாம் மெய்யன்பு கொண்டு
'செம்மை பெறப் பழம்புகழுயிர்ப்பித்தல்—
சீரிய நாரியர் செய்கடனே !' (28)

நானிலம் முற்றுமோர் நாடகமேடையாம்—
நாரியரும் பல ஆடவரும்
ஊனிலுயிரிருந்தாட்டிட ஆடுவர் ;
உண்மையில் நாடக பாத்திரரே ! (29)

மங்கையர் நன்கு திருந்தி பணிசெய—
வாழ்க்கை சிறந்து நலம் பெறுமே !
செங்கைகள் கொட்டி நலம்பு செழித்திட—
செவ்விதிற் கும்மியடித்திடடீ ! (30)

*பீடு = பெருமை.

# உலகவினோதங்கள்.

(ஸ்ரீமான் S. A. ஸ்ரீனிவாச சர்மா.)
(Auditor, A. G.'s Office, Madras.)

1. தூரக்கணக்குகள்: — ஆங்கிலேயர்கள் 5280 அடி நீளத்தை ஒரு மைல் என்று கணக்கிடுகிறார்கள். ஜெர்மனியில் ஒரு மைல் என்பது ஆங்கிலேய மைலைவிட நாலு பங்கு பெரியதாம். பிரான்ஸ் தேசத்தில் 'லீக்' என்பது ஆங்கிலேய மூன்றுமைலாம். ருஷியாவில் ஆங்கிலேய முக்

கால் மைலை வெர்ஸ்ட் என்று கணக்கிடுகிறார்கள். ஸ்வீடன், டென்மார்க், ஹங்காரி முதலிய தேசங்களில் ஆறு ஆங்கிலேய மைல் கொண்டது ஒரு மைல். நமது தென்னிந்தியாவில் ஒரு நாழிகை வழி தூரம் என்பது $1\frac{1}{4}$ மைல். ஐர்லாந்திலும் ஸ்காட்லண்டிலும் மைல் என்பது ஆங்கிலேய $1\frac{1}{2}$ மைல்.

2. உலகத்திற்குள் மிகவும் விநோதமான கோயில் நார்வே தேசத்தில் பெர்கென் என்னும் ஊரில் உளதாம். வேகாத சுண்ணும்பு ஜலமும், திரிந்தபாலும், அநேக ஆயிர முட்டைகளின் வெள்ளை சத்தும் சேர்த்து முழு காகிதத்தினலேயே அக்கோயில் நிர்மாணிக்கப் பட்டிருக்கிறதாம். அக்கோயிலில் ஒரே சமயத்தில் தெய்வத்தை வணங்க ஆயிரம் ஜனங்களுக்கு இடம் இருக்கிறதாம்.

3. லண்டனில் ஒரு நூதன இயந்திரம் கண்டுபிடிக்கப் பட்டிருக்கிறதாம். அந்த இயந்திரத்தை பணம், நகை இவைகளை பத்திரப்படுத்தும் இரும்பு பெட்டியுடன் இணைத்து வைத்தால் பெட்டியை அதை உபயோகிக்க தெரிந்தவர்கள் தவிர வேறு யாராவது தொடுவாரானல் உடனே உரக்க மணி அடிக்குமாம். அதே சமயத்தில் ஒரு வெளிச்சம் உண்டாகி தொடுகிறவர்களை அப்படியே புகைப்படம் எடுத்து விடுமாம். அப்பெட்டியின் மேல் நெருப்பு பட்டாலும் மணிபடிக்குமாம்.

4. இவ்வுலகில் மொத்தம் கணக்கு பார்த்ததில் நாற்பத்திரண்டு டன் நிறையுள்ள வைரம் இருக்கிறதாம்.

5. முதல் முதலில் மனிதன் எழுதுவதற்கு ஒரு உளியால் பாறையில் வெட்டி அடையாளங்கள் செய்தானும். கொஞ்ச காலத்திற்குப் பிறகு ஒட்டக மயிரை ஒரு குச்சியில் கட்டி அதைக்கொண்டு எகிப்திலும் சீனதேசத்திலும் எழுத்துக்கள் தோன்றினவாம். பிறகு பனை ஓலையில் எழுத்தாணி கொண்டு எழுதவாரம்பித்தானும். இவ்வழக்கம் இந்தியாவில் இன்னும் இருக்கிறது. இறகு பேனவை கி. பி. 553 இல் முதல் முதல் உபயோகப்படுத்தினர்களாம். பர்சியா, க்ரேஸ், ஸிரியா முதலிய தேசங்களில் தந்தம் எலும்பு இவைகளை கூறாக்கிக் கொண்டு எழுதினர்களாம். கி. பி. 1820 இல் ஜோசப் கில்லட் என்பவரால் எஃகு பேன முதலில் செய்யப்பட்டு உலகமெங்கும் பாவிற்றும். பவுண்டன் பேன கி. பி. 1809-இல் கண்டுபிடிக்கப்பட்டது. முப்பது வருஷங்களுக்கு தங்க இலகுகள் செய்யப்பட்டு இப்பொழுது உலகத்திற்கே மிகவும் உபயோகமான எழுதுகோலாய் உபயோகப் படுத்துகிறார்கள்.

6. நம்மில் ஒருவரை பிறப்பிக்க வேண்டி நமக்கு முன்னல் எவ்வளவு முன்னோர்கள் பிறந்திருக்க வேண்டும் யென்று இதை வாசிக்கும் யாராவது யோசித்ததுண்டா? ஒரு மனிதனை உண்டாக்குவதற்கு ஒரு தாய் தகப்பன் வேண்டும். அதாவது இரண்டு பிராணிகள். இவர்கள் ஒவ்வொருவரையும் உண்டாக்க ஒவ்வொரு தாய் தகப்பன் வேண்டும். அதாவது நான்கு மனிதப் பிராணிகள். இம்மாதிரி கணக்கு போட்டுக் கொண்டே போனல் சென்ற இரண்டாயிரம் வருஷத்திற்குள் உன்னை பிறப்பிக்க இவ்வுலகில் 139235017489534976, மனிதப் பிராணிகள் பிறந்திருக்க வேண்டுமாம். பிராக்டர் என்னும் ஒரு மஹான் பின் வருமாறு கணக்கிடுகிறார். கலியுகவாரம்பத்தில் ஒரு புருஷன் ஒரு ஸ்திரியிருந்து அவர்களுக்கு ஒரு பிள்ளையும் ஒரு பெண்ணும் பிறந்து இவர்கள் 21-வது வயதில் கலியாணம் செய்து கொண்டு ஒவ்வொரு வருக்கும் குழந்தைகள் பிறந்து அவர்கள் கலியாணம் செய்து கொண்டு இது வரையில் ஒருவரும் செத்துப் போகாமல் இருந்தால் இப்பொழுது ஜனத்தொகை 2199015-க்கு பின் 144 பூஜ்யங்களை சேர்த்தால் என்னதுகை

யோ அவ்வளவு இருக்குமாம். இவ்வளவு ஜனங்களை கொள்கிறதற்கு. இப்பூமியின் பிரமாணத்தை போல் 3166526 உடன் 40 பூஜ்யங்களை சேர்த்தால் எவ்வளவு தொகையோ அவ்வளவு பூமிகள் வேண்டுமாம். ஒரு புருஷன் ஸ்திரீயிலிருந்தே இவ்வளவு உண்டானால் அதற்குமேல் கணக்கு இட நமது மூளை தயங்குகிறது. இதை யுத்தேசித்து தான் கடவுள் இவ்வுலகில் மரணம் என்பதை ஏற்படுத்தியிருக்கிறார் போலும்!

7. மத்திய ஆபிரிகா கண்டத்தில் ட்சாட் என்னும் பெரிய ஏரியை சுற்றிருக்கும் பிரதேசத்திலுள்ள ஸ்திரீகளுக்கெல்லாம் உதடுகள் நீண்டிருக்குமாம். பெண் குழந்தைகளுக்கு நாலு, ஐந்து வயதாகும் பொழுது மேல் உதடையும் சேர்த்து கத்தியால் ஒரு பொத்தல் செய்து அதில் ஒரு ஈர்க்குச்சியை சொருகிவிடுவார்களாம். வர வர அந்த ஓட்டைகளை அகற்றிக் கொண்டே போகிற படியால் உதடுகள் நீண்டு கொண்டே வருமாம். இருபத்தைந்தாவது வயது வரும் சமயத்தில் மேல் உதடு ஐந்து அங்குல நீளமும், கீழ் உதடு ஏழு அங்குல நீளமுமாய் இருக்குமாம். எந்த ஸ்திரீக்கு உதடுகள் நீண்டு இருக்கின்றனவோ அவள்தான் அழகுள்ளவள் என்றும் நாகரீக முன்னவள் என்றும் அத்தேசத்து பிரபுக்களால் கருதப்பட்டு அவளைக் கலியாணம் செய்து கொள்ள ஏக போட்டியாம். இம்மாதிரி காதுகளை நீட்டுவது நமது திருநெல்வேலி ஜில்லாவில் வழக்கம்.

8. நான்கு வருஷத்திற்கு முன்னால் காலிபோர்னியா தேசத்து சட்ட சபையால் ஒரு புதிய நியாய பரிபாலனசபை ஏற்படுத்தப் பட்டது. இப்பொழுது அத்தேசத்திலுள்ள எல்லா கோர்ட்டுகளிலும் விட அதில் தான் வேலை யதிகமாம். சாதாரண கோர்ட்டுகளில் கேஸ் நடத்துவதற்கு பொருளில்லாத ஏழைகளின் சௌகரியத்தை யுத்தேசித்து இந்த கோர்ட்டு ஏற்படுத்தப் பட்டதாம். அறுபது பவுனுக்கு மேல் பட்ட வழக்குகள் எடுத்துக் கொள்ளளார்களாம். வாதாட வக்கீல்கள் கிடையாதாம். நியாயாதிபதி கட்சிகளை நேரில் விசாரித்து தீர்ப்பு சொல்வாராம். அதற்குமேல் அப்பீல் இல்லையாம். சிறு கடன்களைத் திரட்டுவதே முக்கிய வேலையாம். இக்கோர்ட்டில் வருஷத்திற்கு ஐயாயிரம் கேஸ்களுக்கு மேல் தீர்ப்பு ஆகிறதாம்.

9. இதுவரையில் இவ்வுலகில் கண்டெடுக்கப்பட்ட ரேடியம் என்னும் உலோகத்தின் பிரமாணம் மொத்தம் ஏழரை அவுன்ஸ் தானாம். ஆனால் அதின் விலை அறுபது லட்சம் பவுனாம்.

10. பாரிஸ் நகரத்தில் "பிப்லியாதிக்—நேஷனல்" என்னும் பெரிய புஸ்தகசாலையில் பத்திரப்படுத்தியிருக்கும் ஒரு சுவடிக்கட்டு தான் உலகத்திலுள்ள எல்லா புஸ்தகங்களிலும் ஏட்டு சுவடிகளிலும் பழையதாம். ஈயேசு பிறப்பதற்கு மூவாயிரத்து முன்னூற்று அறுபத்து ஆறு வருஷங்களுக்கு முன் எகிப்து தேசத்தில் அஸ்ஸா என்னும் அரசன் ஆளும் காலத்தில் 'ப்டாஹொடப்' என்பவரால் எழுதப் பட்டதாம். அதில் அநேகவித தத்துவங்களும் உலக அனுபவங்களும் முக்கியமாய் ஸ்திரீகளிடத்தில் மரியாதையும் அன்பும் இருக்க வேண்டுமென்றும், ஒரு கடவுளையே வணங்கவேண்டு மென்றும் எழுதியிருக்கிறதாம்.

(தொடரும்.)

# சரஸ்வதி.

## (ஓர் சகோதரி)

"நானும் என்னால் கூடியவரை மூனைந்து முயற்சி செய்தாச்சுது. என்னிஷ்டப்படி முடிவதாகக் காணவில்லை. தகப்பனும் பெண்ணும் ஒரே கொள்கையுடனிருக்கிறார்கள். இதெல்லாம் வெளி ஜனங்கள் கண்டார்களா? என்னைத் தானே இகழ்கிறார்கள். கேட்போருக்கு பதில் சொல்ல என்னால் முடியவே யில்லை. இதற்குப் பரிகாரம் நான் பிராணத்தியாகம் செய்து கொள்வதைத் தவிர வேறு ஒன்றும் காணவில்லை" என்று பெருமூச்சு விட்டவளாய் தனக்குத் தானே சொல்லிக்கொண்டு கையிலிருந்த ஓர் புஸ்தகத்துடன் வெகு துயரத்திலாழ்ந்தவளாய் ஓர் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டு "ஈச்வரா! உமது திருவுள்ளமெப்படியோ" என்றாள் அகிலாண்டம்மாள்.

அச்சமயம் தன் அறைக்குப் போய் ஏதோ புஸ்தகம் எடுத்துப்போக வந்த சரஸ்வதி தன் தாயாரின் பரிதாபமான மொழிகளைக் கேட்டவளாய், அவளருகில் வந்து "ஏனம்மா! என்ன சொன்னீர்கள்? என்னமோ பிராணத்தியாகமென்றீர்களே, அது என்ன விஷயம்" என்றாள்.

தாய்:—விசேஷம் ஒன்றும் மில்லை, எல்லாம் உன் சங்கதிதான்.

மகள்:—அம்மா! என்னால் பிராணனை விடவேண்டிய அவசியமான அவ்வளவு பெரிய விசனம் என்ன வந்தது? அதை நான் அறியக் கூடாதா?

தாய்:—உன் கலியாண விஷயம்தான் வரவா இராப்பகலாய் மனதை வாட்டுகிறது. உனக்கு வயதும் பதினைந்து ஆய்விட்டது. இன்னும் மூன்று வருஷத்துக்குப்பின்தான் மணம் புரிவிப்பதாக உன் அப்பா சொல்லுகிறார். நீயோ கண் மூடித்தனமாய் கலியாணமே வேண்டாமென்கிறாய். இதெல்லாம் என்ன நாகரிகமோ தெரியவில்லை. வெளியே தலை நீட்ட எனக்கு முடியவில்லை. ஜனங்கள் பிடுங்கித் தின்று விடுகிறார்கள். 'மத்தளத்துக்கிருபக்கமுமிடி' என்பதுபோல எனக்கிருபக்கத்திலும் கஷ்டமாயிருக்கிறது. கலியாணம் செய்து விட்டு படிக்க வைத்தால் ஆகாதா? நான் வேண்டாமென்கிறேனா! அப்பொழுது என்னை இவ்வளவு அதிகம் நிந்திக்க மாட்டார்களே.

மகள்:—(சிரித்துக் கொண்டு) இதற்குத்தானா நீங்கள் பிராணனை விடவேண்டும். உங்கள் பெற்றோர் கலியாணம் செய்து வைத்ததால் தானே நான் பிறந்து உங்களுக்கு இவ்வளவு துன்பத்தை உண்டாக்குகிறேன். இது தெரிந்தே எனக்கு கலியாணம் செய்ய வேண்டு மென்கிறீர்களே! நான் இவ்வித கஷ்டத்துக்கெல்லாம் ஆளாகமலிப்படியே இருந்துவிட்டால் நல்லதல்லவா?

தாய்:—இம்மாதிரி கோணலான வழியில் பேச இடமில்லாமலிருப்பதற்காகத்தான் சிறு வயதில் நம் முன்னோர்கள் பாணிக்ரகணம் செய்யும் வழக்கத்தைக் கைக் கொண்டிருந்தார்கள். நம் பெரியோர் காரியமெல்லாம் வெகு நேர்மையும் நியாயமும் கூடினவைகளாயிருக்கின்றன.

மகள்:—(தடுத்து) எதம்மா நியாயம்? என் அருமை விசாலத்தைப் பார்! பத்து வயதுக்குள் கலியாணமும் செய்து அவளைப் பரிதாபமும் செய்தாச்சுது. அக்காலத்திலிரண்டும் அவளுக்குத் தெரியாது. அவள் பெற்றோர்கள் அவளுக்கு விசனத்தை என்றும் அழிவில்லாதபடி அதிஜாக்கிரதையுடன் விலை

க்கு வாங்கி அவளறியாமலே சேமித்து வைத்திருக்கிறார்கள். அதன்பின் தான் அவள் அதை அறிந்து வருகிறாள். அதற்காக அவர்கள் இப்பொழுது மனம் வெதும்பித் துடிக்கிறார்கள். அவள் பத்தரைமாற்றுத் தங்கத்துக்குச் சமானமாயிருக்கிறாள். அவளுக்கும் எனக்கும் என்ன பேதம்? யாரோ ஒருவன் கட்டினனும். அந்த தோஷம் தானே. அவள் தகப்பனார் அவளை நன்றாய்ப் படிக்கவைக்கப் போகிறார். அவள் தாயார் பிராணனைவிடக் காணவில்லையே.

தாய்:—உண்மைதானம்மா! அவளுக்காக அனைவரும் பரிதாபம் கொள்வார்களே தவிர யாரும் ஏளனம் செய்யமாட்டார்களல்லவா?

மகள்:—ஆனால் என்னைவிட அவள் ஸ்திதி மேல் என்கிறீர்களா?

தாய்:—நான் உன்னுடன் விதண்ட வாதம் செய்யத் தயாராயில்லை.

மகள்:—இருக்கட்டுமம்மா! நீங்கள் ஓய்வு நேரத்தில் புராண சம்மந்தான புஸ்தகங்கள் படித்து வருகிறீர்களல்லவா? அவைகளில் அனேகமாய் ஜானகி ஒருவள் தான் சிறு வயதில் கலியாண முடிக்கப்பட்டவளாய்க் காணப்படுகிறது. மற்றபடி ருக்மணி, சத்தியபாமா, தமயந்தி, சந்திரமதி, சகுந்தலா முதலிய அனேகரும் பெரியவர்களான பின் தான் மணம்செய்துக் கொண்டிருக்கிறார்கள். ரிஷி பத்தினிகள் கூட அவ்விதமேயென நினைக்கிறேன். நம் தேசம் நம் முன்னோர்களாகிய இந்து அரசர்களால் ஆளப்பட்டு வந்த பொழுதும் அவ்விதம் தான். மகமதிய அரசர் காலத்தில்தான் துரதிஷ்ட வசமாயிப்படி மாறி விட்டதாம். பின்பு அன்னியர் அரசாட்சியாகிய இந்நாளிலும் இதுவே நடந்து வருகிறது. இது நீங்கள் அறியாததா? இதில் என்ன அவமானம்?

தாய்:—சரி, நீ சொல்லுவதுண்மை தான். அக்காலத்துக்கதுசரி. இப்போதைய வழக்கப்படி நாம் நடக்க வேண்டாமா?

மகள்:—எக்காலமாகி லென்ன வந்தது? எதில் நன்மையும் சுகமும் உளதோ அதைத் தானே யோசித்துச் செய்யவேண்டும்.

தாய்:—நீ என்னமோ சொல்லுகிறாய். இப்பொழுதே நீ பெரியவளாகி விட்டதாக என் காதில் பட்டும் படாமலும் பேசுகிறார்கள். உன் தகப்பனார் திட்டப்படி இன்னும் மூன்று வருஷங்கள் போவதானால் ஊரார் சொல் வெகு அதிகமாகி விடும். அச்சமயம் உன்னை மணம்புரிய யாரும் முன்வர மாட்டார்கள். நீ விவாகமாகாமல் வீட்டிலிருந்து விட்டால் உனக்குக் கீழிருக்கும் பெண்களின் கதியும் அப்படித் தான். அந்த ஸ்திதியில் நம்குடும்பம் எவ்வித மிருக்கும்? இதையெல்லாம் உன் அப்பா யோசிக்கிறதில்லை.

மகள்:—(சிரித்துக் கொண்டு) என்ன பிரமாதமம்மா? பால்ய விதவைகளுடன் அப்பொழுது நாங்கள் சேர்ந்துகொண்டு விடுகிறோம். அவர்களைப் போல் நாங்கள் வருத்தப் படவும், கோலம்செய்துகொள்ளவும் வேண்டியதில்லை. எங்களை அப்பா சற்று படிக்கவைத்து விட்டாரானால் எங்கள் ஜீவனத்துக்கு நாங்கள் வழி தேடிக்கொள்ளுகிறோம், அல்லது கலியாணத்தில் மனமிருந்து, வரன் கிடைக்காமற் போனால் தற்காலம் அபூர்வமாய் நடக்கும் வழக்கம் போல், நாங்களும் வேறு ஜாதியில் கலப்பு விவாகம் புரிந்து கொள்ளுகிறோம்.

தாய்:—இப்பொழுதெல்லாம் உனக்கு சிரிப்பாகத் தானிருக்கும். என் ஸ்திதியிலிருந்தால் அப்பொழுது தெரியும்.

மகள்:—தெரிய வேண்டாமென்பதற்காகத் தான் விவாகம் வேண்டாமென்கிறேன்.

தாய்:—நீ குழந்தைப் பேச்சு பேசுகிறாய்.

மகள்:—அவ்விதமிருக்கவே என் ஆவல்—(அச் சமயம் தந்தி சேவகன் ஒருவன் ஓர் தந்தியை கொண்டு வந்தான். தன் தகப்பனார் கோர்ட்டுக்குப் போயிருப்பதால் உடனே சரஸ்வதி அதை வாங்கி உடைத்துப் பார்த்தாள்).

தாய்:—(வெகு அவசரமுடன்) என்ன விசேஷம்? யாரிடமிருந்து வந்திருக்கிறது.

மகள்:—அம்மா! அது சொந்தமல்ல, அன்னியர் விஷயம்.

தாய்:—சரிதான்.

அப்பொழுது சரஸ்வதியின் தகப்பனார் வீட்டுக்கு வந்தார். என்ன விசேஷமென மகளை வினவினார். எல்லாம் நல்லதுதான் எனக்கூறி விட்டு வந்த தந்தியை அவரிடம் கொடுத்து விட்டு தன் புஸ்தகத்தை நாடித் தன்னறையை அடைந்தாள். 'இத்தந்தி விஷயம் நம்மை பாதிக்கலாம். ஆகிலும் நான் தளர்வடையேன், நிச்சயம்' என்று தன்னுள் சரஸ்வதி கூறிக்கொள்ளலானாள்.

தகப்பனார் தந்தியைப்பார்த்தார். அவர் முகம் மலர்ந்தது. அதைக்கண்ணுற்ற அவர் மனைவி, "என்ன, அடிக்கடி சென்னை ஐகோர்ட்டுக்குக் கேஸ் விஷயமாய் சென்று கொண்டிருந்தீர்களே; அது உங்கள் பட்சம் ஜயம் ஆயிற்றோ" என்றாள்.

புருஷன்:—இல்லை. என் நண்பருடைய மகன் புருஷோத்தமன் பீ.ஏ. ஆனர்ஸ் பரீட்சையில் முதன்மையில் தேறியிருகிறானாம். அவனை அவர் சீமைக்குப் படிக்க அனுப்பப் போகிறாராம். இன்னுமிதரவிஷயங்கள் நாளை மறுநாள் கடித மூலியமாய்த் தெரியவரும்.

மனைவி:—ஓ! சரிதான். அவன் தங்கைதானே இன்னும் கலியாண மில்லாமல் படித்துக் கொண்டிருப்பது?

புரு:—ஆமாம்!

மனை:—(முன் வார்த்தையைத் தொடர்ந்து) அவரிடமிருந்து என்ன விரிவான கடிதம் நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள்?

புரு:—கடிதம் வரட்டும், சொல்லுகிறேன்.

மனை:—ஆனாலும்—

புரு:—அவனுக்கு நம் சரஸ்வதியைக் கேட்கிறார்கள்.

மனை:—(அவசரமுடன்) நன்றாய்ச் செய்யலாமே! அடுத்தமாதமே செய்துவிடலாம்.

புரு:—(சிரித்துக் கொண்டு) செய்வதானாலும் இப்பொழுது இல்லை. அவன் போய் படித்து விட்டு க்ஷேமமாயும் நல்ல புத்தியுடனும் திரும்பி வந்தமேல் தான்.

மனை:—ஏன்! கலியாணம் செய்து விட்டு அனுப்புவதே நல்லது. மனைவி என்ற அன்பு ஒன்று உண்டாய்விடும். இவளும் படித்து வருவதால் இவளை அவன் அதிகம் நேசிக்கக் கூடும்.

புரு:—இல்லை, அது முடியாது. திரும்பிவந்த பிறகுதான் நடக்கவேண்டும்.

மனை:—அவன் எவ்வளவு வருஷம் படிக்க வேண்டி யிருக்கும்?

புரு:—அது திட்டமாய்த் தெரியாது. நாளைக் கடிதம் வந்தால் தெரியும்.

மனை:—சுமார் நாலைந்து வருஷமாகு மென்றால் அதுவரை நம் குழந்தை கலியாண மில்லாமலிருக்க முடியுமா?

புரு:—என்னுடைய திட்டம் மூன்று வருஷம் இடங்கொடுக்கும். அவர்களிருவரும் 'சதிபதி' யாவது நிச்சயிக்கப்பட்டுவிட்டால் மேலே இரண்டு வருஷமானாலும் பாதகமில்லை. என்ன பிரமாதம்?

மனை:—சீமைக்குப் போகிற வியாஜத்தாலாவது கலியாணம் நடைபெறுமோ வென எதிர்பார்த்தும் அதிலும் ஏமாந்து போகப் பட்டவளானேன். இதனால் விளையும் பாதகங்களெல்லாம் என்னைச் சேர்ந்ததாயிருக்

தாங்கள் எதைச்சொன்னாலும் நான் கேட்கவும் அதற்குக் கீழ்ப்படிந்து நடக்கவும் செய்கிறேன்.

தக:—(வெகு அவசரமாயும், கலக்கமுடனும்) என்ன சொன்னாய்?

சர:—(வெகு தாழ்மையுடன்) அப்பா! எனக்குக் கலியாணம் வேண்டாம். இதைப் பற்றி நான் பலதடவை அம்மாவிடம் சொல்லியிருக்கிறேன். ஆகையினால் அது தங்கள் காதில் அவசியம் விழுந்திருக்கவேண்டும். அதை நீங்கள் ஊர்ஜிதம் செய்துகொள்ளுங்கள்.

தக:—அம்மா! இது என்ன குழந்தைத் தனமாய்ப் பேசுகின்றாய். நம் ஜாதி வழக்கப்படி இவ்வளவு நாள் உன்னை மணம் புரிவிக்காமலிருந்ததே தப்பு. பெண் குழந்தைகளின் நன்மையைக் கருதி, நம்மைப் பலர் பின்பற்றி நடக்கவேண்டுமென்பதற்காகப் பலர் நிந்திப்பையும் உன் தாயாரின் துயரத்தையும் பொருட்படுத்தாமல் காலதாமதம் செய்தேன். ஆகையால், நீ சொல்லும் உன் கேலிப் பேச்சைவிட்டு சரியானபடி யோசித்துச் சொல்.

சர:—அப்பா! தயவு செய்து க்ஷமிக்கவும். என் சிற்றறிவுக்..கெட்டியவரை யோசித்துத்தான் சொல்லுகிறேன். எனக்கும் வயது பதினாறு பூர்த்தியாகப் போகிறப்படியால் நன்மை தீமையின் பகுத்தறிவு ஏற்பட்டிருக்கிறது. இன்றைக்கல்ல, இரண்டு வருஷகாலமாய் நன்கு யோசித்து இதே தீர்மானத்தில் உறுதி கொண்டு விட்டேன்.

தக:—(இதைக்கேட்டுக் கண்களில் நீர் ததும்ப) என் அருமைக் குழந்தாய்! நீ இப்படி சபதம் செய்யாதே. இது முடியாத காரியம். புருஷோத்தமன் நல்ல குணசாலி. பெயருக்கேற்ற பொருள் கொண்டவன்; அவன் தூய்மையுடன் சுகமே படித்துத் திரும்புவானென்பதில் சற்றும் ஐயமில்லை. உன் படிப்புக்கு அவன் தடங்கல் செய்யமாட்டான். எதுவரை படிக்க உனக்கு விருப்பமோ அதுவரை நாங்கள் பூர்த்தி செயவோமென்பதில் தடையில்லை. ஆகையால் நீ ஒப்புக்கொள். அவருக்கு நான் நாளை எழுதி விடவேண்டும். உன் முழுசம்மதமும் அவசியமாயிருக்கிறபடியால் ஒப்புக்கொள்.

சர:—அப்பா! பொறுத்துக்கொள்ளுங்கள். பூஜிக்கத் தகுந்த உங்களிடம் வாதம் செய்வதாகக் கருதவேண்டாம். விவாகம் என்ற ஆசை என்னை விட்டு அறவே ஒழிந்து விட்டது. நான் என்றும் நித்திய கன்னிகையாகவே இருக்கவிரும்புகின்றேன். இதிலிருந்து அணுவளவும் பிறழமாட்டேன். என்னை ஓர் ஆணாகப் பாவியுங்கள். இதனால் என் பெற்றோர்களுக்கோ எனக்கோ ஒரு பழியான வார்த்தையும்வர இடம் கொடுக்கமாட்டேன். நான் தங்கள் அன்புக்கு பாத்தியப் பட்டவளானால் இதை நீங்கள் நிறைவேற்றித் தானாகவேண்டும். இதற்காக வருத்தம் கொள்ளவேண்டாம். இவ்விஷயம் என் தங்கை காந்திமதிக்கு முடித்து விடலாம். அதுவும் அவர் திரும்பி வந்தபின் ஆகட்டும். அவளுக்கும் அவசரமில்லை.

தக:—(தன்னுள் ஹா! ஹா! இந்தச் சிறு வயதில் என்ன தூய்மை! என்ன யோசனை! எவ்வளவு உறுதி! பிற்கால அநுபவத்தையொட்டிய வார்த்தையின் அர்த்தமென்ன? எவ்வளவு சாந்தம்! என்ன தன்னடக்கம்! கலியாணத்தில் என்ன வெறுப்பு! எதுவும் இவள் அசைவதாகக் காணவில்லையே என நினைத்து) (வெளிப் படையாய்) பெண்ணே! வேண்டாம். இது அழகல்ல. உன் அன்னை சம்மதியாள். பெற்ற தாயாரை சந்தோஷிப்

பிக்க வேண்டாமா? உன் உறுதியைச் சற்று தளரவிட்டுப் புனராலோசனை செய்து பார். இவனிஷ்டமில்லாவிடில் உன் மனதுக் கிசைந்த வேறு வரனையாவது தேடிக் கொடுக்கிறேன்.

சா:—(சற்று நகைத்தவளாய்) தாங்கள் எனக்கு வரன்தேட வேண்டிய காரியம் உங்களுக்கில்லை. ஆதலால் நான் புனராலோசனை செய்யவேண்டிய அவசியமுமில்லை. அப்படி நான் யோசிக்கக் கூடுமென்று நீங்கள் நினைக்கும் பட்சத்தில் அடுத்த ஜென்மம்வரை நாம் காத்திருக்க வேண்டியவர்கள் தான். இவ் வார்த்தை சுத்தமான உண்மை. ஆகையா லிவ்விஷயமாய் இனி நீங்கள் கவலையும் யோசனையுமற்றவராயிருக்க வேண்டியது தான். காந்திமதிக்கு மணம் செய்யப்பட்டு விட்டால் தாயாரின் மனமும் சந்தோஷ மடைந்துவிடும். தங்களிஷ்டத்துக்கு மாறு சொல்லாத உத்தமியல்லவோ அவள். என்ன புண்ணியம் செய்ததாலோ இப்பேர்ப்பட்ட மகத்தான பாக்கியவந்தர்களான உங்களை நான் தாய் தந்தையர்களாய் அடைந்தேன். என் பெற்றோர்களைப் பூஜித்துக் கொண்டும் குழந்தைகளின் சந்தோஷத்தை அநுபவித்துக் கொண்டும் என் இன்னுயிர்த் தோழியான விசாலத்துடன் கூடி, என் வாழ்நாளை நன்னாளாகக் கழிக்கவே நான் தீர் மானித்து விட்டேன். இதுவே உண்மை யாக ஈச்வர சம்மதமுமாகும்.

தக:—(விசாலம் என்றபெயர் காதில் தொனித்ததும் திடுக்கிட்டவாய்) ஓ! சரிதான், தெரிந்தது விஷயம்! அவளுக்காகவோ நீயும் இப்படி இருக்க உத்தேசித்தாய். அக் குற்றமற்ற பாலகி என் சொந்த தங்கையின் குழந்தையல்லவா? அவள் என்னுடைய வளல்லவா? அவள் விஷயம் என் நினைவி லிருக்காதென்று நினைத்தாயா? அவள் படிப்பு முடிந்தபின் தகுந்தபடி அவள் சம்மதத்தின் பேரில் அவளுக்கு மறுமணம் செய் விக்கத் தான் நாங்கள் யோசித்துக் கொண் டிருக்கிறோம். ஆதலால் இனி அதை மறந்து விடு. ஆயின், உனக்கு சம்மதம் தானே.

ஸா:—இல்லை, இல்லை, முடியாது. ஒருகாலு முடியாது. இது நிஜமான பகற்கனவுதான். அவளையும் இணங்கச் செய்ய முடியாது. என்னையும் திருப்ப முடியாது. இது நிச் சயம்.

தண்ணீரில் அமிழ்ந்திருக்கும் ஒருவர் தயங்கிக்கொண்டிருக்கும் சமயம், அகஸ்மாத்தாய் ஒரு கொடியானது தன் கையில் தென்படவே அதைப்பிடித்துக் கொண்டு கரையை அடையலாம் என்ற எண்ணத்துடனிருக்கும் பொழுது அக்கொம்பையும் ஜலம் அடித்துக்கொண்டு போய்விட்டால் அவர் மனம் எவ்விதம் இருக்குமோ அந்த ஸ்திதியை மகளின் உறுதியானவார்த்தையாலடைந்த அவள் தகப்பனார் மிகுந்த வருத்தத்துடன் கூடியவராய் மெத்தவும் ஈனஸ்வரத்துடன், "அம்மா சாஸ்வதி! உனக்குப் பதில் சொல்ல நான் முடியாதவனாயிருக்கிறேன். தற்காலம் என் நண்பருக்கு புருஷோத்தமனை என் மருமகனுக்கிக் கொள்ளுவதாக பொதுப்பட எழுதிவிடுகிறேன். காந்திமதி உன்னைப்போல் மனோபாவமில்லாதவளாயிருப்பாளென்று நிச்சயமாய் நம்பியே அவருக்கு உறுதிகொடுக்கப் போகிறேன். ஆகிலும் குழந்தாய்! நடுவிலிருக்கும் காலதாமதம் உன் மனதைமாற்ற ஏதுவாயிருந்தால், நான் சந்தோஷமடைவேனென்பதில் சற்றும் ஐயமில்லை. எல்லாம் கடவுள் செயல். அவர் ஆக்ஞையை மீற நம்மால் முடியாது. நான் போய் வருகிறேன். நீ உன் வேலையைச் செய்யம்மா" எனப்பகன்று சென்றார்.

தன்னுடைய பிதாவானவர் புறப்பட்டுப் போனபின், "நான் நான்கு நாளாக எதிர்பார்த்த சம்பவம் இன்று முடிந்து விட்டது. இனி என் தகப்பனர் இவ்விஷயமாய் என்னுடன் பேச மாட்டார். என்னைக் கட்டாயப் படுத்தவுமாட்டார். ஏனெனில் இன்னும் மூன்று நான்கு வருஷங்களென்றால் நான் இன்னும் வயதான வளாய்விடுவேன். இவரைக்காட்டிலும் என் தாயார் அதிகம் என் விஷயமாய் வருத்தப்படு வாளென்பது நிச்சயம். அதற்கென்ன செய்ய லாம். ஆனல் அவளை என் இளையவர்களால் திருப்திசெய்ய எனக்குப் போதுமான ஆற்றலிருக்கும். ஏ ஈசா! என் ஒப்பற்ற சிநேகிதியின் அன்பை உண்டாக்கின நீர், எல்லாவிதத்தாலும் நாங்கள் ஒரேமாதிரியா யிருக்கக் கருணை புரிவீர் என்பதினல் சற்றும் தயக்க மில்லாமலிருக்கிறேன். ஆகையால் நீர் என்றும் எங்கள் பக்கத்தில் துணையிருந்து எங்களை நல்வழியில் நடத்த உதவி புரியக்கடவீர்," என ஸ்துதித்து விட்டு, தன்னுடைய கணக்கைச் செய்வதாக உடனே தன் மனதைப் படிப்பில் செலுத்திவிட்டாள். அவள் மாசற்ற மனத்திடனுள்ளவளாதலால் அவ்விஷயமாய் அவள் சஞ்சலமோ கவலையோ கொள்ளவேயில்லை.

புத்திரியிடமிருந்து விடைபெற்றுச் சென்ற தகப்பனர் வெகுநேரம்வரை தன் மகளின் உறுதியான திடத்துடன் கூடிய மனேபாவத்தை எண்ணி, எண்ணி வியந்தார். அவள் தன் தோழிபால் காட்டும் அன்பையும் குண விசேஷங்களையும் நினைத்துப் புகழ்ந்தார்.

மறுநாள் தன்னுடைய நண்பருக்குக் கடிதம் எழுதினர். "புருஷோத்தமன் கல்வி பயில்வதின் பொருட்டு அன்னிய நாடு செல்வது மெத்த சந்தோஷம். அவன் தன் படிப்பை முடித்துக்கொண்டு, சுகமாய்த் திரும்பி வந்தபின், என்பெண்களில் மூத்தவளையோ அல்லது அதற்கடுத்தவளையோ கொடுத்து மணம் செய்விக்கிறேன். இது நிச்சயம்" என உறுதியுடன் எழுதிவிட்டார். இக்கடிதத்தைப் பார்த்த அவர் நண்பர் மிகுந்த சந்தோஷமடைந்து, கடித சங்கதியைத் தன் மகனுக்கறிவித்தார். சாஸ்வதி கலியாணம் செய்து கொள்வதில்லையென்ற சங்கதி, புருஷோத்தமன் காதில் முன்னமே விழுந்திருந்தபடியாலும், அவர் எழுதியிருக்கும் சந்தேகத்தினலும், காந்திமதியை தான் திரும்பிவந்து கடிமணம் புரிந்துகொள்ளுவதாகத்தன்னுள் தீர்மானித்துக் கொண்டான் புருஷோத்தமன். அதற்கடுத்தவாரம் அவன் அயல் நாடு சென்றான்.

சில மாதங்கள் சென்றபின் ஓர் நாளிரவு சுமார் ஒன்பது மணியிருக்கும். சாஸ்வதியின் அன்னை தன்பர்த்தாவின் அறைக்கு வந்தாள். அவள் வந்ததைக்கண்ட அவர் "அகிலாண்டம்! என்ன விசேஷம்?" என்றார்.

"விசேஷமொன்று மில்லை. சற்றே பேசிப் போகலாமென எண்ணங்கொண்டு வந்தேன்" என்றாள்.

புரு:—சரிதான்.

மனை:—புருஷோத்தமன் புறப்பட்டுப்போனபின் கடிதம் வந்ததா? சுகமாயிருக்கிறனு? திரும்பிவர கண்டிப்பாய் எவ்வளவு வருஷங்களாகும்?

புரு:—அவனிடமிருந்தும், அவன் தகப்பனிடமிருந்தும் அடிக்கடி கடிதங்கள் வந்து கொண்டே யிருக்கின்றன. அவன் புறப்பட்டுப் போய் ஒருவருஷமாகப் போகிறது. திரும்பிவர இரண்டு வருஷமாகும். தவிர அவன் படிப்பு முடிந்தபின், ஐரோப்பாவிலுள்ள பல தேசங்களையும் சுற்றிப் பார்த்து வரப்பிரியப் படுவதாகத் தெரிகிறது. அப்படியானல் மேலே இரண்டுவருஷமானலும் ஆகலாம். நிச்சயமாய்ச் சொல்லத்தெரியாது.

மனை :—சரஸ்வதியின் விவாகம் அதன் பிறகு தானு? இல்லையேல் வேறு தகுந்த வரன் பார்த்து செய்து விடலாமே. இளையவளை அவனுக்குச் செய்துவிடலாமே.

புரு :—நீ கடைசியில் சொன்னது முடியப்போகிறது. சரஸ்வதி விஷயத்தில் நீ ஏமாந்து போவது நிச்சயம். அவள் கலியாணம் செய்துகொள்வதில்லை யென்று அவன் அயல் நாடு செல்லு முன்னரே எனக்கு உறுதி கொடுத்துவிட்டாள். உன்னிடம் சொன்னுல் நீ துயருறுவாயென்று மௌனமா யிருந்து விட்டேன். தற்சமயம் அதைச் சொல்ல சந்தர்ப்பம் கிடைத்தது. அவள் தன் விசாலத்துடன் ஒரேமாதிரியில் தன் காலத்தைக் கழிக்கப் போகிருளாம்.

மனை :—நாதா! அவள் என்னிடம் இதைப் பன்முறை கூறியிருக்கிருள். ஆகிலும் இது சிறுபெண்ணின் வார்த்தை யென்றும், உங்கள் சொல்லுக்கிணக்கி நடப்பாளென்றுமல்லவோ நான் கருதி இருந்தேன்.

புரு :—ஆம், அவள் உன்னிடம் சொல்லியிருப்பதாகவும் சொன்னுள். நான் எவ்வளவுதூரம் எடுத்துச் சொல்லக்கூடுமோ, அவ்வளவும் சொல்லியாய்விட்டது. இனி நானிவ்விஷயமாய் அவளிடம் சொல்லக்கிடப்பதொன்றுமில்லை.

மனை :—கொஞ்ச நாள் முன்னரே கலியாணம் செய்யப்பட்டிருந்தால் இவ்வளவு தூரத்திற்கு வந்திருக்காதல்லவா? நானிப்படிச் சொல்லுவதால் தங்களை நிந்திப்பதாகக் கருத வேண்டாம். இவ்விஷயம் என்னைப்போலவே தங்களையும் பாதிக்கும் என்பது நானறிந்தது தான்.

புரு :—ஆம் சரிதான். இஷ்டமில்லாத குழந்தையைப் பலவந்தத்தில் குடும்பத்தில் புக விட்டு அவள் அங்கு ஏறு மாருயிருப்பதை விட இதுவே சிறந்தது. இப்படியிருக்கும் பெண்ணுக்கும் அவள் புருஷனுக்கும் யாது சுகமிருக்குமென்று நீயே யோசித்துப் பார்!

மனை :—(வெகு வருத்தத்துடன் கண்களில் நீர் ததும்ப) ஆயின் நான் அவள் விஷயத்தில் இது சம்பந்தமான ஆசையை எதிர் பார்ப்பது அனுவசியம்தானு?

புரு :—என்னைப்பொறுத்த மட்டில் இல்லை தான். ஸ்திரீகள் சுபாவத்திற்கிணங்க நீ வேண்டுமானுல் இன்னும் ஒருமுறை பிரஸ்தாபம் செய்து பார்.

மனை:—(தாழ்ந்த தொனியுடன்) நல்லது நானும் சற்று சம்பாஷித்துப் பார்க்கிறேன். எல்லாம் தெய்வ சங்கற்பம். விசாலத்தின் பரிதாப சம்பவமல்லவோ இவளை இவ்வழிக்குத் திருப்பி விட்டது. இவர்களுடைய அன்புக்கும் ஒப்புண்டோ? எல்லையுமுண்டோ! இவர்களைப் பிரிக்க நம்மைப் படைத்த சர்வேசனுலு முடியாதென்ருல் வேறு என்ன சொல்ல வேண்டும். அவர் திருவுள்ளப் படி நடக்கட்டும்.

திரும்ப கொஞ்ச நாட்கள் சென்றபின் ஒரு தினம் சரஸ்வதியின் அன்னை தன் மகளைக் காணும் பொருட்டும், பேசும் பொருட்டும், அவள் படிக்கும் அறைக்கு வந்தாள். தாயின் வரவைக் கண்ட பெண் மனமகிழ்ந்து, அன்புடன் ஆசனத்தில் அமரச்செய்து தானும் அருகிலுட்கார்ந்து கொண்டு "அம்மா! யாது விசேஷம்?" எனக் கேட்டாள்.

தாய் :—குழந்தாய்! விசேஷம் யாது மில்லை. உன்னுடன் சற்றே சாவகாசமாய்ப் பேசிப் போகலாமென்று வந்தேன்.

மகள் :—(தன்னுள் சரி, இது கலியாண விஷயம்தான், சிறிதும் சந்தேகமில்லை. இவ்விஷயமின்றுடன் முடிவடைந்து விடும்படி நான் செய்து விடவேண்டியது தான்) (வெளிப்படையாய்) அதற்கென்ன? பேசலாம்.

தாய் :—உன் தகப்பனரிடம் நீ விவாகம் செய்து கொள்வதில்லை யென்று கொஞ்ச நாளைக்கு முன் சொன்னயாம். அதிலிருந்து அவர் வெகுவாய்த் துயரமடைகிறார். புத்திசாலி யாகிய நீ, எங்கள் சொற்படி கேட்டு எங்களை சந்தோஷிக்கச் செய்யவேண்டாமா ?

மகள் :—அம்மா ! அது உண்மைதான். சந்தோஷத்துக்காகத்தானே நான் சொல்லுவதும்.

தாய் :—அது எப்படி ?

மகள் :—என்னமோ கலியாணத்தில் எனக்குச் சற்றும் மனம் செல்லவில்லை. யாது செய்வேன். நெடுந்தூரம் யோசித்தே இம்முடிவுக்கு வந்துள்ளேன். அப்படியிருக்கும் யான் பிறர் கட்டாயத்துக்காக செய்து கொண்டால் அக்குடும்பத்தில் எவ்விதம் நான் சந்தோஷமாயிருக்க முடியும் ? அம்மனேபாவமுள்ள பெண்ணை மணப்பவனுக்குத் தான் என்ன சுகம்? இச்சதிபதிகளின் பெற்றோருக்குத்தான் என்ன மகிழ்ச்சி ஏற்படக்கூடும் ? அச்சமயம் அன்னியர் அப்பெண்ணை பல விதத்தாலு மிகழ்ந்து நிந்திப்பார்களல்லவா ? 'ஏறுமாறாயிருக்கும் மனைவியுடன் சம்சாரத்திலிருப்பதை விட கூருமற் சன்னியாசம் கொள்' என்ற வார்த்தையை அனுஷ்டிப்பது மேலல்லவா? ஆதலால் அவ்வளவு துன்பங்களுக்கு மிடம் கொடாதபடி நான் கன்னிகையாயிருப்பதே யாவற்றிலும் சிறந்த தென உறுதி கொண்டு முடிவுசெய்து விட்டேன். இவ் அபிப்பிராயங்களடங்கிய வார்த்தையை உங்கள் பெண் சொல்வதாகக் கருதாமல், பிறர் சொல்லுவதாக எடுத்துக் கொண்டு நியாயத்தை நன்கு ஆராய்ந்து பாருங்கள்.

தாய் :—குழந்தாய் ! நீ கூறியது சரிதான். அதில் கோணலிருந்தால்தானே அசம்பாவிதமாகும். எல்லாவிதத்தாலும் உன் மனதுக்கேற்றவனை புருஷனை நீ அடைந்தால் அப்பொழுது நீ களிப்புடன் வாழலாம்.

மகள் :—தாயே ! புருஷன் என்ற பதத்துக்கே என்மனதில் இடமில்லையே. முதலில் அதற்கிடமிருந்தால் தானே அதற்கடுத்த படி எல்லாவிதத்தாலும் அதைப் பூர்த்தி செய்யலாம்.

தாய் :—நீ என்ன புத்திசாலி யென்றாலும், பின்னைய அநுபவங்களைச் சற்றும் ஆலோசியாமலும், நாங்கள் எடுத்துக் கூறுவதையும் கேளாமல் ஒரே அசட்டுப் பிடிவாதமா யிருக்கிறாயே. எங்களுக்குப்பின் உன்னை யார் ஆதரிப்பார் ? நீ எவ்விடம் கண்கலங்கி நிற்பாய் ?

மகள் :—அம்மா ! மன்னிக்கவேண்டும். அல்ப விஷயத்துக்காக என்மேலிருக்கும் அன்பின் காரணமாக சொல்லும் உங்கள் வார்த்தையானது அறியாதார் சொல்லும் பேச்சுக்கு சமானமாயிருக்கிறதே. ஓர் சிறிய விஷயத்துக்கும் நீங்கள் முதலில் துதிக்கும் கடவுளை, ஏன் என் விஷயத்தில் பாராமுகம் செய்துவிட்டீர்கள் ? நீங்கள் என்ன தெரியாதவர்களா? அவர் எப்பொழுதும் நம்முடனிருக்கும் பொழுது நாமேன் அஞ்சவேண்டும். 'ஊருஞ்சதமல்ல உற்றார் சதமல்ல' என்ற பட்டிணத்தடிகளின் பாசுரம் வீணேயோ போகும். உங்களால் என்னைப்போலவே கருதப்படும் நம் விசாலத்தைக் கவனியுங்கள். அவளுக்கிருக்கும் துணை எனக்கிருக்காதா ? நீங்களே சொல்லுங்கள்.

தாய் :—பொதுவில் கடவுளிருக்கிறார். அது முற்றிலும் உண்மை தான். அவள் விஷயம் தெய்வ சம்மதம். உன்வழி வேறு.

மகள் :—ஆனல் அத்தெய்வ சம்மதம் நானடைவது உங்களுக்குப்பிரியம் தானே ?

தாய் :—பெண்ணே ! நான் ஏன் பலபலவார்த்தைகள் சொல்லவேண்டும். உன் மனதை இன்னும் கொஞ்ச நாள் கழித்தாவது மாற்றிக்கொள்ளப் பிரயாசைப்படு.

மகள் :—அம்மா! சற்று கவனமாய்க் கேளுங்கள். என் எண்ணம் மாறுபடு மென்று இந்த ஜென்மத்தில் நீங்கள் நினைக்கவேண்டாம். இதே பதிலை என்பிதாவும் உங்கள் பர்த்தாவுமாகியவருக்குக் கடைசியாய்க் கூறி விட்டேன். அதையே நீங்களும் எடுத்துக் கொள்ளுங்கள். பலபல சொல்லி யென்ன! என் பூஜ்யர்களாகிய மாதா பிதாக்கள் திருவடி சாட்சியாய், என் அன்பே உருவாய மைந்த இன்னுயிர்த்தோழியான விசாலத்தினிடம் கொண்ட நட்பின் சாட்சியாய், நான் விவாகம் என்ற விலங்குக்கு ஆளாகப்பேவதில்லை யென்று எல்லாம் வல்ல இறைவனாகிய அம் முழுமுதற் கடவுளின் முன்னிலையில் நான் சபதம் செய்கிறேன். இது உண்மை, இது நிச்சயம், இது சத்தியம்.

எனக்கூறிவிட்டுத் தன் தாயின் பாதாரவிந்தத்தில் தெண்டம்போல் விழுந்து நமஸ்கரித்தாள். இதைக்கேட்ட தாயாரானவள் தன் பதியைப்போலவெ அவளுடைய உறுதியையும், கடவுள் பக்தியையும், பெற்றோர்களிடத்துள்ள மரியாதையையும், சினேகிதியின் அன்பையும் ஏககாலத்தில் ஒருங்கே கவனித்து, மனம் வியந்து, இது விசனமா, சந்தோஷமா என நிச்சயிக்கக் கூடாதவளாய் மயங்கி, தன்னடியில் விழுந்து கிடக்கும் தன் செல்வியை வாரியெடுத்துத் தழுவி "என் கண்மணி! நன்று! நன்று! சாலவும் நன்று! உன்னைப்போலும் உலகில் பெண்களுண்டோ! உன்னைக் கடவுள் நன்கு காப்பாராக. நீ இனி கவலை கொள்ளாதே. இவ்விஷயமாய் நாங்கள் தொந்திரவு செய்வதில்லை" எனக் கூறிவிட்டு அவளிடம் விடைபெற்று தன் பர்த்தாவினிருப்பிடத்தை நாடி அடைந்தாள். நடந்த சம்பவங்களை யெல்லாம் தன் புருஷனுடன் சொன்னாள். அவர்களிருவரும் நெடுநேரம் பேசியபின் கடைசியில் இனி இவ்விஷயமாய் அவளிடம் பேசுவது அழகில்லை யென்ற முடிவுக்கு வந்து விட்டார்கள்.

தாயார் சென்ற பின்பு, "என் உள்ளத்தை என் பெற்றோர்கள் உள்ளங்கை நெல்லிக்கனி போல் அறிந்து கொண்டு விட்டார்கள். இவ்விஷயமாயினி அவர்கள் என்னிடம் பேசமாட்டார்கள், இது நிச்சயம். ஆனால் இச்சம்பாஷணை இன்னும் ஒரு நாள் எனக்குக் கிடைக்கும், அதில் சந்தேகமில்லை. அன்று விசாலம் என்னை வெகுவாய் மடக்குவாள். தன் முழுபலத்தையும் பிரயோகம் செய்வாள். ஏது, அவளுக்கு நான் மடங்குவேனோ, இல்லை, ஒருநாளுமில்லை?" எனத் தன்னுள் கூறிக்கொண்டு தன் வேலையிலிறங்கி விட்டாள் சரஸ்வதி.

அடிக்கடி எதற்கும் விசாலம் எனகிறாளே அவள் யார். அவள் வரலாறு என்ன வென்பதை நாம் சற்று ஆராய்வோம். சரஸ்வதிக்கு ஒரு அத்தை உண்டு. அவளுக்கு ஒரு பெண்ணும் ஒரு ஆணுமாகிய இரு குழந்தைகளுண்டு. அப்பெண்ணின் பெயர்தான் விசாலம். சரஸ்வதியைக் காட்டிலும் இவள் பத்துநாள் மூத்தவள். இருவரும் ஒரே ஊரில் இருக்கப்பட்டவர்களாதலால் ஒரு வயதுக் குழந்தையிலிருந்தே உடனிருந்து விளையாடுபவர்களாயிருந்தார்கள். குழந்தைகள் விளையாடும் பொழுது ஒருத்தி தவறி விழுந்து அடிபட்டுக் கொண்டாளேயானால் அவள் வலிக்காக அழுவதும், மற்றவள் 'ஐயோ! எனக்குப் படவில்லையே' என்றழுவதும் பார்ப்பவர்களுக்கு வெகு வேடிக்கையைக் கொடுக்கும். சிறு வயதிலிவர்களைப் பள்ளியிலும் சேர்த்து விட்டபடியால் நாளாக ஆக மனமொத்த தோழிகளாய் விட்டார்கள். அங்கும் உபாத்தினியால் ஒருத்தி அடிக்கப்பட்டாலோ, மிரட்டப்பட்டாலோ, மற்றவள் அது தனக்குக் கிடைக்கவில்லையே என்று அழுவாள். பாட்டிகள் எல்லாம் இவர்களைப் பார்த்து 'உங்

களை ஒரே புருஷனுக்குத் தான் கலியாணம் செய்து கொடுக்கவேண்டும்' என்று வேடிக்கையாய் பரிகாசம் செய்வார்கள். இப்படியே வளர இவர்கள் அன்பும் வளர்ந்து வந்தது. இவ்வளவில் ஒன்பது வயது பூர்த்தியுள்ளவளானார்கள். அச்சமயம் விசாலத்தின் தகப்பனார் க்ஷயரோகத்தால் மிகவும் பீடிக்கப்பட்டார். அவர் பிழைப்பதும் சந்தேகமாய் விட்டது. அதை உத்தேசித்துத் தன் பெண்ணுக்குக் கலியாணமும் பிள்ளைக்கு உபநயனமும், நடத்தி விடுவதென்று தீர்மானித்தார். அதனால் தான் மாணமடைந்து விட்டால் தன்னுடைய மனைவிக்கு இந்த பளுவு குறையுமென்று மருமகனின் ஆதாவு கிடைக்குமென்றும் தன்னுள் கருதினார். அச்சமயம் சாஸ்வதியின் தகப்பனார் வெகு தூரம் அதை நிறைவேற வொட்டாமல் தடுத்தும் அது பயன்படாமற் போயிற்று. கடைசியாய் விசாலத்தின் பிதாவானவர் படுத்த படுக்கையிலிருந்து கொண்டே விவாகத்தை வெகு சம்பிரமமாய் நடத்த ஏற்பாடு செய்தார். சரியான வயதும், வயதுக்கேற்ற படிப்பும், நல்ல புத்திசாலித்தனமும், அழகும், ஐச்வர்யமும் முதலிய பல லட்சணங்கள் பொருந்திய ஓர் பையனை மருமகனாக வரித்தார். ஆனால் அவர் தன் அருமை மருமகனின் பூலோக வாழ்வின் வயதை அறிந்தாரில்லை. வெகு வைபவமாய் சிறப்பான கலியாணம் சீராய் நடந்தது. இச்சமயம் சாஸ்வதியை எல்லாரும் பரிகாசம் செய்வார்கள். "விசாலமுடன் நீ என் மணையிலுட்காரவில்லை?" என்று கேட்பார்கள். சற்று விவரம் தெரிந்த பெண்களாகையால் இருவரும் சிரித்துக்கொண்டு போய் விடுவார்கள். ஆனாலும் சாஸ்வதி எப்பொழுதும் அவள் பக்கத்திலேயே தானிருப்பாள். விசாலம் சாஸ்வதி பாடாவிட்டால் தானும் மௌனம் சாதித்து விடுவாள். அதிகம் சொல்லுவானேன். சாஸ்வதிக்கும் புருஷனில்லாத கலியாணம் நடந்ததென்று வைத்துக்கொள்ளலாம். கலியாணம் முடிந்தது. சம்பந்திகளும் பந்து ஜனங்களும் விடை பெற்றுக்கொண்டு தங்கள் தங்களிருப்பிடத்திற்குச் சென்றார்கள். விசாலத்தின் பிதாவும் தனக்கிருந்த ஒரு பளுவான சுமை குறைந்து விட்டதாகக் கருதினர். பிறகு ஒரு மாதமாச்சுது. அவருடைய வியாதியின் உத்வேகமும் வாவாக் குறைந்து சற்றே அநுகூல முகமடைந்தது. பின்னிட்டு நாளடைவில் அனேகமாய்க் குணமடைந்து விட்டார். கன்னிகாதானப் பலன் கைமேல் கிடைத்ததாகவும் மருமகன் நல்ல அதிர்ஷ்டசாலி யென்றும் பெரியோர்கள் கூறினார்கள். ஆறுமாதங்கள் சென்றது. தீபாவளி வந்தது. அதன் முதல் நாள் தீட்சா கலியாணம் நடத்துவதாக ஏற்பாடாயிற்று. தன்னை நெருங்கின பந்துக்களுக்கும் சம்பந்திகளுக்கும் கடிதம் எழுதினர். தான் தற்காலம் சுகமடைந்து விட்டபடியால் இந்த நல்ல நாளை விமரிசையாய்க் கொண்டாட வேண்டுமென்று கருதி அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார். வரவேண்டியவர்களும் வெகு குதூகலத்துடன் வந்தார்கள். தீட்சா கலியாணம் அதி சிறப்பாய் நடந்தது. பரஸ்பரம் செய்யவேண்டிய சீர்வரிசைக் கிரமங்களில் ஒருவரை யொருவர் மிஞ்சினார்கள். மறுநாள் தீபாவளி ஸ்னானம், புது உடைதரித்தல், அறுசுவையுடன் கூடிய போஜனம் அருந்தல் முதலிய சகலமும் குறைவற நடந்தேறியது.

பகல் மூன்று மணியிலிருந்து ஐந்து மணி வரையில் 'வத்ஸலா கலியாணம்' கதை நடந்து. அதற்குப் பின்னிட்டு நலுங்கு ஏற்பாடாச்சுது. இதற்கு வந்திருந்த பையன்களின் கூட்டமும் வெகு அதிகம். கலியாணத்தின் போது தான் மனதுக்கு ஒன்றும் வேண்டியிருக்கவில்லை. இப்பொழுது எல்லாம் வேடிக்கை பார்க்கலாமெனச் சொல்லிக்கொண்டு பாட்டிமார்களும் நிறைய வந்தார்கள். நலுங்கு,

செண்டு விளையாடல், அப்பளாம் உடைத்தல் எல்லாம் ஆச்சுது. ஒருவர் பெயர் ஒருவர் சொல்லும் வேடிக்கை தான் எல்லாவற்றிலும் விசேஷம். காது கேளாத பாட்டிக்காக ஒரு தடவை தனித்துச் சொல்லவேண்டும். ஜனக் கூட்டமதிகமாயிருந்ததால் சத்தம் வெகு ஜாஸ்தி. பாட்டிகளெல்லாம் மனமகிழ்ந்து "இது தானழகு, இந்த வயதுக் கலியாணம் தான் வேடிக்கை. மாடுகள் மாதிரி பெண்ணையும் பிள்ளையையும் வளர்த்துக் கலியாணம் செய்தால் என்ன நன்றாயிருக்கு?" என்று சொல்லி விசாலத்தின் தகப்பனை வாயாரப் புகழ்ந்தார்கள். இராச்சாப்பாட்டுக்கு முன்னே ஊஞ்சல் வேடிக்கையும் முடித்து விடலாமென்று அதற்கும் ஏற்பாடு செய்துவிட்டார்கள். பெண்கள் பாடிக் கொண்டிருக்கும் பொழுதே மருமகன் "ஏதோ தலை வலிக்கிறது" என்றான். உடனே அவன் மாமனார் "நேற்று மின்றும் அவனுக்கு மெத்த அலைச்சல்; மேலும் விடியற் காலம் சீக்கிரம் எழுந்திருந்தது; சரியான தூக்கமில்லாததால் தலைவலியிருக்கலாம். இதோ சீக்கிரம் முடித்து விடலாம்" எனச் சொல்லி "ஹாரத்தி கொண்டு வாருங்கள்" எனச்சொல்லிவிட்டு, ஓர் வெள்ளித் தாம்பாளத்தில் மருமகனுக்கு ஓர் உயர்ந்த பட்டும், மகளுக்கு நேர்த்தியான நல்ல புடவையையும் வைத்து புரோகிதரிடம் கொடுத்து அவர்களுக்கு ஆசீர்வதித்துத் தரும்படியாகச் சொன்னார். இதற்குள் ஹாரத்தியும் கொண்டு வந்தாய் விட்டது. சாஸ்திரிகளும் பஞ்சாதி சொல்ல ஆரம்பித்து வெள்ளித்தட்டை கையிலெடுத்தார். அதிர்ஷ்டம் கெட்ட மருமகன் 'ஏனோ வயிறு வலிக்கிறது. வெளியே போய்வர வேண்டும்" என்று எழுந்து கொல்லைப் பக்கம் போனான். அவனுடைய தகப்பனார் அவனுடன் போனார். அவன் உள்ளே வந்து கைகால் சுத்தம் செய்து கொண்டான். திரும்பவும் போகவேண்டு மென்றான். உடனே வாந்தி எடுத்தான். இப்படி மாறி மாறி மூன்று தடவையாகிவிட்டது. அவனால் நிற்க முடியாமல் கால் துவண்டுவிட்டது. தலையும் நிமிரமுடியாமல் சாய்ந்து விட்டது. அவன் மயக்கமுற்றான். உடனே அவர் தன் சம்பந்தியை அழைத்தார். உள்ளே குழுமியிருந்த ஜனங்கள் ஆரவாரித்தார்கள். சங்கதி விளங்காமல் சந்தடி பலத்தது. டாக்டர் அழைத்து வரப்படவேண்டும் என்று சொல்லப்பட்டது. விசாலத்தின் பிதா வெகு அவசரமாய் டாக்டரைக்கூட்டி வந்தார். இதன் நடுவில் பந்தலிலிருந்த ஜனங்கள் கொஞ்சம் கொஞ்சமாய் வருத்தத்துடன் தங்கள் வீட்டுக்குத் திரும்பலானார்கள். விசாலத்தின் அன்னையும், மாமியும் பெண்கையில் புடவையைக் கொடுக்கச்சொல்லி, ஹாரத்தி எடுத்து முடித்து விட்டார்கள். பாட்டிகளெல்லாம் 'நாளைக்கு அவனுக்கு பட்டு கொடுத்தால் ஆச்சுது' என்று சமாதானப் படுத்திக்கொண்டார்கள். விசாலம் சரஸ்வதியுடன் உள்ளேபோய் பெரியோர்களை நமஸ்கரித்தாள். எல்லாரும் அவளை 'தீர்க்க சுமங்கிலீ பவா' என வாயாரா வாழ்த்தினர்கள். ஆனால் அது கடவுளுக்குப் பிடிக்கவில்லை. ஆகையால் அதை அவர் ஆமோதிக்கவில்லை.

வந்த டாக்டர் பையனைப் பார்த்தார், நாடியைக் கவனித்தார். முகம் குன்றினார். ஆகிலும் வெளிக்குக் காட்டாமல் பற்பலவிதமான சிகிச்சைகளைச் செய்தார். ஒன்றும் பயன்படவில்லை. அவருக்கு மேலுள்ள மற்றொரு டாக்டரையும் விசாலத்தின் தந்தை வரவழைத்தார். யார் வந்து என்ன செய்வது? சாவோரைப் பிழைக்கச் செய்ய மாத்திரம் மருந்தில்லையே. இதனடுவில் என்னவோ ஒருவிதமான பயத்துடன் கூடியவர்களாய், ஒன்று மறியாதவர்களாய் குழந்தைப் பெண்களிருவரும் அவன் படுத்திருக்குமிடத்தை நாடிவந்தார்கள். கூட்டம் போடக் கூடாதென்றும் சந்தடி செய்யக் கூடாதென்றும் சொல்லி அவ்வறைக்கு யாரையும் வர

முடியாதபடி தடுத்த டாக்டர் இக்குழந்தைகளைத் தடுக்கவில்லை. ஏனெனில் விசாலத்தின் அதிர்ஷ்டத்தை எல்லாரிலும் முக்கியமாயும் நிச்சயமாயும் அச்சமயம் அறிந்தவர் டாக்டர் தான். அக்குற்றமற்ற குழந்தையை வெளியே போவென்று சொல்ல அவர் மனம் எழவில்லை. விசாலம் போனால்தான் அவள் தோழியும் போவாள் என்று அவளைக் குழந்தை பருவம் முதல் அறிந்து பழகிவரும் டாக்டருக்கு நன்கு தெரியும். அதனால் அவர் பேசவில்லை. அந்த அறையிலிருந்தவர்கள் அக்குழந்தைத் தம்பதிகளையும் டாக்டரையும் மாறிமாறிப் பார்த்துக் கொண்டு நிற்கலானார்கள். மருமகனுக்கு மரண காலம் கிட்டிவிட்டது. வைத்தியர் என்ன செய்தும் பிரயோசன மற்றதாய் விட்டது. விடியற் காலம் மூன்று மணி அடித்தது. மருமகன் கண்ணை விழித்துப் பார்த்தான். யாரையோ தேடினது போலிருந்தது. கடைசியாய் அவ்விடமிருக்கும் தன் அருமை மனைவியான விசாலத்தையும் அவள் தோழியான சாஸ்வதியையும் தன் கண்களால் மலர விழித்து உற்றுப் பார்த்தான். அதன் அர்த்தம் நம்மால் எழுத முடியாது. உடனே கண்ணைமூடி விட்டான். அவ்விழியைக் குற்றமற்ற விசாலம் வெகு கூர்மையுடன் கவனித்து விட்டாள். அவள் மனம் என்னமோ ஒரு விதமாய்த் துடித்தது. அவளறியாமல் கண்களிலிருந்து மளமள வென்று கண்ணீர் வடிய பிரமை பிடித்தவள் போல் திகைத்தாள். அவன் விழித்துப் பார்த்ததையும், பின்பு நடந்ததையும் கண்ட சாஸ்வதியும் அழத்தொடங்கி விட்டாள். உடனே அவர்களை அப்புறப்படுத்தி விட்டார்கள். பிறகு சற்று நேரத்திற் கெல்லாம் அழகான மருமகன் மாய உலகிலிருந்து மாயமாய் மறைந்து மாண்டு போய் விட்டான். ஹா! ஹா! என்ன உலகம்? என்ன அதிசயம்? முதல்நாள் அந்நேரத்தில் வாத்திய கோஷத்தினிடையே அப்பயங்கனஸ்நானம் செய்த தம்பதிகளின் அதிர்ஷ்டம் மறுநாள் அந்நேரத்தில் எப்படி முடிந்தது! இச்சம்பவம் நிகழுமென்று யாரேனும் கண்டார்களா? என்ன கொடுமை? இதைக்காட்டிலும் துயரம் உலகிலும் வேறு உண்டோ. முதல் நாளிரவு ஒன்பது மணிவரை அல்லோலகல்லோலமாய் ஆரவாரத்துடனிருந்த அவ்வீடு, இரவு முழுவதும் குசு குசு கச கச வென்று முணு முணுத்துக்கொண்டிருந்த அவ்வீடு, மறுநாட்காலை ஒ வென்ற ஓலத்துடன் கூடிய சத்தத்துடன் தொனித்து விடிந்த விடாயிற்று. விசாலத்தை அனைவரும் கசக்கி விட்டார்கள். தன் புருஷன் இறந்து விட்டானென்று தெரிந்து விட்டதால் அவள் குழந்தை சுவபாலப்படி ஒரு வகையாயிருந்து விட்டாள். அப்பொழுதும் சாஸ்வதி அவளைப் பிரிந்தாளில்லை. நேரமாச்சுது, மேல் நடக்க வேண்டியவைகளுக்கு ஏற்பாடாச்சுது. சம்பந்திகள் நால்வரும் பட்டபாட்டை எழுதத் தேவையில்லை. இம்மாதிரி கலியாணம் தான் அழகு என்று முதல் நாளிரவு புகழ்ந்து கொண்டிருந்த பாட்டிகளும் ஏனையோரும் கடவுளை நொந்துகொண்டு, 'உனக்குக் கண் இல்லையா? காதுமில்லையா? அன்றேல் உன் மனம்தான் கல்லா, அல்லது இரும்பா? அக்குழந்தையின் தலையில் கல்லைப்போட்டாயே, இது உனக்குத்தருமமா? அதற்கென்றைக்கு விடியும்' என தங்கள் மனம் போனபடி திட்டி வைதார்கள். இவர்கள் என்ன சொல்லி என்ன? அத்தெய்வமோ யாரையோ சொல்லுவதாக நினைத்து ஒரு பதிலும் கூறாமல், ஒரு பொட்டுத் தண்ணீர் கூட கண்களிலிருந்து விழவிடாமல் தன்பாட்டிலிருந்து விட்டது என்ன அதிசயம்! புகழ் விசாலத்தின் தகப்பனுக்கும், இகழ் கடவுளுக்கும் கிடைத்தது. பின்பு காரியங்கள் எல்லாம் முடிந்தது. சம்பந்திகளும் பன்னிரண்டு நாளிருந்து விட்டு வெறும் மந்திகளாய் ஊருக்குத் திரும்பினார்கள். தீட்சா

கலியாணத்திற்காகவே பந்துக்களெல்லாம் வந்திருந்தபடியால், துக்கம் விசாரிக்கவென்று ஒருமுறை வரவேண்டிய செலவு இல்லாமற் போய்விட்டது. வந்தவர்களனைவரும் புறப்பட்டுப் போயாச்சுது. ஒரு மாதமாச்சு. இரண்டுமாதமாச்சு. விசாலத்திற்கு ஒன்றும் விளங்கவில்லை. அவளுண்டு, அவள் தோழியுண்டு. காரணமில்லாலே அவள் பள்ளிக்கூடம் போகாமலிருந்தாள். அவளைப் போ வென்றும் வேண்டா மென்றும் சொல்ல யாரும் துணியவில்லை. அவள் தாய் தந்தையர் அவளைப் பார்த்தாலே மனம் பதறுவார்களாகையால் அவளுடன் அதிகம் பேசவே மாட்டார்கள்.

தான் இறந்து போய் விடுவோமென்று நினைத்து முடித்த செய்கையின் முடிவைக் கண்டு சதி பதிகளிருவரும் வெகுவாய்த் துக்கித்தார்கள். ஆகிலும் அவர்கள் வீணே தெய்வத்தை நொந்து கொள்ளாமல் தாங்கள் அவசரப் பட்டு அகாலத்தில் செய்கையின் தப்புக்குச் சரியான தண்டனை அநுபவிக்கிறோமென்று சாந்தமுடன் சொல்லிக் கொள்ளுவார்கள். 'அத்தண்டனை நம்முடன் போகாமல் ஒரு பாவமு மறியாத அக்குழந்தையை யல்லவோ எந்நாளும் சார்ந்து விட்டது. நாம் அவளுக்கு இத்துக்கமாகிய ஆஸ்தியையல்லவோ பெருமிதமாக சேர்த்து வைத்து விட்டோம்' என்றும் இன்றும் பலவிதமானபடி வருத்தப் படுவார்கள். கடைசியாக நாம் அவளை நன்கு படிக்கச் செய்ய வேண்டியது தான் நம்முடைய கடமை யென்ன முடிவுக்கு வந்து விட்டார்கள். இவ்விதமே ஒரு வருஷ காலம் முடிந்து விட்டது. விசாலம் சாஸ்வதியுடன் பள்ளிக்குப் போக ஆரம்பித்து விட்டாள். அவாளிப்பொழுது இணை பிரிய வில்லை. நாளாக விசாலம் தன்னைப் பற்றியும், உலக அநுபவங்களையும் மெல்ல மெல்லத் தானகவே அறியலானுள். அப்படியே சாஸ்வதியும் தன் விசாலத்தைப் பற்றி தெரிந்து கொள்ளலானுள். விசாலத்தின் சம்பவத்தை பொட்டியும், இதர நன்மைகளைக் கருதியும் சாஸ்வதின் தகப்பனர் தன் பெண்ணுக்கு வயது வந்தபின் விவாகம் செய்வதெனத் தீர்மானித்து விட்டார். இவர்களிப் பொழுது பதின் மூன்று வயது நிறைப் பெற்று விட்டார்கள். அவர்கள் மனதில் அடிக்கடி அந்தக்கடைசி நாளில் மலாவிழித்துப் பார்த்தது ஞாபகத்துக்கு வந்து விடும். ஆயினும் இவ் விஷயமாய் ஒரு வார்த்தைகூட சொல்லிக் கொண்டார்களில்லை. தனித்திருக்கும் பொழுது சாஸ்வதி ஒரு நாள் தன்னுள் ஆலோசிக்கலானுள். "உலக வழக்கப்படி நான் கலியாணம் செய்து கொண்டால் நான் விசாலத்தைப் பிரியவேண்டியவள் தான். ஒரு விஷயத்திலல்ல, ஒவ்வொரு விஷயத்திலும் தான். சே! நான் அப்படிச் செய்யக் கூடாது. அது தப்பு. அவளை விட்டு எனக்கென்ன வேண்டும்? கேவலம் கலியாணத்திலும் ஒன்றும் காணேம். என் நான் கன்னிகையாகவே இருந்து அவளுடன் காலத்தை ஒருமித்துக் கழிக்கக் கூடாது? ஆம், அது தான் சரி. அப்படித்தான் செய்யவேண்டும். நிச்சயமாய் நடப்பேன்; தவறமாட்டேன்; முடியாது. அம்மலர்ந்த விழியின் அர்த்தம் என்னை இப்படி செய்யும்படிதான் தூண்டுகிறது. அந்தோ! என் அருமைத் தோழியை விட்டு எனக்கென்ன சுகம் வேண்டும்? எனக்கு புத்திதெரிந்தது முதல் கூடப் பழகும் நான் அவளை விட்டு புருஷனுடன் கூடிவாழ்வது தெய்வசம்மதமாகாது. ஆகையால் நான் இந்த ஜென்மத்தில் மாசற்ற கன்னிகையாகவே வாழக்கடவேன்" எனக் கடவுள் முன்னிலையில் சபதம் செய்து கொண்டு விட்டாள். இதிலிருந்துதான் அவள் தன் தாயாருக்கு கலியாணம் வேண்டாமென்ற பதில் ஆரம்பித்தது. அவள் தகப்பனருடைய கலியாண வயது திட்டம்

இவள் சபதத்துக்குப் பேருதவியளித்தது. இச் சபதத்தை வெளியிட வேண்டிய அவசியமும் சீக்கிரத்தில் நேராமலிருந்தது. ஒரு வார்த்தையு மறைக்காத இவள் விசாலமிடம் இவ் விஷயத்தை மாத்திரம் அவளிடம் சொன்னுளில்லை. ஏன்? அவசியம் நேராதது தான். ஆனுல் தான் கலியாணம் செய்து கொள்ளுவதில்லையென்று மாத்திரம் வார்த்தைப்போக்கில் சொல்லும் வழக்கமுண்டு. இவ்வளவுதான் விசாலத்தின் வரலாறும், அவளால் சரஸ்வதி கற்பித்துக் கொண்ட படிப்பினையுமாகும்.

கடைசியாய்த் தன் உறுதியைத் தன் பெற்றோரிடம் தெரிவித்து விட்டபடியால் அவர்கள் பின்விட்டு இவ்விஷயமாய் அவளிடம் பேசினதே கிடையாது. ஆனுல் அவர்கள் இதில் மெத்த வருத்தமும், மிகுந்த ஏமாற்றமு மடைந்தவர்களானுர்கள். ஆயினும் என் செய்வார்கள்.

புருஷோத்தமன் படிப்பில் ஜயமடைந்து ஐரோப்பாவின் பலபாகங்களையும் சுற்றிப் பார்த்து விட்டு சுகமுடன் தன் சொந்த ஊர் திரும்பி வந்தான். சிலரைப் போல் இவன் துர் வழக்கத்தில் ஈடுபட்டு மாறியிருப்பானெனப் பலரும் நினைத்திருந்தார்கள். ஆனுல் அவ்வெண்ணத்துக்கு மாருக அவன் முற்றும் காணப்பட்டான். அவனுக்கு வேலையும் சீக்கிரம் கிடைத்தது. இனி அவன் மணம் செய்து கொள்ள வேண்டியது ஒன்று தான் பாக்கியாதலால், அவன் பிதாவானவர் தன் நண்பருக்கு அவ்விஷயம் வரையலானுர். கடிதத்தைப் பார்த்ததும் இவருக்கிருந்த கவலை அதிகரித்தது. பெரியவளை விட்டு இளையவளுக்கு எப்படி விவாகம் செய்வதெனக் கலங்கினுர். புருஷனும் மனைவியும் யோசனை செய்து, விசாலத்தின் மூலமாய் இன்னும் ஒரு முறை அவளை வற்புறுத்திப் பார்க்கலாமெனக் கருதி அதற்கு ஏற்பாடு செய்தார்கள். அவள் மனதை ஏற்கனவே உணர்ந்திருக்கும் இவள், எப்படி கேட்பதென்றும் அதனுல் ஒரு பயனும் உண்டாகப் போவதில்லை யென்றும் நினைத்துக் கொண்டாள். இரண்டொரு நாள் கழித்து ஒரு நாள் தாங்களிருவரும் தனித்திருக்கும் பொழுது விசாலம் பிரஸ்தாபிக்கத்தொடங்கினுள்.

விசாலம்:—சாஸ்வதி! நம் பரீட்சையின் முடிவு எப்படியாஞலும் நீ காலேஜைவிட்டு விலக வேண்டியவள் தானே?

சரஸ்வதி:—(தன்னுள் 'இவளுடைய நாள் இன்று வந்து விட்டது. இவளுக்குப் பதில் சரியானபடி கொடுத்து விட்டால் இனி எனக்குக் கவலையில்லை' என நினைத்து) ஏன் அப்படி கேட்கிருய்? நீ அவ்விதம் செய்யப் போகிருயா?

விசா:—ஆனுல் நான் கேட்பது தகுதியில்லையா?

சரஸ்:—கேட்கலாம். கேள்வி அர்த்தமில்லாததாயிருக்கிறதே.

விசா:—நீ வேறு ஊருக்குப் போவதால் அப்படிச் செய்ய வேண்டியவள் தானே.

சரஸ்:—என் வரவை நாடி என்னை எந்த ஊரும் அழைக்கவில்லையே.

விசா:—நீ புருஷன் வீடு செல்வதென்றுல் எப்படி படிக்கமுடியும்? உன் குடும்பவிஷயத்தை கவனிக்க வேண்டாமா?

சரஸ்:—(சற்றே கோபமும் வருத்தமும் பொருந்திய சிரிப்புடன் கூடியவளாய்) சரிதான். அப்பொழுது முடியாது தான்.

விசா:—அதனுல் தான் நான் கேட்டேன்.

சரஸ்:—நீ கேட்டது சரி. ஆனுலவ்விஷயம் எனக்கு வெகுதூரமாயிற்றே.

விசா:—(ஆச்சரியமடைந்தவள் போல்) என்ன சொன்னுய்?

சரஸ்:—நான் படிப்பை நிறுத்தவேண்டிய அவசியமில்லையே என்றேன்.

விசா:—ஆனால் நீ குடும்பத்திலிருந்து கொண்டே படிப்பதாக உத்தேசமா?

சரஸ்:—புருஷன், புருஷன் என்று சொல்லுகிறாயே, அப்புருஷனிருக்கும் இடத்தைச் சொல்லு, பின்னிட்டு நான் கூறுகிறேன்.

விசா:—நான் கேள்விப்பட்டதைச் சொல்லுகிறேன். கிருஷ்ணா ஜில்லாவின், சமீப கலெக்டாராக இருக்கும் புருஷோத்தமனை நீ விவாகம் செய்து கொள்ளப் போவதாக வதந்தி கிடைத்தது. அது உண்மைதானே? அந்தக் குடும்பத்தார் மிகவும் கண்ணியமும் நன்மையும் பொருந்தியவர்களாம். அவர் மிகவும் நற்குணம் வாய்ந்தவராம். உன் தாய் தந்தைக்கும் அங்கு சம்பந்தம் செய்வதில் அத்யந்தப் பிரியம். தவிர எல்லாவிதத்தாலும் அவர் உனக்கேற்றவர். இவ்விஷயம் உனக்குப் பூர்ண சம்மதம் தானே.

சரஸ்:—சரிதான், நான் நினைத்தபடியே ஆச்சுது. நீ என் பெற்றோரின் தூண்டுதலால் என்னை சோதிக்கிறாய். ஆயினும் எனக்கது வருத்தமில்லை. கலியாண விஷயம் இவ்வளவு தூரம் நிச்சயிக்கப்பட்டிருந்தால் ஒன்றையும் உன்னிடம் மறைக்க முடியாத நான் உன்னிடம் சொல்லாமலிருக்கக் கூடுமா? மேலும் என் மனோபாவத்தை என் சேர்க்கையின் அனுபவத்தால் நீ அறிந்திருக்கிறாய். ஆனால் பரஸ்பரம் நாமிருவரும் பேசிக்கொண்டது கிடையாது. அந்நாள் இன்றாயிற்று. பரவாயில்லை, நான் சொல்லுவதைக் கேள். என் புருஷன் என்று பெயர்வைத்துக் கொள்ளும் படியான ஒருவர் இந்த உலகத்திலில்லை, இருந்தவருமில்லை, இருக்கிறவருமில்லை, இருக்கப் போகிறதுமில்லை. இது உண்மை. நெடுநாள் யோசனை செய்தே இம் முடிவுக்கு வந்தேன். என்னைப் பொறுத்தமட்டில் கலியாணம் என்னும் சொல் வெறுப்பைக் கொடுக்கிறது. இப்படிச் சொல்லுவதால் எல்லாரையும் நான் இகழ்வதாகவோ, அல்லது என்னைப் போலிருக்கத் தூண்டுவதாகவோ நினைக்கவேண்டாம். ஆதலால் கலெக்டரானாலும் சரி, கவர்னரானாலும் சரி, என்னை மணம் புரிய முடியாது. இது நிச்சயம். ஆகையால் உண்மையில் உனக்கு இந்நினைவு இருக்குமானால், நீ அறவே ஒழித்து விடலாம்.

விசா:—என்ன அம்மா, இது புது கொள்கையாயிருக்கிறதே! பதினாறுவயதுக்கு மேற்பட்டுக் கலியாணம் செய்யவேண்டுமென்ற சட்டம் வேண்டுமென்றுதான் சிலர் கேட்கிறார்கள். உனக்கும் வயது இருபது ஆகிறது. உன் பிதாவும் கலியாண வயதை வெகுதூரம் தள்ளிக் கொடுத்து விட்டார். இவ்விதமிருக்க நீ அடியோடு வேண்டாமென்று வெறுத்துத் தள்ளுவது அழகாயில்லை. அது பிறர் நிந்திப்புக்கு அதிக இடம் கொடுக்கும். பலர் பல விதமாய்ப் பேசலாகும். ஏன் அதற்கனாவசியமாய் இடம் கொடுக்கவேண்டும். பெற்றோர்களையும் துயரப்படுத்தவேண்டாம். ஒரு சமயம் காரணமிருந்து, இவ்வரன் வேண்டாமென்றிருந்தால் வேறு பார்த்துக் கொள்ளலாமே. உன் தகப்பனாரின் வாக்கு வீணாகாமல் உன் சகோதரியை அவருக்கு மணம் புரிந்து விடலாமன்றோ?

சரஸ்:—நீ கடைசியாய்ச் சொன்னதுதான் உண்மையில் நடக்கப் போகிறது. மற்றதெல்லாம் வீண்தான்.

விசா:—பின்னிட்டு நிகழும் பலாபலன்களைக் கவனியாமல் நீ பேசுகிறாய்.

சரஸ்:—போதும் விசாலம்! நானிந்த ஸ்திதியிலிருந்தால் பின்னிட்டுக் கெடுதல் வருமென்

கிருய். பெயரளவுக்கு மாத்திரம் கலியாணம் நடந்தது என்ற சிறுமி பின்னிட்டு அடையும் நன்மை அதிகமுண்டோ? அந்த நன்மை எனக்குக் கிடைக்காதோ.

விசா:—(சரி, நம்மைக் காட்டி விட்டாள்; இவளுக்கென்ன பதில் சொல்லுவது. நானிதில் அனுவசியமாய்க் கலந்து கொள்ள வேண்டியதாயிற்றென்று நினைத்து, சரி, பார்ப்போமென) அதுதான் கடவுள் சித்தம். மாற்றக்கூடாதது.

சரஸ்:—இதுவும் அப்படியே. கடவுள் சித்தத்தால் உண்டாகிய மனதின் உறுதி. தடுக்கவும் மாற்றவும் முடியாதது.

விசா:—நீ ஏன் இம் முடிவுக்கு வந்தாய்?

சரஸ்:—என் மன சாட்சி இடந்தருவதால் தான்.

விசா:—ஏன் இந்தச் சிறுவயதில் உன்மனதை இவ்வழியில் திருப்பினுய்?

சரஸ்:—அது திரும்பி விட்டது தன்னுலேயே.

விசா:—எதையும் செய்யக் கூடிய உன்னுல் அதை எதிர்வழிக்குக் கொண்டுபோக முயற்சிக்கக் கூடாதா?

சரஸ்:—எனக்கிஷ்டமிருந்தால் முடியுமோ என்னமோ. அது இல்லாததால் நான் பிரவேசிக்க வில்லை.

விசா:—ஓர் பிராமணப் பெண், அதிலும் உயர் குடும்பத்தைச் சார்ந்தபெண், விவாகமில்லாமலிருக்கும் பட்சத்தில் வெகு கெடுதிகளும் கஷ்டங்களும் நேரும். என் வார்த்தை உனக்கு விளையாட்டாக இருக்கிறது. ஏதோ ஒரு அர்த்தமில்லாத காரணத்தை வைத்துக் கொண்டு இப்படிச் செய்கிருய்; அது தப்பு.

சரஸ்:—நான் இனி வார்த்தை வளாவிடப் பிரியமில்லாமலிருக்கிறேன். அர்த்தமோ, அனர்த்தமோ எனக்குத் தெரியாது. ஓர் பால்ய விதவைப் பெண்ணின் பிற்கால வாழ்வின் நன்மை தீமைகள் என்னையும் சேரட்டும். இதுவே என் தீர்மானம்.

விசா:—(சே. இது என்ன கஷ்டம்? எப்படிப் பேசினுலும் நம்மையே முடிவில் ஆளாக்கி விடுகிருள்) (வெளிப்படையாய்) உன் பேச்சு உனக்குத் தான் சரி. இருக்கட்டும். கலியாணம் செய்யாமல் உன் காலத்தை எவ்விதம் கழிக்கப் போவதாக உத்தேசம்.

சரஸ்:—(சிரித்துக் கொண்டு) உன் கேள்வி மிகவும் வேடிக்கையானது. கலியாணம் செய்து கொள்ளுவது ஒன்று தான் பூலோக வாழ்க்கையா? அதற்கு மாத்திரம் தான் மானிடராய்ப் பிறப்பதா என்ன? மேலே எடுத்துக் காட்டப் பட்ட பெண் எப்படி காலம் கழிக்கக் கூடுமோ அப்படியே என் வாழ்நாளும்.

விசா:—(ஆ! இது என்னதுன்பம்) சரி, நீ எது வரை படிக்கப் போகிருய்?

சரஸ்:—நாம் அடிக்கடி சொல்லிக் கொண்டிருப்பது போல் உபாத்தினி வேலைக்கு வேண்டிய அளவு படிக்கலாம். பெண்கள் படித்து வீட்டிலிருந்து விடுவதானுல் சரி, இல்லாமல் வேலைக்குப் போவதானுல் அவர்களுக்கு உபாத்தினி வேலையும், டாக்டர் வேலையும் தான் ஏற்றது. பின்னது எனக்கிஷ்டமில்லை. சதா வியாதிக்காரரையே கவனிக்கவேண்டும். அவர்கள் கஷ்டங்களை நேரில் பார்க்கவேண்டும். என்னுல் அது முடியாது. மரணத்தறுவாயில் வியாதிக்காரர் படும் துன்பங்களைப் பார்த்தால் என் மூளை கெட்டுவிடும். அவ்வழியில் எனக்குப் போதுமான ஆற்றலோ தைரியமோ இல்லை. ஆகையால் அது எனக்கு வேண்டாம். ஆனுல் வைத்திய உதவியைத் தவிர வேறு சிறந்த

உதவியை உலகில் ஜனங்கள் எதிர்பார்க்க முடியாது. ஆதலால் உன்னுடன் நான் எல். டி. பாஸ் செய்யலாமென நினைக்கிறேன்.

விசா :—அதற்குப்பின் ?

சரஸ் :—நாம் படித்ததைக் குழந்தைகளுக்குக் கற்பிப்பது.

விசா :—வேலையினிமித்தம் வூரூராய்ப் போக வேண்டியிருந்தால் ?

சரஸ் :—இருந்தால் போவது தான். எல்லா ஊர்களையும் ஜனங்களையும் பார்ப்பது நல்லது தானே.

விசா :—நீ போகுமிடத்துக் கெல்லாம் யார் துணை.

சரஸ் :—கடவுள்.

விசா :—நேரில் அவர் துணையிருக்க முடியுமா?

சரஸ் :—அவர் காட்டும் வழிதான்.

விசா: —அப்படியிருப்பதில் உனக்குச்சந்தோஷமும் சுகமு மிருக்குமென்று நினைக்கிறாயா ?

சரஸ் :—ஆம். இவ்வுலகில் அதைவிடச் சிறந்ததை நான் வேறு காணவில்லை.

விசா :—என் பிரிய சகி ! கடைசியாய்க் கேட்கிறேன். நீ இனி உன் அபிப்பிராயத்தை மாற்றிக்கொள்ளக் கூடுமென்று நான் எதிர்பார்க்க வேண்டாமா அம்மா !

சாஸ் :—ஆம். வேண்டியதில்லை. என் பெற்றோரிடம் உண்மையாய் நடந்து கொள்ளுவது மெய்யானல், நம்மை சிருஷ்டித்த கடவுளின்பால் பக்தி கொண்டிருப்பது உறுதியானல், என் உயிர்த்தோழியான உன் மேல் உண்மை அன்பூண்டொழுகுவது வாஸ்தவமே யானல், நான் .மாணபரியந்தம் கன்னிகை என்ற பதத்திலிருந்து தவறப் போவதில்லை. இதில் எள்ளளவும் சந்தேகம் வேண்டியதில்லை.

இவ்வுறுதியைக் கேட்டவுடன் விசாலம் முகம் குன்றி, மனம் வாடி, மெய் சோர்ந்தவளாய்க் கண்களில் நீர் ததும்ப "என் அன்பே! நீயல்லவோ அன்புக்குறைவிடமும், அணிகலனுமாகிறாய். நீ யல்லவோ சிறந்த பூஷணம். உன் மனத்திடல்லை நான் எவ்விதம் வர்ணிக்கக் கூடும். கேவலம் எனக்காகவே நீ இவ்வுலகில் குடும்பவாழ்க்கையிற் புகாமல் வெறுத்து விட்டாய். ஓ! இது எனக்கு வெகு நாளாய்த் தெரியும். உன்னுடன் ஒன்றாய்ப்பழகும் எனக்கு இது தெரியாததென்றால் ஒப்ப முடியுமோ. உன் பெற்றோரின் வேண்டுதலுக்காகவும் திருப்திக்காகவுமே நான் இவ்வளவு தூரம் பேசவேண்டியதாயிற்று. திடசித்தமுள்ளவளாகிய நீயா முன்வைத்த காலைப் பின் வைக்கப் போகிறாய். இவ்விஷயமாய் இனி நானுன்னுடன் பிரஸ்தாபிக்கப் போவதில்லை. உன்னிஷ்டப்படி நடக்கலாம். ஆனால் எனக்காகவே நீ இப்படியிருக்கப்போகிறாயென்பது மாத்திரம் நிச்சயமாதலால், அது என்னைச் சற்று வருத்தப் படுத்தச்செய்கிறது. ஆயினும் பரிகாரம் காணவில்லை. நான் உன்னை மேற்கண்ட விஷயங்களில் மனவருத்தப் படுத்திபிருந்தேனானல், தயவு செய்து என்னை உன் அன்பால் மன்னித்துக் கொள். இவ்வுலகில் ஜனங்கள் எவ்வளவு ஒற்றுமையுடனிருந்தாலும் இவ்விஷயத்தில் இவ்விதம் நடந்து கொள்ளும் பான்மையை நான் கண்டதும் கேட்டது மில்லை" எனக்கூறி வரும் போது ஏதோ ஓர் தோற்றம் தன் மனதுள் காணப்பட்டவளாய், அப்படியே மௌனமாய் நாற்காலியில் சாய்ந்து விட்டாள். அவளை அறியாமல் துக்கம் பொங்கிவந்தது. வெகுசாமர்த்தியத்துடன், வெளிக்கிளம்ப வொட்டாமல் அதைத் தடுத்துக் கொண்டிருந்தாள்.

பார்த்தாள் சரஸ்வதி. விசாலத்தின் ஸ்திதியை கவனித்தாள். அவள் கண்ணீரைக் கண்டு இவள் மனம் சகியாமல், "ஆம்! விசாலம் ! அது முற்றும் வாஸ்தவமே. என் கண்

என்று மதிக்கும் உனக்காகவே என் காலத்தை சகலவிதத்திலும் உன்னுடன் கூடி சமமாய்க் கழிப்பதாக நிச்சயித்து விட்டேன். இச்சமயம் உன் கண்ணீருக்குக் காரணமாகிய அக் கஷ்ட நாளின் கடைசிகாலத்திய மலர்ந்த விழி இதோ என் கண் முன்னிலையிலும் ஜ்வலிக்கிறது. அதை நான் உன்னைப் போலவே மறக்காமலிருக்கிறேன். ஆனால் நாம் இப்பத்து வருஷகாலத்தில் இதை ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டது கிடையாது. நாளாக ஆக அவ்விழி எனக்கு அறிவு மூட்டியது. அதிலிருந்தே நான் இம் முடிவுக்கு வந்தேன். குழந்தைப் பருவத்தில் ஓர் ஆறுமாதகாலம் உனக்கு அன்னியர் சுமங்கிலீ எனப் பெயர் வைத்துப் பிறகு அதைக் களைந்து, விதவை யென்ற நாமகாரணத்தை நிரந்தரமாய்ச் சூட்டி விட்டார்களல்லவா? இதிலிரண்டிலும் நீ சம்பந்தப் படாதவளானாலும் அந்தப் பொறுப்பு உன்னைச் சேர்ந்து விட்டதல்லவா? அதற்குக் காரணவாதி அன்னியரானாலும் காரியம் உன்னை அடுத்தது. ஒருவர் செயலுக்கு ஒருவர் தண்டனை அனுபவிப்பது இவ்விஷயத்துக்குத் தான் ஏற்றது. வெகு அழகு. பால்யவிவாகத்தின் போக்கும் காரியமும் வெகு சிறந்தது. நீ விதவை. நான் கன்னிகை. பெயர் வேறுயிருந்தாலும் காரியத்தில் பேதத்தைக் காணவில்லை. உனக்கு உன் பெற்றோர் காரணம். எனக்கு நானே காரணம். இதுதான் வித்தியாசம். உன் பெற்றோர்களை நான் தூஷித்ததாகக் கருதவேண்டாம். அதிர்ஷ்டம் கடவுள் செயல் என்று ஒப்புக் கொண்டாலும் நியாயத்தை ஆராய்ந்து பார்த்தால் அது நடுவில் தடுக்கப் படுகிறது. பதினன்கு வயதுக்குமேல் விவாகமாய் ஆறுமாதத்துக்குள் புருஷனிறந்து போனால் அப்போ யாரைச்சொல்லுவது என்கிறார்கள். அது தெய்வ சங்கல்பம் தான். பதினன்கு வயதுள்ள பெண்ணின் அறிவும் அனுபவமும் பத்து வயதுக்குட் பட்ட சிறுமிகளின் அறிவும் அநுபவமும் எத்தகையதென்று அவர்கள் யோசித்துப்பார்க்கட்டும். உன்னையும், உன்னால் என்னையும் உலகத்தார் கவனித்து பால்யவிவாகப் பிசாசை அறவே ஒழிக்கட்டும். நூறு பெயர்களடங்கிய ஒரு குடும்பத்தில் பத்து பால்ய விதவைக் குழந்தைகளிருந்தால் அதை அப் பெரியோர் சமாளித்துக் கொளுவார்கள். ஒரு பெண் கலியாணம் வேண்டாமென்றால் அதை அவர்களால் தாங்கமுடியாது. தவிர, சாஸ்திரம் இடம் கொடுக்காதல்லவா? ஆதலால் பரிதாபமான விதவைக் குழந்தைகளுக்காக உண்மையான கன்னிகைகள் வெளிவருவதும் பால்யவிவாகத்தைத் தடுக்கக் கூடுமென்பதே என் துணிபு. ஆனால் அதில் மாசு இருக்கக் கூடாது. கலியாண மென்றால் என்னவென்று அறியுமுன்னமே அக்குழந்தைகள் மனைவிகளாகி, சம்சாரத்திற் புகுந்து கஷ்டசுகங்களுக்காளாகி விடுகிறார்கள். பெண்களின் கட்டாயக் கல்வியும் பதினன்கு வயதுக்கு மேற்பட்ட விவாகமும் அநுஷ்டானத்திற்கு வந்து விட்டால் நமக்குச் சட்டம் அனுவசியம். அவ்வயதில் அப் பெண்ணுக்குக் கல்வியறிவும், உலக அநுபவமும், நன்மை தீமையின் பகுத்தறிவும், தன்னைத் தான் காத்துக் கொள்ளச் சக்தியும் தானாகவே ஏற்பட்டு விடுகிறது. சிலர் கலியாணமில்லாமல் பெண்கள் படித்தால் அவர்கள் புத்தி கெட்டுப்போய் அவர்கள் தீய வழிக்கு ஆளாகிறார்களென்கிறார்கள். இதை நான் ஒப்பவில்லை. ஆண் பெண் இருபாலரும் நெறி தவறாமல் நியாயமாய் நடந்தார்களேயானால் இவ்வுலகில் யார் கெட்டவர்களாவார்கள்? ஆதலால் மன உறுதி ஒன்று தான் முக்கியம்.

"நீ என்னை, என் பெற்றோர்களுக்காகத் தான் தூண்டினையென்பது எனக்கு நன்கு தெரியும். அதனால் எனக்குச் சிறிதும் வருத்

தமோ கோபமோ யில்லை. விசாலத்துக்கும் புனர் விவாகம் செய்து விடலாமென்றார் என் பிதா. நீ அதற்கிணங்கமாட்டா யென்பது உன்னுடன் பழகிவரும் நான் செவ்வையாயறிந்திருப்பதால் அதை நான் யோசிக்கவோ உன்னைக் கேட்கவோ பிரியப்படவில்லை. ஆகையால் நாமிருவரும் ஒன்றுப் படித்து முடித்துவிட்டு ஓர் தேசியப் பாடசாலையில் வேலை செய்து நம்மைப் போலொத்தப் பெண்களுக்குக் கல்விபுகட்டிக் கொண்டு நம் வாழ்நாளை நன்னாளாகக் கழிப்போமாக. இதற்காகவே நம்மைக் கடவுள் சிருஷ்டித்திருக்கிறார். ஆராய்ந்து பார்த்தால் இதைவிட நன்மை எதிலும் காணேம்" என்று சொல்லி முடித்தாள்.

வெகு பொறுமையுடனும், கவனமுடனும் கேட்டுவந்த விசாலம் தன் விசனத்தை அகற்றி, தங்களிருவர் மனமும் ஒருங்கே அமையப் பெற்றதற்காக மனமகிழ்ந்து விபந்து கடவுளை துதித்து, "என் பிரிய சரஸ்வதி! உன் அன்பினாலும், அறிவினாலும் வெகு தூரம் பேசிவிட்டாய். உன் மனதை நான் வெள்ளிடைமலைபோல் அறிந்து கொள்ளும்படி அவ்வளவு இனிமையுடனும், தெளிவாயும் பேசி விட்டாய். உன் பெயருக்குத் தகுந்த பெண் நீ தான். எனக்கு மெத்த சந்தோஷம். நீ கூறிய படியே நம் காலத்தை அவ்வழியில் செல விடலாம், இதில் தடையில்லை. நேரமாய் விட்டது, நான் போய் வருகிறேன்" என்று சொல்லி விடைபெற்று அகன்றாள்.

அவள் சென்றபின் "இனி கலியாணம் என்ற விஷயம் காதில் விழாது. இது நிச்சயம், என்னுடைய சபதம் நிறைவேற அஸ்திவாரம் பலமாய்ப் போட்டாய் விட்டது. இனி கட்டிடம் சரியாய்க் கட்டப்படு மென்பதில் ஐயமில்லை" எனத் தனக்குள் சொல்லிக் கொண்டு சாப்பிடுவதற்காகப் போய் விட்டாள். இவர்கள் சம்பாஷணையை சரஸ்வதியின் அன்னை வேண்டு மென்றே அடுத்த அறையிலிருந்து கேட்டுக் கொண்டிருந்தபடியால் அவள் விசாலமிடமிருந்து எதையும் அறிய ஆவல் கொள்ளவில்லை. எனினும் மறுநாள் அவளிட மிருந்து சங்கதியை அகிலாண்டம்மாளும் அவள் புருஷனும் உள்ளது உள்ளபடியே அறிந்து கொண்டார்கள்.

பின்பு இரண்டொரு மாதங்கள் சென்றது. காந்திமதிக்கும், புருஷோத்தமனுக்கும் கலியாணம் நிச்சயிக்கப் பட்டது. அக்காள் விஷயத்தில் தங்கைக்கு வருத்தமிருந்தாலும் தனக்கிருக்கும் ஆசையால் அவள் மணம் புரிந்து கொள்ள உடன்பட்டு விட்டாள். விவாகம் சிறப்பாய் நடந்தது. காந்திமதி தன் புருஷன் வீடு சென்று சுகமாயும் சந்தோஷமாயும் தன் காலத்தைக் கழித்து வரலானாள். சிநேகிதிகளிருவரும் தங்கள் திட்டப்படி பரீட்சையை முடித்துக் கொண்டு படிப்பிலிருந்து விலகிக் கொண்டார்கள். விசாலத்தின் தகப்பனருக்குத் திரண்ட ஆஸ்தியிருந்தது. அதில் ஒரு பாகத்தைத் தன் பையனுக்கும், மற்ற பாகத்தை விசாலத்துக்குமாக பிரித்து வைத்திருந்தார். தவிர அவள் மாமனார் வீட்டில் வேறு ஆண் சந்ததிகள் இல்லாதிருந்ததால் இவள் பெயருக்கு இருபதினாயிரம் எழுதி வைத்து விட்டு மீதியைப் பெண் கல்விக்காக அவள் மாமனார் ஒதுக்கி வைத்து விட்டார். அதைக் கொண்டு இவர்களிருவரும் ஓர் தேசீயக் கலாசாலை ஏற்படுத்தி விட்டார்கள். தாங்களும் அதில் வேலைபார்த்து வந்தார்கள். அப் பாடசாலையில் ஹிந்தி ஆங்கிலம், தமிழ், கைராட்டினம் இவைகள் முக்கியமான பாடங்களாக ஏற்படுத்தி விட்டார்கள், அப் பாடசாலையில் கல்வி கற்க வந்தப்பெண்மணிகள் வெகு அதிகம். பாடசாலையின் சகல நிர்வாகங்களையும் இவர்களிருவருமே குறைவற கவனித்து

வந்தார்கள். அவர்கள் தனி ஹோதாவிலும் ஸ்திரீகளின் படிப்புக்காகவே உழைத்து வந்தார்கள். எந்த விஷயத்திலும் அவர்கள் யோசனை ஒன்று பட்டதாகவே இருக்கும். ஆனாலும் அவர்கள் பரஸ்பரம் கலந்து யோசியாமல் எதையும் செய்யமாட்டார்கள். அவர்களுக்கு ஒருவிதக் கவலையுமில்லை, தாங்கள் உண்பதும் உடுப்பதும் குழந்தைகளுக்குப் பாடம் கற்பிப்பதும் தான் அவர்களுடைய வேலையாயிருந்தது. பெண்கல்வி அபிவிருத்தியின் பொருட்டு கூடும் கூட்டங்களில் அடிக்கடி பிரசங்கம் செய்வார்கள். ஸ்திரீகளுடைய ஒத்துழைப்பு இல்லாமல் சுயராஜ்யம் கிடைக்காதென்பது அவர்கள் உயர்ந்த லட்சியம். பெண்களைப் படிக்க வைத்தால் தான் அவ்வொத்துழைப்பு கை கூடுமென்றும், கேவலம் ஸ்திரீகளைக் குடும்ப வேலை செய்வதற்கும் குழந்தைகளைப் பெறுவதற்காக மாத்திரம் உபயோகியாமல் அவர்களைப் படிப்பிலும் முன்னேற்றமடையச் செய்ய வேண்டு மென்றும் பேசுவார்கள். ஆனால் அவர்கள் குடும்பவேலையை கவனிக்காமலிருக்கச் சொல்ல வில்லை. இப்பெண்மணிகளின் உயர்ந்த லட்சியங்களையும், உண்மையான அன்பையும், நற்குண நற்செய்கைகளையும், உதாரகுணங்களையும் புகழ்ந்து போற்றாதாரில்லை. அவர்களிடம் பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளை மிகவும் சிலாகித்தார்கள். ஆனாலும் பழைய வாசனையின் பயனாது அவர்களைச் சற்று வருத்தப்படத் தான் செய்து கொண்டிருந்தது. அக்கலாசாலையில் கல்வி முடிந்து வீட்டுக்குப் போகவேண்டிய பெண்கள் மனமில்லாமலே போவார்கள். காரணம் சரஸ்வதியும் விசாலமும் அவர்கள் பால் காட்டும் அன்புதான். அதில் வந்து சேர்ந்த உபாத்தினிகள் ஒருவராவது அப்பாடசாலையை விட்டு அகன்றாரில்லை. இவைகளின் மத்தியில் சிநேகிதிகளிருவரும், பூவும் மணமும் போலும், நகமும் சதையும் போலும், மணியும் ஒலியும் போலும் சுகமே நல் வாழ்வு வாழ்ந்து வந்தார்கள்.

என்னே சரஸ்வதியின் அன்பு! தன் அன்பினாலும், உறுதியினாலுமல்லவோ அபார காரியத்தை வழுவாமல் சாதித்தாள். இதுவன்றோ உண்மை அன்பு. இதுவல்லவோ உத்தம நேசம். வீணில் வாயளவில் சிநேகம் கொண்டாடுவதில் என்னபயன்? ஹா! என்ன விந்தை! மூன்றெழுத்துள்ள அந்த அன்பு எவ்வளவு பெரிய சுமையைத் தாங்குகிறது. கஷ்ட துக்கமென்னும் சாகரத்தையும் தாண்டிக் கரைசேர்க்கிறது.

ஏ அன்பே! உனக்கு முடிவுமில்லை. உனக்குச் சமமான மதிப்புள்ள வேறு வஸ்து ஒன்றும் காணப்படவுமில்லை. உன்னை முழுமனதுடன் ஒருவன் கைக்கொண்டானானால், அவன் மூர்க்கனானாலும், துஷ்டனானாலும், அவன் தானாகவே சாந்த குணமுள்ளவனாகவும், நல்லவனாகவும் மாறிவிட நீ உதவி செய்கிறாய். தவிர நீ மானிடர்க்கு, உற்சாகத்தையும் தைரியத்தையும் அளிக்கிறாய்.

இவ்வளவு மகிமையும், கீர்த்தி பிரதாபமுமடங்கிய ஓ! விலையற்ற அன்பே! நீ நீடூழி வாழ்வாயாக!

சுபம்.

---

# சிரிப்பு.

(ஸ்ரீமதி குகப்ரியை.)

உலகத்தில் சிரிப்பு அல்லது நகைப்பு என்பதை அறியாதவர் ஒருவருமில்லை. சிறு குழந்தைகள் முதல் பெரிய கிழவர் வரையில் எல்லோருக்கும் சிரிப்பு என்றால் இன்னதென்று நன்ருய்த் தெரியும்.

ஒவ்வொரு மனிதரும் ஒரு நாளைக்கு ஒரு முறையேனும் சிரியாதிருக்க முடியாது. நூல்களின் சுவைகளிற் கூட "நகைச் சுவை" அல்லது 'ஹாஸ்யரஸம்' முக்கிய மானதாகக் கருதப்படுகிறது. பெரும்பாலும் நகைச்சுவை ததும்பும் புத்தகங்கள் பலராலும் விரும்பப்படுகின்றன. சிரிப்பினால் நமக்குப் பலவிதமான நன்மைகள் ஏற்படுகின்றன.

பொதுவாக, சிரித்துக்கொண்டு (அதாவது சந்தோஷகரமாக) இருப்பவர்களைக் கண்டால் நமக்கும் ஓர் விதமான சந்தோஷகரமான உணர்ச்சி உண்டாகிறது. தவிர, சாஸ்திரப்படி புன்னகையினால் சரீரத்துக்கு மிகுந்த நன்மை உண்டாகிறதென்று அறிவாளிகள் கூறுவர்.

சிரிப்பானது ஈரல் இரைப்பைகளின் மூலமாய் நுரை ஈரல்களிலிருந்தும், மார்புக்கும் வயிற்றுக்கும் நடுவிலிருக்கும் தோலிலிருந்தும் உண்டாகின்றது. அதிகமாய் நகைக்கும்போது இரைப்பை நன்ருக நசுக்கப்படுகிறது. சிரிப்பினால் இருதயம் வேகமாய் அடித்துக் கொள்ளுகிறது. அது சரீரமுழுவதிலும் இரத்தத்தை வெகு வேகமாய் பாயச் செய்கிறது. இரத்த ஓட்டம் வேகப்படுவதனால் கண்கள் பிரகாசமாயும், மார்பு அகலமாயும் ஆகின்றன. சந்தோஷமான நகைப்பு வியாதிகளைச் சுகமாக்கும் நல்ல மருந்தென்று பிரசித்தி பெற்ற வைத்தியர்கள் சொல்லுகிறார்கள்.

நாம் குதூகலத்துடன் சிரிக்கும் பொழுது கண்களிலிருந்து உண்டாகும் பிரகாசமும் உதடுகளிலும் கனனங்களிலும் உண்டாகும் கோடுகளும் பார்ப்போரின் மனதை ரம்மியப் படுத்துகின்றன.

ஐரோப்பாவிலிருக்கும் ஒரு கோடீச்வரனை ஒரு சமயத்தில் கோகுலின் என்பவர் சந்தோஷிப்பித்தாராம். அதற்கு அத்தனவான் நன்கொடை அளித்து அடியிற் கண்டபடி எழுதுகிறார்:—

"அநேக தத்துவ சாஸ்திரிகள் நகைப்பது சரீரத்துக்கு மிகுந்த நன்மையைக் கொடுக்கிறதென்று சொல்லுகிறார்கள். 3000 டாலர் தாங்கள் என்னை சந்தோஷிப்பித்தற்கு வெகு மதியாய் அனுப்பியிருக்கிறேன். தயவு செய்து பெற்றுக் கொள்ளவும்."

தவிர, அதிகமாய்ச் சிரிக்கும் மனிதன் நெடு நாளைக்கு வசிக்கலாமென்று இங்கிலீஷ் கவியாக "ஷேக்ஸ்பியர்" சொல்லுகிறாரென்று ஆங்கிலம் படித்தவரில் பலர் அறிவர். அஜீரணம் தூக்கமின்மை, அசக்தி முதலிய வியாதிகளுக்குத் தகுந்த ஔஷதம் சிரிப்பே என்று பலர் கூறுகின்றனர்.

அநேகமாய் நாகரிகமடைந்தவர்கள் உரத்துச் சிரிப்பதை இழிவாக எண்ணுகிறார்கள். நாகரிகமடையாதவர்கள் என்று நாம் எண்ணும் நமது பாட்டிகள் கூட சிரிப்பினால் பெண்களுக்கு அடக்கம் குறைவென்றும் பெண்மையின் மேன்மை குறைவுறுமென்றும் கருதுகின்றனர். இதனாலேயே "சிரித்தாயோ சிரை அழித்தாயோ" என்று ஒரு பழமொழியும் வழங்குகிறது.

பெண்களின் நகைப்பானது குடும்பத்தைக் கெடுத்து விடுகிறதென்றும், உதாரணமாக 'பாரத யுத்தத்தின் காரணம் திரௌபதி ராஜசூய யாகத்தில் நகைத்ததே' என்று பலர் கூறு

வர். எந்த விஷயத்தைப் பற்றியும் எந்த விஷயத்திலும் உலகினருக்கு விசித்திர விசித்திர மான அபிப்பிராயங்கள் இருப்பது இயல்பே.

நமது நாட்டிலுள்ள ஒவ்வொரு சமஸ்தானங்களிலும், விகடமும் ஒரு கலையாகச் சொல்லப்பட்டு வெகுமானிக்கப்பட்டு வருகிறது. அத்தகைய விகடகவிகளில் தென்னலி ராமன் மிகவும் பெயர் பெற்றவன். நமது நாட்டிலுள்ள சிறு குழந்தைகளுக்குகூட தென்னலி ராமன் கதையில் விருப்பம் அதிகம்.

அக்பர் பாதுஷாவின் சபையிலிருந்த ராஜா பீர்பல் என்னும் அந்தணர் தமது வீரரைச் சந்தோஷிப்பிக்கும் தன்மையினால் ராஜா பட்டத்தையும் பெற்றார்.

தெருக்கூத்துக்களில்கூட கோமாளி, கட்டியக்காரன் என்னும் வேஷதாரிகள் நகைப்பின் பொருட்டே நடிக்கிறார்கள். உலகிலுள்ள எல்லா நாட்டினரும் நகைச் சுவையையும் ஒரு முக்கியச் சுவையாய்க் கருதுகிறார்கள்.

சிரிப்பில் பலவிதம் உண்டு. சிலர் கெட்ட எண்ணத்துடன் சிரிக்கிறார்கள். இது தன் பார்வையில் அகப்பட்டவர்களைக் கெடுத்து விடுகிறது. சிலர் துவேஷமாய்க் கொஞ்சம் கோபத்துடன் சிரிக்கிறார்கள். இப்படி நகைப்பவர்கள் எத்தனையோ மேன்மை அடையப்போகிற சிறுவர்களை மேன்மை அடைந்து கொண்டிருப்பவர்களையும் அதைரியப்படுத்தி விடுகிறது. அநேகர் தங்கள் செய்கைகளையும் ஆஸ்திகளையும் மேன்மையாகச் சொல்லிக்கொண்டு சிரிப்பதுண்டு. இதனால் பிறருக்கு யாதொரு கெடுதியும் உண்டாகாது. ஆனால் மோசமான புன்னகையும் உண்டு. அப்படிச் சிரிக்கிறவர்களையே யன்றி அது வேறு யாரையும் மோசஞ் செய்யாது. இன்னும் சிலர் உள் ஒன்றும் புறம் ஒன்றுமாகத் தொண்டைக்கு மேற்பட்டே சிரிப்பார்கள். இவர்கள் வஞ்சகர்களாகவும் நம்பிக்கைத் துரோகிகளாகவும் இருப்பார்கள். ஆதலால் இவர்களை ஒரு பொழுதும் நம்பலாகாது.

அசட்டுச் சிரிப்பு என்பது இவ்வெல்லாவற்றையும்விட மேம்பட்டது. அதன் சுவை அநுபவித்தவர்க்கே தெரியும். அதிமேதாவிகளாயிருப்பவர்கள் கூட சில சமயங்களில் அசட்டுச் சிரிப்பு சிரிக்கும்படி நேர்ந்து விடுகிறது.

நாம் களைத்துப் போயிருக்கும் சமயத்திலோ கஷ்ட மடைந்திருக்கும், மனச்சோர்வடைந்திருக்கும் பொழுதே நம்முடனிருப்பவர்கள் அன்புடன் சிரித்தால் அக்கஷ்டங்கள் எங்கேயோ ஓடிவிருக்கின்றன. நமக்கு ஆறுதல் உண்டாகிறது.

மாசற்ற நெஞ்சும் வதனமும் உள்ள குழந்தைகளைக் காண்பதினால் நமக்கு ஆனந்தம் உண்டாவதேன். அவைகளின் இனிய நகைப்பே அதன் காரணம். அதனாற்றான் "கோடி துக்கம் ஒரு குழந்தை முகத்தால் தெளியும்" என்கிறார்கள். ஆகையால் குற்றமற்ற குழந்தையைப்போல் சிரிப்பதனால் உடலுக்கு வன்மையும் ஆரோக்கியமும் உண்டாகும். ஏழை எளியவர் முதல் யாவரும் எளிதில் அநுபவிக்குமாறு அருளிய "நகையை" மற்ற நகைகளோடு அணிய அருட்பெரும் கடவுள் அருள் செய்வாராக!

சுபம்.

---

# ஸ்வப்ன த்வீபம்.

(ஸ்ரீமான் நா. கு. கோபாலய்யங்கார்.)

சென்ற பிப்ரவரி மாதம் பதினைந்தாந்தேதி என் ஜன்ம தினமாதலால் எங்கள் வீட்டில் மேள தாள முழக்கங்கள் காலைமுதல் மாலைவரையில் காதுகளைத் துளைத்துத் தள்ள, எங்கும் மங்களகாமான காட்சி கண்களைக் கவர்ந்தது. எனது தந்தையார் சிவபுரியில் நீதிபதிகளிலொருவராதல் பற்றி பி. ஏ. பட்டம் பெற்றிருக்கும் எனக்குத் தமதிலாகாவிலேயே ஒரு வேலை காலி செய்து கொண்டிருக்க, தாயாரோ தமது சிநேகிதிகளுடன் எனக்கு வேலையான பின்னிற்கும் உத்தியோக தோரணையையுமெண்ணி மனம் பூரித்தாள். 'நாலும் கிடக்க நட்டாற்றில் நாயகி' யென அம்மையார்க் கிழவியை யொத்த எங்கள் பாட்டியோ "கொள்ளுப் பேரன் பிறக்க வேணுமே ஈச்வரா" என்று விசாரப்படுவதைக் கண்டு "அழுவதா சிரிப்பதா?" என்றாலோசனை செய்துகொண்டிருக்கையில் கர்ணாமிர்தத்தையுண்டாக்கும்

"கற்பு நிலையென்று சொல்ல வந்தாரிரு
கக்ஷிக்குமஃது பொதுவில் வைப்போம்
வற்புறுத்திப் பெண்ணைக் கட்டிக் கொடுக்கும்
வழக்கத்தைத்தள்ளி மிதித்துவிடுவோம்,
"பட்டங்களாள் வதுஞ்சட்டங்கள் செய்வதும்
பாரினிற் பெண்கள் நடத்தவந்தோம்
எட்டுமறிவினி லாணுக்கிங்கே பெண்
இளைப்பில்லை காணென்று கும்மியடி"

என்னும் பாக்களை சகோதரி கமலா தன் தோழிகளுடன் இனிய குரலில் ஆடிக்குதித்துப்பாட ஆனந்த மயக்கங்கொண்டு கண்களை அப்படியே மூடிவிட்டேன்.

உடனே அடுத்திருந்த திரை நீங்கியது போலாயிற்று. நான் சென்னை சர்வ கலாசாலையில் வாசிக்குங்கால் அடிக்கடி ஆகாய விமானத்தில் விநோதப்பிரயாணம் செய்வது வழக்கம். அதைப் போல ஏதோ ஒருவித இயந்திரம் என்னைத் திடீரென்று ஆகாயத்தை எட்டுமட்டுந் தூக்கிச் சென்று செங்குத்தான குன்றொன்றின் கீழுள்ள பல காதமாழுந் தோன்றும் நீரின் மையத்தில் இழுத்துச் சென்றது. ஆவியுடலிரண்டும் அதோ கதியாய் நிற்கப் பொருளை எவ்வாறு நினைப்பது? மறு நிமிஷமே பெரிய தொரு நீலமாளிகையின் முன் பேந்தப் பேந்த விழித்துக்கொண்டே நின்றேன். என்னுடைய வரவை எதிர் பார்த்திருந்தது போல இரண்டு தூதர்கள்—யமகிங்கரர்களின் சிஷ்யர்கள்—பலநாட் பட்டினி கொண்ட பெரும்புலி முன்னிருந்த ஆட்டுக் குட்டியின் மீது தாவிப் பாய்வதுபோலத் துள்ளிக் குதித்தார்கள். அம்ம! என் குடலறுந்து போமாறு அலறி நடுங்கினேன். அன்றெழுதினவன் எழுத்தை யாரால் அழிக்க முடியும்? விதிவழி விடவேண்டுமென்றாலும் பாழும் மதி ஒரு கை பார்ப்பேனென்க இதை முன்னடி விட்டு விட்டேன். என்னைக் கட்டிக்கொண்டு போனவர்கள் பெண்ணினம் என்று என் பீதியிலறியாதுபோக வெட்கினேனென்றாலும் புல்லென்றாலும் புருஷனல்லவா? மண்ணென்றாலும் மணவாளனல்லவா? துரும்பைக் கிள்ளிப்போட்டுப் மாப்பிள்ளை யென்றாலும் ஒரு சிறிது ரோமது துள்ளி விளையாடுமென்று நீதிகளை நான் கேட்டிருந்ததால் பௌரஷத்தாலதை அடக்கி 'என்னை ஏன் எங்கு தூக்கிச் செல்லுகிறீர்கள்?' என்று உறுமிய வண்ணம் கண்ணைத் திறவாமலே முணுமுணுத்ததற்கு அவர்கள் என்னைத் தொப்பென்று

குலுக்கியதே சரியான பதில் எனக்கொண்டேன்.

அங்கு நாற் புறங்களிலும் நவமணிகளால் அலங்கரிக்கப்பெற்ற ஸ்வர்ணபீடங்களினடுவே உயரியதோர் ரத்தின சிம்மாதனத்து மீது ஓர் பெண்பாவை அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னு முருக்கொண்ட பெண்களை விசாரித்துக் கொண்டிருந்தாள். கலி காலத்தாருள் பெரும்பாலோர் தம்மைப் புறக்கணித்து எள்ளளவும் மதிப்பதில்லை என்றும் அவர்கள் குறை கூறி அழுது வழிந்தார்கள். அடுத்த படியில் தன்னைப் பற்றிக் கவனிப்பார்களோ வென்றையுற்று அசிரத்தையாக நின்று கொண்டிருந்த நவீன நாகரிகப் பேய்தனை விளித்து அம் மங்கை "நாட்டினை நலங்குலையச் செய்யும் உன்னுணவந்தானென்ன?" என்று கர்ன கடூரமாக கர்ஜிக்க, அவ்வாத்மா மதிமயங்கி நின்ற என்னைக் காட்டி, உருவிலும் அறிவிலும் பெரியரான இவனுடைய சகாக்கள் நாகரிகப் பட்டங்கள் சூட்டிக்கொள்ள படாத பாடுபட்டுப் பட்டினிகட்காளாகி உருவமழிந்து உடல் மெலிந்து திரியுமட்டும் பெண்களின் இந்நாகரிகம் மறைய ஒட்டாது தடுக்க என்னால் முடியாது. புராதன ஒழுக்கங்கள், ஆசார சீர்திருத்தங்கள், ஜீவனோபாயங்கள் யாவும் பண்டைய காலம்படியாயின் பெண்களையும் குறை கொள்ளாது கணவன்மாரின் நீதிக்குத் தக்கபடி நடந்து கொள்வர்; இது யாருடைய குற்றம் தேவீ!" என்று பணிவுடன் மொழிந்தது. நடுத்தெருவில் நடக்குங் காலும் ஈ எறும்புகளை மிதித்துத் தள்ளாது காலைத் தூக்கி அடியெடுத்து வைத்துச் செல்லும் பழிபாபமறியாத ஏழையைப் பலதூறு செய்து குற்றம் காட்டி நீலத்வீப தேவியினிடம் என்னுயிரான மானத்தை வாங்க எண்ணிய பிடாரியான அருகிலிருந்த நவீன நாகரிகமென்னும் பெரும் பேயைக் கண்டதுண்டஞ் செய்யவேண்டி இடையிலிருந்து வாளை வீசி விட எண்ணிச் சரேலென்றெழுந்தேன்.

அது வாளாகவுமிருந்து அவ்வாத்மாவும் அங்கு தென்பட்டிருக்குமாயின் மகா விபத்து நேரிட்டிருக்கும். ஆனால் என்னெண்ணம் மயிரிழை தப்பியது. அருகில் படுத்திருந்த என் மனைவி "ஐயோ" என்று கூக்குரலிட்ட பின்னரே நான் உருவி இழுத்தது வாளல்ல, அவளின் நீண்ட கரிய கூந்தலே என்று கண்டவுடன் என்னை 'மதியற்றவன்' என்று கூறிக் கொண்டிருக்கையில், மணியும் ஆறடிக்க, "பொழுது புலர்ந்தது, மங்களம் தங்குக, எழுந்திரு" என்றேன்.

## கல்வி.

(ஸ்ரீமதி ஐங்கரன் தேவி)

நமது சிந்தாமணிப் பத்திராதிபர் ஜனவரி மாத சஞ்சிகையில் ஆண்மக்கள் உத்தியோகக் கல்வி பயின்று உத்தியோகம் அகப்படாமல் கஷ்டப்படும்பொழுது ஸ்திரீகளும் அதையே விரும்பிக் கல்வி கற்பது அனுவசியமென்றும், குடும்பத்திற்கு வேண்டிய கல்வி கற்பதுதான் அவசியமென்றும் எழுதியிருந்தார். நாடகத்திற்கேற்ற வேஷம் போடுவது போல் காலத்திற்கேற்றபடி நாமும் மாறவேண்டியதாக இருக்கிறது. முன்காலத்தில்குடும்பக் கல்வி அவசியமாக இருந்தது. ஏனென்றால்அப்பொழுதிருந்தஆண்மக்கள் 'பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை, அருளில்லார்க்குஇவ்வுலகமில்லை' என்று யோசித்து இம்மைக்கும் மறுமைக்கும் பயன் படக்கூடிய இல்லற தருமமே சிறந்த தென்று நினைத்து இல்லறத்திற்கு முக்கிய துணைவர்களாகிய பெண்

மக்களுக்குக் குடும்பத்திற்கு வேண்டிய கல்வி எல்லாம் பயிற்றுவித்து, எல்லா விஷயங்களி லும் அவர்களிடம் தாங்கள் யோசனைகள் கேட் டும், அவர்கள் மனம் கோணுதபடி நடந்தும், கௌரவமாக மதித்தும், தங்கள் வலக்கைபோல் நினைத்துக்காப்பாற்றியும் வந்தார்கள். இக்காலத் திய ஆண்மக்கள் 'அவரவர்கள் சம்பாதிப்பதை அவரவர்கள் அனுபவியாமல், இல்லறமாவது, தருமமாவது? ஒருவர் சம்பாதித்து ஒன்பது பெயர்கள் உட்கார்ந்து சாப்பிட்டுக்கொண்டு, வீட்டிற்கு வந்தால் உப்பில்லை, புளியில்லை என்று சொல்வதும், குழந்தைகள் கதறுவதும், காதில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றினுற்போலிருக்கிறது' என்றும், 'குடும்பத்திலிருந்தால் கொஞ்சம் கூட சௌகரியமில்லை' என்றும் சொல்லுகிறுர் கள். சில ஆண்மக்கள் தாங்கள் மேனுட்டு நாகரிகத்தை அனுசரிப்பது போதாமல் பெண் மக்களையும் மீட்டிங்கென்றும், பார்ட்டி என் றும் ஆடவர்களுடன் கலந்து பழகவும், ஆடம் பரமாக அலங்காரங்கள் செய்து கொள்ளவும், படாடோபமான செலவுகள்செய்யவும், அடக்க ஒடுக்கமின்றி நடக்கவும், அதற்குத் தகுந்தாப் போல் செலவுசெய்வதற்குத் தங்களைப் பொறுக் காமல்அவர்களே சம்பாதிக்கக்கூடிய கல்வியைக் கற்பித்து வருகிறுர்கள். அந்த மாதிரி யிருக்கும் ஸ்திரீகளைத்தான் அவர்கள் கௌரவமாக நட த்துகிறுர்கள். அஃதில்லாமல் அமரிக்கையாயும், உண்மையாயுமிருக்கும் கற்புடைய ஸ்திரீகளைக் கேவலம் வேலையாட்களுக்கும் கீழாக மதித்து 'கடனுக்கு கட்டினேம், குழந்தைகளையாவது பாதுகாக்கட்டும்' என்று நினைத்து மிருகங்களைப் போல் நடத்துகிறுர்கள். இன்னும் சில ஆட வர்கள், அந்தமாதிரி இருக்கும் ஸ்திரீகள் வீட் டில் இருந்தால்கூட தங்களுக்கு அகௌரவ மென்று நினைத்து வெளியே விரட்டி விடுகிறுர் கள். இம்மாதிரியுள்ள அனுதையான ஸ்திரீகள் நமது இந்தியாவில் ஆயிரக் கணக்கிலடங்கா மலிருக்கிறுர்கள். இவர்களைக் காப்பாற்றுபவர் கள் யார்? இவர்களுக்கெல்லாம் வழியென்ன? நம்மைப்படைத்தகடவுள்தான் இவர்களுக்கெல் லாம் நற்கல்வியும் நற்குணமும் நற்புத்தியும் புக ட்டிநல்வழியிற் போகுமாறு தூண்டிக் காப்பாற் றவேண்டும். இதற்கெல்லாம்காரணம் மேனுட்டு நாகரிகமே. இந்தியாவில் மேனுட்டைப் போல் அனேக ஹோட்டல்களும் வசிக்க வசதியுள்ள ஏகாந்தமான அறைகளும், அநேக நடனசாலை களும், நாகரிக உடைகள் விற்கும் ஷாப்புக ளும், இன்னும் நானுவிதமான செலவுகள் செய் யக்கூடிய வழிகளும் தோற்றிய நாள் முதல் நமது ஆடவர்கள் வரவு, செலவு என்ன என்ப தறியாமல் 'ஆசைக்கோரளவில்லை அகில மெல் லாம் கட்டியாளினும்' என்று தாயுமானவர் பாடியபடி தங்கள் ஆயுள் காலமெல்லாம் ஆடி ஓடி அலைந்து திரிந்து சம்பாதித்தும் வரவுக்குத் தகுந்த செலவு செய்ய வழிதெரியாமல் கடைசி யில் கடனாளியாக மாறி, உடம்பிலிருக்கிற வலு வும், செயலும் அற்று, மனைவி, மக்கள் என்ற அன்பை மறந்து அவர்களைக் காப்பாற்றச் சக்தி யில்லாமல்கிடந்து அவஸ்தைப்பட்டுக்காலத்தைக் கடத்துகிறுர்கள். ஆகையினுல் 'கற்கை நன்றே பிச்சைபுகினும் கற்கை நன்றே' என்றபடி ஏழைகளானுலும், தனவந்தர்களானுலும் ஆண் மக்களும், பெண்மக்களும் இகத்திற்கும், பரத்தி ற்குமுபயோகமாயுள்ள கல்வியாயும், நல்வழியில் சம்பாதித்து நல்வழியில் பிரயோசனப் படக்கூ டியதாயும், நன்னடக்கை யுடனிருக்கவும் கற்க வேண்டியதவசியம். ஸ்திரீகள் உத்தியோகக் கல் விகற்பதினுல் குடும்பத்தைப் பாதுகாக்க மாட் டாரென்றும், கணவர்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்க மாட்டாளென்றும் சொல்லுவது சரி யல்ல. அவர்கள் தாங்களே கஷ்டப்பட்டு சம் பாதிப்பதினுல் பணத்தின் அருமை அறிந்து குடும்பத்தை வெகு சிக்கனமாகவும், கணவர் களுடைய கஷ்டமறிந்து அவர்களுக்குதவியாக

வும், குழந்தைகளையும், பெரியோர்களையும் மிக அன்புடன்பாதுகாத்துப் பரிபாலிப்பார்கள். அதனால் எல்லா ஸ்திரீகளும் உத்தியோகம் செய்ய வேண்டுமென்பது என் கருத்தல்ல. எல்லோரும் நற் கல்வி கற்றால் ஏழை ஸ்திரீகள் தங்கள் கணவருடன் தாங்களும் சம்பாதித்து வறுமைக்கும், நோய்க்கும் இடங்கொடுக்காமல், குடும்பத்தைக் காப்பாற்றலாம். நடு நிலைமையிலுள்ளவர்கள் தங்கள் புருஷர்களுக்கு உதவியாக எழுதவும், படிக்கவும், அவர்கள் கஷ்டசுகங்களில் தாங்களும் பகிர்ந்து கொண்டு, அதற்கு வேண்டிய சௌகரியங்கள் செய்தும் சரிசமமாக அனுபவிக்கலாம். தனவந்த ஸ்திரீகள் தாங்கள் கற்ற கல்வியை ஏழைமக்களுக்கு இலவசமாகக் கற்பித்துத் தாங்களும் மகிழலாம். தற்காலத்திய ஆடவர்களும் தங்கள் பெண்மக்கள் தங்களுக்கு எதிலும் பின்வாங்கினவர்களல்லர் என்று நினைத்து கௌரவமாக நடத்துவார்கள். ஆகையால் உலகத்திற் பிறந்த மானிடர்களெல்லோருக்கும் முக்கியமாய்க் கல்வி கற்கவேண்டியதவசியம். சக்தி என்பது பெண் என்றும் அவள் இல்லாமல் உலகத்தில் ஒன்றும் நடவாது என்றும் பெரியோர்கள் சொல்லுவது போல், அந்த ஜாதியாகிய ஸ்திரீகளினாலாவது நமது இந்தியா முன்னேற்றமடைய வேண்டுமென்று கடவுளைப் பிரார்த்திப்போமாக!

## ஸ்ரீராம நவமிக் கொண்டாட்டம்.

(ஸ்ரீமான் M. R. ஆச்சார்.)

ஜனன தினத்தைக் கொண்டாடும் வழக்கம் இன்று தோன்றினதன்று; பண்டைக் காலந்தொட்டு வந்து கொண்டிருக்கும் வழக்கமாகும். ஸ்ரீமான்கள், கீர்த்தி பெற்ற மாந்தர்கள், முடி சார்ந்த மன்னர்கள் ஆகிய இவர்களுடைய ஜனன தினம், நிரம்ப விமரிசையுடன் கொண்டாடப்பட்டு வருகிறதை நாம் பிரத்தியட்சத்திற் கண்டுளோம். அங்ஙனமிருக்க, மானிடர்களாலும் மன்னர் மன்னர்களாலும் இந்திராதி தேவர்களாலும் அயன் அரன் இவர்களாலும் பூஜிக்கப்பட்டவரும் ஸ்ரீயப்பதியும் ஸ்ரீ ஹரியின் அவதார ரூபியுமான ஸ்ரீராம சந்திர மூர்த்தியின் ஜனன தினத்தைக்கொண்டாடாத ஆஸ்திகர்கள் அவனியிலுளரோ? இல்லவே இல்லை.

பிறந்த தினம்:—கிருதத் திரேத துவாபர கலி என்ற நான்கு யுகங்களுள் இரண்டாவதான திரேதாயுகத்தில், அதாவது 21 லட்சத்து 65 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் மேஷ மாதம் — நவமி திதி—புனர்பூச நட்சத்திரங் கூடிய சுபதினத்தில் துஷ்ட நிக்கிரகம், சிஷ்ட பரிபாலனஞ் செய்வதையே சங்கல்பமாகக் கொண்ட ஸ்ரீ ஹரி—திருமாலுந்தி பூத்த மலர் பூத்த பூ (பூமி) செய் தவத்தால் அரிதிற் பெற்ற கோசலமென்னும் திருநாமமுடைய திரு நாட்டின் தலைமை நகரமாகிய—ஸ்ரீ அயோத்தியா நகரில்—தினகரன் வம்சத்திற்றோன்றிய—தசரத சக்கரவர்த்திக்கும் அவருடைய பட்ட மகிஷியான கோசலா தேவிக்கும் திருக்குமாரராக அவதரித்தார்.

ஹிந்துக்களின் கணக்கின்படி

| | |
|---|---|
| திரேதா யுகத்திற்கு௵ | 1296000 |
| ,, துவாபர யுகத்திற்கு௵ | 864000 |
| கலியுகத்திற்கு (432000-௵ எனினும்) | |
| இன்று கலியுகம் பிறந்து | 5000 |
| ஆக மொத்தம் வருஷம் | 2165000 |

ஸ்ரீராமர் பிறந்து இன்றைக்கு 21 லட்சத்து 65 ஆயிரம் வருஷமாகிறது என்று சொல்லப் படுகிறது.

மற்றொரு கணக்கின்படி ஸ்ரீ குருக்ஷேத்திர யுத்தம் நடந்து இன்றைக்கு 6000-ஆண்டு தான் ஆகிறது.

அதற்கு ஆயிரம் வருஷங்களுக்கு முன்னிருந்த—சூரிய குலத்தரசரான தசரத சக்கரவர்த்திக்கும் சந்திரகுலத்து மன்னர்களுக்கும், பெண் கொடுக்கல் வாங்கல் முதலிய சம்பந்தம் இருந்ததென்று சாஸ்திர ஆராய்ச்சியுடன் கால நிர்ணயஞ் செய்திருக்கும் மேதாவிகள் சோதித்துச் சொல்லியிருக்கிறார்கள். இவைகளில் எது உண்மையோ அதை நீங்களே ஆராய்ந்து அறியுங்கள்.

இந்த ஸ்ரீராமர் யார் என்றால்:—"சிருஷ்டி சம்ரட்சணம் சங்காரம் என்ற முத்தொழிலை லீலையாகக் கொண்ட ஸ்ரீ ஹரி; அம்மூன்றுள் ஈற்றினிற்கும் தொழிலைப் புரிந்து சேதனம சேதன முதலிய யாவையுந் தன்னுள்ளடக்கி விரிபுனல் நல்கி ஓர் ஆலிலையில் ஜோதிவடிவாகிய பாலனாகி அறிதுயில் மேவினவன் எவனோ அவனே யாவார்.

இவரே ஸ்ரீ வைகுண்டத்தில் சங்கு, சக்கர, பத்மதாரியாயும் பீதாம்பரதாரியாயும் எழுந்தருளியிருக்கிறார்; இந்த தேவாதிதேவனை, பிதாமகனான சதுர்முகப் பிரம்மன் பல தேவர்களுடன் வைகுண்டஞ்சென்று ஸ்ரீமந்நாராயணனை தரிசனங்கண்டு சேவித்து "ஹே' சுவாமி! பூவுலகில் அரக்கர்களின் கொடுமையைச் சகிக்க முடியாமல், மகரிஷிகளும் தேவர்களும் மற்ற சாது ஜனங்களும் தவித்துக் கொண்டிருக்கிறார்கள். துஷ்ட நிக்கிரகம், சிஷ்ட பரிபாலனஞ் செய்யும் சங்கல்பம் உம்முடைய தன்றோ! ஆகையால் கருணை கூர்ந்து பூபாரத்தை யொழிக்க, பூமியில் அவதரிக்க வேணும்" என்று முறையிட்டார்.

அவதாரம் என்னும் பதத்திற்குக் கீழே இறங்குதல் என்றும், அப்ராகிருத தேஜோமய ஸ்வரூபியும், சச்சிதானந்த ஸ்வரூபியும், அவ்யக்தனும் அயோநிஜனும் சர்வத்ர வியாப்தனும், எல்லைக்குள் அடங்காதவனும், அனாதியுமான பரப்பிரம்மம், பிராகிருத சரீரத்துடன் எல்லைக்குள் அடங்கித் தோன்றுவது என்னும் பொருளாகும்.

பிரபு அன்னவர்களை நோக்கி "தாம் பூமியில் தசரத சக்கரவர்த்தித் திருமகனாக அவதரித்துச் சாதுக்களுடைய கஷ்டங்களை நிவர்த்திப்போம்" என்றும், தமது சயனரூபியான சேடன், இளைய பெருமாளாகவும், தமது சங்கு சக்கரம், பரத சத்துருக்கனர்களாகவும் தமது கதை ஸ்ரீ ஆஞ்சனேயராகவும், தமது பத்மம் ஸ்ரீ மகா லக்ஷ்மியான சீதாப்பிராட்டியாகவும், ஸ்வயம் தாமே ஸ்ரீராம மூர்த்தியாகவும் அவதரிக்கிறோம் என்றும், "அதற்கு முந்தி நீங்கள் அனைவரும், பூமியிலவதரித்து நமக்குச் சகாயமாக இருக்கக் கடவீர்கள்" என்றும் திருவாய் மலர்ந்தருளினார்.

இவ்விதமாக ஸ்ரீ ஹரி சொல்லிய அர்த்தத்தையே கவிச்சக்கரவர்த்தியான கம்ப நட்டாழ்வார் தம்மால் இயற்றப்பட்ட 1200 பாடல்களடங்கிய தமிழ்க் கம்பராமாயணத்தில் அடியில் வரும் செய்யுளால் விளக்கிக் காட்டியிருக்கிறார்:—

"என்னையாளுடைய வையன் கலுழன் மீதெழுந்து போயப்
பின்னவானவரை நோக்கிப் பிதாமகன் பேசுகின்றான்
முன்னரே யெண்கின் வேந்தன் யானென மொழிகின்றான் மற்
றன்னவரெவரும் நீர் போய் யாவதரித்திடுமி னென்றான்."

பிரம்மா ஜாம்பவனுன காடியாகவும், வாயு முதலிய தேவர்கள் குரங்குகளாகவும் ஜனித்ததற்குக் காரணம் யாதோ அறிகிலோம்!

மானிட ஜன்மம் எடுப்பதற்கு முந்தி, டார்வின் கொள்கையின்படி (Darwin's Theory) குரங்குகளாக இருக்க வேண்டுமென்றும் அருத்தத்தை நிரூபிப்பதற்காக, இவ்வாறு குரங்குகளாகப் பிறந்தனரோ என்று ஊகிக்க வேண்டியிருக்கிறது.

மானிட ஜன்மம் எடுப்பதற்கு முந்தி மனிதர்கள், மிருகங்கள், பறவைகள், ஊர்வன மச்சங்கள் என்று சொல்லும்படியான உயிருள்ள பிராணிவர்க்கங்களில் கீழிருந்து படிப்படியாக மேலுக்கு வரவேண்டும் என்பதைக் காட்டுவதற்காகவே ஸ்ரீமகா விஷ்ணுவானவர் பத்து அவதாரங்களை யெடுத்திருக்கிறார். அவைகளில் அவர் முதலில் மச்சம் (மீனாகவும்), அதன் பிறகு கூர்மமாகவும், அதன் பின்னர் படிப்படியாக மேற் சென்று (வராகம், நாரஸிம்மம், வாமனம், பார்க்கவம், ராம, கிருஷ்ணாதி அவதாரங்களை எடுத்துக் காட்டியிருக்கிறார் என்று காண்க.

ஸ்ரீ வேதவியாசருடைய குமாரரான ஸ்ரீ சுகப்பிரம்மன் கிளியின் முகத்துடன் இருந்தார் என்றும், கருடன், சேஷன், பறவை, பாம்பு ரூபத்துடன் இருந்தார்கள் என்றும் நான்கு முகம், ஐம்முகம், ஆறுமுகம், பத்து முகங்களுடன் இருந்தார்கள் என்றும் புராணங்களில் கூறியிருப்பதைக் காண்க.

மேற் கண்ட விதியை அனுசரித்து, தேவர்கள் அனைவரும் வானரங்களாகப் பிறந்தார்கள் என்று கம்பர் அடுத்த பாட்டில் விளக்கிக் காட்டியிருக்கிறார்.

வாயு மற்றெனது கூறு மாருதி யெனலும்
மற்றோர் காயு மாக்கடங்களாகி.

ஸ்ரீமகாவிஷ்ணு ஸ்ரீராமமூர்த்தியாக அவதரித்தார்.

ஸ்ரீமகாலக்ஷ்மி சீதாப் பிராட்டியாராக அவதரித்தார்.

ஸ்ரீமகாவிஷ்ணுவின் ஆயுதங்களும் சயனமும் மூன்று சகோதரர்களாக அவதரித்தார்கள்.

பிரம்மதேவர் ஜாம்புவந்தன் என்ற காடியாக அவதரித்தார்.

வாயுபகவான், ஸ்ரீ ஆஞ்சனேயர், ஸ்ரீ ஹனுமான், மாருதி என்ற நாமங்களுடன் குரங்காகவும் சூரியன் இந்திரன் அக்கினி முதலிய தேவர்கள் வாலி, சுக்கிரீவன், நளன், அவிந்தன் முதலிய குரங்கினங்களாகவும் அவதரித்தார்கள்.

ஸ்ரீராமஜனனத்தின் மற்றொரு பாடம் கம்பராமாயணப் பொருள் என்ற நூலில் கூறப்பட்டிருக்கிறதைக் காண்க :—

"நாடு கோசல நாடு மாநதி புனர்ச் சரயூ
ஆடுதிண் கொடி அயோத்யமா நகர் அதற்கிறைவன்
தேடுவண்புகழ்த்த பரதன் தேவியாம் முதண்மை
சூடுகோசலை கைகேயி சுமித்திரை யென்பார்."

"மற்றுந் தேவியாறுபதினயிர மடவார்
சொற்ற மன்னவன் சுடர்ப்புகழ் வேள்விகள் தொடங்கி
பெற்ற மைந்தர்கள் பிரகுவேல் இராகவன்—பரதன்
எற்று நீள் புயத்திலக்குவன் இளையவனென்போன்."

மூன்றும் பாடம் நவித்தல மூப்பனர் எழுதுகிறார்:—

"பின்னர்ப் பாயசமுண்ட தேவியர் மூவரும் கருவுற்றுய்க்கும் பருவம் வருதலும் விண்ணோர் இறைஞ்ச முனிவரக மகிழ பரமபத நாதனை, பரந்தாமனை, பக்தவச்சலனை, ஆதியை, அனாதியை, ஆருவமுதை, மனோவாக்குக் கெட்டாத தத்துவனை, எங்கள் நாயகனை மேடமாதம் நவமி திதி புனர்ப்பூச நட்சத்திரங்கூடிய சுபதினத்தில் கோசலை தேவியார் ஈன்றாள்."

இந்த ஸ்ரீராமர்தான் வைகுண்டவாசியான ஸ்ரீமகா விஷ்ணு ஆவார். அந்த மகா விஷ்ணுவே பிரளயகாலத்தில் ஜலத்தில் ஓர் ஆலிலையின் மீது படுத்திருக்கும் பாலகனுவார். அந்த பாலகனே தாயுமானவர் சொல்லும் பரப்பிரம்மம் ஆவார் :—

"அங்கிங்கெனுதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்ததெது ?.........அண்ட பகிரண்டமும் அடங்கவொரு நிறைவாகின ஆனந்தமான பரமே.

இந்தப் பரப்பிரம்மத்தையே வேதங்களும் உபநிஷத்துக்களும், ஸ்ரீசங்கார், ஸ்ரீராமானுஜர் ஸ்ரீமத்வாச்சாரியார்—ஆகிய மூன்று ஆசார்ய புருஷர்களும் இன்னும் பற்பல மகான்களும் அடியில் வருமாறு கூறியிருக்கிறார்கள்.—"சச்சிதானந்த ஸ்வரூபியும் மனோவாக்குக் கெட்டாததும்—நாமரூபமற்றதும் (சர்வசப்த வாசகனுகையாலும், சர்வரூபமும் அவனது ஆகையாலும் அவனை நாமரூபமற்றவன் என்று சொல்லுவது) நிர்க்குணனும் (ப்ரகிருதி சம்பந்தமான மூன்று குணங்கள் அற்றவனுகையால் அவனை நிர்க்குணன் என்று சொல்லுவது.) அவ்யக்தனும் அணுவுக்கணுவாயும், மஹத்துக்கு மஹத்தாயு மிருப்பவனும், சர்வத்ர வியாப்தனும் தூரத்திலும் அண்மையிலும் இருப்பவனும், பிரபஞ்சத்தையே தன்னுளடக்கிக் கொண்டிருப்பவனும் தானே இப்பிரபஞ்சமாகக் காணப்படுகிறவனும் (பாதோஸ்ய விச்வா - பூதானி - த்ரிபாதோஸ்ய - அம்ருதம் திவி) என்ற புருஷ சூக்த வாக்கியப் பிரதிபாத்யனும் சகலத்திற்கும் சார பூதனும்—இத்யாதி இலட்சணங்களையுடையவனும்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவனைத் தான் பரா சக்தி யென்றும் சொல்லுகிறார்கள். இந்தப் பிரம்மம் அல்லது சராசரச் சக்தியைத் தான் மேனாட்டு நவீனமுறை சாஸ்திரிகள், பதார்த்தம் (Matter) என்றும் சக்தி (Force or Spirit) என்றும் சொல்லுகிறார்கள். ஹிந்து சாஸ்திரங்களில் பிரகிருதி யென்றும் புருஷன் என்றும், சிவன் சக்தி என்றும், விஷ்ணு மகாலக்ஷ்மி என்றும் சொல்லப்படுகின்றன. இந்த சச்சிதானந்தப் பிரம்மமே, சர்வத்ர வியாப்தன் என்றும் அவ்யக்தன் என்றும் சொல்லப்படுகிறது.

வைகுண்டத்திலிருப்பவரும், ஸ்ரீராமகிருஷ்ணுதி அவதார ரூபங்களும், ஸ்ரீரங்கம், திருப்பதி, பதரிகாசிரமம், சாலிக்கிராமம் முதலியக்ஷேத்திரங்களில் அர்ச்சாதி ரூபத்துடன், விளங்கிவருகிறவைகளும், இவைகள் சகலமும் ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியின் அம்சரூபங்களான விபக்த ரூபங்களாகும். ஸ்ரீமகாவிஷ்ணு லீலா விக்கிரக திவ்யமங்கள மானிடரூபத்துடன் கூடிய ஸ்ரீ ராமனுக அவதரிக்க, ஸ்ரீமகாலக்ஷ்மியும் ஜனகருடைய செல்வக் குமாரியாக அவதரித்தாள்.

விச்வாமித்திர மகரிஷி, இராம லட்சுமணர்களை யழைத்துக் கொண்டு, மிதிலாபட்டணத்திற்குச் சென்று, பரமசிவனுடைய வில்லை ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியின் கையால் வளைத்தொடிக்கும்படி சொல்லவே, அவர் அப்படியே அந்த வில்லை வளைத்தொடித்து, ஸ்ரீ சீதாப்பிராட்டியாரை விவாகம் செய்து கொண்டார்.

வில்லை யொடிக்குந் தருணத்தில், விச்வாமித்திரர் சொல்லுகிறார் :—

"தேவஸ்வரூபியான ஸ்ரீராமா! உன்னுடைய பெருமையை நான் அறிவேன். கௌதமருடைய பத்தினியான அகலிகை சாபத்தால் சிலாரூபியாகக் கிடக்க, உன்னுடைய பாத பரிசத்தால், அச்சிலை, முன்போல திவ்வியப் பெண் ஸ்வரூபமாக விளங்கும்படி செய்ய உன் கால் வண்ணத்தை நான் அங்கு கண்டேன்; சீதாப்பிராட்டியாரை விவாகம் செய்து கொண்ட இத்தருணத்தில், யாவராலும் வளைக்

கவும், ஒடிக்கவும் முடியாத இச் சிவதனுசை உன் திருக்கரத்தால் சற்றேனும் பிரயாசை யின்றி வளைத்து ஒடித்த உன்கைவண்ணத்தை இங்கு கண்டேன்'' என்று நிரம்ப அழகாய்க் கம்ப நாட்டாழ்வார் வர்ணித்திருக்கிறதைக் காண்க:—

"இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம்......... உன்கை வண்ணமிங்கு கண்டேன், காலவண்ண மங்குகண்டேன் "............

விவாகத்திற்காகக் கூட்டிக்கொண்டு போகை யில், மிதிலா பட்டணத்தைச் சமீபித்ததும், அப் பட்டணத்து மகாராஜாவான ஸ்ரீ ஜனகாது அரண்மனையின்மீது பறக்கும்படியாக நாட்டப் பட்டிருந்த கொடிகள் காற்றினால் அசைந்து கொண்டிருந்ததைக் கண்டு கம்பர் சொல்லு கிறார் :—

" ஸ்ரீமிதிலா பட்டணம் ஸ்ரீமகாலக்ஷ்மியைத் தன்னுள் வசிக்கும்படி செய்து கொண்ட தானது; அப்பட்டணம் என்ன புண்ணியம் செய்ததோ தெரியவில்லை. அப்பேர்க்கொத்த ஸ்ரீமகாலக்ஷ்மியை ஸ்ரீமகாவிஷ்ணுவின் அவ தார புருஷனான, ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியல்ல வோ அடையவேண்டும். அந்த மகாலக்ஷ்மி, இங்கு வசிக்கிறாள். ஸ்ரீராமா! நீ சீக்கிரம் வந்து அவளை விவாகஞ் செய்து கொள்'' என்று மிதிலாபட்டணத்து அரண்மனையின் மீது பறக்க விடப்பட்டிருந்த அக்கொடிகள் காற்றில் அசைந்தபொழுது, அவைகள் தங்க ளுடைய கரத்தால் ஸ்ரீராமனை வா! வா! என்று அழைப்பது போலிருந்ததாம் இந்த அர்த்தத் தையே கம்பர் தமது இராமாயணத்தில் அழ காய்ப் பாடியிருக்கும் பாட்டு அடியில்வரு மாறு :—

"மய்யறு மலரு நீங்கி யான்
செய் மாதவத்தில் வந்துச்
செய்ய வளிருந்தாளென்றுச்
செழுமணிக் கொடிகளென்னும்
கைகளை நீட்டி யந்தக்கடிநகர்
கமலச் செங்கண்
ஐயனை பொல்லைவா—
வென் றழைப்பது போன்ற தம்மா''

ஸ்ரீராமசந்திர மூர்த்தியினுடைய பாண விசே ஷத்தைத் தாடகை வதைப்படலத்தில் கவி வர் ணிக்கிறார் :—

"சொல்லொக்கும் கடிய வேகச்
சுடுசரம் கரிய செம்மல்
அல்லொக்கும் நிறத்தினாண் மேல்
விடுதலும் வைரக்குன்றக்
கல்லொக்கும் நெஞ்சிற்றங்
காதப்புறம் கழன்று கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்னப்
பொருளெனப் போயிற்றன்றே''

ஜீவகாருண்யம், தயை, பச்சாத்தாபம், நட்பு முதலிய நற்குணங்களை மாந்தர்கள் அனுஷ் டித்து வரவேண்டு மென்பதைக் காட்டுவதற் காக ஸ்ரீராமர் தாமே, ஜடாயு என்ற பட்சி ராஜனிடத்திலும், கங்கையைக் கடத்திய குக னிடத்திலும், ருசிபார்த்த கனியை பக்தியுடன் தனக்கு அர்ப்பணஞ் செய்த சபரியினிடத்தி லும் காட்டியிருப்பதானது குறிப்பிடத்தக்க தாகும்.

மாதா பிதாக்களுடைய வார்த்தையைப் பரிபாலனஞ் செய்யவேண்டு மென்பதையும் சகோதரர்கள் நட்புடனும் விசுவாசத்துடனும் வாழ்ந்திருக்க வேண்டு மென்பதையும், ஸ்ரீராம சந்திர மூர்த்தி தாமே காட்டியிருக்கிறார். நன் னடக்கை, பரோபகாரச் சிந்தை,............... ஆசாரசீர்திருத்தம், சரீரவலிமை, ராஜாங்க பரி பாலன முறைகள், சதுர்வித உபாயம், திரிகரண சுத்தி முதலிய குணங்கள் அனைத்தையும், வால் மீகியும், கம்பநாட்டாழ் வாரும் அவரவர்களால் எழுதப்பட்ட இராமாயணத்தில் விஸ்தாரமாகச் சொல்லியிருக்கிறார்கள்.

ஸ்ரீராமாயணம் காயித்திரி மகாமந்திரத்தை விட அதிக வலிமையுடையது. ராமா என்ற இரண்டட்சரம் தாரக மந்திரமாகும். "விஷ்ணு ஸகஸ்ர நாமத்தை விட இந்த ராமா என்ற அட்சரங்கள் சிறப்பாகும்" என்று ஒரு கால் கைலாசவாசியான ஸ்ரீ பரமசிவன் தம் இல்லாளாகிய பார்வதிக்கு உபதேசித்திருக்கிறார்.

ஸ்ரீராமருடைய மகிமையை கான சாஸ்திரத்தை யனுசரித்து ஸ்ரீதியாகய்யர் ஆந்திர பாஷையில் கீர்த்தனரூபமாகப் பாடியிருக்கிறார். துளஸிதாஸ் ஹிந்துஸ்தானி பாஷையிலும் கம்பர் தமிழிலும் ஸ்ரீவால்மீகி வடமொழியிலும் ஸ்ரீராமாயணத்தைப் பாடியிருக்கிறார்கள்.

ஸ்ரீவால்மீகியினுடைய ஆச்சிரமத்தில் ஜனித்து லவ, குசாள் என்ற பெயர்களுடன் விளங்கிவந்த ஸ்ரீராமமூர்த்தியினுடைய பால குமாரர்களுக்கு ஸ்ரீவால்மீகி தமது ராமாயணத்தைச் சொல்லிக் கொடுக்க அதை அச்சிறுவர்கள் ஸ்ரீராமருடைய தர்பாரிலேயே பாடியதாகச் சொல்லப்படுகிறது.

மற்றொரு காலத்தில் ஸ்ரீராமாயணம் நாடகமாக நடித்துக் காண்பிக்கப்பட்டபொழுது ஸ்ரீராமரே அந்நாடகத்திற்கு விஜயஞ் செய்திருந்தார் என்றும் சொல்லப்படுகிறது.

இக்கலியுகத்தில் முக்தியடைவதற்குச் சுலபமான வழி— "ஸ்ரீராமருடைய மகிமையை பஜனை வழியாகக் கொண்டாடுவதே யாகும்" என்று ஸ்ரீபரமாத்மாவே ஒருகாலத்தில் நாரதருக்கு உபதேசித்திருக்கிறதைக் காண்க :—

"ஹே ! நாரதா ! என்னைச் சிலர் வைகுண்டவாசி என்று சொல்லுகிறார்கள். நான் அங்கே இருக்கிறதில்லை. வேறு சிலர், யோகிகளின் ஹிருதயத்தில் இருக்கிறதாகவும் சூரிய மண்டலத்தில் வசிப்பதாகவும் என்னைச் சொல்லுகிறார்கள். நான் அங்கேயும் இருக்கிறதில்லை. ஆனால், என்னுடைய பக்தர்கள் எங்கே என்னை கானஞ் செய்கிறார்களோ, அவ்விடத்தில் நான் பிரத்தியட்சமாய் இருப்பேன்." இதற்கு ஆதார ஸம்ஸ்கிருத சுலோகம்:—

நாஹம் வஸாமி வைகுண்டே
ந யோகி ஹ்ருதயே ரவௌ
மத் பக்தா யத்ர காயந்தி
தத்ர திஷ்டாமி நாரத

ஸ்ரீராம பஜனை நடக்குமிடத்தில் ஸ்ரீ ஆஞ்சனேயர் பிரசன்னராகி பக்தர்களின் நேத்திரங்களுக்கு கோசரமாகாமல் அப்பஜனையைக் கேட்டுக் கண்களிலிருந்து ஆனந்த பாஷ்பங்களைப் பெருக விட்டு, மெய்மறந்து கூத்தாடுகிறார் என்று சொல்லப்படுகிறது. தவிர ஸ்ரீ ஆஞ்சனேயர் ஸ்ரீராமநாம பஜனையைச் செய்து கொண்டு இன்றைக்கும் கிம்புருஷ கண்டத்தில் இருந்து வருகிறதாகச் சொல்லப்படுகிறது.

ஸ்ரீராமருடைய ஜனனதினத்தைக் கொண்டாடும் பக்த கோடிகள் திரிகரண சுத்தியுடன், அதாவது மனோ வாக்குக் காய சுத்தியுடன், அரிஷட் வர்க்கங்களை யகற்றி—அப்ராகிருத மங்கள ரூபியான ஸ்ரீராமருடைய திவ்ய ரூபத்தை நமது ஹிருதய கமலத்தி லெழுந்தருளியிருக்கும் சச்சிதானந்த ரூபத்துடன் லயப்படுத்தி, மனதை இந்திரியங்களின் வழியாகச் செலுத்தாமல் ஸ்ரீஹரியின் பாதகமலத்தில் நிருத்தி — அவனுடைய திவ்ய மங்களரூபத்தை ஆபாத மஸ்தகபரியந்தம் தியானஞ் செய்து பிறகு விக்கிரக ரூபத்துடன் எழுந்தருளியிருக்கும் பிரதிபிம்ப மூர்த்தியை தூபதீப நைவேத்தியங்களுடன் பூஜித்து, ஸ்ரீராம பஜனை செய்து இஷ்ட மித்திர பந்துக்களுடன் ஸ்ரீஹரியின் நிவேதனத்தை அருந்தி இவ்விதம் காலட்சேபஞ் செய்ய வேண்டும்.

ஸ்ரீராமர் இப்புவியில் ஜனித்ததும் துஷ்ட நிக்கிரகம் சிஷ்ட பரிபாலஞ் செய்ததும் பரோபகாரார்த்தமாகவே என்று அறியவேண்டும்.

ஆசார்ய புருஷர்களும் அறுபத்து மூவர்களும் இன்னும் பலரும் ஜனித்தது பரோபகாரார்த்தமாகவே.

பரோபகாரம் என்றால் குடும்பத்துக்கோ, சமூகத்துக்கோ, அல்லது தேசத்திற்கோ, உடல், பொருள், ஆவி இம்மூன்றையும் தியாகம் செய்வதேயாகும்.

புண்ணியத் தொழில் என்பது பரோபகாரஞ் செய்வதேயாகும். பாபத்தொழில் என்பது தீங்கு செய்வதேயாகும். இந்த அர்த்தத்தையே ஸ்ரீ வியாசபகவான் தம் தாயாராகிய சத்தியவதிக்கு உபதேசித்த சுலோகம் அடியில் வருமாறு—

"பரோபகார: புண்யாய
பாபாய பரபீடனம்".

ஒரு சமயத்தில் ததீசி என்ற ஓர் மகரிஷி பரோபகாரார்த்தமாகத் தன் முதுகெலும்பையே தேவேந்திரனுக்குத் தியாகம்செய்திருக்கிறார்.

காலஞ் சென்ற கனம் கோகலே, ஸ்ரீமான் லோகமான்ய திலகர், தேசபந்து, லஜபதி முதலிய பலர் பரோபகாரத்துறையிலிறங்கித் தம் வாழ்நாள் முழுவதும் உழைத்து வந்திருக்கிறார்கள்.

தற்சமயம் மகாத்மா காந்தியும் அவரைத் தலைவராகக் கொண்ட பல மகான்களும் பரோபகாரார்த்தமாக என்றால், உலகத்துக்கு நன்மை செய்யும் பொருட்டே காலத்தைக் கழித்து வருகிறார்கள்.

ஆகையால் மேற் சொன்னவர்கள் அனைவரும் மகான்கள் ஆவார்கள்.

ஸ்ரீராம நவமி தினத்தைக் கொண்டாடும்பொழுது அன்னவர்களுடைய பரோபகாரத் தொழிலையும் ஸ்மரிக்க வேண்டியது அத்தியாவசியமாகையால் இங்கு குறிப்பிட்டேன். பரோபகாரார்த்தமாக அவதரித்த ஸ்ரீராம சந்திர மூர்த்தியின் ஜனன தினத்தைக் கொண்டாடும்பொழுது பரோபகாரத் தொழிலில் அவரைப் (a) பின் பற்றி வந்த (b) பின் பற்றிவரும் அடியார்களான மகான்களையும் ஸ்மரித்துக் கொண்டாடுவதினால் ஸ்ரீராம சந்திர மூர்த்தி அவ்வித பக்தர்களின் மீது தம்முடைய சம்பூர்ண கிருபையைக் காட்டி ஆசீர்வதிப்பார் என்பது திண்ணம்.

நான்கு வருஷங்களுக்கு முந்தி ஸ்ரீராம நவமி தினத்தன்று நான் அயோத்திக்குச் சென்று ஜனன பூமியை நேரில் தரிசித்தேன். சரயூ நதியில் நீராடினேன். ஸ்ரீராமரிடத்தில் அன்று வந்த ஜனங்களுக்கு இருந்த பக்தியைக் கண்டு மெச்சினேன். அன்று அயோத்திமா நகர் வைகுண்டத்தைப் போல் விளங்கியது. ஸ்ரீராம நவமி யன்று ஸ்ரீஅயோத்தியில் நடக்கும் வைபவத்தை ஸ்ரீவால்மீகியும் கம்ப நாட்டாழ்வாரும் நேரில் வந்து பார்த்திருப்பார்களேயானால், ஸ்ரீ வால்மீகி தம்மால் இயற்றப்பட்ட ஏழு காண்டங்களுடன் ஸ்ரீராம நவமி வைபவம் என்று ஓர் புதிய காண்டத்தை யெழுதிச் சேர்த்திருப்பார். கம்ப நாட்டாழ்வாரும் 12000 பாக்களுடன் இன்னும் ஏழாயிரம் பாக்களைப் பாடியிருப்பார். ஆகையால் ஜனன தினத்தைக் கொண்டாடுவதுடன் ஸ்ரீராம நவமி யன்று ஆஸ்திகர்கள் அனைவரும் ஸ்ரீ அயோத்திமாநகருக்கு யாத்திரை சென்று, அந்த வைபவத்தைப் பார்த்து நேத்திரானந்தத்தை யடைவது அத்தியாவசியமாகும்.

ஸ்ரீ ராமசந்திர மூர்த்தியின் பிறந்த தினமாகிய ஸ்ரீராமநவமி யன்று அவருடைய ஜனன பூமியாகிய ஸ்ரீ அயோத்திக்கு நோாகச்சென்று அவ்விடத்திலோடும் சரயூ நதியில் நீராடி, அந்த அயோத்தி மாநகரில் ஜனன பூமிஸ்தலத்தில் அமைக்கப்பட்டிருக்கும் ஓர் சிறந்த மேடையினருகில் உட்கார்ந்து, பத்துப் பதினைந்து நிமி

ஷம் வரையிலும் ஸ்ரீராமரை விடாமல் தியானஞ் செய்து வால்மீகி இராமாயணத்திலேயோ அல்லது கம்ப ராமாயணத்திலேயோ—பால காண்டத்து சுலோகங்களையாவது அல்லது பாட்டுகளையாவது அர்த்தத்துடன் பாராயணஞ் செய்து, பின்னர் அன்றைய தினம் அவ்விடத்திற்கு வந்திருக்கும் பத்தாயிரக் கணக்கான பக்தர்கள் பக்தியுடன் வாசிக்கும் துளசிதாஸ் ராமாயண சுலோகங்களைக் காதால் கேட்டு எழுத்து வாசனையில்லாதிருப்பினும் ஸ்ரீராமரிடத்தில் சம்பூர்ண பக்தியும் நம்பிக்கையுமுள்ள பல ஆண் பெண் பாமரர்கள் சரயூ நதியில் ஸ்னானம் செய்துவிட்டு, 'சீதாராம்! சீதாராம்! சீதாராம்! ஜே! சீதாராம்,' என்ற மந்திரத்தை ஜபித்துக் கொண்டு, ஜனன பூமிக்கு வந்து அவ்விடத்தில் ஜனன பூமிக்கு நமஸ்காரஞ் செய்துவிட்டு ஜனன பூமிக்கருகிலிருக்கும் ஸ்ரீ ஆஞ்சனேயரை தரிசித்துப் போகும் அழகைப் பார்க்கும் ஜனங்களின் புண்ணியமே புண்ணியம்.

# திலகவதி.

சகோதரி வி. பாலம்மாள்.

(காபிரைட்)

## முதல் அதிகாரம்.

### மரணத்தறுவாய்.

இராப்பகல்கொண்ட ஒரு தினத்தில் உலகின்கணுள்ள சகலப் பிராணிகளும் ஓய்வையும் உற்சாகத்தையும் அடையும் சமயம் மாலைப் பொழுதேயாகும். ஜீவனத்தின் நிமித்தம் நெற்றித் தண்ணீர் நிலத்தில் விழக் கூலிவேலை செய்யும் ஏழைத் தொழிலாளிகளும், மேன்மேலும் பொருளீட்டலிலுள்ள பேராசையால் ஓடியாடும் தனவந்தர்களும், பள்ளியில் படிக்கும் மாணவர்களும், இரைதேடச் செல்லும் பசு பட்சி மிருகங்களும் திருப்தியுடன் ஓழிவடையும் இம்மாலைப்பொழுதின் சுமார் ஐந்து மணி யடிக்கும் நேரத்தில், திருச்சி மாநகரின்கண் உள்ள தெப்பக்குளத் தெருவின் அழகைப் பார்க்கும் ஜனங்களுக்கு அளவற்ற ஆனந்தமுண்டாகத் தடையில்லை. ஒரு நாள், சிவந்த கிரணங்களையுடைய சூரியன் தெப்பக்குளத்தின் கீழ்த்திசையில் தனது ஒளியை வீசிக்கொண்டிருந்தான். படிப்படியாக அஸ்தமித்துக் கொண்டிருக்கும் கதிரவனைக் காணும்பொழுது, நாற்புறங்களிலுமுள்ள மாட கூடங்களும் மாதுருபூதேச்வரஸ்வாமி மலையினுச்சி சிகரம் முதலிய சிறந்த கண்டாபரணங்களாலும் நடுவிலிருக்கும் நீராழி மண்டபமாகிற திலகப் பொட்டினாலும் விளங்கும் தடாகமாகிற ஸ்திரீரத்தினத்தின் பொலிவைக் கண்டு மதிமயங்கிய சூரியன் அந்திதேவதையின் கோபத்திற்காளாகக் கூடாதென அஞ்சி, தட்டித் தடுமாறிக் கொண்டே மேற்றிசையையடைவது போலிருந்தது.

ஆயிரக்கணக்காய் பீஸ் பணம் பெற்று, நியாயஸ்தலங்களில் வாதித்து, கேஸ் ஜயித்தால் தமது உழைப்பென்றும் தோற்றுவிட்டால் கட்சிக்காரனின் சிரத்தைக் குறைவென்றும் பேசும் வன்மையுடைய ஹைகோர்ட் வக்கீல்களின் வண்டிகள் ஒன்றன்பின் ஒன்றாய்க் கோட்டை வாயில் வழியாய் வந்துகொண்டிருந்தன. பந்து விளையாடும்பொருட்டும் உலாவிவரும் நிமித்தமாகவும் கலாசாலை மாணவர்கள் கூட்டங்கூட்டமாய் உற்சாகத்துடன் அவ்வழியாய் வெளியிற் சென்று கொண்டிருந்தார்கள். பகலிற் கறந்த பாலில் பாதிக்கு மேற்படாமல் தண்ணீர் கலந்து, 'பசும்பால், சுத்தமான பால்' என்று இடைச்சிகள் கூவிக்கொண்டிருந்தார்கள். பகல் முழுதும்

வீட்டுவேலை செய்து அலுத்திருந்த தாய்மார்களும், வயதுசென்ற கிழவிகளும், இவர்களுக்கிடையில் தங்கணவரால் தமக்கேற்பட்டிருக்கும் சுதந்தரங் காரணமாகப் பல பெண்மணிகளும், கிரிப்பிரதக்ஷணம் என்ற சாக்கிட்டு ஊர் வம்புகளை வழிமுடிய அளந்துகொண்டே சென்றார்கள். மாதமொருகாதம் மாயமாய்ப் பறக்கக்கூடிய குதிரைகளை வண்டியில் பூட்டித் திரியும் ஜட்காவண்டிக்காரர்கள் ஏற்கனவே வண்டியிலேறியுள்ள எழெட்டுப்பேர் போதாதென்று, 'சீரங்கம்! ஒரு ஆள், திருவானைக்காவல்! ஒரு ஆள்' என்று அழைக்கும் சத்தமும், போலீசாருக்குப் பயந்து அங்கும் இங்குமாய் வண்டியைச் சுற்றியடித்துக்கொண்டிருக்கும் கலவரமும் வேடிக்கையாகவே இருந்தன.

துலாமாதமாகிய இச்சமயம் அகண்ட காவேரி ஸ்நானத்திற்காக வந்திருந்த பல தேசவாசிகள் திருவானைக்காவலிற்கும் உச்சிப் பிள்ளையார் மலைக்கும் ஸ்ரீரங்கத்திற்குமாகச் சென்றுகொண்டிருந்தார்கள். இவ்வளவு சம்பிரமத்துடனிருக்கும் அங்கோத்தில் அதே தெருவிலுள்ள லக்ஷ்மீவிலாஸமென்ற பங்களாவிலிருந்த ஜனங்கள்மட்டும் துக்கப்பட்டுக்கொண்டிருப்பதேன்?

தனதானியங்களாலும் இரண்டடுக்குமாடிக் கட்டிடங்களாலும் சேவக ஜனங்களாலும் சண்பகம், மல்லிகை, முல்லை, பாதிரி, ரோஜா முதலிய பூஞ்செடிகளாலும் விளங்கும் உயர்ந்த கட்டிடத்திலுமா அழுகை? ஐயோ! கஷ்டம் கஷ்டம்!! சகல ஜீவராசிகளையும் படைத்து ஆண்டுவரும் கடவுள் பிராணிகளுக்கு அவைகளின் ஊழ்வினைக்கேற்றபடி வாழ்வையும் ஆயுளையும் அளித்திடுவதால், வயது நூறாகிச் சகல இந்திரியங்களும் நஷ்டமடைந்து இன்னமெவ்வளவு நாட்கள் இவ்விதம் இருப்பதென்று சலித்துக்கொண்டு சிலரிருக்க, ஆ, ஆ வென்று கண்ணால் காண்பவர்கள் கதறியழும்படி அற்ப ஆயுளில் மாள்வோர் சிலரிருப்பதும் சகஜமே. அவ்வீட்டு வாயிலில் நின்றுகொண்டிருந்தவர்களின் சம்பாஷணையால் வீட்டிற்கு எசமாட்டியாகிய கனகவல்லி மரணத்தறுவாயில் இருப்பதாகக் கேட்ட ஜனங்கள் அனைவரும் திகைத்தார்கள்.

## இரண்டாவது அதிகாரம்.

### படேல் மசோதா.

அத்தினம் அதே கோத்தில் சென்னை தம்பு செட்டித் தெருவிலிருந்து இரண்டு நண்பர்கள் ஆண்டர்ஸன் ஹாலில் நடைபெறும் படேல் விவாகமசோதாவைப்பற்றிய பெண்மக்களின் சபைக்குச் சென்றுகொண்டிருந்தார்கள். ஒருவர் உயரமாயும் சிவந்த மேனியுடனும் கம்பீரமான தோற்றம் சுபாவம் இரண்டுங் கொண்டு சுமார் 35 வயதுள்ளவராகவும் காணப்பட்டார். அவரது நடையுடை பாவனைகளால் அவர் மேனாட்டுவாசிகளிடம் நெருங்கிய பழக்கமுள்ளவர் என்று நிச்சயிக்கலாம். மற்றொருவர் இதற்கு மாறான தோற்றங்களுள்ளவராயும் உழைப்பாளியாகவும் தோன்றினார். இவ்விருவரும் படிக்கட்டேறி ஹாலில் சென்று ஆடவர்களுக்கென்று அமைக்கப்பட்டிருந்தவிடத்தில் அமர்ந்து சபையின் நடவடிக்கைகளைக் கவனித்திருந்து, கூட்டம் முடிந்ததும், மாலை மணி ஏழுதான் அடித்ததாகையால், கடலோரம் சென்று சம்பாஷிக்கலானார்கள்.

கிருஷ்ணன்:—என்ன ராமா, இன்றையக் கூட்டம் எப்படி?

ராமன்:—எப்படியா? எப்படியென்ன? மிகவும் நன்றாகவே இருந்தது. ஹால் விஸ்தாரம்; சோபாக்கள் உயர்ந்தவை; மின்சார விசிறிகள்; விஜயம் செய்திருந்தவர்களோ பெண்மணிகள்! எல்லாம் நன்றாகவே இருந்தன.

கிருஷ்ணன் :—என்னடா, வயது குட்டிச்சுவர் போல் ஆகியும் இன்னும் பகுத்தறிவில்லாமலே இருக்கிறுயே! நீ படித்த படிப்பை நெருப்பிலிட்டுக் கொளுத்தத்தான் வேண்டும்!

ராமன் :—ஓகோ, நீயா? சரிதான்! பெண்களைப்பற்றி ஏதேனும் சொன்னுல் உனக்குக் கோபம் வந்து விடுமல்லவா! சரி, சரி! நான் மறந்துபோய்விட்டேன். ஆகா, பேஷாயிருந்தது! பெண்களில் பலர் எழுந்து நின்று பேசியது மிகவும் அழகாகவே இருந்தது.

கிரு. :—பேசியது அழகாயிருந்ததோ அல்லது பேச்சின் கருத்து நன்றுயிருந்ததோ?

ராமன் :—ஆமாம்! கருத்து! அடுப்பங்கரைப் பெண்டுகளின் பேச்சில் கருத்துத்தான் ஒன்று குறைவு!

கிரு. :—உன்போன்ற மதியீனனுக்கு இவ்வளவுதான் தெரியும்.

ராமன் :—ஏன்? இன்னும் அநேகம் எனக்குத் தெரியும். எல்லோரும் உயர்ந்த சேலைகளையும் நகைகளையும் அணிந்திருந்தார்கள்!

கிரு. :—ராமு! உன் விளையாட்டுத்தனமும் விதண்டா வாதமும் என்று தான் தொலையுமோ! மரகதம் என்ற நமது சகோதரி ஒருத்தி படேல் மசோதாவை ஆதரிக்க வேண்டிய காரணங்களை எடுத்துரைத்தாளே, அவை முக்கியமாய்க் கவனிக்கவேண்டியவைகளல்லவா?

ராமு :—என்ன? மரகதமா? யாரவள்? நெட்டையாய் வடக்குக்கோடியில் உட்கார்ந்திருந்தவளா? சரிதான்! அவள் பேச எழுந்து மேடையில் நின்றதும் யாரோ என்னை அழைப்பது கேட்டு வெளியேவந்து விட்டேன். திரும்ப நான் உள்ளே வந்ததும் அப்பெண்ணின் பேச்சு முடிந்ததும் சரியாயிருந்தன. போகட்டும், என்ன பேசினுள்?

கிருஷ்ணன் :—படேல் மசோதா விஷயம் விளையாட்டாய் நினைக்கக் கூடியதன்றென்றும், இம்மசோதாவைக் கொண்டு வந்திருப்பவர் ஜனசமூக ஊழியத்திலும் தேசாபிமானத்திலும் சிறந்து விளங்குபவரென்றும், இம்மசோதாவை ஆதரிப்பவர்களைக்காட்டிலும் கண்டித்து வருபவர்கள் சட்ட விவகாரத்திலும் மதாசாரப் படிப்பிலும் சிறந்த ஆராய்ச்சியுள்ளவர்களென்றும், இவ்விஷயம் பெரும்பாலும் பெண்மக்களின் ஆராய்ச்சிக்கும் அபிப்பிராயத்திற்கும் உட்பட்டதாகுமென்றும், இந்துப்பெண்மணிகளின் கஷ்டங்களை நிவர்த்திக்க முன்வரும்பொழுது ஏற்கனவே நடைபெற்றுப்போன அசம்பாவிதங்களை எடுத்துக்காட்டுதல் முடியாத காரியமென்றும், ஆண் பெண் என்ற இரு வகுப்பினர்களுக்கும் நீதி விசாரணை விஷயத்தில் ஏற்பட்டுள்ள தர்மசாஸ்திரத்தின் கொள்கைகள் தற்காலமுள்ள நடவடிக்கைகளால் பெண்மக்களை மட்டுமே கட்டுப்படுத்துவனவாக பாவிக்கப்பட்டு வருவதாயும், விவாகமென்ற கட்டுப்பாடு இல்லாதவரை இவ்வெண்ணங் கொண்டுள்ள ஆடவர்களால் பல பெண்கள் வஞ்சிக்கப்படத் தடையில்லையென்றும், ஏற்கனவே இச்சம்பவம் பல இடங்களில் நடந்துள்ளதென்றும், தனது வாய்மொழியாலோ பிடிவாதத்தினுலோ ஏமாற்றப்பட்ட பெண்மகள் ஒருத்தியிடம் தனக்கு உதித்த குழந்தைகளைக் காப்பாற்றும் விஷயத்தில் சட்ட சம்பந்தமான கட்டுப்பாடுகள் நமக்கில்லை என்று சில ஆடவர்கள் தைரியங்கொள்ள நேருவது பெரிதும் அநியாயமென்றும், இவ்வாபத்திற்குட்பட்ட பெண் எவ்வகுப்பினளாயினும் இது பெண் உலகத்திற்கே போவமானத்தை விளைவிப்பதாகுமென்றும், இத்தகைய அநீதிச்செயல் பரவுவதைக் கண்டிருந்தும் அவை இனி ஏற்படாமலிருக்கக் கூடிய

வேறு வழிகளைத் தேடாமல் ஆபத்திற்குட் பட்டுள்ள பெண்களுக்கு ஒரே சாதனமாக இருக்கும் இம்மசோதாவைக் கண்டித்து வருவது சனாதன தர்மக்காரர்களுக்கு அழகல்லவென்றும், என்றும் மங்காது ஒளி வீச வேண்டிய சனாதன தர்மவிசாரம் இருந்த விடமும் தெரியாமல் ஒளிக்கும்வரை சும்மா இருந்து விட்டு இதனால் ஏற்பட்ட அனர்த்தம் பெருகிவரும் சமயத்தில் தமது வாதங்களைக்கொண்டு விவகரிப்பது தர்மமல்லவென்றும், அரசாங்கத்தாரால் ஏற்படுத்தப்படும் சட்டதிட்டங்களில் பல, விபரீதத்தைத் தடுப்பதற்காகவே இருக்கின்றனவென்றும், இம்மசோதா சட்டமாக்கப்படின் எல்லோரும் மனம்போனபடி விவாக முறையை யனுஷ்டிக்க முன்வரும்படி தூண்டப்படுவார்களென்பது மனுஸ்மிருதியிலுள்ள பிராயச்சித்த காண்டம் அச்செய்கைகளைச் செய்யச்சொல்லுகிறது என்று சொல்வதற்குச் சமானமாகுமென்றும், விவாகம் கட்டுப்படுத்தும் என்ற சட்டமுண்டாய்விடும் பக்ஷத்தில் அநேக விபரீதங்கள் நேராமல் நின்றுவிடுவதுடன் ஆண் பெண் இருவருக்கும் தமது நிலைமை எதிர்கால வாழ்க்கை இவ்விரண்டிலும் ஆழ்ந்த ஆராய்ச்சி யுண்டாகக் கூடுமென்றும், ஜனசமூக முன்னேற்றத்தை விரும்பும் தேசாபிமானிகளும் ஜனசார முறையைச் சீர்திருத்த முன்வந்திருக்கும் சனாதன தர்மக்காரர்களும் இச்சட்ட விஷயத்தில் கவலை செலுத்தி இதையே ஆதாரமாகக்கொண்டு தமது நோக்கங்களை நிலைப்படுத்த முற்படுதல் அவசியமென்றும், மதியீனத்தாலோ ஆராய்ச்சிக் குறைவினாலோ ஒரு பெண்பிள்ளைக்கு ஏற்படக்கூடிய பேராபத்தை விலக்குவதாயிருப்பதுபற்றித் தற்கால நிலையை ஆலோசித்து இம்மசோதா சட்டமாக்கப்படவேண்டு மென்று தான் ஆதரிப்பதாயும் பேசினாள்.

ராமு:—இச்சட்டம் அநீதிகளைத் தடுப்பதெப்படி?

கிரு:—தடுப்பதா? கேள். நீ ஒரு பெண்ணை மணக்க விரும்புவாயானால் அநேகமாய் உன்னிலும் உயர்ந்த நிலைமையிலுள்ளவளாகத் தேடுகிறாயன்றி வேறில்லை. உனக்குள்ள பொருளாசையாலோ வேறு கெட்ட எண்ணத்தினாலோ வேறு வகுப்பினளை நீ மணந்து அவள் பெயரையும் வாழ்நாட்களையும் வீணாக்கிவிட்டு அவள் உன்னைத் தொடருங்கால் இவ்விவாகம் சட்ட சம்மதமற்றதென்றும் அவளாலான நடவடிக்கைகளைக் கோர்ட்டில் நடத்திக்கொள்ளலாமென்றும் சொல்ல இச்சட்டம் இடந்தாராதல்லவா? தவிர, உன்னை விவாகிக்கச் சம்மதிக்கும் பெண் தனக்குச் சட்ட பாத்தியதை இல்லாவிடில் முன்னதாகவே உன்னிடமுள்ள சகல சொத்துக்களையும் தன்பேரில் எழுதிவைக்கச் சொல்லிப் பிறகு உன் கட்டுப்பாட்டிற் கடங்காமல் இருந்துவிடக்கூடிய நிலைமையையும் இச்சட்டம் தடுக்குமல்லவா?

ராமு:—மெய்தான். விவாகம் என்ற கட்டுப்பாட்டில் அடங்கவேண்டுமாயின் முன்யோசனைகள் உண்டாவதுடன் வேஷதாரிகளாயுள்ள சில ஆசார சீர்திருத்தக்காரர்களின் வெளிவேஷமும் இதனால் நிரூபிக்கப்படும் என்பதில் தடை இல்லை.

இவர்கள் இவ்விதம் பேசிக்கொண்டிருக்கும் சமயம் கரையின் ஓரமாயுள்ள பெரிய விளக்குகள் அணைக்கப்படுவது கண்டு இரவு ஒன்பது மணியாய் விட்டதென இருவரும் தமது ஜாகைக்குத் திரும்பினார்கள்.

## மூன்றாவது அதிகாரம்.

## பழைய நண்பர்கள்.

முன் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள இருவரில் கிருஷ்ணன் திருச்சியில் பிறந்துவளர்ந்த

வர். இவர் தந்தை திருச்சியிலேயே வசித்து வந்த ஒரு பெரிய பிரபு. ஸ்ரீமான் சக்கரபாணி என்றால் அறியாதாரில்லை. இவருக்கு ஆங்கிலப் படிப்பு கொஞ்சமுமில்லா விட்டாலும் தமது பணத்தின் உதவியால் பல நன்மைகளை யடைந்தார். அநேகமாய் அதிகாரவர்க்கத்தினரின் ஆதரவிலும் ஆங்கிலப்பட்டதாரிகளின் மத்தியிலும் பெரிய பட்டப் பெயர்களைப் பெறுவதிலும் தமது வாழ்நாள் முடியச் செலவிட்டார். சில ஜனப்பிரதிநிதி ஸ்தானத்தைத் தமது முயற்சியால் அடைந்ததுடன் திருப்தியுறாது சட்ட சபையில் அங்கத்தினராகவேண்டுமென்ற அவாவும் இவரைத் தூண்டியது. அது விஷயமாய்ச் செய்த பிரயத்தினத்தில் தமது ஆஸ்தி முழுதும் அழிந்ததுடன் முடிவில்வோட்டர்களும்இவரை ஏமாற்றிவிட்டார்கள். ஜனப்பிரதிநிதி ஸ்தானம் வகித்துக் கவர்னர் பெருமானுக்கெதிரில் சரியாசனத்தில் உட்கார்ந்துவிட்டால் பிறகு நடக்க வேண்டியதைத் தக்க ஆட்களுக்குப் பணமளித்து எழுத்து மூலமாய்க் கற்றுக்கொண்டு விடலாமென்றதைரியம்இவருக்குண்டு. இவருடைய ஆப்த நண்பர் சிலர் சொல்லிக்கொடுத்திருந்த யோசனைகளில் முக்கியமானது என்னவென்றால் ஆரம்பத்தில் அநேகமாய்ச் சட்டசபைக்கு வரமுடியாமல் திடீரென்று தேகம் அசௌக்கியப்பட்டிருப்பதாய் சாக்குச் சொல்லல்; அவசியம் வந்து தீரவேண்டிய சந்தர்ப்பத்தில் தமது அபிப்பிராய மின்னதென்று வெளிக்காட்டாது கைகால்களையும் அசைக்காமலிருந்துவிடுதல்; இவ்விரண்டு உபாயங்களினாலும் அநேகமாய்ச் சட்டசபை ஸ்தானத்தை நிர்வகித்து விடலாமெனச் சக்கரபாணி நிச்சயித்திருந்தார். முடிவில் இவர் தோற்றுவிட்டாலும் இச்சந்தர்ப்பத்தில் சில பத்திரிகைகளும் பல நிருபர்களும் தக்க பயனையடைந்தார்களென்ற வதந்தி மட்டும் ஏற்பட்டது. கைக்காசும் போய் முகத்திலுள்ள பவிஷும் போயிற்றென்பதற்கேற்ப, அவர் இதே ஏக்கத்தில் உயிர்துறந்தார். சக்கரபாணியின் மனைவி அம்மணியம்மாள் தனது ஊக்கத்தினாலும் கஷ்டத்தினாலும் தன் மூத்த குமாரி நாகரத்தினத்தையும் குமாரன் கிருஷ்ணசாமியையும் வளர்த்து வந்தாள். நாகரத்தினத்திற்கும் கிருஷ்ணசாமிக்கும் மூன்று வயதுதான் வித்தியாசம்.

அம்மணி யம்மாள் தன் பெண் நாகரத்தினத்திற்குத் தக்க வயதில் கலியாணம் முடித்து வைத்துப் பிள்ளை கிருஷ்ணசாமிக்கும் தக்க படிப்பைக் கற்பித்து வந்தாள். இருபத்திரண்டாம் வயதில் நாகரத்தினம் கர்ப்பவதியாகி ஓர் ஆண்மகவை ஈன்று பிரசவ அறையிலேயே காலஞ்சென்றுவிட்டாள். தாயின் கஷ்டத்தையும் தமக்கையின் பிரிவாற்றாமையையும் தன் மனதிலேயே அடக்கிப் படிப்பின்மீதே கண்ணாயிருந்த கிருஷ்ணசாமி பி.ஏ. பரீக்ஷையில் மாகாணத்தில் முதலாகத் தேறினர். கலாசாலை பிரின்சிபால் அவர்களின் முயற்சியால் அவர் தக்க உபகாரசம்பளத்துடன் இங்கிலாந்து சென்று பாரிஸ்டர் பரீக்ஷைக்குப் படித்தார். அம்மணி யம்மாளின் சகோதரர் தமது ஏகபுத்திரியாகிய கனவல்லியைக் கிருஷ்ணசாமிக்குக் கலியாணம் செய்து கொடுத்தார். கிருஷ்ணசாமிக்கு இங்கிலாந்திலேயே சிலநாட்கள் பிராக்டிஸ் செய்யவேண்டு மென்கிற அவா மிகுதியாயிருந்தமையாலும், மனைவி கனகவல்லிக்கு வயது பதினன்குதான் ஆயிருந்தபடியாலும், அவளைத்தன் தாயுடன்கூடத் திருச்சியிலேயே வசிக்கச்செய்து தான் மீண்டும் இங்கிலாந்துக்குச் சென்றுவிட்டார். கிருஷ்ணசாமிக்குப் பொருள்தேடுவதிலும், கனகவல்லிக்குத் தன் மாமியின் மனங் கோணாமல் அடங்கி நடந்து குடும்ப நிர்வாக நிலைமையில் பயிற்சி பெறுவதிலும் இடையில் மூன்று வருஷம் சென்றுவிட்டது. திடீரென்று தாயாருக்கு ஏற்பட்ட

தேக அசௌக்கியத்தை முன்னிட்டு, கிருஷ்ண சாமி திருச்சி வந்ததில் சில குடும்பக்காரியங்களை யும் முன்னிட்டு அவ்விடத்திலேயே தங்கும்படி நேரிட்டது. திரும்பிச்செல்லும் சமயம் அவர் மனைவியைக்கூட அழைத்துச் செல்ல எண்ணங் கொண்டும் கனகவல்லி கர்ப்பிணியாயிருந்தது பற்றித் தான் மட்டும் செல்ல வேண்டியதா யிற்று. கிருஷ்ணசாமி இங்கிலாந்துபோய்ச் சேர்ந்த மறு மாதத்திலேயே கனகவல்லி ஒரு பெண்குழந்தை பெற்றதாகத் தனது மாமனர் பாலசுந்திரம் எழுதிய கடிதம் கண்டு அவர் அடைந்த சந்தோஷம் கொஞ்சமல்ல. அக் குழந்தைக்குத் திலகவதி என்று நாமகரணம் செய்யப்பட்டது. குழந்தைக்கு ஒரு வயதாகு மளவும் கனகவல்லி பிறந்தவீட்டிலிருந்து விட் டுப் பிறகு தன் மாமியுடன் திருச்சியில் இருந்து வந்தாள்.

அம்மணியம்மாள் தன் மகள் விட்டுப்போன ஆண் குழந்தையைத் தானே வளர்த்து வர வேண்டியதாயிற்று. தாயில்லாப்பிள்ளை கோபாலனுக்குக் கலியாணம் செய்யத் தன் பிள்ளை வயிற்றிலேயே பெண் பிறந்து விட்ட தென்று அம்மணியம்மாள் அடைந்த திருப்தி அதிகமே. இக்குடும்பத்திற்கு இங்கிலாந்தி லிருக்கும் கிருஷ்ணசாமி மாதா மாதம் ஆயிரக் கணக்காகப் பணம் அனுப்புவார். சகல நிர் வாகங்களும் அம்மணி யம்மாளின் ஆதீனத்தி லேயே நடைபெறும். குழந்தையின் விளையாட் டைப்பற்றியும் மற்றவர்களின் க்ஷேம சமா சாரங்களைப்பற்றியும் கனகவல்லி கடிதத்தில் விரிவாயெழுதுவாளல்லாது தான் கலியாண மானது முதல் தன் கணவனைப் பிரிந்து வசித்து வருவதைப் பற்றி ஒன்றும் எழுதுவது கிடை யாது. கைச்செலவிற்காகத் தன் மனைவிக்குத் தனியாகப் பணமனுப்ப வேண்டுமென்ற விருப் பம் கிருஷ்ணசாமிக்கிருந்தும், கனகவல்லி அதற்கிடங்கொடுப்பதில்லை. தன்னை மாமியார் சௌகரியமாயும் அன்பாயும் நடத்திவருவதா யும் ஒரு குறைவும் தனக்கில்லை என்றும் அவள் எழுதி வருவாள். ஆனல் உண்மையில் அம்மணி யம்மாள் தன் தாயில்லாப்போன் கோபாலனை யுத்தேசித்து வீட்டுச் செலவை 200 ரூபாய்க் குள் அடக்கிவிட்டு மாதம் 2,000 ரூபாய்க்குக் கணக்கெழுதிவைத்து விடுவாள். இக்கணக்கு களைக் கனகவல்லி தான் எழுதுவது வழக்கம். லக்ஷ்மீ விலாசம் என்ற பங்களா விற்பனைக் கிருப்பதாயறிந்து அதைக் கிருஷ்ணசாமி நாற் பதினாயிரம் ரூபாய் கொடுத்து வாங்கினர். அவ் வழகிய பங்களாவில் அம்மணியம்மாள், கோபா லன், திலகவதி, கனகவல்லி ஆகிய நால்வரும் வசித்துவந்தார்கள். ஊருக்குள் இருக்கும் கனகவல்லியின் தந்தை அடிக்கடி வந்து விசா ரித்துக்கொள்வார். இங்ஙனம் ஐந்து வருஷம் கழிந்தது. ஊரிலுள்ள வம்புக்காரர்கள் மட்டும் கிருஷ்ணசாமி இனி இங்கு வரப்போவதில்லை என்றும் அங்கேயே ஒரு வெள்ளைக்காரியைக் கலியாணம் செய்துகொண்டுவிட்டாரென்றும், கிறிஸ்து மதம் சேர்ந்து இருக்கிறார் என்றும் தமது சபையில் தீர்மானித்து அச்சுக் கூலியும் காகிதச்செலவுமின்றி வாய்மொழியாலேயே இவ்விஷயங்களைப் பரவச்செய்தார்கள். இச் சொற்களைக் கேட்டு திடமாயிருந்தபோதிலும் கனகவல்லிக்குத் தன் கணவன் ஒருமுறை வந்து குழந்தையைப் பார்த்துக் செல்லவேண் டும் என்ற எண்ணம் அதிகரித்தது. இது விஷ யத்தைக் கடிதத்தினலறிந்து கிருஷ்ணசாமி அளவற்ற ஆனந்தமடைந்தார். அவர் பணத் தாசை உயிருள்ளவரை போகாதென மதித்து இனி இங்கிலாந்து வருவதில்லை என்றும், பம்பா யில் பிராக்டிஸ் செய்வதென்றும் தீர்மானித்துக் கப்பலேறி, பம்பாய் வந்திறங்கியதும் திருச்சிக் குத் தான் நான்கு தினத்தில் வருவதாய்த் தந்தி கொடுத்துவிட்டுச் சென்னை வந்தார். அங்கு

தன் பாலிய சிநேகிதன் ராமன் இருக்குமிடம் தங்கியதில் இரண்டு நாள் சாவகாசப்பட்டது. வியாழக்கிழமை மாலை போட் மெயிலில் புறப்பட நினைத்தும் அன்று ஆண்டர்சன் ஹாலில் சென்னை நகரத்தியப் பெண்மக்கள் கூட்டமொன்று நடைபெறப் போவதறிந்து தன் பிரயாணத்தை நிறுத்திவிட்டார். ராமன் நுண்ணறிவும் படிப்பும் வாய்ந்தவர். பூர்வீக அனுஷ்டானத்தில் நம்பிக்கையும் அதை ஆதாரமாகக்கொண்ட சீர்திருத்தங்களில் முயற்சியும் கொண்டவர். வாய்ப்பேச்சினால்மட்டும் பறையடிக்கும் வேஷதாரிகளைக் கண்டால் அவருக்கு வெறுப்பதிகம். மேலுக்குப் படிப்பும் தோரணையுமுள்ளவர்களாகக் காட்டிக்கொண்டு தலை மறைவில் வம்புபேசும் சிலருடைய சுபாவம் அவருக்குப் பிடிக்காது. அத்தகையோரை யவமதிப்பதற்காகவே தாம் வீண்வம்பு பேசுவாரன்றி உண்மையில் விவேகி. தன் வாழ்நாளை நித்திய பிரம்மசாரியாகக் கழிக்கத் தீர்மானித்தவர். அவர் உள்ளூரிலேயே தம் தமையன் உயர்பதவியுள்ள உத்தியோகம் வகித்து லட்சம் லட்சமாகத் தேடி மனைவிமக்களுடன் வாழ்ந்து கொண்டிருப்பினும் தனியே தம்புசெட்டித் தெருவிலுள்ள சங்கரபவனம் ஹோட்டலின் மெத்தையில் ஓரறை குடிகூலிக்குப் பெற்று அதில் வசித்துவருகிறார். ஐந்து வருஷம் கழித்துத் தமது நண்பன் கிருஷ்ணசாமியைக் கண்டதுடன் அவர்மீண்டும் இங்கிலாந்து செல்லாமல் மனைவி மக்களுடன் பம்பாயில் வசிக்கப் போவதறிந்து அளவில்லா ஆனந்தங் கொண்டார். பாலிய சினேகிதர்களின் அபிமானத்தை யளவிட யாரால் முடியும்?

நான்காவது அதிகாரம்.

தாமதித்து வந்த தந்தி.

ஜீவனத்திற்குரிய சிறு உத்தியோகங்களில் மிகவும் கட்டுப்பாடான நிர்வாகமுள்ளது தபால் ஆபீசாகும். வெய்யிலிலும் காற்றிலும் மழையிலும் ஓடித் திரியும் தபாற்சேவகர்களிடம் கடவுளுக்கே கருணையின்றிக் கடும் பஞ்சமேற்படுத்தியிருப்பாரானால் மற்றவர்களுக்கென்ன கவலை? யேளாவேலைக்குத் தபால் கிடைக்கத் தவறுமானால் ஜனங்களுக்குண்டாகும் கோபம் கொஞ்சமல்ல. பெரிய மனிதர்வீட்டு குமாஸ்தாக்கள் தபாற் சேவகர்களைக் குறைகூறி எழுதும் கடிதங்களைக் கண்டு போஸ்ட்மாஸ்டர்கள் சில சமயமடையும் மனத் தாங்கல் பரிதாபமாயிருக்கும். இவ்வளவில் தந்திகளைப் பட்டுவாடாச்செய்யும் தந்திச்சேவகர் பாடு திண்டாட்டமே. தந்தியிலுள்ள சமாசாரங்கள் எவ்வளவானாலும் லட்சியமில்லை. மேல்விலாசம் எழுதும்போதுதான் பணச்செட்டு! அரைகுறை விலாசமுள்ள அவசரத் தந்திகளைச் சேர்ப்பிக்கும் தந்திச் சேவகர்களில் நமது ஆறுமுகம் ஒருவன். பகல்முடிய மூலைக்கு மூலை ஓடுவதே அவனுடைய வேலையாயிருந்தது. இராப்போசனத்திற்கு வீடு சென்றும் சாப்பாடு கிடைக்கவில்லை. அவனுக்குக் கிடைக்கும் அற்பச் சம்பளம் அரை வயிற்றிற்குத்தான் காணும். ஆகவே அவன் பட்டினியுடன் ஆபீசுக்குத் திரும்பிவந்தான். அவசரத் தந்தி ஒன்று தயாராயிருந்தது. தந்தியைக் கையிலெடுத்து விலாசம் பார்க்குங்கால் 'கிருஷ்ணசாமி, தம்பு செட்டி, சென்னை' என்றிருந்தது. அவன் தந்திக் கிளார்க்கைப் பார்த்து "என்ன ஐயா! கிருஷ்ணசாமி, தம்புசெட்டி, என்றால் விளங்கவில்லையே" என்றான். "நீ ஒரு முட்டாள். பதினைந்து வருஷமாய் இவ்வேலையிலிருந்தும் பழகவில்லை. கவனித்துப்பார். எனக்குத் தூக்கம் வந்துவிட்டது. தாமதியாதே. சீக்கிரம் ஓடு" என்று மிரட்டிவிட்டு அதிகாரி தூங்கச் சென்றார். ஆறுமுகம் உற்று உற்றுப்பார்த்ததில் தம்புசெட்டிக்குப் பிறகு விளங்காத சில எழுத்துக்கள் இருப்பதறிந்து தம்புசெட்டித்

தெருவாயிருக்கவேண்டுமென மதித்துப் புறப்பட்டான். பாதி வழியிலேயே ஸைகிளின் ரப்பரும் பழுதாய்விட்டது. அதைக் கையாலுருட்டிக்கொண்டே வந்தான். தம்புசெட்டித் தெருவில் எந்த வீட்டில் கொடுப்பது என்று விளங்கவில்லை. சில வீடுகளில் விசாரித்ததில் ஆள் அகப்படாததுடன், அநாவசியமாய்த் தொந்தரவளிப்பதாய் வீட்டிற்குடையவர்கள் கோபிக்கத் தொடங்கினார்கள். பாழுந் தந்தி என் பிராணனுக்கல்லவா ஏற்பட்டிருக்கிறதென்று கலங்கினான் ஆறுமுகம். கார்பொரேஷன் கடியாரத்தில் மணி பத்து அடித்தது. தந்திக்காரன் விலாசம் கிடைக்கவில்லை என்று திரும்பும் பொழுது இருவர் எதிரில் வந்தார்கள். அவ்விருவரில் ஒருவர் இவனைத் தந்திக்காரனென அறிந்து 'யாருக்கு என்ன அவசரத் தந்தியோ' என்று சொன்னார். இதுகேட்டு ஆறுமுகம் "ஐயோ சாமி! அதுதான் பரிதாபமாயிருக்கிறது. அவசரத் தந்தியில் என்ன விஷயமோ தெரியவில்லை. விலாசதாரரைத் தேடித்தேடிக் கால்கள் ஓய்ந்துவிட்டன, திரும்பிப்போகிறேன்" என்றான்.

ராமன் :—விலாசம் என்ன?

ஆறுமுகம் :—கிருஷ்ணசாமி, தம்புசெட்டி, சென்னை.

தந்தி என்றால் யாருக்கும் அச்சமேயுண்டாகும். மணியோ பத்தாய்விட்டது. அவசரத் தந்தி தன்பேருக்கென்றறிந்த கிருஷ்ணசாமி "நான்தான் விலாசதாரன், கொடு" என்றார். தெருவிலுள்ள மின்சார விளக்கில் பார்த்த பொழுது தந்தியில் "கனகவல்லி பிழைப்பதரிது, உடனே புறப்படு" என்றிருந்தது.

வாசகர்களே! இச்சமாசாரம் படித்ததும் கிருஷ்ணசாமி யடைந்த விசனத்தையும் நிலையும் யோசித்துப் பாருங்கள். கணவனே கடவுளெனப் பணிந்துவந்த மனைவியை நெடுநாட் கழித்துக் காணவரும் கிருஷ்ணசாமியின் நிலைமையை விரித்துரைக்க எவராலு மியலாது. இக்கோலத்தைக் கண்ட ஆறுமுகம் "ஐயோ தெய்வமே! விசனத்தந்தியாகவா இருந்தது?" என்று கூறிச் சென்றான். சந்தோஷச் செய்தியாயிருந்திருக்கும் பட்சத்தில் அவனுக்குக் காதடைக்கும் பசியைத் தீர்த்துக் கொள்ள இரண்டணாவேனும் கிடைத்திருக்கும். சிலர் இச்செலவிற்குப் பயந்து சந்தோஷச் செய்தியை "அடடா, துக்க சமாசாரமா!" என்று கூறி ஓட்டமாய் ஓடி வந்தவனையும் அழச் செய்து அனுப்புவதுண்டு.

ஆறு மணிக்குக் கொடுக்கப்பட்ட தந்தி இரவு பத்து மணிக்குமேல் கிடைத்திருப்பதால் போட்மெயில் சென்றுவிட்டது. பதினொரு மணிக்குச் செல்லும் பாசஞ்சரிலாவது செல்ல நினைத்து ராமன் கிருஷ்ணசாமி இருவரும் ஜாகை சென்று செலவிற்குப் பணம் மட்டும் எடுத்துக் கொண்டு எழும்பூர் ரயிலடி வந்தார்கள். ரயில் புறப்படுவதற்குப் பத்து நிமிஷந்தான் இருந்தது. இரண்டாவது வகுப்புப் பிரயாணச் சீட்டு இரண்டு பெறுவதற்குள் போதுமென்றாய்விட்டது. டிக்கெட்டுகளெல்லாம் மாலையிலேயே கொடுபட்டாய்விட்டன. புக்கிங் கிளார்க்கு சற்று தாட்சணியமுள்ளவரானதுபற்றி இவர்கள் கையிலுள்ள அவசரத் தந்தியின் பரிதாபம் கண்டு வந்தது வரட்டுமென டிக்கெட்டு கொடுத்துவிட்டார். செங்கல்பட்டு செல்லவிருந்த இருவர் இதுகண்டு தமக்குமட்டும் என் டிக்கெட் கொடுக்கக்கூடாதென்று வாதாடியதுடன், கிளார்க்கு ஏதோ பரிதானம் பெற்று மேற்கண்ட இரு டிக்கெட்டுகளையும் கொடுத்திருப்பதாய் முணுமுணுத்தார்கள். ஸ்டேஷன் மாஸ்டரிடம் தெரிவித்து விடுவதாய் ஒருவர் கர்ச்சித்தார். "பிரயோஜன மென்ன ஐயா! இந்த லஞ்சத்தில் எல்லோருக்குமே பங்கு இருக்கும்" என்று சொன்னார் மற்றவர்.

## ஐந்தாவது அதிகாரம்.

## கடைசி வாய்மொழி.

கனகவல்லிக்குத் திடீரெனக் காலராநோய் கண்டதும் அவள் மாமியாரும் தந்தையும் தாயு மடைந்த விசாரம் கரைகடந்ததாயிருந்தது. காலையிற்கண்ட நோய் மாலைப்பொழுதில் அதிகரித்து விட்டது. கனகவல்லி தன் குழந்தையைச் சமீபத்தில் கொண்டுவரக் கூடாதென்று கூறியதால் அவள் தாய் திலகவதியைக் கீழிறங்க விடாது மெத்தையிலேயே வைத்துக்கொண்டிருந்தாள். ஐந்து வயதுள்ள அச்சிறுமி தலை பின்னுவதற்காக அம்மா காத்திருப்பாள் என்றும், பாடம் படிக்கும் நேரத்தில் விளையாடினால் கோபிப்பாள் என்றும் சொல்லித் தன்னைக் கீழே விடுமாறு பாட்டியாரிடம் மன்றாடிக்கொண்டிருந்தாள். மாலை ஐந்து மணிக்கு வைத்தியர்கள் கைவிட்டதும் கிருஷ்ணசாமிக்குத் தந்தி கொடுத்தார்கள். பாதியிரவில் கனகவல்லிக்குப் பெரு மூச்சுண்டாயிற்று. திணறிக்கொண்டே "மணி என்ன?" என்றாள்.

அம்மணியம்மாள்:—அம்மா! மணி 12 ஆகிறது.

கனக:—என் தாய் எங்கே?

அம்மணி:—மாடியில் திலகவதியைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள்.

கனக:—அத்தான் போட்மெயிலில் வந்து விடுவாரல்லவா?

அம்மணி:—ஆகா! தந்தி கொடுத்தநேரம் போட்மெயிலுக்குப் புறப்படக்கூடியதே.

கனக:—அத்தே, நான் இனி பிழைக்கமாட்டேன்.

அம்மணி:—அப்படியொன்றும் சொல்லாதேயம்மா. அதெல்லாம் ஒரு ஆபத்துமில்லை. விடிந்தால் வெள்ளிக்கிழமை. மகாலக்ஷ்மி போல் எழுந்திருப்பாய். அஞ்சாதே.

கனக:—எனக்கு மார்பு அடைக்கிறது. கண் இருட்டுகிறது. நாக்கைப் புரட்டவும் முடியவில்லை. நான் பேசிக்கொண்டிருக்கும்போதே அத்தான் வந்துவிடுவாரோ என்னவோ?

அம்மணி:—உனக்கொன்றும் பயமில்லை. காலை ஏழுமணிக்கெல்லாம் கிருஷ்ணன் வந்துவிடுவான். அவன் வந்து விட்டால் உன் உடம்பும் குணமாய்விடும்; கவலைப்படாதே.

கனக:—அத்தானை உயிருள்ளபோதே நான் காணமாட்டேன் போலத் தோன்றுகிறதே. நான் என் பெற்றோருக்கு அருமைப் பெண்ணாகப் பிறந்த காரணத்தினால் என் தாயால் எனக்குப் பழக்கிவைக்கப்படாத நற்குணம், கீழ்ப்படிதல், எதிர்த்து வாயாடாமை, குடும்பக்காரியம் இவை யெல்லாவற்றையும் நீங்கள் எனக்குப் பொறுமையுடன் பழக்கி வைத்த நேர்மையை நான் என்றும் மறவேன். உங்களாலல்லவோ 'கனகவல்லி குடும்ப நிர்வாகத்திலும் வீட்டு வேலை செய்வதிலும் மிக கெட்டிக்காரி' என்று நான் பெயரெடுக்க நேர்ந்தது. என் பிரியமுள்ள அத்தே! என் அறியாமையாலும் சிறுபிள்ளைத் தனத்தாலும் ஆரம்பத்தில் உங்களை நான் மிகவும் வெறுத்து வந்தேன். 'நாம் அருமைப் பெண்ணாகப் பிறந்து, ஆயிரக்கணக்காகச் சம்பாதிக்கும் கணவனை மணந்திருந்தும், கேவலம் ஏழைப் பெண்ணைப்போல் வீட்டு வேலைகளைச் செய்வானேன்' என்ற அகம்பாவம் பிடித்திருந்தேன். வேளைதவறாது சாப்பிட்டு, தலை வாரி முடித்து, வேளைக்கொரு சேலைகட்டி, வீட்டு வேலை யென்றாலும் சமையலறை யென்றாலும் இன்னதென்றே யறியாது காலங்கழிக்கும் பெண்களைக் காணுங்கால், 'இவர்களன்றோ பாக்கியசாலிகள்' என்று நான் ஆசைப்பட்ட காலமுமுண்டு. சில சமயம் நயத்திலும், சில சமயம் பயத்திலும் நீங்கள் உபதேசித்தும் கட்டளை யிட்டும் சிறுகச் சிறுக

என்னைச் சீர்திருத்தி வந்திராவிட்டால், தற் புகழ்ச்சியும் அகங்காரமும் பிடிவாதமும் துர்க்குணமும் வேரூன்றி ஒன்றிற்கு முத வாத பெண் பிசாசெனும் வசைமொழிக்கு ஆயுள் முழுதும் ஆளாயிருந்திருப்பேன். தாயானவள் பொதுவாக வாயடக்கம், சோம்பலின்மை, கீழ்ப்படிதல், பொறுமை இத்தகைய இன்றியமையாத நற்குணங்களை இளமையிலிருந்தே தன் மகளுக்குப் பழக்கி வைக்கலாமானாலும், பருவவயதில் ஒவ்வொரு பெண்ணும் மாமியின்கீழ் மருமகளாகச் சிலகாலமாவது கீழ்ப்படிதல் அவசியமென்ற ரகசியத்தை நான் நன்கறிந்து கொண்டேன். தன் குடும்ப வருமானத்திற்கும் தன் மகனுடைய மனப் போக்குக்கும் ஏற்றவாறு மருமகளை மாமியால் பழக்க முடியுமல்லாது மற்றவர்களால் முடியுமோ? எனக்களிக்கப் பெற்ற ஸ்திரீதனத்தாலும் ஆடையாபரணங்களாலும் நான் என் கணவனது முழு அன்பையும் பெற்று விடலாமென்ற எண்ணத்தினாலேயே என் தாய் என்னை இவ்வாறு வளர்த்திருக்கக் கூடும். "என் தாயின் சொற்படி நடந்து அவளுடைய கட்டளைக்குக் கீழ்ப்படிந்து தேர்ச்சி பெற்றாலல்லாது என் அன்பிற்கு நீ ஒருகாலும் உரியவளாக மாட்டாய்" என்று அத்தான் எனக்கு வற்புறுத்திக் கூறியதை நான் மறக்க முடியுமா? அத்தே! 'புருஷனில்லாத புக்ககத்தில் வீட்டு வேலை செய்து கொண்டு மாமியின் அதிகாரத்தில் அடங்கிக் கிடப்பதேன்? நமது வீட்டிலேயே நம் பெண்ணிருக்கக் கூடாது'? என்று என் தாய் பிரஸ்தாபிக்கும் சமயம் எனக்கு அச்சொல் சரியானதாகவே தோன்றும். அத்தான் கடிதங்களைப் பார்க்குங்கால் அது சரியல்லவெனத் தெளிவேன். இவ்வாறு சில நாள் கழிந்தாலும் முடிவில் 'இது நம் வீடு; நீங்கள் போதிப்பது எனது நன்மைக்காக. இவ்வாறு நடந்தால் மட்டுமே கணவன் அன்பைப் பெறலாம். மாமியின் கீழ் மருமகளாயிருந்தால் மட்டுமே கணவனின் மெய்யன்பைப் பெறக்கூடிய அந்தஸ்தை நாம் அடையலாம்' என்ற உண்மையை நான் தெரிந்து கொண்டபின் நீங்களுரைக்கும் கடுமொழிகூட நல்லுபதேசமாகவும் அன்புற்றமொழியாகவும் எனக்குத் தோன்றலாயிற்று. உங்கள் உபதேசப்படி திலகவதியை இப்பொழுதுமுதல் வளர்த்து வரவேண்டுமென எண்ணியிருந்தேன். நான் கொடுத்துவைத்தது இவ்வளவுதான். நான் பாபியானேன். வயது காலத்தில் உங்களுக்குப் பணிவிடை செய்யாது, குணசாலியான கணவனிடம் காலங்கழிக்க அதிருஷ்டமற்று மாண்டு போகிறேன். என்னைப் போலவே திலகவதியை வளர்த்து நற்புத்தி புகட்டுங்கள். அத்தே! உங்கள் விஷயத்தில் நான் ஏதேனும் அபசாரம் செய்திருப்பேனாயின் அதை மன்னித்து விடும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். திலகவதிக்கு எட்டு ஒன்பது வயதிலேயே தக்க வரனைத் தேடிக் கலியாணம் செய்து கொடுங்கள். தற்காலத்தியப் பெண் கல்வி முறையில் எனக்கு நம்பிக்கை கிடையாது. வீட்டிலேயே அவளுக்கு வேண்டியதைக் கற்பியுங்கள். அத்தான் தேசாந்திரியாய்விடாமல் தக்க பெண்ணை மறு விவாகம் செய்துகொள்ளச் செய்யுங்கள். இவை எல்லாம் முழுமனதுடன் நான் சொன்னவை என்பதை நம்புங்கள். அத்தான் என்னை மூடபக்தியுள்ளவளென்றும் தற்கால நாகரிக வாழ்க்கைக் குரியவளல்லளென்றும் எண்ணியிருப்பதை நான் உயிருடனிருந்தால் மாற்றி விடுவேன். என்னமோ நான் கொடுத்து வைத்தது இவ்வளவுதான். கொடுத்து வைக்

காப்பாபியாய் மாண்டுபோகிறேன். இவ்வளவுதான் என் கடைசி வார்த்தை."

இவ்விதம் தட்டித்தடுமாறிச் சொல்லிக் கொண்டிருக்கும்போதே கனகவல்லிக்கு மயக்கம் வந்துவிட்டது. எவ்வளவு பரிகாரம் செய்தும் காலை ஆறுமணிவரை நீங்கவில்லை. இதற்கிடையில் வந்து சென்ற டாக்டர்கள் ஏழெட்டுப் பெயர்களுக்குக் குறைவில்லை. அவர்கள் 'பிழைப்பதரிது, இனி சாத்தியமில்லை' என்று வாய் கூசாது சொல்லிக் கைகூசாது தமது பீஸ் பணத்தைக் கணக்காய்ப் பெற்றுக்கொண்டார்கள். இரவெல்லாம் குழந்தை தாயை நினைத்து அழுதவண்ணமாகவே இருந்தது. கலியாணிக்குத் தன் பேத்திப்பெண்ணைக் கவனிப்பதே காரியமாயிருந்தும் மாணத்தறுவாயில் இருக்கும் பெண்ணைப் பாராமல் இருக்க மனங் கொள்ளவில்லை. அவள் வேலைக்காரியிடம் குழந்தையை ஒப்புவித்து விட்டுக் கனகவல்லியிருக்குமிடம் வந்தாள். பெற்றவளாகையால் இதுவரை சமீபத்திலிருப்பவர்களைக் காட்டிலும் இவளடைந்த விசனம் கண்படைத்தார் கண்டு சகிக்கமுடியாது. கலியாணி அலறும் சத்தத்தால் கனகவல்லி மயக்கம் தெளிந்து கண் விழித்தாள். "என்ன செய்வேனடி என் கண்ணே?'' என்று தாய் விம்மியழுவது கண்டு "அம்மா! இனி என் ஆசையை விட்டுவிடு. குழந்தை திலகவதியைக் கவனித்துக்கொள். அப்பாவிடம் சொல்லி ஒரு பிள்ளையைச் சுவீகாரம் செய்துகொண்டால் திலகவதியின் கலியாண விஷயமும் காரியங்களும் கடவுளின் சித்தம்போல் நடக்கும்'' என்றாள் கனகவல்லி. இதைக் கேட்டுக்கொண்டிருந்த அம்மணியம்மாளின் மனப்போக்கு இன்னதென்று நமக்குத் தெரியுமானாலும் பிறர் விஷயத்தை நாம் விவகரிக்கக் கூடாதல்லவா? நமக்கேன் அதிகப் பிரசங்கம்? யார் யார் யோசனை எவ்விதமிருந்தபோதிலும் எது எப்படி முடியவேண்டுமோ அப்படித்தான் முடியும்.

ஆறாவது அதிகாரம்.

ரயில் பிரயாணம்.

உலகிலுள்ள மானிடர்கள் தங்கள் பிரயத்தனத்திற் கேற்றவாறாகப் பயனடைவது இயல்பு. ஆனாலும் சிற்சில சமயங்களில் தெய்வகதி வேறாக இருக்கிறதல்லவா? அதிலும் கைப்பணச் செலவிற்கேற்ற இடத்தின் வசதிக்கே மோசமாயிருக்கும் தென்னிந்திய ரயில் வழியில் பிரயாணம் செய்ய முற்படுபவர்களுக்குச் சகல பாரத்தையும் கடவுளிடம் ஒப்புவித்தாலன்றி வேறு வழியில்லை. அவசரப் பிரயாணத்தில் கிருஷ்ணசாமியும் ராமனும் பட்ட கஷ்டங்கள் கொஞ்சமல்ல, எப்பாடு பட்டாவது குறித்த நேரத்தில் திருச்சியடைய எண்ணியதும் வீணாய்விட்டது. மாலை 4- மணிக்குப் போகவேண்டிய வண்டி அன்று இரண்டு மணி நேரம் தாமதித்து விட்டது ரயில்மீது குற்றமில்லை. பிரயாணிகள் கூட்டமாக ஏறி இறங்கும் ஸ்டேஷன்களில் இரு நிமிஷங்களுக்கதிகம் நிறுத்தப்படாமலும் கேள்வியற்ற சிறிய ஸ்டேஷன்களில் மணிக்கணக்கில் சிரம பரிகாரமளிக்கப்பட்டும் ரயில் வந்ததில் தடையில்லை. மாயவரம் வரும்பொழுதே ஒரு மணிநேரம் தாமதம். சென்னையிலிருந்து கும்பகோணம் கோர்ட்டில் வேலையாகச் செல்லும் ஹைகோர்ட் வக்கீல் ஒருவர் முதல் வகுப்புச் சீட்டுப் பெற்று அடெண்டரும் சோடாக்காரனும் குறுக்கும் நெடுக்கும் நடமாடிக்கொண்டிருக்கும் நடை பாதையிலேயே தமது விரிப்பை விரித்துக்கொண்டு படுப்பதும் உட்காருவதுமாய் இராப்பொழுதை ஒருவாறு தொலைத்தார். குறுக்கும் நெடுக்கும் நடந்துகொண்டிருக்கும் உதவி கார்டுகாலிலுள்ள தூசி மேல்விழாமலிருக்க அவர் எவ்வளவு ஜாக்கிரதை

யெடுத்தும் சாத்தியப்படவில்லை. ஈசுவர கிருபையில் நமக்கு இம்முறையேனும் சட்டசபையில் ஓர் ஸ்தானம் கிடைக்குமானால் நமது காலம் முடியத் தென்னிந்திய ரயில்வேயின் ஊழல்களை இழுத்து விடுவதே வேலை என்று வக்கீல் தீர்மானித்தார். ரயில்பாதை ஆலோசனைக் கமிட்டியில் இடம் பெற்றால் நன்மை என எண்ணினார். ஆமாம்! தலைவலியும் காய்ச்சலும் தனக்கு வந்தாலல்லவோ தெரியும்! ஜனப்பிரதிநிதி ஸ்தானத்தை விரும்புவோர்கள் மோட்டார்கார் சவாரியையும் முதல் வகுப்புப் பிரயாணத்தையும் நிறுத்தாத வரையில் சாமானிய ஜனங்களின் கஷ்ட நிஷ்டூரங்கள் அவர்கள் கண்ணிற்படா. மாயவரம் ஜங்ஷனில் இறங்கி ஸ்டேஷன் மாஸ்டர் ரூமுக்குச் சென்று தாம் ஒரு மணிக்குக் கும்பகோணம் கோர்ட்டில் தயாராயிருக்க வேண்டியதென்றும், குறிப்பிட்ட நேரத்தில் வண்டிபோய்ச் சேராவிடில் தமது கட்சிக்காரன் பெருத்த நஷ்டமடைவானென்றும், தாம் ரயில் அறிக்கையை நம்பி மோசம் போனதாயும் வக்கீல் முறையிட்டார். இதுகேட்ட ஸ்டேஷன் மாஸ்டர் "வருஷ ஆரம்பத்தில் வாங்கிய அறிக்கைப் புத்தகத்தைப் பார்த்து நீர் ஏமாந்துவிட்டீர். மேமாத முதலிலிருந்து வண்டிகளின் நேரம் மாற்றப்பட்டிருக்கிறது. அத்துடன் ஏதோ எதிர்பாராத காரணங்களால் இன்று இரண்டு மணி நேரம் தாமதித்திருப்பது உமது பாக்கியமே" என்றார். வக்கீல்களின் அதிகாரம் கட்சிக்காரனிடம் முன்பணம் வசூலிக்குமளவுதான் என்பதை நினைத்துக்கொண்டு திரும்பி வரும் வக்கீல் வழிநடுவிற் கண்ட தமது நண்பரொருவரைக் கூப்பிட்டு "என்ன ஐயா! இந்த ரயிலில் நடக்கும் அநியாயத்தைப் பார்த்தீர்களா? வருஷ மத்தியில் நேரங்கள் மாற்றப்படுமானால் அதையறிந்து கொள்ளத் திரும்ப நான்கு அணா கொடுக்கவேண்டுமாமே" என்றார். "இந்தக் கஷ்டங்களெல்லாம் வக்கீல்களுக்கேன்? எதையும் கட்சிக்காரன் தலையில் போட்டால் தீர்ந்தது. என்னைப்போன்றவர்கள் நிலைமை வேண்டுமானால் பரிதாபம். அரசாங்கத்தில் சம்பளம் பெற்றுப் பிரஜைகளின் க்ஷேம லாபங்களைக் கவனிக்கக் கூடிய நிலைமையிலிருப்பவர்களுக்கல்லவா திண்டாட்டம்?" என்றார் மற்றவர். வக்கீலுக்குண்டான வருத்தம் பொறுக்கமுடியவில்லை. "என்னதான் இருக்கட்டும், சுய ஆட்சி வந்தாலொழிய ஒன்றும் விடியாது" என்று வக்கீல் மொழிந்தார். "மெய்தான், சுதேசிய சம்பந்தமாயும் சுதேச வியாபார சம்பந்தமாயும் கதர்ப் பிரசாரத்திலும் ஒரு சிறிதளவும் பங்கு எடுத்துக்கொள்ளாமல், தேடும் பணத்தைக் கிராமத்திற்கு மேல் கிராமம் வாங்கிவரும் உங்களைப்போன்றவர்களுக்குச் சுய ஆட்சி கிடைத்தால் வரி செலுத்துவதும் லாபமாக்கிக் கொள்ளலாமென்ற யோசனைதான்! என்ன செய்வது? சுய நலவாதிகளான உங்களுக்குக் கடவுள்தான் அருள வேண்டும்" என்று அதிகாரி பதிலளித்தார். "உமக்கு இவ்வருஷம் திவான் பகதூர்ப்பட்டம் வந்திருக்கிறதல்லவா?" என்று கேட்க வக்கீல் வாயெடுத்ததும், தாம் ராவ்சாகேப் பட்டத்திற்காகச் செலவழித்து ஏமாந்தது ஞாபகத்தில் வந்துவிட்டதால் வாய் திறவாமல் வண்டியிற்போயுட்கார்ந்து விட்டார். பாட்டோடு பாடாய் இவைகளை எல்லாம் கவனித்துக் கொண்டிருக்கும் கிருஷ்ணசாமிக்கு ஏழு மணிக்குத்தான் திருச்சி செல்ல முடியுமென்பது கண்டு மெத்த விசனமுண்டாயிற்று. கனகவல்லி உயிருடனிருப்பாளா? உடம்பு குணப்பட்டிருக்குமா என்று பலவாறு சிந்தித்து அவர் மாலை ஏழுமணிக்கு வந்து சேருவதாய் மாயவரம் ஜங்ஷனிலிருந்தே திருச்சிக்குத் தந்தி கொடுத்தார். தஞ்சாவூருக்குப்பின் வழி தொலைவது மெத்த பாரமாக இருந்தது. திருச்சி ஜங்ஷன் வந்ததும் அவசரத்தில் ராமன் கிருஷ்ணசாமி இருவரும் தமது பணப்பையை எடுக்க

மறந்து ஜட்காவண்டி யிருக்குமிடத்திற்கோடினார்கள். காலியாயிருந்த ஒரு வண்டியிலுட்கார்ந்துகொண்டு 'வண்டியைத் தெப்பக் குளத்திற்கு ஓட்டு' என்றதும், வண்டிக்காரன் "சாமீ, கால் ரூபா சில்லரை கொடுங்கள்" என்றான். கிருஷ்ணசாமி பணப்பையைக் காணுமல், வீடு சென்றதும் இரட்டிப்பாய்க் கொடுப்பதாய்ச் சொல்லியும், "அதோ நிற்கும் போலீஸ்காரப்பாவுக்கு நான்கு அணு கொடுக்காவிட்டால் நாளை முதல் என் பிழைப்பு போய்விடும், கேட்டுக்குள் விடமாட்டார்" என்று வண்டிக்காரன் பரிதாபமாய்க் கெஞ்சினான்.

## ஏழாவது அதிகாரம்.

## மனைவியிழந்த மணாளன்.

"ஆண்டாண்டுதோறு மழுது புரண்டாலும் மாண்டார் வருவரோ மாநிலத்தில்" என்றபடி என்ன அழுதாலும், என்ன முறையிட்டாலும், கனகவல்லி இனிக் கண்திறக்கப்போவதில்லை! உயிர் போய்ச் சிறிது நேரம்தான் ஆயிருந்தது பற்றிக் கைகால்கள் இன்னும் மரக்காமலிருந்தன. வாட்டமற்றுச் செந்தாமரை போல் விளங்கும் முகத்தை நோக்கக் கனகவல்லி தூங்குகிறவள்போலவே தோன்றினாள். வீட்டு வாயிற்படியில் நின்றிருக்கும் மாமனாரையும் அம்மணியம்மாளையும் கிருஷ்ணசாமி கண்டதும் அவர்கள் முகச்சாயலால் காரியம் விபரீதமாய் முடிந்துவிட்டதாய் எண்ணியபோதிலும், தாமாக அதைரியப்படக்கூடாதெனப் பொறுமையாய் வண்டிவிட்டுக் கீழிறங்கி வீட்டிற்குள் சென்றார். "ஐயோ கிருஷ்ணு! கனகவல்லி மோசம் செய்துவிட்டாளே!!" என்று தன் தாய் அலறியது கேட்டதும் அவர் தரையில் விழுந்து மூர்ச்சையானார். "அடிசிற்கினியாளே அன்புடையாளே" என்ற தெய்வப் புலமைத் திருவள்ளுவரின் வாக்கியப்படி, குடும்ப வாழ்க்கையாகும் சகடத்திற்கு இருசக்காமாய் விளங்கும் ஒற்றுமையுள்ள தம்பதிகளில் ஒருவர் அற்பவயதில் மாள்வதென்றால் அதைச் சகிப்பதெப்படி? கிருஷ்ணசாமியை ராமன் பலவாறு தேற்றியதும், "அப்பா! உனக்கு நேற்றுமாலை ஐந்துமணிக்கே தந்திகொடுத்தேனே. நீ காலை வண்டியில் ஏன் வரவில்லை? ஐயோ! கனகவல்லி வாய்ப்பிராணன் போகும்பொழுதுகூட 'அத்தான் வந்துவிட்டாரா?' என்று கேட்டுக்கொண்டே உயிர்விட்டாளே! இன்னும் அரைமணிநேரத்திற்கு முன் வந்திருந்தபோதிலும் அவளுடன் ஒரு வார்த்தையாவது பேசியிருக்கலாமே. உடம்பிற்கு வந்தால்தான் என்ன? பிழைத்தெழக்கூடாதா?" என்று அம்மணியம்மாள் பிரலாபித்தழுதுவிட்டு, 'உள்ளே வா' என்று மகனையழைத்துச் சென்றாள். குழந்தை சவமாய்க் கிடக்கும் தன் தாயின் அருகில் உட்கார்ந்து கொண்டு "அம்மா, எழுந்திரு. வெள்ளிக்கிழமை அப்பா வருவாரென்று சொன்னாயே, ரெயில் வந்தாயிருக்கும், நீயும் வருகிறாயா ஸ்டேஷனுக்கு? நாம் ரெண்டுபேரும் வண்டிலே போகலாம். அப்பா இன்னு யாரு அம்மா" என்று கேட்டுக்கொண்டிருந்தது. இதைக் கேட்டுக்கொண்டுவந்த கிருஷ்ணசாமிக்கு உண்டான துக்கம் கனகவல்லியின் உயிரற்ற உடலைக்கண்டதும் அடக்கமுடியாமல் அதிகரித்தது; வாய்விட்டலறினார்; தலையிலடித்துக்கொண்டார்; ஓலமிட்டார்; உருகினார். இவர் நிலைமையைக்கண்டு எல்லோரும் கதறினார்கள். திலகவதியும் பயந்து அழத்தொடங்கியதும் அம்மணியம்மாள் குழந்தையை யெடுத்து மகன்மடிமீது வைத்து, "இவள்தானப்பா உன் குழந்தை" என்றாள். "'அப்பா', நான்தான். நீ அழாதே, உனக்கென்னவேண்டும்? அசட்டுக் குழந்தையல்லவா அழும்! நீ சமத்தோ அசடோ சொல்லு" என்று கிருஷ்ணசாமி குழந்தையைச் சமாதானப்படுத்திவிட்டுத் தன் தாயை நோக்கி "ஏனம்மா! நேற்றுக் காலையில்

கூடக் கனகவல்லியின் கடிதமெனக்குக் கிடைத்ததே" என்றார். திடீரெனக் காலையில் கனகவல்லிக்குக் காலரா உபத்திரவம் கண்டதும், பரிகாரங்கள் செய்ததும், கனகவல்லி மொழிந்த கடைசி வார்த்தைகளும் வருவதற்குச் சிறிது நேரம் முன்பாகவே அவள் உயிர் விட்டதும் பற்றி அம்மணியம்மாள் விவரமாய்த் தன் மகனுக்கெடுத்துரைத்தாளன்றி, தக்க வரனைத் தேடித் திலகவதிக்கு மணமுடிக்கவேண்டுமென்றதைமட்டும் தெரிவிக்கவில்லை. அன்றிரவு முழுதும் அழுகையும் பெருமூச்சுமாய்க் கழிந்தது. மறுநாட் காலையில் கனகவல்லிக்கு நடக்கவேண்டிய சவச்சடங்குகள் நடைபெற்றன.

இச்சம்பவம் கழிந்த இரண்டு வாரத்திற்குப் பின், ஒருநாள் காலையில், பாலசுந்தரம் தமது மருமகன் கிருஷ்ணசாமியுடன் லக்ஷ்மீவிலாசத்தின் மேல்மாடியில் வெகுநேரம் தனித்துப் பேசிக்கொண்டிருந்தார். அன்று பகல் போசனஞ்செய்தபோது குழந்தை திலகவதியைத் தன்னிடம் வைத்துக்கொண்டால் கலியாணிக்குப் பெண்ணைப் பறிகொடுத்த துக்கம் சற்று ஆறுதலடையுமென்று பாலசுந்திரம் சொன்னார். அம்மணியம்மாளுக்கு இது சம்மதமில்லாததுபற்றி, "தம்பீ, நீ கனகவல்லி சொல்லியபடி சுவீகாரம் செய்து கொள்ள வேண்டியதுதான் நியாயம். குழந்தை என்னிடமில்லாவிட்டால் எங்கிப்போவாள். அவளுக்கு அயலிடத்தில் வரன் தேடவேண்டிய கஷ்டங்கூடக் கிடையாது. குழந்தை கோபாலனுக்குக் கொடுப்பதாய்த் தரைமெழுகிக் கோலமிட்டபின்பு தான், பிறந்த குழந்தை அறையில் அழத்தொடங்கியது. அவன் மிகவும் புத்திசாலி. அவனுக்கு வயது பதினைந்துதான். ஆனாலும் எம். ஏ. பாஸ் செய்தவனுக்குக் கூட அவன் புத்தி வராது. கிருஷ்ணசாமிக்கு ஒரு பெண்ணைப்பார்த்துக் கலியாணம் செய்யவேண்டியது முதல் காரியம். சாவு நடந்த மூன்றும் நாள் உபசாரம் கேட்க வந்திருந்த தஞ்சாவூராள் தன் பெண்ணுக்கு வயது பன்னிரண்டு ஆகிறதென்றும் அழகில் குறைவில்லை என்றும் கலியாணமான ஆறுமாதத்தில் வீட்டிற்கு வந்து விடுவாள் என்றும் சொல்லிப்போனாள்" என்றாள். அதற்குள் குழந்தை திலகவதி "அப்பா, எனக்கு அத்தானைக் கண்டால் பிடிக்கவில்லை. என்னை எப்பொழுதும் பெண்டாட்டி, பெண்டாட்டி என்கிறான். அம்மாவிடம் சும்மா சண்டைபோடுவான். அப்பா ! அம்மா எப்போ ஊரிலேருந்து வருவாள்?" என்று தன் தந்தையைக் கேட்டாள். இச்சமயம் கிருஷ்ணசாமியின் முகம் மாறுதலடைந்ததை யொருவரும் கவனிக்கவில்லை. அவர் மனமடைந்த வேதனையைக் கடவுள்தான் அறிவார் !

## எட்டாவது அதிகாரம்.

## கற்பின் உருவே.

ராமன் :—என்ன அப்பா, கிருஷ்ணு! என்ன முடிவு செய்திருக்கிறாய் ?

கிருஷ் :—முடிவென்ன ? மறுபடி இங்கிலாந்து செல்லப்போகிறேன்.

ராமு :—ஏதோ நடந்தது நடந்துவிட்டது. இனி உன் காலம் சௌக்கியமாய் நடைபெறக்கூடிய வழியை நீ தேடாமல் என்னசெய்கிறது?

கிருஷ் :—வழியைத்தான் கனகவல்லி முடித்துவிட்டாளே !

ராமு :—இது நல்லவேடிக்கை! தொட்டுத் தாலி கட்டியதன்றிச் சில மாதங்கள் கூட நீ உன் மனைவியுடன் சேர்ந்து வசித்தவனல்ல. தங்கியிருந்த ஒரு வருஷத்திலும் ஊர் ஊராய்ச் சென்று கொண்டிருந்தாயே தவிரத் திருச்சியில் சேர்ந்தாற்போல் நான்குதினம் இருந்தவனல்ல. உன் மனைவி உனக்கெழுதி வந்த கடிதங்களில் தற்கால நவநாகரிகத்திற்குரிய

மொழிகள் ஒன்றுமேயில்லாததுடன் சாமானியமாய்ப் பேதையிலும் பேதையாக இருந்திருக்கிறாள் என்று விளங்குகிறது. நீயோ 'கனகவல்லி, கனகவல்லி, கனகவல்லி' என்று முறையிடுகிறாய். என்ன கனகவல்லி? கனகவல்லிக்குச் சமானம் மற்றொரு சுந்தரவல்லி கிடைக்காமலா இருப்பாள்?

கிரு:—ஆம். நானும் கனகவல்லியைப் பேதைப் பெண் என்று நினைத்ததுண்டு. பிள்ளையில்லா வீட்டில் செல்வமாய்ப் பிறந்து வளர்ந்த பெண்ணாயிற்றே! குடும்பகாரியங்கள், கீழ்ப்படிதல், பொறுமை இவைகளெல்லாம் நன்றாய்ப் படியவேண்டுமென்ற எண்ணத்தினாலேயே நான் அவளை என் தாயிடம் வைத்திருந்தேன். அருமை மகளுக்கு மருமகன் வந்தால் தன் அதிகாரத்தில் அடங்கிக் கிடக்கவேண்டுமென்ற துர்க்குணம் என் மாமனுக்கு இருக்கக்கூடுமோ என்ற சந்தேகமொருபக்கம். ஆனால் அவர்கள் என் நோக்கத்தையும் உலக வாழ்க்கையின் சம்பிரதாயங்களையும் நன்கறிந்து நடந்துகொண்டார்கள். நான் நேற்று கனகவல்லியின் கைப்பெட்டியைப் பார்த்தபொழுது அதிலிருந்த அவளுடைய தினக்குறிப்புப் புத்தகத்தால் கனகவல்லி என்னை எவ்வளவுதூரம் நேசித்திருந்தாள் என்பதையும், என் தாயின் விஷயத்தில் எவ்வளவு தூரம் அன்புடனும் பக்தியுடனும் நடந்துகொண்டாள் என்பதையும் நன்கறியநேர்ந்தது. இனியும் நான் வேறொருத்தியை மணப்பதென்பது பல விதத்திலும் அசம்பாவிதமாயிருக்கும். எதிர்காலத்தை மெத்த சந்தோஷத்துடன் கழிப்போம் என்று நம்பியிருந்த என் மனைவி திடீரென என் முகத்தையும் காணாமல், என்னிடம் கடைசியாக ஒரு வார்த்தையுமுரையாது, நான் வீட்டு வாசற்படி நுழையச் சிறிது நேரத்திற்கு முன்வரை என் வரவை எதிர்பார்த்து யமனுடன் மன்றாடி உயிர் விட்டிருக்கும்போது நான் இன்னொருத்தியை மணந்து சுகிப்பதா? ராமு! கனகவல்லி செத்த மூன்றாம் நாள் வேறு பெண் பேசியதாக என் தாய் என்னிடம் சொன்னதுகூட வருத்தமில்லை. முப்பத்தைந்து வயதிற்குமேல் சில வருஷங்களுக்காக ஒரு இளம்பெண்ணை மணந்து வீணாக்கும்படி நீ யோசனை சொல்வதுதான் விந்தையிலும் விந்தையாயிருக்கிறது!

ராமு:—நீ உலகத்திலில்லாத மனிதன்! பாலிய விவாகத்தின் தலையில் பழியைப்போட்டுவிட்டு ஐம்பது வயதிற்குமேல் இளையாள் கலியாணம் செய்துகொண்டு பாலிய விதவைகளைப் பாவச்செய்பவர்தான் அதிகமாய் வருகின்றனரே. உனக்கு ஒருகால் இஷ்டமுண்டாயின் நடக்கட்டுமென்பதற்காகவே நான் சொல்ல முன் வந்தேன். இளம் வயதில் கணவனைப் பறிகொடுத்த கன்னிகைகள் மட்டும் தமது வாழ்நாளைத் தனியே கழிக்கவேண்டியவர்களாயிருக்கும்போது, மனைவியை இழந்த கணவர் மட்டும் கலியாணம் செய்துகொள்ளத்தான் வேண்டுமென்ற நிபந்தனை ஒன்றுமே இல்லை. கனகவல்லியைப் போலவே ஒவ்வொரு பெண்ணும் இருப்பாளாயின் நீ சொல்வது அதிசயமல்ல. உலகம் முழுதும் உன்னைப்போலவேதான் தீர்மானிக்க நேரிடும்.

கிரு:—என்னைப் பெற்றெடுத்து வளர்த்து என் தந்தை மரணமடைந்த சமயம் குடும்பத்திலிருந்த கஷ்ட நிஷ்டூரங்களைப் பொறுத்து என்னைப் படிப்பித்து ஜன சமூகத்தில் கண்ணியமுள்ள மனிதனாக என்னைச் செய்த அன்னைக்கு நான் எவ்வளவுதூரம் கடமைப்பட்டிருக்கிறேனோ அதைக்காட்டிலும் அதிகமாய் மனைவி விஷயத்திலுமிருத்தலவசியம்.

விவாகம் முடிந்ததும் நான் இங்கிலாந்து செல்லும் சமயம் தானும்கூட வருவேனென்று கனகவல்லி பிடிவாதம் செய்திருப்பாளாயின் நானும் சம்மதித்து அதுவழியாய் என்னைப் பெற்றெடுத்த தாயைத் தனியே காய்ச்சிக்குடிக்கும் நிலைமையில் வைத்துத் தான் இருந்திருப்பேன். மாமி புகுந்த மருமகளாயிருத்தல் முக்கியமென்று என் மாமன், மாமி தம் பெண்ணுக்குச் சொல்லி வாதிருப்பின் என் குடும்பம் நிலைகுலைந்து எவ்வளவோ நாளாயிருக்கும். கனகவல்லி அகால மரணமடைந்த பிறகு நான் என் வாழ்நாளை ஒருவனாய்க் கழிப்பதே ஏற்றதாகும். கோபாலனுக்குத் திலகவதியை விவாகிப்பதென்ற என் தாயின் யோசனைமட்டும் எனக்கு ஏற்கவில்லை. ஒருகால் பிராப்தம் எப்படியிருக்குமோ! என் மாமனாரைச் சுவீகாரம் செய்துகொள்ளும்படி தக்க ஏற்பாடுகளையும் செய்தாயிற்று. நான்மட்டும் கப்பலேறிச் செல்வதுதான் பாக்கி. இங்கிலாந்திலிருந்து கப்பலேறும்போது நான் எண்ணமிட்டிருந்தவைகளின் முடிவு இவ்வாறாயிருக்குமென்பதை நான் கனவிலும் எண்ணினவனல்லன். அன்றெழுதியது அழியுமா!

## ஒன்பதாவது அதிகாரம்.

## தீநெறி.

கனகவல்லி இறந்துபோய் ஆறு மாதங்களாயின. கோபாலனும் திலகவதியும் பாட்டியாராகிய அம்மணியம்மாளுடன் திருச்சியில் இருந்துகொண்டிருக்கிறார்கள். பாலசுந்தரமும் கலியாணியம்மாளும் பத்து வயதுள்ள சிறுவனைச் சுவீகாரம் செய்துகொண்டு சென்னையிலிருந்து வருகிறார்கள். அச்சுவீகார குமாரன் பெயர் வாசுதேவன். கிருஷ்ணசாமிக்கு இவ்விடமிருப்பதில் கனகவல்லியின் ஞாபகமும் எக்கமும் மாறாவெனக் கண்டு அம்மணியம்மாள் அவர் இங்கிலாந்து செல்வதைத் தடுக்கவில்லை. இப்பொழுது அவர் மாதம் மூவாயிரமாக அனுப்புகிறார். கோபாலன் படிப்பில் உயர்வுற வேண்டுமென்ற ஆசை அம்மணியம்மாளுக்கு அதிகம். நாள் தவறினாலும் கோபாலன் நாடகம் பார்ப்பதைத் தவிர்ப்பதில்லை. பதினாறு வயது மட்டுமே ஆயிருக்கிறபடியால் இரண்டாவது பாரத்தில் தான் இருக்கிறான். சென்ற வருஷத்திலேயே உபாத்தியாயர் விரும்பிய வைர மோதிரத்தை வாங்கிக்கொடுத்திருக்கும் பட்சத்தில் அவன் எப்படியாவது மூன்றாம் பாரம் வந்திருக்கலாம். இப்பொழுதிருக்கும் பணப்புழக்கம் அப்பொழுது கோபாலனிடம் கிடையாது. பாலசுந்தரம் பலகாரணங்களுடன் சுவீகாரப்பிள்ளையின் நன்மையை உத்தேசித்துச் சென்னை சென்று விட்டதால் கோபாலன் தான் லக்ஷ்மீ விலாசத்திற்குச் சர்வாதிகாரியாயிருந்தான். வாசுதேவன் திருச்சியிலிருக்கும் பட்சத்தில் கோபாலன் சகவாசம் இல்லாமலிருக்கமுடியாது. கோபாலனிடம் சுருட்டுப் பிடித்தல், சீட்டு விளையாடல், தில்லானாப் பாடுதல், சிட்டியடித்தல் முதலிய நவநாகரிகச் சின்னங்கள் தாமாகவே முளைத்துவிட்டன. இவன் வாயிலிருந்து வரும் ஒவ்வொரு மொழியும் சாமானியமானதாயிராது. மாமன் தேடும் பணமும் அந்தஸ்தும் தன்னுடையவையாகவே அவன் எண்ணினான். தனக்குச் சுயமாய் ஒருவிதத் தன்மையுமின்றிப் படாடோபச் செலவுகளைச் செய்வதில் கோபாலனுக்குச் சிறிதும் அச்சம் கிடையாது. குழந்தை திலகவதியை உத்தேசித்துப் புதிதாக வந்திருக்கும் மோட்டார் என்ற வண்டியொன்றை கிருஷ்ணசாமி எண்ணாயிரம் ரூபாய்க்கு வாங்கியனுப்பியிருந்தார். கோபாலனுக்குச்சுற்றித்திரிய இவ்வண்டி மெத்த உதவியாயிருந்தது. உடைகளையுடுத்திக்கொண்டு வெளிப்புறப்படுவானாகில் அவன்

ஜமீன்தாரைப்போல் காணப்படுவான். ஆனல் வாஸ்தவமாய் ஜமீனுள்ளவர்களுக்கு அவ்வித ஆடம்பரங்களிருப்பின் குடிமக்களைக் கவனிப்ப தில்லை என்ற சொல் உண்டாய்விடு மென்ற பயம் அவர்களுக்கு உண்டாகும். திருச்சியி லுள்ள மூலை முடுக்கு, சந்து பொந்து எங்கு பார்த்தாலும் 1548ம் நெம்பருள்ள மோட்டார் வண்டி நின்றுகொண்டிருக்கும். மோட்டார் ஓட் டுவதில் தனக்கு மிஞ்சிய கெட்டிக்காரன் இல்லை என்று பெருமை பேசிக்கொள்வான் கோபா லன். "விளையும் பயிர் முளையிலே" என்றபடி, சிறு வயது முதல் இவனிடத்திலிருந்த துர்க் குணங்கள் தக்க வயதும் கையிற் பணமும் ஏற் பட்டவுடன் தலையெடுத்து விளங்கியது ஆச் சரியமல்ல. கோபாலன் தாயில்லாக் குழந்தை யானதுபற்றிச் சற்றும் கண்டிக்கப்படாமல் அம்மணியம்மாளால் வளர்க்கப்பட்டதின் பய னுக இவ்வளவு கெட்டிக்காரனுக இருந்தான்! கிருஷ்ணசாமியும் தாம் சம்பாதிக்க ஆரம்பித் தது முதல் மாதம் ஆயிரம் ரூபாய் வீதம் கோபாலன் பெயரால் சென்னை சுதேச பாங்கி யில் கட்டி வருகிறார். இவன் மேஜரானல் இஷ்டப்படி எடுத்துச் செலவழிக்கவும் இடம் பெற்றிருப்பதால் கோபாலனுக்குச் சிறிதும் பணவிஷயமான கவலை கிடையாது. புத்தி சாலியாயும் நல்ல பிள்ளையாயுமிருந்திருப்பானு னல் அவன் உயர்ந்த நிலைமையை யடைந்திருப் பான். குணத்திலும் நடவடிக்கையிலும் உயர் தரமாய் விளங்கும் மாமனை அனுசரியாது பேராசைக்கும் துர்ப்புத்திக்கும் இருப்பிடமா யுள்ள தன் தந்தையின் குணமே கோபால னிடம் குடிகொண்டிருந்தது. அவரும் சாமா னியமானவரல்ல. நீதிபதி ராமநாதனையறியாதா ரில்லை. முதல் மனைவி இளமைப்பருவத்தி லேயே பிறசவித்து இறந்துபோய்விட்டதும், இரண்டு வருஷம் கழித்துத் தமது இருபத் தாரும் வயதில் கமலம் என்ற அழகிய பெண்ணை மறுவிவாகம் செய்துகொண்டார். கமலத்தின் தந்தை திருச்சியில் காப்பி ஹோட் டல் வைத்திருந்து கையிற் கிடைத்த பணத் தைக் கண்டபடி செலவழித்து வந்ததின் பய னுகத் தீராநோய் கண்டு கேட்பாரற்றுச் சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் மாண்டார். கலியாணமாகும்பொழுதே கமலத்திற்குப் பதி னறு வயது நிரம்பி இருந்தது. தனவந்தர் வீட்டிலிருந்திருந்தால் இவ்விதக் கலியாணம் ஆசார சீர்திருத்தத்தை யொட்டி நடந்தேறிய தாகப் பத்திரிகைகள் ஆரவாரித்திருக்கும். கம லம் ஏழைப் பெண் ஆகையால், 'ருதுவாகி மூன்று வருஷமாகச் சிரிப்பாய்ச் சிரித்துக் கிடந்த பெண்ணை ராமநாதன் அழகை மெச்சிக் கலியாணம் செய்துகொண்டு விட்டார்' என்ற பிரஸ்தாபம் ஆங்காங்கு உண்டாயிற்று. கமலம் புருஷன் வீடுவரும்போது தன் தாய் காமாட்சி யம்மாளையும் தங்கை சுந்தரியையும் கூடவே கூட்டிக்கொண்டு வந்தாள். கமலம் வீட்டிற்கு வந்த நிமிஷத்திலிருந்து ராமநாதன் படிப்படி யாகத் தம் பிள்ளை கோபாலனை மறக்க ஆரம் பித்து, சீக்கிரத்தில் முழுதும் பராமுகமா யிருந்து விட்டார். இது காரணமாக அம்மணி யம்மாள் குடும்பத்தாருக்கும் ராமநாதனுக்கும் விரோத பாவமுண்டாகிக் கடைசியில் முகவிழி யும் இல்லாமற் போய்விட்டது. கோபாலனைப் பற்றிய சிரத்தை தந்தைக்கில்லாதுபோனதும் அவன் மனதின்படி செல்வமாய் நடத்தப்பட்டு வந்ததற்கு ஒரு காரணமாகும்.

(தொடரும்)



# ஓர் உடன்படிக்கை.

(ஸ்ரீமான் M. சுப்பிரமணியம், B. A.)

'ஆறில்லா ஊருக்கழகுபாழ்.' அவ்வூருக்கு அக்குறையுமில்லை. மற்றும் தற்கால நாகரிகம் நிரம்பப்பெற்ற ஓர் பட்டிணம். ராஜ தானியின் தலைமை நகரமான சென்னைக்கு அடுத்ததாகச் சொல்லலாம். புருஷர்கள் அமெ ரிக்கன் கட் கோட்டுகளையும் பிரெஞ்சுக் கிராப்புகளையும் கைக்கொண்டு விட்டார்கள். ஸ்திரீகள் லேட்டெஸ்டு பூட்ஸ்களையும் கோண வகுடையும் ப்ரோச்சையும் சாதாரண மாக வழங்கிவந்தனர். ஒரு விஷயத்தில் அப் பட்டிணத்தினுடைய நாகரிகம் அவ் விராஜதானித் தலைநகரையும் பின் தள்ளியது.

ஒரு நாள் ஒரு மோட்டார்காரில் இரு ஸ்திரீ கள் தங்கள் தலை ரோமங்களை புருஷர்கள் மாதிரி வெட்டிக்கொண்டு இருவரும் வாயில் சிகரெட்டுடனும் ஒருவர் மோட்டார் ஓட்டிக் கொண்டும் போவதைப் பார்த்தேன். அவர் கள் பார்சிப் பெண்களென்று நினைத்தேன். அவர்கள் 'பாப் அண்டு ஷிங்கிள்ஸ்' (Bob and Shingles) ஐயும், இம்பீரியல் ஸ்பெஷல்ஸ் சிகரட்டையும் விளம்பரப்படுத்த ஏதாவது கம் பெனியாரால் அமர்த்தப்பட்ட பெண்களாக இருக்கவேண்டு மென்று நினைத்தேன். ஆனால் அவ்விதம் இல்லையென்றும் அது தற்கால நாகரிகத்தின் அபிவிருத்தி என்றும் கண்டேன். மற்றும் என்ன வேண்டும் ஒருபட்டிணத்துக்கு? ஆம், டிராம்வண்டி கிடையாது. ஆனால் மின்சார சக்திக்குக் குறைவில்லை. ரோடுகளிலும் அநேக வீடுகளிலும் மின்சார விளக்குகள் பல. ஒரு பெரிய பெண்கலாசாலையின் பிரின்சிபல் சீதா தேவி என்ற மாது சிரோன்மணி அந்நகரத்தின் முனிசிபல் கவுன்சிலில் ஒரு அங்கத்தினராக இருக்கிறார். அவருடையகாலேஜின் ஸைன்ஸ்லா பொரேடரிக்கு அபரிமிதமான ஒரு டைனமோ ஸ்தாபிக்கப்பட்டிருந்ததால் அவர் முனிசிபல் கவுன்சிலோடு ஒரு உடன்படிக்கை செய்து கொண்டு தனது மின்சாரத்தை நகரத்துக்குத் தாராளமாய் வழங்கினர். இன்னும் சினிமா, டிராமா தியேட்டர்களும், புதுமாதிரியான மோட்டார்கார்கள், ஸ்திரீகள் சீர்திருத்தப் பிரசார கமிட்டிகள், சங்கீத சபைகள், காப்பி ஹோட்டல்கள், கொலைக் கேசுகள், களவாடல் குடித்தல் முதலிய பலவித அணிகளும் பொருந்தின பட்டிணம். மேலும் இப்பட் டிணத்தை விஸ்தாரமாக எழுதுதல், ஒரு சிறு கதையின் முக்கியாம்சத்திற்கும் அவ்வம் சத்தின் பிரதம ஸ்தானத்திற்கும் (Unity of impression) பங்கம் ஏற்படுமாதலால் இத் துடன் நிறுத்தினேம்.

கோடை காலம். நதியில் ஜலம் ஒரு ஓரமா கப் போகிறது. நதியின் மணல்மேட்டில் ஒரு விக்கினேசுவரர் கோவில் இருக்கிறது. விக்கி னேசுவரரைச் சுற்றி நாற்புறங்களிலும் கற்க ளால் ஒரு தணிந்தமேடை கட்டப்பட்டிருந்தது. சுற்றிலும் சுமார் ஒரு ஆயிரம் பக்தர்கள் உட் காரலாம். அதற்கு மேலும் கூட்டமிருந்தால் ஆற்று மணலில் உட்காரவேண்டியது தான். அந்த விக்கினேசுவரர் மிகவும் வரப்பிரசாதி. அதிகமான நைவேத்தியங்களை எதிர் பார்க்க மாட்டார். பத்துத் தேங்காய்க்கு ஒரு மலட்டு மங்கைக்கு ஒரு மகவைக் கொடுப்பார். ஒழுங் காய் ஒரு வாரம் அவரை தரிசித்தவர்க்குக் கட்டாயமாய்க் குதிரைப் பந்தயத்தில் 100 ரூபாய்க்குக் குறையாமல் கிடைக்கும். டைபா யிட் ஜுரத்தை அவருடைய வீபூதியால் போக் கடிப்பார். ஆதலின் பக்தர்கள் கோடி கோடி கள். விநாயகர் தற்சமயம் சங்கீதப் பேற்றில் மூழ்கியிருக்கிறார்.

பெரிய கூட்டம்; ஆடவர், ஸ்திரீகள் அடி பிடி போட்டுக்கொண்டு உட்கார இடந்தேடு கிறார்கள். நெல்லூர் சாமிநாத பாகவதர் பாட்டு, கடப்பை தீக்ஷிதரவர்கள் பிடில் வாசிக் கிறார்.

மரகதம் :—ஈசுவரீ ! என்ன ராகம் பாடுகிறார் ?

ராஜேசுவரி :—அடியே ! என்னை 'ஈசுவரீ' யென்று கூப்பிடாதே என்பதை எத்தனை தாம் சொல்லுகிறது. 'ராஜம்' என்று கூப்பிடேன். நானென்ன 'ஈசுவரியா' உங்களுக்கு?

மரகதம் :—உன்னை உன் மாமியார் 'ஈசுவரீ' என்று தானே அழைத்தாள். அதனாலே தான் நானும் அப்படிக் கூப்பிட்டேன்.

ராஜ :—மாமியார் போன இடம் புல் முளைத் துப் போய்விட்டதே. அவளோடே அப் பெயர் ஒழியக்கூடாதா ?

பட்டு :—ஏண்டீ ! 'இராஜேசுவரி' யென்று முழுப் பெயரையும் சொல்லிக் கூப்பிடுவோம் இனிமேல். அதிருக்கட்டும். அவர் என்ன ராகம் பாடிக்கொண்டிருக்கிறார் ?

ராஜ :—'ஈசுவரியே' வேண்டாம். ராஜம் என்று தான் அழைக்கவேண்டும்.

நீலாம்பாள் :—ராஜம் ! உன் புருஷன் உன்னை என்ன சொல்லிக் கூப்பிடுகிறார் ?

ராஜ :—(சிரித்துக்கொண்டு) அதைக் கேட் டாயா ? அவருடைய அம்மா இருந்த வரை யும், அந்தக் கர்நாடக 'அடியே' தான் அவ ருக்குத் தெரியும். இப்பொழுது என்னை 'ராஜம்', 'ராஜம்' என்று அப்பொழுது சொல்லாத ராஜத்தையெல்லாம் சேர்த்துச் சொல்லிக்கொண்டிருக்கிறார்.

இவ்விதம் நாலைந்து பெண்கள், அதாவது, ஏறக்குறைய சமவயதுடைய யௌவன மங்கை கள் சங்கீதம் கேட்டுக்கொண்டிருக்கின்றனர். பிராரப்தம், அவர்கள் பக்கத்தில் மீனாக்ஷி அம் மாள் என்ற சுமார் 60 வயதும் நெற்றியில் பிரகா சமான பெரிய குங்குமப் பொட்டும், தலை நரைத்த மயிரும் வாயில் வெற்றிலையும் உடைய தீர்க்க சுமங்கலி ஒருவர் உட் கார்ந்துகொண்டிருந்தார். அந்த அம்மாள், அந்த சங்கீதத்தில் பரவசமாயிருந்தார். பழுத்த ஞானமுடையவராகக் காணப்பட் டார். 'ஏதடா சனியன் ! இப்பெண்கள் பக்கத்தில் உட்கார நேர்ந்ததே' என்று நொந்தவராய் அடிக்கடி அப்பெண்கள் சப் தம் உரத்தவிடத்து அவர்களைப் பார்த்து ஏதோ முணுமுணுத்துக் கொண்டும் பல்லைக் கடித்துக் கொண்டு மிருந்தார். அவ் விடத்தை விட்டுத் தப்பித்துப் போகவும் ஜன நெருக்கம் இடந்தருது அப்படியாகச் சிரமப்பட்டு எழுந்து போய்விட்டால் உட் கார வேறு இதைவிட சௌகரியமான இடங்கிடையாது. வயதாய் விட்டதால், இருவரை இடித்துத் தள்ளிக்கொண்டு இடம் பிடிக்கவும் இயலாது. சிறு பெண்கள் தாராளமாக ஆடவர்களுக் கிடையில் பாக வதர் பக்கத்திற் போக முயற்சித்தால் அநு கூலமாக முடிகிறது. புருஷர்கள், இயற்கையா கத் தங்கள் சகோதரிகளுக்குக் காட்டவேண் டிய உபசாரத்தாலோ, அல்லது அம்மாது களின் படாடோபத்துக்கு பயந்தோ விலகி வழிவிடுகிறார்கள். நமது மீனாக்ஷி அம்மாள் அவ்வித உரிமையை ஸ்தாபிக்க முயன்றால், அன்பும் தியாகமுமே உருக் கொண்ட குப்புசாமியுங் கூட 'ஏ ! கிழமே! ஏன் ? அங்கிருந்து பாட்டுக் கேட்டால் போறாதோ, சாகப் போகிற வயதாகிறதே, சங்கீதமென்ன உனக்கு?' என்கிறான். ஆகவே மீனாக்ஷியம்மாளின் சங்கீதஞானம் சாந்தியடைந்த பாடில்லை. பெண்கள் பேச்சும் ஓய்ந்த பாடில்லை. பேச்சு ஓய்வதா யிருந்தாலும் ராஜேசுவரியின் சக்தியால்

அது வேறு ஒரு விஷயத்தில் செலுத்தப் பட்டு, வளர்ந்துகொண்டேயிருந்தது.

மாக :—என்னடீ! என்ன ராகம் பாடுகிறார் என்று சொல்ல மாட்டேனென்கிறாய்! வெளியில் மாத்திரம் சகலமும் தெரிந்தமாதிரி பேசிக் கொள்ளுகிறாய்! வீணை வாசிக் கிறாய்!

ராஜ :—ஏண்டீ! எனக்குத் தெரியாதா! 'பைரவி' ராகம் பாடுகிறார்—சீ! எனக்குப் பிடிக்க வில்லை. அபஸ்வரம் பேசுகிறது" (கொஞ்சம் நின்று கவனித்து, முகத்தையும் சுளித்துக் கொண்டு) அதோ கவனி! அந்த இடம் அப் படியா பாடுகிறது?" (ஏறக்குறைய சுற்றி யிருக்கும் ஒரு 7, 8 ஸ்திரீகளுக்குக் கேட் கும்படியாய் அரை நிமிஷம் பாடிவிட்டு) "இப்படிப் பாடவேண்டும்" என்று சொன் னாள். (பின்னும்) "அந்த ஜீவஸ்வரத்தை நன்றாய் அழுத்திப் பாடவேண்டாமோ" (என்று விஸ்தரித்து இரண்டு மூன்று தரம் ஒரு ஸ்வரத்தைப் பல்லைக் கடித்துக்கொண்டு பாடிக்காட்டி, ஒரு முத்தாய்ப்பு வைத்தாள்.)

மீனாக்ஷி அம்மாள். பொறுத்தார். சிறு பெண்களானதால் அவைகளோடு வார்த்தை யாடினால் தாரதம் அறியாமல் உளறும் என்று வாயை மூடிக் கொண்டிருந்தார். ஆனால் இனிப் பொருக்கத்தக்கதல்ல. மீனாக்ஷி அம்மாள் தனக்கு ஏதாவது அவ மரியாதை அப்பெண்களால் ஏற்பட்டால் பொறுத்துக்கொள்வார். அன்றி, சங்கீத சாகரத்துக்கே அபசார மிழைத்தல் மன்னிக் கத்தக்கதல்ல.

மீனாக்ஷி :—ராஜம்! அடி குழந்தாய்! உன் பேர் ராஜம் தானே! நீ கொஞ்சம் வாயை மூடிக்கொண்டிருக்கமாட்டாயோ? இந்த சபையில் எவ்வளவோ ஞானமுடையவர்கள் இருக்கிறார்கள். அவர்களைப்போல் கொஞ்சம் இரு.

மற்றப் பெண்கள் "பேஷ்! பாட்டி!" என்று சிரித்தார்கள். மீனாக்ஷி அம்மாள் விடாமல் "குழந் தைகளா! உங்களுக்கும் கூடத்தான்" என்று முடித்தார். ராஜேசுவரிக்குக் கோபம் வந்து விட்டது. ஏககாலத்தில், ஒருகையால் தன் மூக்குக்கண்ணாடியைக் கழிற்றியும் மற்றொரு கையால் தன் இடுப்பில் செருகியிருந்த கைக்கு ட்டையை எடுத்தும் முதலில் தன் முகத்தை யும் பின் இரு கண்ணாடிகளையும் கைக்குட்டை யால் துடைத்தாள். இடது கையில் கண்ணாடி யோடு பாட்டியை நோக்கி உட்கார்ந்தபடியே கொஞ்சம் நகர்ந்தாள். பாட்டியைப் பார்த்து ஒரு விழிவிழித்தாள். பாட்டிக்குக் கொஞ்சம் பயம் வந்து விட்டது. ராஜேசுவரி கொஞ்சம் நிறத்தில் கருப்பு. இப்பொழுது தான் கொஞ் சம் ஜுரத்திலிருந்து எழுந்திருந்ததால் தலை மயிர் உதிர்ந்து கொஞ்சம் பரட்டையாயிருந்தது கைகளும் தேகத்துக்குச் சரியான அளவு பரு மனுயில்லை. உடுத்தி யிருந்ததும் ஒரு கருப்புச் சேலை. இந்த ஸ்வரூபத்தை இராஜேவசுரி தற் கால நாகரிகத்திற்கொப்ப பல்வகைகளிலும் செயற்கையால் அலங்கரித்திருந்தபோதிலும் மீனாக்ஷி அம்மாளுக்குக் கொஞ்சம் திகில் உண் டாயிற்று. ஆனாலும் மீனாக்ஷி அம்மாளும் என்ன! பழம் பெரிச்சாளியல்லவா? அவர் தனக்குப் பதினைந்து வயது வரையிலும் தன் ஊரிலுள்ள வர்களை யெல்லாம் தன்னைக்கண்டு பயந்தோடும் படி செய்தவரில்லையா. அவர்காலத்தில் ஒருதரம் நதியில்பிரவாகம் அதிகம். சுந்தரத்தின் குழந்தை தவறி விழுந்துவிட்டபொழுது மீனாக்ஷி அம் மாள் நதியில் குதித்து நீந்திக் குழந்தையைக் காப்பாற்றினார். அம்மீனாக்ஷி அம்மாள் எளி தில் இராஜேசுவரியின் விழிக்கு பயந்துவிடு வாரா? கொஞ்சம் யோசனை பண்ணினார். பின்

தானும் ஒரு தீர்க்கமான பார்வையுடன் இரா ஜேசுவரியின் பார்வையை சந்தித்தார். மங்கை தன் பார்வையைக் கொஞ்சம் இறக்கி! "ஏ! பாட்டி! உனக்கு ரொம்ப ஞானமோ? நாங்கள் அப்படித்தான் பேசிக்கொண்டிருப்போம். நீ வேணுமானுல் வேறு எங்கேயாவது போய் உட்கார்ந்து தொலையேன்!" என்ருள்.

பட்டு :—ராஜம்! ஏதடி! ஐயோ பாபம்! பாட்டி பெரியவரில்லையோடி! அவரிடம் மரியாதையாகப் பேசவேண்டாமோ?

ராஜ :—பாட்டியை நீ நமஸ்காரம் பண்ணி உன் வீட்டுக்கழைத்துக் கொண்டுபோ. தாளமு மில்லை, அபஸ்வரப்பிண்டம்; இந்தப்பாட்டுக் கேழ்க நமக்கு ஞானமில்லையாம்.

மீனு :—குழந்தாய்! நிறுத்து என்ருல் நிறுத் தமாட்டேனென்கிருய். உனக்கு மிகவும் தாளஞானம், ராகஞானம் எல்லாம் இருக் கிறதென்று சொல்லிக் கொள்ளுகிருய். பெரிய வித்துவானுன நெல்லூர் பாகவதா வர்களைத் தூஷிக்கிருய். உன்னைப் பார்த்தால் நன்ருய்ப் படித்தவள் போலும் தோன்று கிறது. முதலில் உனக்கு அவர் பாடும் ராகம் தெரியவில்லையே.

ராஜ :—என் பாட்டி! நான் சொன்னேனே! 'பைரவி'......

மீனு :—மெள்ள. உரக்கச்சொல்லாதே. பாடும் ராகம் பைரவி யல்ல. கரகரப்பிரியா பாடுகி ருர். நீ ஸ்வாஞானம் உள்ளவளென்று சொ ல்லிக்கொள்ளுகிருயே! அவர் பாடுவதில் எங் கேயாவது உனக்கு 'சுத்த த்வைதம்' தெரி கிறதா? மிகவும் இனிமையாகவும் அபூர்வ மாகவும் கரகரப்பிரியா ராகத்தை விஸ்தரித் தும் பாடுகிருரே! கேட்கக்கூடாதா? எந்த சபையிலும் அமைதியாகவும் பிரசங்கத்தை யோ சங்கீதத்தையோ தன் மனதில் கர்த் தாவின்பால் எழும் அனுகூலமான அல்லது பிரதிகூலமான எழுச்சிகளைப் பலர் அறியும் விதம் வெளிக்காட்டாமல் அனுபவிப்பதே உத்தமம். அதிலும் அரைகுறையாய்ப் படித் துவிட்டு ஒன்றும் தெரியாமல் வித்துவான் களை தூஷிப்பது பாதகம். உனக்கு........

நான்காவது பெண் :—ஏது பாட்டி! ஒரு பிர சங்கம் ஆரம்பித்துவிட்டீர்களே!

மீனுக்ஷி :—நான் பிரசங்கம் செய்யவில்லை. தயவு செய்து இனிமேல் ஒன்றும் பேசா மல் பாடுவதைக் கவனிப்போம். பேசினுல் வேறு யாராவது நம்மைக் கண்டிப்பார்கள்.

இவர்களிருக்கும் இடத்திற்கு சமீபமாக சுமார் 25 வயதுடைய ஒரு ஆடவர் உட் கார்ந்திருந்தார். அவர் இச்சம்பாஷணையைப் பூராகவும் கவனித்தார் என்றுதான் அனுமா னிக்கவேண்டும். ஏனென்ருல் கீழே படுக்க வைத்திருந்த பிரம்பை எழுப்பி அதனுதவியால் தானும் எழுந்திருந்தார். இரண்டோரடி இவர் களை நெருங்கி "ராஜம்! எழுந்திரு! நாழியாகி றது" என்ருர். ராஜமும் தன் பர்த்தாவைப் பார்த்தவுடன் எழுந்திருந்து "பாட்டி! போயிட் டுவரேன்" என்று சொல்லிப் பதியையடைந் தாள். இருவரும் கொஞ்சம் வெளியிற் சென்ற வுடன், "எப்பொழுதுவந்தீர்கள்கச்சேரிக்கு?" என்று ராஜம் குற்றமுள்ள பார்வையுடன் வினவினுள். "நான் இப்பொழுதுதான்வந்தேன். அதைவிடு. நீ இவ்விதம் சாயுங்காலமே புறப் பட்டுக் கோவிலுக்கு வந்தவள் மணி 9½ ஆயும் எழுந்திருக்கவழியில்லையே! இவ்வளவு நாழியும் சங்கீதத்தையாவது ஆனந்தமாய் நீ கேட்டுக் கொண்டிருந்தால், ஒரு திருப்தி ஏற்படும். கம லுப்பாட்டியோ, தன் பெண்வீட்டில் அவசர சமாசாரம் ஒன்றைச் சொல்லிக்கொண்டு நீ போன உடனே தானும் போய்விட்டாள். நான் தனியே இருக்கவேண்டியதாயிற்று. கமலுப் பாட்டி வெளியேறினுல் நமக்கும் பட்டினிதான்

போலிருக்கிறது. உனக்கோ சமையல் தொழில் பிடிக்கவில்லை."

ராஜ:—பாட்டி இப்படித்தான். வாரத்துக்கு மூன்றுநாள் இவ்விதம் போய்விடுகிறாள். சம்பளம் மாத்திரம் ஒழுங்காய்க் கேட்பாள்.

கோபாலன்:—ராஜம்! இது எதற்கு? நமக்கென்ன, குழந்தையா? குட்டியா? சமையற்காரி வேண்டாமென்று தீர்மானித்து விட்டேன். சமையற்காரி இருக்கிறதால் உனக்குச் சமையல் செய்யத் தெரியாமலே போகிறதோடு, வேறு கெடுதல்களையும் செய்கிறது. அவள் சமையலைப் பார்க்கிறாள், நீ சங்கீத சபையைப் பார்க்கிறாய், நான் இரண்டு அணா மேஜைக்குறெந்து ஆட்டம் ஆடப்போய்விடுகிறேன். கமலுப்பாட்டியை யனுப்பிவிட்டால், நாமிருவரும் ஒருவருக்கொருவர் துணையாக நம் காரியங்களைச் சேர்த்துப் பார்க்கலாம். நான் சீட்டாட்டத்தை விட்டுவிடுகிறேன். நாம் சங்கீத சபைகளுக்கும் சினிமா முதலியவைகளுக்கும் தனித்தனியாய்ப் போய்க்கொண்டிருந்தோம். இனிசேர்ந்து போவோம். அமைதியாய்க் கேட்டு அனாவசியமாக ஒருவருடனும் வாதாடாமல் திரும்பி வரலாம். எனக்கென்ன ஆபீஸ் விட்டு ஐந்து மணிக்கு வீட்டுக்குவந்தால் வேறு வேலை? இல்லை. உன்னை நான் சந்தோஷப்படுத்துவதிலும் நீ என்னை சந்தோஷப்படுத்துவதிலும் கருத்தாயிருப்போமே.

இதற்குள் அனேகமாய் அவர்கள் வீடு வந்து விட்டார்கள்.

ராஜ:—தாங்கள் பேசினதவ்வளவும் ரொம்ப அழகாயிருக்கிறது. நானும் அதற்குச் சம்மதிக்கிறேன். ஆனால் ஒரு விஷயம் மறந்து விட்டீர்கள். நம் காரியம் அவ்வளவையும் நாம் இருவரும் சேர்ந்து செய்வோ மென்றீர்களே! அந்த ஒத்துழைப்பு சமையல் வேலையையும் ஒப்புக்கொள்ளுகிறதோ?

கோப:—என்ன? நீ ஒரு நாள், நான் ஒரு நாளாகச் சமைக்க வேண்டு மென்கிறாயா?

ராஜ:—ஐயையோ! உங்களுக்கு மூளையே கிடையாது. தாம் ஒரு நாள் சமைத்தால் தங்களுடைய ஆபீசில் என்னை ஒரு நாள் வேலை பார்க்க விடுவார்களா? நான் எப்பொழுதும் சமைக்கிறேன். தாங்கள் காலையிலும் சாயுங்காலமும் என் கூடவே இருந்து வர்த்தமானங்களைப்படிக்கவும், நான் சமையலைச் செய்து கொண்டே தாம் படிப்பதையும் கேட்டுக் கொள்ளுவேன்.

கோப:—பேஷ்! சரியான உடன்படிக்கை.

---

EVERY HOUSE
SHOULD STOCK A BOTTLE OF
AMRUTANJAN
THE BEST PAIN BALM.
**Price As. 10 a bottle.**

# CHINTHAMANI.

**A HIGH CLASS TAMIL MONTHLY.**

*(Devoted mainly to the cause of Indian Women.)*

EDITOR SISTER V. BALAMMAL.

Vol. V.] June 1929. [No. 11.


श्री शारदायै नमः।



श्रीरामचन्द्रपरब्रह्मणे नमः

# சிந்தாமணி

## சுபோத ராம சரிதம்.

COMPOSED AND ANNOTATED BY

SISTER V. BALAMMAL

DAUGHTER OF

*Late Dr. A. R. VAIDYANATHA SASTRIAR, M. A., M. B. & C. M.*

(*All Rights reserved by the Authoress*)

### सुबोधरामचरिते

### ॥ युद्धकांडः ॥

प्रणतं तं महाबाहुश्शरण्यश्श्रितवत्सलः ।
उवाच रघुवीरोऽसौ धर्मात्मानं विभीषणम् ॥ ४ ॥

श्रितवत्सलः அண்டினவர்களிடத்தில் அன்புற்றவரும் शरण्यः சரணமளிக்கக்கூடியவரும் महाबाहुः தீர புருஷனும் ஆகிய असौ அந்த रघुवीरः ரகுபதியானவர் धर्मात्मानं சற்புருஷனும் प्रणतं நமஸ்கரித்தவரும் ஆகிய तं அந்த विभीषणं விபீஷணரை (க்குறித்து) उवाच உரைத்தார் ॥ ४ ॥

रणे दशमुखं जित्वा सपुत्रं सबलानुगम् ।
लङ्काधीशं करिष्यामि त्वामेव नचिरादिति ॥ ५ ॥

सबलानुगं சேனை பரிவாரங்களுடன் கூடினவனும் सपुत्रं பிள்ளைகளுடன் கூடினவனுமுள்ள दशमुखं ராவணனை रणे யுத்தத்தில் जित्वा ஜயித்து त्वामेव உன்னையே नचिरात् கூடிய சீக்கிரத்தில் लंकाधीशं இலங்கைக்கு நாயகனாக करिष्यामि செய்கிறேன் इति என்று (उवाच உரைத்தார்) ॥ ५ ॥

अथ राघवनिर्देशान्नलः कपिवरैस्सह ।
ववन्ध सागरे सेतुं तदादिष्टेन वर्त्मना ॥ ६ ॥

अथ பிறகு राघवनिर्देशात् ராமருடைய கட்டளையால் कपिवरैः सह வானர வீரர்களுடன் கூட नलः நளன் सागरे சமுத்திரத்தில் तदादिष्टेन சமுத்திர ராஜனால் கூறப்பட்ட वर्त्मना பாதையால் सेतुं பாலத்தை ववंध கட்டினான் ॥ ६ ॥

तीर्त्वा च सेतुना तेन जलधिं दुस्तरं क्षणात् ।
सुग्रीवप्रमुखैस्साकं सुवेलं प्राप राघवः ॥ ७ ॥

राघवः ஸ்ரீராமர் सुग्रीवप्रमुखैः साकं சுக்கிரீவன் முதலியவர்களுடன் दुस्तरं தாண்ட முடியாத ஆழமுள்ள जलधिं சாகரத்தை तेन அந்த सेतुना பாலத்தினால் क्षणात् கணப்பொழுதில் तीर्त्वा தாண்டி सुवेलं च சுவேலமென்ற பர்வதத்தையும் प्राप அடைந்தார் ॥ ८ ॥

(*To be continued*)

ஸ்ரீராமஜயம்.




தமிழ் நாட்டுப் பெண்மணிகளின் முன்னேற்றத்தை முக்கிய
மாகக்கொண்டு வெளிவரும் ஓர் உயர்தர மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை.

பத்திராதிபர் சகோதரி வி. பாலம்மாள்.

மலர் 5.] சுக்ல—ஆனி. [இதழ் 11.

# கிராமவாழ்க்கையும் பெண்மக்களும்.

(பத்திராதிபர்.)

தற்காலத்திலுள்ளவர்களிடத்தில் கிராமம் என்றால் நாகரிக மற்ற நாடு என்று அவர்கள் நினைப்பதும், நகரம் பட்டணவாசம் என்றால் அது ஓர் உயர்ந்த இடமென நினைப்பதும் சகஜமாய் விட்டது. சுத்த ஆகாயமும் சுதந்தர ஜீவனமும் விஸ்தாரமான இடமும் சோலைகளும் பசுமரங்களும் குளமும் ஆற்றங்கரையும் ஒற்றுமையும் கட்டுப்பாடும் சகோதரத்துவமும் கொண்டு வாழுமிடங்கள் கிராமங்களெனப்படும். இயற்கை சுகாதாரமும் வாழ்க்கையும் பொருந்திய விடங்கள் கிராமங்களென்பதை அனுபவமுள்ளவர்கள் அறிவார்கள். நம் நாட்டில் சுதந்தர ஜீவனம் கைவிடப்பட்டதிலிருந்து நகரங்களும் நகரவாழ்க்கையும் பெருகலாயின. வாணிபம், விவசாயம், கைத்தொழில் இவைகளைக் கொண்டு இந்திய மக்கள் வாழ்ந்தகாலத்தில் அவர்களுக்கு சுகாதாரம் பொருந்திய கிராம வாசமே ஏற்றதாக விருந்தது.

ஆங்கிலக் கல்வி நம்மிடையே தோன்றி நம்மவர்கள் அதைப் பின்பற்றிய கால மிருந்து கிராமவாழ்க்கை பாழ்படலாயிற்று. தற்காலம் கங்காணிகள் மூலம் வெளிநாடுகளுக்கு இந்தியர்கள் கூலிகளென்ற பெயரால் கடத்தப்படுவது போல ஆங்கிலக் கல்வியால் மிராசுதாரர்களும் மிட்டாதார்களுமுள்பட மற்றவர்களும் கிராம வாசத்தினின்றும் நகரவாழ்க்கையாகும் நாகவாழ்க்கைக்குக் கடத்தப்பட்டார்கள். இதிலிருந்து சுகாதாரமுற்ற கிராம வாழ்க்கை ஒவ்வொருவராலும் புறகணிககப்படலாயிற்று.

சுகஜீவிகளாக வீட்டிலிருந்தவாறு அடக்கத்துடனும் சிக்கனத்துடனும் காலங்கழிப்பவர்க

ளான இந்தியப் பெண்கள் கிராமவாழ்க்கையில் சீரும் சிறப்புமுற்று வாழ்ந்து வந்தார்கள். அவர்களது தேக சுகம் கிராமக் கட்டுப்பாட்டினால் நன்கு பரிபாலிக்கப்பட்டு வந்தது. கிராமங்களில் பெண்கள் தேகதிடத்துடனும் மனவமைதியுடனும் காலங் கழித்தனர்.

நல்ல காற்றும் பரிசுத்த உணவும் கொண்டு தங்கள் கைகளாலேயே குடும்பகாரியங்களை நிர்வாகம் செய்து தேகபலத்தையும் உடல் வன்மையையும் வளர்த்துக் காலந்தள்ளும் கிராமவாசிகள் எப்பாகத்திலும் ஆரோக்கிய திடகாத்திரத்துடன் அமைதியான தோற்றத்துடன் காணப்படுவது உண்மையிலும் உண்மை.

கிராமத்தில் ஆடவன் தன் கைப்பட வெளி வேலைகளைச் செய்வான். பெண்பால் தன் கைப்பட வீட்டுவேலைகளைச் செய்வாள். ஆண் பெண் இருவரும் ஆடம்பரத்திலீடுபடாது அவரவர்களின் வருவாய்க் கேற்றபடி சிக்கனமாகவும் ஒன்றுமையாகவும் குடும்ப நிர்வாகம் செய்து வந்தனர். இவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகளும் தேகதிடம் குன்றாது தீர்க்காயுசுள்ளவைகளாக இருந்தன. இவர்களுக்களிக்கப்பட்ட உணவும் அதிகச் செலவின்றி சரீரத்தை நோயணுக வொட்டாது காப்பாற்றி வந்தது. கிராமத்தில் வளரும் பிள்ளைகள் இளமை முதல் தாய் தந்தையர்களுக்கு உதவி புரிவதை மூக்கிய வழக்கமாகக் கொண்டு நடந்தார்கள். கிராமத்தில் ஆடவன் தனக்குள்ள பயிர் பச்சைகளைத் தானே கவனிக்காவிடில் நஷ்டப்படுவோ மென்றும், பெண்மகள் தனது வீட்டுக்காரியங்களைத் தானே செய்து கொள்ளாவிடில் குடும்ப மழிந்துவிடுமென்றும் வற்புறுத்தப்பட்டதினுல் அவ்வாழ்க்கை மேன்மையுற்றதாக விருந்தது. இவைகளை விடுத்து ஆயிரம் ஆயிரமாகக் கைப்பொருளைச் செலவழித்தேனும் நகரத்தில் மாதம் பத்து ரூபாய் சம்பளத்திற்குப் பல்லைக் காட்டித் திரிந்து பலர் காலில் விழுந்து புறண்டு திண்டாடுவதை ஆண்களும், விஸ்தாரமான வீடற்று, சுத்த ஆகாய மற்று, நல்ல தண்ணீரற்று, பந்து மித்திரர்களின் உதவியற்று, கும்மட்டிக் கரியில் அலுமினியம் அடுக்கில் ஆழாக்கு அரிசிவைத்து வெந்ததும் வேகாததுமாகத் தின்று விட்டுக் கிளப்பில் விற்கும் தின்பண்டங்களையும் துணியில் தைத்தபுஷ்பங்களையும் அழுத்தமும் நாணயமுமற்ற சல்லாத் துணிகளின் உடையையும், சினிமா, டிராமா, கண்காட்சிகளையும் சரணமென நம்பியாவது காலங்கழிக்கும் நகரவாழ்க்கையைப் பெண்களும் விரும்பியதால் சுகமற்று, சுதந்தரமற்று, சுத்த ஆகாயமற்று, தேகபலமற்று, கையில் காசற்று, முகத்தில் ஒளியற்று, மனதில் அமைதியற்று, வாழ்வில் ஒற்றுமையற்று விவசாய மழிந்து, வியாபார மொழிந்து, வாணிபம் சிதைந்து நம் நாடு இக்கதிக்காளாயிருக்கிற தென்பதை நம்மவர் இனியேனுமுணர்வார்களா? பெண்கள் கிராம வாழ்க்கையை விரும்பி அதிலுள்ள உயர்வை உணரும் பட்சத்தில் வரதட்சிணைக் கொடுமையும் பெண்களின் அகால மரணமும் சிசுமரணமும் இவ்வாறு நாளுக்கு நாள் பெறுகுமா? பெண்கள் பதினைந்து வயதிலிருந்து தோலும் எலும்புமாகத் திரிவார்களா? ஒவ்வொரு வீடும் மருந்துச்சாலைகளாகவும், ஒவ்வொரு சரீரமும் மருந்துக் கூடுகளாகவும் இருக்குமா? தலை விதியாலும் தற்கால நிலைமையாலும் ஆண் பெண் அடங்க நகரவாசத்திற்கு ஆளாய் விட்ட போதிலும் அவ்விடத்திலும் சுகாதாரமுறைக் கேற்ற கிராமப் பழக்கங்களைச் கைக்கொண்டு நடக்கலாகாதா? முன்னோர்களின் பழக்கங்களைப் பின்பற்றக் கூடாதா? வீட்டு வேலை செய்து உடல் நலத்தை வளர்க்கலாகாதா? தான் பெற்ற குழவிக்குத் தன் பாலை ஊட்டி வரலாகாதா? குடும்பநிர்வாகமே பெண்களுக்கு முதன்மையான அந்தஸ்தென்பதை உணரலாகாதா? தாங்கள் சிக்கனமாகவிருந்து அது வழியே ஆடவர்களையும் நல்வழிபடுத்தக் கூடாதா? அயல் நாட்டு மினி மினிப்பூச்சி வாழ்க்கையை நம் பெண்களும் சதமெனப் பின்பற்ற வேண்டுமோ?

## "சிந்தாமணி" வாழ்த்து.

(ஸ்ரீமான் ஆ. வ. பதுமநாப பிள்ளை.)

(அறுசீர் விருத்தங்கள்)

சீரார் வளத்தின் மிக்கவெழில் சென்னைப்பதியில் மயிலைதனில்
காரார் நிறத்துச் சத்தியுளக் கருணைத்துணையாற் பாலம்மை
பேரார் நற்சோதரி நடத்தும் பெருமைமிகு சஞ்சிகையாகும்
ஏரார் சிந்தாமணி யெங்கும் இலங்கி புகழிற் றுலங்குகவே! (1)

நந்தாய்மொழியாஞ் செந்தமிழும் நாடும் பழையபுகழெய்தி
நந்தா![1] அறிவு வளம்பெறவே நன்றே யுழைத்து வருகின்றாய்!
சிந்தாமணியே! செழுமணியே! தெருளை[2] விளக்கும் திருவனையாய்!
சந்தாதாரர் பலர்பெற்றுத் தமிழ்நாட்டுலவி வருவாயே! (2)

சத்தியமே உலகென்பர் சான்றோர் பலரும், மங்கையராம்
முத்திறத்துத் தேவியர்தம் மொழியுந்துணையே இலதேலெப்
பத்திபுரியு மன்பர்களும் பயன்பெற்றுய்யார், அறப்போரில்
சித்தி விழையின் சோதரிகள் தேசப்பணி செய்திடவேண்டும். (3)

அயனாட்டினரைப் பின்பற்றி அறிவாராய்ச்சி புரியாதே
மயலேமிகுத்து தமிழ்த்தாயை மறந்தே புறநாகரிகத்தே
வியந்துவிழுந்தார் மாதர்பலர் வீழ்ந்தோர்தங்கள் பிழையையுணர்ந்(து)
உயவே சிந்தாமணியே! நல் லுரையா லவரைத் திருத்தியே! (4)

கயிலைக்கடவு ளொடுகந்தன் களிற்றுமுகத்தன் கடல்வண்ணன்
வெயிலைப்பரப்பும் செங்கதிரோன் வேறுள்ளோரு(ம்) நினக்கருள்க!
துயிலையொழித்துப் பணிபுரியத் தூண்டி மகளிர் செய்தவமாய்
மயிலைப்பதியில் வருசிந்தா மணியே! வாழி வாழியவே! (5)

1 நந்தா—குறை; 2—தெருள்—தெளிவு.

## திருவாசகம்.

(ஸ்ரீமான் கா. சி. சிவசங்கர முதலியார்.)

வானாகி மண்ணாகி வெளியாகி யொளியாகி
ஊனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே.

ஒளியாகவும், நிலமாகவும், காற்றாகவும், தீயாகவும், உடம்பாகவும், உயிராகவும், உள்ளதாகவும், இல்லதாகவும், தலைவனாகவும், நான், என்னுடையதென்று ஆங்காரங் கொண்டோரை அவ்வார் ஆணவத்திற்குத் தக்கவாறு மறக்கருணையால் தண்டித்து அறிவுகொடுத்து நின்றவனுமாகிய நின்னை ஆண்டவனே, என் சிற்றறிவால் என் சொல்லி வாழ்த்துவேன் என்றவாறு.

# நமது மாணவர்களின் மனப்பான்மை.

(ஸ்ரீமான் மயிலை. இரத்தினசபாபதி முதலியார்.)

நமது மாகாணத்து மாணவர்களிற் பெரும்பான்மையோர் ஆங்கிலம் கற்கவேண்டிய அவசியம் ஏற்பட்டிருப்பினும் கல்வியின் பயன் ஒழுக்கமென்பதை மறந்து, தாய் பாஷையில் அபிமானமின்றி, எண்ணத்திலும் செய்கையிலும் வேறுபட்டு வேறு ஜனங்களிடத்திலும், வேறு உலகத்திலும் பழகியும் சஞ்சரித்தும் வருகிறார்கள். "கண்டது கற்கப் பண்டிதனாவான்" என்பது உண்மையாயினும், "தன்னைப் பெற்ற தாயார் கிண்ணிபிச்சையெடுக்கத் தம்பி கும்பகோணத்தில் கோதானம், பூதானம் செய்தானும்" என்றபடி தாயினுமினிய தமிழையும், அருமை நூல்களையும் அலட்சியம் செய்து வீட்டிலும், கல்லூரியிலும், பொதுக் கூட்டங்களிலும் தேவாலயங்களிலும், பெற்றோரிடமும், பெண்டு பிள்ளைகளிடமும், நண்பருடனும் ஆங்கிலம் பேசி ஆனந்திக்கிறார்களேயன்றி தாய்பாஷையைச் சொப்பனத்திலும் நினைக்கும் மாணவர்களின் தொகை நாளுக்கு நாள் அருகிவருவது நமது தமிழ் நாட்டின் துர்ப்பாக்கியமேயாம். நமது மாணவர்களுக்கு பாஷாபிமானமின்மையால் திருவள்ளுவர், கம்பர், காளிதாசர் செய்த பாக்களின் சுவையை அறியவல்லார் எத்தனை பேருளர்? பிஷ்மர், அர்ச்சுனர் வீரச் செயல்களை வியப்பார் எத்தனை பேருளர்? தர்மத்தை உலகத்தின் பொருட்டு நடத்திக் காட்டிய ஸ்ரீ ராமகிருஷ்ணாதி அவதாரங்களின் அரிய பெரிய செயல்களை உணர்ந்தார் எத்தனை பேர்? ஞானச் சுடர்களாய் விளங்கிய புத்தர், சங்கரர், இராமானுஜர் செய்த ஆசார சீர்திருத்தங்களை அறிந்தார் எத்தனை பேர்? சுவாமி ராமதீர்த்தரின் வீரமொழிகளை உள்ளபடி உணர்ந்தார் எத்தனையோ? நமது பாஷையை முற்றும் மறந்த தோஷத்தினால் தற்கால மாணவர்கள் ஒப்பற்ற உயர்ந்த நூல்களையும், உண்மையில் பெரியோர்களையும் கைவிட்டு மதிமயங்கி, நடை, உடை பாவனை எல்லாவற்றையும் இழந்து உருமாறித் திரிவதைக் கண்டு புகழ்வதா, இகழ்வதா? "கற்க கசடறக் கற்றவை கற்றபின் நிற்க அதற்குத்தக" என்பதை உணர்ந்து வாசிப்பதே கல்வி. எல்லாக் கொடிய பாபங்களிலும் நமது மாணவர்கள் சிகரெட், பீடி, சுருட்டு இப்பழக்கங்களை மேற்கொண்டு, ஏராளமான பணத்தை சிகரெட்டுக்கும் பீடிக்கும் செலவிட்டு உதடு கறுத்து, கண் புதைந்து, முகப் பொலிவு குன்றி, உள்ளக் களிப்பு உற்சாகமுமின்றி, உயிரற்ற உடல்களைத் தாங்கிக் கண்டவர் நகைக்கத்திரிவது பெற்றோர்களுக்கும் மற்றவர்களுக்கும் பெருந் துயரத்தை உண்டாக்கும். நமது வைத்திய நூல்களில் கண்டித்து இகழ்ந்து கூறிய புகையிலை சம்பந்தமான புகைக்கு உள்ளம் பூரித்து, ஏராளமான பணத்தை அற்ப அசுத்த வாசனைகளுக்குச் செலவழித்து இருமல் முதலிய ரோகங்களினால் தனக்கும் பிறர்க்கும் சுமையாகி அற்ப வயதில் மாணவர்கள் மாண்டு வருவது எல்லோர் மனதையும் புண்படுத்தி வருகின்றது. தேக சௌக்கியமே செல்வமாதலாலும் மாணவர்களே எதிர்காலத்து சுக துக்கங்களை அநுபவிக்கக் கூடியவர்களாதலாலும், கல்வி கற்கும் யௌவன மாணவர்கள் திடசரீரிகளாயும் மனோவலிமை யுடையவர்களாயும் இருக்க வேண்டியது அவசியம். மாணவர்கள் சுருட்டு, சிகரெட், பீடி, பிடிக்கும் கோரமான கொடிய பழக்கங்களை அறவே ஒழித்து, தாங்கள் பிறந்த நாட்டின் கௌரவத்தையும் மரியாதையையும் காப்பாற்றக் கடமைப்பட்டிருக்கின்றார்கள். மாணவர்களே! சுருட்டு, சிகரெட், பீடியினால் வரும் வியாதிகளை உற்று

உணருங்கள். கல்வியின் பயன் ஒழுக்கமென்பதை ஓயாது சிந்தியுங்கள். தேகவலிமையே மனோதிடத்தையும் தைரியத்தையும் உண்டாக்குமென்பதை உறுதியாய் நம்புங்கள். சிகரெட், பீடி சீரையும் பேரையும் குலைத்து அவமானத்தையும் அபகீர்த்தியையும் உண்டாக்குமென்பதை ஆப்தவாக்கியமாக அறியுங்கள்.

"நவசக்தி."

# வாலறிவன் துணை.

வாலறிவன் பாத மலரை தொழுவார்க்கே சீலமுடனெய்துந் திரு.

உலக வின்ப முவக்கு நார்காள்
உயிரை வளர்க்கு மொப்பிலார் கூற்று
நகரிற் பெரிது நல்குற வதனால்
கூட்டங் குறைந்து குடிசில் வாழும்
நாட்டு வாழ்வே நலம் பயக்கும்மே
பரிதிமு னெழுந்து பரமனை வாழ்த்தி
சிறிது தூரங் குறுநடை கொண்டு
பறந்த வெளியிற் பண்புட னிருந்து
மலநீர் கழித்தல் மாண்புடைத் தாகும்
ஆலோ வேலோ அருவேம் புடனே
பூலோ வெடுத்துப் பொருந்த நசுக்கிப்
பல்லை விளக்கல் பல் நோயொழிக்கும்
காலமு மிடமுங் கூடிய நிலையும்
சால வுணர்ந்து தண்ணீர் முழுகல்
சீலமுஞ் சுகமுஞ் செம்மமையு மீயும்
கவலை யொழித்துக் கருத்தினிற் றெளிவாய்
முழுமுதல் வணங்கல் முறையென மொழிவர்:
காபி தேயிலை கடுநோய் விளைக்கும்
நரம்பு தளரும் நாலுங் குறையும்
மூத்திர நோயும் மோகமும் விளையும்
அவைகளை நீக்கி யரிசியே முதலா
தானிய வகையிற் சமைத்த பண்டம்
மோருடனேனும் பாலுடனேனும்
முதிரா விளவெந் நீருடனேனும்
உண்ணுத லென்று முரணைத் தருமால்
பின்னர் தொழிலிற் பிரவேசித்தல்
மன்னர் முதலா மக்கட் கழகே
பருதி நடுவிற் படர்தரு போதிற்
பருப்பு நெய்யொடு பல்வகைக் கறியுங்
பழமும் தயிரும் பயின்றுணலாமே.
அங்ஙன முண்டே யருங்களைப் பாறச்
சற்றே படுத்துத் தனியே யிருத்தல்
குற்றமில்லாத குணமீயும்மே.
உண்டவுடனே யொழிவில் லாமல்
நடத்த லெடுத்தல் நலிசெய் யும்மே.
உண்ட களைப்பு நீங்கிய பின்னர்
தொண்டோ தொழிலோ புரிதனன்றுமே.
மாலைக் கால வளர்வெளிக் காற்றில்
சோலையி லிருத்தல் சுகமீயும்மே
இரவிற் றுயிலா தென்னி யெண்ணி
விரவு நெஞ்சினர்க்கு வெய்ய நோய்வருமே
திருவிழா கூத்து தெரிசனை முதலா
உருவிலான் போரி லுகந்தநெஞ் சினன்
இரவில் விழித்துப் பகலுறங் கினர்க்கு
பாவுநோய் நீக்கப் பண்டிதரிலரே.
குயிலினங்கள் சுதிகூட்ட குருவியின மிசைபாட
மயிலினங்கள் நடமாடு மண்நாலு பூஞ்சோலை
வெயிலுறையா நாடுகளில் மேவுசுக முறுடமேயோ
பயிலுமெழின் மாடமலி பட்டினத்திற் றெருக்களிலே
மூக்குப் பொடியை முகருகின்றோர்கள்
ஏக்க மடைவ ரப்பொடி யிலையேல்
பீடி சிகரெட் பிடிக்கின்றோர்கள்
வாடிய முகமும் வரண்ட நெஞ்சுஞ்
கூடியநோயும கொள்ளுவ ரம்மா
அறிவை மயக்கி வெறியுண்டாக்கும்
நெறியை விலக்கும் நீதி யழிக்கும்
நோயை வளர்க்கும் வாயை வளர்க்கும்
சாரா யத்தைச் சற்றுஞ் சுவையா
நீராருக்கு நிகரில்லை யம்மா
கோழி யாடு வாழிய மிருகம்
ஐயோவென்ன வலறிடக் கொன்று
தின்று தின்றோர்க்கு திருவரு ளுளதோ,

# நமது மாணவர்களின் மனப்பான்மை.

(ஸ்ரீமான் மயிலை. இரத்தினசபாபதி முதலியார்.)

நமது மாகாணத்து மாணவர்களிற் பெரும்பான்மைபோர் ஆங்கிலம் கற்கவேண்டிய அவசியம் ஏற்பட்டிருப்பினும் கல்வியின் பயன் ஒழுக்கமென்பதை மறந்து, தாய் பாஷையில் அபிமானமின்றி, எண்ணத்திலும் செய்கையிலும் வேறுபட்டு வேறு ஜனங்களிடத்திலும், வேறு உலகத்திலும் பழகியும் சஞ்சரித்தும் வருகிறார்கள். "கண்டது கற்கப் பண்டிதனாவான்" என்பது உண்மையாயினும், "தன்னைப் பெற்ற தாயார் கிண்ணிபிச்சையெடுக்கத் தம்பி கும்பகோணத்தில் கோதானம், பூதானம் செய்தானும்" என்றபடி தாயினுமினிய தமிழையும், அருமை நூல்களையும் அலட்சியம் செய்து வீட்டிலும், கல்லூரியிலும், பொதுக் கூட்டங்களிலும் தேவாலயங்களிலும், பெற்றோரிடமும், பெண்டு பிள்ளைகளிடமும், நண்பருடனும் ஆங்கிலம் பேசி ஆனந்திக்கிறார்களேயன்றி தாய்பாஷையைச் சொப்பனத்திலும் நினைக்கும் மாணவர்களின் தொகை நாளுக்கு நாள் அருகிவருவது நமது தமிழ் நாட்டின் துர்ப்பாக்கியமேயாம். நமது மாணவர்களுக்கு பாஷாபிமானமின்மையால் திருவள்ளுவர், கம்பர், காளிதாசர் செய்த பாக்களின் சுவையை அறியவல்லார் எத்தனை பேருளர்? பீஷ்மர், அர்ச்சுனர் வீரச் செயல்களை வியப்பார் எத்தனை பேருளர்? தர்மத்தை உலகத்தின் பொருட்டு நடத்திக் காட்டிய ஸ்ரீ ராமகிருஷ்ணாதி அவதாரங்களின் அரிய பெரிய செயல்களை உணர்ந்தார் எத்தனை பேர்? ஞானச் சுடர்களாய் விளங்கிய புத்தர், சங்கரர், இராமானுஜர் செய்த ஆசார சீர்திருத்தங்களை அறிந்தார் எத்தனை பேர்? சுவாமி ராமதீர்த்தரின் வீரமொழிகளை உள்ளபடி உணர்ந்தார் எத்தனையோ? நமது பாஷையை முற்றும் மறந்த தோஷத்தினால் தற்கால மாணவர்கள் ஒப்பற்ற உயர்ந்த நூல்களையும், உண்மையில் பெரியோர்களையும் கைவிட்டு மதி மயங்கி, நடை, உடை பாவனை எல்லாவற்றையும் இழந்து உருமாறித் திரிவதைக் கண்டு புகழ்வதா, இகழ்வதா? "கற்க கசடறக் கற்றவை கற்றபின் நிற்க அதற்குத்தக" என்பதை உணர்ந்து வாசிப்பதே கல்வி. எல்லாக் கொடிய பாபங்களிலும் நமது மாணவர்கள் சிகரெட், பீடி, சுருட்டு இப்பழக்கங்களை மேற்கொண்டு, ஏராளமான பணத்தை சிகரெட்டுக்கும் பீடிக்கும் செலவிட்டு உதடு கறுத்து, கண் புதைந்து, முகப் பொலிவு குன்றி, உள்ளக் களிப்பு உற்சாகமுமின்றி, உயிரற்ற உடல்களைத் தாங்கிக் கண்டவர் நகைக்கத்திரிவது பெற்றோர்களுக்கும் மற்றவர்களுக்கும் பெருந் துயரத்தை உண்டாக்கும். நமது வைத்திய நூல்களில் கண்டித்து இகழ்ந்து கூறிய புகையிலை சம்பந்தமான புகைக்கு உள்ளம் பூரித்து, ஏராளமான பணத்தை அற்ப அசுத்த வாசனைகளுக்குச் செலவழித்து இருமல் முதலிய ரோகங்களினால் தனக்கும் பிறர்க்கும் சுமையாகி அற்ப வயதில் மாணவர்கள் மாண்டு வருவது எல்லோர் மனதையும் புண்படுத்தி வருகின்றது. தேக சௌக்கியமே செல்வமாதலாலும் மாணவர்களே எதிர்காலத்து சுக துக்கங்களை அநுபவிக்கக் கூடியவர்களாதலாலும், கல்வி கற்கும் யௌவன மாணவர்கள் திடசரீரிகளாயும் மனோவலிமை யுடையவர்களாயும் இருக்க வேண்டியது அவசியம். மாணவர்கள் சுருட்டு, சிகரெட், பீடி, பிடிக்கும் கோரமான கொடிய பழக்கங்களை அறவே ஒழித்து, தாங்கள் பிறந்த நாட்டின் கௌரவத்தையும் மரியாதையையும் காப்பாற்றக் கடமைப்பட்டிருக்கின்றார்கள். மாணவர்களே! சுருட்டு, சிகரெட், பீடியினால் வரும் வியாதிகளை உற்று

உணருங்கள். கல்வியின் பயன் ஒழுக்கமென்பதை ஓயாது சிந்தியுங்கள். தேகவலிமையே மனோதிடத்தையும் தைரியத்தையும் உண்டாக்குமென்பதை உறுதியாய் நம்புங்கள். சிகரெட், பீடி சீரையும் பேரையும் குலைத்து அவமானத்தையும் அபகீர்த்தியையும் உண்டாக்குமென்பதை ஆப்தவாக்கியமாக அறியுங்கள்.

"நவசக்தி."

# வாலறிவன் துணை.

வாலறிவன் பாத மலரை தொழுவார்க்கே சீலமுடனெய்துந் திரு.

உலக வின்ப முவக்கு நார்காள்
உயிரை வளர்க்கு மொப்பிலார் கூற்று
நகரிற் பெரிது நல்குற வதனால்
கூட்டங் குறைந்து குடிசில் வாழும்
நாட்டு வாழ்வே நலம் பயக்கும்மே
பரிதிமு னெழுந்து பரமனை வாழ்த்தி
சிறிது தூரங் குறுநடை கொண்டு
பறந்த வெளியிற் பண்புட னிருந்து
மலநீர் கழித்தல் மாண்புடைத் தாகும்
ஆலோ வேலோ அருவேம் புடனே
பூலோ வெடுத்துப் பொருந்த நசுக்கிப்
பல்லை விளக்கல் பல் நோபொழிக்கும்
காலமு மிடமுங் கூடிய நிலையும்
சால வுணர்ந்து தண்ணீர் முழுகல்
சீலமுஞ் சுகமுஞ் செம்மையு மீயும்
கவலை யொழித்துக் கருத்தினிற் றெளிவாய்
முழுமுதல் வணங்கல் முறையென மொழிவர்.
காபி தேயிலை கடுநோய் விளைக்கும்
நரம்பு தளரும் நாலுங் குறையும்
மூத்திர நோயும் மோகமும் விளையும்
அவைகளை நீக்கி யரிசியே முதலா
தானிய வகையிற் சமைத்த பண்டம்
மோருடனேனும் பாலுடனேனும்
முதிரா விளவெந் நீருடனேனும்
உண்ணுத லென்று முரனைத் தருமால்
பின்னர் தொழிலிற் பிரவேசித்தல்
மன்னர் முதலா மக்கட் கழகே
பருதி நடுவிற் படர்தரு போதிற்
பருப்பு நெய்யொடு பல்வகைக் கறியுந்
பழமும் தயிரும் பயின்றுணலாமே.
அங்ஙன முண்டே யருங்களைப் பாறச்
சற்றே படுத்துத் தனியே யிருத்தல்
குற்றமில்லாத குணமீயும்மே.
உண்டவுடனே யொழிவில் லாமல்
நடத்த லெடுத்தல் நலிசெய் யும்மே.
உண்ட களைப்பு நீங்கிய பின்னர்
தொண்டோ தொழிலோ புரிதனன்றுமே.
மாலைக் கால வளர்வெளிக் காற்றில்
சோலையி லிருத்தல் சுகமீயும்மே
இரவிற் றுயிலா தென்னி யெண்ணி
விரவு நெஞ்சினர்க்கு வெய்ய நோய்வருமே
திருவிழா கூத்து தெரிசனை முதலா
உருவிலான் போரி லுகந்தநெஞ் சினன்
இரவில் விழித்துப் பகலுறங் கினர்க்கு
பாவுநோய் நீக்கப் பண்டிதரிலரே.
குயிலினங்கள் சுதிகூட்ட குருவியின மிசைபாட
மயிலினங்கள் நடமாடு மண்நாலு யூஞ்சோலை
வெயிலுறையா நாடுகளில் மேவுசுக முறுடமேயோ
பயிலுமெழின் மாடமலி பட்டினத்திற் றெருக்களிலே
மூக்குப் பொடியை முகருகின்றோர்கள்
எக்க மடைவ ரப்பொடி யில்லையேல்
பீடி சிகரெட் பிடிக்கின்றோர்கள்
வாடிய முகமும் வரண்ட நெஞ்சும்
கூடியநோயுங் கொள்ளுவ ரம்மா
அறிவை மயக்கி வெறியுண் டாக்கும்
நெறியை விலக்கும் நீதி யழிக்கும்
நோயை வளர்க்கும் வாயை வளர்க்கும்
சாரா யத் தச் சற்றுஞ் சுவையா
நீராருக்கு நிகரில்லை யம்மா
கோழி யாடு வாழிய மிருகம்
ஐயோவென்ன வலறிடக் கொன்று
தின்று தின்றோர்க்கு திருவரு ளுளதோ.

# மகளிரை நடத்து முறை.

(ஸ்ரீமான் கா. சி. சிவசங்கர முதலியார்.)

இக்காலத்து அறிஞர் பலர் இது பற்றிப் பேசுகின்றார்கள், எழுதுகின்றார்கள். மகளிரை முற்றிலும் தாழ்மையாய்க் கருதுபவரும் பலர் இருக்கிறார்கள்; அவர்களுக்கு முற்றிலும் உயர்வுதர வேண்டுமென மொழிவாரும் பலர். இதைப்பற்றி நமது பெரியோர்கள் கருத்தென்ன என்பதைச் சிறிது ஆராய்வாம். முற்றிலும் ஏற்றங் கூறினாலும் அவர்கள் ஆடவரை மதியார்கள். முற்றிலுந் தாழ்த்தினாலும் ஆடவரை வெறுப்பார்கள். ஆகையால் நமது பண்டைய தமிழ்நூல்களில் கணவனுக்கும் மனைவிக்கும் இடையிடையே ஊடலையும் உவகையையும் விளக்கியிருக்கின்றார்கள். இவ்வுண்மையைப் பயின்று அறியாது தமிழர் மகளிரை அடிமையாய்க் கருதுகிறார்கள் என்று பலர் கூறுகின்றனர்.

நேசனைக் காணுவிடத்து நெஞ்சாரவே துதித்தல்
ஆசானை யெவ்விடத்து மப்படியே—நேச
மனையாளைப் பஞ்சணையில் மைந்தர்தமை
நெஞ்சில்

என்கிற ஒருவெண்பா வினாலும்

மாதர்க் கிதங் கவி வாணர்க்குச் சாலவகைகங்
நாதர்க்குக் கல்வியோடாகாரம் [குரு

என்கிற பாட்டினாலும் மாதர்களிடத்து எப்போதும் இதமாக நடந்து கொள்ள வேண்டுமென்றும்

சிறப்பாகப் பஞ்சணையில் பாராட்டவேண்டுமென்றும் குற்றங் கண்ட விடத்துக் கோபங் காட்டவேண்டு மென்றுமே விளங்குகின்றது. மகளிரிடம் குற்றங் கண்டவிடத்துக் கணவர் கோபங் காட்டாவிட்டால் மகளிர் திருந்துவதெப்படி? கணவர் மனைவியை நயமும் பயமுமாய்த்தான் நடத்தவேண்டு மென்பது அவர்கள் கருத்து. குற்றங் கண்டபோது கோபித்துக் கொள்ளுந் தலைவன் பின்னர் அன்பு காரணமாய் மனைவியிடம் இதம் காட்டுவானானால் அந்த மனைவிக்கு இதற்குமுன் அவனிடம் இருந்த அன்பைக் காட்டிலும் அன்பு மிகும் என்பது அனுபவமுடையர்க்கே நன்கு விளங்கும். பிரிந்து கலப்பதே பேரின்பம்.

திருவள்ளுவனார் குறள் காமத்துப் பாலில் நிறையழிதல் என்னும் அதிகாரத்தில் தலைவி கூற்றாகவுள்ள

"பன்மாயக் கள்வன் பணிமொழியன்றோ நம்
பெண்மை யுடைக்கும் படை"

என்கிற குறளால் பல காரணங்களால் பெண்கள் தமது கணவரிடம் குற்றங் காண்பாராயினும் கணவர் அன்பு கெழுமிய தாழ்ந்த உரைகள் கூறுவரேல் மனைவியர்க்கு அவர்களிடமிருந்து பகைமைகளெல்லாம் மாறிவிடுமென்பது வாய்மை யென்றும் விளங்குகின்றது.

மகளிர் எவ்வளவு நூல்களைக் கற்று நுண்ணறிவுடையராயினும் அவர்களுக்கு உடல் மெல்லியதன்மையுடையது போல உள்ளமும் மெலிந்த தாதலால் நிலை பெற்ற நெஞ்சுடைமை யருமை. சில சமயங்களில் தமக்கு இன்பம் பயக்குவது கணவனுக்குத் துன்பம் பயக்குமாயினும் அவன் துன்பத்தைக் கருதாது தமது இன்பத்தையே நாடி அதையே வேண்டுவர்—இந்த சமயத்தில் தான் கணவர் மனைவியர் சொல்லில் சிறிது கவனம் செலுத்த வேண்டியது.

"இனம்போன் றினமல்லார் கேண்மை மகளீர்
மனம் போல் வேறு படும்"

என்கிற குறளில் இப்பொருள் மறைந்திருக்கின்றது. வேறு பொருள் என்னின் அறிஞரை விளக்க வேண்டுகிறேன்.

சுபம்.

# பூர்ண சக்தி.

## II.

### ஔஷததத்துவம்.

(ஸ்ரீமான் கி. லக்ஷ்மண சர்மா.)

மருந்தென்றும் ஔஷதமென்றும் நாம் இக்காலத்தில் கொண்டாடுவதெல்லாம் நச்சுப் பொருள்களென்றும், அவற்றினால்தான் நாகரிகப் பெருமை பாராட்டுகிற மனித சமூகங்களெல்லாம் வரவரச் சீர் கெட்டு வருகின்றனவென்றும் இதன் முன் சொல்லப்பட்டது.

உண்மையான மருந்து என்ன என்பதை இனி விசாரிப்போம்.

தனித்தனி நோய்களை அவ்வப்போது நீக்கக்கூடியதே மருந்து என்று மனிதர் எங்கும் மதித்திருக்கிறார்கள். ஆனால், ஸ்வாமி விவேகானந்தர் எடுத்துக் காட்டியபடி, 'நோய் என்பது உடம்பின் ஓரிடத்திலிருந்து துரத்தப் பட்டால், அவ்விடம் விட்டு வேறோரிடத்தில் குடியேறிக் கொண்டு முன்னிலும் அதிகமாகப் பீடிப்பது நோயின் சுபாவம்' என்ற அனுபவஉண்மையை நாம் நேரிலாவது விசாரித்தாவது அறியக்கூடும். அப்படி அறிந்தபின் தனித்தனி நோய்க்குப் பிரத்தியேக மாகத் தெரிந்தெடுக்கப் படும் மருந்துகளெல்லாம் மாயா விலாசமே, மோசமே என்றும் நமக்குத் தெரியவரும். நோய்கள் எல்லாம் வெவ்வேறு என்று நாம் நினைப்பது அவிசாரத்தனம்—விசாரணை செய்யாமல், தோன்றினவற்றை யெல்லாம் உண்மை யென நம்புகின்ற மூடத்தனம், உண்மையில் ஆதியோடந்தமாய் சிசுப்பருவ முதல் தொண்டுகிழப்பருவம் வரை, வெவ்வேறு நாம ரூபங்களோடு வெளிக்கிளம்பி நர்த்திக்கும் நோய்களெல்லாம் ஒன்றே என்பது வைத்திய ரகசியம். அத்வைதம்தான் சத்தியம், த்வைதம் மித்தை. இது உலகப் பொருள்கள் எல்லாவற்றிக்கும் ஒக்கும். பேத புத்தியே அஞ்ஞானம், அபேத அறிவே அறிவு, என்பது ஸ்ரீராமகிருஷ்ண பகவான்—விவேகானந்தாதி மகா புருஷர்களுக்கெல்லாம் குருதேவராக அவதரித்தவர்—செய்த உபதேசம். இதையேதான் கடவல்லியுபநிஷத்தில் ம்ருத்யோஸ்ஸ ம்ருத்யுமாப்நோதி ய இஹ நானேவ பஶ்யதி என்று சொல்லியிருக்கிறது. எவன் உலகப்பொருள்களைப் பிறித்தறிந்து, அவ்வறிவின்படி நடக்கிறானோ, அவனுக்கு சாவுக்கு மேல் சாவு நேருகிறது. 'நோய்,' என்னும் பொருள் ஒன்றாயிருக்க, பற்பல நோய்கள் உண்டென்று மயங்கி, தனித்தனி நோய்க்குத் தனித்தனி மருந்துண்டு வருகிறவன் எப்போதும் மீளா நோயாளியாகி மரணத்தை உயிருடனேயே அனுபவிக்கிறான். அவன் வாழ்நாள் முழுவதும் உயிர்ப்பிணமாகவே காலம் கழிக்கிறான். இகபரசாதனங்களுக்குப் போதுமான சக்தி யில்லாமல், ஜன்மத்தை வீணாக்கிக் கொள்ளுகிறான். ஆகையால் நோயென்பது ஒன்றே, அதற்கு மருந்தும் ஒன்றே, என்ற அறிவே ஆயுர்வேதத்தின் முதல் சூத்திரம்.

நம் உடலுக்கு வேறாக நாமிருக்கிறோமல்லவா? அதனால் நாம் பல உடல்களை ஒன்றன்பின் ஒன்றாய்ப் பெற்று வாழ்கிறோமல்லவா? அதுபோலவே, நோய் என்னும் வஸ்துவும் நம்முடனேயே கூடப்பிறந்து, இடையிடையே பற்பல நாம ரூபங்களோடு வெளியாகி, மறுபடி மறுபடி நமக்குள்ளேயே மறைந்து கொண்டும் வருகிறது. அப்போது வந்த காய்ச்சல் வேறு இப்போதிருக்கிற இருமல் வேறு, என்று நாம் வேற்றுமை பாராட்டி வைத்தியனுக்கும் பிழைப்

ஒளிப்பதேதான் பிரயோஜனம். நோய்க்கு நாம காணம் செய்து, அதனால் நம்மை மயக்கிப் பிழைக்கிறவர்களே வைத்தியராக மதிக்கப்படு கிறார்கள்.

இப்படி எப்போதும் ஒரே வஸ்துவாயிருக் கும் நோய் உண்மையில் எப்படி யிருக்கிறது, என்றால், சொல்லுகிறேன். நோய் வேறல்ல, நாம் வேறல்ல. நாமேதான் நோயாகிறோம். நம் சொந்த சக்தியாகிய பிராணனேதான் நோ யெனப்படும் எல்லாச்சேஷ்டைகளுக்கும் கர் த்தா. எப்படிப் "பாம்புவேறு, அதன் கோண லான நடைவேறு" என்று சொல்வது அஞ் ஞானமோ, அதுபோலவே, நோய் வேறு நாம் வேறு என்று நம்புவதும் அஞ்ஞானமே. நம் மைத் தவிர வேறல்லாத ஒன்றை வேறாக மதித் தால், அது நம்மை வஞ்சித்துவிடும், என்று பிருஹதாரண்யக உபநிஷத்து சொல்லுகிறது. सर्वंतं परादात् यौऽन्यत्रात्मनो ब्रह्म वेद என்று அந்த வசனம் முடிகிறது. பிரம்மத்தைத் தன்னிலும் வேறாக நினைத்தவன் சம்சாரக்கடலில் விழு கிறான். அதுவே நானென்றறிந்தவன் விடுதலை பெற்று வாழ்கிறான். அதுபோலவே நோயைத் தன்னிலும் வேறாக நினைத்து, அதைக் கொடிய மருந்துகளால் கொல்ல முயலுகிறவன் உண் மையில் அவைகளால் தன்னையே வதைத்துக் கொள்ளுகிறான். இதனால் ஒரு நோய் போக, பின்னொரு நோய்க்கு ஆளாகிறான். முதல் நோய் விருந்தாளி போலானது. அது தானா கவே — வினைதீர்த்துத்—தணியவேண்டியது ; பட்டினி முதலான முறைகளால் அப்படியே தணியும். இதைத் தீர்ப்பதற்காக எடுத்துக் கொண்ட மருந்தினால் பிற்காலம் விளைகிற நோய் களோ வென்றால், விருந்தாளியாகச் சொல்லத் தகாது. வெகு நாள் வரை நம்மோடு பங்காளி யாக வாழும் சுதந்தரத்தைக் கொண்ட நோய் அது. இது ஏதோ குருட்டு யுக்தியால் சொல்லு கிற வாதமல்ல. ஸர் உலிவ்லியம் ஆஸ்வர் முத லிய் தேர்ந்த டாக்டர்கள் இந்த உண்மையைக் கண்டறிந்து சொல்லியு மிருக்கிறார்கள். சாமா னிய டாக்டர்கள் இதை அறியமாட்டார்கள்.

ஆகையால் நம் உடலுக்கும் உயிருக்கும் எப் போதும் நன்மை செய்யக் கூடியவை எவை யோ, அவையேதான் நோய்க்கும் மருந்து. இது சத்தியம். இதை அறியாதவன் வைத்தியர்க ளுக்கு அடிமை. அறிந்தவன் தன்னுடலுக்குத் தானே அதிபதியாகி, சுயராஜ்யம் பெற்ற சித் தன். இந்த சித்தனுக்கு நோய் வருவது அரி தாகும். வந்தாலும் இலேசாயும் சீக்கிரம் தானா கவே தீருவதாயு மிருக்கும்.

இம்மருந்து என்ன? வடமொழியில் மருந்து என்பது "ஔஷதம்" என்று சொல்லப்படு கிறது. ஔஷதம் என்றால் ஓஷதியின் விளை பொருள். ஓஷதி யென்பது தாவரப் பிராணி யைக்குறிக்கிறது. மரம், கொடி, செடி இவை ஓஷதிகள். இவைகளே பிருதிவியின் — மண் ணின்—முதற் புத்திரர்கள். இவை ஜங்கமப் பிராணிகளாகிய மனுஷ்யாதிகளுக்கு ஆகாரம். இதனால் அன்னமென்பதுதான் ஔஷதம். இது உபநிஷத்துக்களின் கருத்தாகக் காணப் படுகிறது. அன்னத்திற் பிறந்து, அதிலே வளர் ந்திருக்கிற நாம் அன்னத்தையே மருந்தாகக் கொள்வதுதான் யுக்தம். இதை யொத்துத் தான் ஸுசுருத ஸம்ஹிதையில் :—

विनापि भेषजैर्व्याधिः पथ्यादेव निवर्तते ।
न तु पथ्यविहीनानां भेषजानां शतैरपि ॥

"மருந்தே யில்லாமல் உசிதமான பத்தி யத்தினால் மாத்திரமே நோய் தணியும்; ஆனால் பத்தியமில்லாமல் நூற்றுக்கணக்கான மருந்து களாலும் நோய் தீராது," என்று சொல்லி யிருக்கிறது. பத்தியத்தைத் தவிர மருந்தென்று வேறே ஒன்றுண்டென்று இதில் அபிப்பிரா யம் தோன்றுகிறது. அவ்வளவு மட்டில் இந்த வாக்கியம் பிழைதான். ஆனால் மருந்தைவிடப்

பத்தியமே பெரிது என்ற மட்டில், பத்தியமே மருந்து என்று ஒப்புக் கொள்ளப்பட்டிருப்பதை மெச்சவேண்டும். ஹிப்போக்ரட்டேஸ் என்ற யவன தேசத்து வைத்திய நூலாசிரியர் இன்னும் அழகாய்ச் சொல்லியிருக்கிறார் "உன் ஆகாரமே உனக்கு மருந்து; உன் மருந்தே உனக்கு ஆகாரம்" என்று. இதனால் நமக்கு 'தெய்வாயத்தமாய் அமைந்திருக்கும் ஆகாரமே மருந்து. ஆகாரமல்லாதது ஒன்றும் மருந்தல்ல' என்பது கிடைத்தது.

நம்முடைய ஆகாரம் ஐந்து; ஆகாசம், வாயு, வெயில், நீர், ஸ்தாவர விளைவு.

ஆகாசமென்பது வெளி. இது சூன்ய மல்ல; ஒரு மகாசக்தி. இந்த சக்தியை நாம் அதிகமாய்ப் பெறுவது, தூக்கத்திலும் உபவாஸத்திலும் தான். இனி உபவாஸ தத்துவத்தை விசாரிப்போம்.

(தொடரும்.)

# திலகவதி.

(சகோதரி வி. பாலம்மாள்.)

(காபிரைட்)

(627-ம் பக்கத்தொடர்ச்சி)

பத்தாவது அதிகாரம்.

## பொறுப்பற்ற போஷகன்.

தஞ்சை சப்கோர்ட்டில் நடைபெற்ற மைனர் வியாச்சியத்தில் வாதிப் பிரதிவாதிகள் இருவரும் சாட்சிக்காரர்களுக்குக் கட்டிய படிப் பணத்தின் மொத்தத் தொகை ஐயாயிர மென்றால் வியாச்சியத்தின் சிறப்பை எடுத்துரைத்தல் அநாவசியமல்லவா! பிரதிவாதி ராஜம்மாள் காலஞ் சென்றுவிட்ட துபாஷ் ஸ்ரீநிவாசமூர்த்தியின் மனைவி. தன் புருஷன் ஜீவந்தராயிருக்கும் பொழுது அளவற்ற பணம் தேடி வந்ததில் பெரும்பாலும் பிறந்த வீட்டுப் பந்துக்களுக்கே உபகாரம் புரிந்துவந்ததின் பயனாக இந்த அம்மணியின் போஷணையிலேயே தாமோதரனென்ற சிறுவன் அவ்வீட்டில் வளர்ந்து வந்தான். இவன் ராஜம்மாளின் தங்கை மகன். ஸ்ரீநிவாசமூர்த்தி எவ்வளவோ மறுத்தும் தன் பிடிவாதத்தினால் தாயாதிகளில் ஒரு வயதுள்ள ஆண் குழந்தை யொன்றை ராஜம்மாள் சுவீகாரம் செய்துகொள்ளும்படி மரணத் தறுவாயிலிருக்கும் தன் கணவனைக் கட்டாயப்படுத்தினாள். இப்பேதையின் மன்றாட்டம் தாங்க முடியாது ஸ்ரீநிவாஸமூர்த்தியும் சுவீகாரம் செய்துகொண்டதுடன் தாம் முழு நினைவுடனிருக்கும்பொழுதே ஓர் மரணசாசனத்தையும் எழுதி ரிஜிஸ்டர் செய்திருந்தார்.

மரண சாசனத்திற் காணப்பட்ட ஷரத்துக்களில் முக்கியமானவை பின்வருமாறு:— தஞ்சையிலும் அதற்கடுத்துள்ள கிராமங்களிலுமுள்ள தமது சுயார்ச்சிதமான ஸ்தாவர ஜங்கம சொத்துக்களில் தாய்க்கும் சுவீகாரப்பிள்ளைக்கும் ஒற்றுமையில்லாவிடில் சமபாகமென்றும், சுமார் மூன்று லக்ஷம் ரூபாய் பெறுமானமுள்ள ராஜம்மாளின் நகைகள் முழுமையும் அவளுக்குச் சுவாதீனமென்றும், எதிர்பாராத சம்பவத்தால் சுவீகாரப்பிள்ளை மைனர் பருவத்திலேயே இறந்துவிட்டால் ராஜம்மாள் சகல சொத்திற்கும் வார்சு என்றும், அச்சமயம் அவள் மறு சுவீகாரம் செய்துகொள்ள இஷ்டப்படாவிடின் அசையாப்பொருள்களா யிருப்பவை

களை ஜனசமூகத்திற்கு விருப்பமான சுதேசியத் தொழில் அபிவிருத்தி முறை யொன்றில் ராஜம்மாள் எழுதிவைக்கவேண்டியதென்றும், மைனருடைய சொத்துக்களைப்பற்றி கார்டியன் கணக்கெழுதவேண்டிய நிர்ப்பந்தமில்லை என்றும், சுவீகாரப்பிள்ளைக்கும் மற்றச் சொத்துக்களின் நிர்வாகத்திற்கும் ராஜம்மாளையே கார்டியனாக நியமித்திருப்பதாயும் அச்சாசனத்தில் கண்டிருந்தது.

கணவனிறந்துபோய் இரண்டு வருஷம் வரை ராஜம்மாள் குடும்ப விஷயத்தைச் சிறிதும் கவனித்தவளல்ல. அவள் கணவனை நினைந்து கலங்கி யழுவதும் சுவீகாரக் குழந்தையை கவனிப்பதுமாகவே இருந்தாள். தாமோதரன் பாடு கொண்டாட்டம்! லக்ஷக் கணக்கான ஐவேஜிகளின் வரவு செலவுப் பொறுப்பு முழுதும் இவன் கைவசமாயிருந்தது. சூதாட்டம், கட் குடித்தல், வீண் வழக்கிட்டு ஏழைத் தொழிலாளிகளை வருத்துதல் முதலிய தோரணைகளில் அவன் ஏராளமாய்ச் செலவிட்டு வந்தான். வரிப்பணம் வசூலிக்க வந்த அதிகாரிகளைக் குடி மயக்கத்தில் வாய்க்கு வந்தவாறு பேசி இவன் அவமதித்ததின் பயனாகக் கோர்ட்டுச் செலவில் பதினாயிரம் ரூபாய் செலவழிந்தது. அப்பொழுதுதான் ராஜம்மாள் இவனுடைய துர்வியாபாரங்களை அறியலானாள். மறு நிமிஷத்திலேயே இவனுக்கு அளிக்கப்பட்டிருந்த அதிகாரப் பத்திரமும் ரத்து செய்யப்பட்டது.

இஷ்டம்போல் தின்று திரிந்து கையாரச் செலவழித்துக்கொண்டிருந்த தாமோதரனை வேலைக்குச் சாப்பிட்டுவிட்டு ஒரு மூலையில் விழுந்து கிடக்கச் சொன்னால் அவன் எப்படிச் சம்மதிப்பான்? பொழுது விடிந்தால் பிராந்தி சீசாக்கள் மட்டும் குறைந்தது ஐந்தாகிலும் வேண்டும். அவன் உயர்ந்த சுருட்டுக்களையே உபயோகிப்பது வழக்கம். இவைகளெல்லாவற்றையும் விட்டாலும் விடலாம். தாசி கோமளத்திற்கு எழுத்து மூலமாய்ப் பாக்கியிருக்கும் முப்பதினாயிரம் ரூபாய்க்கும், சென்னை வைர வியாபாரியிடம் அவளுக்காக வாங்கியிருக்கும் கமல அட்டிகைக்குக் கொடுக்கவேண்டிய பதினாயிரம் ரூபாய்க்கும் வழி செய்யவேண்டுமே. அதிகாரப் பத்திரம் ரத்து செய்யப் போவதை இரண்டொரு நாட்களுக்குமுன் இவனறிந்திருப்பானாயின் ஒரே நிமிஷத்திலிவைகளுக்கு வழி தேடி இருப்பான். பாபம்! பெரிய வீட்டுப் பெருச்சாளி. தன் பெரிய தாயார் ராஜம்மாளிடம் நயத்தில் கெஞ்சிக் கூத்தாடியும் ஒரு தம்படியும் கிடைக்கவில்லை. "இஷ்டமுண்டானால் சாப்பாட்டு விசார மின்றி இருந்து கொண்டிரு. இல்லையானால் வெளியே போகலாம்" என்று அவள் கண்டிப்பாய்ச் சொல்லிவிட்டாள்.

ஒரு வழியிலும் இனி தனக்கு அனுகூலமில்லை என்றறிந்த தாமோதரன் ஒரு நாள் ஒருவரிடமும் சொல்லாமலே திடீரென்று வீட்டைவிட்டுச் சென்றான். அதே சமயத்தில் குழந்தை மைனர் துரைசாமியின் கழுத்தி லணிந்திருந்த வைரமிழைத்த மாங்காய் மாலையும் களவு போயிற்று. நகையின் பெறுமானம் ஆயிரக் கணக்காயிருந்தும், சனி தொலைந்ததென்று ராஜம்மாள் பேசாது இருந்துவிட்டாள். தாமோதரனது கடைசித் திருவிளையாடல் இதுதான் என்பது ராஜம்மாளின் கருத்து.

ராஜம்மாள் இனியாவது ஜாக்கிரதையாயிருக்க வேண்டுமென்ற எண்ணத்தினால் குடும்ப நிர்வாகம் முழுவதையும் தானே நேரிலிருந்து கவனிக்கலானாள். ராஜம்மாளுக்குத் தாய்ப்பாஷையாகிய தமிழ்மொழியில் நல்ல பயிற்சியுண்டு. தனது குடும்பக் கணக்கு வழக்குகளைக் கவனிப்பதில் ஏற்கனவே முப்பது

வருஷத்திய அனுபவமேற்பட்டிருந்ததுபற்றி இச்சமயம் ராஜம்மாளுக்குப் புதிய விஷய மொன்றுமே இல்லை. சட்ட சம்பந்தமாயும் மதக்கோட்பாடுகளைப்பற்றியும் பல புத்தகங் களைப் படித்திருந்தாள். தத்துப்பிள்ளையும் தாயாரும் ஒத்து நடவார்கள் என்ற சொல்லைப் பழமொழியிலிருந்து நீக்கிவிடவேண்டுமென் பதுதான் ராஜம்மாளின் முக்கிய அபிப்பிராயம். தனக்கு வயது ஐம்பது ஆயிருப்பதுபற்றி ஓர் மரண சாசனத்தையும் எழுதி ரிஜிஸ்டர் செய் தாள். பத்திரம் ரிஜிஸ்டர் ஆகும்போது சாட்சி யாக வந்திருந்த தஞ்சை ஜில்லா கலெக்டர் மிஸ்டர் ஆர்தர் துரையவர்கள் ராஜம்மா ளுடைய முன் யோசனையைக் கண்டு மெத்த வியப்படைந்தார். தனக்குச் சுவீகாரப்பிள்ளை யுடன் பல சுற்றத்தார்களு மிருக்கும்போது லக்ஷம் ரூபாயைப் பெண்மக்கட்குரிய கல்விக் காக எழுதிவைப்பதென்றால் யார்தான் ஆச் சரியம் கொள்ளமாட்டார்கள்! ஆனால், மிஸ்டர் ஆர்தர் துரை இப்பொழுதுதான் இங்கிலாந்தி லிருந்து புதிதாய் வந்தவராகையால் இந்தியப் பெண்கள் அறிவற்றவர்களென்றும், அடிமை போல் அடக்கியாளப்பட்டு வருகிறார்களென் றும்,சுதந்தரமென்பது ஒரு சிறிதும் அவர்களுக் கில்லை என்றும், ஜனசமூக வாழ்க்கையின் அபி விருத்தியில் அவர்களுக்குப் பொறுப்பு இல்லை என்றும், ஆங்கிலம் கற்றுள்ள சிலர் தவிர மற் றப் பெண்களெல்லாம் ஒன்றுமறியாதவர்கள் என்றும் தாம் கேள்விப்பட்டுவந்ததற்கு மாறாக ஆரம்பத்திலேயே அத்தாட்சி கிடைத்ததுபற்றி அவர் வியப்படைந்தது அதிசயமல்ல.

## பதினோராவது அதிகாரம்.

## கற்பனை வியாச்சியம்.

வீட்டைவிட்டு வெளியேறிய தாமோதரன் தான் இனிச் செய்துமுடிக்கவேண்டியவற்றைத் தனக்குள்ளாகவே யோசிக்கலானான். நகை கெட்டுப்போன விஷயமாய்ப் பிரஸ்தாபமே ஏற் படாமலிருந்தது கண்டு தன் பெரிய தாயார் ராஜம்மாள் தன்னிடம் பயந்துகொண்டிருப்ப தாய் அவன் தீர்மானித்தான். மைனர் மேஜரா கும்வரை கொள்ளையடித்துக்கொண்டிருந்து பிறகு சுவீகாரப்பிள்ளைக்கும் தாய்க்கும் கலக மேற்படுத்திவிட்டால் பெரிய தாயாரின் சொத் துக்கள் எல்லாம் தனக்கே உபயோகப்படு மென்று அவன் எண்ணியிருந்தான். இது வீணாய் விட்டது. அதனோடு எவ்விதத்திலேனும் மறுபடி ராஜம்மாளை யுபத்திரவம் செய்தால் இழந்து போன நஷ்டத்தை வேறு வழியில் ஈடுகட்ட லாமென்பது இவன் யோசனை. முழுதும் யோ சித்த மறு நிமிஷத்திலேயே தஞ்சை சப் கோர் ட்டில் ராஜம்மாளைப்பற்றி ஒரு பெடிஷன் கொ டுத்துவிட்டான். சம்மனைப் பெற்றுக்கொண்ட ராஜம்மாள் தக்க வக்கீல் வைத்து வியாச்சிய காபியின் நகலைப் படித்ததில் தாமோதரன் மைனர் துரைசாமியின் க்ஷேமத்தை யுத்தே சித்து ராஜம்மாளை கார்டியன் ஸ்தானத்திலி ருந்து நீக்கவும் வேறு தக்க கார்டியனை நியமிக் கவும் பெடிஷன் கொடுத்திருப்பதாய் அறிந்து கொண்டாள்.

இந்த வியாச்சியம் வருஷக்கணக்காய் நடை பெற்றது. ஐந்தாம் வருஷத்திய முடிவில் ராம நாதன் ஜட்ஜாயிருக்கும் சமயம், மைனருக்கு வேறு கார்டியன் நியமித்தல் அவசியமென்று தீர்ப்பளிக்கப்பட்டது. தாமோதரனது பிரயத்த னத்தால், பிரதிவாதி யாதொரு ஆக்ஷேபங்க ளும் கூறாமல் கோர்ட்டில் பகிரங்கமாய் வந்து சாட்சிக்கூண்டிலிருந்து வாக்குமூலம் கொடுக் கத்தான் வேண்டுமென்று ஜட்ஜ் உத்தரவிட் டார். அச்சமயம் வாதி தரப்பின் வக்கீல் கேட் கும் கேள்விகளுக்கெல்லாம் ராஜம்மாள் தக்க படி பதிலளிக்கப் பின் வாங்கவில்லை. "உமக்கு வயது நாற்பதுக்குள்ளாகவே நடைபெறுகிற தல்லவா?" என்று வக்கீல் கேட்டார். பிரதிவாதி

பக்கத்திய நியாயவாதி ஆக்ஷேபித்தும், ஜட்ஜ் அபிமானத்தை முன்னிட்டுமீண்டும் அக்கேள்வி கேட்கப்பட்டது. ராஜம்மாள் "ஐயா! உமக்கு வாலிபமுள்ள இளம் பெண்களைப் பார்க்கு மனுபவமின்றித் தமக்கை, தாயார் முறையில் வயது சென்ற பெண்களைக்கண்ட அனுபவம் சிறிதுமில்லைபோலும். எனக்கு முன் பல் விழுந்து வயது சென்றதற்குரிய பல அடையாளங்களும் உமது கண்ணிற்குத் தெரியவில்லையா? ஐயோ பாபம்! போகட்டும். எனக்கு வயது ஐம்பத்தி ஐந்தாயிற்று" எனப் பதிலளித்தாள். வக்கீலடைந்த அவமானம் கொஞ்சமல்ல. ஜட்ஜ்மெண்ட் படிக்கப்பட்டதும் வேறு கார்டியன் யார் என்ற கேள்விக்கு, மூலையில் பேர், ஊர் தெரியாது பதுங்கிக்கிடந்த ஆள் ஒருவன் தானொரு பங்காளி என்று முன் வந்தான். மைனரை உடனே தாயைவிட்டுப் பிரித்தல் அவசியமென்று ஜட்ஜ் அபிப்பிராயப்பட்டார். தான் ஹைக்கோர்ட்டில் அப்பீல் செய்யவிருப்பதாக ராஜம்மாள் எவ்வளவு மன்றாடியும் கேள்விமுறை இல்லை. எட்டுவயதுள்ள சிறுவன் தாயின் மடியைப் பிடித்துக்கொண்டு கதறுகிறான். கோர்ட் ஆர்டருக்குக் கீழ்படிதல் முக்கியமென ராஜம்மாள் வற்புறுத்தப்பட்டாள். இவ்விதப் பரிதாபக் காட்சி கோர்ட்வாயிலில் நடைபெற்றுக்கொண்டிருக்கும் பொழுது சாமானிய உடையுள்ள ஒரு மனிதர் வேகமாய் வெளியிற் சென்றார். கேஸ் ஆரம்பத்திலிருந்து அவர் கோர்ட்டு நடவடிக்கைகளை கவனித்து வந்திருந்தும் அவரைமட்டும் ஒருவரும் கவனிக்கவில்லை.

அம்மனிதர் வெளியிற் சென்ற ஐந்து நிமிஷங்களுககெல்லாம் தஞ்சையில் வசித்துவரும் இரண்டு பெரிய பிரபுக்கள் கோர்ட்டுக்குவந்து தாங்கள் இருபது லக்ஷம் ரூபாயையும் தங்கள் இருவரையும் ஜாமீனாகக் கட்டுவதாயும் பிரதிவாதி ஹைக்கோர்ட் நடவடிக்கை நடத்தும் வரையில் மைனரைப் பிரிக்கக்கூடாதென்றும் வாதாடினார்கள். தாமோதரனின் அட்டகாசம் இதற்குமேல் ஜயிக்கவில்லை. ராஜம்மாள் குழந்தையுடன் வீடு சென்றாள்.

ஜட்ஜுக்கு இக்காட்சி பரிதாபமாகவிருந்தும் தாம் முதல் நாள் ரொக்கமாய்ப் பெட்டியில் அடுக்கிவைத்த ஐம்பதினாயிரம் ரூபாய் கண்முன் நின்றபடியால் பிறகு அசைய முடியவில்லை. வாதிபக்கத்திய வக்கீல் நாராயணனும் ராமநாதனது மனைவி கமலமும் ஒரே ஊரில் பிறந்து வளர்ந்தவர்கள். பணத்தை எண்ணி வாங்கும் வரையில் ராமநாதனுக்கு ஒரு விஷயமும் தெரியாது. இருபத்தைந்து ரூபாய் சம்பளத்திலிருந்த ராமநாதன் நான்காவது பாய்ச்சலில் சப்ஜட்ஜ பதவியைப் பெற்றார். இதுவரையில் தாம் செலவழித்ததைத் தேடிக்கொள்ளல் அவருக்கு அவசியமாயிற்று. போதாக்குறைக்கு மைத்துனி சுந்தரியும் விதவையாகி வீடுவந்திருந்தாள். கமலத்தின் செல்வக் குமாரத்தி ராதாமணிக்குச் சமீபத்தில் நடைபெறவிருக்கும் சாந்தி முகூர்த்தத்திற்கு வைரமிழைத்த வெற்றிலைத் தட்டு அளிக்காவிடில் அவர் மாமியார் காமாக்ஷியம்மாள் இனிப் பகிரங்கமாகவே காரியுமிழ்ந்து விடுவாள். வாங்கியமணம் நோட்டாகவோ செக்காகவோ இருந்திருப்பின் சற்று யோசித்துத்தான் இருப்பார். எல்லாம் அவல்போல் வெள்ளிப் பணங்கள்!

சற்று ஏதேனும் முன்பின் பார்த்திருப்பின் வக்கீல் நாராயணன் தம்மைத் தொலைத்துவிடுவாரென்ற அச்சமொரு பக்கம். என்ன இருந்தாலும் தாம் கூறிய ஜட்ஜ்மெண்டு மனச் சாட்சிக்குரியதல்லவென நினைக்கும்போது அவர் உடல் பதறியது. அன்றிரவு அவர் கண்ணை மூடியதும் ராஜம்மாள் சாட்சிக்கூண்டில் நின்ற தோற்றம் எதிரில் தோன்றியது. சிறுவன் தாயைவிட்டுப் பிரியமாட்டேன் என்று ஓலமிட்டழுததே இவர்

செவியில் ஒலித்துக்கொண்டிருந்தது. தாமும் ஒருகால் சாட்சிக் கூண்டிலேறக்கூடிய சம்ப வம் நேரிட்டுவிடுமோவென அவர் அஞ்சினர். ஜாக்ரம், ஸ்வப்னம், சுஷுப்தி என்ற மூன்று மில்லாது நான்காவதான ஓர் அவஸ்தையில் ராமநாதன் அன்றிரவை ஒருவாறு கழித்தார்.

அதிகாலையில் தமது மைத்துனி பாடிக்கொண் டிருந்த "வேளையோ விடிந்ததய்யா நாளை வா ரேன்" என்ற காவடிச்சிந்தின் இனிய ஓசையை யும் 'சொகுசுள்ள தீரா' என்ற பாட்டையும் கேட்டு அவர் மனந்தெளிந்து எழுந்தார். காலைக்கடன் முடிக்க மணி எட்டு அடித்தது. பரிதானம் வாங்குவது விருத்தியாய் வந்ததி லிருந்து தமது அனுஷ்டான நேரங்களை யும் ராமநாதன் அதிகரிக்கத் தொடங்கினர். இவர் பானம் சாப்பிடுவதில்லை. மெத்த ஆசையாயிருக்கும் சமயங்களில் சென்னை 'டீ யாஞ்சலீஸ்' சென்று சந்தடியில்லாமல் திரும்பி விடுவார். அன்று காலை ஒன்பது மணி சுமா ருக்குக் கலெக்டர் துரை வந்திருப்பதாகச் சேவ கன் சொன்னதும், அவரை வரவேற்பதற்காக ராமநாதன் ஆபீஸ் ஹாலிற்குச் சென்றார். இவர் கள் சம்பாஷணை முழுவதும் முதல் நாள் முடி வுற்ற மைனர் கேஸைப் பற்றியதாகவே இருந் தது.

கலெக்டர் :—ஆம், சுவீகாரத்தாய் தன் குழந் தையை நேசிப்பதாய் நம்புவது எப்படி ?

ஜட்ஜ் :—அத்துடனில்லை. சாட்சிகளெல்லாம் தக்க மனிதர்கள். பெடிஷன் கொடுத்திருப்ப வரின் வாக்குமூலங்கள் நம்பத்தக்கவை என்பதில் சந்தேகமே இல்லை. பந்துவாய் நெடுநாள் வீட்டில் கூடவசித்து வந்ததாமோ தானுக்கு ராஜம்மாளின் நடவடிக்கை கள் நன்றாய்த் தெரிந்திருக்கவேண்டும். மைனருக்கு வேறு கார்டியன் ஏற்படுவதில் தாமோதரனுக்கு வீண் செலவன்றி லாபம் சிறிதுமில்லை.

கலெக்டர் :—காலஞ் சென்ற ஸ்ரீநிவாசமூர்த் திக்குத் தமையன் போப்பிள்ளை ஒருவர் இருக்கிறாராமே. அவர் ஏன் இது விஷயத் தைக் கவனிக்கவில்லை? முடிவில் தூபாத் தியமுள்ள ஒருவரல்லவா கார்டியனாக நிய மிக்கப்பட்டிருக்கிறார் ?

ஜட்ஜ் :—இவர்களுக்கிடையில் நெடுநாளாய் மனஸ்தாபம் ஏற்பட்டிருக்கும் காரணத்தால் தான் வீணில் திட்டுக்கேட்கவேண்டா மென்று அவர் கவனிக்கவில்லையாம். கார்டிய னாக இருக்கச் சம்மதமா வென்று கேட்டும் அவர் பதிலளிக்கவே இல்லை. மைனரின் விஷ யமோ உயிரைப் பொறுத்ததாயிருக்கிறது பற்றி யாரேனும் வேறு கார்டியன் ஏற்பட் டால் போதுமென்றாய்விட்டது.

கலெக்டர் :—ஓகோ ! உயிருக்கே மோசமா ? சரிதான். இதனால் பங்காளி லாபமடைகிற னன்றி ராஜம்மாளுக்கென்ன லாபம் ?

ஜட்ஜ் :—ஸ்ரீநிவாசமூர்த்தியின் உயில் விநோத மானது. மைனர் மேஜராவதற்குமுன் கால கதியடைந்துவிட்டால் ராஜம்மாளின் பங்கு அவளுக்குச் சர்வசுதந்தரமாய் விடுகிறது. மைனரின் பங்கும் அவள் அதிகாரத்தில் தான் நடைபெறும். இதுதான் தாமோதர னின் முக்கிய வாதம்.

கலெக்டர் :—தாமோதரன் மெத்த உயர்ந்த நோக்கமுள்ளவனாயிருப்பானென மதிக்கி றேன். மைனருடைய நன்மைக்குக் கெடுதி வருமாயின் பெற்ற தாயாயிருந்தாலும் அவளை விட்டு மகனை உடனே பிரித்து விடவேண்டி யது நியாயமே. ஈதென்ன புதியமாதிரியான வழக்காக இருக்கின்றதே என்று சிலர் சொல்லக்கூடும். 'தாய்க்கு இல்லாத கார்டி யன் பாத்தியம் தெருவோடலையும் அன்னி யனுக்குண்டா' என்று சிலர் கேட்கலாம். இருந்தாலும் 'லா' என்றால் நியாயம் என்ற

முறையில் பெடிஷனரின் நோக்கத்தை நன்கறிந்து நீங்கள் பெண்பிள்ளை என்று இருந்துவிடாமல் கண்டிப்பாய்த் தீர்ப்பளித்ததை மெச்சுகிறேன். இந்தியர்களுக்கு உயர் பதவியளித்தால் அவர்கள் தயாதாட்சணியமின்றி நியாயத்திலேயே கண்ணுயிருப்பவர்கள் என்று நிரூபிக்கப்படுதல் அவசியமாயிருக்கிறது.

ஜட்ஜ் :—நான் ஜட்ஜ் ஸ்தானத்திற்கு வந்து ஏழெட்டு வருஷங்களாயின. சாதாரணமாய் வக்கீல்களோடுகூட நான் நெருங்கிப் பழகுவதில்லை. ராஜ சாசனத்தில் கையொப்பமிட்டு நீதிமேடை ஏறியபின் உண்மையைத்தான் கடைப்பிடிக்கவேண்டுமென்பது என் கொள்கை.

கலெக்டர் :—ரொம்ப சரி ! ஏன் முகம் வாடி இருக்கிறது ? இரவில் தூக்கமில்லைபோலும்.

ஜட்ஜ் :—ஆம். எனது தொழிலுக்குத் தூக்கமேது ? முக்கியமான தீர்ப்புக்கள் சில இருக்கின்றன. அவை அடுத்த வாரத்திற்குள் முடிவுபெறவேண்டும்.

இதற்கிடையில் அடுத்த அறையிலிருந்து பாடும் இனிய குரலோசை வெளிப்பட்டுக் கொண்டிருந்தது. கலெக்டர் துரை தஞ்சை வந்து ஐந்து வருஷங்களானதுடன் தமிழ்ப் பரிக்ஷையிலேயே 'ஆட்டை ஆடு' என்றும் 'மாட்டை மாடு' என்றும் படித்து உண்மையில் தேறினவர். இவருக்குப் பாடம் கற்பித்த தமிழ் முன்ஷி வேறிடங்களில் இவ்வளவு நேரம் ஊன்றிப் பாடம்சொல்லவேண்டியிருந்திருந்தால் அவர் நெடுநாட்களுக்கு முன்னதாகவே ராஜிநாமா கொடுத்துவிட்டிருப்பார்.

தமிழ் மொழியில் பயிற்சியுள்ள கலெக்டர் துரைக்கு "உனக்கோ மனமில்லை, எனக்கோ உன்னை ஒழிவதில்லை சாமி" என்ற பதம் காதில் பட்டதும் "உமது குழந்தை பாடுகிருள் போலும் !" என்று வினவினர்.

ஜட்ஜ், "இல்லை, இல்லை, பாடுபவள் என் மைத்துனி. இப்பொழுதுதான் புருஷனிறந்துபோனன். இன்னும் ஆறு மாதங்கூட ஆகவில்லை. இங்கிலீஷ் நன்ருய்ப் பேசுவாள். நான் அவள் படிப்பிற்காக ஆயிரக்கணக்காய்ச் செலவழித்திருக்கிறேன்" எனக்கூறி, "சுந்தரம்! நீ இங்கே வரக்கூடுமா ?" என்று ஆங்கிலத்தில் கேட்டதும், அழகிய பட்டுச் சேலை கட்டிய மோகன சுந்தரி யொருவள் வந்து கலெக்டருக்கு நல்வரவு கூறி அவர் கையைக் குலுக்கினுள். சுந்தரி அருகிலுள்ள சோபாவில் உட்கார்ந்து கையிலணிந்த வைரமோதிரங்கள் மின்ன வீணை வாசித்தாள். அது பிரம்மானந்தமாயிருந்தது. கலெக்டருக்குத் தமிழ் தெரியாதென்ற காரணத்தாலோ அல்லது வேறு பாட்டுக்களைக் கற்றுக்கொள்ளாததினுலோ முழுதும் அவள் ஜாவளி, காவடிச் சிந்து இவைகளையே பாடினுள்.

கெடியாரத்தில் மணி ஒன்பதரையாயிருப்பதறிந்து, துரை தமது ஆசனம் விட்டெழுந்து விடைபெற்றுக்கொண்டு வெளியில் வந்தார். சுந்தரி பாடிக்கொண்டிருந்த அறையின் ஜன்னல் அருகில் நின்று கமலத்துடன் பேசிக்கொண்டிருக்கும் வக்கீல் நாராயணனைக் கண்டதும் அவர் காணுதவர்போல் வண்டியேறிச் சென்றுவிட்டார்.

## பன்னிரண்டாவது அதிகாரம்.

## சூதுள்ள நியாயவாதி.

வக்கீல் நாராயணனுக்கு மட்டும் கலெக்டரிடம் சந்தேகம் சந்தேகம் தான் ! கலெக்டரை வேறிடம் மாற்றிவிட்டாலன்றித் தக்க யோசனை வேறு கிடையாதென மதித்து, அவர் தஞ்சை ஜில்லாவின் சட்டசபைப் பிரதிநிதியை மிரட்டி உருட்டி 'மூன்று வருஷங்களுக்குமேல் தஞ்சை கலெக்டரை மாற்ருமலிருக்கும் காரணத்தைக் கூறமுடியுமா' எனச் சென்னை சட்டசபையில்

கேள்வி கேட்கச் செய்தார். அந்தஜில்லாவாசிகளின் வேண்டுகோள் காரணமாகவே கலெக்டர் மாற்றப்படவில்லையென அதற்குப் பதில் கிடைத்தது. அதன் பிறகு நாராயணன் தஞ்சை ஜில்லாவாசிகளிற் பலரைக் கண்டு கலெக்டர்மீது குற்றம் சுமத்தி மகஜர் எழுதும்படி சொன்னர். கலெக்டர் துரை வந்த புதிதிலேயே தமது பரிவார தேவதைகளின் வலைக்குள் விழுந்திருப்பாராயின் நாராயணனது ஜபம் உடனே பலித்திருக்கும். விவசாயிகளையும் ஏழைகளையும் தயவுடனும், பரிவாரங்களைக் கண்டிப்பாயும் கலெக்டர் நடத்திவந்ததுபற்றிக் கோழ் பெடிஷனுக்கு இடம் சிறிதும் கிடைக்கவில்லை. இத்துடன் விடாமல் வாயைத் திறந்து ஒரு வார்த்தையும் பேசத் தெரியாத அப்பாவி ஒருவனைப் பிடித்து அவனுக்குச் சில விஷயங்களைப் பாடம்செய்வித்து ஜில்லா போர்டு விவகாரத்தில் கலெக்டரின் கவனக்குறைவு என்பதாய் நாராயணன் பிரசங்கிக்கச் செய்தார். போர்டு மெம்பர்கள் அனைவரும் இது விஷயம் ஒப்பத்தக்கதல்லவென்று மறுத்துவிட்டார்கள். இதற்கிடையில் காவிரியாற்றின் நீர்ப்பாசன விஷயமாய்ச் செய்யவேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் ஜனப்பிரதிநிதிகளைக் கொண்டும் நிலச்சுவான்தாரர்களைக் கொண்டும் செய்துமுடித்துவிட்டதாலும் வேறு காரணங்களை முன்னிட்டும் கலெக்டர் தம்மை வேறிடம் மாற்றும்படி கேட்டுக்கொண்டார். இவர் செங்கல்பட்டு கலெக்டராய்நியமனம்பெற்றிருக்கிருரென கெஜட்டில் வந்ததும் தஞ்சை விவசாயிகள் கண்ணீர் விட்டழுதார்கள். கூட்டங்கள் கூடிப் பிரிவு உபசாரப் பத்திரங்கள் பல படிக்கப்பட்டன. பிரபல வக்கீல்களும் தமது சங்கத்தில் இவருக்கு விருந்தளித்தார்கள். பெரிய கோவில்களிலும் இவருக்கு மரியாதை செய்யப்பட்டது. கலெக்டர் துரை கோயில்களுக் கழைக்கப்படும் நேரங்களில் வாசற்படியிலேயே தமது கால் பூட்சைக் கழற்றிவிடுவார். துவஜஸ்தம்பம் வரையில் பூட்சுடன் வரலாமென்று தர்மகர்த்தர்கள் சொல்வதையும் இவர் கேட்பதில்லை. கோயிற்பூனை தேவர்க்கஞ்சாது என்ற பழமொழியைக் கலெக்டர் துரை படித்திருந்தார். ஜில்லாவாசிகள் முழுமனதுடனும் உண்மையான அபிமானத்துடனும் பிரிவு உபசாரம் கூறியதைப் பெற்றுக்கொண்டு கலெக்டர் மாற்றலாய்ச் சென்ருர். ராஜம்மாளை ஒரு முறை கண்டு விசாரிக்க எண்ணியும் தற்சமயம் வேண்டாமென்று அவ்வெண்ணத்தை விட்டுவிட்டார்.

கலெக்டர் ஊர் விட்டுச்சென்ற மறுதினமே நாராயணன் ஒரு பெரிய கூட்டம் கூட்டி அதிகாரிகள் என்ருல் வேலைக்காரர்கள் என்றும், அவர்களுக்கு நன்றியறிவு காட்டல் அநாவசியமென்றும், சுயநலத்தைப் பெரிதாக எண்ணிவரும் சில வக்கீல்கள் அரசாங்க உத்தியோகங்களையும் பட்டப் பெயர்களையும் விரும்பி அதிகாரிகளைப் பூசித்து வருகிருர்களென்றும், இவர்களுள்ளவரை சுய ஆட்சி கிடைக்கவே மாட்டாதென்றும், சுய நலத்தை உத்தேசித்து ஜனத்தலைவர்கள் போல் நடித்துப் பிரசங்க மேடைகளில் ஆரவாரித்தல் அதிகரித்து விட்டதென்றும், சிற்சிலரின் பெயர்களைக் குறிப்பிட்டுத் திட்டித் தமது உபந்யாசத்தை ஒருவாறு முடித்தார். என்ன விஷயமாயிருக்குமோவென்றெதிர் நோக்கித் திரளாகக் கூடியிருந்த ஜனங்கள் நாராயணனது வீண் பேச்சுக்களையும் கண்ணியமற்ற மொழிகளையும் கேட்கச் சகியாது ஒவ்வொருவராய் எழுந்துபோய்விட்டார்கள். பேச்சு முடியும்போது, நாராயணன் மட்டுமே பாக்கியிருந்தார். "குற்றமுள்ள நெஞ்சு குறு குறு என்னும்" என்றபடி தமது தீச்செயல்களை ஒளிக்கக் கருதி வீண்வாதமும் கிளர்ச்சியும் நாராயணன் செய்துவருவது பற்றி உண்மை ஜனத் தலைவர்கள் வருந்தினர்கள்.

கலெக்டர் மாற்றப்பட்டுச் சென்றதிலிருந்து வக்கீல் நாராயணன் சனி விட்டதென்று கவலையற்றுத் தூங்கினர். 'காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்' என்றபடி சுறுசுறுப்பும் இங்கிதமுமறிந்து நடக்கும் பல வக்கீல்கள் எடுத்திருந்த கேஸ்கள் எல்லாவற்றையும் ஜட்ஜ் ராமநாதன் மும்முரமாய்ப் பைசல் செய்துவிட்டார். ஏன்? அவர் வேறிடம் மாற்றப்படுவார் என்ற பிரஸ்தாபமே இதற்குக் காரணம்.

## பதின்மூன்றுவது அதிகாரம்.

### தாய்நாடு வருகை.

கிருஷ்ணசாமி இங்கிலாந்து சென்று ஐந்து வருஷங்களாயின. அவர் குழந்தை திலகவதியைப் பார்க்க விரும்பியதுடன் கோபாலனுடைய நடவடிக்கைகளைச் சீர்திருத்த வேண்டுமென்றும் விரும்பினர். தமக்கை புருஷன் ராமநாதன் நாளுக்கு நாள் செல்வப் பெருக்குடன் வாழ்ந்துவந்தும் தம் மகன் கோபாலனை கவனியாமலிருந்து வருவதால் இனித் தாமும் அவனை அவன் இஷ்டப்படியே நடக்கவிடல் கூடாதென அவர் அறிந்தார். திலகவதிக்கும் பத்து வயதாயிருந்தது. அவள் படிப்பின் விஷயமாய் நேரில் ஏற்பாடு செய்யவேண்டியதும் அவசரமே. வயதுசென்ற கிழவியும் வாலிபப் பருவமடையவிருக்கும் இளம்பெண்ணும் இருக்கும் குடும்பத்தில், கோபாலனுடைய நிலைமை உயர்வாயிராதவரை குடும்பவாழ்க்கை சீர்குலைந்து விடும் என்ற கவலையும் கிருஷ்ணசாமிக்கு உண்டாயிற்று. தம் மாமனர் பாலசுந்தரத்தின் சுவிகாரபுத்திரன் வாசுதேவன் தனது பதினைந்தாம் வயதில் மாகாணத்தில் முதல்வனாக மெட்ரிகுலேஷன் பரீக்ஷையில் தேறியதுபற்றியும் கடிதம் கிடைத்திருப்பதை யனுசரித்து; அவர் பந்து மித்திரர்களுடன் சில நாட்கள் வசிக்க விரும்பி இங்கிலாந்திலுள்ள தமது ஆங்கில நண்பர்களிடம் விடைபெற்றுக் கொண்டு கப்பலேறினர். செங்கல்பட்டில் கலெக்டராயிருக்கும் ஆர்தர் துரையின் மகனாகிய கிளார்க் என்னும் ஏழு வயதுள்ள சிறுவனும் தன் தந்தையைக் காணும்பொருட்டு அதே கப்பலில் பிரயாணம் செய்தான். அச்சிறுவனுடன் பேசுவதிலும் விளையாடுவதிலுமாகப் பொழுதைப் போக்கிய கிருஷ்ணசாமிக்குக் கப்பல் புறப்பட்ட மூன்றாம் நாளே பம்பாய்த் துறைமுகத்திற்கு வந்துவிட்டதாய்த் தோன்றியது. துறைமுகத்தில் தம் குழந்தையை யழைத்துச் செல்லுமாறு வந்திருந்த ஆர்தர் துரைக்கு ஏற்கனவே இங்கிலாந்தில் கிருஷ்ணசாமியின் பழக்கமிருந்தது. இச்சமயம் தம் பிள்ளை அவர் கழுத்தைக் கட்டிக்கொண்டு விளையாடி அவரைப் பிரிந்து வரச் சம்மதமில்லாதிருப்பதைக் கண்டு ஆர்தர் துரை மிகவும் வியந்தார். கிருஷ்ணசாமி தன்னுடன் ஊருக்கு வரவேண்டுமென்று சிறுவன் மன்றாடினான். "நீ உன் தந்தையைக் காண விரும்பியதுபோல் என்னைப் பார்க்க விருப்பமுள்ள குழந்தை திருச்சியிலிருப்பதால் நான் இப்பொழுது நேராகச் சென்றுவிட்டுப் பிறகு செங்கல்பட்டு வருகிறேன்" என்று கிருஷ்ணசாமி உறுதியாய் மொழிந்தார். கிளார்க் தன்னிடமிருந்த அழுக்குப் படிந்த துணிப் பொம்மையையும் ஊதுகுழலொன்றையும் தன் சகோதரிக்குப் பரிசாய்க் கொடுக்கும்படி கிருஷ்ணசாமியிடமளித்துவிட்டுத் தன் தந்தையுடன் சென்றான்.

கிருஷ்ணசாமி சென்னை வந்ததும், தம் நண்பன் ராமன் தேசசஞ்சாரம் செய்து வரச் சென்றிருப்பதறிந்து நேராகத் திருச்சிவந்துவிட்டார். ஐந்தச்சுபாவனையும் கனகவல்லியைப் போலவே இருக்கும் குழந்தை திலகவதியைக்கண்டு அவர் மனம் பூரித்தார். தாயார் அம்மணியம்மாள் திலகவதி தன் புத்திமதிப்படி மேன்மையாயும்

அமைதியாயும் நடந்துகொள்வதை மெச்சிப் பேசியதிலிருந்து, செல்வப் பெண்களுள் சில ருக்குச் சுபாவமாய் ஏற்படக்கூடிய துர்க்கு ணங்கள் தாயில்லாப் பெண்ணுன திலகவதியிட மில்லாமலிருக்கின்றனவெனவறிந்து அவர் சந் தோஷித்தார். சிறுவன் கிளார்க் கொடுத்தி ருந்த பரிசு சாமான்களை அவர் திலகவதிக் களித் தார். பொம்மை அழுக்கடைந்திருப்பதால் கிளார்க் விளையாட்டு புத்தியுள்ளவனென்று திலகவதி தன் தந்தையிடம் கூறியதும், கிருஷ் ணசாமி 'இந்தப் பொம்மையை அவன் மூன்று வயதிலிருந்து வைத்து விளையாடுவானும்' என் ருர். மருமகன் கோபாலன் எதிரில் வந்ததும் இவரால் அடையாளம் கண்டுகொள்ள முடிய வில்லை. தலைமயிரை வெட்டிவிட்டிருப்பது போ தாமல் அதிலும் ஐந்து தினுசாயிருந்தது. குஜி லிக்கடையிலுள்ள இரண்டணுக் கண்ணுடி பில் லைகளை உயர்ந்த தங்கக்கட்டுப்போட்டு அணிந்தி ருந்தான். பாகெட்டில் சிகரெட்பாக்ஸ். கையில் நெருப்புப் பெட்டி. தரையில் புரண்டுகொண்டி ருக்கும் தட்டாடை வேஷ்டி. இவைகளைக் கண்டு கிருஷ்ணசாமி வியந்தார். கோபாலன் கட்டி யிருந்த சல்லாவைப் பார்க்குங்கால் வஸ்திரம் தரித்தல் மானங் காப்பாற்றுவதற்காகவா என்ற சந்தேகம் ஒரு நொடிப்பொழுதில் தீர்ந்து விடு வதாயிருந்தது. முதுகில் வெண்பட்டு உத்தரீ யம் அலைந்தாடிக் கொண்டிருந்தது. இவ்வளவு அலங்காரமுள்ள கோபாலனை ஐந்து வருஷங் கள் கழித்துப் பார்க்க நேரிட்டதால் கிருஷ்ண சாமி அவன் யாராயிருக்கலாமெனத் தியங்கினர். இக்குறிப்பை யறிந்த திலகவதி, "என்ன அத் தான்! நான் காலையில் அப்பாவை யழைத்து வருவதற்கு மோட்டார்காரைக் கொண்டுபோன தால் உங்களுக்கு வெளியே போக இடைஞ் சலா யிருந்ததல்லவா?" என்றாள். "கோபாலனு நீ! வா அப்பா, உட்காரு. சுகமாயிருக்கிறுயா? ஏன் ரயிலடிக்கு வரவில்லை? வா அப்பா" என்று கிருஷ்ணசாமி அவனைக் கட்டி யணைத் துக்கொண்டார். மாமனுக்குள்ள பிரியத்திற்கு மாருக மருமகனிடமமைந்துள்ள துர்க்குணங் களை நினைத்ததும் அம்மணியம்மாள் கண்களில் நீர் பெருகியது.

கிருஷ்ணசாமி குடும்ப யோகக்ஷேமங்களைப் பற்றியும் தமக்கை புருஷனைப்பற்றியும் தம் தாயை விசாரித்தார். ராமநாதன் உயர்பதவியி லிருந்தும் கோபாலனுடைய க்ஷேமம் விசாரி த்து அவர் காலணுக் கடிதங்கூட எழுதவில்லை என்றும், இளையாள் கமலத்தின் அருமை மகள் ராதாமணிக்குச் சமீபத்தில் நடைபெற்ற சாந்திக் கலியாணத்திற்கு முழுதும் வைரமிழைத்த வெற்றிலைத்தட்டை ஸ்ரீதனமாய்க் கொடுத்தார் என்றும், கலியாணத்திற்கு வரும்படியாகக் கோபாலனுக்கு ஒரு வரிகூட எழுதவில்லை என் றும், தன் பெண் உயிருடனிருந்த காலத்தில் ஒரு வயிறு சாதமும் புசிக்கவழியில்லாது கஷ்டப் பட்டுக்கொண்டிருந்து, நல்ல காலம் வருமளவில் நாட்டிய மாடுவதற்குக் காப்பிக்கடைக்காரன் மகள் கொடுத்து வைத்திருந்தாள் என்றும், கனகவல்லியுமா தன்னை மோசம் செய்து போ கவேண்டும் என்றும் அம்மணியம்மாள் பிரலா பித்தாள்.

கிருஷ் :—ஆனல் ராமநாதன் பெண்ணைக் கொடு த்திருக்குமிடம் பெரிய குடும்பம் போலும்!

அம்மணி :—போதுமே! கமலத்தின் மகளுக்கு உயர்ந்த இடங்கூடக் கிடைக்குமா? தென் னூர் சுப்பிரமணியன் செத்துப்போன பன்னி ரண்டாவது மாதத்தில் அவன் அகமுடை யாள் சரஸ்வதி ஒரு பிள்ளையைப் பெற்றுள். பன்னிரண்டு மாதம் கர்ப்பிணியாயிருப்பவர் கள் உலகத்திலில்லையா? என்ன இழவோ! அச்சமயம் தென்னூரார்கள் கச கச வென்று வம்பு பேசினர்கள். கமலத்தின் தந்தை காப்பி ஹோட்டல் வைத்திருந்

போது சாஸ்வதிதான் பலகாரம் சுடுவது வழக்கம். அதிலிருந்தே தன் பிள்ளை நாகைநாதனை வளர்த்தாள். ஒன்று விட்டொரு நாள் சாஸ்வதிக்கும் காமாக்ஷிக்கும் நடுத்தெருவில் சண்டை நடக்கும். இந்த வேசி வந்ததிலிருந்து தன் புருஷன் வீணுய் விட்டான் என்பாள் காமாக்ஷி. இந்த முண்டைக்குப் பாண்டமங்கலத்தானுக்குப் பலகாரம் செய்து போடாவிடில் தூக்கம் பிடிப்பதில்லை என்பாள் சாஸ்வதி. காப்பி கிளப்பு வைத்தால்தானென்ன! மகாலிங்கம், கணேசன், முத்துராமன் இவர்களெல்லாம் ஒழுங்காய் நடந்துகொண்டு தங்கள் குழந்தைகளையும் குடும்பத்தையும் உயர்ந்த நிலைமைக்குக் கொண்டுவரவில்லையா? இவர்களிடம் சம்பாஷிக்காத பெரிய மனிதர்களுண்டா? ஆணும் அவலம், பெண்ணும் பேறவலம்! ராதாகிருஷ்ணன் குடும்பம் தொலைந்ததுடன் கண்ணிய ஜீவனமுள்ள அத்தொழிலாளிகளுக்கே ஓர் அவமானம் ஏற்பட்டுவிட்டது. ஊர் பேர் தெரியாமல் நாதியற்ற பிணமாய் அவன் செத்துக் கிடந்தான். புருஷனிருந்தபோதே காமாக்ஷி பாண்டமங்கலத்தில்தான் அதிகமாய்த் தங்குவாள். இப்பொழுதோ நிர்விசாரம். அடுத்தகத்துக் கேசவன் பிள்ளை நாராயணனுதவியால் ராமநாதன் மருமகனுய் ஏற்பட்டான். சின்னப்பெண் சுந்தரியைக் குலம் கோத்திரமறியாத அறுபது வயதுள்ள வடக்கத்தியான் ஒருவனுக்கு ஐயாயிரம் ரூபாய் பெற்றுக்கொண்டு கலியாணம் செய்துகொடுத்தாள். அதுவும் ஆறுமாதத்துக்குமுன் அறுத்து வந்துவிட்டது. நான் சொல்ல ஆரம்பித்ததை விட்டுவிட்டேனே. தங்கள் கதைகள் வெளியாகாதிருக்க வெண்ணி, சாஸ்வதி பிள்ளை நாகைநாதனுக்குக் கமலம் தன் பெண் ராதையைக் கொடுக்கவேண்டியதாயிற்று.

கிருஷ்ணன்—அடடா! நாகைநாதன் குரூபியாயிற்றே. கமலத்தின் பெண்ணுக்கு ஏற்றவானல்லவே. பையன் படிப்பும் பூச்சியம்தானல்லவா?

அம்மணி:—முழுதும் கேள். பெண் வெகுகாலம்வரை கிறிஸ்தவப் பெண்பள்ளிக்கூடத்தில் படித்துக்கொண்டிருந்தது. ஊர் ஊராக மாற்றப்பட்டுக் கொண்டிருக்கும் ராமநாதனுக்கு அத்துடன் பெண் படிப்பை நிறுத்த வேண்டியதாயிற்று. தெலுங்கு ஜில்லாவில் பாஷையே புதிது. தனக்குக் கலியாணமாகும்பொழுது ஜாதகத்தில் வயது பதினறும். உண்மையில் பதினெட்டும் ஆயிருந்ததனல் தன் பெண்ணையாவது சீக்கிரம் கலியாணம் செய்து கொடுக்கவேண்டுமென்று கமலம் பெண்ணுக்கு ஐந்து வயதிலிருந்து இடம் தேடினுள். பெருத்த உத்தியோகஸ்தர் விட்டாருக்கு இவளது படாடோபமும் அடக்கமற்ற தன்மையும் பிடிக்கவில்லை. தனவந்தர்களைக் கேட்டாலோ, இவர்கள் மூன்று தலைமுறையாய் அடங்கிக் குடித்தனக் காரியங்களைச் செய்ததே கிடையாதாகையால் அவர்களும் மறுத்து விட்டார்கள். தட்டித் தடுமாறிச் சிலர் பெண்ணைப் பார்க்க வீடுவந்தாலோ "கலியாணப்பிள்ளையல்லவா பெண்ணைப் பார்க்கவேண்டும்!" என்று காமாக்ஷி சொல்லுவாளாம். "நான்மட்டும் கலியாணப் பிள்ளையைப் பார்க்க வேண்டாமோ?" என்பதாக அந்தப் பெண் வந்தவர்களிடமே வெட்கமின்றிக் கேட்குமாம். "நான் எல்லாரையும் போல் என் குழந்தையைச் சாமானியமாய் வளர்த்ததில்லை. அவளுக்குச் சாப்பிட்ட கையைத் தானுகக் கழுவி வழக்கமில்லை. அவள் உண்டு, படிப்பு உண்டு. பயாஸ்கோப்பில் எவ்வளவு பெரியகதையாயிருந்தாலும் அது அவளுக்கு உடனே புரிந்துவிடும். புடவை கட்டிவிடக்கூட ஒரு வேலைக்காரி போட்

டிருக்கிறோம். என் பெண்ணின் வைர நகை அழுக்குப்படியாமல், முகம் வாடாமல், மெருகு அழியாமல், கண்ணில் வைத்து இமையால் மூடும்படியான அதிருஷ்டசாலி எங்கிருக்கிறானோ! கொடுத்து வைத்தவன்தான் வரப் போகிறான். வீட்டுக் கவலையின்றிக் குடும்பக் காரியமின்றி வேட்டகத்துடனிருந்து என் அருமைக் கண்ணாட்டியுடன் சோபாவில் உட்கார்ந்து கொண்டிருப்பவனுக்கு என்ன குறைவு?" என்று கமலம் வர்ணிப்பாளாம். பெண் கேட்க வந்தவர்களும் விட்டால் போதுமென்று திரும்பவேண்டியது தானே!

கிருஷ்ணன் :—நாகைநாதனுக்குப் பெண்ணைக் கொடுத்ததில் அதிகச் செலவு இருந்திராது.

அம்மணி :—ஐயோ, அந்த வேடிக்கையைக் கேள்! கமலம் பெண்ணுக்குக் கலியாணத்திற்கு ஐந்து வருஷத்திற்கு முன்பாகவே தங்கப் பிரம்பு, வெள்ளி ஐந்தறைப் பெட்டி, பசுமாட்டின் கால்களுக்கு வெள்ளிக்குளம்புகள், தங்கத்தில் சிகரெட் பெட்டி, பொடிப் பெட்டி, தெர்மாஸ் பிளாஸ்கின் உறை, தாம்பாளம், பஞ்சபாத்திர உருத்திராணி, தலை வாரும் பிரஷ், வாசனைப் பெட்டி, விசிறி, கண்ணாடி, சீப்பு இவைகளை எல்லாம் சேகரித்து வைத்திருந்தாளாம்.

கிருஷ்ணன் :—நாகைநாதன் நல்ல அதிருஷ்டசாலிதான்!

அம்மணி :—இவ்வளவையும் கலியாணப் பந்தலில் பார்த்த சரஸ்வதி அவை தனக்குச் சொந்தமென்று எண்ணியிருந்தாள். தாலிகட்டிய பெண் மாமியாரைச் சேவிக்கவில்லையாம். குழந்தைக்குக் குனிந்து நிமிர்ந்தால் ஆயாசமாயிருக்குமென்றும் பெண்கள் கணவனை மட்டும் சேவிப்பதுதான் நியாயமென்றும் பெண்ணின் தகப்பன் பெருமை பேசிக் கொண்டாராம். இதிலும் மானங்கெட்டுச் சரஸ்வதி தான் ஜட்ஜி வீட்டில் கலியாணம் செய்த பெருமையைச் சிலருக்குக் காட்ட வெண்ணி ஸ்ரீதன சாமான்களைக் கையிலெடுத்ததும், "அதெல்லாம் அழுக்காய்விடும். மெருகு அழிந்துவிடும். 'உன்னைத் தவிர ஒருவரும் உன் சாமான்களைத் தொடக்கூடாது' என்று எங்கப்பா சொல்லியிருக்கிறார்" என்று கலியாணப்பெண் கூறி மாமியின் கையிலுள்ளவைகளை வெடுக்கென்று பிடுங்கிக்கொண்டு மற்றவைகளையும் எடுத்து பீரோவில் வைத்துப் பூட்டிக்கொண்டு விட்டதாம்.

கிருஷ்ணன் :—ராமநாதனுக்கு ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் சம்பள மேற்பட்டு ஒரு வருஷந்தானே ஆகிறது! வீட்டில் மாமியாருக்குப் புடவை, மைத்துனிக்கு நகைகள், மோட்டார் கார், இரட்டைக்குதிரை வண்டி இவ்வளவிற்கும் வகை ஏது?

அம்மணி :—அது என்ன வகையோ யார் கண்டது! சரஸ்வதியை அடித்துத் துரத்திவிட்டார்கள். அவள் கமலத்தின் நடவடிக்கைகளைப்பற்றித் திட்டிக்கொண்டே இவ்வூரில் உபாதானமெடுத்துச் சாப்பிடுகிறாள். கமலம் தன் பெண்ணுக்குக் குழந்தை பிறக்க வேண்டி ஷஷ்டிப் பட்டினி எடுத்து வைத்திருக்கிறாளாம்.

கிருஷ்ணன்:—வீடு நிறைந்த செல்வத்தில் கண்ணிறைந்த மனைவியுடன் பிள்ளையில்லா வீட்டில் நாகைநாதன்பாடு யோகந்தான்!

அம்மணி :—எனக்கோ வயசாச்சுது. தடதடவென்று பேச முடியவில்லை. நீயோ அவசரப்படுகிறாயே. நிதானித்துக் கேள் சொல்கிறேன்.

"பெண் புருஷனை லட்சியம் செய்கிறதில்லை. குருபிக்குக் கொடுத்துவிட்டாயே என்று தாயுடன் அறுபது நாழியும் வாதாடுகிறதாம். மாம

ஞர் மருமகனிடம் பேசுவதும் கிடையாது. வீட்டிற்கு நண்பர்கள் வந்தால் இந்தப்பெண் வீணைவாசிப்பது பற்றி நாகைநாதனுக்கு வெறுப்பாம். அவர்கள் வீட்டில் ஆண்பிள்ளை வேலையாட்கள் பெண்டுகளுக்கு விசிறி வீசுவது இவனுக்கு அவமானமாம். வீட்டு மாப்பிள்ளை வேலைக்காரர்களுக்குச் சமானமாகத்தான் கருதப்படுகிறானும். பெண்ணோ மேல்மாடி விட்டுக் கீழிறங்குவது மில்லை. என்ன இருந்தாலும் சாஸ்வதி பெற்ற பிள்ளைக்கு இவ்வளவு ராங்கியும் காப்பி கிளப்பு காமாக்ஷி மகளுக்கு இவ்வளவு தட்டுக்கிடலும் வேண்டாம். கொஞ்சமாவது அடக்க வணக்க மிருக்கலாம்.

கிருஷ்ணன் :—ஏனம்மா! நீயும் உன் செல்வப் பேத்தியை இப்படித்தானே வளர்த்து வருகிறாய்! ஆயிரத்தைந்நூறு ரூபாய் சம்பளக்காரன் மகளே இங்ஙனமிருந்தால், மாதம் பதினாயிரக்கணக்காய்ச் சம்பாதிக்கும் பாரிஸ்டர் கிருஷ்ணசாமியின் ஏகபுத்திரிமட்டும் இளப்பமா?

அம்மணி :—நன்றாய்ச் சொன்னாய்! அலம்புவாயை! "மலைமேலிருக்கும் மந்தாரப் பூங்கொடிக்கு எதிராய் மலர்ந்தது ஊமத்தை" என்றிருக்கிறது நீ பேசுவது!

"என் கைக்கீழிருந்த பெண், நாட்டுப்பெண் இருவரும் எப்படிக் குடும்ப நிர்வாகிகளாயிருந்தார்களோ அப்படியேதான் திலகவதியும் இருக்கிறாள். நானும் உன் தந்தையுள்ள காலத்திலும் பிறகும் குடித்தனக்காரியமே குலதெய்வமாகத்தான் பாவித்து வருகிறேன். பொருள் தேட அறியாத புருஷனும் குடித்தன வேலை தெரியாது தடித்தனமாய்த் திரியும் பெண்களும் பூமிக்குப் பாரமாவார்கள். பெண்ணாய்ப் பிறந்தவளுக்கு வீட்டு வேலைதான் உத்தியோகம். குடும்ப ஆதாயமே மாதச் சம்பளம். கற்பே ஆபரணம் தன் மனச்சாட்சிதான் காவல். இவைகள் பொருந்தியுள்ள பெண்மகள் ஒருகாலத்திலும் சீர் குலையாள்; துன்புறாள். தெய்வமெனப் போற்றப்படுவாள். இக்குணங்களற்ற பெண் ஆயிரக்கணக்கான பணமதிப்புள்ள ஆபரண மணிந்திருப்பினும், வீடு நிறைந்த குழந்தைகளுக்குத் தாயாயிருப்பினும் மதிப்புறமாட்டாள். வேண்டாத பழக்க வழக்கங்கள் பல தற்காலம் பரவி இருந்தபோதிலும், பெண்மக்களால் கற்பு என்பது மட்டும் போற்றப்பட்டே வருகிறது. 'வீட்டுவேலை தெரியாதவள் வேம்பு' என்ற வேதநாயகம் பிள்ளையின் வாக்கியம் பொய்யல்ல."

இச்சம்பாஷணை முடிந்தபோது பகல் மணி பன்னிரண்டடித்தது. திலகவதி உள்ளிருந்து வந்து "அத்தே! உங்களுக்குப் பூஜைசெய்ய எல்லாம் எடுத்து வைத்துவிட்டேன். குப்புசாமிக்குச் சமையலாய்விட்டது. அத்தானைக் காணோமே" என்றாள். இதுகேட்ட கிருஷ்ணசாமிக்கு உள்ளம் பூரித்து விட்டது. உடனே எழுந்து ஸ்நானம் முதலியவற்றை முடித்துக் கொண்டு கனகவல்லியின் உருவப்படத்தைப் பார்க்க விரும்பி மேல்மெத்தை சென்றார்.

சோபாவில் படுத்துக் குறட்டைவிட்டுத் தூங்கும் கோபாலனைக் கண்டு "குழந்தாய்! எழுந்திரு, சாப்பிடுவோம் வா" என்று மிகப் பரிவாய்த் தட்டி எழுப்பினார். அகாலத்தில் தூங்குவதுபற்றிய வெட்கம் அச்சமயம்தான் கோபாலனுக்கு உண்டாயிற்று! அவன் பரபரப்பாய் எழுந்து வாயிலுள்ள தாம்பூலத்தை உமிழ்ந்துவிட்டு மடி கட்டிக்கொண்டு மாமனுடன் உட்கார்ந்து சாப்பிட்டான்.

குழந்தை திலகவதி இலைபோட்டுத் தண்ணீர் தெளித்துத் துடைத்து, பாத்திரங்களில் தீர்த்தமெடுத்து வைத்துப் பாட்டியம்மாள், அத்தான், தந்தை இவர்களுக்கு வேண்டியவற்றை முன்னதாகத் தன் கையால் பறிமாறி

விட்டு, தானும் கூடவிருந்து சாப்பிட்டு முன்னதாகவே எழுந்துவிட்டாள். இதுவும் ஒரு விநோதமோ என்று கவனித்துக்கொண்டே கிருஷ்ணசாமி சாப்பிட்டெழுந்து முன்கட்டிற்கு வந்ததும், அங்கு வெற்றிலை பாக்குத் தயாராய்த் தாம்பாளத்தில் வைக்கப்பட்டிருந்தது கண்டு, "திலகவதி" என்றுஅழைத்தார். அவள் கையில் மடிப்பாயும் தலையணையுமெடுத்துக்கொண்டு வந்து விரித்து விட்டு, "இதோ வந்துவிட்டேன்" என்று சென்று, பாட்டியம்மாளைக் கைபிடித்தழைத்துவந்து மடிப்பாயின் மீது உட்காரச்செய்து, தனது சிறு கைகளால் அவளுக்கு விசிறினாள்.

இதற்கிடையில் பாலசுந்தரமும் கலியாணி அம்மாளும் கிருஷ்ணசாமியைப் பார்க்க வந்தார்கள். பரஸ்பரம் க்ஷேமம் விசாரித்துப் பேசுவதிலேயே இவர்கள் பொழுது கழிந்தது.

(தொடரும்.)

# சகோதரத்துவம்.

(ஸ்ரீமதி ஜயலக்ஷ்மி நாகராஜன்)

இக்குணமுடையவர்களைத் தான் அறிவாளிகளென்றும் பெருந்தன்மையை யுடையவர்களென்றும் பலவாறு கூறுவது. இந்த எண்ணம் உண்டாகவேண்டுமென்றால் முதன் முதல் மனிதர் தம்மிலுள்ள சம்பந்தம் உணர வேண்டும்.

பூமியின் கண்ணுள்ள சகல சராசரங்களையும் படைத்துக் காத்துவரும் ஈசன் யாவருக்கும் பொதுவென்றும், அவருக்கு நாம் எல்லோரும் சமம் என்றும் அறிவோம். ஒரு தந்தைக்குப் பல பிள்ளைகள் இருந்தாலும் எல்லாப் பிள்ளைகள் பேரிலும் அன்பு இருக்கிறது. ஆனாலும் சத்புத்திரன் பேரில் அதிக அன்புண்டு. ஆனால் யாரையும் வெறுப்பது கிடையாது. தன் பிள்ளைகள் நல்லவர்கள் ஆகவேண்டுமென்றும் ஒற்றுமையுடனிருக்க வேண்டுமென்றுமல்லவா விருப்பம். அதுபோலவே எல்லாம் வல்ல இறைவனுக்கும் நாம் எல்லோரும் ஒற்றுமையாய் இருப்பதே விருப்பம்.

எல்லா ஜீவராசிகளுக்கும் ஆத்மா உண்டென்றும், எல்லா ஆத்மாக்களும் பரம்பொருளின் அம்சங்களே யென்றும் நாமறிவோம். பலதீபங்களிலிருந்து வெளிச்சம் கொடுப்பது ஒரே பொருளாகிய அக்கினியே ஆயினும் கண்ணாடியின் நிறம், அதில் அடைந்திருக்கும் அழுக்கு இவைகளை யனுசரித்து வெளிச்சம் பலவிதமாகத் தோன்றுகிறது. அதுபோல நாம் வெவ்வேறு விதமாகத் தோன்றினும் எல்லா தேகங்களுக்குள்ளுமிருக்கும் ஆத்மாக்களும் அந்த பரம்பொருளின் அம்சமேயாகும்.

நாம் இப்பொழுது நம்மிலுள்ள சம்பந்தம் எத்தகையதென்றுணர்வதால், நாம் யாரையும் வெறுக்காது சகோதரத்துவமாய் இருக்க வேண்டியது நமது முக்கிய கடமையாகிறது.

சகோதரபாவம் ஏற்படும்போது பொறாமை என்னும் தீயகுணம் அடியோடு நம்மை விட்டு அகல்கிறது. பின்னும் அதனாலுண்டாகும் தீமைகளிலிருந்து நம்மை இரட்சித்துக் கொள்கிறோம். ஒருவரைத் தூஷித்து அவரைப்பற்றிப் புறங்கூறுதல் என்ற துற்செய்கையிலிருந்து நாம் தப்புகிறோம். பிறரை வஞ்சித்து அவர்களுடைய சொத்தைக் கைவசப்படுத்தலாகிய வஞ்சித்தல் என்ற கெட்ட குணத்திற்கு இடந்தாமல் அது நம்மைப் பரிசுத்த மனமுடையவர்களாக்குகிறது. பின்னும்

"எண்ணான்கு முப்பத்திரண்டு பல்காட்டி,
இசையுடனே
பண்ணாகச் செந்தமிழ் பாடிவந்தாலும்
இப்பாரில் உள்ளோர்
அண்ணாந்து கேட்பர் ; அழகழ கென்பர் ;
அதன் பிறகு
சுண்ணாம்பு பட்ட இலையும் கொடார், கவி
சொன்னவர்க்கே!

என இப்படிக்கில்லாமல், தர்மம் என்ற நற்செய்கை புரிய, தம்மனம் இச்சித்து, தங்களாலான உதவியைப் பிறருக்குச் செய்யத் தூண்டுகிறது. அதனால் மற்றவர்களிடம் அன்பு ஏற்பட்டு, சத்துருக்கள் குறைகின்றார்கள். பின்னும் அவருக்கு இடையூறு நேருங்கால் அன்பினால் மனம் இரங்கி உதவிபுரியவும், அவர் துக்கிக்கும்போது தேறுதல் கூறி துக்கத்தைத் தணிக்கவும், இன்னும் மற்ற இயலக்கூடிய உதவியைச் செய்யவும் மனம் முற்படுகிறது.

பின்னும் சுயநலத்தின்பொருட்டே பார்ப்பினும், இக்குணம் மிக்க அத்தியாவசியம். ஏனெனில் அவனவன் செய்யும் கருமத்தின் பலன் அவனவன் சற்றேனும் பிசகாமல் அனுபவித்தே தீரவேண்டும் என்பது உண்மை. ஆனதால் நல்ல பலனைக் கோரும் நாம் யாவரும் சத்கருமம் செய்ய வேண்டிய தவசியம். பிறரை இகழாது, அவரை அன்புடன் நேசித்து, அவர்களுக்குத் தங்களால் கூடிய மட்டும் உதவி செய்வது சத்கருமங்கள் எல்லாவற்றிலும் சிறந்தது. பிறரை நிந்தனை செய்து அவர்கள் வருந்துவது பார்த்துப் பரிகசித்துச் சந்தோஷிப்பது மிக்க ஈனகருமம்.

மற்றும், நமது கையிலுள்ள எல்லா விரல்களும் ஒன்று சேர்ந்து இருக்கும்பொழுது அவை எத்தனையோ அருமையான காரியங்களைச் செய்கின்றன. ஆனால் அவை தம்மில் ஒன்றுபடாது விலகி இருக்குமானால் அந்தக் கையைக் கொண்டு ஒரு வேலையும் செய்ய முடியாது. அவை குஷ்டரோகியின் கை போலன்றோ ஆகிவிடும்! ஆனதால் ஒவ்வொருவரும் சுயநலத்தின் பொருட்டேனும் அவ்வாறு நடக்கவேண்டும்.

நாம் இவ்வுலகில் சுகமாக ஜீவிக்கவும் நமது ஆத்மா நற்கதியடையவும் சகோதரத்துவம் அவசியமே. ஆனதால் ஜாதி, மதம், தொழில் முதலிய எவ்விஷயத்திலும் உயர்வு, தாழ்வு என்கிற எவ்வித வித்தியாசமும் பாராட்டாது, யாவரும் ஒரு தாய் வயிற்று சகோதரர்களாகவே பாவித்து ஒருவருக்கொருவர் அன்பு பூண்டு கருணையோடு ஒற்றுமையாய் நடந்து வரவேண்டியது மிக்க அவசியம்.

---

EVERY HOUSE
SHOULD STOCK A BOTTLE OF
AMRUTANJAN
THE BEST PAIN BALM.
Price As. 10 a bottle.

# மெய்யன்பு.

சிறு கதை.

(ஓர் சகோதரி)



பேராபத்து.

நவீனபுரியின் சிம்மாசனத்திற்காக நடந்த யுத்தத்தில் தோல்வியடைந்த ராஜசிம்மன், ஜய மடைந்த உக்ரசிம்மனிடமிருந்த பயத்தால் ஓடிப்போய், ஜ்வலிதபுரி அரசனிடம் சென்று அடைக்கலம் புகுந்தான். ராஜசிம்ம னுக்கு அழகு வாய்ந்தவர்களான பெண்கள் மூவரிருந்தார்கள். ஜ்வலிதபுரி அரசனுக்கு அக்கன்னிகைகளைத் தன் புத்திரனுக்கு விவாகம் செய்து வைக்க வேண்டுமென்று மிகுந்த ஆவலுண்டாயிற்று. இந்த விஷயத்தை அவ் வரசன் ராஜசிம்மனிடம் உரைக்கும் பொழுது, அவனுக்கு மிகவும் அதிருப்தியாகப் போய் விட்டது. இதை யறிந்த ஜ்வலிதபுரி அரசன் அளவற்ற கோபமடைந்து, இவர்களை நதியில் படகிலழைத்துச் சென்று, தந்திரமாக அப் படகைக் கவிழ்த்துவிட ஏற்பாடு செய்திருந் தான்.

இதை எவ்வாறோ அறிந்த ராஜசிம்மன், தன் கைகளினாலேயே கடைப் பெண்ணாகிய ஜ்வலிதாவை நதியில் தள்ளிவிட்டான். அவன் மூத்த பெண்ணானவள் தன்னைத் தானே ஆத்மஹத்தி செய்து கொண்டாள். நடுப்பெண் லலிதா வென்பவள் தன் பிதாவின் நம்பிக்கையான வேலையாள் ரஹீம் அலி என் பவனுடன் நதியில் குதித்து நீந்திக் கரையை அடைந்து ஓடி ஒளிந்துகொண்டாள்.

ஜ்வலிதா வெள்ளத்தி லடித்துப் போகப் பட்டு, தெய்வச் செயலாக ஓர் செம்படவன் வலையிற் சிக்கி, அவனால் காப்பாற்றப்பட் டாள். பிறகு அவன் குடியிலேயே வசித்து வரலானாள்.

இப்படி யிருக்கையில் இவர்களை இம்சித்த கிழ அரசனிறந்துவிட இளவரசன் ராஜ்யபார மடைந்தான்.

இரண்டாம் அதிகாரம்.

சகோதரிகள்.

ஒரு நாள் காலையில் விருத்தனான அச்செம் படவன் ஜ்வலிதாவைக் கூவி, அதட்டிக் கூறலா னான்: "ஜாலி! (செம்படவன் ஜ்வலிதபுரி பாஷையில் ஜ்வலிதாவிற்கு இந்த பெயர் வைத் திருந்தான்) இன்று காலை முதல் எங்கு போயிருந்தாய்? வேலைகளைக் கைகளால் கூடத் தொடவில்லையே! நம்முடைய புது வலைக்கு இன்னும்"—இதற்குள் ஜ்வலிதா செம்படவ னருகிற் சென்று மிகவும் பிரீதியுடன் "தாதா!

இன்று எனது அக்காள் வந்திருக்கிறாள். ஆகையால் நான் விடுமுறை பெற்றுக் கொண்டேன்.

செம்படவன்:—அடி! ஜாலி! உனக்கு அக்காள் எங்கிருந்து வந்தாளடி!

இதற்குள் லலிதா வெளிவந்து "இதோ இருக்கிறேன் நான்" என்றாள். கிழவன் ஆச்சரியமடைந்தான். அவளருகில் சென்று ஒரு முறை ஏற இறங்கப்பார்த்துவிட்டு உட்கார்ந்து, "உனக்கு வீட்டு வேலைகளேதாவது தெரியுமா?" என்றான்.

உடனே ஜ்வலிதா "தாதா! அவளுக்கு வீட்டு வேலைகளொன்றும் தெரியாது. அவளுக்குப்பிரதியாக நானே யாவும் செய்துவிடுகின்றேன்" என்று பரிந்தாள்.

"நீ எங்கே வசிப்பாய்?" என்று. கிழவன் மேலும் கேட்டான்.

"ஜ்வலிதாவுடன் கூட" என்று மறுமொழி கொடுத்தாள் லலிதா. கிழவன் இது என்ன கஷ்டம் என்றெண்ணி, "எதைத் தின்பாய்?" என்றான். "அதற்கு சக்தியிருக்கிறது" என்று கூறி, லலிதா அவனெதிரில் ஒரு ரூபாயை விட்டெறிந்தாள்.

ஜ்வலிதா அதையெடுத்துச் செம்படவன் கையிலளித்து மெதுவாக அவன் காதில் "தாதா! இப்பொழுது ஒன்றும் கூறாதே. உன் வேலைக்குப்போ, நேரமாய் விட்டது" என்றாள்.

லலிதா மாறுவேட மணிந்து அனேக இடங்களிலலைந்து கடைசியாக ஜ்வலிதா இருக்குமிடமறிந்து செம்படவன் குடிலுக்கு வந்ததை விவரிக்கப்புகின், அதற்கு இப்புத்தகமே போதாது. ரஹீம் அலியென்ற வேலையாள் ஆலி யென்று மாறு பெயர் புனைந்து அவ்வூர் இளவரசனிடம் வேலைக் கமர்ந்தான்.

* * * *

நதியில் ஜலம் கொஞ்சமாகப் போய்கொண்டிருந்தது. வெயிற்கால மாரம்பமாயிற்று. அசோக விருட்சங்களில் சிவந்த நிறமுள்ள பூக்கள் கொத்துக் கொத்தாய், தென்றல் காற்றில் மலர்ந்து சோபித்தன. மரத்தினடியிலுட்கார்ந்திருந்த லலிதா ஜ்வலிதாவைநோக்கி, "பகவான் நம்மிருவரையும் யமன் வாயிலிருந்து காப்பாற்றியது நமது தந்தையாரின் மரணத்திற்காகப் பழி தீர்த்துக்கொள்வதற்காகத்தானென்று எனக்குத் தோன்றுகின்றது. இல்லாவிடில் நாமிருவரும் மறுபடி சந்திக்க நேர்ந்திருக்காது" என்று புகன்றாள்.

நதிக்கு தூரத்தில் இருண்டு விளங்கும் காடுகளைப் பார்த்தவண்ணம் ஜ்வலிதா பதிலுரைக்கலானாள். "அக்கா! இப்பொழுது அவ்வார்த்தைகளை எடுக்காதே: நான் சந்தோஷத்துடன் தான் இங்கிருந்து வருகின்றேன். உனக்கு வேண்டுமானால், ஆண்மக்களை யெல்லாம் கொன்றுவிட்டு, நீயும் மரித்து விடு. எனக்கு உலகிலொருவிதக் குறைவும் கிடையாது."

லலிதா:—சீ! சீ!! ஜ்வலிதா!!! நீ என்ன! சக்காவர்த்தியின் மகளல்லவா? நவீனபுரியின் சிம்மாசனமெங்கே ஒரு செம்படவனின் குடிலெங்கே!

ஜ்வலிதா:—(சிரித்துக்கொண்டு) அக்கா! இந்தக் கிழவனின் குடில் மரத்தின் நிழல் ஆற்றின் நீர் இவையிலும், நவீனபுரியின் சிம்மாசனத்தின்மேல் நான் அதிக அன்பு வைத்தாலும், அது வென்னவோ எனக்குக் கிடைக்கப் போவதில்லை. அச்சிம்மாசனம் என்பொருட்டு ஒரு துளிக் கண்ணீர் கூட விடப்போவதுமில்லை.

லலிதா தழுதழுத்த குரலுடன் அடிக்கடி ஜ்வலிதாவைப் பார்த்தபடி கூறலானாள்:— "ஆமாம். உன்பேரில் குற்றம் சொல்ல முடியாது. நீ அவ்வூரிலிருக்கையில் மிகவும் சிறியவளாக இருந்தாய். ஆனால், ஆலோசித்துப்பார்க்குமிடத்து, நம் தந்தை உன்மேல்தானதிகப்பிரீதி

வைத்திருந்தாரென்று தோன்றுகிறது. அதனால்தான் அவர் தன் கைகளினாலேயே உன்னைத் தண்ணீரில் தள்ளிவிட்டார். நம் தந்தை அளித்த மாணத்தை விட இவ்வாழ்வு உயர் வென்று எண்ணுகிறாயா? நாம் பழிக்குப் பழி வாங்கக் கூடுமானால் ஜீவித்திருப்பதற்கு ஓர் பிரயோசனமாக இருக்கும்" என்றாள்.

ஜ்வலிதா தூரத்திலிருப்பவைகளைப் பார்த்தவாறு மறுமொழி யொன்றும் கூறாமலிருந்தாள். முன்பு எவ்வளவு கஷ்டங்கள் ஏற்பட்டிருப்பினும் புன்சிரிப்பு தழுவிய அவள் வதனமும், இளந் தென்றல் காற்றும், மாத்தின் நிழலும், ஜ்வலிதாவின் யௌவனமும் ஒன்று கூடிப் பார்ப்பவர்களுக்கு இன்னதென்று கூற முடியாத ஓர் குதூகலத்தை யுண்டாகும்படி இருந்தன. அவள் மெய்ம்மறந்து உட்கார்ந்திருந்தாள். கொஞ்சநேரம் சென்ற பிறகு பெருமூச்சுடனெழுந்து, "அக்கா! இன்றைக்கிவ்வளவு போதும். நீ இங்கேயே உட்கார்ந்திரு; எனக்குக் கொஞ்சம் வீட்டு வேலை களிருக்கின்றன. நான் போகாவிடில் அக் கிழவன் பட்டினி கிடப்பான்" என்று கூறி வீட்டின் பக்கம் சென்றாள்.

## மூன்றும் அதிகாரம்.

## அன்பர்கள்.

லலிதா தன் தங்கை ஜ்வலிதா நிலைமையை நினைத்து மிகவும் வருந்தலானாள். அச்சமயம் யாரோ ஒருவன் மெதுவாக இவள் பின் புறத்தில் வந்து நின்று, இவள் கண்களைப் பொத்தினான். லலிதா பயந்து திடுக்கிட்டு, "யாரது?" எனக் கேட்டாள்.

அவளது குரலைக் கேட்ட வாலிபன் தன் கைகளை எடுத்துவிட்டு அவளெதிரில் வந்து, "ஜாலி அல்லவா நீ"? யென்று பயமின்றி மிக்க சகஜமாகக் கேட்டான். அவன் கூறும்மாதிரி, லலிதா தான் ஜாலியென்று ஏமாற்றப் பார்த்தது போலவும், இவன் தன் சாமர்த்தியத்தால் அதை அறிந்து கொண்டது போலவும் தோற்றியது.

லலிதா சட்டென்று தன் ஆடைகளைச் சரிப் படுத்திக்கொண்டு எழுந்து நின்றாள். அவள் கண்களில் தீப்பொறி பறந்தது. "நீ யாரடா?" என்றாள்.

"உனக்குத் தெரியாது; ஜாலி என்னை நன்றாக அறிவாள். அவளெங்கே?" என்றான் வாலிபன்.

இவர்களின் சச்சரவால் நேர்ந்த சப்தத்தைக் கேட்டு ஜாலி வெளியே வந்தாள். லலிதாவின் கோபக்குறியையும் அதனால் ஆச்சரியமடைந்து பிரமையுடன் நிற்கும் வாலிபனையும் பார்த்து அவள் கொல்லென்று நகைத்தாள்.

"அக்கா! அவன் கூறியதை நீ சற்றும் கவனிக்கவேண்டாம். அவன் மிகவும் அல்பன். காட்டு மிருகத்திற்கொப்பானவன். அவன் ஏதாவது வணக்க மில்லாமல் உன்னுடன் வார்த்தையாடி யிருப்பானேயாகில், நான் கண்டிக்கின்றேன்". "சரச்சந்திர! இவளிடம் என்ன செய்தாய்?" என்றாள்.

"பின்புறமாக வந்து கண்களை பொத்தினேன். அவளை நீயென்றெண்ணினேன்" என உடனே விடை பகர்ந்தான் வாலிபன்.

ஜாலி மிகவும் கோபமடைந்தவள் போல் முகத்தைக் கடுத்து, "ஆகா! அப்படியா? மூர்த்தி சிறியதாயினும் கீர்த்தி பெரிது என்றிருக்கிறது உன் செய்தி. ஜாலி கண்களை மூடி விளையாட எப்பொழுது முதல் கற்றாய்? துணிச்சல் ரொம்பவும் ஏறிவிட்டதோ"? என்று அதிர்ந்த குரலில் கேட்டாள்.

வாலிபன்:—கண்களை மூடினால் அது ஒரு துணிச்சலான காரியமா? ஆனால் முதலில் அறிமுகம் ஏற்பட்டிருக்க வேண்டியது அவசியம் தான்! உண்மையாகக் கூறுகிறேன். ஜாலி! இன்றையதினம் நான் நடுநடுங்கிவிட்டேன்.

எனக் கூறிக்கை கட்டைவிரலால் லலிதாவை சுட்டிக் காட்டி, கண்ணை சிமிட்டிக்கொண்டு புன்சிரிப்புடன் ஜ்வலிதாவை நோக்கினன்.

ஜ்வலிதா:—சே! நீ மிகவும் துஷ்டன். சக்கரவர்த்தினிகளின் எதிரில் நிற்க போக்கியதையற்றவன். உனக்கு நல்ல புத்திமதி புகட்டவேண்டும். "இதோ பார்! அக்காவிற்கு இம்மாதிரி சலாம் செய்!" என்றுகூறி, யௌவன மென்ற புஷ்பத்தால் சோபித்திருக்கும் தன் தேகக்கொடியை மிகவும் மரியாதையுடன் வளைத்து லலிதாவிற்கு சலாம் செய்தாள்.

வாலிபனும் இவள் மாதிரி மிகவும் பிரயாசையுடன் வணங்கினன். ஆகிலும் அவள் செய்ததற்கும் இவன் செய்ததற்கும் மிகுந்த பேதமிருப்பதாக தோற்றியது.

"இம்மாதிரியே மூன்றடி பின்னல்வா; மறுபடி சலாம் செய்" என்றாள். அவனும் சலாம் செய்தான். இப்படியே பின் வாங்கச் சொல்வதும் சலாம் செய்யச் சொல்வதுமாகவே அவனைக் குடிலின் உள்வரைக்கும் அழைத்து வந்து விட்டாள் ஜ்வலிதா.

"உள்ளே போ" என்றாள். அவனும் உட்புறம் சென்றான். அவள் வெளியிருந்தவாறு கதவை யிழுத்துத்தாளிட்டு விட்டு, "நீ வீட்டு வேலைகளைச் செய், அடுப்பில் தீயணையக் கூடாது, ஜாக்கிரதை!" என்று கூறி விட்டு சகோதரியிடம் வந்துட்கார்ந்து கொண்டு, "அக்கா! கோபித்துக் கொள்ளாதே. இவ்விடத்து மனிதர்கள் இம்மாதிரிதானிருப்பார்கள். எனக்கு மிகவும் வருத்தமாகத் தானிருக்கின்றது" என சமாதானம் செய்தாள்.

ஆனலப்படி வருத்தப்படுபவளாக அவள் முகத்திலாவது குரலிலாவது ஒருவித சின்னமும் தோன்றவில்லை.

லலிதா மிகுந்த கோபத்துடன், "ஜ்வலிதா! உண்மையிலுன் காரியங்கள் எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. ஓர் அன்னிய புருஷன் யௌவனமடைந்த உன்னைத் தொட்டு விளையாடுவதும் பேசுவதும் மிகவும் மூடத்தனமான காரியம்" என வெருப்புடன் புகன்றாள்.

ஜ்வலிதா தமக்கை கூறியதற்கு, ஆம், ஆமெனத் தலையை அசைத்தவளாய் "ஆமாம்! அக்கா!! நீ பார்த்துக் கொண்டேயிரு. ஏதாவது ஓர் சக்கரவர்த்தி, அல்லது நவாப்பின் பிள்ளை வந்து இம்மாதிரியான குறும்பு சேஷ்டை செய்யட்டும். அவனை மிகவும் அவமானப்படுத்தி வெளியில் துரத்தாவிடில் பார்!!!" என்றாள்.

லலிதா இதைக் கேட்டு முகத்தைக் கடுத்துக் கொள்ளப் பார்த்தும் அவளறியாமலே சிரிப்பு வந்து விட்டது. சிரித்த முகத்துடன் பேசலானாள். "ஜ்வலிதா! நிஜத்தைக் கூறு. 'இவ்வுலகமே ஆனந்தமயமாக யிருக்கின்றது. நான் மிகவும். சந்தோஷமாக யிருக்கிறேன்' என்றாயே. உன் சந்தோஷத்திற்கு இத்துஷ்டனும் ஓர் காரணமல்லவா?" என்றாள்.

ஜ்வலிதா:—நல்லது. உண்மையாகவே கூறுகிறேன். அவன் எனக்கு மிகவும் உதவிபுரிகிறான். பழங்கள், புஷ்பங்களைப் பறித்துக் கொடுக்கிறான். வேட்டைகளாடி அடிக்கடி ஏதாவது கொண்டுவந்து கொடுத்துக் கொண்டேயிருக்கிறான். வேலைகளென்ன சொன்னலும் ஓடிவந்து செய்கிறான். நானும் அனேகந் தடவைகள் அவனை அதட்டி மிரட்டிப் போய்விடச் செய்யலாமென்று பார்த்தேன். ஆனல் எல்லாம் வியர்த்தமாகப் போய்விட்டது. மிகவும் கோபம் வந்து, 'சந்திரா! உன்னைக் கண்டால் சற்றும் எனக்கு பிடிக்கவில்லை' என்று கூறினலும், அவன் மறுமொழி கூருமல் சிரித்தமுகத்துடன் என் முகத்தைப் பார்த்த

வண்ணம் நின்றிருப்பான். இந்த ஊர் ஜனங்களுக்கே அதுதான் சுபாவம் போலிருக்கின்றது. கன்னத்தில் நாலைந்தறை கொடுத்தாலும் சந்தோஷத்துடன் பட்டுக் கொள்வான். நீயே நேரில் பார்! வீட்டிற்குள்ளடைத்து வைத்திருக்கின்றேன். அவன் ஆனந்தத்துடன் அங்கிருக்கின்றான். கதவைத் திறந்து பார்ப்போமாகில், முகமும் கண்களும் சிவக்க அடுப்பை ஊதிக்கொண்டிருக்கக் காண்போம். நீதான் கூறு. இவனை யென்ன செய்வது. நானும் இவர்களுடன் சேர்ந்து காட்டு மனுஷியாக ஆய்விட்டேன்.

"நானும் அப்படியே ஆகமுயற்சி செய்து பார்க்கிறேன்" என்றாள் லலிதா.

ஜ்வலிதா சிரித்துவிட்டு நயமாக "வேண்டாம் அக்கா! உன் காலில் விழுந்து கேட்டுக் கொள்கிறேன். இப்பொழுது அவனிடம் ஒன்றும் கூற வேண்டாம்" என்றாள். ஜ்வலிதா இவ்வளவு பயத்துடன் இவ்வார்த்தைகளைக் கூறியது, பார்ப்பவர்களுக்கு இவளால் அவ்வாலிபன் சிரத்தையுடன் பிடித்து வளர்க்கப்பட்ட காட்டுமான் போலும், அது இன்னும் தன்னுடைய பழையகுணங்களை முற்றும் மாற்றவில்லையாகையால், புது மனிதர்களையும் அவர்களது சம்பாஷணைகளையும் கண்டு பயந்து ஓடி விடு மென்றும் சந்தேகிப்பதாகத் தோன்றியது. இதற்குள் செம்படவன் வந்து "ஜாலி! சந்திரன் இன்று வரவில்லையா?" என்றான்.

ஜாலி :—தாதா! வந்திருக்கிறான்.

கிழவன் :—எங்கே சென்றிருக்கிறான்?

ஜாலி :—அவன் மிகவும் தொந்திரவு செய்தபடியால் குடிசைக்குள்ளடைத்து வைத்திருக்கின்றேன்.

கிழவன் சற்று சிந்தித்துவிட்டு, "அவனவ்விதம் ஹிம்ஸை செய்தானா? கொஞ்சம் பொருத்துக்கொள். எல்லோரும் சிறு வயதிலிம்மாதிரி தானிருப்பார்கள். அவனை ஹிம்சை செய்யாதே. நேற்றைய தினம் மூன்று ரூபாய் கொடுத்து நான்கு மீன் வாங்கிக் கொண்டு போனான்" என்றான்.

ஜ்வலிதா :—தாதா! கவலைப்படாதே. இன்று அவனிடம் ஒரு மீனும் கொடுக்காமலே இரண்டு ரூபாய்கள் வசூல் செய்து விடுகிறேன்.

கிழவனுக்குத் தான் வளர்த்த பெண்மணி சிறுவயதிலேயே இவ்வளவு சாமர்த்தியமும் புத்திசாலித்தனமுமடைந்திருப்பதைக் கண்டு மிக்க ஆனந்தமடைந்து அருமையுடன் அவள் தலையைத்தொட்டுத் தடவிவிட்டுச் சென்றான்

## நான்காம் அதிகாரம்.

## பிரேமையின் வளர்ச்சி.

நாளடைவில் சரச்சந்திரன் வந்து போய்க் கொண்டிருப்பதில் லலிதாவிற்கு ஒருவித ஆக்ஷேபமுமில்லாமற் போய்விட்டது. அது ஓர் ஆச்சரியமாக யாவருக்கும் புலப்படும். ஆனால் ஆலோசிக்குமிடத்து அதில் ஆச்சரியப்படும்படியான தொன்றுமில்லை. எப்படி நதியின் பிரவாகம் கரையை அடுத்து ஏற்படுகின்றதோ அதுபோலவே ஸ்திரீகளின் இருதய வேகமும், ஜனங்களைப்பற்றிய லோக லஜ்ஜையை அடுத்து ஏற்படும். ஜ்வலிதபுரிக்குச் சமீபத்திலிருக்கும் இந்த ஜனசஞ்சாரமில்லாத பிரதேசத்தில், உலக வழக்கங்களேது? யாரிடமும் லஜ்ஜைப்பட வேண்டிய அவசியமுமில்லாமலிருந்தது.

மழை காலத்தில் வெள்ளப்பிரவாகத்துடனும் சரத்காலத்தில் தெளிந்தும் போகும் நதி இச்சமயம் நீல நிறமாக சிறு ஓடைபோல் க்ஷீணித்துப் போய்க் கொண்டிருந்தது.

இடிந்துபோன வீடுகள் எப்படி சீக்கிரம் புல் பூண்டுகள் முளைத்து பாசிபடர்ந்து, இயற்

கையால் மூடப்படுகின்றனவோ, அவ்விதமே லலிதா கொஞ்ச நாட்களில் அக்காட்டில் பிரகிருதியின் அற்புதங்களால் சூழப்பட்டு வசித்து வரவே, அவள் மனதில் மனிதர்களாலியற்றப் பட்ட லௌகிகங்களின் சுவர் அதை யொருவரும் இலட்சியம் செய்யாதபடியால், கொஞ்சம் கொஞ்சமாக இடிந்து விழுந்து நாலாபக்கங்களிலும் இயற்கையாக ஏற்பட்ட உலகத்துடன் கலந்து ஒன்றாயிற்று.

ஒருவர்க்கொருவர் சமமாகவும் பொருத்தமாகவுமிருக்கும் ஜ்வலிதாவும் சரச்சந்திரனும் கூடி விளையாடுவதைப் பார்ப்பதில், இவளுக்கேற்பட்ட ஆனந்தம் அளவிட முடியாது. இவ்வித அந்தரங்கமும் ஆழ்மையுமுடைய குதூகலம் மற்றொன்றிலும் இவளுக்கேற்படவில்லை. நிர்மானுஷ்யமான அப்பிரதேசத்தில் குடிசையில் தரித்திராவஸ்தையில் வசித்து வந்த லலிதாவின் குலகர்வமும், உலகமரியாதைகளின் ஆசையும் நாளடைவிற் குறைந்து வாலாயின. புஷ்பத்தால் நிறைந்திருக்கும் அவ் விருட்சத்தடியில் சரச்சந்திரன் ஜ்வலிதாவைச் சந்திப்பதையும், அவ்விருவரும் மனோகரமாக விளையாடுவதையும் பார்த்து ஆனந்தப்படலானாள். அவளுடைய யௌவன இருதயத்திலும், பாச மென்பதுண்டாகி அவளது சுக துக்கங்களை பாதித்ததோ என்னவோ! அதை ஈசனே யறிவார். நாளடைவில் வாலிபன் வருவதற்குச் சிறிது தாமதமேற்படுமாகில், ஜ்வலிதா எவ்வளவு ஆவலுடன் அவன் வரவை யெதிர்பார்ப்பாளோ, அதுபோலவே லலிதாவும் அளவற்ற ஆவலுள்ளவளாய்த் தவிக்கலானாள். ஓர் சித்திரக்காரன் தானெழுதிய படத்தைப் பூர்த்தி செய்து தூரத்தில் நின்று அதை எவ்வளவு ஆவலுடன் பார்ப்பானோ அது போல் லலிதாவும் இவர்களைப் பார்த்து சந்தோஷமடைவாள். சிலசமயங்களில் மூர்க்கத்தனமான சண்டையும் புரிவாள். அதட்டுவாள். திருட்டுத்தனமாக ஜ்வலிதாவை வீட்டிலடைத்து விட்டு அவளை வாலிபன் சந்திக்கமுடியாமல் செய்து விடுவாள்.

சக்கரவர்த்தியாக யிருப்பவனுக்கும் ஆரண்யத்தில் வசிப்பனுக்கும் அனேக விஷயங்களில் ஒரே மாதிரியான குணங்களேற்படுகின்றன. இருவரும் சுயேச்சைப்படி நடக்கலாம். தங்கள் தங்கள் ராஜ்யத்தில் இருவரும் ஏகாதிபதி. இருவரும் வேறு எவருடைய வார்த்தைகளுக்காகவும் பயந்து நடக்கவேண்டியதில்லை. இருவருக்கும் இயற்கையாகவே பெருந்தன்மையும் நேர்மையும் சுபாவமாகிறது. நடு ஸ்திதியிலிருக்கும் ஜன சமூகங்கள் தான் இரவும் பகலும் உலக ரீதியை யொத்து நடந்து ஜீவிப்பவர்களாய், தங்களைவிட மேன்மையாயிருப்பவர்களை வணங்கி, தாழ்ந்து இருப்பவர்களை மிரட்டி, ஆலோசித்து நடக்கவேண்டிய சமயங்களில் என்ன செய்வதென்று அறியாதவர்களாயிருக்கிறார்கள்.

ஒன்று மறியாத சாந்தசுபாவமுள்ள சரச்சந்திரன் இயற்கையாக யேற்பட்ட ராஜ லட்சணங்களுடன் பூர்ண சந்திரன் போல் விளங்கினான். சக்கரவர்த்தியின் பெண்களுடன் சங்கோசப்பட ஹேது வில்லாமல் சகஜமாகக் கலந்து பழகினான். அவர்களும் அவனைத் தங்களுக்கு சமமானவனாகக் கருதி பாவிக்கலானார்கள். சரச்சந்திரன் சிரித்தமுகமுடையவன். சரச குணமுள்ளவன். வேடிக்கைசெய்வதில் பிரியன். எதற்கு மஞ்சாதவன். நீண்டுயர்ந்த தேகமும் விசாலமான கண்களுமுடையவன். அவன் செய்கைகளில் தரித்திரச் சின்னங்களென்பதேகிடையாது. ஆனால் இதெல்லாவற்றிற்கும் நடுவில் லலிதாவின் மனதில் 'சக்கரவர்த்தியின் பெண்களின் வாழ்விற்கு இது தான் முடிவோ' என்ற துக்கமடிக்கடி யுண்டாகும்.

ஒரு நாள் காலை சாச்சந்திரன் வந்ததும் லலிதா அவனிடம் சென்று அவன் கரங்களைப் பற்றினவளாய், "சந்திரா! இவ்வூர் இளவரசனை எனக்குக் காண்பிப்பாயா?" எனக் கேட்டாள்.

சந்திரன் :—ஆகா! காண்பிக்கின்றேன். எதற்காக வென்று மாத்திரம் கூறிவிடு.

"எதற்கா? என்னிடம் ஒரு கத்தியிருக்கின்றது. அதை யவன் மார்பில் என் தந்தையைக் கொன்ற பழிக்குப் பழியென்று குத்த வேண்டும். அதற்காகத்தான்" என்று ஆத்திரத்துடன் கூறினாள் லலிதா. இதைக் கேட்டதும் முதலில் சாச்சந்திரன் திக் பிரமை யடைந்தான். பிறகு லலிதாவின் முகத்தைப் பார்த்ததும் அவனையறியாமலே சிரிப்புண்டாயிற்று. இவ்வளவு துணிச்சலான வார்த்தையைக் கேட்டு ஆச்சரியமடைந்தவன் போல் சிரித்துக்கொண்டு, "ஆமம்மா! சக்கரவர்த்தினிக்குத் தகுந்த காரியம் தான். ஒரு வார்த்தை. மரியாதை ஒன்று மில்லாமல், முதல் தடவை பேட்டிகிடைத்ததும் சர்வ காலமும் விநோதப் பிரியனும், புதிதாய்ப் பட்டத்திற்கு வந்தவனுமான ஒரு ராஜ்யாதிபதியின் மார்பில் கத்தியை ஆழமாக உள்ளே செலுத்திவிடு. பாபம்! திடீரென்று நீ அவ்விதம் செய்வதைப் பார்த்து அவன் ஸ்தம்பித்து விடுவான்" என்று பரிகசித்தான். அவ்வரசன் ஆச்சரியப்பட்டு விழிப்பதெவ்வித மிருக்குமென்று இவன் மனதில் சித்திரம்போல் தெளிவாகப் புலப்படவே, இவன் சிரிப்பும் கொஞ்சம் கொஞ்சமாக அதிகரித்துக் கடைசியில், ஹா! ஹா! ஹா! வென்ற உச்சஸ்வரத்தில் முடியலாயிற்று. மற்ற இருவரும் கூடச் சிரித்தார்கள்.

## ஐந்தாம் அதிகாரம்.

### யாத்திரை.

அதற்கு மறுநாளே ரஹீம் அலி யென்ற இவர்கள் பழையவேலைக்காரன் ராஜ சமுகத்திலிருந்து லலிதாவிற்கு இரகசியமாக ஓர் கடிதமெழுதி யிருந்தான். அதாவது, ஜ்வலிதபுரியின் புது அரசனுக்கு இவர்களிருவரும் செம்படவன் குடிசையில் வசிப்பது எவ்விதமோ தெரிந்து விட்டதாகவும், இளவரசனும் இரகசியமாக ஒளிந்து கொண்டு இருவரையும் நேரில் பார்த்ததாகவும், அதிலவனுக்கு ஜ்வலிதாவினிடத்தில் அதிக மோகமேற்பட்டிருப்பதாகவும், ஆதலால் கூடியசீக்கிரம் அவளை விவாகம் செய்துகொள்வதற்கு அழைத்துவர வேண்டுமென்று அனேக ஏற்பாடுகள் அரண்மனையில் நடப்பதாகவும், பழிதீர்த்துக்கொள்வதற்கு இச்சமயம் தவறினால் இவ்வளவு சுலபமானவழி இனிக் கிடைக்காதென்றும் எழுதியிருந்தான். இதைக் கண்ட லலிதா ஆனந்தத்துடன் ஜ்வலிதாவிடம் சென்று "தங்காய்! பகவானிப்பொழுது நம் விஷயத்தில் கருணை புரிந்திருக்கிறாரென்று நினைக்கிறேன். இதோ ரஹீம் அலியின் கடிதத்தைப் பார். இந்தக் காலம் தான் உன் கடமையை நிறைவேற்றும் சமயம். இனி சிரித்து விளையாடிக்கொண்டிக்கும் காலமாயில்லை" என்றாள். இச்சமயம் சாச்சந்திரன் இவர்கள் சமீபத்திலிருந்தான். ஜ்வலிதா வருத்தத்துடன் அவன் முகத்தை நோக்கினாள். அவன் சந்தோஷம் நிறைந்த வதனத்துடன் முகத்தில் புன்சிரிப்பு தவழ நின்றுகொண்டிருந்தான். அவனப்படி யிருப்பதைப் பார்த்து ஜ்வலிதாவின் மனம் அதைரியமடைந்தது.

ஜ்வலிதா :—சந்திரா! தெரிந்ததா? நான் மகாராணியாகப் போகிறேன்.

சந்திரன் சிரித்துவிட்டு "கொஞ்சகாலத்திற்குத் தானே"? என்றான்.

ஜ்வலிதா ஆச்சரியமடைந்து துக்கித்தவளாய் மனதிற்குள் 'உண்மையாகவே இவன் காட்டு மிருகத்திற்கு சமமானவன்தான்; இவனுடன் சிநேகம் செய்பவர்கள் புத்தியற்றவர்கள்தான்' என்று வருந்தினுள். ஜ்வலிதா சாச்சந்திர னுக்கு இன்னும் நன்ருக ஸ்மரணை ஏற்படட்டு மென்று நினைத்து மறுபடியும் "இளவரசனைக் கொன்று விட்டேனுகில், திரும்பி வரவிடுவார்க ளென்று நினைக்கிருயா?" என்ருள்.

சந்திரன்:—ஜாலி! நீ கூறுவதுண்மைதான். திரும்பி வருவது கஷ்டம் தான்.

ஜ்வலிதாவின் மனம் முற்றும் சோர்வடைந் தது. லலிதாவின் பக்கம் திரும்பிப் பெருமூச் சுடன், "அக்கா! நானிதோ தயாராகிவிட் டேன்" என தடித்தகுரலுடன் கூறிவிட்டு, மறுபடி சாச்சந்திரனை நோக்கி துடிக்கும் மனதுடன், வெளிப்பார்வைக்கு சிரித்தவண் ணம் "நான் மகாராணியானவுடன் முதலில் உன்னை ராஜத்துரோக சதியாலோசனையில் சேர்ந்திருக்கிரு யென்று குற்றம் சாட்டி தண் டிக்கச் சொல்வேன். அதன் பிறகுதான் நான் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்யப் போகிறேன்"என்ருள். அதைக்கேட்ட சந்திரன் "ஆகா! அப்படியே செய். எனக்கு மிகவும் சந்தோஷம்" எனப் பரிகசித்து உள்ளம் மகிழ் ந்தான். அவள் சொன்னபடியே செய்துவிட் டால் இவனுக்கு இன்னுமதிக சந்தோஷமேற் படும் போலும்.

ரஹீம் அலியின் கடிதத்தின் படியே இரண்டு தினத்தில் அரசனிடமிருந்து யானைகள், குதிரை கள், காலாட்படை, கொடிகள், வாத்தியங்கள், தீவர்த்திகள் முதலான சிறப்புடன் அதிக ஆடம்பரமாக வரிசைகள் வந்தன. செம்பட வன் வாயிற் கதவைத் திறக்க சைனியங்களவ் விடம் வந்து நின்றன. இவர்களை ஏற்றிப் போக சுவர்ண கசிதமாகிய பல்லக்குகள் வந் திருந்தன. முறைப்படி செம்படவனுக்கு சமாசாரமறிவிக்கப்பட்டது. அரசாக்ஞையை யார் தட்டமுடியும்?

ஜ்வலிதா இதுவரையில் லலிதாவிட மிருந்த கத்தியை வாங்கிக் கொண்டாள். தந்தத்தினுல் செய்த அதன் பிடியை வெகுநேரம் உற்று நோக்கினுள். ரவிக்கையை விலக்கித் தன்மார் பில் அதன் கூர்மையைப் பரீட்சித்துப் பார்த் தாள். பிறகு பயந்தவளாய் அதை யுறைக்குள் சொருகித் தன் ரவிக்கைக்குள் ஒளித்துக் கொண்டாள். தாங்கள் யாத்திரைக்குப் புறப் படுமுன் ஒருமுறை சாச்சந்திரனைப் பார்க்க வேண்டுமென்று இவளுக்கு மிகுந்த ஆசை யுண்டாயிற்று. ஆனுல் அதற்கு முதல் நாள் முதல் அவன் இவர்கள் கண்களிலேயே அகப் படவில்லை. "அன்று சிரித்தமுகத்துடன் என் சமீபத்திலேயே யிருந்தானே. அவன் மனதில் அபிமானத்தீ கொழுந்து விட்டெறியவில்லை யோ?" என வருந்தினுள்.

பல்லக்கில் ஏறுமுன் தன்னை பால்ய முதல் வளர்த்தவனையும் அந்த குடிசை,மாத்தினடி, நதி முதலியவற்றையும் நீர் நிறைந்த கண்களுடன் நோக்கினுள். செம்படவன் கைகளைப் பிடித்துக் கொண்டு தழதழத்த குரலுடன் "தாதா! போகிறேன்" என்றழுதாள். கிழவன் குழந்தைபோல் கதறலானுன். ஜ்வலிதா சற்று தெளிந்து அவனை ஆசுவாசப்படுத்திவிட்டு "தாதா! சந்திரன் வந்தால், அவனிடம் இம் மோதிரத்தைக் கொடு. ஜாலி போகும் சமயத்தி லிதைக் கொடுத்தாளென்று சொல்லு" எனக் கூறிச் சட்டென்று பல்லக்கிலேறிக் கொண் டாள். பிறகு லலிதாவும் அவள் பல்லக்கிலேற, ஆடம்பரத்துடன் பல்லக்கு புறப்பட்டது. ஜ்வ லிதாவின் குடிசை, விருட்சத்தினடி, நதியின் கரையாவும் ஜன சூன்யமானதாக அந்தகாரத் துடன் விளங்குவது போலாயிற்று.

ஆறும் அதிகாரம்.

ஆனந்தம்.

கிரமப்படியிரண்டு பல்லக்குகளும் சென்று அந்தப்புரத்திற்குள் நுழைந்தன. சகோதரிகள் பல்லக்கிலிருந்திறங்கி வெளியில் வந்தார்கள். ஜ்வலிதாவின் முகம் கடினத்துடன் விளங்கியது. கண்களில் துளியாகிலும் நீர் கிடையாது. லலிதாவின் முகம் சவம்போல் வெளுத்திருந்தது. அவள் செய்யவேண்டிய கடமை பற்றி தூரத்திலிருக்கையில் மிகவும் உற்சாகமுள்ளவளாக விருந்தாள். அது சமீபித்துவிடவே நெஞ்சு துடிதுடித்தவளாய் வியாகூலத்துடன் ஜ்வலிதாவை மார்பிலணைத்துக் கொண்டாள். மனதிற்குள் "ஆகா! புதிதாக மலர்ந்திருக்கும் இப்புஷ்பத்தை கிள்ளி எடுத்து, ரத்தப்பிரவாகத்திலடித்துப் போகும்படி நானெறியப் போகிறேனே" என வருந்தினள். ஆலோசிப்பதற்கு அது தருணமல்லவாகையால் முன்னேக்கி நடக்கலானர்கள். வேலையாட்கள் உள்வாயிலண்டை அழைத்து வந்து விட்டார்கள். அனேகமாயிரம் விளக்குகள் கண் கொட்டாமல் தீவிரமாய் இவர்களை நோக்குவது போல் பிரகாசித்தன.

இரண்டு சகோதரிகளும் கனவில் நடப்பது போல் சென்று கடைசியில் சயனகிரகமடைந்தார்கள். அங்கே ஒரு க்ஷணம் ஜ்வலிதா தயங்கி 'அக்கா!' என்றாள். லலிதா அவளை இறுகத் தழுவி முத்தமிட்டு, "கண்ணே! தைரியத்தைக் கைவிடாதே" என்றாள். இருவரும் மெள்ள மெள்ள உள்ளே நுழைந்தார்கள். அறையின் நடுவில் கட்டிலின்மீது பஞ்சணைகள் மத்தியில் மணக்கோலம் பூண்டவனை இளவரசன் வீற்றிருப்பதைக் கண்டார்கள்.

லலிதா முன்பாக நடந்து இளவரசனின் அருகிற் சென்றாள். அவன் உல்லாசமாய் சிரித்துக்கொண்டு வீற்றிருந்தான். 'ஹா! ஹா! சரச்சந்திரா!!' வென்று ஆச்சரியத்துடன் கூவினாள் லலிதா. ஜ்வலிதா இதைக்கேட்டு மூர்ச்சையடைந்து விட்டாள். சரச்சந்திரன் வேகமாக எழுந்து,அவளைத்தூக்கி யணைத்து பஞ்சணையில் படுக்கவைத்து "என் அன்பே! நீயொன்றிற்கு மஞ்சாதே!" என்று தேற்றினன். ஜ்வலிதா மூர்ச்சை தெளிந்ததும் ரவிக்கைக்குள்ளிருந்து கத்தியை எடுத்து லலிதாவின் முகத்தை நோக்கினாள். லலிதா சரச்சந்திரனைப் பார்க்கலானாள். சரச்சந்திரன் ஒன்றும் கூறாமல் புன்சிரிப்புடன் இருவர் முகத்தையும் ஆனந்தத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான். இதைக்கண்ட சகோதரிகள் முகம் சூரியனைக் கண்ட தாமரை போல் மலர்ந்தது. கத்தியும் தன்னுறையிலிருந்து கொஞ்சம் தலையை நீட்டி இவ்வேடிக்கைகளைப்பார்த்து பளீரென்று பிரகாசித்துச் சிரிக்கலாயிற்று.

சுபம்.

# பொறையுடை மாதரும் பூதலவாழ்க்கையும்.

(ஸ்ரீமதி ஆர். பாப்பம்மாள்.)

திருமகள் கடாட்ச மிகுந்த இப்பூதலத்தில். எவ்வுயிரினும், எக்காலத்தினும், சிறந்து விளங்குவதும், ஆறறிவையுடைத்தாகியதும், உயர்திணைப் பாலயதும், தவம், அருள் கிடைக்கப் பெறுவதும் ஐக்கியபத்தியம் அடையப் பெறுவதும் மக்கட்பிறப்பாய மானிட சரீரமேயாம்.

இத்தகைய சிறப்பாய தவத்தால் வந்த இவ்வரிய சரீரத்தினை நாம் சிறிதளவும் வீணுக்

காது பயனுள்ளதாக்க முயல்வது நமது முக்கிய கடமையல்லவா! ஆகவே யாமனைவரும், கொஞ்சங்கூடியிருந்து ஆலோசிப்போமெனில் அதற்குரிய தற்சுதந்தரம், தற்காப்பு, இடம், பொருள், ஏவல் முதலிய தகுந்த நிலைக் கழகங்களின்று நம்நாட்டு இல்லையென்றே ஒருமையுடன் தீர்மானிக்கலாம்.

ஏனெனில் நம்மிந்திய மாதரார் யெஞ்ஞான்றும் சோம்பேறிகளல்லர், மூடருமல்லர், செவிடருமல்லர், அற்பருமல்லர், அருங்கேடருமல்லர் என்றும் நிலையற்ற பேரான்புடைய பெரும் பொறைமடந்தையர் என்றே எனது நாவானது இசைகூறி வழுத்தாநிற்கும்.

இப்பொறையாளரைக் கன்னெஞ்சும் வலியும் படைத்த சிறியார் சிலர் முன்னூல் முழுதுமோதாது வாய்ப்பறையாலும் டாம்பீகத்தன்மையாலும் தம்மையே முழுது மறந்து பெற்றற் கரிய ஒழுக்கந் துறந்து பெண்மக்கட்கே பேரிடைஞ்சல் புரிந்தே நிற்பர்.

இஃதை யறிந்தும் அறியாராய் மனங் கலங்காது மாதவம்புரிவார் போன்று, புலனொடுக்கிப் புன்மதி பூணாது கடவுள் வழிபாடொப்பக் கணவற்கியன்றவரை பூசித்தும், பக்திப் பெருக்காலன்னவரின் மீந்துள்ள எச்சிலன்னமுண்டும், தமதுடல் அவர்க்குரிய தெனவும், தமக்கு அவர் உயிரெனவும், தாமும் மனம் மொழி மெய்களாலும் செய்யுந் தொழிலனைத்துங் குருவுக்குச் சீடன் செய்யும் பணியெனவும் தமது நாயகனே தமது பேருந் தெய்வமென்ற கர்மயோக நியமனமும், தமது கணவனே தானென்கிற ஞானயோக ரகசியார்த்தமும், ஸ்தூல பூத பேத விசாரத்தால் நாயகனே இல்லையென்ற பக்தியோக பலமும் பொருந்தி, தத்தமிடனில் பருவத்தும் எத்துணை நிகழ்ச்சி வரினும் அஞ்சாமதி நலம் பூண்டு வாழ்வினும் தாழ்வினும் தமது இல்லினளவாகத் தமதறிவினைப் பெருக்கி மனமுவந்து வாழும் பெருமையர் இவ்விந்திய நாட்டின் உத்தமிகளன்றி வேறு யெஞ்ஞான்று யெங்ஙன் காணக் கிடைக்கும்?

இத்தகைய அறமடந்தையரை யவலம் பித்துக் குறைபடுத்தி வாழ்தல் குலமகட் கழகாமோ?

நுட்பமாகிய சரீரத்தில் கர்ப்பம் யென்னுங் கடுந்துன்பந் தழீஇய், குடும்பப் பெருந்திறல் பேணி, இடையறா வின்னல் பல கொள்ளத் தகுங் கோதையற்கு இனியதாய விடையறா வாழ்வைத் தருவதும் பெருமைதங்கிய பொறையுடமை ஒன்றே. வேறியாதுளது?

இதற்குத் திருட்டாந்தமாகப் பண்டைக் காலத்தில் அரசுக் குடையனைத்துந் துறந்து மயானகாவல் பூண்டு நின்ற அரசைக் கண்டும் அவர் கையால் தாமிறத்தற்கு மகிழ்ந்து கிழக்கு நோக்கித் தலைகுனிந்து! 'அரசே சத்தியந் தலைமை பெற்ற நினது வழி சிறந்திடுக' என்றபோழ்து மூவர், தேவர் யாவரும் இண்டிப் புகழ்ந்து போற்றி நின்றது பொறுத்தல் என்பதாய பொறை யுடமையே யன்றோ!

அன்றியும் பேரிடைஞ்சல் பெற்றும் சகிப்புத்தன்மை மிக்காராய் இராவணனது பேருடலையும் பெருவாழ்வையும் பெரும்புகழையுந் தகித்தற்குரிய வல்லரா யிருந்தும் மனங்கொளாராகித் தன்னுதனே தனதுயிராகலின் அப்பெருமாள் தனதுரிமை சரீரத்தினைப் பாதுகாப்பரெனவும் தலைவற்குரிய தன்மை தவிர்ப்பது தகுதியன்றெனவும் தாம் சிறையிருப்பதினால் இலங்கையின் அழகும் அரணும் குறையுமெனவும் இராகவரின், கூரம்பானது யெளிதில் நுழைந்து அழிக்கு மெனவும் அதனால் தேவரு மற்றும் யாவரும் துன்பமொழிந்து சுகந்தரும் புண்ணியம் தமதாம்

எனவும் பல்காலாய்ந்தாய்ந்து பிறந்தகத்திற்கும் புகுந்தகத்திற்கும் மாசற்ற தன்மை காட்டிப் பத்துமாதங்கள் கடுஞ்சிறை யகத்துப் பெரும் பொறை கொண்டு நின்ற பிராட்டியாரைப் பொறைக் கடவுளரெனப் போற்றாது வாழ்தல் புலமைப் பாலதாமோ? இஃது அவ்வம்மையார் கூறியதாகச் சொலப் படுங் கவிதையாம்.

"சிறையிருந்தாற்றி யெந்தன் செம்மலின் வருகை காண்பான் பொறையிருந்தகன்ற வாளுட் போக்குதலில்லை யென்றார்........."

என்னே பெரும் பொறை! குற்றமுடையா ரைக் கொல்கை தவிர்த்தது மன்றி அவரது குற்றங்களையும் பொறுப்பவர் இனி எக்கா லத்து முளர்கொலோ? எனும் ஐயம் கொள் ளுதவியற்கையே யாம்.

மேலும் பொறைக்கு உரிய சாதனங்கள் சிலவுள —

அவையாவன, நம்பிக்கை, தீர்க்காலோசனை, ஆசையின்மை, கடுமொழிகூறாமை, வஞ்ச மின்மை ஆகிய இவ்வைந்தும் உடையார் பொறையாகிய பேருடமைக் குரித்தே யாவர் யென்பது திண்ணம்.

ஆண்பாலாற்கும் பெண்பாலற்கும் பொது வாய போறமுமாகும் கற்பிற் சிறந்த தாயாகிய துரோபதையாரைக் கடுவிடமனைய துரியன் துகிலுரியும் சமயத்து வருந்திநின்றகாலை உத்தமரான யுதிஷ்டரர் கூறியதாகக் கூறப் படுங் கவி பின் வருமாறு:—

தம்பியர்கள் பல்காற் றருஞ் சீற்றந் தாமடக்கி
யெம்பெருமான் காக்குமென மொழிந்து—நம்புதற்கே
யுற்றபொறையாய வுத்தமனைக் காணுதார்
கற்றபயனேதோ கழற்

என்றபடிக்கே இப்போறத்தின் மைந்தரான உத்தமர் உத்தமிகள் பிறந்த இந்நாட்டகத்து ஏழை சிறுமியாய நாம் பிறந்தென்? பிறந் தும் பிறவிக்குரித்தாய பெற்றிமை பெற்ற தென்?

பிரிய சகோதரிகளே! இதுகாறும் என் மொழிக்குச் செவி சாய்த்துக் கேட்டது போன்று நமது ஆராய்ச்சியைத் தனியிடத் துற்று சிந்திக்கின், 'பொறையே ஆபரணம், பொறையே புகழ்,...... பொறையே புத்திரன், பொறையே, பற்றுநீக்கு மருந்து; துறந்தார் பலரினுந்தூயது. பிறந்தார் பலர்க்கு·முறியது சிறந்தார் போற்றுஞ் சிறப்பினை யுடைய பொறை யுடமையாய வொன்றினை யகத்தும் புறத்தும் பூண்டு வாழ்வோமாக.

பொறையுடை மாண் பிணுரைப் பூதலம் போற்றுவாரை
கறை முதலாகத் தேடு மாண்பொருள் மதிக்குமல்லால்
சிறையிடைச் செருக்குப் பூணும் சிறுமதி யொழுக்கநீத்துக்
கறையிடைபுகுந்து நின்ற கயவரோ காண்பரம்மா.
பொறுமையுடையரைப் பூதலத்தி லென்றும்
மறுமை யினிதேனுஞ் சேரா—வறுமை
நெருங்காப் பெருவளமாம் நீண்ட புகழ்வாழ்வு
தகுங்காலந் தாமே தரும்.

ஓம் தத் ஸத்:

# "எனது பதரி நாராயண யாத்திரை"

(ஸ்ரீமான் M. R. ஆச்சார்.)

முதல் அத்தியாயம்.

சர்வக்ஞர்களாக அவதரித்த மதபோதகர் களால் பிரசாரஞ் செய்யப்பட்ட நல்லொழுக்க விதிகள் பிரபலமடைந்துவரவே, அவைகளை யொட்டிப் பல புண்ணிய தீர்த்தங்களும், க்ஷேத்திரங்களும் தோன்றினதாகக் காணப் படுகிறது. அவ்வித புண்ணிய ஸ்தலங்களைத் தரிசனஞ் செய்வதனுல் அற்ப ஞானமுள்ள

பாமரர்களின் ஞானமும், பரிபக்குவமடைவதுந் தவிர, மதசம்பந்தமான பற்றும் விருத்தியடையும். ஹிமயமலைகளில் ஏற்பட்டிருக்கும் புண்ணியதீர்த்தங்களில் நீராடுவதினாலும் மூர்த்திகளை தரிசனஞ் செய்வதினாலும் ஞானோதயமாகும். மத சம்பந்தமான பக்தி ஒருவனிடத்தில் இயற்கையாக ஏற்பட்டிருக்குமேயானால், அவன் மேற்கண்ட புண்ணிய க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை போகாமல் இருக்கமாட்டான். அவ்வித யாத்திரையினால் ஞானம், பக்தி, வைராக்கியம் எல்லாம் ஏற்படுகின்றன. அவைகளின் மூலமாக முக்தியடைவான். நம்பிக்கையின்றேல் எந்த மதத்தாரும் முன்னேற்ற மடையமாட்டார்கள். உலகத்திலுள்ள எல்லா ஜாதியாரும் அவரவர்களின் மதக்கொள்கைக்கேற்ற புண்ணியக்ஷேத்திரங்களுக்கு யாத்திரை செய்து வருகிறார்கள்.

இயேசு நாதருடைய ஜனன பூமியாகிய பெத்ல-ஹேம் என்ற புண்ணியஸ்தலத்திற்குப் பூர்விக ஆங்கிலேயர்கள் தேகப்பிரயாசையையும் மற்ற அசௌகரியங்களையும் ஒரு பொருட்டாக எண்ணாமல் யாத்திரை செய்து வந்தார்கள். முதலாவது ரிச்சார்டு மன்னனுடைய ஆட்சிக்குப் பிறகு ஆங்கிலேயர்கள் ஜெரூஸெலெம் என்ற புண்ணிய பூமிக்கு யாத்திரை போய் வருகிறார்கள்.

கௌதமர் நிர்வாணமடைந்த ஸ்தலம் நிராஞ்சினி என்பது. அது கயாவிலிருக்கிறது. அத்தலத்திற்கு பௌத்தர்கள் வெகுதூரத்திலிருந்து போய் யாத்திரை செய்து வருகிறார்கள்.

யாத்திரை செய்வதில் முஸல்மான்களும் ஊக்கத்தையும் உற்சாகத்தையும் பக்தியையும் காட்டிவருகிறார்கள். அவர்களுடைய மதகுருவான முகம்மது நபியின் ஜனன பூமியாகிய மெக்காவுக்கும் அவருடைய அடக்க ஸ்தானமாகிய மெதினா என்ற ஸ்தலத்திற்கும் வருஷா வருஷம் பத்தாயிரக் கணக்கான முஸ்லீம் பக்தர்கள் யாத்திரை போய் வருகிறதை நாம் அனைவரும், பிரத்தியட்சத்திற் கண்டுளோம்.

திரேதாயுகத்தில் தோன்றிய-ஸ்ரீராமசந்திர மூர்த்தி ஹிமயமலையிலுள்ள மந்தாகினி, கேதாரம், மானஸரோவரம், என்ற தீர்த்தங்களுக்கு யாத்திரை போய் வந்தார் என்று யோகவாசிஷ்டம் என்ற நூலில் கூறியிருப்பதைக் காண்க.

அதன்பிறகு துவாபரயுகத்தில் ஹிமயமலையிலுள்ள பல புண்ணிய க்ஷேத்திரங்களுக்கு பஞ்சபாண்டவர்கள் யாத்திரை செய்து வந்ததாக ஸ்ரீமத்மகாபாரதத்தில் கூறியிருப்பதைக் காண்க.

மூன்று ஆசாரிய புருஷர்களான ஆதி ஸ்ரீசங்கர பகவத் பாதாசாரியாரும், ஸ்ரீராமானுஜாசாரியரும், ஸ்ரீமத்வாசாரியாரும், ஹிமயமலையிலுள்ள பதரிக்ஷேத்திரத்திற்குப் போய், அவ்விடத்திலோடும் அளகநந்தா-பகீரதி-மந்தாகினி என்ற நதிகளில் நீராடி ஸ்ரீ பதரிநாராயணனைச் சேவித்து, அவருடைய கிருபையால் பிரம்மசூத்திரம், கீதை முதலியவைகளுக்கு பாஷ்யம் எழுதியிருக்கிறார்கள்.

ஆழ்வாராதிகளில் சிலரும் ஹிமயமலைப் பிராந்தியங்களில் யாத்திரை செய்திருக்கிறார்கள்.

இதனால் ஹிமயமலைகளிலுள்ள தீர்த்தங்களுக்கும் க்ஷேத்திரங்களுக்கும் மானிடர்களாகிய பக்தர்கள் யாத்திரை செய்து வரவேண்டியது அத்தியாவசியம் என்று ஏற்படுகிறது.

ஹிமயமலைத்தொடரை மூன்று பாகமாகப் பிரித்திருக்கிறார்கள். அவை யாதெனில்:—

(1) காஷ்மீர ஹிமாலயப் பிராந்தியம்.
(2) மத்தியஹிமாலயப் பிரதேசம் அல்லது கார்வால் ஹிமாலயம்.
(3) நேபாள ஹிமாலயம்.

காஷ்மீர ஹிமாலயத்தில் காரகோரம் பர்வதமும் ஸிந்து நதியும், அதனுடன் கலக்கும் படியான ஜீலம்-சீனுப்-இராவி-பியாஸ்-ஸட்லீஜ்-என்ற ஐந்து உபநதிகளும், மேற்கூறிய காரகோரம் பர்வதத்திற்கருகில் அமர்நாத் என்ற திவ்விய க்ஷேத்திரமும் இருக்கின்றன. காஷ்மீர தேசத்து மகாராஜா வருஷந்தோறும் ஒரு முறை அமர்நாத் என்ற புண்ணிய க்ஷேத்திரத்தில் விளங்கிவரும் பனிக்கட்டியால் இயற்கையாக ஆக்கப்பட்ட சுந்தரமான சிவலிங்கத்தை தரிசிப்பதற்காகப் போகிறார். (அமர்நாத்துக்குச் செல்லும்வழி)—டில்லியிலிருந்து பஞ்சாப் மெயிலில் அமிர்தஸாஸ் வழியாக ஜம்மு வரையிலும் போகவேண்டும். பிறகு ஸ்ரீநகருக்கு டாங்காவில் சென்று அங்கிருந்து காரகோரம் மலைச் சாரலிலிருக்கும் அமர்நாத் க்ஷேத்திரத்திற்கு மலைப்பாதையில் போகவேண்டும். நதிகள் மலைகளின் பள்ளத்தாக்கில் பாயும் அழகும், மரம் செடி கொடிகள் அற்று ஆகாயத்தை யளாவி நிற்கும் பனிக்கட்டிகளால் சதா மூடப்பட்டிருக்கும் கம்பீரமான மலைச் சிகரங்களின் அழகும் கண்ணைக் கவரத்தக்கவை.

ஸட்லீஜ் நதியும், ஸிந்து நதியும் உற்பத்திஸ்தானத்திற் கருகில் மானஸரோவரம் என்ற தடாகம் ஒன்றிருக்கிறது. அதன் பெருமை தேவர்களாலும் சொல்ல வொண்ணாது. அதனருகில் பிரம்மா வசித்து வந்ததாகவும் சொல்லப்படுகிறது. இந்த மானஸரோவரத்திற்கருகில் கைலாச பர்வதம் இருக்கிறது. கைலாச பர்வதத்தின் ஒரு பாகம், காஷ்மீர ஹிமாலயத்திலும் மற்றொரு பாகம் கார்வால் ஹிமாலயம் அல்லது ஹிமாலயமத்தியப் பிரதேசத்திலும் இருக்கிறது. மேற்கண்ட கைலாச பர்வதத்தில் தான் பார்வதி—பரமேச்வரர் வசித்துவந்தார்கள். பர்வத ராஜனுடைய புத்திரிக்குப் பார்வதியென்று பெயர் புராணங்களிற் கூறியிருக்கும் கைலாசபர்வதம் இதுதான்.

இரண்டாவது அத்தியாயம்.

கார்வால் ஹிமாலயத்தின் பெருமையை எனக்குத் தெரிந்த வரையிலும் கூறுகின்றேன். இம்மலைப் பிரதேசத்தை சுவர்க்க பூமியென்று சொல்லுகிறார்கள். அதன் வரலாறு அடியில் வருமாறு:—

கார்வால் ஜில்லா அல்லது கார்வால் நாட்டின் சரித்திரத்தை யறிந்து கொள்வது இந்துக்களுக்கு இன்றியமையாத விசேஷமாகும். பூர்வகாலத்து கார்வால் நாட்டின் எல்லை ஹரித்துவாரம் முதல் ஹிமயமலை மத்தியப்பிரதேசம் பூராவரையிலும் வியாபித்திருந்தது. அதில் ஸ்ரீகேதாரம், ஸ்ரீபதரிகாசிரமம் முதலிய க்ஷேத்திரங்களும், அளகநந்தா—மந்தாகினி—பகீரதி—சரஸ்வதி, விஷ்ணுகங்கா, கருடகங்கா—பாதாளகங்கா—க்ஷீரகங்கா முதலிய மகாநதிகளும் அவைகள் பாயும் பிரதேசங்களும் மேரு—கைலாசம்—கந்தமாதனம் முதலிய பர்வதங்களும் அடங்கியிருக்கின்றன.

இப்பிரதேசங்களை தேவபூமி யென்றும், சுவர்க்கபூமி யென்றும் கார்வால் ஹிமாலயப் பிரதேச மென்றும் ஆரியர்கள் அழைத்துவந்தார்கள். வேதகாலம் ஆரம்பத்திலேயே வசிஷ்டர்—காச்யபர்— அத்திரி — ஜமதக்னி—கௌதமர்—விசுவாமித்திரர்— அகஸ்தியர்—முதலிய மஹரிஷிகள் இப்புண்ணிய பூமிக்குவந்து இங்கே வசித்து வந்து—திவ்விய ஞானத்தை யடைந்திருக்கிறார்கள். இந்த மஹரிஷிகளின் பெயர்கள் அனைத்தையும் ரிக்வேதத்திற் காணலாம்.

வேதகாலத்திற்குப் பிறகு, இக்ஷ்வாகுவம்சத்திலுற்பவித்த ஸ்ரீராமசந்திரமூர்த்தி அவருடைய முதுமைப் பருவத்தில், அளகநந்தா—பகீரதி யென்ற இரண்டு நதிகளும் சங்கம

மாகும் பரிசுத்தமான க்ஷேத்திரமென்று சொல்லப்படும் தேவப் பிரயாகைக்கு வந்து நிஷ்டையிலிருந்ததாக ஸ்தலபுராணங் கூறுகிறது.

இந்துக்கள் விக்கிரகாராதனை முறையை யனுஷ்டித்து வந்த காலத்தில், அதன் அறிகுறியாக இந்த தேவப் பிரயாகையில் ஸ்ரீராமசந்திர மூர்த்திக்கு ஓர் தேவாலயம் கட்டப்பட்டது. அதை இன்றைக்குங் காணலாம். இத்தேவாலயத்திற்கு பூஜாரி ஓர் நம்பூதிரிப் பிராமணராவார்.

கண்ணுவருடைய ஆச்சிரமம் இவ்விடத்திலிருந்தது. இவ்விடத்தில் தான் சகுந்தலைக்கும் துஷ்யந்த மகாராஜாவுக்கும் விவாகம் நடந்தது.

கந்தபுராணம் கேதார கண்டத்தில், பரமசிவன் உமாதேவியை நோக்கிச் சொல்லும் சுலோகத்தின் தாத்பரியம் அடியில் வருமாறு:- "ஹே! பிராணசகி! இந்த கேதாரகண்டம் என்னைப் போல் அவ்வளவு பூர்வீகமானது. இதற் கொப்பான க்ஷேத்திரம் இவ்வுலகின் கண் வேறொன்றுமில்லை".

ஸ்ரீபதரிக்ஷேத்திரத்திற் கருகிலிருக்கும் சதுரமான கோட்டையைப் போன்ற கந்தமாதன பர்வதத்தில் ஸ்ரீகிருஷ்ணபரமாத்மா, பத்து வருஷகாலம் நிஷ்டையிலிருந்ததாகச் சொல்லப்படுகிறது.

(தொடரும்)

# ராடோப்பின் தந்தை.

(ஸ்ரீமதி ராஜலக்ஷ்மி)

எங்கள் வீட்டிற்குள் மிகவும் குளிமையான இடத்தில் உட்கார்ந்துகொண்டு, தன்னிடத்து மீதியிருந்த தானியமனைத்தும் கொடுத்து ஜரிகையால் வேலைசெய்திருந்த ஓர் பட்டு அங்கியை ஒரு நாட் காலையில் என் தகப்பனர் வாங்கியதை நான் மறக்கவே மாட்டேன், மறக்கவும் முடியாது. அவர் அந்த வியாபாரி வாசற்படி தாண்டுமளவும் பார்த்துக்கொண்டிருந்துவிட்டு, பிறகு தானியம் வைத்திருந்த பெட்டியை வருத்தத்தோடு நோக்கினர். அதைக் கண்ட நான் அதில் ஏதோ பார்ப்பதற்குரிய வஸ்து இருக்கிறதென்று நினைத்து நானும் அதனுள்ளே பார்க்க, அது காலியாயிருப்பதைக் கண்டு ஏமாற்றத்துடன் திரும்பினேனே யொழிய, அதிலிருந்த தானியத்தின் நினைவு எனக்குக் கிஞ்சித்தும் வரவில்லை. என்னைக் கண்டவுடன் ஓர் பொலிவுடன் கூடிய புன்சிரிப்பு அவர் முகத்தில் தவழ்ந்தது. உடனே அவ்வங்கியைப் பிரித்து அதை, எனக்குப் போட, நான் அதன் தோற்றத்தையும் ஜரிகையின் பளபளப்பையும் கண்டு கொண்ட ஆனந்தம் அளவல்ல. ஆனந்த மேலிட்டினால் குதித்துக்கொண்டு கூப்பாடு போட்டேன். அவர் பிறகு வெளியில் போனர் எவ்வளவு வகையான புஷ்பங்கள் பொறுக்கிக் கொண்டும் பறித்துக் கொண்டும் வந்தாரென்பது தெரியாது. கூடை நிறையக் கொண்டுவந்து சிலவற்றை அங்கியில் சொருகி மற்றவைகளை என் தலையிலும் சூட்டினர். நான் சிறுபிள்ளைத்தனத்தோடு கூடிய பெருமையுடன் எனக்கு அவரைவிட நன்ருக அலங்கரிக்கத்தெரியுமென்றும், வெண்மையானவையே வேண்டுமென்றும் சொன்னேன். அவர் அவற்றிலிருந்த வெண்மையான அனைத்தையும் பொருக்கிக் கொடுக்க, நான் அவற்றை என் மனதுக்குத் தோன்றியவாறெல்லாம் சூடிக்கொண்டு காலில் என் சிறு செருப்பையும் மாட்டிக்கொண்டு, பாக்கியுள்ள பூக்களால் அவரை என்னை அலங்கரிக்கச் சொன்

னேன். என் ஆடையின் கம்பீரத்தோற்றம் எனக்கு ஒரு பெருமையையும் அதிகார தோரணையையும் உண்டாக்கிற்று. எல்லா புஷ்பங்களும் அவைகட்கேற்ற இடங்களில் அமைந்தவுடன் நான் என் தந்தைக்கு இயல்பாகஅலங்கரிப்பதில் இருந்த திறமையை நேரில் கண்டு ஆனந்திப்பதுபோல் மிகவும் திருப்தியடைந்தேன். அவருக்கு அதில் எவ்வளவு சந்தோஷமோ அவ்வளவு பெருமையும் இருக்கிறதென்றறிந்தபடியால், இருவருமாக, அப்பெருமையை (ஐயோ! இருவருமல்ல) கிட்டத்தட்ட சரியாகப் பங்கிட்டுக்கொண்டோம்.

பிறகு அடிமை வியாபாரம் மும்முரமாய் நடக்கும் சந்தைக்கு என்னைத் தூக்கிச் சென்றார். அங்கே ஒரே ஜனக்கூட்டமாக இருந்தது. வியாபாரிகள் ஒவ்வொருவரும் என்னைப் பார்த்துச் சென்றார்கள். ஆனால் அனைவரும் நான் மிகவும் மேன்மையாகவும் கொடிபோலு மிருக்கிறபடியால் கூடிய சீக்கிரத்தில் இறந்து இவர்களுக்கு நஷ்டம் உண்டாக்குவேனென்றும், அல்லது ரோகியாய் அவர்களுக்கு அதிகத் தொந்திரை கொடுப்பேனென்றும் கூறிவிட்டுச் சென்றுவிட்டார்கள். அந்த அங்கியை அனேகம்பேர் மதிப்புடன் வாங்கிச் செல்வார்கள்; ஆனால் பூவிற்கும் குழந்தைக்கும் வியாபாரத்தில் மதிப்புக்குறைவே.

ஈஸாப்:—நீயும் பெரிய ஆளாகத் தடித்துக் கொழுத்திருந்தால் உன்னை அனைவரும் தட்டிக் கொடுப்பதுடன் ஒரு குறையும் கூறியிருக்கமாட்டார்கள்.

ராடோப்:—ஆமாம். முன் அப்படி நினைத்துத்தான் அனைவரும் வாங்கி நஷ்டமடைந்தார்களாம். (இவற்றையெல்லாம் கேட்டு மனக்குழப்பத்தினாலுண்டான தந்தையின் பெருமூச்சினால் என் அங்கியின் மேலிருந்த புஷ்பங்கள் அசைந்தாடக் கண்டேன். அவர்களைத் தந்தை நிராகரித்தபோதிலும், என்னுடைய திட ஆரோக்கியத்தை அறிந்த அவர் முகத்தைத் திருப்பிக்கொண்டு சிறிய வசனங்களில் ஏதோ ஜபித்தார்.)

எவன் என் மதிப்பை மிகவும் குறைத்து, எனக்கு மிகவும் கேவல ஸ்திதிக்கு உறுதிமொழி கொடுத்தானோ அவனே எனக்காகக் கடைசியில் அநேக ரூபாய்கள் கொடுத்தபொழுது நானடைந்த பெருமையைக் கூற இயலாது. என் தந்தை அவனை ஏதோ நிந்தித்துக்கொண்டே பணத்தைத் திருப்பினர். இவற்றைக் கண்ட நான் அவர் ஏதோ ஆட்டம் ஆடுகிறாரென்று நினைத்து, நான் ஒன்றும் பார்த்ததில்லையாகியால், அது என்ன விளையாட்டாயிருக்க கூடுமென்று ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தேன். இவர்கள் இப்படியிருக்கையில் ஜனக்கூட்டம் கலைந்து திரும்பிக்கொண்டிருந்தபடியால் ஏதோ ஒரு பெரிய விசேஷமிருக்க வேண்டுமென்றும் அதனால்தான் தன் தந்தை தானியமனைத்தும் எடுத்து ஒரே அடியில் செலவழித்துவிட்டாரென்றும் நினைத்தேன். அதைப் பார்க்கப் பார்க்க ஆச்சரியமும் ஆனந்தமும் அதிகமாயிற்று.

இப்படியிருக்கையில் ஒரு பெரிய மனிதன் அங்கே வந்து அதிகாரமிக்க குரலில் "நீ இக் குழந்தையைத் திருடி வந்திருக்கிறாய். அவன் அங்கியொன்றே நூறு ரூபாய்பெறும். உடனே அவனை அவன் தாய் தந்தையிடம் கொண்டு போய் விடு. உடனே செய். இல்லாவிட்டால் நீமிஸஸ் அல்லது யூமினிடஸ் பற்றிக் கொள்வார்கள்" என்றார். தந்தை என்னை வைத்திருந்த அருமையைக்குறித்து ஜனங்கள் இப்படியெல்லாம் சொல்லுகிறதை அறிந்த நான் சிரித்துக்கொண்டே அவர் காதைப் பிடித்திழுத்தேன். இயல்பாக மிக்க ரோஷமுடைய என் தந்தை இம்மொழிகளுக்கு உடனே எதிர்க்காமல் மிகவும் சாந்தத்துடனும் வருத்தத்துடனும் "எனக்கு உங்களுடைய பெயர் தெரியுமென்று தோன்றுகிறது. ஓ பெரியவரே! தாங்

கள் தான் க்ஸான்தஸ் என்னும் சாமியனல்லவா? இவ்விளங்குழந்தையை இப்பஞ்சத்தினின்று விடுவியுங்கள்" என்று கூறினார்.

நான் இன்னும் உற்சாகத்தோடு இன்னதென்றறியாமல் சிரித்தேன். இப்பொழுதுதான் என்னுடைய தருணமென்று நினைத்து நான் அப்பெரியவரிடம் போவதற்காக இரண்டு கைகளையும் நீட்டினேன். ஆனால் அவர் என்னைத் தந்தையினிடமிருந்து வாங்கிக் கொள்ளாமல் 'பசிக்கிறதா' என்று கருணைமிக்க குரலில் கேட்டார்; நான் சிரித்தேன். ஏனென்றால் அது காலை நேரமாகையால் எனக்கு வழக்கம் போல் என் தகப்பனார் கொடுத்துவந்த மிகவும் புஷ்டியானதும் ருசியானதுமான உணவு அருந்தியிருந்தேன். என் பதிலை எதிர் பார்க்காது அவர் தன் கூட வந்த அடிமையின் கூடையிலிருந்து ஒரு ரொட்டித் துண்டையும் ஒரு சர்க்கரைக் கட்டியையும் கொடுத்தார். நான் அதை வாங்கி சர்க்கரைக்கட்டி மிகவும் நல்ல வஸ்துவென்று நினைத்து தந்தையின் வாய்க்கருகில் உண்ணும்படி பிடிக்க அவர் அதைத் தட்டிக் கீழே தள்ளிவிட்டு ரொட்டியைப் பிடுங்கி மிகவும் பரபரப்புடனும் ஆர்வத்துடனும் உண்ணலானார். இதுவும் விளையாட்டென்று. கருதி நான் அவர் செய்கைகளைக் கண்டு கை கொட்டினேன். அப்பொழுது க்ஸான்தஸ் என் தந்தையைக் கண்டு நடுங்கினவர் போல் நோக்கி ரொட்டியைப் பிடுங்கி 'விலையைக் கூறு' என்று உரத்த குரலில் சொன்னார்.

உடனே என் தந்தை அவர் கரங்களில் என்னைக் கொடுத்து முன் கூறிய விலைகளனைவற்றையும் விடக் குறைவாக ஒரு விலையைக் கூறிப் பின்னும் "கடவுள் எப்பொழுதும் தங்களிடத்திலிருக்கிறார், ஓ! க்ஸான்தஸ்! அதனால் தான் என் அருங்குழந்தையை தங்களிடம் ஒப்புவிக்கிறேன்" என்றார். க்ஸான்தஸ் பணத்தை எண்ணிக் கொண்டிருக்கும் பொழுது உள்ளே கூடையில் போடப் போகும் ரொட்டியை வேலைக்காரியினிடருந்து பிடுங்கினார். ஆனால் ஐயோ இவ்வளவு தூரம் அவரது பசி தாங்கவில்லை. உடனே ஒரு குழப்பம் உண்டாயிற்று. க்ஸான்தஸ் என்னை வாங்கி ஓர் அடிமையினிடம் கொடுக்க, அவளிடுப்பிலிருந்த நான் என்னவென்று உடனே திரும்பி நோக்க, அந்தோ! என் அருமைத்தந்தை தரையில் பேச்சு, மூச்சு ஒன்றுமில்லாமல் அலங்கோலமாய் விழுந்து புரண்டதைக் கண்டேன். நான் எவ்வளவுக்கெவ்வளவு உருக்கமாக அழுதேனோ அவ்வளவுக்கவ்வளவு விரைவாக என்னைக் கொண்டுபோய்விட்டார்கள். எங்களிருவருக்கும் நடுவில் அநேகம் பேர் வந்து விட்டனர். நான் அவர் இவ்வளவு பஞ்சத்தில் அழுந்தி வருந்தினரென்பதைக் கிஞ்சித்தும் உணரவுமில்லை, சந்தேகிக்கக் கூடவுமில்லை. இவையனைத்தும் என் பொருட்டு சகித்தார். இப்பொழுது உங்களிடம்சொல்லும்பொழுது கண்ணீர் வருகிறதா? அவர் கண்களை என்னால் மூடியிருக்கமுடியாது. நான் மிகவும் சிறிய குழந்தையாயிருந்தேன். ஆனாலும் அவருடைய கடைசி ஆசீர்வாதத்தைப் பெற்றிருக்கக் கூடும். தாய்தந்தையற்று, திக்கற்ற அனாதையின் இருதயத்திற்கு அது ஒரு ஆறுதல். இப்பொழுது என் தகப்பனார் நிந்தனைக்குடன்பட்டவரா? ஓ! ஈஸாப்."

---

# கேழ்வரகு.

(சகோதரி வி. பாலம்மாள்.)

உணவுப் பொருள்களில் எது உயர்ந்தது என்பது பற்றி ஒரு சமயத்தில் ஜனங்கள் விவாதித்துக் கொண்டிருந்தார்கள். மரக்கறி உணவே உயர்ந்ததெனச் சிலரும் மாமிச ஆகாரமே தேகபலத்தை விருத்தி செய்யக்கூடியதெனச் சிலரும் வாதுபுரிந்தனர். மனிதன் உணவில் மற்றவைகளெல்லாம் அவரவர்களின் இஷ்டப்படி உபயோகப்படுத்தப்படுவதன்றி முக்கியமாக நெல், சோளம், கோதுமை, கேழ்வரகு இந்நான்கே பிரதானமானதெனத் தலைவர்கள் தீர்மானித்தார்கள். இத்தீர்மானம் கேட்டு நெல், சோளம், கோதுமை, கேழ்வரகு இந்நான்கு தானியங்களில் ஒவ்வொன்றும் தான் தான் பெரியவனென்ற அகம்பாவங்கொண்டு ஒன்றோடொன்று போராடத் தொடங்கிற்று. இவைகளிடையே விளைந்த சச்சரவினால் மனிதர்களுக்கு இவை கிடைத்தல் அரிதாயிற்று. பிரஜைகள் உணவின்றித் தவிப்பது கண்டு அரசாங்கத்தார் ஓர் விசாரணைக் கூட்டத்தை ஏற்படுத்தி நெல், கோதுமை, சோளம், கேழ்வரகு நான்கையும் வரவழைத்து அவைகளின் தன்மையைப்பற்றி நிரூபிக்கும்படி கட்டளையிட்டனர். இந்நான்கு தானியங்களிலும் நெல்லுக்கும் கோதுமைக்கும் உயர்ந்த ஆசனமளிக்கப் பட்டிருந்தது. சோளம் ஒரு மூலையில் ஒண்டிக் கிடந்தது. நமது கேழ்வரகைக் கேட்பாருமில்லை.

முதன்முதலாக கோதுமை தன் பெருமையை எடுத்துரைத்தது. அதாவது, "நான் உணவுப் பொருளில் சிறந்தவன். உலகில் பல பாகங்களில் என்னைப் பயிரிடுகின்றனர். கோடிக்கணக்கான ஜனங்கள் என்னாலேயே ஜீவிக்கின்றார்கள். என்னால் பலவிதமான பணியாரங்கள் செய்யப்படுகின்றன. அரசர்களுக்கும் புஷ்டிதரக்கூடிய உணவு நானே. எத்தகைய சுபாசுப காரியங்களிலும் என்னை உபயோகிக்காமலிருப்பதில்லை. உலகத்திற்கு ஒளி கொடுத்து நற்கருமங்களை நடக்கச் செய்து நவக்கிரகங்களுக்கும் நாயகனாக விளங்கும் சூரியபகவானுடைய அன்பிற்குரியவனும் நானே. சிரோடி, பேணி, ரவாகேஸரி, ரவாபொங்கல், மண்டி, பூரி, ரொட்டி, பிஸ்கோத்து, சேமாயி இவைகளெல்லாம் என்னாலேயே உண்டாகின்றன. நானில்லாவிட்டால் உலகமே இல்லை, ஜனங்களுமில்லை, ருசியுமில்லை, உயர்வுமில்லை" எனப் பேசிமுடித்தது.

அடுத்தபடியாக நெல் எழுந்து நின்று, "கோதுமையாரே! போதும், போதும். உமது தற்புகழ்ச்சிப் பேச்சை நிறுத்திக்கொள்ளும். 'அன்னமயா பிராணமயா' என்று என்னைக்குறிப்பிடுவதன்றி உம்மைத் தின்றால் பசியாறுமா? என்னை யுண்டபின் உமது பேணியும் பூரியும் தின்பதன்றி உம்மாலேயே பசியைத் தணிக்க முடியுமா? உலகப்பிரசித்தமான காவேரிக்கரையும் கங்கையின் ஓரங்களும் எங்குபார்த்த போதிலும் என் ஆளுகைக்குட்பட்ட பூமிகளே யாகும். நவதானியங்களில் கோதுமை ஒன்றாயினும் முக்கிய தானியம் நானென்பது உலகறிந்த விஷயம். எனது சால்யான்னமே கடவுளுக்கு முதன் முதல் நிவேதனம் செய்யப்படுகின்றது. என்னை எவ்வாறு விதைக்கிறது, எப்படி அறுவடை செய்கின்றது என்றறியாதவர்களெல்லாம் இப்போது என்னை விளைவிப்பதில் தேர்ச்சிபெற்று வருகின்றார்கள். இந்திய நெல் என்றும் பர்மா அரிசியென்றும் சயாம் அரிசியென்றும் என்னைக் கொண்டாடாதாரில்லை. சின்னச்சம்பா, வெற்றிலைக் கொடிச் சம்பா, சீரகச்சம்பா, பாலைமணியன், கருடஞ்

சம்பா இதுபோன்ற நூற்றுக் கணக்கான பெயரால் ஜனங்கள் என்னைக் கொண்டாடு கிறார்கள். நானில்லாவிட்டால் வாங்கிபாத், பகாளாபாத், கேஸரிபாத் இவை யேது? தானத்தில் சிறந்தது அன்னதான மென்றே பெரியோர் குறிப்பிட்டிருக்கின்றனர்'' என்று கூறிற்று.

மூன்றாவதாகச் சோளம் "என்னையுணவாகக் கொள்பவர்களின் தேகதிடம் மற்றவர்களுக்கு இருப்பதில்லை. சோளத்தட்டை கன்று காலிகளுக்கு உயர்ந்த உணவு. என்னைப்பற்றி நான் அதிகம் புகழ்ந்து கொள்ளத் தேவை இல்லை'' என்று உரைத்தது.

கடைசியாகக் கேழ்வரகு எழுந்து, "சபையோரே! வீண்பேச்சேதற்கு? என்னிடம் சாந்தகுணமன்றி ஆடம்பரங்கிடையாது. நான் பிரபுக்களை யண்டிப் பிழைப்பதில்லை. ஜனத் தொகையின் மிகுந்தவர்களாயுள்ள ஏழை மக்களிடத்திலேயே நான் உலவுவது வழக்கம்.

"நானே ஏழை மக்களுக்கு உற்ற துணையாவேன். தற்புகழ்ச்சியும் ஆடம்பர வேஷமும் கொண்டு இன்று ஒளி வீசிப் பகட்டுச் செய்து மறு நிமிஷம் அழிந்து போகக்கூடிய சுபாவம் என்னிடத்திலில்லை. என்றும் ஒரே மாதிரியாக இருப்பவன் நானே. இதற்கு சாட்சி வேண்டுமானால் எங்கள் நால்வரையும் தனித்தனியே ஓரிடத்தில் சேமித்து வைத்து நாலைந்து வருடங்களுக்குப் பின் எடுத்துப் பாருங்கள்'' என்றது. உருவிலும் மதிப்பிலும் சிறியதான கேழ்வாகின் வார்த்தையைக் கேட்டு மற்ற தானியங்கள் பரிகசித்தன. சபையோர் கைகொட்டிச் சிரித்தனர்.

"தானிய சக்கரவர்த்தியெனத் தகும் நெல்லும் கோதுமையும் தமது பிரதாபத்தை எடுத்துரைத்தது ஏற்றதாகும். சோளம் தன்னுடைய பலஹீனமறிந்து இரண்டொரு பேச்சில் நின்றுவிடவில்லையா? இந்தக் கேழ்வரகுக்கு எவ்வளவு பதட்டம்! என்ன கர்வம்! என்ன பெருமை! ஏழையாம்! பணக்காரராம்! தானே தீனபந்துவாம். ஏழைப்பங்காளனென்ற பட்டம் தனக்கே உரியதாம். இதென்ன கேலிப் பேச்சு! நெல்லுக்கும் கோதுமைக்கும் முன்பாக எழுந்து நிற்கவும் இதற்கு யோக்கியதை உண்டா?'' என்று கேலிசெய்து கேழ்வரகைப் பழித்தனர்.

முடிவில் நான்கு தானியங்களையும் ஓரிடத்தில் சேமித்துவைத்துச் சில வருடங் கழித்து வெளியிலெடுத்துப் பார்க்கும்போது நடந்ததென்ன?

கோதுமை, நெல், சோளம் இம்மூன்றும் உருமாறி அழுகிக் கெட்டுக் கிடந்தன. அனாதரட்சகனான கேழ்வரகு மட்டும் தன் உருக் குலையாது வைத்தபடிக்கே காணப்பட்டது.

# ஜயமா? அபஜயமா?

(ஸ்ரீமான் K. பத்மநாபன்.)

## I

### சாவித்திரியும் சரஸ்வதியும்.

சாவித்திரியும் சரஸ்வதியும் ஒரே ஊரில் ஒரே நாளில் பிறந்தவர்கள்.

சாவித்திரியின் தந்தை யொரு கோடீசுவரர். சாவித்திரி பிறந்தவுடன் அவரது இல்லமான "தன விலாசத்தில்'' சந்தோஷம் மிதமின்றிக்குடி கொண்டது. குழந்தையான சாவித்திரியும் கோடி சூரியனைப் போல் பிரகாசித்தாள். அழகினில் சாவித்திரி தேவி தானோ வென்று கண்டோர் ஐயுறுமாறு பொலிந்து விளங்கினாள். சம்பளத்திற் கமர்த்தப்பட்ட செவிலித்தாயின்

பாமரிப்பினுலும் தனது தாயின் அன்பார்ந்த போஷணையினுலும் அவள் தினே தினே குறைவின்றி வளர்ந்து, பாலிகைப் பருவத்தையடைந்தாள்.

சரஸ்வதியோ வெனின், தனது பிறப்பினுல் தனது பெற்றோரினது துக்கத்தினை அதிகரித்தனள். இவள் சந்திரசேகாரது ஆருவது புத்திரி. சந்திரசேகார் எழை; தன விலாசத்தின் பின்புறத்திலுள்ள ஒரு சிறு குச்சு வீட்டில் வசித்து வந்தார். இவருக்கு ஐந்து பெண்கள். இப்படியிருக்க, ஆருவதாகத் தன் மனைவியொரு பெண் மகவைக் கருவுயிர்த்தால் என் செய்வார் பாபம்! மேலும் அப்பெண்மகவும் அவ்வளவு அழகற்றதாக விருப்பின்—மேலே சொல்ல வேண்டியதில்லை; நாமே யறிந்து கொள்ளலாம்.

சரஸ்வதி அக்குடிசையின் சமையலறையிலும், விதவையான தனது மூத்த சகோதரியினதுமடியின் மீதும் வளர்ந்து வந்தாள். கந்தைகளின் மீது கிடந்து குழவி தொண்டை வாளும் படி வெகு நேரமழுதால், அதன் தாய் கைவேலைகளை விட்டுவிட்டு வந்து அக்குழந்தைக்குச் சிறிது பாலூட்டிவிட்டு, உடனே தனது வேலைகளைப் பார்க்கத் திரும்பிச் சென்று விடுவாள். மாலை வேளைகளில் அவளது தமக்கைக் காவது தாய்க்காவது அவளை கவனிப்பதற்குச் சாவகாசம் கிடையாது. சில சமயங்களில் அவளது மற்றொரு சகோதரியான பார்வதி அவளைத் தொட்டிலிலிட்டுத் தூங்கச்செய்வாள். இவ்வாருக சரஸ்வதியும் வளர்ந்து ஒரு மங்கையாயினள்.

சாவித்திரியும் சரஸ்வதியும் எப்போதும் ஒன்ருகவே விளையாடுவார்கள். ஒருவரை விட்டு ஒருவர் ஒருகணமேனும் பிரியார்கள். எங்கு சென்ருலும் சாவித்திரி முன்னே போவாள்; சரஸ்வதி அவளைத் தொடர்வாள். மிகுந்த அழகுவாய்ந்த சாவித்திரியினது முகத்தோடு தன் முகத்தைக் காட்ட சரஸ்வதி மிகுந்த வெட்கப்படுவாள். ஒரு நாள் சரஸ்வதியின் மூத்த சகோதரி பவானி சாவித்திரியைத் தலைவாரிப் பின்னல் போட்டுக் கொள்வதற்காகக் கூப்பிட்டாள். அவள், "நான் தலைவாரிக் கொள்ளாமலேயே அழகாயிருக்கிறேன்; குரூபியான உனது தங்கையின் தலையை வாரிப் பின்னலிடு" என்ருள். அதற்கு பவானி, "அம்மா! சிறு பெண்கள் அழகாயிருப்பது மிகக் கெடுதி; ஏனெனில் பிறர் தூக்கிக் கொண்டோடி விடுவார்கள்" என்றுரைத்தாள். உடனே சாவித்திரி, "அப்படியா? என்னைக் காப்பாற்ற எனது வேலையாட்களில்லையா?" என்று கூறினுள். பவானி "ஆம், உங்களுக்கிருக்கிருர்கள்; நாங்களென்ன செய்வது?" என, அவள் "பயப்படாதே. அழகற்ற சரஸ்வதியை யாரும் எடுத்துக் கொண்டு போய்விடமாட்டார்கள்" என்று சொல்லி நகைத்தாள்.

சரஸ்வதியை விட்டு சாவித்திரி அரைக்கண நேரமுமிருக்கவு மாட்டாள்; ஆயினும் ஒவ்வொரு சமயத்திலும் அவள் தனது சினேகிதையை இகழ்ந்து பேசாதும் இருக்கமாட்டாள். அவளுக்கு தான் ஒரு தனவந்தனின் அழகுள்ள ஒரே பெண்ணென்ற அகந்தையும், சரஸ்வதி ஒரு வறியவனின் ஆறு மக்களிலொருவளென்ற இகழ்ச்சியும் மிகவுண்டு. அதோடு அவள் திருப்தியடையவில்லை. அவ்வப்போது தனக்கும் சரஸ்வதிக்குமுள்ள கடல் போன்ற தாரதம்மியத்தை யவளுக் கெடுத்துக் காட்டுதலையே தன் தொழிலாயெண்ணி மகிழ்ந்தாள். தனக்கு நல்ல அணிகலன்களாவது உடைகளாவது தனது பெற்ரோர் எப்போது வாங்கிக்கொடுப்பினும் அவைகளை முதன்முதலில் சரஸ்வதிக்குக் காண்பித்துப்

பெருமை பேசிக் கொள்வாள். சாஸ்வதி யவைகளைப் பார்த்துவிட்டு, "உனக்கென்ன, நீ மகாராஜி" என்பாள். சாவித்திரி அஃதுடன் நில்லாது, அவளை நோக்கி "சரிதான், உனக்கு இம்மாதிரிப் பட்டாடைகள் ஒன்றேனு மிருக்கிறதா? இந்த நகைகளிலொன்றையேனும் இதற்குமுன் நீ பார்த்திருக்கிருயா?" என்பாள். சாஸ்வதி சற்றும் வருத்தமடையாமல், "அதெல்லா மெனக்கு இப்பொழு தென்னத்திற்கு? நான் பெரியவளான பின்பு அணிந்து கொள்வேன்" என்று பதிலுரைப்பாள். அப்போது சாவித்திரி மேலும் தொடர்ந்து, "இவ்வழகிய சிற்றுடையின் விலையென்ன விருக்கும்? சொல் பார்ப்போம்" என, உடனே யவள், "ஐந்து ரூபாய்" என்பாள். சாவித்திரி கொல்லென்று நகைத்து, "ஓகோ! நீ என்ன ஒன்றும் தெரியாத பேதையாயிருக்கின்றனையே. ஆயினும் நீ என்ன செய்வாய்? இதைப் போன்றதை இதற்குமுன் பார்த்திருந்தால் தானே. பனுரிஸ் பட்டாலாய இச்சிற்றுடை ஐந்து ரூபாய்க் ககப்படுமோ?" என்று பரிகசிப்பாள். அது கேட்ட அவளது சிநேகை வெட்கி, "ஆமம்மா! நாங்களென்ன, அவைகளையெல்லாம் வாங்குகிறேமா?" எனக் கூறுவாள். மற்றவள், "ஆமாம! ஆமாம். நீ கூறுவதுண்மைதான்; ஏழையான நீ இதன் விலையை யெப்படியறிவாய்?" என்று உறுத்திக் கூறுவாள். சாஸ்வதி மிகுந்த துக்கத்துடனழுதுகொண்டே ஓடி விடுவாள். மறு நாள் சாவித்திரியவளைத் தேடிப் பிடித்துச் சமாதானம் செய்யும் பாடு மிகக் கஷ்டமாகி விடும்.

தன்மேல் லக்ஷ்மீகடாட்சம் பூரணமாயிருப்பதை யறிந்த சாவித்திரி, அடிக்கடி சாஸ்வதிக்குப் பரிசுகளளித்து, அவள் மனதைப் புண் படுத்துவாள். தன்னுல் பழகிய தென்றும், உடைந்த தென்றும, உபயோகமற்ற தென்றும் வெறுத்துத் தள்ளப்பட்ட விளையாட்டுச் சாமான்களை சாஸ்வதிக்கு விளையாடுவதற்காகக் கொடுப்பாள்.

## II

### சுந்தரேசன்.

சாவித்திரியின் அழகினது கீர்த்தியானது வெகு தூரம் பரவியது. அவளது எழிலுக்குத் தக்க ஆபரணங்களை யவளுக்குச் சூட்டுவது மிக்க சுலபமான காரியமாயிருந்தாலும், அவள் மனதிற்குகந்த கணவனைத் தேடுவது அவளது மாதா பிதாக்களுக்கு மிகக் கடினமான காரியமாயது. மேலும், அவர்களுக்குத் தங்களைத் தவிற வேறு யாரும் தமக்குச் சரியான அந்தஸ்திலிருப்பவர்களாகத் தோன்றவில்லை; ஆதலால் எந்த வாலிபனும் சாவித்திரிக் கேற்ற மணமகனாகக் காணப்படவில்லை. தன்னை மணக்க வரும் வரன்களைப் பற்றி சாவித்திரி, "அவர்களுக்குச் சொந்தமாக ஒரு காசேனு மில்லாவிடினும், அவர்கள் என்னை மணக்கவேண்டுமென்ற ஆசையை மாத்திரம் வீணே கொண்டவர்களாக விருக்கின்றனர்" என்று கூறுவாள். அப்போது சாஸ்வதி, "அப்படிச் சொல்லாதேயம்மா! நாளை வருவதை நாம் கண்டோமா?" என்பாள்.

சுந்தரேசனுக்குச் சொந்தமாக மிக்க தனமேனும் பூஸ்திதியேனும் கிடையாது. ஆயினும் மிகுந்த சௌந்தரியம் வாய்ந்தவன். திட சரீரமமைந்தவன். தீட்சணியமான புத்தியையும் இளகிய மனதையுங் கொண்டவன்.

சுந்தரேசனது தாய் ஒரு நாள் சில பெண்களைத் தன் வீட்டிற்கழைத்திருந்தாள். அவர்களில் சாவித்திரியும் சாஸ்வதியுங்கூட வந்திருந்தார்கள். சாவித்திரி ஒரு தூய வெண் பட்டாடை யணிந்து வைரமிழைத்த நகைகளை யணிந்து சமுத்திரமதனம் செய்யும்போது ஆங்கெழுந்த லக்ஷ்மியைப்போன்று விளங்கி

னுள். சென்னையில் தனது படிப்பை முடித்து விட்டு, சுந்தரேசன் விடுமுறைக்காக அப்போது ஊருக்கு வந்திருந்தான். அவன் சாவித்திரியை யும் அவளுடன் வந்த சரஸ்வதியையும் கண் டான். சாவித்திரியை ஓர் ஒளிமிகுந்த நட்சத் திரம்போலும், சரஸ்வதியை அதன் நிழல் போலு மெண்ணினன். சுந்தரேசனுடைய எதிர்பாராத சந்திப்பைக் கண்ட சரஸ்வதி நாணி மறைந்தாள். சாவித்திரி வெட்கப்படாமல் நிமிர்ந்து அவனை நோக்கினுள். அவன் தன்னை மிகவும் மதித்து மரியாதை செய்வதாக வெண் ணினுள். அவ்வளவுதான், அவலிடமிருந்த மதிப்பு நீங்கியது. அவன் தனக்குச் சரியான நாயகனல்லவென்று தீர்மானித்தாள்.

எல்லோரும் தத்தமில்லங்களுக்குச் சென்ற பின்பு சுந்தரேசன் தனது சகோதரியைச் சந் தித்து அந்த "ஒளியும் நிழலுமான" பெண்க ளைப்பற்றி விசாரித்தான். அதற்கவள் "எனக்கு ஒளியும் தெரியாது, நிழலும் தெரியாது" என்று கூறிவிட்டாள். ஆனுலவள் உடனே தன் தாயினிடஞ் சென்று, "அம்மா! அண்ணு சாவித்திரியைக் கலியாணம் செய்துகொள்ள வேண்டுமென்கிறுன்" என்றுள். அதைக் கேட்ட சுந்தரேசனது தாய் தனது கணவ னுடன் தனவிலாசத்திற்குச் சென்று சாவித் திரியைத் தங்கள் புதல்வனுக்கு விவாகம் செய்து கொடுக்குமாறு கேட்டார்கள். பெண் ணின் தகப்பனுரதற்குச் சம்மதித்தாலும், தாயார் "என் மகள் எப்படி அவர்களது குடிசை போன்ற சிறிய வீட்டில் வசிப்பாள்? மாப்பிள்ளையாவது நமது வீட்டில் வந்திருக்கட் டும். அல்லது நீங்களாவது நமது பெண்ணுக்கு ஒரு நல்ல வீடு கட்டிக் கொடுங்கள்" என்று தனது கணவனை நோக்கிக் கூறினுள். சுந்த ரேசனது தாய் தந்தையரிதற்குச் சம்மதித்த போதிலும் அவன், "மாளிகையாயிருப்பினும் மாமனுரளித்த விடத்தில் வசிக்கமாட்டேன்" என்று கண்டிப்பாய்க் கூறிவிட்டான்.

ஒரு நாள் சரஸ்வதி சாவித்திரியை நோக்கி, "நீ சுந்தரேசரைக் கலியாணம் செய்துகொள் ளப் போகிறுயாமே. அப்படியாயின் எனக்கு மிகுந்த சந்தோஷம். ஏனெனில் அவர் மிக்க அழகு வாய்ந்தவர், குணவந்தர்" என்றுள். சாவித்திரி கோபத்துடன் "ஆமாம், அவனுக்கு வீடுமில்லை, வாசலுமில்லை. அவன் படித்தவ னுகவும் அழகமைந்தவனுகவு மிருக்கலாம்; ஆனுலவைகள் அவனுக்கு உணவளிக்குமோ? அதுமட்டுமல்ல, அவன் மிகுந்த கர்வியாக விருக்கிறுன். அவன் என்ன சொன்னுன் தெரி யுமா? மாமனுரிடமிருந்து ஒரு மாளிகையாயி னும் பெற்றுக்கொள்ளமாட்டானும். அவன் இதுவும் சொல்லட்டும், இதற்குமேலும் சொல் லட்டும்; ஆயின் ஏனவன் தனவந்தன் பெண் ணுகிய என்னை மணக்கப் போவாக் கொள்கி றுன்? எங்கள் வீட்டில் இதுவரையில் யாரும் மண் வீட்டிலிருந்ததில்லை, நானுமிருக்கப்போ கிறதில்லை. ஏன்! இவனுக்காகவா? ஒருகாலு மில்லை" என்று உரத்த குரலில் பலருக்கும் கேட்குமாறு கூறினுள்.

இவள் இவ்வளவு பலமாகக் கூச்சலிட்டுரைப் பதைக் கேட்ட சரஸ்வதி பயந்தாள். யாராவது கேட்டுக்கொண்டிருக்கப் போகிறுர்களே யென்று நடுங்கினுள். தனது கையாலவளது வாயைப் பொத்தி "உஸ், இதை யாராவதறிந் தால் எல்லாக் காரியங்களும் கெட்டுவிடும்" என்றுள். சாவித்திரி தான் செய்த காரியம் தவறென்பதை யுணர்ந்தாள். ஆயினும் அதை வெளிக்குக் காட்டாமல் "யார் கேட்டால் எனக்கென்ன பயம்?" என்று மீண்டுமிரைக் துரைத்து நகைத்தாள்.

சீக்கிரத்தில் இவ்வார்த்தைகள் வெளியாயின. இவை விவரமாகச் சுந்தரேசனது காதுக்கெட்

டின. முன்பே அவர்களது பணச்செருக்கை யறிந்தவனுன அவன், அவள் இப்போது தன்னை யவமதித்துப் பேசியதை யெண்ணி, "எனக்கு இராஜகுமாரியா யிருப்பினும் கர்வ முள்ளவள் வேண்டியதில்லை. அழகவ்வளவாக வில்லாதிருப்பினும் எனக்குத் தகுந்த ஏழை யான குணவதியொருவள் போதும்" என்று தனது தாய்தந்தையரிடம் சொல்லிவிட்டான்.

சந்திரசேகரர் சுந்தரேசனைப்போன்ற மருமகன் தனக்கு வருவானென்று கனவிலும் நினைத்தவரன்று. ஆனுல் அப்படிப்பட்ட மாப்பிள்ளை வரும்போது மறுப்பரோ? ஆதலால் சுந்தரேசனது பெற்ருேர் சாஸ்வதியைத் தங்கள் மகனுக்கு மணம் செய்து கொடுக்கும்படி கேட்டதற்கு அவர் ஆனந்தத்துடன் மனப்பூர்வமாகச் சம்மதித்தார். ஆகாயத்தில் சந்திரன் பூரணமாய்ப் பிரகாசிக்கும்போது நட்சத்திரங்களை கவனிப்பவர் யார்? அமாவாசையன் றன்றே அவை நமது பார்வையை கிரகிக்கின்றன. இத்தனை நாளாய் 'ஒளி'யினுல் மழுங்கியிருந்த சுந்தரேசனது கண்கள் இப்போது தான் 'நிழலை' நோக்கலுற்றன.

இச்சங்கதியை யறிந்த சாவித்திரி யவ்வளவாக மகிழ்ச்சியடையவில்லையாயினும் ஒருவிதத்தில் திருப்தியடைந்தாள். இத்தனை காலமாக சாஸ்வதி சாவித்திரியா லொதுக்கி விலக்கப்பட்ட செப்புகளையும் பொம்மைகளையும் வைத்து விளையாடிக்கொண்டிருந்தாள். இப்பொழுதும்—விவாகம் செய்துகொள்ளும் சமயத்திலும்—அவளால் வெறுத்துத் தள்ளப்பட்ட சுந்தரேசனையே மணக்கிருளல்லவா? ஆனுல் 'யார் யாரை விலக்கினுர்கள்?' இக்கேள்வி சாவித்திரியின் மனதை வருத்தலுற்றது. 'இப்போது சுந்தரேசன் சாஸ்வதியைக் கலியாணம் செய்துகொள்வது சாவித்திரியை ஏசி இகழ்வது போலல்லவா? ஆயினும் சாவித்திரி கேவலமான சாஸ்வதியை—அழகற்ற, ஏழையான சாஸ்வதியை—மணந்துகொள்ளு மொருவனைப்பற்றி ஏன் நினைக்கவேண்டும்?' என்றிவ்வாறெல்லாம் தன்னைத் தானே தேற்றிக்கொள்வாளாயினள் சாவித்திரி.

சுந்தரேசனுக்கும் சாஸ்வதிக்கும் அதிக ஆடம்பரங்களொன்றுமின்றி விவாகம் இனிதே முடிந்தது. கலியாணத்திற்கு சாவித்திரியும் வந்திருந்தாள். எல்லோரும் சாவித்திரியினது "அழகுக்கழகு செய்யும்" அணிகளை வியப்புடன் நோக்கினர். சுந்தரேசனும் அவளைப் பார்த்தான். அவளும் அவனை நோக்கினுள். அவனது பார்வையால் அவன் தன்னை யவமதிக்கிருனென்றும், முன்போல் மதிக்கவில்லையென்றும் அவள் அறிந்தாள்.

## III

### இணையற்றவளுக்கு உகந்த கணவன்.

எத்தனை நாள்தான் ஒரு மங்கை—அதிலும் ஒரு இந்திய மங்கை—விவாகமின்றி இருக்கக்கூடும்? சாவித்திரியின் தந்தை கடைசியாக அநேகம் பிள்ளைகளிலிருந்து ஒரு ஜமீன்தாரனின் புத்திரனைத் தேர்ந்தெடுத்தார். அவன் நற்குலத்திலுதித்தவனுகவும், மிகவும் குரூபியாக இல்லாதவனுகவு மிருந்தான. ஆனுல் படித்தவனன்று; குணமும் கொஞ்சம் நன்றன்று. ஆனுலென்ன? பணமா? குணமா? எது மேன்மை? "பணமே" என்று தெளிந்தார் சாவித்திரியின் பிதா. மேலும் அவனுக்கு வயதும் அதிகமில்லை. வேண்டுமானுல் இனி மேலுங்கூட வாசிக்கலாம். அஃதுடன் குடிப்பதும் சூதாடுவதும் பணக்காரரின் பிள்ளைகளுக்குப் புதிதன்று. ஆதலால் அவன் இணையற்ற சாவித்திரிக்கு உகந்த கணவனுகத் தேர்ந்தெடுக்கப்பட்டான்.

உலை வாயை மூடலாம்; ஊர் வாயை மூடமுடியுமோ? அவ்வூரார் அப்பணக்காரக் குடும்

பத்தின் விவாக ஏற்பாடுகளை யறிந்த பின்னர் பலவாறாகப் பேசத் தொடங்கினார்கள். "இப்புது மாப்பிள்ளை நற்குலத்துத் தோன்றியவனாக விருப்பினும், சுந்தரேசனது காலுக்கு ஈடாக மாட்டான்" என்று அவர்கள் ரகசியமாகப் பேசிக்கொண்ட சொற்கள் சாவித்திரியினது காதுக்கும் எட்டின. அம்மொழிகள் மிகவுமுண்மையே என்பதை அவளறிவாள்; அவளும் தனக்கு வரப்போகும் வரனைப் பார்த்திருக்கிறாள். ஆயினவன் சுந்தரேசனுக் கிணையாவனோ? சுந்தரேசனது கட்டமைந்த லட்சணங்களோடு கூடிய சரீரமெங்கே? இவனதெங்கே? அவள் கண்களுக்கிவன் பெருத்ததொரு வெண்ணை மொத்தையைப் போல் தோன்றினானே யல்லாது, ஒரு மனிதனாகக் காணப்படவில்லை. சுந்தரேசனது தீட்சணியப் பார்வையும், புத்திவிசாலமும், கசடாக் கற்ற கல்வியுமெங்கே?—சதையும், பணமுமே யொருவனை மனிதனாக்க மாட்டாவென்பதை யவள் அப்போதறிந்தாள். ஆயினுமென்? இவ்வறிவு காலத்தில் வரவில்லை. ஆதலால் பிரயோசனமற்றதாயிற்று. அவளால் இழக்கப்பட்டவன் என்றும் இழக்கப்பட்டவனே! அவள் இப்போது கலியாணம் செய்து கொண்டு தானாகவேண்டும். மேலும் 'படிப்பினால் கெடாத' மூளையையுடைய இந்த ஜமீன்தாரனை மணக்க மறுத்து விட்டாலும், பிறகு சுந்தரேசனைப் போலொரு வரன் அகப்படுவானென்பதென்ன நிச்சயம்?

அவள் தனது துக்கத்தை யெவ்வளவோ அடக்கிக்கொண்டபோதிலும், கண்களிலிருந்து வரும் நீரை நிறுத்தமுடியாதவளானாள். அவள் அவ்வூரிலுள்ள தனது குலதெய்வமாகிய காளி கோவிலுக்குச் சென்று, மூலஸ்தானத்தில் நின்றுகொண்டு, "ஓ, கருணையற்ற அம்பிகையே! என் எனக்கிந்த தண்டனை? யான் ஒரே கவலையாயிருந்திருப்பேனே. என் சுந்தரேசனை என் கண்முன் எதிர்ப்படுத்தினாய்? 'கண்ணிலான் பெற்றிழந்தான்' என்பது போலாயதே" என்று கதறி முறையிட்டாள்.

விவாகமும் முடிந்தது. சாஸ்வதியுமதற்கு வந்திருந்தாள். அவளது ஆபரணங்களெல்லாஞ் சேர்ந்து இரண்டு மெல்லிய பொற்காப்புகளும், ஒரு பொன்னாலான அட்டிகையுமேயாகும். ஆயினுமவள் ஒரு பெரிய மாறுதலையடைந்திருந்தாள். அவளது முகத்திலப்போது ததும்பிய மந்தஹாஸத்தினை இதுவரையில் சாவித்திரி கண்டதில்லை. அவள் அச்சமயம் அநேக காலம் செய்த தவத்தின் பயனாய்ச் சிவபெருமானை யடைந்த பார்வதிதேவியைப் போல் பொலிந்து விளங்கினாள். இக்காட்சியைக் காணக்காண சாவித்திரியின் துக்கம் மேன்மேலும் பெருகலாயிற்று.

சாவித்திரியும் சம்சார வாழ்க்கையிற் புகுந்து விட்டாள். நறுமணம் செறிந்து விளங்கும் பூஞ்சோலையாக அவள் நினைத்திருந்த அவ்வாழ்க்கையானது அவளுக்குக் கொடிய மிருகங்களடர்ந்த கானகமாகக் காணப்பட்டது. சாஸ்வதியின் அதிருஷ்டத்தை நினைக்கும் போதெல்லாம் அவள் பொறாமையுடன் பெருமூச்செறிவாள். அவள் தனது கணவனை யவமதிக்கத் தொடங்கினாள். அவனுடன் சண்டையிட்டுக்கொண்டு, அநேக நாள் தனது பிறந்தகம் வந்து வசிப்பாளாயினள். அவ்விடத்தில் பழைய சங்கதிகளெல்லாம் அவளது கவனத்துக்கு வந்தன. தான் சந்தோஷமாகச் சுகங்களை யனுபவித்த காலங்களை நினைத்துக் கொள்வது துக்கத்திலுமதிக துக்கமென்பதை யவளப்போதறிந்தாள். ஆதலால் பிறந்தகத்திலிருக்க அவளுக்கின்னுமதிகக் கஷ்டமாக இருந்தது. மேலும் அங்கே யவள் சாஸ்வதியையும் சுந்தரேசனையும் அடிக்கடி சந்திக்கலானாள்.

அவளது யௌவன காலத்தில் சுந்தரேசனை இழந்த யேக்கமும், சரஸ்வதியிடம் கொண்ட அழுக்காறும் மாறி மாறி யவள் மனதைக் கொண்டன. ஆனால், வயது முதிர, முதிர, அப்பொறாமையே பிரதானமாக அவளது மனதில் பதியத் தலைப்பட்டது. சரஸ்வதி புன்முறுவலுடன் பேசும் போதெல்லாம் சாவித்திரி தனக்குள், "ஓ துஷ்ட தேவதைகளே! நான் இந்த இளநகையை இனி யொருக்கணமேனும் பொறேன். நான் யாருக்கும் இதுவரையில் தீங்கிழைத்ததில்லை. ஆதலின் நான் ஏன் இக்கஷ்டத்தை யடைய வேண்டும்? இதற்குக் காரணமாயுள்ளவர்களை உடனே நசிக்கச்செய்து விடுங்கள்" என்று பொறுமையுடன் வேண்டுவாள்.

## IV

### விதியின் வலிமை.

சாவித்திரி யுலகத்தை ஏமாற்றும்பொருட்டு எப்போதும் போலி நகைப்புடன் கூடிய முகத்துடனேயே இருந்துவந்தாள். காலன் அவளுக்கு அக்கஷ்டத்தைக் கூடக் கொடுக்கவில்லை. அவளது கணவன் அவளுக்குத் திருப்தியாகத் தினையளவேனும் நடந்து கொள்ளமுடியாமற்போனபோதிலும், அவள் தனது மஞ்சள் குங்குமத்தை இழக்கும்படிச் செய்தான்—சாவித்திரியின் "நன் தாலி பெருகிற்று". அவன் இவ்வுலகைவிட்டுச் சென்றான். சாவித்திரி கைம்பெண் கோலத்துடன் தன விலாசம் வந்து சேர்ந்தாள். தோட்டத்தை நோக்கியுள்ள ஒரு அறையில் வசித்து வரத் தொடங்கினாள். வயிரத்தாலிழைத்த அணிகளையணிந்து, சரஸ்வதியினிடம் பெருமை பேசிக்கொண்டிருந்த சிறுமிக்கும், அணிகலனற்று, பொறாமைப் பேயால் சூழப்பட்டு, வருத்தத்திற் கிருப்பிடமாயுள்ள இப்பெண்மணிக்கு முள்ள தாரதம்மிய மெவ்வளவென்று கூறவேண்டுமோ? விதியின் வலிமையை யாரே யறிவர்! சாவித்திரியினது அறையின் பலகணி வழியாய்த் தெரியக்கூடிய ஒரு மூன்றடுக்கு மெத்தை வீட்டில் சரஸ்வதி சுந்தரேசனுடன் வசித்து வந்தாள்.

சாவித்திரி ஒருநாளும் சரஸ்வதி வீட்டிற்குச் செல்வதில்லை. ஆயினும் அவளதில்லத்தைத் தனது அறையிலிருந்து பாராமலிப்பதற்கு அவளால் முடிவதில்லை. தினந்தோறும் காலைவேளைகளில் சரஸ்வதி துளசிபூஜை செய்யும் காட்சியும், மாலை வேளைகளில் புன்னகை ததும்பிய முகத்துடன் தனது குழந்தையைத் தொட்டிலிவிட்டுத் தாலாட்டுவதும் இவள் கண்ணுக்கெதிர்ப்படும். அவள் தன்னையாடையாலும், ஆபரணங்களாலும் சிங்காரித்துக்கொள்ளும் போதெல்லாம் சாவித்திரி தனது உடலைப் பிய்த்துக் கொள்வாள்—பெருமூச்செறிவாள்.

சரஸ்வதி தனது குழந்தைகளுடன் விளையாடும் போதெல்லாம் இவள் வீணாகக் கோபங்கொள்வாள். தரையைத் தன் காலாலுதைப்பாள். "கொடிய பாபி! எனக்குச் சொந்தமான சுகங்களை யெல்லாமபகரித்துக்கொண்டு விட்டாயே" என்றவளைச் சபிப்பாள். அவளுக்குச் சரஸ்வதியையு மவளது மக்களையும் கொன்று விடலாமா வென்றுந் தோன்றியது. சுந்தரேசனும் சரஸ்வதியும் வேடிக்கையாய்ப் பேசிக் கொண்டிருப்பதைப் பார்க்கும் போதெல்லாம் அவளது கோபம் அளவிடத்தகாததாயிருக்கும். "ஈசா! அவர்களது சுகத்தை நான் கண்ணாரக் காணவேண்டுமா? ஐயோ! அநீதம், அநீதம்! மற்றவர்களெல்லாம் ஆனந்தமாய் வாழும்போது நான் தானா இப்படிக் கஷ்டப் படவேண்டும்? ஓ கொடுமையே! இப்படியும் நடக்குமா? கடவுளுக்குக் கண்ணில்லையோ?" என்பாள்.

சுந்தரேசன் தினந்தோறும் அவள் வீட்டு வழியேதான் வேலைக்குச் செல்வான். அவனது வண்டி வாயிலில் வந்து நின்றதும் அவனதிலேறிக்கொண்டு, அத்தெருவு திரும்பும் வரையிலும் தனது மனைவியையும் குழந்தைகளையும் திரும்பிப் பார்த்துக்கொண்டே போவான். இவை எல்லாம் சாவித்திரிக்கு நெருப்புப் போலாயது. சாயந்திரம் வண்டியின் ஓசை கேட்டவுடன் அவனது மக்கள் ஓடிச் சென்று தாயை வாசலுக்கிழுத்து வரும். "அம்மா! அப்பா வருகிறார். சீக்கிரம் வா! அம்மா! அம்மா!" அவளும் தன் கணவனை வரவேற்பதற்காக ஓடி வருவாள்.

இத்தினசரிக் காட்சிகளையெல்லாம் காணக் காண சாவித்திரிக்கு வயிறெரிய வாரம்பித்தது. "ஐயோ! அடி! உனக்குத்தானா இத்தனை யோகங்களும்? என்னிடமிருந்து இவைகளை யபகரித்த நீ நாசமடைய மாட்டாயா? கடவுளே! எத்தனை தரம் முறையிடுவேன்! எவ்வளவு காலம்தான் பொறுப்பேன்!" என்று வெறுப்புடன் கதறுவாள்.

சாவித்திரியின் சாபத்தின் பயன்தானோ என்னவோ? ஒரு நாள் சாஸ்வதியின் இல்லத்தில் நிச்சப்தம் குடி கொண்டிருந்தது. எல்லாம் துக்கக்குறி கொண்டிருந்தது. ஏன் இந்த அமைதி? சாவித்திரிக்கு ஒன்றும் தோன்றவில்லை. அவள் ஆளனுப்பி அதற்குக் காரணத்தை விசாரித்து வரச் சொன்னாள். அவன் "அம்மா! இன்னும் என்ன நடக்க வேண்டும்? சுந்தரேசன் படுத்த படுக்கையாயிருக்கிறார். வைத்தியர்கள் பிழைக்கமாட்டார் என்று அபிப்பிராயப்படுகிறார்கள். எந்த பாபியினுடைய திருஷ்டியோ அம்மகாராஜருக்கு இக்கதி நேர்ந்தது!" என்று கண்களில் நீர் ததும்பச் சொன்னான்.

உடனே சாவித்திரி சுந்தரேசன் வீட்டுக்குச் சென்றாள். அவ்வீட்டில் நுழைந்தவுடன் துக்கமே உருக்கொண்ட சாஸ்வதியெதிர் வந்து அவளைக் கட்டிக் கொண்டழுதாள். "ஐயோ! சாவித்திரி! நாம் நமது பிறப்பிலிருந்து சிநேகர்களாக இருந்தோம். என்னுடைய அதிருஷ்ட காலத்திலுன்னை நான் மறந்தேன். கெட்ட காலமான இப்போது நானுன்னை சந்திக்கிறேன்" என்றாள். கொடிய சாவித்திரி, "நீ அனுபவித்ததெல்லா மென்னிடமிருந்து அபகரித்ததன்றோ" என்று கூற வாயெடுத்தாள். அச்சொற்கள் வெளிவராமல் தொண்டையி லடைத்துக்கொண்டன. அவள் மெதுவாக சாஸ்வதியின் பின் சுந்தரேசனிருக்குமறைக்குச் சென்றாள். அவன் தன் மரணப் படுக்கையிற் படுத்துக்கொண்டு யமனுடன் வாதாடிக்கொண்டிருந்தான். அப்போது சாவித்திரி கண்ணிலுங் கூட நீரரும்பியது.

அவனுக்கு இக்கதி ஏன் நேரிட்டது? தனது கொடிய பொறாமையே காரணமென்றெண்ணினாள். தன்னைத்தானே சபித்துக் கொண்டாள். "ஓ, நானொரு பெண் பேயானேனே! ஏன் இம்மகானுக்குக் கெடுதியை விரும்பினேன்? நான் இத்தனையும் கண்ணுற் காணவேண்டுமா! ஐயோ! நான் இத்தனை நாளாக அந்தகாரத்தில் மூழ்கியிருந்து விட்டேனே! கடவுளே! நான் இவரை வேண்டினேனே யல்லாது, இவரது மரணத்தை விரும்பினேனல்லேன்! என்னைக் கொண்டுபோ, ஓ அந்தகனே! இவரதுயிரைக் கொடுத்துவிடு! வேண்டாம்; வேண்டாம்! சாஸ்வதி சகிக்கமாட்டாள்" என்று பிரலாபித்தாள்.

ஆயினுமென்? ஈசன் அவளது முறைகளுக்கிரங்கினனோ? சாஸ்வதி விதவையானாள். சாவித்திரி வெற்றி பெற்றாள். அது வெற்றியா? இப்போதல்லவோ தெரிந்தது. சுந்தரேசனது மரணம் சாவித்திரியினது துக்கத்தை யதிகப்படுத்தியது.

அவள் ஜயமடைய வில்லை. அபஜயமே யடைந்தாள். சாஸ்வதியின் கண்ணீர் தனது துக்கத்தணல்களை அணைக்கு மென்றெண்ணி னள். ஆனாலவை அத்தீய்க்கு எண்ணெய் போலாயது.

சாஸ்வதி தனது கணவனது பிரிவாற்ரு மைக்காகத் துக்கித்தாள். ஆனால் சாவித்திரி யோவெனில், தனதறையிலுட்கார்ந்து கொண்டு சாஸ்வதியினில்லத்தைப் பார்த்துக் கொண்டு, "ஹே சுந்தரேசா! நானல்லவோ உம்மைக் கொன்றேன்" என்று வாய்விட்டுக் கதறுவாள். என்ன பயன்?

---

# பிரஹ்லாத விஜயம்.

(ஸ்ரீமான் K. நடராஜய்யர்.)

(எல்லா உரிமைகளும் ஆசிரியருடையது.)

(358-ம் பக்கத் தொடர்ச்சி.)

## பதின்மூன்றும் அத்தியாயம்.

"கண்ணே! நீ கோபித்துக் கொள்ளும் பொழுது உன் முகம் எப்பொழுதுமிருப்பதை விட அதிகமான சோபையுடன் விளங்கு கிறது. நீ கோபித்துக்கொள்வதைப்பற்றி நான் வருத்தப்படவில்லை. யஜமானுக இருப்பவர் வேலைக்காரர்களிடம் கோபங்கொண்டு, அவர் களை தண்டிப்பது சகஜந்தான். உன்னுடைய தாசனுகவும் அடிமையாகவுமிருக்கும் என் னிடம் நீ எவ்வளவு கோபத்தை யடைந்த போதிலும், என்னைத் திட்டினாலும், அடித்தா லும், செந்தாமரை போன்ற உந்தன் திருப்பா தம் நோக உதைத்தாலும், அவைகளை என் னுடைய பாக்கியமெனக் கருதி, அதற்காக சஞ்சலப்படாமல், எப்பொழுதும் எவ்வித குற்றங் குறைகளுமின்றி உனக்குக் கைங்கரி யம் செய்வதிலேயே ஜாக்கிரதை யுடையவனு யிருப்பேன். சரணமடைந்தவர்களை அவசியம் காப்பாற்ற வேண்டுமென்று எனக்கு உபதே சித்தாயே. மன்மதனால் பீடிக்கப்பட்டு வேறு கதியின்றி உன்னைச் சரண் புகுந்த என்னை இவ் விதம் திரஸ்கரிப்பது தர்மமா? உன்மீது விழுந்து புரண்டு விளையாடிக்கொண்டிருக்கும் முத்து மாலையாகவாவது அல்லது நீ தரித்துக் கொண்டிருக்கும் பீதாம்பரமாகவாவது நான் பிறந்திருக்கக் கூடாதா? அவைகள் செய்த பாக்கியம்கூட நான் செய்யவில்லையே. உயி ரில்லாதவைகளான அந்த வஸ்துக்களிடத்தி லும் கருணைகாட்டி, உலகத்தில் கிடைத்தற் கரிய உத்தம சுகத்தை அவைகளுக்களித்த கருணைக்கடலான உனக்கு என்மீது மட்டும் ஏன் கிருபை உண்டாகவில்லை? நான் இவ் வளவு தூரம் வேண்டியும் கொஞ்சங்கூட இள காத உன் மனமென்ன கல்லோ? இரும்போ? வஜ்ரமோ? அதற்கு வேறு என்ன பெயரிட் டழைப்பதென்றே எனக்குத் தெரிய வில்லையே! ஏராளமான செல்வத்தையும் பாக்கியங்களையும் வேண்டாமென்று உதைத் துத் தள்ளி, இவ்விதம் கஷ்டப்படுபவர் உன் னைப் போல் வேறு எவரேனும் உலகிலுண்டா? வலிய வரும் ஸ்ரீதேவியை யாராவது காலா லுதைப்பார்களா? இளமையும் செல்வமும் நாளைக்கு வாவென்ருல் வருமா? எவ்வளவோ மேன்மையுடன் வாழ்ந்தவனுயும் ஒருவருக்கும் வணங்காதவனுயுமிருக்கும் நான் உன்னைக் கண்டு, ஐம்பொறிகளுங் கலங்கி, உள்ளமும் உயிரும் உருகியோட, உன் பாதங்களில் விழுந்துகிடக்கிறேனே. கலாநிதியே! காந்தி

மதியே! என் மனம் பதைக்கின்றது. உடல் சோர்ந்து தள்ளாடுகிறது. புத்தி கலங்குகிறது. அறிவு துலைந்து உன்னுசையால் கெட்டலை கின்றேன். எனக்குப் பிராணுதாரமே நீ தான். நீயே எனது உயிர். நீயே எனது பொக்கிஷம். நீயே எனக்கு ராஜ்யம். நீயே எனக்கு மோக்ஷம். என்னுடைய எல்லா சுகங்களும் நீயே. உன்னையன்றி எனக்கு வேறு பொருளில்லை. உயிரை விட்டு உடல் தனித்திருக்க முடியுமோ? எனக்குயிரான உன்னை விட்டு உடல்போன்ற நான் தனித்து வாழமுடியுமோ? என்னிஷ்ட தெய்வமே! உன்னை எக்காலத்திலும் பிரியேனென்று சத்தியஞ்செய்து தருகின்றேன். உன்னையன்றி வேறு ஸ்திரீகளைக் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டேன். இனி என்னுல் ஒரு க்ஷணமும் தாங்கமுடியாது. தயைசெய்து என்னை இந்த ஆபத்திலிருந்து காப்பாற்றுவது உன் கடமை'' என்று கூறித் தேவராஜன், தன் இருகரங்களையும் சிரமேற் குவித்துக்கொண்டு லீலாவதியின் பாதங்களில் வீழ்ந்தான். இவ்வார்த்தைகளைக் கேட்ட லீலாவதியின் முகம் கோபத்தினுல் ஜ்வலித்தது. கண்களில் நெருப்புப் பொறி பறக்க மகிஷாசுரனைச் சம்காரஞ் செய்யா நின்ற பத்திரகாளியைப் போல் ஆவேசங்கொண்டாள். இப்பஞ்சமகாபாதகனின் முகத்தைப் பார்க்கலாகாதென்று தலையைக் கவிழ்ந்து கொண்டு உதடு துடிக்க, அவனை நோக்கிப் பின் வருமாறு கூறினுள்:—

"பிரபுவே! உமக்கு இப்பொழுது புத்தி கெட்டுப் போயிருக்கின்றது. அதனுலேதான் இப்படித் தாறுமாருய்ப் பிதற்றுகிறீர். என்னுடைய கற்புக்கு பங்கம் வரும்படி செய்ய உம்மால் ஒருகாலும் முடியாது. நீர் இப்படிப்பட்ட துஷ்ட காரியத்தைச் செய்வதினுல் உமக்குத்தான் குல நாசம் உண்டாகப் போகிறது. பகவான் என்னை எப்படியும் ரட்சிப்பார். இப்பொழுது உமக்கு க்ஷேமம் உண்டாவதாகத் தோன்றினுலும், இன்னும் கொஞ்ச காலத்திற்குள்ளாவது நீரும் உம்மைச் சேர்ந்தவர்களும் பலவித கஷ்டங்களுக்குள்ளாகப் போகிறீர்களென்பது நிச்சயம். நான் சொல்லும் நீதிகளை நீர் ஏற்றுக்கொள்வது வருத்தந்தான். வியாதி முதிர்ந்து சாகப்போகிறவனுக்கு நல்ல மருந்தைக் கொடுத்தால் அவன் அதை ஏற்றுக் கொள்ளமாட்டான். பலவந்தமாக வாயிற் போட்டாலும் உமிழ்ந்து விடுவான். அதைப் போல் நான் எவ்வளவு நியாயங்களை எடுத்துச் சொன்னுலும் உமது மூளையிலேறப் போவதில்லை. ஒருவராலும் ஏறமுடியாத உயர்ந்த மரத்தினுச்சியில் தேன் கூடு கட்டப்பட்டிருப்பதைப் பார்த்த முடவனொருவன் அந்தத் தேனின் ருசியை நினைத்து எவ்வளவுதான் கஷ்டப்பட்டாலும் அதையனுபவிக்க முடியுமோ? ஏன் வீணுக எட்டாப் பழத்துக்குக் கொட்டாவி விடுகிறீர்? பரஸ்திரீகளின் மேல் இச்சை கொண்டவர்கள் ஒரு நாளும் முன்னுக்கு வரமாட்டார்கள். உலகத்திலிப்படிப் பட்ட அநியாயஞ் செய்பவர்கள் ஒருவருமேயில்லை. எனது மைத்துனரென்றும், அருந்ததிக் கொப்பான கற்புடையவள்—லட்சணத்தில் லட்சிமியையும் ரதியையும் அதிக்கிரமித்தவள்—சகல கலைகளிலும் வல்லவள்—என் பிரியசகி—சசிதேவியின் கண்ணனைய கணவரென்றும் எண்ணி உம்மை உபசரித்ததற்குப் பயன் நன்ருய்க் கிடைத்தது! உமது சுபாவம் இப்படியிருப்பதை யறியாமல், தேவர்கள் உம்மை நல்லவரென்று நினைத்திருக்கிருர்கள். அரசமரத்தைப் பிடித்த பேய் பிள்ளையாரையும் கூடப் பிடித்ததைப்போல், உமக்கு நேரிடும் கஷ்டங்களைக் கண்டு என் பிரிய சகியின் மனம் வருந்துமே. உம்முடைய சுகதுக்கங்களுக்குப் பாத்தியப்பட்டவளான அவள் உம்முடன் தானும் கஷ்டங்களை யனுபவிக்க நேரிடுமே

யென்ற வருத்தத்தினுலேயே இவ்வளவு தூரம் சொன்னேன். நீர் என் புத்தியைக் கேழ்க்க மாட்டீர். ஏனெனில் நீரும் உம்மைச் சேர்ந்த வர்களும் பெருந்துயரானுபவிக்கவேண்டிய கர்மம் காத்திருக்கின்றது. நீர் குலத்துரோகியும் சகோதரத் துரோகியுமாகிறீர். சூரியகிரணத்தைப் போல் நான் ஒருவராலும் ஸ்பரிசிக்கப் படமுடியாதவள். என்னை நீர் இச்சிப்பது பசியுடனிருக்கும் சிங்கத்தின் வாயிற் புகுந்து அதன் நாக்கைப் பிடுங்க எத்தனிப்பது போலவும், ஜ்வலித்துக்கொண்டிருக்கும் நெருப்பை மடியிற் கட்டிக்கொள்வது போலவும், காளகூடவிஷத்தைச் சாப்பிட்டுவிட்டு க்ஷேமமாயிருக்க எண்ணுவதைப் போலவும், கழுத்தில் பெரிய கல்லைக் கட்டிக்கொண்டு சமுத்திரத்தில் நீந்துவதைப் போலவும் இருக்கிறது. சாணைபிடிக்கப்பட்ட பெரிய கத்தியின் நுனியில் நாக்கை உராய்ந்து கொள்ள எத்தனிக்கிறீர். சூலத்தின்மேல் தாண்டவமாட நினைக்கிறீர். என்னுடைய கற்பின் மகிமையினுல் உம்மை இப்பொழுதே நீருகும்படி எரித்துவிடக் கூடுமாயினும் சசிதேவியின் முகத்துக்காக மனம் பொறுத்தேன். உம்மைப் பார்க்கும்பொழுது என் மனங் கொதிக்கின்றது. உமது வார்த்தைகள் என் இருதயத்தைப் பிளக்கின்றன. இனி ஒரு க்ஷணமும் என்முன் நில்லாதீர். கோபத்தினுல் என்னையு மறியாமல் ஏதாவது சாபவார்த்தைகள் வந்தாலும் வந்துவிடும். ஜாக்கிரதை!" என்று கர்ஜித்தாள்.

"பெண்ணே! நீ உன்னை மகாபண்டிதையாக நினைத்துக் கொண்டிருக்கிறுய். ஆதலால் நான் சொல்லும் ஹிதோபதேசங்களை நீ காதில் வாங்கிக் கொள்ளவில்லை யென்று நினைக்கிறேன். புத்திகெட்டவளே! தேவசக்கரவர்த்தியான என்னைவிட இந்த அசுரப் பயல் எந்த விதத்தில் சிரேஷ்டமானவனென்று நினைத்து அவனிடத்திலிச்சை வைத்திருக்கிறுய்? மூவுலகங்களிலும் பிரசித்தி பெற்றவனும் வீரனுயுமிருக்கும் என்னைப் பர்த்தாவாக அடைந்து சுகமாயிரு. உனக்குச் சமமதையான ஸ்திரீகளும் எனக்கு மிஞ்சின புருஷர்களும் உலகத்திலில்லை. உலகசிரேஷ்டர்களான நாமிருவரும் தம்பதிகளாக விருப்பதே சிலாக்கியம். வீணுக அப்பாதகனை நினைத்து நீ வருந்திக் கொண்டிருப்பதினுல் பயனில்லை. நான் உன்னை இங்கு விட்டுவிட்டுப் போகப் போவதில்லை. அடி! என்னுசைக்கனியே! வெகு நாளாகத் தேடிக்கொண்டிருந்த அபூர்வமான தேவாமிர்தமானது கையில் கிடைத்திருக்கும்போது, அதன் ருசியையனுபவிக்காமல் விட்டுவிடும் மூடனும் உலகத்திலுண்டா?" என்று சொல்லிக் கொண்டே தேவராஜன் தாவியெழுந்து, லீலாவதியின் கரத்தைப் பற்றப் போனுன்.

லீலாவதி நடுநடுங்கி, உடல் வியர்த்து, புலியைக் கண்ட பெண்மானைப் போலப் பதறி, கண்ணீர் தாரை தாரையாய்ப் பெருக, இந்திரனை நோக்கி, "அடா! பாபி! சண்டாளா! துரோகி! பழிகாரா! என்னைத் தொடாதே, என்னருகில் நெருங்காதே. வீணுக அநியாயஞ் செய்யவேண்டாம். விளக்கில் விழுந்த விட்டிற் பூச்சியைப் போல் நாசத்தையடையாதே. என் மேலிச்சை வைக்காதே குலநாசகா! காலமுள்ள மட்டும் கஷ்டத்தை யனுபவிக்கவேண்டும். ஐயோ! என்னை யொருவரும் தீண்டக்கூடாதே. என்னை விட்டுவிடு! விட்டுவிடு!" என்று அலறிக்கொண்டே அறையை விட்டு வெளியே ஓடினுள். அதுகண்டு அந்தப் பாபி அவளைப் பின் தொடர்ந்து துறத்தினுன். அவள் மனம் பொறுமல் "பகவானே! நான் அனுதை. எனக்கு வேறு கதியில்லை. தீனரக்ஷகனே! பக்தவத்ஸலனே! வாரும்! வாரும்! என் மானத்தை ரட்சியும்!" என்று கதறியழுது கொண்டு, பயத்தினுல் நடுநடுங்கினவளாய், ஆடை யவிழ்ந்து சோர, இடை குலுங்க, கரு

முகில்போலக் கருத்து மயில் தோகை போல் நீண்டு படிப்படியாகச் சுருண்டு விளங்குகிற கூந்தல் அவிழ்ந்து குலைய, சாசர வென்றோடி, சுவர்ணமயமான ஓர் தூணை இறுகக்கட்டிக் கொண்டாள். தேவராஜன் சமீபத்தில் போய் அவள் கரத்தைப் பிடித்தான். அவள் திமிறிக் கொண்டு "அனாதரக்ஷகனே! கஜேந்திர வரதனே! தீன தயாளுவே! இதுதான் தருணம். வாரும் சீக்கிரம்! இந்தப் பாபி என்னைத் தொட்டிழுக்கிறானே!" என்று வீறிட்டுக் கொண்டு, அந்தத் தூணைச் சுற்றிச் சுற்றி ஓடிவர, தேவராஜன் திடீரெனப் பாய்ந்து இடது கையினால் அவளுடைய கூந்தல்களையும், வலது கையினால் துடைகளையும் பற்றிக் கொண்டு அவளைப் பலவந்தமாய்த் தூக்கினான். இந்த அநியாயத்தைப் பார்த்த சகல ஸ்திரீகளும் மனம் பதைக்க, முகங்கறுக்க, கண்ணீரொழுக, மார்பின் மேலடித்துக்கொண்டு, 'ஆ! ஆ!!' என்று கதறினார்கள். அப்படியவன் வாரித் தூக்கும்போது லீலாவதி பதைபதைத்து, துடித்து, முகத்தை முந்தாணையால் மூடிக்கொண்டு 'கோ' வென்றலறினாள். இந்த அக்கிரமத்தைப் பார்க்க சகிக்காமல் சூரியனும் ஒளி மழுங்கினான். காற்று ஸ்தம்பித்துவிட்டது. அரண்மனையிலுள்ள கிளி, சாரிகை, மயில் முதலான பட்சிகளும் மான்களும் தங்கள் தலைவிக்கு நேர்ந்த ஆபத்தைப் பார்த்துக் கண்ணீர் விட்டுக் கதறின. தேவராஜன் அவளைத் தன் தேரில் தூக்கிப்போட்டுக் கொண்டு, சாரதியை நோக்கி ரதத்தை தேவலோகத்துக்கு விடும்படி கட்டளையிட்டான். சக்கரவர்த்தினி நெஞ்சுலர்ந்து, ஆவி சோர்ந்து, பைத்தியம் பிடித்தவள் போலாகிப் பலவிதமாய்ப் பிரலாபிக்கத் தொடங்கினாள்.

"சூரியபகவானே! வாயுதேவனே! வனதேவதைகளே! உங்களுக்கு நமஸ்காரம். நீங்கள் சீக்கிரம் என் பர்த்தாவினிடம் சென்று இந்திரன் என்னை அபகரித்துப் போவதாகச் சொல்லுங்கள். இந்த ஒத்தாசை செய்தால் உங்களுக்கு மிகுந்த புண்ணியமுண்டு. சோணிதபுரியே! உனக்கு வந்தனம். புருஷோத்தமனே! அனாதையான நான் ஆபத்திலகப்பட்டுக் கொண்டு கதறுவதைக் கேட்டும் உபேட்சை செய்வது நியாயமா? இது நான் பண்ணின பாபமா? தங்களை நம்பினவர்களைத் தாங்கள் ஒரு நாளும் கைவிடமாட்டீர்களென்று பெரியோர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். புருஷசிம்மமான உம்மால் ரட்சிக்கப்படுமென்னை அனாதை யென்றெண்ணி இந்தப் பாபி தூக்கிக்கொண்டு போகிறானே! சீக்கிரம் வாரும்! வேதமுதல்வனே! தாமரைக் கண்ணனே! சரணாகதவத்ஸலனே! அபயம்! அபயம்!! அபலையான என்னை இப்படிச் சோதிக்கலாமா? நம்பின பேரைக் கைவிடலாமா?

"அடா! குடிகேடா! முறைமை தப்பிய மிருகமே! யாக ஹவிஸ்ஸை நாய் தொடலாமா? நாசகாலா! என் பர்த்தா இல்லாத சமயத்தில் வந்து திருடனைப் போல் என்னை அபகரித்துக் கொண்டு போகிறாயே! உனக்கு வெட்கமில்லையா? சந்திரனுக்குற்ற களங்கத்தைப் போல் உனக்கும் மாறாக் களங்கத்தை யுண்டாக்கிக்கொள்ள நினைக்கிறாயே! எல்லோராலும் பூஜிக்கப்படுகிற மகாத்மாவான காசியபருக்கு நீ எங்கிருந்து புத்திரனாகத் தோன்றினாய்? நன்றி கெட்ட நாயே! உன்னை மகா பராக்கிரமசாலி யென்று புகழ்ந்துகொண்டாயே! இப்படிப்பட்ட நிந்தையான காரியத்தைச் செய்வதுதான் வீரத்தனமோ? உன் வீரத்தைச் சுடவேண்டும். நீ எதற்காக என்னை அபகரித்துக்கொண்டு போகிறாயோ அந்த நோக்கம் ஒரு நாளும் நிறைவேறப் போவதில்லை. என் பர்த்தாவை விட்டுப் பிரிந்து சத்

துருவின் வசத்திலகப்பட்ட நான் உயிருடனிருக்கமாட்டேன். உனக்கு ஹிதத்தைத் தேடிக்கொள்ள நீ விரும்பவில்லை. காலபாசத்தினால் பீடிக்கப்பட்ட நீ என்னைச் சாதாரணமான பெண்ணென்று நினைத்துத் துள்ளுகிறாய். உன்னையும் உன்னைச் சார்ந்தவர்களையும் குலநாசஞ் செய்ய வந்த காளராத்திரியென்று என்னை நினைத்துக்கொள். தூர்த்தனை உன்னால் எத்தனை ஸ்திரீகள் என்னைப்போல் ஹிம்சிக்கப்பட்டிருக்கின்றனரோ? பதிவிருதைகளின் சாபம் வீண் போகாது. எந்த ஐசுவரிய மதத்தினால் நீ என்னைத் தொட்டிழுத்தாயோ அந்த செல்வங்களையும் ராஜ்யத்தையும் அதிசீக்கிரத்திலிழந்து சத்துருக்களால் பீடிக்கப்பட்டவனாய் ஏனென்பாரெவருமின்றி ஏகாங்கியாக உலகத்திலுழன்று திரியப்போகிறாய். என் பிராணநாதரின் கோபத்தை மூன்று உலகங்களும் தாங்கமாட்டாதே. இப்படிப்பட்ட மானங்கெட்ட பிழைப்பு பிழைக்கும் நீயோ அவரிடமிருந்து தப்பித்துக் கொள்ளப்போகிறாய்? புத்திகெட்ட மட்டியே! அவருடைய பாணங்களால் சரீரமுழுவதும் துளைக்கப்பட்டு யுத்தபூமியில் விழுந்து துடிக்கப் போகிறா யென்பது நிச்சயம். பெண்வதை சும்மாவிடாது. விவேகமற்ற வெறியனே! தாயென்றும் தங்கையென்றும் பெண்ணென்றும் முறையில்லாது கண்ட ஸ்திரீகளைக் கைபிடித்திழுக்கிறாயே! பாதகா! உனக்கழிவு காலம்வந்து விட்டது" என்று இவ்விதம் பலவாறாகக் கதறியழுது, தொண்டை வறண்டு, மெய் சோர்ந்து, களைப்புமேலிட்டு, வாடிய கொடியைப் போலத் தேர்த்தட்டில் சாய்ந்தாள். அதிவேகமாகச் சென்று கொண்டிருந்த அந்த ரதமும் பருவதசிரேஷ்டமான ஹிமாசலத்தின் சிகரத்தை யணுகியது. அங்கு ஓர் பெரிய தால விருட்சத்தினடியில் நாரதமகரிஷி பகவந்நாம சங்கீர்த்தனம் செய்துகொண்டு, மெய்மறந்து பிரம்மானந்தத்தில் மூழ்கியிருந்தார். அந்த நாம சங்கீர்த்தன சப்தம் காதில் விழவும் சோர்ந்திருந்த லீலாவதி கண் விழித்து, நாதரைப் பார்த்து, "மகர்ஷே! அபயம்! இந்தப் பாபி என்னைப் பலாத்காரமாய்த் தூக்கிக்கொண்டுபோகிறான். இவனிடமிருந்து என்னைக் காப்பாற்றும், காப்பாற்றும். நாதரே! பூஜ்யரே! கண்விழித்துப் பாரும். ஐயோ! நான் என்ன செய்வேன்! மகரிஷியான தங்களுக்கும் கருணையில்லையா? துரிதமாக வந்து என்னைக் காக்கக்கூடாதா?" என்று பூனையின் வாயிலகப்பட்ட கிளியைப் போல வீறிட்டுக் கதறினாள்.

(தொடரும்)

## "இன் சொல்."

(ஸ்ரீமான் ஆரியூர் வ. பதுமநாப பிள்ளை.)

"இனிய உளவாக இன்னாத கூறல் கனியிருப்பக் காய் கவர்ந்தற்று."

எவ்விடத்தும் இன் சொல்லே இயம்புவோர் எவராலும் விசுவாசிக்கப்படுவர். அத்தகையோர்க்குத் துன்பம் நேர்ந்தவிடத்து உதவிபுரியப் பலரும் முன்வருவர். அவர்களது முகங்களில் எப்பொழுதும் புன்னகையோடு கூடிய திவ்விய தேஜஸ் திகழ்ந்துகொண்டிருக்கும். அவர்களுக்குக் கேடுதேட எண்ணும் பகைவர்களுங்கூட அன்னாரது அன்பைக் கண்டு வியந்து பணிந்துவிடுவர். பலபடப் பகர்வானேன்? "உள்ளிய எல்லாம் உடனெய்தும் உள்ளத்தால்—உள்ளான் வெகுளியெனின்"—எனும் பொய்யாமொழிக் கிணங்க, சீற்றத்தை வென்று நகைமுகத்துடன் உரை

யாடும் பொறையாளர்கட்குக் கருதிய எவையும் எளிதில் கைகூடும்.

நான்கு ஆசிரமத்தார்க்கும் இன்சொல் இன்றியமையாத தொன்றே. அந்நால்வருள்ளும் இல்லறத்தினர்க்கே இன்சொல் அத்தியாவசியமாகும். மனைவி ஒரு தவறு இழைத்தால், சற்றும் ஆலோசியாது கோபத்தாற் கொதித்தெழுந்து, "ஏண்டி பேயே! நாயே! உனக்கென்னடி அத்தனை கொழுப்பு? உன் திமிரை அடங்குகிறேன் பார்!" என்று சரமாரியாகக் கடுஞ் சொல்மாரி பொழியக் கணவன் தொடங்கிவிடுவானேல், அவன் அடைந்த பயனென்னை? எவ்வளவுக் கெவ்வளவு அவன் சிடுசிடுத்து விழுகிறானோ, அவ்வளவுக்கவ்வளவு அவன் மிருகசக்தியையே—மூர்க்கசக்தியையே —உபயோகிப்பவன் ஆகின்றான். சில சமயங்களில் சொற்சண்டை முற்றிக் கைகளால் அடித்து விடுவது முண்டு. அவ்வாறு நடந்து கொள்வதால், தன் எண்ணப் படியே அவளை ஆட்டுவிக்கலாமென்று கருதுகின்றான். அப்பேதை, அந்தோ! மனைவி வாயாடியாயின், பதிலுக்குப் பதில் கிடைக்கும் வசைமொழிகளையே அவன் பெற்றுக்கொள்ள நேரும். எவ்வளவுக்கெவ்வளவு அவளைக் கோபமூட்டினானோ, அவ்வளவுக்கவ்வளவு அவளது மூர்க்கத்தன்மையே அதிகரித்து விடுகின்றது. மீண்டும் அவளைச் சமாதானப்படுத்துவதில் பெரிதும் சிரமம் எடுத்துக் கொள்ள வேண்டி வருகிறது. அத்தகைய மூர்க்க நெறியை முற்றும் ஒழித்து, "நீ இவ்வளவு புத்திசாலியாயிருந்தும் இப்படிச் செய்யலாமா? 'செய்வன திருந்தச்செய்' என்னும் செம்மொழிப்படி, எதையும் செம்மை பெறச் செய்யும் உன்னிடம் இத்தகைய குறை விளையுமென்று யான் சிறிதும் எதிர்பார்க்கவேயில்லை. இனியேனும் இத்தகைய தவறுதல் எதுவும் நேராவாறு நடந்து கொள்வதே உனது சீரியகுணத்திற்குச் சிறப்பளிக்கும்"—என்று அன்பு நிறைந்த முகத்தோடு இன் சொற்களால் அவளது தவறை எடுத்து விளக்கிக் காட்டின், தவறிழைத்த மனைவி வாயாடியாயினுங் கூட எளிதில் திருந்திவிடக் கூடும். அவ்வாறு கூறும் கணவனது அகத்திலும் சினமெனும் பேய் பற்றொழியும்; ஒழியவே பகைமைக் குணத்திற்கு எவ்விதத்தும் இடமின்றி அகலும்; அகலவே, சதிபதிகளிடையே அன்பும் இன்பமும் என்றென்றும் நிலவியிருக்கும்.

கணவன் மனைவியிடத்தும் மக்களிடத்தும் இன்சொல்லே இயம்புவதால் தமது தவறுகளைத் தாமே உணர்ந்து திருந்துமாறு அவர்களது மூர்க்கசக்தியை மாற்றிவிடக்கூடும். அம்முறையை ஏனைய உறவினர் விஷயத்திலும் கொள்வது பெரிதும் நன்மைதரும். "எவரெவர் சாந்தகுணம் வாய்ந்தவராயிருக்கிறார்களோ அவர்களே இவ்வுலகிலும் இனி வரப்போகின்ற அவ்வுலகிலும் நன்மையைப் பெற்றவராயிருப்பர்"—என்பது நபிகள் நாயகத்தின் மணிமொழியாகும். இன்சொற்களையேயன்றி மறந்தும் வன்சொற்கள் வழங்காத வண்மையாளர்கள், ஏனையோர் வன்சொற்கள் வழங்குவது கண்டு பெரிதும் வருந்துவர்.

"பிறிந்தமண் ணுடம்பை மறைத்திட வலியார் பின் முன்னோக்காது மேல் நோக்கி அதிர்ந்திட நடந்த போதெலாம் பயந்தேன்; அவர் புகன்றிட்ட தீமொழிகள் பொறிந்திரு செவியிற் புகுந்தொறும் பயந்தேன்; புண்ணியா! நின் துதியெனுமோர் முதிர்ந்த தீங்கனியைக் கண்டிலேன், வேர்த்து முறிந்தகாய் கண்டுளம் தளர்ந்தேன்"—எனவரும் வள்ளலார் அருள் மொழியை ஊன்றி நோக்குக.

வன்சொல் வழங்கிப் பிறரை மிரட்டுதல் வாயிலாகத் திருத்த முயல்வதைப் பார்க்கிலும், இன்சொல் இயம்பித் திருத்தமுயல்வது பெரி

தும் நன்மை பயக்கும். இதுபற்றியே, தெய்வப்புலமைத் திருவள்ளுவர் "இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண—நன்னயம் செய்துவிடல்"—என அருளிச்சென்றார். வன்சொல் வழங்குவதால் இருதிறத்தாரிடத்தும் பகைமையே வளர்ந்தோங்கும். "இன்சொலா லன்றி இருநீர் வியனுலகம்—வன்சொலா லொன்றும் மகிழாதே"—என்பது முதுமொழி. மெய்யன்போடு உள்ளும் புறமும் ஒத்து இன்சொல் வழங்கும் சிலர் இருப்பது போன்றே வஞ்சக எண்ணங்கொண்டு நகைமுகத்துடன் இன்சொல் இயம்பிக் கெடுக்கும் சுயநலப் புலிகளும் பலர் உளர். பகிரங்கமாக எதிர்க்கும் பகைவரைக் காட்டிலும் நெருங்கிய நேபர்கள் போல் நடித்து அடுத்துக் கெடுக்கும் வஞ்சகர்களைப் பெரிதும் அஞ்சுதல் வேண்டும். "வாள்போற் பகைவரை அஞ்சற்க; அஞ்சுக—கேள்போற் பகைவர் தொடர்பு"—என்பது தமிழ்மறை. அத்தகையோரது வஞ்சம் மிக்க இன்சொற்களில் மதிமயங்கிவிடாது மிக்க எச்சரிக்கையுடன் நடந்து கொள்ளல் வேண்டும். இன்சொல் கேட்டவளவிலேயே இன்பமெய்தி அன்பு பாராட்டுவோர் எவ்விடத்தும் எந்நிலையிலும் எவருடைய சொற்களிலும் ஒரேவித நம்பிக்கை கொண்டு விடுவது கூடாது. மெய்யன்பர் வழங்கும் இன் சொற்களையும் பொய்வஞ்சர் புகலும் இன்சொற்களையும் சீர்தூக்கிப் பார்த்து, இரண்டிற்கும் இடையே உள்ள வேற்றுமையைத் தெளிந்து, உண்மை உணர்ந்திடுதல் ஒவ்வொருவருடையவும் கடமையாகும்.

ஆடவரைவிடப் பெண்மணிகட்கே இன்சொல் பெரிதும் வேண்டற்பாலதாகும். இரக்கத்திற்கும் அருளுக்கும் பிறப்பிடங்களாய், அன்புக்குச் சுரப்பிடங்களாய், பெண்மையிலிருந்து தாய்மையிலிருந்து இறைமைக்கும் மாறுந் தன்மை வாய்ந்த மெல்லியலார் வன்சொல் வழங்குவது அவர்களது பெருமையைப் பெரிதும் குறைப்பதாகும். இன்சொல் இயம்புவதே சீரிய பெண்மைக் குணமாகும்.

"பெண்ணொருத்தி பேசில் பெரும்பூமி தானதிரும்,
பெண்ணிருவர் பேசில் விழும் வான்மீன்கள்—[பெண்மூவர்
பேசில் அலைசுவறும், பேதையே! பெண்பலர்தாம்
பேசில் உலகென்னுமோ பின்"

—என்றவாறு, ஆடவரும் வெறுக்கத்தக்கவாறு வன் சொல் வழங்கும் வனிதையர் பெண்ணுடல் தாங்கி நிலவினும் அத்தகையோர் பேய்களே ஆவர். அத்தகைய சிலரது மிருகத்தனத்தைக் கொண்டு பெண்டிர் அனைவரையுமே சண்டிகளெனக் கூறிவிடுவது தர்மமன்று.

ஆதலின், ஆடவர் அனைவரும், சிறப்பாகப் பெண்மக்களும் எக்காலத்தும் எந்நிலையிலும் எவ்வேளையிலும் மறந்தும் வன்சொல் வழங்காது என்றென்றும் எவரிடத்தும் இன்சொல்லே இயம்பப் பழகுவாராயின் இருமையிலும் பெருமை எய்தி இன்புற்று வாழ்வது திண்ணம், திண்ணம்.

---

# தனபதி.

(சிறு கதை)

(ஸ்ரீமதி K. கமலாம்பாள்.)

முன்னொரு காலத்தில் சூரசேனன் என்ற அரசன் நீதி தவறாமல் ராஜ்யபாரம் செய்து வந்தான். அவன் கடவுளினிடத்தில் அதிக பக்தியும் குடிகளினிடத்தில் அத்தியந்த விசுவாசமும் உள்ளவன். அதனால் அந்த ராஜ்யத்திலுள்ள பிரஜைகள் யாதொரு கவலையுமின்றி வாழ்ந்து வந்ததும் தவிர, அவ்வரசனைத் தங்கள் பிதாவாகவும் கருதிவந்தனர். அவ்வரசனுக்கு அழகில் ஸ்ரீ மகாலக்ஷ்மியையும், கற்பில் அருந்ததியையும், படிப்பில் சரஸ்வதியையும் சமானமாகச் சொல்லத்தக்க தனபதி யென்றோர் மனைவி உண்டு. அவள் அழகு உலகப்பிரசித்தமாக இருந்தது. ஆனால் அவளை அவள் பெற்றோர்கள், கணவன் இவர்களைத் தவிர வேறு ஆண்காக்கைகள் கூடப் பார்த்ததில்லை. உலகத்தில் ராஜஸ்திரீகளாயிருப்பவர்கள் அன்னிய புருஷர்கள் கண்ணில் படாமல், கோஷாவாக இருப்ப தொன்றும் ஆச்சரியமில்லை. ஆனால் அல்லியானவள் எப்படி ஆண்வாடை கூட ஆகாதென்று இருந்தாளோ அதுபோல இவள் அதிக கண்டிப்பாக இருந்துவந்தாள். மேலும் அவள் அந்தப்புரத்தை விடுத்து வேறு இடங்களுக்கு எதை உத்தேசித்தும் போகமாட்டாள். அதனால் அவள் அழகைப் பற்றி எல்லோரும் இரகசியத்தில் பேசிக் கொள்வது வழக்கம். அநேக அரசர்களும், சிற்றரசர்களும் அவளைப் பார்க்க வேண்டுமென்று இரகசியத்தில் எவ்வளவோ பிரயாசைப்பட்டும் ஒன்றும் பலிக்கவில்லை. வெளிப்படையாய் பலவந்தமாகக் கொண்டுபோகவோ யுத்தம் செய்து ஜயித்து அழைத்துப் போகவோ ஒருவராலும் முடியாமற்போயிற்று. ஏனெனில் சூரசேனன் எல்லா அரசர்களையும் விடப் பெரிய அரசன். அதுவும் தவிர அவன் பிரஜைகளெல்லாம் அவனிடம் ஒற்றுமையாயிருந்தபடியாலும் அவன் ஈசுவர கடாட்சம் உடையவனானதினாலும் ஒருவித முயற்சியும் செய்ய முடியவில்லை.

ஒரு நாள் அரண்மனைக்கு ஒரு (magician) மாந்திரீகன் வந்தான். அவன் அரசனைப் பார்த்து "அரசே! நான் இதுவரையில் ஒருவரும் பார்த்திராத அநேக விநோதங்கள் காட்டுகிறேன்" என்று சொன்னான். அரசனும் அதற்கு சம்மதித்து, அவ்வேடிக்கையை அரண்மனை (Durbar hall) சபாமண்டபத்தில் நடத்துவதாக எல்லோருக்கும் தெரிவிக்கச் சொன்னதும்தவிர சமீபத்திலுள்ள சிற்றூர்களிலிருக்கும் சிற்றரசர்களுக்கும் இன்னும் அநேக பிரபுக்களுக்கும் (Invitation card) அழைப்புக் கடிதம் அனுப்பினான். அக்கடிதத்தைப் பார்த்த அனைவரும் சபாமண்டபத்தில் வந்து அவரவர்களுக்குரிய ஆசனங்களில் அமர்ந்தனர். அவ்வூரிலுள்ள பிரஜைகள் எல்லோரும் உள்ளேபோக இடமில்லாவிடினும் வெளியிலும் அரண்மனைமேலும் தொத்திக்கொண்டிருந்தனர். சூரசேனனின் பட்டமகிஷியாகிய தனபதிக்கும் இவ்வேடிக்கையைப் பார்க்க வேண்டுமென்ற ஆவல் அதிகமாக இருந்தது. அவள் அந்தப்புரத்து மாடிமேல் இருந்து சபாமண்டபத்தைப் பார்த்தால் அங்கு நடப்பவைகள் நன்றாய்த் தெரியும். ஆதலால் தன்னுடைய மாடிமேல் அநேக சித்திரங்கள் வரைந்து அழகிய வேலைப்பாடுள்ள திரை ஒன்றைக் கட்டச் சொல்லி அதில் தன் இரு கண்களுக்குச் சரியாக இரு சிறு துவாரம் செய்யச் சொல்லி அதன் மறைவில் ஓர் சோபாவில்

தான் உட்கார்ந்து வேடிக்கைகளைப் பார்த்திருந்தனள். மாந்திரீகனும் அநேக வேடிக்கைகளை எல்லோரும் பிரமிக்கும்படி காட்டினான்.

இப்படியிருக்கும் சமயத்தில் சபாமண்டபத்திலிருந்த சிற்றரசர்களில் ஒருவன் தற்செயலாக உயர நிமிரவே தனபதியின் கண்கள் அவனுக்குத் தென்பட்டன. ஆனால், அவன் அவ்வேடிக்கையைத் தவிர வேறு ஒன்றையும் கவனிக்கவில்லை. அவன் பார்த்த சமயமும் அவள் அவ்விடத்தைவிட்டு உள்ளே சென்ற சமயமும் சரியாயிருந்தபடியால் அப்பொழுது இருண்ட மேகத்தினிடையில் பளிச்சென்று ஒரு மின்னல் தோன்றி மறைந்தால் எப்படியோ அதேமாதிரி இவனுக்குத் தோன்றிற்று. உடனே அவன் ஓர் வித மயக்கமுற்று தன் ஆசனத்திலிருந்து கீழே விழுந்தான். ஆயினும் மெள்ள சமாளித்துக் கொண்டு எங்கு பிறர் தன்னைப் பார்த்து விபரீதமாய் ஏதாவது நினைத்துக் கொள்ளப் போகிறார்களோ என்று பயந்திருந்தான். வேடிக்கையும் முடிந்தது. அரசனும் அவன் வேடிக்கைகளை மெச்சி அவனுக்கு அநேகவிதப் பொருள்கள் இனாம் கொடுத்தான். எல்லோரும் அவரவர்கள் இருப்பிடத்திற்கு விடைபெற்றுச் சென்றார்கள். தனபதியின் மையலில் சிக்கிய கருணாகரனென்ற சிற்றரசனும் தன் ஊருக்குச் சென்றான். ஆயினும் அவன் தனபதியையும் அவளை எப்படி அடைவது என்கிற எண்ணத்தையும் கனவிலும் மறந்தவனல்ல.

II

ஒரு நாள் சூரசேனன் தன் பரிவாரங்கள் புடைசூழக் காட்டிற்கு வேட்டையாடச் சென்றான். அவன் வேட்டைக்குச்சென்றால் சில சமயம் திரும்பிவர நாலைந்து நாட்கள்கூடச் செல்லும். அது போலவே, அப்பொழுதும் தான் திரும்பிவர நான்குநாள் செல்லும் என்று சொல்லிப் போனான். கருணாகரன் எப்பொழுது தான் எதிர்பார்த்த சமயம் கிடைக்குமென்று நினைந்திருந்தவனாதலால் அரசன் வேட்டைக்குச் சென்றதும், திரும்பிவர நான்கு நாட்செல்லும் என்கிற விஷயமும் எப்படியோ அவனுக்குத் தெரிந்துபோயிற்று. அதுதான் தக்க சமயமென்று அவன் தனபதியின் அந்தப்புரத்திற்குப் போக நிச்சயித்தான். ஆனால் அங்கு இருக்கும் அநேக கட்டுக்காவல்களைத்தாண்டி எப்படி உட்செல்வது என்கிற விசாரம் வந்துவிட்டது. இவ்விஷயமோ ஒருவருக்கும் தெரியக்கூடாது. அவனுக்குக் கடைசியாக ஒரு யோசனை தோன்றிற்று. என்னவெனில் ஸ்திரீவேஷம் போட்டுக் கொண்டு உட்செல்வது தான். அப்படிச் சென்றால்தான் தன்னை ஒருவரும் கவனிக்கமாட்டார்கள். மெள்ள எப்படியாவது உட்சென்றுஅவள் அந்தப்புரத்தை அடைந்து விட்டால் பிறகு சமயத்திற்குத் தக்கபடி நடந்து கொள்ளலாமென்று தீர்மானித்து அன்றிரவே பெண் வேஷத்துடன் அரண்மனையை அடைந்து உள்ளே சென்றான். இவன் ஸ்திரீயாயிருந்ததால் ஒருவரும் இவனைத் தடுக்கவில்லை. அதிக சிரமமின்றி நேராக தனபதியின் அந்தப்புரத்திற்குச் சென்றான். அவ்விடத்திய அலங்காரங்களையும் அவ்வறையின் அற்புதக் காட்சியையும் இரவிலும் சூரியன் உண்டோ என்று நினைக்கத்தக்கதாய் பட்டப்பகல் போன்ற ஒரே வெளிச்சத்தையும் கண்ட இவன் கண்கள் கூசின. மேலும் எந்த சமயம் யார் தன் வேஷத்தை அறிந்து கொள்வார்களோ என்ற பயம் வேறு மனதில் பாதித்தது. இருந்தபோதிலும் கூடியவரையில் தைரியமாகவே அங்குமிங்கும் பார்த்துக்கொண்டேயிருந்தான். அச்சமயம் அவ்விடத்தில் ஒருவருமில்லை. தனபதி தன் சயனக்கிரகத்தில் ஏதோ படித்துக் கொண்டிருந்தாள். அவளுடைய தாதிகளெல்லோரும் அவரவர் வேலையை கவனித்துக் கொண்டிருந்தனர். ஆனால் அவளுடைய அந்தரங்கத் தோழி

யாகிய விஜயா மாத்திரம் அவளுடன் உட்கார்ந்திருந்தாள்.

வெளி ஹாலில் காலடிச் சத்தம் கேட்க விஜயா சட்டென்றெழுந்திருந்து வந்து பார்த்தாள். இதுவரையில் பார்த்திராத புதிய ஸ்திரீ ஒருத்தி அங்குமிங்கும் பார்த்துக்கொண்டிருப்பதைக் கண்டு அதிக வியப்புடன் 'யாரம்மா! நீங்கள்? யாரைத் தேடுகிறீர்கள்?' என்றாள். உடனே அவன் சற்று யோசித்து 'நாம் பொய் சொல்வதைக் காட்டிலும் வந்த காரியத்தையே சொல்லிவிடுவோம். எப்படியும் சொல்லித்தான் தீரவேண்டும், வந்தது வந்தாய் விட்டது. கடவுள் விட்ட வழி விடட்டும்' என்று நினைத்து 'அம்மா! நான் தங்கள் யஜமானியைப் பார்க்கவேண்டும்' என்றான். இவன் குரலைக் கேட்டதே அவளுக்கு ஆச்சரியமாயிருந்ததும் தவிர சந்தேகமும் உதித்தது. அவள் சற்று நிதானித்து விட்டு 'அம்மா! எங்கள் யஜமானி ஒருவரையும் பார்க்கும் வழக்கம் கிடையாது. ஏதாவது சமாசாரம் உண்டானால் சொல்லுங்கள். நான் போய்ச் சொல்லி பதில் கேட்டு வந்து தெரிவிக்கிறேன்' என்றாள். அவ்வார்த்தையைக் கேட்ட கருணாகரன் வேறு யாராவது வந்து விடுவதற்குள் தன் எண்ணம் முழுவதையும் தெரிவித்து விடுவது நலமென நினைத்து, அவளிடம் ரகசியமாய்த் தான் தனபதியின் மேல் இச்சை கொண்டு வந்ததையும், தான் உண்மையில் ஸ்திரீயல்ல, புருஷனே என்பதையும், இங்கு வரும் பொருட்டே இவ்வேஷம் தரித்ததாயும் (மனதில் பயந்துடனேயே) தெரிவித்தான். அவ்வார்த்தையைக் கேட்ட விஜயா மிகுந்த கோபமும் ஆச்சரியமுங் கொண்டவளாய் தனபதியிடம் ஓடோடியும் வந்து, யாரோ ஒரு ஸ்திரீ வந்திருப்பதையும் அவளைப் பார்த்த உடனேயே தனக்கு சந்தேகம் உதித்ததையும் கடைசியில் தன் சந்தேகம் உண்மையாயிருந்ததையும் அவனே தான் புருஷனென்று ஒப்புக்கொண்டதையும் அதுவும் போதாதென்று தனபதியை நாடிவந்த விபரத்தையும் மிக பரபரப்புடன் தெரிவித்தாள். இவ்வார்த்தை முழுவதையும் கேட்ட தனபதிக்கு ஒருபுறம் மகத்தான கோபமும் ஒருபுறம் அவன் தன்னை அடையவேண்டி வெட்கத்தையும் விட்டு வந்ததுடன் ஸ்திரீ வேஷத்துடனும் வந்ததினால் ஒருபுறம் சிறிப்பும் அவன் என்ன பிரயாசைப்பட்டாலும் தன்னைக் கண்ணுற் கூடப்பார்க்கப் போவதில்லை ஆகையால் இவ்வளவுதூரம் தனக்கு வரும் அபாயத்தையும் கவனிக்காது வந்ததினால் அவன் மேல் சற்று இரக்கமும் ஏககாலத்தில் ஜனித்தன. பிறகு விஜயாளைப் பார்த்து "விஜயா! இதற்கு என்ன செய்யலாம்? இவனைச் சிறையிலடைத்து வைத்து அரசன் வந்தபிறகு தெரிவித்து விடலாமா அல்லது இவனுக்குத் தக்க புத்தி கற்பித்து இவனை வந்த வழியே வெருட்டிவிடலாமா?" என்று கேட்டாள். அதற்கு அவள் "தாங்கள் முன் சொன்னதைவிடப் பின் சொன்ன யோசனையே சிறந்தது. ஏனெனில் ஆண்காக்கைகள்கூட தங்கள் அந்தப்புரத்திற்கு வரப் பயப்படுமென்பது உலகப் பிரசித்தம். அப்படியிருக்க இவன் எப்படியோ ரூபத்தை மாற்றி வந்துவிட்டான். அதனால் எல்லோரும், பார்த்தீர்களா? எவ்வளவோ பந்தோபஸ்தாயிருந்தும் இவன் மெள்ள அந்தப்புரத்திற்குப் போய் விட்டான் என்று சொல்லுவார்கள். அதற்கு நாம் இடந் தரலாகாது. வந்தது போனது தெரியாமல் அனுப்பிவிட வேண்டும்" என்றாள்.

கருணாகரன் வந்தவேளை கூடியவரையில் நல்லதாகவே இருந்ததினால் விஜயா சொன்னது சரி என்று அவள் மனதில் பட்டது மேலும் எப்படியும் தான் ஸ்திரீஜாதி. வந்தவனோ புருஷன். ஆகையால் அவன் பிறகு என்ன வேண்

டுமோ நடக்கட்டும். இப்பொழுது பலவந்தப் படுத்துவோம் என்று நினைத்தாலும் நினைக் கலாம். ஆகையால் அவனை எதிர்ப்பது சரி யல்ல, ஏதாவது தந்திரம் செய்து அவனே இவ் விடத்தை விட்டுப் போகும்படி செய்ய வேண்டு மென்று யோசித்து விஜயாளைக் கூப்பிட்டு "விஜயா! நீ போய் வந்தவருக்குத் தக்க ஆச னம் போட்டு உட்காரவை" என்றாள். அவளும் தனபதி கெட்டிக்காரி. என்ன சூழ்ச்சி செய்யப் போகிறாளோ என்று நினைத்து பரபரப்பாய் ஓர் சோபா கொண்டுவந்து போட்டு அதில் உட் காரும்படி கருணாகானிடம் சொன்னாள்.

அவன் எச்சமயம் தன்னை யார் சிறையி லடைக்கக் கூப்பிடுவார்களோ அல்லது வேறு தண்டனைகளுக்கு உள்ளாக்குவதற்கு அழைக்க வருவார்களோ என்று நினைத்திருந்தவனாதலால் 'இவ்வாசனத்தில் உட்காருங்கள்' என்ற வார்த்தை காதில் விழுந்ததும் (தன் மனதில்) 'என்ன! நான் கனவு காண்கிறேனா என்ன?' என்று தனக்குள் முணுமுணுத்துக் கொண்டே உட்கார்ந்தான். உட்கார்ந்து சற்று நிதானித் ததும் இது கனவல்ல உண்மையே என்று விளங்கிற்று. அப்பொழுது அவன் தன் இஷ்ட தெய்வமாகிய மயூரநாதனை மனமார வணங்கி னன். 'மனமே அதைரியப்படாதே. இன்னும் சற்றுப் பொறு' என்று தேறுதல் சொன்னான். உடனே விஜயா தனபதியிடம் போய் 'தாங் கள் சொல்லியபடியே செய்து வந்தேன்' என் றாள். பிறகு அவள் 'விஜயா! நீ சீக்கிரம் நல்ல பாலாக மூன்று சேர் கொண்டு வந்து ஏலக் காய், சீனக்கற்கண்டு, பச்சகற்பூரம், குங்குமப் பூ முதலிய வாசனைகள் சேர்த்து நன்றாகக் காய்ச்சி தங்கம், வெள்ளி, பித்தளை இம் மூன்று தினுசுள்ள மூன்று பேலாக்களில் தனித்தனி ஒவ்வொன்றில் ஒவ்வொரு சேர் நிரப்பி அவன் முன் ஓர் மேஜை போட்டு அதில் வைத்து அவனைச் சாப்பிடச் சொல். அவன் கெட்டிக்காரனாக இருந்தால் அதின் உண்மையை உணர்ந்து தானே வீட்டிற்குச் சென்று விடுவான். இல்லாவிடில் அவன் அதை சாப்பிட்ட பிறகு என்ன சொல்லுகிறானென் பதை என்னிடம் வந்து தெரிவி" என்றாள். விஜ யாளும் தனபதி சொல்லியபடியே யாவும் சித் தம் செய்து கருணாகானிடம் பாலைச் சாப்பிடும் படி சொன்னாள். அப்பொழுது அவன் நிலைமை எப்படியிருந்த தென்று நினைக்கிறீர்கள்? தான் பூலோகத்தில் இருப்பதாகவே எண்ண வில்லை. தேவலோகத்தில் இருப்பதாகத் தான் உத்தேசம். அப்படியே பிரமித்துக் கண்களை மூடியவண்ணம் பின்வருமாறு தானே யோசித் தான். 'இவ்வளவு சுலபமாக அவள் நம் இஷ் டத்திற்கு வருவாளென்று நினைக்கவேயில்லை. இதுவும் நம்முடைய அதிர்ஷ்டம் தான். அதிக ஆழமாகிய சமுத்திரத்தின் ஆழத்தை ஒரு வாறு கண்டு பிடித்தாலும் பிடிக்கலாம். ஸ்திரீ களின் மனதிலிருப்பதை ஒருவராலும் கண்டு கொள்ள முடியாதென்பது இப்பொழுது நிதரி சனமாயிற்று.' ஆலகாலவிஷத்தையும் நம்பலாம். ஆற்றையும் பெருங் காற்றையும் நம்பலாம். என்ற பாட்டை ஞாபகப்படுத்திக் கொண்டான். பிறகு சற்று நிதானத்துடன் கண்களைத் திறந்து பார்த்தான். விஜயா தன் னைப் பால் சாப்பிடும்படி சொன்னது ஞாபகத் திற்கு வந்தது. உடனே அப்பாத்திரங்களி லுள்ள பாலை ஒவ்வொன்றாய்ச் சாப்பிட்டான். பாத்திரம் வித்யாசமாக இருந்ததே தவிர பாலெல்லாம் ஒரே ருசியாகத்தான் இருந்தது.

இதென்ன ஆச்சரியம்? எதற்காக இப்படி வைக்கவேண்டும்? என்று நினைத்தான். பிறகு சட்டென்று 'இதையெல்லாம் நாம் யோசிப் பானேன்? எப்படியாவது நாம் வந்த காரியம் ஆனால் போதும்' என்று நினைத்து தனபதி வரு

வாளென்று எதிர்பார்த்துப் பத்து நிமிஷம் பேசாமலிருந்தான். சுமார் அரைமணி ஆயிற்று. அவள் வருகிறவழியைக் காணேம். உடனே விஜபாளைப் பார்த்து 'ஏன் இன்னும் தாமதம்? உன் யஜமானியை வரச்சொல்' என்ருன். உடனே அவள் ஓடிப்போய் தனபதியிடம் அவன் சொன்னதைத் தெரிவித்தாள். அதற்கு அவள் இது தெரிந்து கொள்ளாதவன் என்னை உத்தேசித்து ஏன் இவ்வளவு பிரயாசைப்பட்டு வரவேண்டும்? என்று ஒரு கடிதம் எழுதி 'அவனிடம் இதைக் கொண்டு போய்க் கொடு' என்ருள். கருணுகரன் தான் சொன்னவுடனே விஜபா சென்று விட்டதால் தன் யஜமானியைத் தான் அழைத்து வரப் போயிருக்கிருளென்று நினைத்துத்தான் அவள் வந்தபிறகு அவளிடம் எப்படிப் பேசுவது? எவ்விதமாய் நடந்து கொள்வது? என்ற எண்ணத்துடன் அவள் வரவை அதிக ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தான். ஆனல் அவள் வருவதற்குப் பதிலாக ஓர் கடிதந் தான் வந்தது. அவன் அளவற்ற ஆவலுடனும் அதிக வியப்புடனும் அக்கடிதத்தைப் பிரித்துப் பார்க்க அதில் பின் வரும் விஷயங்கள் தெளிவாயெழுதப்பட்டிருந்தன :—

'தாங்கள் அன்னிய ஸ்திரீகளைக் கண்டால் தாயார், சகோதரி முதலியவர்களைப் போல நினைப்பவரென்றும் அதிக யோக்கியமானவரென்றும் நான் கேள்விப்பட்டது இப்பொழுது தாங்கள் நடந்து கொள்வதிலிருந்து உண்மையல்லவென்று தெரிகிறது. எல்லாம் தெரிந்த நீங்கள் இப்படி முட்டாள்களைப் போல் நடந்துகொள்வது ரொம்பவும் வெட்கக்கேடான காரியம். இப்பொழுது என்னுடைய நாதன் இல்லாதிருக்கும் சமயம் பார்த்து நீங்கள் என்னை உத்தேசித்து வந்ததுபோல் வேறு புருஷர்கள் உங்கள் மனைவியைத் தேடிப் போனல் அப்பொழுது அவள் நிலைமை எப்படியிருக்கும்? எப்பொழுதும் தன்னைப்போல் பிறரும் என்று எல்லா விஷயத்திலும் நினைக்க வேண்டும். நீங்கள் புத்திசாலித்தனம் உள்ளவராதலால் பால் சாப்பிட்டவுடனேயே அதன் உண்மையை அறிந்து எழுந்துபோய் விடுவீர்களென்று நினைத்திருந்தேன். அப்படியில்லாததினல் உங்களுக்கு அதின் விபரம் தெரியாமலோ அல்லது தெரிந்து இன்னும் என்ன நடக்கிறதென்று பரீட்சை பார்ப்பதற்கோ என்னை வரும்படி சொல்லியனுப்பினீர்கள் போலும். நீங்கள் இன்னும் அதிக நேரம் இங்கு தாமதிக்காது சீக்கிரம் தங்கள் இருப்பிடம் செல்வதற்காக அதின் உண்மையையும் சொல்லி விடுகிறேன். பாத்திரங்கள் எப்படிப் பார்ப்பதற்கு வெவ்வேறு மாதிரியாக இருக்கின்றனவோ அது மாதிரி ஸ்திரீகளும் பார்வைக்குப் பல தினுசுகளாகச் சிலர் சிகப்பாகவும் சிலர் கருப்பாகவும் சிலர் லட்சணமாகவும் சிலர் அவலட்சணமாகவும் இருக்கிருர்கள். ஆனல் எப்படி அப்பாத்திரங்களிலுள்ள பால் எல்லாம் ஒரே ருசியாக இருக்கிறதோ அதுபோல் ஸ்திரீகள் என்ருல் எல்லாம் ஒரே மாதிரிதான். ஆகையால் தாங்கள் இதை அறியாது தங்கள் மனைவியை வீட்டில் தனியாக விட்டு என்னை நாடி வந்தது அதிக வருத்தத்தைக் கொடுக்கிறது. அதனல் என் நாதன் வருமுன் சீக்கிரம் தங்கள் இல்லம் சென்று விடுங்கள்' என்று எழுதியிருந்தது.

இதை வாசிக்கவே இவன் ஒருபுறம் விசனமும், ஒருபுறம் வருத்தமும், ஒருபுறம் வெட்கமும் அடைந்தான். 'தாங்கள் இல்லாத சமயம் தங்கள் மனைவியைத் தேடி யாராவது சென்ருல்' என்ற வார்த்தையை வாசித்ததும் அப்பொழுதே கோபம் பொங்கியெழுந்தது. உண்மையாகவே யாரோ தன் மனைவியிடம் போய் விட்டது போல் நினைத்து உடனே புறப்பட எழுந்தான். ஆயினும் அப்பால் பாத்திரங்களின் உண்மையை அறிந்துகொண்டு புறப்

படுவோமென்று மற்ற விஷயத்தையும் படிக்க அவன் எழுதியிருந்தது அவ்வளவும் உண்மையே என்று தெரிந்தது. உடனே எழுந்து போய் விட்டான். போகும் அவசரத்தில் தன் பேரெழுதிய கைக்குட்டையை மறந்து அவ் விடத்தில் போட்டு விட்டு திருடனுக்குத் தேள் கொட்டியது போல் வந்தது போனது தெரியாமல் வீட்டிற்குப் போய்விட்டான்.

கருணாகரன் தவறிப் போட்டு விட்டுப் போன கைக்குட்டை ஒருவர் கண்ணிலும் படவில்லை. விஜயா அவன் கடிதம் பார்த்ததும் போய்விட்ட சமாசாரத்தை தனபதிக்குத் தெரிவித்தாள். அவளும் அவன் இந்த மட்டோடு போய்ச் சேர்ந்தானே என்று இருந்தாள்.

III

வேட்டைக்குப் போன சூரசேனன் திரும்பி வந்தான். உடனே வழக்கம் போல் தனபதியின் அந்தப்புரத்திற்குப் போனான். ஒருவருக்கும் தென்படாமலிருந்த கைக்குட்டையானது தனபதியின் அதிர்ஷ்ட ஹீனத்தினால் சூரசேனன் கண்ணுக்குப் புலப்பட்டது. அவன் அதை எடுத்துப் பார்க்க அதில் கருணாகரனென்ற பெயர் அழகிய பூவேலையால் நெய்யப் பட்டிருந்தது. அச்சம்பவம் அவனுக்கு அளவற்ற வியப்பையும் திகைப்பையும் உண்டாக்கிற்று. இந்தக் கைக்குட்டை எப்படி இங்கு வந்திருக்குமென்று பல விதத்தில் அவன் யோசித்தும் ஒன்றும் விளங்கவில்லை. தன் மனைவி கற்புடையவள் என்று அவனுக்குத் தெரிந்திருந்தும் அச்சமயம் அவள் மேல் சந்தேகம் வந்து விட்டது. ஆனால் அவன் சில மூடர்களைப் போல் அதனைத் துன்புறுத்துவதற்கோ வேறு இம்சைகளுக்கு உட்படுத்தவோ நினைக்கவில்லை. தான் இனி அவளைப் பார்ப்பதாவது அவளுடன் பேசுவதாவது கூடாது என்று தீர்மானித்துக் கொண்டு வந்தவழியே திரும்பிப் போய்விட்டான். இவ்விஷயத்தை ஒருவரிடமும் தெரிவிக்கவில்லை. தன் மனதிலேயே வைத்திருந்தான்.

தனபதியும் விஷயம் ஒன்றும் அறியாதவளாதலால் வேட்டைக்குப்போன தன் கணவர் திரும்பி வந்தும் தன் இருப்பிடத்திற்கு வாராத காரணம் என்னவென்று தெரியாமல் கவலையுடன் இருந்தாள். இன்றுவருவார், நாளைவருவாரென்று ஒரு வாரம் எதிர்பார்த்தும் வரவில்லை. பதிவிரதைகளுக்கு தம் கணவர் தம்மைப் பார்க்காமலும் தம்முடன் பேசாமலும் இருப்பதே பெரிய தண்டனையல்லவா! அவள் கடைசியில் தன் தோழியிடத்தில் அரசனை வரும்படி சொல்லி அனுப்பினாள். அதற்கும் வரவில்லை. அதினால் அவள் தன் பிதாவுக்குத் தன் கணவர் தன் இருப்பிடத்திற்கு வாராத விஷயத்தைச் சுருக்கமாகக் கடித மூலமாகத் தெரியப்படுத்தினாள்.

தனபதியின் கடிதத்தைப் பார்த்த அவள் தகப்பனார் உடனே புறப்பட்டுவந்தார். வந்ததும் தன் மருமகனாகிய சூரசேனனைக் கண்டார். அவனிடம் யாதொரு மாறுதலும் காணவில்லை. அவனும் அவரிடம் ஒன்றும் சொல்லவில்லை. பிறகு தன் பெண் இருப்பிடத்திற்குச் சென்றார். தகப்பனைக் கண்ட பெண்ணுக்கு அதிக விசனம் உண்டாகி ஆரம்பமுதல் நடந்த விஷயங்கள் ஒன்றையும் ஒளியாமற் சொன்னாள். அதற்குப் பிதா சற்று யோசித்து இருக்கட்டும் என்று சொல்லிக் கருணாகரன் தனக்கு அதிக சிநேகிதனாதலால் அவனை அழைத்துக்கொண்டு வந்தார். மாமனார் வந்திருப்பதால் சூரசேனன் அன்று ஒரு பெரிய விருந்து செய்தான். ராத்திரி எல்லோரும் சாப்பிட்டாயிற்று. மாமனார் மருமகனைப் பார்த்து 'இன்று நல்ல நிலவாக இருக்கிறபடியால் நாம்சற்று வேடிக்கையாகச் சொக்கட்டான் ஆடுவோம்' என்றார். அதற்கு மருமகன் 'அப்படியே ஆகட்டும்' என்று சொல்லி 'தங்களு

டன் இருப்பவர் யார்'? என்று கேட்டான். 'அவர் என் சிநேகிதர். அவரும் ஆட்டத்திற்கு வருவார்' என்றார். உடனே மூன்று பெயர்களும் மேன்மாடி நிலவில் சொக்கட்டான் ஆடினார்கள்.

முதலில் மாமனார் தன் காயை எடுத்து 'மல்லிகைக் கொடி ஒன்றை வெகு அருமையாகச் சில காலம் வளர்த்து அதை என்னைக் காட்டிலும் அதிஜாக்கிரதையாகப் பாதுகாப்பவரிடம் ஒப்புவித்தேன். அவரும் சில காலம் பிரியமுடன் வளர்த்து வந்தார். ஆனால் சுமார் ஒருவாரமாக ஏதோ காரணத்தால் அந்தச் செடியைப் பார்க்காமல் இருந்தபடியால் அது தற்சமயம் வாடி வதங்கி இருக்கிறது' என்று வைத்தார். அதற்கு அடுத்தாப் போல் கருணாகரன் இந்த அர்த்தத்தைத் தெரிந்துகொண்டு 'நான் பூங்காவனத்தில் நுழைந்ததுண்டு. ஆனால் பூச்செடியைப் பார்க்கவுமில்லை, அதன் வாசனையைக் கண்டதுமில்லை' என்று தன் காயை எடுத்துவைத்தான். கடைசியில் சூரசேனன் முறைவந்தது. அவன் அதிக கெட்டிக்காரனாதலால் இவர்கள் இருவர்களின் வார்த்தையின் அர்த்தத்தையும் தெரிந்து கொண்டு 'அழகிய பெயரால் சித்தரித்த பொருளைக் கண்டதுண்டு. ஆனால் தோஷத்தைக் கண்டதில்லை' என்று தன் காயை எடுத்து வைத்தான். கடைசியில் தனபதியின் பேரில் யாதொரு தவறுதலும் இல்லை என்ற விஷயம் சூரசேனனுக்குத் தெரிந்தது. பிறகு கருணாகரன் விடை பெற்றுக்கொண்டு தன் இருப்பிடத்திற்குச் சென்றான். தனபதியின் தந்தையும் நடந்தவற்றைத் தன் மகளிடம் விவரமாய் உரைத்து, இனிமேல் சௌகரியமாக இருப்பாளென்று சொல்லித் தன் ராஜ்யத்திற்குச் சென்றார். சூரசேனனும் தனபதியின் அந்தப்புரத்திற்குவந்து அவளைக் கேட்க அவள் எல்லாவற்றையும் விஸ்தரித்துச் சொல்லவும் அரசன் கேட்டு அவள் யுக்திக்கு மெச்சி தான் அவள் மேல் சந்தேகங்கொண்டு ஏழு நாள் வரையில் அவள் மனம் நோகச்செய்ததற்கு வருந்திப் பிறகு இருவரும் அதிக சந்தோஷத்துடன் நெடுநாள் வாழ்ந்து வந்தார்கள்.

சுபம்.

---

# சிந்தாமணி அபிமானிகளுக்கு.

## அவசர அறிவிப்பு.

சகோதர, சகோதரிகளே!

பத்திராதிபர் வெளியிட்டுள்ள கடித எண்-3-ஐ தயவு செய்து கவனித்து ஒவ்வொருவரும் இரண்டு வருஷ சந்தாவைத் தாமதியாது உடனே அனுப்பக் கோருகிறேன். ஆவணியில் ஆறும் ஆண்டு பிறப்பதால் பழைய பாக்கிக்கு அல்லது அடுத்தவருஷத்திற்கு (அவரவர்கள் சந்தா கணக்குப்படி) நீங்களனுப்பும் சந்தாவை வரவுவைத்து ரசீது அனுப்பப்படும். எதிர்பாராது எங்கள் குடும்பத்தில் நேர்ந்த துக்க சம்பவத்தால் நேர்ந்த தாமதத்திற்கு மன்னிக்கும்படி சந்தாதார்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

மானேஜர்.

# சிந்தாமணி பற்றிச் சில சந்தாதாரின் அபிப்பிராயங்கள்.

12—1—29.

சமீபத்தில் வெளியான "சிந்தாமணி" இதழில் தாங்கள் எழுதியுள்ள "தேச சேவை" என்ற அருமையான கதை வெகு அழகாகவும் உன்னதமான குணங்களை ஊட்டுவதாகவும் இருக்கின்றது. அதைப் பலரும் வியந்து போற்றுகிறார்கள். அத்தகைய அழகிய சிறு தேசியக் கதைகளை யடிக்கடி எழுதிவரக் கோருகிறேன்.

இங்ஙனம்,

S. A. S.

2

2—3—29.

பிரியமுள்ளதாயும் சகோதரியுமான எங்கள் அம்மாளுக்கு எழுதும் செய்தி என்னவென்றால்—

நீங்கள் எங்கள் யாவரையும் சந்தித்துப் போனதிலிருந்து எங்களுக்குத் தவறாமல் சிந்தாமணி வந்து கொண்டிருக்கின்றது. அதனால் நான் அனேக நன்மைகளை யடைந்திருக்கிறேன். நான் குடும்பத்தில் மிகக்கஷ்டப்பட்டவள். என்னைப் போன்ற சகோதரிகளுக்கு "சிந்தாமணி" நல்ல மருந்தும் ஆறுதலளிக்கும் நற்றோழியாகவு மிருக்கின்றது. மனம் நொந்த நேரம் சிந்தாமணியிலிருந்து எத்தனையோ நன்மைகளைப் பெறுகிறேன். சிந்தாமணியைப் படிக்கத் தொடங்கிய பின் அனேகமாக என்னிடத்தில் குடிகொண்டிருந்த கோபம் மட்டாயிருக்கிறது. "சிந்தாமணி" ஆண் பெண் இருதாரத்தார்க்கும் அதிகப் பிரயோஜன முள்ளதாகும்.

நோயாலும் குடும்ப கஷ்டத்தாலும் பலவாறு கஷ்டப்பட்ட எனது ஜீவியத்தில் சிந்தாமணியைப் படிக்கக் கிடைத்தது எனக்கதிக பாக்கியந்தான். எனக்குத் தஞ்சமாக விளங்கும் கடவுளை இதுபற்றியும் துதிக்கிறேன். சிந்தாமணியை ஒருமுறை படிப்பதோடு விட்டு விடாது பன்முறை படிப்பதால் அளவற்ற விஷயங்களைக் கண்டறிந்து ஆனந்தமடைகிறேன். சிறந்த ஞானோபதேசியான பத்திரிகையை வெளியிடக் கூடிய பேறுதியையும் ஆற்றலையும் கொடுத்துள்ள தெய்வம் தங்களை ஆசீர்வதித்து தேக சுகத்தையும் நீடிய ஆயுளையும் கொடுப்பாராக. என் போன்ற பெண் சமூகத்தின் கஷ்டந்தணிப்பதற்காகவே கடவுள் தங்களை பிறப்பித்திருக்கிறாரென நினைக்கிறேன். தங்களைப் பெற்ற மாதாவும் பிதாவும் எவ்வளவு தவம் செய்து தங்களைப் பெற்றார்களோ என்று எனக்குள் நினைத்து நினைத்து மகிழ்கிறேன்.

தங்கள் முகச்சாயல் எப்போதும் என் கண்முன் நிற்கின்றது. வலுவில் இவ்வேழையின் வீடு தேடிவந்து 'சிந்தாமணி'யின் நோக்கத்தை எடுத்துக் கூறி எங்களுடன் அன்புடன் உரையாடிச் சென்றதை நினைக்க நினைக்க என்னுள்ளமுருகுகின்றது. "சிந்தாமணி"யைக் கையிலெடுத்தால் சாந்தமும் அன்பும் பொங்கித் ததும்பும் தங்கள் திருமுகச்சாயல் எனது அகம் புறம் இருகண்களுக்குமுன் நிற்கின்றது. என் மக்களும் சிந்தாமணி அம்மாளை நினைக்காத நேரமில்லை. தங்கள் உருவப்பட மொன்றை வேண்டுகிறேன். தயவு செய்து அனுப்பவும். எனது தாழ்மையான நமஸ்காரத்துடன் எனது க்ஷேமத்தைத் தெரிவிக்கிறேன். திலகவதி, ஒற்றுமையின் வெற்றி, தேசசேவை இம் மூன்று புத்தகங்களையும் மறு தபாலில் வி. பி. யில் அனுப்புங்கள்.

இங்ஙனம்

..........................

# CHINTHAMANI.

**A HIGH CLASS TAMIL MONTHLY.**

*(Devoted mainly to the cause of Indian Women.)*

EDITOR SISTER V. BALAMMAL.

Vol. V.] July 1929. [No. 12.


श्री शारदायै नमः ।



श्रीरामचन्द्रपरब्रह्मणे नमः

# சிந்தாமணி

## சுபோத ராம சரிதம்.

COMPOSED AND ANNOTATED BY
SISTER V. BALAMMAL
DAUGHTER OF
*Late Dr. A. R. VAIDYANATHA SASTRIAR, M.A., M.B. & C.M.*
(*All Rights reserved by the Authoress*)

सुबोधरामचरिते

॥ युद्धकांडः ॥

सुवेलाधिष्ठितं रामं निशम्य शुकवाक्यतः ।
निशाम्य च दशग्रीवो नैच्छद्दातुं विदेहजाम् ॥ ८ ॥

दशग्रीवः ராவணன் शुकवाक्यतः சுகன்மூலமாக रामं ஸ்ரீராமரை सुवेलाधिष्ठितं சுவேல பர்வதத்தில் இருப்பதாக निशम्य கேழ்விப்பட்டு निशाम्य च நேரில் கண்டும் विदेहजां சீதையை दातुं அளிப்பதற்கு नैच्छत् விரும்பவில்லை ॥ ८ ॥

रघुवीरस्ततस्सैन्यैरसङ्ख्येयैस्समन्वितः ।
रुरोध नगरीं शत्रोः रक्षस्सैन्यसमावृताम् ॥ ९ ॥

ततः பிறகு रघुवीरः ஸ்ரீராமர் असंख्येयैः கணக்கற்ற सैन्यैः சைனியங்களுடன் समन्वितः கூடினவராக रक्षस्सैन्यसमावृतां ராக்ஷசசைனியங்களுடன் கூடிய शत्रोः பகைவனின் (ராவணனின்) पुरीं நகரை रुरोध தகைந்தார் ॥ ९ ॥

ततो वानरवीराणां बलेन सह रक्षसाम् ।
अभवद्दारुणं युद्धमनिमेषसुखावहम् ॥ १० ॥

ततः பிறகு वानरवीराणां வானர வீரர்களுக்கு रक्षसां ராக்ஷசர்களுடைய बलेन सह சைனியத்துடன் अनिमेषसुखावहं தேவதைகளுக்கு நன்மை விளைவிப்பதான युद्धं போர் दारुणं கடுமையாக अभवत् உண்டாயிற்று ॥ १० ॥

लक्ष्मणेन च रामेण सुग्रीवप्रमुखैरपि ।
राक्षसा निहतास्सर्वे रणे रावणसैनिकाः ॥ ११ ॥

रामेण ஸ்ரீராமராலும் लक्ष्मणेन च லக்ஷ்மணராலும் सुग्रीवप्रमुखैः अपि சுக்கிரீவப்பிரமுகர்களாலும் रावणसैनिकाः ராவணன் சேனையிலுள்ள सर्वे राक्षसाः சமஸ்த ராக்ஷசர்களும் रणे போரில் निहताः கொல்லப்பட்டனர் ॥ ११ ॥

(*To be continued*)

ஸ்ரீராமஜயம்.

# சிந்தாமணி

தமிழ் நாட்டுப் பெண்மணிகளின் முன்னேற்றத்தை முக்கிய
மாகக்கொண்டு வெளிவரும் ஓர் உயர்தர மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை.

பத்திராதிபர் சகோதரி வி. பாலம்மாள்.

மலர் 5.] சுக்ல—ஆடி. [இதழ் 12.

## கிராம வாழ்க்கையும் பெண்மக்களும்.

(முற்றொடர்ச்சி)

(பத்திராதிபர்.)

கிராமங்களில் வசிக்கும் பெண்கள் இளமைப் பருவந்தொட்டு குடும்ப நிர்வாகம் முழுவதையும் வகிக்க நேருவதில்லை. ஆசார அனுஷ்டானங்களுக்கு வசதியாயிருப்பதாலும் ஐகமத்யத்தாலும் ஒவ்வொரு குடும்பங்களிலும் பெரியோர்கள் சேர்ந்து வசித்தார்கள். வீட்டின் பெருங் காரியங்களும் பொறுப்பான விஷயங்களும் வயது சென்ற பெண் மக்களால் செய்யப் பட்டன. பெரியோர் இடுங் கட்டளைகளை எளிதில் செய்து முடிப்பதே சிறுமியர் கடமையாயிருந்தது. கிராமங்களில் முன் கட்டைக் காட்டிலும் பின் கட்டு விஸ்தாரமாகவும் வெளிச் சங்காற்றுலாவக்கூடியதுமா யமைந்திருக்கும். இவ்விடத்திலேயே இளம் பெண்கள் உட்கார்ந்தும் சோழி சொக்கட்டானுடியும் பகற் பொழுதில் ஒழிந்த நேரத்தை உற்சாகமாகக் கழித்து வந்தார்கள். வீட்டில் சுயமாகக் கறந்து காய்ச்சப்படும் சுத்தமான பாலும் நெய்யும் தயிரும் வெண்ணெயும் கிடைத்தன. குடும்பம் அவிபக்தமாயும் பெரியோர்களைக் கொண்டுமிருந்ததால் வாலிபப் பெண்கள் அடிக்கடி பிறந்தகம் சென்று ஒய்வெடுத்து சாவகாசத்தில் புருஷன் வீடு திரும்பினார்கள். இதுவே பெண்களுக்குரிய ஓய்வு (லீவ்) ஆகும். கர்ப்பம் அல்லது சுகவீனம் ஏற்படின் இந்த லீவு (பர்லோவாக) நீண்ட நாட்கள் கிடைக்கும். பள்ளியிலிருந்தும் உத்தியோகத்திலிருந்தும் லீவு பெற்ற ஆண்கள் சில நாள் கவலையன்றி உற்சாகமாகக் காலங்கழிப்பது போலப் பெண்களும் பிறந்தகம் வருங்கால் தன் வீட்டுக் கவலை சிறிதுமின்றி

ஒய்வு பெறுவது வழக்கம். கிராமவாழ்க்கையில் பெண்கள் அடிக்கடி பிறந்தகம் வரவேண்டு மெனப் பெற்றோர்களும் சகோதரர்களும் விரும்புவார்கள். இச்சமயம் "புருஷன் வீட்டில் நீ எப்படி இருந்தாய்? உன் மாமி எப்படி? புருஷன் உனக்கு டாய்லெட் சோப்பும் பௌடரும் வாங்கித் தருகிறனா? உனக்கு ஸ்திரீதனமாக அளிக்கப்பட்ட பாத்திரங்கள் மெருகழியாமலிருக்கின்றனவா?" இத்தகைய அற்பக் கேள்விகள் பற்பல கேட்டு இளம்பெண்ணின் மனதை அனுவசியமான கவலைக்கும் ஆத்திரத்திற்கும் உட்படுத்துவதில்லை. கிராமங்களில் சில பெண்களுக்குப் புருஷன் வீட்டில் துன்பமிருக்கக் கூடும். அதாவது பெரும்பாலும் வீட்டு வேலையின் கடுமை, அடிக்கடி பிறந்தகம் வரமுடியாமை இவைகளேயன்றி மண்ணெண்ணெய் ஊற்றிக் கொளுத்துவது, கட்டிவைத்து அறையில் பூட்டுவது போன்ற கொடுந்துன்பம் கிடையாது. கிராமத்தில் அடுத்தடுத்து வீடுகளும் பந்துக்களுமாக விருந்ததால் அநீதியான காரியங்கள் தலைகாட்டவுமிடமில்லை.

புருஷன் வீடு செல்லும் பெண்கள் "நீ புத்திசாலியாக வாயடக்கத்துடன் இரு. மாமி நாத்திகளுடன் எதிர்த்து வாயாடாதே. கணவன் மனம் போல் நட. ஆற்றங்கரையில் வீண் வம்பு பேசாதே. பிறந்த வீட்டின் சுகத்தைப் பற்றி அங்கு பெருமையாகப் பேசாதே. நல்ல மருமகள் என்ற பெயர் வாங்கு. நாங்கள் இவ்விதமே இருந்தோம்" என்று பொதுவாகப் புத்திமதி சொல்லியனுப்பப்பட்டுவந்தார்கள். நோயுற்றகாலத்தில் கண்ட வைத்தியர்களும் கண்ட மருந்துகளுமில்லாது நெடுநாள் அனுபவமுள்ள நாட்டு வைத்தியரின் எளிய சிகிச்சையால் எளிதில் நோய்கள் தீர்க்கப்பட்டன.

விலையுயர்ந்த ஆடையாபரணங்களை யணிவதும் கைகால்களை அசைக்காது ஓரிடத்தில் விழுந்து கிடப்பதுமே பெண் பிறவிக்குப் பெரும் பயனெனக் கிராம வாசிகள் கருதினதில்லை. பெண்களின் பெருமை குடும்ப நிர்வாகத்தாலும் சிக்கனவாழ்க்கையாலுமே நிதானிக்கப்பட்டன. விதவைப் பெண்களும் பெருமதிப்புடன் காப்பாற்றப்பட்டார்கள். சம்பந்தி வீட்டாருள்ளும் கணவன் மனைவிக்குள்ளுமாக வீண் மனஸ்தாபங்கள் ஆங்கு ஏற்பட்டதில்லை. ஆண்மகன் இஷ்டம்போல் கடன் வாங்கி அல்லது வீண் செலவுசெய்து குடும்பத்தை நடுத்தெருவில் விட நேர்ந்ததில்லை. ஸ்தாவர சொத்துக்களை அடமானம் வைத்து தக்க காரணங் காட்டினாலன்றி கடன் வாங்குதல் முடியாது. இத்தகைய இன்னும் பலவாறான காரணங்களால் பெண்களுக்குக்கிராமவாழ்க்கையில் நல்ல நிலைமை ஏற்பட இடமிருந்தது. உலகத்தை முழுதும் பிடித்தாட்டும் நவநாகரிகப் பேய் வர வர கிராமங்களுக்கும் செல்ல வாரம்பித்துளது. இக்குட்டிச்சாத்தான் அதிவேகமாயோடும் ரயில்பாதை மூலமாக ஒவ்வொரு இடங்களிலும் தலைகாட்டி வருகின்றான். பொதுவாகப் பெண்களுக்கு சுகவாழ்க்கையை யளிக்கும் இம்முறைகள் மீண்டும் கையாளப்படல் அவசியம். தற்காலம் நகரவாழ்க்கையில் பெண்களின் நிலைமைபற்றி யடுத்த முறை யாராய்வாம்.

---

# உலக விநோதங்கள்.

ஸ்ரீமான் S. A. ஸ்ரீனிவாஸ சர்மா,
Auditor, A. G.'s Office, Madras.

(576-ம் பக்கத் தொடர்ச்சி.)

11. உலகத்திலுள்ள எல்லாவிதத் தோல்களிலும் மிகவும் விலையுயர்ந்தது "பயானோ தோல்" என்பதாம். ஜெர்மனியில் துருங்கியா என்னும் மாகாணத்தில் தான் அதைப் பதனிடத் தெரியுமாம். இத்தோலை பியானோ, ஹார்மோனியம், ஆர்கன் முதலிய வாத்தியப் பெட்டிகளின் காற்றுண்டாக்கும் பொத்தான் குழாய்களுக்கு மேலே போடுவதைத் தவிர வேறு உபயோகம் கிடையாதாம். இதற்கு வேண்டிய தோல் எல்லாம் அமெரிக்காவில் வடக்கு திசையிலுள்ள பெரிய ஏரிக்கரைகளில் சஞ்சரிக்கும் ஒருவித சாம்பல் மானுடைய தோலாம். டெட்ராயிட் என்னும் இடத்திலிருந்து ஏற்றுமதியாகிறதாம்.

12. தலைவலிக்கும், ஜலதோஷத்திற்கும் மார்ச் சளிக்கும் ஜனங்கள் உபயோகப்படுத்திவரும் யூகாலிப்டஸ் எண்ணெயை உண்டாக்கும் மரம் உலகத்திலுள்ள மற்ற எந்த மரத்தையும் விட உயரமாய் வளருமாம்.

13 பார்படாஸ் தீவுகளிலும் ஸூடான் தேசத்திலும் ஒரு ஊதும் மரம் வளர்கின்றதாம். அம்மரத்தின் இலைகளிலுள்ள சிறிய துவாரங்கள் வழியாய் காற்று அடிக்கும் பொழுது ஊதல் சப்தம் கேட்கிறதாம். அலை காற்று வீசும் பொழுது பெரிய பஞ்சாலை ஊதுகுழாய் மாதிரி உரக்கச் சப்தம் கேட்குமாம். இப்பொழுது இம்மரத்தை பாரிஸ் நகரத்தில் கொண்டுவந்து வளர்க்க ஏற்பாடு நடந்து கொண்டிருக்கிறது.

14. தகப்பனுக்கு இருபது வயதிற்குள் பிள்ளை பிறந்தால் அது இளைத்திருக்குமாம். 25 வயதிலிருந்து 40 வயதிற்குள் பிறக்கும் சந்ததிகள் தீர்க்கவயதுடையவைகளாம், நாற்பது வயதிற்குப் பிறகு பிறக்கும் பிள்ளைகள் இளைத்திருக்குமாம். தாயாருக்கு 35 வயதிற்குள் பிறக்கும் குழந்தைகள் புஷ்டியாயிருக்குமாம். தகப்பனுக்கு ஜாஸ்தி வயதும் தாயாருக்குக் குறைந்த வயதுமாயிருந்தால் அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் நல்ல தேஜசும் வலிவுமுடையவைகளாம். பெற்றோர்களுக்கு ஏறக்குறைய சமவயதாயிருந்தால் அவ்வளவு புஷ்டியில்லையாம்.

15. புதிதாக ஒரு நூதன கண்ணாடி கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. அக்கண்ணாடித் தகட்டின் பேரில் எட்டடி உயரத்திலிருந்து ஒரு எஃகு குண்டைப் போட்டாலும் உடையாதாம். அவ்வளவு கெட்டியாம்.

16. ஆக்ரா நகரத்தில் மொகலாய சக்கரவர்த்தி ஷாஜஹான் என்பவர் தன் பிரிய மனைவி நூர் மஹால் என்பவளின் ஞாபகார்த்தமாக டாஜ் மஹால் என்னும் கோரியைக் கட்டினார். அது முழுவதும் வெள்ளைச் சலவைக்கல்லால் கட்டப்பட்டிருக்கிறது. அதைக்கட்டி முடிப்பதற்கு இருபதினாயிரம் மனிதர்கள் விடாமல் இருபது வருஷம் வேலை செய்யவேண்டியிருந்ததாம்.

17. ஐர்லாந்து தேசத்தில் ஸ்திரீகளின் மயிரினால் பின்னப்பட்ட ஒரு அரைஞாணைக் குழந்தைகளுக்கு ஹானி வாராமலிருப்பதற்காகக் கட்டுவார்கள். இஸ்தோனியா தேசத்தில் பெருங்காயத்துண்டுகளை குழந்தைகள் கழுத்தில் கட்டுவது வழக்கம். வேல்ஸ் தேசத்திலும் இங்க்லாந்தின் சிலபாகங்களிலும் ஒருபேனுக்கத்தியைக் குழந்தைகளின் தொட்டிலில் கட்டிவிடுவார்கள், ஸ்பெயின் தேசத்தில் பைன் என்ற

மரத்தின் கிளையினால் குழந்தை முகத்தைத் தொடுவார்கள். ஸ்வீடன் தேசத்தில் குழந்தையின் தொட்டிலில் கிறிஸ்தவ வேதப்புஸ்தகத்தை வைப்பார்கள். துருக்கிதேசத்தில் குழந்தை கழுத்து நிறையத் தாயத்துப் போடுவார்கள். நம்மவர்களில் அவ்வழக்கத்தோடு கூடப் பெரியோர்கள் பெயரைச் சொல்லியும் கோவிலிலிருந்து கொண்டு வந்ததுமான வீபூதியை குழந்தைகள் நெற்றியிலிடுவார்கள்.

18. தூசியைப் பூதக்கண்ணாடியில் வைத்துப் பார்த்தால் அதில் நூல்கள், ஆகாரங்கள், மனிதத் தோல், பூச்சிகளின் பாகங்கள், கரி, மயிர்த் துண்டுகள், மரத்துண்டுகள், வைக்கோல் துண்டுகள், கொட்டில் எரு இவைகள் இருக்கின்றனவாம் ஒரு கனவடிவுள்ள காற்றைபரீட்சைசெய்து பார்த்தால் கிராமாந்தரங்களில் இரண்டாயிரம் அணுக்கள் தூசியும் பட்டண வாசங்களில் மூன்றுலட்சமுமிருக்குமாம். இதற்காகத் தான் கிராமாந்தர வசிப்பு சுகாதாரத்திற்கு நல்லது என்று சொல்வது.

19. வீட்டு ஈக்கள் ஒரு தடவைக்கு சேர்ந்ததுபோல் அறுபது முட்டைகள் இடுகின்றனவாம்.

20. லண்டன் பட்டணத்தில் மாத்திரம் நாலு லட்சத்து எழுபது டெலிபோன்கள் இருக்கின்றனவாம்.

21. புகைவண்டித் தொடர் நீராவி இயந்திரங்கள் ஒவ்வொன்றிற்கும் வருஷத்திற்கு நூறு காலன் நிறையுள்ள கொழுப்பெண்ணெய் செலவாகிறதாம்.

22. ஸ்திரீகளைப் பற்றிச் சில அபிப்பிராயங்கள் :—ஒருவன் உத்தியோக அலுவலாயாவது அல்லது ஷார்ப்பிரயாணம் செய்து விட்டாவது திரும்பி வீட்டிற்கு வரும்பொழுது கடுகடுப்பில்லாமல் தன் மனைவி மனதார மந்தகாசத்துடன் வரவேற்கிறதே உலகத்திலுள்ள எல்லாவற்றிற்கும் அதிக இன்பம் என்று வில்லிஸ் என்னும் நூலாசிரியர் கூறுகிறார். ஒரு அழகிய மாது நகைக்கு சமானமென்றும் ஒரு நற்குண மாது பொக்கிஷத்திற்கு சமான மென்றும் ஷேக்ஸ்பியர் என்னும் கவி கூறுகிறார். எல்லாப் பெரிய விஷயங்களையும் ஆராய்ந்து பார்த்தால் அவைகளுக்கு மூலகாரணம் ஸ்திரீயே என்கிறார் லாமார்டைன். ஷேக்ஸ்பியர் நாடகங்களில் கதாநாயகன் கிடையாது. கதாநாயகிகளே ஜாஸ்தி என்கிறார் ரஸ்கின். 'நான் இப்பொழுது பெருவாழ்வு வாழ்கிறதெல்லாம் என் தாயினாலேயே' என்றார் ஜான்க்வின்ஸி ஆடம்ஸ்.

23. இங்கிலாந்தில் கி. பி. 1439-ம் வருஷம் ப்ளேக் என்னும் கொள்ளைநோய் ஜாஸ்தியாய்ப் பரவியிருந்தபொழுது ஜனங்கள் ஒருவரையொருவர் முத்தமிடக் கூடாது என்று சட்டங்கள் செய்தார்களாம். இப்பொழுதும் முத்தமிடுவதைப்பற்றி அநேக தேசங்களில் சட்டமிருக்கிறதாம். பவேரியா தேசத்து இருப்புப் பாதை ஸ்டேஷன்களில் ஒருவரை யொருவர் முத்தமிடக்கூடாதாம். ந்யூயார்க் மத்திய ரயில்வே கம்பெனியின் ஸ்டேஷன்களில் முத்தமிடுவதற்கென்று பிரத்தியேகமாய் உயர இடங்கள் கட்டியிருக்கிறார்களாம். அவ்விடங்களைத் தவிர வேறு இடங்களில் முத்தம் இடக்கூடாதாம்.

24. சூரிய கிரணங்கள் சூரியனிலிருந்து கிளம்பி நம் பூமியில் வந்து தாக்க எட்டரை நிமிஷங்களாகிறதாம்.

25. இராஜாளி என்னும் பட்சி மணிக்கு 100 மைல்களுக்கு மேல் வேகத்துடன் பறக்குமாம். சாதாரணக் காக்கை மணிக்கு 25-மைல்கள் விகிதம் பறக்குமாம். மாடப்புறா ஒரு மணிக்கு எழுபது மைல் விகிதம் சேர்ந்தது போல் அநேக மணி நேரம் பறக்குமாம். காட்டு வாத்துக்கள் 90-மைல் விகிதம் பறக்குமாம்.

26. சாதாரணமாக "காட்லிவர் ஆயில்" என்று வெளி வந்திருக்கிற எண்ணெய் மருந்து பெரும்பான்மையும் "காட்" என்னும் மீனின் குடலிலிருந்து இறக்கப்படாமல் ஷார்க் என்னும் சுறுமீனிலிருந்து இறக்கப்படுகிறதாம். இச்சுறுமீன் இன்னும் அநேக வழிகளில் உபயோகப்படுகிறதாம். இம்மீனின் சிறகிலிருந்து ஒருவிதக் குழம்பு செய்து சாப்பிடுவது சீனர்களுக்கு மிகப்பிரியமாம். இந்த மீனின் கண்களை நன்றாய் வேகவைத்தால் அதன் மேல் தோல் உரிந்துபோய் ஒருவிதப் பிரகாசத்துடன் மின்னும். இதைச் சிறு நகைகளிலும் கொண்டையூசி, ப்ரூச் இவைகளிலும் வைரங்களுக்குப் பதிலாய் உபயோகப்படுத்துகிறார்களாம். இம்மீனின் மெல்லிய மேல் தோலை ஒரு ரகசியவழியாய் உரித்துலர்த்தினால் கெட்டியாகச் செய்து மர சாமான்கள், எஃகு சாமான்கள் இவைகளை வழவழப்பாய்ச் செய்ய உப்புக்காகிதத்திற்குப் பதிலாய் உபயோகப்படுத்துகிறார்களாம். இம்மீனின் உள் தோலை நன்றாய் பதனிட்டுச் செருப்பு செய்தால் இச்செருப்புகள் வழவழப்பாயும் ஜலம் பட்டால் ஈரம் ஏறுமலும் இருக்குமாம்.

27. காலிபோர்னியா தேசத்து மோடார் பஸ்களுக்கெல்லாம் எட்டு சக்கரங்களாம். முன்னால் இணைத்திருக்கும் நாலு சக்கரங்களால் வண்டியை திருப்பவும் பின் நாலு சக்கரங்களில் வண்டியை நிறுத்தும் பிரேக்கும் அமைத்திருக்கின்றனவாம். சாதாரண நாலு சக்கரவண்டியில் போகும்பொழுது உண்டாகும் ஆயாசமும் உடம்பு குலுங்கலும் இவ்வண்டியில் கிடையாதாம். மணிக்கு நாற்பத்தெட்டு மைல் விகிதம் ஒரு வளைவில் செல்லும்பொழுது கூட வண்டி அசைகிறது தெரியாதாம்.

28. ஜெர்மனி தேசத்தில் பர்லின் பட்டணத்தில் ஒரு பெரிய ஹோடலிலுள்ள எழுநூறு அறைகளிலும் கம்பியில்லாத தந்தி மூலமாய்ப் பேசும் இயந்திரங்களை ஸ்தாபித்திருக்கிறார்களாம்.

29. சாதாரணமாய் குதிரைகளுக்கு 35 வயதாம். கழுதைக்கு 30, மாடுகளுக்கு 20, எருமைக்கு 25, ஆடுகளுக்கு 25, பன்றிக்கு 20, பூனைக்கும் நாய்க்கும் 12, முயலுக்கு 7, கோழிக்கு 14, ஒட்டகத்திற்கு 60, யானைக்கு 150 வயதாம்.

30. நாரை பட்சி ஜாதியில் யாகாமிக் என்று ஒரு வகை யுண்டாம். தென் அமெரிகா கண்டத்தில் வெனிஸ்வேலா என்னும் தேசத்தில் ஆட்டு மந்தைகளை மேய்ப்பதற்காக இந்தப் பட்சியை வளர்க்கிறார்களாம். இக்கொக்குகள் காலையில் ஆட்டு மந்தையை மேய்ச்சல் நிலங்களுக்கு ஓட்டிக்கொண்டுபோய் பொழுது போனபிறகு மந்தையில் ஒரு ஆடு கூட விடாமல் பட்டிக்குக் கொண்டுவந்து சேர்த்து விடுமாம்.

31. லட்சம் வீடுகளுக்குமேல் டெலிபோன் வைத்துள்ள பட்டணங்கள் இவ்வுலகில் முப்பத்தி ஒன்றும். அவைகளில் ஆங்கிலேய ராஜ்யங்களிலுள்ளது லண்டன் பட்டணம் ஒன்று தானும்.

32. சாதாரணமாக ஈரம் காக்கிற பூமியில் ஊர்ந்து செல்லும் நத்தைக்குப் பதினாலாயிரம் பற்களாம். பல்வரிசை நூற்று முப்பதாம்.

33. புதிதாக ஒரு கிராமபோன் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. சேர்ந்தாப் போல் முப்பத்தாறு பாட்டுத்தகடுகளை வாசிக்கிறதாம். நமக்குப் பிரியமான 36 தகடுகளையும் பொறுக்கி வைத்துச் சாவி ஒருதரம் கொடுத்துவிட்டால், தகடுகளை முறையாக இருபக்கம் வாசித்தும், ஒவ்வொரு பக்கத்திற்கும் வெவ்வேறு ஊசியை மாற்றிக் கொண்டும், ஒவ்வொரு தகட்டையும் பாட்டு முடிந்தவுடன் ஒரு பிரஷ்ஷினால் துடைத்தும் ஜாக்கிரதையாக யதாஸ்தானத்தில் வைக்கிறதாம்.

34. லண்டன் நகரத்தில் ஆங்கிலக்கண்காட்சி சாலையில் இரண்டு அபூர்வ புஸ்தகங்கள் உளதாம். ஒன்று பூகோள படங்களுள்ள புஸ்தகமாம். சுமார் பத்தடி உயர அகலமுள்ளதாம்.

அப்புஸ்தகத்தை நிறுத்திவைத்தால் அதற்குப் பின்னால் சாதாரணமாக இரு மனிதர்கள் மறைந்து இருக்கலாமாம். இரண்டாவது சார்லஸ் என்னும் ஆங்கிலேய மன்னர் ஆம்ஸ்டர்டாம் என்னும் பட்டணத்திற்குச் சென்ற பொழுது அந்த ஊர் வியாபாரச் சங்கத்தாரால் காணிக்கையாகக் கொடுக்கப்பட்டதாம். மற்றொரு புஸ்தகம் பொம்மைகளுடன் கூடியதும் நூற்றிருபது பக்கங்கள் கொண்டதுமான ஓமார் கய்யம் என்பவரால் இயற்றப்பட்ட ரூபயட் என்றதாம். இந்தப்புஸ்தகத்தை ஒரு அரையணுவிற்குப் பின்னால் ஒளித்து வைக்கலாமாம். காலேயரைக்கால் அங்குல நீளமும் அரைக்கால் அங்குல அகலமும் கொண்டதாம்.

35. இங்கிலாந்தில் ஆயிரத்தைந்நூறுக்கு மேல் ஸ்திரீ மாஜிஸ்ட்ரேட்டுகள் இருக்கிறார்களாம்.

36. வெள்ளிக்கிழமையைப் பற்றிச் சில குறிப்புகள்:—ஐரோப்பா கண்டத்தில் அநேக தேசங்களில் வெள்ளிக்கிழமையன்று பிரயாணம் போவதில்லையாம். நமது தமிழ்நாட்டில் வெள்ளிக்கிழமையன்று மேற்கு திக்கை நோக்கிப் பிரயாணம் செய்வதில்லையாம். இங்கிலாந்தில் வெள்ளியன்று இடப்பட்ட கோழிமுட்டைகளை உட்கொண்டால் வயிற்றுவலி நீங்குமென்று ஒரு நம்பிக்கையாம். வட ஜெர்மனியில் வெள்ளிக்கிழமையன்று ஸ்நானம் செய்யாமல் யாராவது வெளிக்கிளம்பினால் அவர்களைப் பேய் பிசாசுகள் பிடிக்கும் என்று நம்பிக்கையாம். நமது தமிழ் நாட்டில் வெள்ளியன்று சுமங்கலி ஸ்திரீகள் எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்தால் அப்படி ஸ்நானம் செய்கிற ஒவ்வொரு தினத்திற்கும் ஒரு அணுப்பிரமாணம் மாங்கலியம் வளரும் என்று நம்பிக்கையாம். மேல் நாட்டாரில் வெள்ளிக்கிழமை கலியாணம் செய்ய மாட்டார்களாம் ஆனல் நமது இந்தியா மாதிரி ஜெர்மனி, ஸ்காட்லாண்ட் இந்த தேசங்களில் வெள்ளியன்று கலியாணம் கொண்டாடுவார்களாம். போர்துகல் தேசத்து மாலுமிகள் வெள்ளியன்று தங்கள் கப்பல்களை யெல்லாம் துக்ககரமான குறிகளால் அலங்கரித்து ஜூடாஸ் என்பவரின் படத்தைக் கப்பல்களில் தொங்க விடுவார்களாம். இங்கிலாந்திலாவது ஹாலந்திலாவது வெள்ளியன்று வீட்டிற்குப் புதிய வேலைக்காரர்களை நியமிக்கிறதில்லையாம். இங்கிலாந்தில் டெவன்ஷைர் என்னும் ஜில்லாவில் பிறந்த குழந்தைகளுக்கு முதல் முதல் வெள்ளியன்று தாய்ப்பால் உண்ணக் கொடுப்பார்களாம்.

37. காப்பிச் செடி:—உலகில் உள்ள எல்லா தேசங்களைவிட ப்ரேசில் தேசத்தில் காப்பியை ஜாஸ்தியாக உபயோகப்படுத்துகிறார்கள். காப்பியைப் பயிராக்குவதற்கு இருபது லக்ஷம் ஏக்கர்களை உபயோகப்படுத்துகிறார்கள். அத்தேசத்தில் வருஷத்திற்கு சாாசரி ஒவ்வொரு மனிதனும் பதினாலு பவுண்டு காப்பியை உபயோகப்படுத்துகிறான். பெல்ஜியம், ஹாலந்து முதலிய தேசங்களில் பதினேறு பவுண்டும், அமெரிகா ஐக்கிய மாகாணங்களில் எழுபது பவுண்டும், ஜெர்மனியில் ஐம்பது பவுண்டும் இங்கிலாந்தில் அரைப்பவுண்டும் உபயோகப்பட்டு வருகிறது. இங்கிலாத்தில் காப்பியைவிட ஐந்து பங்கு அதிகமாகத் தேயிலையை உபயோகப்படுத்துகிறார்கள். கி. பி. 1690-ம் வருஷம் வரையில் அரேபியா தேசந்தான் உலகத்திற்குக் காப்பி சப்ளை செய்துகொண்டிருந்தது. ஆனல் இப்பொழுது உஷ்ண பூமியெங்கும் பயிரிடுகிறார்கள். ப்ரேசில் தேசத்திற்கு அடுத்தாப் போல் ஜாவாதீவிலும் இலங்கையிலும் தான் ஜாஸ்தியாகப் பயிராகிறது. ஆகமொத்தம் நூறு கோடிபவுண்டிற்கு மேல் உலகத்தில் வருஷத்திற்குச் செலவாகிறதாம்.

38. ஒரு சதாரண இருப்புப்பாதை எஞ்சினுடைய வலிவு தொள்ளாயிரம் குதிரைகளின் வலிவுக்குச் சமானமாம்.

(தொடரும்.)

---

# "எனது பதரி நாராயண யாத்திரை"

(ஸ்ரீமான் M. R. ஆச்சார்.)

(670-ம் பக்கத் தொடர்ச்சி.)

வேதகாலம் முதல் புராண கால முடிவு வரையிலும் கார்வாலைச் சேர்ந்த மலைப்பிராந்தியங்களிலும் நதிதீரங்களிலும் ஆரியர்கள் கூட்டங் கூட்டமாய் வந்து குவிந்திருந்தார்கள்.

பிராம்மண காலத்தில் வேதம், புராணம் முதலிய தத்துவ சாஸ்திரங்களுக்கு கார்வால் நாடு முக்கிய ஸ்தானமாயிருந்தது. பிரம்மசரியம், கிரகஸ்தம், வானப்பிரஸ்தம், சன்னியாசம் என்ற நான்குவித ஆச்சிரமங்கள் ஏற்பட்ட விடம் இதுதான்.

கார்வாலைச் சேர்ந்த மான என்ற கிராமத்திற்கருகிலோடும் விஷ்ணு கங்காவின் உபநதியான சரஸ்வதியென்ற நதிதீரத்திலிருக்கும் வியாசகுகையில் தான் பாதாராயணர் என்றழைக்கப்படும் ஸ்ரீ வியாசபகவானல் புராணங்களும் ஸ்ரீ மகாபாரதமும் ஆக்கப்பட்டன. ஸ்ரீ வியாசபகவானிடம் பத்தாயிரம் எண் கொண்ட சிஷ்யர்கள் இருந்ததாகச் சொல்லப் படுகிறது.

ஷட்தரிசனங்களை யுண்டாக்கின ஆறு மகான்களுள் ஐவர் இக்கார்வாலில் தான் அவரவர்களுடைய சாஸ்திரங்களை இயற்றினர்கள். அவைகளின் விவரம் அடியில் வருமாறு:—

ஹரித்துவாரத்தில் கபிலரும், ஸ்ரீ பதரிநாத் க்ஷேத்திரத்தில் காச்யபரும், மந்தாகினி நதி தீரத்தில் கௌதமரும், சரஸ்வதி நதி தீரத்தில் ஸ்ரீ வியாசரும், ஜயமுனியும் அவரவர்களுடைய தரிசனங்கள் அல்லது சாஸ்திரங்களை இயற்றினர்கள். வேதங்கள், புராணங்கள், சூத்திரங்கள், மகாபாரதம் முதலிய தத்துவ நூல்களை திவ்ய ஸ்வரங்களுடன் மனப்பாடஞ் செய்வதற்காகப் பல சிஷ்யர்கள் மேற் கண்ட தத்துவ நூல்களை இயற்றிய மகான்களிடம் வந்து குவிந்தார்கள். மேற்கண்ட சிஷ்யர்கள் மேற்கண்ட தத்துவசாஸ்திரங்களைக் கசடறக் கற்று மனப்பாடஞ் செய்து கொள்வதற்குப் பல நூற்றுண்டுகளாயின. அதன் பிறகு அன்னவர்கள் தங்கள் குரு மூலியமாய்க் கற்றுணர்ந்த சாஸ்திர நூல்களைப் பாமரர்களுக்கு உபதேசித்து வந்தார்கள்.

இந்த கார்வாலைச் சேர்ந்த துரோணகிரியென்ற பர்வதத்தில் வான சாஸ்திர நிபுணரான உலகப் பிரசித்தி பெற்ற, கார்க்காச்சாரியார் நெடுநாள் தவம் புரிந்து வந்தார் இவரிடம் பல சிஷ்யர்கள் வந்து சேர்ந்து மேற்கண்ட வான சாஸ்திரத்தைக் கற்றுணர்ந்து அதை உலகத்தில் பரவச் செய்தார்கள். இன்றைய தினமும் மேற்கண்ட வான சாஸ்திர சம்பந்தமான பல அரிய பெரிய நூல்கள் கார்வாலில் சேகரிக்கப் பட்டிருக்கிறதைக் காணலாம்.

பௌத்த மதம் க்ஷீணதசையடைந்த பிறகு கேதாரநாத்—பத்ரிநாத் என்ற புண்ய க்ஷேத்திரங்களில் கி. பி 800-வது ஆண்டில் ஆதி ஸ்ரீ சங்கரபகவத் பாதாச்சாரியரால் கேதார நாத், பதரி நாத் என்ற சிறந்த விக்கிரகங்கள் ஸ்தாபிக்கப்பட்டன. அன்று முதல் நாளது வரையிலும் மேற்கண்ட இரண்டு க்ஷேத்திரங்கள் உலகிலுள்ள வேறு பல க்ஷேத்திரங்களைக் காட்டிலும் நிரம்பப் பரிசுத்தமான க்ஷேத்திரங்களென்று மதிக்கப்பட்டு வருகின்றன. மேற்கண்ட இரண்டு க்ஷேத்திரங்களும் கேதார கண்ட மென்றும் பதரிகாச்சிரம மென்றும் வழங்கப்பட்டு வருகின்றன.

வேதகாலத்திற்குப் பிறகு சரஸ்வதி நதிதீரத்தில் வந்து கூடின பல பிரம்ம ரிஷிகளாலும் ராஜரிஷிகளாலும் இந்தப் பிராந்தியம் பிரம்மரிஷி தேசமென்று அழைக்கப்பட்டு வந்தது.

புராணகாலங்களில் இப்பிரதேசம் பாஞ்சால தேசம் என்ற பெயரால் விளங்கி வந்தது. இப் பாஞ்சால தேசம் நெடுந் தூரம் பரவியிருந்த போதிலும் கார்வால் நாடு பாஞ்சால தேசத்தின் பெரும் பாகமாக விளங்கிவந்தது.

குருக்ஷேத்திர யுத்தத்திற்குப் பிறகு ஆரியர் கள் தோன்றினார்கள். அதனால் புராணகாலத் தின் முடிவில் அதாவது பௌத்தருடைய காலத்தில் கார்வாலின் வடபாகத்தில் கிராதர் களும் நாங்கனர்கள் என்ற ஜாதியாரும் குடி யேறினார்கள். மேற்கண்ட ஜாதியார்கள் யமுனை நதி முதல் குமாயூன் என்ற ஸ்தலத்தின் வழியா கப் பாயும் சாந்நா அல்லது காளி நதிவரை யிலும் பரவியிருந்த பிராந்தியத்தில் குடியேறின படியால் அப்பிராந்தியம் நாங்கினுப் என்ற பெயருடன் விளங்கிவந்தது என்று தாலமி என் பவர் எழுதி இருக்கிறார்.

ஸ்ரீ சங்காராச்சாரியர் பதரிகாச்சிரமத்திற்கும் கேதாரத்திற்கும் விஜயஞ் செய்திருந்ததாக ஸ்ரீ சங்கர விஜயத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறதே யன்றி, கார்வால் என்ற பெயர் அதில் எங்கும் குறிக்கப்படவில்லை. ஆகையால் கார்வால் என்ற நாமம் கி. பி. 1200-ம் ஆண்டிற்குப் பிறகு வந் திருக்கவேண்டு மென்று ஊகிக்க வேண்டி யிருக்கிறது.

கார்வாலில் வழங்கி வரும் சங்கல்பத்தில் கார் வால் என்பதற்குப் பதிலாக கார்பால் தேசம் என்ற பெயர் உச்சரிக்கப்பட்டு வருகிறது.

கனகபால் என்ற வம்சத்தைச் சேர்ந்த அர சர்களில் ராஜா அஜெப்பால் என்ற பெய ருடன் விளங்கி வந்த மன்னர் ஒருவர் கார்வா லில் ஸ்திரமான ராஜ்யத்தை ஸ்தாபித்தார். அம்மன்னரால் மேற்கண்ட தேசத்திற்குக் கார் பால் தேசம் என்ற பெயர் இடப்பட்டிருக்க வேண்டும்.

கி. பி. 1300-வது வருஷம் மேற்கண்ட ராஜ் யத்தையாண்ட மன்னர்களின் பெயரின் முடி வில் பால் என்ற சப்தம் வழங்கிவந்ததாகக் காணப்படுகிறது.

கந்தபுராணம், கேதார கண்டத்தில் இப் புண்ணிய க்ஷேத்திரத்தின் எல்லை குறிப்பிடப் பட்டிருக்கிறதைக் காண்க :—

வடக்கே—ஹிமாலயம். தெற்கே—கங்கத் துவாரம், ஹரித்துவாரம், அல்லது ஹரத்துவார மும் திரேய் தேசமும், கிழக்கே காளி நதி. மேற்கே—யமுனாநதி. பிரிட்டிஷ் கார்வாலின் எல்லை அடியில் வருமாறு :—

வடக்கே; ஹிமாலயப் பனிவரை. கிழக்கே திரிசூல மலைச்சிகரமும், ராம் கங்காவும், மேற் கே, அளக நந்தாவின் உபநதியான மந்தாகினி யும், கேதாரநாத்திலிருந்து ருத்திரப் பிர யாகைவரையிலும் பரவியிருக்கும். அதனுடைய மேற்குக் கரையோரமாகச் செல்லும் உன்னத மான மலைச் சிகரங்களும் அங்கிருந்து அளக நந்தா கரையோரமாக தேவப்பிரயாகையும் அங்கிருந்து ஹரித்துவாரத்தின் கீழ் 20-மைல் தூரம் வரையிலும் சகல கிளைகளுடன் பாயும் கங்காநதியும், இவ்விடத்தில், காக்வால்ராஜ் ஜியமும், பிரிட்டிஷ் ஜில்லாக்களான டேராடூன் ஷஹரான்பூர் ஆகிய இவ்விரண்டும் பிரிகின்றன. தெற்கே திரேய்.

பிரிட்டிஷ் கார்வால் 100-மைல் நீளமும், 60 -மைல் அகலமும் 5500-சதுரமைல் விஸ்தீரண முமுள்ள இதில் 5-ல் 1 பாகம், பனிவரைத் தொடர்ச்சிக்குச் சேர்ந்தது

பிரிட்டிஷ் கார்வாலைச் சேர்ந்த மலைக்குன்று கள் 7000-அடி உயரமுள்ளவை. அதன் பிறகு மலைக்குன்றுகள் 12000-அடி முதல் 18000-அடிவரையிலும் உன்னதமாயிருக் கின்றன.

"ஹிமயமலையின் கம்பீரமான தோற்றத்தைப் போல், ஐரோப்பா கண்டத்திலாவது அல்லது உலகத்தின் வேறெந்த பாகத்திலாவது நான்

கண்டதில்லை யென்றும், 200-மைல் தூரம் வரையிலும் தொடர்ச்சியாகப் பரவியிருக்கும் குன்றுகளின் சிகரங்கள் 22000-அடிமுதல் 25000-அடிவரையிலும் உயர்ந்திருக்கின்றன வென்றும், ஐரோப்பா கண்டத்திலுள்ள பெர்னிஸ் ஆல்ப்ஸ் மலைத் தொடர்கள் முழுவதையும் சேர்த்தால், இந்த ஹிமயமலைப் பள்ளத்தாக்குகளில் ஒரு பள்ளத்தாக்குக்குச் சமமாகா தென்றும், ஸர்ஜான் ஸ்டாக்கி எழுதி இருக்கிறார்.

ஒரே சதுர வடிவமுள்ள, கந்தமாதன பர்வதத்தின் கம்பீரமான காட்சியைப் போல், ஹிமாசலத்தின் மற்றெந்த சிகரங்களின் காட்சியையும், ஒப்பிடுவதற்கில்லை.

இந்த கார்வால் ஹிமாலயப் பிரதேசத்தில்—பனியால் மூடப்பட்டு ஆகாயத்தையளாவி நிற்கும் ஹிமயமலையின் கம்பீரமான தோற்றத்தையும், அவைகளின் சிகரங்களிலிருந்து பாயும், கண்ணைக் கவரும்படியான புண்ணிய தீர்த்தங்களையும், மனதை இதரவழிகளில் செலுத்தாமல் யோகாப்பியாசத்தினால், பரமாத்மாவினிடமே செலுத்துவதற்கான, பல சாதனங்கள் இயற்கையாக மேற்கண்ட மலைப்பிராந்தியங்களில் ஏற்பட்டிருக்கும் அழகையும், நிர்மானுஷ்யமானதும், ஏகாந்தத்திற்கு அனுகூலமானவைகளுமான பல மலைக்குகைகள் ஏற்பட்டிருக்கிறதையும், அளகநந்தா கங்கை பாகீரதி முதலிய பரிசுத்தமான நதிகள் அதிக வேகத்துடனும், காதடைக்கும்படியான சப்தத்துடனும் ஊடுருவிப் பாய்ந்து வருவதையும், கேதாரம், பதிரிகாச்சிரமம் முதலிய க்ஷேத்திரங்கள் அமைந்திருப்பதையும், கந்தமாதனம் மேரு கைலாசம் முதலிய பர்வதங்கள் அமைந்திருக்கும் அழகையும் காணும் எவரும், ஆனந்தசாகரத்தில் மூழ்கி பிரமித்து, அவைகளை வர்ணிப்பதற்கு வாயெழாமல் கண்களிலிருந்து தாரை தாரையாய் ஆனந்தபாஷ்பங்களைப் பெருகவிட்டுக் கடவுளின் விசித்திர மகிமையை பக்தியுடன் மனதில் நினைத்து நினைத்து ஞானிகளாக விளங்கிப் பின்னர் யோகிகளின் கணத்திற் சேருவார்கள் என்பதற் கையமேயில்லை. யமுனோத்திரியிலிருந்து—பதரி நாராயணன் வரையிலும் பரவியிருக்கும் கார்வால் நாட்டுத் தீர்த்தங்கள் அனைத்தும் சமுத்திரமட்டத்திற்கு 10000-அடி உயரத்திலிருக்கின்றன. அதனால் 6-மாத காலம் அவ்விடங்களில் ஏற்பட்டிருக்கும் குளிர் அபரிமிதமாயிருக்கும். கோடைகாலம் என்று சொல்லும்படியான மற்ற 6-மாதங்களில், குளிரைத் தாங்குவதற்கு முக்கால் டஜன் கம்பளம் வேண்டும். இதுதான் அவ்விடங்களில் வேனிற் காலத்தின் இலட்சணம். இப்படிப்பட்ட புண்ணிய ஸ்தலங்களுக்கு தீர்த்தயாத்திரை செய்து வர புறப்பட்டுப் போகும் ஓர் இந்து சாது, அவன் ஆயுள் பரியந்தம் சேகரித்து வைத்திருக்கும், பணத்தைச் செலவு செய்யப் பின் வாங்குவானா? ஒரு பொழுதும் பின்வாங்கமாட்டான். தேகச்சிரமத்தையும் குளிரையும், கேவலம் த்ருணமாக நினைப்பான். மேற்கண்ட தீர்த்தங்களுக்கு வருஷா வருஷம் பத்தாயிரக்கணக்கான பக்தர்கள் யாத்திரை செய்து வருகிறார்கள். இதற்கு பக்தியே காரணம்.

## மூன்றாவது அத்தியாயம்.

யாத்திரை செய்வதற்கு பக்தியே காரணம் என்று இரண்டாவது அத்தியாயத்தின் முடிவில் கூறியிருக்கிறதை இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் விவரமாகச் சொல்லப் பிரியப்படுகிறேன் :—

### பக்தியின் பெருமை.

துவாபரயுகத்தில் ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா. மதுராபுரியில் ஜனித்து கோகுலம்—பிருந்தாவனத்தில் வளர்ந்து, பால்ய பருவத்திலேயே—

பூதனை—சகடாசுரன்—கஞ்சன் முதலிய அரக்கர்களை வதைத்துப் பின்னர்—ருக்மணி—சத்யபாமா, முதலிய பல கன்னிகாரத்தினங்களை மணந்து, பார்த்தனுக்குச் சாரதியாக இருந்து, குருக்ஷேத்திரயுத்தத்தை அர்ஜுனனைக் கொண்டு நடத்தி—துஷ்ட நிக்ரகம் சிஷ்டபரிபாலனஞ் செய்து—பார்த்தனுக்கு கீதோபதேசஞ் செய்து விட்டு கடைசிகாலத்தில் துவாரகாபுரியில் வசித்துவந்தார்—தான் வந்த காரியம் முடிந்ததென்று அறிந்து—மண்ணுலகை விட்டு, வைகுண்டத்திற்கேகும் சமயத்தில்—அவருடைய பக்தர்களுள் ஒருவரான உத்தவன் என்பவன் ஸ்வாமியைநோக்கி "ஹே'கிருஷ்ணு! நீர் வைகுண்டம் போய்விட்டால் எனக்கு கதி யாது? என்று கேட்க, அச்சமயம், ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லுகிறார்:—"ஹே! உத்தவா! நான் உபதேசிக்கும் பக்திமார்க்கத்தை அனுஷ்டித்துக்கொண்டு, எனக்கும் பிரியமான ஆச்சிரமமாகிய பதரிகாச்சிரமத்திற்குச் சென்று, அவ்விடத்திலோடும் அளகநந்தாவில் தினமும் நீராடி, பக்தியுடன் அவ்விடத்திலிருக்கும் பதரிநாராயணனை தியானஞ் செய்து கொண்டு வந்தால் நீ முக்தியடைவாய்" என்று சொல்லியிருக்கிறார். பதரிகாச்சிரமம், பதரிநாராயணன், அளகநந்தாநதி இம்மூன்றையும் வியக்தமாகக் கூறியிருக்கிறார். அதன்பின்னர், பக்தி செய்ய வேண்டிய முறைகளைஉபதேசித்திருக்கிறார். அம்முறைகள் அடியில் வருமாறு:—"உன் அந்தர்யாமியாக இருக்கும் பரமாத்மாவை எப்பொழுதும் தியானஞ்செய் அரிஷட்வர்க்கங்களை விலக்கு. மனதை—என்னிடத்தில் சதா—செலுத்து. என்னுடைய லீலைகளைப்படி. பிறர் படித்துச் சொல்லுவதைக் கேள். புண்ணிய நதிகளில் நீராடு. புண்ணிய தீர்த்தங்களை எப்பொழுதும் தரிசனஞ் செய்வதிலேயே உன் காலத்தைக் கழி. சாதுக்களாகிய—என்—பக்தர்கள் இருக்கும் இடத்திற்குச் செல். அவர்களை விட்டுப் பிரியாதே. துஷ்டர்களுடன் சேராதே.

"நான் உலகத்திற்காகச் செய்திருக்கும் நன்மைகளைச் சொல்லும் புராணக்கதைகளை எப்பொழுதும் வாசி. அவைகளைச் சிரவணஞ் செய். க்ஷேத்திரங்களில் எழுந்தருளியிருக்கும் என் விக்கிரகங்களுக்கு நடத்தப்படும் உற்சவங்களைக் கண்ணாரப் பார்த்துச் சந்தோஷப்படு. என்னை பஜனை செய்யும் பொழுது பலன்களை அபேட்சிக்காதே, அனித்ய சுகங்களை விரும்பாதே. நீ செய்யும் காரியங்கள் அனைத்தையும் பகவானுக்கு அர்ப்பணஞ் செய். நிஷ்காமியாக இரு. நான் செய்கிறேன்—செய்தேன் என்று சொல்லிக் கொள்ளாதே. முக்தியடைவதற்கு ஏற்பட்டிருக்கும் பலவழிகளில் பக்தி மார்க்கமே சுலபமானது. சுகதுக்கங்களைச் சமமாக நினை. பதரிகாச்சிரமத்திலிருக்கும் என்னுடைய ஜாகைக்குச் சென்று அங்கே வாசஞ் செய். அவ்விடத்திலோடும் கங்கா நதியில் ஸ்னானம் செய்வதினுல் உன்னுடைய பாபங்கள் பறந்து போம். இதுதான் பக்தி மார்க்கம். இதை நீ அனுஷ்டித்து வந்தால் முக்தி அடைவாய் என்று பதரியின் மகிமையையும், கங்காநதியின் தூய்மையையும் பற்றி ஸ்ரீ கிருஷ்ணனே, திருவாய் மலர்ந்திருக்கிறார்.

தவிரவும் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா கீதையில் "பர்வதங்களில் ஹிமயமலை நான்தான்" "நதிகளில் கங்கை நான்தான்" என்றும் சொல்லியிருக்கிறார். பரமாத்மாவே—ஹிமயமலையாகவும், கங்காநதியாகவும், ஸ்ரீ பதரிமுதலிய க்ஷேத்திரங்களாகவும் இருக்கிறதினுல் தான், கார்வால் ஹிமாலயம் அல்லது ஹிமயமலையின் மத்தியப் பிராந்தியம் இவ்வளவு பரிசுத்தமாயுளது.

(தொடரும்)

---

# தமிழ் நாட்டுப் பெண்மக்களும் தேசபக்தியும்.

(ஸ்ரீமான் மயிலை ரத்தினசபாபதி முதலியார்)

உலகம் என்பதின் உண்மைப்பொருளை உற்று நோக்குங்கால், ஆண்மக்களும், பெண்மக்களும் சேர்ந்ததொன்றாம். ஆண்மக்களின் உதவியின்றிப் பெண்மக்களும் பெண்மக்களின் உதவியின்றி ஆண்மக்களும், எவ்விதக்காரியங்களையும் நடத்த முடியாதென்பது உண்மை. ஆண்மக்கள் எத்துறையில் தலையிடுகிறார்களோ, அத்துறையில் பெண்மக்களும் தலையிடுவது இன்றியமையாதது.

பண்டை நூல்களை பார்க்குங் காலத்து தமிழ் நாட்டுப் பெண்மக்கள், வைத்தியம், சோதிடம் முதலிய எல்லாத்துறைகளிலும் வல்லவர்களாயிருந்திருந்தார்கள்.

ஔவை பிராட்டியார் அதிகமான் இறந்த காலத்து அவனைக்குறித்துப் பாடியபுற நானூற்றுச் செய்யுள் ஒன்றே. அவர் தங்கல்வியறிவையும், அரசியல் ஞானத்தையும் "உள்ளங்கை நெல்லிக்கனிபோல்" காட்டும். கண்ணகியென்னுங் கற்புக்கரசியும், வேறு சமயம் பற்றி நின்ற தங் கணவனைத் தம் முயற்சியால் தஞ்சமயத்தைத்தழுவுமாறு செய்வித்த மங்கையர்க்கரசியாரும் தமிழ் நாட்டின் புத்திரிகளே.

கற்புக்கடவுளர்களும், வீரத்தாய்மார்களும் அன்புக்காசிகளும் தோன்றிய தமிழ்நாட்டின் பெண்மக்களின் தற்கால நிலையை நினைக்க, நினைக்க, மயிர்சிலிர்க்கின்றது; கண்ணீர் பெருகுகின்றது, உள்ளம் உருகுகின்றது.

இக்காலத்தில் ஆண்மக்கள் செய்யும் அரிய காரியங்கள் யாவும், பெண்மக்களுக்கு தெரிய ஆற்றலின்றியும், பெண்மக்களின் உள்ளக்கிடக்கையை ஆண்மக்கள் அறியாமலும் இவர்களுக்குப்பிறக்கும் பிள்ளைகளோ பெற்றோர்களுக்கு விபரீதமாயும் நடந்து வருகின்றார்கள். இவர்களுக்கு மத்தியில் தேசம் திண்டாடுகின்றது.

ஐரோப்பியக் கல்வியும், நாகரிகமும், தமிழ் நாட்டில் தோன்றிய முதற்கொண்டு பெண்மக்களின் நிலை குன்றிவருவது பெரிதும் விசனிக்கக்கூடியதே.

தற்காலத் தமிழ் நாட்டுப் பெண்மக்களில் பெரும்பான்மையோரிடத்தில் அன்பில்லை, வீரமில்லை, தேசபக்தியில்லை, ஆன்ம விளக்கமில்லை. நாயகனுக்கும், நாயகிக்கும் ஒன்றிய காதல் எழுவதில்லை. தமிழ் நாட்டுப்பெண்மக்களின் சிறுமைக்குக்காரணம் மேல்நாட்டு நாகரிகமே யாகும். தமிழ் நாட்டில் தோன்றியுள்ள, நாஸ்திகத்தை, அநாகரிகத்தை, பொய்வாழ்க்கையை அறவே அழிக்க ஆண்மக்களும், பெண்மக்களும், பெருமுயற்சி செய்தல்வேண்டும். தமிழ் நாட்டில் ஆண்மக்களே பெரும்பாலும் தேசகாரியங்களில் தலையிட்டு செயற்கரிய காரியங்களைச் செய்து வருகின்றார்கள். பெண்மக்கள் எவ்வித உணர்ச்சியும் எழுச்சியுமின்றி உயிரற்ற உடல்களைத் தாங்கி, கேவலம் ஜடப்பொருள்களைப்போல் வாழ்ந்து வருகின்றார்கள். நம்முடைய நாட்டில் தோன்றியிருக்கும் பஞ்சமும் நோயும், சிசுக்களின் மரணமும், அச்சமும், அடிமை வாழ்வும், சிறுமையும் வறுமையும் அறவே ஒழியவேண்டுமாயின் ஆண்மக்களும் பெண்மக்களும் பாரத மாதாவின் அடித்தொண்டு புரிதல் வேண்டும்.

பெண்மக்கள் உள்ளத்தில் தேசபக்தி என்று ததும்புகின்றதோ, அன்றே, அப்பொழுதே அந்நாளே அடிமை வாழ்வு ஒழியும் நாள். நாயன்மார் சரிதங்களையும், ஆழ்வாராதிகள் சரிதங்களையும் சரிவர ஆராய்ச்சி செய்யின் பண்டைக்காலத்தில் கடவுள் பக்தியை இருவரும் ஒருமனப்பட்டு செய்து வந்தார்களென்பது வெள்ளிடைமலை. பண்டைப் புராணங்களையும்

இதிகாசங்களையும் ஆழ்ந்து சூழ்ந்து ஆராய்ச்சி செய்யில் ஆண்மக்களுக்கும் பெண்மக்களுக்கும் ஏற்பட்டிருந்த ஒற்றுமையை உணரலாம்.

இப்பொழுது இமயம் முதல் குமரிவரையில் சுய ஆட்சிக் கிளர்ச்சி மழைகாலத்து மேகம் போல் பரவி வருகின்றது. "அகிலாண்டகோடியீன்ற அன்னையே நின்னையும் கன்னியென மறைபேசும் ஆனந்த ரூப மயிலே" என்று தாயுமானவர் கூறியவாறு பண்டைநாளில் சக்தியை எங்கணும் போற்றி வந்தார்கள். இக்காலத்தில் கன்னி மேயோவைப்போன்ற மேல் நாட்டவர்களும், துர்ப்பாக்கியமான தமிழ் நாட்டில் பிறந்த சில ஆண்மக்களும், சத்தியவதி, சாவித்திரி, ஜானகி இவர்களை மனம் போனபடி இகழவும் ஏசவும் கிளம்பியிருக்கின்றார்கள். பெண்மக்களின் பேருதவியின்றி சுய ஆட்சி அடைவது அசாத்தியமாதலால், பெண்களை அன்புடன் நேசித்து, மரியாதை செய்து அவர்களை வழிபடவேண்டும்.

"நாடகத்தா லுன்னடியார்
போனடித்து நானடுவே
வீடகத்தே புகுந்திடுவான்
மிகப்பெரிதும் விரைகின்றே
னாடகச்சீர் மணிக்குன்றே
யிடையறா வன்புனக்கென்
னூடகத்தே நின்றுருகத்
தந்தருளெம் முடையானே."

என்று மாணிக்கவாசக சுவாமிகள் கூறியவண்ணம் 'இந்தியத்தாய்' 'பாரதமாதா' என்று எண்ணியவுடனே, கேட்டவுடனே உள்ளம் உருகவேண்டும், உடல் நடுக்குற வேண்டும். தைலதாரைபோல் மனம் கசியவேண்டும். பெண்மக்கள் உள்ளத்தில் தேசபக்தி தோன்றுமானல் அவர்களின் கருவில் உருவாகும் பிள்ளைகளும் தேசாபிமானிகளாய், தேசபக்தர்களாய் தியாகிகளாய்ப் பிறப்பார்கள்.

உலகம் போற்றும் உத்தமராகிய காந்தியடிகளையும், ராமகிருஷ்ணரையும், விவேகானந்தரையும், பண்டித ஈஸ்வர சந்திர வித்தியா சாகரையும், ரசாயன சாஸ்திர நிபுணராகிய பிரபுல சந்திர ராயையும், பூத பௌதிக சாஸ்திர வல்லாரான ஜகதீஸ் சந்திர போசையும் பெற்றெடுத்த இந்தியத் தாய், இன்னும் பெருமை வாய்ந்த பிள்ளைகளைப் பெற்றெடுக்க பெண்மக்களுக்கு தேசபக்தி உண்டாகவேண்டும்.

பெண்மக்களில் பலர் சினிமா, நாடகம் பார்க்கச் செல்லுகின்றார்களேயன்றி அரசியல் கூட்டங்களுக்கு வருவதில்லை. குடியர், வெறியர், சிறியர் இவர்கள் செல்லுங் கூட்டங்களுக்குப் பெண்மக்களை அனுப்பி ஆனந்திக்கும் ஆண்மக்களே! உங்கள் பெண்மக்களை அரசியல் கூட்டங்களுக்கு அனுப்பலாகாதா? பெண்மக்கள் மனதில் தேசபக்தி தோன்றுமாயின், தற்காலம் நடைபெறும் சர்க்கஸ், சினிமா, நாடகம் யாவும் தேசபக்தி மயமாகி மனதை மகிழ்விக்கும்.

அன்னிய நாட்டு அநாகரிகம் அவர்களைக் கெடுக்காதவண்ணம் காத்துக்கொள்ள வேண்டும். நமது நாட்டின் நாகரிக வழி நின்று நம் பெண்மக்களுக்குரிய சுதந்தர நெறிக்குப் பங்கம் நேராதவாறு பெண்மக்களுக்குத் தேசபக்தியை வளர்க்கவேண்டும்.

தமிழ் நாட்டுப் பெண்மக்கள் கல்வியும் அறிவும் மனமும் மோட்டார் வண்டிகளையும், மூக்குக்கண்ணாடிகளையும், கைக்கெடியாரங்களையும், கடலோரத்தையும், மேல் நாட்டு நாகரிகத்தையும் கட்டிக்கொண்டு கிடக்கின்றன.

கல்வி அறிவிற் சிறந்து, உயர்தரப் பட்டங்களைப் பெற்ற சிலர் பெண்மக்களைத் தாழ்வாக நினைப்பதும், துன்புறுத்துவதும் அறக்கொடிய பெரும் பாவமேயாகும். வாழ்க்கைத் துணை நலமென்ற தெய்வத் திருவள்ளுவர் வாக்கி

யத்தை நினையுங்கள். அவர்களைச் சிறுமைப் படுத்தாதீர்கள். அவர்களுக்குப் பெருமையை யும் சுதந்தரத்தையும் கொடுங்கள்.

பண்டைத் தமிழ் நாட்டுத் தாய்மார்களே! சகோதரிகளே! உத்தமப் பெண்கள் சிகாமணி யாகிய ஔவையார், கற்புக் கடவுளாகிய கண் ணகியார், அன்புக்கரசியாகிய மங்கையர்க்கரசி யார் இவர்களின் பெருமையையும், உங்கள் சிறுமையையும் சிந்தியுங்கள். உங்களிடத்தில் என்ன இல்லை? எல்லாம் உண்டு. வேண்டுவது எழுச்சியே. நீங்கள் வேலைக்காரிகளல்ல, அடி மைகளல்ல. நீங்கள் கற்புக்கரசிகள், அன்புக்கர சிகள், வீரத்தாய்மார்கள், இல்லொளிகள், தெய் வங்கள். விழியுங்கள்! எழுந்திருங்கள்! பாரத நாட்டிற்குச் சுதந்தரத்தைப் பெறுவிக்கும் சக்தி எங்களிடத்தில் உண்மையில் உண்டு என்ற எண்ணத்தோடு எழுங்கள். இந்தியத் தாய், பாரததேவி உங்களையே உற்று நோக்கிக்கொண் டிருக்கிறாள். தேச பக்தி உச்சி முதல் உள்ளங் கால் வரையில் பரவி, ரத்தத்தில் ஓடி, ரத்த நாடிகளில் பாயும்படி செய்யுங்கள். தேசபக்தி யையே ஆபரணமாக அணியுங்கள்.

# பிரஹ்லாத விஜயம்.

(ஸ்ரீமான் K. நடராஜய்யர்)

(எல்லா உரிமைகளும் ஆசிரியருடையது.)

(686-ம் பக்கத் தொடர்ச்சி.)

பதி நான்காம் அத்தியாயம்.

இந்த தீனஸ்வரத்தைக் கேட்ட நாரத மக ரிஷி கண்ணைத் திறந்து பார்த்து விஷயத்தை யறிந்துகொண்டு, "பெண்கள் சிகாமணியே! பதிவிருதா ரத்தினமே! பயப்படாதே! பதறாதே! இதோவந்துவிட்டேன்" என்று சொல்லிக் கொண்டே, அதிவேகமாக தேவராஜனுக்கெதி ரில் வந்து நின்றார் இந்திரன் திடுக்கிட்டு, தேரி னின்று யிழிந்து, மகரிஷியை சாஷ்டாங்கமாக வணங்கினான். நாரதர் அவனை நோக்கி பின் வருமாறு கேட்டார்.

"தேவபதியே! தர்ம மார்க்கத்தில் நிலை பெற்றிருக்கும் அரசன் பர தாரங்களை ஸ்பரிசிக் கத்தகாது. அதிலும் முக்கியமாக ராஜஸ்திரீ களை, (அவர்கள் சத்துருக்களின் மனைவிகளா யிருந்தபோதிலும்) ஜாக்கிரதையாக ரட்சித்து வரவேண்டும். சாஸ்திரங்களால் விலக்கப்பட்ட கர்மாக்கள் சுகத்தைக் கொடுக்கக்கூடியதாயி ருந்தாலும் சிஷ்டர்கள் அதை யனுசரிக்கமாட் டார்கள். ராஜாதான், தர்மார்த்த காம மென் னும் மூன்று புருஷார்த்தங்களுக்கும் இருப்பி டமானவன். உலகத்தில் தர்மமோ அதர்மமோ ராஜாவினிடத்தி லிருந்தே உண்டாகிறது. ஆத லால் புத்திமானான அரசன், பரஸ்திரீகமனம், சொக்கட்டானாடுதல், வேட்டையாடுதல், மது பானஞ்செய்தல், குரூரமானவார்த்தைகளைப் பேசுதல், குற்றத்துக்கு அதிகமான தண்டனை விதித்தல், பிரஜைகளைக் கொடுமையாக நடத்து தல், இந்த எழு காரியங்களையும் ஜாக்கிரதை யாய் விலக்கவேண்டும். இல்லாவிடில் அவன் எவ்வளவு பலமுள்ளவனாயிருந்தாலும், தேவ தோத்தமனேயாயினும், நிச்சயம் நாசத்தை யடைவான். தர்ம சூக்ஷ்மங்களை நன்றாக அறிந் திருக்கும் நீர் சாதுக்களால் நிந்திக்கப்படுகிற காரியத்தைச் செய்யலாமா? பிரபுவே! உமக்கு ஒரு அபராதமும் செய்யாத இவளை எதற்காக உபத்திரவிக்கிறீர்? இவள் உமது சகோதரன் மனைவி—உங்கள் குலத்தை யலங்கரிக்க வந்த பதிவிருதாசிரோமணியாயிருக்க, இவளைக்குறி த்து இத்தகைய கெட்ட எண்ணம் உமது மன

தில் உண்டாகலாமா? பரஸ்திரீ கமனம் செய்வதினால் உண்டாகும் கஷ்டங்களை ஏற்கனவே நீர் அனுபவித்திருந்தும், அதை மறந்து, மறுபடியும் இந்த துர்ப்புத்திக்கிடங் கொடுக்கலாமா? அகலிகை நிமித்தமாக நீர் பட்டபாடுகள் போதாதா? யாராவது தான் சாக மருந்துண்பார்களா? இவள் உமது கழுத்தில் சுற்றிக்கொண்டிருக்கும் காலபாச மென்பதை நீர் அறியவில்லை. அகலிகை விஷயத்தில் உமக்கு மட்டும் தண்டனை கிடைத்தது. இது அப்படியல்லவே? உமது பந்துக்கள், சினேகிதர்கள், உம்மைச்சேர்ந்தவர்கள், முதலான எல்லோருக்கும் நாசத்தை யுண்டாக்குமே' தூங்கிக்கொண்டிருக்கும் சிம்மத்தைக் குச்சியினால் குத்துவதைப்போல், வீரனான உமது சகோதரனுக்கு பெருத்த அபகாரத்தைச் செய்து விட்டீரே. அவனுடைய பாணங்களுக்கு எப்படித் தப்பிப் பிழைக்கப்போகிறீர்? நீர் எந்த லோகத்தில் போய் ஒளிந்தாலும் அவன் விடமாட்டானே. சகோதரன் மனைவியைக் கைப்பிடித்த சண்டாளன் என்று உம்மை யெல்லோருமிகழ்ந்து காரியுமிழ்வார்களே. உமக்கொருவரும் அடைக்கலம் கொடுக்காமல் அடித்துத்துரத்துவார்களே. கேவலம் ஒரு ஸ்திரீயின் நிமித்தமாக இவ்வளவு ஆபத்துக்களையும், அபகீர்த்தியையும் வருவித்துக்கொண்டீரே. சத்துருக்கள் கண்டால் நகைப்பார்களே. உமது மனைவியை வேறொருவன் அபகரித்துக் கொண்டுபோனால், அப்போது உம்முடைய மனம் என்ன பாடுபடும்? அதைப்போல்த்தானே மற்றவனுக்கு மிருக்குமென்பதை நீர் ஏன் யோசிக்கவில்லை? பிரஜைகள் அக்கிரமம் செய்யாமல் பாதுகாத்து வரவேண்டிய அரசனான நீரே இவ்வளவு நிந்திதமான காரியத்தைச் செய்தால் உலகத்தினர் உம்மை எப்படி மதிப்பார்கள்? மேலும், இந்தப்பெண்மணியின் மகிமையை நீர் நன்றாகத் தெரிந்து கொள்ளவில்லையென்று நினைக்கிறேன், இவள் நினைத்தால், உம்மைமட்டு மின்றி எல்லா உலகங்களையும் ஒரு க்ஷணத்தில் அழித்துவிடக்கூடும். இவளை உம்மால் ஒன்றும் செய்ய முடியாதென்று எனக்கு நிச்சயமாய்த்தெரியும். ஆதலால் இவளைக்குறித்து நான் பயப்படவில்லை. உம்முடைய நன்மையை உத்தேசித்தே இவ்வளவுதூரம் வற்புறுத்திச் சொல்லுகிறேன். இந்த உத்தமி வயிறெரிந்தால் உமக்கு நாசம் உண்டாகுமே யென்றுதான் பயப்படுகிறேன் இவளை விட்டுவிட்டு, நீர் செய்த பாபகிருத்தியங்களுக்காக இவளிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்ளும். உமக்கு மங்களம் உண்டாகும்.' என்று ஹிதோபதேசம் செய்தார்.

இந்த வார்த்தைகள் தேவராஜனுடைய மூளையில் மின்னலைப்போல் பாய்ந்தன. இது காறும் அவனைப்பற்றிக்கொண்டிருந்த காமப்பேயானது, இந்த உபதேசத்தின் முன் நிற்கமாட்டாமல் ஓட்டமெடுத்தது. அவன் கண்களில் படிந்திருந்த மாசு நீங்கிப்பிரகாச முண்டாயிற்று. பயம், பச்சாத்தாபம், அவமானம், வெட்கம், இவைகள் ஒருங்கே கூடி அவனை வருத்தின. தான் செய்த துஷ்கிருத்தியத்தை நினைத்து மிகவும் லஜ்ஜைபடைந்தான். பேசுவதற்கு நா எழவில்லை. துக்கத்தினால் அவன் தொண்டை அடைத்துக்கொண்டது. கண்களில் நீர்ததும்ப சிலைபோல ஸ்தம்பித்து நின்றான். சற்றுநேரத்திற்குப்பின் மனதைத் திடப்படுத்திக்கொண்டு நாரதரை நோக்கி மிகவுப் தீனமான ஸ்வரத்தில், சொன்னான்.

"மகரிஷியே! காமவிகாரத்தினால் என் ஸ்வயபுத்தியை இழந்து, என்னுடைய கீர்த்தியையும், ராஜபத்தையும், சம்பத்துகளையும், ஒருங்கே யழித்து விடக்கூடியதான இந்த அக்கிரமத்தைச் செய்து விட்டேன். சகோதரன் மனைவியைப் பெண்டாளப்பார்க்கும் சண்டாளனும் உலகத்திலுண்டா? ஐயோ! தேவசக்கிரவர்த்தி

யான நான் கேவலம் மாமிச இச்சையை யடக்க முடியாமல் இவ்வித அநியாயத்துக் குடன்பட்டதை நினைக்கும்போது என் மனம் பதறுகின்றதே! 'காமத்துக்குக் கண்ணில்லை', 'செத்த நாயென்றும் பாரார்; பெற்ற பெண்ணென்றும் பாரார்,' என்னும் பழமொழிகள் என் விஷயத்தில் தான் உண்மையாயின. தாங்கள் வந்து புத்திசொல்லி என்னைத் தடுக்காதிருந்தால், இன்னும் எவ்வளவோ கொடுமைகளைச் செய்திருப்பேன். தாங்கள் சமயத்தில் வந்து காப்பாற்றினீர்கள். இந்த மானங்கெட்ட காரியத்தைச் செய்துவிட்டு, நான் எப்படி தேவர்களின் முகத்தில் விழிப்பேன்? இனி நான் என்னசெய்வேன்? எங்குபோய் இந்தப் பாபத்தைத் துலைப்பேன்?" என்று சொல்லிக் கண்ணீர் விட்டான் இந்திரன்.

"பிரபுவே! கொட்டிப்போன பால் குடத்தில் வருமா? நடந்துபோனகாரியத்தை நினைத்து வருந்துவதினால் பயனென்ன? ஏதோ விதிவசத்தினால் நீர் இப்படிச் செய்யநேரிட்டது அதைக் குறித்து நாமினி நினைக்கவேண்டாம். தன் குற்றத்தையுணர்ந்து பச்சாத்தாபப்படுவதினாலேயே உம்முடைய பாபம் துலைந்துவிட்டது. நீர் செய்த அக்கிரமத்துக்காக அம்மாதாசியிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்ளும். அவளுடைய மனம் திருப்தியடைந்தால் உமக்குச் சகல பாக்கியங்களுமுண்டாகும்" என்றார் நாரதர்.

"சுவாமி! இன்னொரு சங்கடமிருக்கிறதே! தேவசத்துருவான ஹிரண்யகசிபுவின் வீரியம் இவள் வயிற்றில் கருவாகி வளர்ந்து வருகின்றது. அது புத்திரனாய்ப் பிறந்தால், அந்தப் பிள்ளையும் தகப்பனைப்போல் நமக்குப் பலவித கஷ்டங்களை விளைவிக்குமே யென்று பயப்படுகிறேன். இதற்கென்ன செய்வது? ஆ! எனக்கொரு யோசனை தோன்றுகிறது. இவளைத் தேவலோகத்துக்குக் கொண்டுபோய் வைத்திருந்தால், பிரசவித்தவுடன் குழந்தையை யெடுத்துக்கொண்டு இவளை விட்டு விடலாமென்று நினைக்கிறேன். சத்துருவை முளையிலேயே கிள்ளி யெறிந்து விடுவதுதான் சுலபம். இப்பொழுது உபேக்ஷையாயிருந்து விட்டால், பிறகு மிகுந்த உபத்திரவ முண்டாகும். எதற்கும் நாம் முன் ஜாக்கிரதையுடனிருப்பது நலமல்லவா?" என்றான் இந்திரன்.

"அரசே! வீணாக ஏன் கிலிபிடித்தலைகிறீர்? இம்மங்கையின் கர்ப்பத்திலிருக்கும் புத்திரனால் உமக்கும் மற்றவர்களுக்கும் எவ்விதமான கெடுதியும் உண்டாகாது. அவன் உலகசிரேஷ்டனாய்—பகவானுடைய தாசனாய்—விளங்குவான். அவனால் உங்கள் குடும்பத்திற்கு மிகுந்த கீர்த்தியும் உலகத்துக்கு க்ஷேமமும் உண்டாகப் போகின்றன. இது சத்தியம். ஆதலால் இதைக் குறித்து நீர் பயப்படத்தேவையில்லை. இவளை விட்டுவிட்டு, இவளுடைய மன்னிப்பைப் பெற்றுக்கொள்ளும்" என்று நாரதர் மிகவும் வற்புறுத்துதலோடு மொழிந்தார்.

முக்காலமுமுணர்ந்த முனிசிரேஷ்டரின் வார்த்தையைச் சிரசின்மேல் வகித்து, அவருக்கு நமஸ்காரம் செய்தபின் தேவராஜன் ராஜமாதேவியை நோக்கிக் கைகளைக்கூப்பிக்கொண்டு சொன்னான்.

"அம்மா! சௌபாக்கியவதியே! நான் தெரியாமற் செய்த பிழையை க்ஷமித்தருளவேண்டும். உன்னுடைய மன்னிப்பைப் பெற்றாலல்லது இந்தப்பாபியின் ஜன்மம் கடைத்தேறப் போவதில்லை. என்மீது கருணைவைத்து மன்னித்தேன் என்று ஒருதரமாவது உன் வாயால் சொல்லி என்னை ஆசீர்வதிக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தான் இந்திரன்.

சோகத்தினால் பீடிக்கப்பட்டு வாடி வதங்கியிருந்த லீலாவதியின் முகத்தில் மந்தகாசம் துலங்கியது.

"மைத்துனரே! மன்னித்தேன் உம்மை! மகா மேதாவியான நீரும் முறை தப்பி நடக்கும்படி செய்துவிட்ட விதியின் மகிமையை என்னென்று சொல்வது? விதியை மதியால் வெல்ல முடியாதென்னும் உண்மையை இன்றே கண்டேன். நடக்கவேண்டியது நடந்து விட்டது. அதைப்பற்றிப் பேசுவதில் பயனில்லை. என்னை நீர் அபகரித்துக்கொண்டு வந்த கோபத்தினால் உமது சம்பத்துக்களை யிழந்து நீர் பதாதியாகப்போகும்படி சபித்துவிட்டேன். என்னுடைய சாபம் வீண்போகாது. அதை நீர் அனுபவித்தேதீரவேண்டும். ஆயினும் நீர் செய்த குற்றத்திற்காக வருந்தி மன்னிப்புக் கேட்டுக்கொண்டபடியால், கொஞ்சகாலம் என்னுடைய சாபத்தை யனுபவித்தபின், பகவானுடைய அனுக்கிரகத்தினால் மறுபடியும் உமது ராஜ்யத்தையும் சம்பத்துக்களையு மடைந்து க்ஷேமமாயிருப்பீர். நான் பெண்பால் பொறுமையே ஆபரணமாகப்பூண்டொழுக வேண்டியவள். எப்படிப்பட்ட ஆபத்து நேர்ந்தாலும் பகவான் காப்பாற்றுவார் என்ற திடமான நம்பிக்கையுடன் அவரையே மனோவாக்குக்காயங்களினால் ஒருமித்து வழிபடும் பக்தர்களை அவர் ஒரு நாளும் கைவிடமாட்டார் என்பதை நன்றாயறிந்தவள். ஆயினுமென்ன? தாங்கள் செய்த துஷ்கிருத்தியத்தைப் பொறுக்கச் சக்தியின்றி, மைத்துனரென்றும் மதியாமல் தங்களைச் சபித்ததுடன், வாயில் வந்தபடி ஏகவசனமாயும் நிந்தித்திருக்கிறேன். 'எண்ணறக்கற்று எழுத்தற வாசித்தாலும் பெண்புத்தி பின்புத்தியே' என்னும் பழமொழிக்கு நானே சாட்சியானேன். அவைகளை மன்னித்துப் பெரியோர்களை நிந்தித்த கொடிய பாபத்தினின்றும் என்னைக் காப்பாற்றவேண்டும். நானன்றோ தங்கள் மன்னிப்பை முதலில் பெறவேண்டியவள்?" என்றாள் லீலாவதி.

"மங்கையர்க்கரசே! எங்கள் குலக்கொடியே! மெச்சினேன் உனது புத்தியை! உன்னை மருமகளாக அடைவதற்குக் காசிபரும் நாங்களும் எவ்வளவோ தவஞ் செய்திருக்கவேண்டும். நான் உனக்குச்செய்த கொடுமைகளை மறந்து, என்னை மன்னித்துச் சாபவிமோசனமும் கூறியதுடனில்லாது, என்னை நிந்தித்ததற்காக என்னுடைய மன்னிப்பை வேண்டுகிற உன்னுடைய குணவிசேஷங்களை நான் எவ்விதம் வர்ணிப்பேன்? என்னுடைய மன்னிப்பை எதிர்பார்க்க வேண்டிய அவ்வளவு பெரிய குற்றத்தை நீ செய்யவில்லை. அப்படிச் செய்ததாகவே வைத்துக்கொண்டாலும், அதை மன்னித்துவிட்டேன். உனக்கு எங்கே போக இஷ்டமோ அதைச் சொன்னால் அங்கு கொண்டு போய் விட்டு விடுகிறேன்" என்றான் தேவராஜன்.

"மைத்துனரே! பட்டணங்களிலும் கிராமாந்தரங்களிலும் அடிக்கடி ஆபத்துக்கள் நேரிடுவது சகஜமாயிருப்பதால், என் பிராண நாதர் வரும் வரையில், எங்கேயாவது ஒரு ஆசிரமத்தில் நிம்மதியாக வசித்துக் கொண்டிருக்க நினைக்கிறேன்" என்றாள் சக்கரவர்த்தினி.

"பெண்ணே! உனக்கு ஆக்ஷேபமில்லாவிட்டால், என்னுடைய ஆசிரமத்திலேயே நீ வசிக்கலாம். அங்கு உனக்கு என்னால் கூடிய எல்லா சௌகரியங்களும் செய்து கொடுப்பதுடன் உன்னை என் சொந்தப் பெண்ணாக மதித்து ஜாக்கிரதையாய் ரட்சித்து வருவேன். ஆனால் உன்னிஷ்டம் எப்படியோ?" என்றார் நாரதர்.

"சுவாமி! என்னுடைய இஷ்டத்தைக் கேட்கவும் வேண்டுமா? பிதாவைப்போல் சமயத்தில் வந்து என்னைக் காப்பாற்றின தங்களுடைய ஆசிரமத்திலேயே வசிக்க எண்ணங் கொண்டுள்ளேன்" என்று லீலாவதி மிகுந்த சந்தோஷத்துடன் கூறினாள்.

"பெண்ணே! மிகவும் சந்தோஷம்! இந்தப் பெரியவரின் தபோபலத்தினால் ரட்சிக்கப்படும் உனக்கு எவ்விதக் குறைவுமுண்டாகாது. நான் போய்வருகிறேன். நேரமாகி விட்டது" என்று சொல்லித் தேவராஜன் லீலாவதியைப் பிரதட்சிணம் செய்து விடைபெற்றுக் கொண்டு தேவலோகம் போய்ச்சேர்ந்தான்.

நாரதமகரிஷி சக்காவர்த்தினியை யழைத்துக் கொண்டு, தன்னுடைய ஆசிரமத்துக்குச் சென்றார். அந்தப்புரத்தில் சகல ராஜோபசாரங்களுடனும் வசித்து வந்த லீலாவதி தான் இந்த ஆசிரமத்தில் சன்னியாசினியைப்போல் காலங் கழித்து வருவதற்காகக்கிஞ்சிற்றேனும் வருந்தவில்லை. ஆசிரமத்தின் இயற்கையழகுகளைக் கண்டு ஆனந்தித்தாள். நாலாபக்கத்திலும் பெரிய பெரிய மலைகளையும், அம்மலைகளிலிருந்து அருவிகள் பெருக்கெடுத்தோடி வரும் காட்சியையும், கொடிகள் மரங்களைத் தழுவிப் படர்ந்து நெருங்கியிருப்பதையும், நறுமணங் கமழும் புஷ்பங்கள் மலர்ந்து செரிந்திருப்பதையும், காய்கனிகள் நிறைந்திருக்கும் பல விருட்சங்களின் மேல் குரங்குகள் குதித்துவிளையாடிக் கொண்டிருப்பதையும், வேடுவப் பெண்களின் விளையாட்டையும, துள்ளியோடிக் கொண்டிருக்கும் மான்களின் கூட்டத்தையும், சிங்கம், புலி முதலிய மிருகங்களின கர்ஜனையையும், தினைப்புலன்களில் பட்சிகள் கதிர்களைக் கொய்துகொண்டு போவதைக் கண்டு குறிஞ்சிநிலப் பெண்கள் ஆயாலோட்டும் ஓசையையும், பசுக்கள் கும்பு கும்பாய்க் கூடி மேய்ந்து இருமாந்திருப்பதையும், பசுவும் புலியும் ஒரு துறையில் நீர் குடிப்பதையும், ஆசிரமத்திலிருக்கும் குழந்தைகள் சிங்கத்தின் குட்டியை யெடுத்துப் பசுவினிடத்தில் பால் குடிக்கவிடுவதையும, மலைப் பாம்புகள் புரண்டு கிடப்பதையும், மயில்களாடுவதையும், மற்றுமுள்ள வளப்பங்களையும் பார்த்து மனமகிழ்ந்து, நிச்சிந்தையாய் வசித்துக்கொண்டிருந்தாள். லீலாவதி தினந்தோறும் இரவு மூன்றாவது சாமத்தில் எழுந்து ஸ்னானமுதலான நித்திய விதிகளை முடித்துக்கொண்டு, நாரத மகரிஷியின் பூஜைக்கு வேண்டிய. சாமான்களைத் தயார் செய்து வைத்து, அவர் ஸ்னானம் செய்துவிட்டு வந்தவுடன் அவர் பாதங்களில் புஷ்பங்களினால் அர்ச்சித்து, அவரைப் பிரதட்சணம் பண்ணி நமஸ்கரித்து, அவர் பூஜை செய்யும் போது தானும் கூட இருந்து கைங்கரியம் செய்து, அவருடைய மரவுரிகளைச் சுததி செய்து வெய்யிலில் உலர்த்தி, கிழங்கு, பழங்கள் முதலியவைகளை அவருக்கு ஆகாரமாகக் கொடுத்து, அவர் புசித்த பின் மீதியிருப்பதைத் தான் சாப்பிட்டு, மற்ற வேளைகளில் தர்ம கதைகளைப் பேசிக் கொண்டு, அவருடைய சிசுரூஷையில் எவ்விதக் குறைவுமில்லாமல் அதிலேயே கண்ணுங்கருத்துமாயிருந்து வந்தாள். நாரதமகரிஷி அவளுடைய கைங்கரியத்துக்காகச் சந்தோஷமடைந்து, அவள் நினைத்த போது பிரசவிக்கவும், பிரசவிக்கும்போது அவளுக்கு எவ்வித உபத்திரவமும் உண்டாகாமலிருக்கவும் அனுக்கிரகம் செய்து, பகவானுடைய லீலைகளையும் அவரை ஆராதிக்க வேண்டிய கிரமத்தையும், மற்று மனேக புண்ணிய கதைகளையும் அவளுக்கு உபதேசித்தார். சக்காவர்த்தினி அவரால் உபதேசிக்கப்பட்ட அஷ்டாட்சர மந்திரத்தை ஜபித்துக் கொண்டும், ஒழிந்த நேரங்களில் சத் கதா காலட்சேபங்கள் செய்து கொண்டும் அந்த ஆசிரமத்துக்கே அதிதேவதையாக விளங்கினாள்.

(தொடரும்)

# நந்தி துர்க்கம் என்னும் மலை.

(ஸ்ரீமதி S. R. ஜயம்மாள்.)

"ஏதேது, எல்லா வீட்டினரும் ஒருமிக்க உட்கார்ந்து திரி திரித்துக்கொண்டிருக்கிறீர்கள்! என்ன விசேஷம் விசாலாட்சி?" என்று சொல்லிக்கொண்டே ஸ்வர்ணம்பாள் தன் பெண் சுமித்திராவைப் பக்கத்தில் உட்காரச் சொல்லித் தானும் உட்கார்ந்துகொண்டு கொஞ்சம் பருத்தியைக் கையில் எடுத்துக்கொண்டாள்.

அதற்குள் அம்புஜம் என்பவள் "ஆமாண்டீ, நாட்டுப்பெண் திரண்டுகுளிக்கென்று போனவள் அவ்விடமே ஆணி அடித்துக்கொண்டு உட்கார்ந்து விட்டாயே. என்ன சுமித்திரா இவ்வளவு இளைத்திருக்கிறாள்? விசாலம் லக்ஷதீபம் ஏத்த ஆரம்பித்திருக்கிறாள். 'மத்தியானம் ஒழிந்தபொழுது எல்லோருமாக வந்து பேசிக்கொண்டே ஆளுக்குக் கொஞ்சம் திரி திரித்து கொடுத்து விட்டுப் போங்கள்' என்றாள். அதனாற்றான் நாலைந்து நாட்களாய் இவ்விடம் எல்லோரும் கூடுகிறோம்" என்றாள்.

அதற்குள் பங்கஜம் "அவள் பெண் ஜகதம் பெங்களூரில் தானே இருக்கிறாள். அங்கு போய் இருந்து விட்டு வந்திருப்பாள்" என, பாக்கியம் "பெண் வீட்டில் போய்க் காரணமில்லாமல் மூன்று மாதங்களா இருப்பது, ஸ்வர்ணம்? நன்னா இருக்கு" என்று பரிகாசமாக மொழிந்தாள்.

"இப்படி மாத்தி மாத்திப் பேசினால் அவள் என்ன செய்வாளடி! பாபம், சற்று வாலைச் சுருட்டி மடியில்வைத்துக்கொண்டு கம் என்றிருங்கள்" என்று விசாலம் சொல்ல, எல்லோரும் கொல் என்று சிரித்தார்கள்.

பின் ஸ்வர்ணம் "இல்லையடியம்மா, நான் பெண்ணாத்திற் கென்றும், திரண்டுகுளிக்கென்றும் இங்கிருந்த மூழுங்க முழங்கப் போகவில்லை. திரிச்சினாப்பள்ளி எங்கே? பெங்களூர் எங்கே? நான் வெய்யிலிற்காக நந்திதுர்க்கம் என்னும் மலையில் இரண்டு மாதங்கள் இருந்து விட்டு வந்தேன்" என்று சொன்னாள்.

பின் அம்புஜம் "அது நந்தியோ, பிந்தியோ, கருப்போ, செகப்போ எனக்கு தெரியாதம்மா. போனவருஷம் என் நாத்தனார் அனசூயா கூட வெய்யிற்காலத்துக்கு நந்திக்குப் போயிருந்ததாக எழுதி இருந்தாள். அதென்ன ஊர்? சொல் பார்ப்போம்" என்றாள்.

ஸ்வர்ணம் "கட்டாயம் திரண்டுகுளிதானே என்றிராமல் புறப்பட்டு வரவேண்டும். இப்பொழுது இவ்விடத்தைவிட அவ்விடத்திற்கு அருகில் நந்தி என்றொரு மலை இருக்கிறது. அங்குபோய்க் கொஞ்ச நாள் இருந்து விட்டு ஊருக்குத் திரும்பலாம். அவ்விடம் தாங்கள் இருக்க தக்க ஏற்பாடு செய்திருக்கிறேன்" என்று எங்கள் சம்மந்தி எழுதியிருந்ததின் பேரில்தான் அவ்வளவு கோடித்துக் கொண்டு போனோம். குழந்தைக்கு மிகவும் அலைச்சல், பாபம்" என்று தன் பெண் முதுகைத் தடவிக் கொடுத்தாள்.

அதற்கு "அந்த நந்தி மலையைப் பற்றிக் கொஞ்சம் சொல்லேன்" என்று எல்லோருமாகக் கூற, ஸ்வர்ணம் "பெங்களூரிலிருந்து முப்பத்தோரு மைல் தூரத்தில் பெரிய மலை சாரல்கள் இருக்கின்றன. அவைகளில் மிகவும் உயரமான மலையின் பெயர் தான் நந்தி துர்க்கம் என்பது. அதின் மேல் மேற்குப் புறம் ஓர் பெரிய மைதானமிருக்கின்றது. அவ்விடத்தில் தான் வசிக்க வீடுகள் இருக்கின்றன. அவ்விடத்திலிருந்து கொஞ்சம் இறங்கினால், அங்கு அமிருத ஸரோவரம் என்று ஒரு பெரிய குளம் இருக்கின்றது. அதற்குச் சில சிறிய சிறிய அருவிகள் வந்து சேருகின்றன. அதற்கு நாலுபக்கங்களிலும் அழகாகப் படிகள்

கட்டி இருக்கிறார்கள். அந்தக் குளத்தைச் சுற்றிலும் மா, பலா, கொய்யா முதலிய மரங்களும், முல்லை, மல்லிகை, ரோஜா முதலிய புஷ்பச் செடிகளும் நிறைந்த ஒரு அழகிய தோட்டம் இருக்கின்றது. அந்த மலையைச் சுற்றிலும் பெரிய காடாக இருக்கின்றது. அந்தக் காட்டில் சிறுத்தை, காட்டுப் பன்றி முதலிய துஷ்ட ஜந்துக்கள் வசிக்கின்றனவாம். எங்கு பார்த்தாலும் பச்சென்று புல் வளர்ந்திருக்கின்றது. அந்த மலைக்கு முன்காலத்தில் நந்தகிரி அல்லது ஆனந்தகிரி என்று பெயரிருந்ததாம். நந்த என்றால் ஆனந்தமுள்ள என்றும், கிரி என்றால் மலை என்றும் அர்த்தமாம். இப்பொழுது இருக்கும் பெயருக்கு நந்தி என்றால் பசுவன் என்றும் துர்க்கம் என்றால் மலை என்றும் அர்த்தமாம். இந்த மலையின் அடிவாரத்தில் சுல்தான்பேட்டை என்னும் ஊரும், இரண்டு, மூன்று மைல்கள் தூரத்தில் நந்திக்கிராமம் என்னும் ஊரும் இருக்கின்றன.

"மலையின் மேல் யோகாநந்தீசுவரசுவாமி கோவிலும் நந்திக்கிராமத்தில் போகாநந்தீசுவரசுவாமி கோவிலும் இருக்கின்றன. மலையடிவாரத்திலிருந்து ஒரு புறம் 4-மைல்கள் தூரம் ஒரு சிறிய வழி போகிறது. அதை Bull Pass என்னும் மற்றொரு வழி சந்திக்கிறது. அதின் வழியாகச் சென்றால் கல்லினால் செய்யப்பட்ட பெரிய பசுவன் (காளை) ஒன்று அங்கிருக்கிறது. அதனாற்றான் அந்த மலைக்கு நந்தி துர்க்கம் (Nandi Hill) என்று பெயர் வந்திருக்கிறதாம்.

அந்த மலை அதின் சுற்றுமுற்றும் இருக்கும் பிரதேசங்களைவிட 1800 அடி உயரம் இருக்கிறதாம்; சமுத்திரத்தை விட 4851 அடி உயரம் இருக்கிறதாம். அதனால் தான் அந்த மலையின் மேல் அவ்வளவு குளுமையாக இருக்கின்றது இங்கு இரவில் 1800 அடி கீழ் இருக்கும் பிரதேசங்களை விட 10° யவ்வளவு குளுமையாக இருக்கிறது. அதற்காகத் தான் பெங்களூரிலிருக்கும் சில ஆங்கிலேயப் பெரிய மனிதர்கள் கோடைகாலத்தில் வசிக்க நந்தியின் மேல் வீடுகள் கட்டிக்கொண்டிருக்கிறார்கள். முன்காலத்தில் பக்தாதிகள் மலைமேலிருக்கும் கோவிலிற்குப் போக படிக்கட்டுக் கட்டி இருக்கிறார்கள். அந்த வழியைத் தவிர்த்து மலைமேல் செல்ல வேறொரு வழியும் இல்லையாம். அதனால் இப்பொழுதும் அந்த வழியையே கூடியமட்டில் செம்மை செய்திருக்கிறார்கள்.

இந்த மலை பெங்களூர் கோலார் தாலூக்காக்களுக்கு மத்தியில் இருக்கிறது. இதின் மேலிருந்து கீழே பார்த்தால் இத்தாலூக்காக்களைச் சேர்ந்த அநேக இடங்கள் வெகு தூரத்தினின்றும் தெரிகின்றன. ரோட்டுகள் ஒரு அடி அகலமும் மரங்கள் ஒரு சாண் உயரமும் மலைகள் சிறிய மண் குவியல் போலவும் ஏரி ஒரு தட்டின் அளவும் தெரிகின்றன. நாம் மலைமேலிருந்து நமக்குத் தெரியும் ஏரிகளை எல்லாம் எண்ணினால் கிட்டத்தட்ட (400) நானூறு ஏரிகள் எண்ணலாம்.

"இந்த மலையிலிருந்து அநேக நதிகளும் பிறக்கின்றனவாம். உத்தரபினாகினி, தட்சிணபினாகினி, சித்திராவதி, அர்க்காவதி எல்லாம் இவ்விடத்தில் தான் பிறக்கின்றனவாம். இவ்விடம் பெரிய மழை பெய்தபின் வெய்யில் வந்தவுடன், இருக்கத்திற்காகக் காடுகளில் மலையைச் சுற்றிலும் எங்கு பார்த்தாலும் ஒரு மாத்திற்கு ஒரு மாம் மோதிக்கொண்டு சூட்டிற்கு நெருப்புண்டாகிக் காடு காடாய்ப் பற்றிக்கொண்டு எரிகின்றன. அப்பொழுது பார்த்தால் ஒரு பெரிய பட்டணத்தை மேலிருந்து நோக்கினால், ஒரு பெரிய பட்டிணத்தின் வீதிகளில் வரிசையாக விளக்குகள் எரிவது போலத் தெரிகிறது. மலைமேல் ஒரு புறம் மேலிருந்து கீழ்

வரையிலும் ஓர் பெரிய பள்ளம் இருக்கின்றது. அதற்கு திப்பூஸ்ட்ராப் (Tippu's Drop) என்று பெயராம். முன் மைசூர் தேசத்தை ஹைதரென்ற ஒரு ராஜனும் அவனுக்குப் பிறகு அவன் பிள்ளை திப்பூசுல்தானும் ஆண்டுகொண்டிருக்கும் பொழுது இங்கிலீஷ்காரர்கள் இவன் மேல் யுத்தத்திற்கு வந்தார்களாம். இவன் எங்கு ஒளிந்துகொண்டாலும் அவர்கள் கண்டு பிடித்துவிட, அவன் இந்த நந்திதுர்க்கத்திற்கு வந்து ஒளிந்துகொண்டானும். இவ்விடம் அந்தப் படிகட்டைத் தவிர்த்து வேறு எந்த வழியாகவும் சத்துருக்கள் ஏறிவாமுடியாது. எவ்விடம் பார்த்தாலும் காடும், காடும் மூடும், புதரும், பாதாளமுமாக இருக்கின்றது. அப்படியும் நல்ல பத்திர மில்லை என்று தோன்றும் இடங்களில் பலமாக மூன்று சுத்துக்கோட்டைகள் கட்டினும்.இப்பொழுதுகூடச் சில இடங்களில் கோட்டை இடியாமல் இருக்கிறது. அப்படியும் இங்கிலீஷ்காரர்கள் எப்படியோ மலையை ஏறி இவர்களை முற்றிக் கொண்டார்களாம். இவர்கள் முற்றிக்கொள்ளு முன் துருக்கர்கள் தங்கள் கைகளில் சிக்கின விஜாதி ஜனங்களை இந்தப் பள்ளத்தினிடம் தலையை ஒருவன் காலை ஒருவன் பிடித்துக் கொண்டு கொணர்ந்து (தங்கள் உத்திரவிற்கு மீறினவர்களைக் கொணர்ந்து) இந்த பாதாளத்தில் தள்ளி விடுவார்களாம். இந்த மலைபருகிலிருக்கும் மற்றொரு மலையில் ஹைதர்ஸ் ட்ராப் (Hyder's Drop) என்று மற்றொரு இடம் இருக்கின்றது. அங்கும்கூட இந்த துருக்கர்கள் அநேக உயிர்களை மாய்த்தார்களாம்'' என்று சொல்லிச் சற்று சுதாரித்துக்கொண்டாள்.

உடனே அங்கிருந்தவர்களெல்லோரும் காதைப் பொத்திக்கொண்டு "ஹா! என்ன கொடுமை, என்ன கொடுமை!'' என்றார்கள்.

பின் சாரதா என்பவள் "நீங்கள் எப்படி அந்த மலையின்மேல் ஏறினீர்கள்? ஜகதம் எல்லாரும் வந்திருந்தார்களா?'' என்று வினவினள்.

பின் ஸ்வர்ணம்பாள் சிரித்துக்கொண்டு "எல்லோரும் முதல் சினேகிதிகளைத் தான் விசாரிப்பது. ஆமாம், ஜகதம், அவள் யஜமானர், என் பிள்ளை, நாட்டுப்பெண் எல்லாரும் வந்திருந்தார்கள்'' என்னுமுன், கனகம் என்பவள் "உன் நாட்டுப்பெண் பெயரென்ன?'' என்று வினவினள். உடனே பங்கஜம் "அதாண்டி, வஸந்தகுமாரியாம். போதுமா! அவள் இதைச் சொல்லி முடிக்குமுன் இப்படி இறைச்சலிட்டால் எப்படிச் சொல்வாள், பாபம்'' என்றாள்.

பிறகு ஸ்வர்ணம் "நாங்களெல்லோரும் பெங்களூரிலிருந்து மாப்பிள்ளை காரில் சிலரும் சம்பந்தி காரில் சிலருமாக ஏறிக்கொண்டு அவ்விடத்திலிருந்து புறப்பட்டு சாயங்காலம் ஆறு மணிக்கு நந்திக்கிராமம் வந்துசேர்ந்தோம். முன்னமேயே சாமான்களை எல்லாம் ரயிலில் அனுப்பிவிட்டோம். அந்த தினத்திற்கு மறு தினமே அவ்விடத்தில் போகாநந்தீசுவர சுவாமியின் ரதோத்சவமாதலால் சம்பந்திப் பிராமணரின் ஸ்நேகிதரான அவ்வூர் தாசில்தார் தங்கள் காம்பில் இரண்டு நாட்கள் தங்கியிருந்து உத்சவத்தைப் பார்த்து விட்டுப்போகவேண்டுமென்று வெகுவாய்க் கேட்டுக்கொண்டார். அவ்விதமே அவர் மனைவி மக்களும் வேண்டிக்கொள்ளவே அங்கு தங்கினோம். ஆகா! அந்த சுவாமியை தரிசிக்கப் பதினாயிரம் கண்களிருந்தாலும் போதாது. திவ்விய தரிசனம்! வெகு திவ்விய தரிசனம். கோவிலைவிட்டு வெளியே வரவே மனது வரவில்லை. அன்றையதினம் மூன்றுதரம் சேவித்துவிட்டு வந்தோம். தேர் மத்தியானம் 11-மணிக்குக் கோவில் வாயிலை விட்டுப் புறப்பட்டது. அதுவும் அவ்விதமே அனேகவித ஜண்டாக்களினாலும், வித விதமான வர்ணப்பட்டுக்களினாலும், சித்திரங்களினாலும் கட்டப்பட்டிருந்தது. அநேகவித புஷ்பஹாரங்களினாலும், மாவிலைத் தோரணம், வாழைக்கன்றுகளினாலும்

சிங்காரிக்கப்பட்டிருந்தது. அன்றையதினம் சாயங்காலம் ஊரைச் சுற்றிப் பார்க்கச் சென்றோம். எவ்விடம் பார்த்தாலும் பித்தளை ப்பாசி முதல் வெள்ளி தங்கம் வரையில் உத்சவத்திற்காகக் கடைகள்வைக்கப்பட்டிருந்தன. எல்லாம் சுற்றிப் பார்த்துவிட்டு வீட்டிற்கு வந்து சாப்பிடக் கூட இல்லாமல் ஆயாசம் மேலிட்டுக் கோவிலிலிருந்து வந்த பிரசாதத்தைத் தின்று பால் அருந்திப் படுத்தூங்கினோம். மறுநாள் கோவிலில் கிரிஜா கலியாணத்தையும் பார்த்துவிட்டு சாயங்காலம் 4-மணிக்கு மோடார்களில் ஏறி மலையடிவாரத்திற்கு ½ - மைல் தூரத்தில்போய் இறங்கினோம். மோட்டாரை அதற்குமேல் ஓட்ட முடியாது. ஏனென்றால் அவ்விடத்திலிருந்து மலையடிவாரம் வரையிலும் இடம் மிகவும் கரடுமுரடாயிருப்பதினால் ரிக்ஷாவைத்திருக்கிறார்கள். ஆனாலும் நாங்கள் அடிவாரம் வரையிலும் நடந்தே போனோம். மோட்டாரை வைத்துப் பூட்டிக்கொள்ள அவ்விடத்திலேயே 5, 6 ஷெட்டுகள் இருக்கின்றன. ஆகிலும் நாங்கள் அவைகளை தாசில்தார் வசம் ஒப்பிவித்து விட்டோம். அடிவாரத்திலிருந்து மேல் செல்ல பெண்டுகளெல்லோரும் குரிச்சிகளில் ஏறிச் சென்றோம். புருஷர்கள் கால்நடையாகவே ஏறினார்கள்.

"குரிச்சியில் எப்படிப் போனீர்கள்"? என்று பங்கஜம் வினவவே, "எப்படி என்பதைச்சொல்லுகிறேன் கேளுங்கள். குரிச்சிகளுடைய காலுகளில் இரண்டு கொம்புகள் கட்டி இருக்கிறார்கள். அந்தக்கால்களை நான்கு கூலிக்காரர்கள் எடுத்து முதுகின் மேல் வைத்துக்கொண்டு போகிறார்கள். இவ்விதம் ஒவ்வொருவரும் ஒவ்வொரு குரிச்சியில் உட்கார்ந்து கொண்டோம். ஒவ்வொரு குரிச்சிக்கும் போக வர 5 ரூபாய்கள் சார்ஜாம். மேல் ஏற, ஏற கீழேபார்த்தால் அப்படியே தலை சுற்றி வாயிலெடுக்க வந்துவிடுகிறது. போகும் வழியில் ஒரு பக்கம் பார்த்தால் பாதாளம், ஒரு பக்கம் பார்த்தால் ஆகாயம் வரையில் உயர்ந்திருக்கும் பாறை. இப்படியே உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு சாயங்காலம் சுமார் 6 மணிக்கு மலையின் உச்சியை அடைந்தோம். ஆகா! எவ்வளவு குளிர்ச்சியான இடம்!

"அங்கு ஜனங்களுக்கு இறங்க கப்பன்ஸ் பங்களா (Cubbon's Bungalow), கன்னிங்ஹேம்ஸ் பங்களா (Cunningham's Bungalow), க்லென்டில்ட் பங்களா (ClentiltBungalow), ப்ரௌன்ஸ் பங்களா (Brown's Bungalow),செங்கீஸ் பங்களா (Sankey'sBungalow) என்று ஐந்து பங்களாக்கள் இருக்கின்றன. இவைகளைத் தவிர்த்து ஏழைகளுக்குத் தகுந்தாகவும் வீடு கட்டி இருக்கிறார்கள். நாம் முன்னமேயே நமக்கு இவ்வளவு இடம் வேண்டுமென்று அதிகாரிக்குத் தெரிவித்துவிடவேண்டும். வீட்டுவாடகை தினத்திற்கு ஒரு ரூபாயிலிருந்து மூன்று ரூபாய் வரையில் இடத்திற்குத் தகுந்தவாறு இருக்கின்றது.Sankey's Bungalow வில் ஒரு சமயற்காரன் கூட இருக்கிறான். வெள்ளைக்காரர்களுக்கு வேண்டிய சாப்பாடுகளும் வேறு இடத்தில் தயாராகின்றன. Cubbon's Bungalow வில் ஆங்கிலேயருக்கும் இந்தியருக்கும் ஸ்டோர் ரூம் (Store Room) வைத்திருக்கிறார்கள். மற்றும் அவ்விடம் பந்தாடும் இடங்கள் கூடச்செய்திருக்கிறார்கள். மலைக்கும் நந்தி ரயில்வே ஸ்டேஷனுக்கும் டெலிபோன் (Telephone) கூட இருக்கிறது. தந்திகள் நந்தி ஸ்டேஷனை அடைந்தவுடன் அவைகளை டெலிபோன் மூலமாக மேலிருப்பவர்களின் அட்ரஸ்களுக்குச் சொல்லி விடுகிறார்கள்.

"நாங்கள் Cunningham's Bungalow வில் தான் இறங்கி இருந்தோம். பங்களாவை எவ்வளவு நேர்த்தியாக வைத்திருக்கிறார்கள் தெரியுமா? எவ்விடம் பார்த்தாலும் அழகான Fur-

niture சாமான்களினால் நமக்கு சௌகரியமாக வும் அழகாகவும் ஜோடித்திருக்கிறார்கள். ஒவ்வொரு அறையிலும் குளிர்காயக்கும்மட்டி வைத்துஅதற்குக்கட்டிடம் கட்டி இருக்கிறார்கள்."

"பால், மோர் எல்லாம் மேலேயே கிடைக்கின்றனவா''? என்று வினவினாள் பாக்கியம்.

"அது தான் கஷ்டம். பால், காய் கறி, தயிர் மோர் எது வேண்டுமானாலும் கீழிருந்தே தான் தருவித்துக் கொள்ளவேண்டும். எதற்கும் மலைமேல் ஒரு பெரிய ஹோட்டல் கூட இருக்கின்றது''.

"நடப்பதற்கு (Walking) கல், முள் ஒன்றும் இல்லாவண்ணம் செம்மையாகச் செய்யப்பட்ட அநேக அழகிய வழிகள் இருக்கின்றன. ஆங்காங்கு உட்கார்ந்துகொள்ள பெஞ்சுக்கற்கள் போட்டிருக்கிறார்கள். சூரியன் உதயமும் அஸ்தமன சமயமும் மலைமேலிருந்து பார்த்தால் நமக்குத் தோன்றும் அந்த அழகிய தோற்றத்தை என்னால் வர்ணிக்க முடியாது. பெரிய கவிகளுக்கும் கூட அதை வர்ணித்தல் அசாத்தியம் என்று எனக்குத் தோன்றுகிறது. காலை 9 மணி வரையில் உள்ளேவிட்டு வெளியில் வர முடிகிறதில்லை. அவ்வளவு குளிருகிறது. காலை அந்த மலையிலிருந்து கீழ் நோக்கிப்பார்த்தால் மலைக்கும் கீழே இருக்கும் பூமிக்கும் நடுவில் ஓடுகிற மோடார்கள் கடலில் கப்பல்கள் போகின்றனவோ என்னும்படி தோன்றுகின்றன. இரவில் கப்பன் பங்களாவின் (அந்த பங்களா மற்ற இடங்களை விட உயரத்திலிருப்பதால்) மாடிமேல் நின்று கொண்டு பெங்களூர் இருக்கும் திக்கை நோக்கிப் பார்த்தால் 31-மைல் தூரத்திலிருக்கும் பெங்களூரிலிருக்கும் விளக்குகள் தெரியும். இதைக் கண்ணுற்றால் மனதிற்கு அதிக வியப்பைத் தருகின்றது. நந்திக்கிராமத்தில் உற்சவ நாட்களில் பசுக்கள் பிரதரிசனம் (cattle show) நடக்கிறதாம். அப்பொழுது மலைமேலிருந்து அந்த ஊரைப் பார்த்தோம். ஆயிரக்கணக்காக அந்த ஊருக்கு மாடுகள் வந்து சேர்ந்திருக்கின்றன. அவைகளெல்லாம் ஊர் அருகில் நிரம்பக் கற்களை வாரி இறைத்திருப்பது போல் தோன்றின. ஆனால் நோக்கத்தை விடக்கேட்பது சூட்சமமாதலால், அவ்வூரில் என்ன வாத்தியங்கள் சப்தம் ஆனாலும் மேலே நன்றாகக் கேட்கும்.

"அவ்விடத்தை விட்டு வா எங்களுக்கெல்லாம் மனதே வரவில்லை. ஒரு மாதம் இருப்பதாகப் போனவர்கள் இதோ இன்றைக்குப்போகலாம், நாளைக்குப்போகலாம், நாளன்றைக்குப் போகலாம் என்று இப்படியே அவ்விடம் இரண்டு மாதங்கள் இருந்து விட்டோம்'' என்று சொல்லி முடித்தாள் ஸ்வர்ணம்.

பின் எல்லோரும் "ஆகா! எவ்வளவு நேர்த்தியான இடம்! வெய்யிலில் பொசுங்கிப்போய்க் கொண்டிருந்தவளுக்கு அவ்விடத்தை விட்டு வர மனசுவருமா?'' என்று சொல்லிக் கொல்லென்று சிரித்தார்கள்.

பின் திரியை எண்ணிக்கொண்டிருந்த கனகம் மாமி உபன்னியாசத்தைக் கேட்டுக்கொண்டே "இன்று எல்லோருமாக 2500 திரிகள் திரித்து விட்டோம்'' என்று மொழிந்தாள்.

பின் ஸ்வர்ணம்பாள் கடியாரத்தைப் பார்த்து விட்டு "ஒரு மணிக்கு வந்தேன். 3–30 அடித்து விட்டதே! நான் போய்வருகிறேன் விசாலாக்ஷி'' என்றாள். உடனே விசாலத்தின் பெண் சாரதம் குங்குமம் கொணர்ந்து கொடுக்க, கடைக்குட்டி சுமித்திராவின் கையைப் பிடித்துக்கொண்டு வீட்டை நோக்கி ஸ்வர்ணம் நடக்கலானாள்.

சுபம்!

# அன்பின் ஆர்வம்.

(ஸ்ரீமதி சற்குணம்.)

மதுராபுரியின் தென்பாரிசத்தில் சாதாரண வீடு ஒன்று காணப்பட்டது. ஆனால் அது பார்வைக்கு சற்று புதிதாகவே காணப்பட்டது. வெளியே வாசல் திண்ணைகளும் அதற்கடுத்து ஓர் ஹாலும் இருந்தது. உள்ளே நான்கு அறைகளும் ஓர் கூடமும் ஓர் சிறிய தொட்டியும் அதைச் சுற்றி நான்கு சிறிய தாழ்வாரங்களுமடங்கியதாயிருந்தது. கூடத்தின் சுவரில் கண்ணைக் கவரும்படியான பல விதவர்ணமுள்ள படங்கள் தொங்கவிடப்பட்டிருந்தன. அக்கூடத்தில் ஓர் அழகிய மேஜையும் இரண்டு நாற்காலிகளும் போடப்பட்டிருந்தன. தவிர ஓர் பெரிய ஊஞ்சல் பலகை பார்ப்பவர்கள் அதில் உட்காரவேண்டுமென்று பிரியப்படும்வண்ணம் அவ்வளவு பளபளப்புடன் கட்டப்பட்டிருந்தது. தாழ்வாரத்தில் சாய்வு நாற்காலி யொன்று காணப்பட்டது. இதன் மீதில் ஓர் அழகான 'யானை' உருவம் அமையப்பெற்ற வஸ்திரம் ஒன்று போடப்பட்டிருந்தது. அங்குள்ள மேஜையின் மீதில் சில புஸ்தகங்களும் கையால் தைக்கப்பட்ட ஒன்றிரண்டு நோட்டுக்குகளும் வைக்கப்பட்டிருந்தன. அவைகளை நாம் என்னவெனக் கவனித்ததில், ஒன்று அத்யாத்மராமாயணம், ஒன்று சமஸ்கிருத சுலோகமும் தமிழுரையுமடங்கிய சிறு பகவத்கீதை ஒன்று, அதைப்போலவே கோபிகா கீதை ஒன்று, ஓர் தமிழ் நாமராமாயணம் ஓர் 'ஸ்ரீராம ஜயம்' வரையப்பட்டு வரும் நோட்டு, மற்றுமிரண்டு மூன்று 'சிந்தாமணி' என்னும் மாத சஞ்சிகைகள், தவிர 'சுதேசமித்திரன்' தினப்பதிப்பு ஒன்று ஆகிய இவைகள் காணப்பட்டன. இவைகளைக் கண்டளவில் இவைகள் அவ்வீட்டார் ஒருவரால் தினசரி உபயோகித்து வரப்பட்டவையாயிருக்குமென நான் ஊகிக்கலானேன். அச்சமயம் அங்கு மாட்டப்பட்டிருந்த பெரிய கடிகாரத்தினின்று டன், டன் என்று இரண்டு மணி அடித்தது. அதைக் கேட்ட ஜானகி என்னும் ஏழு வயதுள்ள குழந்தை ஒன்று "அம்மா! நான் பள்ளிக்கூடம் போகிறேன்" என்று சொல்லி அதன் புஸ்தகங்களுடன் வெளிவந்தது. அதைக் கேட்ட அவள் தாயார் அக்குழந்தையை அவள் சிநேகிதிகளுடன் துணை கூட்டி அனுப்பிவிட்டு உள்ளே வந்து அம்மேஜையின் அருகிலுள்ள நாற்காலி ஒன்றில் உட்கார்ந்தாள். அவளுக்கு சுமார் முப்பத்தைந்து வயதிருக்கலாம். அவள் ஒற்றை நாடியும் மாநிறமுமுள்ளவளாகக் காணப்பட்டாள். அவள் கண்ணில் கண்ணாடி போட்டுக் கொண்டிருந்தால் அவள் கண்களுக்கு நல்ல சுகமில்லையெனக் கண்டுகொண்டேன். அவள் முகக் குறியை நோக்குங்கால் அவள் ஏதோ துயரத்தால் பீடிக்கப்பட்டவளென சந்தேகமறத் தெரியவந்தது. ஆனாலும் அவள் சாந்தமாகவே காணப்பட்டாள். கோபக்குறி ஒன்றும் காணவில்லை. அச்சமயம் அவள் விசனத்தை அறிய எனக்குச் சற்று பொறுமையற்ற அவசரம் அதிகம் உண்டாயிற்று. முற்காலத்தில் நம் தேசத்திய மகான்களாகிய ரிஷீசுவரர்களுக்கு ஞானதிருஷ்டி இருந்ததே அதுபோல் தற்சமயம் ஓர் நிமிஷம் அத்திருஷ்டி நமக்கிருந்தால் அவள் மனதை அறிந்துகொண்டு விடலாமே எனத் தயங்கினேன். அதுதான் போகட்டும். இந்தநவீன நாகரிக உலகத்தார் எவ்வளவோ அரும் பெருங் காரியங்கள் செய்கிறார்கள். தவிர வைத்திய சாஸ்திர நிபுணர்கள் தங்களால் நேர்முகமாய் அறியக்கூடாத வியாதிகளை 'எக்ஸ்ரே' என்னும் படம் பிடித்து அதன் மூலியமாய்த்

தோலுக்குள்ளிருக்கும் வியாதிகளைக் கண்டு பிடித்து அதை நிவிருத்தி செய்கிறார்கள். அப்படிப்பட்டவர்களில் சிலர், மனதிலிருக்கும் எண்ணத்தைப் படம் மூலியமாய்க் கண்டுபிடிக்கும் காரியை ஏன் தெரிந்து கொண்டார்களில்லையெனச் சாலவும் துயருற்றேன். ஆனால் அது கண்டுபிடிக்காததற்கு இரண்டு காரணங்கள் எனக்குத் தோன்றின. முதலாவது காரணம் எந்த மனுஷ்யனும் தன் மனதைச் சற்றும் மறைவில்லாமல் பிறர் அறிய உடன்படான் என்பதே நம் மனப்பூர்வமான எண்ணம். இரண்டாவதோ வெளியில் படம் மூலியமாய்க் காணுவது சாத்தியமாகிவிட்டால் கோர்ட்டுகளில் வக்கீல்களுக்கும் நியாயாதிபதிகளுக்கும் எவ்வளவோ பாடுபட்டு சாட்சியங்கள் சேர்க்கும் ரகஸ்ய போலீசாருக்கும் வேலையில்லாமல் போய்விடும். அப்பொழுது ராஜாங்கத்தின் அழகு குன்றிப்போய்விடும். ஆகையால் அதில் அவர்கள் அலட்சியமாயிருக்கிறார்கள் என்று என்னுள் தீர்மானித்துக் கொண்டு, சற்று தாமதித்தால் அவள் மூலியமாகவே அவள் செய்கையிலிருந்தே அறிந்து கொள்ளலாமெனக் கருதி அவள் யாது செய்கிறாளென்று எதிர்த்துக் கவனிக்கலானேன். நிற்க, அப்பெண் மணி மேஜையைத் திறந்து ஓர் எழுதகோல் எடுத்து ஓர் கடிதத்தில் ஏதோ வரையலானாள். அச்சமயம் அவள் கண்களிலிருந்து பொட்டுப் பொட்டாய்க் கண்ணீர் உதிர்ந்தது. அதனால் கடிதம் நனைந்ததே தவிர அதை எழுத வொட்டவில்லை. பின் அவள் எழுந்து போய் ஓர் துண்டு கொண்டு தன் கண்களைத் துடைத்துக்கொண்டு தன் நாற்காலி மேலேயே போட்டுக்கொண்டாள். உடனே அவள் அக்கடிதம் வரைவதை விடுத்து, ராமாயண புஸ்தகத்தை எடுத்து வாசித்தாள். அன்று அவள் படிக்க வேண்டியது 'ஆரண்ய பர்வத்தில் ஏழாம் சருக்கமாயிருந்தது. ஆகையால் சீதையை ராவணன் அபகரித்ததைப் படிக்க நேர்ந்தது. அதை முடித்து விட்டு கீதையை எடுத்து மூன்றாம் அத்தியாயத்தில் சில சுலோகங்களைப் படித்து வைத்துவிட்டு நாம ராமாயணம் படித்தாள். அதையும் முடித்துவிட்டு கோபிகாகீதையை எடுத்து வாசித்தாள். அதில் ஸ்ரீகிருஷ்ணன் "ஹே,கோபிகைகளே! என்னிடம் உங்களுக்கு உண்மையான பிரேமையிருப்பது வாஸ்தவமானால், என் பிரிவினால் நீங்கள் பிராணனை விட்டிருக்க வேண்டுமே. அப்படிக்கில்லாததால் உங்களன்பு கபடமென நினைக்கிறேன்" என்று சொன்னதைப் படித்தவுடன், "சீ, இதென்ன! எதை எடுத்தாலும் அன்பே சம்பந்தப்படுகிறது?" எனச் சொல்லி அதையும் வைத்துவிட்டு, மித்திரனை ஒன்றிரண்டாய்ப் படித்துவிட்டுக் கடைசியாய்ச் "சிந்தாமணி"யை எடுத்து எதையோ வெகு கவனமாய் ஊன்றிப் படித்தாள். அது நமக்கு விளங்கவில்லை. அப்படிப் படித்துமுடியும் போதுமட்டும் கண்ணீர் மாலை மாலையாய் வந்துவிட்டது. உடனே அதை மூடிவிட்டு சரிதான் என்று தன்னுள் கூறிக் கொண்டு எழுந்துபோய் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொள்ளலானாள். அச்சமயம் மாசி மாதத்திய வெய்யிலின் தாபம் வெகு உக்கிரமாயிருந்தது. உடனே அவள் எழுந்து ஊஞ்சலில் உட்கார்ந்தாள். மறுவினாடி வெறிபிடித்தவள் மாதிரி எழுந்து தாழ்வாரத்தில் உலாத்தினாள். அதன் பின் பழையபடி வந்துட்கார்ந்தாள். அச்சம்பவத்தைக் கவனிக்குங்கால் அவ்வீட்டில் மற்றும் யாருமில்லை யென ஊகிக்க வேண்டியிருக்கிறது. ஏனெனில் அப்படியின்றி வேறு மனிதர் இருந்திருக்கும் பட்சத்தில் அவள் ஸ்திதியைக் கண்டிருக்கவும், அதன் காரணத்தை விசாரித்திருக்கவும் கூடும். நாமும் அவளிடமிருந்தே சங்கதியை அறியவிரும்பினோமாதலால், அவளை ஏனென்று கேட்கவோ

சாந்தமடையச் செய்யவோ உத்தேசிக்க வில்லை. அச்சமயம் அப்பெண்மணி தன் வாய் திறந்து ஏதோ பேசலானுள். உடனே வெகு கூர்மையுடன் கவனிக்கலானேன். என் மனதையும் வெகு ஜாக்கிரதையுடன் ஓர் நிலையில் நிறுத்திக்கொள்ளலானேன்.

அப்பொழுது அவள் கூறியதாவது :— "ஐயோ, நானென்ன செய்வேன்! என் மனதை எவ்வளவு சாந்தமடையச் செய்தாலும் அது முடியவில்லையே! இந்த நான்கு நாளாக என் கண்ணீரும் ஓயவில்லையே! நான் ஏன் இவ்வளவு அன்புக்காளாகி வீண் அவஸ்தைப்படவேண்டும்? சுமார் 4, 5 வருஷங்களுக்கு முன் அவள் ஒரு பெண் உலகத்தில் இருக்கிறுள் என்பது கூட எனக்குத் தெரியாதே. நாங்கள் இங்கே சேர்ந்திராவிடில் நானிப்பொழுது அடைகிற துன்பம் எனக்கு லாபமாயிருக்குமே. அப்படித் தானென்ன, நேசித்ததாலென்ன பிரமாதம். யாது தப்பு. இப்படியோ கரையில்லாத அன்பை உண்டாக்கிக் கொள்ளவேண்டும்! தவிர அவள் மேல் நான் இவ்வளவு அன்பு கொள்ளல் தகுதியோ! அவளெங்கே, நானெங்கே. அவள் நல்ல புத்திசாலி, நானே புத்தியற்றவள். அவள் நன்கு படித்தவள். நானே நிரக்ஷரகுக்ஷி. அவள் பொறுமையுள்ளவள்; நான் பொருமையற்றவள்; இதைப் போலவே பல்வேறு விஷயங்களிலும் எங்களுக்குள் பேதமிருக்கின்றது. இவ்வளவு பேதங்களுக்கு மிடையில், என்னளவும தடங்கலின்றி என் மனமானது அவளையும் அவள் மனதையும் கொள்ளைகொண்டு சூழ்ந்துவிட்டது. அதை இப்பொழுது சற்றும் தளர்த்த முடியவில்லை. நானிவ்வித மனோபாவங் கொண்டவளென்பதை அவள் அறியமாட்டாள். அறிந்திருந்தால் என்னை வருத்தப்படவிடமாட்டாள். அன்று நான் அவளைக் கோவிலில் கண்டபொழுதிலிருந்தே என் மனம் சஞ்சலிக்க ஆரம்பித்துவிட்டது. அப்படியே அதை அடக்கிக் கொண்டேன். நான்கு நாள் முந்தி வழக்கம் போல் அவளைச் சந்திக்க விரும்பி ஸ்தலத்துக்குப் போனேன். அங்கு அவளைக் காணுததால் விசாரித்ததில் உடம்பு அசௌக்கியமென்றும் வீட்டிலிருப்பதாகவும் சொல்லக்கேட்டுத் திரும்பி அவள் இருப்பிடம் சென்று பார்த்தேன். அவள் படுக்கையிலிருப்பதைப் பார்க்க நான் பெரிதும் விசனித்தேன். தனக்கு டாக்டர் உதவிவேண்டியதில்லையென்றும் தன்னுடைய சிகிச்சையிலேயே அனுகூலமாகிவிடுமென்றும் தான் நான்கு நாள் ரஜா எடுத்திருப்பதாகவும் அதற்குள் சுவஸ்தமடைந்துவிடக்கூடு மென்றும் என் கேள்விக்குப் பதிலிறுத்தாள். அதன்பின் சற்றே நாங்கள் சம்பாஷித்துக்கொண்டிருந்தோம். அவ்வளவில் அவளுடைய சிநேகிதி ஒருவள் தன்னிரு குழந்தைகளுடன் அங்கு வந்தாள். ஹா! அவர்களைக் கண்டவுடன் அவள் முகம் எப்படி மாறிய தென்பதைக் காண நான் வெகு ஆச்சரியமுற்றேன். அச்சமயம் அவளுக்கிருந்த வியாதித் தொந்திரவுகூட நீங்கிவிட்டதோவென நினைத்தேன். பின்னிட்டு அவள் அக்குழந்தைகளுடனும் குழந்தையின் தாயிடமும் நடந்துகொண்ட பான்மை என் மனதைப் பெரிதும வியக்கச்செய்து முடிவில் துன்பத்தை மூட்டிவிட்டது. அக்காட்சி பார்ப்பதற்கு ரம்மியமாயிருந்தாலும் என் மனப்பார்வைக்கு முற்றும் விரோதமாயிருந்தது. மனம் மாறுதல் அடைந்தால் தானுகவே முகம் வேற்றுமை அடைவது சகஜமல்லவா? எங்கே அவ்வேற்றுமையை அவள் கண்டுகொண்டு விடுகிருளோ வென்ற கவலையுமுண்டாய்விட்டது. எனக்கு என்னையும் அறியாமல் ஒருவித துக்கமுண்டாய்விட்டது. கண்களில் ஜலம் வந்து நிறைந்துவிட்டது. அதைவெளிவிடவும் உள்ளடக்கி ழுத்துக் கொள்ளவும் சக்தியற்றவளானேன். அச்சமயம் என்னுல் பேசமுடியவில்லை. மௌனமாயிருக்கவு மஞ்சினேன். இவ்வித ஸ்தி

தியில் நான் பத்து நிமிஷம் மெத்தவும் கஷ்டப்பட்டேன். பிறகு நான் உடனே அங்கிருந்து வெளிக் கிளம்புவது தான் இந்தஸ்திதிக்குப் பரிகாரமென்பதைத் தெரிந்துகொண்டு, வெகு கஷ்டத்துடன் அவளிடமிருந்து விடைபெற்றுக்கொண்டு என் வீட்டை நாடி அடைந்தேன். அடைந்ததுதான் தாமதம். என் மனதையும் கண்களையும் அவள் வழியில் செல்லவிடுத்தேன். கட்டிலில் படுத்தேன். விம்மி விம்மி அழுதேன். அச்சமயம் என் நினைவுகள் கணக்கற்றவையாயிருந்தன. ஏன் நான் அழவேண்டும்? என்னை யார் என்ன சொன்னார்கள்? பார்க்கப் போனால் ஒன்றுமேயில்லை. ஆனால் என் பொல்லாத ஓர் எண்ணம் என்னை வெகு துன்பப்படுத்தியது. அதென்னவெனில், வெளியில் சொல்லவும் வெட்கமாயிருக்கிறது. நான் வீட்டில் தனித்திருப்பது நல்ல வேளையே. இல்லையேல் என் விவேகமற்ற கோலத்தைக் கண்டு பிறர் என்ன நினைப்பார்கள்! தவிர அவர்களுக் கென்ன பதிலுரைப்பேன்!

அக்குழந்தைகளின் தாயாரை அவள் அதிப்பிரேமையுடன் நேசிப்பதால் எனக்கென்ன ஆகவேண்டும். அதனால் சாதகமோ அன்றி பாதகமோ ஒன்றும் காணவில்லையே. இல்லை. ஆனால் என் மனம் அப்படிச் சொல்ல மறுக்கிறது. அவாள் அடுத்திருக்கப்பட்டவர்கள். அவாள் ஒருவர்க்கொருவர் அடிக்கடி பார்க்கவும் பேசவும் சமயங்களில் பரஸ்பரம் உதவி செய்து கொள்ளவு முடியும். என்னாலப்படிக் கூடுமோ, ஆம் கூடாது. ஆனால் என் மனம் சகிக்கவில்லை. ஏன், ஆனால் நான் செய்வது யாது? அவர்கள் மீதில எனக்குக் கோபமா? அன்றிப் பொறுமையா? இல்லை, ஒருகாலுமில்லை. ஐயோ! என் அருமை சிநேகிதியின் மீதில் காற்றடிக்கவும் சகியாத நானே அவள் மீதில் அசூயையும் பொறுமையும் கொள்ளவேண்டும்! ஆனால் என்னமோ தெரியவில்லை. அப்படியே அன்று கழிந்தது. மறுநாட் காலை அவள் சுகத்தை அறிய விரும்பி அவளில்லம் சென்றேன். அக்காலையில் அவள் தன் சிநேகிதியின் அறையில் அவளுடைய குழந்தைகளுக்கு நீராட்டவும் மகிழ்வுடன் பேசிக்கொண்டிருக்கவும் கண்டேன். உடனே நான் முன்வைத்த காலைப் பின் வாங்கி ஏனிங்கே வந்தோமென்று தயங்கி நின்றேன். திடீரென்று எதிர் பாராதவண்ணம் என்னைக் கண்டதும் அவள் என்ன நினைத்தாளோ எனக்குத் தெரியாது. அதை அறிய அவள் முகத்தை வெகு கூர்மையாய் உற்று நோக்கினேன். என் வரவில் அவளுக்கச்சமயம் வருத்தமில்லையாயினும் சந்தோஷம் உண்டாக வில்லையென்பதை மாத்திரம் நிச்சயமா யறிந்துகொண்டேன். அச்சமயம் நான் இருவித கஷ்டத்துக்காளானேன். அவளை நான் அறிந்தேனென்பதை அவளறியா வண்ணம் வெகு ஜாக்கிரதையாயிருந்து இரண்டு நிமிஷத்தில் அவள் தேகசுகத்தை விசாரித்து வீட்டுத் திரும்பினேன். அன்றும் நானடைந்த கிலேசத்திற்களவே யில்லை. அன்று வெள்ளிக்கிழமையாதலால் வழக்கம் போல் கோவிலுக்குப் போகவேண்டியதாயிருந்தது. அங்கு போய் வந்தாலாவது மனம் நிம்மதியடையுமோவெனக் கருதினேன். அநேகமாய் நாங்கள் சேர்ந்தே போகப்பட்டவர்களாதலால் அன்று எனக்கு அங்கும் சூன்யமாகவே இருந்தது. இரவு முழுவதும் எனக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. அடுத்து இரண்டு நாள் அவள் வீட்டுக்குப் போவதில்லை யென்று எனக்குள் தீர்மானித்துக்கொண்டேன். அப்படிப் போகாமலிருந்ததும் அவளைப் பாராமலிருந்ததும் எனக்கு அவ்வளவு கஷ்டமாயிருந்ததே. ஆனாலும் அவள் சுகப்பட்டுவிட்டாளென்று மாத்திரம் பிறரைக் கொண்டு விசாரித்துத் தெரிந்து

கொள்ளலானேன். 'ஆ, தெய்வமே! இவ்விஷயத்தில் என் மனதை இக்கோலமாக்கி வெறிபிடித்தவள்போல் தடுமாறச் செய்ய உமது திருவுள்ளமோ' எனச் சொல்லி நாற்காலியில் சாய்ந்து தன் கண்களை மூடிக்கொண்டாள். அந்தோ பரிதபாம்! அச்சமயம் அவள் கண்களிலிருந்து தாரை தாரையாய்க் கண்ணீர் வடிந்தோடியது நமக்கு மெத்த துயரைக் கொடுத்தது. அவள் விருத்தாந்தம் முழுதும் அறியமுடியாமற் போனாலும், அவள் விசனத்தின் விவரத்தைச் சற்று மேலெழுந்த வாரியாய்த் தெரிந்துகொண்டதாலும், அவள் துயரத்தைக் காணச் சகியாததாலும் இன்னொரு நாள் அறியலாமென்ற எண்ணத்துடன் நம் இதர வேலையைக் கவனிக்க வெளிப் போந்தோம்.

இப்படியே ஒரு வாரம் கழிந்தது. திரும்பவும் அத்துர்ப்பாக்கிய நிலைமையிலிருக்கும் அவ்வரிய பெண்மணியைக் காண மீண்டுமவ்விடம் வந்தோம். அன்றைபதினமும் அதே நேரமாயிருந்தபடியால் தன் செல்வியைப் பள்ளிக்கூட மனுப்பிவிட்டு அதே இடத்தில் அந்த அம்மாள் வந்துட்கார்ந்தாள். நம் பார்வைக்கு முன்னிருந்ததைவிட அவள் மெலிவடைந்திருப்பதாகவும் துயரமேலிட்டிருப்பதாகவுமே காணப்பட்டாள். முந்திய நாளைப்போலவே அவ்வம்மை கிரமமாய்ப் புஸ்தகங்களைப் படித்துவிட்டு 'சிந்தாமணி'யைத் திருப்பித் திருப்பி நாலைந்து முறை எதையோ படித்து விட்டு மூடியபிறகு, ஓர் கடிதத்தை எடுத்து அழகாய் மடித்துத் தன்னுடைய பேனா ஒன்றெடுத்து வரையத் தொடங்கினாள். கொஞ்சம் வரைவதும் சற்று நிறுத்துவதும் சிறிது யோசிப்பதும் பிறகு எழுதத்தொடங்குவதுமாகவே ஓர் பெரிய கடிதத்தை எழுதி முடிக்கலானாள். அப்பொழுதும் நடுவில் அவள் தன் கண்களைத் துடைத்த வண்ணமாகவே யிருந்தாள். அடிக்கடி கடியாரத்தைப் பார்த்துக்கொண்டே யிருந்தாள். பின்பு தானெழுதிய கடிதத்தை உரக்கப் படிக்கலானாள். அது பின்வருமாறு.

"என் அன்பு நிறைந்த சந்திரா!

இக்கடிதம் உன் கைக்குக் கிடைத்ததேயானால் அதிக ஆச்சரியம் கொள்வா யென்பதில் சற்றும் ஐயமில்லை. தவிர இதைத் தொடங்கும்பொழுது சந்தோஷமும் முடிவில் அதில் ஏமாற்றமுமடைவாயென்பதில் கிஞ்சித்தும் சந்தேகமில்லை. இப்பவும் உன் தேகஸ்திதி முற்றிலும் அநுகூலமடைந்து வருவது தெரிந்து மெத்த சந்தோஷம். நானிக் கடிதமெழுதவேண்டிய அவசியத்தின் காரணத்தைச் சுருக்கமாய்த் தெரிவிக்கிறேன்.

சுமார் நான்கு வருஷங்களுக்கு முன் உன்னைக் கொஞ்சமுமறியாத நான், இந்த இரண்டு வருஷ காலமாய் உனக்காகவே இவ்வுலகில் உயிர் வாழ்வதாகக் கருதும் நான், இந்த ஒரு வாரமாக என் பிராணனை விடத் தயாராயிருக்கிறேன். நான் உன்னை நேசித்த நாளாய் என்னுடல் பொருள் ஆவி இம்மூன்றில் கடைசியது தான் எனக்குச் சொந்தமாதலால் அதை நான் உனக்கே அர்ப்பணம் செய்தவளானேன். ஆகையால் என் முதல் அன்புக்கு நீயே பாத்திரவாகியானாய். அதிலிருந்து ஓர் பித்துப் பிடித்தவள் மாதிரி சதா உன் சிந்தனையுள்ளவளானேன். ஒரு நாளுன்னைப் பாராவிடில் எனக்கது ஒரு யுகம் போல் காண்கிறது. ஆனால் உனக்கோ அப்படியல்ல. மதுவை வண்டுகள் சூழ்வதைப்போலவும் பலாப்பழத்தை ஈ மொய்ப்பது போலவும் ஜனங்கள் உன்மேல் நல்லெண்ணமுடன் அபரிமிதமாய் மோகங் கொள்ளுகிறார்கள். ஆகையால் அதிலிருந்து உனக்குப் பல சிநேகிதிகள் இருக்கலாம். என்னிலும் தாழ்வாகவும், சமமாகவும், உயர்வாகவு

மிருக்கலாம். சீ! அப்படியிருக்காது. என்னைக் காட்டிலும் அல்லது எனக்கு சமமாகவாவது உன்னை நேசிக்கக் கூடியவர்கள் உலகிலிருக்க முடியாதென்பதே எனது மனமார்ந்த துணிபு. இதையொட்டி எனக்கு ஒரு வாரமாய்ப் பெரிய மனோவியாதி பற்றிக்கொண்டுவிட்டது. மனோவியாதிக்கு மருந்தில்லை யல்லவா? இது இப்படியே முற்றினால் சித்தசுவாதீனம் இழந்தவளாவேனென்பது நிச்சயம். அதுவும் அதிகரித்தால் உலக வாழ்க்கையின் முடிவே நேர்ந்தாலும் நேரலாம். ஆகையால் உனக்கு ஒரு கடிதம் எழுதிவிட உத்தேசித்து அதைச் செய்யத் தொடங்கினேன். நான் வெறிபிடித்தலைந்தேனானால் அது நான் உன்னைக் கரையின்றி நேசித்த அன்பினாலென்றறிந்து கொள். சே! உன்னைக் குறைகூறுவது அழகோ! ஆகையால் குற்றமற்ற உன்னாலல்ல. அறிவில்லாதவளும் மனோதிடமில்லாதவளுமாகிய என்னாலேதான். நான் மரணமடைந்தேனானால் என்னுடல் வெந்து சாம்பலாகி அதுவும அழியும். ஆனால் என்னுயிர் உன்னைச் சூழ்ந்து நிற்கும். இதை நீ கண்டிப்பாய் உணர்ந்துகொள். உன் வாழ்க்கையில் நீ இதை மாத்திரம் மறந்துவிடாதே யம்மா. என் கோரிக்கை இதுவே. நீ உன இதர சிநேகிதிகளிடத்தில் பேசும் போதும சிரிக்கும்போதும் சந்தோஷமாயிருக்கும்போதும் உனக்கு எல்லா விதத்தாலும் தாழ்ந்தவளான மூட, எளிய, உன் இந்திராவை மாத்திரம் மறந்துவிடாதே. ஆனால் அந்தப் பேதைப் பெண்ணுககாக நீ துககிககவேண்டாம். உன் துயரம் எனக்கு சகிக்காது. என் வியாதிகாலங்களிலும் இன்னும் முக்கியமான சமயங்களிலும் நீ சமயாசமய மில்லாது எனக்குதவி புரிந்ததை நான் சற்றும் மறந்தவளல்ல. தவிர நான் அழைக்கும்போதெல்லாம் உன் கஷ்டங்களையும் கவனியாது வந்து என்னுடன் சந்தோஷமாய்ப் பேசிப் போவதை நான் என் நினைவிலிருந்து அப்புறப்படுத்தினவளுமல்ல. ஆனால் நீ ஏன் விசனிக்கிறாய்? என்று கேட்கலாம். கூறுகிறேன் கேள். காரணம் அற்பமானாலும் காரியம் எனக்கு அபாரமாகி விட்டது. நானென்ன செய்வேன். (பின்பு அவள் எழுதிய கடிதத்தின் ஒரு பக்கம் பூராவும் தன் மனதுக்குள்ளேயே படித்துக்கொண்டு விட்டாள். எவ்வளவு கவனித்தும் நமக்குத் தெரியவில்லை. திரும்ப சத்தமாய்ப் படித்தாள்) அதாவது—நான் என்ன, உனக்கு உன்னைத் தவிர யாரையும் நேசிப்பதில்லை யென்று உறுதி கொடுத்தேனோ என வினவலாம். இல்லை, நீ கொடுக்கவில்லை. நீ கொடுக்கவேண்டுமென்று நான் விரும்பினேனென்பதை நான் உன்னிடம் மறைககவில்லை. ஆகையாலிது தர்ம சங்கடமாயிருக்கிறது. நானாக விளைவித்துக்கொண்ட துன்பமிதுவாகையால் அதன் பலனை நான் அடைகிறேன். இவ்விஷயத்தில் நீ உன்னை அறியாமல் என்னில் கலந்திருக்கிறாய். வீணில் உன்னைக் குறை கூறுவது அழகில்லை, நியாயமுமில்லை. எப்படி எழுதினாலும் இதையே திருப்பித் திருப்பி எழுதுவதைத் தவிர வேறு ஒன்றும் காணவில்லை. கடைசியில் ஒன்று தெரிவித்துக் கொள்ளுகிறேன். இனி யார் உன்னை நேசித்தாலும அவர்களுக்கிடம் கொடாதே. ஏனெனில் உன் அருமை உனக்குத் தெரியாது. உன்னிடம் அதிகம் நெருங்கிப் பழகுபவர்களுக்குத் தான் தெரியும். இனி யாரும் என்னைப் போல் வருத்தமடைய இடம் கொடாதே. இது என் கடைசியும் முக்கியமுமான கோரிக்கை. உனக்காக என் உயிரை விடுவதானாலும் எனக்கு மெத்த சந்தோஷம். ஒருகால் கடவுள் செயலும் என் முடிவுமப்படி நேருமானால் என் மனோவியாதியின் காரணத்தைப் பிறரிடம் சொல்லாதே. நீயும் மனம் கலக்கவேண்டாம். சகலமும் தெய்வ சங்கல்பம். நான் என் சொந்த விஷயங்களில ரகஸ்யத்திலும் ரகஸ்யமான எவ்

வளவோ சங்கதிகளை உன்னிடம் கூறியுள்ளேன். அதைப் பிறரிடம் தெரிவிக்க மாட்டாயென்று நிச்சயமாய் நம்புகிறேன். உன் மேல் எனக்குக் கோபமோ வருத்தமோ கிடையாது. அர்த்தமில்லாதபடி நான் உன் மீதில் கொண்டேனே அந்த அன்பின்மேல் வெறுப்பும் வருத்தமுமடைகிறேன். பரவாயில்லை. ஒரு வேளை இவ்வுலகில் நான் உனக்கெழுதும் கடிதம் இதுவே கடைசியாகலாம். உனக்கு என் பட்சமான அன்பு.

இப்படிக்கு,
உன்னை முழுமனதுடன் நேசிக்கும்,
இந்திரா.

இக்கடிதத்தை வெகுவாய் யோசித்து அதிக கஷ்டத்துடன் எழுதி முடித்தேன். இதை உனக்கு அனுப்பும் வகை அறியாமல் தயங்குமெனக்குக் கடவுள் துணை செய்வாராக.

இதைப் படித்தாள். உடனே பொட்டெனக் கீழே போட்டாள். திரும்பி எடுத்தாள். 'சீ! இதைத்தான் அவளுக்கனுப்புவதா. இல்லை, வேண்டாம், முடியாது. அனுப்புவது அவசியம் தான். இல்லையேல் என் ஆத்மா சாந்தி அடையாது. இருக்கட்டும்' எனக் கூறிக்கொண்டு அக்கடிதத்தை நேர்த்தியாய் மடித்து ஓர் அழகான உறையில் போட்டு ஒட்டி அதன் மேல் விலாசமும் வரைந்து தன் மேஜையில் வைத்துப் பூட்டிவிட்டாள். அவள் சட்டென்று வைத்துவிட்டதால் யாருடைய விலாசமென்பதை நம்மாலறியக்கூடவில்லை. இதற்குள் மணி ஐந்தடித்துப் பதினைந்து நிமிஷங்களாகிவிட்டதால் அவளவ்விடத்தை விட்டகன்றாள். நானும் அப்பால் சென்றேன்.

இப்படியே பத்துநாட்களாயின. சுகம், துக்கம், சந்தோஷம், விசனம், நன்மை, தீமை, சௌக்கியம், அசௌக்கியம், பிறப்பு, இறப்பு இவைகளை ஜனங்கள் மாறி மாறி அநுபவித்த போதிலும் காலம் மாத்திரம் பட்சபாதமில்லாமல் ஒரே சமமாக ஜனங்களுக்குச் சென்று கொண்டிருக்கிறது. நானும் சாவகாசமாய் இந்திராவைப் பார்க்கச் சென்றேன். அன்று ஞாயிற்றுக்கிழமை பகல் ஒரு மணி யிருக்கும். கதிரவன், வெய்யிலின் தாபத்தை பொறுக்க மாட்டாமல் தபிக்கும் ஜனங்கள் தன்னைக் கூறும் வசை மொழிகளைச் சற்றும் கவனியாது தன் முழு பலத்துடன் தன் சக்தியை வீசிக்கொண்டிருக்கிறான். அச்சமயம் அக்கூடத்தில் ஓர் கட்டிலின் மேல் இந்திரா பிரக்ஞையற்றவள் போல் படுத்திருக்கக் கண்டேன். அவளருகில் ஓர் நாற்காலியில் ஓர் பெண்மணி உட்கார்ந்து கொண்டு அவள் கைநாடியைப் பரீட்சித்தும் தன் கையிலணிந்திருந்த ஓர் கைக்கெடியாரத்தைப்பார்த்தவண்ணமுமாக இருக்கிறாள். அவளைப் பார்த்ததும் நான் திடுக்கிட்டேன். அவள் முக மலர்ச்சியும் சாந்தமும் என்னைக் கவர்ந்தன. அதிகம் சொல்வதேன். அவள் சரஸ்வதி தேவியின் பூலோக அவதாரமென்றே நிச்சயித்தேன். மற்றும் சுமார் ஐம்பது வயதுள்ள ஓர் அம்மாள் ஒருபுறமாய் நின்று கொண்டிருந்தாள். தாழ்வாரத்தில் சற்றே அமைதிக் குறைவான முகத்தோற்றத்துடன் ஓர் ஆடவர் உலாவிக்கொண்டிருந்தார்.

அவர் அம்மங்கையை விளித்து "திடீரென்று இப்படி நேர்ந்ததற்கென்ன காரணமாயிருக்கும்?" என்றார்.

அவள் :—முதலில் இருந்தாப் போல் என்ன ஆச்சுது?

அவர் :—நான் ஊரிலில்லாததால் நேற்றிரவு இவ்விடம் வந்தேன். இன்று காலையிலிருந்தே அவள் வழக்கம் போல் சந்தோஷமாகக் காணப்படவில்லையானாலும் அதை எனக்குக் காட்டிக் கொள்ளாமல் நடந்து கொண்டாளென்பதை அவள் செய்கையி

லிருந்து நானறிந்து கொண்டேன். தவிர சற்றே தலைவலிப்பதாகச் சொன்னாள். திடீரென்று பனிரண்டு மணிக்குத் தனக்கு தலை சுழல்வதாகவும், ஓர் வகையான மயக்கத்தின் தோற்ற முண்டாகிறதாகவும் கூறி உங்களைப் பார்க்கவேண்டு மென்றும் சொன்னாள். உடனே அவள் அப்படியே கீழே சாய்ந்து விட்டாள். பிறகு படுக்கையில் நாங்களிருவரும் தூக்கிப் போட்டோம். பின்னிட்டு உங்களுக்கு ஆளனுப்பப்பட்டது. நீங்கள் அவளை அடிக்கடி பார்த்திருக்கக் கூடுமே. அவள் ஏதாவது அசௌக்கியமாயிருந்ததாக உங்களுக்குத் தெரிந்ததா?

அவள்:—அப்படி ஒன்றும் எனக்குத் தெரியவில்லை. நான் அவளை இருபது நாட்களுக்கு முன் பார்த்தபொழுது சந்தோஷமாகத்தான் காணப்பட்டாள். அதன் பின்னிட்டு நான் சாவகாசமாய்ப் பார்க்கவேயில்லை. வாரமொன்று அல்லது இரண்டு முறைதான் பார்த்தேன். ஆகலால் என்னால் திட்டமாய்க் கூற முடியவில்லை.

அவர்:—தற்காலம் என்ன சாந்தி செய்யலாம். ஏதாவது வேறு டாக்டரைக் கூப்பிடலாமா?

அவள்:—அவ்வளவு அவசியம் ஒன்றும் காணோம். இது ஏதோ மன அமைதிக்குறைவால் நேர்ந்த சம்பவமென்று எனக்குத் தோன்றுகிறது. சற்று தாமதிப்போம்.

பின்பு அப்பெண்மணி இந்திராவை அதிகம் பிரளவிட்டாமல் ரொம்ப ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொண்டிருந்தாள். அவள் படுக்கை அலங்கோலமாய்க் கிடந்ததால் அதை அப்படியே சரிசெய்து கொண்டிருந்தாள். அச்சமயம் திடீரென்று ஓர் கவரில் வைத்து ஒட்டப்பட்ட கடிதம் ஒன்று இவள் கண்ணில் புலப்பட்டது. அதை எடுத்தாள். விலாசத்தைப் பார்த்தாள். இரண்டு மூன்று முறை உற்றுநோக்கினாள். அது இந்திராவின் கையெழுத்து என்பதை சந்தேகமற அறிந்துகொண்டாள். உடனே இதில் ஏதோ மர்மம் இருக்கிறதென எண்ணியவளாய் அதைத் தன்வசம் வைத்துக்கொண்டாள். இச்சம்பவம் யாரும் கவனிக்கவில்லை. அவள் உடனே இந்திராவின் புருஷனை நோக்கி அவளைக் கீழே விழுந்துவிடாமல் பார்த்துக் கொள்ளும்படி சொல்லித் தான் வீட்டுக்குப் போய்த் திரும்பி வருவதாகக் கூறிப்போனாள். அவள் மனம் முழுவதும் அக்கடிதத்தையே கவர்ந்திருந்தது. அவளதிவேகமாய்த் தன் வீட்டை நாடிப்போனாள். பத்துநிமிஷத்துக்குள் தன்னில்லத்தை அடைந்தாலும் அவளுக்கு அது அரைமணி நேரமானதுபோல் தோற்றப்பட்டது. வீடு சென்றதும் அக்கடிதத்தைப் பிரித்துப் பார்க்கலானாள். படிக்கப் படிக்க அவள் முகம் மாறிக்கொண்டே வந்தது. இரண்டு மூன்று முறை படித்தாள். ஓர் ஐந்து நிமிஷம் அப்படியே அசைவற்று உட்கார்ந்தாள். அவ்விலாசதாரி இவள் தானோ அல்லது அக்கடிதத்தால் அவன் அசௌக்கியமறியலா மென்ற கருத்துடன் இவள் அதைப் பார்த்தாளோ வென்பது நமக்குத் திட்டமாய்த் தெரியவில்லை. அவள் முகக்குறியினாலோ எதுவும் விளங்கவில்லை. ஆனால் அவள் எவ்வளவு அமைதியுடனிருந்தாலும் அவள் உள்ளம் கடிதவிஷயத்திலீடுபட்டிருந்ததென்பது மாத்திரம் உண்மை. மாலை நான்குமணிக்கு இந்திராவைப் பார்க்கச் சென்றாள். அப்பொழுதும் நல்ல பிரக்ஞையற்றவளாகவே யிருந்தாள். பின்பு சூடான காப்பி தயாரித்துக் கொஞ்சம் கொடுக்கப்பட்டது. உணர்வில்லாமலே அதைக் குடித்தாள். பின்னிட்டு அவள் மெல்லிய குரலில் ஏதோ பிதற்றலானாள். "ஆ! இது என்ன கஷ்டம்! திடீரென்று இப்படியாச்சுதே. அவர் கேட்டால் என்ன சொல்லுவேன். அன்றி அவளுக்கேதுவைப்

பேன்'' பிறகு ஒன்றுமில்லை. இதைக்கேட்டதும் மங்கை இந்திராவின் புருஷனை நோக்கி, "இது நிச்சயமாய் வியாதியில்லை. ஏதோ தாங்கமுடியாத மனக்கிலேசம். ஆதலால் மருந்து ஒன்றும் வேண்டாம். சாயங்காலம் நல்ல உணர்ச்சிக்குத் திரும்பிவிடுவாள். அவளாகக்கேட்டால் நான் வந்திருந்ததாகவும், இரவு ஏழுமணிக்கு வருவதாகவும் சொல்லுங்கள். அவளுக்கெவ்வித தொந்திரவும் கொடுக்கவேண்டாம்'' எனச் சொல்லிவிட்டு தன்னுடைய ஸ்தலத்துக்குப் போய்விட்டாள். அதன் பின்னிட்டு திரும்ப இரண்டொரு முறை இந்திரா தன்னுள் என்னமோ முணுமுணுத்துக்கொண்டேயிருந்தாள். மாலை ஆறு மணி சுமாருக்கு இந்திரா கண்ணை நன்றாய் விழித்துப் பார்த்தாள். அப்பொழுது தன் படுக்கையில்தான் படுத்திருப்பதையும் தன் கணவன் தன்னருகிலுட்கார்ந்திருப்பதையும் தெளிவுறக் கண்டாள். 'நான் ஏன் படுத்திருக்கிறேன்? எப்படி இங்கு வந்தேன்?' எனக் கேட்டாள். அதற்கு அவர் 'ஒன்றுமில்லை. உனக்கு ஆயாசமாக இருக்கும், நீ பேசவேண்டாம். ஆதலால் அமைதியாயிரு. இரவுக்குமேல் சரியாய்விடும்' என்றார். 'குழந்தை ஜானகி எங்கே?' என்று அவள் கேட்க, தெருவில் விளையாடுவதாக பதிலிறுத்து மௌனமாயிருந்தார். 'எனக்கு ஏனோ தலைவலிக்கிறது?' என்றாள். அதற்கவர் 'இன்றிரவு தூங்கினால் எல்லாம் நீங்கிப் போகும்' என்றார்

மனைவி :—இவ்விடம் யாராவது வந்தார்களா?

புரு :— ஆம்!

மனைவி :—யார்?

புரு :—உன் சந்திரமதி.

மனை :—ஆ! நான் பார்க்கவில்லையே (என்று அவசரத்துடன் கூறினாள்).

புரு :—அமைதியாயிரு. ஏழு மணிக்கு நீ பார்க்கலாம்.

மனை :—அப்போது வருவதாகச் சொன்னாளா?

புரு :—ஆம்.

மனை :—மணியென்ன?

புரு :—ஆறேகால்.

மனை :—(சற்று தாழ்ந்த குரலில்) ஓ, அப்படியா! என்று சொல்லி கண்களை மூடிக்கொண்டாள். பின்னிட்டு தனக்குள் பின்வருமாறு சொல்லிக்கொண்டாள். 'நான் பேசிக்கொண்டிருந்தபொழுதே திடீரென்று இப்படியாச்சுதே. நேற்றிலிருந்து எனக்கிவ்வளவு நாளில்லாதபடி ஒரு மாதிரியாயிருந்ததே. அவர் அதைக் கண்டுகொள்ளக் கூடாதென்று எவ்வளவோ சந்தோஷமாயிருக்கப் பிரயத்தினப் பட்டேனே. அப்படியிருந்தும் இவ்வளவு தூரமாகிவிட்டதே. ஐயோ! ஒரு வாரமாய் என் படுக்கையில் ஒரு கடிதம் வைத்திருந்தேனே. அப்படுக்கை இங்கு கொண்டுவரப்பட்டிருக்கிறதே. அச்சமயம் அது கீழே விழுந்து விட்டிருக்குமோ? அன்றி யார் கையிலாவது அல்லது அவர் கையில் அகப்பட்டிருக்குமோ? சந்திரா வந்ததாகச் சொல்லுகிறாரே. அவளுக்ககப்பட்டிருக்குமோ, சே! இருக்காது. அடியிலல்லவோ சொருகிவைத்திருந்தேன். கடித சங்கதியே அறியாத அவர்கள் கண்ணில் அது புலப்பட்டிருக்கமுடியாது. ஆகையால் நான் வைத்த இடத்தில் தானிருக்கும், சந்தேகமில்லை. எனக்கெழுந்திருக்க சக்தி வந்ததும் பார்க்கலாம்'' என நினைத்து அமைதியாயிருந்தாள். அச்சமயம் சற்று தூங்கிவிட்டாள். மணி ஏழடித்தது. சந்திரா வந்தாள். (அவர்கள் சம்பாஷணையிலிருந்து அவள் சந்திரா என்று நமக்குத் தெரியவந்ததால் நாமும் சந்திராவென்றே அழைக்கலாம்.) சற்று நேரமிருந்து விட்டு அவள் தூக்கத்தைக் கெடுக்க வேண்டாமெனக் கருதி,

அவள் விழித்துக் கொண்டால், அவள் விரும்பும் ஆகாரத்தைக் கொடுக்கும்படியாகவும், அவளாகக் கேட்டால் தான் வந்து விட்டுப் போனதைச் சொல்லும்படிக்கும் அங்கிருந்த பெரியம்மாளிடம் சொல்லிவிட்டு அவள் எழுந்து வெளியே போகத்தொடங்கினாள். அச்சமயம் இந்திரா திடீரென்று "இல்லை, சந்திரா! நீ போகாதே. எனக்கு ஒன்றும் வருத்தமில்லை. நான் அறியாமல் செய்த பிழையைப் பொறுத்துக் கொள்ளம்மா. என் அறிவற்ற சந்தேகமெல்லாம் இப் பெரியோரால் தீர்ந்தது" எனச் சொல்லி விம்மி விம்மி அழலானாள். இதைக் கேட்ட அவள் புருஷன் வெளியிலிருந்து உள்ளே வந்து பார்த்தார். இந்திராவின் பரிதாபமும் ஈனஸ்வாமுமடங்கிய பிதற்றலைக் கேட்ட சந்திரா உடனே அவள் காங்களிரண்டையும் தன் கையால் சேர்த்துப் பிடித்துக் கொண்டு அவள் கண்ணீரைத் துடைத்து, 'இதோ என்னைப் பார், கண்ணை விழி. என்ன பிதற்றுகிறாய்? ஏனழுகிறாய்?' என வெகு சாவதானமாய்க் கேட்டாள். இக்குரலைக் கேட்ட இந்திரா உடனே கண்களை விழித்துப் பார்த்து, தன்னருகில் நிற்கும் தன்னுயிரினும் சிறந்த நேசியைப் பார்த்து சந்தோஷத்தாலும் பயத்தாலும் துக்கத்தாலும் திகைப்புடன் கூடி வியந்தவளாய், ஆ! என்று கூறி மேலே பேசமுடியாதவளாய் அவ்வளவில் நிறுத்திவிட்டாள்.

சந்திரா:—என்னம்மா! ஏதாவது ஸ்வப்னம் கண்டாயா? பரவாயில்லை. அப்படியானால் அதை மறந்து விடு. தலை வலிக்கிறதா? இன்னும் தூக்கம் வரும்போல் தோன்றுகிறதா? பசிக்கிறதா? என்ன ஆகாரம் சாப்பிடப் பிரியம்? நானுன்னைப் பிடித்துக் கொள்ளுகிறேன். நீ எதிர்ப் பக்கம் தலைவைத்துப் படுத்துக் கொள்.

என்று வெகு சாதுரியமாகவும், அர்த்த புஷ்டியுடன் கூடியதுமான வார்த்தைகளைச்சொன்னாள்.

இந்திரா:—(அவைகள் ஒன்றுக்குமே பதிலளிக்காமல்) அம்மா! நீ இவ்விடம் எப்பொழுது வந்தாய்? மணி என்ன? நான் உன்னைப் பார்த்துச் சில நாட்களாகிவிட்டன.

சந்தி:—(உடனே அவள் வார்த்தையைத் தடுத்து) பரவாயில்லை, அதனாலென்ன. நானிப்பொழுது தான் வந்தேன். மணி எட்டாச்சு.

இந்தி:—நீ இப்பொழுது நல்ல சுகம் தானா?

சந்தி:—ஆம், நீ தற்சமயம் என்ன சாப்பிடப் போகிறாய்?

இந்தி:—அம்மா! என் மனமும், கண்களும், வயிறும் நிறைந்திருக்கின்றன. ஆகையாலெனக்கெதுவும் விருப்பமில்லை. ஒன்றுமே வேண்டாம்.

சந்தி:—சே! அது கூடாது. சூடான பால் கொஞ்சம் சாப்பிடு. தற்காலம் அது எல்லாவற்றிற்கும் நல்லது.

இந்திரா பதில் சொல்லாமல் மௌனமாயிருந்தாள்.

கடைசியில் அவள் வேண்டுகோளுக்கிணங்கி ஸ்வல்பமாடப் பால் சாப்பிட்டாள். 'நீ வீண் கவலை ஒன்றும் கொள்ளாமல் மன அமைதியுடன் தூங்குவதற்குப் பிரயத்தினம் செய். நான் நாளைவருகிறேன்' என்று சொல்லித் தன் கிருகம் போகலுற்றாள். அவள் வெளியே வந்ததும் இந்திராவின் புருஷன், 'நான் நாளை ஊருக்குப் போகலாமா? எனக் கேட்டார். அதற்கவள் 'போவதில் பாதகமில்லை. ஆனால் அவள் நாளைத் தனியாயிராமலிருந்தால் நன்மை என்று எனக்குத் தோன்றுகிறது' என்றாள்.

நிற்க. நம் இந்திராவின் பிதற்றலுக்குக் காரணத்தை அறிவோம். சந்திரா வருவதற்குமுன், அவள் சற்றே கண்ணயர்ந்ததாகக் கூறினோ

மல்லவா? அச்சமயம் ஓர் பெரியவர் அவள் ஸ்வப்னத்தில் தோன்றி, "ஏ! குற்றமற்ற பேதாய்! தோஷமற்ற நங்காய்! வீணில் மனிதர் மேல் அன்பு கொண்டாடுவதில் யாது பயன்? அந்த உயர்ந்த அன்பை நீ கடவுளிடத்தில் செலுத்தினுயானல் அது பக்தியென்னும் பெயருடன் கூடி உன் மனம் சாந்தி அடையும். உன்னை முற்றும் பகவான் அறிவதுபோல் மற்றொருவர் அறியமுடியுமோ. ஆகையாலிவ் விஷயத்தில் உன் மனதைச் சற்று தளர்த்திக் கொள். தவிர நீ நேசிக்கும் உன் உத்தம சிநேகிதியிடம் யாதும் தப்பில்லை அவளுன்னை மறந்தவளுமல்ல, மறக்கப்பட்டவளுமல்ல. அக் குற்றமற்றவள்மேல் ஏன் வீணுக தோஷம் கற்பித்துக் கொள்ளுகிறுய்? அதனுல் ஏன் அர்த்தமில்லாதபடி விசனத்துக்காளாகி, உனக்கு நீயே துன்பத்தை உண்டாக்கிக் கொள்ளுகிறுய்? கேவலம் இந்தத் தாபம் உன்னுல் சகிக்கக் கூடாததானுல் அது மிகவும் தாழ்மை. உலகில் அதமவழியில் செல்லும் புருஷன் ஒருவன் தன் மனைவியை மிகவும் கேடுகெட்ட ஸ்திதியில் தாழ்த்திவைத்து, அவள் மனதைச் சாலவும் துன்புறுத்தித் தான் அன்னியள் ஒருவளுடன் சந்தோஷமாய்க் காலம் கழித்தாலும் கூட, அதைக் கண்ட அப்பெண்மணி வெகு பொறுமையுடன் தன் விதியை நொந்தவளாய் அப்புருஷனுக்கே தொண்டு செய்யும் குணத்துடன் தன் காலத்தைக் கழிக்கிறுள். ஆ! யோசித்துப்பார். இதைப் பார்க்கிலும் உன் துயரம் கொடுமையோ! மேலும் அவள் உன்னைத் தாழ்மைப்படுத்தவுமில்லை. இந்த உண்மையை நீ நாளடைவில் கண்கூடாகக் காணப் போகிறுய். ஆகையால் நீ பைத்தியக்காரியாகவோ அல்லது மரணத்தையோ அடைந்தாயேயானுல் என்ன பிரயோசனம்? அச்சமயம் இந்த உண்மையை நீ அறியக் கூடுமோ? ஆதலால் உன் மனதை நல் வழியில் செலுத்தி சாந்தமடையச் செய். ஓ! குற்றமற்ற அன்பென்னும் சாகரத்தில் அமிழ்ந்து நீராடும் அருமை இந்திரா! உன் துயரை ஒழி. கவலையை யகற்று. மனம் தேறி சந்தோஷமாயிரு. இதோ உன் அன்பே வடிவமாய் அமைந்திருக்கும் அருமையும் பெருமையும் வாய்ந்த சந்திரா உன்னருகில் நிற்பதைப் பார்" என்று சொல்லி அப்பெரியார் உடனே மறைந்து போனுர். அதன்பின் தான் இந்திரா திடுக்கிட்டவள்போல் தன்னுலேபேசிக்கொண்டு அழ ஆரம்பித்தாள். இதன்பின் நடந்த சம்பவம் நம் வாசகர்கள் அறிந்ததேதான்.

பின் இந்திரா அன்றிரவை ஒரு விதமாகக் கழித்தாள். சொல்லிப் போனதுபோல் காலையில் சந்திரா வந்தாள். 'தலை வலிக்கிறதா?' என்றுள். அதற்கு 'தலை வலியில்லை. ஏனே மெத்த பலவீனமாயிருக்கிறது. என் வீட்டு வேலைகளைச் செய்ய இன்று இயலாதெனக் காண்கிறது' என்றுள். 'நீ இன்று முழுமையும் பூர்ணமான ஓய்வு எடுத்துக் கொள். நாளை உனக்குச் சரியாகிவிடும்' என்று சொல்லி விடைபெற்றுச் சென்றுள் சந்திரா.

அது போலவே இவளும் அன்று ஓய்வுடனிருந்தாள். ஆனுலும் அவள் மனது தன் படுக்கையில் வைத்த கடிதத்தையே நாடியிருந்தது. தன் புருஷன் அன்றெல்லாம் தன்னுடனே இருந்ததால் சாவதானமாய்த் தேட முடியவில்லை. ஆனுல் அது தன் பதியின் கைக்குக் கிடைக்கவில்லையென்று நிச்சயமாய் எண்ணினுள். ஏனெனில் கிடைத்திருக்கும்பட்சத்தில் அவ்விஷயமாய்த் தன்னிடம் அவர் ஏதாவது பிரஸ்தாபித்திருப்பாரென்பது அவளெண்ணம். அக்கடிதத்தைக் கிழித்து விடுவதென்றும் சந்திராவுக்கனுப்புவதில்லையென்றும் அவள் இப்பொழுது எண்ணினுள். தவிர நல்ல வேளையாய் அவள் பார்க்காமலிருக்க நேர்ந்ததேயென்றும் அகமகிழ்ந்தாள்.

மறுநாள் அவள் சௌக்கியமுற்றுப் படுக்கை விட்டு எழுந்தாள். அவள் புருஷனும் புறப் பட்டுப் போனர். முதல் முதலாய், கடிதத்தை நன்கு தேடினள். எவ்வளவு பார்த்தும் கிடைக்கவில்லை. அது எப்படிக் கிடைக்கும்? மழைவிட்டும் தூவானம் விடவில்லை யென்பது போல் மனச் சோர்வுற்றாள். (அவள் ஸ்திதி யைக் கவனிக்கச் சகியாதிருந்ததால் நான் நடந்த உண்மையைச் சொல்லிவிட்லாமா வென்று யோசித்தேன். ஆனல் இவ்வளவு தூரம் மறைந்து நின்ற நான் கடைசியில் என் வெளிப்பட வேண்டுமென்று வாளா விருந்து விட்டேன்.) கடிதம் யார் கையிலகப்பட் டதோவென்று நினைக்க நினைக்கப் பெரிதும் கிலேசமுற்றாள். தவிர திருடனைத் தேள் கொட்டினதுபோல் மௌனமா யிருக்கவும் நேர்ந்தது. "ஏ ஜகதீசா! எனக்கு உம்மால் அளிக்கப்பட்ட தண்டனை சாலவும் பொருந்தி யதே" எனப் பொறுமையுடனிருந்தாள். இவ் விதம் ஒரு வாரமாயிற்று இடையில் சந்திரா வும் அடிக்கடி வந்துகொண்டுதானிருந்தாள். ஆனல் அவள் பத்து நிமிஷங்களுக்குமேல் இருப்பதில்லை. இவளும் அவளை வற்புறுத்தவு மில்லை. கடித விஷயம் பரஸ்பர மிருவர் மன திலு மிருந்தபோதும் அவர்கள் அது விஷய மாய்ப் பேசிக்கொண்டவர்களல்ல. வரவர இந்திராவுக்கு எவ்வளவு சமாளித்தாலும் முடி யாமல் போய்விட்டது. இதை அவள் ஜாடையி லிருந்து கண்டுகொண்ட சந்திரா, இனி அதை மறைப்பதைவிட எவ்விதமாகவாவது வெளிப் படுத்திவிடவேண்டுமென்றும், அதில் தான் நன்மைக்கு வழி ஏற்படுமென்றும் தன்னுள் தீர்மானித்துக்கொண்டாள். தவிர ஏற்கனவே அவள் நம்மால்தான் பெரிய கஷ்டத்துக் காளானளென்றும், மனோ தைரியமும் தேக திடமுமற்ற அவளை நாம் இனியும் தொந்தரவுக் காளாக்குவது உசிதமல்லவென்றும் முடிவு கொண்டாள். "ஐயோ பாபம்! அவள் நம் மீதில் எவ்வளவு அன்பு கொண்டிருக்கிறா ளென்று அவள் கடிதத்திலிருந்து தெரிகிறது. வாஸ்தவத்தில் அவள் இவ்வளவு பிரேமையுள் ளவளென்றிதுவரை நான் தெரிந்துகொள்ளவு மில்லை. ஆ! அவள் வரைந்துள்ள நிருபத்தி லிரண்டொரு வரிகள் என் கல்லான நெஞ்சை யும் பிளக்கின்றன. அவள் என்மீதில் கொண்ட அன்புக்கு என்னல் என்ன பிரதி செய்யக் கூடும்? கேவலம் என்னிடம் அவள் எதைப் பெரிய காரியமாய் விரும்புகிறாளோ அதையே அவளுக்கு அளிப்பேன். அவளைக்காட்டிலும் உயர்ந்ததோ அல்லது சமமானதோ வேறு ஒரு பொருளையும் நான் உலகில் காணவில்லை. ஆதலால் அவள் மனதைச் சாந்தப்படுத்தவும் சந்தோஷமடையவும் செய்யவேண்டியது என் முக்கிய கடமை. என்மீதில் அவள் ஏன் இவ் வளவு அன்பு கொண்டாடவேண்டும்? என் னைக் கருதி அவள் சில விஷயங்களில் மாறி நடந்துகொள்ளுவதும் நானறிந்ததுதான். ஏ, தெய்வமே! என்னை ஏன் சிருஷ்டித்தீர்?" எனச் சொல்லிப் பெருமூச்சு விட்டவளாய் முகம் குன்றலானள். அவள் நல்ல விவேகமும் ஆற்றலும் படைத்தவளாதலால் மறு நிமிஷமே தன்னைத் திடப்படுத்திக் கொண்டுவிட்டாள். இரண்டொரு நாட்கள் சென்றன. சாயங்காலம் ஐந்து மணி சுமாருக்குச் சந்திரா இந்திராவைப் பார்க்க வந்தாள். அவள் வரவு இவளுக்குத் தெரியாததால் இந்திரா தன் கடிதத்தின் வழி அறியக்கூடாமற் போனதைப்பற்றிய மனக் கிலேசத்துடன் கூடியவளாய்த் தன்னலடக்கப் பட்டும் தடுக்க முடியாதபடி வழிந்தோடும் தன் கண்ணீரைத் துடைத்த வண்ணமாய் சாய்வு நாற்காலியில் வீற்றிருப்பதைச் சந்திரா பார்த் தாள். இந்திராவின் ஆழ்ந்த துயரமானது தன்னுயிரென மதிக்கும் சந்திராவின் வருகை யைக்கூட உடனே தெரிந்துகொள்ளவில்லை.

அந்த ஸ்திதியைக் கண்ணுற்ற சந்திரா, அவளை விளித்து "என்னம்மா செய்கிறுய்? ஏனிவ் வித மிருக்கிருய்?" எனக் கேட்டுக்கொண்டே அவளருகில் உட்கார்ந்தாள். இந்த தொனியையும் சந்திராவையும் திடீரென்று கண்டு திடுக்கிட்டவளாய் தன்னைச் சந்தோஷமுள்ளவள் போல் மாற்றிக்கொண்டு அவளுக்கு நல்வரவு கூறினுள். இந்த சமயத்தை நழுவவிடக்கூடாதென்று சந்திரா "ஏனம்மா, உனக்கிவ்வளவு துயரம்? உன்னைச் சேர்ந்த யாவரும் நல்ல சுகம்தானே?" என வினவினுள்.

இந்திரா :—ஒன்றுமில்லை. அனைவரும் சுகம் தான்.

சந்திரா :—பின் என்ன உன் விசனத்துக்குக் காரணம்?

இந். :—(சற்றே யோசித்தவள் மாதிரி பிறரிடம் சொல்லக்கூடியபடி) யாதுமில்லை.

சந். :—என்னிடத்திலுமா சொல்லக்கூடாது?

இந். :—இல்லையம்மா! உனக்கு மறைக்க எனக்கு யாதுமில்லை. என்னமோ மனதில் சதா துயருண்டாகிறது.

சந். :—குடும்ப விஷய சங்கதி காரணமாயிருக்குமோ?

இந். :—சே, இல்லை. தெய்வ சங்கல்பத்தால் எனக்கம்மாதிரி ஒன்றுமே இதுவரை நேர்ந்ததில்லை. ஆனுல்—

சந். :—ஆனுல், மற்றுமென்ன?

இந். :—எனக்கு சொல்லத் தெரியவில்லை.

சந். :—பரவாயில்லை. எவ்வளவு நாளாக இவ் விதமிருக்கிறது?

இந். :—எனக்குக் கொஞ்ச நாளாகவே இப்படி இருக்கிறது. இரண்டு நாளதிகமாகும். சில நாள் குறைந்திருக்கும். ஆனுல் ஏறக் குறைய ஒரு மாதத்திற்கு மேலாக அதிகமாகிவிட்டது. குறையும் வழியைக் காணவில்லை. நடுவில் புதியதாய் மற்றும் ஒரு காரணம் அத்துடன் கலந்துகொண்டுவிட்டது. என்னுல் அதுமுதல் குழந்தையுடன்கூட சந்தோஷமாயிருக்க முடியாமல் தயங்குகிறேன். எனக்குத் தூக்கமும் பிடிக்கவில்லை. ஆகாரத்தையும் மனம் விரும்பவில்லை

சந். :—(உடனே) அக்கவலைக்கு உண்மையில் காரணமிருக்கிறதா?

இந். :—(அவளப்படிக் கேட்டதும் திடுக்கிட்டு) காரணமிருந்ததால்தான் நேர்ந்தது.

சந். :—ஆனுல் அக்காரணம் இப்பொழுதும் அப்படியேதானிருக்கிறதோ?

இந்திரா பதிலுரைக்காமல் மௌனமாயிருந்தாள்.

சந். :—என் அன்புக்குகந்த அருமை இந்திரா! உன் மனதைத் திடப்படுத்தி உன் துயரத்தை அகற்றிக்கொள். உன் நினைவு சுத்தத் தப்பு. போனது போகட்டும். உன்னுடைய தூய்மையான, நிகரற்ற அன்புக்கு முன்னுல் அப்படித் தோன்றியிருக்கலாம். அவைகளை மறந்துவிடு. இனி அவ்விஷயமாய் நீ கிஞ்சித்தும் சந்தேகம் கொள்ளாதே. நான் உன்னை நன்கு அறிவேன். உன் மிதமிஞ்சிய துயரத்தால் நீ பெரிய அபாயத்திற்கு ஆளானுய். அன்று நீ மூர்ச்சை தெளிந்திராமலிருந்தாயேயானுல் இன்று நான் யாரிடம் பேசிக்கொண்டிருப்பேன்? இரும்பையும் இளகச் செய்யும் ஸ்திதியில் நீ வரைந்த கடிதத்தைப் படித்துவிட்டு அதற்குப் பதிலளிக்க முடியாமல் நான் எந்த ஸ்திதியிலிருப்பேன்? கடவுள் உன்னைக் காப்பாற்றினுர். அதற்காக அவருக்குப் பன்முறை வந்தனம் புரிகிறேன். நீ யாருக்காகக் கடிதம் எழுதி அதை அனுப்பலாமா,

வேண்டாமாவென யோசித்துக்கொண்டிருந் தாயோ அந்த ஸ்திதியில் அதே கடிதத்தை உன் படுக்கையிலிருந்து நானடைய நேர்ந் தது. இது தற்செயலாய் நேர்ந்த சம்பவம். உன் அபாயத்தின் காரணத்தை அறியமுடி யாமலிருந்த ஸ்திதியில் கடவுள் எனக்கு அதை அளித்துக் காரணத்தைத் தெரியப் படுத்தினர். தவிர, உன் வீட்டாரும் நான் கடிதம் எடுத்ததை அறிந்தவர்களல்ல. இது வே உன்னுடைய ஏற்கெனவே இருந்த துய ரத்துடன் கலந்துகொண்ட இரண்டாவது காரணம். அதில் எள்ளளவும் சந்தேகமில்லை. நீ யாருக்காக எழுதினயோ அவள் கையில் தான் கடிதம் கிடைத்தது. இதிலிருந்தே நம் அன்பு நிதரிசனமாகிறது. ஆகையால் முந்திய விஷயத்திலோ அல்லது இரண்டா வது விஷயத்திலோ உனக்கேற்பட்டிருக்கும் கவலையை முற்றும் ஒழித்துவிடு. மூன்ருவ தாக உனக்கிருக்கும் வருத்தமும் நான் அறிந்ததே தான். நீ அதைக் காண்பியாமல் விட்டாலும் நான் அதைக் கவனிக்காதவ ளல்ல. நீ இனி அதற்குடன்படாதிருப்பதும் வருத்தப்படுவதும் தப்பு. ஆகையால் நீ செல்லவேண்டிய இடத்துக்குச் செல்ல வேண்டியதுதான். மனமுண்டானல் இட முண்டு. ஆதலால் நாம் ஒருவருக்கொருவர் தூரத்திலிருந்தாலும் மனமானது நம் அரு கிலே இருந்துகொண்டுதானிருக்கும். ஆகை யால் புத்திசாலியாகிய நீ காரிய காரணங் களை நன்கு ஆராய்ந்து பார்த்து நேர்மை யான வழியில் புத்தியைத் திடப்படுத்திச் செல்லவிடு. கேவலம் என்னிமித்தம் வீணில் மனதையும் தேகத்தையும் சோர்வடைய இடம் கொடுக்காதே. அது உனக்குத் தீங் காய் முடியும். நானிப்படிக் கூறுவதால் என்னை மறந்துவிடு எனச் சொல்வதாக நினைக்கவேண்டாம். இது இந்தப் பரந்து விரிந்த பூமியில் முடியாத காரியம். இப்படிக் கண்ணீரை நீ வெளிவிடுவது உன் கண் ணுக்கு மெத்தக் கெடுதல். வெகுவாய் மன தில் கவலை கொள்ளுவது தேகத்துக்குப் பெரிய ஆபத்து. மனேவியாதிக்கு மருந் தில்லையென்பதை நீயே ஒப்புக்கொண்டிருக் கிருய். ஆதலால் உன் மனதை நல்ல புஸ்த கங்கள் படிப்பதில் செலவழி. அப்பொழுது உனக்கு சாந்தி யுண்டாகும். கடவுளிடம் உன் பக்தியைச் செலுத்து. நான் என்னவோ சொல்லுகிறேனென்று மேலும் நீ வருத் தத்துக்கு ஆளாக வேண்டாம். பலபல சொல்வதில் யாது பயன்! கடைசியாய்ச் சொல்லுகிறேன். வெளித்தோற்றத்தை என் விஷயத்தில் நீ நம்பி வீணில் ஏமாந்து போகவும் வருத்தப்படவும் செய்யாதே. இந்த உலகத்தில் நீயே என்னுயர்ந்த சிநே கிதியும் பந்துவுமாவாய். இது சத்தியம். இதுதானே என்னிடம் நீ விரும்பியது. உன் முதல் அன்புக்கு நான் பாத்திர மென்று நீ சொல்லுகிருய். என் அனுபவத் தில் உன்னைப் போலொத்த ஸ்திதியிலிருக்கப் பட்டவர்கள், மனப்பூர்வமாய் எளிதில் சொல்லும் வார்த்தை இது அல்லவென்றே நினைக்கிறேன். அப்படி யிருக்க நான் சொல்லுவது என்ன அதிசயம்? என் குற்ற மற்ற அருமை வாய்ந்த இந்திரா! என் மனதைக் கொள்ளை கொண்ட உனக்கே என் அன்பு முழுவதையும் ஒதுக்கி வைத்து விட் டேன். ஆகையினுல் இனி லவலேசமும் துயரப்படாமல் சந்தோஷமாயிரு. நான் உன்னை முதன் முதலில் பார்க்கும் பொழு தெல்லாம் நீ எவ்வளவோ சந்தோஷமாகக் காணப்பட்டாய். பின்னிட்டு அதிலும் சமீபகாலமாக வாவா உன் முகத்தில் அதற்கு மாருக துக்கக்குறிகளே காணப் படுகின்றன. ஏன் நீ காரணமில்லாமல் அப்

படியிருக்கவேண்டும்? பரவாயில்லை. இனி அவைகளை மறந்து விடு.

என்று சொல்லி இந்திராவின் முகத்தை உற்று நோக்கினள். தன் உயிரினும் சிறந்த சந்திராவின் அமுதத் தினுமினிய வசனங்களைக் கேட்டுக்கொண்டே வந்த இந்திரா, அவள் பேசியதை நிறுத்திவிட்டதும் திடீரென்று தூங்கி விழித்தவள்போல் நிலைதடுமாறித் தன்னைத்தானே சமாளித்துக் கொண்டு, தன் கண்களைத் துடைத்துக் கொண்டு "நன்று, நன்று, சந்திரா! நீ இவ்வளவு நாளுமில்லாதபடி இன்று பெரிய பிரசங்கம் செய்துவிட்டாய். அது எனக்கு மெத்த சந்தோஷம்" என்றாள்.

இந் :—அக்கடிதம் வாஸ்தவமாய் உனக்குக் கிடைத்ததா?

சந் :—ஆம் இல்லாமலிருந்தால் நானிவ்வளவு தூரம் எப்படி உன்னை அறியமுடியும்?

இந் :—ஏன் இவ்வளவு நாள் அதை என்னிடம் மறைத்தாய்?

சந் :—இல்லை. நான் மறைக்கவில்லை. வெளியிட வேண்டிய சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டேயிருந்தேன்.

இந் :—அக்கடிதமிப்பொழுதெங்கே? தவிர அக்கடித சங்கதி இன்னும் யாராவது அறிந்தார்களா?

சந் :—ஆம்! நம்மிருவரைத்தவிர ஒருவர் அறியக்கூடும்.

இந்:—(வெகு விசனமான அவசரத்துடன்) யார்?

சந் :—உன்னையு மென்னையும் ஒன்றாக்கிய கடவுள்.

இந் :—(சிரித்தவண்ணமாய்) இது சத்தியமா?

சந் :—ஆம் சத்தியம்.

இந் :—அதை என்னிடம் கொடுத்துவிடு.

சந் :—அது முடியாது. அது எனக்குத்தான் சொந்தம்.

இந் :—நான் வரைந்ததால் அது என்னுடையதே.

சந் :—சரி, பார்க்கலாம்.

இந் :—அக்கடிதத்திலிருந்து நீ என்ன கண்டு கொண்டாய்?

சந் :—(சற்றே நகைத்த வண்ணமாய்) நீ எதை விரும்பினாயோ அதைத் தெரிந்து கொண்டேன்.

இந் :—அந்த அறிவற்ற கடிதத்திற்காக அக்கடிதம் வரைந்தவள் மேல் உனக்குக் கோபமும் விசனமும் உண்டாயிருக்கு மல்லவா?

சந் :—ஆம், அது முற்றும் உண்மை. அதற்கு வேண்டித்தானே நான் மேலே கண்ட தண்டனையை அவளுக்கு விதித்து விட்டேன்.

இந் :—(இதைக்கேட்டவுடன் அடங்காமகிழ்ச்சியடைந்து) பிரியமுள்ள என் சந்திரா! என்னை மன்னித்துக் கொள்.

சந் :—ஓ! அது சற்றும் முடியாத காரியம்.

இந் :—ஏனம்மா நீ இவ்வூருக்கு வந்தாய்?

சந் :—நீ இன்றையதினம் இந்தக்கேள்வியைக் கேட்பதற்காகத்தான்.

இந் :—எனக்குத் தூக்கம் வருவதற்கு ஏதாவது மருந்து தெரிந்தால் சொல்லு.

சந் :—ஆம்! அவசியம் சொல்லுகிறேன். நீ விவாகமானவள். சிறுவயதில் நாம் சேர்ந்து வளர்ந்த காரணத்தால் எனக்கும் உன்னிடம் அளவற்ற அன்பு உண்டு எனினும் இவ்வன்பிற்காக நீயும் நானும் ஓரிடத்தில் சேர்ந்து வசித்தல் முடியாத காரியம். விவாகமில்லாது இருக்கும் நான் உன்னுடன் வசித்தால் உன் கணவனுக்கு வீண் அபவாத மேற்படும். நம் நாடு முற்காலம

போல் பரிசுத்த வாழ்வில் இருக்கவில்லை. ஆகையால் என் விஷயமாய் வீண் கவலை கொள்வதை விட்டுவிடு. அடுத்தபடி நீ சந்தோஷமாயிரு

இந்:—நானென்ன செய்வேன். நானுன்னைப் பார்க்கும்பொழுதும் பேசும்பொழுதும் எவ்வளவோ சந்தோஷமாகவே இருக்கிறேன். ஆனால் உன்னைப் பிரிந்துவரும்பொழுதே எனக்கு அடங்காத் துக்கம் வந்துவிடுகிறது. மறுபடி உன்னைப் பார்க்குமளவும் அப்படியே யிருக்கிறது. நானும் அதைக் குறைக்கவும் ஒழிக்கவும் எவ்வளவோ பார்த்தும் சற்றும் முடியவில்லை. நீ சொன்னதுபோல் முன்னிருந்த முகமலர்ச்சியும் அகமகிழ்ச்சியும் என்னில் குறைந்து விட்டது வாஸ்தவம்தான். அதிலும் அடுத்து நடக்கப் போகும் காரியம் என்னை இன்னும் வெகுவாய்த் துன்பப்படுத்துமே. நான் எப்படி அதைத் தாங்கிக்கொள்வேன் ?

சந்:—அதற்காகத்தான் கடவுள் எங்ஙனைப் பாராமலிருக்க வழி செய்திருக்கிறார். ஆகையால் மனதைத் திடப்படுத்திக்கொள்.

இந்திரா மௌனமாயிருந்தாள். பின்னிட்டு மற்றும் கொஞ்சநேரம் இவர்கள் சம்பாஷித்துக்கொண்டிருந்தார்கள். நேரம் அதிகமாய்விட்டதால் சந்திரா தன் தோழியிடம் பிரிய விடை பெற்றுச் சென்றாள்.

இப்படியே நாட்கள் சென்றன. இந்திராவின் அன்பின் சந்தேகம் பூராவும் நீங்கிவிட்டதாயினும் அவளால் சந்தோஷமா யிருக்க முடியவேயில்லை. அவளுடைய எண்ணம் சந்திராவுடனேயே யிருக்கவேண்டுமென்கிறது ஒன்று தான் எப்படி முடியும். அவள் அன்னியர் சுவாதீனத்திலிருக்கப்பட்டவளல்லவோ. ஆகிலும் அவள் குற்றமற்ற அன்பின் விசேஷமானது கூடியவரை அவளைத் திருப்திசெய்து வைத்தது. (அன்று நான் அவளை முதல்முதலில் கண்ட பொழுது காணப்பட்ட துயரம் நீங்கி அவள் ஒருவாறு முகமலர்ச்சியுடன பார்வைக்குத் தோன்றினள். இந்திராவின் அன்புக்காக நான் அவளை மிகவும் பாராட்டினேன். அவர்கள் அன்பு என்ற பாசக்கயிற்றால் கட்டப்பட்டு இனிது வாழ்வதைத் தற்காலம் கண்டு களிக்கிறேன். கடவுள் அவர்களுக்கு மன ஆறுதலையும் சந்தோஷத்தையும் அளிப்பாராக.)

என் நண்பர் ஒருவர் சந்திரா என்பவள் யாரென்றும், இந்திரா பிரக்ஞையற்றுக் கிடந்த பொழுது அடிக்கடி வந்து பார்த்துக் கொண்டிருந்ததால் அவள் என்ன ஏதாவது வைத்திய இலாகாவில் வேலைபார்க்கிறாளா என்றும், அவள் சரித்திரம் என்னவென்றும் என்னைக் கேட்கிறார். கதாப் பிரியர்களே! நீங்களே நன்கு யோசித்துப் பாருங்கள். நான் சங்கதிகளைக் கேட்டதையும் கண்டதையும் மாத்திரம் குறிப்பிட்டிருக்கிறேனே தவிர அவர்களுடன் ஒரு வசனமும் பேசினேனில்லை. ஆதலால் அவ்வழகிய சந்திராவைப் பற்றித் திட்டமாய்ச் சொல்லத் தெரியவில்லை. ஆனால் அவள் இந்திராவைக் கவனித்ததைப் பார்த்தவளவிலும், மேலும் அவள் நடை, யுடை, பாவனை இவைகளை உற்று நோக்குங்காலும் அவள் ஓர் டாக்டராயிருக்கக்கூடுமோ என ஊகிக்கிறேன் எனப் பதில் அளித்தேன். நண்பர்களே! இதுவரை இச்சரித்திரத்தைப் பொறுமையுடன் நீங்கள் படித்ததற்காக நான் பெரிதும் வந்தனமளிக்கிறேன்.

சுபம்!

---

# பர்மா.

(ஸ்ரீமான் சுவாமி அற்புதாநந்தர்.)

இந்நன்னாடு, பொற்கோயில் கொண்ட பெரு நாடாக சுமார் மூன்னூறாயிரம் சதுரமைல் விஸ்தீரணத்தில், பன்னிரண்டு மில்லியன் (மில்லியன் எனின் பத்து லட்சம்) மக்கள் வாழும் சிறந்த நாடென, பிரிட்டிஷ் அரசியலில் அமைந்துள்ள தென்பதை வாசகர்களறிவர். பர்மாவைப்பற்றி பண்டைய சரிதைகள் பல: விவரிக்கிற்பெருகும். கி. பி. மூன்றாம் நூற்றூண்டின் முன்னர், இந்நாடு மிகச் செழிப்புற்றிருந்ததெனக் கூறுவதற்கு உகந்த கல்வெட்டு சாசனங்கள் கிட்டாதே உள்ளன. இவ்வமயம் ஏற்பட்ட பையூ சாசனங்கள், காதம்ப அட்சரங்களிலமைந்துள்ளனவெனக் கூறப்பெறும். புரோம், தட்டோன் முதலிய இடங்களின் சரிதைகள் இன்னும் பண்டையனவையாகக் கூறப்பெறினும், பக்கோ என்ற நகரத்தின் பர்மீய அரசியல் முதன் முதலில் அமைந்ததாக விளங்கலாகின்றது. இந்நகரம் இவ்வமயம் பெகு என ஆங்கிலத்தில் கூறப்பெறுவது போல், பண்டைய இதிகாசங்களில் வுஸ்ஸா வெனக் காணப்பெறுகின்றது. எனவே ரெரியா நாட்டின் எல்லைப்புறத்திலுள்ள தைலங்கர்களென்ற வகுப்பினர் குடியேற்றமாகி பௌத்தபிரானின் மதமார்க்கிகளாக அரசியலமைத்து வந்தனர்களெனக்கூறலாகும். இத்தைலங்கர்கள் தெலங்கானவென்ற தென்னாட்டின் எல்லைப்புறவாசிகளின் பரம்பரையார்களெனவும் கருதவுமாகும். இவ்வெல்லைப்புறம் அசோக சக்கரவர்த்தியின் சமயத்தில் அமைந்த ஒரிஸா படையெடுப்பில் பௌத்தமதம் தழுவும் இயல்புகளைக் கொள்ளவுமாகியதெனச் சரிதைகள் குறிப்பிடும். இதற்குச் சான்றுகளாகப் பல்லவ அட்சரங்களிலமைந்துள்ள தெலிங்கான சாசனங்களுள. இவ்வகையான பலவகை படையெடுப்பின் காரணங்களினாலும், குடியேற்றஇயற்கைவிநோதஅமைப்புகளினாலும், பர்மாவில் கி. பி. எட்டாம் நூற்றூண்டுமுதல் தைலிங்கர்களின் அரசியல் அமைந்து, பதிமூன்றாம் நூற்றூண்டுவரை, பதினெட்டு சிற்றரசியல்களாகவும் ஒன்பது பெரும் நகரங்களைக்கொண்டும், இருந்ததெனவும் காணலாம் எனினும் பத்தாம் நூற்றூண்டில் ஏற்படலாகிய பாகான் வம்சத்தவர்கள் அரிய பெரிய சிறப்புகளை பர்மாவில் அமைக்கலாயினர். இவ்வமயத்தில் இலங்கை மன்னனாகிய விஜயபாஹூ முதலாவது தென் இந்திய சோழர்கள் மீது படையெடுக்க வேண்டுமெனக்கருதி, இவ்வரசனைப் படை உதவிகேட்டதாகவும், பின்னர் சோழ ராஜனால் இலங்கையில் சீரழிக்கப்பெற்ற பௌத்தமத விமரிசைகளைப் புனருத்தாரணம் செய்ய உதவி நாட, இதற்கிசைந்து பல புங்கிகளையும் (புங்கி என்போர் பர்மாவின் பௌத்தமத சன்னியாசி), பௌத்த நூல்களையும், ஒரு வெள்ளையானையும் அளித்ததாகவும் சரிதை விவரிக்கும். இப்பேருதவிக்கு ஈடாக அம்மன்னன் இவ்வரசற்கு பௌத்த பிரானின் பல் ஒன்றை அனுப்பியதை இவ்வரசன் ஏற்று ஷ்விஜிகோன் என்ற கோயிலிலமைத்துள்ளதை இன்னும் காணலாம். இதுபோலவே பௌத்தபிரானின் கழுத்தெலும்பும், மார்பெலும்பும், தலைமயிர்களும் பொற்கோயிலில் அமைக்கப்பட்டதாகவும், இவைகளைத்தெரிந்தும், இக்கோயில்களின் விழாக்களிலீடுபடவும், பௌத்தமத மார்க்கிகள் ஆசியாவின் பலபாகங்களிலிருந்தும் அடிக்கடி பர்மாவில் கூடுகின்றார்கள். இந்தியாவில் பௌத்தமத அபிவிருத்திகளுக்கு அசோக சக்கரவர்த்தி

யார் அமைத்திருந்ததுபோல், பர்மாவில் பௌத்தமத பொற்கோயில்கள் பெருகுவதற்கு அனவரதன் என்பவரிருந்தனர்.

இவரைப் பின்பற்றி, ஸ்ஸௌலு என்பவரும் ச்சேயின் ஸித்தா என்பவரும் பதினேரும் நூற்றூண்டுவரை அரசியல் நடாத்தினர். இந்தியாவில் பௌத்தமதம் சீர்கெடலாகினதும், பர்மா நாடு ஏகிய பல பௌத்தர்கள் இவர்களினுல் வரவேற்கப்பட்டு, இந்திய பௌத்தமத இயற்கைகளை பர்மாவில் வதியும் வண்ணம் முற்பட்டனர். ஒரிசாவின் உதையகிரி குன்றின் அனந்த குகைக்கோயில் சீரழிந்து விடலாகிய தெனத் தெரிந்ததும் அக்கோயிலைப் போல் ஆனந்த பொற்கோயில் ஒன்று தயாரிக்கவும் பீஹாரின் புத்தகயாவின் கோயில் சீரழிந்து விடலாகிய தெனத்தெரிந்ததும், அக்கோயிலைச் செப்பனிடப்பெரும் பொருளுதவிபுரியவும், ச்சேயின் ஸித்தா வென்ற அரசன் முற்படலானுர். இவர் சமயத்தில் சோழநாட்டு வம்சபாம்பரையினர் பர்மா ஏகவும், ஒரு சிலர் பௌத்தமதம் தழுவி இங்கே அமைந்துவிடலானுர்களென வும் கூறலாகின்றது. அலவுங்சிது இவரைப்பின்பற்றி பர்மாவில் அரசியல் நடத்த முற்பட்டு, பல பொற்கோயில்களை அமைத்தனர். இவரைப் பின்பற்றிய நராது என்பவரும், பின்னர் முற்பட்ட நரபதிசிது என்பவரும், இவரைப்பின்பற்றிய ஹிதுலோமின்லோ என்பவரும், இவரைப் பின்பற்றிய நரதி உறபதி என்பவரும் பன்னிரண்டாம் நூற்றூண்டின் இறுதி வரையில் பல பொற்கோயில்களை அமைத்தனர். பின்னர் சுமார் மூன்னூறு வருடங்களுக்கென, ஷான் வகுப்பினர்களின் அரசியலமையலானது. மூன்று சகோதரர்களின் படையெடுப்பு, முன்குறிப்பிட்ட பாகான் வம்ச அரசியலை வீழ்ச்சியுறச் செய்தது. இச்ஷான் வம்சத்தினர்கள் பர்மாவின் விளைவுப்பொருள்களை அதிகரிக்கச் செய்ய முற்பட்டனர். பதின்மூன்ரும் நூற்றூண்டின் இறுதியிலும், பதிநான்காம் நூற்ரூண்டின் ஆரம்பத்திலும், பர்மாவைப்பல சிறப்புரிமைகள் கொள்ள மின்கிஸ்வாஸ்வாகி என்பவர் செய்தனர். இவரது குமாரன் மின்சௌவுங் (1401-22) பல படையெடுப்புகளை அமைத்தனர். இவரைப் பின்பற்றியவர்களில் தோஹன் புவரவும், மோப்யே நரபதியும் பெரும் சிறப்புக்கொண்டவர்களாகுவர். இவர்கள் தம் அரசியலிற்குத் தலைமை நகாமாக ஆவா என்ற நகரை (1287-1531) கொண்டிருந்தனர். நிற்க.

முற்கூறிய பக்கோவின் தைலங்கர்கள் பதிமூன்ரும் நூற்றூண்டுவரை அரசியல் செய்தனர் களெனக் குறிப்பிட்டு விட்டு, பாகன் அரசியல் (1044-1287) வரை நடந்தவைகளை சுருக்கமாகக்கூறினேம். இவைக்குப்பின்னர் ஷான் அரசியல் விமரிசையைச் சுருக்கமாகவும் கூறி, பர்மாவின் சரிதையை பதினைந்தாம் நூற்றூண்டுகள் வரை அமைத்தனம். இவ்வமயத்தில் எனைய பாகங்களில் நடைபெற்றுள்ள சம்பவங்களையும் சுருக்கமாகவே கவனிப்போம். பக்கோவில் தட்டோன் என்ற கிராமத்தில் பிறந்த ஒரு ஷான் வகுப்பினன் சுகோதேய் என்ற சிற்றரசியலின் யானைப்பாகனுகி, அவ்வரசியலின் படைகளின் தளகர்த்தனுகி, அவ்வரசனின்குமாரியுடன் ஓடி, தன் பிறப்பிடமாகிய கிராமத்தைத் தலைநகாமாக்கிப் பெரும் மன்னனுகிவிட்டனன். இவன் பலவகை முயற்சியினுல், பாகான் வம்சத்தினர்கள், பாகானில் தலைமை நகரம் கொண்டு ஆள முற்பட்ட சமயம், பக்கோவில் அமர்ந்து (1297—96) வரை ஆண்டு பர்மாவிற்கு சட்டதிட்ட அமைப்பை இயற்றலாயினன். இவனைப் பின் பற்றி ஆண்டவர்களில் ராஜாடாரித் (1385—1423) என்பவனும் சிறந்தவனுவன். இவனும் பொற்கோயில்கள் கட்டுவதில் பெரும் முயற்சி கொண்டு பௌத்த மதநூல்

களின் அபிவிருத்திக்குப் பல தொண்டாற்றினு னென்பர். இவன்பின் பல கொலைகள் இவ் வரசியலில் ஒன்றின் பின் ஒன்றாய் நடந்து முடி வாக ஆண் வாரிசுகளில்லாமல் உரின்ஸ்வாபு வென்ற பெண்ணிற்கு (1453—72) அரசியல் தலைமையின் உரிமை யமையலாகியது. இப் பெண்மணி, தன் இளம்வயதில் ஷான் வகுப் பின் ஆவா அரசனிற்கு மணமிடப்பட்டிருந் தும், இவள் அங்கிருந்து ஓடிவந்து விட்டனள். இவ்வரசியைப் பின்பற்றி தாமாஜேதி என்ப வன் அரசனுகி பௌத்த மதத்தைப் பரவச் செய்யப் பெரும் முயற்சி கொண்டிருந்தனன். இருப்பினும் இவன் நாட்களில் அமைந்த சட்ட திட்டம் இன்னும் தாமாஜேதி-பையாதோன் என புழுத்தகத்திலுள்ளன வென்பர். இவ னது பிற்காலத்தில் கடல் யாத்திரை வர்த்தக வசதிகள் அமைந்தன. பர்மா சிகப்பு கள், தந்தம், ஈயம் முதலிய ஏற்றுமதி செய்யப் போர்த்துகியர் முதன் முதலாக முற்பட்டனர்.

இதேசமயத்தில் இருசகோதரர்கள் 1280-ம் ஆண்டில் டவுங்கு என்ற அரசியலை அமைக்க லாயினர். இரண்டு நூற்றாண்டுகளினுள் இருபத்தெட்டு அரசர்கள் ஆளலாயினர். இவர் களில் பதினைந்து மன்னர்கள் குத்திக் கொலை செய்யப்பட்டனர். இவ்வரசர்களில் சிறந்தவ னை பையான்சி (1368—77) யைக்கூறலாம். இவன் யானைக் கூட்டங்கள் கொண்டவனுகி னன். ஆவாவின் ஷான் ஆட்சி எல்லைப்புறம் வரை கொள்ளை யமைப்பதிலும் இவன் முற் பட்டனர். இவனுக்கு இரண்டாவதாக மின் சியனியோவை (1486—1531)-க் கூறலாம். இவரைப் பின்பற்றி யவர் தபின்ஷ்வேதி (1531—50) ஆவர். பின் பயின் நவுங் (1551—81) கின் ஆட்சி அமைந்து தனது 66-ம் வயதில் 97 புத்திரர்களைப் பெற்றார் எனினும் இவர் பெரும் சீர்திருத்தங்களை அமைத்தும், நந்தபாயின் (1581—99) வரை ஆட்சிபுரிந்தும், சில காலம் கிளர்ச்சிகளில் ஈடு பட்டுக் கிடக்கவும், பின்னர் அளவுக் பேட் லூன் (1605—28) ஆட்சி அமைந்து, மின்ரே தெயிப்பா (1628) ஆட்சிபுரிய இசையாது சாது வேடதாரியாகவே, தாலூன் (1629—48) வரை ஆண்டும், பின்டாலே (1648—61) வரை ஆட்சி புரிந்தும், பையி (1661—72) வரை ஆண்டும்,பின்னர் மின்னச்சாவெதின் (1693—98), பின் சானேமின் (1698—1714) வரையும் பின்னர் கிளர்ச்சிகளில் அமையலாகி, மகாதம் மியாஜாதீபதி (1733—52) வரை ஆண்டும், பின்னரும் கலவரங்களும் கொள்ளைகளும் பெருகலாகி இடையில் ஸ்மிம்-வித்துவா-புதா கேதி (1740—47) வரையிலும், பின்னர் பின்னயாடாலா (1747—57) வரையிலும் அரசர்களாகியும், அலவுங்பைமா வம்சத்தினர் கள் (1752—1885) ஆளலானுர்கள். இருப் பினும் இவ்வம்சத்தினரில் சிறந்தவனுக அலவுங்பையா (1747—60) வரையும், நவுங் டௌஜி (1760—63) வரையும், உற்சின் புயுஷின் (1763—76) வரையும், சிங்கு (177—82) வரையும், போதாபாயா (1782—1819) வரையும், பாஜிதா (1819—37) வரையி லும், தாரா வாடி (1837—46) வரையிலும், பாகான் (1846—53) வரையிலும், மின்டன் (1852—78) வரையிலும், தீபா (1878—85) வரையிலும் பர்மாவின் மன்னர்களாக இருந் தனர்.

கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டில் கடல் வர்த்தக வசதிகள் அமையலாகவே மேல் நாட் டினரின் போக்கு வரவுகள் பெருகலாயின. 1435-ம் ஆண்டில் ஒரு இட்டாலியனும் ஒரு ஐரோப்பியனும் முதன் முதலாக பர்மாவுக்கு விஜயம் செய்தனர். 1470-ம்ஆண்டில் ஒரு ருஷ் யன் விஜயம் செய்யலாயினன். எனினும் வர்த்தகமுறையில் போர்த்துகீயரும் பிரஞ்சிய

ரும் முற்பட்டு, பர்மா அரசியல் போர் பயிற்சிகளை நடத்தப் படைகளைத் தயாரிக்கலாயினரென்பர். இந்நாட்டினர் கடல் மார்க்கம் வந்திறங்குவதற்கு மாத்தபானும், ஒஞசீமும் உரிய துறைகளாக இருந்தன. கி. பி. 16-ம் நூற்றாண்டுவரை போர்த்துகீயர் பர்மாவில் சிறப்புற்றிருந்தனர். பிரான்சியர்களும், இட்டாலியர்களும் இவர்களைப் போல் பர்மாவில் சிறப்புறப் பலகாரணங்கள் அமைந்து கிடந்தும், ஆங்கிலேயர்களின் முன்னேற்றத்தினால் இவர்கள் பர்மாவிட்டு நழுவலாயினர். ஆங்கிலேயர்கள் முதல் பர்மிய யுத்தத்தை 1824—1826-லும், இரண்டாம் யுத்தத்தை 1852-லும், மூன்றாம் யுத்தத்தை 1885-லும் நடத்தவே, பர்மா முடிவாக ஆங்கில ஆட்சியினுட்பட்டு விடலாயிற்று. மூன்றாம் பர்மாயுத்தத்தில் தோல்வியுற்ற தீவா மன்னன் 1916-ம் ஆண்டுவரை பம்பாய் மாகாண ரத்தனகிரிக்கு நாடுகடத்தப்பட்டனன். பர்மா நாடும் இந்தியா கவர்ண்மெண்டில் சேர்க்கப்பட்டு, பிரிட்டிஷ் அரசியலிலாகியது. கீழ்பர்மா, மேல்பர்மா வென இரண்டுபிரிவுகளாக்கப்பட்டு, கீழ்பர்மாவிற்கு, அறக்கான், பேகு, ஐராவதி, ஒஞசீம், மக்வே என ஐந்து டிவிஷன்களேற்பட்டு, முதல் டிவிஷனிற்கு நான்கு ஜில்லாக்களும், இரண்டாம் டிவிஷனிற்கு ஐந்து ஜில்லாக்களும், மூன்றாம் டிவிஷனிற்கு ஐந்து ஜில்லாக்களும், நான்காம் டிவிஷனிற்கு ஆறு ஜில்லாக்களும் ஐந்தாம் டிவிஷனிற்கு ஒரு ஜில்லாவும் ஆக ஐந்து டிவிஷன்களுக்கும் இருபத்தோரு ஜில்லாக்களும், மேல் பர்மாவிற்கு, மகுவே, மாந்தளே, சகாயின், மேக்டிலா என்ற நான்கு டிவிஷன்களும், முதல் டிவிஷனிற்கு மூன்று ஜில்லாக்களும், இரண்டாம் டிவிஷனிற்கு ஆறு ஜில்லாக்களும், மூன்றாம் டிவிஷனிற்கு நான்கு ஜில்லாக்களும், நான்காம் டிவிஷனிற்கு நான்கு ஜில்லாக்களும் ஆக நான்கு டிவின்களுக்கும் பதினேழு ஜில்லாக்களாகவும் பர்மா நாடானது இவ்வமயம் ஆங்கில அரசியற் சிறப்பில் இரண்டு பிரிவுகளாகவும், ஒன்பது டிவிஷன்களாகவும், முப்பத்தெட்டு ஜில்லாக்களாகவும் அமைந்துள்ளதுடன், நான்கு சிற்றரசியல் விஸ்தீரணங்களையும் கொண்டுள்ளது. இதை விரிக்கின் பெருகும். சமயம் நேரிடுங் காலத்து இநநிலைகளை விவரமாக வரைவாம்.

இந்நாட்டில் இவ்வமயம் உலக மக்கள் வதிந்துள்ளனர். பர்மீயர்கள் களியாட்டங்களில் விருப்பங் கொண்டுள்ள இனத்தினராவர். விவசாயம், சுரங்கத்தொழில், நதியோடுதல் முதலியன இவர்களின் இயற்கை வனப்பாக இருப்பினும், ஆண்மக்கள் பெரும் நாட்களை விநோதங்களில் கழிப்பர். கால் பந்து விளையாட்டு முதல் காற்றாடி விடுவது வரை பெரும் முயற்சி கொண்டவராவர். சூதாடுவதில் பெரும் பற்றுடையவர். கோயில்களில் முழங்காற் படியிட்டுத் தொழுவர், "கோயில் சிகாதரிசனம், தம் பாப விமோசனம்" என்ற ஆப்த மொழியில் ஆழ்ந்த நோக்குடையார். இவைகள் தம் அரசர்கள் காலத்தில் கௌரவங்களைக் கொள்ளக் கூடியதாக இருக்கலாயினும் ஆங்கில ஆட்சியில் சோம்பேறிகளின் பட்டியால் அமைக்கப்பட்டுவிட்ட காரணங்களினால், கொள்ளை, கொலை முதலியவைகளில் துணிபுகளைக் கொள்ளலானர். இவைகளை அடக்க, மூன்று யுத்தங்களிற்குப் பின்னரும், படையெடுப்புகள் ஆவசியமானது போல், போலீஸ் பந்தோபஸ்துகளை பஞ்சாப் நாட்டினரினாலும், கூர்க்கியர்களினாலும் அமைக்கலாயின. நாட்கள் முன்னேற முன்னேற அரசியல் கல்விகளில் சிறப்பு வகிக்கவும் முற்பட்டு வருகின்றனர். உடைவகையில் பர்மீயர் விநோதப் பிரியர். பட்டாடைகளையும், இருபது முப்பது ரூபாய்கள் பெறுமான செருப்புகளையும் ஆண்

கள் உபயோகிப்பதில் பிற்படமாட்டார். இந்நாட்டின் விவசாயங்கள் இவ்வமயத்தில் பர்மீயர்களினாலேயே கவனிக்கப்படலாயினும், தமிழர்களே பெரும்பான்மையாக ஈடுபடுத்தப்பட்டிருப்பர். கப்பற் கூலி வேலைகளிலும் தொழிற்சாலைகளிலும் ஆந்திரமக்களைக் காணலாம். சுரங்கங்களில் தமிழர்களும் மலையாளிகளும் அதிகமாகஇருப்பர். பால் வர்த்தகத்தில்இந்துஸ்தானிகள் மிதமிஞ்சிக் கிடப்பர். சா (தேயிலை) கடைகள் வைத்திருப்பதில் மலையாளகாக்காய்கள் பெருகியுள்ளனர். குதிரை வண்டி ஓட்டுவதில் இந்துஸ்தானிகளும், வாடகை டாக்ஸிகளில் சிக்கியர்களும், ரிக்ஷாக்களில் தெலுங்கர்களும் டிராம் கண்டக்டர்களாக உரியாக்களும் காப்பிக்கடைகளில் பிராமணர்களும் இந்து சமூகப்பிரதிநிதிகளாகப் பெருகியிருப்பர். இவைகளைக் கொள்ள பர்மீயர்கள் முயன்று முற்பட்டுள்ளதில், வாடகை பஸ்களை ஓட்டுவதில் பர்மீயர் சிறப்புற்று வருகின்றனர். பர்மீயனாகப் பிறந்த ஒவ்வொருவனும் சிலகாலம் புங்கி யாகித் தீரவேண்டு மென்பதும் ஒரு பண்டைய கொள்கை. பர்மீய சாதுக்களென்ற புங்கிகள் பாலிபாஷையைக் கற்றறியவேண்டியது கடமையாக இருப்பதினால், பர்மீய பாஷையை கற்றிருப்பர். எனவே இவர்கள் பர்மீய மக்களிற்கு இலவசக் கட்டாயக் கல்வி அளிப்பதில் பெரும் வல்லமை கொண்டுள்ளனர். ஆண் பெண்கள் யாவரும் பர்மீய பாஷை எழுதத் தெரிந்தவராகவே இருப்பர். புங்கிமடம் இல்லாத கிராமத்தைப் பர்மாவில் காண்பதரிதாகும். இம்மடமே வெளியார்கள் தங்குமிடமாகவும், மாணவசமூகக் கல்விக் கழகமாகவும் இருக்கின்றது. ஆண்மக்கள் புங்கிகளாவது போலவே, பெண் மக்களும் புங்கிகளாவர். ஆண்கள் மஞ்சள் உடை தரிப்பின், பெண்புங்கிகள் காவி உடை தரிப்பர். காலை ஒரு வேளையில் தான் இவர்கள் கூட்டம் கூட்டமாகப் பிச்சை புகுவர். இப்பிச்சை ஆண்களைப் பொறுத்த மட்டில் தயாரித்த உணவாகவே இருக்கலாம். பெண் புங்கிகள் தயாரிக்கக் கூடிய சாமான்களைக் கொள்வதுடன், காசுகளையும் ஏற்பர்.

பர்மாவின் பெண் இனச்சிறப்பு செப்பற்பாலதாகும். வியாபார விடங்களைக் கவனிப்பதில் பெரும் வல்லமை கொண்டவர். வீட்டை சுத்தமாக அமைத்துக் கொள்வதிலும், விருந்தினர்களுக்குபசரிப்பதிலும், தம் தலைகளை அலங்கரித்துக் கொள்வதிலும் பெரும் சிறப்புக் கொண்டுள்ளார். காலில் செருப்புப் போடாத பெண் மகளைக் காண்பதரிதாகும். இவர்களும் உடையிலும் நகைகளிலும் புஷ்பங்களிலும் வாசனைத் திரவியங்களிலும் அதிக நட்புக் கொண்டவர்கள். கோயில்களில் பக்தி விசுவாசமும் கொண்டவர். புங்கிகளில் பெரும் நம்பிக்கை கொண்டவர்கள். சங்கீதம், நாடகம் முதலியவைகளில் ஆழ்ந்த பிரேமை கொண்டவர். தேசிய சினிமாக்கள் பார்ப்பதில் பெரும் ஊக்கமுள்ளவர். அரசியல் உத்தியோகங்களிலும் பெண்ணுரிமை கொண்டிருக்க வேண்டிய தேர்ச்சிகளைப் பெற்று முற்பட்டிருப்பவர். ஆடவர்கள் துணையை சந்தான உற்பத்திக்கென மட்டும் கருதி, ஏனையவைகளில் தம் சுயேச்சையை முற்படுத்திச் சிறப்புற்று வரும் பான்மைகளில் சாலச் சிறந்த வலிமைகளைக் கொண்டிருப்பவர். பால்ய விவாகக் கொடுமைகளில் சிக்குறாதவர். கைம்பெண் விவாகச் சிறப்புகளில் முன்னேற்றங்கள் கொண்டுள்ளவர். சாதி வகுப்பு பெருக்கங்களை அமைய வொட்டாத வகைகளில் கலப்பு விவாகம், சமபந்தி உணவு முதலியன தம் உரிமையாகக்கொண்டுள்ளவர். விவாக ரத்து, விவாக அமைப்பு முதலியவைகளிலும் ஆடவர்களைப் போலும், பிறப்புரிமையிலும் பெண் பங்குபாத்தியத்தையும் நீதி சட்டதிட்டங்களில் நன்கு

கொண்டுள்ளவர். தாய் பாஷையைக் கற்றுத் தேர்ச்சி பெறுவதும் பெண்களின் கடமை யெனக் கொண்டுள்ள சிறந்தோர்களாவர்.

இந்நாட்டின் பாண்டங்கள் மரங்களினாலும் மூங்கில்களினாலும் அமைக்கப்பட்டுள்ளன. சீன நாட்டின் கூட்டுறவுகளினாலும் மேல் நாட்டின் இறக்குமதி வசதிகளினாலும் இந்நாடு களின் பாண்டங்களை உபயோகிப்பர். மண் பாண்டங்கள் செய்வதில் பெரும் ஜாடிகள் செய்வதில் வல்லவர். வீடுகளையும் அதிகமாக மரங்களினாலேயே அமைத்துள்ளார்கள். ஏழை களின் வீட்டுச் சுவர்கள் மூங்கில் தட்டிகளினால் பின்னப்பட்டிருக்கும். கூறைகளை மேய்வதற் குப் பனை, தென்னை, கமுகு ஓலைகளையே உப யோகிப்பர். ஒரு சமயத்தில் இவர்கள் எழுது வதற்கும் பனை ஓலைகளையே உபயோகித்திரு ந்தனர். அவை இவ்வமய சிறப்புகளினால் மலை யேறிவிட்டன. பிரம்புகளையும் மூங்கில்களை யும் பலவகை சாமான்களாகத் தயாரிப்பதில் சிறந்தவர்கள். உணவுக்களில் பெண்களும் மாமிசபட்சணிகளாகவே இருப்பினும் காய்கறி, கீரை, கொழுந்துவகைகளை உபயோகிப்பதில் பெரும் சிரத்தை கொண்டுள்ளவர்கள். பல வகைப்பழங்களையும் உபயோகமாக்குவதில் திறமை கொண்டுள்ளார். ஆயினும் நப்பி எனும் உணவு மிகச் சீர்கெட்ட தெனவே கூற லாம். ஆண்மக்கள் பலவகை லாகரிவஸ்துக் களை உபயோகிப்பவர். இந்நாட்களின் இறக்கு மதிகளை உபயோகிப்பதில் முற்பட்டிருப்பதைப் போலவே குதிரைப் பந்தயத்திலும் பெரும் வெறியாளர்களாகியிருப்பர். விபசாரம் பெண் மக்களினுள்ளும் ஆண்மக்களினுள்ளும்மலிந்தே கிடக்கின்றது. ஆயினும் இவைகளை மிக பகி ரங்க முறையில் காண்பதும் அரிதெனவே கூற லாம். பெண்கள் ஜாக்கெட்டுகள் அணிந்து அங்க வஸ்திரம் கொண்டிருப்பர். ஆண்கள் அரசியல் அலுவல்களிலும் தலையணியாகப் பட்டுத்துண்டுகளைக் கட்டியும் லுங்கி யென்ற இடுப்பு உடையும் கோட்டுசட்டையென்ற மேல்உடையும் அணிந்திருப்பர்.

இந்நாட்டின் நன்னகரங்கள் பல. எனினும் பர்மாவின் தலைநகரமாக இரங்கோன், உல கில் நன்னகர மென்ற சிறப்பால் திகழ முற்பட்டுள்ளது. பண்டைய பல மன்ன ராட்சியின் தலை நகரங்கள் மண் மேடுகளாகி விடினும், மாந்தளே, பெகு (பக்கோ), புரோம், தட்டோன் என்பன பிரிட்டிஷ் அரசியல் அமைப்பில் புத்துயிர் கொண்டுள்ளன. இவை களின் விபரங்களும் சமய உசிதமாக வரை வாம். எனினும் இவ்வமயம் இரங்கோன் நகரின் சிறப்புகள் சிலவற்றைமட்டும் வரைந்து இந்நிருபத்தை முடிவு செய்வாம். உலகின் மக் கள் வதியும் நன்னகரமாக இரங்கோன் உள் ளது. மூன்று பர்மிய யுத்தங்களுக்கு முன் னர் யாங்கோன் என பெயர் கொண்ட ஒரு பெரும் சதுப்பு விஸ்தீர்ணமாக இருந்த இடம் இவ்வமயம் பர்மா கவர்னரின் இருப்பிடமாக வும், சட்டசபை, உயர் நீதியரபலம், பல பாங்குகள், கணக்கற்ற ஐரோப்பிய கம்பெனி கள், இருப்புப்பாதை, டிராம் வசதி, பல சினி மாக்கள், நாடகக் கொட்டகைகள், அநேக அழகிய கட்டிடங்கள், உருவச் சிலைகள், விசால மான தோட்டங்கள், பெரும் ஏரிகள் முதலி யனவைகளைக் கொண்டு, ஜீவநதி எனக் கருதப் பெறும் ஐராவதி நதிக்கரையில் உள்ளது. உலகப் கப்பல்கள் நேராக இரங்கோன் துறை சேரவும் செல்லவும், உள்நாட்டிலேயே பர்மா வின் பல பாகங்களுக்கு ஆற்றுக்கப்பல் ஓட்ட வசதிகளைப் பிரயாணிகளுக்கெனவும் வர்த்தகத் திற்கெனவும் கொண்டுள்ளது. கார்பொரே ஷன் தனக்குஉதவியாக டிவலப்மெண்டு டிரஸ்டு என்ற அமைப்பைக் கொண்டு நகரத்தைச் சிறப்

புரிமை கொள்ளச்செய்து வருகின்றது. இரண்டு பிரிவுகளாக, பல தொகுதி வாக்காளர்களின் சார்பில், நகரசபை அமைக்கப்பட்டுள்ளது. தொகுதியினர்கள் அபேட்சகர்களை மூன்று வருடத்திற் கொரு முறை தெரிந்தெடுக்கின்றார்கள். இதுவரை இந்நாட்டிற்கு விஜயம் செய்த இளவரசர்களும், இராஜப் பிரதிநிதிகளும், இரங்கோனில் கொண்ட வரவேற்பு வரிசைகளை இந்தியாவில் எங்கும் அமையாதவகையில் அமைந்துள்ளதெனக் குறிப்பிட்டுள்ளாரகளெனில், இந்நகரத்தினர்களின் இயற்கை வளங்களை அதிகமாகக் கூறவேண்டுவது அவசியமில்லை. இந்நகரில் மூன்று தினசரி ஆங்கிலப்பத்திரிகைகளும், வார மும்முறைப்பத்திரிகை இரண்டும் வாரப்பதிப்பாக இரண்டும் இருப்பதுபோல் பர்மீய, சீன, தெலுங்கு, இந்தி, வங்காள, குஜராத்தி பத்திரிகைகளிருப்பினும், தமிழினத்தின் சார்பாக மூன்று தினசரியும், ஒருவாரப் பத்திரிகையும் நடை பெறுகின்றன. எனவே இவைகள் மக்களின் முன்னேற்ற நிலைகளை நன்கு விளங்கச் செய்கின்றன.

# பக்த சிரோமணி நாமதேவர்.

(ஸ்ரீமதி P. மங்களாபாயி.)

நமது இப்பாரத பூமியில் துகாராம், ராமதாசர், ஞானேசுவரர், புண்டரீகன் முதலிய அநேக பெரிய பகவத்பக்தர்கள் தோன்றி மறைந்தனர். அவர்களுள் பக்த ராஜனான நாமதேவரும் ஒரு பக்தன். இவருடைய சரித்திரம் மிகவும் இனிமையாயிருப்பதனால் அதை நமது சிந்தாமணியின் அபிமானிகளுக்காக "சாலாபத்ரக்" என்னும் மகாராஷ்டிர சஞ்சிகையினின்று இங்கு மொழிபெயர்த்து எழுதுகிறேன்.

முற்காலத்தில் பண்டரிபுரமென்னும் க்ஷேத்திரத்தில் வாமதேவனென்றோர் தையற்காரன் வசித்துக் கொண்டிருந்தான். அவன் மிகவும் பக்தி யுள்ளவன். அவனுடைய சம்சாரம் மிகவும் சிறந்த குணமுள்ளவள். ஆனால் விருத்தாப்பியம் வந்துங்கூட சந்ததியுண்டாகவில்லை என்று அந்த வாமதேவன் மிகவும் துக்கமுற்றான். ஒரு நாள் வாமதேவன் மனைவி அவனை நோக்கிச் சொன்னாள்: "சுவாமி! நமது இந்த சம்பத்தால் பிரயோஜனமென்ன? சந்ததியின்மையினால் இவ்வைசுவரியமெல்லாம் எனக்கு துக்க ரூபமாகக் காணப்படுகிறது. அதிகமாய்ச் சொல்லுவானேன். உயிர்த்திருக்கவுங்கூட வேண்டியிருக்கவில்லை. சம்சாரத்தில் சுகமுண்டாக வேண்டுமானால் ஏதாவது சந்ததி இருக்க வேண்டும். இனி நமக்கு சந்ததி எப்பொழுது உண்டாகப்போகிறது?" என்றாள். அதைக் கேட்டு வாமதேவன் "பிரியே! பகவானை மனப்பூர்வகமாய்ப் பூஜை செய். அதிதிகளுக்கு அன்னமளி. இதனால் பகவான் ஸ்ரீ ஹரி பிரசன்னனாய், நமது இச்சையைப் பூர்த்திசெய்வார் என்பதில் லேசமும் சந்தேகப்படாதே!" என்றான். பதியின் இவ்வார்த்தைகளைக் கேட்டு அவளுக்கு, மிகவும் சந்தோஷமுண்டாயிற்று. அன்றுமுதல் திரவியலோபத்தைவிட்டு அவர்கள் தான தர்மம் செய்ய வாரம்பித்தனர். எத்தனை அதிதிகள் வந்தபோதிலும் போஜனம் அளிப்பது, சிலருக்குப் பொருள், சிலருக்குப் பாத்திரம், சிலருக்கு வஸ்திரம் கொடுப்பது, இவ்வாறாக அவர்கள் சாது சேவை செய்ய ஆரம்பித்தனர். பிறகு சிறிது காலத்தில் அந்த விருத்த தம்பதிகளுக்கு ஒரு கன்னியாரத்னம் பிறந்தது. "உபவாசம் செய்வதைவிடக்கிடைத்த

பிச்சைமேல்" என்றபடி அவ்விருவருக்கும் மிகச் சந்தோஷ மூண்டாயிற்று. அவளுக்கு ஸுமதி என்று பெயர்வைத்தனர். அப்பெண் மணி சிறந்த அழகுடையவளாயிருந்து, குணத்திலும் நிகரற்றவளாயிருந்தாள். அவள் மெல்ல மெல்ல வளர வளர விவாகத்திற்குத் தகுதியுள்ள வயதையடைந்தாள். பிறகு அவர்கள் குணமும் சீலமுமுள்ள வித்தவானை வரனைத் தேடி அவருக்கு விவாகம் செய்து மருமகனையும் தம் வீட்டில் வைத்துக் கொண்டனர், அதனால் அவர்களுடைய முழுப்போதும் சுக சமாதானத்தில் கழியலாயிற்று பிரபஞ்சமென்னும் சக்கரமானது எப்பொழுதும் சுற்றிக் கொண்டேயிருக்கிறது. ஆகலால் அது ஒரே நிலையிலிருப்பது சாத்தியமில்லை. சக்கரம் பின்னும் முன்னும் சுழன்று வருவதுபோல் இது யாருக்கும் தப்புவதில்லை. அதனால் உயர்ந்த கதியை அடைந்த பதார்த்தம் (பொருள்) நீசமான நிலைக்கு வருகிறது. நீசமான நிலைமையிலிருந்த பதார்த்தம் உயர்ந்த பதத்தை யடைகிறது. (नीचैर्गच्छत्युपरि च दशा चक्रनेमिक्रमेण) ஸ்ரீ ஞானேசுவர மகாராஜ் அவர்கள் கூறுவதென்றால், பிரபஞ்சமென்றால் தீத்தணல்களால் அமைக்கப்பட்ட படுக்கையாம். அதன் மேல் சுகமாக நித்திரிப்பதென்றால் எப்படி? நிற்க. வாமதேவ சிம்பியின் (சிம்பி=தையற்காரன்) செல்வ மருமகன் ஒரு முறை வியாதியால் பீடிக்கப்பட்டுக் கிடந்தான். எவ்வளவோ ஔஷதோபசாரம் செய்தனர். அதனாலொன்றும் பயன்படவில்லை. கடைசியில் அதில் அவன் இறந்தான். பெண் வயதில் சிறியவள். இந்நிலைமையில் இப்பயங்கரமான துன்பம் நேரிட்டது. எல்லோரும் வாமதேவன், அவன் மனைவி, அனாதையான பெண் இவர்களை யெல்லாம் சமாதானப்படுத்தலானார்கள். ஆனால் இத்தகைய சமாதானத்தால் அவர்கள் மனதில் கொழுந்து விட்டுப் பற்றி எரியும் சோகமென்னும் தீ எப்படி அணையும்? அது நாளடைவில் நாளடைவில் அணையும் பொழுது அணையும். மேலும், எவ்வளவு பயங்கரமான சோகமாயிருந்த போதிலும் அது நாளடைவில் தணிந்து விடுகிறது. இவ்வாறிருக்கின்றதினாற்றான் உலகம் (ஜகத்து) என்னும் சக்கரம் சுற்றிக்கொண்டிருக்கிறது. இல்லாவிடில் அது எப்பொழுதோ ஒடிந்து போயிருக்கும். சில தினங்கள் கழிந்தன. நடந்த சங்கதியை அவர்கள் மெல்ல மெல்ல மறக்கலாயினர். ஒரு நாள் வாமதேவன் தன் மனையாளை நோக்கிச் சொன்னான். "நமது ஸுமதி வயதில் மிகவும் சிறியவளாய் இருக்கிறாள். இவ்வளவு சிறிய வயதில் அவளுக்கு பயங்கரமான துக்கம் நேர்ந்து விட்டது. இப்பொழுது அவளுக்குப் புனர்விவாகம் (மறுமணம்) செய்து வைக்கவேண்டுமென்றிருக்கிறேன். நமது ஜாதியில் இவ்வாறு செய்வதற்கு தர்மத்தின் பிரதிபந்தம் கிடையாது. இதைப்பற்றி உனக்கென்ன தோன்றுகிறது?" என்றான். அவள் இவ்விஷயத்திற்குப் பூரண அநுமதி கொடுத்தனள் இருவருடைய மனமும் ஸுமதிக்கு மறுமணம் புரிவிப்பதில் இசைந்தது. ஆதலால் அவர்கள் அக்காரியத்திற்கு வேண்டிய முயற்சி செய்யத் தலைப்பட்டனர்.

ஒரு நாள் புனர்விவாகத்தைப்பற்றிய சங்கதி ஸுமதியின் காதிற் கெட்டியது அதைக் கேட்டு வருத்தமுண்டாய் அவள் அழலானாள். பிறகு அவள் தன் அன்னையை நோக்கி "அம்மா! புனர்விவாகத்தைப் பற்றி நீங்கள் என்னைக் கட்டாயப்படுத்தாதீர்கள். பிராரப்த வசத்தால் இளமையிலேயே எனக்கு வைதவ்வியம் ஏற்பட்டது. அதற்கு வேறு வழியில்லை. சாது சேவை செய்துகொண்டே ஓர் ஏழை அடிமையைப் போல் நான் உங்கள் வீட்டிலிருந்து, நீங்கள் அளிக்கும் கூழையோ கஞ்சியையோ அருந்தியான் சந்தோஷமாய் வாழுட்

களை கழிப்பேன். இதில் ஒன்றும் குறைவு வர மாட்டாது. நீங்கள் பலாத்காரமாய் எனக்குப் புனர் விவாகம் செய்வீர்களாகில் நான் இந்த சந்திரபாகா நதியில் விழுந்து உயிரை மாய்த்துக் கொள்வேன்'' என்றாள். ஸுமதியின் உறுதி மொழிகளைக் கேட்டு, அவளிடத்தில் தன் பருப்பொன்றும் வேகமாட்டாதென்றறிந்து அவர்கள் அவள் புனர்விவாகத்தைப் பற்றி பிரஸ்தாபிப்பதை அடியோடு விட்டு விட்டனர். அவள் சாதுக்களுடைய சேவை செய்து கொண்டே காலங்கழித்து வந்தாள். ஒரு தடவை மார்கழிமாதத்தில் அகாலமழை பெய்து கொண்டிருக்கும் போது இரவு நேரத்தில் தண்ணீர் கொண்டு வரும் பொருட்டு ஸுமதி குடத்தை இடுப்பிலெடுத்துக்கொண்டு சந்திர பாகா நதியை நோக்கிச் சென்றுகொண்டிருந்தாள். அப்பொழுது வழியில் ஒரு மனிதன் அவளுக்குத் தென்பட்டான். அவன் மிகவும் கிழவனுயிருந்து, குளிரால் நடுங்கிக் கொண்டிருந்தான். அவன் குருடன். பசியினால் துடித்துக் கொண்டு, கையிலிருக்கும் கோலின் உதவியால் நடந்து கொண்டிருந்து, ஓயாமல் "ராம கிருஷ்ண ஹரி'' என்னும் மந்திரத்தை ஜபித்துக் கொண்டிருந்தான். 'பாண்டுரங்கா! நாராயணா! நீ என்னை உபேட்சித்து விடாதே' என்று முறையிட்டுக் கொண்டு அவன் சாலையோரமாகப் போய்க்கொண்டிருந்தான். அப்போது கால் இடறி அங்கு விழுந்தான். இதுகண்டு ஸுமதி அவனைப் பிடித்தெழுப்பினாள். அப்போது அவன் மந்தமான குரலுடன் சொன்னான்: "அம்மா! தயை செய்து எனக்கு உயிர் பிச்சை கொடு. பாண்டுரங்கன் உனக்குக் கலியாணமுண்டாகுமாறு செய்வான். இதைவிட அதிகமாகப் பேச தற்சமயம் நான் சக்தியுடையவனாக வில்லை'' என்றான் அவனுடைய அச் சொற்களைக் கேட்டு ஸுமதியின் மனம் இளகி அவனை நோக்கி "மகாராஜ்! தாங்கள் எங்கள் இல்லத்திற்கு வாருங்கள். அங்கு தங்களுக்கு சகல சௌகரியங்களும் கிடைக்கும்'' என்று சொல்லி அக்கிழவனை கையைப்பிடித்துத் தன்னில்லத்திற்கு அழைத்துச் சென்றாள். உடனே அவள் தீ பற்றவைத்து குளிர் காயக் கொடுத்தாள். சமையல் செய்து அன்னத்தை ஊட்டினாள். பிறகு மெதுவான படுக்கையை விரித்துப் படுத்துக்கொள்ள சௌகரியப்படுத்திக் கொடுத்தாள். பிறகு பொழுது விடிந்தது. அதிதி எழுந்துட்கார்ந்து, 'பெண்ணே!' என்று ஸுமதியைக் கூப்பிட்டான். அப்பொழுது ஸுமதி அவள் பெற்றோர் உள்பட மூவரும் அங்கு வந்தனர். எல்லோரும் அதிதிக்கு நமஸ்காரம் செய்தனர். அப்பொழுது அதிதி ஸுமதியை நோக்கி "குழந்தாய்! பெரும் சங்கடத்தினின்றும் நீ என்னை விடுவித்தனை. அதற்காக நான் உன்னை நீ புத்திரவதியாகக் கடவாயென்று ஆசீர்வதிக்கிறேன்'' என்றான். இதைக்கேட்டு எல்லோருக்கும் மிக்க வருத்த முண்டாயிற்று. அப்பொழுது வாமதேவர் "மகாராஜ்! என்னுடைய புதல்வியாகிய இந்த ஸுமதி விதந்துவாயிருக்கிறாள். அப்படியிருக்க தங்களுடைய இவ்வாசீர்வாதம் எப்படிப்பலிக்கும்?'' என்றார். கிழவன் சொன்னான்: "இதுவரையில் என் வார்த்தை ஒரு போதும் அசத்தியமானதில்லை. அப்படியிருக்க அது இப்பொழுது எப்படிப் பொய்யாகும்? ஸ்ரீ பாண்டுரங்கனுடைய திருவருளால் அசாத்தியமானதும் சாத்தியமாகும். என் வாக்கு உண்மையாக வேண்டுமென்று நான் ஸ்ரீ ஹரியின் உபாசனை செய்கிறேன்'' என்று சொல்லி அவன் அங்கிருந்து எழுந்து சந்திரபாகா நதியின் படுகையில் (ஜலமில்லாத மணல் வெளியில்) ஸ்ரீ விட்டலனுடைய தியானம் செய்து கொண்டு உட்கார்ந்தான். பாண்டுரங்கனுடைய சாட்சாத்காரமாகிறவரையில் அவன் அன்னம் ஆகாரம் ஒன்றையும் உட்கொள்வதில்லை என்று தீர்

மானித்தான்; அதனுல் அவன் மிகவும் மெலி வடைந்து போயிருந்தான். ஒரு நாள் அக்கிழ வன் கனவில் ஓர் பிராமணனைக் கண்டான். அவன் மேகவர்ண முள்ளவனுயிருந்து, கழுத் தில் துளசிமாலையை யணிந்திருந்தான். சுத்த மான உடையை உடுத்திருந்தான். அவன் கிழ வனை நோக்கி "சாது, எழுந்திரு! எழுந்திரு! உன் மனோரதம் பூரணமாகும். ஸுமதி ஸ்ரீ கிரு ஷ்ணபகவானுடைய அனுக்கிரகத்தால்கர்ப்பதா ரணம்செய்வாள். அவளுக்கு உத்கிருஷ்டமான மகாபாக்கியம் வாய்ந்த புத்திரன் உண்டாவான். அவனுடைய புகழ் உலகமெல்லாம் பரவும். நீ பிறவிக் குருடனுயிருந்தபோதிலும் நாளைக் காலை யில் உனக்கு திவ்விய திருஷ்டியுண்டாய் இக்க னவின் அநுபவம் கிடைக்கும்" என்று சொல்லி மறைந்தான். அக்கிழவன் காலையில் எழுந்த போது அவனுக்கு நன்ருகக் கண் தெரியலா யிற்று. இரவில் கண்ட கனவை நினைத்து அவன் அளவு கடந்த ஆனந்த முற்ருன். உடனே இச் சங்கதியை அவன் வாமதேவருக்குத் தெரிவித் தான். இதற்கு அத்தாட்சியாகத் தனக்குப் பார் வை (திருஷ்டி) கிடைத்ததையும் அவருக்குச் சொன்னுன். வாமதேவருக்கு ஆனந்த முண் டான போதிலும் உலகத்தாருடைய நிந்தனைக் காக பயந்தார். வீட்டில் ஸ்ரீ கிருஷ்ணனுடைய பிரதிமையை (விக்கிரகத்தை) ஸ்தாபித்து அதன் உபாசனை பண்ணிக் கொண்டே அவர் ஸ்வஸ் தமாகக் காலத்தை கழித்து வந்தார்.

விருத்தனுன அதிதிக்கு சாட்சாத்காரமான படி ஒரு நாள் இரவில் ஸுமதிக்குக் கனவில் பதியின் தரிசனமாயிற்று; ஈசுவரனுடைய செய லின்படி அவள் கர்ப்பம் தரித்தாள். அவள் நித் திரையினின்றும் எழுந்து கனவில் நடந்த சங் கதியை அவள் தன் அன்னையினிடம் சொன் னுள். நாட்கள் செல்லச்செல்ல கர்ப்பம் வளர லாயிற்று ஜனங்கள் எங்கு பார்த்தாலும் பல வாறுகப் பேச வாரம்பித்தனர். மனங்கொ ண்டபடி ஸுமதியை நிந்திக்கலாயினர். வாம தேவர் உண்மையான சங்கதியை ஜனங்களுக் குத் தெரிவித்தார். ஆனுல், அது சிலருக்கு இசைந்தது, சிலருக்கு இசையவில்லை. நிற்க, ஒன்பது மாதம் பூரணமானதும் சுபமுகூர்த்தத் தில் ஸுமதி ஆண்குழந்தையைப் பெற் ருள் வாமதேவர் எல்லோருக்கும் சற்கரை வழங்கினர் பிராமணர்களுக்கு தானங்கள் கொடுத்தான். பன்னிரண்டாவது தினத்தில் அச்சிசுவுக்கு நாமகரணம் செய்து "நாம தேவன்" என்று பெயரிட்டனர். முன்னுக்கு இக்குழந்தை பெரிய ஹரிபக்தனுய் அநேக ஜனங்களுக்கு ஹரிநாம உபதேசம் செய்து பக்திமார்க்கத்தை உஜ்வலப்படுத்தினுர். இந்த பகவத் பக்தன் அநேக அற்புதமான காரியங் களைச் செய்திருக்கின்ருர். அவை பின் வருமாறு:—

(1) கல்லால் செய்யப்பட்ட நந்தியை நைவேத்தியம் புசிக்கச் செய்தது.

(2) ஜகந்நாதருடைய கோயிலைத் திரும்பும் படி செய்தது.

மேற்படி அற்புதங்களைக் கண்டு அக் காலத்திய பாதுஷா ஸந்தோஷமடைந்து அவருக்கு ஒரு சய்யை (படுக்கை) பரிசளித் தான். நாமதேவர் அதைக் கொண்டுபோய் சந்திரபாகா நதியில் எறிந்து விட்டார். இச் சங்கதி அரசனுக்குத் தெரிந்தது. அப்பொழுது அரசன் கடுங்கோபங் கொண்டு நாமதேவ ரிடம் வந்து, தான் கொடுத்த படுக்கையைத் திருப்பிக் கேட்டான். அப்பொழுது நாம தேவர் ஆற்றில் குதித்து முழுகி நூற்றுக்கணக் கான சய்யைகளை எடுத்து அரசனை நோக்கி "ராஜாவே! இவற்றுள் உன்னுடைய சய்யை எது வோ அதைத் தெரிந்தெடுத்துக்கொள்" என் ருர். எல்லா சய்யைகளுமே தான் கொடுத்த சய்யையைவிட விலை உயர்ந்தனவாயிருந்தன. அதைக் கண்டு அரசனுக்குப் பச்சாத்தாப முண் டாய் நாமதேவரைச் சரணமடைந்தான். பிறகு நாமதேவர் ஹரிநாமத்தை உபதேசித்து அவனைக் கிருதார்த்தனுக்கினுர். நாமதேவ ருடைய இத்தகைய அற்புதமானலீலைகள் அநேகமிருக்கின்றன.

# "சிந்தனை"

(ஸ்ரீமான் ஆரியூர் வ. பதுமநாப பிள்ளை)

"எண்ணிய எண்ணியாங் கெய்துப, எண்ணி
திண்ணிய ராகப் பெறின்." [யார்

"இனிது இனிது ஏகாந்தம் இனிது"—என்றார் ஔவைப் பிராட்டியார். இறைவனைச் சிந்தித்து உண்மை தெளிந்து மெய்யன்பு நெறி பற்றி நடத்தற்கே ஏகாந்தவாழ்வு இன்றியமையாது வேண்டப்படுவதாயிற்று. துறவிகள் வனவாசத்தையே விரும்பி நிற்பதும் ஏகாந்த இன்பத்தை நாடியேயாம். 'மனிதன்' என்னும் சொல்லின் பொருள் என்னை? எண்ணுதல் எனும் பொருள்படும் 'மன்' எனும் தாதுவிலிருந்தே மானிடன் என்னும் சொல் பிறந்தது. சிந்தனை எவ்வுயிருக்கும் பொதுவாகவே இருப்பதொன்றாயினும், மனிதனது சிந்தைக்கும் மற்ற உயிர்களின் சிந்தைக்கும் பெரிதும் வேற்றுமை உண்டு. நன்மைதீமைகளைப் பகுத்துணர்ந்து, உயிர்க்கு உறுதி பயக்கும் உண்மைப் பொருள்களைத் தெளிந்து, புன்னெறி விடுத்து நன்னெறி பற்றி உய்வடைதற்கேற்ற உயரிய பகுத்தறிவொன்றினாலேயே மனிதன் மற்றவற்றினும் மேலாக மதிக்கப்படுகின்றான்.

மானிடனது ஐம்புலன்களும் ஐந்து குதிரைகள் போன்றும் சிந்தை அவற்றைச் செலுத்தும் சாரதி போன்றும் உள. சாரதியாகிய மனம் இறைவன் திருவுள்ளத்திற்கு இயைந்ததும் ஆன்றோரால் வகுக்கப்பட்டதுமான அற நெறிக்குப் புறம்பாகாத நன்னெறி பற்றியே ஐம்புலன்களையும் செலுத்துமாயின், ஆருயிர் ஆண்டவனால் அளிக்கப்பட்ட உடலின் துணைகொண்டு இவ்வுலகிற் பொத்தக்க சீரிய பேற்றைப் பெற்று உய்ந்திடும். அவ்வாறின்றி, வாழ்க்கையாகிய தேரில் அமர்ந்துள்ள ஆன்மா சிந்தையாகிய சாரதியின் விருப்பப்படி ஐம்புலன்களாம் அசுவங்களைச் செலுத்த விட்டு விட்டால்—அது தாவது அறநெறியைச் சிறிதும் கவனியாது உலகப் பொய்யின்பப் பொருள்களில் பெரிதும் மையல் கொண்டலையும் மனத்தை அடக்கியாளாது அலட்சியமாக இருந்துவிட்டால்—அவ்வான்மா பெரிதும் இரங்கத்தக்கவாறு பலதிறப்பட்ட இடுக்கண்கட்கும் உள்ளாகி வருந்த நேரிடும். ஆற்றைக் கடக்க அளிக்கப்பட்ட படகைக்கொண்டு கரையேறாது ஆற்றுப்போக்கின் வழியேவிட்டு அல்லற்படுவது போன்றும் வழிநடத்தற்கேற்ற துணைக்கருவியாகக் கொடுக்கப்பட்ட ஊன்றுகோலைக் கொண்டு கண்களையே குத்திக்கொண்டு வருந்துவது போன்றும் உயிருக்கு உய்வளிக்கும் நெறியையும் துன்பம் பெருக்குவிக்கும் நெறியையும் பகுத்துணர்ந்து உண்மை தெளிந்து இறைவனது இன்னருள் பெற்றுய்ய அளிக்கப்பட்ட சிறந்த சாதனமாகிய இவ்வுடலை முழுமுதல் தலைவனாய ஆண்டவனது திருநோக்கத்திற்கே முற்றும் விரோதமான மார்க்கத்திலேயே உபயோகிப்பதனால் பலதிறப்பட்ட துன்பங்களுக்கும் உள்ளாவது பெரிதும் இரங்கத்தக்கதே.

ஆதலின் சிந்தையை அடக்கியாண்டு இறைவன் கருணையைப் பெறுவிக்குந் துறையிற் செலுத்துவதே ஆன்மாவை உய்விப்பதாகும். 'சிந்தையை அடக்குக' என்று செப்பிவிடுவது மிக எளிதே; ஆனால், அதை நடைமுறையிற் கொணர்வதினும் அரியது பிறிது எதுவுமில்லை. "கந்துகமதக் கரியை வசமாய் நடத்தலாம்"—என்று தொடங்கி அரிய சித்திகள் பலவற்றையும் சாத்தியமானவையே என சாற்றி வந்த தாயுமானார், "சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற திறமரிது"—என்று மனத்தை அடக்குதலைமட்டும் மிக அரிதென்று அருளிச் சென்றார். வெறிபிடித்த குரங்

கொன்று புண்ணுல் வருந்திக் கள்ளும் குடித்து தேளாலும் கொட்டப்பட்டு விட்டால் எவ்வாறிருக்குமோ, அதனிலும் பன்மடங்கு அதிகமானதாகும் நமது மனமெனும் குரங்கு. அம்மனக்குரங்கைத் திருத்தி நல்வழிப்படுத்த நம் ஆன்றோர்கள் பட்ட துன்பங்கள் கொஞ்சமோ! அத்தகைய சிந்தையை அதன் விருப்பப்படி ஓடியாடவிட்டு விட்டால், அதனிலும் கொடிய பகைவர் வேறெவருமில்லை; ஆனுல், அம்மனத்தையே ஆன்றோர் வகுத்த அறநெறியினின்றும் சிறிதும் பிறழாவாறு மிக்க எச்சரிக்கையுடன் காத்து நின்று, ஆண்டவனது கருணையைப் பெறமுயலும் துறையிற் செலுத்துவோமாயின், அதனிலும் சிறந்த நண்பனுமில்லை. மனத்தினுல் ஆன்மாவைக் கரையேற்ற வேண்டும்; ஆன்மாவை அல்லற்படுத்தக் கடவனல்லன்; ஏனெனில், தனக்கு மனமே துணை, மனமே பகை. இஃது, பின் வரும் கீதாசார்யன் திருவாக்கால் தெளியப் படும்.

उद्धरेदात्मनात्मानं नात्मानमवसादयेत् ।
आत्मैवह्यात्मनो बंधुः आत्मैव रिपुरात्मनः ॥

சிந்தையை அதன் விருப்பப்படி செல்லவிட்டு விடுவதால் விளையும் துன்பங்கள் பற்பல. திருமங்கையாழ்வார் தமது சிந்தையை நோக்கி,

"உருவினுர் பிறவிசேர் ஊன்பொதி
நரம்புதோல் குரம்பையுட்புக்கு
அருவிநோய் செய்துழல் ஐவர்தாம்
வாழ்வதற் கஞ்சினுயேல்,
திருவினுர் வேத நான்கைந்து தீ
வேள்வியோ டங்கமாறும்
மருவினுர் வல்லவாழ் சொல்லுமா
வல்லையாய் மருவுநெஞ்சே"

என உபதேசித்திருப்பது உய்த்து உணரத்தக்கது. மெய்யன்பு மேலீட்டால், இறைவனிடம் தமது சிந்தையைத் தூது விடுத்த அடியார்கள் அச்சிந்தை ஆண்டவனிடம் ஈடுபட்டு அவனிடமே தங்கிவிட, அதை நினைந்து நினைந்து வருந்துவர்

..............."கண்ணன் வைகுந்தனேடு
என் நெஞ்சினுரைக் கண்டால்,
என்னைச் சொல்லி அவரிடை நீர்
இன்னஞ் செல்லீரோ,
இதுவோ தகவென்று இசையின்
[களே"—

என சடகோபாழ்வார் இறைவனிடம் தங்கி விட்ட சிந்தையைக் குறித்து இரங்கி நின்றது காண்க.

ஆதலின் பெருதற்கரிய மனிதப் பிறவியைப் பெற்ற ஒவ்வொரு ஆணும் ஒவ்வொரு பெண்ணும் இவ்வுடல் ஆண்டவனுல் நமக்கு அளிக்கப்பட்டதன் நோக்கமென்னை என்பதைக் குறித்துப் பன்முறையும் சிந்தித்து சிந்தித்து உண்மை தெளிந்து உயிர்க்கு உறுதி பயக்கும் உண்மைப் பொருள்களை உணர்ந்து, இறைவனது கருணையைப் பெற்று இன்புறுவதற் கேற்ற அறநெறிக்குப் புறம்பாகாத மெய்யன்பு நெறி ஒன்றையே பற்றி, அத்துறையிலேயே சிந்தை முழுவதையும் செலுத்தி மனமொழி மெய்களால் தூயவாழ்வு நடாத்த முன் வருவார்களாக. அச்சீரிய நன்னேக்கம் சிந்தையிற் பதிந்து விட்ட மறுகணமே, ஆன்மா உய்ந்து விடும். அத்தகைய அரும்பேற்றை அருளுமாறு, ஆண்டவனை நோக்கி ஒவ்வொருவரும் மெய்யன்போடு வேண்டுவார்களாக!

"குற்றமோ குணமோ நானறியேன்
என் குறிப்பெலாந் திருச்சிற்றம்பலத்தே
உற்றது, ஆதலினுல் உலகியல் வழக்கில்
உற்றிடில் மற்றெனதலவே
தெற்றென அருட்கே குற்றமென்பதுதான்
செய்திடில் திருத்தலேயன்றி,
மற்றயலார் போன்றிருப்பதோ,
தந்தை மாபிது நீ அறியாயோ?"—

அருட்பா.

# பவபூதி.

(சுன்னாகம் திருவாளர் கு முத்துகுமாரசுவாமிப் பிள்ளை.)

பண்டைக்காலத்திற் பாரதநாட்டில் விளங்கிய வடமொழிப் புலவர்களாகிய பாணன், காளிதாசன், பாசன் முதலிய புலவர்களைப்போல் என்றும் அழியாப் பெரும் புகழ் படைத்துச் சிறப்பெய்தியவர் பவபூதி யென்னும் புலவரே யாவர். அவர் புகழொடு வாழ்ந்து விளங்கிய காலம் பல்லாண்டுகளுக்கு முற்பட்டதே யாயினும் அவரியற்றிய அரிய நூல்கள் சொல்வளனும் பொருள்வளனும் நிறைந்து படிப்பவர் உள்ளத்தை மகிழ்வுறச் செய்யுந் தன்மையன வாகையால், அவை என்றும் எவராலும் விரும்பிப் படிக்கப்பட்டு வருகின்றன. அவர் நூல்களைப் படித்தோர்யாவரும் அவருடைய பாவன்மையையும், சுவையழகையும் பன்முறை நாவாரப் புகழ்ந்து கூறியிருக்கின்றனர். கோவர்த்தனசாரியர் என்னும் வடமொழி வல்லார் பவபூதி இரக்கச் சுவை யுண்டுபண்ணுவதில் தீரர் என்றும், அச்சுவை கல்லையும் உருக்கச்செய்யுந் தன்மைய தென்றும் பலவாறு புகழ்ந்தேத்திப் போயினர். அதுமட்டோ? சமேந்திரர் என்னும் புலவர் பவபூதியின் யாப்புச்சிறப்பைக் கூறுமிடத்து அவர் திலகமஞ்சரி விருத்தமியற்றுவதில் இணையற்றவர் என்று கூறியிருக்கின்றனர். ஐரோப்பியருள்ளும் வடமொழி வல்லுநர்களாகிய கீய்த் (Keith), மய்க்டொனல்ட் (Macdonald) முதலியவர்களும் அவருடைய புலமைச் சிறப்பை வியந்து கூறி இருக்கின்றனர். இவ்வளவு பெரும் புகழ் படைத்த அன்னாரின் காலத்தையும், குல வரலாறுகளையும், புலமைத்திறத்தையும், நூற்சிறப்புகளையும், மற்றத் தன்மைகளையும் ஒருசிறிது ஆராய்ந்து பார்த்தல் அவர் பெருமையை அளவிட்டறிதற்கு உதவியாயிருக்கு மென்பதில் ஐயமில்லை.

## காலம்.

பண்டைக்காலப் புலவர்களது காலத்தை நிச்சயிப்பதற்கு வேண்டிய குறிப்புகள் அவர்கள் இயற்றிய நூல்களிற் காணப்படவில்லை. வடமொழிப்புலவர்களும் தென்மொழிப்புலவர்களைப் போலத் தமது வாழ்க்கை வரலாறுகளைக் கூறுதல் தற்புகழ்ச்சியின்பாற்படுமென்று எண்ணி அவற்றைக் கூறாது போந்தனர். தாம் வாழ்ந்த காலத்திற்குச் சிறப்பாயுள்ள நடவடிக்கைகளைப் பற்றிக் கூறும் வழக்கமும் அவர்களிடத்து இல்லை. அவர்கள் காலத்தை நிச்சயிப்பதற்கு அவர்களுடைய நூல்களுக்குப் புறத்துள்ள சான்றுகளே உதவியாயிருக்கின்றன. வடமொழிப் புலவர் மணியாகிய காளிதாசன் காலம் இன்னும் ஒருவராலுஞ் சரிவரக் கணிக்கப்படவில்லை. வேறு அளவிறந்த வடமொழிப் புலவர்களது காலங்களும் கணிக்கப்படாமல் இருக்கின்றன. ஆனால் பவபூதியின் காலமோ ஒரு சிறிது புலப்படும் வகையில் இருக்கின்றது. அவர் வாழ்ந்த காலம் கி. பி. ஏழாவது நூற்றாண்டென்பதை வடமொழியிலும் ஆங்கிலத்திலும் வல்லுநராகிய ஆசிரியர் காளி என்பவர் பல ஏதுக்களான் ஆராய்ச்சி செய்து நிறுவுகின்றனர். கல்கனர் இயற்றிய இராஜ தரங்கிணி என்னும் நூலில் கன்னிய குப்ஜ அரசனாகிய யசோவர்மன் பவபூதிக்கு உதவிபுரிந்ததாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. யசோவர்மன் காலம் கி. பி. எழுநூற்று முப்பதாவ தாண்டாகையால் பவபூதியும் அவன் காலத்தவர் என்பது தேற்றம். வேறு குறிப்புக்களும் அவருடைய காலத்தை வெளிப்படுத்துகின்றன. பவபூதியின் நூல்களைக் காளிதாசனுடைய நூல்களோடு ஒருங்குவைத்துப் பார்க்கும்போது பவபூதி காளிதாசனைப் பின் பற்றி

யே தனது நூல்களை இயற்றியிருப்பதாகத் தோன்றுகின்றது. காளிதாசன் காலம் கி. பி. ஆறுவது நூற்றூண்டுக்கு முற்பட்ட தெனவே பவபூதியின் காலம் ஆறவது நூற்றூண்டுக்குப் பிற்பட்ட தென்பது வெளிப்படை. கி. பி. 610-ல் ஹர்ஷ மகாராஜாவின் அரண்மனைப் புலவராக விளங்கிய பாணன் என்னும் புலவன் தனது ஹர்ஷ சரிதத்தின் முன்னுரையிற்பெரும் புலவர்களது பெயர்களைக் கூறுகின்றான். பவபூதியின் பெயர் கூறப்படவில்லை பவபூதியின் பெயர் கூறப்படாது விடப்பட்டமைக்கு அவர் பாணனுக்குப் பிற்பட்ட காலத்திலிருந்தமையே ஏதுவாகும். எல்லா ஏதுக்களும் பவபூதி ஏழாவது நூற்றூண்டில் வாழ்ந்தவர் என்பதை வற்புறுத்துகின்றன.

## குலம்; கல்வி.

பண்டைப் புலவர்கள் வாழ்ந்த காலத்தை வரையறை செய்தல் அருமையாயிருப்பது போல அவர்களுடைய சரித்திர வரலாறுகளும் அறிதற்கரியனவா யிருக்கின்றன. புலவர்கள் தங்கள் சாதி, சமயம் முதலியவற்றை மறை பொருளாக வைத்துப் போகும் வழக்குடையர். புலவர்மணியாகிய காளிதாசனைப் பற்றிய வரலாறுகள் அவரியற்றிய நூல்களிற் சிறிதுங் காணப்படவில்லை. பவபூதியோ காளிதாசனைப் போற்றனது வரலாற்றைக் கூறுது மௌனஞ் சாதித்தவரல்லர். பவபூதி புகழீட்டுவதில் மிக்க விருப்புடையவர். அவரியற்றிய ஒவ்வொரு நூலிலும் தம்மைப் பற்றிய குறிப்புக்களை வரைந்திருக்கின்றனர். அவருடைய வரலாற்றுக் குறிப்புகள் மிகுதியாயுள்ள நூல் மகாவீர சரிதம். அதிலிருந்து அவருடைய பரம்பரையாயுள்ள இருப்பிடம் தெற்கே பத்மபுரமென்பதும், தைத்திரிய வேதத்தைப் பின்பற்றிய உதம்பரரே அவருடைய முன்னோர் என்பதும் அறியக்கிடக்கின்றன. மேலும் அவர் பிராமணகுலத்தினர் என்பதும், பிரமவித்தையில் நன்கு தேர்ந்தவர் என்பதும், அவர் முன்னோருள் ஒருவராகிய பட்ட கோபாலர் என்பவர் ஓர் அரும் பெரும் புலவராக விளங்கினர் என்பதும், அவர் தாயார் சாதுகர்ணி என்னும் பெண்மணியென்பதும், அவர் தந்தையார் நீலகண்டர் என்பதும் அறியக்கிடக்கின்றன. பவபூதி சிறு வயதில் ஞானநிதி என்னும் பெயருடைய பண்டிதரிடம் இலக்கணம், நியாயம், வேதம், வேதாங்கம் முதலிய அறிவுக்குரிய நூல்களைக் கற்றிருக்கவேண்டும். பவபூதி இயற்றிய நூல்கள் ஒவ்வொன்றிலும் அவருடைய கல்வி வன்மை மிளிர்கின்றது. அவருடைய யோக நூலுணர்ச்சி வன்மையை அவரியற்றிய மாலதி மாதவம் என்னும் நூல் காட்டுகின்றது. உபநிடதங்களின் ஆட்சியை உத்தர ராம சரித்திரத்தில் வரும் விவர்த்தங்களைப் பற்றிய பகுதியும், அசுர வைராஜ லோகங்களைப் பற்றிய பகுதிகளும் காட்டுகின்றன. அவர் பொறுமையுடையவர் என்பதையும், உயரிய நோக்குள்ளவர் என்பதையும், இல்லறதருமம் இனிது நடாத்தியவர் என்பதையும் அவருடைய நூல்களின் கண்ணே பிள்ளைகளைப் பற்றியும், அன்பைப் பற்றியும் நட்பைப்பற்றியும் வரும் பாகங்கள் வற்புறுத்துகின்றன.

## நூல்கள்.

பவபூதி எழுதிய நூல்களுட் சிறப்பு வாய்ந்தன மகாவீரசரிதம், மாலதி மாதவம், உத்தர ராம சரிதம் என்னும் மூன்று நாடகங்களுமே. இம்மூன்றனுள் மகாவீர சரிதத்தையே பவபூதி முதலில் எழுதியிருக்க வேண்டு மென்பது வடமொழி வல்லுநராகிய பண்டார்க்கார் (Bhandarkar) கருத்து. இந்நூலொன்றிலேயே பவபூதி தமது குலவரலாறுகளை விரிவாக உரைத்திருக்கின்றபடியாலும் இந்நூலியற்று முன்னர் அவர் வேறு நூலியற்றிப்

புகழ் படைத்திருப்பின், அவ்வாறு தமது குல வரலாறுகளைப் புகழீட்டக் கருதிக் கூறவேண்டுவதின்றாகலானும் மகாவீர சரிதத்தையே முதலில் இயற்றினாரென்று பண்டார்க்கார் கூறியது பொருத்த முடைத்து. மகாவீர சரிதத்தில் அவர் இராமரது பிள்ளைமைக் காலந் தொட்டு இராவணப்போரில் வெற்றி பெற்று அயோத்தி திரும்பி வந்தது மட்டுமுள்ள 'இராமாயணக் கதையை நாடக வடிவமாக வமைத்துக் கூறியிருக்கின்றனர். இந்நாடகத்திற் பெரும்பாலும் வீரச்சுவையே பொதிந்து கிடக்கின்றது. அவருடைய சொல்லாட்சிச் சிறப்பையும், பொருளமைப்பின் சித்திரத்தையும் இது நன்கு வெளிப்படுத்துகின்றது. இவ்வரிய நூலியற்றிய பின்னர் அவர் மாலதி மாதவம் என்னும் நூலை இயற்றியிருக்க வேண்டும். இந்நாடகம் பவபூதியின் புகழை நாடக வுலகில் நன்கு நிலைநாட்டியதுமன்றி அவருடைய புலமையின் ஆழத்தை அறியாது குறைகூறிய சிலருக்கு நல்லறிவு கொளுத்தி அவரை அடக்கமுறும்படி செய்தது. இதில் தேவராதன் மகன் மாதவன் என்பான், புரிவாசுவின் புதல்வியாகிய மாலதியைக் காதலித்த நாட்டொட்டு, அவளை யடைந்த நாள் மட்டும் பட்ட இடுக்கண்களும், அடைந்த வகைகளும் சிறப்பாகக் கூறப்படுகின்றன. பவபூதி கடைசியாகப் பாடிய நாடகம் உத்தராராம சரிதம். இது அவருடைய நாடகங்கள் எல்லாவற்றுள்ளும் தலைசிறந்தது. இதில் மகாவீரசரிதத்திற் கூறப்படாது எஞ்சி நின்ற இராமாயண கதாபாகங் கூறப்படுகின்றது. இந்நூலின் கண்ணே பவபூதி தமது புலமைத்திறத்தைப் பலதிறமாக வெளிப்படுத்தியிருக்கிறார் என்பது பல புலவர்களது துணிபு.

### புலமை.

பவபூதி கீழ்நாட்டு வடமொழி வல்லுநர்களாலும் மேல்நாட்டு வடமொழி வல்லுநர்களாலும் பெரிதும் பாராட்டப்பட்டு வருகின்றமையே அவர் படிப்பவருள்ளத்தைக் கவரக்கூடிய பண்புகள் நிறைந்த ஒரு செவ்விய புலவர் என்பதற்குச் சான்றாகும். ஆசிரியர் உவில்சன் (Wilson) என்பவர் பவபூதியின் மொழிநடையைப் பற்றிக் கூறுமிடத்து "பேரழகும் பெருவலியும் உடையது" என்று வியந்து போந்தார். பவபூதி அழியாப் பெரும் புகழ் படைத்ததற்கு அவர் புலமையே ஏதுவாயிருந்தது. வடமொழிப் புலவர்களுள்ளே பவபூதி காளிதாசனோடு ஒத்த பெரும் புலமை நிறைந்தவராக விளங்குகிறார். பவபூதி இரக்கச்சுவை யுண்டு பண்ணுவதிற் காளிதாசனிலுஞ் சீரர் என்று யாவராலும் பாராட்டப்படுகின்றனர். நாடக வுலகில் இப்பொருட்டில் ஒருவரும் அவருக்கு இணையில்லை யென்பது துணிபு. உத்தர ராம சரிதத்திற் சீதையை வருணிக்கும் போது "கருணையே உருவெடுத்து வந்ததுபோல" என்று கூறியுள்ளார். அக்கூற்று கருணைச்சுவை யுண்டுபண்ணுவதிற் றிறமை வாய்ந்த அவர் பால் உரைப்பதே பொருத்தமுடைத்து. அவருடைய நாடகங்களில் இரக்கச்சுவை ததும்பும் பாகங்களைப் படிக்கும்போது வாசிப்போர் கண்களினின்று கண்ணீர் பெருகுகின்றது. அவருடைய நாடகங்களைப் படிப்பவரது உள்ளம் பலவாறு மகிழ்வுறுமாறு பலபொருட்களைப் பற்றி வருணிக்கும் வன்மை யுடையவர். மற்றைய வடமொழிப்புலவர்களைப் போல் பின்னும் பின்னும் ஒரேவித வருணனைகளையே அமைப்பவரல்லர். பவபூதியின் உள்ளம் அகன்ற நோக்குடையது. சிறிய பொருட்களைப் பொருட்படுத்தி அவைபாற்பட்டு மயங்கி மாழ்குவதன்று. அவர் கட்புலனுக்கப்பாலாழ்ந்து நோக்கும் பெருவலி பெரிது முடையவர். அச்சத்தை உண்டுபண்ணும் காடுகளையும் உயரிய மலைத் தொடர்களையும், பெரிய நீர் வீழ்ச்சிகளையும் படிப்போருள்ளங்களிற் பதியும் வண்ணம் வருணிக்குஞ் சிறப்பு வாய்ந்தவர். பவபூதியின்

செவ்விய மொழிநடையும் அவர் நூல்களுக்குச் சிறப்பைக் கொடுக்கின்றது. அவருடைய நூல்களிற் கூறப்படும் அறங்களுஞ் சிறந்தனவாகும்.

## குறை பாடுகள்.

பவபூதி பல பண்புகளையுடையவராயிருந்த போதிலும் சிற்சில குறைவுபாடுகளுமுடையராயுங்காணப்படுகின்றார். விளங்க வைத்தல் என்னும் விழுமிய குணம் அவரிடங் காணல் அரிது. அவர் தமது நூல்களிற் கடுஞ்சொற்கள் விரவிவர இயற்றியிருக்கின்றமையால் அவைகளைப் படிப்போர் எல்லாரும் அவற்றின் பொருளை விரைவில் விளங்க முடியாமல் இடர்ப்படுகின்றனர். அவர் தொடற் சொற்களை மிகுதியாகத் தொடுத்து நூலியற்றுவதினாற் படிப்பவர்களுக்குப் பல விடங்களிற் பொருள் மயக்கம் உண்டாகும்படி செய்கின்றனர். கூறியது கூறல் என்னுங் குற்றமும் அவரிடத்திற் காணலாம். ஒரு நூலிற் கூறிய பாக்களையும், சொற்றொடர்களையும், தாமியற்றும் மற்றைய நூல்களிலும் பின்னும் எடுத்துக் கூறுகிறார். மகாவீர சரிதம், மாலதிமாதவம் என்னும் இரு நூல்களிலுமுள்ள சில பாக்கள் உத்தாராம சரிதத்திற் காணப்படுகின்றன. இக்குறைகள் பவபூதியின் நூல்களை விரும்பிப் படிப்பவர்களுக்கு எளிதிற் புலப்படும்.

## பவபூதியும் காளிதாசனும்.

பவபூதியை உன்னுந்தோறும், உன்னுந்தோறும் காளிதாசன் என்னும் புலவருடைய எண்ணம் உள்ளத்திலெழுகின்றது. இவர்களிருவரும் நாடகவுலகில் எவ்வாறு திகழ்கின்றனர்? பவபூதி உயரிய புலவரா? அல்லது காளிதாசன் உயரிய புலவரா? என்ற இன்னோரன்ன கேள்விகளும் உள்ளத்தில் உதிக்கின்றன. பவபூதியையும் காளிதாசனையும் புலமையால் நோக்கும் போது காளிதாசன் சிறந்த புலவனாக விளங்குகிறான். இருவரையும் நாடகப் புலவர்களாக நோக்கும் போது பவபூதி சிறந்த நாடகப் புலவராகத் திகழ்கின்றார். இருவருக்கும் பொதுவான தன்மைகளுஞ் சில உள. இயற்கை வளங்களை வருணிப்பதில் இருவரும் திறமை வாய்ந்தவர்கள். சொல்லலங்காரம் பெறவுரைப்பதில் இருவருக்கும் சோர்வே கிடையாது. காளிதாசன் ஆழ்ந்த கருத்துள்ளவன். காதல் வீரத்தைச் சுவைபட உரைப்பதிற் காளிதாசன் பவபூதியிலுஞ் சிறப்பு வாய்ந்தவன். பவபூதி இரக்கச் சுவை, வீரச்சுவை ஆகிய இருசுவைகளுந் ததும்பப் பாடுவதில் தேர்ச்சி பெற்றவர்.

## முடிவுரை.

உலகத்தில் என்றும் விளங்கும் புலவர்களது புலமையை வரையறுத்துக் கூறுதல் இயலாது. அவர்கள் இருந்த காலத்தின் நிலைமையையும், அவர்களது வாழ்க்கை வரலாறுகளையும், உள்ளப் போக்குகளையும் செவ்வனே உணர்ந்தாற்றான் அப்புலவர்களுடைய பெருமையையும் புலமையையுஞ் சரிவர அளவிட்டறிய முடியும். பவபூதி உலகத்தில் என்றும் ஓர் உயரிய நாடகப் புலவனாக விளங்குவது திண்ணம். அவரியற்றிய நாடகங்களுள் மிக்க சிறப்பு வாய்ந்த உத்தாராமசரிதம் என்னும் நாடகம் அவர் சிறந்த நாடகப் புலவன் என்பதை வடமொழியிற் சிறிது பயிற்சியுடையார்க்கும் வெள்ளிடை மலை போல விளக்கிக் காட்டும். இதுகாறுங் கூறியவைகளால் வடமொழிப் புலவர்மணிகளுள் ஒருவராகிய பவபூதியின் சரித்திரமும், அவர் புலமையும், பிறவும் ஒருவாறு உணரப்படும்.

"நவசக்தி"

---

# குலமடந்தையரும் கூடா வொழுக்கமும்.

(காலஞ்சென்ற சிறுமி ஸ்ரீமதி R. பாப்பு அம்மாள்.)

ஓ, எமது பெருங்குணமாதர்காள்! நமது பூர்வீக சொந்தத் தமிழ் நாட்டில் பெண் மக்களாகப் பிறந்து வளர்ந்து நம்மை அழகு படுத்துங் கருவி அழகிய கல்வி யென்பதை யறிந்தோமில்லை.

நம்மைப் பெருந் தவங்கிடந்து பெற்றோரும் உற்றோரும் நம் வினைபயப்ப நமக்குரிய அணி கலன் கல்விதான் என்பதைச் சிறிதேனும் உணர்ந்தாரில்லை.

நமது இளமை தவழ்ந்தும் உருண்டும் எழுந்தும் ஓடியும் ஆடியும் பாடியும் உண்டும் உடுத்தும் உறங்கியும் உலகியலறியாவண்ணம் விரைந்து சென்றது.

இவ்வாறாய்ப் பேதைப்பருவங் கடந்து, பெதும்பைப் பருவந்தலையிடவே சிற்றுண்டி செய்யவும், சிறுவிளையாடல் புரியவும், தெருச் சண்டை காணவும், வம்பு வளர்ப்பாரில்லின்கண் ணெடிதிருக்கவும், அடிசில் சமைத்தற்கான முறை பயிலவும், அழகு படுத்தற்குரிய முறை தழுவவும் இவ்வாறான நடைகள் பயின்றோம்.

இனி மங்கைப் பருவ மெய்தவும், பெற்றோர்கள், நமது மெய்வளர்ச்சியைக் கண்டு மனமகிழ்ந்து பணமும் டம்பமும் வலிமையும் செருக்கு மிகுந்து. பார்க்கப் பளபளப்புள்ள வரனையே தேடி அன்பு, குணம், ஆறுதல், ஆற்றல், அவாவின்மை முதலிய நற்குண மமைந்த வரன் வறியாயிருப்ப அவரைச் சிறிதுங் காணாராகி, பழவினை பயந்த மணவினை யென்றே முதற்கண் கண்ட வானுக்கே வாழ்க்கைத் துணையாக்குகின்றனர்.

இங்ஙனம் நம் சிறுமியரைப் பெற்றோராய பேயர்கள் அன்னவரைக் கல்விக்கடற்புகக் கருதாராகி ஆயுந் திறலகற்றி மாயுந் திறல் புகுத்தி மக்களினிடையே மாக்களாக்கி மறைந்து விடுகின்றனர்.

> கண்ணுடையர் என்பர் கற்றோர் முகத்திரண்டு
> புண்ணுடையர் கல்லாதவர்

எனவும்

> எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்

எனவும் நமது பெரியார் பேசியிருப்பது பிழையாமோ?

ஐய! கல்வியற்ற கண் புண்ணேயன்றோ! புண் விழிகொண்டு பொருந்தக்காண்கை பொருந்துமோ? கல்வியாகிய புணைகொண்டு துன்பக்கடல் கடந்த மாதர்கள், திருவவதாரஞ் செய்த இந்நாட்டிலித்துணைப்புன் மடந்தையர் பொன்றாது வாழ்தல் புலைத்தன்மையே யாகும்.

கல்வியொன்றே கடவுளைக் காட்டும் நெறி. கல்வி யொன்றே ஒழுக்கந் தருநெறி. கல்வி யொன்றே கற்பினைத் தருநெறி. கல்வி யொன்றே உடல் வளர்க்கு நெறி. கல்விகலனாகும். கல்வியொன்றே இன்பந்தரு நெறி. கல்வியொன்றே ஐக்கியந்தரு நெறி. இவ்வகையாய் எல்லா நெறிகளைக் காட்டுவது கல்வி யென்பதில் ஐயமுளதோ?

> குஞ்சியழகுங் கொடுந்தானைக் கோட்டழகு
> மஞ்சளழகு, மழகல்ல, நெஞ்சத்து
> நல்லம்யாமென்னும் நடுவு நிலைமையாற்,
> கல்வி யழகே யழகு

என்பது நாலடியாரின் செய்யுள்.

கல்வியாகிய கண்கண்ட தெய்வத்தினைக் கைசோரவிட்டு நமக்குரிய இன்பநலனை நுகர வறியாக் குருடராய் தத்தளிக்குமாறு எடுத்த இவ்வாக்கையாற் பயனென் கொல்!

ஐயோ! பொன்னனைய வன்னநடை மாதரசிகாள்! உங்கள் மணவாழ்க்கையை யான் பிரித்

றக் கூறவில்லை. யானும் பெண்பால். மணம் (விவாகம்) என்னும் தோணியேறி விடுகின் ரும். ஆங்கு மாமியாகிய பெரும் புயலும் இல் லமாகிய பெருங் கடலும் நாத்தியாகிய பேரலை யும் நாதனாகிய திசை காட்டியும் மாமனாகிய மாலுமியும் கொண்ட மாக்கலம் புத்திரோத யம் என்னுங் கரையைச் சேருகிறது.

இத்தன்மையாகிய யாம் இனியேனும் சுதந்தரமும், சுகவாழ்வும் எய்தப் பெற்றே மா? பெற்றிலம்.

இதனைக் காட்டிய செய்யுள்:—

நற்குணமடந்தையர் நல்ல செந்தமிழ்
சற்குணக் கல்வியுஞ் சார்த லில்லையால்
சிற்குணங் காணுத லெங்ஙனாகுமோ?
கற்கலாங் காலமுங் கடந்த தின்பமே.

கல்லா நலத்தாரைக் காணார் பெரியரெனி
லெல்லா நலமு மினியெங்காமோ—பொல்லாத
சூழு நெறிகளல்லாற் சுத்த சிவதத்துவத்தின்
மீழு நெறியேதோ மிகை

என்பனவற்றாலுணர்க.

நம்மவர் என்றும் அறியாப் பருவத்தினராய் கல்வி கூடா வொழுக்கத் துறைந்து குடும்பப் பெரும் பாரமும் பெற்று அதனை யாற்று மதி வன்மையற்று நாளடைவில் மண்ணுக்கிரை யாகிவிடுகின்றனர்.

அந்தோ! பெண்மக்களின் உதரத்துட்டங்கி யிருந்த பெரிய புருடோத்தமர்களே! பெரும் புலவர்களே! பேரரசர்களே! பெருஞ் ஞானி களே! நீங்கள் குடியிருந்த கோயிலைக் குறைப் படுத்தலாமோ? இன்னாடையும் பேரிடர் உங் கள் அனைவரையும் பற்றாது போய்க்குமோ? அன்புடையீர், எம்மை அடிசில் அமைக்கும் அடுப்பெனவும், மக்கட்பெறும் மாடமெனவும் நுங்கள் கருத்திடை கொண்டவண்ணம் ஒழுக லாயினீர். யாம் இப்மாற்றம் உள்ளத்தி லுணர்ந்தே யிருக்கின்றோம். பதிபக்தியைச் சிறிதளவுந்தளர விடோம். உங்கள் உள்ளன் பைச் சிந்தவிடோம். எங்கள் அறிவாலும் கற் பின் வன்மையாலும் அன்பினாலும் பிணித்து உம்மை ஒரு தொழிலும் நடவாதிடுக்கணி யற்றி யெமக்குரிய தற்காப்புச் சாதனங்களை வலிதிற் பற்றுவோம்.

வஞ்சித் தொழுகு மதியிலிகாள்! யாவரையும்
வஞ்சித்தோ மென்று மகிழன்மின்—வஞ்சித்த
யெங்குமுளனொருவன் காணுங்கொல் லென்றஞ்சி
அங்கம் குலைவ தறிவு

என்பதும் ஸ்ரீ குமரகுரு பரப்பெருந்தகைப் பெம்மான் அருளிய திருவாக்காகும்.

ஆகையினால் சீவகாருண்ய சீலர்களாகிய பெரியோர் திரண்டு கருணைக்கடலாகிய காந்தி யடிகளாரைத் துணைகொண்டு கருங்கண் மடந் தையர்க்குக் கட்டாயக் கல்வியை கட்டளை யிட் டுக் கற்பிக்கும்படி பன்முறை வேண்டுகின் றேன்.

எல்லாம் வல்ல இறைவன் திருவடி வாழ்க.

சுபம்.

# புனிதவதியார்.

(திருவாளர் கா. சி. சிவசங்கர முதலியார்)

கடலிலுள்ள அலைகள் சங்குகளைக் கரையில் எறிய அவைகள் முத்தங்களைப் பெற்று வைத்துத் திரும்பும் கடல்வளநிறைந்த காரைக்கால் நகரத்திலே கொள்வதும் மிகைபடாது கொடுப்பதுங் குறைபடாது உண்மையோடு வாணிபஞ் செய்யும் வணிக மக்கள் நிறைந்த ஊரிலே தனதத்தர் என்று ஒரு பொருளாளர் இருந்தார். அவர் தவத்தின் பயனும் அழகு மிகுந்த புனிதவதியார் பிறந்தார்.

அக்குழந்தை நடக்கத் தொடங்கிய காலத்திலேயே சிவபெருமான் திருப்புகழைப் பேச ஆரம்பித்தது. தந்தையார் குழவிப் பருவத்தில் செய்ய வேண்டிய சிறப்புகளெல்லாம் சுற்றத்தார் மனமகிழச் செய்து வந்தார். அழகின் கொழுந்து வளர்வது போல் அக்குழந்தை வளர்ந்து வந்தது. சிறு வீடு கட்டி மணற் சோறுக்கி விளையாடுங் காலத்திலெல்லாம் சிவபெருமான் திருப்புகழையே பேசுவது அக்குழந்தைக்கு வழக்கம். சிவனடியார் வந்தால் தமது தாதியர் பின்னே வர தான் அவர்கள் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி அவருக்கு அமுது செய்விப்பது வழக்கம். சாமுத்திரிகா இலக்கணத்தில் சொல்லியபடி நலனிறைந்த உறுப்புகளையுடைய மடந்தைப் பருவத்தைப் புனிதவதியார் அடைந்தார்.

இவர்கள் மரபினுக்கொத்தார் பலர் பெண் கேட்கப் பெரியோரை அனுப்பினர்கள். அவர்களுள் சிறப்புமிக்க கடற்கரையிலுள்ள நாகப்பட்டினத்திலுள்ள நிதிபதி மகனுக்குப் புனிதவதியாரை பேசும்படி சில பெரியோரைக் காரைக்காலுக்கு அனுப்பினர்கள். அப்பெரியோர்கள் காரைக்கால் அடைந்து தனதத்தனிடம் வந்து "ஐய! நீர் பயந்த பைந்தொடியை நாகையிலுள்ள நிதிபதி மைந்தர் பரமதத்தருக்கு முறைப்படி மணஞ்செய்து கொடுக்கவேண்டுமென்று கேட்டார்கள். புனிதவதியார் தமிழ் மொழியிற் புலமை மிக்கவர். தனதத்தர் தனது மகளின் கல்விக்குத் தக்க கல்வி பரமதத்தருக்கு இருக்கிறதா வென்பதைக் கருதாது அழகும் செல்வமும் நிரம்பியிருப்பதறிந்து மகளை மணஞ் செய்து கொடுக்க ஒப்புக்கொண்டார். மணமிசைந்த நாள் நெருங்கவே நிதிபதி சுற்றத்தாருக்கு மணவோலை யனுப்பிவிட்டு மணமகனை அலங்கரித்துப் பலவகை இன்னியங்கள் முழங்கக் காரைக்கால் அடைந்தார்கள். காரைக்காலிலே அலங்கரிக்கப் பெற்று எழில்மிகுந்த தனதத்தர் மாளிகையில் தளிர் போன்ற சீறடிகளையும் மயிலன்ன சாயலு முடைய புனிதவதியாரைத் தேனொழுகும் மாலையணிந்த பரமதத்தருக்கு நூல் முறைப்படி கலியாணஞ் செய்து கொடுத்தார்கள்.

கலியாணம் முடிந்தபிறகு தனதத்தர் தங்கள் குடிக்குப் புனிதவதியார் ஒரே மகள் ஆதலினுற் கணவனுடன் நாகைக்குப் போகாமல் காரைக்காலிலேயே வாழ வேண்டுமென்று கருதி அழகிய மாடமொன்று சமீபத்திலேயே அமைத்துக் கொடுத்தார். தனதத்தர் கொடுத்த சீர்களைப் பெற்றுக்கொண்ட பரமதத்தர் வாணிபஞ்செய்து பெரும் பொருள் படைத்துச் சிறப்பாக வாழ்ந்து வந்தார். அவருடைய இல்வாழ்க்கைத் துணைவியாராகிய புனிதவதியார் சிவபெருமானிடத்தும் சிவனடியாரிடத்தும் அன்பு பெருகத் தொண்டு செய்து வந்தாராயினும் வீட்டு வேலைகளைக் கவனியாதிருந்ததில்லை. சிவனடியார்கள் வந்தால் அவர்களுக்கு அன்புடனே அறுசுவை யமுது படைத்தும் பொன் கொடுத்தும் ஆடை கொடுத்தும் உபசரி

ப்பது வழக்கம். ஒரு நாள் பரமதத்தனுக்கு நண்பர் ஒருவர் இரண்டு மாங்கனிகள் அனுப்பினர். அவைகளை பரமதத்தர் புனிதவதியாரிடம் கொடுக்க வென ஆள்விட்டார். கணவர் அனுப்பிய பழங்களைப் புனிதவதியார் பத்திரப்படுத்தி வைத்தார். அப்போது ஒரு சிவனடியார் பசியால் வருந்திப் புனிதவதியாரிடம் வந்து சேர்ந்தார். அடியாருக்குப் பசி யதிகமாயிருந்ததினுலும் அன்ன மொன்றே ஆயிருந்ததாலும் கறியமுது செய்ய நேரமாகும் ஆதலாலும் புனிதவதியார் அடியாரின் பாதங்கள் விளக்க நீரளித்துப் பரிகலம் வைத்து அன்னம் படைத்துக் கணவர் அனுப்பிய இரண்டு மாம்பழங்களில் ஒன்றை அவ்வடியார்க்கு வைத்து உபசரித்தார். வயது முதிர்ந்து உடல் மெலிந்து பசியால் வருந்திய பெரியார் இனிய உணவை யருந்திப் புனிதவதியார் அன்பைப் புகழ்ந்து போனுர். பின்னர் பரமதத்த செட்டியார் வீட்டிற்குவந்து நீராடிப் பூசைமுடித்து உணவருந்த வந்தார். புனிதவதியார் முறைப்படி அவருக்கு மணை போட்டுப் பரிகலம் வைத்துக் கறிகள் பரிமாறி அன்னம் வைத்துக் கணவர் அனுப்பிய மாங்கனியில் மீதியாகிய ஒன்றையும் அவருக்கு வைத்தார். அந்தப் பழம் மிகவும் சுவையாயிருந்ததினுல் பரமதத்தர் மற்றொரு பழத்தையும் கொண்டுவரும்படி கேட்டார். புனிதவதியார் வேறொன்றுங் கூருது பழங் கொண்டுவா உள்ளே செல்வார்போல் போய் எல்லாம் வல்ல இறைவனை நினைந்து "ஆண்டவனே! என் செய்வேன், என் சொல்வேன்" என்று மெய்ம்மறந்து போற்றினுர்.

இறைவனருளால் ஒரு மாம்பழம் அம்மையார் கையில் வந்தது. அதைக் கொண்டுவந்து கணவர் பரிகலத்திலிட்டார். அது அமுதத்தினும் மிகச்சுவையாயிருந்தது. 'இது நான் அனுப்பிய பழமல்ல. மூவுலகினும் கிடைப்பதற்கரியதாயிருக்கின்றது. இதன் வரலாறு யாது?' என்று பரமதத்தர் கேட்டார்.

புனிதவதியார் :—ஈசனருள்.

பரமதத்தர் :—அங்ஙனமாயின் அவ்விறைவனைக் கேட்டு மற்றொரு பழங் கொண்டுவா.

புனிதவதியார் :—ஆண்டவனே! பாம்பணிந்த பரமேட்டி! நீண்ட சடைப் பெருமானே! உற்றவிடத் துதவி செய்யும் ஒரு முதலே! இப்போது ஒரு பழம் தந்தருளாவிட்டால் நான் பொய்யளாய் விடுவேன். என்னைக் காத்தருளல் வேண்டும்.

இறைவன் அருளால் மற்றொரு பழமும் வந்தது. அதைக் கணவருக்குக் கொண்டுவந்து கொடுத்தார். கணவர் கையில் வாங்கிய பழம் காணுமற் போயிற்று. பயமுந் தடுமாற்றமும் உண்டாயிற்று. புனிதவதியார் பூவுலகப் பெண்ணல்ல, தெய்வமகள் என்று தீர்மானித்து, இனி இவ்வம்மையோடு தாம் வாழ்வது கூடாது விட்டுப் பிரிந்து போய் விடவேண்டு மென்கிற எண்ணங் கொண்டார் பரமதத்தர். சில கப்பல்களைச் செய்து கொண்டு கடல் கடந்து பொருளீட்டி வருவதாக மனைவிக்குஞ் சுற்றத்தாருக்குஞ் சொல்லிவிட்டுப் பரமதத்தர் நீங்கினுர். தான் விரும்பிய விடத்திற் சென்று அளவிலாப் பொருள் ஈட்டிக் கன்னி நாட்டிற்குத் திரும்பி அவ்வூரிலுள்ள ஓர் செட்டிமகளைக் கலியாணஞ் செய்து கொண்டார். அந்த மனைவிக்குத் தூண்டா விளக்குப் போல் ஒரு பெண் குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தையின் பொலிவு நோக்கித் தான் உடனுறைதல் அஞ்சி, விட்டு வந்த தெய்வப் புனிதவதியாரின் பெயரை அக்குழந்தைக்கு வைத்தழைத்தார்.

பரமதத்தர் இவ்வாறு வாழ்க்கை நடத்திவரக் காரைக்காலில் புனிதவதியார் சிவபெருமான்

திருவடியிற் பதிந்த அன்போடு சிவனடியாருக்கு அமுது செய்யுந்திருத்தொண்டோடு வழுவாத கற்புக்கணிகலமாய்த் திகழ்ந்து வந்தார். பரமதத்தர் பாண்டிநாட்டிலே மிகப் பொருளாளியாய் வேறொரு மனைவியுடனும் செல்வக் குழவியுடனுஞ் சீருஞ் சிறப்புமாய் வாழ்வதறிந்த சுற்றத்தார் புனிதவதியாரைப் பரமதத்தரிடம் சேர்த்துவிடக் கருதி, திருமகள் போன்ற புனிதவதியாரை ஒரு மணிச்சிவிக்கையிலேற்றிச் சுற்றத்தார் சூழ்ந்து சென்று பரமதத்தர் ஊருக்கு அருகே வந்திருந்துகொண்டு அவருக்குத் தங்களது வருகையை ஆளனுப்பித் தெரிவித்தார்கள்.

அது கேட்ட பரமதத்தர் 'அத்தெய்வத்தை நான் எதிர் சென்று காண்பேன்' என்று கூறி அச்சமும் பயமுமடைந்து தனது மனைவியையும் குழந்தையையும் கையிற் பிடித்துக்கொண்டு ஓடோடியும் வந்து, பூங்கொடி போல் தளர்ந்து நின்ற புனிதவதியார் திருவடிகளிற் தனது மனைவியையும் மகளையும் கிடத்தித் தானும் வீழ்ந்து வணங்கி யெழுந்து, 'உமது திருவருளால் வாழ்கின்றேன். இக்குழவிக்குத் தங்கள் பேரிட்டழைக்கின்றேன்' என்று மொழிந்து நின்றான். கணவன் வணங்குவதறிந்த புனிதவதியார் பெரிதும் அச்சங்கொண்டு தமது சுற்றத்தார்பால் ஒதுங்கி நின்றார். இதைக் கண்ட சுற்றத்தார் வெள்கி "ஐயா! தமது மனைவியை வணங்குதற்குக் காரணம் யாது?" என்று வினவினர்.

பரமதத்தர் :—ஐயன்மீர்! இவ்வம்மையார் மனிதப் பிறவியல்ல. தெய்வமென்றறிந்து நீங்கினேன். ஆதலால் இந்தக் குழந்தைக்கும் அப்பெயரே சூட்டினேன். நீங்களெல்லாரும் கூட இத்தெய்வத்தைப் போற்றுங்கள்.

சுற்றத்தார் ஒன்று மறியாது இது என்ன மாயம் என்று சும்மாவிருந்தார்கள். மணமலி கூந்தற் புனிதவதியார் வணிகர் மொழியைக் கேட்டு ஐம்புலனும் ஒன்றாக ஆண்டவன் திருவடிகளிற்சிந்தை வைத்து 'எம்மையனே! கணவனுக்கென்று வளர்த்த இந்த தசைப் பொதியை நீக்கிப் பேய் வடிவத்தை எளியேனுக்கு நல்கவேண்டும்' என்று வணங்கினார். அம்பலக்கூத்தர் திருவருளினால் அவ்வம்மையார் விரும்பியபடியே அழகுவாய்ந்த தசைகள் நீங்கி எலும்புடம்பே நின்றது. பூவுலகமும் பொன்னுலகமும் வணங்கும் பேய் வடிவம் வந்தது. விண்ணவர் கற்பகப் பூமாரி பெய்தார். வானதுந்துபி முழங்கிற்று. தேவர்களும் முனிவர்களும் வாழ்த்தினர். சுற்றத்தார் அஞ்சி வணங்கிப் போய்விட்டார்கள். அப்பொழுது சிவபெருமானுக்கு அம்மையார் அற்புதத் திருவந்தாதி பாடினார். பின்னர் இரட்டை மணிமாலை பாடினார். கயிலாய மலைக்கும் போய் இறைவனை வணங்க உள்ளத்திலோர் எண்ணந் தோன்றவே வடக்கு நோக்கி நடப்பாராயினர்.

இவ்வம்மையாரது பேயுருவைக் கண்டோர் பயந்து ஓடுவதைக் கண்டு 'ஆண்டவன் என்னை அறிவானேல் உலகத்தார் என்னை எவ்வுருவாய்க் கண்டாலென்ன' என்று நடந்து சென்று கயிலையை நெருங்கியவுடனே காலால் நடவாமல் தலையால் நடந்து சென்றார். தலையால் நடந்து செல்வதைப் பார்வதியார் கண்டு அதிசயித்துச் சிவபெருமானைநோக்கி "எம்பெருமானே! இவ்வெலும்புக் கூட்டின் அன்பை என் சொல்வேன்!" என்றார்.

சிவபெருமான் :—உமையே! நம்மைப் பேணும் அம்மைகாண் இது. இவ்வுருவத்தை அவ்வம்மையார் வேண்டிப் பெற்றார்.

சிவபெருமான் நெருங்கிவந்த புனிதவதியாரைக் கண்டு, 'அம்மையே!' என்றழைக்க 'அப்பா' என்று கூவி அவர் திருவடித் தாமரைகளில் வீழ்ந்து வணங்கி எழுந்து நின்றார்.

சிவபெருமான்:—நம்மால் வேண்டுவது உமக்கு என்ன?

புனிதவதியாராகிய அம்மையார்:—இறவாத இன்ப அன்பு வேண்டும். பிறவாமை வேண்டும். பிறப்புண்டேல் உன்னை மறவாமை வேண்டும். நீ ஆடும் போது உன்னடியின் கீழிருக்க வேண்டும்.

சிவபெருமான்:—தெற்கேயுள்ள திருவாலங் காட்டில் நமது திருக்கூத்தை தரிசித்து இன்பவடிவாய் விளங்கம்மையே.

ஆண்டவன் உத்தரவின்படி அம்மையார் திருவாலங்காட்டைத் தலையாலே நடந்து அடைந்து "கொங்கை திரங்கி" என்கிற மூத்தபதிகம் பாடியருளினர். புனிதவதியாரது கல்வியும் ஒழுக்கமும் அன்பும் பெரிதும் பாராட்டற் பாலது. நமது தமிழ்நாட்டுப் புலவர் திலகமாகிய இவ்வம்மையை நமது மகளிர் பின்பற்றி வாழவேண்டு மென்பதே எமது கருத்து.

[காரைக்காலில் பிறந்து மலாய் நாட்டில் பெரும் பொருள்தேடி செல்வச் சீமானாக வாழ்ந்து வரும் ஸ்ரீமான் பத்து காஜா மலையப் பெருமாள் பிள்ளை அவர்களால் இம்மாங்கனி உற்சவம் சித்திரை மாதத்தில் வருடந் தோறும் சிறப்பாக நடத்தப் பெறுகின்றது. பத்திராதிபர்.]

# ராவீந்திரநாத் தாகூரின் வித்வச்சிறப்பு.

## கவிஞரின் போற்றுதற்குரிய திரு விளையாடல்.

(பண்டித அ. நா. சிவா, "கலைமகள் சங்கம்.")

### உதயசந்திரன்.

மக்களின் பசிப்பிணி யகலக் கண்ணோட்டம் பாலிக்கும் நிறை மாட்சிவாய்ந்த மங்கையர்கள் முகவிலாசத்தைப் போற் கீழ்த்திசையில் சந்திரன் உதயமாயிற்று. சத்தியபால், சிந்தாமணி எனும் இரண்டு சகோதரர்கள் வீதியில் விளையாடிக் கொண்டிருந்தனர். மரங்கள் நிறைந்த கீழ்த்திசையில் "காடம்" விருட்சங்களின் கிளைகளினால் சந்திர வெளிச்சம் சிக்குண்டு அதனது சுடர்க்கதிர் வெளிச்சம் பீறிட்டெழுந்து நிலப்பரப்பில் மிளிருங்காட்சிகளை சிந்தாமணி கண்டானந்த மடைந்தான்.

சிந்தாமணி:—ஓ, அண்ணா! "காடம்" விருட்சத்தின் கோடு, கங்கு, இலைகளினால் இச்சந்திர வெளிச்சம் சிக்குண்டு நிற்கின்றது. புன்னகை ததும்பும் இச்சந்திரன் உதய வெளிச்சம் நமது அன்னையின் முக விலாசத்தைப் போற் திகழ்கின்றது. ஆகையால் இம்மதியை நான் பிடித்து விடலாம் என்று கருதுகின்றேன். இம்மதியைக் கட்டிப் பிடிக்க உன்னால் முடியுமா?

சத்தியபால் சிந்தாமணியின் அறிவின்மைக்கு வியந்து பரிகசித்துச் சிரித்தனன். "ஓ! சிந்தாமணி! நீ குறுகிய புத்தியுடையவன். நாமிருக்கு மிடத்திலிருந்து அளப்பருந்தூரத்துக்கப்பால் இச்சந்திரன் வானத்தில் உதயமாகின்றது. இம்மதியைப் பிடிக்கவாவது அதனருகில் போகவாவது ஒருவராலும் முடியாது. இச்சந்திரனின் உதயவெளிச்சத்துக்கு இவ்வுலகில் எதுவும் சமத்துவ நிறை பெற்றிருக்கவில்லை. நமது அன்னையை இச்சந்திரனுக்கு ஒப்பிட்டுக் கூறுவதும், இச்சந்திரனை பிடிக்க நீ திட்டங்கோலுவதும் உனது அறியாமையின் கொழுந்தாகும்" என்றான்.

சிந்தாமணி :—ஓ! அண்ணா! உனது முட்டாள்தனமான யோசனையை நான் பெரிதும் போற்றுவதற்கில்லை. இச்சந்திரன் வெகு தூரத்திலிருந்து உதயமாகிறதென்றும் அது மிக்க பெரிதென்றும் அதற்கு சமத்துவ நிறை இவ்வுலகில் பிறிதொன்றும் நிலவவில்லை என்றும் கூறுகின்றாய். நமது அன்புற்ற அம்மை சாளரத்தின் வழியாக நம்மைப்பார்த்துக் கூப்பிடுகின்றாள். அப்பொழுது நாமும் அவளது முகவிலாசக் குளிர்ச்சியைக் கண்டானந்தித்து அவளைப் பிடிக்க ஓடுகின்றோம். அச்சமயத்தில் நமது அன்னை எத்தனை தூரத்தில் இருப்பதாகக் கணிதஞ் செய்திருக்கின்றாய்? நமது அன்னையின் முகவிலாசத்தைப் போற் இச்சந்திரனிடத்திலிருந்து எல்லாவிதத் தோற்றங்களும் உதயமாவதினால் இச்சந்திரன் நமது அன்னையின் சமத்துவ நிறைக்குப் பொறுத்தமாகும் என்பது எனது அறிவின் முதிர்ச்சியாகும்.

சத்தியபால் :—ஓ! சிந்தாமணி! நீ முற்றிலும் அறிவற்ற குழந்தை. உனது ஆலோசனை நாம் பாராட்டுவதாக வைத்துக் கொள்வோம். தனக்கு உவமையற்ற அம்மகா விலாசமான சந்திரனைப் பிடிக்கப் போதிய வலையை எங்ஙனம், எப்படிச் செப்பனிட முடியும்?

சிந்தாமணி :—ஓ! அண்ணா! பக்தி, அன்பு, வாய்மை, பொருமை, நீதம் எனும் உண்மைச் சிந்தனையோடு நாம் முயற்சி எடுப்போமாயின் நமது அன்புற்ற அன்னையைப் பிடித்து விளையாடுவதைப் போல் இச்சந்திரனைப் பிடித்து நாம் விளையாடலாம்.

சத்தியபால் :—ஓ! சிந்தாமணி! நீ அறியாமையில் தீவிர முதிர்ச்சிபெற்றவன். உலக நிகழ்ச்சியின் ஞானவாசகம் உனது அறிவற்ற மூளைக்குப் பொருத்தமாகாது. ஆனால் இச்சந்திரன் உன் சமீபத்தில் வருமாயின் அப்பொழுது இம்மதியின் விலாச நிறை குணதிசயமாண்பை நீ செவ்வனே யறியக்கூடுமென்று நினைக்கின்றேன்.

சிந்தாமணி:—ஓ! அண்ணா! இஃதென்னே முற்றிய பேதமை? நீண்ட காலமாகக் கலாசாலைக்குப் போர்ந்து படித்துக்கொண்டு வருகின்றாய். உனது அறிவற்ற சொற்பிரயோகத்திலிருந்து உனது குறுகிய போதனா சக்திக்கு நான் மிகவும் வருந்துகிறேன். ஓ! அண்ணா! அன்னை நமது முகத்தைக் கண்ணுற்று நம்மைக் கொஞ்சிப் பாராட்டி முத்தமிடும் போழ்து அவளது முகம் எத்தனை தூரம் பெரிதாக விருப்பதாய் நீ கணக்கெடுத்திருக்கின்றாய்? அன்பின் மிளிர்ச்சியில் நமது அன்னையின் முக விலாசத்தைப் போலும் ஆனந்த மூட்டுவதில் நமது அன்னையைப்போல் நமக்கு சமீபத்திலும் இச்சந்திரன் நிலவாது தூரத்தில் இச்சந்திரன் பெரிதாக இருக்கிறதென்று நீ கூறும் கற்பனை உனக்கு எங்கிருந்து உதயமாயிற்று?"

அன்னை கூப்பிட்டவுடன் இருவரும் சென்றுவிட்டனர்.

(தொடரும்.)

---

## சந்தாதார்க்கு.

சுக்ல ஆவணி மாதமிருந்து பத்திரிகைக்கு ஆறாவது ஆண்டு ஆரம்பிக்கின்றது. நமது சிந்தாமணி அபிமானிகள் தங்கள் சந்தா பாக்கிகளை உடனே யனுப்பி ஆதரவளிப்பார்களென நம்புகிறோம்.

பத்திராதிபர்.

KVC0078

# பாரத கீதம்.

நாத நாமக்கிரியை.

(பண்டித அ. நா. சிவா, "கலைமகள் சங்கம்.")

கன்யா குமாரி முதல் இமயம் கடைசியாக
கலைபுகழும் பாரத நாடு—நாடு
நண்ணு மொற்றுமை யற்று நலமற்று சுகமற்று
நலிந்து நிற்கிறதிப்போ பாடு—பாடு 1

கலியனைந்தாயிரம் முப்பது காலமதில்
கருதும் கைத்தொழில் ஞானம் சீரு—சீரு
நலியும் பாரதமக்கள் நாட்டில் ஒற்றுமைக்கொடி
நாட்டுகிறார் பண்டித நேரு—நேரு 2

கைத்தொழில் ராட்டிணத்தை சுற்றிக் கதராடையை
கட்டினால் பஞ்சம்பிணி ஓடி—ஓடி
மெய்த்தொழில் சமரசம் மெய்யன்பு கூட்டுறவு
மேவும் முப்பத்திரண்டு கோடி—கோடி 3

சர்வானு கூலம் பெற்றுச் சமரசம் வழிகொண்டு
சாதி சமர் ஒழிய வேண்டும்—வேண்டும்
தர்மானு கூலமுறை சாற்றினார் தேசபந்து
தாசெனும் புண்ணியர் முன் மீண்டும்—மீண்டும் 4

இந்து முகமதிய ரெல்லாரும் ஒன்றுகூடி
இருப்பது சமரச வாழ்வு—வாழ்வு
நிந்தை பொறுமைக் கொண்டு நீதம் பிளவுபட்டால்
நீடிக்கும் பஞ்சம்பிணி தாழ்வு—தாழ்வு 5

நன்னிலையில் இந்தியநாடு உரிமைப் பெற
நாளுமுழைத்து வந்த சாது—சாது
பன்னரு மாற்றலைப் படைத்து லாலாலஜ
பதியை யிழந்தோமின்றி தீது—தீது 6

வெண்ணை திரண்டுவரும் வேளையில் தாழி கீழ்
வெடித்து உடைந்ததைப்போல் ஆச்சே—ஆச்சே
புண்ணியன் லாலாஜியை இழக்க இந்தியாவுக்கு
பொறுந்துந் துணையிலாது போச்சே—போச்சே 7

தேசபந்து கோக்கலே சுரேந்திரர் மரணத்தால்
தீரலை நாட்டயீடு இன்னும்—இன்னும்
நேசித்தசமயத்தில் லஜபதியின் மரணம்
நேர்ந்ததே என்ன செய்வோம் பின்னும்—பின்னும் 8